விநாயகர் துணை.

காஞ்சிபுரம் குமரகோட்டத்தருச்சகரும்,
சுப்பிரமணியசுவாமிகள் வரப்பிரசாதியும்
ஆகிய
ஸ்ரீ கச்சியப்பசிவாசாரியசுவாமிகள்
அருளிச்செய்த

# கந்தபுராண மூலமும்

மகாவித்வான் - காஞ்சீபுரம்

## ஸ்ரீமத். இராமசாமிநாயுடவர்கள்

மூலத்திற்கிணக்கமாக எழுதிய

# வசனமும்.

இவை
சென்னை, ஹிந்து தியலாஜிகல் ஹைஸ்கூல்
தமிழ்ப்பண்டிதர்

## கோ. வடிவேலுசெட்டியாரவர்களாலும்

சென்னை, சிந்தாதிரிப்பேட்டை ஆங்கிலோ வர்னகுலர் ஸ்கூல்
தமிழ்ப்பண்டிதர்

## வல்லி.ப.தெய்வநாயகமுதலியாரவர்களாலும்

சென்னை சூளை,
ஸ்வாமி விவேகானந்த இந்து பாலிகா பாடசாலைத்
தலைமை உபாத்தியாயர்

## செ. மு. வேலுமுதலியாரவர்களாலும்

பார்வையிடப்பட்டு,

ஷை தெய்வநாயகமுதலியாரவர்களால்
சென்னை,
பிரஸிடென்ஸி அச்சியந்திரசாலையிற்
பதிப்பிக்கப்பட்டன.

**முதல்வால்யம்.**

இரண்வோல்யம் விலை ரூபா 6.



1908.



கச்சியப்பசிவாசாரியார் குமரகோட்டத்தில், கந்தபுராணத்தை அரங்கேற்றுதல்.

# முகவுரை.

அநாதிமலமுத்தனாகிய சிவபெருமான், அநாதிமலபெத்தர்களாகிய ஜீவர்கள் உய்யும்வண்ணம் திருவாய்மலர்ந்தருளிய வேதாகமங்களை முதனூலாகக்கொண்டு வெளிப்பட்ட நூல்களுள் புராணமுமொன்றாம். அது பிரமம், பதுமம், வைணவம், சைவம், பாகவதம், பௌஷியம், நாரதீயம், மார்க்கண்டேயம், ஆக்கினேயம், பிர்மகைவர்த்தம், இலிங்கம், வராகம், காந்தம், வாமனம், மச்சம், கூர்மம், காருடம், பிரமாண்டமெனப் பதினெட்டாம். இப்பதினெட்டனுள் ஒன்றான காந்தம், ஐந்து காண்டங்களோடுகூடிய ஒருலக்ஷக் கிரந்தமுடையதாம். அது புராணங்களுள் தலைமைவாய்ந்ததென்பது எந்தப்புராணத்திலும் கந்தபுராணஞ் சிறந்ததென்னும் பழமொழியினால் நன்குவிளங்கும். அப்புராணத்துள்ள சனற்குமாரசங்கிதை, சூதசங்கிதை, பிர்மசங்கிதை, விஷ்ணுசங்கிதை, சங்கரசங்கிதை, சூரசங்கிதையென்னும் ஆறனுள், சங்கரசங்கிதை பதினாயிரங்கிரந்தமுடைய பன்னிரண்டுகண்டமுடையது. அப்பன்னிரண்டனுள் முற்பட்டதாகிய சிவரகசியகண்டம் பதின்மூவாயிரக் கிரந்தமுடையதாய்ச் சம்பவகாண்டம், அசுரகாண்டம், மகேந்திரகாண்டம், யுத்தகாண்டம், தேவகாண்டம், தக்ஷகாண்டம் உபதேசகாண்டமென ஏழு காண்டங்களையுடையதாம். அவற்றுள், முன் ஆறுகாண்டத்தையும் கச்சியப்பசிவாசாரிய சுவாமிகள் கந்தபுராணமெனப் பெயரிட்டுத் தமிழில் செய்யுள்வடிவமாக மொழிபெயர்த்தார்களென்பது மிகுபிரசித்தமாம். ஏழாவதாகிய உபதேசகாண்டத்தைக் கோனேரியப்பமுதலியாரென்னும் பெரியார் தமிழில் அப்பெயரிட்டே செய்யுள் வடிவமாக மொழிபெயர்த்தனரென்பதும் பிரசித்தமாம். நிற்க,

தன்னை யோதுவார்க்கு எளிதில் சித்திமுத்திகளைக் கொடுக்கவல்ல இக்கந்தபுராணம்: யாவர்க்கும் எளிதிற் பயன்படுமாறு மூலத்தோடு அதற்கிணக்கமான வசனமும், அரும்பதவுரையும், எழுதுவித்து அச்சுவாகனமேற்றி வெளியிடப்பட்டது. அரும்பதவுரை, எனக்குச் சகாயமாயிருந்து பெரும்பான்மையும் எழுதித்தந்த சென்னை, இராயப்பேட்டை ம-௱-௱-ஸ்ரீ. மாசிலாமணி முதலியாரவர்களது நன்றியும், சிறுபான்மையெழுதித்தந்த வித்துவான் ம-௱-௱-ஸ்ரீ க. வ. திருவேங்கட நாயுடவர்கள் நன்றியும் எந்நாளும் மறக்கத்தக்கனவன்றாம். தமது வயோதிக பருவத்தையும் ஒருபொருளாகக் கருதாது இக்கந்தபுராண முழுதிற்கும் சுருக்கமாகவும் விளக்கமாகவும் இருக்குமாறு செவ்விய நடையில் வச

ணம் எழுதித்தந்த மகாவித்துவான்-காஞ்சீபுரம்-ஸ்ரீமத். இராமசாமி நாயுடுவர்கள் நன்றி என்றும் மறக்கத்தக்கதன்றும். இப்புத்தகமச்சிடும்போது சாஸ்திரவாராய்ச்சி செய்வார்க்கு மிகவும் அவசியமாயுள்ள புத்தகங்களெழுதி அச்சிடும்வேலைகளையும் கருதாது செவ்வையாகச் சோதித்துத் தந்த ம-ள-ள-ஸ்ரீ வித்துவான். கோ. வடிவேலுசேட்டியாரவர்கள் நன்றியும் மறக்கத்தக்கதன்றும். புத்தக மச்சிடும்போது ஒத்துப் பார்த்துச் சோதித்துவந்த சென்னை, சூளை, ஸ்வாமிவிவேகானந்த இந்து பாலிகா பாடசாலைத் தலைமையுபாத்தியாயர் ம-ள-ள-ஸ்ரீ சே. மு. வேலுமுதலியாரவர்களது நன்றியும் மறக்கத்தக்கதன்றும். இப்புத்தகம் சஞ்சிகைவடிவமாக அச்சிட்டு வெளிவருங்காலத்தில் ஒவ்வொருமாதமுந் தவறாது என் கருத்துக்கு முரணாகாதவாறு அச்சிட்டுத்தந்த சென்னை, வேப்பேரி பிரஸிடென்ஸி. பிரஸ் ம-ள-ள-ஸ்ரீ தாமோதர முதலியாரவர்களது நன்றியும் மறக்கத்தக்கதன்றும். இதிற் பிழையுளதாயின் உலகம்பொறுக்க.

15—10—08.
31, முத்துமுதலி வீதி,
இராயப்பேட்டை,
சென்னை.

இங்ஙனம்,
வல்லி - ப - தெய்வநாயக முதலியார்.

கச்சியப்பசிவாசாரியசுவாமிகள்

# சரித்திரச்சுருக்கம்.

மலர்களுள் தாமரைமலரும், மலைகளுள் மேருமலையும், சோலைகளுள் கற்பகச்சோலையும், வாரங்களுள் ஆதிவாரமும், மாதங்களுள் மார்கழிமாதமும், எழுத்துக்களுள் அகரமும், தேவர்களுள் சிவபெருமானும் சிறந்துவிளங்குதல்போல மண்டலங்களுள் சிறந்துவிளங்குந் தொண்டைமண்டலத்திலே மிகச்சிறப்புற்று விளங்காநின்ற காஞ்சிபுரத்திலே ஆதிசைவர் குலத்திலே, கல்வியறிவொழுக்கம் சிவபத்தி சிவஞானங்களினால் மேன்மையுற்று விளங்கிய காளத்தியப்பசிவாசாரியரென்னும் பெரியாரொருவர் இருந்தார். அவர் ஷை புரத்துள்ள குமரகோட்டத்தருச்சகருள் ஒருவர். அவர் நெடுங்காலம் புத்திரப்பேறில்லாமையாற் பெருங்கவலைகொண்டு, அதுபொருட்டுக் குமரகோட்டத்தின்கண் எழுந்தருளிய சுப்பிரமணியக்கடவுளை விதிப்படி சிரத்தையோடு உபாசித்துவந்தார். வருங்காலத்து, அக்கடவுளது திருவருளினாலே, தமிழ்மக்கள் சுப்பிரமணியபத்தி பெற்றுய்தற்பொருட்டு, அவருக்கு அவரது கற்பினிற் சிறந்த பத்தினியாரது அருமைத்திருவயிற்றினின்றும் ஒரு சற்புத்திரர் பிறந்தனர்.

அப்புத்திரர் கச்சியப்பர் என நாமகரணஞ்செய்யப்பட்டு ஐந்தாம் வயதிலே வித்தியாரம்பஞ்செய்யப்பட்டு, சம்ஸ்கிருதம் தமிழ் என்னும் இரண்டுபாஷைகளையுங் கற்றுவரும்போது அன்பு அருள் வாய்மை பொறை அடக்கம் முதலிய நற்குணங்களெல்லாம் அவரோடுடன்பிறந்து உடன் வளர்ந்தன. அவர் ஏழாம் வயதிலே உபநயனஞ்செய்யப்பட்டு, வேதாத்தியயனஞ்செய்து சிலகாலத்துள்ளே சம்ஸ்கிருதத்தில் வேத வேதாங்கங்களையும் தமிழில் இலக்கணவிலக்கியங்களையுங்கற்று வல்லவராயினர்.

அவர் சிலகாலமாயபின்னர்ச் சமயதீக்ஷைபெற்று, தமிழ்வேதமென்னுந் தேவாரதிருவாசகங்களை ஓதுவாராயினர், அதன்பின்னர் விசேஷதீக்ஷைபெற்றுச் சைவாகமங்களிற் கிரியாகாண்டங்களைக் கற்றறிந்துகொண்டார். அதன்பின்னர் நிருவாணதீக்ஷையும் ஆசாரியாபிஷேகமும்பெற்று, சைவாகமத்தின் ஞானகாண்டங்களை ஓதி, அவற்றின் பொருளையும் தேவார திருவாசகங்களின் பொருளையுங்கேட்டு, அவை வேதத்தின் ஞானகாண்டங்களாகிய உபநிடதப் பொருளோடு மாறுபாடற்றிருக்கக் கண்டு, அவற்றைச் சிந்தித்துத் தெளிந்தனர்.

இத்தன்மையுடையராய் விளக்கமுற்ற கச்சியப்பசிவாசாரியர் குமர கோட்டத்தெழுந்தருளியுள்ள சுப்பிரமணியக்கடவுளை மெய்யன்போடு பூசை செய்துகொண்டுவந்தார். அவ்வாறெழுகுநாளில் ஒருநாள் சுப்பிர மணியக்கடவுள் அவரது சொப்பனத்திலேதோன்றி, "அன்பனே, நீ காந்தபுராணத் தாறுசங்கிதைகளுட் சங்கரசங்கிதையின் முதற்கண்ட மாகிய சிவரகசியகண்டத்திலுள்ள நமது சரித்திரத்தைக் கந்தபுராணம் எனப் பெயரிட்டுத் தமிழிலே பெருங்காப்பியமாகப் பாடக்கடவாய்" என்று கட்டளையிட்டு, "திகட சக்கரச் செம்முக மைந்துளான்" என அடியெடுத்துக் கொடுத்து மறைந்தருளினர்.

உடனே கச்சியப்பசிவாசாரியர் விழித்தெழுந்து, அழலிடையிட்ட மெழுகுபோல நெஞ்சுநெக்குருக, உரோமஞ்சிலிர்ப்ப, உரைதடுமாற, கரையற்ற ஆநந்தக்கடலுள் மூழ்கி, "ஒன்றுக்கும் பற்றாத புழுத்த நாயி னுங்கடையனாகிய தமியேனையும் ஒருபொருட்படுத்து வந்தருளிச்செய்த எம்பெருமானாகிய சுப்பிரமணியக்கடவுளது பெருங்கருணைத்திறம் இருந் தவாறென்னை என்னே" என்று ஆனந்தக்கூத்தாடினர்.

மற்றைத்தினத்திலே கச்சியப்பசிவாசாரியர் நித்தியகருமமுடித்துக் கொண்டு, சுப்பிரமணியபூசை செய்தபின்னர்ப் புராணம் பாட ஆரம்பித் தருளினர். நாடோறும் நூறு செய்யுள் பாடி, அவை எழுதப்பட்ட ஏட் டையும், எழுத்தாணியையும், இராத்திரிகால பூசை முற்றியபின்னர்க் குமரகோட்டத்தடிகளுடைய திருவடியின்கீழ் வைத்துவிட்டுத் திருக்கத வந் திருக்காப்பிட்டுக்கொண்டு தமது திருமாளிகைக்குப்போவார். பிற் றைநாட்காலையிலே நித்தியகருமமுடித்துக்கொண்டு, பூசையின்பொருட் டுத் திருக்கோயிலுள்ளே புகுந்து, ஏட்டை எடுத்துப் பார்த்து, அதிற் சிலவிடங்களிலே திருத்தப்பட்டிருத்தல்கண்டு, அதனைச் சிரமேற்கொ ண்டு ஆனந்தபரவசராய்ச் சிறிதுபொழுது நின்று பின்னர்ப் பூசைசெய் வார்.

இவ்வாறாகக் கச்சியப்பசிவாசாரியர் கந்தபுராணம் பாடி முடித்த பின்னர் அதனைக் குமரகோட்டத்தில் அரங்கேற்றுதற்பொருட்டுச் சுப தினமுஞ் சுபமுகூர்த்தமும் நிச்சயித்துக்கொண்டு, எங்குமுள்ள சிவனடி யார்களெல்லாருக்கும் பத்திரம் விடுத்தருளினர். ஏவலாளர்கள் திருக் கோயிலையும் திருவீதிகளையும் மிக அலங்கரித்தார்கள். கருதப்பட்ட சுப தினத்திலே, திருநெறித்தமிழென்னுந் தேவார திருவாசகங்களில் வல்ல பெரியோர்களும், சிவாகமவிற்பன்னர்களும், வேதவேதாங்கபண்டிதர்க ளும், தமிழ்ப்புலவர்களும், இராசாக்களும், பிரபுக்களும், பிறரும்வந்து கூடினர்கள்.

கச்சியப்பசிவாசாரியார் குமரகோட்டத்தடிகளைப் பூசை செய்து, அவர் சந்நிதானத்திலே மெழுகிப் பீடமிட்டு, அதின்மேற் பட்டை விரி

த்து, புஷ்பங்களைத் தூவித் தூபங்கொடுத்து ஆசனங்கற்பித்து, கந்தபுரா ணத் திருமுறையை அதன்மேல் வைத்தருச்சித்து வணங்கித் துதித்து, ஓரிடத்திருந்து, "திகட சக்கரச் செம்முக மைந்துளான்" என்னும் முதற் செய்யுளை ஒருமுறை வாசித்து, "திகழ் தசக்கரச் செம்முகம் ஐந்து உளான்" என்றெடுத்து, "விளங்காநின்ற பத்துத் திருக்கை களும் செவ்விய ஐந்து திருமுகங்களுமுள்ள சிவபெருமானுடைய" என்று பொருள் கூறினர். உடனே அங்கிருந்த தமிழ்ப்புலவர்களுள் ஒருவர் "சுவாமிகாள்! திகழ் தசம் திகடசம் எனப் புணர்தற்கு விதி தொல்காப்பியமுதலிய இலக்கண நூல்களுள் இல்லையே! என்றார். அதற்குக் கச்சியப்பசிவாசாரியர் "தாங்கள் கூறியதொக்கும், ஆயின் இம்முதலடி என் வாக்கன்று; சுப்பிரமணியக் கடவுளது திருவாக்கு; அவரே எனக்கு இவ்வடியெடுத்துத் தந்தருளினர்" என்றார். அது கேட்ட அப்புலவர் சிறுநகை செய்து, "சுப்பிரமணியக்கடவுள் சுவாமி களுக்கு இவ்வடியெடுத்துத் தந்தருளியது உண்மையாயின் ஆகுக; ஆயினும், அஃது இரகசியம். அதனை நாங்கள் அங்கீகரிப்பதெங்ஙனம்? அக்கடவுள் சுவாமிகளுக்குத் தோன்றியதுபோல எங்களுக்குந்தோன்றி 'இவ்வடி நாமே எடுத்துக் கொடுத்தருளினோம்' என்று திருவாய் மலர்ந் தருளின் அங்கீகரிப்பேம்; அன்றேல், இதற்கு யாதானுமோர் இலக் கண நூலில் விதி காட்டின் அங்கீகரிப்பேம்; அல்லாக்கால், அரங் கேற்றவொட்டேம்" என்றார். கச்சியப்பசிவாசாரியர் "இவ்விரண்டினுள் ஒன்று நாளைச் செய்யப்படும்" என்று கூறி, சபையாரையனுப்பி விட்டு, அற்றைத்தினத்திலே திருவமுது செய்யாது, இராத்திரிகால பூசை முற் றியபின் திருக்கதவந் திருக்காப்பிட்டுக்கொண்டு சந்நிதியிலே தரையிலே சயனித்தருளினார். அப்பொழுது சுப்பிரமணியக் கடவுள் கச்சியப்ப சிவாசாரியருக்குச் சொப்பனத்திலே தோன்றி, "அன்பனே! சோழதே சத்தில் வீரசோழியம் என்று ஓரிலக்கணநூலிருக்கின்றது; திகழ்தசம் திகடசம் எனப் புணர்தற்கு விதி அந்நூலிற் சந்திபடலத்திற் பதினெட் டாஞ் செய்யுளிலிருக்கின்றது; சோழதேசத்துப் புலவனொருவன் அந் நூலை நாளைக்கு இவ்விடத்திற் கொண்டுவந்து அவ்விதியை யாவருக்குங் காட்டுவான்" என்று திருவாய்மலர்ந்து மறைந்தருளினார்.

மற்றைநாட் சபையாரெல்லாருங் கூடியிருந்தபொழுது, கச்சியப்ப சிவாசாரியர் தமக்கு முருகக்கடவுள் சொப்பனத்தில் அருளிச்செய்தமை யை அவர்களுக்குக் கூறியருளினார். உடனே ஒரு புலவர் ஒரு புத்தகங் கையிற்கொண்டு அங்கே வந்தனர். அவரை அங்குள்ளோர்கள் நோக்கி, "நீர் யாவர்? உமது கையிற் புத்தகம் யாது?" என்று வினவினார்கள். அதற்கு அப்புலவர் "நாம் சோழதேசத்துள்ளேம்; இப்புத்தகம் வீரசோ ழியம்" என்றார். அப்பொழுது முன்னைநாளின் ஆக்ஷேபித்த புலவர் விரைந்து சென்று, அப்புத்தகத்தை வாங்கிச் சந்திபடலத்திற் பதினெட்

டாஞ்செய்யுளை வாசித்துத் திகடசக்கரம் என்னும் புணர்ச்சிக்கு விதி அதனிடத்திருத்தலை யுணர்ந்து வியப்பும் மகிழ்ச்சியுமுற்றனர். மற்றைத் தமிழ்ப்புலவர்களும் ஒருவர் பின் ஒருவராக அதனை வாங்கிப்பார்த்து வியப்பும் மகிழ்ச்சியுமுற்றார்கள். இறுதியிலே சோழதேசத்துப் புலவர் அப்புத்தகத்தைக் கச்சியப்பசிவாசாரியர் கையிற்கொடுத்து, சபையாரெல்லாரையும் நோக்கி, "ஆக்ஷேபம் ஒழிந்ததா ஒழிந்ததா!" என்று சொல்லிவிட்டு மறைந்தருளினார். உடனே கச்சியப்பசிவாசாரியர் தம்மையாண்டருளிய சுப்பிரமணியக்கடவுளது பெருங்கருணைத் திறத்தை நினைந்து நினைந்து, சரீரம் விதிர்ப்புற, மயிர்க்கால்தோறும் திவலை உண்டாக, என்பெல்லாம் நெக்கு நெக்குருக, மதகிடைப் புறப்படுஞ்சலம்போல ஆனந்தபாஷ்பம் பொழியப் பரானந்தபரவசராய் எழுந்தருளியிருந்தார். அப்பொழுது சபையார் எல்லாரும் "இங்ஙனம் எழுந்தருளிவந்த புலவர் குமாரக்கடவுளே" என்று நிச்சயித்து ஆச்சரியமடைந்து, வெயிலிடைப்பட்ட வெண்ணெய்போல மனங்கசிந்துருக உரோமஞ்சிலிர்ப்பக் குறுவேர்வை கொள்ள ஆனந்தவருவி சொரிய ஆனந்தக்கூத்தாடிக் கச்சியப்பசிவாசாரியருடைய பெருமையை நன்குணர்ந்து, அவர் திருவடிகளில் அடியற்ற மரம்போல் விழுந்து நமஸ்கரித்து, அவரைத் தோத்திரஞ்செய்தார்கள். ஆக்ஷேபஞ்செய்த புலவர் கச்சியப்ப சிவாசாரியரைப் பலமுறையும் நமஸ்கரித்து, "எம்பெருமானே, புழுத்த நாயினுங்கடையேனாகிய தமியேன் சுவாமிகளுடைய மகிமையைச் சிறிதும் அறியாமலாக்ஷேபித்த பெருங்குற்றத்தைப் பொறுத்து அடியேன்மீது திருவருள் சுரந்தருளுக" என்று அதி விநயத்தோடு பிரார்த்தித்து, மீட்டும் அடியற்ற மரம்போல் வீழ்ந்து கிடந்தார். கச்சியப்பசிவாசாரியர் எழுந்து, அப்புலவருடைய இரண்டு கைகளையும் தமது திருக்கரங்களினால் பற்றியெடுத்து இறுகத் தழுவி, "ஐயரே! தங்கள் ஆக்ஷேபத்தினாலன்றோ இச்சபையாரெல்லாருக்கும் திருவருளினுண்மை வெளிப்பட்டது. இதன்பொருட்டுத் தங்களுக்குச் செயற்பாலதாகிய கைம்மாறு யாது! அறியேம் அறியேம்" என்று பாராட்டியருளினார்.

அதன்பின்னர்ச் சபையாரெல்லாரும் நமஸ்கரித்து, "சுவாமிகாள்! இனிப் புராணத்தைத் தடையின்றி அரங்கேற்ற ஆரம்பித்தருளுக" என்று விண்ணப்பஞ் செய்ய, அங்ஙனமே கச்சியப்பசிவாசாரியர் அரங்கேற்றுவாராயினர். காஞ்சீபுரத்துள்ள ஆதிசைவர்கள் முதலானவர்களுக்கும் கந்தபுராணங்கேட்க வந்த எண்ணிறந்த அடியார்களுக்கும் போசன முதலியவையெல்லாம் தொண்டைநாட்டிலுள்ள இருபத்துநான்கு கோட்டத்து வேளாளப் பிரபுக்களுடைய செலவினாலே நடைபெற்றன. எல்லாரும் நியமமாக வந்து பேரன்போடு கேட்கக் கச்சியப்பசிவாசாரியர் தினந்தோறும் புராணம் வாசித்துப் பொருள்கூறி ஒரு வருஷத்திலே முடித்தருளினார்,

புராணமுற்றுப்பெற்றவுடனே கச்சியப்பசிவாசாரியர் புராணத்திரு முறையை விதிப்படி அருச்சனைசெய்து நமஸ்கரித்தனர். அப்பொழுது அங்குள்ள எத்திறத்தார்களும் அன்பினோடு விம்மிவிம்மிச் சாஷ்டாங்கமாக விழுந்து, கச்சியப்பசிவாசாரியரை நமஸ்கரித்தெழுந்து இருகரமுஞ் சிரசிற்குவியநின்று துதித்தார்கள். கச்சியப்பசிவாசாரியர் கந்தபுராணத்திருமுறையோடு தந்தச்சிவிகையில் எழுந்தருளி, இருபத்துநான்குகோட்டத்துமுள்ள வேளாளப்பிரபுக்களுள்ளே சிலர் சிவிகை தாங்க, சிலர் வெண்சாமரம்வீச, சிலர் குடை கொடிபிடிக்க, நானாவித மங்கலவாத்தியவொலியினாலே திக்குகளெல்லாஞ் செவிடுபட, மறையவர் வேதகோஷஞ்செய்ய, சிவனடியார்கள் சரவணபவ சரவணபவ என்று கூற, திருநகரவாசிகள் திருவீதிகடோறுஞ்சுத்திசெய்து கமுகுகள்நாட்டித் தோரணங்கள் நிரைத்துப் பூமாலைகள் தூக்கிப் பூரணகும்பங்கள் வைத்துப் பொரிதூவித் திருவிளக்கேற்றி அறுகெடுக்க, தமது திருமேனியிலே தரிக்கப்பட்ட திரிபுண்டரத்தின் பொலிவையும், உருத்திராக்ஷமாலைகளின் அழகையும், சின்முத்திரையையும், திருக்கண்களினின்று பொழியும் பரமானந்த வாரியையும், அடியார்கள் கண்டு மனநெக்கு நெக்குருக வணங்கித்துதித்து ஆனந்தக்கூத்தாட, திருவீதிவலஞ்செய்து, குமரகோட்டச்சந்நிதியை அடைந்து, சிவிகையினின்றும் இறங்கித் திருமுறையைத் திருக்கோயிலினுள்ளே கொண்டுபோய்த் திருமுன்னே வைத்தருளினார். உடனே எல்லாரும் கச்சியப்பசிவாசாரியரை, அவர் "அமையும் அமையும்" என்ற வழியும் தவிராது, ஆராமையினாலே பலமுறையும் நமஸ்கரித்து, "பரம கருணாநிதியாகிய எம்பெருமான் தமிழ்மக்களியாவரும் உய்யும்பொருட்டுத் திருவாய்மலர்ந்தருளிய இப்புராணமாகிய திவ்யாமிர்தத்தை அடியேங்கள் செவிவாய் மடுத்து உய்ந்தனம் உய்ந்தனம்" என்று விண்ணப்பஞ்செய்தின்பமுற்றார்கள்.

பின்னர்க் கச்சியப்பசிவாசாரியர் குமரகோட்டத்தடிகளைப் பூசை புரிவதோடு சிவயோக சமாதிபுரிபவராயுமிருந்து சுத்தாத்துவித முத்தியடைந்தனர்.

வேலுமயிலுந்துணை.

---

அபியுக்தர் வாக்கு.

உச்சித மாஞ்சிவ வேதியன் காளத்தி யோங்குமைந்தன்
கச்சியப் பன்செய்த கந்தபுராணக் கலைக்கடலின்
மெச்சிய கல்வி மதியும்வெண் டாமரை மேவுமின்னு
மிச்செவி நாவினுக் கின்பா மமுது மெழுந்தனவே.

---

வேதமொடு வேதாங்கம் பயின்று வல்லோன்
விரிந்தசிவா கமமுணர்ந்து மேன்மை பூண்டோன்
போதநிறை சிவமறையோன் காஞ்சி வாழும்
புனிதமிகு கச்சியப்ப குரவ னென்போன்
வாதமுறு புலவர்குழா மகிழ்ந்து போற்ற
மதிமணிமா டம்புடைசூழ் குமர கோட்டத்
தேதமறு சகாத்தமெழு நூற்றின் மேவா
யிலகுகந்த புராணமரங் கேற்றினானே.

---

## திருக்கைலாச பரம்பரைத் தருமபுரஞானசம்பந்ததேசிகராதீனத்துச் சம்பந்தசரணாலயசுவாமிகள் அருளிச்செய்த கந்தபுராணச்சுருக்கம்.

போதமுறு சூதமுனி புகன்ற காந்தப்
புகழ்க்கடலிற் படிந்ததன்கட் பொருள தான
மேதகுவண் புனலருந்தி வைய முய்ய
வெய்யதுயர்ப் பிறவியெனும் வெம்மை நீரத்
தாதவிழ்பூம் பொழிற்காஞ்சிக் குவட்டி லேறிச்
சலதியமு தினிதிகர்செந் தமிழ தான
காதன்மழை பொழிந்தவருட் கொண்ட லான
கச்சியப்ப னிருபாத முச்சி வைப்பாம்.

---

## தொண்டை மண்டலசதகம்.

அந்தப் புரமு மறுநான்கு கோட்டகத் தாருமொன்றாய்க்
* கந்தப் புராணம் பதினா யிரஞ்சொன்ன கச்சியப்பா
தந்தப் பல்லக்குஞ் சிவிகையுந் தாங்கியச் சந்நிதிக்கே
வந்தப் புராண மரங்கேற்றி னாதொண்டை மண்டலமே.

---

* "கந்தப்பு ராணமப்பன் னீராயி ரஞ்சொன்ன" என்றும் பாடமுண்டு.

உ

கணபதி துணை.

# சிவபுராணபடனவிதி.

தாயுமானவர்பாடல்.

> "குலமி லான்குணங் குறியிலான் குறைவிலான் கொடிதாம்
> புலமி லான்றனக் கென்னவோர் பற்றிலான் பொருந்து
> மிலமி லான்மைந்தர் மனைவியில் லானெவ னவன்சஞ்
> சலமி லான்முத்தி தரும்பர சிவனெனத் தகுமே.

என்று மேலோர்கூறியவாறு நல்லிலக்கணங்களையுடைய பரமசிவனே இயங்குதிணை, நிலத்திணையென்னும் இருவகைத்திணைக்கும் நியந்தாவா மென்பது வேதாகமங்களினின்றுணிவாம். அப்பரமேசுவரனைத் திரிகரணத்தாலும் வணங்குபவர் சிவனடியாரெனப்படுவார். அவர்கள் கொல்லாமை, புலாலுண்ணாமை, கள்ளாமை, கள்ளுண்ணாமை, பிறர்மனை நயவாமை, வரவின்மகளிர் நயவாமை, இரக்கம், வாய்மை, பொறை, அடக்கம், கொடை, அரசன் உபாத்தியாயன் தாய் தந்தை தம்முன் என்றின்னோரை வழிபடுதல் முதலிய பொது இலக்கணமும், புறத்திலக்கணம், உடலிலக்கணம், அகத்திலக்கணம் என்னும் மூவகைச் சிறப்பிலக்கணமும் உடையராயிருப்பர். அம்மூவகைச் சிறப்பிலக்கணங்களுள் புறத்திலக்கணம்: விபூதி உருத்திராக்கமென்னும் சிவசின்னங்களைத் தரித்தல், குருவை வழிபடல், சிவபெருமானைத் தோத்திரஞ்செய்தல், சிவநாமங்களையுச்சரித்தல், சிவபெருமானைப் பூசைசெய்தல், சிவதருமங்களைச்செய்தல், சிவபுராணங்களைக்கேட்டல், சிவாலய தரிசனஞ்செய்தல், சிவனடியாரிடத்தன்றிப் பிறரிடத்துப் போஜனம்செய்யாமை, சிவனடியார்களுக்குக்கொடுத்தல் எனப் பத்துவகையாம். உடலிலக்கணம்: சிவபெருமானுடைய பெருமையைச் சிந்திக்குந்தோறும் பேசுந்தோறும் கண்டம் விம்முதல், நாக்குத்துடித்தல், உதடுதுடித்தல், சரீரம் நடுங்குதல், உரோமஞ்சிலிர்த்தல், குறுவேர்வைகொள்ளல், நாக்குத்தழுதழுத்தல், ஆனந்தக்கண்ணீர்சொரிதல், வாய்விட்டழுதல், பரவசமாய்த் தன்னைமறத்தல் எனப்பத்தாம்.

அகத்திலக்கணம்: மானசபஞ்சாக்ஷரஜபம், மானதபூசை, சிவபெருமானைத் தன்னோடு அபேதமாகக்காண்டல் என மூன்றும். இவற்றிற்குப் பிரமாணம் வருமாறு:—

## பட்டினத்துப்பிள்ளையார் பாடல்.

கொல்லாமற் கொன்றதைத் தின்னாமற் குத்திரங் கோள்களவு
கல்லாமற் கைதவ ரோடிணங் காமற் கனவினும்பொய்
சொல்லாமற் சொற்களைக் கேளாமற் றோகையர் மாயையிலே
செல்லாமற் செல்வந் தருவாய் சிதம்பர தேசிகனே.

## சிவஞானதீபம்.

கொலையாதி நெறியகன்ற ஞானந் தானே
    கூறரிய மேலான ஞான மாகுங்
கொலையாதி யகன்றொழுகுந் தவங்க டாமே
    குற்றமிலா நற்றவமென் றுரைக்கு நூலுங்
கொலையாதி யகற்றியநல் லறங்க டாமே
    குவலயத்தி லொப்பரிய வறங்க ளாகுங்
கொலையாதி யகன்றுபெறுஞ் செல்வந் தானே
    கூறினுயிர்க் கிதமான வாழ்வ தாமே.

எவ்வுயிரும் பராபரன் சந்நிதிய தாகு
    மிலங்குமுயி ருடலனைத்து மீசன் கோயி
லெவ்வுயிரு மெம்முயிர்போ லென்று நோக்கி
    யிரங்காது கொன்றருந்து மிழிவி னோரை
வவ்வியமன் றூதருந் தண்டஞ் செய்து
    வல்லிரும்பை யுருக்கியவர் வாயில் வார்த்து
வெவ்வியதீ யெழுநரகில் வீழ்த்தி மாறா
    வேதனைசெய் திடுவரென வோது நூலே.

## பதிபசுபாசவிளக்கம்.

அம்மா வெனவலற வாருயிரைக் கொன்றருந்தி
யிம்மா னுடரெல்லா மின்புற் றிருக்கின்றா
ரம்மா வெனுஞ்சத்தங் கேட்டகன்ற மாதவர்க்கும்
பொய்ம்மா நிரயமென்றாற் புசித்தவர்க்கென் சொல்லுவதே.

கங்கையிற் படிந்திட் டாலுங் கடவுளைப் பூசித் தாலு
மங்குல்போற் கோடி தானம் வள்ளலாய் வழங்கி னாலுஞ்
சங்கையி லாத ஞான தத்துவ முணர்ந்திட் டாலும்
பொங்குறு புலால்பு சிப்போன் போய்நர கடைவ னன்றே.

கொலையிலா னுதவு மன்னங் கூறிற்பே ரமுத மாகுங்
கொலையுளா னுதவு மன்னங் கூறிற்பேர் விடம தாகும்
புலையர்த மனையி லுண்போன் புலையனா மாறு போலக்
கொலைஞர்த மனையி லுண்போன் கொலைஞனே யாவ னன்றே.

கலையெலா முணர்ந்தா னேனுங் கரிசறத் தெளிந்தா னேனு
மலையென வுயர்ந்தா னேனு மனமய லகன்றா னேனு
முலகெலாம் புகழப் பல்லோர்க் குதவிய வைய னேனு
மிலைய விரக்க மின்றே லெழுநர கடைவ னன்றே.

## கூர்மபுராணம்.

கள்விலை பகர்வோர் கள்ளினை நுகர்ந்தோர் கள்ளருந் துதநீருடன் படுவோர்
கள்ளருந் தாரை மகிழுநர் நரகிற் கற்பகா லங்கிடந் தழுந்தி
யென்றுறுந் தீய மலப்புழு வாகி மலத்தினை நுகர்ந்தபின் னிறந்து
வின்னருங் கொடிய ரௌரவ நரகின் மீட்டுமீட் டெழுந்துநாள் கழிப்பார்.

## திருவிளையாடற்புராணம்.

காமமே கொலைகட் கெல்லாங் காரணங் கண்ணோ டாத
காமமே களவுக் கெல்லாங் காரணங் கூற்ற மஞ்சுங்
காமமே கள்ளுண் டற்குங் காரண மாத லாலே
காமமே நரக பூமி காணியாக் கொடுப்ப தென்றான்.

## உபதேசகாண்டம்.

செய்ய மேனிச் சிவனடி யார்க்கய
லெய்தக் காணு மிலக்கண மத்துள
மெய்யி லெய்து மிலக்கண மெய்ம்மைசா
லையி ரண்டகத் துள்ளன மூன்றரோ.

அலக்க ணீக்கு மரனடி யார்க்கென
விலக்க ணங்க ளிருபத்து மூன்றுள
பலப்ப டுத்து முதற்படு பத்தையும்
புலப்ப டுத்தி நுமக்குப் புகலுவாம்.

வாசப் பூதி யுருத்திர மாமணி
பூசிப் பூணல் குரவரைப் பூசித்த
லாசைப் பாட்டி னரனைப் புகழுத
லீசற் குள்ளன நாம மியம்புதல்.

எந்தை யீச னருச்சனை யோம்புத
றந்தி ரச்சிவ தன்மம் புரிகுதன்
முந்தை யோன்கதை கேட்டன் முறைமையாற்
புந்தி கூர்ந்தர னாலயம் போற்றுதல்.

ஒத்த பதத ரிடத்தல தோரிடந்
துய்த்த ணீத்தலத் தொண்டரிற் றெண்டராய்ச்
சித்த மன்புற வீதன்முன் செப்பிய
பத்து மீங்கிவை காணப் படுதிரால்.

தொண்டர் மெய்யிற் றுலங்கு மிலக்கண
முண்டொர் பத்தென் றுரைத்த துரைக்குதுங்
குண்டை யூர்தி சிவத்தியல் கூறுங்காற்
கண்ட முற்றொரு விம்மிதங் காட்டுதல்.

எத்து மெந்தை யியற்கை யுணர்தொறு
காத்து டித்தெழும் பாமை நகைப்புறம்
பூத்த முத்தந் துடித்தல்வி பூதிகொண்
டார்த்த ணிந்ததன் னங்கங் குலுங்குதல்.

மயிர்ப்பு றம்புள கித்தல் வரன்முறை
வியர்த்த றன்வச மன்றி விளம்புநாப்
பெயர்த்தி டாமையா னந்தப் பெருங்கணீ
ரயற்ப டுத்துதல் வாய்விட் டழுதலே.

பரவ சத்தின ஞகிப் படர்சண்ட
யரனு ளீப்படத் தன்னை யயர்க்குதல்
விரவு பத்தும் விடுத்துரைத் தோமிவை
வரமு னித்தலை வீர்மனக் கொள்விரால்.

உளத்தி லக்கண மூன்றென் றுரைத்தன
மளச்சி னஞ்செழுத் தன்ன லகப்பட
வளர்க்கு மானத பூசனை மைக்கடுக்
களத்த னைத்தனை யொன்றெனக் காண்குதல்.

சிறப்பிலக்கணங்களுள் ஒன்றான புறத்திலக்கணத்துள் சிவபுராணங்களைக்கேட்டலும் ஒன்றாயிருத்தலின் சிவபுராணங்கேட்கும்விதி இக்கந்தபுராணத்தை வாசிப்போர் இன்றியமையாது அறியத்தக்கதாம். சிவபுராண படனஞ்செய்வோர் நாடோறும் ஸ்நானஞ்செய்து பட்டுடை அல்லது தோய்த்துலர்ந்த ஆடைதரித்து நித்தியகருமமுடித்துப் புத்தக பூசைசெய்தபிறகு சிவபுராணபோதகரைக் கிழக்குமுகமாக ஆசனத்தெழுந்தருளச்செய்து சாக்ஷாத்சங்கரனுகப்பாவித்துச் சந்தனமுதலியவற்றாற்பூசித்து வணக்கஞ்செய்து உறவினரோடும், நண்பினரோடும் சித்திரப்பாவையொத்து அசைவற இருந்து, உழுவலன்போடுகேட்டு மீண்டும் வணங்கல்வேண்டும். அவ்வாறு புராணபடனஞ்செய்யும்போது சிவபுராணபோதகரோ புராணந்தொடங்கும்போதும், முடிக்கும்போதும் காப்புச்சொல்லுதலோடு காப்புக்குமுன்னும் பின்னும் திருச்சிற்றம்பலமென்று உச்சரித்தல்வேண்டும். புராணபோதகர் காப்புச்சொல்லும்போது கேட்போரியாவரும் கும்பிட்டிருத்தல்வேண்டும். சிவபுராணம் படித்துப் பொருள்கூறுதற்குரிய இடம் தேவாலயம், திருமடம், நதிக்கரை, குளக்கரை, நந்தனவனம், யாகசாலை முதலியனவாம். இங்ஙனமன்றிக் கள்ளுண்டார் களிக்குமிடத்தும், சூதாடுமிடத்தும், பெண்கள் உண்டாட்டுச்செய்யுமிடத்தும், அறிவில்லாதவரிருக்குமிடத்தும் புராணம் படித்தல்கூடாது. சிவபுராணம்படித்துப் பொருள்சொல்லுதற்கதிகாரிகளாவார் பிரம, க்ஷத்திரிய, வைசிய, சூத்திரரென்னும் நான்கு வர்ணங்களுக்குட்பட்டவராய் அவயவக் குற்றமில்லாதவராய், நற்குண நற்செய்கையுடையவராய், நல்லாசிரியரையடுத்து வரலாற்றுமுறையாக ஓதினவராய், சைவசாஸ்திரங்களில் மிகுதியும் பயிற்சியுடையவராய், சைவசமயத்தில் பேரன்புடையவராய் இருப்பவராவர்.

சிவபுராணபடனம் சுபதினத்தில் சுபமுகூர்த்தத்தில் ஆரம்பித்தல் வேண்டும். ஆரம்பிக்குந்தினத்திலும் முடிக்குந்தினத்திலும் திருக்கல்யாணமுதலிய சரித்திரம் படிக்குந்தினங்களிலும் சிவபுராணமண்டபத்தைக் கோமயத்தால்மெழுகிக் கமுகு, வாழை, கரும்பு என்னுமிவற்றை நாட்டி மேற்கட்டி கட்டி சித்திரித்த பட்டுக்களையும், பூமாலைகளையும் தூக்கி அலங்கரித்தல்வேண்டும். சிவபுராணபோதகர் சந்தியாவந்தமுனம் சிவபூசையுமுடித்துக்கொண்டு சிவபுராண புத்தகத்தைப் பீடத்தின்மீதுவை

த்துச் சந்தனம், புஷ்பம், தூபம், தீபம் முதலியவற்றாற் பூசைசெய்து ஆசனத்திலிருந்து புராணம் போதித்தல்வேண்டும். அப்போது ஒருவரையும் அவர் வணங்குதல்கூடாது. புராணம் வாசிப்பவர் சபையிலுள்ளோர் யாவரும் கேட்குமாறு தெளிவாக வாசித்தல்வேண்டும். வாசிக்கும்போது வாசிக்குங்காலத்திற்கும் எடுத்துக்கொண்ட விஷயத்தின்தன்மைக்கும் ஏற்ற இராகத்தில் வாசித்தல்வேண்டும். பொருளும் அவ்வாறே இலக்கணப்பிழையில்லாமலும் வெளிப்படையாகவும் அவசியமான இடங்களில் விரிவாகவும் சொல்லல்வேண்டும். சிவபுராணபோதகரைச் சாக்ஷாத் சிவபெருமானாக எண்ணாது நம்மனோருள் ஒருவராக எண்ணுவோரும் சிவபுராணம்படிக்கும்போது உயர்ந்த ஆசனத்திலிருப்போரும், காலைநீட்டிக்கொண்டிருப்போரும், சயனிப்போரும், நித்திரைசெய்வோரும், தாம்பூலந்தரிப்போரும், போர்த்துக்கொண்டிருப்போரும், வேறு வார்த்தைகளைப்பேசுவோரும், குதர்க்கஞ்செய்வோரும், அழுக்காற்றால் வேறுபொருளைக் கற்பிப்போரும், அன்பில்லாதுகேட்போரும், நகைப்போரும், நடுவே எழுந்துபோவோரும், புராணம் பொய் என்போரும் வெகுகாலம் துன்பம் அனுபவித்து பின்னர் இழிபிறப்படைந்து வருந்துவார்களென்பது ஒருதலையாம்.

சிவபுராணங்கேட்போர் ஆரம்பந்தொடங்கி அந்தம்வரையிலும் இடையீடின்றி நியமமாகக் கேட்டல்வேண்டும், ஒவ்வொருநாளும் ஒவ்வோரன்பர்க்கு அன்னங்கொடுத்து ஆதரிக்கவேண்டும். விசேஷகாலங்களில் தத்தமக்கியன்ற அளவில் சிவனடியார் முதலியோருக்கு அன்னதானஞ் செய்வதுடன் புராணபோதகருக்கு ஆடை ஆபரணமுந் தரல்வேண்டும். புராணம் முடிந்தபிறகு அதனையும் புராணபோதகரையும் மங்கலவாத்தியத்தோடு வீதிவலஞ்செய்விக்கவேண்டும். சிரத்தையுடன் சிவபுராணத்தை எழுதி சிவனடியார்க்குத்தந்தவர்க்கும் எழுதித் தம்வீட்டில்வைத்துப் பூசித்தவர்க்கும், வாசித்தவர்க்கும் அதற்கு உரைகூறினவர்க்கும், அதனை அன்போடு கேட்டவர்க்கும், மறுமையில் சிவலோகஞ் சித்திக்குமென்பது சாத்திரங்களின் முடிவான கருத்தாம்.

இவற்றிற்குப் பிரமாணம் வருமாறு:—

உபதேசகாண்டம்.

ஏசறு புராண காதை படித்தெடுத் திசைப்போர்க் கென்ன
வாசன மளித்துப் பூவாற் சாந்தத்தா லவர்க்கு வேண்டும்
பூசனை யியற்றி யன்னோர் பூருவ நோக்கி வைக
மாசறு சரிதை கேட்போ னிருப்பது வடக்கு நோக்கி.

பிரமோத்தரகாண்டம்.

நாய கன்கதை நாடொறுங் கேட்குநர்
தூய நீரினிற் றோய்ந்துவெண் ணீறணிந்
தேய நித்த கரும மியற்றிப்பின்
காய வைம்புல னுங்கருத் தொன்றியே.

வல்ல தேசிக னுக்கு மணித்தவி
சொல்லி னல்கி யுறுபொரு ளீந்தனன்
கல்ல வாணி களைத்த லடங்கிவன்
புல்ல ரானவ ரைப்புறம் போக்கியே.

பத்தி யோடொல்கு பாவகத் தோடொரு
வொத்த நற்றவி சேற லொழித்துநூல்
வித்த கற்குக்கீழ் மென்றவி சொன்றியே
சித்தம் வேறறக் கேட்பது செவ்விதால்.

சிவதருமோத்தரம்.

புத்த கத்தினைப் பூசை புரிகிலார்
சித்தங் கூர்தரத் தேசிகன் றன்னையு
மத்த கைப்பல நீங்குவ தன்றியுங்
கொத்தை சேர்நிர யக்குழி கூடுவார்.

ஆத லாற்புத்த காதி யருச்சனை
காத லாற்செய்க காமுறு வார்பலம்
வேத னூர கக்குழி வேண்டிலா
ரேதெ னுந்தம சத்திக் கிசையவே.

சைவசமயநெறி.

படிக்கும் பொழுது பணிகுர வன்றூண்
முடிக்கும் பொழுது முயன்று.

உபதேசகாண்டம்.

புண்ணி யச்சிவ புராணமோ திப்பொருள் விரிப்பி
னண்ண லாலய நதிக்கரை குளக்கரை யன்றேன்
மண்ணு றுந்திரு மடமெனு மித்தலை மருவிக்
கண்ணு தற்பர னைத்தொழு தோதுறக் கடவார்.

பிரமோத்தரகாண்டம்.

மூவ ராதி முழுதுல கத்துள
தேவர் வாழுஞ் சினகர முன்னருந்
தூவு தண்ணற வுண்டு சுரும்பிமிர்
பூவர் சோலைப் புனித விடத்தினும்.

தீதி லாத செழுநதி தீரத்துங்
கோதி லார்கள் குழீஇய விடத்தினும்
வேத வேதியர் வேள்வித் தலையினு
மாதி மாதவ ரம்மனை முற்றத்தும்.

மற்றும் வேறுள புண்ணிய மல்குசீ
ருற்ற தெவ்விட மவ்விடத் தோதுவர்
பற்றி நாளும் பரமன் றிருக்கதை
முற்று மோதி முழுதுணர் கேள்வியார்.

சிறியர் திக்களி செய்யு மிடத்தினு
மறிவி லாளர்கு தாடு மரங்கினு
முறவில் வஞ்சிய ருண்டாட் டிடத்தினும்
பொறியி லாளர் பொருந்து மிடத்தினும்.

கம்ப மால்கரி நல்கினுங் கண்ணக
னிம்பர் நாடு முழுவது மீயினுஞ்
செம்பொன் மாரி பொழியினுஞ் செஞ்சடை
நம்பன் காதை நயந்து நவிற்றிடார்.

## உபதேசகாண்டம்.

பெருகுநூற் புராண மோதிப் பிரித்துரைத் திடுவோ னன்கு
வருணத்தி லொருவ னுகிப் பொறையொடு மாபி னோங்கி
முருகவே ளடிக்கீழ்த் தொண்டு முயன்றவ னுகி யம்பொற்
றிருவொடுந் தனய ரோடுங் கிளையொடுஞ் சிறக்க வேண்டும்.

## சிவஞானதீபம்.

நிலையுறுதி யாசார மொழுக்கஞ் சீல
நிறையறிவு கருணைதவ நெறியி லார்மற்
கொலைகளவு கட்காம முதலா வுள்ள
கொடும்பவமே தவமாகக் கொள்ளுந் தீயோ
ருலைவிலருஞ் சிவனருணூ லோத லாகா
தோதினுமங் கவருரைகொள் ளொணுது நீலம்
புலையர்மரு விடுந்தெருவிற் பொல்லாக் கும்பி
பொருந்தியிடுங் குழியதனுட் பூத்த தாமே.

## உபதேசகாண்டம்.

மஙகல தினத்திற் றேவ ராலயங் குரவர் வாயில்
பொங்குநீர் நதியின் பாங்கர் புண்ணிய தலங்கண் மன்றந்
தங்குகோ மயத்தா னிவித் தண்மலர்த் தொடைய னூற்றி
யங்கண்மாக் கரும்பு வாழை நிபமிட் டமையச் செய்து.
பட்டுடை கொய்து நாற்றிப் பசுங்கமு கமைத்துப் பின்ன
ரிட்டபொற் பீடந் தன்னிற் புத்தக மினிதி னேற்றி
மட்டவார் தூபஞ் சாந்த மலரினு லருச்சித் தாங்க
ணட்டவர் கிளைஞ ரோடுங் கேட்பது நன்மைத் தாமால்.

## பிரமோத்தரகாண்டம்.

ஓங்கு சீர்த்திருச் காதை யுரைக்குநர்
தாங்கு பீடிகை யின்றித் தரையிரா
ராங்கண் யாரையு மஞ்சலி செய்திடார்
நீங்கி னோருறை சிற்றவை சேர்ந்திடார்.

அன்பி னிற்கதை கேட்ப தலாற்பிறர்
வன்பி னெய்தி மனம்வைத்துக் கேட்பவர்
துன்ப மெய்து சுடலையி லோங்கிய
வின்ப மில்கனி யெட்டிய தாகுவார்.

கூறு மாக்கதை கூட்டமு னுப்பனே
வேறு தங்கரு மத்து விசைந்துபோஞ்
சீறு சிந்தையர் செல்வத்தைத் துய்க்குங்கா
லீறு செல்லா நிடையி லிழப்பரே.

மஞ்ச மேறியும் வெள்ளிலை மாந்தியு
நஞ்ச முண்டவர் நற்கதை கேட்குந
ரஞ்சி யோவென் றரற்றிக் கழுநுனைத்
தஞ்ச மாகக் கிடந்து தவிப்பரே.

கயிலை யண்ணல் கதையை நிகழ்த்துழித்
துயில்பு ரிந்திடுந் தொல்வினைப் பாதகர்
வெயில்க ரந்திடு வெங்கொடிக் கஞ்சியே
யயின்முட் காட்டுறை கூகைய தாகுவார்.

படர்ந்த வேணிப் பரமன் றிருக்கதை
கிடந்த சேக்கையிற் கேட்கு மறிவிலோர்
மிடைந்த மால்வரை யுச்சி விடர்புகுந்
தடைந்த மாசுண மாகிப் பிறப்பரே.

ஈசன் காதைசொல் வாணன்றி யின்னுமோர்
தேசி கன்பிற னுண்டென்று செப்புமோ
காசு தீர்க்குங் கதைவிளக் கங்கொடு
மாசின் மாக்கண் மனைவிசூ ணீக்கலால்.

## உபதேசகாண்டம்.

ஆதிதொட் டீறு காறு முடக்குரு தருளிற் கேட்க
வோதிய புராணத் தெம்மா னுமையினை மணக்கு நாளிற்
காதுவேற் குமரற் கம்பொற் கதிர்முடி கவிக்கு நாளிற்
றீதறு தெய்வயானை திருமணஞ் சிறக்கு நாளின்.

மறையவர்க் கினிய வேண்டும் போசன மரபி னீந்து
நிறைதமிழ்ப் புராண காதை நிகழ்த்தினோர்ப் பணிந்து போற்றி
யுறுகதிர்ப் பசும்பொ னுடை பொலங்கல னுவந்து நல்கி
நறைகம ழலரிற் சாந்தி னருச்சனை நடத்தல் வேண்டும்.

எழுதி யோர்ந்துணை ரெம்முறைச் சரிதைகேட் டிருப்பவ ரிரக்கங்கூர்ந்
தழுதல் விம்முத லுத்தடு மாறுத லணிமயிர்ப் புளகெய்தித்
தொழுத லெய்தினோர் பெறுகுவ தியாமலாற் சொலற்கரி தெவர்க்கேனும்
பழுதி னன்மறை நுணுக்கமு மின்னணம் பகர்வது பல்லூழி.

கள்ளு யிர்த்தபூங் கொன்றையா னருட்சிவ காதை
யெள்ளில் சிந்தையால் விதிமுறை யினிதுகேட் டுவந்து
வெள்ள வார்சடை யெம்பிரான் றிருவருள் விளைவித்
தெள்ள ருங்கதி புகுந்தவர்க் கிலக்கமா ரிசைப்பார்.

ஓது நாவினுங் கேட்பவர் செவிப்புலத் துள்ளுந்
தீதில் சிந்தையோர் சிரத்தினுந் திருவரு ளிரங்கி
மாது பாகனுற் றுறைகுவன் மாதவத் துறையீ
ராத லாற்கதி யடைந்தன கேட்டவை யனைத்தும்.

எழுதி யன்பருக் கீந்தவர் திருமுறை யெழுதித்
தொழுது தம்மனைத் தொகுப்பவர் பெருநலந் துய்த்தின்
டொழுகு காலம்வீற் றிருவ்வொரு கற்பமோ ரெழுத்திற்
கழிவி லாப்பெருங் கயிலையுற் றிருங்கதி யடைவார்.

திருச்சிற்றம்பலம்.

# கந்தபுராணத்தின் முதல்வால்ய

# படல அகராதி.

# முதல்வால்யத்தின் பிழைதிருத்தம்

| பக்கம். | பாட்டு. | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|---|
| ௩ | ௧ | ௨ | பொருவர் | பெருவர் |
| ௭ | ௧௬ | ௫ | உயிாகள் | உயிர்கள் |
| ௮ | ௨0 | ௪ | தணடமிழ் | தண்டமிழ் |
| ௨௧ | 0 | ௩ | கூடலி | கடலி |
| ௩0 | 0 | ௩0 | நந்தநவநங் | நந்தவநங் |
| ௩0 | 0 | ௪௨ | யுடையுங் | யடையுர் |
| ௩௬ | ௩௨ | ௪ | ஞெவெறிங் | ஞெவெறிர் |
| ௩௭ | ௪௨ | ௩ | நாதனூர்தரு | நாதனூர்தரு |
| ௪௨ | ௮௩ | ௩ | னன்பர் | ரன்பர் |
| ௫௯ | ௫0 | ௩ | புராணநுன் | புராணநூன் |
| ௯௮ | ௯௭ | ௧ | யுங்ளங் | யுள்ளங் |
| ௧௧0 | ௨௯ | ௧ | பணிபடு | பனிபடு |
| ௧௧௭ | ௬ | ௧ | தநநிறை | தருநிரை |
| ௧௨0 | | ௧௨ | அத்தாணி | அத்தாணி |
| ௧௨௨ | ௧௧ | ௩ | பவாமுத | பவர்முத |
| ௧௩௩ | ௬௬ | ௨ | சகியென்பா | சசியென்பா |
| ௧௩௮ | 0 | ௩௪ | முனிவா | முனிவர் |
| ௧௪௪ | ௪௫ | ௪ | பொளளெனம் | பொள்ளெனப் |
| ௧௪௪ | ௪௬ | ௪ | ஞுதலிற | ஞுதலிற் |
| ௧௫௭ | ௯ | ௩ | முனன | முன்ன |
| ௧௬௫ | 0 | ௬ | இறைவியும | இறைவியும் |
| ௧௬௮ | ௧௮ | ௪ | றெழுததென | றெழுத்தென |
| ௧௭௩ | ௬௭ | ௪ | பிறிந்துவே | பிறிதுவே |
| ௧௭௫ | ௯0 | ௪ | புக்ழ்ங் | புகழ்ங் |
| ௧௯0 | ௨௩ | ௩ | கட்டி. | சுட்டி |
| ௧௯௮ | 0 | ௧௩ | மகன் | மகள் |
| ௨௨௪ | 0 | ௮ | விழ்ந்து | வீழ்ந்து |
| ௨௩௧ | ௨௬ | ௨ | பொன்னனி | பொன்னணி |
| ௨௭௪ | ௩௬ | ௪ | நிறபுழித | நிற்புழித் |
| ௩௧௪ | 0 | ௧ | நாமிணி | நாமினி |
| ,, | 0 | ௧௫ | டினன் | டினள் |
| ௩௨௨ | ௮௯ | ௪ | வலிததான் | வலித்தான் |
| ௩௩௪ | 0 | ௫ | துணிததைச் | துணிநதைச் |
| ௩௫௧ | ௪௮ | ௪ | சிசிரன் | சிகிரன் |
| ௩௫௨ | ௫௪ | ௪ | சிசிர | சிகிர |
| ௩௬௧ | ௪ | ௪ | மாபை | மாயை |
| ௩௭௫ | 0 | ௧௫ | தம்பிபிய | தம்பிய |
| ௩௯௭ | ௯ | ௩ | வேவுதிற | மேவுதிர் |
| ௪0௨ | ௨0 | ௧ | தோட்விழ் | தோடவிழ் |
| ௪௧௫ | ௭ | ௩ | முனிவரன் | முனிவரன் |
| ௪௧௬ | 0 | ௨௬ | தித்தொழில் | தீத்தொழில் |
| ௪௧௭ | ௩ | ௪ | ளிலமை | ளிலமை |

| பக்கம். | பாட்டு. | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|---|
| ௪௧௭ | ௧௧ | ௩ | நிங்கி | நீங்கி |
| ௪௨௧ | ௨௭ | ௨ | முளிவன் | முனிவன் |
| ௪௨௪ | ௮ | ௩ | யதனரிடனரோ | யகன்றிடப் |
| ௪௨௭ | ௩௧ | ௨ | றேறறே | றேற்றே |
| ௪௩௬ | ௦ | ௨௫ | மண்மோ | மண்மே |
| ௪௪௪ | ௦ | ௧௯ | அவர்களைக் | அவர்களைச் |
| ௪௫௯ | ௫ | ௧ | ழிவ்லவள் | ழில்லவன் |
| ௪௬௬ | ௭ | ௧ | துறையை | துரையை |
| ௪௭௧ | ௧௫ | ௧ | சூழச்சி | சூழ்ச்சி |
| ௪௮௭ | ௪௧ | ௪ | நாங்களுக் | நங்களுக் |
| ௪௯௧ | ௦ | ௧௭ | மூக்கறுத்தவன் | கையறுத்தவன் |
| ௫௨௨ | ௨௬ | ௧ | சோண்டொட | சேண்டொட |
| ௫௩௫ | ௩௯ | ௩ | மொயம்பா | மொய்ம்பா |
| ௫௪௨ | ௫௪ | ௪ | ரேற்றவ | ஞேற்றவ |
| ௫௪௬ | ௮௯ | ௧ | பொயத்த | பொய்த்த |
| ௫௫௬ | ௦ | ௪௦ | யழியயும் | யழியவும் |
| ௫௫௯ | ௧௩ | ௪ | தடந்தோன் | தடந்தோள் |
| ௫௭௦ | ௫௦ | ௨ | யரியளைக் | யரியணைக் |
| ௫௭௮ | ௧௨௫ | ௧ | வாளகத் | வானகத் |
| ௬௦௦ | ௩ | ௨ | போங்கி | பொங்கி |
| ௬௦௫ | ௪௯ | ௨ | சேன்றிடு | சென்றிடு |
| ௬௧௦ | ௦ | ௨௩ | வருத்தும்படி | வருந்தும்படி |
| ௬௨௦ | ௧௨ | ௨ | காதவ | காதல |
| ,, | ,, | ௪ | மெருமைக் | பெருமைக் |
| ,, | ௧௪ | ௩ | ளின்மகற் | னின்மகற் |
| ,, | ௧௫ | ௪ | ஞலத்திற | ஞலத்திற் |
| ,, | ௧௬ | ௧ | மரமபின் | வரம்பின் |
| ௬௨௧ | ௨௨ | ௨ | யெய்துயிர்ப் | வெய்துயிர்ப் |
| ,, | ௦ | ௩௭ | பதுமசோமனை | பதுமகோமளை |
| ,, | ௦ | ௩௮ | மஞெ | மஞ்ஞெ |
| ௬௨௩ | ௭ | ௩ | தீக்கனல் | தீங்கனல் |
| ,, | ௯ | ௪ | ஞெரோ | ஞரோ |
| ,, | ௧௨ | ௧ | அனனதோ | அன்னதோ |
| ௬௨௯ | ௭௬ | ௧ | ளினைய | னினைய |
| ௬௩௦ | ௭௭ | ௨ | பிள்ளைப் | பிள்ளைப் |
| ௬௩௩ | ௧௧௩ | ௨ | மெட்டெறு | தெட்டெறு |
| ,, | ,, | ௪ | யெவரே | னெவரே |
| ௬௪௧ | ௦ | ௨௦ | திறுவனை | சிறுவனை |
| ,, | ௦ | ௩௩ | விசையேயாம் | வசையேயாம் |
| ௬௪௨ | ௦ | ௬ | சொல்வி | சொல்லி |
| ,, | ௦ | ௨௨ | கிங்கத்தின் | சிங்கத்தின் |

## புத்தக விளம்பரம்.

உ

சிவமயம்.

சண்முகக்கடவுள் துணை.

# கந்தபுராணம்.

## விநாயகர் காப்பு.

திகட சக்கரச் செம்முக மைந்துளான்
சகட சக்கரத் தாமரை நாயக
னகட சக்கர வின்மணி யாவுறை
விகட சக்கரன் மெய்ப்பதம் போற்றுவாம்.

(பொழிப்புரை.) *விளங்குகின்ற பத்துத் திருக்கைகளையும், செப்பமாகிய ஐந்து திருமுகங்களையும் உடையவனாகிய சிவபெருமானது பூமியாகிய தேரிற் பூட்டப்பட்ட உருளாகிய சூரியன் வயிற்றினிடமாக அசையச்செய்கிற உதரபந்தனமாகிய நாகரத்தினம்போன்று விளங்குகின்ற விகடசக்ர விநாயகருடைய அழியாத இயல்பினையுடைய திருவடிகளை யாம் வழிபடுவோம்.* (என்றவாறு.)

*வீரசோழியத்துச் சந்திப்படலத்தில் "நான்கொடு மூன்றென்ப தாமுயிரின்பின்பு நவ் வருமேல், என்ற ஞகாரம தாகும் பதினொன்றொ டெண்ணிரண்டாய்த், தோன்றுடற் பின்னர்த் தகாரம் வரினிரண் டுந்தொடர்பால், ஆன்றவைந் தாமுட லாமுன்பி லொற்றுக் கழிவு முண்டே" என்னும் - கஅ - ம் செய்யுள் விதியால், திகழ் தசக்கரம் என்னுஞ் சொற்கள் திகட சக்கரம் எனப்புணர்ந்தன. செம்மை முகம் செம்முக மென்றாயிற்று, செம்மை - செப்பம், அஃதாவது அழகு. முகங்களைந்தாவன - ஈசானம், தற்புருடம், அகோரம், வாமதேவம், சத்தியோசாதம் என்பனவாம். இவற்றுள், ஈசானம் படிகநிறத்தையும், தற்புருடம் கோங்குநிறத்தையும், அகோரம் கறுப்புநிறத்தையும், வாமதேவம் வெட்சிநிறத்தையும், சத்தியோசாதம் பால்நிறத்தையும் உடையன. தசம் கரம் இரண்டும் வடசொற்களாதலின், இயல்பாய்ப் புணர்தலொழிந்து மிக்குப் புணர்ந்தது எதுகையின்பங் கருதியென்க. சிவபிரான் முப்புரமெரிசெய்த காலத்தில் இவர்க்குத் தேராயிருந்தது பூமியாதலால் செம்முகமைந்துளான் சகடம என்பதற்கு பூமியாகிய தேர் என்றுரையுரைக்கப்பட்டது. "பூதலங் கோட்டு மலையானை" என்றார்பிறரும். அப்பொழுது இந்தத்தேரையன்றி மற்றையவையா யமைந்திருந்தன யாவையெனின், நான்கு வேதங்களும் இத்தேரிற்பூட்டிய குதிரைகளாகவும், சந்திரசூரியர்கள் தேருருளைகளாகவும், ஏனைய தேவர்முதலியோர் போர்க்குரிய பிறவுறுப்புக்களாகவும் அமைந்*

திருந்தார்களென்பது புராணப்பிரசித்தம். தங்கணவரைக் கண்டுகளிக்குங் கற்புடைமாதர்போலத் தாமரைகள் சூரியனைக்கண்டு அகமலர்ச்சி முகமலர்ச்சிகளைக் காட்டலால் அவனைத் 'தாமரைநாயகன்' என்றார். இவ்விநாயகர் விசுவரூபங் கொண்டகாலத்தில் இவரிடையானது சூரியமண்டலத்திருந்தமையானும், அப்போது சூரியன் இவரது உதரபந்தநத்திற்பதித்த நாகரத்நம்போற் றோன்றுதலானும், 'தாமரை நாயகன் அகட சக்கர வின்மணி யாவுறை விகட சக்கரன்' என்றார். 'அகட சக்கர வின்மணி' என்பதற்குத் திருவயிற்றின்கண்ணதாகிய வட்டவடிவுள்ள ஒளியையுடைய மணியென் றுரைகூறலுமுண்டு. இத்தலவிநாயகர்க்கு, விகடசக்கரவிநாயகர் என்னும் பெயர் வந்தவரலாற்றை "எக்கறவா னவனியற்றும் விகடநட நெடும்போதெம் பெருமா னோக்கி, மாக்கருணை சுரந்தருளி யாழியவன் றனக்களித்தான் வரத்தான் மிக்கீர், போக்கறுமிக் காரணத்தா னன்று முதற் காஞ்சியினைப் புழைக்கைத் தேவை, யூக்கமுறுந் திறல்விகட சக்கரவி நாயகனென் றுலகங் கூறும்" என்னுங் காஞ்சிப்புராணச் செய்யுளாலுணர்க. இந்தச் சரித்திரம் யாதெனின், தக்கன்யாகம் அழிந்தபொழுது திருமால்விட்ட சக்கரத்தை வீரபத்திரக்கடவுள் பூண்டிருந்த வெண்டலையொன்று விழுங்கிவிடுதலும், அத்திருமாலின் சேநாபதியாகிய விடுவசேநன், அச்சக்கரத்தைப்பெற்றுத் திருமாலுக்குத் தரும்பொருட்டுக் காஞ்சிமாநகரத்திற்சென்று ஓர் சிவலிங்கப்பிரதிஷ்டை செய்து பூசித்தான்; அந்தப்பூசைக்கு வீரபத்திரக்கடவுள் மனமிரங்கி யெழுந்தருளினபோது, அச்சக்கரத்தைத்தரும்படி விடுவசேனன் பிரார்த்திக்க, அவர், அச்சக்கரம் என்னிடத்திலில்லை, வெண்டலைவிழுங்கிவிட்டது ஆதலால், எவ்விதத்தாலாயினும் அதுவே உமிழ்ந்துதரப் பெற்றுக்கொள்ளக்கடவையென்று அருளிச்செய்ய, அவ்வாறே விடுவசேனன் தன் காலிரண்டையும் கையிரண்டையும் வளைத்து வாயையும் கண்களையும் சுரித்தசைத்துப் பற்கள் வெளித்தோன்ற விளித்து விகடக்கூத்தாடினான்; அக்கூத்தினை அங்குள்ளார் யாவருங்கண்டு நகைக்க வெண்டலையும் நகைத்தது; அப்போது அதன்வாயினின்றும் சக்கரம் நிலத்தில்விழுந்தது; அதனை அத்தலவிநாயகர் விரைந்து கவர்ந்துகொண்டு ஒன்றுமறியாதவர்போன்றிருக்க, அதனையறிந்த விடுவசேனன் அவ்விநாயகர்முன்னும் விகடக்கூத்தாடிப் பிரார்த்திக்க, அவர் அச்சக்கரத்தை அவனுக்கருள்செய்தனர் என்பதாம். இந்த விகடக்கூத்தையே இக்காலத்தில் கோணங்கிக்கூத்தென வழங்குகின்றார்கள். சகடசக்கரம் விகடசக்கரன் என்பன வடநூன்முடிபாதலால் இயல்பாயின. விகட சக்கரன் பதம் போற்றுவாம் என முடித்துக்கொள்க.

> உச்சியின் மகுட மின்ன வொளிர்தர நுதலி னோடை
> வச்சிர மருப்பி னொற்றை மணிகொள்கிம் புரிவ யங்க
> மெய்ச்செவிக் கவரி தூங்க வேழமா முகங்கொண் டுற்ற
> கச்சியின் விகட சக்ர கணபதிக் கன்பு செய்வாம்.

(பொ - ரை.) திருமுடியில் மகுடம் மின்னவும், நெற்றியில் பட்டம் பிரகாசிக்கவும், ஒற்றைக்கொம்பில் வயிரமணிகள் பதித்த கிம்புரி விளங்கவும், திருவுருவிற் பொருந்திய திருச்செவிகளாகிய சாமரங்கள் தொங்கவும் சிறப்புப்பொருந்திய யானைமுகங்கொண்டெழுந்தருளிய திருக்கச்சியிலுள்ள விகடசக்ர விநாயகரிடத்தன்பு செய்வோம் யாம். (எ - று.) (க)

## சுப்பிரமணியர் துதி.

மூவிரு முகங்கள் போற்றி முகம்பொழி கருணை போற்றி
யேவருந் துதிக்க நின்ற விராறுதோள் போற்றி காஞ்சி
மாவடி வைகுஞ் செவ்வேண் மலரடி போற்றி யன்னான்
சேவலு மயிலும் போற்றி திருக்கைவேல் போற்றி போற்றி.

(பொ - ரை.) காஞ்சிமாநகரத்தில் மாமரத்தினடியி லெழுந்தருளியிருக்கும் முருகக்கடவுளின் ஆறு திருமுகங்களுக்கு நமஸ்காரம்; அத்திருமுகங்கள் சுரக்கின்ற திருக்கருணைக்கு நமஸ்காரம்; எல்லாரும் தோத்திரஞ்செய்யும்படி நிலைபெற்று விளங்குகிற பன்னிரண்டு திருத்தோள்கட்கு நமஸ்காரம்; தாமரைமலர்போலுந் திருவடிகட்கு நமஸ்காரம்; அவனது சேவற்கொடிக்கும் மயில்வாகநத்துக்கும் நமஸ்காரம்; திருக்கரத்திலேந்திய வேலாயுதத்துக்கும் நமஸ்காரம் நமஸ்காரம். (எ-று.)

## நூற்பயன்.

இந்திர ராகிப் பார்மே லின்பமுற் றினிது மேவிச்
சிந்தையி னினைந்த முற்றிச் சிவகதி யதனிற் சேர்வ
ரந்தமி லவுணர் தங்க ளடல்கெட முனிந்த செவ்வேற்
கந்தவேள் புராணந் தன்னைக் காதலித் தோது வோரே.

(பொ - ரை.) முடிவில்லாத அசுரர்களுடைய வலியழியும்படி கோபித்தருளின சிவந்த வேற்படையைத்தாங்கிய கந்தசுவாமியின் புராணத்தை விரும்பிப்படிப்போர் இவ்வுலகத்து இந்திரர்களாகி இன்பங்க ளெல்லாவற்றையு மநுபவித்து இனிதாக வாழ்ந்து தங்கள் மனத்தில் நினைந்த நினைப்புக்களெல்லாம் முடியப்பெற்று, இந்தச் சரீரநீக்கத்தில் சிவகதியிலும் பொருந்துவார்கள். (எ - று.) (௩)

## வாழ்த்து.

வான்முகில் வழாது பெய்க மலிவளஞ் சுரக்க மன்னன்
கோன்முறை யரசு செய்க குறைவிலா துயிர்கள் வாழ்க
நான்மறை யறங்க ளோங்க நற்றவம் வேள்வி மல்க
மேன்மைகொள் சைவ நீதி விளங்குக வுலக மெல்லாம்.

(பொ - ரை.) எல்லாவுலகங்களிலும் ஆகாயத்தே யுலாவுகின்ற மேகங்கள் காலந்தவறாமல் மழை பெய்யக்கடவன; அந்தப்பெய்யலால் மிகுந்தவளங்கள் பெருகக்கடவன; அரசனானவன் செங்கோல் முறைமையாய் அரசுசெய்யக்கடவன்; அவனது குடைநிழலில் வாழும் உயிர்கள் குறைவற வாழக்கடவன; நான்குவேதங்களும் அவற்றிற் சொல்லப்படுகிற தருமமார்க்கங்களும் உயரக்கடவன; நல்லதவமும் யாகங்களும் பெருகக்கடவன; மேன்மையைக்கொண்ட சைவசமயநெறியே விளங்கக்கடவது. (எ - று.) (௪)

"சண்முகக்கடவுள் துணை.

# கடவுள்வாழ்த்து.

## சிவபெருமான்.

திருவந்த தொல்லைப் புவனத்தொடு தேவர் போற்றிப்
பெருவந் தனைசெய் தறிதற்கரும் பெற்றி யெய்தி
யருவந் தனையு முருவத்தையு மன்றி நின்ற
வொருவன் றனது பதந்தன்னை யுளத்துள் வைப்பாம்.

(போ - ரை.) செல்வமிகுந்த பழமையாகிய இந்த நிலவுலகத்துள்ளாரோடு வானுலகத்துள்ள தேவரும் துதித்துப் பெரிய வழிபாடுசெய்தும் அறிதற்கரிய தன்மையையடைந்து, அருவமும் உருவமும் அல்லாமல் நின்றவனாகிய ஒப்பற்ற பரமசிவனது திருவடியை யெமது மனத்திலிருத்திக்கொள்வோம் யாம். (எ - று.) (க)

ஊனாகி யூனு ளுயிரா யுயிர்தோறு மாகி
வானாதி யான பொருளாய் மதியாகி வெய்யோன்
றானாகி யாண்பெண் ணுருவாகிச் சராச ரங்க
ளானான் சிவன்மற் றவனீள்கழற் கன்பு செய்வாம்.

(போ - ரை.) சரீரங்களாகியும், அச்சரீரங்களி னுள்ளேயிருக்கிற உயிராகியும், அவ்வுயிர்கடோறும் வியாபித்துவிளங்கும் உள்ளுயிராகியும், ஆகாயமுதலாகிய பஞ்சபூதங்களாகியும், சந்திரனாகியும், சூரியனாகியும், ஆண்பெண் வடிவங்களாகியும், மற்றுமுள்ள சராசரப்பொருள்களாகியும் விளங்குகிற சிவபெருமானது பெருமை மிகுந்த திருவடிக்குப் பத்திசெய்வோம் யாம். (எ - று.) (உ)

வேறு.

பிறப்பது மிறப்பதும் பெயருஞ் செய்கையு
மறப்பது நினைப்பதும் வடிவும் யாவையுந்
துறப்பது மின்மையும் பிறவுஞ் சூழ்கலாச்
சிறப்புடை யரனடி சென்னி சேர்த்துவாம்.

(போ - ரை.) பிறத்தலும் இறத்தலும் நிலைபெயருஞ்செயலும் மறத்தலும் நினைத்தலும் உருவாதலும் இவையெல்லாவற்றையும் நீக்குதலும் நீக்காமையும் மற்றுள்ளனவும் பொருந்தாத சீர்மையினையுடையவனாகிய சிவபெருமானது திருவடியை யெமது சிரத்திற்சூடுவோம் யாம். (எ - று.) (ங.)

பூமலர் மிசைவரு புனித னாதியோர்
தாமுணர் வரியதோர் தலைமை யெய்தியே
மாமறை முதற்கொரு வடிவ மாகியோன்
காமரு செய்யபூங் கழல்கள் போற்றுவாம்.

(பொ - ரை.) அழகிய தாமரைமலரில் வீற்றிருக்கும் பிரமதேவன் முதலியோ ராலும் அறிதற்கரிய ஒப்பற்ற தலைமைப்பாட்டினை யடைந்து சிறந்த வேதத்திற்கு முதலாகிய பிரணவத்துக்கு ஒருவடிவமாகிய சிவபெருமானது அழகாகிய செந் தாமரைமலர்போலுந் திருவடிகளைத் தோத்திரம் பண்ணுவோம் யாம். (எ-று.) (௪)

பங்கயன் முகுந்தனும் பரமென் றுன்னியே
தங்களி லிருவருஞ் சமர்செய் துற்றுழி
யங்கவர் வெருவர வங்கி யாயெழு
புங்கவன் மலரடி போற்றி செய்குவாம்.

(பொ - ரை.) பிரமனும் திருமாலும் யாமே பரம்பொருளெனக் கருதி, தாங்க ளிருவரும் ஒருவரோடொருவர் போர்செய்த காலத்தில், அவ்விடத்தில் அவர்கள் அஞ்சும்படி அக்கினிமலையா யோங்கி நின்ற சிவபெருமானது தாமரைமலர்போலுந் திருவடியைத் துதிசெய்வோம் யாம். (எ - று.) (௫)

காண்பவன் முதலிய திறமுங் காட்டுவான்
மாண்புடை யோனுமாய் வலிகொள் வான்றொடர்
பூண்பதின் றுய்நயம் புணர்க்கும் புங்கவன்
சேண்பொலி திருநடச் செயலை யேத்துவாம்.

(பொ-ரை.) காண்பான் முதலிய மூவகைத் தன்மைகளையுங் காட்டுவோராயும் பெருமையுடையவராயுமிருந்தும் தம்மைப்பிணிக்கும் தொடக்கில்லாதவராய் ஆன்ம கோடிக ளெல்லாவற்றுக்கும் நிரதிசயாநந்தத்தை யருள்செய்கிற சிவபெருமானுரது சிதாகாசத்தில் விளங்குந் திருநடனச்செயலைத் துதிப்போம்யாம். (எ - று.) (௬)

## சிவசத்தி.

செறிதரு முயிர்தொறுந் திகழ்ந்து மன்னிய
மறுவறு மரனிட மரபின் மேவியே
யறுவகை நெறிகளும் பிறவு மாக்கிய
விறைவிதன் மலரடி யிறைஞ்சி யேத்துவாம்.

(பொ - ரை.) உலகத்தில் நிறைந்திருக்கிற உயிர்தோறும் வியாபித்து நிலை பெற்று விளங்குகிற குற்றமற்ற சிவபிரானது இடப்பாகத்தில் முறையாயெழுந் தருளி, ஆறுவகையாகிய சமய மார்க்கங்களையும் பிறவற்றையுந் தோன்றுவித்த எம் பெருமாட்டியாகிய உமாதேவியின் தாமரைமலர்போலுந் திருவடியை வணங்கித் துதிப்போம் யாம். (எ - று.) (௭)

## விநாயகக்கடவுள்.

மண்ணுல கத்தினிற் பிறவி மாசற
வெண்ணிய பொருளெலா மெளிதின் முற்றுறக்
கண்ணுத லுடையதோர் களிற்று மாமுகப்
பண்ணவன் மலரடி பணிந்து போற்றுவாம்.

(பொ - ரை.) இந்த மண்ணுலகிற் பிறத்தலாகிய குற்றமொழியவும், எண்ணிய காரியங்கள்யாவும் எளிதில் முடியவும், நெற்றிக்கண்ணையுடையதாகிய ஒப்பற்று விளங்கும் யானைமுகக்கடவுளாகிய விநாயகமூர்த்தியின் தாமரைமலர்போலுந் திருவடியை வணங்கித் துதிப்போம் யாம். (எ - று.) (அ)

## வைரவக்கடவுள்.

பரமனை மதித்திடாப் பங்க யாசன
னொருதலை கிள்ளியே யொழிந்த வானவர்
குருதியு மகந்தையுங் கொண்டு தண்டமுன்
புரிதரு வடுகனைப் போற்றி செய்குவாம்.

(பொ - ரை.) பூர்வகாலத்தில் சிவபெருமானை மதிக்காத பிரமனது நடுத்தலையாகிய ஒன்றைக்கிள்ளி, பிறதேவர்களுடைய உதிரத்தையும் அகங்காரத்தையுங் கவர்ந்துகொண்டு அவர்களைத் தண்டனைசெய்த வடுகக்கடவுளைப் போற்றுவோம் யாம். (எ - று.) (கூ)

வெஞ்சினப் பரியழன் மீது போர்த்திடு
மஞ்சனப் புகையென வால மாமெனச்
செஞ்சுடர்ப் படிவமேற் செறித்த மாமணிக்
கஞ்சுகக் கடவுள்பொற் கழல்க ளேத்துவாம்.

(பொ - ரை.) கடுங்கோபத்தையுடைய வடவைத்தீயானது தன்மேற்போர்த்துக்கொண்ட கரியபுகைபோலவும், விடம்போலவும், செவ்வொளியமைந்த திருவுருவின்மீது சிறப்பினையுடைய நீலமணிகள் பதித்த சட்டையைத்தரித்த வைரவக்கடவுளின் பொன்போலுந் திருவடிகளைத் துதிப்போம் யாம். (எ - று.) (க0)

## வீரபத்திரக்கடவுள்.

அடைந்தவி யுண்டிடு மமரர் யாவரு
முடிந்திட வெருவியே முனிவர் வேதிய
ருடைந்திட மாமக மொடியத் தக்கனைத்
தடிந்திடு சேவகன் சரணம் போற்றுவாம்.

(பொ - ரை.) வேள்விக்குவந்து தங்களுக்குரிய அவிர்ப்பாகங்களை யுண்ட தேவர்களெல்லாரும் இறந்தொழியவும், முனிவரும் வேதியரும் அஞ்சியோடவும், பெருமை பொருந்திய யாகமழியவும், தக்கனைக்கொன்றருளின வீரபத்திரக்கடவுளின் திருவடிகளைத் துதிப்போம் யாம். (எ - று.)

## சுப்பிரமணியக்கடவுள்.

இருப்பரங் குறைத்திடு மெஃக வேலுடைப்
பொருப்பரங் குணர்வுறப் புதல்வி தன்மிசை
விருப்பருங் குமரிடை விளங்கக் காட்டிய
திருப்பரங் குன்றமர் சேயைப் போற்றுவாம்.

(பொ - ரை.) இரும்பினாற் செய்யப்பட்ட அரத்தினால் அராவப்பெற்ற எஃகம் என்னும் வேற்படையையுடைய குறவர்தம் புதல்வியாகிய வள்ளிஅம்மையாரிடத்துவைத்த அன்பை அழிதற்குரிய போர்க்களத்தில் வெளிப்படக்காட்டின திருப்பரங்குன்றத்தில் எழுந்தருளியிருக்கிற இளையபிள்ளையாரைத் துதிப்போம் யாம். (எ - று.) (கஉ)

சூரலை வாயிடைத் தொலைத்து மார்புகீண்
டீரலை வாயிடு மெஃக மேந்தியே
வேரலை வாய்தரு வெள்ளி வெற்பொரீஇச்
சீரலை வாய்வரு சேயைப் போற்றுவாம்.

(பொ - ரை.) சூரபன்மனைக் கடலினிடத்தே கொன்று அவனது நெஞ்சைப் பிளந்து அவனது ஈரலை அவன் வாயிலிட்ட வேற்படையைத்தாங்கி, பிரப்பங்காட்டினைப்பொருந்திய வெள்ளிமலையைநீங்கி, திருச்சீரலைவாய் என்னுந் திருப்பதியில் எழுந்தருளின இளையபிள்ளையாரை வணங்குவோம் யாம். (எ - று.) (கந)

காவினன் குடிஉற காமர் பொன்னகர்
மேவினன் குடிவர விளியச் சூர்முதல்
பூவினன் குடிலையம் பொருட்கு மாலுற
வாவினன் குடிவரு மமலற் போற்றுவாம்.

(பொ - ரை.) கற்பகச்சோலையை யுடையவனாகிய இந்திரன், மாளிகைகளமைந்த அழகுள்ள பொன்னுலகிற்பொருந்தி நன்காகக்குடியேறவும், சூரனாகிய முதல்வன் இறக்கவும், தாமரைமலரை யாசநமாகவுடையவனாகிய பிரமன் பிரணவத்தின் அழகியபொருட்கு மயக்கமடையவும் திருவாவினன்குடியில் எழுந்தருளின அமலராகிய இளையபிள்ளையாரைத் துதிப்போம் யாம். (எ - று.)

நீரகத் தேதனை நினையு மன்பினோர்
பேரகத் தலமரும் பிறவி நீத்திடுந்
தாரகத் துருவமாந் தலைமை யெய்திய
வேரகத் தறுமுக னடிக ளேத்துவாம்.

(பொ - ரை.) நற்குணமமைந்த மனத்தின்கண்ணே தன்னைநினைக்கிற அன்பரது பெருமைபொருந்திய இதயத்தில் சுழலாநின்ற பிறப்பை யொழித்திடுகின்ற பிரணவ வடிவாகிய முதன்மையடைந்ததிருவேரகத்திலெழுந்தருளிய சண்முகனது திருவடிகளைத் துதிப்போம் யாம். (எ - று.) (கரு)

ஒன்றுதோ றுடலை யொருவி யாவிமெய்
துன்றுதோ றுடலைத் தொடங்கி யைவகை
மன்றுதோ றுடிய வள்ளல் காமுறக்
குன்றுதோ றாடிய குமரற் போற்றுவாம்.

(பொ - ரை.) உயிர்கள் ஒடுங்குந்தோறும் திருநடனத்தைச் செய்யாதொழிந்தும், அவையுடம்பைப்பொருந்தும் பிறவிதோறும் திருநடனஞ்செய்யாநின்றும்,

ஐந்துவிதமாகிய சபைகளினும் திருநடனஞ்செய்த பரமோதாரராகிய சிவபெருமான் விரும்பும்படி மலைகள்தோறும் திருவிளையாடலைச்செய்த குமாரக்கடவுளைத் துதிப்போம் யாம். (எ - று.) (கசு)

எழுமுதி ரைப்புனத் திறைவி முன்புதன்
கிழமுதி ரிளநலங் கிடைப்ப முன்னவன்
மழமுதிர் களிறெனை வருதல் வேண்டிய
பழமுதிர் சோலையம் பகவற் போற்றுவாம்.

(பொ - ரை.) வள்ளிநாயகியார் முன்னமே தினைப்புனத்தி லெழுந்தருளுதலும், தனது முதிர்ந்த கிழப்பருவத்திலேயே இளமைப்பருவத்திற்குரிய காமநுகர்ச்சி வாய்க்கும்படி தனக்கு மூத்தவனாகிய விநாயகன் இளமைமுதிர்ந்த யானைபோல வருதலை விரும்பின பழமுதிர்சோலையி லெழுந்தருளிய அழகிய பகவானாகிய முருகக்கடவுளைத் துதிப்போம் யாம். (எ - று.) (கஎ)

ஈறுசேர் பொழுதினு மிறுதி யின்றியே
மாறிலா திருந்திடும் வளங்கொள் காஞ்சியிற்
கூறுசீர் புனைதரு குமர கோட்டம்வா
ழாறுமா முகப்பிரா னடிகள் போற்றுவாம்.

(பொ - ரை.) இறுதிக்காலம் வந்தபோதும் தான் அழிவில்லாமலும் மாறுபடுத லில்லாமலும் நிலைபெற்றிருக்கிற வளத்தைக்கொண்ட திருக்காஞ்சிமாநகரத்தில், எல்லாராலும் எடுத்துப் புகழப்படுதற்குரிய மேன்மையைக்கொண்ட குமரகோட்டத்தில் நித்தியவாசம் பண்ணுகிற அழகாகிய ஆறு திருமுகங்களையுடைய இளையபிள்ளையாரது திருவடிகளைத் துதிப்போம் யாம். (எ - று.) (கஅ)

## திருநந்திதேவர்.

ஐயிரு புராணநூ லமலற் கோதியுஞ்
செய்யபன் மறைகளுந் தெரிந்து மாயையான்
மெய்யறு சூள்புகல் வியாத னீட்டிய
கையடு நந்திதன் கழல்கள் போற்றுவாம்.

(பொ - ரை.) பத்துப்புராணங்களாகிய நூல்களைச் சிவபெருமானுக்குச் சொல்லியும், செப்பமாகிய பலவேதங்களையும் ஆராய்ந்து தெளிந்திருந்தும் மாயாசம்பந்தத்தால் உண்மையில்லாத சபதத்தைச்சொன்ன வியாசமுனி உயரவெடுத்த கையைத் தம்பிக்கச்செய்த திருநந்திதேவருடைய திருவடிகளைத் துதிப்போம் யாம்.

## திருஞானசம்பந்தமூர்த்திசுவாமிகள்.

பண்டைவல் வினையினாற் பாயுடுத்துழல்
குண்டரை வென்றுமுன் கூடல் வைகியே
வெண்டிரு நீற்றொளி விளங்கச் செய்திடு
தண்டமிழ் விரகன்மெய்த் தாள்கள் போற்றுவாம்.

(போ - ரை.) முற்பிறப்பிற்செய்த வலிய தீவினையினால் பாயை ஆடையாக வுடுத்துழலாநின்ற சமணரைச்செயித்து, முற்காலத்தில் கூடற்பதியில் வீற்றிருந் தருளி, திருவெண்ணீற்றி னொளியானது விளங்கச்செய்தருளின குளிர்ந்த முத்தமிழ் விரகன் என்னுந் திருநாமத்தையுடைய திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகளது அழிவற்ற திருவடிகளைத் துதிப்போம் யாம். (எ - று.) (உ0)

## திருநாவுக்கரசுசுவாமிகள்.

பொய்யுரை நூல்சில புகலுந் தீயமண்
ஞ்கயர்கள் பிணித்துமுன் கடல கததிடு
வெய்யகற் றுணியாய் மிதப்ப மேற்படு
துய்யசொல் லரசர்தா டொழுது போற்றுவாம்.

(போ - ரை.) பொய்ச்சொற்கள் நிறைந்த நூல்கள் சிலவற்றைச்சொல்லிய கொடிய சமணர்களாகிய வஞ்சகர்கள் முற்காலத்தில் கட்டிக் கடலினிடத்தேவிட்ட வலியகல்லே தெப்பமாகமிதக்கக் கரையேறின பரிசுத்தராகிய வாகீசருடைய திரு வடிகளை வணங்கித் துதிப்போம் யாம். (எ - று.) (உக)

## சுந்தரமூர்த்திசுவாமிகள்.

வறந்திடு பொய்கைமுன் னிரம்ப மற்றவ
ணுறைந்திடு முதலைவந் துதிப்ப வன்னதா
லிறந்திடு மகன்வளர்ந் தெய்தப பாடலொன்
றறைந்திடு சுந்தர னடிகள் போற்றுவாம்.

(போ - ரை.) வற்றிப்போன தடாகம் முற்காலத்தில் நீர்நிறையவும், அந்தத் தடாகத்தில் தங்கியிருந்த முதலையானது வந்துதோன்றவும், அந்த முதலைவாயிலிற ந்துபோன பார்ப்பனச்சிறுவன் வளர்ந்து எதிரேவரவும் திருப்பாடலொன்றனை அருளிச்செய்த சுந்தரமூர்த்தி சுவாமிகளது திருவடிகளைத் துதிப்போம் யாம். ()

## மாணிக்கவாசகசுவாமிகள்.

கந்தமொ டுயிர்படுங் கணபங் கம்மெனச்
சிந்தைகொள் சாக்கியர் தியங்க மூகராய்
முந்தொரு மூகையை மொழிவித் தெந்தைபால்
வந்திடு மடிகளை வணக்கஞ் செய்குவாம்.

(போ - ரை.) ஆன்மா பஞ்சகந்தங்களுடனே கணந்தோறுந்தோன்றி யழியு மென்று நினைத்துக்கொண்டிருக்கிற சாக்கியர்கள் ஊமைகளாகி மயங்கவும், எதிர்ப் பட்ட ஒரு ஊமைப்பெண்ணைப் பேசுவித்து எமது தந்தையாகிய சிவபெருமானிடத் தில் வந்தடைந்த மாணிக்கவாசக சுவாமிகளை வணங்குவோம் யாம். (எ-று.) (உங)

## திருத்தொண்டர்கள்.

அண்டரு நான்முகத் தயனும் யாவருங்
கண்டிட வரியதோர் காட்சிக் கண்ணவா

யெண்டகு சிவனடி யெய்தி வாழ்திருத்
தொண்டர்தம் பதமலர் தொழுது போற்றுவாம்.

(பொ - ரை.) தேவர்களும் நான்கு முகங்களையுடைய பிரமனும் மற்றைய ரெல்லாரும் காண்பதற்கு அரியதாகிய காட்சியினிடத்தவாய் யாவருந் தியானிக்கத் தகுந்த சிவபெருமானது திருவடியை அடைந்து வாழ்கின்ற திருத்தொண்டர்களுடைய திருவடிகளாகிய தாமரைமலர்களை வணங்கித் துதிப்போம் யாம். (எ-று.) (உச)

## கலைமகள்.

தாவரு முலகெலாந் தந்த நான்முகத்
தேவுதன் றுணைவியாய்ச் செறிந்த பல்லுயிர்
நாவுதொ றிருந்திடு நலங்கொள் வாணிதன்
பூவடி முடிமிசைப் புனைந்து போற்றுவாம்.

(பொ - ரை.) கெடுதலில்லாத வுலகங்களெல்லாவற்றையும் படைத்த நான்கு முகங்களையுடைய பிரமதேவனுக்குத் தேவியாகி, நிறைந்த பலவுயிர்களுடைய நாக்களிலெல்லாம் வீற்றிருக்கிற நன்மையைக்கொண்ட கலைமகளது தாமரைமலர் போன்ற திருவடியை எமதுசிரத்தின்மேல் சூடித்துதிப்போம் யாம். (எ-று.) (உரு)

கடவுள்வாழ்த்து முற்றிற்று.

ஆ திருவிருத்தம் ௨௦.

# அவையடக்கம்.

இறைநில மெழுதுமு னிளைய பாலகன்
முறைவரை வேனென முயல்வ தொக்குமா
லறுமுக முடையவோ ரமலன் மாக்கதை
சிறியதோ ரறிவினேன் செப்ப நின்றதே.

(பொ - ரை.) ஆறுதிருமுகங்களையுடைய ஒப்பற்ற பரிசுத்தனாகிய முருகக் கடவுளின் பெருமைபொருந்திய சரிதத்தைச் சிற்றறிவினையுடையவனாகிய நான் சொல்லுதற்குத் துணிந்துநின்றது ஒரு சிறியபாலகன் தன்கைவிரலால் நிலத்தில் எழுதுவதற்குமுன்பே பெரியபுத்தகத்தை யெழுதுவேனென்று முயற்சிசெய்வதை நிகர்க்கும். (எ - று.) (க)

## வேறு.

ஆன சொற்றமிழ் வல்ல வறிஞர்முன்
யானு மிக்கதை கூறுதற் கெண்ணுதல்
வான கத்தெழும் வான்கதி ரோன்புடை
மீனி மைப்ப விரும்பிய போலுமால்.

(போ - ரை.) உயர்வாகிய சொற்களையுடைய தமிழ்மொழியில் வல்லவராகிய அறிவுடையார்க்கெதிரே அறிவிலியாகிய நானும் இந்தக்கதையைச் சொல்லுதற்கு நினைப்பது ஆகாயத்தின்கண் உயர்ந்து தோன்றுகிற மேலான சூரியன்பக்கத்தில் உடுக்களும் பிரகாசிக்க விரும்பினவற்றை நிகர்க்கும். (எ - று.) (உ)

முன்சொல் கின்ற முனிவட நூறெரீஇத்
தென்சொ லாற்சிறி யேனுரை செய்தலான்
மென்சொ லேனும் வெளிற்றுரை யேனும்வீண்
புன்சொ லேனு மிகழார் புலமையோர்.

(போ - ரை.) முன்னே சொல்லப்பட்ட வியாசமுனிவரது வடநூற் பொருளையறிந்து தென்மொழியால் சிறியனேன் சொல்வதனால் (என்சொற்கள்) தாழ்ந்த சொற்களேயாயினும் வெளிப்படைச் சொற்களேயாயினும் பயனற்ற அற்பமான சொற்களேயாயினும் நிறைந்த புலமையுள்ளவர் (அவற்றை) இகழமாட்டார். எ - று.

சிந்து மென்பு சிரம்பிறை தாங்கினோன்
மைந்த னுதலின் மற்றவன் றானுமென்
சந்த மில்லுரை யுந்தரிப் பானெனக்
கந்த னுக்குரைத் தேனிக் கதையினை.

(போ - ரை.) சிந்தின எலும்பையும் தலையையும் சந்திரகண்டத்தையுந் தாங்கினவனாகிய சிவபெருமானது புதல்வனாதலால் அவனும் எனது அழகற்ற சொல்லையும் ஏற்றுக்கொள்வானென்றெண்ணி இந்தக்கதையை முருகக்கடவுள் விஷயமாகச்சொன்னேன். (எ - று.) (ச)

வெற்றெ னத்தொடுத் தீர்த்து வெளிற்றுரை
முற்று மாக மொழிந்தவென் பாடலிற்
குற்ற நாடினர் கூறுப தொல்லைநூல்
கற்று ணர்ந்த கலைவல் லோர்களே.

(போ - ரை.) வெளிற்றுச்சொற்களால் தொடுத்து அவற்றை அசைச்சீர் முதலியவாகச்செய்து அந்த வெளிற்றுச்சொற்களே நூல்முழுதும் நிரம்பும்படி சொல்லிய என்பாட்டிலுள்ள குற்றங்களைப் பழைய நூல்களைக் கற்றறிந்த கலைவல்லாரல்லாதவர்களே ஆராய்ந்து சொல்வார்கள். (எ - று.) (ரு)

குற்ற மேதெரி வார்குறு மாமுனி
சொற்ற பாவினு மோர்குறை சொல்வராற்
கற்றி லாவென் கவிவழு வாயினு
முற்று நாடிவல் லோருய்த் துரைக்கவே.

(போ - ரை.) பிறர் குற்றத்தையே ஆராய்ந்துரைக்கு மியல்புடையார் பெருமைபொருந்திய அகத்தியமுனிவர் சொல்லிய பாடலினும் ஒருகுற்ற மெடுத்துச் சொல்லுவர்; ஆதலால் கல்விகல்லாத என்பாடல் குற்றமுள்ளதாயிருப்பினும் கற்றுவல்லோர் மனம்பொருந்தி யாராய்ந்து தெளிந்துரைக்கக்கடவர். (எ - று.) (சு)

வேறு.

குறைபல மாமதி கொளினு மன்னதா
லுறுபய னோக்கியே யுலகம் போற்றல்போற்
சிறியவென் வெளிற்றுரை சிறப்பின் றாயினு
மறுமுகன் கதையிதென் றறிஞர் கொள்வரே.

(பொ - ரை.) பெருமைபொருந்திய சந்திரன் பலகுறைகளைக் கொண்டிருந் தாலும் அந்தச்சந்திரனால் உண்டாகும்பயனை நோக்கியே உலகமானது அந்தச்சந் திரனைக் கொண்டாடுவதுபோலச் சிறியோனாகிய எனது வெளிப்படைச் சொற்கள் சிறப்புடைய வல்லவாயினும் இது சண்முகன் சரிதமென்று அறிவுடையோர் அங் கீகரிப்பார்கள். (எ - று.) (எ)

நாதனா ரருள்பெறு நந்தி தந்திடக்
கோதிலா துணர்சனற் குமரன் கூறிட
வாதரா யணமுனி வகுப்ப வோர்ந்துணர்
சூதனோ தியதுமூ வாறு தொல்கதை.

(பொ - ரை.) சிவபெருமானாரது அருள்பெற்ற நந்தியெம்பெருமான் கூறக் குற்றமற அறிந்த சனற்குமார முனிவன்சொல்ல, அதனையறிந்த வியாசமுனிவர் வகுத்துக்கூற, அதனை ஆராய்ந்தறிந்த சூதமுனிவர்சொல்லியது பதினெட்டாகிய பழைய கதைகளாம். (எ - று.) (அ)

சொல்லிய புராணமாந் தொகையு ளீசனை
யல்லவர் காதைக ளனையர் செய்கையு
ணல்லன விரித்திடு நவைகண் மாற்றிடு
மில்லது முகமனா லெடுத்துக் கூறுமே.

(பொ - ரை.) சொல்லப்பட்ட புராணங்களின் தொகையில் சிவபிரானை யல்லாத பிறதேவருடைய சரிதங்கள், அவர்களுடைய செயல்களுள்ளே நல்லவற்றை விரித்துச்சொல்லும்; குற்றங்களை வேறுபடுத்திக்கூறும்; அவர்களுக்கில்லாத சிறப் பினையும் உபசாரமாக எடுத்துச்சொல்லும். (எ - று.) (கூ)

பிறையணி சடைமுடிப் பிரான்றன் காதைக
ளிறையுமோர் மறுவில யாவு மேன்மையே
மறைபல சான்றுள வாய்மை யேயவை
யறிஞர்க ளுடியே யவற்றைக் காண்கவே.

(பொ - ரை.) பிறையைத்தரித்த சடாமகுடத்தையுடைய சிவபிரானுடைய புராணங்கள் அற்பமும் ஒரு களங்கமுடையனவல்ல; எல்லாம் சிறப்புடையனவே; இதற்குப் பலவேதங்களே சாட்சியுள்ளன; அவை சத்தியமே; அவற்றை அறிவுடை யோர் ஆராய்ந்து காணக்கடவர். (எ - று.) (கய)

புவியின ரேனையர் புராணந் தேரினுஞ்
சிவகதை யுணர்கில ரென்னிற் றீருமோ
வவர்மய லரசனை யடைந்தி டாரெனி
லெவரெவ ராக்கமு மினிது போலுமால்.

(பொ - ரை.) உலகத்தார் பிறதேவர்களுடைய புராணங்களைத் தெளிந்தறிவாராயினும் சிவபுராணங்களை அறிகிலராயின் அவரது மயக்கம் நீங்குமோ? வேந்தனைச்சேராராயின் எவ்வெவருடைய செல்வமும் இனிதாகத்தோற்றும் போலும். (எ - று.) (கக)

மங்கையோர் பங்குடை வான நாயகற்
கிங்குள பலபுரா ணத்து ளெங்கவேற
புங்கவன் சீர்புகழ் புராண மொன்றுள
தங்கதி லொருசில வடைவிற் கூறுகேன்.

(பொ - ரை.) உமாதேவியை ஒருபாகத்திலுடைய சிவபெருமானுக்கு இவ்வுலகத்திலுள்ள பல புராணங்களுள்ளே, கூர்மையாகிய வேலாயுதத்தையுடைய முருகக்கடவுளின் பெருமையைப் புகழ்ந்துபேசுகிற ஒருபுராணமுண்டு; அதிலுள்ள ஒருசிலவற்றை முறைமையாகச் சொலலாநின்றேன். (எ - று.) (கஉ)

புதுமயி லூர்பரன் புராணத துற்றிடாக்
கதையிலை யன்னது கணித மின்றரோ
வதுமுழு தறையவெற கமைதற பாலதோ
துதியுறு புலமைசேர் சூதற் கல்லதே.

(பொ - ரை.) புதுமையான மயிலவாகநத்தைச் செலுத்துகிற மேலோனாகிய முருகக்கடவுளின் புராணததில் பொருந்தாத கதைகள்வேறு எந்தப்புராணத்திலுமிலலை; அதற்கு ஒருசங்கையில்லை; அந்தச்சரிதம் யாவராலும் துதிக்கப்படுகிற புலமையையுடைய சூதமுனிவருக்கல்லாமல் முழுதும்சொல்ல எனக்கு அமையும் பான்மைத்தோ. (எ - று.) (கங)

காந்தமா கியபெருங் கடலுட் கந்தவேள்
போந்திடு நிமித்தமும் புனிதன் கண்ணிடை
யேந்தல்வந் தவுணர்கள் யாரு மவ்வழி
மாய்ந்திட வடர்த்தது மற்றுங் கூறுகேன்.

(பொ - ரை.) கந்தபுராணமாகிய பெரியகடலில், பரிசுத்தராகிய சிவபெருமானது திருக்கண்ணில் முருகவேள் அவதரித்தகாரணமும் அந்தமுருகக்கடவுளெழுந்தருளி அசுரரெல்லாருமடியும்படி போர்புரிந்ததும் அதன் சம்பந்தமான மற்றைக்கதைகளையும் சொல்லாநின்றேன். (எ - று.) (கச)

வேறு.

ஏதி லாக்கற்ப மெண்ணில சென்றன
வாத லாலிக் கதையு மனந்தமாம்
பேத மாகுமப் பேதத்தி னுள்விரித்
தோது காந்தத்தி னுண்மையைக் கூறுகேன்.

(பொ - ரை.) குற்றமில்லாத கற்பங்கள் கணக்கில்லன கழிந்தன. ஆகையால் இந்தச்சரிதமும் முடிவில்லனவாகிய வேறுபாடுடையதாகும். அந்த வேறுபாடுகளுக் குள்ளே சொல்லப்படுகிற கந்தபுராணத்தின் மெய்ப்பொருளை விரித்துச்சொல்லா நின்றேன். (எ - று.) (கடு)

முன்பு சூதன் மொழிவட நூற்கதை
பின்பி யான்றமிழ்ப் பெற்றியிற் செப்புகே
னென்ப யன்னெனி னின்றமிழ்த் தேசிகர்
நன்பு லத்தவை காட்டு நயப்பரோ.

(பொ - ரை.) முற்காலத்தில் சூதமுனிவன் சொன்ன வடமொழியி லடங் கின சரிதத்தை இக்காலத்தில் நான் தென்மொழியினால் சொல்லாநின்றேன்; யாது பயன்கருதியென்றால் இனிய தமிழாசிரியரது நல்ல அறிவினிடத்து அச்சொற்கள் விளக்கிற இன்பமேயாம். (எ - று.) (கசு)

தோற்ற மீறின்றித் தோற்றிய சூர்ப்பகைக்
கேற்ற காதைக் கெவன்பெய ரென்றிடி
னூற்று மைம்புலத் தாறுசென் மேலையோர்
போற்று கந்த புராணம தென்பதே.

(பொ - ரை.) உற்பத்தியும் நாசமுமில்லாமல் அவதரித்த முருகக்கடவுளுக் குத் தகுதியான சரிதத்துக்குப்பெயர்யாதெனின் மாற்றிய பஞ்சேந்திரிய மார்க்கத் தில் செல்லுகின்ற மேலோர் கொண்டாடுகிற கந்தபுராணம் என்பதாம். (எ - று.)

பகுதி கொண்டிடு பாக்க ளினத்தினுண்
மிகுதி கொண்ட விருத்தத் தொகைகளாற்
றொகுதி கொண்டிடு சூர்கிளை சாய்த்தவன்
றகுதி கொண்ட தனிக்கதை சாற்றுகேன்.

(பொ - ரை.) தொகையைக்கொண்ட சூரனது சுற்றத்தாரைக் கொன்றவ னாகிய முருகக்கடவுளின் தகுதியைக்கொண்டிருக்கிற ஒப்பற்ற சரிதத்தைப் பலபாகு பாடுகளைக்கொண்ட பாடல்களுள்ளே மேன்மையைக்கொண்ட விருத்தத்தொகுதிக ளால் சொல்லாநின்றேன். (எ - று.) (கஅ)

செந்த மிழ்க்கு வரம்பெனச் செப்பிய
முந்து காஞ்சியின் முற்றுணர் மேலவர்
கந்த னெந்தை கதையினை நூன்முறை
தந்தி டென்னத் தமிய னியம்புகேன்.

(பொ - ரை.) செந்தமிழ் நாட்டிற்கு எல்லையென்று சொல்லப்பட்ட முற் பட்டுவிளங்குகிற காஞ்சிமாநகரத்தில் முழுதுமறிந்த மேலோர் கந்தனாகிய எமது தந்தையின் சரிதத்தை வடநூலின் முறைப்படியே தமிழ்மொழியால் பாடித்தருக வென்று நியமிக்க, தமியேன்பாடாநின்றேன். (எ - று.) (கக)

வெம்பு சூர்முதல் வீட்டிய வேற்படை
நம்பி காதையை நற்றமிழ்ப் பாடலா
லும்பர் போற்ற வுமையுடன் மேவிய
கம்பர் காஞ்சியிற் கட்டுரைத் தேனியான்.

(பொ - ரை.) கோபித்தெதிர்த்த சூரனாகிய முதல்வனைக்கொன்ற வேலாயுதத்தையுடைய முருகக்கடவுளின் சரிதத்தை நல்லதமிழ்ப்பாடல்களால் தேவர்கள் வந்துவணங்கும்படி உமையோடுகூடி யெழுந்தருளின திருவேகம்பரது காஞ்சிமாநகரத்தில் நான் உறுதியாகப் பாடினேன். (எ - று.) (உ0)

அவையடக்க முற்றிற்று.

ஆக திருவிருத்தம் ௰.

---

## ஆற்றுப் படலம்.

செக்கரஞ் சடைமுடிச் சிவனுக் கன்பராய்த்
தக்கவ ரறிஞர்க டவத்தர் செல்வராய்த்
தொக்கவர் யாரும்வாழ் தொண்டை நாட்டினின்
மிக்கதோ ரணியிய லதுவி ளம்புகேன். (க)

சுந்தர மாயவன் றுயிலு மாழிபோ
லிந்திர னூர்முகி லியாவு மேகியே
யந்தமில் கடற்புன லருந்தி யார்த்தெழீஇ
வந்தன வுவரியின் வண்ண மென்னவே. (உ)

பார்த்தென துலகடும் பரிதி யென்றெடும்
போர்த்தொழில் புரிகெனப் பொங்கு சீற்றத்தால்
வேர்த்தெனப் பனித்துவெள் ளெயிறு விள்ளநக்
கார்த்தென வேத்தித் தசனி கான்றவே. (௩)

சுந்தர வயிரவத் தோன்றன் மீமிசைக்
கந்தடு களிற்றுரி கவைஇய காட்சிபோன்
முந்துறு சூன்முகின் முழுது முற்றுற
நந்தியம் பெருவரை மீது நண்ணிய. (௪)

வே று.

வாரை * கான்றசித் திலமென வாலிகண் மயங்கச்
சீரை கான்றிடு தந்திரி நரம்பெனச் செறிந்த

* வாரை - நீட்டல் விகாரம்.

தாரை கான்றவோ ரிருதுவி னெல்லையுந் தண்பால்
வீரை கான்றிடு தன்மைய தாமென மேகம்        (ரு)

பூட்டு கார்முகந் தன்னொடுந் தோன்றிய புயல்வா
யூட்டு தண்புன னந்தியங் கிரிமிசை யுகுத்தல்
வேட்டு வக்குலத் திண்ணனார் மஞ்சனம் விமலற்
காட்டு கின்றதோர் தனிச்செயல் போன்றுள தன்றே.        (சு)

கல்லென் பேரிசைப் புனன்மழை பொழிதலாற் கானத்
தொல்லும் பேரழல் யாவையு மிமைப்பினி லொளித்த
வெல்லுந் தீஞ்சல மருவுமிக் காருக்கு வியன்பார்
செல்லுங் காலையி லங்கண்வீற் றிருப்பரோ தீயோர்.        (எ)

தேக்கு தெண்டிரைப் புணரிநீர் வெண்மையைச் சிந்தி
யாக்கி வாலொளி யுலகில்விட் டேகலா லடைந்தோர்
நீக்க ரும்வினை மாற்றிநன் னெறியிடைச் செலுத்திப்
போக்கின் மேயின தேசிகர்ப் பொருவின புயல்கள்.        (அ)

கழிந்த பற்றுடை வசிட்டன திருக்கையாக் கவினார்
மொழிந்த நந்தியம் பெருவரை மொய்த்தசூன் முகில்கள்
பொழிந்த சீதநீர் பொறபுறு சாடியிற்பொங்கி
வழிந்த பாலெனத் திசைதொறு மிழிந்தன மன்னோ.        (கூ)

சீல மேதகு பகீரதன் வேண்டலுஞ் சிவன்றன்
கோல வாாசடைக் கங்கையம் புனலினைக் குன்றின்
மேலை நாள்விட வந்தென நந்திவீழ் விரிநீர்
பாலி யாறெனும் பெயர்கொடு நடந்தது படிமேல்.        (கo)

வாலி தாகிய குணத்தினன் வசிட்டனென் றுரைக்குஞ்
சீல மாமுனி படைத்ததோர் தேனுவின் றீம்பால்
சால நீடியே தொல்லைநாட் படர்ந்திடு தன்மைப்
பாலி மாநதிப் பெருமையான் பகர்வதற் கெளிதோ.        (கக)

எய்யும் வெஞ்சிலைப் புளினரை யெயிற்றியர் தொகையைக்
கைய ரிக்கொடு வாரியே சிறுகுடி கலக்கித்
துய்ய சந்தகில் பறித்துடன் போந்தது தொன்னாள்
வெய்ய சூர்படை வான்சிறை கவர்ந்துமீண் டதுபோல்.        (கஉ)

காக பந்தரிற் கருமுகிற் காளிமங் கனலு
மாக நீள்கரி யாவையுங் குழுவொடும் வாரிப்
போகன் மேயின மேற்றிசைப் புணரியுண் டமையா
மேக ராசிகள் குணகடன் மீதுசெல் வனபோல்.        (கங)

குவட்டு மால்கரிக் குருகுதே ரரிபுலிக் குவையுண்
டுவட்டி யுந்திடு திரைப்புனன் மதூகநல் லுழிஞ்சில்
கவட்டி ஞெமைசாய்த் தாறலை கள்வரூர் கலக்கித்
தெவிட்டி வந்தது பாலையுட் கொண்டிடு செருக்கால். (கச)

காலை வெம்பகல் கதிரவன் குடதிசைக் கரக்கு
மாலை யாமம்வை கறையெலாஞ் செந்தழல் வடிவாய்
வேலை யும்பரு கியவெழும் வெம்மைபோய் விளிந்து
பாலை காண்கிலா வாரியின் பெருமையார் பகர்வார். (கரு)

குல்லை மாலதி கொன்றைகா யாமலர்க் குருந்து
முல்லை சாடியே யானிரை முழுவது மலைத்து
மெல்ல மற்றவை நீந்தலுங் கரைக்கண்விட் டௌதாற்
றொல்லை மாநதி யான்வழித் தோன்றிய தொடர்பால். (கசு)

சுளையு டைப்பல வாசினி பூகமாந் துடவை
யுளைம லர்ச்சினை மருதமோ டொழிந்தன பிறவுங்
களைத லுற்றுமாட் டெறிந்தது கண்ணகன் குடிஞை
யளவின் மிக்குறு பாணிபெற் றதற்கவை யரிதோ. (கஎ)

இலைவி ரித்துவெண் சோறுகால் கைதையு மெழுதுங்
கலைவி ரித்திடு பெண்ணையுங் களைந்திடுங் களைபோ
லலைவி ரித்திடு கடல்புக வொழுகுமா றனந்தன்
றலைவி ரித்துழி யுடனெளித் தன்னதோர் தகைத்தால். (கஅ)

கொங்கு லாமலர்க் கொன்றைகூ விளைகுரா வுழிஞை
பொங்கு மாசுணந் தாதகி பாடலம் புன்னை
துங்க மார்திருத் தலைமிசைக் கொண்டிறுந் தொடர்பா
லெங்க ளையகன் றன்னையு மொத்ததவ் விருநீர். (ககூ)

கொலைகொள் வேன்மற வீரர்த மிருக்கையிற் குறுகாச்
சிலையும் வாளொடு தண்டமுந் திகிரிவான் படையு
நிலவு சங்கமுங் கொண்டுசென் றடல்புரி நீரா
லுலக மேழையு முற்பக லயின்றமா லொக்கும். (உ0)

தேன்கு லாவிய மலர்மிசைப் பொலிதரு செயலா
னான்க வாமுகந் தொறும்மறை யிசையொடு நணுகிக்
கான்கு லாவிய கலைமரை மான்றிகழ் கவினால்
வான்கு லாமுல குளிப்பவ னிகர்க்குமால் வாரி. (உக)

மீது போந்திரி சங்கையின் னிடையின்மீ ளுடும்
போத லாயுற வீசலாற் சலமிகும் புலனாற்

நீதின் மாக்களைச் செறுத்தலா லளித்திடுஞ் செயலாற்
காதி காதல னிகர்க்குமாற் கன்னிமா நீத்தம். (உஉ)

தெழித்த மால்கரி யினங்கட மெயிற்றினுற் சிதையக்
சுழித்த பேரிறுல் சொரிந்ததேன் கிரியுள வெல்லாங்
கொழித்து வந்துற வணைதரும் பாலியின் கொள்கை
சுழித்த நீர்க்கங்கை யமுனையைக் கலந்தெனத் தோன்றும். (உ௩)

சங்க மார்த்திடத் திரையெழ நதியுறுந் தகைமை
யங்கம் வெம்பிணி பணிக்கதி ரல்லலீ யழலோ
யிங்கு வாதிளைத் தேகுதி யெனக்கர மெடுத்தே
பொங்கும் வாய்விடா விரவியை விளிப்பது போலும். (உ௪)

வேத மேமுதல் யாவையு முணர்கினு மேலா
மாதி வானவன் கறைமிடற் றிறையென வறியாப்
பேதை மாக்கட முணர்வென வலைந்துபேர் கின்ற
சீத நீரெலாந் தெளிதலின் றுயது சிறிதும். (உ௫)

செம்பொன் மால்வரை யல்லன கிரிகளுந் திசையு
மும்பர் வானமுந் தரணியுந் துளங்கவந் துறலா
லெம்பி ரான்முனம் வருகென நதிகளோ டெழுந்த
கம்பை மாநதி யொத்தது கரைபொரு பாலி. (உ௬)

உதிரு கின்றசிற் றுண்டிகொண் டொலிபுனற் சடைமேன்
மதுரை நாயகன் மண்சுமந் திட்டமா நதியின்
முதிரு முத்தமிழ் விரகன தேடென மொய்ம்பி
னெதிர்பு குந்திடப் போவது பாலியா மியாறு. (உ௭)

வேறு.

மாசறத் துளங்கு துப்பு மரகதத் திடைவந் தென்னப்
பாசடை நடுவட் பூத்த பங்கயத் தடாகம் யாவுந்
தேசுடைத் தரங்க நீத்தச் செலவினுற் சிதைந்த மன்னோ
பேசிடிற் சிறுமை யெல்லாம் பெருமையா லடங்கு மன்றே. (உ௮)

வளவயன் மருத வைப்பின் வாவியங் கமலம் யாவுங்
கிளையொடும் பறித்து வாரிக் கேழுறப் பொலிந்த தோற்றம்
விளைதரு பகையிற் றேலா வெவ்வழற் சிறுமை நோக்கிக்
களைதலைப் புரிந்து பற்றிப் பெயர்ந்தெனக் காட்டிற் றன்றே. (உ௯)

திரைகட னீத்தங் கொண்மூ வினத்தொடு சேண்போய் நோக்கித்
தரையிடை யிழிந்து சென்று தன்பொருள் கொடுபோந் தென்னப்
பரதவ ரளவர் வாரிப் படுத்தமீ னுப்பின் குப்பை
யிருபுடை யலைத்து வெளவி யேகிய தெறிநீர்ப் பாலி. (௩0)

பாரிடை யினைய பண்பிற் படர்ந்திடு பாலி யந்தத்
தாருயி ரனைத்துந் தத்த மருவினைக் கமைத்த நீராற்

சேருறு கதிக ளென்ன மரபினிற் றிறமே யென்னத்
தாருவின் கிளைக ளென்னத் தனித்தனி பிரிந்த தன்றே. (௩௧)

கால்கிளர் கின்ற நீத்தங் கவிரிதழ்க் கலசக் கொங்கைச்
சேல்கிளர் கரிய வுண்கட் டிருநுதன் மிழற்றுந் தீஞ்சொன்
மேல்கிளர் பரவை யல்குன் மெல்லிய லறன்மென் கூந்தன்
மால்கிளர் கணிகை மாதர் மனமெனப் போயிற் றுமால். (௩௨)

பாம்பளை புகுவ தேபோற் பாய்தரு பரவைத் தெண்ணீர்
தூம்பிடை யணுகு மாற்றாற் சொன்முறை தடைசெய் வோரிற்
றும்புடை பெயரா வண்ணந் தலைத்தலை தள்ளு மள்ள
ரேம்பலோ டார்க்கு மோதை யுலகெலா மிறுக்கு மாதோ. (௩௩)

பணையொலி யிரலை யோதை பம்பையின் முழக்க மங்கட்
கிணையொலி மள்ள ரார்ப்புக் கேழ்கிளர் தரங்க நன்னீ
ரணையொலி யவற்றை வானத் தார்ப்பொலிக் கவனி தானு
மிணையொலி காட்டிற் றேவென் றெண்ணுவார் விண்ணு ளோரும். (௩௪)

இயல்புகுங் களிநல் யானை யினந்தெரிந் தெய்து மாபோற்
கயல்புகுந் துலவுஞ் சின்னீர்த் தடம்புகுங் காமர் காவி
னயல்புகுங் கோட்ட கத்தி னகம்புகு மார்வத் தோடி
வயல்புகுங் களிப்பு நீங்கா மாக்களின் மயங்கி மாதோ. (௩௫)

எங்கணு நிறைந்து வேறே ரிடம்பிறி தின்மை யாகச்
சங்கமா யீண்டு மள்ளர் தாங்குபல் லியமு மார்ப்பப்
பொங்கிய நகரந் தோறும் புறமெலாம் வளைந்த நீத்த
மங்கண்மா ஞாலஞ் சூழு மளக்கரை நிகர்த்த தாமே. (௩௬)

மாறடு மள்ள ருய்ப்ப மருதத்தி னிறைந்து விஞ்சி
யேறிய நார மீட்டு மிருங்கட ளேக்கிச் சென்ற
வேறுகொள் புலனை வென்றோர் மேலைநன் னெறியுய்த் தாலுந்
தேறிய வுணர்வி லாதோர் செல்வுழிச் செல்வ ரன்றே. (௩௭)

வாளெனச் சிலைய தென்ன வால்வளை யென்னத் தெய்வக்
கோளெனப் பணிக ளென்னக் குலமணி குயிற்றிச் செய்த
மீளிவெஞ் சரங்க ளென்ன வேலென மிடைந்து சுற்று
நாளெனப் பிறழு மீன்க ணடவின நார மெங்கும். (௩௮)

மாண்டகு பொய்கை தோறும் வயறொறு மற்று மெல்லாம்
வேண்டிய வளவைத் தன்றி மிகுபுனல விலக்கு கின்ற
வாண்டகை மள்ளா தம்பா லமைந்திடுங் காலை யெஞ்சி
யீண்டிய வெறுக்கை வீசு மிடைப்படு வள்ள லொத்ததார். (௩௯)

ஆற்றுப்படலமுற்றிற்று.

ஆ திருவிருத்தம் அக.

வசனம்.

செவ்வானம்போலும் அழகிய சடைமுடியையுடைய சிவபெருமானுக்கு அடியவர்களாய்த் தகுதியுடையவர்களும் புலமைமிக்கவர்களும் தவசிகளும் செல்வர்களுமாய்க்கூடின யாவரும் சுகசீவிகளாய் வாழ்ந்து கொண்டிருக்குந் தொண்டைநாட்டினது சிறந்த அழகையெடுத்துச்சொல்லத் தொடங்கினேன்.

அழகையுடைய திருமால் அறிதுயில்செய்யும் வெள்ளியபாற்கடல் போன்று இந்திரன் ஏறிநடத்தும் வாகனமாகிய மேகக்கூட்டங்கள் யாவுஞ்சென்று, முடிவற்ற கடலிலுள்ள நீரைப்பருகி ஆரவாரித்தெழுந்து அந்தக்கடலின் நிறத்தைப்போலக் கருநிறங்கொண்டு மீண்டுவந்தன. இப்படி வந்தமேகங்கள் எமது மண்டலத்தைப் பார்த்துக்கோபிக்கிற சூரியன் எம்முடனே யுத்தஞ்செய்யக் கடவனென்று மிகுந்த கோபத்தால் வேர்க்கிறதுபோல நீர்த்துளிகளைச்சிதறி, வெண்மையாகிய பற்கள் தெரியச்சிரித்து ஆரவாரிப்பதுபோல மின்னி இடியைக்கக்கின. இவ்வாறு சூற்கொண்டுவந்த மேகங்கள்யாவும் அழகையுடைய வயிரவக்கடவுளின் திருமேனியின்மீது, யானைத்தோலைப் போர்த்திருந்த தோற்றம்போன்று, பெரிதாகிய நந்திமலைமேல்கவிந்துகொண்டன. அப்பால் அந்தமேகங்களில் அம்மலைச்சாரலி லோங்கிய மூங்கில்களிலுண்டாகிய முத்துக்கள்போல நீர்த்துளிகள்ததும்ப வீணையின் நரம்பைப்போல நெருங்கிய நீர்த்தாரைக, பாற்கடலானது ஆகாயத்திலெழுந்து பொழிவதுபோலக் கார்காலமாகிய இரண்டுமாதம்வரையிற் பொழிந்தன. இந்திரதநுசு என்னும் வில்லுடனே தோன்றின மேகமானது தனதுவாயினின்றும் உண்டாகும் குளிர்ந்தநீரை அந்தநந்திமலைமேற் பொழிதலானது, வேடர்குலத்தில் அவதரித்த கண்ணப்பநாயனார் சிவபெருமானுக்குத் திரு மஞ்சனமாட்டுதல் போலிருந்தது. மேகங்கள் இப்படி கல்லென்னும் பெருஞ்சத்தத்தையுடைய நீரோடுகூடிய மழைபொழிந்ததனால், இமைப்பொழுதில், அங்குள்ளகாட்டுத்தீக்களெல்லாம் ஒளித்துக்கொண்டன, வெல்லத்தகுந்த கடுங்கோபமுள்ள மகாவீரருக்கெதிரே தீயாரிருப்பாரோ? அந்தமேகங்கள் கடல் நீரிலுள்ள வடவைத்தீயின் வெப்பத்தையடக்கி, உலகில் பிரகாசத்தையுண்டாக்கி அவ்வுலகைவிட்டு நீங்குதலால், தம்மையடுத்தவர்களுடைய தீவினைகளைப்போக்கி அவர்களை நன்னெறியிற்செலுத்தி பிறகுதமதுவழியேசென்ற ஒரு ஞானாசிரியனையொத்திருந்தன. பற்றுக்களெல்லாம்விட்ட வசிட்டமுனிவரது இருப்பிடமென்று மேலோரால் சொல்லப்பட்ட அந்தநந்திமலைமேல் நெருங்கினமேகங்கள் பொழிந்த குளிர்ந்தநீரானது, ஒரு அழகியதாழியினின்றும் பொங்கிவழிந்த பால்போல எல்லாத திசைகளிலும் இறங்கியது. ஒழுக்கத்திற் சிறந்தபகீரதன் முற்காலத்தில் வேண்டினவுடனே சிவபெருமானது சடாபாரத்திலுள்ள கங்கைநீரை இமயமலையின்மேல்விட அது நிலவுலகில் வந்ததுபோல, நந்திமலைமேல் விழுந்தநீரானது பாலியாறு என்னும் பெயருடையதாய் நிலவுலகிற்பரவியது. வசிட்டமுனிவரது காமதேனுவென்னும் பசுவின்பாலானது முன்னுளில் அதிகமாய்த்தன்னிடத்துப்பரவிய பெருமையையுடைய பாலியாற்றின்பெருமை எம்மாற்சொல்லவெளிதாகுமோ? அந்தப்பாலியாற்றின் வெள்ளமானது முற்காலத்தில் சூரபன்மனதுசேனைகள் விண்ணுலகத்தாரைச்சிறைபிடித்துக்கொண்டு திரும்பியதுபோல, அங்குள்ளவேடர்களையும் வேடிச்சிகளையும் இரட்டி வாரிக்கொண்டு அவர்களுடைய சிறுகுடில்களையும்பேர்த்து, பரிசுத்தமாகிய சந்தனமரங்களையும் அகில்மரங்களையும் வேரோடுபிடுங்கிக்கொண்டுவந்தது; காகங்

கள் பந்தலிட்டதுபோலக் கரியமேகங்களானவை கருமைநிறைந்த ஆகாயத்தளவும் வளர்ந்தயானைகளையெல்லாம் அவற்றின் கூட்டத்துடனே யடித்துக்கொண்டு மேற் கடலிலுண்ட நீர்பற்றாதமேகக்கூட்டங்கள் கீழ்கடலின்மேலும் செல்வதுபோன் றிருந்தன. மேலும், பெரியானைகளையும் சிங்கங்களையும் கூட்டங்கூட்டமாகவாரிக் கொண்டு தேக்கெறிந்து செல்லுகின்ற அருவியாறானது காமதேனுவின் பாலை யுண்ட கர்வத்தினால் அக்குறிஞ்சிநிலப்பொருள்களாகிய இருப்பைமரம் மாமரம் முதலியவற்றை அடியோடுபேர்த்துக்கொண்டு சென்றது; மேலும் எக்காலத்தும் நெருப்புருவாய், கடலேழையும்பாய்ச்சினாலும் தணியாதபாலைநிலத்திற்பாய்ந்து அதனைக்குளிர்வித்தது; முல்லைநிலத்திற்சென்று அங்குள்ளதுளசி காயா கொன்றை முதலான செடிகளையும் பசுக்கூட்டங்களையும் அடித்துக்கொண்டு போகும்போது, தான் காமதேனுவென்னும் பசுவின்வழியில் தோன்றினதனால் சில பசுங்கன்றுகளை மாத்திரம் தன் இருகரைமேலும் ஒதுக்கிவிட்டுப்போயிற்று; அப்பால் மருத நிலத்திற்சென்று பலா கமுகு முதலியவைகளை வேரோடு பிடுங்கிக்கொண்டு நெய் தனிலத்திற்சென்று அங்குள்ள தாழை பனை முதலியவற்றையனைத்தும் பறித்துக் கொண்டு கடலிற்பிரவேசித்தது. மேலும் அவ்வெள்ளமானது கொன்றை, வில்வம், குரா, ஊமத்தை, பாம்பு, ஆத்தி, பாதிரி, புன்னை என்பவற்றைத்தாங்கிச் செல்வதனால் சிவபெருமான்போலவுமிருந்தது. அன்றியும்தான் செல்லும்வழியிலுள்ள வீரர்க ளுடைய குடிலிற்புகுந்து அவர்களுடைய வில், வாள், தண்டு, சக்கரம், சங்கு என்ப வற்றை யேந்திச்செல்வதனால் திருமாலையும்போன்றிருந்தது. வேத முதலாகிய கலைகளெல்லாவற்றையும் ஓதியும் மேலானபொருள் சிவபிரானென்றறியாத அறிவீ னர்களுடைய மனம்போல அவ்வெள்ளமானது கலங்கித்தெளியாமலே யிருந்தது. சிவபெருமான் பிட்டின்பொருட்டு மண்சுமந்தவையைநதியில், முத்தமிழ் விரகரா கிய திருஞானசம்பந்தமூர்த்திசுவாமிகளிட்ட ஏடுபோல மீன்கூட்டங்கள் எதிரேறிச் செல்லும்படி அவ்வெள்ளம்கடலிற் பிரவேசித்தது. இவ்வாறு சென்றபாலியாறான து, சரீரநீக்கத்தில் ஆன்மாக்கள்யாவும் தத்தம்வினைக்கீடாகச்சென்று சேருங்கதிகள் போலவும், ஒருவரது வமிசபாரம்பரியம்போலவும், ஒரு மரத்தின்கிளைகள்போலவும் வெவ்வேறு கால்களாகப்பிரிந்தது. அப்படிபிரிந்துபோன வெள்ளமானது கணிகை மாதரது மனம்போல மிகவும் ஆழமாகப்போய், பாம்புகள் புற்றில்நுழைவது போல மதகுகளில்புகுதலால் அதனைததடைசெய்தல் முதலியதொழில் செயவோராகிய மள்ளர் களிப்போடு ஆரவாரிக்கிற சத்தமானது உலக முழுதும் வியாபிக்கும், வேய்ங்குழலோசை, ஊதுகொம்பினொலி, பம்பையின்முழக்கம் முதலியவற்றைக் கேட்ட தேவர்கள், நமது விண்ணுலகவொலிக்கு எதிரொலியாக மண்ணுலகம் இவ்வொலியைக்காட்டுகின்றதோ வென்றெண்ணுவார்கள். எவ்விடத்தும் நிறைந்து மள்ளர் கூட்டமாய் நெருங்கிநின்று பலவாத்தியங்களைமுழக்க, நகரந்தோறும் புறமெல்லாம் வளைந்துகொண்டஅவ்வெள்ளமானது இவ்வுலகத்தை வளைந்துகொண் டிருக்கிற கடலை நிகாத்திருந்தது. மள்ளர் வயல், மடை, தடாகம், ஏரி முதலியவற் றிற் செலுத்தநிறைந்து விஞ்சியவெள்ள நீரானது மறுபடியும்பெரியகடலை நோக்கிச் சென்றது; நோக்குமிடதது அது ஐம்புலன்களைவென்ற மேலோர் நன்னெறியிற் செலுத்தினாலும் மனத்தெளிவிலலாத மூடர்கள் தமமனம்போன போக்காகப்போ வது போன்றிருந்தது. அவ்வாறுசெனறு கடலில்விழும் வெள்ளநீரில் பலவகை யான மீன்கூட்டங்கள் எதிரேறிச்செல்வனவும் பாய்வனவுமாயிருந்தன. பொய் கை, வயல் முதலியவிடங்களுக்கு வேண்டுமளவாகிய நீரையமைத்துக்கொண்டு மிச் சமாகிய நீரை விலக்குகிறமள்ளர்கள், தம்மிடத்துப்புண்ணிய விசேடத்தா லமைந்த செல்வத்தைத் தமக்கு வேண்டுமளவும் வைததுக்கொண்டு மீதியை இரவலர் முத லியோருக்கு வழங்குகிற இடைப்படுவள்ளல்களை யொத்திருந்தார்கள்.

# திருநாட்டுப்படலம்.

அவ்வியல் பெற்றிடு மாற்றன் மள்ளர்கண்
மைவரு கடலுடை மங்கை தன்னிடை
மெய்வளங் கொள்வதை வேண்டி யங்கிலச்
செவ்விக ளுடியே யினைய செய்குவார். (க)

சேட்டிளந் திமிலுடைச் செங்க ணேற்றொடுங்
கோட்டுடைப் பகட்டினம் விரவிக் கோன்முறை
காட்டினர் கிரைபட வுழுப காசினி
பூட்டுறு பொலன்மணி யாரம் போலவே. (உ)

காற்றினு மனத்தினுங் கடுமை சான்றன
கோற்றொழில் வினைஞர்தங் குறிப்பிற் செல்லுவ
வேற்றினஞ் சேறனு மிரிந்த சேவினம்
பாற்றின மருளவிண் படர்ந்து பாயுமால். (௩)

சால்வளை தரவுழும் வயலிற் றங்கிய
வால்வளை யினம்வெரீஇ யலவன் மாப்பெடைச்
சூல்வளை புகுவதங் கறிஞர் சூழ்விலைக்
கோல்வளை மகளிர்பாற் கூட்ட மொத்ததே. (௪)

உலத்தொடு முறழ்புயத் துழவர் பொன்விளை
புலத்தினும் வியத்தகு வயலிற் போக்கிய
வலததிடைப் பிறழ்மணி வேள்வி யாற்றிடு
கிலத்திடைப் பிறந்தமின் னிகர்க்கு நீர்மைய. (௫)

நாறுசெய் குநர்சிலர் நார நீர்வய
லூறுசெய் குநர்சில ரொத்த பான்மையிற்
சேறுசெய் குநர்சிலர் வித்திச் செல்லுநீர்க்
காறுசெய் குநர்சில ரளப்பின் மள்ளரே. (௬)

குச் * செனப் பரிமிசைக் குலாய கொய்யுளை
வைச்செனத் தளிர்த்தெழு நாற்றின் மாமுடி
யச்செனப் பதித்தனர் கடைஞ ராவியா
நச்சின மகளிரை நினைந்து நைந்துளார். (௭)

வாக்குறு தேறலை வள்ள மீமிசைத்
தேக்கின ருழவர்தந் தெரிவை மாதரார்
நோக்குறு மாடியி னுனித்து நோக்கினர்
மேக்குறு காதலின் மிச்சைத்தின் மேயினர். (அ)

* குச்சு - பாவாற்றி.

வேந்திரி மைந்தர் [illegible]
[illegible]



வாடுகின் றார்சிலர் மயங்கி நெஞ்சொடு
மூடுகின் றார்சில ருயிர்க்கின் றார்சிலர்
பாடுகின் றார்சிலர் பணிகின் றார்சில
ராடுகின் றார்சிலர் நறவ மார்ந்துளார். (௯)

அந்தரப் புள்ளொடு மளிக டமமொடும்
வந்தடுத் தவரொடு மயக்கு தேறலை
யிந்திரத் தெய்வத மிறைஞ்சி வாமமாந்
தந்திரக் கிளைஞர்போற் றூமு மேயினா. (௰)

[illegible]

விள்ளுறு நாணினர் விரகத் தீயினா
ருள்ளுறு முயிர்ப்பின ருலையு நெஞ்சினர்
தள்ளுறு தம்முணர் வின்றிச் சாம்பினர்
கள்ளினு முளதுகொல் கருத்த ழிப்பதே. (௧௧)

பளிக்கறை யன்னதோர் படுகர்ப் பாங்கினுந்
தளிர்ப்புறு செறுவினுந் தவறுற் றேகுவார்
தெளிப்பவ ரின்மையி னெறியிற் சென்றிலர்
களிப்பவர் தமக்குமோர் கதியுண் டாகுமோ. (௧௨)

இன்னன பற்பல வியற்றி யீண்டின
ருன்னருந் தொல்லையி லுணர்வு வந்துழிக்
கன்னெடுந் திரள்புயக் கணவ ரேவலிற
றுன்னின ரவரொடுந் துவன்றிச் சூழ்ந்துளார். (௧௩)

மள்ளர்தம் வினைபுரி மழலைத் தீஞ்சொலார்
கள்ளுறு புதுமணங் கமழும் வாலித
ழுள்ளுறு நறுவிரை யுயிர்தது வீசிய
வெள்ளிய குமுதமென் மலரின் மேவுமே. (௧௪)

நட்டதோர் குழுவினை நடாத தோர்குழு
வொட்டலர் போலஙின் றுறுதத லுன்னியே
யட்டன ராமென வடாத வான்களை
கட்டனர் வேற்றுமை யுணருங் காட்சியார். (௧௫)

ஏயின செயலெலா மியற்றி வேறுவே
றாயிடை வேண்டுவ தனைய வாற்றியே
மாயிரும் புவிமிசை மகவைப் போற்றிடுந்
தாயென வளர்த்தனர் சாலி யீட்டமே. (௧௬)

மன்சுடர் கெழுமிய வயிர வான்களை
மின்சுடர் தூணியின் மேல கீழுறத்

தன்சுடர் பொலிதரச் செறித்த தன்மைபோற்
பொன்சுட ரிளங்கதிர் புறத்துக் கான்றவே. (கஎ)

பச்சிளங் காம்புடைப் பணையின் மீமிசை
வச்சிரத் தியற்றுமோ ரிலைகொள் வான்படை
யுச்சிமே லுறநிறீஇ யொருங்கு செய்தெனக்
குச்சுறு சாலிமென் கதிர்கு லாவுமால். (கஅ)

சுற்றுறு மிறைலைச் சுடிகை மாசுணம்
பெற்றுறு குழவிகள் பெயர்த லின்றியே
முற்றுறு சிவப்பொடு முறையி னிற்றல்போ
னெற்றுறு பசுங்கதிர் நிமிர்தன் மிக்கவே. (கக)

மையுறு கணிகையர் மகிழ்நர் வந்துழிப்
பொய்யுறு மளியெனப் பயனில் புன்கதிர்
கையுறு முவகையாற் பணியுங் கற்பினோர்
மெய்யுறு பரிவென விளைந்து சாய்ந்தவே. (உ0)

மாலுறு பொன்னகர் மருவு மன்னற்குப்
பாலுறு தீம்பதம் பலவு மார்த்தியே
மேலுறு சாலியின் விளைவு நோக்கியே
கோலினின் றரிந்தனர் குழாங்கொண் மள்ளரே. (உக)

அரிந்திடு சுமைகளா லவனிப் பேருட
னெரிந்திடச் சேடனு நெளிந்து நீங்கிடத்
தெரிந்திடும் போர்கள்சே ணளவுஞ் சேறலால்
விரிந்திடு கதிர்சுலா மேரு வாயவே. (உஉ)

ஏற்றொடு பகட்டின மிசைத்துப் போருரு
மாற்றினர் வலமுறை திரித்து வாழ்த்தொலி
சாற்றினர் பரனொடு தமது தெய்வதம்
போற்றினர் மீமிசை பொலிகென் றோதுவார். (உங)

தொங்கலம் பூமுடித் தொழுவர் போரினை
யங்குறப் படுத்துவை யகற்றி யாக்கிய
பொங்கழிப் பதடிகள் புறத்து வீசியே
யெங்கணு நெற்குவை யியற்று வாரரோ. (உச)

களப்படு கைவலோர் கால்*க ளான்முகந்
தளப்புறு நெற்குழா மவற்றுண் மன்னவற்
குளப்படு கடன்முறை யுதவி மள்ளருக்
களித்தனர் வேண்டிய தனைய நாட்டுளோர். (உரு)

* கால் - அளக்குங்கருவி.

சொற்சுவை வழிபடப் புகழிற் றோன்றுதம்
பிற்சுவை வேண்டுவ தேவி யெஞ்சிய
நெற்குவை குரம்பையி னிரப்பு வித்தனர்
பொற்குவை யறிந்தனர் பொதிவித் தென்னவே. (உசு)

தலத்திடை வேறிடத் தொதுங்குந் தண்ணிய
குலத்திடைப் பிறந்தவர் கூட்ட மாமென
நலத்திடை வந்திடு முதிரை நல்வள
நிலத்திடை யொருசிறை விளையு நீரவே. (உள)

பிறப்பதும் வளர்வதும் பின்னர் மூப்புவந்
திறப்பதும் வைகலு முலகி லேய்ந்தெனச்
சிறப்புட னடுவதும் பருவஞ் செய்வது
மறுப்பதுந் தொகுப்பது முலப்பின் றுயவே. (உஅ)

முழவொலி விண்ணவர் முதல்வற் காக்குறும்
விழவொலி கிணையொலி விரும்பு மென்சிறூர்
மழவொலி கடைசியர் வள்ளைப் பாட்டொலி
யுழவொலி யல்கலு முலப்பு றுதவே. (உகூ)

காலுற நிமிர்ந்திடு காமர் சோலையு
நீலமுங் கமலமு நிறைந்த பொய்கையு
மாலையங் கழனியு மரங்கற் காயுத
சாலைக ளிவையெனச் சாற்ற நின்றவே. (௩௦)

நெறியிடை யொழுகலா விழுதை நீரரை
மறலிதன் னகரிடை வருத்தல் போலுமாற்
குறைபடத் துணித்தவண் குவைசெய் கன்னலை
யறைபடு மாலைக ளிடையிட் டாட்டலே. (௩௧)

ஏறுகாட் டியதிற லிளைஞ ரெந்திரங்
கூறுகாட் டியகழை யழுங்கக் கோறலுஞ்
சாறுகாட் டியதரோ யாதுந் தம்மிடை
யூறுகாட் டினர்க்கலா லுலோப ரீவரோ. (௩௨)

மட்டுறு கழையினும் வலிதிற் கொண்டபி
னிட்டகொள் கலங்களி னிருந்த தீம்புன
றொட்டிடு கடலெனத் தோன்று மன்னவை
யட்டதோர் புகைமுகி லாவிற் றெக்குமே. (௩௩)

கூடின தேனிசை யிளமென் கோகிலம்
பாடின மயில்சிறைப் பறைய டித்தன

வாடின வஞ்சிதந் தலைய சைத்திடா
நாடின பாதவம் புகழ்வ னாரையே. (௩௪)

காசொடு நித்திலப் பொதியுங் காட்டியே
பாசடை மாதுளை சினையிற் பைங்குயில்
பேசிட நிற்பன பெறீஇயர் வம்மென
வீசுதல் கருதியே விளித்தல் போன்றவே. (௩௫)

சித்திரக் கதலிமா வருக்கைத் தீங்கனி
துய்த்திட வரும்பய னுதவுந் தோற்றத்தா
லுத்தம முதலிய குணத்தி னோங்கிய
முத்திறத் தவர்கொடை மொழிய நின்றவே. (௩௬)

வீசுகால் பொரவசை விசும்பிற் றுழைக
டேசுலாம் பரிதிமெய் தீண்டுஞ் செய்கைய
காசினி தன்கையாற் கலைவெண் டிங்கள்போன்
மாசுறு வகைதுடைத் திடுதன் மானுமே. (௩௭)

வாசநீள் பொதும்பரின் மைந்தர் மாதர்கள்
காசுறூன் மேகலை பரியக் கைவளை
பூசலிட் டலமரப் புணருஞ் செய்கைகண்
டாசையிக் கழுங்குவ ரிரிந்த வன்றிலே. (௩௮)

கானுலா நந்தன வனமுங் காரென
வானுலாந் தண்டலை மருங்கும் வைகலும்
வேனிலா னன்னவர் மகளிர் மேயினு
ரூனுலாங் குரம்பையு ளுயிருற் றென்னவே. (௩௯)

அசும்புறு மகன்புன லுறுத குழலின்
விசும்புற வோச்சிய விரைமென் றுதினைற்
பசும்பொனிற் குயிற்றிய பதியிற் றாபிகைத்
தசும்பெலாம் வெள்ளிய தாக்குந் தாழையே. (௪0)

உற்றிட வரிதவ னுழவர் நீத்ததார்
சுற்றிடுந் தாண்மிசை யிடறுஞ் சூல்வளை
தெற்றிடும் பூங்கொடி புடைக்குஞ் சேலின
மெற்றிடுந் தேம்பழ மிழுக்குந் தேன்களே. (௪௧)

கானிமிர் காந்திகள் கான்ற பாளைமேன்
மீனினம் பாய்தலுஞ் சிதறி வீழ்வுறு
வானதோர் மருதவைப் படையுந் தன்மைய
வானுறு தாரகை வழுக்கிற் றொக்குமால். (௪௨)

மாருல வல்லியின் மஞ்ஞை யாடல்போற்
கோகில மார்தருக் குழாததி னூசன்மேற
பாகுல வின்சொலார் பணிக்கு மெல்லிடைக்
காருலம் பிறர்கொள மகிழ்வி னடுவார். (சஙு)

வேறு.

ஊச லூற்றவர் குழைக்குடைந் திடுதலா லுவகை
வீச லொப்பன வாடுதல் கிளிமொழி வெருவிப
பேச லொப்பன வீழ்ந்திலா பிழைத்ததீ தெனனு
வேச லொப்பன கோகிலப பறவைக ளிசைத்தல். (சச)

கூர்ப்புக் கொண்டகட் கொடிச்சியர் குளிர்புனங் காப்போ
ரார்ப்புக் கொண்டுகை விசைத்தெறி மணிக்கல்வந் தணையச்
சார்ப்புக் கொண்டதன் சிறகரால் விலக்கியத் தடத்துப
பார்ப்புக் கொண்டுகொண் டெழுவன தோலடிப் பறவை (சரு)

வேறு.

கடற்பரு கியமுகில பெய்யுங் காட்சிபோ
லடறபெரு மேதிக ளனைததும புககுராய்த்
தடபபுனல வறிதெனப பருகித தமமுலைக்
குடததிழி பாலினாற் குறையைத தீர்க்குமே. (சசு)

பாட்டிய லளிமுரல் பதுமக் கோயிலி
னூட்டிய விமலன்மு னந்தி நீரிடை
மாட்டிய பல்பெருஞ் சுடரை மானுமாற
கோட்டியர் தடந்தொறுங் குவளை பூததவே. (சஎ)

கலனிடைத தருவதுங் கானத தூளளதும
பொலனுடைப பொருபபிடைப பொருளு மல்லது
நலனுடை நாட்டவா நயந்த லின்றியங்
கிலனிடைப பொருள்பகா வழக்க நீத்ததே. (சஅ)

யாழ்க்கையர் பொருநருக் கிறைவ ரேழிசை
வாழ்க்கைய ரளவையின் வகுதத பாடலைக்
கேட்குநர் நன்றென மருபபுக கிமபுரிப
பூட்கைக ளுதவுவார் பொதுவி ரேறுமே. (சகூ)

கஞ்சிதேய்ப் புண்டுகில் கமழும் பூந்துகில
வஞ்சிதேய்ப் புண்டன மருங்கு லாரடி
பஞ்சிதேய்ப் புண்டன பணியத் தாக்கலாற
குஞ்சிதேய்ப் புண்டன குமரர் கூட்டமே. (ருo)

அன்றிலம் பெடைகளை யணுகி யன்னகே
ணன்றென வினையின்மே னடந்த நாயக

ரின்றுவந் திடுவரிங் கெம்பொ ருட்டினு
லொன்றுநீ யிரங்கலென் றுரைக்கின் ருர்சிலர். (ருக)

ஆடியல் கருங்கணுஞ் சிவப்புற் றங்கமும்
வாடுவ தாகியே மதன வேர்வுருக்
கூடிய மகளிருங் குமரர் தங்களை
யூடிய மகளிரு மூலப்பின் ருயினர். (ருஉ)

அகன்மர் கணிகைய ரடிகள் சூடியே
முகனுறு முவகையான் முயங்கி யன்னவர்
நகனுறு குறிகொளீஇ நாளுங் காமனூற்
றகைமைசெய் காளையர் தொகுதி சான்றதே. (ருங)

வாளைக ளிகல்புரி வயலும் வாவியும்
பாளையோ டுற்பலம் பதும நாறுமால்
வேளயர் தடங்கணுர் விரைமென் ருளிணை
காளையர் குஞ்சியுங் கரமு நாறுமால். (ருச)

சேவக மனைவன கரிகள் சேனைகள்
காவக மனைவன கலைகள் புள்ளினம்
பூவக மனைவன பொறிவண் டாயிடைப்
பாவக மனைவன பாட லாடலே. (ருரு)

ஆடக மாமதி லம்பொற் கோபுர
நீடிய மண்டப நெறிகொ ளாவணம்
பாடலொ டாடிடம் பிறவும் பாலிநன்
ருடுள பதிதொறு நண்ணி யோங்குமே. (ருசு)

தெண்டிரை யுலகினிற் சீர்பெற் ரேங்கிய
மண்டல மெங்கணு மதிக்க நின்றதோர்
தொண்டைநன் ருட்டணி சொல்லி ணுமினித்
தண்டமிழ் வளநகர்த் தன்மை கூறுவாம். (ருஎ)

திருநாட்டுப்படல முற்றிற்று.

ஆ திருவிருத்தம் கசசு.

---

வசனம்.

இத்தன்மையாகிய பெருமையமைந்த மள்ளர்கள், பூமியிலுள்ள வளங்களையெல்லாம் பெறவிரும்பி, அந்தப்பூமியின் குணங்களையாராய்ந்து, காலம்பார்த்து, எருதுகளையும் எருமைக்கடாக்களையும் வரிசையாக ஏரிற்பூட்டி யுழுவதை நோக்கினல், அது பூமிதேவிபூண்ட மணியாரம்போன்றிருந்தது. வாயுவேகத்தினும் மனோவேகத்தினும் அதிவேகமாக மள்ளர் குறிப்பின் வழியாய்ச்செல்லுகிற எருது

களின் ஆரவாரத்தால் அஞ்சி மேலெழுந்த மீன்கூட்டங்கள், பருந்தின் கூட்டங்கள் மருளும்படி ஆகாயத்திற்பாய்ந்து செல்லும். சில மள்ளர் நாற்றங்கால் விதைப்பார்கள்; சிலமள்ளர் வயல்களுக்கு நீர் பாய்ச்சுவார்கள்; சிலமள்ளர் சேறுக்கிப் பரம் படித்துப் பண்படுத்துவார்கள்; சிலர் நாற்றை நடுவார்கள். இவ்வாறு நிகழுங் காலத்து, உழத்தியர், கிண்ணத்தில் வார்த்து முன்னே குடித்து எஞ்சின கள்ளில் தம்முகத்தை உற்றுப்பார்த்து, மறுபடியும் அந்தக்கள்ளைப் பருகுவார்கள்; கள்ளுண்டு களித்த உழத்தியரிற் சிலர் வாடுவதும், சிலர் ஊடுவதும், சிலர் உயிர்ப்பதும், சிலர் பாடுவதுமாகிய தொழிலோடுகூடி யிருந்தார்கள். மேலும் அவ்வுழத்தியர்கள் சத்தியை வணங்கி மதுவுண்ணும் வாமதந்திரச் சமயிகளைப்போல, இந்திரனாகிய தெய்வத்தை வணங்கி ஆகாயத்திற்பறக்கும் பறவைகளோடும் வண்டுகளோடும் தம்மை வந்தடுத்தவரோடுங்கூடி அறிவை மயக்குகிற கள்ளைப்பருகினார்கள். வெட்கமொழிந்தவர்களும், விரகாக்கினியை யுடையவர்களும், பெருமூச்செறிபவர்களும், அழிந்த மனமுடையவர்களுமாகிய வுழத்தியர்கள் தமது இயற்கையறிவிழந்து சோர்ந்திருந்தார்கள். ஆதலால் மனத்தைமயக்குவதாகிய பொருள் கள்ளினும் வேறொன்றுண்டோ? இல்லை. பளிக்குப்பாறையை நிகர்த்திருப்பதாகிய தடாகத்தின் பக்கத்திலும், பயிர்கள்செழித்திருக்கிற வயல்களிலும் தவறிவிழுந்து பின்னெழுந்துபோகிற வுழத்தியர்கள், இது வழியென்று தமக்குத் தெரிவிப்பவரில்லாமையால் வழியே நடந்து போகமாட்டார்கள். கள்ளுண்டு களிப்பவர்களுக்கும் ஒரு நற்கதியுண்டாகுமோ? உண்டாகாது. இத்தன்மையராகிய வுழத்தியர், தமக்கு நல்லறிவு வந்தபோது தம் கணவரேவலால், வயலிற் களைகட்டல் முதலியதொழில்களைச் செய்துகொண்டு அவர்களோ டொற்றுமையா யிருப்பார்கள். இப்படி உழவர் உழத்தியர் என்னும் இருதிறத்தாரும் தமக்குரிய பயிர்த்தொழிலைச் செய்யவேண்டிய முறைப்படியேசெய்து, உலகத்தில் குழந்தைகளைப் பாதுகாக்கும் தாயைப்போலச் செந்நெற்பயிர்களை வளர்த்தார்கள்; அப்படிவளர்ப்பதனால் பயிர்கள், நிலைபெற்ற வொளிவிளங்குகிற சிறந்தவயிரக்கல்லையை மின்போல்விளங்கும் அம்பறாத்தூணியில் மேல்கீழாகப் பொருந்தும்படி தன்னொளிவீச நெருக்கிவைத்த தன்மைபோலப் பொன்போலொளிவீசுகிற இளங்கதிர்களைப் புறத்தேகாட்டின, பிறகு வச்சிராயுதங்களை மூங்கிலினுச்சியில் வைத்தாற் போலச் செந்நெற்கதிர்கள் மேலோங்கிவளர்ந்தன. பலதலைகளையுடைய வொருபெரும்பாம்பானது பெற்ற குட்டிகள் அவ்விடம்விட்டுப் பெயராமல் நிமிர்ச்சியோடு முறையேநிற்பதுபோல நெற்கதிர்கள் நிமிர்ந்தோங்கிநின்றன. பிறகு அவை முதிர்ந்து தம்கணவரைக்கண்டபோது கற்புடைமங்கையர் வணங்குவதுபோலத் தலைசாய்த்து நின்றன. அவற்றை மள்ளர் பார்த்து, மருதநிலத் தெய்வமாகிய இந்திரனுக்குப் பாற்பொங்கலிட்டு அவனை மகிழ்வித்துப் பிறகு அந்நெற்பயிரை யறுத்தார்கள். அறுத்த நெற்கதிர்களை மேருமலைபோலத் தோன்றக் குவித்துப் போராக்கிப் பிறகு கடாக்களைக்கொண்டு துவைப்பித்து வைக்கோலைக் கழித்துப் பதர்போக்கி எவ்விடத்தும் நெற்குவியல்களைச் சேர்ப்பார்கள். இத்தன்மையாகிய வளப்பமிகுந்த தொண்டை நாட்டிலுள்ள வேளாண்டலைவர்கள், களத்திலிருக்கிற அளவாளிகளால் மரக்கால்களைக்கொண்டளக்கப்பட்ட நெற்குவைகளில் அரசனுக்குக்கொடுக்கவேண்டிய ஆறிலொருகடமையை முறைப்படிகொடுத்துப் பிறகு உழவர்களுக்குவேண்டிய நெற்களைக்கொடுத்தார்கள்; பிறகு அவ்வேளாண்டலைவர்கள் தமது மாளிகைகளுக்கு வேண்டிய நெல்லைச்செலுத்தி, மிகுந்திருக்கிற நெல்லையெல்லாம் பொற்குவையை யறிந்தெடுத்துக்கொண்டு வந்தவர்கள் அவற்

றைப்பொதிந்து வைப்பதுபோலக் கூடுகளிற் சேர்த்து நிறைத்தார்கள். நிலவுலகத்தில் தனியிடத்தில் ஒதுங்கிவசிக்கும் இழிகுலத்தாரது கூட்டம்போலத் துவரை பயறுமுதலிய புன்செய்த் தானியங்களும் அம்மருதநிலத்தி னொருபுறத்தில் விளையுந் தன்மையவாயின. பிறத்தல் முதலியதொழில்கள் உலகத்தில் எக்காலத்தும் இயல்பாய்நடப்பதுபோல பயிர்கள் முளைத்தல் முதலியதொழில்கள் எப்போதும் இடையறாது நிகழ்வனவாயின. மத்தளவொலியும், மருதநிலக்கடவுளாகிய இந்திரனைக்குறித்துச்செய்யுந் திருவிழாவினொலியும், மருதநிலப்பறையாகிய கிணையினொலியும், சிறுவர் சிறுதேருருட்டல் முதலியவற்றாலுண்டாகுமொலியும், உழத்தியர்கள் பாடுகிற வள்ளைப்பாட்டொலியும், உழவுத்தொழிலா லுண்டாகுமொலியுமாகிய இவைகள் எக்காலத்தும் நீங்காதிருக்கும். அழகாகிய சோலைகளும், நீலமலரும் கமலமலரும் நிறைந்தபொய்கைகளும், கருப்பங்கழனிகளும் ஆகிய இவைகள், மன்மதனுக்கு ஆயுதசாலைகள்போல நிலைத்திருந்தன. துண்டுகளாக வெட்டப்பட்ட கரும்புகளை ஆலையிலிட்டாட்டுவதை நோக்குமிடத்து, நன்னெறியிலொழுகாத மூடர்களை யமனவன் தன்னுலகிற் கொண்டுபோய் வருத்துவதுபோன்றிருக்கும். வண்டுகள் இசைசெய்தன, குயில்கள்பாடின, மயில்கள் சிறையாகிய பறையையடித்தன, பூங்கொடிகள்ஆடின, மரங்கள் தம்தலையசைக்காமலிருந்துநோக்கின, நாரைகள்புகழ்ந்தன. பச்சிலைகளையுடைய மாதுளைமரங்கள், இரத்திநக்கிழிகளோடு முத்துக்கிழிகளையுங்காட்டி கிளைகளில் குயில்கள்பேசும்படி உயர்ந்துநிற்றல் எதுபோன்றிருக்குமெனின், அவற்றை வேண்டுவோர்க்குக் கொடுக்கக்கருதி, பெறவிரும்புவோர் வாருங்களென்று அழைப்பதுபோன்றிருந்தன. முதலெழுவள்ளல், இடையெழுவள்ளல், கடையெழுவள்ளல் என்னும் மூவகை வள்ளல்கள்போல, உத்தமம் மத்திமம் அதமம் என்னும் முக்குணங்களோடுகூடிய வாழை, மா, பலா என்று சொல்லப்படுகிற மரங்கள் எந்நாளும் பயன் கொடுத்துக் கொண்டேயிருக்கும். காற்றாலசைக்கப்படுகிற தென்னமரங்கள் ஆகாயத்தளவுஞ்சென்று சூரியனைத் தொடுதலாகிய செய்கையானது பூமிதேவியானவள் தன்கையினால் சூரியனைத்துடைத்துச் சந்திரனைப்போல அழுக்கடையாமற் செய்தல் போன்றிருக்கும். வாசனைமிகுந்த பூஞ்சோலைகளில் ஆடவருடன் மாதர் மேகலாபரணம் நெகிழவும், கைவளையலொன்றோடொன்று தாக்குண்டு சப்திக்கவும் புணர்கின்றசெய்கையைப்பார்த்து தம்துணையைப்பிரிந்த அன்றிற்பறவைகள் காமமிகுந்து வருந்துவனவாகும். நறுமணங்கமழும் நந்தாவனங்களிலும், மேகம்போல விண்ணுலகத்தை யளாவியசோலைகளினருகிலும், உடம்புகளில் உயிர்கலந்திருத்தல்போல ஆடவரும் மாதரும் கலந்திருந்தார்கள். சுரக்கின்ற மிகுந்த நீர்நீங்காத நல்லிடங்களினின்றும் ஆகாயத்திற்படும்படி வீசியமணமிகுந்த மகரந்தப்பொடிகளினால், அவ்வந்நகரங்களில் பசுமபொன்னினாற் செய்யப்பட்ட தூபிகைக்கலசங்க ளெல்லாவற்றையும் தாழைமடல்கள் தமது மகரந்தப்பொடிகளால் வெண்ணிறமாகச்செய்யும்; உழவர்கள் கழற்றியெறிந்த மாலைகள் கால்களிற் சுற்றிக்கொள்ளும்; சூல்கொண்ட சங்கினங்கள் காலிடறச்செய்யும்; பூங்கொடிகள் தடுக்கும்; சேல்மீன்கள் துள்ளியடிக்கும், இனிமையாகிய பழங்களைமோதும்; தேன்பெருக்குகள் கால்வழுக்கப்பண்ணும்; ஆகையால் அம்மருத நிலத்தில் யாவரும் இயங்குதல் அரிதாகும். உயர்ந்திருக்குங் கமுகமரங்களின்ற பாளைகளின்மேல் வாளை சேல் முதலிய மீன்கூட்டங்கள் குதித்துப் பாய்தலும் அப்பாளைகள் சிதறுண்டு விழுந்து நீர்வளமிக்க மருதநில வயனிலங்களை யுடையுந்தன்மையானது எதுபோலுமெனின், ஆகாயத்திலுள்ள நக்ஷத்திரங்

கள்தவறி விழுவது போன்றிருக்கும். சிறந்த பூங்கொடியின்மேல் மயில்களாடுவது போலக் குயில்கள் வசிக்கின்ற மாமரக்கூட்டங்களின்மேற் கட்டின ஊசல்களின் மேல் பால்போலும் இன்சொற்களையுடைய மாதர்கள் துவளாநின்ற மெல்லிய இடையைக்குறித்துப்பார்ப்போர் துன்பமடையும்படி மனமகிழ்வோடும் ஆடுவார்கள். ஊசல்கள் ஆடுதல் எதுபோலுமெனின், தம்மீதேறியாடுகிற பாடுகிற மாதர்களுடைய செவியழகுக்குத் தோற்றதனால் அம்மாதர்களை யெடுத்தெறிதலை யொத்திருந்தது. கிளிகள்பேசுகிற பேச்சுகள் எதுபோலுமெனின், அப்படி யெறிதலைக் கண்டு பயந்து தமக்குள்ளே பேசிக்கொள்வதை யொத்திருந்தன. குயில்கூவுதல் எதுபோலுமெனின், அவ்வெறிதலால் அம்மாதர்கள் கீழேவிழாதவர்களாய்ப்பிழைத்திருத்தல் என்னவியப்பென்று அம்மாதர்களை வைவதை யொத்திருந்தது. அன்னப்பறவைகள், குளிர்ந்தவயலைக் காப்போராகிய உழத்தியர் எழுந்து ஆரவாரித்து வீசுகிற மாணிக்கக்கற்கள் வந்தடைதலால் அவற்றைத் தமது சிறகுகளினால் தடுத்து அந்தத்தடாகத்திலுள்ள தம்குஞ்சுகளை யணைத்துக்கொண்டு செல்வனவாகும். கடல்நீரையுண்ட மேகங்கள் அந்நீரை நன்னீராக்கி அக்கடலினிடத்தே குறைதீரப்பெய்யுங்காட்சிபோல, பெரிய எருமைக்கடாக்கள் யாவும்சென்று விழுந்து கலக்கித் தடாகத்து நீர்முழுதும் குடித்து, அத்தடாகத்தின் நீர்க்குறைவைத் தமது முலைவழியொழுகாநின்ற பாற்பெருக்கினால் தீர்க்கும். தடாகந்தோறும் செங்குவளைமலர்கள் பூத்திருத்தலானது எதுபோலுமெனின், பாட்டியலறிந்த வண்டுகள் மொய்க்கிற கமலாலயமென்னும் கோயிலில் எழுந்தருளியிருக்கும் சிவபெருமான் சந்நிதிக்கெதிரே நமிநந்தியடிகளென்பவர் திருக்குளத்து நீரைவார்த்துக் கொளுத்திய பல பெரிய விளக்குகளையொத்திருந்தது. கப்பல்களிற் கொண்டுவரப்பட்ட கடல்படுபொருள்களும், காட்டிலிருந்து கொண்டுவரப்பட்ட காடுபடு பொருள்களும், மலைகளினின்றுங் கொண்டுவரப்பட்ட மலைபடு பொருள்களும் ஆகிய இவையேயன்றி, நன்மையையுடைய அந்நாட்டிலுள்ளவர்கள் வேறுபொருள்களை வாங்காமையால், அவ்விடத்தில் நாடுபடுபொருள்களை விற்கிறவழக்கம் அங்கேயில்லை. யாழைக் கையிலுடையவர்களும் ஆடலாசிரியர்களும் சப்தஸ்வரங்களிலேயே பழகுகிறவர்களுமாகிய சங்கீதவித்வான்கள் பிரமாணப்படியே வகுத்துப்பாடுகிற பாடல்களைக் கேட்கின்ற சீமான்கள் நன்றென்றுமதித்து, அவ்வித்வான்களுக்குக் கிம்புரிப்பூணணிந்த கொம்புடைய பலயானைகளைப் பரிசிலாகக்கொடுப்பார்கள். கஞ்சியினால் தேய்க்கப்பட்டு அகில்மணம் வீசுகிற அழகிய ஆடையையணிந்த பூங்கொடிபோலுஞ் சிற்றிடையையுடைய மாதருடையகால்கள் செம்பஞ்சிக்குழம்பு பூட்டப்பெற்றன. ஆடவர்கள் அம்மாதர்களை வணங்குதலால் அச்செம்பஞ்சிக்குழம்புப் பட்டு அவர்களுடைய தலைமயிர் தேய்ப்புண்டு சிவந்திருந்தன. அந்நாட்டுமாதர்களுள்ளே சிலர் அன்றிற் பேடைகளையடைந்து, தாயே இதனைக்கேட்பாயாக! வினைவயிற்பிரிந்த தலைமகன் இன்று இவ்விடம்வந்துசேர்வார். ஆதலால் எங்கள்பொருட்டு நீ சிறிதும் வருந்தாதேயென்று சொல்லுவார்கள். இமைக்குமியல்புள்ள கருங்கண்களும் செந்நிறமடைந்து உடம்பும்வாடி மதநவேர்வையுண்டாகித் தங்கள் கணவரைத் தழுவுகிறமாதர்களும் தங்கள்கணவரிடத்து ஊடல்கொண்டிருக்கிற மாதர்களும் அளவு கடந்திருந்தார்கள். வாளைமீன்கள் ஒன்றோடொன்று போர்செய்கிற வயல்களிலும் தடாகங்களிலும் கமுகம்பாளைகளோடு நீலோற்பல மலர்களும் தாமரைமலர்களும் விளங்கும். மன்மதனும் சோர்வடைதற்குரிய விசாலமான கண்களையுடைய மாதரது மணம்வீசுகிற மெல்லிய இரண்டுகால்களில் காளையர்களுடைய குடுமியும் கை

களும் விளங்கும். பொன்மயமாகிய பெரியமதில்களும் அழகிய பொற்கோபுரங்களும் பெரியமண்டபங்களும் விசாலமாகிய வழிகளையுடைய கடைவீதிகளும் பாடகசாலைகளும் நாடகசாலைகளும் மற்றுஞ் சிறந்தவிடங்களும் பாலிநதிசூழ்ந்த நல்ல தொண்டைநாட்டிலுள்ள நகரங்கடோறும் நிலைபெற்றோங்கும். தெள்ளிய அலைகளையுடைய கடல்சூழ்ந்த இந்நிலவுலகத்தில் சிறப்புற்றோங்கிய எந்த நாடுகளும் புகழும்படி நிலைபெற்றுள்ளதாகிய ஒப்பற்ற நல்ல தொண்டைவளநாட்டின் சிறப்பைச்சொல்லினோம். இனிக், குளிர்ந்த தமிழ்வளம் பொருந்திய திருக்காஞ்சிமாநகரத்தின் சிறப்பைச் சொல்லுவோம்.

# திருநகரப்படலம்.

மாவுல கெங்கு மலர்த்தட மாகத்
தாவறு சீர்புனை தண்டக நாடே
மேவிய கஞ்சம தாவதின் மேவுந்
தேவினை யொத்தது சீர்பெறு காஞ்சி. (௧)

பூங்கம லத்துறை புங்கவன் மாயோன்
பாங்குறை தேவர்பல் லாண்டிசை பரவ
வோங்கிய புள்ளினை மூர்ந்தவ னுறலா
லாங்கவர் மேவு மரும்பத மாமே. (௨)

இன்னிய றோர்தரு மிந்திரன் முதலா
மன்னிய வானவர் மற்றுளர் யாருந்
துன்னின ராயிடை சூழ்ந்துறை செயலாற்
பொன்னக ரென்றுபு கன்றிட லாமால். (௩)

கின்னரர் சித்தர் கெழீஇய தனலத்
தங்கிக ரில்லவர் தம்பதி போலும்
பன்னக வேந்தர் பராயின ருறலா
லன்னவர் தம்பதி யாகிய தன்றே. (௪)

எண்டிசை காவலர் யாவரு மீண்டப்
பண்டவர் பெற்ற பதங்களை மானு
மண்டல மார்சுடர் மற்றைய வுறலா
லண்டமு மாகிய தப்பதி யென்பார். (௫)

இப்படி யாவரு மெய்திய திறனு
லொப்பன போலவு ரைத்திட லொப்போ
வப்பதி யேய தனுக்கிணை யன்றிச்
செப்பரி தாற்பிற சீர்கெழு காஞ்சி. (௬)

மறைமுதல் வோர்தனி மாவி னிழற்கீ
ழுறைதரு காஞ்சி தனக்குல கெல்லாம்
பெறுமய னாதியர் பெற்றிட வன்று
னிறுவிய தொன்னக ரோங்கி ராமே. (எ)

மேயதொல் லூழியில் வேலைக ளேழுந்
தூயத னெல்லை சுலாவுற நிற்ற
லாய பரஞ்சுட ராங்குள தாயு
மாயைகள் சுற்றிய மன்னுயி ரொக்கும். (அ)

வேறு.

பாழி மால்வரை யெறிதிரை வையகம் பலவும்
வாழு மண்டலங்கள் சிற்றுரு வமைந்துவந் தென்னச்
சூழு நேமியம் புள்ளின முதலிய சுருங்கு
மாழி நீததம தொத்தது மதிற்புறத் தகழி. (௯)

மண்ட லப்பொறை யாற்றுவான் பற்பல வகுதது
முண்ட காசன மீமிசை யிருந்திடு முதல்வ
னண்ட கோளகை தாங்கவோர் சுவர்த்தல மதுவும்
பண்டு செய்தென வோங்கிய நெடுமதிற பரப்பு. (௧௦)

சென்று சூழ்வெயி லழுவெழு நகைததவன் செழும்பொற்
குன்று தோளுற வாங்கலு முலகெலாங் குலைந்து
வன்று நான்முக னனைதையுந் தாங்குகென றருள
நின்ற தென்னவும் பாதலம் புகுந்துமே னீண்ட. (௧௧)

மேக நாட்டிற்கும் விஞ்சையர் நாட்டிற்கும விண்ணோர்
மாக நாட்டிற்கு மலரய னாட்டிற்கு மறறை
நாக நாட்டிற்கும் பாதல நாட்டிறகு நணுகிய
போக நாட்டிய பொன்மதி லானதப புரிசை. (௧௨)

மூதிரை வண்ணமா நவமணிக் குவையுமவான் மூவாக்கும்
கதிரி னெல்லெனும் பொருளுட னெனவுங் காட்டிய
பொதிவ தாகியே மூழுவது கிரமபுதல் பொருந்தா
கிதிய மேயகூ டொதததது நெடியமா மதிலே. (௧௩)

நிறையும் வார்கடல் சுற்றிய நேமியு நேமிக்
குறையு ளாகிய கணிப்பிலா வண்டமு மொபப
சிறையில் வான்கிரி கிரையெனச் செவ்விதிற் கிளர்ந்து
மறுகெ லாந்திகழ் மாளிகைப் பத்திசூழ் மதிலே. (௧௪)

தடுக்கு மாற்றலர் நால்வகைப் படையொடுஞ் சாய
முடிக்கும் வாள்கொடு விதாத்திடு பெருவினன் முருக்கு

மெடுக்கு மெற்றிடு மெறிந்திடும் விழுங்கிடு மீர்க்கும்
படிக்குங் கன்மழை சொரிந்திடும் விற்படை பயிலும். (கரு)

உருக்குஞ் செம்பினை வங்கத்தை யிழுதொடு மோச்சும்
வெருகெகா ணைமிக ளெறிந்திடும் வச்சிரம் வீசி
யிருக்கு நின்றிடுங் குபப்புறுஞ் செறுநரை யிகலி
நெருக்குந் தாழ்ந்திடு முலகளந் தோனென நிமிரும். (கசு)

பீடு தங்கிய பணைமுர சியம்பிடும் பிடிக்குங்
கோடு மார்த்திடுந் துடிகளு மொலித்திடுங் கொட்புற்
றூடு மீயுயர் புணையு மெறிந்திடு மரண்மே
லோடு மீளுமக் கதிரையுந் தடுப்பபோ லுந்தும். (கஎ)

சூலம் வீசிடுந் தோமரம் வீசிடுஞ் சுடர்வே
லாலம் வீசிடுஞ் சுடுமணல் வீசிடு மளப்பில்
சாலம் வீசின் றீர்த்திடு மகழியிற் றள்ளுஞ்
சீலம் வீசிய பாரிட மாமெனத் திரியும். (கஅ)

திகழும் வெங்கன லுமிழ்ந்திடு மொன்னலர் செலுத்தும்
பகழி மாரியை விழுங்கிடும் பறவையிற் படரு
மிகழு நாவையு மனதையு மெறிந்திடு மென்றாற்
புகழு நீரவன் றம்மதின் மேலுறும் பொறிகள். (கக)

பூணி னேர்தரும் பொன்னவாம் புரிசைமேற் புனைந்த
வாணி லாநெடுந் துகிலிகை பெயர்வன மலரோன்
சேணு லாயதீஞ் சுடரெனுங் கோபுர சிகரங்
காண வேபல வெகினமாய்த் தேடல்போற் கவினும். (உ0)

ஈர்த்த மாமதி சசியென்ப துலகுளோ ரிட்ட
வார்த்தை யல்லது சரதமோ கடிமதின் மருங்கிற்
றார்த்த கேதன மவன்மணி மேனியிற் றுடக்கப்
போர்த்த வெண்ணிலாக் கஞ்சுகம பீறிய போலாம். (உக)

காட்சி மேயவக் கடிமதிற் கதலிகை காணூஉச்
சூட்சி நாடிய பரிதியுங் கீழுறத் தொடர்ந்தான்
மாட்சி தேய்ந்திலன் வரன்முறை மனப்படு மதியோர்
தாட்சி செய்யினு மனையர்பா லணுகுமோ தவறு. (உஉ)

புடைப ரப்பிய புரிசையி னாற்றிசைப் புறத்துந்
தடநி லைப்பெருங் கோபுர முளதழ னிறத்துக்
கடவு ளுச்சியின் வதனமொன் றின்றியே காண்பா
னடைத லுற்றிடு திசைமுகம் பொருவின வவ்வையே. (உஙூ)

என்று மாமதிக் கடவுளும் பிறருமீ ரியல்பாங்
குன்ற மேயெனக் கீழ்த்திசை யதனொடுங் குடபா
னின்ற கோபுரங் கடக்கலர் வாய்தலி னெறியே
சென்று சென்றுபோ யப்புறத் தேகினர் திரிவார். (உ௪)

தீபு ரத்திடை மடுத்தவ னிணையாற் சிறந்த
மாபு ரத்திடை வான்றொடுங் கடிமதில் வரைப்பி
லர்பு ரத்தவாய்க் கிளர்ந்தவே யமைத்தவன் றென்னக்
கோபு ரத்திடைக் கொழுந் துபோ லோங்கிய கொடிகள். (உ௫)

மாட மாளிகை மண்டபங் கோபுர மறுகிற்
கோடி கோடியின் மேலுமுண் டன்னதார் குணிப்பா
ராடு கேதனத் தளவையு மன்னதே யகல்வா
னூடு போகலா தலமரும் பறவைக ளொப்ப. (உ௬)

சிகர மால்வரை யன்னமா ளிகைதொறுஞ் சிவணு
மகர தோரண மாடிகள் பலவுற வயங்க
விகலும் வெய்யகோ ளிரண்டுமா யொருவடி வெய்தி
யகல்வி சும்பிடைக் கதிர்களின் புறமறைத் தனைய. (உ௭)

செம்பொ னிற்புரி நிலையுடைத் திகிரியந் தேர்க
ளம்ப ரத்திடை வசியுற வீற்றுவீற் றுருக்
தம்ப முற்றல மருவன செய்யகோற் றலையிற்
பம்ப ரத்துருத் திரிப்புறக் கறங்கிய படிய. (உ௮)

பளிங்கி னூற்செய்த தெற்றியின் றலைமிசைப் பனிதோய்
வளங்கொ ணித்திலஞ் செம்மணி குயிற்றிய வைப்பிற்
றுளங்க நாற்றிய பொன்மணிப் பாலிகை தொகுவ
குளங்கொ டாமரை மலர்ப்பொகுட் டாயின குறிக்கின். (உ௯)

ஓவி யத்தியன் மரகதத் தலத்தின தும்பர்த்
தாவி லாடகத் தலமிசை நித்திலத் தலமேற்
கோவை பட்டசெம் மணித்தலம் பொலிதலாற் கொண்மூ
மூவ கைக்கதிர் வியலிடந் தெரிப்பதம் மூதூர். (௩௦)

கன்னல் வேளொனு மைந்தரு மாதருங் கலந்து
மன்னு நித்தில மாளிகைப் பத்தியின் மாடே
பொன்ன வாஞ்சிறை மணிமயிற் குழாத்தொடும் போகு
மன்ன மாமதி முகிலிடை நுழைந்துபோ யனைய. (௩௧)

தண்ட மாகியே புவியுறு பணியெலாந் தழுவி
யண்ட மீமிசை யிரவியு மதியமு மடைதல்

கண்டு மாளிகைச் சூளிகை மருங்குபோய்க் கவர்வான்
கொண்ட சிற்றத்தி ஞெழுநிந் தன்னபூங் கொடிகள். (௩௨.)

தேனை வென்றசொல் லாரொடு மைந்தருந் திளைக்கு
மீன வாவிபோல் வியன்படி கத்தினல் விளங்குந்
தான மீமிசைத் தயங்கிய முழுமணித் தலந்தான்
வான நின்றிடு தெய்வத மான்மே மானும். (௩௩.)

தேவர் தானவர் முனிவரர் சித்தரோ டியக்கர்
வாவு கின்னர ருவணர்கந் தருவர்மற் றுள்ளோ
ரேவ ருந்தம தகன்பதி யிகந்தவ ணெய்தா
மேவு கின்றன தனித்தனி யிருக்கைகண் மிகுமால். (௩௪)

தூங்கு குண்டிகை யருகுறக் காலெதிர் தூண்டி
யோங்கு நாசிமேல் விதிமுறை நயனங்க ளுறுத்தி
யாங்கொ ராசனத் திருந்தா னடியகத் தடக்கிப்
பாங்கர் மாதவம் புரிகுநர் சாலைகள் பலவால். (௩௫)

பாடு நான்மறை யந்தணர் வேள்விகள் பயில
மூடு தண்புகை யண்டமுங் கடந்தன முன்னந்
தேடு கின்றதோர் பரஞ்சுடர் மீட்டுமித் திறத்தா
னீடு கின்றதோ வென்றுநான் முகத்தனு நினைய. (௩௬)

நான்ம றைக்குலத் தந்தணர் நவையறு காட்சி
யூன்ம றைதரு முயிரென வோம்பிய வொழுக்கார்
மேன்மு றைக்கணோ ரைம்புலப் படிற்றினை வென்றோர்
வான்ம றைத்திடு மாளிகை வீதியு மலிந்த. (௩௭)

ஏவு பல்படை வலியினர் வெஞ்சம மிகந்தோர்
நாவி னான்மறை பயில்பவர் நணுகுறு நலத்தாற்
கோவு நீணகர் மறுகொலாங் குருமணிச் சிகரத்
தேவு நீணகர் நிலைமையே போல்வது தெரியின். (௩௮)

ஆணியி னெங்கணும் பன்மணிக் குவால்களு மார்வந்
தணிவி லாடகக் குவைகளும் பிறவுமுன் றழைப்பக்
கணிக ணனுறு கற்பக மனையன காட்சி
வணிக ராவணத் தெற்றிகள் வயின்றொறும் வயங்கும். (௩௯)

கங்கை மாமக டொல்பெருங் குலத்தர்கா சினியின்
மங்கை யாளருள் புரிதரு மகாரெனும் வழக்கோர்
செங்கண் மானிகர் வெறுக்கைய ரயன்பதந் சேர்ந்தோர்
துங்க வீதியு மேனையர் மறுகொடுந் தொகுமே. (௪௦)

கண்டு கேட்டவை யுண்டுயிர்த் துற்றறி கருவி
கொண்ட வைம்புல ரொருங்குற நடாத்திய கொள்கைத்
தொண்டர் கூட்டமும் விழிவழிப புனலுகத் தொழுங்கை
யண்டர் கூட்டமு மாலயந் தொறுந்தொறு மருவால். (௪௧)

ஆதி நான்முக னெகினத்தி னடிகளு மமலன்
பாதி யாளன்ற னுவணத்தி னடிகளும் பணிக்கார்
நாத னூர்தரு தந்தியி னடிகளு நாளும்
வீதி வீதிக டொறுந்தொறுங் காண்வர விளங்கும். (௪௨)

மாவி னோதையுங் களிற்றின தோதையு மருங்கின்
மேவு தேர்களி னோதையுங் கவிகையாய் விரிந்த
காவு சூழ்தரு மன்னர்சி ரோதையுங் கறங்குந்
தேவ துந்துபி யோதையு மிறுத்தில தெருவு. (௪௩)

நாட்டி யச்செயல் யாவையுஞ் சிவனது நடனம்
பாட்டி சைத்திறம் யாவையு மன்னதே பதியோர்
கேட்டி ருப்பன யாவையு மவனிசைக் கேள்வி
கூட்டம் யாவையு மன்னவன் றொண்டுசெய் கூட்டம். (௪௪)

பாலு றுந்ததி யிழுதுதே னிருக்கைகள் பலவுங்
கோல மாகுமந் நகரிடை யவையுறை கூவல்
போலு மாயிடை மாதவத் தவளறம் புரியுஞ்
சாலை யாயின வரம்பிலா வடிசிலஞ் சாலை. (௪௫)

அளவில் பற்பக றம்மினு நீங்கியோ ரடுத்த
கிளைஞர் வந்துழி யெதிர்தழீஇ நன்னயங் கிளத்தி
யுளம கிழ்ந்தவர்க் கூட்டுமின் னடிசில்போ லுறுவோ
ரெளிதி னுங்கிட் வழங்குமா லோதன விருக்கை. (௪௬)

வேறு.

மாட மாளிகை வாயி றொறுந்தொறு
நீடு கண்ணுள ராமென நின்றுகின்
றூடு சித்திரப் பத்தி யமரரு
நாடி நோக்கி நயந்திடப் பட்டதே. (௪௭)

எல்லை தீர்ந்த விரவிக ளேண்டிய
சில்வி யாழித் திகிரிகண் மானுமான்
மல்லன் மாநகர் மைந்தர்க ளூர்தரும்
பல்வ கைச்சுடர்ப் பண்ணுறு தேர்களே. (௪௮)

வெள்ளை யாதி வியன்கவி யாவையுந்
தெள்ளி தின்மொழி தென்கலை யேமுத

உள்ள பல்கலை யோதுகின் றார்களும்
வள்ளி யோர்களு மன்றுதொ றீண்டுவார். (சகூ)

இகலும் வேழத் தெயிற்றினை யெய்ந்திடு
நகிலி னார்க ணறுங்குழன் மேலிடு
மகிலி னாவியு மாய்மணி மாடமேன்
முகிலும் வேற்றுமை யின்றி முயங்குமே. (ரு௦)

பண்ணி னோசையும் பானலை வென்றிடுங்
கண்ணி னார்கள் களிநட வோசையுந்
தண்ண ரம்பிய றந்திரி யோசையும்
விண்ணு ளோர்க்கும் விருந்தென லாயவே. (ருக)

அணிகு லாவு மரம்பையர் காளையா
நணிய தோளை நயப்புற நாகருங்
கணிகை மாதரைக் காமுற மேவலான்
மணிகொள் காஞ்சி மதனர சாயதே. (ருஉ)

கூற்றிற் செல்லுங் கொலைக்கரித் தானமு
மேற்றிற் செல்லு மிடையர்தஞ் சேரியி
னாற்றிற் செல்லுமொண் பாலு முடனுரு
வர்றிற் செல்லுமவ் வாவணந் தோறுமே. (ருங)

வே று.

பண்ணுளர் நரம்பியல் பாணிக் கேற்றிட
வெண்ணுள கணிகைய ரினதொ டாடலுங்
கண்ணுள ராடலுங் காம னாடலும்
விண்ணுள ராடலும் வெறுப்ப மேவுமே. (ருச)

அரிவையர் மைந்தர்க ளணிந்து நீத்ததே
திருமகள் காமுறுஞ் செல்வ மாகுமேற்
கருதரு நான்முகக் கடவுட் காயினும்
பொருவரு நகாவளம புகலற் பாலதோ. (ருரு)

வே று.

மாறாய்ச் சிறார்க ளெறிந்தாடிய மான்ம தத்தாற்
சேறாய்ப் பொற்சுண்ணத் துலர்வாய்ப்பனி நீர்கள் சிந்த
வாறாய்ப் பளிதத்தி னிலவா லுக்கத்தா று மாகி
வேறாய்ப புவியோ ருணர்வாமென மேய வீதி. (ருசு)

தண்டாமரை யேந்திய வானவன் றன்னை யொத்தா
னெண்டாவிய மாமத நேந்திழை யாரி லஞ்சி

வண்டாமரை பூத்தன வொத்தனர் வந்து செந்தே
னுண்டாடிய தேன்களை யொத்தன ரோங்கண் மைந்தர். (௫௭)

ஏமங் குலவு முரசங்க ளிரட்ட வாசத்
தாமங் கமழ்பந் தரினூடு தமக்கி யன்ற
வோமங் களின்மா மணஞ்செய்தன ரூர்கு லாவு
மாமங் கலமே யுலப்பின்றி மலிந்த தன்றே. (௫௮)

மாகந் திகழு மகிலாவிகொண் மாட மீதிற்
பாகின் மொழியா ரிளமைந்தர்தம் பாலி னேச்சப்
போகுஞ் சிவிறிப் பனிநீர்புறஞ் சிந்த வென்று
மேகஞ் சிதறும் பெயலென்ன விளங்கும் வீதி. (௫௯)

வன்மாமுலை யேந்திய மங்கையர் மைந்த ரானோர்
தொன்மா டமீதி லெறிந்தாடுபொற் சுண்ண மோடு
நன்மா மலர்த்தாது விசும்புற நண்ண மேகம்
பொன்மா முகிலாய்ப் பனிநீரிற் பொழியு மன்றே. (௬௦)

தாராற் பொலிபொற் புயவீரர் தவாது செல்லுந்
தேரார்ப்பு நால்வாய்க் கரியார்ப்பும் வெஞ்சேனை யார்ப்பு
மேரார்ப்பு மிக்க பதிமானவ ரீண்டு மார்ப்புங்
காரார்ப்பும் வேலைக் கடலார்ப்புங் கடுத்த வன்றே. (௬௧)

வானோக்கி நிற்கு முலகென்னவு மன்ன வன்செங்
கோனோக்கி நிற்குங் குடியென்னவுங் கோதி லும்ப
ரானோர்க்கு நாக ருலகோர்க்கு மவனி யோர்க்கு
மேனோர்க்கு நாடு நகராகி யிருந்த தவ்வூர். (௬௨)

கோடு நெறியு மிகலும்மனக் கோட்ட மாய
கேடும் பிணியு முதலாகிய கேதம் யாவு
நீடும் பரிவோ டுறைவாரிடை நீங்க லாலே
வீடந் நகரே யெனிலென்னின் விளம்ப லற்றே. (௬௩)

வேறு.

ஏமமே தருவாச் சினைகளு மனைத்தா விலைதளிர் செய்யபூந் துகிராக்
காமர்பூ மணியா வுதித்தொரு காஞ்சி கண்ணரோ ரைவர்முன் கண்டு
தாமினி தருளும் பொய்கையின் மருங்கே தன்னிழல் பிரிகிலா துறலாற்
பூமியெண் காஞ்சி மாபுர மெனும்பேர் புனைந்ததப் பொருவிலா நகரம்.

சுருதியா னுறங்கு மிராத்தொறு முடிவிற் றுஞ்சிய வூழிக டோறும்
விரையவந் துலக மழித்திடுங் கடலவ் வியன்பதி யெல்லையுட் சிறிதும்
வருவதை யஞ்சிப் புறந்தனிற் சூழ வந்தொரு சத்திகாத் திடலாற்
பிரளய சித்தென் றொருதிரு நாமம் பெற்றதக் காஞ்சியம் பேரூர். (௬௫)

கயிலையி லரனை யம்மைபூங் காவிற் கண்களை மூடலு முலகிற்
பயிலுறு கொடிய வினையிரு ளகலும் பான்மையால் வந்துமா கிழற்கீ
ழியலொடும் பரமன் பூசனை யியற்றி யிரைத்தெழு கம்பைகண் டஞ்சிச்
செயன்முறை தழுவக் குழைந்தருள் செய்யச் சிவபுர மானதச் சீரூர். ()

விண்ணுறை மகவான் கரிபுரி தவத்தால் வெற்பதாய்த் தன்னைமுன்றூங்கு
புண்ணிய கோடி யிபகிரி மிசையே பொருவிலா வேதியுத் தரதி
லண்ணலங் கமலத் திசைமுகன் வேள்வி யாற்றலு மவற்கருள் செய்வான்
கண்ணன்வந்திடலால்விண்டுமாபுரமாங்கட்டுரைபெற்றதக்காஞ்சி. (௬௭)

கார்த்திரு மேனித் தண்டுழாய் மௌலிக் கண்ணனுங் கமலமே லயனு
மார்த்திடுந் தரங்கப் பகீரதி மிலைந்த வவிர்சடை யமலனு மாகு
மூர்த்திக டத்த முலகமே போல முன்னியப் பதியமர் செயலாற்
சீர்த்திரி மூர்த்தி வாசமா கியபேர் சிறந்ததக் கச்சிமா நகரம். (௬௮)

தரணிகண் முழுதும் புரிதரும் விரிஞ்சன் றன்மனம் புனிதமாம் பொரு
றிருமகள் கணவன் கமடமாய்ப் பூசை செய்திடு கச்சபா லயத்தி [ட்டாற்
லரனடி பரவி யருச்சனை யியற்றி யங்கண்வீற் றிருந்திடு நெறியால்
வரமிகு பிரம புரமென வொருபேர் மன்னிய தன்னதோர் நகரம். (௬௯)

வீடுறு முத்தி போகமென் றவற்றில் வெஃகிய வெஃகியாங் கென்றுங்
கூடுறு தவத்தால் வழிபடு வோர்க்குக் கொடுத்திடுந் தன்மையாற் காம
பீடமென்றொருபேர்பெற்றதுமலர்மேற்பிரமனேமுதலினோர்தவத்தை
நாடினர் செயலாற் றபோமய மெனும்பேர் நணியது கச்சிமா நகரம். (௭௦)

சகங்களோர்மூன்றி லறம்பெரி துளதித் தரணியித் தரணிமா நகர்க்குண்
மிருந்தரு மத்தின் பலததினைத் தரலால்வியன்சகற் சாரமென் றொருபேர்
புகும்பரி சுடைய தட்டசித் திகளும் பொருவின்மா தவாக்கரு டிறத்தாற்
பகர்ந்திடுஞ் சகலசித்தியென் றொருபேர் படைத்தது கச்சியம் பதியே ()

உன்னருங் கயிலை நாயக னுமையை யொருபக லீலியென் றுரைப்ப
வன்னவ டனது காளிமங் கழிப்ப வங்கதி லலைவந் தெழலு
முன்னவ னவளை யிங்கக ரிருந்து முறைபுரிக் தருளென விடுப்பக்
கன்னிகாத்திடலாற் கன்னிகாப் பென்னுங் கவின்பெய ருடையது கச்சி.()

அரியதோர் கயிலைக் கணங்களி லொருவ னனதுண் டீரன்மா லதிபாற்
பெருமயல் கொள்ளச் சிவனிவ ளோடுநீ பிறந்திருந் தின்பமுற் றெம்பால்
வருகென நிலமேன் மன்னர்பாற் றோன்றி மற்றவ ளோடுசேர்ந் தரசு
புரிதரு செயலாற் காஞ்சிதுண் டீர புரமெனப் புகலநின் றதுவே. (௭௩)

தன்னையே யருச்சித் திடமலர்க் கேகித் தடந்தனிற் கராவின்வாய்ப்பட்டுத்
தன்னையே நினைந்து தன்னையே யழைத்த தந்தியைக் காத்தவொண் புயமா

றன்னையே வேண்டித் தழன்மகஞ் செய்யத் தண்டகமென் டிசையரசு
தன்னைநீக்கிடலாற்றண்டகபுரமாந்தனிப்பெயர்பெற்றதத்தனியூர். (சச)

அழகிய வயோத்தி மதுரையே மாயை யுவந்திகை காசிநற் காஞ்சி
விழுமிய துவரை யெனப்புவி தன்னின் மேலவாய் வீடருள் கின்ற
வெழுநக ரத்துட் சிறந்தது காஞ்சி யென்றுமுன் னெம்பிரா னுமைக்கு
மொழிதரு நகரந் நகரெனி லதற்கு மூவுல கத்துநே ருளதோ. (சரு)

பங்கமில் வசிட்டன் பசுப்பொழி பாலி படர்ந்திடு முத்தரஞ் சேயைச்
செங்கம லத்தோன் முதலினோ ராட்டுந் திருநதி தென்றிசைச் செல்லு
மங்கவற் றிடையே கம்பமே முதலா மாலயத் தந்தரு வேதி
கங்கைகா ளிந்தி யிடைப்படுந் தலத்தின் முற்படுங் காஞ்சிமா நகரம். (சசு)

தொல்லையோர் பிரமன் றுஞ்சிய காலத் தோன்றிய நீத்தமே லரிபோற்
செல்லுமார்க்கண்டன்கரத்தினிற்கம்பைசேர்ந்ததோர்தனிப்பெருஞ்சூத
மெல்லைநீரிகந்துவளர்தலுமருப்பொன்றெய்தவக்கொம்பர்தொட்டிழிந்து
நல்லுமைகுறிக்கொண்முதல்வனைவணங்கி நயந்தவணிருந்ததந்நகரம். ()

சமயமா றினையுந் தாயென வளர்த்துச் சராசர வனுக்க ளுய்ந்திடவா
னமைதருவெண்ணான்கறத்தினைப்போற்றியாதிபீடத்தில்வீற்றிருக்கு
முமையமர் காமக் கோட்டியைக் கதிரோ னுடுபதி கணங்கள் சூழ் தரலா
லிமையவர் தமக்குந் திசைமயக் குறுத வியல்புடைத் தந்நக ரென்றும். ()

பாவமோர் கோடி புரியினு மொன்றாம் பரிவினிற் றருமமொன் றியற்றி
னேவரும் வியப்பக் கோடியாய் மல்கு மின்னதோர் பெற்றியை நாடித்
தேவர்கண் முனிவர் தம்பதம் வெறுத்துச் சிவனருச் சனைபுரிந் தங்கண்
மேவினர்தவஞ்செய்திருத்தலாற்காஞ்சிவியனகர்ப்பெருமையார்விரிப்பார்

கங்கைதன் சிறுவ னருள்பெறு வேதாக் கண்படை கொண்டகா லையினு
மங்கவன் றுஞ்சும் பொழுதினுங் காஞ்சி யழிவுறா திருந்தபான் மையினாற்
றுங்கவெண் பிறையு மிதழியு மரவுஞ் சுராதிபர் முடிகளு மணிந்த
மங்கையோர் பங்கன் படைத்ததே யன்றி மலரயன் படைத்ததன் றதுவே.

அரியபல் லிசையு மறைபுனல் கங்கை யருஞ்சிலை யிலிங்கமங் குறைவோர்
சுரர்தரு வனைத்துங் கற்பக மின்பந் துய்ப்பது வேள்வியூண் பூசை
யுரைசெப நடத்தல் வலம்வருந் தன்மை யுண்டலே தியானம்வீழ்ந் திடுதல்
பரனடி வணக்க மாவது காஞ்சிப் பதிக்கலா லெந்நகர்க் குளதே. (அக)

கணமுகில் செக்கர் போர்த்தெனுங் கரிய கஞ்சுகச் செந்நிறக் கட்வுண்
மணிசுடர் வயிரக் கிம்புரி மருப்பு மால்கரி முகத்தவன் வருசூர்
துணிபடவெறிந்த வேலவ னியன்போற் றோன்றிய சாத்தன்மால் விசயை
யிணையில்சீர்க் காளி முதலினோ ரென்று மினிதுகாத் திடுவதந் நகரம். ()

## கந்தபுராணம்.

அறுசம யத்திற் கடந்தசை வத்தி னன்றிவீ டிலதெனத் தெளிந்து
பிறரறி யாது தொன்மைபோ லிருந்து பிஞ்சகன் மீதுகன் மலரா
லேற்றிதரு தேர னென்பர்தங் கலிங்க மெழிலிக ணனைத்தலுஞ் சிரத்தை
முறைபுரிசிலைமேன்மோதினென் முதலோர்முத்திபெற்றுடையதம்மூதூர்.

ஈசன தருளாற் கயிலையை நீங்கி யிமயமா மயிலறம் புரிவான்
காசியி லிருந்து முடிவுறு தேகிக் கனகமா நீழலிற் பரனைப்
பூசனை புரிந்து கம்பைகண் டஞ்சிப பூண்முலை வளைக்குறிப் படுத்தி
யாசிலா வருள்பெற் றின்னுநோற் றிடலா லனையகாஞ் சிக்குநே ரதுவே.

ஆருயிர் முழுதும் வீடுபெற் றுய்வா னறம்புரி சாலைய தணித்தாப்
பேரிறைவன் றவத்தின்முனிருந்தபிலத்திடைக்கோயில்கொணடென்
பூரணி நோற்று வழிபட வனையாள பூசனை கொண்டியா வர்க்கும் [றும்
காரண மான பரசிவ னநந்த கலையொடு நிலையதக் காஞ்சி. (அறு)

இன்னமு முமையா ளுறைதரு மாங்கீ யிறப்பினும் பிறப்பினு நிலையாய்
மன்னியே யுறினு மொருகண மேனும வைகினு மறைகளாந் தனிமா
நன்னிழ லிருந்த பரஞ்சுடர் புரியு நடந்தரி சிக்கினு மதனை
யுன்னினு முத்தி வழங்குகாஞ் சியைபபோ லுலகில்வே றுருநகருளதோ.

கண்ணுதற் பரனுந் தண்டுழாய் மௌலிக் கடவுளுங் கமலமே லயனும்
விண்ணவர்க் கிறையுங் கொற்றமாவினியு மேலைநாட்பிறந்ததொன்மனுவுந்
தண்ணளி புரிதுண் டீரனு நளனார் சமாததொழில் கடந்ததண் டகனு
மண்ணலங் கரிகால் வளவனும் பிறரு மரசுசெய் தளிதததந் நகரம். (அஎ)

வேலைசூழ் உலகி னெங்கணு மிருபால் வீட்டினை வெஃகினோர்க் குதவு
மாலய நூறறெட் டுள்ளமற் றவற்று ளைமமுகப பரஞ்சுட ரமருங்
கோலமார் நிலைய மிருபது மாயோன் கோநக ரெட்டுமாக் குழுமி
நாலெழு தான முள்ளவந் நகர்போ லும்புகழ் நகரமற் றெவனோ. (அஅ)

கச்சபா லயமே கம்பமே மயானங் கவின்கொளகா ரோணமா காளம்
பச்சிபா லயநல லநேகபங் கடம்பை பணாதர மணீச்சரம் வராக
மெய்ச்சுர கரமுன் னிராமமவீ ரட்டம வேதநூ புரமுருத திரர்கா
வச்சிர ணகரம் பிரம மாற்பேறு மற்றைசையாஞ் சிவாலய மிருபான். ()

கரிகிரி யட்ட புயந்திரு வெஃகாக் கருதுமூ ரகஞ்சகா ளாங்கஞ்
சுரர்புகழ் திராகா ரந்நிலாத திங்கட் டுண்டநற் பாடக மினைய
வரிதிரு முற்ற மெட்டவை யன்றி யறுபதி னாயிர நிலயம
பரசிவன சத்தி குமராமால் புறத்தோர் பலரும்வீற் றிருப்ப தப்பதியே.

ஒன்றுதீ விளக்க மீரிட மொருமூன் றாற்றிடு தெற்றிநான் கரண
நின்றிடு திருவைந் தாறுபுள் மேழு நெடுநதி யெண்பொது வொன்பான்

மன்றலம் பொய்கை யியன்சிலையொருபான்மன்றவைபத்தின்மேலொன்றா
கின்றமர் தொழுகு நெறியிலற் புதமாய் கிகரிலா துறையுமந் நகரம். ()

சிறந்திடு மதியு மிரவியு மாழ்கச் செகமெலாந் தனதொளி பரப்பி,
யறம்புரி காமக் கோட்டிமந் திரத்து ளம்மைவாழ் பிலத்தினு ளழியா,
துறைந்திடு தூண்டாவிளக்கமொன் றுதித்தவுயிர்த்தொகையிறந்திடாவிட
மொன், றிறந்திடு முயிர்கள் பிறந்திடா விடமொன் றெம்பிரா னிருந்தவி
ரிடமே. (சுஉ)

தோற்றுயிர்க் குணவு நல்குமோர் தெற்றி சொற்றவை யுதவுமோர் தெற்றி
தேற்றுசொன் மூகர்க் களிக்குமோர் தெற்றி தெற்றிமூன் றிவைநக ரெல்லை
யீற்றினிற் கீழ்பா லளக்கருந் தென்பா லியற்பெரும பெண்ணைநன் னதியு
மேற்றிசைப் பவள சயிலமும் வடபால் வேங்கட வெற்புநான் கரணே. ()

மறைகளி னுருவாய்ப் பொன்மலர் தனிமா மலரொடு காயிலா தென்றுஞ்
செறிதரு பலங்க ளுதவிநுங் கினர்க்குச் சித்திகள் வழங்குறு மெகினம்
வெறிமலர் பலவு மலர்ந்திடு மதூகம் விண்ணினை நோக்குமோ ரத்தி
நறுநிழல் பிரியா திருந்ததோர் காஞ்சி நன்னகர் தன்னிலைந் தருவே. ()

உம்பருண் பகிருஞ் சாதக மணிக ளுதவிடு மன்னறா வுரைதருக்
கொம்புறு கிள்ளை யலகுசொல் லாந்தை குறைபெறிற் கூவுறுக் கோழி
யிம்பரிற் பாவந் துடைத்திடு நேமி யிவையறு புள்ளொழு நதிதான்
கம்பைநற் பம்பை மஞ்சணீர் பிச்சி கலிச்சிபொன் மண்ணிவெஃ காவே.

குரைபுனல் வேட்டோர்க் குதவியே திரியுங் கூவலம் பொதுக்குறு
முயல்போய்க், கரிதொடர் பொதுவே றிசையுறு பொதுமால கண்டியின்
றிடுபொது வேறே, றுருவுசெய் பொதுவோர் புற்றின்மா முழவு மொலிக்
கிடும் பொதுத்திசை மயக்கம், புரிதரு பொதுவென் னம்மைநோற் றரு
ளும் பொற்பொது விவைகளெண் பொதுவே. (சுசு)

முன்னுறு பிணிகண் மாற்றிடும் பொய்கை முதல்வர்கண் முடிவுறுங்
காலைச், செந்நிற மாகும் பொய்கைமுக் காலந் தெரிதரும் பொய்கைகண்
ணுதலோன், றன்னடி காட்டும் பொய்கைவேண் டியது தந்திடும் பொய்கை
மெய்ஞ் ஞானம், பொன்னிறஞ் செல்வம் வசீகரந் தருநாற் பொய்கையோ
டொன்பதாம் பொய்கை. (சுஎ)

விடந்தனை யகற்று மொருகலா ருயிர்கண் மெய்ப்பிணி மாற்றிடு மொருக
லடைந்தவ ரெல்லா மிமையவ ராக வளித்திடு மொருகல்வெம் படையாற்
றடிந்திட வேறுய்த் துணிபடு முடலஞ் சந்துசெய் வித்திடு மொருக
னெடும்படைவரினுமவையிரிந்தோடகிலைபெறீஇகிற்குமாங்கொருகல். ()

துஞ்சினர் தம்மை யெழுப்புமாங் கொருக றொல்வழக் கறுத்திடுமொருக
லெஞ்சலினிதியங்கெடுத்துளோர்வினவிலீதெனக்காட்டிடுமொருகல்
விஞ்சிய வினைக டீர்த்திடு மொருகல் வேந்தருக் கரசிய லுதவித்
தஞ்சம தாக நின்றிடு மொருக றக்ககல் லையிரண் டவையே. (கூகூ)

அயன்மனைச் சென்றோர் கணவரைப் பிழைத்தோ ரடிகளை யிகழ்ந்
துளோரணுகிற், றுயருறு மூகை யாக்குமோர் மன்றஞ் சேர்ந்தோர்முன் சுழலு
மோர் மன்றம், வியனிறம் பலவாத் தோன்றுமோர் மன்றம் விஞ்சைகள்
வழங்குமோர் மன்ற, மயல்புரி கின்ற பொழுதொடு திசையின் மயக்கறத்
தெளிக்குமோர் மன்றம். (௪௦௦)

நாகரூ ருய்க்கும் பிலத்ததோர் மன்ற நவமணி யுதவுமோர் மன்ற
மாகர்பே ரமிர்த மிருக்குமோர் மன்றம் வடிவினை மறைப்பதோர் மன்ற
மேகநின் றுறுது பொழியுமோர் மன்றம் வியன்பகல் கங்குலாக் கங்கு
லாகிய பகலா விருப்பதோர் மன்ற மையிரண் டொன்றுமன் றவையே. ()

ஈங்கிவை யன்றிச் சிலைகளுந் தருவு மிடங்களுங் கூவலு நதியும்
பாங்குறு குளனுந் தீர்த்தமும் பிலமும் பழனமுஞ் சோலையும் பிறவு
மாங்கவை யநந்த கோடியுண் டோரோன் றளவிலற் புதத்தன வவற்றைப்
பூங்கம லத்தோன் சுருக்கற விரித்துப் புகலினு முலப்புற வற்றே.(௪௦௨)

தோட்டலர் வனசத் திசைமுகன் முன்னஞ் சொற்றன னவனடி வணங்கிக்
கேட்டருள்சனகன்வியாதனுக்குரைப்பக்கேடில்சீர்வியாதனங்குணர்ந்து
மாட்டுறு சூதன் றனக்கியம் புதலு மற்றவன் முனிவரார்க் கிசைத்த
யாட்டினிலடங்காக்காஞ்சியின்பெருமைபகர்ந்திடத்தமியனுக்கெளிதோ.

வேறு.

சொற்படு மினைய காஞ்சித் தொன்னக ரதற்கு நாப்பண்
கற்புறு மிமைய வல்லி கருணையால் வைகி நோற்கும்
பொற்புறு காமக் கோட்டம் போலவே யதற்கோர் சாரி
லெற்படு குமர கோட்ட மென்றொரா லயமுண் டன்றே. (௪௦௫)

ஆவதோர் குமர கோட்ட மதனிடை யரன்கண் வந்து
தூவுடை யெஃக மொன்றாற் சூர்முத றொலையச் செற்றுத்
தேவர்வெஞ் சிறையை மாற்றிச் சேண்மக பதிக்கு நல்கி
மேவிய குமர மூர்த்தி வியத்தக வுறையு மாதோ. (௪௦௬)

மேவருங் கூடன் மேலை வெற்பினி லிலைவாய் தன்னி
லாவினன் குடியி னல்லே ரகந்தனிற் றணிகை யாதிப்
பூவுல குள்ள வெற்பிற் பொற்புறு மேனை வைப்பிற்
கோவில்கொண் டருளி வைகுங் குமரகோட் டத்து மேயோன். ()

வச்சிர மெடுத்த செம்மல் வைகிய துறக்கந் தன்னி
லச்சுதன் பதத்துக் கப்பா லானதன் பதத்தில் விண்ணோர்
மெச்சுறு கந்த வெற்பில் வீற்றிருந் தருளு மாபோற்
கச்சியிற் குமர கோட்டங் காதலித் தமருங் கந்தன். (கoஎ)

ஈண்டுள தரணி மூற்று மெல்லைதீர் வான வைப்பு
மாண்டகை மகவான் சீரு மம்புயன் முதலோர் வாழ்வு,
மாண்டிடல் பிறத்த லின்றி மன்னிய வீடும் போற்றி
வேண்டினர் வேண்டி யாங்கு வேலவன் புரிந்து மேவும். (கoஅ)

கொண்டலை யளக்கு நொச்சிக் குமரகோட் டத்துச் செவ்வேள்
கண்டிகை வடமுந் தூநீர்க் கரகமுங் கரத்தி லேந்திப்
பண்டையி லயனை மாற்றிப் படைத்தருள் வேடந் தாங்கி
யண்டர்க ளெவரும் போற்ற வருட்புரிந் தமர்ந்தா னன்றே. (கoகூ)

ஆயதோர் காஞ்சி மூது ரதனிடை யம்பு யத்தின்
மேயவன் றனது புந்தி விமலமாம் பொருட்டான் மேனாண்
மாயவன் கமட மாகி வழிபடு தலத்தின் மூக்க
ணாயகன் றனையர்ச் சித்து காமக ளுடனாங் குற்றான். (ககo)

உற்றிடு கின்ற நாளி லுலகினில் லறத்தை யாற்றி
நற்றவம் பலவும் போற்றி நண்ணிய முனிவ ரெல்லா
மற்றவ ணேகிக் கஞ்ச மலர்மிசை யிருந்த வையன்
பொற்றிரு வடியைத் தாழ்ந்து போற்றினர் புகல லுற்றார். (ககக)

அத்தகே ளிந்நாள் காறு மடியமில் லறத்தை யாற்றி
யித்தல நகர மெங்கு மிருந்தன மினிமே னெங்கள்
சித்தம தொருங்க நோற்றுச் செய்கட னியற்றி வைக
மெய்த்தவ வனம தொன்றை விளம்பியே விடுத்தி யென்றார். (ககஉ)

என்றலுந் தருப்பை யொன்றை யேழுல களித்தோன் வாங்கி
யொன்றொரு திகிரி யாக்கி யொய்யென வுருட்டிப் பாரி
லின்றிதன் பின்ன ராகி யெல்லிரு மேகி யீது
நின்றிடும் வனத்தி னூடே நிலைப்பட விருத்தி ரென்றான். (ககங)

திருப்பத மத்து வள்ளல் சேவடிக் கமலந் தாழா
விருப்பொடு விடைகொண் டேக விரைவினி லன்னோன் விட்ட
தருப்பையி னேமி சென்றோர் தனிவனத் திறுத்த லோடு
மிருப்பிட மெமக்கீ தென்னா விருந்தவ ரிருந்தா ரங்கண். (ககச)

தாமரை யண்ணல் உய்த்த தருப்பையி னேமி தன்னா
னாமம தொன்று பெற்ற நைமிசா ரணியம் வைகுங்

தூமுனி வரர்க ளெல்லாஞ் சொல்லருந் தவத்தை யாற்றி
மாமறை நெறியி னின்று மகமொன்று புரித லுற்றார். (ககரு)

அகனமர் புலனோர் நான்கு மூன்றமை பொருட்டா லாங்கோர்
மகவினை செய்து முற்றி வாலிதா முணர்ச்சி யெய்தி
யிகலறு முளத்த ராகி யிருந்தன ரிதனை நாடிச்
சுகனென வுணர்வு சான்ற சூதமா முனிவன் போந்தான். (ககசு)

முழுதுணர் சூதன் றன்னை முனிவரர் கண்டு நேர்போய்த்
தொழுதனர் பெரியோ யெம்பாற் றன்னலா லின்ன வைகல்
விழுமிது சிறந்த தென்று விபதகு முகமன் கூறித்
தழையொடு தருப்பை வேய்ந்த தமபெருஞ் சாலை யுய்த்தார். (ககஎ)

திருக்கிளர் பீட மொன்று திகழ்தர நடுவ ணிட்டுச்
சுருக்கமில் கேள்வி சான்ற சூதனை யிருத்தி யாங்கே
யருக்கிய முதல நல்கி யவனது பாங்க ராகப்
பொருக்கென யாரும் வைகி யிஃதொன்று புகல லுற்றார். (ககஅ)

முந்தொரு ஞான்று தன்னின் முளரியந் தேவன் சொல்லால்
வந்திவ ணிருந்தே மாக மற்றியாம் புரிந்த நோன்பு
தந்தது நின்னை யற்றாற் றவப்பயன் யாங்கள் பெற்றேஞ்
சிந்தையி னுவகை பூத்தேஞ் சிறந்ததிப் பிறவி யென்றார். (ககசு)

அன்னது சூதன் கேளா வாதியம் பரனை யேத்தி
மன்னிய வேள்வி யாற்றி வாலறி வதனை யெய்தித்
துன்னிய முனிவிர் காணுந் தொல்குழு வடைத லன்றோ
வென்னிக ராயி னோருக் கிம்மையிற் பெறும்பே றென்றான். (கஉ0)

அவ்வழி முனிவர் சொல்வா ரருமறை கண்ட வண்ணல்
செவ்விய மாணுக் கர்க்குட் சிறந்துளோய் திறற்சூ ராவி
வவ்விய நெடுவே லண்ணன் மாண்கதை தேர்வான் பன்னா
ளிவ்வொரு நசைகொண் டுள்ளே மியம்புதி யெமக்க தென்றார். (கஉக)

அம்மொழி சூதன் கேளா வழல்படு மெழுகே யென்னக்
கொம்மென வுருவ வுள்ளங் குதூகலித் தவச மாகி
மெய்ம்மயிர் பொடிப்பத் தூநீர் விழிததுணை யரும்ப வாசான்
பொய்ம்மையில் படிவ முன்னித் தொழுதிவை புகலலுற்றான். ()

மன்னவன் மதலை யாசான் மாமகன் றனது மைந்தன்
பன்னுசொற் கொள்வோ னீவோன் வழிபடு பண்பின் மிக்கோ
னென்னுமிங் கிவருக் கீவ தேனைநூ லுங்கள் போலச்
செந்நெறி யொழுகு வார்க்கே செப்புவன் புராண முற்றும். (கஉஙு)

தனைநிகர் பிறரின் றூய சண்முகற் கன்பு சான்ற
முனிவிர்கா ளுரைப்போர் கேட்போர் முத்திசேர் காந்தத்துண்மை
வினவினீ ரதனை யின்னே விளம்புவன் புலன்வே றின்றி
யினிதுகேண் மின்க ளென்று வெடுத்திவை யியம்பலுற்றான்.(கஉச)

## திருநகரப்படல முற்றிற்று.

ஆ. திருவிருத்தம் உஎ௦.

---

### வசனம்.

பெருமை மிகுந்த இந்நிலவுலக முழுவதும் தாமரைத் தடாகமாகவும் கெடாத சிறப்பினையுடைய தொண்டைநாடே நிலைபெற்ற தாமரைமலராகவும் விளங்கிச் சிறப்புற்ற காஞ்சிமா நகரமானது அத்தாமரை மலரில் வீற்றிருக்கிற பிரமதேவனை யொத்திருக்கும். பொலிவினையுடைய தாமரைமலரில் வாழும் பிரமனும், திருமாலும் தம்பக்கங்களிற் பொருந்திவாழ்கின்ற மற்றைத்தேவர்கள் வாழ்த்தொலிகூறித் துதிக்கும்படி சிறந்த அன்னமும் கருடனுமாகிய பறவைகளை யேறிச் செலுத்திக்கொண்டு அங்குவருங் காரணத்தால் அக்காஞ்சி நகரம் அவர்கள் வசிக்கின்ற அருமையாகிய பிரம்மலோகத்தையும், விஷ்ணுலோகத்தையும் ஒத்திருக்கும். இனிய இலக்கணத்தைத் தேர்ந்துணர்ந்த இந்திரன் முதலாகிய நிலைபெற்ற தேவர்களும் மற்றையாவரும் அங்குவந்து சூழ்ந்துவசிக்குஞ் செய்கையினால் அக்காஞ்சிமாநகரம் பொன்னுலகமென்றே சொல்லத்தகும்; மேலும், அந்நகரத்தில் கின்னரர், சித்தர் என்பவர்வந்து வசிக்குங் காரணத்தால் கின்னரலோகத்தையும், சித்தலோகத்தையும் ஒத்திருக்கும்; நாகவேந்தர்வந்து வாழ்தலால் நாகலோகத்தையும் ஒத்திருக்கும்; அஷ்டதிக்குப்பாலகர்கள்வந்து நெருங்குங்காரணத்தால் முற்காலத்தில் அத்திக்குப்பாலகர்கள் சிவபெருமானைப் பூசித்துப்பெற்ற பதவிகளையுமொத்திருக்கும். சந்திர சூரியர் முதலிய சுடர்களெல்லாம்வந்து வசிக்குங்காரணத்தினால் இந்தப் பிரமாண்டத்தையும் அது ஒத்திருந்தது. இப்படி பிரமன் முதலிய தேவர்கள் யாவரும்வந்து வசிக்குந்தன்மையால் அவரவர்கள்வாழும் பதங்களை ஒத்திருத்தல் போலக்கூறுதல் தகுதியோ? அக்காஞ்சிமா நகரமானது தனக்குத்தானே நிகராவதன்றி வேறு நகரங்களை அதற்கிணையாகச் சொல்லுதல்தகுதியன்று. வேதமுதலாகிய சிவபெருமானானவர் ஒப்பற்ற மாமரத்தின்கீழ ஏகாம்பரநாதர் என்னுந் திருப்பெயரோடு எழுந்தருளியிருக்கிற காஞ்சிமா நகரத்திற்கு, அவ்விறைவரால் பிரமன் முதலியோருக்குப் படைத்துக் கொடுக்கப்பட்டிருக்கிற சத்தியலோக முதலானவைகளே நிகராகும். மலை கடல்சூழ்ந்த உலகங்கள் என்பவைகளடங்கிய பல அண்டங்களும் சிற்றுருவங்கொண்டு வந்தாற்போல, சக்ரவாக முதலிய பறவைக்கூட்டங்கள் நெருங்கிய மதிற்புறத்துள்ள அகழியானது பெரும்புறக்கடலின் வெள்ளத்தை நிகர்த்திருந்தது. பிரமதேவன் பூபாரத்தைச் சுமக்கும்பொருட்டுப் பற்பல பொருள்களைவகுத்து, அதற்குமேல், அண்டகோளத்தைத் தாங்குதற்கு ஒருசுவர்த்தலத்தையும் முன்னமே அமைத்துவைத்தாற்போல நீண்டமதிற்பரப்பானது ஓங்கியுயர்ந்திருந்தது. மேலும் அந்த மதிலானது, சிவபிரான் திரி

புரதகனகாலத்தில் மேருமலையை வில்லாகவளைத்ததும் உலகமெல்லாம் நிலைகலங் கினகாலத்தில் பிரமதேவன் அந்த உலகமுழுவதும் தாங்கக்கடவாயென்று நிய மிக்க அப்படியே ஓங்கிநின்றாற்போலப் பாதாளம்வரையில் புகுந்துயர்ந்து நீண்டது. அம்மதிலரணானது மேகமண்டலத்திற்கும் வித்தியாதர ருலகத்திற்கும் தேவர்கள் வாழ்கின்ற சுவர்க்கலோகத்திற்கும் பிரமலோகத்திற்கும் நாகலோகத்திற்கும் பாதாளலோகத்திற்கும் போகும்பொருட்டு அமைக்கப்பட்டுள்ள பொன்மதிற் போன்றிருந்தது. மேலும் அம்மதிலானது நவதானியவண்ணமாகப் பொருந்திய நவரத்னக் குவைகளையும் சூரியனொளிபோன்று விளங்கும் பொன்னென்னும் பொருளோடு மற்றைப்பொருள்களையும் விளக்கிப் பொழியப்பெற்றதாய் முழுதும் நிரம்பப்பெற்றுப் பலவகைப்பொருள்களும் பொருந்தப்பெற்ற நிக்ஷேபத்தை ஒத்திருந்தது. சிறகில்லாத மலைவரிசைபோலச் செப்பமாகவுயர்ந்து வீதிகள்தோறும் விளங்குகிற மாளிகை வரிசைகளைச் சூழ்ந்த மதிலானது பெரும்புறக்கடலாற்சூழப்பட்ட சக்ரவாள கிரியையும் அந்தக்கிரிக் கிருப்பிடமாகிய அண்டங்களையும் ஒத்திருந்தது. அந்த மதிலின்மேலுள்ள யந்திரங்கள் பகைவர் வரவொட்டாமல் தடைசெய்யும்; அப்பகைவர் தமது சதுரங்கசேனைகளோடும் முறிந்தோடும்படி துறத்தும்; அவர்களுக்கெதிரே வாள்கொண்டு சுழற்றும்; எழுத்தண்டினால் கோபித்தடிக்கும்; அவர்களை மேலேயெடுக்கும்; பின்னும் நிலத்தில் மோதும், வீசியெறியும், வாய்திறந்துவிழுங்கும், வெளியிலிழுக்கும், கொல்லும், கல்மழை பொழியும், விற்போர்செய்யும், உருக்கின செம்பையும் ஈயத்தையும் நெய்யிற்றேய்த்துக்காய்ச்சிவீசும்; சக்கரப்படையை யெறியும்; வச்சிராயுதத்தை வீசிக்கொண்டுநிற்கும், குதிக்கும், பகைவரைக் கோபித்தெதிர்க்கும், சற்றுநேரம் அமைந்து தாழ்ந்திருக்கும், உலகங்களையளந்த திரிவிக்கிரமன்போலவுயர்ந்துவளரும், வேய்ங்குழலையூதும், முரசவாத்தியத்தை முழக்கும், ஊதுகொம்பு உடுக்கை முதலியவற்றை யொலிப்பிக்கும், மதிலின்மேலோடும், சந்திரசூரியர்களைத் தடுத்தல்போலப்பாயும், இன்னும் பலசெயல்களைச் செய்துகொண்டு பசாசங்கள் போலத்திரியும். இப்படிப்பட்ட அந்தயந்திரங்களினால் செய்யத்தக்க காரியங்கள் பலவற்றையும் வகுத்துச்சொல்லல் ஒருவராலுமுடியாது. இத்தன்மையவாகிய பொறிகள் ஆபரணங்கள்போல் அழகுசெய்யப்பெற்றுப் பொன்னாற்செய்யப்பட்ட மதிலின்மேல் கட்டப்பட்டுள்ள வெண்கொடிகள் ஆகாயத்திலசையாநின்ற தோற்றமானது எதுபோலுமெனின், பிரமதேவன் முற்காலத்தில் ஒரு அன்னவுருக்கொண்டு சுடர் வடிவாகிய சிவபிரானது திருமுடியைக்காணச்சென்றதுபோல இப்பொழுது கோபுரசிகரங்களாகிய சுடர்களைக்காணும்பொருட்டுப் பல அன்னவுருக்கொண்டு மேலே பறப்பதுபோன்றிருந்தது. இத்தன்மையவாகிய பலவகைக் காட்சிகளுடையப்பெற்ற அந்த மதிலின்மேல் அசையாநின்ற கொடிகளைப்பார்த்துச் சூரியனும் அக்கொடிகளின்கீழே தாழ்ந்து சென்றனன், அதனால் அவன் ஒரு குறையுமில்லாமல் நேரே சென்றனன். நன்னெறியிற் செல்லும்பெரியோருக்குத் தமது பணிவினால் ஒருகுற்றமுண்டாகுமோ? உண்டாகாது. அந்தமதிலின் நாற்றிசைகளிலும் பெரிய கோபுரங்க ளமையப்பெற்றிருப்பன எதுபோலுமெனின், சிவபெருமானது உச்சிமுகமொன்று நீங்கலாகமற்றைய நான்கு முகங்களும் இந்த நகரத்தினழகைக் காணவந்தன போன்றிருந்தன. சூரியனும் சந்திரனும் மற்றைக் கோள்களும் உதயாஸ்தமனங்களுக்கிடமாகிய உதயகிரி அஸ்தமனகிரிகளைப்போலக் கீழ்த்திசைக் கோபுரத்தையும் மேற்றிசைக் கோபுரத்தையும் கடக்கமாட்டாதவர்க

ளாகி அந்தக்கோபுரவாயில்வழியே நுழைந்துநுழைந்து வெளியேசென்றுதிரிவார்கள். தமது புன்னகையாலுண்டாகிய நெருப்பை முப்புரத்தின்மேற் செலுத்திய சிவபெருமானது ஆணையினால் சிறந்து விளங்குகிற இந்தக்காஞ்சிமா நகரத்தில், ஆகாயமளாவிய மதிலினிடத்து அந்த நகரத்தோடுண்டாயினவேயன்றி இடையிலேற்படுத்தப்பட்டன வல்லவென்று சொல்லும்படி, கோபுரங்களிலுள்ளகொடிகள் அவற்றின் தளிர்கள்போன்று விளங்கின. மாடமாளிகைகளும் மண்டபகோபுரங்களும் ஒவ்வொரு வீதிகளிலும் கோடா கோடியினும் அதிகமாயுள்ளன. ஆகையால், அவற்றைக்கணித்துச் சொல்லவல்லவர்யார்? அவற்றின்மேற் கட்டப்பட்டுள்ள கொடிகளின் தொகையும் அவ்வாறே கணிக்கப்படாதனவாயிருக்கும். பெரியமலைகள்போன்ற மாளிகைதோறும் கட்டப்பட்டுள்ள மகரதோரணங்கள் பலநிறக்கண்ணாடிகளில் பொருந்தி விளங்குதல் எதுபோலுமெனின், ராகு கேதுக்களிரண்டும் ஒருவடிவுகொண்டு ஆகாயத்தில் சந்திர சூரியர்களென்கிற இருசுடர்களின் புறத்தை மறைத்த தன்மையையொத்திருக்கும். பசும்பொன்னினாற் செய்யப்பட்ட பல அடுக்குகளையுடைய சுழற்றேர்கள் ஆகாயத்தில் தமது நுனிகள்பொருந்தும்படி பல தம்பங்களையடைந்து சுழன்று கொண்டிருத்தல் எதுபோலுமெனின், நேராகிய கோல்களினுச்சியிலே பம்பரத்தினுருவத்தைச்சுழற்ற, அது சுழன்றுகொண்டிருக்குந் தன்மையை நிகர்க்கும். பளிங்குக் கற்களினாற் செய்யப்பட்ட திண்ணைகளின்மேல் முத்துக்களும் மாணிக்கங்களும் பதிக்கப்பட்ட இடங்களின்மேல் நிறுத்திய பொற்பாலிகைகள் சேர்ந்திருத்தல் எதுபோலுமெனின், ஒருதடாகத்திற் பூத்த தாமரைமலர்ப்பொகுட்டை யொத்திருக்கும. சித்திரத்தோடு கூடியமரகத நிலையின்மேல் பொன்னிலையும் அதன்மேல் முத்துநிலையும் அதன்மேல் மாணிக்க நிலையும் விளங்குதலால், அவை மேகமண்டலமும் சூரியமண்டலமும் சந்திரமண்டலமும் அக்கினிமண்டலமும் ஒன்றின்மேலொன்றாக இருக்குந் தன்மையை அந்தப் புராதநநகரமானது காட்டிக்கொண்டிருககும். மன்மதன்போன்ற அழகுள்ள வாலிபர்களும் ரதிதேவிபோன்ற அழகுள்ள மாதர்களும் வசிக்கின்ற முத்துமாலிகை வரிசையின் பக்கத்தில், அழகிய மயிற்கூட்டத்துடன் தனித்துச் செல்லும் அன்னப்பறவையானது கருமையாகிய மேகங்களின் நடுவில் பூர்ணசந்திரன் நுழைந்து செல்லுந் தன்மையை யொத்திருக்கும். கொடிகளசையுங்காட்சி, சூரிய சந்திரர்கள் ஆகாயத்தில் உதித்து வருவதைப்பார்த்து உலகிலுள்ள பாம்புகளெல்லாம் ஒருங்குசேர்ந்து தண்டாகாரமாய்நிமிர்ந்து அந்நகரத்திலுள்ள மாளிகைகளுக்கும் மண்டபங்களுக்கும் அருகிற்சென்று அவர்களைப்பிடிக்கும்பொருட்டுத் தாம் கொண்ட கோபத்தினால தங்கள் பிளப்புள்ள நாவை நீட்டியசைக்குந் தன்மையை யொத்திருக்கும். இனிமையால் தேனைவென்ற சொற்களையுடைய மாதர்களோடு ஆடவர்கள் மூழ்குகின்றதடாகம்போல, பளிங்குக்கற்களால் விளங்குகிற இடத்தில் பிரகாசிக்கிற மாணிக்கக்கற்களமைத்தமேல் மாளிகைகள் விளங்குதல் எதுபோலுமெனின், அந்தரத்தில் நிற்கிறதெய்வவிமானத்தை யொத்திருக்கும். தேவர்களும், அசுரர்களும் முனிவர்களும் சித்தர்களும் இயக்கர்களும் மற்றைத்தேவர்களும்தங்கள் தங்களுடைய நகரங்களினின்று நீங்கி இந்நகரத்தையடைந்து வாசஞ்செய்தற்குரிய வெவ்வேறிடங்கள் அதிகமாய் நிலைபெற்றிருக்கும். கையினிடத்தில் தொங்குகின்ற கமண்டலம் பக்கத்திலிருக்க, பிராணவாயுவையெழுப்பி, ரேசகபூரக கும்பகங்கள் செய்து விதிப்படியே நாசிநுனியில் பார்வையைச்செலுத்தி, ஏற்பதாகிய ஒருவகையாசனத்திலிருந்துகொண்டு, சிவபெருமான் திருவடிகளை இதயகமலத்திலிருத்திப்

பெரிதாகியதவத்தைச் செய்வோர்களுடைய பன்ன சாலைகளும் அந்நகரத்தில் பற்
பலவுண்டு. முற்காலத்தில்நாம் திருமுடியைத்தேடும்படி நெருப்புமலையாய் நிமிர்ந்து
நின்ற சிவபெருமான் மறுபடியும் இவ்வுருவத்தோடுஉயர்ந்து நிற்கின்றனரோவெ
ன்று பிரமதேவனும் நினைக்கும்படி நான்கு வேதங்களையு முணர்ந்தவேதியர் செய்
யும் யாகப்புகை அண்டமுகட்டையுங் கடந்து சென்றது. மெய்யுணர்வினால்
நல்லொழுக்கத்தை உயிர்போலக் காப்பாற்றுகிறவர்களும் மேன்முறைக்கண்ணே நிற்
பவர்களும் ஐம்புலன்களை வென்றவர்களும் ஆகியவேதியர் தெருக்கள் பலவாக அந்
நகரத்தில் நெருங்கியிருக்கும். பலவகையாகிய ஆயுதங்களையுடைய பலவான்களும்
அநேக யுத்தங்களில் வெற்றியடைந்தவர்களும் சதுர்வேத பாராயணர்களுமாகிய
அரசர்களுடைய தெருக்களநேகம் தெய்வலோகத்துக்குச் சமானமாயிருக்கும். ஆப
ரணக்குவியல்களும் நவமணிக்குவியல்களும் பொற்குவியல்களும் பிறபொருள்க
ளும் அளவில்லனவாய் நிறைந்திருக்கிற வைசிய கடைவீதிகள் கற்பகத்தருவை
நிகர்த்து எல்லாப்பொருள்களையும் தருவனவாய் விளங்கிக்கொண்டிருக்கும். கங்
காகுலத்தில் பிறந்தவர்களும் பூமிதேவிக்குப் புதல்வர்களும் திருமாலுக்குச் சமான
மாகிய செல்வப்பெருக்குள்ளவர்களும் பிரமதேவனது பாதத்திற்பிறந்தவர்களுமா
கிய வேளாளருடைய வீதிகளும் பலவாகநிறைந்திருக்கும். தமது ஐம்பொறிகளா
லும் காண்டல்முதலிய செயல்களைச் சிவபெருமானிடத்தே செய்கிற தொண்டர்
திருக்கூட்டங்களும் கண்களில் ஆநந்தக்கண்ணீர்சிந்தக் கைகூப்பிவணங்குகிற
தேவர்கூட்டங்களும் ஆலயங்கள்தோறும் நிறைந்திருக்கும். பிரமன் முதலிய
தேவர்கள் எக்காலத்தும் இந்நகரத்தில் வந்து சஞ்சரித்தலால், அவர்களுடைய வா
கனங்களாகிய அன்னமுதலியவற்றின் அடிச்சுவடுகள் இந்நகரத்தின் தெருக்கள்
தோறும் நீங்காதிருக்கும். குதிரைகள் கனைக்கின்ற வோசையும் யானைகள் பிளிறு
கின்றவோசையும் தேர்களினோசையும் காலாட்களினோசையும் தேவதுந்துபியோ
சையும் அத்தெருக்களில் இடையறாமலிருக்கும். அந்நகரத்திற் செய்யப்படும் நடன
மெல்லாம் சிவபெருமானுடைய நடனமே. பாடும்பாடல்களெல்லாம் அவன்விடய
மாகிய பாடல்களே. கேட்பனவெல்லாம் அவனது பெருமைவாய்ந்த புண்ணிய
சரிதங்களே. கூட்டங்களெல்லாம் அவனது திருத்தொண்டு செய்வோருடைய
கூட்டங்களே. அந்நகரத்தில் பால் தயிர் நெய் முதலியவை கிணறுகளில் நிறைக்கப்
பட்டிருக்கும். அங்குள்ள அன்னசத்திரங்களெல்லாம் உமாதேவியார் முப்பத்திர
ண்டு தருமங்களையுஞ் செய்துவருகிற அன்னசாலையையொத்திருக்கும். உயர்ந்த
மாளிகைகளின் வாயில்கள்தோறும் மேலேறியாடுகிற கழைக்கூத்தர்களைப்போல,
அவ்வவ்விடங்களில் நிலைபெற்றாடுகிற சித்திரப்பிரதிமைகளின் வரிசைகள் தேவர்க
ளும் உற்றுப்பார்த்து விரும்பத்தக்கனவாயிருக்கும். அந்நகரத்திலுள்ள இளஞ்சிறு
வர்கள் ஊர்ந்துவிளையாடுகிற பலவகையாய் அலங்கரிக்கப்பட்ட சிறுதேர்கள் பல
சூரியர்கள் செலுத்திய தேர்களையொத்திருக்கும். அந்நகரத்திலுள்ள பொதுவிடங்
கள்தோறும் தமிழ் முதலிய பாஷைகளில் வல்லபுலவர்களும் கொடையாளரும்
நெருங்கியிருப்பார்கள். மாடங்களின்மேல் சஞ்சரிக்கிற மாதருடைய கூந்தலைப்
புலர்த்துகின்ற அகிற்புகையும் மேகங்களும் வேறுபாடு தோன்றாமற் கலந்திருக்
கும். நாட்டியப்பெண்கள்செய்யும் நடனவோசையும் பாடலினோசையும் தேவர்க
ளுடைய செவிகளுக்கு இனிமையைத் தருவனவாயிருக்கும். அரம்பைப்பெண்கள்
இந்நகரத்திளைஞரை விரும்பலும் தேவர்கள் இந்நகரத்துக் கணிகைமாதரைவிரும்ப
லும் நோக்கினால் இது மன்மதனுடைய ராஜதானியென்று சொல்லலாம். யானைக

ளின் மதநீர்ப்பெருக்கும் இடைச்சேரியினின்றும் வழிந்துவருகிற பாற்பெருக்கும் கலந்து தெருக்கடோறும் ஆறுபோலோடும். ஆடவரும் மாதரும் அணிந்து களைந்த ஆடையாபரணமுதலியவையே திருமகளுக்குச் செல்வமாகுமென்றால் இக்காஞ்சி மாநகரத்தின் வளத்தையெடுத்துச்சொல்ல யாவரால் முடியும். முரசமுதலியவாத்தியங்கள்முழங்க மணஞ்செய்யுமோசையே அந்நகரத்தில் நீங்காதிருக்கும். தேவர்களாலும் நாகலோகத்தாராலும் அந்நகரானது விரும்பப்படும் பெருமையுடையதாயிருக்கும். பகை நோய்முதலிய கெடுதிகள் அவ்விடத்திலில்லாமையால் இந்நகரத்தை முத்தியுலகென்றே சொல்லலாம். பொன்னே மரமாகவும் கிளைகளாகவும், பவளமே இலையும் தளிருமாகவும் நீலமணிகளே மலர்களாகவும் தோன்றி விளங்குகிற காஞ்சிமரமானது ஐந்துவிஷ்ணுக்கள் கண்டு அவர்களால் அமைக்கப்பட்ட தடாகத்தின் பக்கத்தில் தனதுநிழல் நிலைபெயராதிருக்குங் காரணத்தால் இதனைக்காஞ்சிமா நகரமென்று உலகத்தார் கூறுவார்கள்.

இதுபோன்ற பலகாரணங்களால் அந்நகரத்துக்குப் பிரளயசித்து, சிவபுரம், விண்டுபுரம், திரிமூர்த்திவாசம், பிரமபுரம், தபோமயம், சகலசித்தி, கன்னிகாப்பு, துண்டீரபுரம், தண்டகபுரம் எனப்பலபெயர்கள் அமைந்து வழங்குகின்றன. அயோத்தியை முதலிய சப்தநகரங்களுள்ளே இந்நகரம் சிறந்ததென்று முற்காலத்தில் சிவபெருமான் உமாதேவிக்கருள்செய்ததனால் இதினுஞ் சிறந்த நகரம் இவ்வுலகத்திலுண்டு ? பாலியாறு வடதிசையில்செல்லவும், சேயாறு தென்றிசையிற் செல்லவும் நடுவே விளங்குகிற காஞ்சிமாநகரமானது கங்கை யமுனையென்னும் இரண்டு நதிகளுக்கும் நடுவேயுள்ள காசியினுஞ்சிறந்து விளங்காநிற்கும். அநேகமாயிரந்தீவினைகளைச் செய்தவர்களும் ஒரு நல்வினையைச்செய்தால் அவர்கள் பாவமொழிந்து சிறந்த பதவிகளையடைவதுகண்டு தேவர் முதலியோர் வந்து தவஞ்செய்துகொண்டிருக்கும் அக்காஞ்சிமா நகரத்தின் பெருமையைச் சொல்ல வல்லவர் யாவர்? பிரமதேவன்படைத்த எல்லாவுலகங்களும் அழிந்தகாலத்தும் அழியாதிருக்கையால் இந்நகரம் சிவபெருமானால் படைக்கப்பட்டதென்றே சொல்லலாம். ஒலிகளெல்லாம் வேதவொலியாகவும், நீரெல்லாங் கங்கை நீராகவும், கற்களெல்லாம் சிவலிங்கங்களாகவும், அங்குவசிப்போரெல்லாம் தேவராகவும், மரங்களெல்லாம் கற்பகமரங்களாகவும், அநுபவிப்பதெல்லாம் இன்பமாகவும், சஞ்சரித்தல் பிரதக்ஷிணமாகவும், நினைப்பதெல்லாம் தியானமாகவும், விழுதலெல்லாம் சிவவணக்கமாகவும் கொள்ளப்படுவது வேறு எந்த நகரத்திற்குண்டு? சாக்கிய நாயனார் திருக்குறிப்புத்தொண்டநாயனார் முதலிய அடியார்கள் முத்திபெற்றதும் இந்நகரமே. உமாதேவியானவள் காசியை விட்டுவந்து முப்பத்திரண்டு தருமங்களையும் குறைவற நடத்துவதும் இந்நகரத்திலேயாகும். உமாதேவியானவள் இன்னமும் நோற்றுக்கொண்டிருக்கிற இந்நகரத்தில் ஒருகணமாயினும் தங்கினவர்கள் முத்தியடைதற்கொரு தடையுமில்லை. மேலும், மும்மூர்த்திகளும் இந்திரன் முதலானோருமிருந்து அரசாண்டது இந்நகரமேயாம். இந்நகரத்திலுள்ள சிவாலய விஷ்ணுவாலயங்கள்போல் வேறெந்த நகரத்திலுமிருக்கக்கண்டிலேம். இந்நகரத்தில் ஒருதூண்டாவிளக்கு, இரண்டிடம், மூன்று தெற்றி, நான்கு அரண், ஐந்து தருக்கள், ஆறு பறவைகள், ஏழு நதிகள், எட்டுப் பொதுக்கள், ஒன்பது பொய்கைகள் பத்துக் கற்கள், பதினொரு சபைகள் இவையாவும் விளங்கிக்கொண்டிருக்கும். இவற்றின் விரிவைவிளக்குவோம், காமக்கோட்டத்தில் இறைவி

யெழுந்தருளியிருக்கும் பிலத்திற்கருகிலிருப்பதொரு தூண்டாவிளக்கு. இறவாத்
தானம் பிறவாத்தானம் என இறைவனிருக்குமிடமிரண்டு. உணவுதருந்தெற்றி,
படைக்குந்தெற்றி, மூகர்க்குச்சொற்பயிற்றுந்தெற்றி எனத்தெற்றிகள் மூன்று.
வடக்கில்வேங்கடம், தெற்கில் பெண்ணையாறு, மேற்கில் பவளமலை, கிழக்கில்
கடல் இவையே நான்கரண்கள். வேதவுருவாய்த் தழைத்தோங்கியமா, மலர்பிஞ்
சுகாய்கள் காட்டாமலே பழங்களைத்தந்து அவற்றை யுண்பார்க்கு அஷ்டமா சித்
திகளையுந் தருகின்றபுளி, மணமுள்ள பலவகை மலர்களைப் பூத்துத்தழைத்த இலு
ப்பை, ஆகாயதையே நோக்கும்அத்தி, தனது நிழல்புறத்தேசெல்லாமல் நிற்கின்ற
காஞ்சி இவையே ஐந்துதருக்கள். அமுதருண்டியைததருகிற சாதகம், நவமணி
களைத்தருகிற அன்னம், நூல்களை வடித்துரைத்துக் கொம்பில்வாழுங்கிள்ளை,
இனிவருங் காரியத்தைச்சொலலுகிற ஆந்தை, குறையுறிற்கூவாக்கோழி, உலகத்
துப்பாவமொழிக்குஞ் சக்கரவாகம் இவைகளே ஆறுபறவைகள். கம்பை, பம்பை,
மஞ்சணீர், பிச்சி, கலிச்சி, மண்ணி, வெஃகா என நதிகளேழு. நீாவேட்டோர்க்
குதவித்திரிகின்ற காவலையுடையபொது, குறுமுயல்சென்று கரியைத் தொடரும்
பொது, எழிசைப்பயனை விளக்கும்பொது, விஷ்ணுமூர்த்தி கணவளரும்பொது,
ஒருபுற்றில் மூழவோசையிடையருதொலிக்கும்பொது, திசை மயக்கங்காட்டும்
பொது, இறைவி தவஞ்செய்யும்பொது இவையே எட்டுப்பொதுக்கள். பிணிநீக்
கும்பொய்கை, மநுவந்தரம் பிரமகற்பம் ஆகிய இவற்றைதெரிவிக்கும்பொய்
கை, முக்கால முணர்த்தும் பொய்கை, இறைவனடிகாட்டும் பொய்கை, வேண்டி
யவற்றைத்தருமபொய்கை, மெய்யுணாவு தருமபொயகை, பொன்னிறந்தரும்
பொய்கை, திருமகள்விலாசமளிக்கும பொய்கை, வசிகரம்தரும பொய்கை எனப்
பொய்கைகள் ஒன்பது. விடமொழிக்குங் கல், பிணியொழிக்குங்கல், அடுத்தவரைத்
தேவராக்குங்கல், வெட்டப்பட்டுவிழுந்த வுடற்றுண்டுகளிரண்டையும பொருந்தச்
செய்யுங கல், வேந்தர்க்கரசாட்சி தருங்கல், புதையலுணர்த்துங்கல், வினையொழிக்
குங் கல், வழக்கறுக்குங்கல், படைக்கஞ்சாது நிறுத்துங்கல, இறந்தாரை யெழுப்புங
கல் எனக்கற்கள் பத்து. பிறன்மனை நயந்தாரை மூகராக்குஞ்சபை, கணவனைவஞ்
சித்த மனையாளை மூகையாக்குஞ்சபை, ஆசிரியனையவமதித்தாரை மூகராக்குஞ்
சபை, திருடர்முன்னே சுழலாநிற்குஞ்சபை, பலநிறங்கள் தோன்றுவிக்குஞ்சபை,
விஞ்சைகள் வழங்குஞ்சபை, திசைமயக்கறுக்குஞ்சபை நாகர்நாட்டிற் செலுத்
துஞ்சபை. நவமணிகளையுதவுஞ்சபை, அமிர்தமிருக்குஞ்சபை, உருமறைக்குஞ்
சபை, மேகமிடையறாது மழைபொழியுஞ்சபை, இரவைபகலாக்குஞ்சபை, பக
லையிரவாக்குஞ்சபை எனச்சபைகள் பதினொன்று. இவைபோன்ற அற்புதங்கள்
இன்னுமநேகம் அந்நகரத்திலுண்டு. அவற்றையெடுத்துப் புகழ்தல் பிரம
தேவனுக்குங் கூடாது. முற்காலததில் பிரமதேவன் இந்நகரச்சிறப்பை சநகனுக
குச் சொல்ல, அவன் வியாசமுனிக்குச்சொல்ல, அவன் சூதமுனிக்குச் சொல்ல,
அவன் நைமிசாரணியத்தில் சவுநகன்முதலிய முனிவர்களுக்குச் சொன்னதை
யான்சொல்லவல்லேனோ. கருணைவடிவையுடைய இறைவியெழுந்தருளித் தவ
ஞ்செய்யுங் காமகோட்டம்போல அதற்கருகே குமரகோட்டம் என்றொருதல
மும் அந்நகரத்துண்டு. இந்தக்குமரகோட்டத்தில் பரமசிவனது நெற்றிக்
கண்ணிலுதித்து, வேற்படையேந்திச் சூரபன்மன் முதலியோரைச் சங்கரித்
துத் தேவர்சிறைமீட்டு இந்திரனை விண்ணாட்டிற் குடியேற்றினவனாகிய முருகக்
கடவுள் எழுந்தருளியிருப்பான். இக்கடவுள் மதுரையின் மேற்றிசையிலுள்ள திருப்

பரங்குன்றமுதலிய ஆறு திருத்தலங்களிலும் அமர்ந்திருப்பான். இந்திரலோகத்தி லும், கந்தகிரியிலும், இந்நகரத்திலும் எழுந்தருளியிருப்பான், அன்றியும், குமர கோட்டத்தில் கண்டிகை, செபமாலை, கமண்டலமுதலியவற்றையேந்தி, முற் காலத்தில் பிரமனைமாற்றிப் படைப்புத்தொழிற் கடவுளாய் நின்றதுபோல வேடங் கொண்டு தேவர்கள் வந்துவணங்கும்படி யெழுந்தருளியிருப்பான். முற்காலத்தில் பிரமன் தன்மனம் தூய்மையடையும்பொருட்டு நாமகளோடு இந்நகரத்தில் வசிக்கும்போது, இல்லறநெறியில் வழுவாத முனிவரெல்லாரும்வந்து, பிரமனை வணங்கி இறைவனே! யாங்கள் இதுவரையில் இல்லறத்தில்வழுவாது நின்றோம், இனித்துறவறத்தையடைந்து தவஞ்செய்ய விரும்பினோம், தவஞ்செய்தற்குரிய நிர்மலமாகிய இடமொன்று எமக்குக்கிருபை செய்யக்கடவீரென்று பிரார்த்திக்க, பிரமன் ஒருதருப்பையையெடுத்து அதையொரு சக்கரவுருவாய்ச் செய்துருட்டி விட்டு, இந்தச்சக்கரம் எந்த இடத்திற்போய்நிற்கின்றதோ அதுவே உங்கள் தவத் துக்குரிய இடமென்று நியமிக்க, அவர்களும் அப்படியே அதனைத் தொடர்ந்து போய்அதுநின்றதனால் நைமிசமெனப் பெயர் பெற்ற அரணியத்தில் (நைமிசாரணி யத்தில்) தங்கியிருந்தார்கள். இருக்கும்போது ஒருவேள்வி செய்துமுடித்து மனத் தூய்மையுடையவராயமுனிவர்களிருக்குமிடமாகிய அந்த நைமிசாரணியத்திற்குச் சூதமுனிவர் எழுந்தருளலும், அவரை அம்முனிவர்கள் செய்யவேண்டிய வுபசாரங் களெல்லாம்செய்து, இறைவனே! பிரமதேவனது கட்டளையால் யாங்கள் இங்கு வசிக்கும்படியான பாக்கியம்பெற்றோம், எமது தவப்பயன்போன்ற தேவரீரைத் தரிசிக்கவும் பெற்றோம், ஆதலால் எமது பிறவிப்பயனடைந்தோம் என்று கூற, சூதமுனிவர் அவர்களைநோக்கி, முனிபுங்கவர்களே! உங்களை நான் தரிசிக்கப்பெற் றது என் தவப்பயனன்றோ வென்றுபசரித்துக் கூறுதலும், அம்முனிவர்கள் மன மகிழ்ந்து, சூதனைநோக்கி, வியாசமுனிவருடைய மாணாக்கருட்சிறந்த பெருந்தவ னே, யாம் சண்முகப்பெருமான் கதையைக்கேட்க மிகவும் விருப்பங்கொண்டி ருக்கின்றோம் அதனையெங்களுக்கு அநுக்கிரகிக்கவேண்டுமென வேண்டுதலும், அவ் வாறே சூதமுனிவர் அவர்களுக்குச் சொல்லத்தொடங்கினார்.

## பாயிரப்படலம்.

முந்தொரு காலத்தின் மூவுலகந் தன்னில்
வந்திடு முயிர்செய்த வல்வினை யதனாலே
யந்தமின் மறையெல்லா மடிதலை தடுமாறிச்
சிந்திட முனிவோருந் தேவரு மருளுற்றார். (௧)

நெற்றியில் விழிகொண்ட நிமலன தருளாலே
யற்றமின் மறையெல்லா மாதியின் வரலாலே
மற்றத னியல்பெல்லா மயலற வேறாடித்
தெற்றென வெவராலுஞ் செப்புவ தரிதாமல். (௨)

ஆனதொர் பொழுதின்க ணமரரு முனிவோரு
மாநில மிசைவரு மாக்களு மின்றியுள்ள

ஞானம திலராகி நவின்மறை நெறிமாற்றித்
தீநெறி பலவாற்றிப் பனுவல்கள் சிலசெய்தார். (௩)

அவனியி லறமெல்லா மருவினை யெனநீக்கிப்
பவநெறி யறமென்றே பற்பல ருஞ்செய்யப்
புவனம தண்டோறும் போதனு மதுகாணுச்
சிவனரு ளாலன்றித் தீர்கில திதுவென்றார். (௪)

வேறு.

இன்ன பான்மையை யெண்ணி யிருவரும்
பொன்னி னோடு புறந்திடு மன்னனுந்
துன்னு தேவருஞ் சுற்றினர் வந்திடக்
கன்னி பாகன் கயிலையி லேகினர். (௫)

அந்தில் செம்பொ னணிமணிக் கோயிலின்
முந்து கோபுர முற்கடை யிற்புகா
நந்தி தேவரை நண்பொடு கண்டுநீ
ரெந்தை யார்க்கெம் வரவிசைப் பீரென்றார். (௬)

தேவ தேவன் திருமுன்ன ரேகியே
காவ னந்திக் கடவுள் பணிந்தெழீஇப்
பூவை வண்ணனும் போதனும் புங்கவ
ரேவ ருஞ்செறிந் தெய்தின ரீண்டென்றான். (௭)

என்ற காலையின் யாரையு மிவ்விடைக்
கொன்றை சூடி கொணர்கெனச் செப்பலு
நன்ற தேயென நந்தி வணங்கியே
சென்று மான்முதற் றேவரை யெய்தினன். (௮)

செம்மை போகிய சிந்தை யரைக்கெழீஇ
யெம்மை யாளுடை யானரு ளெய்தின
னும்மை யங்கு வரவன் றுனினி
வம்மி னீரென வல்லையிற் கூவினன். (௯)

விளித்த காலை விழிவழிப் போதநீர்
துளிக்க நின்று தொழுது கவலொரீஇக்
களிக்கு நெஞ்சினர் கண்ணுத லெந்தைமுன்
னளித தியாலென் றவனுட னேகினர். (௧0)

புடைக் டந்திடு பூதர்கள் போற்றுமத்
தடைக டந்து தடப்பரும் வேனிலான்
படைக டந்தவர் பாற்படு மெண்ணிலாக்
கடைக டந்துபி னண்ணலைக் கண்டனர். (௧௧)

முன்ன ரெய்தித் தொழுது முறைமுறை
சென்னி தாழ விறைஞ்சினர் சேணிடைத்
துன்னு மாதரந் தாண்டவந் தண்மினு
ருன்னு மன்பி னுததியி னாழ்ந்துளார். (கஉ)

ஈர்க்கும் பாசத் திருவினை யின்றுடே
தீர்க்கின் றுமிவ ணென்னுஞ் செருக்கினுற்
றார்க்கின் றூர்மலர் சோதிபொற் றுண்மிசைப்
போர்க்கின் றூர்மெய்ப் பொடிப்பெனும் போர்வையே. (கரு)

நேய முந்த நெடும்பக னீங்கிய
தாயை நிர்ந்திடு கன்றின் றகைமையாய்த
தூய வந்தனை யோடு தொழுமவர்
வாயின் வந்தன வந்தன போற்றினர். (கச)

அண்ண லீசன் வடிவை யகந்தனி
லெண்ணி னெல்லையி லின்பம் பயக்குமாற்
கண்ணி னேர்வரு காட்சிய ராயிடி
னெண்ணு மோவவர் தஞ்செய லோதலே. (கரு)

மேலை வானவர் வேந்தொடு மெம்பிரான்
சீல மேய திருமுன்பு மேவினர்
மாலு நான்முகத தண்ணலும் வந்திரு
பாலு மாகிப பரவின ரென்பவே. (கசு)

வேறு.

அம்புயா சனமுடை யண்ண லாழியா
னும்பரோ டிததிற முற்றுப் போற்றுழிச
செம்பொனேர் முடிமிசைத திங்கள் சேர்த்திய
வெம்பிரா னருள்புரிந் தினைய கூறுவான். (கஎ)

ஒன்றுரு குறைகளு முறுத பான்மையா
னன்றுநும் மரசிய னடந்த வோவெனக்
குன்றவில் லுடையவோர் குழகன் செபபலு
மின்றமா றெழுதிலவ நெறியிற் கூறுவான். (கஅ)

ஆதியி லயன்படைப பல்ல தென்னருண்
மேதிய னடுதொழி லேலினை விண்ணவ
ரேதமில் செயன்முறை யாவுங் கண்ணுத
னாதின் னருளினு னடந்த னநம்பரா. (கக)

கருமணி மிடறுடைக் கடவு ளின்னுமீ
யருளுவ தொன்றுள ததனைக் கூறுவ

னிருசில மேலவர் யாரு நின்றனைப்
பரமென வுணர்கிலர் மாயைப பான்மையால். (உ0)

நின்றன துரிமையை நிகழ்த்தி மேன்மையா
வென்றனை யயன்றனை யெண்ணு வார்சில
ரன்றியு நின்னுட னநேகர் தம்மையு
மொன்றென வேகினோ் துரைக்கின் றார்சிலர். (உக)

காலமுங் கருமமுங் கடந்த தோர்பொருண்
மூலமுண் டோவென மொழிகின் றார்சிலர்
மேலுமுண் டோசில விளம்ப விஞ்சையின்
பாலுறு முணாச்சியே பரமென் பார்சிலர். (உஉ)

ஆற்றுறு புனல்படிந் தழுக்கு நீக்கலார்
சேற்றிடை வீழ்ந்தென மறைகள செபபிய
நீற்றொடு கண்டிகை நீக்கி வன்மையால்
வீற்றொரு குறிகொடு மேவு வாாசிலர். (உங)

காமமோ டுவகையுங் களிபபு நல்கலால்
வாமமே பொருளென மதிக்கின் றாசிலர்
தோமிலா மூவகைத தொழிலும,வேளவியு
மேமமார் பொருளென வியமபு வார்சிலர். (உச)

உரையிசை யாதியா மொலிகள் யாவையும்
பிரமம தேயெனப பேசு வாாசில
ரரிதுசெய் நோன்பினு லடைந்த சித்திகள்
பொருளபிறி திலையெனப புகல்கின றாசிலர். (உரு)

பெருமைகொள் குலந்தொறும் பிறந்து செய்திடும்
விரதமுஞ் சீலமும வினைகண் மாற்றிட
வருகலும் பிறவுமா யஙகம் விடடுயிர்
பரவுதல் வீடெனப் பகரு வாாசிலர். (உசா)

அறிந்தறிந் துயிர்தொறு மதுவ தாகியே
பிறந்திறந் துணாவெலாம பெற்று நோன்பொடு
துறந்துகொன் றிடடன துய்த்தக் கந்தமற்
றிறந்திடன் முத்தியா மென்கின் றார்சிலர். (உஎ)

நன்னல யாதனை நண்ணு மின்பமே
யுன்னரு முத்தியென் றுட்கொள் வார்சில
ரின்னன துறைதொறு மெய்தி யாவருந்
துன்னரும் பிறவியுட் டுன்ப நீங்கலார். (உஅ)

இறந்தன வரம்புல தெவரும் வேதநூன்
மறந்தனர் பவநெறி மல்கி நாடொறுஞ்
சிறந்தன வவையுயிர் செய்த தொல்வினை
யறிந்தரு ளையநீ யமைத்த வாயினும். (உகூ)

அங்கவர் போதமுற் றுசொரீஇ மனச்
சங்கையு மகன்றுநின் சரண மேயுறப்
புங்கவ சிறிதருள் புரிய வேண்டுமா
லெங்கடம் பொருட்டென விறைவன் கூறுவான். (௩0)

இனியொரு திறமதற் கிசைத்து மாருயி
ரனையவும் புரப்பவ னாத லாலவர்
வினையறு நெறிமையால் வேண்டு கிற்றிநின்
மனனுறு மெண்ணினை மறுத்தி மாசிலாய். (௩க)

காதலி னருண்முன் கலியின் பண்மையிற்
கோதறு மோர்கலை கொண்டு நேமிசூழ்
மேதினி யதனிடை வியாத னென்றிடு
போதக முனியெனப் போந்து வைகுதி. (௩உ)

போந்தவ ணிருந்தபின் புகரி லாமறை
யாய்ந்திடின் வந்திடு மவற்றை நால்வகை
வாய்ந்திட நல்கியே மரபி னோர்க்கெலா
மீந்தனை யவரகத் திருளை நீத்தியால். (௩௩)

அன்னதோர் மறையினை யறிந்து மையமா
வுன்னிய கிலையின ருள்ளந் தேறவு
மன்னவை ரல்லவர் மரபிற் றேரவு
மின்னமோர் மறையுள திதுவுங் கேண்மதி. (௩௪)

ஏற்றம தாகிய மறைக்கும் யாமுனஞ்
சாற்றிய வாகமந் தனக்கு மாங்கது
வேற்றுற வருவது மன்று மேன்மையா
லாற்றவு நமதிய லறையு நீரதே. (௩௫)

என்பெய ரதற்கெனி லினிது தேர்ந்துளோ
ரன்பம தகற்றிடத் தொல்பு ராணமா
மொன்பதிற் றிருவகை யுண்ட வற்றினை
யன்புடை நந்திமுன் னறியக் கூறினேம். (௩௬)

ஆதியி னந்தியா லளித்த தொன்மைசேர்
காதைகள் யாவையுங் கருணை யாலவன்

அ

கோதற வுணர்சனற் குமாரற் கீந்தன
னீதியொ டவனிடை நிலத்திற் கேட்டியால். (௩எ)

என்னலு நன்றென விசைந்து தாழ்ந்தெழீஇ
முன்னவன் விடைகொடு மூளரி யான்முதற்
றுன்னிய வானவர் தொகையொ டேகியே
தன்னுல கத்தின்மால் சார்தன் மேயினான். (௩அ)

சார்தலு மயன்றனைச் சதம கத்தனை
யார்தரு மமரரை யருளி னவ்வவர்
சேர்தரு புரந்தொறுஞ் செல்லற் கேவியே
கார்தரு மெய்யுடைக் கடவுள் வைகினான். (௩௯)

திருவொடு மருவியோன் செறிவுற் றெங்கணும்
பரவுறு மியல்பெறு பகவ னாதலாற்
றரணியி லருளினாற் றனது சத்தியி
லொருகலை தன்னுட னுதிக்க வுன்னியே. (௪0)

பங்கயத் தயன்வழிப் பராச ரப்பெயர்த்
துங்கநன் முனிபனித தூவ லெல்லையிற்
கங்கையி லியோசன கந்தி யோடுற
வங்கவர் தம்மிடை யவத ரித்தனன். (௪௧)

மற்றவன் வதரிகா வனத்தில் வைகியே
யற்றமில் வாதரா யணனெ னும்பெயர்
பெற்றன னாகியெம் பிரான்ற னணையாற்
கற்றிடா துணர்ந்தனன் கறையில் வேதமே. (௪௨)

மோனக முற்றிய முனிவர் மேலவன்
றூனுணர் மறையெனுந் தரங்க வேலையி
லானதோர் பொருளினை யறிஞர் பெற்றிடத
தூநெறி கொண்டநாற் றுறைசெய் தானரோ. (௪௩)

கரையறு வேதமாங் கடலை நான்கவாய்ப்
பிரிவிலை யாக்கியே நிறவு பெற்றியாற்
புரைதவிர் முனிவரன் புகழ்வி யாதனென்
றொருபெயர் பெற்றன னுலகம் போற்றவே. (௪௪)

விரவிய மறைதெரி வியாத னுமவன்
குரவனே யீர்ஞ்சனற் குமாரன் றன்னிடை
யிருவகை யொன்பதா மியல்பு ராணமு
மரபொடு கேட்டவை மனத்துட் கொண்டபின். (௪௫)

ஏத்திடு சுருதிக ளிசைக்கு மாண்பொருண்
மாத்திரப் படாவெனு மாசில் காட்சியர்
பார்த்துணர் பான்மையாற் பலவ கைப்படச்
சூத்திர மானவுஞ் சொற்று வைகினான். (௪௬)

மயலறு பயிலரே வைசம் பாயனர்
சயிமினி சுமந்துவாந் தவத்தா நால்வர்க்கும்
வியவிருக் காதியாம் வேத நான்கையு
முயர்வுறு தவத்தினன் முறையி னோதினான். (௪௭)

தோல்வரு மறைகளின் சூதகி ரதகையு
மேல்வரு சயிமினி முதல மேதையர்
நால்வரு முணரிய நவின்று நல்கினா
னல்வரு கடவுளை யனைய தன்மையான். (௪௮)

மெய்ம்முனி யனையரை விளித்து நீரினி
யிம்மறை யியல்பினோ ரெவாக்கு மீமென
வம்முறை நால்வரு மனைய வேதநூல்
செம்மையொ டளித்தனர் சிறந்து ளோர்க்கெலாம். (௪௯)

அன்னதோர் முனிவர னதற்குப பின்னரே
பன்னருந் தொகையினாற் பதினெண் பான்மையாய்
முன்னுறு புராணநூன் முழுது முற்றிய
வின்னரு ணிலைமையா லெனகரு நல்கினான். (௫0)

வேதம துணர்தரு வியாத மாமுனி
காதல னுமெனைக கருணை செய்திவை
யோதுதி யாவரு முணர வென்றனை
னாதலி னுலகினி லவறறைக் கூறினேன். (௫௧)

காமரு தண்டுழாய்க் கண்ண னாகிய
மாமுனி யருளினன் மறைகள் யாவையுந்
தோமறு புராணநூற றொகுதி யாவையு
நேமிகொ ளுலகெலா நிலவி யுற்றவே. (௫௨)

நம்பனுர்க் கொருபது நார ணற்குநான்
கம்புயத் தவற்கிரண் டலரி யங்கியா
மும்பர்வான் சுடர்களுக் கோரொன் றென்பரா
லிம்பரி லிசைக்குமப் புராணத் தெல்லையே. (௫௩)

வேறு.

எதிரில்சைவமே பவிடிய மார்க்கண்ட மிலிங்க
மதிகொள் காந்தநல் வராகமே வாமன மற்சம

புதிய கூர்மமே பிரமாண்ட மிவைசிவ புராணம்
பதுமி மேலவன் புராணமாம் பிரமமே பதுமம். (ருச)

கருது காருட நாரதம் விண்டுபா கவத
மரிக தைப்பெய ராக்கினே யம்மழற் கதையர்
மிரவி தன்கதை பிரமகை வர்த்தமா மிவைதாந்
தெரியு மொன்பதிற் றிருவகைப் புராணமாந் திறனே. (ருரு)

இத்தி றத்தவாம் புராணங்க ளொன்பதிற் றிரண்டி
னத்த னுக்குள புராணமீ ரைந்தினி லடல்வேற்
கைத்த லத்தவன் காந்தத்து ளன்னவன் கதையை
மெய்த்தொ கைப்பட வுரைப்பனென் றேமுனி விளம்பும். (ருசு)

வேறு.

பூமிசை யிருந்த புத்தேள் புரிந்திடு புதல்வர் தம்மு
ளேமுறு தக்க னீன்ற விருந்தனிக் குமரி யான
தீமையை யகற்ற வம்மை சிந்தைசெய் திமய மன்னன்
மாமக ளாகி நோற்று வைகினாள் வைகு நாளில். (ருஎ)

அவுணர்க ளோடு சூர னவனிமேற் றோன்றி நோற்றுச்
சிவன்வர மளிக்கப் பெற்றுத் தேவரா யவரையும் வென்று
புவித்னி லுவரி தன்னிற் புங்கவர் புனைவன் செய்த
தவலரு மகேந்தி ரத்தில் வைகினான் றானை சூழ. (ருஅ)

அனையதோர் காலை வெள்ளி யடுக்கலிற் சனக னாதி
முனிவரர் தமக்குத் தொல்லை மூவகைப் பதமுங் கூறி
யினியதோர் ஞான போத மிதுதிற மென்று மோனத்
தனிநிலை யதனைக் காட்டித் தற்பர னிருந்தா னன்றே. (ருகூ)

வீற்றிருந் தருளு மெல்லை வெய்யசூர் முதலா வுள்ளோ
ராற்றவுந் தீங்கு செய்தே யமரர்கள் சிலரைப் பற்றிப்
போற்றிடுஞ் சிறையி லுய்ப்பப் புரந்தரன் முதலா வுள்ளோர்
மாற்றருந் துயரின் மூழ்கி மறைந்தன ராகி வைகி. (சு0)

சங்கரன் மோனத் தன்மை சதுர்முகற் குரைப்ப வன்னான்
வெங்கணை வேளை யுய்ப்ப விழித்தவன் புரநீ றாக்கிப்
பங்கயன் முதலா வுள்ளோர் பலரும்வந் திரங்கிப் போற்ற
வங்குறை மோன நீங்கி யவர்க்கருள் செய்தா னையன். (சுக)

ஓரெழு முனிவர் தம்மை யோங்கலுக் கிறைவன் றன்பாற்
பேருண் முறையாற் றூண்டிப் பெருமணம் பேசு வித்துப்
பாரறு நோன்பின் மிக்க பரர்பரை யன்பு தேர்ந்து
காரணி கண்டத் தெந்தை கணங்களோ டிமயம் புக்கான்.

புடையக விமயந் தன்னிற் புவனங்கண் முழுது மீண்ட
வடபுவி தாழ்ந்து தென்பா லுயர்தலு மலயந் தன்னிற்
கடமுனி தன்னை யேவிக் கௌரியை மணந்து பின்ன
ரடன்மத வேளை நல்கி யநங்கனே யாகச் செய்தான். (௬௩)

மன்புனை கைலை தன்னின் மலைக ளோடு மீண்டு
முன்பென வமர்ந்து நாதன் முழுதுல குயிர்கட் கெல்லா
மின்பமும் புணர்ப்பு நல்கி யிமையவர் யாரும் வேண்டத்
தன்பெரு நுதற்கட் டீயாற் சரவண பவனைத் தந்தான். (௬௪)

அந்தமில் விளையாட் டுள்ள வறுமுகக் கடவு டன்னைத்
தந்திடு மெல்லை யன்னோன் றுணையர் தலைவ ராக
முந்திய விறல்சேர் மொய்ம்பன் முதலிய விலக்கத் தொன்பா
னந்தின் கணத்தி னோரை நங்கைபா லுதிப்பச் செய்தான். (௬௫)

அண்ணலங் குமரப் புத்தே ளலகிலா வாடல் செய்து
மண்ணுறு கடலும் வெற்பும் வானமுந் திரிபு செய்து
துண்ணெனக் குழவி யேபோற் றோன்றிட வதனை நோக்கி
விண்ணவர் யாருஞ் சூழ்ந்து வெஞ்சமர் புரிந்து நின்றார். (௬௬)

ஆரமர் செய்து ளாரை யட்டிட னுயிரு நல்கிப்
பேருரு நிலைமை காட்டிப் பெறலருங் காட்சி நல்கி
நாரதன் மகத்திற் றோன்றி நடந்ததோர் செச்சை தன்னை
யூர்திய தாகக் கொண்டே யூர்ந்தன னொப்பி லாதான். (௬௭)

மறைமுதற் குடிலை தன்னின் மாண்பொருண் முறைக டேர்வி
வெறிகமழ் கமலப் புத்தேள் விடைகொடான் மயங்கக் கண்டு
சிறையிடை யவனை வைத்துச் செகமெலா மளித்துத் தாதை
குறையிரந் திடவே விட்டுக் குறுமுனிக் கதனை யீந்தான். (௬௮)

ஆவதோர் காலை யீச னறுமுகப் பரனை நோக்கி
யேவரு முடிக்க வொண்ணு திருந்தசூர் முதலோர் தம்பால்
மேவினை பொருது வென்று விரிஞ்சனே முதலா வுள்ள
தேவர்த மின்னல் நீக்கிச் செல்லுதி குமர வென்றான். (௬௯)

விராவிய விலக்கத் தொன்பான் வீரரை வெய்ய பூத
ரிராயிர வெள்ளத் தோரை யிகற்படை மான்றே ரோடு
பராபர னுதவித் தூண்டப் பன்னிரு புயத்த னேகித்
தராதலம் புக்கு வெற்பைத் தாரக னோடு செற்றான். (௭0)

பூவினன் முதலா வுள்ள புங்கவர் வழிபட் டேத்தத்
தேவர்தங் கிரியின் வைகித் தென்றிசை நடந்து தாதை

மேவரு மிடங்கள் போற்றி மேதகு சேய்கு ளண்ணி
மூவிரு முகத்தன் முக்கண் முன்னவன் படையைப் பெற்றான்.()

பரனருள் படையைப் பெற்றுப் பராசரன் சிறார்வந் தேத்தத்
திருவருள் புரிந்து சென்று செந்திலின் மேவிச் சூரன்
வரமொடு திருவுஞ் சீரும் வாசவன் குறையும் வானோர்
குரவனை வினவி யன்னான் கூறவே குமரன் றேர்ந்தான். (எஉ)

அறத்தினை யுன்னி யைய னுடல்சேர் மொய்ம்பன் றன்னை
யுறத்தகு மரபிற் றாண்டி யொன்னலன் கருத்தை யோர்ந்து
மறத்தொடு கடலுள் வீர மகேந்திர மணுகி யேதன்
புறத்துள தானை யோராற் சூர்கிளை பொன்றச் செற்று. (எ௩)

சீயமா முகத்த னென்னுஞ் செருவலான் றனையு மட்டு
மாயையுந் திருவுஞ் சீரும் வரங்களும் பிறவு மாற்றி
யாயிர விருநா லண்டத் தரசனாஞ் சூரன் றன்னை
யேயெனு மளவில் வேலா லிருதுணி படுத்து நின்றான். (எச)

துணிபடு சூர னோர்பால் சூட்டுவா ரணமா யோர்பால்
பிணிமுக மாகி நிற்பப் பெருந்தகை யவற்றை யூர்தி
யணிபடு துவச மாக்கி யப்பகல் செந்தில் வந்து
மணிசொரி யருவி தூங்கும் வான்பரங் குன்றஞ் சேர்ந்தான்.(எரு)

தெய்வத யானை யென்னுஞ் சீர்கெழு மடந்தை தன்னை
யவ்விடை வதுவை யாற்றி யங்ஙனஞ் சிலநாள் வைகி
மெய்விய னுலகிற் சென்று விண்ணவர்க் கரச னாக்கி
யெவ்வமின் மருடஞ் சூட்டி யிந்திரன் றன்னை வைத்தான். ()

சில்பக லங்கண் மேவிச் சேனையோ டணங்குந் தானு
மல்லலங் கைலை யேகி மங்கைபங் குடைய வண்ணல்
மெல்லடி வணங்கிக் கந்த வெற்புறை நகரி னேகி
யெல்லையி லருளால் வைகித் தணிகையி லெந்தை வந்தான்.(எஎ)

சாரலி னோங்கு தெய்வத் தணிகைமால் வரையின் மீது
வீரம துடைய வேலோன் வீற்றிருந் திடலு மங்க
ணாரதன் வந்து தாழ்ந்து நவைதவி ரெயின மாதின்
சீரெழி னலத்தைக் கூற வவள்வயிற் சிந்தை வைத்தான். (எஅ)

வள்ளிமால் வரையிற் போந்து மானிடைப் பிறந்த தெய்வக்
கிள்ளையை யடைந்து போற்றிக் கேடில்பல் லுருவங் காட்டிக்
கள்ளமோ டொழுகிப்பன் னாட்கவர்ந்தனன் கொணர்ந்து பின்னர்த்
தெள்ளுசீர் வேடர் நல்கத் திருமணஞ் செய்து சேர்ந்தான்.(எகூ)

செருத்தணி வரையில் வந்து சிலபகல் வள்ளி தன்னே
டருத்தியின் மேவிப் பின்ன ரவளொடுங் கந்த வெற்பின்
விரைத்தனிக் கோயில் புக்கு வானமின் பிரிவு நீக்கிக்
கருத்துற விருவ ரோடுங் கலந்துவீற் றிருந்தான் கந்தன். (அo)

என்றிவை யனைத்துஞ் சூத னியம்பலு முனிவர் கேளாத்
துன்றிய மகிழ்வாற் சென்னி துளக்கியிங் கிதனைப் போல
வொன்றொரு கதையுங் கேளே முரைத்தனை சுருக்கி யாங்க
ணன்றித னகலங் கேட்க நனிபெருங் காதல் கொண்டேம். (அக)

என்னவே முனிவ ரானோர் யாவரு மெடுத்துக் கூற
மன்னிய வருள்சேர் சூதன் மற்றவ ரார்வ நோக்கி
யன்னவை சுருக்க மின்றி யறைந்தன னவ்வா றோர்ந்து
தொன்னெறி வழாதி யானும் வல்லவா தொகுத்துச் சொல்வேன்.

பாயிரப்படலமுற்றிற்று.

ஆக திருவிருத்தம் ருஉ.

---

வசனம்.

முன்னொருகாலத்தில் (ஆதிகற்பத்தில் துவாபரயுகத்தில்) உயிர்கள் செய்த தீவினையத்தால் வேதமுதலிய முதனூல்கள் தலைதடுமாறி கிற்பதை யறிந்த தேவர் முனிவர் முதலியோர் மதிமயங்கி, சிவபெருமானது திருவருளால் தோன்றின அவ் வேதங்களை யொழுங்குபடுத்துவதற்கு ஒருவராலும் முடியாது, யாம் என்செய்வோ மென்று திருமால்முதலிய பெரியதேவர்களிடஞ்சென்று முறையிட, அவர்கள் இது எம்மால் முடியுங்காரியமன்று, யாம் சிவபெருமானிடத்துச்சென்று இக்காரியத்தை முடிப்போமென்று திருமால் பிரமன் முதலியதேவரெல்லாரும் திருக்கைலையை யடைந்து இறைவரது திருக்கோயில்வாயிலில் காவலராகிய நந்திதேவரைவணங்கி, எம் வரவைச் சிவபெருமானுக்கு அறிவிக்கவேண்டுமென்று பிரார்த்திக்க, அவரும் அப்படியேயறிவிக்க, பெருமானும் திருமால் முதலியோரை நந்திதேவரைக்கொண் டே வரவழைத்து, அவர்கள் செய்ததோத்திரம் வணக்க முதலியவற்றை யங்கீகரி த்து, அவர்களைநோக்கி, உங்களுடைய அரசியல் செவ்வேநடந்து வருகின்றதோ வென்றுகேட்க, திருமால் முதலியோர், சிவபெருமானைநோக்கி, இறைவனே! தேவ ரீரது கருணையால் எமது அரசியல்கள் நடந்துவருகின்றன, ஆயினும் உலகத்தி லுள்ள மாநடர் மாயையின் வசப்பட்டு உன்னைப்பரம்பொருளென்றெண்ணு திருக் கின்றனர்; உன்பரத்துவத்தை எங்கள்மேலேற்றிக் காலங்கழிக்கின்றனர்; எம் போல்வாரை உன்னோடொப்பிடுகின்றனர்; விபூதி உருத்திராக்க முதலிய வுன் சின்னங்களைத்தரிக்காமல் திரிகின்றனர்; வாமதந்திரமே பொருளெனத் துணிந் திருப்பாருஞ் சிலருண்டு; வேதியர் முதலியோர்தத்தம் வருணத்திற்குரிய வொழுக் கங்களினுந்தவறி நடக்கின்றனர். இப்படிபலவகையான அநர்த்தங்கள் நிகழ்கி ன்றன. ஆதலால் இவ்வநர்த்தங்களெல்லாம் ஒழியும்வண்ணம் தேவரீர் கருணை புரிய வேண்டுமென்று வேண்டிக்கொள்ள, இறைவன் தேவர்களுட் சிறந்த

திருமாலைநோக்கி, ஓ திருமாலே! இன்னும் சிறிதுகாலத்தில் நீ உன்கலைகளி லொன்
றைக்கொண்டு வியாசமுநியாயவதரித்து வேதங்களையாராய்ந்து ஒழுங்கு படுத்தி
நான்குவகையாகத்தொகுத்து, வழிபடுமாணாக்கருக்கு உபதேசிப்பாய். வேதங்
களுக்கும் ஆகமங்களுக்கும் வேறுபாடு தோன்றாதபடி புராணம் பதினெட்
டினையும் நந்திதேவருக்கு அருளிச்செய்தோம், அவர்சநற்குமாரருக்கு உபதேசித்
தார். அவரிடத்திற் கேட்கவேண்டுமென் றருளிச்செய்ய, அப்படியே யாக வென்று
திருமால் முதலியோர் சிவபெருமானிடத்தில் விடைபெற்றுத் தத்தம் பதவிகளை
யடைந்திருந்தார்கள். பிறகு திருமால், பிரமன்மரபில் பராசரமுனிவர், பனித்து
வலினால் சூரியகிரணம் மறைக்கப்பட்டிருந்த வோர்பகற்காலத்தில், கங்கையாற்றி
னிடை யோர்புணையில் யோசனைகந்தியினிடத்தில் விருப்புற்றுப் புணர்ந்த பராசர
முனிவர்க்குப்புதல்வனா யவதரித்துச் சிலநாள்கழித்து வதரிகாசிரமத்தை யடைந்து
அவ்வாசிரம வாசங்காரணமாகவுண்டான வாதராயணன் என்னும் பெயர்தாங்கி,
இறைவன் சங்கற்பத்தால் வேதாகமாதிபலகலைகளையும் ஓதாதுணர்ந்தான். மேலும
அவற்றில் வேதங்களை நான்காகத்தொகுத்தகாரணத்தால் வேதவியாசன் என்னும்
பெயரும்பெற்றனன். சநற்குமாரனிடத்தில் பதினெண் புராணங்களையுங் கேட்ட
றிந்து தன் மனத்திற் பொருந்த அமைத்துக்கொண்டான். அன்றியும் வேதார்த்
தங்களெல்லாம் அறிந்தநுண்ணறிவுடையனாதலால் வேதாந்த சூத்திரத்தையும்
செய்தருளினான். மேலும் தான் நான்காகத்தொகுத்த வேதங்களையும், அவற்றின்
சாரமாகிய வேதாந்த சூத்திரத்தையும் பயிலவர், வைசம்பாயனர், சைமினி, சுமந்து
என்னும் நால்வருக்கும் போதித்தருளினான். அருள்செய்ததேயன்றி, அவர்களை
நோக்கி, இவ்வேதமுதலியவற்றை நீங்கள் உங்களை வழிபடுகிற மாணாக்கருக்குணர்த்
தக்கடவீரெனக் கட்டளையிட, அப்படியே அவர்களும் அதிகாரிகளுக் குணர்த்தி
வந்தார்கள். பிறகு வியாசபகவான் பதினெண்புராணங்களையும் எனக்குப் போ
தித்து உலகிலுள்ள இருபிறப்பாளர் நீங்கலாக மற்றவர்களுக்கும் மாதர்களுக்கும்
மெய்யறிவு தோன்றும்படி யுணர்த்துகவென்று நியமித்தாராதலால் யானும் அவ்வா
றே உணர்த்தலானேன். வியாசபகவானருளினால் வேதபுராணங்களெல்லாம் உலக
முழுதும் வியாபித்தன. புராணங்கள் பதினெட்டில் சிவபுராணம்பத்து, விஷ்ணு
புராணம்நான்கு, பிரமபுராணம் இரண்டு, சூரியபுராணம் ஒன்று, அக்கிபுராணம்
ஒன்று; இவற்றுள் சிவபுராணங்கள் சைவம் பௌடிகம் முதலாயின. விஷ்ணு புரா
ணங்கள் காருடம் முதலியன. பிரமபுராணங்கள் பிரமம் பதுமம் என்பன. அக்கி
புராணம் ஆக்நேயம், சூரியபுராணம் பிரமகைவர்த்தம்; எனப்படும். சிவபுராணம்
பத்தினுள்ளே இளையபிள்ளையார் திருவவதாரம் திருவிளையாடல் சூரசங்காரம் முத
லியவற்றைக்கூறும் கந்தபுராணத்தைத் தொகை வகை விரியாகச் சொல்லுவேனெ
னச் சொல்லத்தொடங்கினார்.

தக்ஷப்ரஜாபதிக்குப் புதல்வியாயவதரித்த காரணத்தால் தாக்ஷாயணி யென
வும் பெயர்பெற்ற இறைவியானவள், இந்தப்பெயரோடு உலகில் நாமெப்படி யிருப்ப
தென்று சிந்தித்து, தன்னைப்புதல்வியாகப்பெற விரும்பித்தவஞ்செய்த மலையரை
யனுக்குப்புதல்வியா யவதரித்து வளர்ந்துவருங்காலத்தில், காசிப முனிவர்க்கு
மாயையினிடமாகச் சூரபன்மன், சிங்கமுகன், தாருகன் என மூன்று புதல்வர்
தோன்றிச் சிவபெருமானைநோக்கித் தவஞ்செய்து பெருஞ்செல்வத்தைப் பெற்றிரு
தார். அவருள் சூரபன்மன், மகேந்திரம் என்னும் நகரத்திலிருந்து கோலோச்
சோல் செலுத்தி ஆயிரத்தெட்டு அண்டங்களையும் அடக்கியாண்டு வந்தான்.

இப்படியிருக்க, கைலாயத்தில், சநகாதியர் நால்வருக்கும் கல்லாலின்நிழலிலெழுந்தருளியிருந்து மெய்ந்நெறியைக் கைகாட்டாகிய மோனநிலையால் இறைவனுணர்த்தினகாலத்தில், சூரபன்மன்முதலானவர்கள் மிகவுங்கொடுமைகள்செய்து தேவர்களிற் சிலரைச் சிறைசெய்து வருத்த, இந்திரன் முதலானோர் மறைந்துறைபவராகி இறைவன் மோனநிலையிலிருப்பதைப் பிரமதேவனுக்கறிவிக்க, அவன் மன்மதனைச்செலுத்த, அவன் இறைவனது நெற்றிக்கண்ணினாலெரிந்து நீறாக, பிரமன் முதலியோர் இறைவனைத்துதித்து வணங்க, இறைவன் மோனநிலையைவிட்டு அவர்களுக்கருள்செய்து, சப்தருஷிகளையும் வரவழைத்து, மலையரையனிடத்துச் சென்று பெண்பேசிவரக் கட்டளையிட்டுப் பேசி முடிந்தபிறகு, திருமணமுடிக்குமாறு செல்லும்போது தனது பூதகணங்கள் முதலானோர் புடைசூழ்ந்துவரும் பாரத்தினால் வடதிசைதாழ்ந்து தென்றிசை உயரக்கண்டு அகத்தியரைத் தென்றிசைக்கேகக் கட்டளையிட்டு, மலையரையன் மகளைத் திருமணம்புணர்ந்து, பிறகு மன்மதனை உயிர்ப்பித்து, அவனை எல்லாருக்கும் அருவமாகவும் அவன்மனைவியாகிய ரதிதேவிக்குமாத்திரம் உருவமாகவும் தோன்றும்படி அருள்செய்தான்.

பின்பு திருக்கைலாயத்தில் முன்போலமர்ந்தருளி யோகபோகங்களை உயிர்களுக்கருள்செய்து தனதுநெற்றிக்கண்ணில் குமாரக்கடவுளை யவதரிப்பித்து, அவனுக்கு உதவித்துணைவராக வீரவாகுதேவர் முதலிய நவவீரரையும் இலக்கத்தவரையும் இறைவியின் காற்சிலம்பிற் சிதறின மணிகளால் தோன்றுவித்தான். பிறகு முருகக்கடவுள் அற்புதமாகிய திருவிளையாடல்களைச்செய்து ஒரு சிறு குழந்தையாக நடிக்க, அதற் காற்றாமையாகிப் போர்செய்த தேவர்களையெல்லாங்கொன்று, வியாழபகவான் வேண்டுகோளால் அவர்களை உயிர்பெறச்செய்து தனது திருவுருவைக்காட்சிதந்து, நாரதர்செய்த யாகத்திற்பிறந்த ஆட்டுக்கடாவை வாகனமாகக்கொண்டு, செவ்வே இனிது வீற்றிருந்தான். பிறகு பிரணவார்த்தத்தை வினவ, பிரமன் விடைகொடாது மயங்கக்கண்டு, அவனைக்குட்டிச் சிறையிலிட்டுத் தானே அவனது படைப்புத்தொழில் நடத்தி, பின்பு இறைவன்வேண்ட அவனுக்கு ஆசாரியனாயெழுந்தருளி அதன்பொருளை யுபதேசித்து, அகத்தியர்க்கு வேதாகமங்களின் முடிவாகியபொருளை யுபதேசித்திருந்தான். பின்பு ஒருநாள், இறைவன் தன்னைநோக்கி, நீபோய்ச் சூரன்முதலியோரைக்கொன்று தேவர்களுறுந் துன்பத்தையொழிக்கக்கடவாய் எனக் கட்டளையிட, அவ்வாறே முன்பு தாருகனையழித்து மேருமலையையடைந்து பிரமனாதியர்செய்த பூசனையேற்றுத் தென்றிசைநோக்கி நடந்து, பிதா எழுந்தருளியிருக்குந் தலங்களிலெல்லாஞ்சென்று பூசித்து, திருச்சேய்ஞலூர்ப் பெருமானைப் பூசித்து அவனருள்செய்த பாசுபதாஸ்திரம்பெற்று, திருப்பரங்குன்றில் சரவணப்பொய்கைப் பச்சிலையில் மீனாயிருந்து தனதருளால் சாபம்நீங்கித் தனது கட்டளையால் அப்பதியில் வந்திருந்த பராசர்புத்திரர் அறுவரும் வர, யாம் சூரனைக்கொன்று இங்குவருவோம், அப்பொழுது உமக்கு வேதாகமங்களின் முடிவுப்பொருளை வழங்குவோமென்று அவர்கட்கு விடைதந்தனுப்பி, செந்திற்பதியையடைந்து சூரபன்மன் வரலாறு முழுதும் வியாழபகவானாலறிந்து, அறத்தை நினைத்து, வீரவாகுதேவரைச் சூரபன்மனிடத்திற்குத் தூதனுப்பி, தான் மகேந்திர நகரமடைந்து, சூரபன்மன் கிளைஞர் முதலியோரைக்கொன்று அவனையும் மார்பைப் பிளந்தழிக்க, அவன் மயிலாகவும் சேவலாகவும் உருக்கொண்டுவர, மயிலை வாகனமாகவும் சேவலைக் கொடி

யாகவுங்கொண்டருளி, செந்திலிற்சிலநாள் தங்கி, பின்பு திருப்பரங்குன்றமடைந்து அங்குத் தெய்வயானையைத் திருமணம்புணர்ந்து, பராசரபுத்திரர் அறுவருக்கும் வேதாகம முடிவையுணர்த்தி, இந்திரனை விண்குடியேற்றி, தான் தேவசேநாபதியெனும் பெயர்புனைந்து, தெய்வயானையாரோடு கைலையையடைந்து, இறைவனைவணங்கி, கந்தகிரியைச்சேர்ந்து, பிறகு தொண்டைநாட்டிலுள்ள திருத்தணிகைமலையை யடைந்தருளினன்.

இப்படியிருக்குங்காலத்தில், நாரதமுனிவர்வந்து வணங்கி, வள்ளிமலையில் மான்வயிற்றிற்பிறந்து வேடரால் வளர்க்கப்பட்டவளாகிய வள்ளிநாயகியின் அழகு முதலியவற்றை யெடுத்துச்சொல்ல, அவளை மணம்புரியத் திருவுளங்கொண்டு, வள்ளிமலையையடைந்து, அவளுக்குப் பலவுருக்கொண்டு நடந்துகாட்டி, தான் தமிழ்க்குப் பரமாசிரியனாதலால், களவியற்பொருளை யுண்மையெனக் காட்டுவதற்கிணங்க, களவியலுக்கு இலக்கியங் காட்டத்துணிந்து, களிறுதருபுணர்ச்சியால் வள்ளிநாயகியைக் கவர்ந்துசெல்ல, வேடர்கள் தொடர்ந்து போர்செய்ய, அவர்களைத் தனது கொடியாகிய சேவலொலியால் மயங்கிவிழச்செய்து, இறைவி வேண்டுகோளால் அவர்களை உயிர்ப்பித்து, அவளையுந் திருமணம்புணர்ந்து, அவளோடு சிலநாள் திருத்தணிகை மலையையடைந்து தங்கி, பிறகு கந்தகிரியைச்சேர்ந்து, தெய்வயானையார், வள்ளிநாய்ச்சியார் இருவரும் கிரியாசத்தியாகவும் இச்சாசத்தியாகவும் இருபுறத்தும் வீற்றிருக்க, ஞானசத்தியாகிய வேற்படையைத் திருக்கரத்திலேந்தி யெழுந்தருளியிருந்தானென்று சூதமுனிவர் சொல்லக்கேட்டு, இதனைச் சிரத்தையோடு கேட்பதுபோல வேறொரு கதையையும் கேட்கமாட்டோம், இதைச் சுருக்கமாய்ச்சொன்னீர், விரிவாய்ச் சொல்லவேண்டுமென்று வேண்ட, அவர்களுடைய வேண்டுகோளுக்கிசைந்த சூதமுனிவர் சொல்லத்தொடங்கினர்.

சிவமயம்.

சண்முகக்கடவுள்துணை.

முதலாவது

# உற்பத்திகாண்டம்.

## திருக்கைலாசப்படலம்.

பாச நீக்கித்தன் பாற்படு நல்லரு
ளீச னல்கு மியல்பென வெய்தினோர்
தேசு மாற்றிச் சிறந்ததன் மெய்யொளி
வீசு கின்றது வெள்ளியங் குன்றமே. (க)

ஆறு சூடிய வாதியம் பண்ணவ
னேறு மூரிவெள் ளேறுமக் கண்ணுத
னீறு சேர்தரு கோலமு நித்தனைத்
தேறு மன்பர்தஞ் சிந்தையும் போன்றதே. (உ)

மோன நன்னிலை முற்றிய பெற்றியர்
ஞான மார்பிழம் பன்ன நலத்ததா
யூனு லாய வுயிர்த்தொகை மாசொரீஇத்
தானெ லாஞ்செறிந் தென்னவுஞ் சான்றதே. (௩)

கான மார்ந்த கடுக்கைநற் கூவிளைத்
தேன வாம்பொழிற் றிண்சிக ரத்திடை
வான யாறு வருதலின் மாசிலா
ஞான நாயகன் போல நணியதே. (ச)

தண்ண றுந்துள வாற்புனை தார்முடிப்
பண்ண வன்கண் படுத்திடு பாற்கடல்
கண்ணு தற்குமொர் காமரு பீடமாய்
நண்ணு கின்றது போலு நலத்ததே. (ரு)

பொதியு மின்னமு தோடு பொருந்துவ
சுதிரின் மிக்க சுறையறு காட்சிய
மதிய மாயிர கோடி மணந்துதா
முதய மானது போன்றதவ் வொண்கிரி. (சா)

நெற்றி மேனியிர் கண்ணு நிலாவொளிர்
பொற்ற டம்புய நான்கும் பொருந்துறப்
பெற்றெம் மானரு ளாற்பிரம் பொன்றுகைப்
பற்று நந்தி பரிவொடு காப்பது. (எ)

புரந்த ரன்முதலாகிய புங்கவர்
வரம்பின் மாதவர் மாசறு காட்சியர்
நிரந்த பூத கணவர் நிரந்தரம்
பரிந்து போற்றிப் பயில்வதம் மால்வரை. (அ)

மின்ன ரம்பைய ராடலும் விஞ்சையர்
இன்னரம் பயில் பாடலுங் கீழ்த்திசை
மன்ன னாதியர் வாழ்த்துமவ் வானவ
ரின்னி யங்களு மெங்கணு மார்ப்பது. (கூ)

வேறு.

இணி லாவுறு முலகெலா நீங்கியே கீழ்போய்ச்
சேணி லாவுறு பதமெலா முருவிமீச் சென்று
மாணி லாவுறு மண்டத்தி னடிமுடி மருவத்
தாணு வாயுல கிறுதியி னிற்பதச் சயிலம் (௧௦)

மாடு சூழ்தரு மேருவே யாதியாம் வரைகள்
பாடு சேரினு முலகெலா மழியினும் பரந்து
கூடு மண்டங்கள் குலையினுங் கொன்றைவே ணியன்போற்
கேடி லாமலே யமர்வது கைலையங் கிரியே. (௧௧)

நலம்வ ருங்கலை மதியமு மிரவியு நாகர்
குலம்வ ருந்தனுக் குறையலா மற்றைய ரோரு
மலம ருஞ்சுட ருடுக்களு மமரரும் பிறரும்
வலம்வ ரும்படி யிருப்பது கைலைமால் வரையே. (௧௨)

ஏற்ற மேருவே யாதியாம் வரைகளேழ் வகையாற்
சாற்று நேமிக ளாழியங் கிரிபெருஞ் சலதி
நாற்றி சைக்கணு நொச்சிபோற் சூழ்தர நடுவண்
வீற்றி ருப்பது கைலையா கியதனி வெற்பு. (௧௩)

படியெ லாமுண்டு மேனமாய்த் தாங்கியும் பண்டோ
ரடியி னுலகப் படுத்தியு மீட்டுமுற் றருளு
நெடிய மாயனு முலகிறு மெல்லையி னிமலன்
வடிவ மேயெனக் காணுதற் கரியதவ் வரையே. (௧௪)

வேறு.

அன்னதோர் கைலை நாப்ப ணம்பொனின் சுடர்மேல் கொண்ட
நன்னெடுஞ் சிமயத் தோங்க லவையொரீஇ நண்ணிற் றென்னக்
கன்னியங் காப்புமேவிக் கதிர்மணிக் கற்றை சுற்றப்
பொன்னெடுங் கோயி லொன்று பொலிவொடும் பொருந்திற் றன்றே. (கரு)

திணிகதி ராரந் தன்னிற் சிறந்தவச் சிரத்திற் செக்கர்
மணிதனின் முழுநீ லத்தின் மற்றைய வெறுக்கை தன்னிற்
பணிபட வருளாற் றூனே பசித்திடு சிகர மாதி
யணியினுக் கணியாய் மல்கு மாலயச் சூழ லெங்கும். (கசு)

என்றுமீ றென்ப தின்றி யிருந்திடுங் கைலை வெற்பிற்
பொன்றிகழ் நகரந் தன்னுட் பொருவிலாக் கோளு நாளுந்
துன்றிய தன்மைத் தென்னத் தூமணிக் கதிர்கள் சூழ
மன்றம ருறையு ளொன்று வனப்பொடு வைகிற் றன்றே. (கஎ)

வேறு.

சோதி சேருமத் தூமணி மண்டபத்
தாதி யான வரியணை யும்பரிற்
காத லாகுங் கௌரியோர் பாங்குற
வேத நாயகன் வீற்றிருந் தானரோ. (கஅ)

பீடு கொண்ட பெருந்தவப் பெற்றியோர்
தேடு கின்ற சிறப்புடைத் தாம்புகழ்
நாடு தும்புரு நாரதர் விஞ்சையர்
பாடு கின்றனர் பாணியின் பாற்பட. (ககூ)

ஆதிகன் வேணியி லார்தரு கங்கையை
விதிபு ரந்தரன் விண்டல கத்துள
நதிக டாழ்ந்தென நன்னயத தேவல்செய்
கதியி னோர்கள் கவரிகள் வீசினர். (உ0)

சீல வட்ட முடிப்பிறை தேடுவான்
ஞால வட்டத் தெழுதரு நாகர்போ
லேல வட்ட முகத்தரு கெங்கணு
மால வட்ட மசைத்தன ரன்பினோர். (உக)

ஆதி தன்னரு ளெய்திய வன்றிருப்
பாத தாமரை சூடியப் பண்ணவன்
கோதி லாத திருவுருக் கொண்டுளோர்
பூத ராதியர் போற்றிமு னீண்டினர். (உஉ)

திருக்கைலாசப்படலமுற்றிற்று.

ஆ. திருவிருத்தம் கூஎச.

வசனம்.

திருக்கைலாயமலையானது தனது அன்பருக்குப் பஞ்சபாசத்தடையொழித்து, தனது பேரருளையே இறைவன்தருந் தன்மைபோலத் தன்னையடைந்தவருடைய ஒளியைமாற்றித் தன் மெய்யான ஒளியை வீசுவதுபோலவும், இறைவனது வெள்விடையும் அவனது திருவெண்ணீற்றுக்கோலமும் அவனது மெய்யன்பர் சிந்தையும்போலவும், மௌனநிலைபெற்றவரது ஞானத்திரள்போலவும், உயிர்களின் குற்றம்போக்கித் தான் எங்கும் வியாபித்ததுபோலவும் தோன்றும்; மேலும், மணமிகுந்த மலர்ச்சோலை சூழ்ந்த சிகரத்தில் ஆகாய கங்கைவருதலால் பரமசிவன்போலவும், பாற்கடலானது சிவபிரானுக்கு ஒரு ஆசனமாயமைந்திருத்தல்போலவும், ஆயிரங்கோடி பூர்ணசந்திரர்கள் ஒருங்கே உதித்தாற்போலவும் பிரகாசித்துக்கொண்டிருக்கும்.

மேலும், அந்தமலையானது நெற்றிக்கண் நான்குதோள் முதலியவற்றையுடையராகிய நந்திதேவர் இறைவனருளால் வேத்திரப்படையைக் கையிலேந்திநின்று சிரத்தையோடு காக்குந்தன்மையுடையதாய், இந்திரன் முதலியதேவரும் முனிவரும் பூதகணங்களும் நெருங்கிநின்று எக்காலத்தும் வணங்குந் தன்மையுடையதாயிருக்கும்; அரம்பையர் முதலியோருடைய ஆடல்பாடல்கள் நீங்காமலிருக்கும். மேலும், அம்மலையானது அதோலோகத்தில் நிலைபெற்றிருக்கிற கூர்மாண்டபுவனங்களைக் கடந்தும் ஊர்த்துவலோகத்தில் நிலைபெற்றிருக்கிற சுவர்க்க முதலியவற்றைக்கடந்தும் அண்டத்தின் அடிமுடிகளாகிய எல்லையாகி, இறைவனைப்போல எக்காலத்தும் சலநமில்லாமல் நிலைபெற்றிருக்கும்; மேருமுதலிய மலைகள் அழிந்தாலும் உலகங்களெல்லாம் அழிந்தாலும் இறைவன்போல அழிவின்றி விளங்கும்; சூரியசந்திராதியர் முதலியோரும் பிரதக்ஷிணம் செய்யும்படியாகவும் விளங்காநிற்கும்; மேருமுதலியவை மலையரணாகவும், பெரும்புறக்கடல்நீரரணாகவும் சூழ்ந்துநிற்க விளங்கிக்கொண்டிருக்கும்; திருமால் பிரமன் என்பவர் தேடிக் காண்பதற்கரிதாயிருந்த இறைவனது அடிமுடிகள்போலவே அடிமுடிகளினெல்லை ஒருவராலுங் காணமுடியாததாயிருக்கும்.

அத்தன்மைத்தாகிய கைலாயமலையினிடையே பொன்னொளியையுடைய மலையொன்று விளங்குவதுபோல மிக்க காவலையுடையதாய் மாணிக்கராசிகளின் ஒளித்திரள் வீசப் பொன்னெடுங் கோயிலொன்று பொலிவுபெற்று விளங்கும். அதனிடையே மணிமண்டபமொன்று நிலைபெற்றுவிளங்கும். அதன்மீது நவரத்நகசிதமாகிய சிங்காதநமொன்று அமைந்திருக்கும். அதன்மீது இறைவனாகிய சிவபெருமான் பர்வதராஜபுத்ரியாகிய உமாதேவியோடு எழுந்தருளியிருப்பர். அவரைத் தபோதநராகிய முனிவர் முதலியோர் நெருங்கிநின்று தத்தமக்கியன்ற வாழ்த்து வணக்கமுதலிய வழிபாடுகளைச் செய்துகொண்டு நித்தியாநந்த பரிதராயிருப்பர்.

# பார்ப்பதிப்படலம்.

அன்னுழி யுமையவ ளகத்து ளோர்செய
லுன்னின ளுணுக்கமுற் றொல்லை தானெழீஇத்
தன்னிக ரில்லவன் றாளி றைஞ்சியே
முன்னுற நின்றிவை மொழிதன் மேயினாள். (க)

கற்பனை முதலிய கடந்த கண்ணுதற்
றற்பர நினையிகழ் தக்கன் றன்னிடைப்
பற்பகல் வளர்ந்தவன் பயந்த மாதெனச்
சொற்படு நாமமுஞ் சுமந்து ளேனியான். (உ.)

ஆங்கவோர் பெயரையு மவன்க ணெய்தியே
யோங்கினான் வளர்ந்தவிவ் வுடலந் தன்னையுந்
தாங்கினன் மேலவை தரித்தற் கஞ்சினே
னீங்குவ னவ்வகை பணித்தி நீயென்றாள். (ங.)

மன்னுயி ராகிய மரபு முற்றவு
முன்னுற வருளிய முதல்வி யன்பினா
லின்னண மியம்பலு மிதனைத் தேர்ந்திடாத
தன்னிக ரில்லதோர் தலைவன் கூறுவான். (ச)

பத்திமை யெம்வயிற் பழுத்த பண்பினாற்
சத்தியே நின்னிகர் சகத்தி னில்லைநீ
யித்திற முயலுத லெல்லை தீர்ந்தவின்
புத்திரர் வீடுறு பொருட்டுப் போலுமால். (ரு)

நற்றிற மேயிது நங்கை சிந்தனை
முற்றிய வேண்டுமேன் மொழிது மேருவின்
சுற்றம தாகிய விமயத் தொல்வரைக்
கொற்றவன் புரிவனாற் கொடிய மாதவம். (சு)

ஏதவன் பெறத்தவ மியற்று மென்றியேன்
மாதுனை மகவுமையா மரபிற் போற்றியே
காதலொ டெமக்கருள் கருதத தாகுமா
லாதலிற் குழவியா யவன்க ணெய்துநீ. (எ)

தளர்ந்துடன் மெலிவுறத் தவஞ்செய் வெற்பினா
னிளஞ்சிறு குழவியா யெய்தி மற்றவ
னுளங்களி கூரவான் டோரைக் கின்றுனை
வளர்த்தனை புரிதிமேன் மாசின் மாதவம். (அ)

அணங்குநீ நோற்றுழி யகிலத் துள்ளதோர்
கணங்களுந் தலைவருங் கணிப்பி றேவரு
மிணங்கினர் சூழ்தர வெய்தி நின்னையா
மணம்புரிந் தேகொடு வருது மீண்டெனு. (௯)

கடல்விட முண்டிடு கடவு ளித்திற
நடைமுறை யருளலு நன்றெ னுமகிழ்ந்
தடியிணை வணங்கிநின் றன்பிற் போற்றியே
விடையது பெற்றனள் விமலை யேகினள். (௧0)

அல்லலு முவகையு மன்பு மெம்பிரா
னெல்லையி லருளுமா யீண்டி முன்செல
மெல்லிய லுமையவள் வெள்ளி வெற்பொரீஇ
வல்லையி னிமயமால் வரையிற் போயினள். (௧௧)

வள்ளியன் கடகரி வடிவின் வீழ்தரு
நள்ளியம் பனிமழைச் சோனை சூழ்தலா
லெள்ளருந் தன்மைசே ரிமய மாலவரை
வெள்ளியங் கிரியென விளங்கு கின்றதே. (௧௨)

எண்டகு மிமயமு மிமய மேலுறு
கொண்டலு மொன்றியே குலவு காட்சிய
தெண்டிரை மிசையெழு நஞ்சுந் தீயநஞ்
சுண்டிடு மணிமிடற் றிறையு மொக்குமால். (௧௩)

நீலுறு மழைமுகி னிலவு மின்னொடு
மேலுற விளங்கிய விமய வெறபது
மாலவன் றிருவொடு மருவிக் கண்டுயில்
பாலுறு பன்னகப் பாயல் போன்றதே. (௧௪)

கரும்புய லார்த்துறு காட்சித் தாகியே
யிரும்பனி யீடையறு விமயப் பொன்வரை
சுரும்பின மிசையொடு துவன்றிச் சுற்றிட
வரும்பவி ழாதவெண் கமல மன்னதே. (௧௫)

நீடிய மண்மக ளுந்தியின் குப்பையைப்
பாடுறு தண்ணிலாப் படாம தொன்றினான்
மூடினள் வைத்திடு முறைய தேயெனக்
கோடியர் பனிகொள்பொற் குன்ற நின்றதே. (௧௬)

பொன்னெடுங் கிரியெனை வீண்டும் புங்கவர்
துன்னினா சூழ்வரென் றுன்னித தொன்மனு

வன்னதை மறைத்தன னிரதத் தாவியா
லென்னவு நின்றதா லிமயப் பொன்வரை. (கஎ)

குடகடல் குணகடல் கூடி ருவகை
யிடையொரு வாலிதா மேன மெய்தியே
தடைபுரி சிறப்பென விமயத தாழ்வரை
நெடுநில வளவ்வயு நிமிர்ந்து போயதே (கஅ)

விண்ணவர் ததிக்கடல் கடைந்த வெண்ணெயு
ளண்ணலம் பாற்கட லமுதம் வைத்தெனக்
கண்ணகன் பெரும்பனி கவைஇய வெற்பின்மே
லுண்ணிறை புனற்றட மொன்று வைகிற்றே. (கசு)

அன்னதோர் தடத்திடை யசல மன்னவன்
மன்னிய கௌரிதன் மகண்மை யாகவுந்
தன்னிக ரிலாவரன் றனக்கு நல்கவு
முன்னுற வருந்தவ முயன்று வைகினன். (உ0)

மெய்த்தவ மியற்றிய வெற்பன காணிய
வத்தட மலருமோ ரரவிந் தத்தின்மேற்
பைத்ததோர் குழவியின் படிவத் துற்றன
ளெத்திறத துயிரையு மீன்ற தொன்மையாள். (உக)

வேறு.

ஆங்கவட் கண்டு வெறப னடியனேன் பொருட்டா லம்மை
நீங்கினள போலு முக்க ணிருமலன் றன்னை யென்னு
வேங்கினன் றனது நோன்புக் கிரங்கின ளிவைக ளீச
னேங்குபே ரருளே யென்னு வுவகையங் கடலுட் பட்டான். (உஉ)

கண்ணுறு போத வாரி கான்றிட வுரோம ராசி
யுணணிக ழன்பு மிக்குப் புறந்தனி லொழுகிற் றென்ன
வண்ணன்மெய் பொடிப்பத் துள்ளி யடியனே னுய்ந்தே னென்னுத்
திண்ணெனப பாடி யாடி யமலையைத் தொழுது நின்றான். (உ௩)

பஙகயத் தவிசின் வைகும் பராபரை தனைதத னுது
செங்கையி னெடுத்து வல்லே சென்னிமேற் றூங்கி யேகித்
திங்கால் விமயத் தண்ண றென்முறை யிருக்கை புக்கு
மங்கல மேனை யென்னு மனைவிகைக் கொடுத்தான் மாதோ. (உச)

கொடுத்தலுந் தொழுது வாங்கிக் கொற்றவ விவணின் பாங்க
ரடுத்ததங் கெவனோ வென்ன வரசனு நிகழ்ந்த வெல்லா
மெடுததுரை செய்யக் கேளா வீசன தருளோ வென்னு
வடுததவிர் கற்பின் மேனை மனமுற மகிழ்ச்சி கொண்டாள். (உரு)

சுரந்தன கொங்கை பாலுந் தூண்ணென வொழுகிற் றெங்கும்
பரந்தன பொடிப்பின் போர்வை பரைதன தருளே யுள்ள
மிரந்தன கவலை யாவு நீங்கின பவழுன் னுள்ள
கரந்தன வியப்ப தண்ணல் காதலி தனக்கு மாதோ. (௨௬)

பரிபுரந் தண்டை யம்பொற் பாடகம் பாத சாலம்
விரவிய தொடியே சங்கு வியன்மணிச் சுட்டி யார
மரிகெழு மதாணி பொற்றோ டங்கதம் பிறவுஞ் சாத்தி
வரையுறழ் தனபபா லார்ததி வரம்பெறு காப்பு நேர்ந்தாள். (௨௭)

வனைதரு பவளங் காலா வயிரமே மருங்கிற் கோலாப்
புனையிரும பலகை நீலாப் புரிந்தபொற் றொட்டின் மேலா
வனையவ டன்னை யுய்த்து மங்கையிற கொண்டுந் தன்கோன்
மனமகிழ் திறனுற போறறி மதியென வளாக்க லுற்றாள். (௨௮)

மன்னுயிர் புவன மேனை மற்றுள பொருளுக் கெல்லா
மன்னையா யுதவி நாளு மவற்றினை வளர்த்து நிற்பா
டன்னையும் வளாப்பா ருண்டோ வளர்ந்தது சழக்கே யந்தக்
கன்னிதன் னருளி னீரமை காட்டினள் போலு மன்றே (௨௯)

இந்தவா றினையர் பாலா லெழும்பெரு மாட்டி வைகி
யைந்தியாண் டகன்ற பின்றை யயன்முதற றேவர் யார்க்குந்
தந்தையா ரருளை யுன்னித் தவமினிப புரிவ னென்னாச்
சிந்தியா வியத தோங்கற செமமலுக் குரைக்க லுறறாள். (௩௦)

நாற்பெருந் தடந்தோ ளண்ண லதைதக வரைந்து கொள்வா
னேற்பனு வினைய வெற்பி னுவலரு மொருசார வைப்பி
னேறபதோர் கன்னி மாரோ டேனைவிடுத தருண்மோ வென்னாப்
பார்பபதி யியம்ப லோடும் பனிவரை யரசன் சொல்வான். (௩௧)

அன்னைகே ளொமமி னீங்கி யருந்தவ மாற்றற் கொத்த
தின்னதோர் பருவ மன்று வியாண்டுமோ ரைந்தே சென்ற
கினனுடல் பொறுதா லீண்டிந் நிலைமையைத தவிர்தி யென்னக்
கன்னிகை நகைத்துக் கேண்மோ விஃதெனக் கழற லுற்றாள். (௩௨)

ஈசனை காப்ப னல்லால் யாரையும பிறராற் றம்மா
லாசறப போற்ற லாகா ததுதுணி வாகு மீண்டுப்
பேசிய திறனு மன்றேன் பேரருண் மறுதி யென்ன
நேசமோ டிமைக்கிட் டன்னை நினைந்தநோன் பியற்று கென்றான். (௩௩)

அன்னனு மிசைந்து பின்னர் மால்வரை யொருசார் தன்னி
லன்னமின் னடைமி னாருக் கருந்தவச் சாலை யாற்றித்

தன்னூறு கிளைஞர் தம்பாற் றவத்தினல் வந்த பான்மைக்
கன்னியர் பலரைக் கூவிக் கௌரிபா லாகச்செய்தான். (௩௪)

நீலுறு மணிதோய் மேனி விமலையங் கிமயத் தாச்சி
மேலுறு மரசன் றேவி யிடையினன் மடவார் பல்லோர்
பாலுறு மணியிற் சூழப் பரமனை யுன்னி யந்தச்
சாலையை யடைந்து மிக்க தவத்தினை யிழைக்க லுற்றாள். (௩௫)

தங்கிய வைக ரேறுந் தாதையுந் தாவில் கற்பின்
மங்கையும் போற்றி யேக மாதுநோற் றிருந்தா ளிப்பா
லங்கவட் பிரிந்த பின்றை யரும்பெருங் கைலை மேய
வெங்கடம் பெருமான் செய்த பரிசினை யியம்ப லுற்றேன். (௩௬)

பார்ப்பதிப்படல முற்றிற்று
ஆ திருவிருத்தம் ௪௪௦.

---

வசனம்.

இவ்வாறு பார்வதீ பரமேசுவரர்கள் வீற்றிருக்குஞ் சமயத்தில், உமாதேவி யானவள் தன்மனத்திலோரெண்ணங்கொண்டு விரைந்தெழுந்து சிவபிரானது திருவடியைவணங்கிநின்று இவற்றைச் சொல்லத்தொடங்கினாள். காலத்தொடு கற்பனைகடந்த கண்ணுதலே! உன்னை யிகழ்ந்த தக்கனுக்கு மகளாய்ப்பிறந்து தாக்ஷாயணியெனப் பெயர்பெற்றிருப்பது எனக்கு மிகவும் அருவருப்பாயும் துன்பமாயுமிருக்கின்றது; ஆதலால், இந்தப் பெயரையும் இந்த வடம்பையும் ஒழித்துவிடக்கருதினேன்; இதற்குத் தேவரீர் விடைதரவேண்டுமென்று கேட்க, அவளை நோக்கிப் பரமகாருணிகனாகிய சிவபிரான் சொல்லாநின்றான். எப்படியெனின், எம்மிடத்துப் பத்திமைமிக்க பாவையே! நீகொண்ட எண்ணம் உன்குழந்தைகளாகிய உயிர்களெல்லாம் வீடுபெறுதற்பொருட்டேபோலும், அது மிகவுநன்றே. யாம் சொல்லுவதைக்கேள், மலையரையனானவன் உன்னைத் தன்மகளாகப் பெற்றுவளர்த்து எமக்கு மணஞ்செய்துகொடுத்து எமக்கு மாமனாயிருக்கவேண்டுமென்றெண்ணங்கொண்டு தவஞ்செய்துகொண்டிருக்கிறான்; ஆதலால், நீயும் அவனுக்கு மகளாகி, ஐந்தாண்டுவரையில் வளர்ந்துகொண்டிருந்து பிறகு தவஞ்செய்துகொண்டிரு; அந்தச்சமயத்தில பூதகணங்கள் முதலியோர்சூழ, யாம்வந்து உன்னை மணஞ்செய்துகொண்டு இங்குவருவோமென்று கூறக்கேட்ட உமாதேவியானவள் மனமகிழ்ந்து விடைபெற்றுச்சென்றாள்; சென்று இமயமலைக்குப்போய், அங்குப் பதுமையெனப் பெயர்பெற்று விளங்குகிற ஒருதடாகத்தருகில், தன்னை மகளாகப் பெறக்கருதித் தவஞ்செய்துகொண்டிருந்த மலையரையன்காணும்படி அந்தத்தடாகத்திலுள்ள ஒருதாமரைமலரின்மேல் ஒருசிறு குழந்தையின்வடிவங்கொண்டிருந்தாள்; குழந்தையைக் கண்களிக்கக்கண்ட மலையரையன், உமாதேவியானவள் இறைவனை நீங்கி யென்பொருட்டு இவ்வுருக்கொண்டு வந்தாள்போலுமென்றுட்கொண்டு, இதுவும் இறைவனதுபேரருளேயென்று உவகைக்கடலுள் மூழ்கினான். பிறகு குழந்தையை உற்றுநோக்கி ஆநந்தக்கண்ணீர்சொரிய உரோமம் புளகமுமப உள்ளத்தன்பு புறத்தே யொழுகுவதுபோலத் துள்ளி ஆநந்தக்கூத்தாடி, தான்

உய்ந்தேனென்று இறைவியை வணங்குகின்றான். அதற்குப்பிறகு அந்தத் தாமரை மலர்மேற்கிடந்த இறைவியைத் தன்னிருகைகளாலுமேந்திக்கொண்டு விரைந்து சென்று தன்மனைவியாகிய மேனையிடத்திற்கொடுத்து, இறைவியின் வரலாற்றையுங்கூறினான். அம்மேனையானவள் தன்னிருகையாலும் வாங்கி மார்போடணைத்துக் கொள்ளவே, அவளுடைய இருதனமும் பால்சுரக்க, உடல்புளகிக்க, மனக்கவலையொழிந்துநின்றாள்.

இப்படி மேனையானவள் தன்னிரண்டுகைகளாலும் ஏற்றுக்கொண்டமகளை நாளொருவண்ணமும் பொழுதொருமேனியுமாகவளர்க்க ஐந்துவயது நிறைந்த பின்பு, இறைவியானவள், சிவபெருமானைக்குறித்துத் தவஞ்செய்யவேண்டித் தன் பிதாவாகிய மலையரையனுக்குத் தெரிவித்தாள். அந்தமலையரையன் இறைவியை நோக்கி, அம்மா! உனக்கு ஐந்தாண்டு நிரம்பவில்லை, நீயிந்த எண்ணத்தையொழித்துவிடக்கடவையென்று சொல்ல, இறைவியானவள் எவ்வுயிர்க்குமுயிராய் வியாபித்துவிளங்கும் பரமேசுவரனிடத்துக்கொண்ட என்விருப்பத்தைத் தடுக்க வேண்டாம் என்றாள். அதற்குமேல் மலையரையன் இறைவியின் வேண்டுகோளை மறுக்கமாட்டாமல் அவள்விருப்பத்தின்படியே ஒருதவச்சாலையியற்றித் தோழிமார்பலரையும் கூடவனுப்பினான். அனுப்புதலும் இறைவியானவள் தன்தாயாகிய மேனையிடத்தும் விடைபெற்றுப்போய்த் தவஞ்செய்வாளாயினாள். இப்படித் தவஞ்செய்கையில் மேனையும் மலையரையனும் அம்மையைத்துதித்துச்சென்றார்கள். இனி இறைவியைப்பிரிந்த சிவபெருமான் செய்த காரியத்தைக் கூறுகின்றேன்.

# மேருப்படலம்.

பன்னருஞ் சிறப்பின் மிக்க பனிவரை யரசன் றன்பாற்
கன்னியம் புதல்வி யாகிக் கௌரிநோற் றிருந்த காலைத்
துன்னிய வவுணர் சூழச் சூரபன் மாவாம் வெய்யோ
னிங்கில வரைப்பி னண்டத் திறைவனே யாகி யுற்றான். (க)

மற்றது போழ்திற் றொல்லை மறைப்பொருள் வடத்தின் பாங்காப்
பெற்றிடு சனக னாதி முனிவரர் பின்னும் பன்னா
ளற்றமி றவஞ்செய் தெந்தை யருளினாற் கைலை நண்ணி
முற்றுணர் நந்தி போற்று முதனிலை வாயில் புக்கார். (உ)

நோன்மையின் முனிவ ரானோர் நுவலருங் காட்சி நந்தி
கான்முறை வணங்கி நிற்ப வனையவன் கருணை தன்னால்
வான்மலி கடவுட் கோயின் மந்திரங் கொண்டு செல்ல
நான்முகன் முதலோர்க் கெய்தா ஞானநா யகனைக் கண்டார். (ங)

மொழியது தவறல் செல்ல முற்றுடல் பொடிப்புக் கொள்ள
விழிபுனல் பெருகத் தீசேர் மெழுகென வுள்ளம் விள்ள

வழுகிய மறைக்கு மெட்டா வாதிநா யகனை நோக்கித்
தொழுதனர் இருவகை பூத்துத் துள்ளினர் துளக்க முற்றார்.

முன்னவு ரமரர் யாரை வணங்கினு மவைக ளெல்லா
நண்ணிய பரமன் றருளி னாற்பெருந் தவத்தி னோருந்
தண்ணளி நெறியிற் பல்காற் றாழ்ந்தன ரெழுந்து நின்று
பண்ணிசை மறைக டம்மாற் றுதித்திவை பகர்த லுற்றார். (௫)

இருட்பெருங் கடலுள் யாமத தெறிமருத் திடைப்பட் டாங்குப்
பொருட்பெருங் கடலாம் வேதம் புண்டொறு மலைப்ப வீந்நா
ளருட்பெருங் கடலே யெய்த்தே மமைந்தில துணர்வி யாங்கண்
மருட்பெருங் கடலி னீங்கும் வண்ணமொன் றருடி யென்றார். (௬)

நவையறு தவங்க ளாற்றி நல்லருள் படைத்த தொல்லோ
ரிவைபுகன் றிடலு மன்பர்க் கெளிவருங் கருணை வள்ள
லவர்முகந் தெரிந்து நுங்க ளறிவமைந் தடங்கு மாறு
தவலருஞ் சிறப்பி னன்னூல சாற்றுது மிருத்தி ரென்றான். (௭)

என்றிவை யருள வெந்தை யிணையடி தனைது முன்னர்
நன்றுணர் காட்சி கொள்ளு நால்வரு மிருந்தா ரங்கட்
சென்றிடு நந்திப் புத்தேள் சிறப்புடை வதன நோக்கிக்
கொன்றையந் தொடையல் வேய்ந்த குழகனென் றியம்பு கின்றான். (௮)

பூங்கணைக் கிழவ னன்றிப புங்கவர் யார்போந் தாலு
மீங்குறத் தருதி யல்லை யீதுமப கடைத்த தென்ன
வாங்கது புரிவ னென்று வமலனை யிறைஞ்சி யங்க
ணீங்கியக் கணத்தி னந்தி நெறிமுதல் போற்றல் செய்தான். (௯)

நந்திமுற் கடையைப் போற்ற ஞானநா யகனு மண்ணன்
முந்துறை சனக னாதி முனிவரர் தொழுது கேட்ப
வந்தமி லாக மத்தி னரும்பத மூன்றுங் கூறப்
புந்திய தொடுங்கு ஞான போதகம் போதி யென்றார். (௰)

என்னலு நகைத்தி யானு மெதிர்மொழி புரிந்தா னல்லன்
பன்னுவ தன்றான் மற்றிப் பரிசினு லிருத்தல் கண்டி
ரந்நெறி யாகு மென்றே யனையவர்க் குணர்த்து மாற்று
அன்னரும் பரத்தின் மேலோ னொருசெயல் புரித லுற்றான். (௧௧)

இருவரு முணரா வண்ண லேனவெள் ளொயிறி யாமை
சிரநிரை யகந்த கோடி திளைத்திடு முரந்திற் சீர்கொள்
கரதல மொன்று சேர்த்தி மோனமுத் திரையைக் காட்டி
யொருகணஞ் செயலொன் றின்றி யோகுசெய் வாரி னுற்றான். (௧௨)

இனையதோர் தன்மை காட்டி யெம்பிரா னுணர்த்தக் கண்டு
முனைகளை முகலா வுள்ளோரர் தவலரு ஞான போதம்
பழுவலி னாவன் றென்னும் பான்மையைத் தெரிந்து முக்கட்
புனிதனை தருளாற் றத்தம் புந்தியி னுடுக்கம் பெற்றார். (கந)

தந்தமுன் னொடுங்கல் பெற்ற தாபத கணத்தர் யாரு
முந்தொடுவில் புரியு மூவா முதல்வனு முக்கண் மூர்த்தி
மெய்த்தவ வடிவ முன்னி மேவினர் சூழ்ச்சி மேலோன்
சித்திரம் புணர்த்த பாவை செயலற விருக்கு மாபோல். (கச)

தற்பர னினைய வாற்றற் றுபத ருணருந் தன்மை
யற்புத ஞான போத மளித்திடுங் கணம தொன்றின்
முற்படு கமலப் புத்தேண் முதலிய வமரர்க் கெல்லாம்
பற்பல யுகங்கள் சென்ற பிறர்க்கினிப் பகர்வ தென்னே. (கரு)

இத்திற ஞான போத மென்றுதொன் முனிவர்க் கெந்தை
கைத்தலங் கொண்டு காட்டுங் கணத்தினி லமரர்க் கெல்லா
மெத்துபல் லுகங்கள் சென்ற விழுமிய காஞ்சி தன்னி
லத்தல்மெய் குழைத்த நங்கை யவன்விழி புதைத்த நாட்போல். (கசு)

காரண முதல்வன் மோனக் காட்சியா லமர ரெல்லாஞ்
சூரர மகளிர் தங்க ணிணைமுலைப் போக மின்றி
யாரிடர் நிலைமை தன்னை யடைந்தன ரளக்கர் சூழ்ந்த
பாரிடை யுயிருங் காமப் பற்றுவிட் டிருந்த வன்றே. (கஎ)

ஆரணன் றனது மைந்தர்க் கரும்பெறன் ஞான போத
மோரின்ற காட்டு முன்ன ருலகெலா மொருப்பா டொன்றி
யீருடன் முயங்கு மார்வ மின்றியே யிருந்த யார்க்குங்
காரணன் சிவனே யென்கை கழறவும் வேண்டற் பாற்றோ. (கஅ)

பிணைவிழைச் சூழ்தந் துய்ப்பப் பெருமறை விதிவ ழாய
லிணைவிழச் சடங்கிற் கொண்ட வரிவைய ரோடு தேவ
ரிணைவிழைச் சியற்கை கூடா திரங்கினர் கவற்சி யெய்திப்
புணைவிழச் சலதி யாழ்ந்து புலம்புகொண் மாக்க ளேபோல். (கக)

வன்முலை யணங்கி னோரும் வானவர் யாருங் காமத்
தன்மையும் புணர்ப்பு மின்றித் தளர்ந்தனர் வறிஞர் தம்பா
லின்மைகொண் டோர்கள் செல்ல வீவது கூடா வெல்லைப்
புன்மையொ டிருவர் தாமும் புலம்புறு தன்மை யேபோல். (உ0)

பொற்புருக் குறைவின் றுற்றும் புவனமேன் மகளிர் மைந்த
ரற்பொடு கலந்து காமத் தரும்பயன் கோட லேற்றார்

தற்பர வடிவ ஞானத் தன்மையா லலகை யீட்ட
நற்புன வீழல் பெற்று நணுகருந் தன்மை யேபோல். (உக)

மாடக வெழாலை யன்ன பணிமொழி மகளிர் மைந்தர்
கூடின ரிருந்து மின்பங் கொண்டிலர் சிறார் குழாமு
மாடவர் குழாமும் வாட்க ணரிவையர் குழாமு மேனைப்
பேடியர் குழாமும் வெவ்வே றுற்றிடு பெற்றி யேபோல். (உஉ)

இருந்திட விரிஞ்சன் மாயோ னிருவரு மீசன் றன்பாற்
பொருந்திடு முணர்ச்சி கொண்டு முத்தியிற் புக்க சேயுந்
திருந்துசீர் வசிட்டன் சொல்லாற் சிலையெனப் பன்னு ணின்ற
வருந்ததி மாதும் போன்று ராடவா மகளி ரெல்லாம். (உக)

ஏமரு புவன மூன்று மினிதருள் கமலக் கண்ணர்
பூமட மாதர் தம்பாற் புணர்கிலர் பொருவில் வேனுங்
காமரு மகளிர் கூட்டங் கருதல ரிவர்போற் சிந்தை
யாமையி னெடுங்கல பெறறு ராசையுள் ளோர்க ளெல்லாம். (உச)

மண்ணகத் துயிர்கண் முற்று மாதிரத் துயிர்கண் முற்றும்
விண்ணகத் துயிர்கண் முற்றும் வேற்றகத் துயிர்கண் முற்றும்
பெண்ணகத் தாண்மை கூடுஞ் சிறுநலம் பிழைத்த ஞானக்
கண்ணகத் திறைவற் கண்டு கடைநின்ற காட்சி யாரபோல. (உரு)

நாகமார் சடிலத் தண்ண னற்பெருந் தவரு மூய்ய
யோகுசேர் நிலைமை காட்டு மொருகணத் துயிரின் பொம்மல்
வாகைவே டானு கிறக மையலும் புணர்ப்பு மற்ற
வாகையா லகில மெல்லா மவனெனுந் தகை தெரிந்த தன்றே. (உகா)

சிலையொடு பகழி வாடத் திருமதிக் குடைசீர் குன்ற
வலிதளர் வெய்தத் தென்றன் மறிகடற் சுறவு தூங்க
வலைபுரி யானை நீங்கி யாடன்மா மதனு மாதின்
கலவிய தொழிந்தா னென்னிற் பிறர்செயல் கழறற் பாற்றே. (உஎ)

சாலிகள் வளரு மெல்லை தடம்புனல் வறுமைத் தாக
வாலிது குரல்வாங் காது வருகதொடு மாய்வ தேபோன்
மேலவ னருளாற் போகம் வெறுத்தலிற் கருமல் கின்றி
ஞாலமன் னுயிர்கண் முற்று நாடொறுங் குறைந்த வன்றே. (உஅ)

முள்ளரை முளரிப் புத்தேண் முதற்புரி துணையே யன்றித
தள்ளரு முயிர்கள் பின்னுந் தலைத்தலை மல்கா தற்ற
தெள்ளிதி னுலக மீன்ற தேவியின் முதி யீசன்
வெள்ளியங் கயிலை தன்னின் மேவிய வேலை நாட்போல். (உக)

இம்முறை திகழ நாத னீரிரு தவத்தினோர்க்கு
மெய்ம்மைகொ ளுணர்ச்சி காட்டி வீற்றிருந் தருளு மெல்லை
தெம்முயல் சூரன் றீங்கு செய்தலான் மகவான் வானோர்
தம்மொடுந் துறக்கம் விட்டுச் சசியொடுந் தரணி புக்கான். (௩0)

மேகமூர் கடவுள் வெள்ளி வெற்பினி லேகி மூக்க
ணேகநா யகனைக் காணு மெல்லையின் றாக மீண்டு
சோகமோ டம்பொன் மேருத் துன்னியே சூரன் மைந்தன்
மாகநா டழித்துச் சேயைச் சிறைசெய்த வண்ணந் தேர்ந்தான். (௩க)

தமனிய மேரு வெற்பிற் றன்னுள மொருபபா டெய்த
திலனை யுன்னிப் பன்னா ணெடுந்தவ முழந்த லோடு
மிமில்விடை மிசைக்கொண் டங்க ணெம்பிரா னேகக் காணூஉ
வமரர்கோன் வணங்கிப் போற்ற வனையவ னருளிச் செய்வான். (௩உ)

நொந்தனை யளப்பில் கால மோற்றனை யாற்ற நீர்ந்தா
யிந்திர னினக்கு வேண்டிற் றென்னைய தியம்பு கென்ன
வந்தமி லறிவின் மேலோ னறிகிலன் போலக் கேட்ப
வந்தனை புரிந்து போற்றி மகபதி புகல லுற்றான். (௩௩)

பன்னரும் பழிசேர் சூரன் பருவரற் படுத்திப் பின்ன
ரென்னொரு புதல்வன் றன்னை யிமையவர் பலரை வாட்டித்
தன்னகர்ச் சிறையிட் டெம்மூர் தழல்கொளீஇத் தவறு செய்தா
னன்னவன் றன்னை யட்டே யளித்தியா லெம்மை யென்ன. (௩௪)

மெய்ம்மைய தகன்ற தக்கன் வேள்வியி னிருந்த பாவ
மம்மிடை யிருந்த தற்று னேதக வுழந்தீர் மேனா
ளம்மிடை யொருசேய் வந்து நணுகிவெஞ் சூரைக் காதி
யிம்மென வும்மைக் காப்ப னெனப்புகன் றிறைவன் போனான். (௩௫)

மறைந்தன னிறைவ னேக மகபதி யிரக்க மெய்திக்
குறைந்தன னுணர்வு துன்பங் கூர்ந்தனன் குமர னங்கட்
சிறந்துமைக் காப்ப னென்றே பிரானருள் புரிந்த பெற்றி
சிறந்ததன் மனததி லுன்னித் தேறின னுவகை செய்தான். (௩௬)

மாசறு காட்சி கொண்ட மாதவர்க் கருளி யெங்கோன்
றேசறு கைலை யுற்றா னுமையவ ளிமயஞ் சேர்ந்தா
ளாசறு குமர னன்னார்க் கடைவதெத் தன்மை யென்னு
வாசவ னிருந்து நாடி மனமிலைசக் கவலை கூர்ந்தான். (௩எ)

மயர்வொடு துறக்க மன்னன் மனோவதி யென்னு மாண்டை
யியவக ரெய்தி யாங்கண் வீற்றிருந் தருளும் பொன்னி

னியன்முறை மனைவி தன்பா லில்லினை யிருத்தல் செய்தாங்
கயனுறு கடிமாண் கோயி லடைந்தன னமர ரோடும். (௩அ)

இனையதோர் காலை முக்க ணெம்பிரான் ஞான போத
முனிவரர்க் குணர்த்தி வைகு முறையினுற் படைப்பின் ருகித்
துனியொடு வேதா வைகுந் தொன்முறை யவையை நண்ணி
யனையவன் கழன்முன் ருழுஉ வளப்பில வழுத்தி நின்ருன். (௩௯)

நிற்றலு மகவான் றன்னை நீடருள் புரிந்து நோக்கிப்
பொற்றனிக் கமல மேய புங்கவர் முதல்வன் வானோர்
கொற்றவ வந்த தென்னை கூறுதி யென்ன லோடுஞ்
சொற்றனன் சூர பன்மன் செய்திடுந் துன்ப மெல்லாம். (௪0)

வெய்யதோர் சூரன் செய்கை விளம்பியே முனிவர்க் கீச
னையமி லுணர்வு காட்டி யமர்வது முரைத்துத் தான்பின்
செய்யுறு தவங்கண் டன்னோ னருளிய திறனுஞ் செப்பி
யுய்வதோர் பரிச தென்னோ வும்பரும் யானு மென்ருன். (௪க)

என்றலு மலரோன் கேளா வெவர்க்குமே லாகு மீச
னென்றிய வருளி னேனு முற்றவர்க் குதவு வோனு
மன்றியு முறைசெய் வோனு மாதலின் முனிபோல் வெள்ளிக்
குன்றிடை யெமமை யாளுங் குறிப்பின்வீற் றிருந்தா னன்றே. (௪௨)

செங்கண்மா ருலு நானுந் தேடுதற் கரிதாய் நின்ற
வெங்கடம் பிரானற் கேலா வெண்ணவோர் தேவு முண்டோ
வங்கவன் ஞான போத மறிவுருக் குணாத்தி வைக
னங்குறை முழுது மாற்று நல்லரு ளாகு மன்றே. (௪௩)

படர்மதி மிலைச்சுஞ் சென்னிப் பகவனு ருயிர்க ளெல்லா
மடுவதும் வருத்தந் தீர்க்கு மாரரு ளான வாபோற்
கொடியவெஞ் சூரன் றன்னைக் கொண்டெமக் கலக்கண் செய்கை
விடலரும் பவப்ப ரூர்த்தி வீடருள் கருணை யன்றே. (௪௪)

பெற்றிடுங் குரவ ரானோர் பிள்ளைக டம்பா லேயொன்
றுற்றிடிற் பிறரைக் கொண்டு முறுதுயர் செய்து தீர்ப்பார்
மற்றவர் தம்பா லன்போ வன்கணோ வதுபோ னம்பாற்
பற்றிய பவங்க டீர்ப்பான் பரமனு மிவைகள் செய்தான். (௪௫)

தெருமரு கின்ற நம்பாற் றீங்கெலா நீங்கு மெல்லை
யொருசிறி தணுகிற் றுகு மாதலா லுணர்வின் மேலோன்
பரிவொடு மிங்பால் வந்து பரிசிவை யருளிப் போனு
னிருவினைப் பௌவ வேலை யேறினம் போலு மன்றே. (௪௬)

ஆதலி னிறைவ னேமே லருள்செயு மதற்கி யாமுந்
தீதற முயலு மாறு சிறிதுள திவற்றை மாயோற்
கோதினம் வேண்டுஞ் செய்கை யொல்லையிற் செய்து மென்னா
வேதமில் கமலப் புத்தே ளிருக்கைவிட் டெழுந்தா னன்றே. (சஎ)

வேறு.

அன்ன காலை யதுநன்று நன்றெனாத்
துன்னும் வானவர் சூழலொ டிந்திரன்
பின்ன ராகப் பெயர்ந்துடன் வந்திடச்
சென்னி நான்கினன் செல்லுதன் மேயினான். (சஅ)

ஞாலம் யாவையு நல்கிய புங்கவன்
வாலி தாந்தன் மனோவதி நீங்குறா
மேலை வைகுந்த மென்னும் வியனக
ரால யத்தி னகன்கடை யேகினான். (சகூ)

அங்க் வெல்லை யதுகண்டு நேமியுஞ்
சங்கு மேந்திய தானையங் காவலன்
செங்கண் மாயன்முன் சென்றுவிண் ணோருடன்
பங்க யத்தன் படர்ந்தது செப்பினான். (ருo)

பணில மேந்திய பண்ணவ னன்னரைக்
கொணர்தி யாலெனக் கூறி விடுத்தலு
மிணையில் காவல னுய்த்திட விந்திரன்
கணமொ டேகினன் காசினி நல்கியோன். (ருக)

பொருவின் மாமுனி புங்கவர் போற்றுதன்
னுருவு கொண்ட வுலப்பறு கண்ணார்கண்
மரபி னேதத மணிப்பணிப் பீடமே
லரி யிருந்த வவைக்கள நண்ணினான். (ருஉ)

அன்ன மூர்தி யமருல காளுறு
மன்ன னோடுமவ் வானவர் தம்மொடும்
பன்ன காசனப் பங்கயக் கண்ணவன்
பொன்னின் மாணடி போற்றி வணங்கினான். (ருங)

தரை யளந்திடு தாளின னவ்வழிக்
கருணை செய்துதன் காதல னாகிய
பிரம னுக்கொரு பீடிகை பெற்றியா
லருளி யங்க ணவனை யிருத்தினான். (ருச)

குல்லை மாமுடிக் கொண்ட வளத்துணை
யல்லி மாமல ரண்ணலை நோக்குறீஇ

யொல்லு கின்விதி யூறில தாகியே
செல்லு கின்றகொ லென்றலுஞ் செப்புவான் (௫௫)

கன்க னச்சுறக் கந்திடை வந்தெழு
மனக வித்திறங் கேட்க வறிவுடைச்
சனகன் முற்படு தாபதர் நாலவரு
மெனக ருத்திடை முற்பக லெய்தினர். (௫௬)

அறிவின் மிக்க வனையரை நோக்கியான்
பெறுவ தாமிப் பெருந்தொழி லாற்றியீண்
டுறுதி ரென்ன வுளததது கொண்டிலர்
முறுவல் செய்து மொழிந்தன ரிவ்வுரை. (௫௭)

பாச வன்சிறைப் பட்டுப் படைப்பெனப
பேச லுற்ற பெருந்தளை பூணல
மீசன் மாணடி யெய்துதும் யாமென
மாசில் காட்சியர் வல்விரைந் தேகினர். (௫௮)

மாத வத்தினை மைந்தர்க ளாற்றலு
மாதி நாயக னவ்வுழி வந்துமக்
கேது வேண்டிய தென்றலு மெண்ணிலா
வேத வுண்மை விளம்புதி யாலென்றார். (௫௯)

என்ற லோடு மிறையவன் வெள்ளியங்
குன்ற மீதுதென் கோட்டிடை கீற்புறு
மொன்றொ ரானிழ லுற்று மறையெலா
நன்று ணர்த்திட நால்வருந் தேர்ந்தனா. (௬0)

முந்தை வேத முழுது முணர்த்தியே
யெந்தை யேக விருக்கலம் போந்துதஞ்
சிந்தை யொன்றுந் திறனறி தாதலி
னொந்து பின்னரு நோற்றலை மேயினர். (௬௧)

பின்னு மைந்தர் பெருந்தவ மாற்றியே
தொன்ன லம்பெறு தூய வுளததரா
யென்னை யாளுடை யீச னருளினன்
மன்னு வெள்ளி வரையிடை யேகினர். (௬௨)

ஏகல் பெற்றிடு மக்கட் கினிதுளம்
பாக முற்ற பரிசுணர்ந் தெம்பிரா
னாக மத்தி னரும்பத மூன்றையு
மோகை பற்றி யுணர்வகை கூறியே. (௬௩)

கூனன் மாமதிக் கோடு மிலைச்சிய
வான நாயகன் மற்றவர் காண்டக
ஞான போத நிலருந் தன்மையான்
மோன மேய முதற்குறி காட்டினுன். (சுச)

அந்த வெல்லை யரனருள் கண்டுதம்
புந்தி யொன்றியப் புங்கவன் ருண்மலர்
சிந்தை செய்து செயலற்று வைகினுர்
முந்தி யாப்புறு முத்தளை மூட்டற. (சுரு)

வேத நாயகன் மெய்த்தவர்க் கோர்கணம்
போத யோகின் பொருண்மையைக் காட்டுழி
யோத லாகு முகம்பல சென்றன
சீத வானதி சேர்ந்ததொன் ருளினே. (சுசு)

அன்னை தன்னை யகன்றரன் யோகிபோ
லென்ன துஞ்செய லின்றி யிருத்தலான்
முன்னை யாண்பெண் முயக்கம தின்மையாய்
மன்னு யிர்த்தொகை மல்கலின் ருயதே. (சுஎ)

நவிற லென்னினி ஞாலம் விசும்புளா
ரிவறு காமப் புணர்ச்சிய தின்றியே
கவறல் கொண்டு கலங்கரு ரெய்தினர்
தவறல் கொண்டது நல்குந் தனிச்செயல். (சுஅ)

நல்கல் பெற்ற தமியனு நாமகட்
புல்கல் பெற்ற புணர்ச்சியின் ருகியே
யல்கல் பெற்ற வருந்தவ யோகரி
னெல்கல் பெற்றன னுண்மையி தாகுமால். (சுகூ)

நிற்க விங்கிது நித்தன் வரத்தினு
லொற்கமில்வள னுண்டிடு வெய்யகூ
ரெற்கு நித்தனு மேவலொன் றிட்டனன்
சொற்க நாட்டிற் றுயரினை நாட்டினுன். (எ0)

தேசு நீங்குறு தேவரை யீண்டுள
வாச வன்றனை மாதிரத் தோர்களைப்
பாச னத்தொடு பற்றின னித்தலுங்
கூச லின்றிக்குற் றேவல்கொண் டானரோ. (எக)

நிறைபு ரிந்த நிலவினை வாளரா
மறைபு ரிந்தென வானகத் தோருட

னிறைபு ரிந்தவிவ் விந்திரன் மைந்தனைச்
சிறைபு ரிந்தனன் றீத்தொழி லாற்றியே. (எஉ)

நிரந்த பல்லுயிர் தங்கட்கு நித்தலு
மரந்தை மல்க வறிகிலன் போலவே
யிருந்த னன்சிவ னென்னினிச் செய்வது
விரைந்து கூறுதி யென்று விளம்பினான். (எக)

அரிய தத்துவ மையைந்தின் பேதமு
மரபி னுடினர் வாலுணர் வெய்திய
திருவி னுயகன் செங்கம லந்திகழ்
பிரமன் மாமுக நோக்கினன் பேசுவான். (எச)

வேறு.

ஆவிக ளனைத்து மாகி யருவமா யுருவ மாகி
மூவகை யியற்கைத் தான மூலகா ரணம தாகுந்
தேவர்க டேவன் யோகின் செயன்முறை காட்டு மென்னி
லேவர்கள் காமங் கன்றித் தொன்மைபோ லிருக்கு நீரார். (எரு)

ஊழ்வினை நெறியான் முன்ன மொருபெரு வேள்வி யாற்றித்
தாழ்வினை யடைந்த தக்கன் றன்புடை யிருந்தோர் தம்பாற்
சூழ்வினை யெச்ச முற்று மருத்தியே தொலைத்துத் தொல்லை
வாழ்வினை யருள நாதன் மனத்திடை நினைத்தா னன்றே. (எசு)

சூரெனு மவுணர்க் காற்றல் புரிந்ததுஞ் சுரர்கள் யாருஞ்
சார்வருந் திறத்தா லீசன் றவத்தருக் குணர்வு காட்டி
யாருயி ரெவைக்கு மின்ன லாக்கிய வாறுந் தூக்கிற்
பேருண் முறையே யன்றிப் பிறிதொரு செயலு மன்றால். (எஎ)

முனிவருக் குணர்வு காட்டு மோனத்தை முதல்வ னீங்கிப்
பனிவரை யணங்கை மேவிற் படைப்பயன் முற்று மன்னாற்
கினியொரு குமரன் றோன்றிற் சூர்கிளை யெனைத்தும் பொன்றுந்
தனியுறு மூலக மெல்லாந் தொன்மைபோ லுய்யு மாதோ. (எஅ)

அத்திற முற்று மாறொன் றறைகுவ னகிலந் தன்னி
லெத்திறத் தருமால் கொள்ள வெய்திடுங் காமன் றன்னை
யுய்த்திடின் முனிவர் தங்கட் குணர்வுசெய் மோன நீங்கிச்
சத்தியை மணந்து சேயைத் தந்திடு மெந்தை யென்றான். (எகு)

பதுமபீ டிகையோ னன்ன பரிசுதேர்ந் துவகை யெய்தி
யிதுசெயன் முறையே யெந்தா யேற்றன புகன்று யென்ன
வதுபொழு தவனை நோக்கி யச்சுத னமலன் றன்பான்
மதனனை விளித்து வேண்டி விடுத்திநீ வல்லை யென்றான். (அ0)

என்னனு மலரோ னுள்ளத் திசைவுகொண் டெழுந்து மாயன்
பொன்னடி வணக்கஞ் செய்து விடைகொடு புலவரோடு
மன்னொடு மங்க ணீங்கி மனோவதி யத்தன்பாற் சென்று
தன்னக ரடைந்து கஞ்சத் தவிசின்வீற் றிருந்தா னன்றே. (௮௧)

ஆ திருவிருத்தம் ௪௧௧.

வசனம்.

பரமேசுவரியானவள் மலையரையன் மகளாய் அவதரித்துத் தவஞ்செய்யுங் காலத்தில், காசிபமுனிவனுக்கு மாயையினிடந்தோன்றிய சூரபன்மன் ஆயிரத்தெட்டு அண்டங்களையும் ஆண்டுவந்தான். அந்தக் காலத்தில், சனகாதியர் நால்வரும் பரமசிவனைநோக்கித் தவஞ்செய்து இறைவனருளால் கைலைமலையை யடைந்து நந்திதேவரால் காவல்செய்யப்படுகிற முதல் வாயிலையடைந்தார்கள். அவர்களை நந்திதேவர் இறைவன் சந்நிதியிற் கொண்டுபோய் விடுதலும் அவர்கள் நால்வரும் இறைவனைப் பலவகையாய்த்துதித்து வணங்கி எம்பெருமானே! யாங்கள் வேதமாகிய பெருங்கடலில் வீழ்ந்து கரைகாணாது வருந்தா நின்றோம், எங்களுக்கு மெய்யுணர்வு தோன்றும்படி கருணைசெய்ய வேண்டுமென்று வேண்டினார்கள். அதற்கு இறைவன் மனமகிழ்ந்து, அவ்வாறே உங்களுக்கு வேதாகமாதிகளின் முடிவை யுணர்த்துவோம் என்றுசொல்லி, நந்திதேவரைநோக்கி, மன்மதன்றவிர வேறெவர் வந்தாலும் விடவேண்டாமென்று கட்டளையிட, அவரும் அவ்வாறே சென்று காவல் செய்திருந்தனர். பிறகு இறைவன் சனகாதியருக்குச் சரியை கிரியை யோகபாதங்களை விளங்கக்கூறலும், அவர்கள் எங்களுக்கு மனவொடுக்கமுண்டாகும்படி ஞானபாதத்தைப் போதிக்கவேண்டு மென்றுவேண்ட, இறைவன், அவர்களைநோக்கி, அது வாக்கினாற் சொல்லலாவதன்று, இப்படிச் சும்மாவிருப்பதே யாகுமென்று தமது திருமார்பிலமைத்த சின்முத்திரைக் கையோடு ஒருகணப்போது யோகஞ்செய்பவர்போ லெழுந்தருளி யிருந்தார். அந்த யோகநிலையைக் கண்ட சனகாதியர் நால்வரும் இறைவனருளுணர்த்தத் தாமும் மனமொடுங்கி அவ்வாறே சித்திரப்பாவைபோல் அசைவற்றிருந்தார்கள். இப்படி இறைவன் யோகு செய்திருந்த ஒருகணப் பொழுதானது பிரமன் முதலிய தேவர்களுக்கு அநேக யுகங்களாயிருந்தது. அது எப்படியிருந்ததென்றால், காஞ்சிமாநகரில் கம்பாநதியையேவக்கண்டு அஞ்சி இறைவனைத் தழுவிக்கொண்ட இமயவல்லியானவள் அவனது கண்புதைத்தகாலம் போலிருந்தது. எல்லாப் பொருள்களுக்குங் காரணனாகிய பரமசிவன் சனகாதியருக்கு ஞானபாதத்தை மோனநிலையில் இருந்துணர்த்தியதனால், போக பூமியில்வாழ்கின்ற தேவர்களெல்லாம் முற்றத்துறந்த முனிவர்போல அரம்பைமாதர் போகத்தை விரும்பா தொழிந்திருந்தார்கள். பூலோகவாசிகளும் காமப்பற்றற்றுக் கிடந்தார்கள். இதுநிற்க; சூரபன்மன் தேவர்களுக்கு இடுக்கண்செய்ததால், இந்திரன் தேவர்களோடும் விண்ணுலகைவிட்டு மண்ணுலகைச்சேர்ந்து, கைலாயமலையையடைந்து இறைவனைக் காண்கிலனாகி, மேருமலையையடைந்து, என் மகனாகிய சயந்தனைச் சூரபன்மன் மகனாகிய பானுகோபன் சிறைகொண்டுபோயினனேயென்று துக்கித்து, அந்த மலையினொருபக்கத்தில் பரமசிவனைநோக்கித் தவஞ்செய்தான். பரமசிவன் அவனுக்கெதிரேதோன்றி, ஒன்றுமறியாதவர் போ

ன்று, நீ யாது கருதித் தவஞ்செய்கிறாயென்று கேட்க, இந்திரன் இறைவனை நோக்கி, என்மகனைச் சூரபன்மன் மகன் சிறைகொண்டு போனதேயன்றி விண்ணுலகத்தையு மழித்து எங்களுக்கெல்லாம் இடுக்கண் செய்தான்; ஆகையால், அவனை முடித்து எங்களுக்கு முன்போலவே விண்ணுலகவாழ்வைத் தந்து மகிழ்விக்க வேண்டுமென்று வேண்டிக்கொண்டான். கொள்ளவே, இறைவன் அவ்விந்திரனை நோக்கி, நீ கவலைப்படவேண்டாம். தக்கன்சொல்லைக்கொண்டு எம்மைப்பிழைத்ததனால் இந்தக் கெடுதியுண்டாயிற்று. எமக்கொரு புதல்வன் தோன்றுவன். அவன் சூரபன்மனைவென்று உன்னையும் தேவர்களையும் விண்குடியேற்றுவன் என்று சொல்லிமறைந்தனன்.

பிறகு இந்திரன், பரமசிவன் கல்லாலின்கீழ் யோகஞ்செய்பவன்போலமர்ந்திருக்கின்றனன். உமாதேவி மலையரையன் மகளாகத் தவஞ்செய்வாளாயினள். இறைவன் சொன்ன செய்தி யெவ்வாறு நிறைவேறுமென்று யோசித்து, மனோவதி நகரமடைந்து வியாழபகவான் மனைவியிடத்தே தன்மனைவியாகிய புலோமசையை யனுப்பி, தேவர்களோடும் பிரமன் வீற்றிருக்கு மிடத்திற்சென்று, அவனைக்கண்டு வணங்கி, மேலேநடந்த செய்தியெல்லாஞ்சொல்லி, யாங்கள் பிழைக்கும் வகையென்னென்று வேண்டி நின்றான். அப்போது பிரமன் இந்திரன் முதலியோரை நோக்கி, உலகில் தாய்தந்தையர், பிள்ளைகளுக்கு நோயுண்டான காலத்தில் பிறரைக் கொண்டும் அந்த நோயைத் தீர்ப்பார்கள். அதுமறக்கருணையோ அறக்கருணையோ என்பதை நீங்களே தெரிந்துகொள்ளுங்கள். நமது தீமைகளெல்லாம் நீங்குங்காலம் வந்தடுத்ததனால் இறைவன் எழுந்தருளி, நமக்குத் தைரியமாக நல்லுரைவழங்கிச் சென்றனன். ஆயினும் நாமும் செய்யவேண்டிய முயற்சிகளைச் செய்யவேண்டும் என்றுசொல்லித் தனது தாமரை மலர்ப்பீடத்தைவிட்டிழிந்து நடக்க, தேவர்களும் பின்றொடர்ந்து செல்ல வைகுந்த நகரையடைந்து திருமாலைவணங்க, அவர் பிரமன் முதலியோரை அவரவர்க்குத்தக்க தவிசளித்து, அவர்களைநோக்கி, நும்தொழில்கள் குறைவற நடக்கின்றனவோவென்று வினவப் பிரமன் திருமாலைநோக்கி எம்பிரானே! என்மானதப் புதல்வரை நானழைத்து, என் படைப்புத்தொழிலை நீங்கள் ஏற்றுக்கொள்ளுங்கள் என்றேன். அவர்கள் நால்வரும் என்சொற்கிணங்காமல், இந்தப் பாசபந்தத்தி லகப்பட்டுழல மாட்டோம்; சிவபெருமானது திருவடியடைந்து பேரின்பப் பேற்றை யடைவோமென்று சொல்லிப்போய்த் தவஞ்செய்வாராயினர்.

அப்படித் தவஞ்செய்ததற்கு இறைவன் திருவுளமிரங்கித் தரிசனந்தந்து, உமக்கு வேண்டியதென்னென்று கேட்க, என் புதல்வர், வேதாகமமுடிப்பொருளை யுணர்த்தவேண்டுமென்றார்கள். இறைவன் அதற்கிசைந்து அவர்களையழைத்துக்கொண்டு, அந்தக் கைலைமலைச்சிகரத்தின் தென்றிசையிலிருக்கிற கல்லாலமரநிழலிலெழுந்தருளி வேதாகமமுடிப்பொருளை விளக்கியருளினன். அருளியும் இவர்களுக்கு ஐயந்திரிபுகளொழியாது மீட்டுந் தவஞ்செய்ய, சிவபிரான் எழுந்தருளிச் சிவாகமங்களிற்சொல்லப்பட்ட சரியைகிரியை யோகபாதங்களை யருளிச்செய்து, பின்பு ஞானபாதத்தைத் தமது மோனநிலையாலறிவித்தருளினார். அவர் மோனநிலையில் அசைவற்றிருந்தது ஒரு கணப்பொழுதாயினும் அது தேவர்முதலியவுயிர்களுக்கு அநேகயுகங்களாயிருந்தது. எல்லாப்பொருள்களுக்குமுதல்வியாகிய இறைவியை நீங்கி இறைவன் யோகியாயெழுந்தருளியிருந்தமையாலும் அவனன்றியோரணுவும்

மையாதாதலாலும் ஜீவகோடிகளெல்லாம் ஆண்பெண் முயக்கமின்றிக்கிடந்தன. இனியானென்சொல்வேன், காமத்தொழில் உலகில் நடவாமையால் என்படைப்புத்தொழிலும் நின்றுவிட்டது. இதுநிற்க; இறைவனருளால் ஆயிரத்தெட்டு அண்டங்களையும் ஆண்டுவருகிற சூரபன்மன் என்னை யேவல்கொண்டு வருத்தியும் வருகிறான். அப்படியே இந்திரன்முதலாயினோரையும் வருத்துகிறான். இராகுவானவன் சந்திரனைப்பிடித்து வருத்துவதுபோல, இந்திரன்மகனாகிய சயந்தனையும் இன்னுஞ்சில தேவர்களையும் அச்சூரபன்மன் சிறையிலிட்டு வருத்துவதேயன்றி, விண்ணுலகத்துப் பொற்கோலத்தையும் கரிக்கோலமாக்கிவிட்டான். இவையாவும் தனது முற்றுணர்ச்சியால் அறிந்த பரமசிவனும் ஒன்றுமறியாதவன்போலச் சும்மாவிருக்கின்றனன். இனிச்செய்யத்தகுந்தது இன்னதென்று தேவரீரே யருள்செய்ய வேண்டுமென்றுசொல்லிப் பிரார்த்தித்துநின்றான்.

அப்படிச்சொல்லிநின்ற பிரமனைத் திருமகள்கணவன் கடாக்ஷித்து, எல்லாவுயிர்களுள்ளும் அந்தராத்மாவாய் வியாபித்துவிளங்குஞ் சிவபிரானே யோகஞ்செய்வானாயின், இவ்வுலகில் காமத்தொழில் எவ்வாறுநிகழும்? முற்காலத்தில் தக்கன் யாகஞ்செய்து தாழ்வடைந்ததேயன்றி அவனோடு சம்பந்தப்பட்டிருந்தமையால் யாமும் துன்பமடைந்தோம். இனி அத்துன்பம் நீங்குங்காலம் நெருங்கியது. சூரபன்மன் றோன்றியதும், அவுணர் உலகத்தை வருத்துவதும், இறைவன் யோகியாயிருந்து சநகாதிகளுக்கு ஞானநெறிகாட்டி யுயிர்களுக்குத் துன்பஞ்செய்ததும் நோக்கும்போது அவனது பேருளேயன்றி வேறொன்றுமில்லை. அவ்விறைவன் மோனநெறியைவிட்டு மலைமகளைமணந்து அவளிடமாக ஒரு புதல்வனைப் பெற்றாலன்றிச் சூரன்முதலானோர் நாசமடையார். உலகம் அப்போதுதானுய்யும். பெருந்தவஞ் செய்வாரையுந் தன் புஷ்பபாணத்தால் மயக்குகிற மன்மதனையேவினால் இறைவன் தன் மோனநெறிநீங்கி அருட்சத்தியாகிய இமயவல்லியைத் திருமணம்புரிந்து குமரவேளை யளித்தருள்வனென்று சொல்லப் பிரமனும் அதற்கிசைந்து திருமாலின் றிருவடியைவணங்கி இதுசெய்தலே தகுதியென்றுசொல்லத், திருமாலும் மன்மதனையழைத்து விரைந்தனுப்புக என்று சொல்லுதலும், பிரமன் தேவர்களோடு திருமாலிடத்து விடைபெற்றுத் தன்னகரத்திற்குச்சென்று தனது தாமரைமலர்ப்பீடத்தில் வீற்றிருந்தான்.

மேருப்படலமுற்றிற்று.

---

## காமதகனப்படலம்.

இந்திரன் வானவ ரீட்டமொ டேகி
முந்துறு கஞ்ச முகட்டிடை யுற்றோ
னைந்திற னாகிய வாசுக வில்வேள்
வந்திடு மாறு மனத்தி னினைந்தான். (௧)

நினைந்திடு கின்றுழி நீனிற மாயோன்
முனைந்தரு கின்ற முரண்டகு வில்வேண்
மனந்தனி லுன்னு மலர்ப்பக வன்முன்
னினைந்தரு சூழ்லொ டிம்மென வந்தான். (௨)

மாமறை யண்ணன்முன் வந்து பராவித்
தாமரை நேர்தரு தாடொழு தென்னை
நீமன மீது நினைந்ததெ னென்னக்
காமன் வினாவ வயன்கழ றுற்றான். (ஙு)

கங்கை மிலைச்சிய கண்ணுதல் வெற்பின்
மங்கையை மேவநின் வாளிக ளேவி
யங்குறை மோன மகற்றினை யின்னே
யெங்கள் பொருட்டினி லேகுதி யென்றான். (சு)

வேதனிவ் வாறு விளம்பிய கூற்றுந்
தீதுறு பொங்கழல் செய்யவள் சேயோன்
காதிடை யேநெறி யாக்கடி திற்போ
யேதமி லுள்ள மெரித்ததை யன்றே. (ரு)

கிட்டி யரன்செயல் கேடுசெ யென்னுங்
கட்டுரை யேவரு காமனு ளெங்குஞ்
சுட்ட தெனிற்பிறை சூடிய வன்மெய்
யட்டிடு கின்றது மற்புத மாமோ. (சு)

இத்திற மாமல ரேந்த லியம்பக்
கைத்துணை கொண்டிரு கன்னமும் வல்லே
பொத்தி யினைந்து புராந்தக னைமஞ்
சித்தச வேளுரை செய்தன னம்மா. (எ)

சுட்டுறு பல்லவ மெய்துவ தோர்சொற்
கேட்டன னென்று கிலேசம தாகி
வாட்டிய மென்மலர் போலணி மாழ்கிப்
பூட்டுவி லண்ணல் புகன்றிடு கின்றான். (அ)

வேறு.

வன்கண் ணருமா சறுகாட் டியர்பா
லின்கண் ணுறினுய் யுநலம் புகல்வா
ருன்கண் ணுறினித் தவரோ தினையா
லென்கண் ணடிகட் கிலையோ வருளே. (கூ)

வன்னப் புவிமங் கையைமா மலர்மேற்
பொன்னைப் பிறரைப் புணர்வுற் றிடுவான்
கன்னற் சிலைபூங் கணைகொண் டமர்செய்
தென்னத் தனைவென் றிசைகொண் டிலனோ. (கம)

வெள்ளைக் கமலத் திறைமெய் யுறவுந்
தெள்ளுற் றணிசெய் ததிமேலாத் தமைபா
லுள்ளப் புணர்வுற் றிடவும் முனையான்
பிள்ளைச் சமர்செய் திசைபெற் றிலனோ. (கக)

சீர்பெற் றிடுசெங் திருவைத் திருமான்
மார்பிற் குடியா வுறவைத் திலனோ
கார்பெற் றவிழிக் கலைமங் கையையுன்
னேர்பெற் றிடுநா விலிருத் திலனோ. (கஉ)

தண்ணின் றகுழற் சசியென் றுரைசெய்
பெண்ணின் றலையுற் றிடுபெற் றியலால்
விண்ணின் றலைவற் குளமெய்ம் முழுதுங்
கணணென் றிடுபல குறிகண் டிலனோ. (௧௩)

விசையுற் றிடுசெங் கதிர்மே லவர்கீழ்த்
திசையுற் றவராங் கொருசே யிழைபோ
லிசையுற் றிடுபா கனிடைப் புணரா
வசையுற் றிடுபான் மையயக் கிலனோ. (௧௪)

கதனத் தொடுவந் தகலந் தவர்பா
லிதநட் புறுமா மதியென் கணையான்
மதனத் தொடுதே சிகன்மா தையுறப்
புதனைத் தருபான் மைபுணர்த் திலனோ. (௧௫)

முற்றே தின்மறைத் தொகைமூ தறிவாற்
கற்றே தமுணர்ந் திடுகோட் சிபெறு
நற்றே வர்கள்யா ரையுநா ரியர்தங்
குற்றே வலசெயும் படிகூட் டிலனோ. (௧௬)

மறைதே ரும்வசிட் டன்மரீ சிமிகக்
குறிதா முனியத் திரிகோ தமனால்
லறிவா லுயர்கா சிபனா தியராந்
துறவோர் தமதாற்ற றொலைத் திலனோ. (௧௭)

மன்னான் மரபுற் றிடுமா னவரைப்
பின்னா கியமும் மைகொள்பே தகரை
மின்னார் கண்மயக் கினில்வீட் டிலனோ
வென்னா ணைகடந் தவர்யா ருளரே. (௧௮)

அறைபெற் றிடுமெத் திறமா னவெலா
முறைபெற் றிடுமென் னின்முடிந் திடுமோ
பிறைபெற் றிடுகின் றபெருஞ் சடையெம்
மிறைபெற் றிடுசத் தியியற் றிடுமே. (௧௯)

மாலே முதலா கியவா னவர்தம்
பாலே யடல்வா கைபடைப் பதலான்
மேலே நதிசூ டியமே லவன்மேற்
கோலே வினன்வென் றிடல்கூ டுமதோ. (௨௦)

ஐந்தா கியசீர் கொடவன் முறைசெய்
நொய்தா னவர்போ லநுவன் றனையால்
வெய்தா மழலா கியமே லவன்மே
லெய்தா லுமென்வா ளிகளெய் திடுமோ. (௨௧)

கையுந் நகையுங் கதிரார் விழியு
மெய்யுந் தழலாம் விமலன் றனையூ
னெய்யும் படிசென் றிடுமிவ் வுயிர்கொண்
டெய்யுந் திறமு முளதோ வுரையாய். (௨௨)

பற்றோ டிகலற் றபரம் பொருளை
யெற்றோ மயல்செய் குவதீ சனையு
மறறோ ரெனநின் னின்மதித் தனையாற்
சற்றோ வலனுற் றறவிர்த் திடவே. (௨௩)

சூறா வளிவை கியசூ ழலின்வா
யேறா வொருபூ ளையெதிர்ந் துளதே
னீறா டியமெய் யுடைநின் மலன்மேல்
வீறாய் வினையேன் பொரமே வுவனே. (௨௪)

ஆறுற் றிடுசெஞ் சடையண் ணலுடன்
மாறுற் றவருண் டெனின்மற் றவர்தா
மூறுற் றனரல் லதுளத் துயர்கொண்
டேறுற் றனரல் லதிருந் துளர்யார். (௨௫)

இந்நா ரணனு தியர்யா வர்களு
மந்நா ளமலன் பணியாற் றிடலு
முன்னா வவர்நின் றனைமொய்ந் நகையா
லொன்னார் புரமட் டதுணர்ந் திலையோ. (௨௬)

எந்தா யருளென் றொரிளங் குமரன்
வந்தா தியையேத் தலும்வை துநனக்
கொந்தா ரழல்போல் வருகூற் றுவனை
யந்தாள் கொடுதைத் ததறிந் திலையோ. (௨௭)

முன்னைப் பகனீ யுமுகுந் தனுமாய்ப்
பன்னா கரிதா யபரம் பொருள்யா
மென்னச் சிவனெய் தியிகழ்ந் தவுனைச்
சென்னித் தலைகொண் டதுதேர் கிலையோ. (௨௮)

அடன்மே வுசலந் தரனு தியராய்ப்
படிமே லுளதோர் பலரோ னவர்தா
முடிவா ரரனே டெமுரண் டிடலுங்
கெடுமா றுபுணர்த் ததுகேட் டிலையோ. (௨௯)

வீடெய் துறுநின் மகன்வேள் விகிலத்
தூடெய் தினர்யா வருமொய் பிலரன்
மாடெய் தியவீ ரனின்மா னமொரீஇப்
பாடெய் தியபுன் செயல்பார்த் திலையோ. (௩௦)

அண்டா தவகந் தையொடா ழியின்வாய்
விண்டா னவரச் சுறமே வுவிட
முண்டா னிகழ்கங் கையையோ ரணுவிற்
கொண்டா னவன்வன் மைகுறிக் கிலையோ. (௩௧)

தரியா வுடைமால் கொடுதன் னிகழு
மரியே றடைகம் வையடற் புலியை
யுரியா மிசைபோர் வையுடுக் கையெனப்
பரியா வரனுற் றதுபார்த் திலையோ. (௩௨)

ஒராார் தனதுண் மையையுள் ளமிசை
யுாரா யினுமாற் றவகந் தைகெறின்
வாராா வவர்தம் வலிமாற் றிடுமாற்
றோராய் கொல்பரஞ் சுடர்செய் கையதே. (௩௩)

இறுகின் றகலைப் பகலி றிலந்தார்
கறைதன் றுமிடற் றிறைகண் ணினும்வீழ்
பொறியொன் றதனாற் பொடிபட் டிடுநீ
யறிகின் றிலையோ வகிலங் களுமே. (௩௪)

இப்பெற் றியனு கியவீ சனையென்
கைப்பற் றியவிற் கொடுகந் தமலா
ரப்பிற் பொருகின் றிலனு ருயிர்மேன்
மெய்ப்பற் றிலரிச் செயல்வேண் டுவரோ. (௩௫)

மேனு ளகிலந் தரமெல் லியலா
வானு வருடன் னையளித் தொருபாற்
றானு கவிருத் தியதற் பரனை
நானு மயல்செய் வதுநன் றிதுவே. (௩௬)

வேறு.

என்னு மதவே ளிசையா மறுத்திடலும்
பொன்னூர் கமலப் பொகுட்டுத் தலைவந்த
மன்னூன வேதா மனக்கவலை கொண்டுசில்போ
தன்னு நெடிதே யுயிரா வுரைக்கின்றுன். (௩௭)

வெண்மை யறிவாற் றமைவியக்கும் விண்ணவர்பா
லுண்மையில னுரு முண்ணவியல் கூறினையா
லுண்மை யிதுவா முவனைப் பொருவதுவு
மெண்மை யதுவோ வெவர்க்கு மரிதன்றே. (௩௮)

அன்ன பரிசே யெனினு மடைந்தோர்த
மின்ன லகற்று மிறையருளா லிக்கரும
முன்னின் முடியு மொழிந்தோரீன் முற்றுவதோ
முன்னி னிதறகு முதற்கா ரணநீகாண். (௩௯)

எல்லார் செயலு மிறைவ னியற்றுவதே
யல்லா திலையோ ரணுவுமசை யாதெவையு
நில்லா தருளின்றே னீயின் றவன்பாலிற்
செல்லா யுனது செயலுமவன் செய்கையதே. (௪0)

செம்மாந் ததற்புகழுந் தேவர்குழு வும்மருள
வெம்மான் பிறன்போ லிருந்தோர் தரும்புரிநீஇ
யம்மாதன் செய்கை யனைத்துமெனக் காட்டினனே
நம்மாலு முற்றுஞ் சிலவென்கை நாணன்றே. (௪௧)

பாடு திகழ்பாவை பல்லுயிரு மல்லனவு
மாடல் புரிவிப்பா னுருவுருவாய் நின்றபரா
னுடி லவனையின்றி நம்மாலொன் றுகவற்றே
வேடு விதனிலைமை யிந்நாளு மோர்ந்திலையோ. (௪௨)

கையம்பு பூட்டிக் கருபபுச சிலைகோட்டி
யெய்யும படிவழிக்கொண் டேகா யிறுதியிலா
ஐயன் றனைநீ யதுவு மவனருள்காண்
மெய்யங்க தறகேது மேன்மேலே கண்டனம்யாம். (௪௩)

ஈங்கிதுவு மன்றி யெவரேனுந் தம்மடைந்தாத
தீங்கு பெறினுதவி செய்யென் றிரந்திடலு
மாங்கொருவன் செயயா ததுமறுததுத தன்னுயிரைத
தாங்க லுலக நடைதனக்குத தககதுவோ. (௪௪)

என்னானு மோருதவி யாதொருவன் யாக்கெனினுந்
தன்னான் முடிவதெனிற் றானே முடிததறலை
சொன்னான் முடிதத லிடையாருஞ் சொல்லுகினும்
பன்னாண் மறுததுப புரிதல்கடைப் பான்மையதே. (௪௫)

ஏவ ரெனினு மிடருற றனராகி
யோவில குறையொன் றுளரே லதுமுடிததற
காவி விடினு முறனே மறுததுளரேற
பாவ முலது பழியு மொழியாதே. (௪௬)

உய்கை பொருளா வொருவர்க்கு மோருதவி
செய்கை யிலனேற் சிறியோன கழிததபகல்
வைக லதுவோ வறிதே யுவன்வாழ்க்கை
பொய்கை மலர்ந்தகொட்டி போலும பொலிந்துளதே. (௪௭)

அந்நா ரணனோ டமர்முற் றியமுனியைப்
பொன்னா டருளும் புலவோ ரிறையிரபப
வென்னாரு மெனபு விருததிர னுக் காவுதவித
தன்னா ருயிர்விடட தனமைதனைக கேடடிலையோ (௪௮)

மேலோன் றுளதோ விளமப வெவரெவர்க்கு
மூலந் தலைதெரியா முன்னோன கடலெழுந்த
வாலந் தனையுண் டமரர்க கமுதளிதத
சீலந் தனைநீ சிறிதுந் தெளிந்திலையோ. (௪௯)

தேக்குஞ் சலதியிடைத தீபபோ லெழுந்தவிடந்
தாக்கும பொழுது தளரே லெனவுரையா
வூக்கங் கொடுமா லொருகணத்தின றேநமைக
காக்கும் படிக்குக் கறுததசெயல கண்டிலையோ. (௫௦)

ஆரா யினுமொருவ ரன்பிற றலைபபட்டுப்
பேரா தரததாற் பிறர்க்குதவி செய்வா ரேற்
றீராத வெந்துயரிற் சோதலே மாய்தலிவை
பாரார் புகழே பயனென்று கொள்வாரே. (௫௧)

சூரந் தனில்வலிசேர் சூரபன்ம னேவலின்யா
மாருந் துயர்கொண் டழுங்கினோ மன்னதினித்
தீரும் படிக்குச் சிவனொருசே யைததருவா
னோரம் படைசெலுதத வுன்னையாம் வேண்டினமே. (௫௨)

ஆதலினு லெங்க ளலக்கணகற் றும்பொருட்டுச்
சாதல் வரினுந் தவறு புகழ்செய்வா
ரேது வரினு மெதிர்செல்வா ரெம்பணியிற்
போதி யினிமாறு புகலே லெனவுரைத்தான். (௫௩)

வேறு.

பங்கயப் பொகுட்டிருந்த பகவனீது புகறலு
மைங்கணைக் கரத்தினோ னரங்கனெய்தி யாதியாம்
புங்கவற்கு மாறுகொண்டு பொருகிலே னிதன்றியே
யிங்கெனக் கடுத்ததொன் றியம்புசெய்வ லென்றனன். (௫௪)

என்னும்வேலை யமரரோ டிருந்தவேதன் முனிவுறா
நன்னயந் தழீஇயுரைத்த நமதுசொன் மறுத்தியா
லன்னபான்மை புரியினுய்தி யல்லதே லுனக்கியாந்
துன்னுசாப மிடுதும்யாது துணிவுசொல்லு கென்றனன். (௫௫)

வெய்யசாப மிடுதுமென்று வெகுளியான் மொழிந்தகேட்
டையமேனி மதனவே ளழுங்கிவெய் துயிர்த்தினிச்
செய்யலாவ தென்னெனத் தெரிந்துசிந்தை தேறறியே
வையகம் படைத்தவண்ணல் வதனநோக்கி யுரைசெய்வான். (௫௬)

கேளிதொன் றுரைப்பல்வேத கேடுசூழு மினதுவாய்ச்
சூளின்மேலை யியல்பகன்று தன்புழுந்து படுதலிற்
காளகண்டன் முன்புசென்று கடியவெய்ய கணைகளேய்
மாளினுஞ் சிறந்ததம்ம மற்றுமுய்ய லாகுமே. (௫௭)

செற்றநீர்மை கொள்ளலைய செஞ்சடைப் பிரானிடத்
திற்றைவைக லமரியறற வேகுவே னியானெனக்
கொற்றவே ளுரைத்தலுங் குளிர்ந்தபூ விருக்கைமே
லுற்றபோதன மகிழ்சிறந் துளங்களித்து மொழிகுவான். (௫௮)

பணிந்தசொல்ல னுகிநாம் பணித்தவா புரிந்திடத்
துணிந்தவாறு நன்றுநன்று சூலிபாலி னுனைவிடாத்
தணந்திடேந் தொடர்ந்துபின்பு சார்துமஞ்சல் போகெனு
வுணர்ந்துகூறி மாரவேளை யோவிலன்பொ டேவினான். (௫௯)

ஏவுகாலை மதனைவேள்வி யிறைதெரிந்து மைந்தயான்
றேவரோடு துயருழந்து சிறுமைபெற்ற தறிதியே
யோவில்வாழ்வு தருதியென்னி னுமைமடந்தை தணையரன்
மேவுமாறு புரிகெனு விரைந்துசெல்ல நல்கினான். (௬௦)

நல்கலுங் கரங்கள்கூப்பி நான்முகத்த னுலகொரீஇ
யல்குதன்பு ரத்துநண்ணி யவ்வியற்கை கூறியே
யொல்குதேவி யைத்தெளித் தொருப்படுத்தி நறியதேன்
பில்குவாளி யிட்டதுணி பின்னியாத் திறுக்கினான். (௬௧)

தீயக்கனின்ற பூவின்மிக்க காமகாண்டங் கன்னல்வில்
வியக்கமான பரிவில் லெடுத்துமொய்ம்பி லேந்தியே
தயக்கமுற்று லாயசெய்ய தண்ணெனன்மா விளக்களிர்
வயத்தடங்கண் வாவமொன்று மாமருங்கு வைத்தரோ. (௬௨)

கோகிலங்க ளானவுங் குழாங்கொள்வேலை யானவுங்
காகளங்கண் முரசமாய்க் கறங்கவோர்தம் பிரவதுஞ்
சேரங்க ளாய்சைந்து செல்லமீன கேதன
மாகவும்ப ருலவவெண் மதிக்குடை நிழற்றவே. (கூ௩)

பொருவில்கிள்ளை யென்னுமாக்கள் பூண்டதென்றல் வையமே
லிரதியோடு மேறிவே ளிருந்ததொல்லை யுலகினை
யரிதகன்று குறிகள்வெய்ய வளவையின்றி நிகழவே
பரமன்வைகு கைலையம் பருப்பதத்தை யணுகினன். (கூ௪)

கயிலைகண்டு தொழுதுதே ரிழிந்துகாம வேடனக்
கயலின்வந்த பரிசனத்தை யவணிறுத்தி மாதுடன்
பயிலும்வில்லும் வாளியும் பரித்துவல் லியத்தினைத்
துயிலுணர்த்து மானெனத் துணிந்துபோதன் மேயினன். (கூ௫)

கூறுலாவு மதிமிலைந்த குழகன்வைகு கைலைமே
லேறியே தனதுகை யிருந்தகார் முகம்வளைஇ
மாறிலேவு பூட்டியங்கண் வைகுபுள்ளு மாக்களு
மூறிலா திருந்தகாம முன்னுவித்தன் முன்னினன். (கூ௬)

பொருவில்காம னின்னதன்மை புந்திகொண்டு மற்றவண்
விரவுபுள்ளின் மீதினும் விலங்கின்மீதி னும்மலர்ச்
சரமெலாம் விடுபபவாதி தனதுமந் திரததுமுன்
னருளினோ டிருந்தநந்தி யடிகளன்ன கண்டரோ. (கூ௭)

கொம்மெனச் சினம்புரிந்து கொடியபூசன் மதனனார்
தம்மியற்கை யாமிதம்ம சரதமென்று நினைவுறு
வும்மெனத் தெழிததுரப்ப வொலிகொள்புள் விலங்கின்மேல்
வெம்மையிற் செலாதுமாரன் விசிகம்விண்ணி னின்றவே. (கூ௮)

நிற்றலோடு மவ்வியற்கை நின்றுநோக்கி நெடியவேள்
கொற்றநீடு சூரலொன்று கொண்டுகோ புரத்தலைத்
தெற்றிமே லிருந்தநந்தி தேவர்காபபு மாணையு
முற்றுநோக்கி நெடிதுயிர்த் துளந்துளங்கி விம்மினன். (கூ௯)

விம்மிநந்தி தேவர்முன் விரைந்துசென்று தாழ்ந்தெழூஉச்
செம்மைசெய்*கருத்தனைத் திகழ்ந்துபோற் றெடுத்தலு
மிம்மலைக்கண் வந்ததென்னை யெனவயன் புணாப்பெலா
மெய்ம்மையா வுணர்த்தலும் வினவியீ துளங்கொள்வான். (௭0)

வேதனாதி யானதேவர் விழுமநோ யகன்றிடு
மேதுவால் விடுத்துளார்க ளிவனையீசன் யோகுறும்
போதில்யாவர் வருகினும் புகாதுசெய்தி மதனவேள்
சாதலெய்து வான்வரிற் றடேலெனா வியம்பினன். (௭க)

புன்மையாம் பசுத்தடிந்து புரிவில்வேள்வி யாற்றியே
தொன்மைபோ லெழுப்பப்புரிந்து சுருதிசொற்ற வாறுபோன்
மன்மதன் றனைப்புரிந்து மாதைவேட்டு மற்றதன்
பின்முறைக்க ணல்கவெம்பி ரானினைந் தனன்கொலாம். (௭௨)

ஆகையாலி தருளதே யிவன்வரத்து மாணையெண்
ணுகையா லுணர்ந்துவேளை நோக்கியும்ப ராகுலம்
போகுமா றியற்றல்செய்த பொருவிலாத கருணைசே
ரேகநாய கன்றன்முன்ன ரேகல்வேண்டு மோவென்றான். (எ௩)

நந்திதேவ னினையவாறு நவிலவே யுணர்ந்துவே
ளெந்தைகேட் டியாவிதொன் றெனக்கொரீறு குறுகினு
முந்திவேணி யண்ணன்முன்ன மனுகுமா றமைநதிவண்
வந்தனன் னதற்கியைந்த வினைமைநல்கு வாயென. (எ௪)

இகலுமன்பு மிறையுமின்றி யெவ்வுயிர்க்கு முள்ளதோர்
புகுதிகாடி முறையினைப் புரிந்துசேர்ப வர்க்குமேற்
றகுதிசெய்து கருணைகூர் சயம்புமுன்பு சார்தியேன்
மிகுதிகொண்ட மேலைவாய்தன் மேவியேகு கென்றனன். (எ௫)

என்றலுங் கரங்குவித்தி றைஞ்சிமார னேர்புறீஇ
நன்றிலங்கு வேதரக்கை நந்திதேவர் விடைதரச்
சென்றுமேலை வாயில்சார்ந்து தேவதேவ னீற்றழற்
குன்றமென்ன மோனமோ டிருந்தவெல்லை குறுகினான். (எ௬)

வேறு.

ஒருதனிச் சிம்புள் வேந்த னுறைந்தது கண்ட சீயக்
குருளையி னமலன் றன்னைக் கோலமால் புதல்வன் காணு
வெருவரு முளதத னாகி வியர்த்துமெய் பனியா வுட்கிப்
பருவர லுழந்து கொண்ட படையொடிங் கடிதில் வீழ்ந்தான். (எஎ)

எழுதரு மதனு மேக மிறைவனைக் கண்டே யஞ்சி
விழியிருண் மூடக் கோல வில்விட்டு வியர்ப்பின் வாரி
மழைபட விடியார்ப் பெய்த மார்புமற் றதுவீழ் கின்ற
தொழின்முற் புதரிங் காட்டத் துளங்கிவீழ்ந் திட்ட தன்றே. (எஅ)

அஞ்சிவீழ் குற்ற மார னறிவிலா தவச மாகத்
துஞ்சினன் கொல்லோ வென்னாத் துயருழந் தெடுத்துத் தேவி
கஞ்சநேர் கரத்தி றாங்கிக் கடிவகை யுய்த்துத் தேற்ற
நெஞ்சமே லுணர்ச்சி கூட வினையவை நினைந்து நைவான். (எகூ)

முறுவலி னெயின்மூன் றட்ட முதல்வனைப் பொருதி யென்றே
நறைமல ரயனு மேனைத் தேவரு நாகர் கோனு
முறுதுய ரகல விங்ஙனுய்த்தனர் வினையேற கின்னே
யிறுதிவந் தணுகிற் றுகு மிதற்குமோ ரைய முண்டோ. (அ௦)

எண்டகு குணத்தின் மேலா மிறையவ னிருந்த வண்ணங்
கண்டலும் வெருவி யாவி காண்கில னவனை யென்கைக்
கொண்டதோர் கணைகள் வாகை கொள்ளுமோ வினைய பான்மை
யண்டரு மயனும் யாரு மறிகிலர் போலு மன்றே. (அக)

தாக்கினால் வலிபெற் றுள்ள மருத்தின்முன் றனித்த தீபம்
போக்கினு னிற்ப துண்டோ வனைய து போலத் தேவர்
வாக்கினுன் மனத்தா லெட்டா வள்ளன்முனுய்த்தா ரன்னா
னோக்கின வினிச்சில் போதி னுண்பொடி யாவன் போலாம். (அ௨)

ஏமுற வுலக மெல்லா மீறுசெய் முதல்வன் றன்னைப்
பூமலர் கொண்டி யானே பொருகின்றே னகையீ தன்றோ
வாமிது விதியின் செய்கை யதனையார் கடக்க வல்லார்
தாமரை முதல்வற் கேனுந் தள்ளருந் தகைய தன்றோ. (௮௩)

ஈங்கிவை யமலன் சூழ்ச்சி யாவதோ முடிவ தோரேன்
றாங்கியான் கிடத்த லெல்லா தண்ணென வெழுந்து வில்லும்
வாங்கினன் சரமும் பூட்டி வல்லவா றிழைப்ப னையன்
பாங்குற நின்று மேலே பட்டவா படுக வென்றான். (௮௪)

இனையன பலவு முன்னி யெழுந்துமா மதவே ளிட்ட
தனுவினை யெடுத்து வாங்கித் தண்மலர் விசிகம் பூட்டி
மனைவிதன் னகலின் செல்ல மதிக்குறை தவழ்ந்த சென்னிப்
புனிதன தொருசார் போகிப் பொருவகை முயன்று நின்றான். (௮௫)

மாரவே ளீண்டு நிற்ப மனோவதி நகரின் மேய
வாரண முதல்வன் றன்னை யமரர்கோன் றொழுது நோக்கிக்
காருறழ் கண்டன் றன்பாற் காமனை விடுத்தி யன்னோன்
போரிய வுணர்வா னங்கட் போதரல் வேண்டு மென்றான். (௮௬)

சதமக னினைய கூறத் தண்மலர்க் கடவு ணேராக்
கதுமென வெழுந்து வானோர் கணத்துட னனையன் போற்றப்
பொதிதரு கைலை யந்தண் பொருப்பின்மே லொருசார் போகி
மதனிய றெரிந்து முக்கண் வள்ளலை வழுத்தி நின்றான். (௮௭)

எறிதரு கணிச்சிச் செங்கை யீசன்மே லிலக்க நாடுங்
குறியினர் போல நின்ற கொடுந்தொழின் மாரன் றுஞ்சு
நெறியினர்க் கச்ச முண்டோ நினைத்தது முடிப்ப னென்னா
நறுமலர் வாளி யைந்து நாதன்மேற் செல்ல விட்டான். (௮௮)

விட்டவெம் பகழி யைந்தும் வியத்தகு விமலன் மீது
பட்டலுஞ் சிறிதே வேளைப் பார்த்தனன் பார்த்த லோடுங்
கட்டழல் பொதிந்த நெற்றிக் கண்ணது கடிதே காமற்
சுட்டது கைலை முற்றுஞ் சூழ்புகை பரவிற் றன்றே. (௮௯)

ஆலயஞ் சிலைவே ளாக மழல்படக் கைலை யின்க
ணேல்வெம் புகையுந் தீயு மெழுதரு மியற்கை நாடின்
மாலயன் முதலோர் யாரு மதித்திடு விரைந்து பாலின்
வேலையி னடுவு தீய விடமெழுந் தனைய தம்மா. (௯0)

செறிந்ததீப் புகையின் மாலை செல்லலுங் குணபால் வாய்த
லுறைந்ததோர் நந்தி தேவ னெல்லையி லதனைப் பாரா
விறந்துபா டாயி னன்கொ லேகிய மதன னென்னா
வறிந்தரோ வடைந்தார்க் கோதி யொருசெய லறைய லுற்றான். (௯௧)

நுண்ணிய வுணர்வின் மிக்கீர் நுமக்கிது புகல்வ னெங்கோன்
கண்ணுத லுமிழ்ந்த செந்தீக் காமனைப் பொடித்த தன்றா
லண்ணலை யெய்வ னென்னா வனையவன் றுணிவிற் கூறித்
துண்ணென வீண்டு வந்த செயற்கையே சுட்ட போலும். (௯௨)

இன்னினி மகிழ்நன் றஞ்சு மியற்கையை யிரதி காடி
வன்னிபெய் யலங்கல் போலாய் வயிறலைத் திரங்கி யெங்கோன்
றன்னைவந் திரப்ப வேளைத் தருகுவன் காண்டி ரந்த
முன்னவ னுனக்கட் கீர முறைபுரி யருளா லென்றான். (௯௩)

ஐந்தொகை யாற்றின் மாடே யழலினை யிளைந்து போற்ற
நந்தியந் தேவ னின்ன நவிறலு மிவற்சூழ் கின்ற
வந்தமில் கணத்தோர் கேளா வகிலமுய் பொருட்டா லெங்கோன்
புந்திகொ ளருளின் செய்கை போற்றெடுத் தனரா யுற்றார். (௯௪)

வாவலுங் கிள்ளை மான்றேர் மதன்புரி வினையா லன்னான்
வேவரப் புணர்த்து நோக்கி மிகைபடா தவன்சா ரான
தேவியை முடிக்கு மாற்றல் செய்திலன் விகல்பற் றின்றி
மூவரை விடுத்துத் தொன்னாண் முப்புரம் பொடித்த முன்னோன். (௯௫)

கண்ணழல் சுடுத லோடுந் தாழ்வேள் யாக்கை முற்றுஞ்
சுண்ணம தாகி வீழத் துஞ்சினன் போய பின்னை
யண்ணலம் பகவன் றொல்லை யமைதியி னிருந்தா னெல்லா
மெண்ணியின் றியற்று மெங்கோற் கினையதோ வரிது மாதோ. (௯௬)

பாடுறு கணவன் செய்கை பார்த்தலு மிரதி யுள்ளங்
கூடின துயரம் வீந்த கொண்டதொல் லுணர்ச்சி கண்ணீ
ரோடின வியர்த்த மெய்முக் குயிர்த்தன வொடுங்கிற் றாவி
வீடின ளிவளு மென்ன விரைந்துகீழ்த் தலத்தின் வீழ்ந்தாள். (௯௭)

சுரிதரு குடிலை யாற்றிற் சுழித்தலைப் பட்ட மான்போற்
பருவரல் வீரி நாபபட் படிந்துபற் றின்றிச் சோரு
மிரதிசில் பொழுதிற் பின்ன ரிறந்ததொல் லுணர்வு தன்பால்
வருதலு மறித்துச் செங்கை வயிறலைத் திரங்க லுற்றாள். (௯௮)

வேறு.

செம்பதுமை திருக்குமரா தமியேனுக் காருயிரே திருமான் மைந்தா
சம்பரனுக் கொருபகைவா கன்னல்வரிச் சிலைபிடித்த தடக்கை வீரா
வம்பவளக் குன்றனைய சிவன்விழியால் வெந்துடல மழிவுற் றாயே
யும்பர்கடம் விழியெல்லா முறங்கிற்றோ வயனுரு முவபபுற் றாரோ. (௯௯)

முன்னாளிற் புரமூன்று மட்டவன்மேற் பொரப்போதன் முறையோ வென்று
சொன்னாலுங் கேட்டிலையே யமரர்பணி புரிவதுவே துணிந்திட் டாயே
யுன்னாகம பொடியாகிப் போயினதே யிதுகண்டு முய்வா ருண்டோ
வென்னாவி யாகியநீ யிறந்தபின்னும் யான்றனியே யிருப்ப தேயோ. (௧00)

மாறுகப் பரமன்விழி நின்னுற்ற வலதாக மற்றுன் மெய்யு
நீறாக விண்ணெல்லா நெருப்பாகக் கவலைவிண்ணோர் நெஞ்சத் தாக
வாறாத பெருந்துயர மெனக்காக வெங்கொளித்தா யருவா யேனுங்
கூறாயோ வறிதிருந்தா யென்கணவா யான்செய்த குறையுண் டோதான்.

உம்பர்கடம் பாலேயோ விந்திரனார் பாலேயோ வுன்னை யுய்த்த
செம்பதுமத் திசைமுகத்தோன் பாலேயோ வீரன்செயலைச் சிதைப்ப னென்று
விம்பரிடை வல்விரைந்து வந்திடுகின் பாலேயோ யீசன் கண்ணால்
வெம்பொடியாய் நீயிறந்த விப்பழிதா னெவர்பாலின் மேவிற் றையோ. ()

வில்லான்மூப் புரமெரித்த பரம்பொருள்யோ கந்தவிர்க்க வேண்டில் விண்ணோ
ரெல்லாரு மிறந்தனரோ வென்கணவா நீயோதா னிலக்காய் நின்றாய்
கொல்லாது போலவுனைக் கொன்றனரே யென்னுயிர்க்குங் கொலைசூழ்ந் தாரே
பொல்லாத பேர்க்குநன்றி செய்வதுதம் முயிர்போகும் பொருட்டே யன்றோ. ()

என்னபவஞ் செய்தேனோ வென்போல்வார் தமக்கென்ன விடாசெய் தேனோ
முன்னையூழ் விதிப்பயனை யறிவேனோ விப்படியே முடிந்த தையோ
கன்னல்வரிச் சிலைபிடித்த காவலவோ தமியனைக் காத்தி டாயோ
வன்னிவிழி யாவுடைய பெருமானை நோவதற்கு வழக்கொன் றுண்டோ.

பொன்செய்தார் முடிகாணே னழகொழுகுந் திருமுகத்துப் பொலிவு காணேன்
மின்செய்பூ ணணிகுலவும் புயங்காணே னகனமார்பின் மேன்மை காணேன்
கொன்செய்பூங் கணைகாணேன் சிலைகாணே னுடல்புரி கோலங் காணே
னென்செய்வே னென்கணவா வென்னையொழித் தெவ்விடத்தே யிருக்கின் றாயே.

அந்நாளி லழற்கடவுள் கரியாக, வானவரோ டயன்மால் காணப்
பொன்னுரு மங்கலநாண் பூட்டியெனை மணஞ்செய்து புணர்ந்த காலை
யெந்நாளு மினியுன்னைப் பிரியலமென் றேவாய்மை யிசைத்தாய் வேனின்
மன்னவோ, மன்னவோ வெனைத்தனியே விட்டேகல் வழக்கோ சொல்லாய்.

போவென்று வரவிட்ட தேவரெலாம் பொடியாகிப் போன வுன்னை
வாவென்று கடிதெழுப்ப மாட்டாரோ நின்றுதை வலிய னென்பா
ரோ, வென்று நானிங்கே யரற்றிடவும் வந்திலனு லுறங்கி னானோ
வேவென்று நின்சிரத்தில் விதித்திருந்தா லவரையெலாம் வெறுக்க லாமோ.

நேயமொடு மறையயிலுந் திசைமுகனைப், புரந்தரனை நின்னைத் தந்த
மாயவனை முனிவர்களை யாவரையு நின்கணையான் மருட்டி வென்று
யாயதுபோன் மதிமுடித்த பரமனையு நினைந்திவ்வா றழிவுற் றாயே
தீயழலின் விளக்கத்திற் படுகின்ற பதங்கத்தின் செயலி தன்றோ. (௧0௮)

தண்பனிநீர்ச் சிவிறிகொண்டு விளையாடி மலர்கொய்து தண்கா நண்ணி
யெண்படும்பூம் பள்ளிமிசைச் சிறுதென்றல் கவரிகளா யினிது செல்ல
வெண்பளித நறுஞ்சாந்தச் சேறாடி யிருவருமாய் விழைந்து கூடிக்
கண்படைகொண் டமர்வாழ்வும் பொய்யாகிக் கனவுகண்ட கதையா யிற்றே.

மருகென்றே யவமதித்த தக்கனூர் வேள்விசெற்ற வள்ள றன்னைப
பொருகென்றே தேவரெலாம் விடுத்தாரே யவராலே பொடிபட் டாயே
யெரிகின்றே னுனைப்போல வாறாத பெருந்துயரால் யானு மிங்கே
வருகின்றேன் வருகின்றே னென்னுயிரே யெனபபுலம்பி வருந்து கின்றாள்.

ஆக திருவிருத்தம் ௬0௧.

---

வசனம்

இவ்வாறு வீற்றிருந்த பிரமதேவன், மன்மதன்வரும்படி தன்மனத்தில் நினைத்தவுடன் அவன் விரைந்துவந்து வணங்கி என்னை நினைத்தற்குக்காரணம் யாதென்று கேட்க, பிரமன் அவனைநோக்கி எங்கள்பொருட்டு நீ கைலைக்குச்சென்று பரமசிவன் மோனநிலையில்நீங்கி உமாதேவியைமணக்கச் செய்யவேண்டுமென்று சொல்லக்கேட்ட மன்மதன் பொறாமல் காதிற் கைவைத்துக்கொண்டு என்

பாவமிகுதியால் இந்தச்சொல்லைக் கேட்கலானேன். நீ வேதாதிகாரியாயிருந்தும் இக்கடுஞ்சொல் சொல்லத்துணிந்தனையேயென்று மனம்வருந்திச் சொல்லத்தொடங்கினன். நற்குணமுடையவரை அஃதில்லாதார் அடைவராயின் நன்மையையேயடைவர். உம்மையடைந்த எனக்கு இம்மொழிகளைமொழிந்தீர். என்னிடத்து உமக்கு அருளென்பதில்லையோ? யான் என்பிதாவாகிய திருமாலை என் புஷ்பபாணத்தாலெய்து திருமகள்முதலிய மூவரைப்புணரும்படிசெய்து வெற்றி கொண்டேனன்றோ! உம்மை அவ்வம்பினால் கலைமகளை விரும்பச்செய்ததுமன்றி உமது தொடையிலுதித்த ஊர்வசியைவிரும்பி நாடிச்சென்று அலையும்படி வெற்றி கொண்டேனன்றோ! இன்னும் என் வெற்றித்தொழில்கள் பலவுளவென்பதை யறியீரோ? ஆனால் திருமால்முதலாக மேற்சொல்லப்பட்டவர்களிடத்தே என் வெற்றிசெல்லுவதன்றி யான் நீமுதலிய எல்லாவுயிர்களையும் உள்நின்று இயக்கும் இறைவன்மேல் என் வெற்றிசெல்லுமோ? என் அம்புகள் அவனையொன்றுஞ் செய்யமாட்டா. அவன் திருமேனி, கண், கை, நகையாகியயாவும் நெருப்பேயாதலால் அவற்றின்முன் என் மலரம்பு வாடிவதங்கிப்போமல்லது என்செய்யவல்லது. ஆதலால் அவனை மயங்கச்செய்யவல்லேனல்லேன். அவனெதிரேசென்று நான் உயிரோடு மீண்டுவருவேனுமல்லேன். திரிபுரத்தார்முதலியோர் அவனைப் பகைத்துப் பட்டபாடு உலகத்திலறியாதார் யாவர்? எல்லாவுயிர்களையும் கொல்லுந் தொழில் வல்லனாகிய காலனுக்கும் இவன் காலனன்றோ? அவனது பேராற்றல் முதலிய குணங்களை நீர் கண்டுங் கேட்டுமிருந்தும் இப்படிச்சொல்லலாமோ? ஆதலால் நீவிர் கொண்டகருத்தை யொழித்துவிடுவதே நலமென்றுசொல்ல, அது கேட்ட பிரமன் சிறிதுநேரம் மனங்கலங்கிச் சிந்தித்துப் பெருமூச்செறிந்து மன்மதனைநோக்கி அப்பா! நீசொல்வதெல்லாம் உண்மையே, அச்சிவபெருமானுக்குள்ள பேராற்றல்முதலிய குணங்களை யாமுமறிவோம். ஆயினும் முன்னொருகாலத்தில் திருமாலுடன் எதிர்த்த ததீசி முனிவனை இந்திரன்வேண்ட அவனுக்கு அம்முனிவன் தன் முதுகெலும்பைத் தந்து விருத்திராசுரனைக் கொல்லும்படி உதவிசெய்து தன்னுயிரைத் துரும்புக்குச் சமமாக வெண்ணி விட்டுவிட்டசெய்தியை நீ கேட்டதில்லையோ? அந்தச் சிவபெருமான் பாற்கடலிற் பிறந்த நஞ்சையுண்டு தேவர்களைக் காப்பாற்றின செய்தி யாவருமறிந்த விஷயமே, பிறர்பொருட்டுத் தம்முயிரை மிகச்சிறிய பொருளாக எண்ணுவோர் உலகில் புகழ்பெற்று வாழ்வார்கள். யாம் சூரபன்மனால் மிகவும் வருந்தினோம். அவ்வருத்தம் தீரும்படி சிவபெருமான் ஒரு புதல்வனைத் தோன்றுவித்தற் பொருட்டு நீயே பஞ்சபாண ஹஸ்தனாய்ச் செல்ல வேண்டும். எமதுவேண்டுகோளை மறுத்தல் உனக்குத் தகுதியன்று என்று இவ்வாறு பலவகையாகப் பிரமன் சொல்லவும் மன்மதன் துன்பமடைந்து யான் பரமசிவனுக்கு எதிரேசெல்ல அஞ்சாகின்றேன். இவ்விடத்தில் நீர் எதைச்செய்யக் கட்டளையிட்டாலும் அதனைச் செய்வேனென்று மீட்டும் மறுத்துச் சொல்லக்கேட்ட பிரமன் கோபங்கொண்டு எனது சொல்லைத் தடுத்தாய், எமது சொல்லுக்குடன் பட்டுச் செய்தால் பிழைப்பாய் இல்லாவிடின் உன்னைச் சபிப்பேன் உன்கருத்தென்ன? சொல்லென்றுகேட்க, மன்மதன் மனம்புழுங்கிப் பெருமூச்செறிந்து இனிச் செய்வது யாதென்று சிந்தைதெளிந்து உமது சாபத்தால் யான் இறப்பதைப் பார்க்கிலும் இறைவன்மேல் அம்பெய்து மடிந்தாலும் நன்மையே, நீர் கோபிக்க வேண்டாம், இன்றே செல்லுகின்றேனென்றான். அதுகேட்டுப் பிரமன் மனமகிழ்ந்து உன்னைப் பின்றொடர்ந்து வருகின்றோம். நீ அஞ்சாதேயென்றுசொல்லி விடைகொடுத்தனுப்ப, சென்ற மன்மதனை இந்திரன்பார்த்து நானுந்தேவர்களும்

படும்பாட்டை நீ அறியாதவனல்லவே, எப்பொருட்டு நீ பரமசிவன்மேல் பாணப் பிரயோகஞ்செய்து அவரைமயக்கிக் காமவசத்தனாகச் செய்யவேண்டுமென்று வேண்டிக்கொண்டான். மன்மதனும் அப்படியே ஆகட்டுமென்று தன் இருப்பிடத்தை யடைந்து தன்மனைவியாகிய இரதிதேவிக்கும் இந்தச் செய்திகளைச்சொல்லி அவள் மனத்தைத்தேற்றி, அவளோடும் புஷ்பபாணம் முதலிய போர்க்கருவிகளை யெடுத்துக்கொண்டு தென்றலாகிய தேரின்மேலேறி விரைந்துசென்று கைலாயத் தையடைந்தான். அடைந்தவன், அந்தக் கைலாயமலையைக் காவல்செய்துகொண்டிருக்கிற நந்திதேவரைவணங்கி நின்றான். அவர், மன்மதனைநோக்கி நீ இங்குவந்ததற்குக் காரணம் யாதென்றுவினவ, இவன் றான் பிரமன் இந்திரன் முதலிய தேவர்களால் ஏவப்பட்டு வந்தசெய்தி முழுதும் மறைக்காமல்சொல்ல, நந்திதேவர் மன்மதன்வந்தால் தடைசெய்யாது விடுக்கலாமென்று சிவபெருமான் தனக்குக் கட்டளையிட்டருளியதை நினைந்து அவ்வாறே நீ மேலைவாயிலின் வழியாகச்சென்று இறைவன் சந்நிதியை அடையக்கடவாயென்று நியமிக்க மன்மதனும் அவரைவணங்கி விடைபெற்றுச்சென்று இறைவன் மோனநிலையில் இருப்பதைக்கண்டு சரபத்தைக் கண்ட சிங்கம்போல நடுநடுங்கி உடல்முழுதும் வெயர்த்துத் துன்பக்கடலிலாழ்ந்து தன்படையுடன் வீழ்ந்து அவசமாய் இறாதலனேயென்று சொல்லும்படி கிடந்து அவன்மனைவியாகிய இரதிதேவிசெய்த சயித்தியோபசாரங்களால் ஒருவாறுமனந் தெளிந்து நல்லுணர்ச்சி யடைந்து இறையை உற்றுநோக்கி இவர்முன் என் ஆற்றல் செல்லுமோ என்மலரம்புகள் வெற்றிகொள்ளுமோ? வலியகாற்றின்முன் விளக்கு நிற்குமோ? தேவர்கள் என்னை அனியாயமாய் இந்த இறைவன் சந்நிதிக்குச்செலுத்தினார்களே இன்னுஞ் சற்றுநேரத்தில் யான் அவரது தீக்கண் நோக்கத்தால் எரிக்கப்பட்டுச் சாம்பராவதே நிச்சயம் என்று இவ்வாறு பலவகையாய்நினைந்து நிற்குஞ்சமயத்தில், இந்திரன் பிரமனைநோக்கி மன்மதனை நீலகண்டரிடத்திற்கு அனுப்பிய, நீர் அவன்செய்யும் போர்த்தொழிலைப் பார்க்கவேண்டுமென்று வேண்ட அவ்வேண்டு கோளுக்குப் பிரமனுமிசைந்து விரைந்தெழுந்து தேவர்கள் சூழச் சென்று கைலையையடைந்து மன்மதனுடைய இயல்பையறிந்து இறைவனைத்துதித்து நின்றனன். அப்பொழுது மன்மதன் நான் நினைத்துவந்த காரியத்தைச் செய்து முடிப்பதே தகுதியென்று துணிந்து தனது புட்பபாணங்களைந்தையும் பரமசிவன் மேல் பிரயோகித்தான். அவை தனது திருமேனியிற் படுதலும் இறைவன் ஒரு சிறிது விழிதிறந்து நோக்கினன். நோக்குதலும் மிக்க அனலைச்சொரியும் நெற்றிக் கண்ணில் உண்டானதீப்பொறி மன்மதனது உடல்முழுதுஞ்சுட்டு நீறாக்கிவிட்டது; நீறாகவே கைலைமலையிற் புகைப்படலம் மூடிக்கொண்டதினால் பாற்கடல் கடையப்பட்ட முற்காலத்தில் அதனிடத்தே ஆலகாலவிடம் தோன்றிய சமயம்போன்றிருந்தது. மேற்றிசை வாசலில் காவலாயிருந்த நந்திதேவர் இப்புகைப்படலத்தை நோக்கி மன்மதன் இறந்துவிட்டான் என்றறிந்து அங்குள்ளவர்களுக்குச்சொல்லத் தொடங்கினர். எப்படியெனின்,

நுண்ணறிவுடையோரே! எம்மிறைவனது நெற்றிக்கண்ணினின்றும் வெளிப்பட்டதீயானது காமனை எரித்ததன்று; அவ்விறைவனை அவாங்மனோகோசரமாகிய பரம்பொருளென் றறிந்திருந்தும் அவன்மீது சிறிதும் அஞ்சாநெஞ்சு படைத்து இங்குவந்து கலாம்செய்த செய்கையே அவனைச்சுட்டதுபோலும். ரதிதேவியானவள் தன்கணவன் இறந்ததை நோக்கி நெருப்பிலிட்ட பூமாலைபோல வாடிக்கருகி வயிற்றில் அடித்துக்கொண்டு அழுது புலம்பி நிற்கிறாள். பரமதயாளுவாகிய இறைவன் இவ்விரதியினது துயரத்தைநோக்கித் திருவுளமிரங்கி மன்மதனைஉயிர்ப்பித்துத்

நந்தருளுவர் என்றதற்கு ஓர் ஐயமில்லையென்று இவ்வாறு கூறினர். ரதிதேவியும் தன்கணவனது பிரிவாற்றாமையால் மிகவும் வருந்தி திருமகன் மகனே என்னுருயிரே கரும்புவில்லும் சுரும்புநாணும் பூவம்பும் ஆகிய மெல்லிய பொருள்களைக் கொண்டே சதுர்த்தசபுவனங்களையும் இதுவரையில் வென்றுவந்த உனது பேராற்றல் பரமசிவனுக்கு எதிரே செல்லவில்லையோ? இவ்வாறு என்னைத்தனியே இருந்து புலம்பவிட்டுப்போவது உனக்கு நீதியாமோ? இவ்வாறு உன்னை ஏவிவிட்டு நீமடியதேவர்களெல்லாம் இப்போதுதான் உறக்கங்கொண்டனர். பசும்பொன்னாற் செய்யப்பட்ட உன்றிருமுடியைக்காணேன். அழகொழுகாநின்ற திருமுகமண்டலத்தின் பொலிவைக்காணேன். மின்னுகின்ற வாகுவலயம் முதலிய ஆபரணங்கள் விளங்குந் திருத்தோள்களைக் காணேன். அகன்ற உன்றிருமார்பைக்காணேன். யாவரையும் மயங்கச்செய்கிற புஷ்பபாணத்தைக் காணேன். கருப்புவில்லும் சுரும்புநாணுங் காணேன். என்னைத் தனியேவிட்டு நீ எவ்விடத்திற்குப் போயிருக்கிறாயோ? என்னை அக்கினிசாட்சியாக மங்கல சூத்திரம் புனைந்து மணஞ்செய்துகொண்டு மருவிய காலத்து எந்நாளிலும் உன்னைவிட்டுப் பிரிவதில்லை என்று எனக்கு உறுதிமொழிகூறினையே என்று இவ்வாறு பலவகையாய்ப் புலம்பி அழுதாள்.

மேலும், உன்னையேவிவிட்ட தேவர்களெல்லாரும் நீ பொடியாய்ப்போய்விட, ஆவாவென்று விரைந்துவந்து உன்னையெழுப்பினார்களா? உன்தந்தையாகிய திருமால் மிகவும் சமர்த்தரென்று கேள்விப்பட்டிருக்கிறேனே, அவராயினும்வந்து இப்படிவருந்துகிற என்னை ஏனென்று கேட்கிறாரா, அவர்க்குப் பாம்பணையே பரமசுகம். உன்தலையெழுத்து இப்படியிருக்கும்போது அவர்களையெல்லாம் நொந்ததனால் பயனென்ன? பிரமவிஷ்ணுக்கள் முதலியோரிடத்திற் செலுத்தின உன்பராக்கிரமம இந்தக் கண்ணுதலிடத்திற் செல்லவில்லையே, பரமசிவனாகிய பேரொளிவிளக்கில் விழுந்தழிந்த விட்டிலாயினையே, தண்பனிநீர்ச் சிவிறிகொண்டு விளையாடி குளிர்ந்த பூஞ்சோலையை யடைந்து பூக்கொய்து பூம்படுக்கையில் தென்றற்காற்று இனிமைபாய்வீசக் கலவைச்சந்தனம்பூசிக்கொண்டு நாமிருவரும் சந்தோஷமாகப்பேசிக் கூடிக்குலாவிக் கொண்டிருக்கும் படியான காலம் இனிநேரிடப்போகின்றதா, மருமகனென்று அவமதித்துத் தக்கன் யாகஞ்செய்ய அந்த யாகத்தையும் அவன் தேகத்தையும் அவன் யோகத்தையும் அழித்துவிட்ட பரமசிவனிடத்திற் போய்ப் போர்புரிகவென்று தேவர்கள் உன்னை ஏவிவிட்டு இப்பொழுது வேடிக்கைப் பார்த்துக்கொண்டு நிற்கிறார்களே. இறைவனது அனற்கண்ணெருப்பால் நீ யெரிந்தது போலவே நானும் துன்பத்தழலால் எரியாநின்றேன், இன்னும் சற்றுநேரத்தில் உன்னை வந்துசேர்வேன் என்றிவ்வாறு புலம்பிக்கொண் டிருந்தாள்.

காமதகனப்படலமுற்றிற்று.

# மோன நீங்குபடலம்.

இரதி யின்னணம் வருந்திடத் தொன்மைபோ லெங்கோமான்
விரத மோனமோ டிருந்தது முன்னரே விறற்காமன்
கருது முன்பொடி பட்டது கண்டனர் கலங்குற்றார்
சுருதி நன்றுணர் திசைமுகன் முதலிய சுரரெல்லாம். (௧)

இதலை மெய்த்தொகை வன்மிகத் தெழுத்தெனச் செலுக்கண்ணீர்
பதலை யொத்தன வல்லலகூர்ந் தரற்றிடப் பகுவாய்கள்
விதலை பெற்றுமெய் வியர்ப்புற வுளநனி விதிர்ப்பெய்த
மதலை யிற்றுழி நாய்கள்போற் றுயர்க்கடன் மறிகின்றார். (௨)

மையு லாவரு கறைமிடற் றிறையவன் மருங்காக
வெய்ய மாரனை விடுத்தன மவனையு மிறச்செய்தான்
பொய்யி றன்னிலை தவிர்ந்திலன் றொன்மையே போலுற்று
னைய கோவினிச் செய்வதென் னோவென வயர்கின்றார். (௩)

பூத்த ருங்கணை மாரனை விழியினாற் பொடிசெய்த
வாத்த னாற்றலைப் புணாபபின னீக்குவ தரிதன்னான்
காத்து நந்துய ரகற்றிட வேண்டுமேற் கடிதேயா
மேத்தல் செய்வதே கடனென யாவரு மிசைவுற்றார். (௪)

எகின மூர்பவன் முதலிய கடவுள ரெல்லோரு
மகன மர்ந்திவை யிசைந்துதொல் கைலையி னகநாப்பட்
புகல தாயபொன் னகரிடைக் கோபுரப் புறனேகித்
தொகுதி யோடெம திறைவனை யொல்லெனத் துதிக்கின்றார். (௫)

நஞ்ச ருந்தியு நதியினைச் சூடியு நடுநெற்றித்
துஞ்சும் வெங்கனல் பரித்தும்வெவ் வலியசுரத் தொலைத்திட்டு
மஞ்ச லென்றுமுற் காத்தனை யின்றெமக் கருளாயேற்
றஞ்ச மாருளர் தாதைய ரல்லது தனயர்க்கே. (௬)

கோளி லன்பர்க ளிழுக்கிய புரியினுங் குணனுக்கொண்
டாளு மெம்பிரா னின்னடி யரணமென் றடைந்தேங்க
ளாளும் வெந்திறற் சூரபன் மாவினு னலிவெய்தி
மாளு கின்றதோ சிறிதுமெம் முறுதுயர் மதியாயோ. (௭)

தைய லைப்பிரீஇ யோகியல் காட்டிடு தனிச்செய்கை
யைய நிற்கிதோ ரின்றவரை யாருமா லதுகாலை
நையு மெங்களுக் குகம்பல சென்றன நாமெல்லா
முய்வ தெப்படி யின்னுநீ புறக்கணித் துறுவாயேல். (௮)

நோற்று மாயவன் முதலினோர் யாவரு நுனதாளைப்
போற்றி யர்ச்சனை புரியவித் திருவெலாம் புரிந்துற்றாய்
தோற்ற மின்றியே யைந்தொழி லியற்றிய தொல்லோய்நீ
யாற்று கின்றதோர் தவநிலை யெம்பொருட் டளவன்றே. (௯)

எய்த்தி டுஞ்சிறி யேங்களைத் தவறுகூ றிடர்வாளா
னித்த லுந்துணித் தீருதி செய்வினை நெறிகேடி
யத்த விங்கினிக் காத்தரு ளல்லதே லடுவல்லே
சித்த மென்னுனக் கன்னவா றொன்றினைச் செய்வாயே. (௧0)

கங்கை வேணியா யம்மையை மணக்தெமைக் கடிகொள்ளத்
திங்கள் வெண்குடை மதனனை விடுத்தனந் தெளிவில்லே
மங்க வன்புரம் பொடித்தனை மூன்புபோ லமர்ந்துற்று
யிங்கி யார்தளர் கின்றதே யினிச்சிறி திரங்காயோ. (௧௧)

ஆர முற்சின வயப்புலி முதலிய வடன்மாவின்
பேரு ரித்திறந் தரித்தனை சிறுவிதி பெருவேள்வி
வீர னைக்கொடு தடிந்தனை யஃதென மிகவெய்ய
சூர பன்மனைத் தொலைவுசெய் தெந்துயர் தொலைக்கென்றார். (கஉ)

மூரற்கொள் வண்டுசூழ் சததளப் பண்ணவன் முதலோர்க
ளுருக்க ரக்கென மெய்தளர்ந் திவ்வகை யுளநொந்தே
யரற்றி யேத்தலு மவர்பவ முடிவதற் கணித்தாக
விரக்க மாயரு ணந்தியை நினைந்தன னிறையோனே. (கங)

எந்தை நந்தியை யுன்னலு மவனறிந் திறைவன்முன்
வந்து வந்தனை செய்துகை தொழுதலு மறைமேலோன்
கந்த மாமலர்க் கடவுளா தியர்தமைக் கடிதெம்முன்
றந்தி டென்றன னன்றென முதற்கடை தனில்வந்தான். (கச)

கணங்கள் காப்புறு முதற்கடை குறுகலுங் கண்டேத்தித்
தணங்கொள் பங்கயன் வாசவன் விண்ணவர் தாமெல்லாம்
வணங்க வெம்பிரா னுமைத்தரு கென்றனன் வறிதேனு
மணங்கு கொள்ளலீர் வம்மினோ நீவிரென் றருள்செய்தான். (கரு)

சீர்த்த நந்திவந் திவ்வகை யுரைத்தசொற் செவிதோறும்
வார்த்த பேரமு தாதலு முவகையின் மதர்ப்பாகிப்
பேர்த்தொர் மாற்றமு முரைத்திலர் பிரமனே முதற்றேவ
ரார்த்த நாதனைப் பாடின ராடின ரலமந்தார். (கசு)

பெரிது நோயுழந் தருள்பவ ரின்றியே பெருங்கால
மிரய முற்றுளோர் தங்களை யெடுத்திடு நிலத்தன்றோ
வருளி னீர்மையா லுமையரன் விளித்தன னனைவீரும்
வருதி ரென்றசொற் பங்கயன் முதலிய வானோர்க்கே. (கஎ)

செய்ய லாவதொன் றின்றியே மகிழ்ச்சியிற் றிளைத்தோராய்
மைய லாகிய பண்ணவர் தங்களை யெல்லைகொண்
டையன் முன்னுற வுய்த்தன னிருவகை யறத்தோரு
முய்ய வெஞ்சம னுடைதரப் புவியினி லுதிக்கின்றோன். (கஅ)

வேறு.

வண்டுளர் கமலமேன் மதலை வாசவ
னண்டர்க ளனைவரு மன்பொ டேகியே
பண்டுயிர் முழுதருள் பரனைக் கண்களாற்
கண்டனர் வழுத்தினர் கரங்கள் கூப்பினார். (ககூ)

விண்மதி படர்சடை வேத கீதனை
யண்மினர் வணங்கின ரிருமு றைற்றிய
வுண்மகிழ் பூசனை யொப்பப் போதநீர்
கண்மல ரதனொடு கழல்கள் சேரவே. (உ0)

வணங்கிய பண்ணவர் வல்ல வல்லவா
பணங்கிள ரரவரைப் பரமற் போற்றலு
முணங்கிய சிந்தையீ ருமது வேண்டலு
மணங்குறு நிலைமையு மறைமி னென்னவே. (உக)

பேருக மளப்பில பெயர்த லின்றியே
சூரனா தாணையிற் றுயர்ப்பட் டாழ்ந்தனங்
காருறழ் கந்தரக் கடவு ணீயலா
தாருள ரடியரே மலக்க ணீக்குவார். (உஉ)

ஆயவெஞ் சூரன தாவி நீக்கவோர்
சேயினை யருளுவான் சிம்ய மாகிய
மீயுயர் வரையிடை மேவி நோற்றிடு
மாயையின் முதல்வியை மணத்தல் வேண்டுமே. (உங)

என்றிவை கூறியே யாரு மெம்பிரான்
மன்றலந் தாண்மலர் வணங்கிப் போற்றலு
மின்றிகழ் பசுங்கதிர் மிலைச்சும் வேணியா
னன்றென விசைந்திவை நவிறன் மேயினான். (உச)

புங்கவர் யாவரும் பொருமல் கொள்ளலீ
ருங்கடம் பொருட்டிலவ் வோங்கல் வைகிய
மங்கையை மணந்துநும் வருத்த நீக்குது
மிங்கினி யாவரு மேகு கென்றனன். (உரு)

முழுதுணர் பரனிது மொழியப் போதனுஞ்
செழுமையில் பொன்னகாத் தேவும் யாவருந்
தொழுதனர் விடைகொடு துயரந் துஞ்சியே
விழுமிய மேருவின் மிசைக்க ணேகினார். (உசா)

வேறு.

அன்னார் விடைகொண் டேகியபி னதுகண் டிரதி யெம்பெருமான்
முன்னாவிறைஞ்சிபபோற்றிசெய்துமுறைறையோமுறைறையோவிமையானே
பொன்னார் கமலத் தயன்முதலோர் புணர்பபா லெங்கோன் போந்திங்கே
யுன்னான் முடிந்தா னவன்பிழையை யுளங்கொ ளாம லருளென்றாள். ()

வேறு.

இனைய கூறின ளிரதிவேண் டிடுதலு மினைதீர்ந்த
புனித னல்லரு ளெய்திய மங்கைநீ புலம்பாய்கேள்
வனைக ருங்குழற் கௌரியை மேவியாம் வரைபோதி
லுனது கேளவனை யளிக்குதும் போதியென் றுரைசெய்தான். (உஅ)

தன்னை யேதமக் கொப்பவ னிரதியைத் தளரேலென்
றின்ன வாறருள் செய்தலு மகிழ்ந்தடி யிறைஞ்சிப்போய்ப்
பொன்னின் மாலிம யக்கிரி புகுந்தொரு புடையுற்றாள்
வன்ன மாமுகில் வரவுபார்த் துறைதரு மயிலேபோல். (உகூ)

வேறு.

தமியளா யிரதிபோய்த் தானங் குற்றிட
வமரர்க ளாயுளா ரரந்தை தீர்க்கவு
மிமயமால் வரைமிசை யிருந்து நோற்றிடு
முமைதனை மணப்பவு முதல்வ னுன்னினான். (ஙo)

மனந்தனி லித்திற மதித்து வானதி
புனைந்தவன் சனகனென் றுரைக்கும் புங்கவன்

சனந்தனற் சனாதனன் சனற்கு மாரனு
மினந்தரு முனிவரை யினிது நோக்கினான். (௯௧)

நன்னல மைந்தர்காண் ஞான போதகஞ்
சொன்னடை யன்றது துயர நீங்கியே
யிந்நிலை மோனமோ டிருந்து நந்தமை
யுன்னுத லேயென வுணர வோதினான். (௯௨)

கட்படு மிமைத்துணை காட்சி யோகினை
நுட்பம தாகவே நுதலிக் காட்டினான்
றெட்பமொ டவ்வகை யுரைப்ப வாற்றவுந்
தெட்பம தடைந்தனா விதியின் சேயினோர். (௯௩)

அந்தநல் வேலையி லாற்று நோன்பினோர்
சிந்தைகொ ளன்பொடு சிவன்பொற் றாண்முறை
வந்தனை செய்துநம் மருட்கை நீங்கியே
யுய்ந்தனம் யாமென வுரைத்துப் போற்றினார். (௯௪)

போற்றலு மத்துணைப் புனித னின்னினி
யேற்றிடு கிட்டையி லிருந்து வீடுறீஇ
மேற்றிக ழெம்பத மேவு வீரெனச்
சாற்றினன் விடுத்தனன் றவத்தி னோர்தமை. (௯௫)

ஆக திருவிருத்தம் ௬௯௬.

---

வசனம்.

இவ்விதமாக ரதிதேவி வருந்திக்கொண்டிருக்கும் காலத்தில், பரமசிவன்முன் போலவே மோனநிலையிலேதானே யமர்ந்திருந்தான். மன்மதன் இறந்ததைக் கண்ட தேவர்களெல்லாரும் மனங்கலங்கி, ஐயோ நாம் மன்மதனை யேவினகாரியம் இப்படி முடிந்ததே, இனி யென்செய்வோம். ஆயினும் இறைவனையன்றிவேறு கதியில்லாமையால் அவனையே துதித்து நாமகாரியங்கொள்ள வேண்டுமென்று துணிந்து, திருக்கைலாய கோபுரவாயிலை யடைந்துநின்று துதிக்கலாயினர்.

விஷத்தையுண்டும் கங்கையையணிந்தும நெற்றிக்கண்ணில் நெருப்பைத்தாங்கியும் கொடியோரை வென்றிருக்கிற நீ அஞ்சல என்று காத்தருளக்கடவை. இப்போது எங்களைக் காவாவிட்டால் உன்னையன்றி யெங்களைக் காப்பவர்யாவர்? அன்புசெய்வோருடைய குற்றங்களை யெல்லாம குணங்களாகவே திருவுளம்பற்றி அவர்களையாளும் பரமதயாநிதியே! உன்திருவடியே தஞ்சமென்றிருக்கிற எங்களைச் சூரபன்மன் முதலிய அசுரரால் துன்பமடையச்செய்தாய், எமது துன்பத்தைக்கண்டு சிறிதாயினும் திருவுளமிரங்காயோ, உமாதேவியைப்பிரிந்து யோகியாயிருந்து உயிர்க்குயோகத்தைத்தரும் நிலைமை உமக்கு ஒருகணப்பொழுதேயாயினும், அந்தப்பொழுது எங்களுக்கு அநேக யுகங்களாயிருக்கின்றது. இப்படியிருந்தால் நாங்களெல்லாம் பிழைப்பதெப்படி? எல்லாத்தேவரும் உன்னைவழிபட்டுச் சகல சாம்ராஜ்யங்களும் பெற்றார்கள். ஐந்தொழில் நடத்தும் அவாங்கமாநஸகோசரனே! தேவரீர் செய்யும் யோகம் எங்கள்பொருட்டேயன்றோ. கங்காதரனே! உமாதேவியைமண

ந்து எங்களைக் காத்தருள்வாயென் றெண்ணியல்லவோ மன்மதனையாம் அனுப்பினது, அவனையும் பொடிபடுத்தி எங்களையும் துன்புறச்செய்தாய். இனியெங்களை யாளாமல் பராமுகஞ்செய்வது உன்பெருங்கருணைக்கு அழகல்லவென்று இப்படிப் பலவிதமாய்த் துதித்து நின்றார்கள்.

இப்படித்தேவர்கள் துதிப்பதற் கிரங்கின பரமசிவன் நந்திதேவரை நினைந்தருளலும அவர்வந்து எதிர்நின்றுவணங்கினார். இறைவன் அவரைநோக்கி, பிரமன்முதலியோரை யழைத்துவாருமென்றருளிச்செய்ய அவரும் அப்படியேசென்று விரைந்தழைத்துவிட, அவர்கள் இறைவனைவணங்கி நின்றார்கள். அவர்களைநோக்கி, நீங்கள் துன்புறக்காரணம்யாது? சொல்லுங்களென்று ஒன்றுமறியாதவர்போலக்கேட்க அவர்கள் இறைவனே தேவரீருக்குத் தெரியாதவொன்றுமில்லை, தேவரீர் உமாதேவியாரை மணந்து ஒப்பற்ற குமாரக்கடவுளைத்தந்து அவனால் சூரன் முதலிய அசுரவதஞ்செய்து எங்களை வாழ்விக்கவேண்டும், இதுதான் எங்கள் வேண்டுகோள் என்றார்கள். அவர்கள் வேண்டுகோளுக்கிசைந்த பரமசிவன் அப்படியே செய்வோம், நீங்கள் அஞ்சவேண்டியதில்லை யென்றருளிச்செய்த பின்பு, இரதிதேவி வந்து பலவகையாய்த்துதிக்க, அவளை நோக்கி, நீகவலையொழி, நாம் உமையவளை மணக்கும்போது உன் மணவாளனாகிய மன்மதனைத் தருவோமென்றருளிச்செய்ய, ரதிதேவியிறைவனை வணங்கி விடைபெற்று மேருமலையை யடைந்தாள். பிறகு பரமசிவன் தேவர்கள் துயரந்தணிக்கவும் ரதிதேவியின் எண்ணம்பலிக்கவும், உமாதேவியை மணப்பதே தகுதியாமென்று திருவுளத்தெண்ணி, சநகாதியர் நால்வரையும் நோக்கி, ஞானநிலையானது சொல்லாலுணர்த்தற்குரியதன்று, மோனமென்பது ஞானவரம்பாகுமாதலால் மோனநிலையே உண்மை நிலையென்று தாமும் மோனநிலையாயிருந்துணர்த்தி, இந்தநிலையை இடையறாமல் அநுஷ்டித்து வருவீர்களாயின் உங்களுக்கு வீடுபேறு எளிதாகுமென்று திருவாய்மலர்ந்தருளினார்.

மோனநீங்குபடல முற்றிற்று.

---

# தவங்காண் படலம்.

தீதறு முனிமைந்தர் செல்லலு மதுபோழ்தின்
மாதவ நெறிநிற்கு மலைமக ளணியன்புங்
காதலு மெமனைவோர்க்குங் காட்டுத லருளாகிச்
சோதனை புரிவாரிற் றுண்ணென வெழலுற்றான். (க)

செறிதுவ ருடையாளன் சிகையின னணிநீற்றின்
குறியின னொளிர்நூலன் குண்டிகை யசைகைய
னுறைப்ணி கீதிர்போற்று மோலைய னுயர்கோலன்
மறைபயின் முதியோர்போல் வடிவிது கொடுபோனான். (உ)

போயின னிமயத்திற் புவனமொ டுயிர்நல்குந்
தாய்தளர் வொடுநோற்குஞ் சாலையி னிடைசாரத்
தூயவ ரிவரென்றே தோகையர் கடைகாப்போ
ராயவர் பலர்வந்தே யடிதொழு துரைசெய்வார். (௩)

தளர்நடை முதியிரித் தடவரை யிடைசேர
லெளிதல வடிகேள்வந் தெய்திய தெவனென்ன
வளமலை யரசன்றன் மகள்புரி தவநாடற்
குளமுட னிவண்வந்தே னுவகையி னுடனென்றான். (ச)

என்றலு மினிதென்றே யிமையவ ளிடைநில்லோர்
சென்றனர் கிழவோன்றன் செயலினை யறைகாலை
யொன்றிய முதியோரே லுய்க்குதி ரிவணென்ன
நின்றதொர் பெரியோனை நேரிழை முனமுய்த்தார். (ரு)

உய்த்தலு மிவரெங்கட் குறுபரி வினரென்றே
பத்திமை படுபாலாற் பார்ப்பதி தொழலோடு
மெய்த்துணை யெனநின்ற விசயையொர் தவிசிட்டு
வித்தனை யுறைவித்தா ளிமலையு மயனின்றாள். (சு)

அப்பொழு துமைதன்னை யாதர வொடுபாராச்
செப்புத லரிதாமுன் றிருநல னழிவெய்த
மெய்ப்படு தசையொல்க மிகுதவ முயல்கின்றா
யெப்பொருள் விழைவுற்றா யெண்ணிய துரையென்றான். (எ)

வேறு.

முடிவி லானிவை யுரைத்தலும் விசயையை முகநோக்கிக்
கொடியி னொல்கிய நுசுப்புடை யுமையவள் குறிப்பாலே
கடிதி னீங்கிவர்க் கெதிர்மொழி யீகெனக் கண்காட்ட
வடிய னேற்கிது பணித்தன ளெனவறிந் தவளசொல்வாள். (அ)

மன்னு யிர்க்குயி ராகிய கண்ணுதன் மணஞ்செய்து
தன்னி டத்தினி லிருத்தினன் கொள்வதே தானுன்னிக்
கன்னி மெய்த்தவ மியற்றின ளென்றுகா தலிகூற
முன்ன வர்க்குமுன் னானவ னகைத்திவை மொழிகின்றான். (கூ)

புவிய ளித்தருண் முதல்வரு நாடரும் புனிதன்றா
னிவட வத்தினுக் கெய்துமோ வெய்தினு மினையானை
யவன்வி ருப்பொடு வரையுமோ வுமையவ ளறியாமே
தவமி யற்றின ளெளியளோ சங்கரன் றனக்கம்மா. (கய)

அல்லல் பெற்றிட நோற்றிடு பசுதியா லாம்பரலொன்
றில்லை யித்துணைப் பெறலரும் பொருளிவட் கெளிதாமோ
பல்ப கற்றன தெழினலம் வறிதுபட் டனவன்றோ
வொல்லை யித்தவம் விடுவதே கடனினி யுமைக்கென்றான். (கக)

இந்த வாசகங் கேட்டலு மெம்பிராற் கிவரன்ப
ரந்தண் மாமுது குரவரென் றுன்னின னறியேனல்
வந்து வெம்மொழி கூறுத லெனச்சின மனங்கொண்டு
நொந்து யிர்த்துநா ணீக்கியே பொறுதுமை நுவல்கின்றாள். (கஉ)

முடிவி லாதுறை பகவனென் வேட்கையை முடியாது
விடுவ னென்னினுந் தவத்தினை விடுவனோ மிகவின்னங்
கடிய நோன்பினை யளப்பில செய்துயிர் கழிப்பேனா
னெடிது மூத்தலின் மயங்கினை பித்தனோ நீயென்றாள். (கங)

ஈட்டு மாருயிர்த் தொகையெலா மளித்தவ ளிலவகூற
மீட்டு மோர்புணர்ப் புன்னியே மாதுநீ வெஃகுற்ற
நாட்ட மூன்றுடைப் பிஞ்ஞகன் வள்ளிய னன்றுயர்ந்த
கேட்டி லாய்கொலா முணர்த்துவ னஃதெனக் கிளக்கின்றான். (கச)

ஆடை தோல்விடை யேறுவ தணிகல மரவென்பு
கேடில் வெண்டலை மாலிகை கேழலின் மருப்பின்ன
வோடு கொள்கல மூண்பலி வெய்யநஞ் சுலப்புற்றோர்
காட தேநடம் புரியிடங் கண்ணுதற கடவுட்கே. (கரு)

வேய்ந்து கொள்வது வெள்ளெருக் கறுகுநீர் வியன்கொன்றை
பாந்த ளுச்சியே மத்தமென் றினையன பலவுண்டாற்
சாந்தம் வெண்பொடி சூலமான் மழுத்துடி தழலங்கை
யேந்து கின்றது பாரிடஞ் சூழ்படை யிறையோறகே. (கசு)

அன்னை தாதைகேள் வடிவொடு குணங்களி லனையானுக்
கின்ன வாகிய பலவள னுண்டவை யெவையுந்தா
னின்ன வாகவோ தவம்புரிந் தெய்த்தனை நெடுந்தொல்சீர்
மன்னன் மாமகட் கியைவதே யித்துணை வழக்கென்றான். (கஎ)

வேறு.

புரங்கண்டோன் றனையு மட்ட புங்கவ னினைய கூற
வரங்கண்மே தகைய வெற்பின் மடமயில் கேட்ட லோடுங்
கரங்களாற் செவிகள் பொத்திக் கண்ணுத னுமம் போற்றி
யிரங்கிவெஞ் சினத்த ளாகி யிடருழந் தினைய சொல்வாள். (கஅ)

கேட்டியா லந்த ணாள கேடிலா வெம்பி ரான்றன்
மாட்டொரு சிறிது மன்பு மனத்திடை நிகழ்ந்த தில்லை
காட்டுறு புள்ளின் சூழல் கவருவான் புதன்மேற கொண்ட
வேட்டுவ னியல்போன் மேலோன் வேடநீ கொண்ட தன்மை. (ககூ)

நேசமி லாது தக்க னிமலனை யிழித்து நின்போற்
பேசிய திறனு மன்னோன் பெற்றதுங் கேட்டி லாயோ
வீசனை யிங்ங னென்று னிகழ்ந்தனை யிந்நாள் காறு
மாசறு மறைக ளேது மாய்ந்திலை போலு மன்றே. (உ0)

முறைபடு சுருதி யெல்லா மொழியினு மதுவே சார்வா
வுறுகில ராகிப் பொல்லா வொழுக்கமே கொண்டு முக்க
ணிறைவனை யிகழ்ந்து முத்தி யெய்திடா துழல முன்னாண்
மறையவர் பெற்ற சாப மின்னையு மயக்கு றுதோ. (உக)

தாதையாய்த் தம்மை நல்கித் தந்தொழிற் குரிய ராகி
யாதியாய்த் தங்கட் கின்றி யமைவுறாச் சிவனை நீங்கி
யேதிலார் பக்க மாகி யில்லொழுக் கிறந்தார் போலும்
வேதியர் முறையே செய்தாய் வெறுப்பதெ னின்னை யானே. (உஉ)

ஆயினு மறையோர் தம்மி னருமறை முறையே வேடந்
தாயன தாங்கி யெங்கோன் றொண்டுசெய் வோரு முண்டா
னீயவர் தன்மைத் தாயு நித்தனை யிகழ்ந்தா யென்னிற்
றீயவ ருனைப்போ லில்லை யவுணர்தந் திறத்து மாதோ. (உங)

வேண்டுதல் வேண்டி டாமை யில்லதோர் விமலன் றன்னை
யீண்டுநீ யிகழ்ந்த வெல்லாம் யாரையு மளிக்கு மன்பு
பூண்டிடு குறிகா ணற்றாற் புகழ்ச்சியா மன்றி முக்க
ணாண்டகை யியற்கை யெல்லா மார்கொலோ வறிய கிற்பார். (உச)

போதனே முதலா வுள்ள புங்கவர் வழிபட் டேத்த
வேதமி னிறைமை யாற்ற லியாவையும் புரிந்த நாதன்
காதலும் வெறுப்பு மின்றிக் கருணைசெய் நிலைமை யேகாண்
பேதைநீ யிகழ்ச்சி யேபோற் பேசிய தன்மை யெல்லாம். (உரு)

இம்முறை மறைக ளாதி யிசைத்தன வினைய வெல்லாஞ்
செம்மைகொ ளுணர்வி னுன்றோர் தெளிகுவ ரிறையை யெள்ளும்
வெம்மைகொள் குணத்தாய் நிறகு விளம்பொணு விளம்பிற் பாவம்
பொய்ம்மறை வேடத் தோடும் போதிநீ புறத்தி லென்றாள். (உசு)

அறத்தினைப் புரிவா ளிவ்வா றறைதலும் மணங்கே யீங்குன்
றிறத்தினி லார்வஞ் செய்து சென்றவென் செயல்கே ளாது
புறத்திடைப் போதி யென்றி புரைவதோ புகுந்த பான்மை
மறைச்சடங் கியற்றி நின்னை வரைந்திடற் காகு மென்றான். (உஎ)

வஞ்சக முதல்வன் சொற்ற வாசக மிறைவி கேளா
வஞ்செவி பொத்தி யாற்றா தழுங்கிமெய் பதைப்ப விம்மி
யெஞ்சலின் முதியோன் போகா னேகுவன் யானே யென்னாப்
பஞ்சடி சேப்ப வாண்டோர் பாங்கரி னடர்த லுற்றாள். (உஅ)

படர்ந்தனள் போத லோடும் பணிபடு மிமயம் வைகு
மடந்தைதன் னியற்கை நோக்கி வரம்பிலா வருண்மீ தூர
வடைந்ததொல் பனவக் கோல மகன்றுமால் விடைமேல் கொண்டு
தொடர்ந்துபல கணங்கள் போற்றத் தோன்றினன் றொலைவி லாதோன். ()

தொலைவறு பகவன் வான்மீத் தோன்றலுந் துளங்கி நாணி
மலைமகள் கண்டு பல்கால் வணங்கி யஞ்சலியாற் போற்றி
யலகிலா வுணர்வா லெட்டா வாதிநின் மாயை தேறேன்
புலனிலாச் சிறியே னின்னை யிகழ்ந்தவா பொறுத்தி யென்றாள். (௩௦)

கற்றவ மடந்தை கேண்மோ நம்மிடத் தன்பா னீமுன்
சொற்றன யாவு மீண்டே துதித்தன போலக் கொண்டாங்
குற்றமுண் டாயி னன்றே பொறுப்பது கொடிய நோன்பான்
மற்றினி வருந்த லுனை மணஞ்செய வருது மென்றான். (௩க)

சிறந்தநின் வதுவை முற்றச் செல்லுது மென்று தொல்லோன்
மறைந்தனன் போத லோடு மலைமக ளுள்ளந் தன்னி
னிறைந்திடு மகிழ்ச்சி கொண்டு நிதத்னை நினைந்து போற்றி
யுறைந்தன ளிதனை வேந்தற குரைத்திடச் சில்வர் போனார். (௩உ)

அண்ணல்வந் தருளிச்செய்கை யரசனுக் குரைத்த லோடு
முண்ணிக முயர்ச்சி நீங்கி யொல்லைதன் னில்லி னேடு
நண்ணின னுமையைக் கொண்டு நலங்கொடன் னகர்த் துய்த்தான்
கண்ணுத லிறைவ னங்கட் செய்தன கழற லுற்றேன். (௩௩)

ஆ. திருவிருத்தம் ௯௬௬.

**சநகாதியர்** நால்வரும் கைலையைநீங்கிச் சென்றபின்பு, இறைவன், தன்னை
நோக்கித் தவஞ்செய்துகொண்டிருக்கிற மலைமகளுடைய அன்புமுதலியவற்றை
யெல்லார்க்கும் காட்டும்பொருட்டு, பவளம்போன்றசடையும் திருவெண்ணீற்றுக்
கோலமும் முந்நூலும் கமண்டலமும் வேதம்பழகியநாவும் ஆகிய இவற்றினையு
டைய கிழவேதியவடிவங்கொண்டு எழுந்தருளி எமது அன்னையாகிய மலைமகள்
தவஞ்செய்யும் இமயமலைச்சாரலிற்போய் நிற்க, அங்கே வாயில்காப்போராகிய மா
தர்கள் இவரைநோக்கி இவர் முற்றத்துறந்த முனிவர்போலத் தோன்றுகின்றன
ரென்று எண்ணி, ஐயரே! இம்மலைச்சாரலில் உம்மையொத்த விருத்தர்கள்வருதல் எளி
தல்லவே. அப்படியிருக்க இவ்விடத்திற்கு நீர் வந்தகாரியம் யாதென்றுவினவ, பிரா
மணவேடங்கொண்டுவந்த பரமசிவன் உமையவள் தவஞ்செய்யும்வகையைக்
காணும்பொருட்டு வந்தேனென்றுசொல்ல, அப்பெண்களிற்சிலர் விரைந்துசென்று
இறைவியையவணங்கி இவர்வரவை யறிவிக்க அவளும் அந்தக்கிழவேதியரை எம்மி
டத்திற்கு அழைத்துவரவேண்டுமென்ன அப்படியே அவர்களும் அவ்வேதியரை
யழைத்துவந்து இறைவிமுன்னேவிடுத்தனர். விடுத்தலும் அவரை இறைவிவாழ்
த்தி வணங்கிநிற்றலும் அவளுக்கு உயிர்ப்பாங்கியாகிய விஜயை என்பவள் இவருக்கு
ஓர் ஆசனமளித்து இருக்கச்செய்தனள். இறைவியும் அருகேநின்றுகொண்டிருந்
தாள். அப்பொழுது இறைவன் உமையவளை அன்போடுபார்த்தருளி உன் திரு
மேனிவருந்தி என்புருவமாகத்தோன்றப் பெருந்தவஞ்செய்கின்றனை. இப்படிச்
செய்வது எந்தப்பெரும்பொருளை நாடியோ அதனை யெனக்கு எடுத்துச்சொல்ல
வேண்டுமென்று கேட்க, இறைவி தன்னுயிர்ப்பாங்கியாகிய விஜயையையென்பவளு
டைய முகத்தைநோக்கி, தமது கருத்தைத் தெரிவிக்கும்படி குறித்தருள, அக்குறிப்
பையுணர்ந்த விஜயை இறைவனைநோக்கி ஐயரே! இவ்வுமையவள் மறைமுதல்
யோகியாகிய பரமசிவனை மணக்கவேண்டுமென்றெண்ணி இக்கடுந்தவம்செய்
கின்றாள் என்று சொல்லக்கேட்ட கிழவேதியர் பெண்ணே! வேதமுதல்வராகிய
பரமசிவனை இவள் மணஞ்செய்துகொள்ள விரும்பித் தவஞ்செய்வதனால் அவர்
இவள்கருத்திற்கிணங்கி மணம்செய்துகொள்ளுவரோ. அவர் எல்லாருக்கும் கிடைத்
தற்கரிய பொருளன்றோ. அவரைக்குறித்து இவள் தவஞ்செய்வது பயனில் காரிய
மாகும். ஆதலால் இவள் இத்தவத்தொழிலைவிட்டொழிவதே நன்மையாமென்று
சொல்ல, அருகிருந்து இச்சொற்களைக்கேட்ட முதல்வியானவள் வேதியரை
நோக்கி, பரமசிவன் என்கருத்தை முடியாதொழிந்தாராயின், இன்னும கடுந்
தவம்புரிந்து என்கருத்தை முடித்துக்கொள்ளுவேன், அன்றி என் உயிரையாயி
னும் விட்டுவிடுவேன். நீர் இவ்வாறு பித்துக்கொண்டவர்போலப் பிதற்றுவது
தகுதியன்றென்றுகூறுதலும், பிராமணவேடங்கொண்டுவந்த பரமசிவன் மற்றோர்
புணர்ப்பினைத் தம் திருவுளத்தேநினைந்து இறைவியைநோக்கி, மலைமகளே! நீவிரும்
பிய கண்ணுதற்கடவுளுக்கு ஆடையாவது தோல், வாகனமோ விடை, அணிகல
மாவன பாம்பும், என்பும், வெண்டலையும், பன்றிக்கொம்புமாம். பாத்திரம்
பிரமகபாலமாம். உணவோ ஆலகாலவிடம், நடனசாலையோ மயானம், அணி
வதோ வெள்ளெருக்கு, அறுகு, கொன்றை, நொச்சி, ஊமத்தை, வில்வம் முத
லியவாம். பூசுவது வெண்ணீறாகும். கையிலேந்துவது சூலம், மான், மழு, துடி,
அழல் என்பவைகளாம். படைகளோ பூதகணங்கள். அவருக்குத் தாய்தந்தையர்
கள் இல்லை. குணரூபங்களுமில்லை. அவருக்கு உளவாயிருக்கின்ற செல்வங்கள்
இவையே. இவற்றை விரும்பியோ நீ அவரை மணஞ்செய்துகொள்ள நாடுவது
என்று சொல்லிமுடித்தார். இவையனைத்தும் மலையரையன் மடப்பாவைகேட்டு,

தன்கைகளால் காதுகளைப் பொத்திக்கொண்டு இறைவரது திருநாமமாகிய ஐந் தெழுத்தினையும் உச்சரித்துப் போற்றி மனமிரங்கி கடுங்கோபமுடையராய் இவற் றைக்கூறுவாராயினர்.

நீர் தவவேடங்கொண்டது காட்டிலுள்ள புள்ளினங்களைக்கவரும் வேடன் அவைகளைப் படுப்பதற்குக்கொண்ட வுருவம்போலு மென்பதல்லது உள்ளவாறு எமதிறைவன் பெருமையையறிந்ததனாலன்று. சற்றுஞ் சிவநேசமில்லாது இழித் துக்கூறினை. அவன்பெற்ற வகைகளையும் சிறிதுமறிந்தாயில்லை. என்முன் ஒன் றுமறியாதுபேசினை. இதுவரையும் உடம்புமூத்தும் வேதங்கள் அவனைக்கூறும் பரிசினையறியாது தீயவொழுக்கம் மேற்கொண்ட சிலர் முக்கட்பெருமானை யிகழ் ந்து முத்திப்பெருஞ்செல்வத்தை யெய்தமுயலாமைபோல முன்னாளில் வேதியர் பெற்ற சாபம் நின்னையும் மயக்கிற்றோ! தாதையாய்த் தம்மைத்தந்து தமது தொ ழிற்குரியானாய் ஆதியாகித் தமக்கின்றியமையாச் சிவபிரானையொழித்து எதிலார் பக்கஞ்சார்ந்து அறவொழுக்கமிகந்தார்போன்ற வேதியர்முறைமையே செய்தொ ழிந்தனை! நின்னை வெறுப்பதனால் ஆம்பயன்யாது! அவ்வாறாயினும் அம்மறை யோருள் அருமறைகூறும் சிவவேடந்தாங்கிநின்று எமது பெருமானுக்குத் தொண் டுசெய்வாருமுண்டு; அவர்போலும் நீ வேடங்கொண்டிருக்கின்றனை, நீ அவ்வே டமாத்திரத்தால் விளங்குகின்றனையன்றித் தீயார் பிறர்நின்போல்வாரில்லை. நீயோ வேண்டுதல்வேண்டாமையிலனாகிய விமலனை யிங்கு இகழ்ந்தனவனைத்தும் யாரை யும் அளிக்கின்ற அன்பேபூண்ட அறிகுறிகளேயாம். ஆகலின், அவைகள் அனைத் தும் புகழ்ச்சித்திறமேயன்றி இறைவன் இயற்கையனைத்தும் எவரேயறியவல் லார். பிரமன்முதலிய தேவர்களெல்லாம் வழிபாடுசெய்துவணங்கக் குற்றமொன் றில்லாத இறைமைக்குணமுடைய இறைவன் செயலனைத்தும் விருப்புவெறுப்பில் லாச் செயல்களேயாகும். பேதைமைக்குணத்தால் நீ யிகழ்ச்சியேபோற் புகழ்ச்சி யுங்கூறினை. இம்முறையே மறைகள்முதலிய ஆப்தகலைகள் எடுத்துக்கூறின; இவை களனைத்தும் செம்மைக்குணம்பூண்ட மனத்தாரறிவர்; இறைவனை நிந்தைமொழி கூறிய அந்தணனே! நினக்கு இவையனைத்துங்கூறுவனேல் பெரும்பாவமுண்டாம். பொய்மறைவேடத்தோய் போதியென்று சொல்லியருளினள். அறப்பெருஞ்செல்வி இவ்வாறு சொல்லியருள, இறைவன் உன்பாற்பரிவாய் இத்தனையுஞ்சொல்லிய என்னைப் புறத்தேபோதியென்று புறக்கணிப்பது தகுதியாமோ? யாம் எழுந்தரு ளியதன்மை, மறைகள் சடங்குகாட்ட உம்மையாம் மணஞ்செய்து கொள்ளவந்த தன்றி வேறன்று என்று சொல்லுதலும், இறைவி தன்செவிகளைப்பொத்திக்கொ ண்டு, விம்மியழுது, இந்தமுதியோன் என்னைவிட்டு நீங்கான், நானே போய்விடு வது நலமெனத்துணிந்து, தனது செம்பஞ்சூட்டப்பெற்ற பாதங்கள்கன்ற அங்கோ ரிடத்திற்குப்போக வொருப்பட்டாள். அக்கருத்தையறிந்த பொய்வேடங்கொண்ட சிவபிரான் மனமகிழ்ந்து, தானுந்தொடர்ந்துபோய்த் தனது பொய்யுருவொழிந்து, நந்திதேவர்முதலியவர்கள் தம்மைச் சூழ்ந்துவரச்சென்று இறைவிக்கெதிரேயெழு ந்தருளினன். அதுகண்டு மலையரையன்மகள் பலகாலும்வணங்கி, இறைவனே! உன்மாயையையறியேன், அறிவிலியாகியநான் இகழ்ந்ததைப் பொறுத்தருளவேண் டும் என்று விண்ணப்பஞ்செய்ய, இறைவனானவன் உமையவளைநோக்கி, தவத் தொழிலை மேற்கொண்ட இமயமயிலே! எம்மிடத் தன்புமிகுதியால் முன்பு நீ சொல்லிய இகழ்த்துரையாவும் புகழ்ந்துரையாகக்கொண்டனம். குற்றமிருந்தா லல்லவோ பொறுத்தலென்றொன்றுளது. இனி நீ தவஞ்செய்து வருந்தவேண் டாம். உன்னை மணஞ்செய்ய நாளைவருவோம், என்றுசொல்லி மறைந்தருளினர்.

இமயவல்லி அளவற்ற மகிழ்ச்சியையடைந்து இறைவனைநினைந்து வணங்கி அவ்விடத்திலேயே தங்கியிருந்தாள். இறைவன் எழுந்தருளினசெய்தியைச் சிலர்சென்று மலையரையனுக்குச்சொல்ல, அவன் மனமகிழ்ந்து தன்மனைவியோடும் உமையவளிருக்குமிடத்தையடைந்து அவளைத் தனது நகரத்திற்சேர்த்தான்.

தவங்காண்படலமுற்றிற்று.

## மணம்பேசுபடலம்.

பொருட்டரு மலைக்கொடி புரியு நோன்புகண்
டருடனை நல்கிய வாதி நாயகன்
றெருடரு கைலையிற் சேர்வுற் றேழ்வகை
யிருடிக டங்களை யிதயத் துன்னினான். (௧)

நினைதலுங் கண்ணுத னிமல னேழ்பெரு
முனிவரு மன்னதை முன்னி யுள்வெரீஇப்
பனிவரு மெய்யொடு படர்ந்து வல்லையி
லனையனை யிறைஞ்சிநின் றறைதன் மேயினார். (௨)

பங்கயன் மான்முதற் பகரும் பண்ணவ
ருங்குன தேவனுக் குரிய ராயுற
வெங்களை யுன்னினை யாங்கள் செய்தவ
மங்கவர் தவத்தினு மதிகம் போலுமால். (௩)

எந்தையெம் பெருமநீ யெம்மை வம்மென
முந்துறு கருணையின் முன்னிற் றூதலி
னுய்ந்தன மடியரே முடைய தீப்பவஞ்
சிந்தின மினியொரு தீதுண் டாகுமோ. (௪)

ஒருதலை யைந்தொழி லுலப்பு றூவகை
புரிதரு பகவனம் புன்மை நீக்குவான்
கருணையொ டுன்னினை கடிதிற் செய்பணி
யருளுதி யென்றன ராற்று நோன்பினோர். (௫)

வேறு.

அமலனம் முனிவர் மாற்றங் கேட்டலு மவரை நோக்கி
யிமயமே லிறைவன் றன்பா லேகியே யெமக்கிவ் வைக
லுமைதனை வதுவை நீரா லுதவுவான் வினவி வல்லே
நமதுமுன் வம்மி னென்று நன்றருள் புரிந்தா னன்றே. (௬)

நாயக னருளக் கேளா நன்றென விறைஞ்சி யேகி
யேயதோன் முனிவர் யாரு மிமயமே லிறைமு னண்ணு
வாயவன் மனைவி யோடு மடைந்தெதிர் கொண்டு தாழ்ந்து
நேயமோ டருச்சித் தேத்தி நின்றிது புகலு கின்றான். (௭)

படியறு நூந்தா ளிண்டுப் படிதலா ளிமய மேருத்
தடவரை யதனிற் றாய்தாய்த் தலைமையும் பெற்ற தன்றே
நெடியவென் பவமு மின்னே நீங்கின நீவி ரெல்லா
மடியனேன் றன்பால் வந்த நிமித்தமென் னறையு மென்றான். (அ)

அங்கது வினவு மெல்லை யருந்தவ ரகில மீன்ற
மங்கையை வதுவை செய்வான் மன்னுயிர்க் குயிராய் நின்ற
சங்கர னினைந்துன் னோடு சாற்றுதற் கெம்மை யுய்த்தா
னிங்கிதெம் வரலா றென்ன விசைவுகொண் டிறைவன் சொல்வான். (௯)

துன்னிய வுயிர்கள் யாவுந் தொல்லுல கனைத்து மீன்ற
கன்னிகை யுமையா டன்னைக் கடிமண முறையி னலகி
யென்னையு மடிமை யாக வீகுவ னிறைவற் கென்ன
மன்னவ னயலே நின்ற மனைவியீ துரைக்க லுற்றாள். (கo)

மலரயன் புதல்வன் றன்னோர் மடந்தையை மணத்தி னல்க
வலைபுனற் சடிலத் தண்ண லவன்றலை கொண்டா னென்பர்
நிலைமையங் கதனை யுன்னி நெஞ்சக மஞ்சு மெங்கள்
குலமக ளினைய வற்குக் கொடுத்திட லெவனோ வென்றாள். (கக)

என்றலு மவளை நோக்கி யெழுமுனி வோருஞ் சொல்வா
ரொன்றுநீ யிரங்கல் வாழி யொப்பிலா முதல்வன் செய்கை
நன்றுதேர்ந் திலையாற் றக்க னலத்தகு மவியை மாறறி
யன்றுதன் னிகழ்த லாலே யவன்றலை முடிவு செய்தான். (கஉ)

அடைந்துளோர்க் கருளு மாறு மல்லவர் தமக்குத் தண்டம்
படுந்துணை தெரிந்து காட்டும் பான்மையும் பரமன் செய்கை
மடந்தையித் தன்மை யாரு மனப்படுத் துணர்வ ரீதே
திடம்பட வுணர்தி வேறு சிந்தனை செய்யே லென்றார். (கங)

வேறு.

இயலுறு முனிவோர்க ளிவைமொழி தலுமோரா
மயலறு வரையண்ணல் வாய்மையி தெனவோடு
மயலுறு மினமேனை யஞ்சின ளமலன்றன்
செயலிது வுணராதே செப்பின னிவையென்றே. (கச)

உண்ணலி வொடுமேனை யுவர்மல ரடிதாழுஉப்
பெண்ணறி வெவையேனும் பேதைமை வழியன்றோ
வண்ணற னருணீர்மை யறுவது மறிகில்லேன்
புண்ணிய முனிவீரென் புன்மொழி பொறுமென்றாள். (கரு)

பணிவுட னிவைமேனை பகர்தலு மவடன்பாற்
கணிதமி லருள்செய்யக் காவல னதுகாணூ
வினைதவிர் முனிவீர்கா ளிவளுரை கருதன்மின்
மணமியி னிறையோனை வரமொழி குதிரென்றான். (கசு)

பணிபடு வரையண்ணல் பகர்மொழி யதுகேளா
மனமிக மகிழ்வாகி மற்றவர் தமையங்க
ணினிமையொ டறங்கி யெழுவரு மவணீங்கித்
தனைநிகர் பிறிதில்லாத் தண்கை லையில்வந்தார். (கஎ)

வந்தெழு முனிவோரு மாநக ரிடைசாரா
நந்திகண் முறையுய்ப்ப நாதனை நணுகுற்றே
யந்தமி லணியோடு மவனடி தொழுதேத்தி
யெந்தையை யிதுகேளென் றியாவது முரைசெய்தார். (கஅ)

வரைமிசை யரசாள்வோன் மணவினை யிசைவெல்லா
முரைசெய வருள்செய்தே யும்பரின் முனிகாணீர்
புரிதரு செயலாற்றப் போகுதி ரெனலோடு
மரனடி தொழுதேத்தி யவர்பத மணுகுற்றார். (கக)

வேறு.

எங்குறை தீர்ந்ததென் றெழுத வத்தருந்
தங்கடம் பதத்திடைத் தண்பபின் றெய்தினு
ரிங்கிது நின்றிட விமய மேலிறை
யங்கினிச் செய்தவா றறியக் கூறுவாம். (உ0)

ஆ திருவிருத்தம் சுஅக.

---

வசனம்.

இமயவல்லிநோற்கும் நோன்பைக்கண்டு அருள்புரிந்த பரமசிவன் கைலைமலையையடைந்து, சப்தருஷிகளும் வரும்படி திருவுளம்பற்றுதலும், அவரெழுவரும்பயந்து விரைந்துவந்து கைலைமலையையடைந்தனர். அவ்வாறடைந்தவர்கள், இறைவனைநோக்கி, பரமகாருணிகனே, பிரமன்முதலியோர் உமது குற்றேவல்செய்பவராயிருக்க, ஒன்றுக்கும்பற்றாத எங்களைநினைந்ததற்குக் காரணம்யாது? நாங்கள் செய்ததவம் அவர்கள்செய்ததவத்தினும் மேற்பட்டதுபோலும், இனியாம் பிறவிப்பிணிக் கிலக்காகமாட்டோம், எங்களை யொருபொருளாயெண்ணி வரவழைத்தீராகையால் எங்களுக்குக் கட்டளையிடவேண்டிய காரியத்தைக் கட்டளையிடலாம் என்று வணங்கிநின்றார்கள். இறைவன் அவர்களைநோக்கி ஓ முனிவரர்களே, நீங்கள் மலையரையனிடத்திற்போய் அவன் மகளாகிய பார்வதியை எமக்கு மணஞ்செய்துதரும்படி கேட்டிசையச்செய்து எம்மிடத்திற்கு வாருங்களென்று கட்டளையிட, அம்முனிவர்களும் அவ்வாறே மலையரையனிடம்போய்க் காவலரால் தமது வருகையைத் தெரிவித்தலும், அவனும் அவன்மனைவியும் விரைந்து எதிர்கொண்டுவந்து அழைத்துப்போய் ஆசநமளித்து, பெருந்தவரே! நீங்கள் வந்தகாரியம்யாதோ, அதனை அடியேங்களுக்குச் சொல்லியருள வேண்டுமென்று வணங்கிக் கேட்க, அவர்களும் இறைவன் கட்டளையிட்டசெய்தியைச் சொல்லக்கேட்ட மலையரையன், முனிவரைநோக்கி, ஐயன்மீர், என்புதல்வியை அந்தச் சங்கரனுக்கு மணஞ்செய்துகொடுப்பதுமன்றி யான் அவருக்கடிமையாகவு மிசைந்தேனென்று சொல்ல, அந்தச்சொல்லை அருகேயிருந்துகேட்ட அவன்மனைவியாகிய மேனையென்பவள் முனிவரைநோக்கி அருந்தவரே! எல்லாப்பொருள்களுக்கும் மூலகாரணனாகிய பரமசிவன் எமதுபுதல்வியைமணக்கத் திருவுளம்பற்றினதற்குக் காரணம் எமது புண்ணியப்பயனேயன்றி வேறன்று. ஆனால், அவ்விறைவன் முற்காலத்தில் தக்கன் தன்மகளாகிய தாக்ஷாயணியை தனக்கு மணஞ்செய்துகொடுத்திருக்க, சற்றும் கண்ணோட்டமின்றி, அவனதுயாகத்தை யழித்ததேயல்லாமல் அவன் தலையையுமறுத்து அதற்கீடாக ஆட்டுத்தலையைப் பொருத்தியவரன்றோ, அந்தச்செய்

தியை எண்ணுந்தோறும் என்மனம் அஞ்சாநின்றதே, இப்படிப்பட்ட சிவகோப முள்ளவருக்கு எமது புதல்வியை மணஞ்செய்துகொடுப்பது எவ்வாறு என்றான். அதுகேட்டமுனிவர் அந்தமேனையைநோக்கி, நீயொன்றும் அஞ்சவேண்டாம், இறைவன் தன்னை அவமதித்து தனக்குரிய அவிர்ப்பாகத்தைக் கொடாமையால் தக்கனை அப்படிச்செய்தனன், அவ்வாறுசெய்வது மறக்கருணையென்றும், தன்னிடத்தன்புசெய்வோர்க்கவன் கருணைசெய்வது அறக்கருணையென்றும் வேதாகமாதிகள் முழக்கும். ஆதலால் நீ வேறுசிந்தை செய்யவேண்டாமென்றார்கள்.

அதுகேட்டமலையரையன் நீங்கள்சொன்னதே உசிதம் என்றான். அருகேநின்ற மேனையும்பயந்து,நான் இறைவனதியற்கையறியாது சொன்னபிழையைப்பொறுத்தருளவேண்டுமென்று வேண்டி வணங்கிநின்றாள். நிற்றலும் முனிவர்கள் மிகவும் மனமகிழ்ந்தார்கள். மலையரையன் அம்முனிவரைநோக்கி, இவளது பேதைமையமைந்தசொல்லை ஒருபொருளாக நினைக்கவேண்டியதில்லை, பரமசிவனை மணக்கோலத்தோடு எழுந்தருளும்படி சொல்லுங்கள் என்றான். முனிவரும் இமயமலையைநீங்கிக் கைலைமலையையடைந்து, நந்திதேவர் அநுமதிபெற்று இறைவன் சந்நிதியையடைந்து வணங்கிநின்று நடந்த விருத்தாந்தமெல்லாம் விண்ணப்பஞ்செய்து விடைபெற்றுத் தமதிருக்கையைச்சேர்ந்தார்கள். இனி, மலையரையன் செய்கையைக் கூறுகின்றேனென்று சூதமுனிவர் சவுநகாதியர்க்குச் சொல்லத் தொடங்கினர்.

மணம்பேசுபடலமுற்றிற்று.

---

## வரைபுனை படலம்.

கண்ணுத லுமைதவங் கண்டு நின்னையா
மண்ணவர் புகழ்வகை மணத்து மென்றதும்
விண்ணெழு முனிவரின் வினவி விட்டது
மெண்ணினன் மகிழ்ந்தன னிமயத் தண்ணலே. (க)

கணிதமி லுயிரெலாங் கலந்து மற்றவை
யுணர்வுதொ றிருந்தவற் கொருதன் கன்னியை
மணமுறை புரிதிற மதித்துத் தேவர்தம்
பணிபுரி தச்சனைப் பரிவொ டுன்னினான். (உ)

உன்னிய போதினி லும்பர் கம்மியன்
மன்னவ னெதிருற வந்து கைதொழு
தென்னைகொல் கருதினை யாது செய்பணி
யன்னதை மொழிகென வறைதன் மேயினான். (ங)

என்னையாள் கண்ணுத லிறைவற் கியான்பெறு
முன்னையா முமைதனை யளிப்ப னிவ்வரைக்
கன்னிமா நகரெலாங் கவின்சி றந்திடப்
பொன்னினா டாமெனப் புனைதியா லென்றான். (ச)

அப்பொழு தத்தினி லடுக்கன் மேலையோன்
செப்பிய வாசகஞ் செவிக்கொண் டுள்ளமேன்
மெய்ப்பெரு மகிழ்ச்சியை மேவி யங்கக
ரொப்பனை செய்திட வுன்னி னானரோ. (௫)

நீடுறு தருநிரை நிமிருங் கால்களாய்ப்
பாடுறு கழிகளாய்ப் பரம்பும் பல்பணை
மூடுற வதன்மிசை முகில்க ளெங்கணும்
பீடுறு பந்தர்போற் பிறங்கும் வெற்பின்மேல் (௬)

மலையுறழ் கோபுர மன்றஞ் சூளிகை
நிலைகெழு செய்யதேர் நிழற்று மண்டபம்
பலவுட னறுமலர்ப் பந்த ரன்னவை
தொலைவறு மாவணந் தோறு நல்கினான். (௭)

நீக்கமில் கதலிகை நெடிய கேதன
மேக்குயர் காவண மிசைத்தந் துள்ளிடை
யாக்குறு கம்பல மணிசெய் தாயிடைத்
தூக்கினன் கவரியுஞ் சுடர்கொண் மாலையும். (௮)

குரக்கத முகம்புரை குலைக ணீங்கிய
மரகத வொளிபடு வாழை பூகநன்
னிரைகெழு தன்மையி னிறுவிப் பூந்துணர்
விரைகெழு தோரணம் விசும்பி னாற்றினான். (௯)

ஒண்ணிதி யியக்கர்கோ னுறையு ளானதும்
விண்ணவர் தொழுதிட வீற்றி ருந்திடு
மண்ணறன் கோயிலு மாக வீதிக
ளெண்ணருந் திருவுற வெழில்ப டுத்தினான். (௧௦)

ஒருபுறத் திளையினி யுமைக்கு நல்குவோ
னிருபுறத் தினும்வரு மெண்ணி றேவருந்
தருபுறப் பொருளெலாஞ் சாரச் சாலைக
டிரிபுறத் திரிபுறச் செய்த மைத்தனன். (௧௧)

ஆயிரப் பத்தென வறையும் யோசனை
போயதோ ரளவையிற் புரிசை யொன்றினைக்
கோயிலி னொருபுடை குயிற்றிக் கோபுரம்
வாயில்க ணான்கினு மரபி னல்கினான். (௧௨)

அங்கத னடுவுற வகன்ப ரப்பினின்
மங்கல மணஞ்செய வதுவைச் சாலையைச்
செங்கன கத்தினாற் றிகழச் செய்தனன்
கங்கையஞ் சடையினான் கைலைக் கோயில்போல். (௧௩)

சாலையி னிலத்திடைச் சந்த மான்மத
மேலுறு நாவிநீர் விரவிப் பூசியே
கோலமென் மலர்கடூய்க் குறுகும் வானவர்க்
கேலுறு பலதவி சிருப்பச் செய்தனன். (௧௪)

வானவின் மணிமுகில் வனச மாமலர்
நீனிறம் விரிதரு நெய்தல் சண்பக
மேனைய நிறங்களா லெண்ணில் வேதிகை
யானவை புரிந்தன னயனு நாணவே. (கரு)

கண்ணடி பூந்தொடை கவரி பலீறுகின்
மண்ணிய செழுமணி மாலை தூங்குறப்
பண்ணுறு வித்தனன் பரமன் பால்வரும்
விண்ணவர் விழியெலாம் விருந்து கொள்ளவே. (கசு)

தேவரு முனிவருந் திருவ னார்களும்
பாவையி னுயிருறு பண்பி னாக்கியே
மேவரு கவரிதார் வீணை யேந்தியே
யேவலர் தொழின்முறை யியற்ற நல்கினன். (கஎ)

பெண்ணிய லாரெனப் பிறங்கும் பாவைக
டண்ணுமை முதலிய தாக்கித் தண்டியல்
பண்ணொடு களிநடம் பயிலு வித்தனன்
விண்ணவ ரரம்பையர் யாரும் வெஃகவே. (கஅ)

நெருங்கிய கிளிமயி லன்மி தண்புறாப்
பொருங்கரி யரிபரி பொருநர் வானுளோ
ரொருங்குடன் மணிகளா லோவி யப்பட
வருங்கடி யிருக்கையு ளமர நல்கினன். (கக)

குறைதவிர் நிலைமையாற் குயிற்றுஞ் சாலையு
ணிறைதரு மிந்திர நீலத தாலொரு
திறலரி யணையினைச் சிறப்பிற் செய்தன
னிறைவனு மிறைவியு மினிது மேவவே. (உ0)

குண்டமும் வேதிகை வகையுங் கோதில்சீர்
மண்டில மானதும் வகுத்து வேள்விசெய்
பண்டம தானதும் படுத்திப் பண்ணவ
ரெண்டொகை மங்கல மிருத்தி னானரோ. (உக)

கண்டெறு கதிர்மதிக் காந்தங் காஞ்சன
மொண்டுகிர் நித்தில மொளிறு வச்சிர
முண்டக வெயின்மணி முதல்வெ றுக்கையான்
மண்டப மெண்ணில மருங்கி னல்கினன். (உஉ)

காவிகண் மலர்தரு கயங்க ளோர்பல
வோவறு முற்பல வோடை யோர்பல
பூவியல் வாரிசப் பொய்கை யோர்பல
வாவிக ளோர்பல மருங்கி லாக்கினன். (உங)

பாசடை மரகதம் பளிங்கு வச்சிரங்
காசறு நன்மணி கனக மன்னதாற்
றேசுறு நளிமலர் செறிந்த பூந்தடம்
வாசவன் கண்டுள மருளத் தந்தனன். (உச)

கற்பகஞ் சந்தகில் கதலி பூகமே
பொற்புறு வருக்கைமாப் புன்னை யாதிய
பற்பல மணிகளாற் படுத்தி யன்னவை
நற்பயன் வழங்கவு நல்கி னாரரோ. (உ௫)

இன்னவா றளப்பில விமைய வர்க்கெலா
முன்னுறு கம்மியன் முன்னிச் செய்தலும்
பொன்னிய விமகிரிப் புரத்து மேவிய
மன்னவன் கண்டவை மகிழ்ச்சி யெய்தினான். (உ௬)

சீதர னயன்முதற் றேவர் மாத்தொகை
மாதவ முனிவரர் மடந்தை மாரொடு
காதலி னுமைமணங் காண வந்திடத்
தூதரை யெங்கணுந் தூண்டி னாரரோ. (உ௭)

ஒற்றர்தம் முறைதெரிந் தும்பர் யாவருங்
குற்றமின் முனிவருங் குன்ற வில்லினாற்
பற்றலர் புரமடு பிரமம் போற்றியே
மற்றவன் றன்னொடு வருது மென்றனர். (உ௮)

வெற்றிகொள் வயப்புலி மிசையு யர்த்திடுங்
கொற்றவை யாமளை குழீஇய காளிகள்
சுற்றுறு மெழுநதி யிமயத் தொல்கிரி
யுற்றனர் தொழுதன ருமைமு னண்ணினார். (உ௯)

செந்திரு நாமகள் சீர்பெ றுஞ்சசி
பந்தமி ருபத பன்னி யாயுளா
ரந்தமி லணங்கினர் யாரு மவ்வரை
வந்தன ரவரவர் மகிழ்ந ரேவலால். (௩0)

பங்கய மிசைவரு பாவை யேமுத
னங்கையர் யாவரு நற்ற வத்தினா
லங்கநொந் துறைதரு மம்மை தாடொழா
மங்கல வதுவையின் வனப்புச் செய்தனர். (௩௧)

நெறிதரு தவத்துரு நீக்கிக் காமருக்
குறையுளா தாகிய வுமைதன் மெய்யினைக்
குறைதவிர் நிலைமையிற் கோலஞ் செய்தன
ரிறைவனை வழிபடு மியல்பி னாரென. (௩௨)

மேதகு பொலஞ்சுடர் மேரு மந்தர
மாதிய வாகிய வலகில் சுற்றமு
மோதருங் கடல்களு முரக வேந்தரு
மாதிர யானையும் பிறவும் வந்தவே. (௩௩)

வேறு.

ஈங்கிது காலை தன்னி லிமகிரி புரக்கு மன்னன்
பாங்குறு தமர்க ளோடும் பரிவொடுஞ் சென்று வெள்ளி
யோங்கலி னந்தி யுய்ப்ப வுயிர்க்குயி ரான வண்ணல்
பூங்கழல் வணங்கி நின்றாங் கினையன புகல லுற்றான். (௩௪)

ஆதியி னுலக மெல்லா மளித்திடு மண்ணை தன்னைக்
காதலின் வதுவை செய்யக் கருதினை கணித நூலோ
ரோதுபங் குனியின் றிங்க ளுத்தர மின்றே யாகு
மீதுநன் முகூர்த்த மெந்தா யிமயமேல் வருதி யென்றான். (௯௫)

அல்லுறழ் கண்டத் தெந்தை யரசனை நோக்கி யின்னே
யெல்லையில் கணங்கள் சூழ விமயமேல் வருது முன்னஞ்
செல்லுதி யென்ற லோடுந் திருவடி வணங்கிப் போற்றி
வல்லையின் மீண்டு போய்த்தன் வளநக ரிருக்கை புக்கான். (௯௬)

ஆ திருவிருத்தம் - ௭௨௫.

---

வசனம்.

மலையரையன், தன்மகள்தவஞ்செய்ததை இறைவன்கண்டு அவளைமணஞ்செய்து கொள்வோமென்றதையும் சப்தமுனிவரும் அந்தமணம்பேசச்சென்றதையும் சிந்தித்துமனமகிழ்ச்சிமிகுந்தவனாய் தெய்வத்தச்சனைநினைத்தான். அத்தெய்வத்தச்சனும் விரைந்துவந்து இமயமலையையடைந்து என்னை நினைக்கவேண்டியதற்குக் காரணம் யாது, நான் செய்யத்தக்க குற்றேவல் யாது என்று வணங்கிக்கேட்க, மலையரசனு மவனைநோக்கி என்புதல்வியை எல்லாம்வல்ல இறைவனுக்கு மணமுடித்துக்கொடுக்க இசைந்துவிட்டேன், இனிச் சும்மாவிருக்கலாகாது ஆதலால், இம்மலைமேலுள்ள எனதுநகரத்தைப் பொன்னுலகத்தினும் சிறந்ததாக அலங்கரிக்கவேண்டும் என்று பிரார்த்திக்க, அத்தெய்வத்தச்சன் மிகவும் மனமகிழ்ச்சியோடு அப்படியே யாகுகவென்று அம்மலையிலுள்ள நீண்டதருக்களின் வரிசைகளை கால்களாகவும் பலகைப் பக்கிகளைக் கழிகளாகவும்மூடி அதன்மேல் தவழும் மேகங்களை பந்தராகவுமமைத்துக் கோபுரம், மன்றங்கள், சூளிகைகள், மாளிகைகள், தேர்ச்சாலைகள், அத்தாணி மண்டபங்கள், நாடகசாலைகள், வேதிகைகள் முதலியவற்றையமைத்து, சாமரம் முத்துமாலைகள் முதலியவற்றைத் தொங்கக்கட்டி, வாழை கமுகு முதலியவற்றை வரிசைவரிசையாக நட்டு, மாவிலைத்தோரண முதலியவற்றைக் கட்டி, குபேரனது பட்டணமாகிய அளகாபுரியும், இந்திரனது பட்டணமாகிய அமராவதியும் இந்நகரத்திற்கு இணையாகாதென்று சொல்லும்படி அலங்கரித்து, இந்திராதிதேவர்களும் முனிவர்களும் பிறரும்வந்து சவுக்கியமாய்த் தங்கியிருக்கும்படி பதினாயிரம் யோசனைவிஸ்தாரம்மதில்ஒன்றைப்புனைந்து, கோபுரவாயில்கள்நான்கினையும்முறையேயமைத்து, எல்லாவுயிர்களுக்குந் தாயாகிய முதல்வியை மங்கல ஸ்நானஞ்செய்விப்பதற்கும் மணக்கோலத்திற்குரிய அலங்காரம் செய்வதற்குந் தகுதியான பொன்னாலியன்ற சாலைகளமைத்து மணமகனாகிய பரமசிவனது திருக்கைலையின் ஒப்பனையினுஞ்சிறந்திருக்க அனேக விசித்திரமான பொற்பதுமைகள் முதலியவற்றைச் சமைத்து, இறைவனுமிறைவியும் இனிது வீற்றிருக்கும்படி இந்திரநீல மணிகளால் சிங்காசனமொன்றமைத்துச் சந்திரகாந்தக்கல், பொன், பவளம், முத்து, வைரம், பத்மராகம் முதலிய மணிகளால் குண்டமண்டல வேதிகாதிகளும், கல்யாணமண்டப முதலிய மண்டபங்களும் ஏற்படுத்தி, கண்ணாடி பூர்ணகும்பம் இரட்டைச்சாமரம் சங்கம் தீபம் முதலிய மங்கலத்திரவியங்களையும் அமைத்து, நீலோற்பலப்பொய்கை செங்கழுநீரோடை தாமரைப்பொய்கை முதலிய நீர்நிலைகளும், கற்பகம் மந்தாரம்

பாரிசாதம் அரிசந்தனம் சந்தானம் கதலி சந்தனம் கமுகு மா பலா புன்னை முத லிய விருட்சசாலங்களையும், அணியணியாகத் தேவர்களுங்கண்டு வியக்கத்தக்க வைகளாக அமைத்து முடித்தான். அந்தத் தேவதச்சன் செய்துமுடித்த அலங்கா ரத்தை மலையரையன்கண்டு அளவற்ற ஆனந்தத்தையடைந்தான். இதுநிற்க,

திருமால்முதலிய தேவரும் பெருந்தவத்தினையுடைய முனிவரும் ஆகிய எல் லாரும் அவரவர் பன்னியரோடு மணக்கோலங்காண வரும்படி தூதரையனுப்ப அத்திருமால் முதலியவர்களும் இறைவனுடன் வருவதாகக்கூறினர். துர்க்கை யாமளை காளி சப்தநதிகள் இவர்களும் இமயவரையை அடைந்து உமையவளை வணங்கி ஒருபுறத்தேயிருந்தனர். மலர்மகள் கலைமகள் இந்திராணி ருஷிபத்நிகள் முதலியோரும் தத்தம் கணவர்கட்டளையால் இறைவியைச் சென்றடைந்தனர். அடைந்து லோகமாதாவாகிய உமாதேவியின் திருவடிதொழுது அவளது தவவே டத்தை ஒழித்து மணக்கோலஞ்செய்து நின்றாகள். மேருமந்தரமுதலிய சைல வர்க்கங்களும் எழ்கடல்களும் அதிக்கியானைகளும் நாகவேந்தரும் வந்து நெருங்கி நிறைந்தன.

இத்தருணத்தில் மலையரசனும் தனது உறவினரோடு பிறரும் ஒருங்கடையக் கைலைவரையை யணைந்து முதற்றிருவாய்தற்கடைநீங்கி நந்திபெருமானது விடை பெற்று எல்லாமுயிர்க்குமுயிராகிய இறைவனைத் திருவடிதொழுது முன்னாளில் உலகம் அனைத்தும் ஈன்றவொரு பெருமுதல்வியாகிய உமாதேவியைத் திருமணஞ் செய்துகொள்ள இசைந்தாய், சோதிடநூலார்மதிக்கும் பங்குனிமாதத்து உத்திர நன்னாளின்றேயாகும். ஆகையால் கருணை மேற்கொண்டு இறைவியைத் திரு மணஞ் செய்துகொள்ளுதற்குத் திருவுள்ளமாய்த் தேவர்களோடு எழுந்தருளவேண் டும் என்று இறைவனை அடிதொழுதுகேட்க, அதற்கு நீலகண்டத்து நின்மலக் கொழுந்து, இப்போதே யாம் அளவிடற்கரிய தேவகணங்களும், இருடி கணங் களும், பிரதமகணங்களும் புடைசூழ்ந்துவர வருகின்றோம். நீ முன்னேபோ வென்று கட்டளையிட, அதைக்கேட்டு அகமும் புறமும் களித்துத் திருவடி தொழுது விடைபெற்றுக்கொண்டு மலையரசன் விரைந்துசென்று தன்னுறவின ரோடும் இமயமலையை அடைந்தான்.

வரைபுனைபடல முற்றிற்று.

# கணங்கள்செல்படலம்.

அந்த வேலையிற் கைலையி லெம்பிரா னருளா
னந்தி தேவரை விளித்துநம் மணச்செய லுடை
முந்து சீருடை யுருத்திர கணங்கண் மான்முதலோ
ரிந்தி ராதியர் யாரையுந் தருதியென் றிசைத்தான். (க)

இன்ன வின்பமின் றாகிய பரமனீ துரைப்ப
நன்ன யப்புட னிசைந்துபின் னந்தியெம் பெருமா
னன்னர் யாவரு மணப்பொருட் டெற்றிட வகத்து
ளுன்னல் செய்தன னவரெலா மவ்வகை யுணர்ந்தார். (உ)

உலக முய்ந்திட வெம்பிரான் மணம்புரி யுண்மை
புலன தாதலு மவனருண் முறையினைப் போற்றி
மலியும் விம்மிதம் பத்திமை பெருமித மகிழ்ச்சி
பலவு முந்திடக் கைலையை முன்னியே படர்வார். (ரு)

ஞாலத் தீபமொழி விழியுடைப் பஞ்சவத் திரனே
மூலத் தீப்புரை விண்டப்பெருங் கேதுவே முதலாஞ்
சூலத் திக்கரத் தையிரு கோடியோர் சூழக்
காலத் தீப்பெய் ருருத்திரன் வந்தனன் கடிதில். (சு)

சுழல லுற்றிடு சூறையும் வடவையுந் தொலைய
முழுது யிர்த்தொகை யலமர வுயிர்க்குமொய்ம் புடையோ
ரெழுப திற்றிரு கோடிபா ரிடத்தொகை யீண்ட
மழுவ லத்தின னுயகூர் மாண்டனும் வந்தான். (ரு)

நீடு பாதலத் துறைபவர் நெற்றியங் கண்ணர்
பீடு தங்கிய பல்வகை நிறத்தவர் பெரியர்
கோடி கோடியா முருத்திர கணத்தவர் குழுவோ
டாட கேசனு முருததிரன் கைலையி லடைந்தான். (கு)

கோர் மிக்குயர் நூறுபத் தாயிர கோடி
சார தத்தொகை சூழ்தரச் சதுர்முகன் முதலோ
ராரு மச்சுறச் சரபமாய் வந்தருள் புரிந்த
வீர பத்திர வுருத்திரன் வந்தனன் விரைவில். (எ)

விண்டு தாங்குறு முலகுயிர் முழுதுமோர் விரலிற்
கொண்டு தாங்குறு குறட்படை கோடிநூ றீண்டப்
பண்டு தாங்கலந் தரியர னிருவரும் பயந்த
செண்டு தாங்குகைம் மேலையோன் மால்வரை சென்றான். (அ)

முந்தை நான்முகன் விதிபெறன் மயங்கலு முக்கட்
டந்தை யேவலா லாங்கவ னெற்றியந் தலததின்
வந்து தோன்றிநல் லருள்செய்து வானுணர் வளித்த
வைந்து மாறுமா முருததிரர் தாமும்வந் தடைந்தார். (கூ)

இத்தி றத்தரா முருத்திர ரல்லதை யேனை
மெத்து பல்புவ னங்களு முளித்தவண் மேவி
நித்த னன்புறு முருத்திர கணங்களு நெறிசேர்
புத்தி யட்டக முதலவரும் வந்தனா பொருப்பில். (கல)

தொட்ட தெண்கடல் யாவையுந் துகளினுற் றார்க்கு
மெட்டு நூறெனுங் கோடிபா ரிடத்தொகை யீண்டக்
கட்டு செஞ்சடைப் பவர்முத லாகவே கழறு
மட்ட மூர்த்திக டாங்களு மொருங்குட னடைந்தார். (கக)

ஏறு கொண்டிடு தெழிப்பின ரெம்பிரான் விழிநீர்
நீறு கொண்டுள கண்டிதொடு பொடிபுனை நலத்தோர்
நூறு கொண்டிடு கோடிபூ தத்தொடு கொடிப்பின்
வீறு கொண்டகுண் டோதரன் போந்தனன் வெற்பின். (கஉ)

அண்டம் யாவையு முயிர்த்தொகை யனைத்தையு மழித்துப்
பண்டு போலவே தந்திட வல்லதோர் பரிசு
கொண்ட சர்ந்தர் நூற்றிரு கோடியோர் குழுமக்
கண்டன் னனும் பிணுகியும் வந்தனர் கைலை. (க௩)

ஆன னங்களோ ராயிர மிராயிர மங்கை
மேனி வந்தபொன் மால்வரை புரைநிற மேவித்
தானை வீரர்நூற் றைம்பது கோடியோர் சாரப்
பானு கம்பனுந் தலைவனென் கைலையிற் படர்ந்தான். (கச)

தங்கள் சீர்த்தியே மதித்திடு கடவுளர் தலையும்
பங்கி யாகிய கேசமும் படைகளும் பறித்துத்
துங்க மெய்திய கணங்கள்பல் கோடியோர் சூழச்
சங்கு கன்னன்வந் திறுத்தனன் றடவரை தன்னில். (க௫)

காள கண்டனுந் தண்டியு நீலனுங் கரனும்
வாள்வ யம்பெறு விச்சுவ மாலியு மற்று
மாளி மொய்ம்பின ராயபல் பூதரு மனந்த
நீளி ருங்கடற் றானையோ டணைந்தனர் நெறியால். (க௬)

கூற்றின் மொய்ம்பினைக் கடந்திடு சாரதக் குழுவோர்
நூற்று முப்பது கோடியோர் சூழ்ந்திட நொய்தின்
மாற்ற லார்புர மட்டவன் றாளிணை வழிபட்
டேற்ற மிக்கவீ சானனக் கைலையி லிறுத்தான். (கஎ)

எகின் மாகிய மாலயன் வாசவ னிமையோர்
புகலு மாதிரங் காவலர் கதிர்மதி புறக்கோண்
மிகைய தாரகை யின்னைகள் வசுக்கள்வே றுள்ளார்
மகிழும் விஞ்சையர் முனிவரர் யாவரும் வந்தார். (க௮)

வாலி தாகிய மறைகளா கமங்கண்மந் திரங்கண்
ஞால மாதிய பூதங்க ளுலகங்க ணகர்கள்
கால மானவை யேனைய பொருளெலாங் கடவுட்
கோல மெய்திவந் திறுதத்ன கைலையிற் குறுகி. (க௯)

இந்த வாற்றினாற் கைலையில் யாவரும் யாவும்
வந்த தன்மையை நோக்கியே யாறறவு மகிழ்ந்து
நந்தி யுள்புகுந் தமலனுக் கித்திற நவில
முந்தை யன்னவர் யாரையுந் தருகென மொழிந்தான். (உ0)

புராரி யித்திற மொழிதலுஞ் சிலாதனுர் புதல்வ
னோராய் முதற்கடை குறுகியே யுருத்திர கணங்கள்
முராரி யாதியாம் விண்ணவர் முனிவரெல் லோரும்
விராவு சீர்மையிற் சென்றிடக் கோயிலுள் விடுத்தான். (உக)

விடுத்த காலையி லரியணை மீமிசை விளங்கிக்
கடுத்த யங்கிய கண்டன்வீற் றிருப்பதுகாணூஉ
வடுத்த வன்புடன் யாவரு மிறைஞ்சியே யவண்போ
ரொடுத்து நீடகின் றேத்தியே யணுகின ரிமைப்பில். (உஉ)

நீண்ட சீருருத் திரர்தமை நிறைந்தபல் கணத்தை
யீண்டு தேவரை முனிவரை வீற்றுவீற் றிசையா
வாண்டு தன்விரற் சுட்டியே யாதிநா யகற்குக்
காண்டல் செய்துநின் றேத்தினன் வேத்திரக் கரத்தோன். (உரு)

ஆர முற்பெய ரண்ணல்கூர் மாண்டூ டகத்தோன்
வீர பத்திரன் முதலுருத் திரகண மேத்தப்
பாரி டத்தவர் யாவரு மெம்பிரான் பாங்கிற்
சேர லுற்றுநின் றேத்தினர் பணிந்தசிந் தையராய். (உசு)

அன்ன காலையி னுன்முக னெம்பிரா னணிவா
னுன்னி யேமுடி முதலிய பல்கல னுதவிப்
பொன்னி னுயதோர் பீடிகை யிற்கொடு போந்து
முன்ன ராகவைத் திறைஞ்சியே யித்திற மொழிவான். (உரு)

ஐய கேளுனக் கில்லையாற் பற்றிக் லடியே
முய்யு மாறிவண் மணஞ்செய வுன்னினை யுன்பான்
மையன் மாசுணப் பணியெலா மாற்றிமற் றிந்தச்
செய்ய பேரணி யணிந்தரு ளென்றுசெப் பினனே. (உசா)

பங்க யாசனன் றுறையிரந் தினையன பகர
வங்கண் மூரல்செய் தன்புட னீயளித் திடலா
லிங்கு நாமிவை யணிந்தென மகிழ்ந்தன மென்னுச்
செங்கை யாலணி கலத்தினைத் தொட்டருள் செய்தான். (உஎ)

பிரம னன்புகண் டிவ்வகை யருள்செய்த பின்ன
ரொருதன் மெய்யணி பணிகளே யணிகளா யுறுவான்
றிருவு ளங்கொள வவ்வகை யாகிய செகத்தை
யருள்பு ரிந்திடு பராபரற் கிச்செய லரிதோ. (உஅ)

கண்டி யாவரு மற்புத மடைந்துகை தொழலும்
வண்டு லாங்குழற் கௌரிபா லேகுவான் மனத்திற்
கொண்டு பாவகுறை தலைவருக் குணர்த்தியே குறிப்பாற்
பண்டு மாலயற் கரியவ னெழுந்தனன் படர. (உகூ)

ஆ திருவிருத்தம் - எருசா.

---

வசனம்.

அத்தருணத்தில் கைலாயத்தில் ஆளுடையபெருமான் திருவருளால் நந்தி யெம்பெருமானை அழைத்து நமது திருமணக் கோலங்காண முதன்மையான சிறப் பினையுடைய உருத்திரகணங்களையும், மால் அயன் இந்திரன் முதலியோரையும் தருவிக்கவேண்டுமெனக் கட்டளையிடவே, இன்பதுன்பங்களில்லாத இறைவன் கட்டளை மேற்கொண்டு அவர்கள் யாவரும் அரைக்கணப்போதில்வரத் தன் உள் ளத்தில்நினைக்க, அதையுணர்ந்து திருவருளையிறைஞ்சி வணங்கி விம்மிதம் பத்தி மை பெருமிதம் மகிழ்ச்சி முதலியவும பிடர்பிடித்துந்த ஸ்ரீ கைலாயத்தை யடைய

வேண்டுமென்றெண்ணி நெற்றியில் ஒற்றைநாட்டமுடைய பஞ்சவத்திரன் மூலா
க்கினியையொத்த இடபகேதுமுதலான சூலாயுதமேந்திய கையையுடையார் பத்
துக்கோடிபேர் சூழக் காலாக்கினி உருத்திரனும், சுழல்கின்ற சூறைக்காற்றும் வடவா
முகாக்கினியும் தொலைய எல்லா உயிர்த்தொகைகளும் வருந்த வுயிர்க்கும் வலிமை
யுடையோர் எழுபத்திரண்டுகோடி பூதகணங்கள்சூழ மழுவாயுதமேந்திய பிரமா
ண்ட ருத்திரனும், நீண்ட பாதாளத்தில் வசிப்பவராயும் நெற்றிமேற் கண்ணையுடை
யவராயும் பெருமையமைந்த பல்வேறு நிறமுடையவராயும் பெருமையுடையவரா
யும கோடிகோடியாம் உருத்திரகணத்தவர் கூட்டத்துடன்சூழ ஆடகேசவுருத்திர
னும் கோரமிகுந்த ஆயிரலட்சங்கோடி பூதகணங்கள்சூழவும் பிரமன்முதலிய தேவ
ர்களெல்லாரும் அஞ்சவும் சரபமாய் வந்தருள்புரிந்த வீரபத்திரரும், மலைகளால்
தாங்கப்படும் உலகோடு ஆருயிர்வருக்கமும் ஓர்விரலிற்கொண்டு தாங்கும் பூதவெ
ள்ளம் நூறுகோடிசூழ்ந்துவர அந்நாளில் அரிஅரனிருவர் கலப்பாற்பிறந்து
செண்டு கையில்ஏந்துகின்ற ஐயனாரும், முன்னைநாளில் பிரமன் சிருட்டித்தொழில்
செய்யமுடியாமல் வருந்தலும் முக்கட்பெருந்தகையின் பேரருளால் அவனது
நெற்றியின்கண்வந்துதோன்றி அப்பிரமனுக்குக் கருணைசெய்து மெய்யுணர்வு
முதலிய வரவுதவிய ஏகாதச உருத்திரரும், இவ்வகையான உருத்திரபேதங்களை
யல்லாமல் பலபுவனங்களையும் அளித்து அவ்விடத்தில் எழுந்தருளி இறைவ
னன்புறு முருத்திரகணங்களும், புத்திதத்துவத்திலுள்ள சூக்குமபுவனம் எட்டின்
அதிபதிகளும், கடலைத்தூர்க்கும் எண்ணூறுகோடி பூதவெள்ளஞ்சூழச் செஞ்சடை
யையுடையராகிய பவர்முதலிய அட்டமூர்த்திகளும், ஏறுபோலுங் கர்ச்சனையுடை
யவரும் இறைவன் அக்கமணிமாலை பூண்பவருமாகிய நூறுகோடி பூதவெள்ளங்கள்
சூழக் குண்டோதரனென்னும் பூதநாயகனும், எல்லா அண்டங்களையும் உயிர்த்
தொகைகளையும் அழித்து முன்போலவே சிருட்டிக்கவும் வல்ல நூற்றிருகோடி
பூதவெள்ளஞ்சூழக் கண்டாகன்னனும், பிருங்கியும்,ஆயிரமுகமும் ஈராயிரக்கையு
முடையராய் மேலோங்கிநின்ற பொன்மலைபோலும் நிறம்படைத்து நூற்றைம்பது
கோடி தானைத்தலைவர்சூழக் பானுகம்பனென்னும பூதவீரனும், தங்கள் பெருமிதத்
தையேமதிக்கும் தேவர்கள் சிரங்களையும் கேசத்தையும்பறித்து ஆயுதங்களையுங்
கவர்ந்து உயர்வடையும் பலகோடி கணங்கள்சூழச் சங்குகன்னனும், காளகண்ட
னும், தண்டியும், நீலனும், கரனும், போரில்வல்ல விச்சுவமாலியும, மற்றும் சிங்கம்
போலும் திறலையுடைய பல பூதவீரரும், அவருடன் அனந்தவெள்ளமும் எமனது
வலிமையைக்கடந்த பூதகணங்கள் நூற்றுமுப்பதுகோடிசூழத் திரிபுராந்தகன்
பாதங்களிலே யன்புமிக்கு உயர்ந்த ஈசானனும், அன்னவடிவங்கொண்ட திருமா
லும், அயனும், இந்திரன்முதலிய இறைவரெண்மரும, சந்திரனும், தாரகாகணங்க
ளும், மற்றைக்கிரகங்களும், வித்தியாதரரும், முனிவரரும், மற்றுமுள்ளோரும்,
தெய்வவுருக்கொண்டு வேதசிவாகமங்களும், மந்திரங்களும, பிரிதவிமுதலிய பஞ்ச
பூதங்களும், காலதத்வமாதியாகியயாவும் வந்திருக்குஞ்சமயத்தில் நந்திபெருமான்
கண்டு மகிழ்ச்சியுடையவராய் உட்புகுந்து இறைவனைநோக்கி இவ்வாறு அவர்வரு
கையை எடுத்துச்சொல்ல, அவர்களையெல்லாம் உனது சந்நிதானத்தின்முன் வரக்
கட்டளையிட, நந்திபெருமான் இறைவன் சந்நிதானமடைவிக்க, சிங்கஞ்சுமந்த திரு
வணையிலே வீற்றிருக்கும் இறைவனைத் தரிசிக்கப்பெற்று பேரன்புடன் திருவடி
தொழுது வணங்கித்துதித்து விரைவின் அணுகியிருப்ப, அங்கு நந்திபெருமான்
திருவேத்திரப்படையேந்திய திருக்கரத்தின் விரலாற்சுட்டி இவர் உருத்திரர்களெ
ன்றும், இவர்கள் பூதகணங்களென்றும, இவர்கள் மாலயன் இந்திரன் முதலிய

தேவர்களென்றும், இவர்கள் முற்றத்துறந்த முனிவரரென்றும், வேறுவேறாகக் காட்டி யருளிவணங்கி நின்றனர்.

அத்தருணத்திற் காலாக்கினியுருத்திரன் கூர்மாண்டருத்திரன் ஆடகேசுரர் வீரபத்திரர் முதலிய உருத்திரகணநாயகர் துதித்து வணங்க, பூதவெள்ளங்கள் திருவடிதொழுது வாழ்த்தின. பிரமனாகியுந்திவந்தோன் பொன்முடி ஆரகேயூர கடக கங்கண வாகுவலய முதலிய ஆபரணங்களைக் கொண்டுவந்து பொன்னாலாகிய பீடிகையின்மேல் வைத்து வணங்கி, எப்பொருட்குமிறைவனே! நீ பந்தமற்ற பரம்பொருளேயாவாய், அடியேங்கள் உய்யும்வண்ணம் யோகியாயிருந்து யோகத்தை உதவுதலொழிந்து போகியாயிருந்து போகத்தைத்தருவதற்கும் எண்ணியே திருமணஞ்செய்துகொள்ள இசைந்தனை, அடியேங்களிடத்துக் கருணைமேற்கொண்டு மாசுணப்பூண் ஒழித்து மணிபதித்த பொற்பூணணிந்து விளங்கவேண்டுமென்று விண்ணப்பஞ்செய்ய, அவ்விண்ணப்பத்தைக் கேட்டருளி அவனது அன்பிற்குக் கழிபேருவகைபூத்து தன் மெல்லணிகளை புற்றின் வாளரவணியாகவே கொண்டருளின பெருமான் தனது செங்கையால் அவன்கொணர்ந்த அணிகளைப் பரிசித்து இவையெல்லாம் யாம அங்கீகரித்தனவேயாம் என்றுசொல்லிப் பணிகளையணிகளாகச்செய்து விளங்கினதைக்கண்டவர் இவர்க்குச் சகல தராதரங்களையும் படைத்துக்காத்தழிப்பதே தொழிலெனின், இச்செய்கை யரிதாகுமோ என்று இறைவன் கோலத்தை யாவருநயணடு வணங்குதலும் இறைவன் கௌரியிடத்திற்செல்லத் திருவுளங்கொண்டு சிவகணநாதற்குணர்த்தி யெழுந்தருளினன்.

கணங்கள்சேல்படலமுற்றிற்று.

---

# திருக்கல்யாணப்படலம்.

நாற்ற டம்புயக் கண்ணுத னந்தியெம் பெருமான்
போற்றி முன்செல வமரரு முனிவரும் புகழ
வேற்ற தும்புரு நாரதர் விஞ்சையர் யாரும்
பாற்றி யக்கமு நீழலு மாமெனப் பாட. (க)

சொன்ம றைதொகை யாகம முதலிய துதிப்பப்
பொன்மை பெறறதன் கோநகர் நீங்கியே பொற்றாள்
வன்மை பெற்றகுண் டோதரன் மொய்ம்பிடை வைத்துச்
சின்ம யததனி மால்விடை யேறினன் சிவனே. (உ)

விடையின் மீமிசைத் தோன்றியே யெம்பிரான் விளங்கப்
புடையின் வந்தவ ரல்லது திருநகர்ப் புறத்துக்
கடையி னின்றவர் யாவருங் கண்டுகண் களியா
வடைய வேபணிந் தேததின ரளக்கரி னார்த்தார். (௩)

நந்தி மேல்கொண்டு நந்திமே வுறுதலு நந்தித்
தந்தி மாமுகத் தவுணர்கோ னலமரத் தடிந்தோ
னேந்து னூற்றெழு கோடிபூ தப்படை யணுக
வந்து வந்தனை செய்துமுன் போயினன் மாதோ. (௪)

கதிருஞ் சோமனுங் கவிகையுஞ் சீகரங் காலு
முததி யண்ணல்சார் தாற்றியு மும்பர்தங் கோமான்
புதிய கால்செயும் வட்டமு மெடுத்தனர் புடைபோய்
முதிரு மார்வமோ டபபணி புரிந்தனர் முன ாயால். (ரு)

பேரி கொக்கரை சல்லிகை கரடிகை பீலி
சாரி கைத்துடி தண்ணுமை குடமுழாத தடாரி
போரி யற்படு காகளம் வயிர்முதற் புகலுஞ்
சீரி யத்தொகை யியம்பினர் பாரிடத திறலோர். (சு)

அத்த னேவலா லுருத்திரர் குழுவுமா லயனு
மெய்த்த வம்புரி முனிவரு மேனைவிண் ணவரு
மொய்த்த தேரொடு மானமாப் புள்ளிவை முதலாந்
தத்த மூர்திமேல் கொண்டனர் செய்பணி தவாதோர். (எ)

தாழ்ந்து தன்பணி புரியுமத் தலைவருந் தவத்தாற்
காழ்ந்த நெஞ்சுடைப் பூகரு மேனைய கணமுஞ்
சூழ்ந்து சென்றிடக் கைலையை யகன்றுதொல லுலகம்
வாழ்ந்தி டும்படி யேகின னிமயமால் வரைமேல். (அ)

வார்ப்பெ ரும்பணை யாதிய வரம்பில்பல் லியத்தி
னார்ப்பு மெங்கணும் வெளளிடை யின்றியே யகல்வான்
றார்ப்பி னீண்டிய தானையி னோதையுஞ் சுரர்க
ளார்ப்பும் வாழ்த்தொலி யரவமும் புணரியுண் டெழுமால். (கு)

வேறு.

அனைய தன்மையி லாதியம் பண்ணவன்
பனிகொள் வெற்பிற் படரவம் மன்னவ
னினிய கேளொ டெதிர்கொடு தாழ்ந்துதன்
புனித மாநக ரிற்கொடு போயினன். (க0)

போத லோடும் புனிதன் வரததினைக்
காத லாற்கண்டு கண்களிப் பாகியே
யாத மெய்தினின் றஞ்சலித தேத்தியே
வீதி யாவும் விழாவயர்ந் திட்டவே. (கக)

மிண்டி நின்றிடும் வீதியின் மாதரா
ரண்டர் நாயக னற்புதப பேருருக்
கண்டு தாழ்ந்து கரைதவிர் காதலாந்
தெண்டி ரைப்படிந் தாசெயல் வேறிலார். (கஉ)

நிறைத்த பூண்களு நேர்ந்தபொன் னுடையு
நறைத்த சாந்தமு நாண்மலர்க் கண்ணியும்
பிறைத்தி ருச்சடைப் பிஞ்ஞகன் பேரெழின்
மறைதத தென்று மனந்தளர் வார்சிலர். (கங)

உய்யு மாறெ னுவர்தமைக் காண்டலும்
வெய்ய காமக் கனல்சுட வேவுறுந்
தைய லார்க டனிவுற் றீறுகொ
லைய ராகத் தணிந்ததென் பார்சிலர். (கச)

சூழாலை யன்னசொ லேந்திழை மாதரார்
குழாம கன்று குழக்னைச் சேர்தலுங்
கழாலு கின்றபல் காழுடை மேகலை
விழாதி றைஞ்சினர் மெலவிய லார்சிலர். (கடு)

அல்வி சேர்தரு மம்புய மீமிசை
வல்லி யன்னவர் வான்றகில் சோர்வுறு
மெல்ல வீழ்தலு மின்னிடை யார்க்கெலா
மில்லை யோபுனே யென்றுரைப் பாரசிலர். (கசு)

வாசம் வீழ்தலும் வந்தவந் தில்லிடைத்
தூசு மேதில மென்றோர் துகிலபுனைந்
தாசை யோடுசென் றன்னதும் வீட்டியே
யூசல் போன்றன ரொண்டொடி மாரசிலர். (கஎ)

மாண்ட சாயன் மடந்தைய ரேதனை
வேண்டி மால்கொடு வீடுறும் வேலையி
லீண்டு போற்று கெனவுமெண் ணுநதோ
வாண்ட கைக்கிய லாகுமென் பாரசிலர். (கஅ)

கரும்பு நேர்மொழிக் காரிகை மாதரார்
விரும்பி வேண்டவு மேவலர் போலுமா
லரும்பொன் மேனியெம் மண்ணலுக் குள்ளமு
மிரும்பு கொல்லென் றியம்பிடு வார்சிலர். (கசு)

நெருக்கு பூண்முலை நேரிழை யார்க்குமால்
பெருக்கி னாரவர் பேதுற லோர்கிலா
ருரைபப தென்கொ லுயிர்க்குயி ராகியே
யிருக்கு மிங்கிவ ரென்றுரைப பாரசிலர். (உ0)

திருகு வார்சடைச் செய்யனை நோக்கிநின்
றுருகு வார்சில ருளளுற வெமபியே
கருகு வார்சிலர் காதலி மாரொடும்
பெருகு காதலைப் பேசுகின் றார்சிலர். (உக)

வேறு ளார்மெய் விளர்ப்பினை நோக்கியே
யீறி லாரை யிவரணைந் தார்கொலோ
நீறு மெய்யி னிலவிய தென்றவர்ச்
சீறி யேயிகல் செய்திடு வாசிலர். (உஉ)

கட்டு செஞ்சடைக் கான்மிசை யூர்தர
விட்ட வெண்மதி மெல்லிய லார்தமைச்
சுட்ட தம்ம சுமப்பதென் னீரெனக்
கிட்டி நின்று கிளத்திடு வார்சிலர். (உங)

கஞ்ச மேலய னுதிக் கடவுளர்
தஞ்ச மென்று சரண்புக வுண்டதோர்
நஞ்சின் வெய்யகொ னங்கையர் கொங்கைமேற்
றுஞ்சு கின்ற துயிலதென் பார்சிலர். (உச)

பின்ன ருள்ள பெருந்தொழி லாற்றுவான்
றுன்னு வீரெணிற் றொல்குழு வாடவர்
நன்ன லத்தொடு நண்ணமின் னைரையே
யின்னல செய்வதெ னென்றுரைப் பார்சிலர். (உ௫)

சாற்றி யிங்கினி யாவதென் னையன்மீ
ரேறறின் மேவின ரெம்மை மணந்திட
மாற்றி லாத மலைமகள் போலயா
நோற்றி லோமென நொந்துயிர்ப் பார்சிலர். (உ௬)

தேவ ருய்யத் திருமணஞ் செய்திட
மேவு கின்றவர் மெல்லியன் மங்கைய
ராவி கொள்ள வமைந்தன ரிதகிற
மேவர் செய்வ ரெனவுரைப் பார்சிலா. (உ௭)

மையல் வேழம் வயப்புலி போலவரும்
வெய்யர் தம்மை மெலிவிடப தன்றியே
நொய்ய மான்புரை நோக்கியர்க் குந்துயர்
செய்யு மோவெனச் செப்புகின் றாசிலா. (உ௮)

நங்கள் கொற்றவ னற்றவத் தாறபெறு
மங்கை பாலின் மணப்பொருட் டேகின
ரிங்கெ மக்கினி மைதகிறஞ் செய்கலார்
சங்க ரர்க்குத் தகாதிதென் பார்சிலா. (உ௯)

பேதை நீரவர் பேரிளம் பெண்மையோ
ராதி யந்தத தணங்கின ரின்னணம
வீதி தோறும் விரவியத் தாருக
மாத ராரினு மாதர்பெற் றாரரோ. (௩0)

பண்டை வேதன் பதத்தினும் பேரெழில்
கொண்டு நின்றவக் கோநகர் வீதியி
னண்டம் வெஃக வணிபடுத் திட்டவை
கண்டு போந்தனன் கண்ணுத லண்ணலே. (௩௧)

செய்ய தான செழுங்கம லாசனத்
தையல் காமுறத தக்கன வீதிகள
பையு நீங்கிப பராபரை யாகிய
வையை [illegible] லணிந்தெந நண்ணினன். (௩௨)

வேந்த னேவலின் வேதங்க ளின்றுகா
ருய்ந்து நாடற் கரியவெம் மண்ணன்முன்
பூந்த டம்புனல் பூரித்த பல்குட
மேந்தி வந்தனர் மாதவ ரெண்ணிலார். (௩௩)

இருவ கைப்படு மெண்வகை மங்கலப்
பொருண்மை முற்றவும் பூவையர் பற்பல
வரிசை யிற்கொடு வந்தெதி ரெய்தினு
ரரிய யற்கரி தாகிய வண்ணன்முன். (௩௪)

அறுகு சிம்ப மடிசி லரிசனஞ்
சிறுகு மையவி செம்பஞ்சின் வித்திவை
குறுகு தண்புனற் கொள்கல மேந்தியே
மறுகில் வந்தனர் மங்கைய ரெண்ணிலார். (ருரு)

நெருக்கு பூண்முலை நேரிழை யாரவர்
பொருக்கெ னவெதிர் போந்துயிர் யாவினு
மிருக்கு மாதி யிறைவனை யேததியே
தருக்கொ டேகின்று தந்தொழி லாற்றினர். (ருசு)

எங்க ளாத னெதிருற வெண்ணிலா
மங்கை மார்சுடர் மன்னிய தட்டைகள்
செங்கை யிற்கொடு சென்று வலன்வளைஇ
யங்கண் மும்முறை யன்பொடு சுற்றினர். (ருஎ)

ஆன காலை யருமணச் சாலைமுன்
ஞான நாயக னட்பொடு நண்ணியே
வானு லாய மழவிடை நீங்கினன்
யான மீதினின் றியாரு மிழிந்திட. (ருஅ)

விடையி ழிந்துழி மேனைவின் னாட்டவர்
மடமின் னாரொடு வந்து பராபர
னடிகண் மீதினி லான்பொழி பால்கொடு
கடிதி னாட்டினள் கைதொழு தேகினள். (ருகூ)

நாத னவ்வழி நந்திக ளுய்த்திடும்
பாது கைக்கட் பதமலா சேர்த்தியே
போதன் மாதவன் பொற்கரந் தந்திடக்
கோதின் மாமணக் கோயிலு ளெய்தினன். (சO)

வேறு.

பல்லிய மியம்ப வானோர் பரவவிஞ் சையர்கள் பாட
வொல்லெனக் கணங்க ளார்ப்ப வுருத்திரர் யாருஞ் சூழ
மெல்லெனச் செல்லு மண்ணல் விரிஞ்சனு மாலும் வேண்ட
மல்லலங் கோயி லுள்ள வனப்பெலா நோக்க லுற்றான். (சக)

உலாவுறு சுரும்பு மூசா வொண்மலர்ச் சோலை வாவி
நிலாவுறழ் புனல்சே ரோடை நெடுந்தட நிறம்வே றாகிக்
குலாவுமண் டபங்க ளின்ன கொண்டியல் வனப்புக் காட்டிச்
சிலாதனன் மதலை கூறச் சென்றுசென் றிறைவன் கண்டான். (சஉ)

கண்டலுந் தம்போற் றங்கள் காமர்வின் ணகரந் தானு
மண்டல வரைப்பின் வந்து வைகிய தாங்கொ லென்னா
வண்டர்கள் வாவி கேணி யகன்புனல் குடைந்துங் காமர்
தண்டலை யாடல் செய்துந் தலைத்தலை திரிதந் துற்றார். (சரு)

நந்தியந் தேவு காட்ட நல்வனப் பனைத்து நோக்கிக்
கந்தமென் போது வேய்ந்த கடிமணச் சாலை தன்னி
னிந்திர நீலத் திட்ட வெழினலத் தவிசி னும்பர்
வந்துவீற் றிருந்தா னெல்லா மறைகட்கு மறையாய் நின்றான். (சச)

வீற்றிருந் தருளு மெல்லை வீரபத திரன்றீப் பேரோ
றாற்றல்கொள் கூர்மாண் டேச னாடக னாய னேனோர்
போற்றிசெ யயனே மாலே புரந்தரன் முனிவர் தேவ
ரேற்றிடு தவிசு தோறு மிருந்தன ரிறைவற் சூழ. (௪௫)

வேறு.

அமையப் படிமப் பொழுதத்தினி லாதி யண்ணல்
விமலத் திருமா மணங்காணுற மேலை யண்டச்
சுமையுற் றிடுமெய்ப் புவனத்தருந் தொக்க நீரா
லிமயச் சயிலந் தளங்குற்ற திடிக்க ணெய்தி. (௪௬)

பொன்பா லிமயந் தளங்குறறுழிப் போற்று சேடன்
றன்பா லவனியெ னலாந்துலைத் தட்டி ரண்டின்
வன்பா லதான வடபாலது தாழ மற்றைத்
தென்பா லதாற்ற வுயர்ந்திட்டது தேவ ருட்க. (௪௭)

ஓங்குற் றதுதென் புவியாதலு மும்ப ரெல்லா
மேங்குற் றனர்மண் ணுலகோர்க ளிடுக்க ணுற்றுத்
தீங்குற் றனவோ வெமக்கென்று தியக்க முற்றார்
பாங்குற் றிடுதொன் முனிவோரும் பரிய லுற்றார். (௪௮)

இன்னோ ரெவருஞ் சிவனேயென் றிரங்க லோடு
முன்னோனு மனன செயல்கண்டு முறுவ லெய்தி
யன்னோர்குறை நீத்திட நந்தியை நோக்கி யாழி
தன்னோர் கரத்திற் செறித்தானைத் தருதி யென்றான். (௪௯)

என்றானது காலையி னந்தி யிறைஞ்சி யேகிக்
குன்றா தகும்ப முனிவன் றனைக்கூவ வங்கட்
சென்றா னவனைக் கொடுபோய்ச் சிவன் முன்ன ருய்ப்ப
மன்றார் கழல்கள் பணிந்தான் மலயத்து வள்ளல். (௫0)

தாழுந் தவத்தோன் றனைக்கண்ணுதற் சாமி நோக்கித்
தாழுங் குறியோ யிவண்யாவ ருஞ்சார்த லாலே
தாழும் புவிதக் கிணமுத்தரஞ் சால வோங்கத்
தாழுஞ் சுவர்க்க நில்லனுந்நனி தாழு மன்றே. (௫௧)

தெருமந் தழலுந் தரைமன்னுயிர் செய்த தொல்லைக்
கருமந் தனைவிட் டயர்வெய்திக் கலங்கு கின்ற
பெருமந் தரமேரு முதலாய பிறங்கல் யாவு
மருமந் தமேரு வரையுந்தவ றாகு மம்மா. (௫௨)

ஆனான் முனிகே ளொருநீயிவ் வசல நீங்கித்
தேனார் மருத வளமேயதென் னாடு நண்ணி
வானார் பொதிய மலைமேவு திவைய மெல்லா
மேனா ளெனவே நிகராகி விளங்கு மென்றான். (௫௩)

பிறையொன்று வேணிப் பரனிங்கிது பேச லோடு
மறையொன்று தீஞ்சொற் றமிழ்மாமுனி யச்ச மெய்திக்
குறையொன்றி யான்செய் தனனோ கொடியேனை யீண்டே
யுறையென் றிலை சேணிடைச் செல்ல வுரைத்தி யெந்தாய். (௫௪)

என்னக் கூறிய முனிவன்றனை யெந்தை நோக்கி
யுன்னைப் பொருவு முனிவோருல கத்தி லுண்டோ
வன்னத் தவனு முனைநேர்கி லனாத லானீ
முன்னிற் றெலையுந் தவறின்றி முடித்தி மன்னோ. (ருரு)

வேறுற்றிடு தென்முனி வோர்களின் விண்ணு ளோரி
னீறுறறிடு மோவிது செய்கை யெவர்க்கு மேலாம்
பேறுற நின்னுன் முடிவாகுப பெருசெ
கூறுற் றிடலு முனியீது குறிந்து ரைபபான். (ருசு)

வான்செய்த மேனி நெடுமான்மக வேள்வி மன்னன்
றேன்செய்த கஞ்சத் தயனிறகவிச செய்கை தீயேன்
றான்செய் திடவே பணித்திட்டனை தன்மை யீதே
றான்செய் ததுவே தவம்போலு நலத்த தெந்தாய். (ருஎ)

ஈங்கிப் பணியை யளித்தாயெனி லெந்தை யுன்றன்
பாங்குற்ற புதமேதண் மணக்காட்சி பணிந்தி டாம
னீங்கற் கரிதாங் கவல்கின்ற தென்னெஞ்ச மென்ன
வோங்கற் கைலைத் தனிநாயக னோத லுற்றான். (ருஅ)

வேறு.

சிந்தைய தழுங்க லின்றித தென்மலைச் சேறி யங்கண்
வந்துநம் வதுவைக் காட்சி வழங்குது மகிழ்ந்து காண்டி
நந்தமை யுன்னி யாங்கே நாள்சில விருத்தி பின்னர்
முந்தையி லெமது பாங்கர் வருதியான் முனிவ வென்றான். (ருகூ)

என்றிவை யமலன் செப்ப விசைதரு புலத்த னாகி
மன்றமர் கழல்க டம்மைப் பன்முறை வணக்கஞ் செய்து
நின்றுகை தொழுது போற்றி நெடிதுயிர்த் தரிதி னீங்கித்
தென்றிசை யெலலை நோக்கிச் சிறுமுனி கடிது போனான். (சா0)

கிற்புறு மாயை வல்ல கிரவுஞ்ச வரையும் விந்த
வெற்பதும் வன்மை சிந்த விலவல னெடுவா தாவி
கற்பனை யகன்று மாயக் காவிரி நீத்தத தோடு
முற்பகல் படர்ந்த தென்ன முனிவரன் றென்பாற் போனான். (சாக)

மறைபுகல் வேள்வி யாற்று மாவலி வலிகொள் காட்சிக்
குறியவன் றனையர் மற்றோர் குறளுமுண் டாங்கொ லென்ன
நெறியெதி ரவுணர் தமமு ளொருசிலர் நில்லா தோடச்
சிறுமுனி வான நீந்திச் சிமையமா மலயம் புக்கான். (சாஉ)

முண்டகன் வலிகொண் டுறற மூவெயி லழிப்பான் முன்னி
யண்டரும புவன முற்று மாகிய கொடிஞ்சி மான்றோர்
பண்டொரு பத்தத்ர் லூன்றிப் பாதலத் திட்ட வண்ணல்
கொண்டதொல் லுருவ முன்னிக் குறுமுனி யங்க னுற்றான். (சாஙு)

பொதியம தென்னும் வெற்பிற் புனிதமா முனிவன் வைகத்
துதியுறு வடபாற் றென்பாற் புவனியோர் துலைபோ லொப்ப
வதுபொழு துயிர்க ளாமே ரணங்கொரீஇ யரனை யேத்தி
மதிமகிழ்ந் தமர்ந்தார் தொல்லை வதுவையின் செய்கை சொல்வாம். (சாச)

கதுமென மலயந் தன்னிற் கடமுனி சேற லோடு
முதுமைகொ ளிமயம் புக்க முனிவருஞ் சுரருந் தேர்ந்து
மதிமலி சடையெம் மண்ணல் வரம்பில்பே ரருளு மன்னோன்
பதமுறை வழிபட் டோர்தம் பான்மையும் பரவ லுற்றார். (௬௫)

அங்கது பொழுது தன்னி லரசன திசைவா லெங்கள்
சங்கரி யைய்ய காப்பச் சசியென்பா ளடைப்பை யேந்தக்
கங்கைகள் கவரி வீசக் காளிகள் கவிகை பற்றப்
பங்கய மான்கை பற்றிப் பார்தி பரவ வந்தாள். (௬௬)

வந்திடு முலகை யீன்றாள் வதுவையஞ் சாலை நண்ணி
யந்தமொ டாதி யில்லா னடிகளை வணங்க முன்னோன்
முந்துறு தவிசின் றன்பான் முற்றிழை யிருத்தி யென்ன
விந்திரை முதலோர் யாரு மேத்திட விருந்தா ளன்றே. (௬௭)

இருந்திடு மெல்லை தன்னி லேலவார் குழலி யென்னுங்
கருந்தடங் கண்ணி னாளைக் கண்ணுதற பரா பரற்கு
விரைந்தருள் செய்ய வுன்னி வேந்தன திசைவான் மேனை
பெருந்தடம் புனலுஞ் சந்து மலர்களும் பிறவுந் தந்தாள். (௬௮)

தருநலு மிமயத் தண்ண றாழ்ந்தன னிருந்து தேவி
சிரகநீர் விடுப்ப வாதி திருவடி விளக்கிச் சாந்தம்
விரைமலர் புனைந்து நின்ற வியன்கடன் பலவுஞ் செய்து
பொருவரு மகிழ்ச்சி யோடு பூசனை புரிந்தான் மாதோ. (௬௯)

பூசனை புரிந்த பின்னர்ப் புவனமீன் றாடன் கையைப்
பாசம தகன்ற தொல்சீர்ப் பரஞ்சுடா கரத்துள் வைத்து
நேசமொ டளித்தே னென்று நெடுமறை மனுக்கள் கூறி
வாசநல் லுதக முய்த்தான் மருகனென் றவனை யுன்னி (௭0)

எங்குள பொருளுங் கோளு மீதலுந் தானே யாகுஞ்
சங்கர னுலக மெல்லாந் தந்திடுங் கன்னி தன்னை
மங்கல முறையாற் கொண்டான் மலைமகன் கொடுப்ப வென்றா
லங்கவ னருளி னீர்மை யாரறிந் துரைக்கற் பாலார். (௭௧)

ஆனதோ ரமையந் தன்னி லாடின ரமரா மாதர்
கானம திசைத்தார் சித்தர் கந்தரு வத்த ரானோ
ரேனைய விருவர் தாமு மேழிசைக் கீதஞ் செய்தார்
வானவர் முனிவர் யாரு மறைகளை யறைய லுற்றார். (௭௨)

அல்லியங் கமலந் தன்னி லரிவையும் புண்ட ரீக
வல்லியு மற்று ளோரு மங்கலம் பாட லுற்றார்
சல்லரி திமிலை காளந் தண்ணுமை சங்க மாதிப்
பல்லிய மியம்பிச் சூழ்ந்து பாரிடத் தொகையோ ரார்த்தார். (௭௩)

அதுபொழு திமயத் தண்ண லாபொழிந் திட்ட தீம்பால்
கதலிமாப் பலவின் றீய கனிவகை நெய்தே னாதி
மதுரமாஞ் சுவையின் வர்க்கம் வரம்பில வீற்று வீற்று
நிதிகொள்பா சனத்தி லிட்டு நிருமலன் முன்ன ருய்த்தான். (௭௪)

மறைநெறி யினைய வெல்லா மலமக னுய்த்து மற்றெம்
மிறையிவை நுகர்தல் வேண்டு மெனத்தொழ வினிதே யென்னாக்
கறைமிடற் றணிந்த மேலோன் கரத்தினு லவற்றைத் தொட்டாங்
குறுபெருங் கருணை செய்தே யுவந்தனங் கோடி யென்றான். (எரு)

தொன்மைகொ ளருளி னீராற் றுய்த்தன வாகத் தொட்ட
நின்மல வுணவை மன்ன னேயமோ டங்கண் மாற்றி
யின்மலர் கந்தந் தீர்த்த மிவற்றொடு மொருசா ருய்ப்ப
நன்மகிழ் வோடு வேதா நாயகற் குரைக்க லுற்றான். (எசு)

படங்கிளர் சேடன் றாங்கும் பார்விசும் புறையு நீரா
ரடங்கலு மணஞ்செய் போதத் தவ்வவர்க் கடுத்த தாற்றி
நடந்திடு மொழுக்க மெந்தை நடத்திடல் வேண்டு மன்றற்
சடங்கினி யுளது முற்றத் தண்ணளி புரிதி யென்றான். (எஎ)

என்னலு முறுவல் செய்தே யிறையருள் புரிய வேதன்
வன்னியு மதற்கு வேண்டும் பொருள்களு மரபிற் றந்து
பொன்னொடு புக்கு மேனை முனிவரும் புடையிற் சூழத்
தன்னிக ரில்லா மன்றற் சடங்கெலா மியற்றல் செய்தான். (எஅ)

அந்தணர் கரண மெல்லா மாற்றியே முடிந்த பின்னர்த்
தந்தையுந் தாயு மாகி யுலகெலாந் தந்தோர் தம்மை
முந்துற வயனும் பின்னர் முகுந்தனு மதற்குப் பின்ன
ரிந்திரன் முனிவா வானோ ரியாவரு மிறைஞ்ச லுற்றார். (எகூ)

அரனுட னுமையா டன்னை யாங்கவர் பணித லோடு
முருகெழு நிலையுட் கொண்ட வுருத்திரத் தலைவ ரேனோர்
பரிசனர் கணங்கள் யாரும் பணிந்தன ரதன்பின் னாகக்
கிரியுறை யிறைவன் மைந்தன் கேளொடு வணக்கஞ் செய்தான். (அ0)

தமதுமுன் பணிகின் றோர்க டமக்கெலா மீசன் றானு
முமையுநல் லருளைச் செய்ய வோர்ந்திது பதமென் றுன்னி
யிமகிரி புரந்த வண்ண லீண்டுறை நீரர்க் கெல்லா
மமலன துணவு மற்று மளிப்பனென் றகத்துட் கொண்டான். (அக)

ஆய்ந்திடு மறைகள் போற்று மாதிதன் றீர்த்தம் போது
சாந்தமொ டினிக டமைச் சதுர்முகன் முதல்வா னோர்க்கும்
வாய்ந்திடு முனிவர் யார்க்கு மற்றுளார் தமக்கு மன்ன
னீந்திட வவற்றை யன்னோ ரியாவரு மணிந்துட் கொண்டார். (அஉ)

ஆலமா மிடற்றோற் கான வமலமாம் பொருளை யேற்றுச்
சீலமோ டணிந்துட் கொண்டு சிந்தையுண் மகிழ்ந்து நந்த
மூலமாம் வினைகட் கின்றே முடிபொருங் குற்ற தென்றார்
மேலவ ரன்று பெற்ற வியப்பினை விளம்ப லாமோ. (அங)

அனையதோர் காலை தன்னி லமலமாம் பொருள்க டம்மைப்
பனிவரை யிறைவன் றானும் பன்னியுந் தமரு ளாரு
மெனைவரு மருந்தி மேற்கொண் டெல்லையி லின்ப முற்றார்
வினைவலி யொருவி மேலாம் வீடுபே றடைந்து ளார்போல். (அச)

தன்னுறு கணவன் றுஞ்சத் தாபத நிலைய ளாகி
பின்னலை யடைந்தங் குற்ற விரதியவ் வெலலை வந்து
மனனுயிர் முழுது மீன்ற மங்கையை மணந்த வள்ளல்
பொன்னடி வணங்கித தீயேன் புன்கணை தவிர்த்தி யென்றாள். (அரு)

சீருறு கணவ னில்லாள் செபபிய மாற்றங் கேளா
லாருயிா முழுது நின்றே யனைதநதையு முணாந்து கூட்டும்
பேரரு ளுடைய நாதன் பேதுறன் மடந்தை யெனனு
மாரனவந் துதிக்கும வணண மனததிடை நினைந்தா னன்றே. (அசு)

நினைதரு மெல்லை தன்னி னெடியமான் முதலா வுள்ள
வனைவரு மருட்கை யெய்த வழுங்கிய விரதி நோககி
மனமகிழ் சிறந்து காாகாண் மஞ்ஞையிற களிபப வங்கட்
குனிசிலை கொணடமாரன கொமமெனத தோன்றி னானே (அஎ)

முன்பொடு தோன்று மாரன் முதல்வியோ டிருந்த நாதன்
பொன்புனை கமலத தாண்முன் போந்தனன் றாழ்ந்து போறறி
யென்பிழை பொறுததி யென்ன யாமுனை முனியி னன்றே
பின்பது தணிவ துளளம பேதுறன் மைந்த வெனறான. (அஅ)

எரிபுனை நமது நோக்கா லிறந்தநின் னுடல நீறாய்
விரைவொடு போயிற் றன்றே வேணடின னிரதி யன்னாட்
குருவமா யிருததி மயனை யும்பரோ டிமபாக கெலலா
மருவினை யாகி யுன்ற னரசியல புரிதி யெனறான. (அகூ)

செய்வினை முறையா லீசன சிததசற் கினைய கூறி
யவவவ னரசுஞ சீரு மாணையும வலியு நலகி
மைவிழி யிரதி யோடு மனனுதொல புரதது செலல
மெய்விடை யுதவ வனனோ விரைந்துடன றொழுது போனா. (கூ௦)

இரதியு மதனு மேக விந்திர நீலத திட்ட
வரியணை யிருந்த நாத னமமையொ டிழிந்து தன்னோர்
திருவுரு வுடைய மேலோா தேவாமா முனிவ ரேனோர்
பரவினா செல்லப பூதா பலலியந் தெழிப்பச சென்றான். (கூக)

மன்னுயிாக் குயிராய் நின்றான் மால்விடை யேறி மாதைத
தனனொரு பாங்கிற் கொணடு தழீஇககொடு நடததி வானோ
தொனனிலை யமைந்து செலலத தவன்றியே கணங்களா சுறறப்
பொன்னிய விமயந் தீாந்து வெளளியம பொருபபில வந்தான. (கூஉ)

அன்னதோர் காலை மாலை யயனைவெற பரசை வேளவி
மன்னனை யமரா தம்மை முனிவரை மாதராாக
ளென்னவர் தமையுந் தகத மிடந்தொறு மேகும் வண்ண
முன்னுற விடுததா னெனப மூலமு முடிவு மிலலோன. (கூங)

அடுகன லவன்கூர் மாண்ட னுடக னையன் சிமபுள்
வடிவின னுதி யான வரம்பிலா வுருததி ரர்க்கும்
கடகரி முகத்தி னுற்குங் கணங்களிற றலைமை யோர்க்கும்
விடையினை யுதவி யையன் வியன்பெருங் கோயில் புக்கான். (கூச)

ஏறெனுங் கடவுண் மீதி னிம்மென விழிந்து தன்னோர்
கூறுடை முதல்வி யோடுங் கோகர் நடுவ ணெய்தி
யாறணி சடையெம் மண்ண லரியணைப் பீட மீதில்
வீறொடு தொன்மை யேபோல் வீற்றிருந் தருளி னானே. (சுடு)

அன்பினர்க் கெளிவந் துள்ள வாதியம் பரமன் மாது
தன்புடை யாகச் சீயத் தவிசின்வீற் றிருந்த லோடுந்
துன்பகன் றிருபா லாகித் துவன்றிய வுயிர்க ளெல்லா
மின்பொடு போக மாற்றி யினிதமர் வுறற வன்றே. (சுசு)

ஆக திருவிருத்தம் அகூம.

வசனம்.

நான்குதடந்தோளையும் நெற்றிக்கண்களையுமுடைய நந்திபெருமான் துதித்து முன்போகவும், தேவரும் முனிவரும்புகழ்ந்து முன்செல்லவும், தும்புருநாரதரும வித்தியாதரரும் பருந்தின் ஆரோகணம் அவரோகணம்போன்ற கானம்பாடிப் பின்செல்லவும், வேதசிவாகமங்கள் துதித்துப்பாடவும், வெள்ளியங்கிரியாகிய ஸ்ரீகைலாயமலையைநீங்கித் தனது அழகியதிருவடிகளைக் குண்டோதரன் தோளின் மேலவைத்து ஞானமேயோர் திருமேனிகொண்ட ஒப்பற்ற மால்விடைமீது சிவ பெருமான் எழுந்தருள அருகேயிருந்தவரல்லது திருநகரத்தின் கடைப்புறத்து நின்றுருங்கணடு கணகளிக்கும்படி ஒருங்கு வணங்கியேத்திக் கடலொலிபோல அரகரவென்று முழக்கொலிசெய்தனர். இவ்வாறு நந்திமேற்கொண்டு நந்தியென் னுந் திருநாமமுடைய இறைவன் எழுந்தருளவே யானைமுகத்தினையுடைய கய முகாசுரனைச் சங்கரித்துத் தேவர்கள் துயரமோட்டிய விநாயகமூர்த்தி ஐந்நூற் றேழுகோடி பூதவெள்ளம் தம்மைப் புடைசூழ இறைவனையடைந்து முன்னே பூசித்துச்சென்றனர். இறைவன் மால்விடையூர்ந்துவருகையில் சூரியனும் சந்திர னும் கவிகைதாங்கினர், வருணன் பனிநீர்த்திவலைசிதறினன், இந்திரன் ஆலவட் டம் எடுத்துக்கொண்டு அன்பாகக் குற்றேவலைச்செய்தனன். பூதவெள்ளமோ பே ரிகை, கொக்கரை, சல்லிகை, காடிகை, பீலி, சாரிகை உடுக்கை, மத்தளம், குட முழா, தடாரி, காகளம, ஊதுகொம்பு, முதலாகிய வாத்தியவிசேடங்களைச் செய்து வந்தனர். இறைவனேவலினல் உருத்திரகணங்களும், மாலுமயனும், தவமே பொருளாகக்கொணட முனிவரும் மற்றைத்தேவரும், தேர் விமானம் பறவை முதலிய வாகனங்களிலேறிக்கொண்டு பின்சென்றனர். வணங்கிநின்று தன்குற் றேவல்செய்யும் சிவகணத்தலைவரும், தவத்தால் வயிரம்பற்றிய மனமுடையபூதரும், ஏனையகணங்களும் நெருங்கிச்செல்ல ஸ்ரீகைலாயமலையைநீங்கிப் பழைமையான பூவுலகம்வாழும்படி இமயமலையைநோக்கி நடந்தனன் இறைவன். பணைமுதலிய வரம்பில்லாத வாத்தியங்களின் ஓசையும் வெள்ளிடையில்லாமல் எங்குமொலிக்க ஆகாயமுழுதும் தூர்க்கவெழுந்த சேனைகளினோசையும், தேவர்கள் ஆரவாரமும் வாழ்த்தொலியும் கடலோசையையடக்கிவிட இமயமலையையடையவே, மலை யரையன் தன்சுற்றத்தோடுந் தொடர்ந்துவந்து இறைவனை யெதிர்சென்றுவணங் கித் தன் பரிசுத்தமான நகரத்திற்கழைத்துப்போக அவனது நல்வரவைக்கண்டு அவ்வீதிகளெல்லாம் திருவிழாக்கொண்டாடின. இதுநிற்க;

அவ்வீதியில் இறைவன் பவனிவரக்கண்ட பெண்கள் அவன் அற்புதப்பேரருவைக்கொண்டு வணங்கிக் கரையிடுதற்கரிய காதற் பெருவெள்ளத்திலே மூழ்கிச் செயலற்றிருந்தனர். சிலபெண்கள் அணிந்திருந்த ஆபரணங்களும் உடுத்திருந்த பொன்னுடையும், வாசனையுள்ள சாந்தமும் முடித்திருந்த மலர்மாலையும பிறையைத்தரித்த பெருமானது அழகை மறைத்தனவென்று மனந்தளர்ந்தும்; சிலர் யாழோசையையுடைய பெண்ணின் கூட்டத்தையகன்று தலைவனைச்சேர்தலும் மேகலாபரணம் வீழ்ந்திடாமல்வணங்கியும்; தாமரைமலரிலிருக்கிற திருமகளையொத்த பெண்கள் தமதாடை, புறத்தே சோர்ந்துவிழக்கண்டு மின்போலுமிடையையுடைய பெண்களுக்கெலலாம் ஆடையில்லையோவென்றும்; ஆடைசோர்ந்து வீழ்வதறியாதாராய் வீட்டில்வந்து நாம் ஆடையுடுக்க வில்லையேயென்றுடுக்க அதுவும்சோர்ந்துவிழ ஊசல்போல மாதர்களெல்லாம் தம்மைவிரும்பி மால்கொண்டு வருத்துமபோது இறைவன் என்னைவணங்கென்று சொல்ல எண்ணமையோவென்றும்; பெண்களெல்லாமவிரும்பிவேண்டலும் சத்துருக்களைப்போலும் எண்ணியது அவனுக்கு உள்ளமும் இரும்போவென்றும்; செம்பவளமேனிச் சிவபெருமானைநோக்கி நின்று மனமுருகுகின்ற சிலர் மனம்வெதும்பிக்கருகியும்; தமது காதலைத் தோழியாகருச் சிலர்மாதர்கள் உடம்பு விளர்த்திருப்பதைப்பார்த்து முடிவில்லாத இவரை அணைந்தாரோ அதனாலேதான் நீறு இவருடம்பில் விளங்குவதென்று கண்டு சீறிப் பகைகொண்டும்; இறைவன் சடைக்காட்டில்தரித்த சந்திரன் பெண்களைத்தான் சுட்டெரித்தானல்லாமல் வேறல்ல, இவன் நீரைச்சுமப்பது மென்னகாரணமோ வென்றும்; பிரமன் முதலாகிய தேவர்கள் சரணாகதியென்றடைய முன்னாளிலே உண்ட ஆலவிடத்தைப்பார்க்கிலுங் கொடியதோ இப்பெண்களின் மார்பின்மேல் படுத்துறங்குவதென்றும்; பின்னேயுள்ள பெரியகாரியத்தைச் செய்துமுடிக்க வெண்ணுவீராயின் ஆடவர்களெல்லாம் நல்லசுகத்தையடைய பெண்களையே வருத்துவது என்ன காரணமோவென்றும; இடபவாகனத்தையுடைய இறைவன் எம்மை மணஞ்செய்துகொள்ள நாங்களே நோற்றேமென்றும்; தேவர்கள் உய்யும்படி திருமணஞ்செய்துகொள்ளச் செல்லுகின்றவர் மெல்லிய மாதரது உயிர்வாங்க அமைந்தனர். இவ்வகை யாரேசெய்வாரென்றும்; யானையையும் புலியையும்போல் வருகிற கொடியவரைவருத்தாமல் அற்பமாகிய மான்போன்ற கண்ணையுடைய பெண்களுக்குந் துயரை விளைப்பதோவென்றும்; நமது அரசன் நல்லதவத்தாற் பெற்றபெண்ணை மணஞ்செய்யும்படி சென்றவர் இங்கே எமக்கினிமையான காரியஞ்செய்யமாட்டார், சங்கரனுக்கிது தகாதென்றும்; பேதை, பெதும்பை, மங்கை, மடந்தை, அரிவை, தெரிவை, பேரிளம்பெண் என்னும எழுவகைப்பருவத்து மாதரும் வீதிகடோறும்நெருங்கி அந்தத தாருகாவனத்து இருடி பத்தினிமாரைப்போல மயக்கமடைந்தனர். இதுநிற்க, பரமசிவன் பிரமபதத்திலும் மிகப் பொலிவுபெற்று விளங்கிய அந்த நகரத்தினது இராசவீதியைப் பார்த்துக்கொண்டே திருமகளும் விரும்பத்தக்க செல்வநிறைந்துள்ள மற்றைவீதிகளையும் தாண்டிப் பரம்பரை எழுந்தருளியிருக்கும் மாளிகையையடையவே, மலையரையன் ஏவலால் வேதங்கள் இதுவரையிலும் நாடுதற்கரிய எம்பெருமான் முன்பு மங்கலதீர்த்த மேந்திக்கொண்டு வரவும், அட்டமங்கல மேந்திவரவும், அறுகு, வேமபு, மஞ்சள் அக்ஷதை, சிறுகடுகு முதலியவற்றை யேந்தி மங்கலப்பெண்கள் வரவும், இவ்வாறுசெல்ல எங்கள் நாயகன் எதிரே மாதர்கள் சிலர் பொருக்கென்றெழுந்து எல்லாவுயிர்களுக்கு முயிராகிய எம்பெருமானை எதிர்ந்து ஆலத்தியேந்திவந்து திருஷ்டிகழிக்கவும் சென்று

ஞானநாயகன் நட்பினொடு நடந்துபோகத் தேவர்கள்யாவரும் தத்தம் வாகனத்தி னின்றுமிழிய வானமார்க்கமாயுலாவிவரும் வெள்விடையினின்று மிழிந்தான். அவ்வாறிழியப் பலமாதர்கள் தன்னைப் புடைசூழ்ந்துவர மேனை இறைவனது பாத பூசனைசெய்வதற்கெண்ணிப் பசுவின்பால் கொண்டுவந்தாட்டிக் கைதொழுது வண ங்கினள். பிறகு நந்தியம்பெருமான் கொண்டுவந்து பாதுகையைவைக்க அதனை யிட்டுக்கொண்டு பிரமன் மாலென்னு மிருவரும் கைலாகுகொடுக்கத் திருமணச் சாலையையடையவே, பலவாத்தியங்களும் முழங்கின, தேவர்கள் தோத்திரஞ்செய் தனர், வித்தியாதரர்கள் பாடினர், பூதகணங்கள் ஆரவாரித்தன, கூர்மாண்டருத் திரர் ஆடகேசகர் முதலிய சிவகணத்தலைவர் புடைசூழ்ந்தனர். இவ்வாறு யாவருங் காணத் திருவோலக்கமாய் மெல்லெனச்செல்லும் பரம்பொருள் பிரமன் மாலென் னும் இருவரும் வேண்டிக்கொள்ள, அத்திருமணச்சாலையிலுள்ள அலங்காரங்களை யெல்லாம் நோக்குவானாயினன். உலாவுகின்ற வண்டுகள்பொருந்த செவ்விய மலர்களையுடைய சோலைகளும் வாவியும் நிலவினையொத்த தெண்ணீர்தங்கிய நீரோ டையும் வெவ்வேறுநிறமுள்ள மண்டபமுதலியவைகளும் காட்டிக்கொண்டே சிலா தமுனிவர் புத்திரராகிய நந்திபெருமான்போக, அநாதிமலமுத்தனாகிய பரமசிவன் மணச்சாலையிலே போடப்பட்டிருந்த இந்திரநீலத்தாற் செய்யப்பட்டிருந்த ஆச னத்தி லெழுந்தருளியிருந்தான்.

அவ்வாறு பரமசிவன் வீற்றிருந்தகாலத்தில், வீரபத்திரர்முதலானோரும் திரு மால்முதலாகிய தேவரும் தத்தமக்கு அமைக்கப்பட்டிருந்த ஆசநங்களில் இறை வனைச்சூழ வீற்றிருந்தனர். இப்படியிருக்க, பரமசிவன் திருமணஞ்செய்துகொள்ள வந்தகாட்சியைக்காணவந்து யாவரும் நெருங்கினமையால், இமயமலை துன்ப மடைந்து மிகுதியாக அசைந்தது. அந்தச்சமயத்தில், பூமியென்று சொல்லப்படு கிற நிலாத்தட்டிரண்டில் பெரும்பாரத்தையுடைய வடபுறத்தட்டுத்தாழத் தென் புறத்தட்டு உயர்ந்தது. இப்படி தென்புறம் உயர்ந்தகாலத்தில் தேவர்கள் யாவரும் தியங்கினர். மண்ணுலகத்தார் நமக்கு ஏதாயினும் தீங்குவந்ததோவென்று நினைந் துப் பிரமித்தார்கள். முற்றத்துறந்தமுனிவரும் வருந்தினார்கள். இவர்களெல்லாரும் வருந்தும்போது எல்லாம்வல்ல இறைவன் சிரித்து அவர்களுடைய குறைதீர்க்கத் திருவுளங்கொண்டு நந்திதேவரைநோக்கி, அக்காலத்தில் கடல்முழுதும் தன்னொ ருகரத்திலேந்தி ஆசமநமாகப்பருகின அகத்தியமுனிவனை எம்மிடத்திற்கு அழை த்துவாருமென்று கட்டளையிட அப்படியே அவர் சென்றழைத்துவர வந்த அகத் தியர் இறைவன் திருவடியைவணங்கிநிற்க, அவரைநோக்கி, அருந்தவனே, நீ தென் றிசையிற்போய்ப் பொதிகையில் வீற்றிருப்பையாயின் உலகம் சமமாய் நிலைபெற் றிருக்கும். எல்லாவுயிர்களும் இன்பமடையும் என்றனன். அதுகேட்ட அகத்திய முனிவர் துன்புற்று, இறைவனைநோக்கி, அடியேன்செய்த குற்றம்யாதோ, என் னையிங் கின்று அகற்றுதற்குக் காரணமென்னோவெனக் கேட்டருளின சிவபிரான் முனிவனைநோக்கி, எமதன்பனே! உன்னையொத்த முனிவருமுளரோ, பிரமதேவ னும் உன்னை நிகர்க்கமாட்டான். ஆகையால், நீ நினைந்தகாரியங்கள் யாவும் முற் றுப்பெறும். உன்னையல்லாத முனிவராலும் தேவராலும் இச்செயல் முடியாது. உன்னாலேயே முடியவேண்டும். எமதுகட்டளையை மறுக்காதேயென்றலும், அகத் தியமுனிவர், இறைவனைநோக்கி, திருமால் பிரமன்முதலிய பெருந்தேவர்களிருக்க, இச்செயற்கு யானே உரியவனென்று கட்டளையிட்டீர், என் தவப்பயன் பலித்தது, தேவரீரது கட்டளையைச் சிரசாகவகித்துச் செய்துமுடிக்கிறேன். ஆனால் இங்கு

நடக்கப்போகிற தேவரீர் திருமணக்காட்சியைக்கண்டு களிக்கப்பெற்றிலேனென்னுங் கவலைமாத்திரம் என்மனத்தை வருத்துகின்றது என்றார். இதுகேட்ட சிவபிரான் முனிவனைநோக்கி, எமதன்பனே, நீ மனம்வருந்தாதுசென்று தென்பொதியத்தமர்ந்திருப்பையாயின், யாம் அங்குவந்து நமது திருக்கல்யாணக்காட்சியை உமக்குக்காட்டுவோம். எம்மைநாடிச் சிலநாள் அவ்விடத்திற்றானே தங்கியிரும். பின்பு எம்மிடத்திற்கு வரலாம் என்றருளிச்செய்தனர். அதுகேட்டமுனிவர் அதற்கிசைந்து தென்றிசைநாடிச் செல்லாநிற்கையில், இறைவனைத் தியானித்துக்கொண்டேசென்றார். சென்று பொதியமலையையடைந்து அமைந்திருத்தலும், தென்றிசைவடதிசையிரண்டும் சமநிலையில்நின்றன. அதுகண்டு முன்னே வருந்தியிருந்தவுயிர்களெல்லாம் மகிழ்ந்திருந்தன.

அப்பால், இமயமலையில் இறைவன் திருமணக்காட்சியை விரும்பிவந்திருந்த தேவர்முனிவர் முதலியோர், இறைவன் திருவருளையும் முனிவன்பெருமையையும் வியந்திருந்தனர். பிறகு மலையரையன் ஏவலால், உமையவள், இந்திராணிமுதலிய தெய்வப்பெண்கள் சூழ்ந்துவரவும், கங்கைமுதலிய நதிகள் கவரிவீசவும், காளிகள் குடைபிடிக்கவும், திருமகள் கைலாகுகொடுக்கவும், கலைமகள் தோத்திரஞ்செய்யவும் எழுந்தருளிவந்து திருமணச்சாலையையடைந்து மணப்பீடத்தின்மேல் வீற்றிருந்தாள். அதற்குமேல் மணமுரசுமுதலிய வாத்தியவிசேஷங்கள் முழங்க, மேனையும் மலையரையனும் இறைவன் திருவடியைப் புண்ணியதீர்த்தங்களால் சுத்திசெய்து சந்தந புஷ்பாக்ஷதைகளால் அலங்கரித்து மணப்பீடத்தில் எழுந்தருளச்செய்து, மணச்சடங்குகள்யாவும் விதிப்படிமுடித்து இறைவியின்கையை இறைவன்கையிற் பிடித்துக்கொடுத்து வேதமந்திர பூர்வகமாகத் தாரைவார்த்துக்கொடுத்தார்கள். இந்தக் கல்யாணவைபவத்தைக்கண்ட தேவர்முதலியோரெல்லாரும், ஆநந்தக்கடலில் அழுந்தினார்கள். அப்பொழுது மலையரையன் பசுவின்பால், வாழைக்கனி, பலாக்கனி, நெய், தேன் முதலியவற்றை ஒரு பொற்கிண்ணத்திற்பெய்து இறைவன்முன்னேவைத்து, இதனைத் தேவரீர் அமுது செய்தருளவேண்டுமென்று வேண்ட, இறைவன் அதனைத் தன் திருக்கரத்தால் பரிசித்து, யாம் அங்கீகரித்தனம். இனிநீ கொள்ளென்றருளிச்செய்ய, மலையரையன் அந்தப் பரிசுத்தமான பரிகலசேடத்தை யெடுத்துக்கொண்டுவந்து தேவர் முதலியோர்க்குக்கொடுத்து மனமகிழ்வோடு தானும் மேனையும் உட்கொண்டு களிகூர்ந்திருந்தார்கள். இது நிற்க,

தன்கணவனாகிய மன்மதன் இறந்ததனால் அமங்கலையாகித் தாபதவேடம் பூண்டு அந்த மணச்சாலையையடைந்த ரதிதேவியானவள் பரமசிவனைத் திருவடிதொழுதுநின்று அடியேனது துன்பத்தை யொழித்தருளவேண்டுமென்று பிரார்த்திக்க, அவளது பிரார்த்தனைக்கிரங்கின இறைவன், ரதிதேவியைநோக்கி, நீவருந்தவேண்டாம், என்று சொல்லி, மன்மதனை உயிர்ப்பித்து, இரதிதேவிக்குமாத்திரம் அவன் உருவத்தோடு தோன்றவும், மற்றவர்களுக்கு உருவிலியாய்த்தோன்றவும் கருணைசெய்து, மன்மதனைநோக்கி, நீ முன்போலவே எல்லாரையும் உன்கருப்புவில் சுருப்புநாண் மலரம்பு ஆகிய இவற்றைக்கொண்டு வெற்றிகொண்டு அரசாட்சி செலுத்தக்கடவையென்று திருவாய்மலர்ந்தருளினர். மன்மதனும் ரதிதேவியும் இறைவனிடத்து விடைபெற்றுச்சென்றனர். சென்றபின், இறைவன் இந்திரநீலமணிகளாற்செய்யப்பட்ட சிங்காதநத்தினின்றும் இறைவியோடெழுந்து, தேவரும் முனிவரும் வாழ்த்தவும், பூதகணங்கள் பலவாத்தியங்களை முழக்கவும், உமாதேவி

யைத் தன்னொருபாகத்திற்கொண்டருளி இமயமலையைநீங்கிக் கைலைமலையையடைந்தான். பின்பு, பிரமாதிதேவர்களையும் முனிவர்முதலிய மற்றவர்களையும் அவரவரிருக்கைகளுக்குப் போகும்படி கட்டளையிட்டு, தான் தனது துணைவியாகிய உமையவளோடும் கூடி அந்தத் திருக்கைலைமலையில் திருமாமணி மண்டபத்தில் ரத்நகசிதமான சிங்காதநத்தில் இனிது வீற்றிருந்தருளினன். சராசர ஜீவராசிகளெல்லாம் இன்பமயமான போகநுகர்ந்து இனிதாயமர்ந்திருந்தன.

திருக்கல்யாணப்படலம்முற்றிற்று.

---

# திருவவதாரப்படலம்.

பற்பக லினைய வாற்றாற் பரிந்தனும் பின்னோர் வைகன்
முற்படு மயன்மால் வேள்வி முதலவன் றிசைகாப் பாளர்
சொற்படு முனிவர் வானோர் யாவருந் தொல்லை மேரு
வெற்பினிற் குழுமிச் சூரான் மிகமெலிந் திரங்கிச் சொல்வார். (க)

உலகினை யவுணர்க் கீந்தே யோகிபோல் வைகி நம்பான்
மெலிவினைப் படுததி யாம்போய் வேண்டலு மிரக்க மெய்தி
மலைமக டன்னை வேட்டான் மைந்தனை தந்து நம்மைத்
தலையளி புரியான் வாளா விருப்பதென் றாணு வானோன். (உ)

இவறலு மிகலு மின்றி யார்க்குமோர் பெற்றித் தாகி
யவரவர் வினைக ளூடி யதற்படு பொருளை நலகுஞ்
சிவனையாம் வெறுத்தல் குற்றஞ் சிறந்தநோன் பியற்றி டாதே
தவறுசெய் தனமென் றெம்மை நோவதே தக்க தென்றார். (ங)

ஆயினு மவன்றாள் போற்றி யடையினன் கனைத்து மாகுந்
தீயன வகலு மீது திண்ணமா மதனு லின்னுங்
காய்கதிர் மதிசூழ் கின்ற கைலையங் கிரியின் முக்க
ணாயகற் கிதனைக் கூற நாமெலாம் போது மென்றார். (ச)

போதரா விசைந்த காலைப் பொன்னலர் கமலப் புத்தேண்
மேதகு பரமன் செய்கை வினவியே யேகல் வேண்டுந்
தூதுவ னொருவன் றன்னைத் தூண்டிமுன் னறிது மென்றே
யூதையங் கடவு டன்னை நோக்கியீ துரைக்க லுற்றான். (ரு)

வடவரை யதனின் மூன்று மாண்குவ டெறிந்து வெளவி
யுடல்சின வரவ முட்க வுததியி லுய்த்த மைந்த
படர்மதி மிலைச்சுஞ் சென்னிப் பண்ணவன் செயலை வெள்ளிக்
கடிவரை நகரத் தெய்திக் கண்டனை மீடி யென்றான். (சு)

பல்லிழும் வனச மேலோ னினையன பகர நோன்றாள்
வில்லுடை மதன வேளை விழித்தடு கடவுண் முன்னஞ்
செல்லுவ தரிது செல்லிற் றீமையே பயக்கு மென்பா
லொல்லுவ தன்றிச் செய்கை யுள்ளமும் வெருவு மென்றான். (எ)

கூற்றிது நிகழ்ந்த வேலைக் கோகன தத்து மேலோன்
காற்றினுக் கரசை நோக்கிக் கம்பலை கொள்ளேல் யாண்டு
மூற்றமொர் டிலவல் செய்யு மொருவனை நீயே யன்றி
வீற்றொரு தேவ ருண்டோ மேலிது புரிதற் பாலோர். (அ)

உற்றுழி யுதவி செய்வோ ருலப்புறு தெவையு மீவோ
ரற்றமி றவத்தா றுற்றோ ரமர்புரி வீர ராவோர்
மற்றொரு பொருளும் வெஃகார் வருததமு மோரா ராகி
யிற்றிட வரினு மெண்ணா ரினிதென மகிழ்வ ரன்றே. (கூ)

ஆதலி னெங்கட் கெல்லா மாற்றிடு முதவிக் காகப்
போதியா லைய வென்று புகழ்ச்சியா வினைய பல்வே
றேதிடு பொருண்மை கூற விசைந்தன னெழுந்து தீயின்
காதலன் விடைகொண் டேகிக் கைலைமால் வரையிற் சென்றான். (க0)

குன்றதன் புடையில் வீழுங் குரைபுன லாற்றி னூடி
மன்றலங் காமர் காவின் மலர்மண மளாவி வாரித
தென்றியா யசைந்து மெல்லச் சினகரம் புகுது மெல்லை
நின்றதோர் நந்தி காணூஉ வுரப்பின னெடிது சீறி. (கக)

பொற்பிரம் பொன்று பற்றிப் பொலன்முதற் கடையைப் போற்றி
நிறபுறு மாணை வள்ள னெடுஞ்சினத தூரபப லோடுங்
கறபொழி யெழிலி கான்ற கனையொலி கேட்ட பாம்பின்
முற்படர் கின்ற காலோன் மொய்ம்பிலன் வெருவி வீழ்ந்தான். (கஉ)

வேறு.

ஒல்லென வீழ்வுறு முயிர்பபின் காவல
னெல்லையி லச்சமொ டிரங்கி யேயெழீஇத்
தொல்லையி னுருக்கொடு தோன்றி நந்திதன்
மல்லலங் கழலகளை வணங்கிக் கூறுவான். (கங)

மாலயன் மகபதி வானு ளோரெலா
மாலமர் கடவுளை யடைதன் முன்னிநீ
காலைய தறிந்தனை கடிது செல்கென
மேலுரை செய்தனர் வினையி னேனுடன். (கச)

கறுத்திடு மிடறுடைக் கடவு ளாடலைக்
குறிக்கரி தஞ்சுவல் குறுக வென்றியான்
மறுத்தன னனையர்தம் வருத்தங் கூறியே
யொறுத்தெனை விடுத்தன ருடைய வன்மையால். (கரு)

ஆதலி னடியனே னஞ்சி யஞ்சியே
மேதகு தென்றியர்ப் மெல்ல வந்தன
னேதிட நினைந்தில னுனக்கு மற்றிது
பேதைமை யுணர்விலேன் பிழைபொ றுத்திநீ. (கசு)

தானவர் தொழவரு தகையில் சூரனுன்
மானம தொருவியே வருத்துற் றேய்ந்தன
னானதொன் றுணர்கிலே னறிவு மாழ்கினே
னேனைய தேவரு மினைய ரீரரே. (கஎ)

அறைதரு கணத்தரு ளாதி யாகிய
விறைவகின் முனிவினுக் கிலக்குற் றுாரிலே
சிறியவென் பொருட்டினாற் சீற்றங் கோடியோ
பொறைபுரிந் தருளெனப் போற்றி வேண்டினான். (கஅ)

ஆண்டகை நந்தியெம் மடிக ளவ்வழி
மூண்டெழு தன்பெரு முனிவு தீர்ந்தியா
மீண்டுநின் னுயிர்தனை யீது நிற்கலே
மீண்டனை போகென விடைதந் தேவினான். (கசு)

சீரிய நந்தியந் தேவ னேவலு
மாருத னவனடி வணங்கி வல்லையி
னேரறு கைலையி னீங்கி நீடுபொன்
மேருவில் விண்ணவர் குழுவை மேவினான். (உ0)

மேவரு காலினான் விரிஞ்சன் மாயவன்
பூவடி வந்தனை புரிந்து நந்திதன்
காவலின் வன்மையு நிகழ்ந்த காரியம்
யாவது முறைபட வியம்பி னானரோ. (உக)

காற்றுரை வினவியே கமலக் கண்ணனு
நாற்றிசை முகத்தனு நாகர் செம்மலுஞ்
சாற்றருந் துன்பினர் தம்மி லோர்ந்திடாத்
தேற்றமொ டினையன செப்பன் மேயினார். (உஉ)

எந்தைதன் செய்கைதேர்ந் தேகு நீயென
வெந்திறன் மருத்தினை விடுத்து மாங்கவ
னந்திதன் னானையா னடுக்க முற்றிவண்
வந்தன னச்சுறு மனத்த னாகியே. (உங)

மன்னிய கைலைமால் வரையின் யாமெலா
மின்னினி யேகியே யீசன் றன்முன
முன்னருங் காலமொ டுற்ற நங்குறை
பன்னுத றுணிபெனப் பலருங் கூறினார். (உச)

இவ்வகை யவரெலா மிசைந்து செம்பொனின்
மெய்வரை நீங்கியே வெள்ளி வெற்பினிற்
றெய்வதக் கோயின்முன் சென்று நந்தியை
யவ்விடை தொழுதிவை யறைதன் மேயினார். (உரு)

வேறு.

நந்தியந் தேவுகே ணங்கள்பாற் றுன்பெலாஞ்
சிந்தைசெய் திடுதியத் தேவதே வற்கியாம்
வந்தவா றோதியே வல்லைநீ யெமையவன்
முந்துறக் காட்டெனா முகமனோ டுரைசெய்தார். (உசு)

மற்றிவா றுரைசெயும் வானவத் தொகையினை
நிற்றிரா லென்றவ ணிறுவியே யுறையுள்போய்க்
கற்றைவார் சடைமுடிக் கண்ணுதற் கடவுடன்
பொற்றடந் தாள்களைத் தொழுதனன் புகலுவான். (உஎ)

அண்ணலே யுனதுபொன் னடிகளைக் காணிய
விண்ணுளோர் யாவரும் வேந்தன்மா லயனொடு
நண்ணினு ரென்றலு நந்தியைத் தெரிகுறீஇத்
தண்ணிலா வேணியான் றருதியென் றருள்செய்தான். (உஅ)

அருள்புரிந் திடுதலு மாதியம் பண்ணவன்
றிருமலர்த் தாள்களைச் சென்னியிற் சூடியே
விரைவுடன் மீண்டுரு வேதன்மா லாதியாஞ்
சுரரெலாம் வம்மெனத் தூயவன் கூவினன். (உகூ)

கூவியே யருடலுங் கொண்டல்பே ராவியினற்
றுவிலா மகிழ்வுறுஞ் சாதகத தன்மையாய்ப்
பூவினு யகன்முதற புகலும்வா னவரெலாந்
தேவதே வன்முனஞ் செல்லுதன் மேயினர். (௩0)

அம்மையோர் பங்குற வரியணைக் கண்ணுறு
மெம்மையா ளிறைவன்முன் னெய்தியே யாங்கவன்
செம்மைசேர் தாள்களைச் சென்னியாற் றாழ்ந்தெழீஇப்
பொய்ம்மைதீ ரன்பினு லினையவா போற்றுவார். (௩க)

வேறு.

நோக்கினு நுழைகிலை நுவலு கின்றதோர்
வாக்கினு மமைகிலை மதிப்ப வொண்கிலை
நீக்கரு நிலைமையி னிற்றி யெந்தைநீ
யாக்கிய மாயமீ தறிகி லேமரோ. (௩உ)

இருமையு மொருமையு மிரண்டு மொன்றிய
வொருமையு மன்றென வுலகம் யாவையும்
பெருமையி னியறறிய பெரும நின்செய
லருமறை யானவு மறிதற் பாலவோ. (௩௩)

உருவொடு தொழில்பெய ரொன்று மின்றியே
பரவிய நீயவை பரித்து நிற்பது
விரவிய வுயிர்க்கெலாம் வீடு தந்திடுங்
கருணைய தேயலாற கருமம் யாவதே. (௩ச)

அவவுயிர் யாவுநின் னருளி லாவழிச்
செய்வினை புரிகில சிறிது மாதலால்
வெவ்விய நயப்பொடு வெறுப்பி லாதநீ
யெவ்வகை யோவுல கியற்றுந் தன்மையே. (௩௫)

முன்னதின் முன்னென மொழிது மேயெனிற்
பின்னதின் பின்னுமாப் பேச நிற்றியா
லன்னவை யேயெனி லொழிந்த தல்லையோ
வென்னென நின்னையா மேதது கின்றதே (௩௬)

புல்லிய புரம்பொடித் ததுவுங் காமனை
யொல்லென வெரித்தது முனக்குச் சீர்த்தியோ
வெல்லையில் விதிமுத லெனைத்து மீண்டுநின்
னல்லரு ளாணையே நடாத்து மெண்கையால். (௩[illegible])

எங்களை முன்னரே யியல்பி னீக்கலை
யெங்களை யிவ்வர சியற்று வித்தனை
யெங்களொ டொருவனென் றிருத்தி நின்செய
லெங்களி னறிவரி தென்று போற்றினர். (௩௯)

வேறு.

அவ்வகை யமர ரெல்லா மன்புசெய் தேத்து மெல்லை
மைவரு மிடற்றுப் புததேண் மற்றவர் வதன நோக்கி
யொவ்வுற லெய்திச் சிந்தை நுணங்கினீர் நுங்கட் கின்னே
யெவ்வர மெனினு மீதும் வேண்டிய திசைததி ரென்றான். (௩௯)

என்றலு மமரர் சொல்வார் யாமெலா மிந்நாள் காறும்
வன்றிற லவுணர் தம்மால் வருந்தின மதனை நீங்கி
நன்றிகொ டொல்லை யாக்க நண்ணுவா ளுக நின்பா
லொன்றொரு வரம்வேண் டிற்று மதனியல் புரைத்து மன்றே. (௪0)

மும்மையி னுயிர்கள் பெற்ற முகிழ்முலைக் கன்னி யாகு
மம்மையை மணந்த தன்மை யாங்கவ் ளிடமா வீங்கோர்
செம்மலை யளித்தற் கன்றே தீவினைக் கட்பட் டுள்ள
வெம்மையா ளுவதற் கேதுக் காட்டிய வியற்கை யல்லால். (௪௧)

ஆதியு நடுவு மீறு மருவமு முருவு மொப்பு
மேதுவும் வரவும் போக்கு மின்பமுந் துன்பு மின்றி
வேதமுங் கடந்து நின்ற விமலவோர் குமரன் றன்னை
நீதரல் வேண்டு நின்பா னின்னையே நிகாக்க வென்றார். (௪௨)

வந்திக்கு மலரோ னாதி வானவ ருரைத்தல் கேளாப்
புந்திக்கு ளிடாசெய் யற்க புதல்வனைத தருது மென்னா
வந்திக்கு நிகர்மெய் யண்ண லருள்புரிந் தறிஞ ராயோர்
சிந்திக்குந் தனது தொல்லைத் திருமுக மாறுங் கொண்டான். (௪௩)

சிற்புறு மமரர் யாரு நெஞ்சுதுண் ணென்ன நீடு
மற்புத நீர ராகி யருண்முறை யுன்னிப போற்றச்
சிற்பரன் றன்கொண் டுள்ள திருமுக மாறு தன்னிற்
பொற்புறு நுதற்கண் டோறும் புலிங்கமொன் றொன்று தந்தான். (௪௪)

ஆவதோர் காலை யீச னறுமுக நுதற்கண் மாட்டே
மூவிரு பொறிக டோன்றி முளரியான் முதலா வுள்ளோ
ரேவரு மணுகல் செல்லா வெல்லைதீர் வெம்மைத் தாகிப்
பூவுல கண்ட முற்றும் பொளளெனப் பராய வன்றே. (௪௫)

மாதண்டங் குலவு நேமி வால்வளை வயிர வொள்வாள்
கோதண்டம் பரித்தோன் வேதாக் குறித்துணர் வரியசோதி
வேதண்டம் பரவிற் றென்ன மேதினி சூழ்ந்து விண்போய்
மூதண்டங் காறுஞ் சென்ற முதல்வன்கண் ணுதலிற் செந்தீ. (௪௬)

வேறு.

மங்கையோர் பங்குடை வள்ள லேந்திய
செங்கன லூழியிற் செறிவ தாமென
வங்கவன் விழிபொழி யனலம் யாவையு
மெங்குள வுலகமு மீண்ட லுற்றவே. (௪௭)

ஆங்கனந் தழலெழ வகில முற்றுமா
யோங்கிய கால்களு மூலவுற் றேய்ந்தன
வாங்கிய திரைக்கடல் வறந்த தாயிடைத்
தீங்கனல் வடவையுஞ் செருக்கு நீங்கிறறால். (சஅ)

பக்கன பாரகம் பதலை முற்றுற
நெக்கன பணிகண்மெய் நெளித்து நீங்கிய
திக்கய மாற்றியே தியக்க முற்றன
தொக்கன வுயிர்த்தொகை துளக்க முற்றவே. (சகூ)

காரண மில்லவன் கண்ணிற் கான்றதீப்
பேரருள் புரிந்திடப் பிறந்த பான்மையா
லோருயிர் தன்னையு மொழிவு செய்தில
வாரையு மெவற்றையு மச்சஞ் செய்தவே. (ருo)

அன்னதன் வெம்மைகண் டமலன் பாங்குறை
கன்னியும் வியர்த்தனள் கலங்கி யேயெழீஇப
பொன்னடி நூபுரம் புலம்பித தாக்குறத்
தன்னதோ ருறையுளேச் சார வோடினாள். (ருக)

மூண்டக னுதியா முன்னர் நின்றுள
வண்டர்கள் யாருமவ் வழல்கண் டஞ்சியே
விண்டனர் தலைத்தலை வெருவி யோடினார்
பண்டெழு விடத்திறை பட்ட பான்மைபோல். (ருஉ)

தீங்கன லடர்தலுஞ் செம்பொற் கோயிலின்
யாங்கணு மாகியே யிரிந்த பண்ணவா
வீங்கிய வுயிரப்பொடு மீண்டு மெந்தைதன்
பாங்கரில் வந்தனர் பரியு நெஞ்சினார். (ருஙு)

வலைத்தலை மானென வன்னி சூழ்ந்தடித்
தலைத்தலை யிரிந்துளோர் தம்மின் மீளுறு
நலத்தகு கண்ணுத னுதற் சேர்ந்தனா
கலத்தலை யகன்றிடாக காகம் போலவே. (ருச)

தோற்றிய நுதல்விழிச் சுடரின் சூழ்வினுக்
காற்றல ராகியே யடைந்த வானவர்
நாற்றடம் புயமுடை ஞான நாயகற
போற்றிசெய் தினையன புகல்வ தாயினார். (ருரு)

வெந்திற லவுணரை வீட்டி தற்கொரு
மைந்தனை யருள்கென வந்து வேண்டினே
மந்தமி லழலினீ யருடல் செய்தனை
யெந்தையே யெங்ஙனம் யாங்க ளுய்வதே. (ருசு)

பங்குறை யுமையவள் பாணி யின்வரு
கங்கையெவ் வுலகமுங் கலந்த தாமென
வங்குநின் னுதல்விழி யிருந்து நீங்கிய
பொங்கழ லெங்கணும் பொள்ளென் றீண்டிய. (ருஎ)

கற்றையஞ் சுடர்பொழி கனல்க ளின்றொகை
சுற்றியெவ் வுலகமுந் துன்ன லுற்றவான்
மற்றொரு கணத்தவை மாற்றி டாயெனின்
முற்றுயிர்த் தொகையையு முடிவு செய்யுமால். (௫௮)

விஞ்சிய பேரழல் வெம்மை யாற்றலா
தஞ்சின மிரிந்தயா மைய நின்னிரு
செஞ்சர ணடைந்தனந் தெரியி னீயலாற்
றஞ்சம துளதுகொ லெம்மைத் தாங்கவே. (௫௯)

மலக்குறு மனத்தினேம் வருத்த முற்றவு
முலக்குற நீக்குநீ யொல்லை யெம்மிடை
யலக்கண தியற்றுதி யாயி னன்னதை
விலக்குறு நீரினர் வேறி யாவரே. (௬0)

நிறைமுடிப் பணிமிசை நிலனும் வானமு
மிறைமுடிக் கின்றவிவ் வெரியை நீக்கியே
பிறைமுடிக் கொண்டிடு பெரும வெம்முடைக்
குறைமுடித் தருளெனக் கூறி வேண்டினார். (௬க)

அஞ்சலி னவர்புக ழண்ண லாதியோ
ரஞ்சலி செய்திவை யறைந்து வேண்டலு
மஞ்சலி லஞ்சடை யணிந்த நாயக
னஞ்சலி ரென்றுகை யமைத்துக் கூறினான். (௬௨)

பொன்மலை வில்லினான் புதிதின் வந்திடு
தன்முக மைந்தையுங் கரந்து தாவில்சீர்
நன்முக மொன்றொடு நண்ணி யத்துணைத்
தொன்மையி னியற்கையாய்த் தோன்றி வைகினான். (௬௩)

தன்னரு ணிலைமையாற் சண்மு கத்திடை
நன்னுதல் விழிகளி னல்கு தீப்பொறி
யின்னில வரைப்புவா னீண்ட லுற்றவை
முன்னுற வரும்வகை முதல்வன் முன்னினான். (௬௪)

அந்தியம் பெருநிறத் தமல னவ்வகை
சிந்தைகொண் டிடுவழிச் செறிந்த பேரழன்
முந்தையின் வெம்பொறி மூவிரண் டவாய்
வந்துமுன் குறுகலு மகிழ்ந்து நோக்கினான். (௬௫)

ஆதகு காலையி லமரர் தங்களு
ளோர்தகு செயலிலா வுல்லைத் தேவையு
மூதகு தீயையு முகத்தை நோக்குறு
மேதகு கருணையால் விமலன் கூறுவான். (௬௬)

நீங்களிச் சுடர்களை நெறியிற் றாங்கியே
வீங்குநீர்க் கங்கையில் விடுத்தி ரன்னவை
யாங்கவள் சரவண மமர வுய்க்குமா
லீங்கிது நும்பணி யென்றி யம்பினான். (௬௭)

கூற்றுயி ருண்டதாட் குழக னிவ்வகை
சாற்றிய துணர்தலுந் தாழ்ந்து மும்முறை
போற்றினர் நடுங்கினர் புலம்பு நெஞ்சினர்
காற்றொடு கனலிவை கழறன் மேயினார். (சஅ)

ஒருநொடி யளவையி னுலகம் யாவுமாய்ப்
பெருகிய வித்தழல் பெரும நின்னுடைத்
திருவரு ணிலைமையாற் சிறுகிற் றாதலா
லரிதரி தடியரே மாற்ற லாகுமோ. (சகூ)

ஈற்றினை யுலகினுக் கிழைக்கு நின்கணே
தோற்றிய கனலினைச் சுமத்தற் கோர்கண
மாற்றலை யுடையரோ வவனி கேள்வனு
நாறறிசை முகமுடை நளினத் தேவுமே. (எ0)

பண்டெழு விடத்தினிற் பரந்த தீச்சுடர்
கண்டலு நின்றிலங் கவலுற றோடின
மண்டவும் வெருவுது மவற்றை யாந்தலைக்
கொண்டன மேகுதல் கூடற் பாலதோ. (எக)

அப்பெருங் கனலினை யடைதற் றுன்னினும்
வெப்புறு மெமதுளம் வியர்க்கும் யாக்கையு
மெப்பரி சேந்துவம் யாங்க ளொன்றலுந்
துப்புறழ் படாசடைப் பகவன் சொல்லுவான். (எஉ)

ஒன்றொரு நொடியினி லுலக முற்றுமாய்த்
துன்றிய விச்சுடர் சுமந்து கங்கையிற்
சென்றிட துங்கள்பாற் றிண்மை யெய்துக
வென்றலு நன்றென விசைந்து போற்றினர். (எங)

மற்றது தெரிதலு மால யன்முதற்
சொற்றிடு மமரர்க ளுளக்க நீங்குறு
விற்றது கொல்லெம தின்ன லின்றென
வுற்றன ருவகையை யுடலம் விம்மினார். (எச)

ஆங்கன மவர்தமை யாதி நோக்கியித்
தீங்கனல் சரவணஞ் செறிந்தொர் செம்மலா
யோங்குபு சூர்கிளைக் கொறிவு செய்யுமா
லீங்கினி யாவரு மேகு வீரென்றான். (எரு)

இறையவ னினையன வியம்ப வுய்ந்தனங்
குறையில மினியெனக் கூறிக் கஞ்சமே
லுறைபவ னுதியா மும்ப ரன்னவ
னறைகழ லடிதொழு தங்க ணீங்கினர். (எசு)

முன்னுற மாருதன் முதல்வன் றாள்களை
வன்னியந் தேவொடு வணங்கி யேயெழீஇ
யன்னவ னருளினாற் சுடர்க ளாறையுஞ்
சென்னியின் மேற்கொடு சேறன் மேயினான். (எஎ)

அயனுறு கடிநக ரதனைத் தீர்ந்தொரா
யெரிகெழு சுடர்முடி யேந்தி மாருதன்
வருதலு மயன்முதல் வானு ளோரெலாங்
கருதரு மகிழ்வொடு கண்டு கூறுவார். (எஅ)

செந்தழன் மேனியன் றீயின் வண்ணமாத்
தந்தனன் குமரனைத் தனாது கண்ணினா
லுய்ந்திட யாமெலா முலகின் முன்னரே
வந்திடு வீரனா மதலை மானவே. (எகூ)

தொன்னிலை யாம்பெறச் சூரன் பாடுற
வின்னமுஞ் சில்பக லிருத்த லாலரன்
றன்னிகர் திருமகன் சரவ ணத்திடை
மன்னுபு குழவியாய் வளர நல்கினான். (அ0)

போற்றலர் புரமடு புனித நாயக
னாற்றிடு செய்கைக ளருளி னீர்மையா
லேற்றதோர் சான்றிவ ணெரியைத் தந்ததுஞ்
சாற்றருங் கருணையிற் றலைமை யானதே. (அக)

என்றிவை பற்பல வியம்பி யின்னினிப்
பொன்றின ரவுணர்கள் புலம்பு நங்குறை
நன்றிவண் முடிந்தது நாமு மததடஞ்
சென்றிடு வாமெனச் செப்பி னாரரோ. (அ௨)

உருப்பம தாகிய வொளிறு தீஞ்சுடர்
தரிப்பதோர் மருத்துவன் றம்முன் சென்றிடத்
திருப்பயின் மான்முதற் றேவர் வெள்ளியம்
பருப்பத மொருவியே படர்தன் மேயினார். (அ௩)

இறக்கலுங் கன்னலொன் றெரியின் றீஞ்சுடர்
பொறுத்திட லரிதெனப் புலம்பிக் காலினோன்
மறுத்தவிர் பிறைமுடி வரத னாணையாற்
றிறற்படு வன்னிதன் சென்னி சேர்த்தினான். (அ௪)

சேர்த்தலு மொருபதந் தீயின் பண்ணவன்
வேர்த்துடல் புழுங்குற மெலிவிற் றூங்கியே
பேர்த்தொரு பதமிடப் பெறாது வல்லைபோ
யார்த்திடு கங்கையி னகத்துய்த் தானரோ. (அ௫)

கூர்சுடர்ப் பண்ணவன் கொடுவந் துய்த்திடு
மார்சுடர்த் தொகுதிவந் தடைய மூவெயி
லூர்சுடச் சிவந்தகண் ணொருவன் றாபுறழ்
வார்சடைக் கரந்தென வறந்த கங்கைநீர். (அ௬)

அரனருண் முறையினை யறிந்து கங்கைதன்
சிரமிசை யேந்தியே சென்றோர் கன்னலிற்
சரவண மெனுந்தடந் தன்னிற் சேர்த்தனள்
மரையித ழாயிடை மல்குற் றலென. (அ௭)

ஆவயின் காறும்வந் தரிய யன்முதற்
றேவர்க ளுவகையாற் றெரிந்து சூழ்ந்தனர்
மேவர வணியதாம் விளைவு நாடியே
காவல்கொ ணிரப்புடைக் காத லோரென. (அஅ)

ஆரணன் விண்ணக மச்சு தன்புவி
வாரணன் முதலிய மாதி ரத்துளோ
ரேரண வமரர்க ளெண்டிக் காகியே
சீரணி சரவணஞ் சேர்ந்து போற்றினர். (அகூ)

வேறு.

கங்கையு மொல்கப் புக்க கடுங்கனற் கடவுட் சோதி
யங்கிரு மூன்று முன்ன ரம்மைவா ழிமயச் சாரற்
றங்கிய கமலம் பூத்த சரவணம் புகலு முக்கட்
புங்கவ னருளாற் றொன்மை போன்றது வறத்த லின்றி. (கூ0)

விண்ணிடை யிழிந்த காலின் மேவரு கனலிற் றோன்றும்
வண்ணவொண் கமலஞ் செய்ய முளரியை மாற தாகத்
தண்ணளி யோடு நல்கித் தரித்தெனச் சரவ ணப்போக்
கண்ணகன் பொய்கை யீசன் கட்டழன் மிசைக்கொண் டன்றே. (கூக)

அருவமு முருவு மாகி யநாதியாய்ப் பலவா யொன்றாய்ப்
பிரமமாய் நின்ற சோதிப் பிழம்பதோர் மேனி யாகக்
கருணைகூர் முகங்க ளாறுங் கரங்கள்பன் னிரண்டுங் கொண்டே
யொருதிரு முருகன் வந்தாங் குதித்தன னுலக முய்ய. (கூஉ)

தோன்றல்வந் திடலும் விண்பாற் றுந்துபி கறங்க லுற்ற
வான்றதொன் மறைக ளெல்லா மார்த்தன வயனு மாலும்
வான்றிகழ் மகத்தின் றேவு முனிவரு மலர்க டூவி
யேன்றெமை யருளு கென்றே யெத்திசை யெடுத்துச் சூழ்ந்தார். (கூங)

ஏவர்தம் பாலு மின்றி யெல்லைதீ ரமலற் குள்ள
மூவிரு குணனுஞ் சேய்க்கு முகங்களாய் வந்த தென்னப்
பூவியல் சரவ ணத்தண் பொய்கையில் வைகு மைய
னாவிக ளருளு மாறா லறுமுகங் கொண்டா னன்றே. (கூச)

மல்லலம் புவனத் துள்ள மன்னுயிர்க் கணங்கட் கெல்லா
மொல்லையின் மகிழ்ச்சி யெய்தி யுவகையின் குறிப்புண் டாக
தொல்லையி லவுண ருக்குஞ் சூரனே முதலா வுள்ள
வெல்லவர் தமக்கு மாய்வு மிருங்குறிப் புற்ற வந்நாள். (கூரு)

மறைகளின் முடிவால் வாக்கான் மனத்தினா லளக்கொ ணாமை
னிறைவுடன் யாண்டு மாகி நின்றிடு நிமல மூர்த்தி
யறுமுக வுருவாய்த் தோன்றி யருளொடு சரவ ணத்தின்
வெறிகமழ் கமலப் போதின் வீற்றிருந் தருளி னானே. (கூகூ)

பாங்குறு தருச்சூழ் காலாப் பஃறழைச் சினைமென் கொம்பர்
நீங்கறப் புடைபோய் வானி னிரந்தன பந்த ராகத்
தூங்கிய பழனுங் காயுந் துணர்களு மகத்துட் டுன்ன
வாங்கத னடுவட் பொய்கை யணிநிழ லமர்ந்தா னையன். (கூஎ)

முடிபொரு தசையு நாகர் முதியகால் பலகை வையந்
தொடர்கரை மரனே வானந் தூங்குபன் ஞணந் தெண்ணீர்த்
தடமலர் பாய லாகச் சரவண மஞ்ச மீதி
னடைதரு மைந்தன் மென்கா லசைப்பவீற் றிருந்தா னன்றே. (கூஅ)

எண்பெரு நாகர் சேட னேந்தெழி லரிமா ளுகத்
தண்பொலி புனற்பூம் பொய்கை தவிசுரு வாக நாள்கோள்
விண்படர் விதான மாக வேலையந் தலைவன் காலை
யொண்பக லாடி காட்ட வுமைமக னங்க ணுற்றான். (கூகூ)

தரணியி னடுவண் வைகுஞ் சரவணப் பொய்கை தன்னில்
விரைசெறி கமலப் போதில வீற்றிருந் தருளுஞ் செவ்வேள்
பெருவடி வமைந்த மாயன் பிறங்கிய மனததிற் றண்ணென்
றெரிசுடர் விளக்கத் துச்சி யிருந்திடு மீசன் போன்றான். (க00)

பெருந்தரை நடுவ ணாகிப் பிறங்கிய சரவ ணத்தி
லிருந்தனிக் கமல மொன்றிற் குமரவே ளிருந்த பான்மை
திருந்துநல் லண்டப் புத்தேள் சிந்தையாம் புண்ட ரீக
புரந்தனில் விரும்பித தாதை வைகிய வியற்கை போலும். (க0க)

பாசிலை பரவித் துள்ளி படுவன வுடுவைப் பாக
வீசுசை வலங்கா ராக வேறுசூழ் கமல மெல்லா
மாசறு பகலோ ராக வவற்றிடை மலர்ந்த கஞ்சந்
தேசுடை யிரவி யாகச சிவனெனச் சேயங் குற்றான். (க0உ)

மாலய னெழிலி மேலோன் வானவ ரேனோர் யாரும்
பாலுற மரனு மாவும் பறவையும் பிறவுஞ் சூழ
வேலுறு குமரன் கஞ்சத திருந்தது பரம னாதிக்
காலையி னுயிர்க ணல்கிக் கமலமே லிருத்தல போலும். (க0ங)

சலங்கிளர் தரங்கத தெய்வச் சரவணக் கமலப் போதி
னலங்கிளர் குமரன் சேர்த லான்முகற் சிறைமேல் வீட்டிப்
புலங்கிள ருயிர்க ணலகப் பொருந்துநற் பகலின் முன்ன
மிலங்கெழிற் பதும பீடத தேறிய வியற்கை போலும். (க0ச)

முண்டக மொன்றில் வைகு முருகனைச் சுற்றிச் செங்கேழ்
வண்டுளர் கமலக் காடு வான்புனற் றடத்தி னிற்ற
லண்டர்கண் முதல்வ வோர்பா லன்றியெம் மெல்லாம் பீடங்
கொண்டருண் முறையி னென்று நோறறிடுங் கொள்கைத் தன்றே.

அணங்குசெய் தோற்றத் துப்பி னவிர்சுடர்க் குமரற் சூழ
மணங்கிளர் கமலக் காடு மலர்ந்தன வவனைச் சேர்வான்
றணங்கெழு புனலிற புக்குத தபனன்மே னாட்டஞ் சேர்த்தி
நுணங்கிடை மடவார் பலலோர் நோறறுவ ணிற்றல் போலும். (க0சு)

ஒண்ணகை யுயிர்க்குஞ் சங்க மொருசில கமலம் வைகத்
தண்ணுறு நறவப் பஃறாட் டாமரை பரித்துச் சூழ்த
லண்ணலம் பொய்கை தற்சே ராறுமுகப் பிள்ளை துய்ப்ப
வெண்ணெ யுஞ் சங்குஞ் சூழ விட்டது போலு மன்றே. (க0எ)

ஆரமும் வனசத் தோடு மணிமக ரந்தச் சேறும்
வேரியம் பூந்தண் டேனு முறைமுறை வீசிக் கையாற்
சேரவே கொண்டு மேலோன் றிருவடி திளைப்ப வுய்த்தல்
வாரியந் தடாக மன்பால் வழிபடும் வண்ணம் போலும். (க0அ)

பங்கயச் செம்மற் போது பதனழிந் தவிழ்ந்து பாங்க
ரங்குள விலைமேல் வீழ வவைபுறத் தசையு நீர்மை
சங்கரன் குமரற் சூழச் சரவணம் பசும்பூந் தட்டிற்
றுங்கநல் விளக்க மாட்டித் திரைக்கையாற் சுலவல் போலும். (க0கூ)

காசுறழ் பதுமப் போது களாசிய தாக மீச்செல்
பாசடை கவிகை யாகப் பலநனை விளக்க மாக
வீசிகள் கவரியாக மிழற்றுபுள் ளியம தாக
மாசறு பொய்கை சேய்க்கு வளம்பட வொழுகிற் றன்றே. (கக0)

அழனிவந் தன்ன கஞ்சத் தகன்றடந் திரைக ளுபப
ஞுழிபட ராதுசூழ்போந் தலவுவ தானை நீரால
விழுமிய குமரன் பொய்கை வெளியுறு தமர ரிட்ட
வெழினிகள் புடையே மென்கா லெறிதலி னிரட்டல் போலும். (கக்க)

கொன்படை சேவ லாகு மெகினமோர் கோடி யீசன்
றன்பெருங் குமரற் சூழத் தடத்தினின் மிழற்ற லெந்தை
பொன்பிறழ் பதுமன் செய்கை புரியுநா ளூதி யாவ
லென்புடை யிருத்தி யென்றே தமித்தமி யிரத்தல் போலும். (ககஉ)

வளஞ்செறி யினைய பாலால் வான்சர வணமாம் பொய்கைத்
தளஞ்செறி பதும மொன்றிற் சராசரம் யாவுங் காப்பா
னுளஞ்செறி கருணை யெய்தி யொப்பிலாக் குமர மூர்த்தி
யிளஞ்சிறு மதலை போல வினிதுவீற் றிருந்தான் மன்னோ. (ககங)

நீர்த்திகைக் கங்கை தன்னிற் றிகழ்சர வணத்தில் வந்த
மூர்த்திகைக் குழவி யேபோன் முதற்புரி யாடனோக்கி
யார்த்திகை யுறுத வுள்ளத் தரிமுத லமரர் யாருங்
கார்த்திகைத் தெரிவை மாரை விளித்திவை கழற லுற்றார். (ககச)

சாற்றருஞ் சரவ ணத்திற் சண்முகத் தொருவ னாகி
வீற்றிருந் தருளு கின்ற விமலனோர் குழவி போலத்
தோற்றின னயனுக் குங்க டுணைமுலை யமுத மூட்டிப்
போற்றுதிர் நாளு மென்ன நன்றெனப் புகன்று வந்தார். (ககரு)

மறுவறு மார லாகு மாதர்மூ விருவர் தாமு
நிறைதரு சரவ ணத்தி னிமலனை யடைந்து போற்ற
வுறுநர்க டமக்கு வேண்டிற் றுதவுவோ னதை லாலே
யறுமுக வொருவன் வேறா யறுசிறு ருருவங் கொண்டான். (ககசு)

ஆறுரு வாத லோடு மறுவரு மகிழ்ந்து வேறு
வேறுதா மெடுத்துத் தத்தம் வியத்தகு துணைமென் கொங்கை
யூறுபா லமுத மன்னோற் குதவலு முறுவல் செய்து
மாறிலா வருளா லாற்ற வருந்தினன் போல வுண்டான். (ககஎ)

உண்டபி னறுவ ராகு மொருபெரு முதல்வன் றன்னைத்
தண்டமை பொதுளு நீபத் தண்ணிழற் பொய்கை தன்னில்
வண்டுயி லுறுத கஞ்ச மாமலர்ப் பள்ளி சேர்த்திக்
கண்டுயில் செய்வித் தேத்தக் கருணையா லினைய செய்வான். (கககஅ)

துயிலவோ ருருவந் துஞ்சித் துண்ணென வெழுந்து மென்சொற்
பயிலவோ ருருவம் யாய்தன் பயோதரம் பவள வாய்வைத்
தயிலவோ ருருவ நக்காங் கமரவோ ருருவ மாட
லியலவோ ருருவம் வாளா விரங்கவோ ருருவஞ் செய்தான். (கககசு)

ஓருருத் தவழ மெல்ல வோருருத் தளர்ந்து செல்ல
வோருரு நிற்றல் செல்லா தொய்யென வெழுந்து வீழ
வோருரு விருக்கப் பொய்கை யோருரு வுழக்கிச் சூழ
வோருருத் தாய்கண் வைக வொருவனே புரித லுற்றான். (கஉ0)

ஆடவோ ருருவஞ் செங்கை யறையவோ ருருவ நின்று
பாடவோ ருருவ நாடிப் பார்க்கவோ ருருவ மாங்க
ணோடவோ ருருவ மோர்பா லொளிக்கவோ ருருவம் யாண்டுந்
தேடவோ ருருவ மாகச் சிவன்மகன் புரித லுற்றான். (கஉக)

இத்திற மிருமூன் றான யாக்கையுங் கணம தொன்றிற்
பத்துநூ றாய பேதப் படும்வகை பரமாய் நின்ற
வுத்தம குமரன் றானெவ் வுயிர்தொறு மாட லேபோல்
வித்தக விளையாட் டின்ன மாயையால் விரைந்து செய்தான். (கஉஉ)

சிற்பர னாகி வந்த செய்யவே ளாடற் றன்மை
பற்பல திறமு நாடிப் பங்கயத் தயனு மாலுஞ்
சொற்படு மகத்தின் றேவு முனிவருஞ் சுரரும் யாரு
மற்புத மகிழ்ச்சி கொண்டாங் கின்னவா றறைத லுற்றார். (கஉங)

சேயிவ னொருவ னேபல் சிறுருருக் கொண்டு நம்மு
னேயெனு மளவை தன்னி லெண்ணில்பே தத்த னாகு
மாயினிக் குமர னாட லறிவரி தெமக்கு மெல்லா
மாயமு மியற்ற வல்லன் வரம்பிலா வறிவன் மாதோ. (கஉச)

கைப்பயில் குழவி போலக் காட்டிய கடவுள் செய்யு
மிப்பெரு மாயை போல யாவரும புரித றேற்றார்
செப்பியென் வேறி யாமுஞ் செய்வதொன் றில்லை யன்னா
னொப்பறு பரனே யாமென் றுரைசெய்து தொழுது நின்றார். (கஉரு)

அழலெனு மீன வர்க்கத் தறுவருங் குமர னுடன்
முழுவது நோக்கி நோக்கி முதிருமற் புதநீ ரெய்திக்
குழவிக ளென்றே யுள்ளங் கோடலவிட் டகலா தஞ்சி
வழிபடு கடவு ளோரிற் போற்றினர் மனங்கொ ளன்பால். (கஉசு)

அம்புய முறமூஞ் செங்கே ழறுமுகம் படைத்த கோல
நம்பிதன் வரவு தன்னை நவின்றன மினிமே லங்க
ணெம்பெரு முதல்வி தன்பா லிலக்கத்தொன் பதின்மர் செவ்வே
டம்பிய ராகி வந்த தன்மையை விளம்ப லுற்றாம். (கஉஎ)

ஆ திருவிருத்தம் - கூஎஎ.

---

### வசனம்.

இவ்வாறு திருமணமுடித்து இறைவன் திருக்கைலையிலெழுந்தருளியிருக்க, தேவர்முதலியயாவரும் மேருமலையிற்சேர்ந்து, நமதுதுன்பத்தை முறையிடத் திருச்செவிசாத்தி இரக்கங்கொண்டு, நம்பொருட்டுத் திருமணமுடித்தபின்பும், சூராதியரை முடிக்க வொரு புதல்வனைத்தருவோமென்று நமக்கருளிச்செய்த சொல்லை மறந்திருக்கிறான்போலும். யாம் இன்னுமொருதரம் கைலாயத்தை யடைந்து விண்ணப்பஞ் செய்வதே தகுதியாகிய காரியமென்று நிச்சயித்து அவ்வாறு போகத் துணிந்திருக்குங் காலத்தில், பிரமதேவன் மற்றையவர்களைநோக்கி, நாம் முன்னேயறிவிக்காமல் இறைவன் சந்நிதிக்குப்போவது தகுதியன்று, ஒருதூதனை யனுப்பி அவரது அங்கீகாரம் பெற்றபின்பு போவதே தகுதியென்றுசொல்ல, மற்றையோரும் இதுசரியென்று ஒத்துக்கொண்ட பிறகு, வாயு தேவனைநோக்கி, நீ கைலைக்குச்சென்று இறைவன் கருத்தறிந்து வருகவென, அவன் அச்செயல் என்னாலாகாது. மன்மதன்செய்தி யறிந்த நான் இறைவனுக்கெதிரேபோக அஞ்சாநின்றேன் என்றுசொல்ல, பிரமன், அப்படிப்பட்ட அச்சம் உனக்குவேண்டாம். உனக்கு யாதொரு துன்பமும் நேரிடாது, ஒருவர்க்கொருவர் உதவிசெய்யவேண்டியது அறநெறியன்றோ? எம்பொருட்டு நீ தூதுபோவதனால் உனக்குப் புகழும் புண்ணியமும் உண்டு என்று வற்புறுத்திச் சொல்லுதலும், வாயுதேவன் அச்சொல்லை மறுக்கமாட்டாமல் உடன்பட்டுச்சென்று, திருக்கைலாயத்தை யடைந்து அங்குள்ள பூஞ்சோலையின் மணத்தை வாரிக்கொண்டு, மந்தமாருதம்போல மெல்லென்றசைந்து இறைவன் கோயில்வாயிலைச் சாருஞ்சமயத்தில், இரண்டாவது சம்புவாய்க் கைலாய மலையைக் காவல்செய்கிற நந்திதேவர்சீறி அதட்டக்கண்டு, கார்காலத்து மேகம் மின்னியிடிக்க, அவ்வோசையைக்கேட்ட பாம்புகள் தளர்ந்து சோர்ந்து போவதுபோல வருந்தித் தன்வலியிழந்து கீழேவிழுந்தான். இப்படி வீழ்ந்தவாயு தேவனும் தனது சுயவடிவங்கொண்டு, அந்த நந்திதேவருடைய திருவடியை வணங்கி, என்பிழை பொறுத்தருள வேண்டுமென்று வேண்டுதலும், நந்திதேவர் கோபந்தணிந்து நீ பிழைத்துப் போய்விடு என்று அனுப்பிவிட்டார்.

இப்படி நந்திதேவர் கட்டளையிட்டனுப்புதலும் வாயுதேவன் விரைந்து கைலாயமலையை நீங்கி மேருமலையை யடைந்து தேவர்களோடு சேர்ந்து பிரமவிஷ்ணுக்களுக்கு நிகழ்ந்த செய்தியாவும் தெரிவித்தான். அதுகேட்ட திருமால் முதலியோரும் துன்பமடைந்து நாம் நேரேசென்று இறைவனை வணங்கி நம்குறைகளை விண்ணப்பம்பண்ணிக் கொண்டாலன்றி நமதுதுன்ப மொழியாதெனத் துணிந்து, கைலையைச்சேர்ந்து எமது வரவை யிறைவனுக்குத் தெரிவிக்க வேண்டுமென்று வேண்ட, அவரும் அவ்வாறே தெரிவிக்க, இறைவனும் விடைகொடுக்கச்சென்று வணங்கி, எம்பெருமானே! உன்பெருமையை யெடுத்துச்சொல்ல எம்மால்முடியுமோ? தேவரீர் ஆதியில் எங்களுக்குச் சொன்னபடி ஒருபுதல்வனைத் தந்து சூராதியரையழித்து எங்களுக்குப் பழையபடியே இன்பநுகர்ச்சியுண்டாக்க வேண்டுமென்றுவேண்ட, இறைவன் அவர்களைநோக்கி, நீங்கள் வருந்தவேண்டாம் என்று சொல்லி, தனது முகங்களாகிய ஈசானம், தற்புருடம், வாமதேவம், அகோரம், சத்யோஜாதம் என்பவைகளோடு அதோமுகமுஞ்சேர ஆறுமுகங்களோடுதோன்றி நின்றனன், அந்த ஆறுமுகங்களிலும் ஆறுதீப்பொறிகளுண்டாயின, அவற்றின் வெம்மையை யெடுத்துச்சொல்ல வொருவராலு முடியாது, அப்படியிருந்தும் ஒருவருக்குந் தீமையையுண்டாக்கவில்லை, அத்தீயின் வெப்பத்தைநோக்கி இறைவனருகேயிருந்த

இறைவியஞ்சியெழுந்து தன்காற்சிலம்புகளொன்றோடொன்று தாக்க விரைந்து செல்லலாயினள். பிரமன் முதலிய தேவர்களும் அஞ்சி நடுநடுங்கி நின்றனர். நெற்றிக்கண்ணிலுண்டான நெருப்பின் வெப்பத்துக்கு ஆற்றாதவராயடைந்த தேவர்கள் இறைவனைத்தொழுது நாங்களெல்லாரும் உய்யும்படி ஒருபுதல்வனைத் தந்தருள வேண்டுமென்றுவேண்ட, நீர் ஒரு நெருப்புப்பொறியைத் தந்தருளினீர் யாங்கள் பிழைப்பதெப்படி, அந்த நெருப்போ, உலகமெங்கும் படர்ந்தது, அதைத் தேவரீர் தணிக்காவிட்டால் உலகிலுள்ள சராசரசீவராசிகளெல்லாம் வெந்து நீறாய்விடும். அதற்கஞ்சிவந்து உன்திருவடியை யடைந்தோம். எங்கள் துயரத்தை யொழிக்க வல்ல நீரேயெங்களுக்குத் துன்பஞ்செய்வதானால் நாங்கள் வேறுயாரிடத்துப் புகலடைவோம் என்று பலவாறுபுகழ்ந்து வணங்கிநிற்க, அவர்கள் வேண்டுகோளுக்கிரங்கின இறைவன் அந்த ஆறுதீப்பொறிகளையும் தமது சந்நிதானத்தில்வரும்படி திருவுளம் பற்றுதலும் அவைகளும் அவ்வாறே ஒருங்குவந்தடைந்தன. உடனே வாயுதேவனையும் அக்கிநிதேவனையும் இறைவன்நோக்கி, நீங்கள் இந்தப் பொறிகளைத் தாங்கிக்கொண்டுபோய்க் கங்கையில்விட்டு வாருங்களென்று கட்டளையிட்டு, அந்தக் கங்கையும் சரவணப்பொய்கையில் செலுத்திவிடுவாளென்றும் சொல்ல. அவர்களிருவரும் இறைவனைநோக்கி, தேவரீர் சர்வசக்திமான் ஆதலால் அத்தீப்பொறிகள் உமது திருவருணோக்கத்தாற் சிறுகின. அவற்றை யாம் தாங்கவல்லோமோவென்று விண்ணப்பஞ்செய்ய, அவர்களைநோக்கி, நீங்கள் இவற்றைக் கங்கையிற் செலுத்துமளவும் உமக்குப் பெருவலியுண்டாகும்படி வரந்தந்தோம். கொண்டுபோங்களென்று கட்டளையிட்டனன். அவ்வாறே அவர்களும் கொண்டுசெல்வாராயினர். அதைக்கண்ட திருமால் பிரமன்முதலிய தேவர்களெல்லாம், இன்றோடு நம்முடைய அச்சமொழிந்ததென்று மனமகிழ்ந்திருக்குஞ் சமயத்தில் இறைவன் அவர்களைநோக்கி, இந்தத் தீப்பொறிகள் சரவணப் பொய்கையை யடைந்து எமது புதல்வனாய் விளங்கும் என்று சொல்லுதலும், அவர்கள் அளவிறந்த சந்தோஷத்தோடு வாயுதேவனும் அக்கிநிதேவனையும் தொடர்ந்துசெல்ல, அவ்விருவருள் வாயுதேவன் அத்தீப்பொறிகளைத் தாங்கும் வலியிலனாய்த் தீக்கடவுளிடத்தே கொடுக்க, அவனும் கங்கையை விரைந்தடைந்து அவற்றை அதனிடத்தே விடுத்தான். அத்தீப்பொறிகளடையவே, முற்காலத்தில் கங்கையானது இறைவன் சடாமகுடத்தில் மறைந்துநின்றாற்போலிருந்தது. கங்கையும் தன்னிடத்தில்வந்த தீப்பொறியாறினையும் இது சிவபெருமான் திருப்பணியென்று தன்சிரமேற்றாங்கி ஒருகணப்போதில் சரவணப் பொய்கையில் சேர்க்க, அவ்விடத்தில் திருமால் பிரமன்முதலிய தேவர்களெல்லாரும் சூழ்ந்துநின்று வணங்கினார்கள். கங்கையும் தன்னைவருந்தச்செய்த கனற்பொறிகளாறும் இறைவிவாழ்கின்ற இமயச்சாரலில் உள்ள சரவணப்பொய்கையில் சேர்ந்தவளவில் இறைவனருளால் வறட்சியில்லாதிருந்தது, அதனிடத்தில் ஒருசோதிப்பிழம்பு ஒருவடிவுகொண்டு ஆறுமுகமும் பன்னிருகையுமாக முருகவேளாய்த் தோன்றிநின்றது. அதைச் சூழ்ந்துநின்ற தேவர்களெல்லாம் வியக்கும்படி அறுமுகக்கடவுளும் வீற்றிருந்தார். இறைவன் அணுக்களைக் காக்குமுறைமையால் அறுமுகங்கொண்டு நின்றமைநோக்கி, எல்லாவுலகங்களிலுமுள்ள அணுக்களெல்லாம் மகிழ்ச்சியுடைய உவகைக்குறியடைந்த சூரபன்மன், தாருகன், சிங்கமுகன் முதலிய அவுணர்களுக்கெல்லாம் மரணக்குறிதோன்றின. இப்படி வேதாகமாதிகளாலும் மனவாக்குகளாலும் அளந்தறியப்படாத பரம்பொருளே அறுமுகக்கடவுளா யெழுந்தருளியிருக்குங் காலத்தில், பக்கங்களில் அடர்ந்திருக்கும் தருக்களே கால்களாக, மிகுந்த தழைகளையுடைய கிளைகளும் கொம்பு

களும் ஆகாயத்திலோங்கிய பந்தலாக, அவற்றில் தொங்குவனவாகிய பழங்களும் காய்களும் உள்ளே பொருந்தியிருந்து அதனடுவில் நிழல்செய்திருக்க, உலகைத் தாங்கலாற்ருது சுமக்கும நாகங்களே கால்களாக, உலகமே பலகையாக, கரையிலிருக்கு மரங்களே கயிருக, அப்பொய்கையிற்பூத்த மலர்களே பாயலாக, சரவணப்பாசடையாகிய மஞ்சத்தின்மேல் தென்றற்காற்று மெல்லென்றசைக்க, அச்சரவணப்பொய்கையே அணையாகக்கொண்டு சண்முகக்கடவுள் இனிது வீற்றிருந்தார்.

இவ்வாறு இளையபிள்ளையார், அச்சரவணப் பொய்கையில் வீற்றிருந்தருளினது விராட்புருடனது இதயகமலமாகிய புண்டரிகபுரத்தில் இறைவனெழுந்தருளியிருந்ததை யொத்திருந்தது. மேலும் பச்சிலையசைந்து அதில் நீர்த்துளிதங்கியிருப்பன நாட்களின் கூட்டத்தை யொத்திருந்தன, அப்பொய்கையில் அடாந்தபாசியே மேகமாக, தாமரைமலர்களே சூரியராக, அவற்றினிடையில் பிள்ளையாரெழுந்தருளியிருக்குந்தன்மை தாமரைமலரே ஞானசூரியனுக, பிள்ளையார் இறைவனென்றுசொல்ல, அங்குவீற்றிருந்தருளினது போலும். மேலும் திருமால் பிரமன்முதலிய தேவர்கள் பக்கங்களிற் பொருந்தியிருக்க, மிருகங்கள் பறவைகள் முதலாயின சூழ்ந்துகிடக்க, பிள்ளையார்வீற்றிருப்பது இறைவன் படைப்புக்காலத்தில் தாமரைத்தவிசுகந்து வீற்றிருந்ததை நிகர்க்கும். மேலும் அப்படியிருந்தது இன்னுஞ்சில நாளில் இளையபிள்ளையார் நான்முகனைச்சிறையிட்டு எல்லாவுயிர்களையும் அவன் போலப்படைக்கத் தொடங்கிப் பதுமபீடத்தல் வீற்றிருத்தல்போலிருந்தது. அப்பொய்கையில் ஒருதாமரைப்பூவில் சண்முகனிருக்க, அந்தப் பூவைச்சுற்றித் தாமரைக்காடிருப்பது, தேவாதிபனே எம்மையெல்லாம் பீடமாகக் கொண்டருளவேண்டுமென்று அத்தாமரைமலர்கள் வேண்டித்தவஞ்செய்து நிற்பதுபோன்று மிருந்தது. வெண்சங்குகள் சில தாமரைமலர்களிலிருக்க, மற்றைய தாமரைமலர்கள் தேனைச்சுமந்துகொண்டு சூழ்ந்திருப்பது அப்பொய்கையானது தன்னிடத்துள்ள குமாரக்கடவுள் திருவமுதுசெய்தற்கு [illegible]ண்ணெயும் சங்கும் சூழவைத்திருப்பது போன்றிருந்தது. அன்னத்தொகுதிகள் அப்பொய்கையில் முருகக்கடவுளைச் சூழ்ந்து நிற்பதை நோக்குமிடத்தில், இறைவனே! தேவரீர் எமதரசனுகிய பிரமனைச்சிறையிட்டு அவன் படைப்புத் தொழிலைத் தேவரீர் செய்யுங்காலத்தில் எங்களை வாகனமாகக்கொண்டருள வேண்டுமென்று வேண்டிநிற்பது போன்றிருந்தது. இவ்வகையாகிய பலவளங்களோடுகூடிய அந்தச் சரவணப்பொய்கையில் ஒருதாமரைமலரின்மேல் முருகக்கடவுளானவர் ஒரு சிறுகுழந்தை வடிவாய் வீற்றிருந்தருளினர். இவர் முதலிலே விளையாடும் திருவிளையாடல்களைக்கண்டு மகிழ்ந்த திருமால்முதலிய தேவர்கள் கார்த்திகை முதலிய மகளிரையழைத்து, சரவணப்பொய்கையில் விளையாடிக்கொண்டிருக்கும் சிறுகுழந்தைக்கு நீங்கள் பாலூட்டிவளர்க்கக்கடவீர்களென்று கூறுதலும் அப்பெண்கள் அறுவரும் அப்படியே யாகட்டுமென்று குழந்தையினருகேசென்று நிற்க, பிரணவதேசிகராகிய குழந்தைவடிவினர் ஆறுவடிவங்கொண்டு தோன்றியருள, அப்பெண்களறுவரும் ஒருகுழந்தைக் கொருத்தியாகப் பாலூட்டிவளர்க்க, அவர்மனங்களிக்கப் புன்னகைசெய்து கொண்டேயுண்டுவந்தார். உண்டலின், அக்குழந்தையுருக்கொண்டிருக்கிற முழுமுதற்கடவுளாகிய குமாரவேளை, ஒருதாமரைமலர்ப்பள்ளியில் துயில்பண்ணித் துதித்துக்கொண்டிருக்க, அவர் அறுதிருவுருவங்களில் ஒன்று நித்திரைசெய்யவும், ஒன்று நித்திரை நீங்கிவிழித்து மழலைச்சொற்கள் பேசவும், ஒன்று தன்தாய்முலையில் வாய்வைத்

றப் பாலுண்ணவும், ஒன்று சிரித்தவண்ணமாயிருக்கவும், ஒன்று திருவிளையாடல் புரியவும், ஒன்று அழுதுகொண்டிருக்கவும் செய்தருளினர்; மேலும், ஒன்று மெல்லத்தவழவும், ஒன்று தளர்நடையிடவும், ஒன்றுநிற்கமாட்டாமல் எழுந்துவிழவும் ஒன்று சரவணப்பொய்கையில் வீற்றிருக்கவும், ஒன்று அப்பொய்கையைக் கலக்கிச் சுற்றவும், ஒன்றுதன்தாயினிடத்திலிருக்கவும் செய்தருளினர். மேலும் இப்படியொருகணப்பொழுதில் அநேகமாகிய திருவிளையாடல்கள் செய்துவருகையில் தேவர் முனிவர் முதலிய எல்லாரும் பெருமகிழ்ச்சியடைந்து, இவன் இந்தக் குழந்தைப் பருவத்திலேதானே அற்புதத்திருவிளையாடல்கள் பலவுஞ் செய்வதனால் இவனேயெல்லாவுயிர்களையும் இயங்குவிக்கும் முழுமுதற்கடவுளென்று சொல்லவேண்டும் என்றுபலவாறு சொல்லிவியந்தனர். முலையூட்டின கார்த்திகைப்பெண்கள் அறுவரும் இந்த அற்புதத்திருவிளையாடலைக்கண்டு மனம்நடுங்கிக் குழந்தையென்றெண்ணாமல் தமது வழிபடுகடவுளென்றே துணிந்து போற்றித் தொழுவாராயினர். இதுவரையில் சண்முகப்பெருமான் திருவவதார வைபவத்தைச்சொன்னோம். இனி எம்பெருமாட்டியின் காற்சிலம்பின் மணிகளினின்றுந் தோன்றின நவசத்திகளிடத்தும் இலக்கத் தொன்பதின்மரும்தோன்றிக் குமரவேளுக்குத் திருத்தம்பிமாராகவும் படைத்துணைவராகவும் ஆனவரலாற்றைச் சொல்வோமென்று சூதமகாமுனிவர் சொல்லத் தொடங்கினர்.

திருவவதாரப்படலம் முற்றிற்று.

## துணைவர்வருபடலம்.

நஞ்ச மின்றவ னெற்றிநாட் டத்தினு னல்கு
வெஞ்சு டர்ப்பொறி வெம்மையை யாற்றலள் விமலை
செஞ்சி லம்படி தாக்கலி னவமணி சிதற
வஞ்சி யோடின ளிதத்திற முணர்ந்தன னகத்துள். (க)

மாய வன்முத லமரர்க ளீசனை வணங்கி
நீயொர் மைந்தனைத் தருகென நெற்றிநாட் டத்தா
லாய வன்சுட ருதவியோர் மதலையா யமர்வா
னேயி னுஞ்சர வணத்தெனத் தெரிந்தன ளிறைவி. (உ)

அன்ன தற்பின ருமையவ ளெனதுபா லமலன்
றன்ன ருட்பெறு மதலைதோன் றுவகை தடுத்த
பொன்ன சர்க்கிறை விரிஞ்சன்மான் முதலபுத் தேளிர்
பன்னி யர்க்கெலாம் புதல்வரின் றுகெனப் பகர்ந்தாள். (ங)

இமய மாமக ளித்திறம் புகன்றபின் பேடிச்
சமயம் யாவையு நிறுவிய கண்ணுதற் றலைவ
னமல மாந்திரு முன்னர்வந் தரிக்குமுன் னரிதாங்
கமல மாரடி கண்டனள் பணிந்துகண் களித்தாள். (ச)

உம்பர் யாவருங் குறையிரந் திடலுமீ யுதவுஞ்
செம்பொ றித்தொகை யாற்றலும் வெம்மையுந் தெரிந்து
வெம்பி முற்றுடல் பதைப்புற வகன்றிவண் மீண்டே
னெம்பெ ருந்தகை யவ்வழ னீக்கலா லென்றாள். (ரு)

தன்னி யிங்ஙனம் பகர்தலுங் கருணைசெய் தருளித்
தன்னி டத்தினி லிருத்தின னிருந்திடு தையன்
முன்ன மோடலிற் சிதறுநூ புரமணி முழுது
மென்னை யாளுடை நாயகன் முன்னிலங் கினவால். (அ)

தளிரின் மெல்லடிப் பரிபுர மாயின தணந்து
மிளிரு மந்நவ மணிகளி னுணையால் விமலை
யொளிரு நல்லுருத் தோன்றின வைம்முகத் தொருவன்
றெளிரு முச்சுட ரகத்திடை யமர்ந்திடுஞ் செயல்போல். (எ)

எண்ணி லாநவ மணிகளி னுமையுரு வெனைத்துங்
கண்ணி னூற்றெரிந் தருளினல் வம்மெனக் கழற
வண்ண லோர்வகை மணிக்கொரு சத்திக ளாக
நண்ணி னூர்நவ சத்திக ளமரர்நற றவத்தால். (அ)

பருப்ப தக்கொடி புரைநவ சத்திகள் பரமன்
றிருப்ப தத்திடை வணங்கினின் றவனிடைச் சிந்தை
விருப்பம் வைத்தலு முனிவர்த மகளிரோல் விரைவிற்
கருப்ப முற்றனர் யாவது முமையவள் கண்டாள். (கூ)

முனம்பு ரிந்துல களித்தவ ளனையர்பான் முதிருஞ்
சினம்பு ரிந்திவ ணெமக்குமா றுகிய திறத்தாற்
கனம்பு ரிந்தவிக் கருப்பமோ டிருத்திர்பல் கால
மினம்பு ரிந்தநீர் யாவரு மென்றுகூ ளிசைத்தாள். (கO)

ஆவ தெல்லையி னடுக்கமுற் றஞ்சியே யங்கண்
மேவு மாதர்மெய் வியர்த்தன ரவ்வியர்ப் பதனிற்
றேவ தேவன தருளினுற் றனகரத் திரள்போ
லோவி லாவிறல் வீரர்க ளிலக்கர்வந் துதித்தார். (கக)

வடுத்த லைப்பொருங் கண்ணினர் வியர்ப்பினில் வந்தாங்
கடுத்த மானவ ரோரிலக் கத்தரு மசனி
கடுத்த சொல்லினர் பொற்றுகி லுடையினர் கரத்தி
லெடுத்த வாளினர் பலகைய ராகியீண் டினரால். (கஉ)

அனைய யாவரு மீசனை யடைந்தன ரன்புற்
றினிய வாகிய வமலனு மங்கலை யேத்தி
வனைக ருங்கழல் வணங்கிமுன் னிற்றலு மற்றப்
புனித நாயக னவர்தமை நோக்கியே புகல்வான். (கஙு)

மைந்தர் கேண்மினோ நீவிர்கள் யாவரும் வயத்தா
விந்தி ராதியர் பகைவரை யடுவதற் கெமது
கந்த வேள்படை யாகுதி ரென்னவே கழறி
முந்து பேரருள் புரிந்தனன் யாவர்க்கு முதல்வன். (கச)

இன்ப நீருட னிவையருள் புரிதலு மிலக்க
நன்பெ ருந்திறன் மைந்தர்க ளாயினோர் நாளு
மன்பு மேதகு பரிசன ராகியே யமலன்
முன்பு நீங்கலா தொழுகினர் செய்பணி முறையால். (கரு)

மாற்ற ருஞ்சினக் கம்மைமுன் கொடுமொழி வழங்கத்
தோற்று நன்மணி யுருவமாந் தோகையர் தாங்கப்
போற்றி வந்தனை செய்துபின் னவள்பணி புரிந்தே
யாறு தொல்கருப் பத்துடன் பற்பக லமர்ந்தார். (கசு)

இகலு மாமணி மகளிர்தங் கருவினு ளிறைவற்
புகழு நந்தியங் கணத்தவர் குழவியாய்ப் போந்து
நிகரில காளைய ராகிவீற் றிருந்தனர் நெறிசேர்
சுகனை யும்படி பரமனை முன்னியே தொழுது. (கஎ)

அரத னங்களிற் றோன்றிய மங்கைய ரகட்டிற்
கருவின் வந்திடு மாடவ ரீசனைக் கருதிப
புரியும் யோகுட னிருத்தலி னற்றரும பொறையாய்ப்
பரம தாதலு முமையுடன் பரமனைப பணிந்தார். (கஅ)

இருவர் தம்மையும் பணிந்தவ ரின்றுகா றினைய
கருவி னுந்தன மின்னினி யாம்பரிக் கல்லே
மருள்பு ரிந்திடு மென்றலு மாதியங் கடவுள்
பரிவி னுமை திருமுக நோக்கியே பகர்வான். (கசு)

ஏல வார்குழற் கௌவுரி நின் செய்யகா ளிடையிற்
சாலு நூபுரத் துதித்தவ ருனதுசா பத்தாற்
சூலி னுன்றிக மெலிந்தனர் பற்பகல் சுமந்தார்
பால ரைப்பெற வினியருள் புரிகெனப் பணித்தான். (உ0)

இறைவ னிங்கிது பணித்தலு நன்றென விசையா
முறுவல் செய்துமை மாதரை நோக்கிமொய்ம் பினரைப்
பெறுதி ராலினி யென்றலு மவர்வயிற் பெயரா
துறையும் யோகுடை வீரர்க ளித்திற முணர்ந்தார். (உக)

மறத்த லில்லதோ ருணர்வுடை வீரர்கண் மற்றித்
திறத்தை நாடியே யோகுவிட் டுளமகிழ் சிறப்ப
விறத்த னீங்கிய பரம்பொரு ளருண்முறை யிறைஞ்சிப்
பிறத்த லுன்னியே முயன்றன ராயிடைப் பெயர்வார். (உஉ)

பரிபு ரந்தனின் முன்வரு மங்கையர் பரைதன்
கருணை கொண்டசொற் கேட்டலுங் கவற்சியை யகன்று
விரைவின் மேலவர் பதம்பணிந் தேத்தியே விடைகொண்
டொருவி மைந்தரை யளித்தனர் யாவரு மொருசார். (உ௩)

நந்தி தன்கண முதல்வர்க ளாகியே நணியோர்
பந்த நீங்கியே சனித்தன ரொன்றிலாப் பதின்ம
ரெந்தை யாரருள் பெயர்கொடே யிருநில வரைப்பிற்
சுந்த ரன்னிடை முகத்தவன் றோன்றிய வாபோல். (உச)

பேர வாகுவை யுடையவ னிலவல்பே ருளாற்
சூர வாகுலம் வானவர் பெருவுகை தொலைப்பா
னேர வாகுறுஞ் செம்மணிப் பாவைதன் னிடத்தில்
வீர வாகுவந் துதித்தன னுலகெலாம் வியப்ப. (உ௫)

விரள வல்லியார் தந்திசூ ரரிவியன் படையாங்
கரள வல்லிரு ளகற்றுவா னெழுந்தவெண் கதிர்போற்
றிரள வல்லிணை யனையபூண் முலையுடைத் தெய்வத்
தரள வல்லிபாற் றேன்றினன் வீரகே சரியே. (உகூ)

மக்கள் வானவர்க் கருந்துயர் புரியும்வல் லவுணர்
தொக்க வீரமா மகேந்திரப் பெருவளந் தொலையச்
செக்கர் நூபுரப் புட்பரா கத்திபாற் சிறப்பாற்
றக்க வீரமா மகேந்திரன் வந்தவ தரித்தான். (உஎ)

ஆக வத்தனிக் கடவுளும் வடவையா ரழலுஞ்
சீத ளப்புது மதியமும் வெளகுறத் திகழ்கோ
மேத கத்தமர் பாவைபால் விண்ணவர் புரியு
மாத வத்தினால் வீரமா மகேச்சுரன் வந்தான். (உஅ)

தான மாநிலத் தேவர்கண் மகிழ்வுறத் தகுவ
ரான பேரெலா முடிவுற வறந்தலை யெடுப்பக்
கானல் சேர்வயி ரீரிய மின்னிடைக் கழறகான்
மான வீரமா புரந்தர னென்பவன் வந்தான். (உகூ)

சூர ராக்கமுந் துணைவர்தம் மாக்கமுஞ் சூழுந்
தீர ராக்கமும் வானவ ரேக்கமுஞ் சிதைய
வார ராக்கமழ் கொன்றைவே ணியனரு ளதனால்
வீர ராக்கதன வந்தனன் வயிரமெல் லியல்பால். (௩0)

கரக தத்தனி மால்வரை யெடுத்தொரு கணத்திற்
புரக தத்தினை யிழைத்தவ னருளினாற் புணரிக்
குரக தத்திடைப் பைங்கனல கொம்பென வெழல்போன்
மரக தத்திபால் வீரமார்த் தாண்டன்வந் தனனே. (௩க)

மையன் மாக்கரி வாம்பரி விரவிய மணித்தேர்
வெய்ய தானவா பலிர்றுகை யிமைப்பினில் விளிய
மொய்யி னூர்த்தடு மானவன பவளமா மொழிப்போர்த
தைய றன்வயின் வலியவீ ராந்தகன் சனித்தான். (௩உ)

கந்து திததிடு வியனர மடங்கலுங் கடலின்
முந்து திததிடு மாலமும் வடவையு முரண
நந்து திததுநற் களமணிப் பாவைநற் றவத்தால்
வந்து தித்தனன் வீரதீ ரப்பெயர் வலியோன். (௩௩)

இந்த வீரரொன் பதின்மரு மீசன தருளாற்
றந்த மன்னையர் நிறங்கொடீ பொலந்துகி ருங்கி
வந்து பற்பகல் வளாதரு முறுபபொடு மடவா
ருந்தி யின்வழி நான்முகத் தண்ணல்போ லுதித்தார். (௩௪)

வேறு.

உதிதருமத் திறலவீர ரரியணைமே லம்மையுட னுறைந்த காதன்
பதமலர்கள் பணிந்தெழுவு மவாக்கண்டி யார்ப்பதியைப பரிவா னேக்கி
மதியுடையர் திறலுடையர் மானவருங் கலகதினாகம் வைமத்த ரின்னோர்
புதியரலர் நந்திதனிக் கணத்தவரென் றுன்சுருதிப் பொருளாய் நின்றான்.

தேவியது கேட்டுமைந்தர்க் கருள்புரிய வவர்க்கெல்லாஞ் சிவன்வெவ் வேறு
தாவில்சுடர் வாளுதவி வியர்ப்பில்வரு மோரிலக்கந் தனய ரோடு
நீவிர்களு மொன்றிறுங்கட் கிறைவனு கியசேயை நீங்க லின்றி
யேவலவன் பணித்தனசெய் தொழுகுதிரென் றுனவரு மிசைந்து தாழ்ந்தார்.

ஒன்பானு மிலக்கத்தோ ரோரிலக்கத் தோர்தம்மோ டொன்றிப் புல்லி
யன்பாகி யெம்பெருமான் சினகரத்தை யகலாம லங்கண் வைக
மென்பானல் புரையும்விழிச் சத்திகளொன் பதின்மர்களும் விமலக் கன்னி
தன்பாலே யிகவாம லவள்பணித்த தொழில்புரிந்து சார்த லுற்றார். (கூஎ)

ஆக திருவிருத்தம் க௦கச.

---

வசனம்.

சிவபெருமான் தமது நெற்றிக்கண்ணில் தோற்றுவித்த நெருப்புப்பொறிக ளின் வெப்பத்தை யாற்றாதவராகிய மலைமகளார் அஞ்சியோட, அவரது காற்சிலம் புகள் ஒன்றோடொன்று தாக்குண்டு அவற்றிற் பொதிந்துள்ள நவமணிகள் சிதற நின்று, திருமால் முதலிய தேவர்கள் வேண்டுகோளால் சிவபெருமான் தமது நெற் றிக்கண்களினின்றுந் தீப்பொறிகளைத் தந்து அவைகள் ஒரு குழந்தையாயிருக்கும் படி சரவணப்பொய்கைக்கனுப்பினுரென்று தெரிந்துகொண்டு, என்னிடத்தில் சிவ பெருமானது திருவருள்பெற்ற புதல்வனொருவனுதிக்காதபடி தடுத்தவர்களாகிய தேவரெல்லாருடைய மனைவிய ரெல்லாருக்கும் புதல்வர்களில்லாமற் போகும்படி சபித்தனர். இப்படிச் சபித்துவிட்டுச் சிவபெருமான் சந்நிதியடைந்து வணங்கிக் கண்களிகூர்ந்து நின்று தேவரீரது நெற்றிக்கண்ணினின்றுந் தோன்றின தீப்பொறி களின் வெப்பத்தைப் பொறுக்கமாட்டாமல் பயந்தோடினேன், எம்பெருமான் அப்பொறிகளை யகற்றிவிட்டதனுல் அச்சந்தவிர்ந்து மீட்டும்வந்து தேவரீர் சந்நிதி யையடைந்தேன் என்றுள். இதுகேட்ட சிவபெருமான் அவளைத்தன்னிடப்பக் கத்திலமர்த்திக்கொள்ள, இவர் ஓடினபோது காற்சிலம்பினின்றுந் தெறித்தமணிக ளெல்லாம் சிவபெருமான் திருமுன்னே பிரகாசித்தன. அந்த நவமணிகளில், சோ மசூரியாக்கினிகளின் உள்ளீடாய் விளங்கும் இறைவன் செயல்போல, இறைவியின் உருவங்கள்விளங்கின; அவற்றை இறைவன் வருகவென்றழைக்க, அவை யொவ் வொன்றுக் கொவ்வொரு சத்தியாக, ஒன்பதுமணிக்கு ஒன்பது சத்திகளுண்டாயி னர். அச்சத்திகள் ஒன்பதின்மரும் இறைவன் திருவடியை வணங்கி அவரிடத்தில் தமது விருப்பம்வைத்த மாத்திரத்தில், அவ்வொன்பதின்மரும், முனிவர்களுடைய பத்நிமார்போன்று விரைவில் கருப்பமடைந்தார்கள். இவையாவும் பார்வதிதேவி யார்பார்த்தனர், பார்த்து அச்சத்திகள்மேல் பெருங்கோபங்கொண்டு, நீங்கள் எம க்குமாறுபட்டதனுல், இந்தக் கருப்பத்துடனே நெடுங்கால மிருக்கக்கடவீர்களெ ன்று சபித்தனர். அச்சாபத்திற்கஞ்சின அச்சத்திகளுடைய உடம்பு வெயர்த்தன. அந்த வெயர்வையினின்றும் சூரியர்களுடைய திரள்போல இலக்கத்தொகையுள்ள வீரர்கள்வந்து தோன்றினுர்கள். இறைவன் அவர்களைநோக்கி, மைந்தர்காள்! நீங்க ளெல்லாரும், அவுணரையழித்தற்கென்றே தோன்றின கந்தசுவாமிக்குப் படைத் துணையாகக்கடவீரென்று கட்டளையிட்டருள, அவர்களும் அவ்வாறேயாகுகவென்று இறைவனைத்துதித்து அவனது சந்நிதியில் நீங்காதொழுகினர். இறைவியினுல் சபி க்கப்பட்ட சத்திகளொன்பதின்மரும் அவளுடைய குற்றேவல் செய்பவர்களாய்

மைந்தொழுகினர். இவர்கள் வயிற்றில் நந்திதேவர்கணத்தவரே குழந்தைகளா ச் சென்றணைந்து காளைப்பருவமடையும் வரையில் சுகமுனிவர்போல வயிற்றை விட்டு வெளிப்படா திருந்தார்கள். அவர்களைச் சுமக்கலாற்றாத சத்திகள் பரமசிவ னையும் பார்வதிதேவியாரையும் வணங்கித் தமது துன்பத்தை விண்ணப்பஞ்செய்ய இறைவன் இறைவியைநோக்கி, இம்மாதர்கள் உன்சாபத்தால் கருவுயிர்க்காமை யால் கருச்சுமையைச் சுமக்கலாற்றாது வருந்துகின்றனர், இனியிவர்கள் கருவுயிர்க் கும்படி கருணைசெய்யக் கடவையென்று கட்டளையிட, இறைவி புன்னகைசெய்து அம்மாதர்களை நோக்கி, இனி நீங்கள் நவவீரரைப் பெறக்கடவீரகளென்று சொல் லுதலும் அவ்வாறே அவர் நவவீரரையீன்றனர். அந்த நவவீரரும் முற்காலத்தில் நந்திதேவர் பூமியில் அவதரித்தாற்போல அவதரித்தார்கள். எவ்வாறு அவதரித்தார் களெனின், சூரனால் தேவர்கள் துன்பமநுபவிக்காதபடி முருகக்கடவுளால் தொ லைய இரத்நவல்லியினிடமாக வீரவாகுவும், தரளவல்லியினிடமாக வீரகேசரியும், பதுமராகவல்லியினிடத்து வீரமகேந்திரனும, கோமேதகவல்லியினிடத்தில் வீரம கேச்சுரனும், வயிடூரிய வல்லியினிடமாக வீரபுரந்தரனும், வச்சிரவல்லியினிடமாக வீரராக்கதனும், மரகதவல்லியிடதது வீரமார்த்தாண்டனும், பவளவல்லியினிட த்து வீராந்தகனும், இந்திரநீல வல்லியினிடத்தில் வீரதீரனும தோன்றினார்கள்.

இவ்வாறு நவவீரரும் சிவபிரானையும் உமாதேவியையும் பணிந்துநிற்க, இறை வன் இறைவியை நோக்கி, இவரோ அறிவினும ஆண்மையினும சிறந்தவர். நமது புதல்வருமாவார். நமது நந்திகணத்தவரேயாவர் என்றுசொல்லக்கேட்ட இறைவி யானவள் அம்மைந்தர்க்கருள்செய்ய, பரமசிவன் அவர்களெல்லாருக்கும் சுடர்வாள் கொடுத்து, இலக்கத்தவரோடு நீங்களும் உங்களுக்கிறைவனாகிய சண்முகனைச் சிறிதும நீங்காது அவனது குற்றேவல் செய்தொழுகுவீராகவென்று கட்டளையிட, அப்படியே நவவீரரும் இலக்கத்தவரோடுசேர்ந்து முருகவேளின் ஆலயத்தருகே யிருக்க, நவசத்திகளும் உமாதேவியை நீங்காது அவரதுகுற்றேவல் செய்தொழுகு வாராயிருந்தனர்.

துணைவர்வருபடலம் முற்றிற்று.

## சரவணப்படலம்.

ஏற்ற மானவ ரொன்றொழி பதின்மரோ டிலக்கர்
தோற்ற மெய்திய தன்மையை யித்துணை சொற்று
மாற்றல் சேர்புனற் சரவணத் தடந்தனி லறுவர்
போற்ற வைகினோன் கைலையிற் புகுந்தமை புகல்வாம். (க)

தருப்ப மிக்குளார் காணுறாத் தாவில்சீர் வெள்ளிப்
பொருப்பி லுற்றிடு பரம்பொருள் கருணையாற் பொறைகூர்
கருப்ப முற்றுயிர் முழுவதுந் தந்திடுங் கன்னிப்
பருப்ப தக்கொடிக் கவ்வழி யினையன பகர்வான். (உ)

பொம்ம லுற்றிடு நான்முக னாதியோர் புந்தி
விம்ம லுற்றிட முந்துநம் விழியிடைத் தோன்றிச்
செம்ம லர்ப்பெருஞ் சரவணத் திருந்தவின் சேயை
யிம்ம லைக்கணே யுய்க்குதும் வருகென விசைந்தான். (௩)

### வேறு.

செம்புலி யதளினான் செப்பிற் றோர்தலு
மம்பிகை யுவகையோ டன்பு கொண்டெழீஇ
நம்பெரு மதலையை நாங்கொண் டேகுது
மெம்பெரு முதல்வநீ யெழுதி யாலென்றாள். (௪)

கொம்மைவெம் முலையினாற் குறிப டுத்திய
வம்மையீ துரைத்துழி யருளி னாலெழா
மைம்மலி மிடறுடை வான நாயக
னிம்மென வவளொடு மேற தேறினான். (௫)

நந்தியி னொருத்தமே னங்கை யாளொடு
நந்திவந் திடுதலு நாக மேலுளார்
நந்திய வினைத்தொகை நந்திற் றென்றிடா
நந்திதன் கணத்தொடு நண்ணிப் போற்றினார். (௬)

அந்தமில் விடத்தினை யடக்கு கையுடைச்
சுந்தர னாதியாந் தொல்க ணத்தினோ
ரெந்தைதன் னுருவுகொண் டிருந்த மேலவர்
வந்திரு மருங்குமாய் வழுத்தி யீண்டினார். (௭)

ஆன்முக நந்தியெம் மடிக ளுய்த்திடத்
தேன்முக நறுமலர் சிதறிச் செங்கையாற்
கான்முறை வணங்கியே கமலக் கண்ணவ
னான்முகன் மகபதி பிறரு நண்ணினார். (௮)

சல்லரி வயிர்துடி தடாரி சச்சரி
கல்லென விரங்குறு கரடி காகளஞ்
செல்லுறழ் பேரிகை திமிலை யாதியாம்
பல்லிய மியம்பின பாரி டங்களே. (௯)

### வேறு.

வேத நான்குங் குடிலையும் வேறுளா
பேத மாய கலைகளும் பேரிசை
நாத மோடு நணுகின விஞ்சையர்
கீதம் யாவு மிசைத்துக் கெழுமினார். (௧௦)

வள்ளல் வேணியின் மாமதி யீண்டியே
பிள்ளை வெண்பிறை யைப்படர் பேரராக்
கொள்ளு மென்று குறித்தது போற்றல்போல்
வெள்ளி வெண்குடை வெய்யவ ரேந்தினார். (௧௧)

சகர ரென்னுந் தலைவர்க டம்வழிப்
பகிர தப்பெயர்ப் பார்த்திவன் வேண்டலு
நிகரி லோனரு ணீத்தத் தொழுக்கெனப்
புகரில் சாமரம் பூதர்கள் வீசினார். (௧௨)

சீறு மால்கரி சீயம் வயப்புலி
யேறு பூட்கையி ரலையெண் கேழுதல்

வேறு கொண்ட வியன்முகச் சாரதர்
நூறு கோடியர் நொய்தெனச் சுற்றினர். (கரு.)

இமிலு டைப்பல வேற்றிருங் கேதனந்
திமில விண்புன லக்கிச் சிதறுவ
வமல னைத்தொழு தாற்றுமெய் யன்பினுங்
கமல முய்த்திடுங் காட்சியர் போன்றவே. (கச)

அன்ன காலை யகிலமு மீன்றருள்
கன்னி தன்னொடு காமர்வெள் ளேற்றின்மேன்
மன்னி வைகு மதிமுடி வானவன்
றன்ன தாலயத் தைத்தணந் தேகினன். (கரு)

வேறு.

தன்ன தாலய நீங்கியே கைலையைத் தணந்து
பொன்னி னீடிய விமயமால் வரைபபுறத் தேகி
யன்ன மாடுறுஞ் சரவணப் பொய்கையை யடைந்தா
னென்னை யாளுடை நாயக னிறைவியுந் தானும். (கசு)

பிறையு லாஞ்சடைத் தேவனு மவன்றனைப் பிரியா
துறையு மாதுமோ ராறுவகை யுருவுகொண் டுற்ற
சிறுவ னீர்மையை நோக்கியே திருவருள் செய்து
நிறையும் வான்புனற் பொய்கையங் கரையிடை நின்றார். (கஎ)

முண்ட கச்சர வணந்தனின் மூவிரு வடிவங்
கொண்டு லாவிவீற் றிருந்திடு மொருபெருங் குமர
னண்டர் நாயகன் றன்னுட னகிலமீன் றாளைக்
கண்டு மாமுக மலர்ந்தனன் றனதுளங் களித்தான். (கஅ)

அந்த வேலையிற் கௌரியை நோக்கியெம் மைய
னிந்த நின்மகன் றனைக்கொடு வருகென வியம்ப
சுந்த ரங்கெழு விடையினுந் துண்ணென விழிந்து
சிந்தை கொண்டபே ராதரந் தன்னொடுஞ் சென்றாள். (கக)

சரவ ணந்தனிற் றனதுசே யாறுருத் தனையு
மிருக ரங்களா லன்புட னெடுத்தனள் புல்லித
திருமு கங்களோ ராறுபன் னிருபுயஞ் சேர்ந்த
வுருவ மொன்றெனச் செய்தன ளுலகமீன் றுடையாள். (உ0)

எந்தை சத்திக ளுயிரெலா மொடுங்குறு மெல்லை
முந்து போலவொன் றாகியே கூடிய முறைபோ
லந்த மில்லதோர் மூவிரு வடிவுமொன் றாகிக்
கந்த னென்றுபேர் பெற்றனன் கௌரிதன் குமரன். (உக)

முன்பு புல்லிய குமரவேண் முடிதொறு முயிர்த்து
மின்பி றங்கிய புறந்தனை நீவலும் விமலை
தன்பெ ருந்தனஞ் சுரந்துபால் சொரிந்தன தலையா
மன்பெ னப்படு கின்றதித் தன்மையே யன்றோ. (உஉ)

ஆதி நாயகன் கருணையா யமலமாய்ப் பரம
போத நீரதா யிருந்ததன் கொங்கையிற் பொழிபா

வேதி லாததோர் குருமணி வள்ளமீ தேற்றுக்
காதன் மாமகற் கன்பினா லருத்தினாள் கௌரி. (௨௩)

கொங்கை யூறுபா லருத்திய குமரனைக் கொடுசென்
றெங்க ணாயகன் முன்னரே யிறைஞ்சுவித் திடலு
மங்கை யாலவன் றனையெடுத் தகலமே லணைத்துப்
பொங்கு பேரரு ணீர்மையா லிருத்தினன் புடையில். (௨௪)

அருத்தி தந்திடு குமரவே ளொருபுடை யமரப்
பெருத்த மன்னுயிர் யாவையு முன்னரே பெற்ற
வொருத்தி தன்னையுங் கையினா லொய்யென வாங்கி
யிருத்தி னான்றன திடந்தனி லெம்மையா ளிறைவன். (௨௫)

ஏல வார்குழ லிறைவிக்கு மெம்பிரான் றனக்கும்
பால னாகிய குமரவே ணடுவுறும் பான்மை
ஞால மேலுறு மிரவொடு பகலுக்கு நடுவாய்
மாலை யானதொன் றழிவின்றி வைகுமா றொக்கும். (௨௬)

வேறு.

விடையுற்றிடு பரமற்குமவ் விமலைக்கும் விறற்சே
யிடையுற்றது கண்டாரயன் மகவான்முத லிமையோர்
கடையுற்றிடு கடலாமெனக் கல்லென்றிரைத் தனுகாப்
புடையுற்றன ரெதிருற்றனர் புறனுற்றனர் புகழ்வார். (௨௭)

காமாரிதன் விழிதந்திடு கழிகாதல வொழியாத்
தோமாரியல் புளனாகிய சூரன்கொடுந் தொழிலால்
யாமாரினு மிழுக்குற்றன மெமையாளினி யென்னாப்
பூமாரிகள் பொழிந்தார்பணிந் தெழுந்தாசிகள் புகன்றார். (௨௮)

வாரற்புத முறவீங்கிய வன்னத்தன முருந்தின்
மூரற்பவ ளச்சேயிதழ் முழுமாமதி வதனத்
தாரற்பெயர் பெறுமங்கைய ரதுகாலையி லரன்முன்
பேரற்பொடு பணிந்தேயெழப் பெருந்தண்ணளி புரிந்தான். (௨௯)

கந்தன்றனை நீர்போற்றிய கடனாலிவ னுங்கண்
மைந்தன்னெனும் பெயராகுக மகிழ்வாலெவ ரேனு
நுந்தம்பக லிடையின்னவ னோன்றாள்வழி படுவோர்
தந்தங்குறை முடித்தேபரந் தனைநல்குவ மென்றான். (௩0)

என்னாவருள் புரிகின்றுழி யிமயத்தவள் சேயைத்
தன்னாரரு ளொடுசென்றெதிர் தழுவித்தனத் திழிபால்
பொன்னார்மணி வள்ளத்துமுன் பூரித்தருத் திடவே
யன்னாண்முலை யமுதுக்கலை யாறொத்தொழு கினவே. (௩௧)

வானார்சுர நதிபோற்சர வணத்தூடவை புகலுந்
தூநான்மறை கலைகண்டவன் முதல்வந்திடு துணைவ
ரானாவறு சிறுவோர்தமை யளித்தோன்சபித் திடலான்
மீனாயவண் வதிகின்றவர் புகும்பாலினை மிசைந்தார். (௩௨)

கயிலைக்கிறை யவண்மெய்த்தன கலசத்தினு முகுபா
லயினுற்றிடு பொழுதத்தினி லறமிற்புடை பெயரு

மயிலைத்தனு வொருவித்தவ வடிவுற்றெழு தருவார்
துயிலுற்றுணர் பவரொத்தனர் மயலற்றிடு தொடர்பால். (௬௪)

அன்றாறு வருமாயெழுந் தகன்பொய்கைவிட் டமலன்
முன்னுய்வணங் கினர்ம்பாற்றனு முனிமைந்தர்கள் பரங்கோ
டென்னுவுரை பெறுகுன்றிடை யிருந்தேதவம் புரிமின்
பின்னுண்மிசை யிவ்வின்வந்தருள் செயுமென்றருள் செய்தான். (௬௫)

நன்றாலெனத் தொழுதன்னவர் நாதன்விடை பெறறே
சென்றாருடு மடவாமொரு திருமாலயன் முதலா
னின்றாதமக் கருளசெய்தவா னிலயம்புக வருளிப்
பொன்றாழ்சடை யினன்வெள்ளியம் பொருப்பின்றலை புக்கான். (௬௬)

அடையார்புர மெரிசெய்திடு மமலன்கயி லையிற்போய்
விடையூர்தியி னிழிந்தேதனி விறற்சேயொடும் வெற்பின்
மடவாளொடு நடவாடபொலன் மாமந்திரத் தலைவயி
னிடையாரரி யணைமீமிசை யிருந்தானருள் புரிந்தே. (௬௭)

சேயோனெனு முன்னோன்றனைச் சிலம்பின்வரு மொன்பான்
மாயோருத வியமைந்தரு மறமுள்ள விலக்கத
தூயோர்களுந் தொழுதேமலர் தூவிப்பணிந் தேத்தி
யாயோர்தம துயிரேயென வவனைக்குறித் தணைந்தார். (௬௭)

ஆக திருவிருத்தம் ௪௦௬௪.

---

வசனம்.

இதுவரையும் இலக்கத்தவரும் நவவீரரும் தோன்றிய வரலாறு சொன்னோம், இனிச்சரவணப் பொய்கையில் கந்தவேள் கார்த்திகைமுதலிய அறுவரும் தம்முலை யூட்ட வுண்டு திருவிளையாடல்செய்யும் வரலாற்றைச் சொல்லுவோம்.

சிவபெருமான் உமாதேவியைநோக்கி, பிரமன் முதலிய தேவர்களுடைய துன்பமொழியும் பொருட்டுச் சரவணப்பொய்கையில் அவதரித்த நம்புதல்வனு கிய கந்தவேளையழைத்துக்கொண்டு வருவோமென்று செ[illegible]லுதலும் இறைவியும் அப்படியேபோய் அழைத்துவருவோம் வாரும் என்றெழுந்தனள். உடனே இறைவி யோடு நந்திவாகநமேறிக் கைலையைநீங்கிச் சரவணப்பொய்கைக்கரையைச்சே ந்து உன்மகனைக் கொண்டுவாவென்று இறைவிக்குச்சொல்ல, அவள் அந்தப் பொய்கையிற்போய்த் தன்புதல்வனாகிய சண்முகனுடைய ஆறுதிருவுருவத்தையும் தன்னிருகையால் அன்போடெடுத்துத் தழுவி, ஆறுதிருமுகங்களும் பன்னிரண்டு கைகளும் சேர்ந்த ஒருதிருவுருவாகச்செய்தனள். பின்பு அக்குழந்தையையெடுத்து உச்சிமோந்து முதுகுதடவிநிற்கையில், அன்பின் மிகுதியால் இறைவியின் ஸ்தனங் கள் பால்சுரந்தன. அப்பொழுது அந்தப்பாலை ஒருமணிக்கிண்ணத்திலேற்றுத் தன் குமாரனுக்குண்பித்துக் கைக்கொடுசென்று, இறைவனை வணங்குவித்து பிறகு வடு த்து மார்போடணைத்துப் பெருங்கருணையால் இடையேயிருத்தினர். குமரவேள் ஒருபக்கத்திலிருக்க, இறைவியை ஒருகையால் வளைத்துத் தமது இடப்பாகத்தி லிருத்திக்கொண்ட காலத்தில் இறைவிக்கும் இறைவனுக்கும் நடுவேயமர்ந்த தன்

மையானது பகலிரவுகளுக்கிடையே மாலைக்காலந் தோன்றிய தன்மைபோலிருந்தது. இம்மூர்த்தத்தையே சோமாஸ்கந்தமென்றுசொல்லுவர். இப்படி யமர்ந்திருந்த சோமாஸ்கந்தரை பிரமன் முதலிய தேவரெல்லாருங் கண்களிகூரநோக்கி, அறுமுகக் கடவுளே! சூரன் முதலியோரால் மிகவும் துன்பப்பட்டோம், அவ்விடரொழித்து இனியெங்களைக் காப்பாற்றவேண்டுமென்று பூமாரிபொழிந்து வாழ்த்தினர். அந்தச் சமயத்தில் கார்த்திகை முதலிய பெண்கள் அறுவரும்வந்து இறைவனைப்பணிந்து நின்றனர். இறைவன் அவர்களைநோக்கி, உங்களால் வளர்க்கப்பட்டமையால் இப்புதல்வனுக்குக் கார்த்திகேயன் என்னும் பெயர்வழங்கும். உங்கள் நாளாகிய கிருத்திகையில் இவனைப்பூசித்து வணங்கினோர்க்கு அவர்விரும்பினவற்றைத் தந்தருளுவோம் என்று வரங்கொடுத்தருளினன். அப்பொழுது இறைவி அப்புதல்வனை அன்போடெடுத்தலும், பரஞானம் அபரஞானம் என்னும் தனங்களினின்றும் பெருகின பாலானது கங்கையாறுபோலச் சரவணப்பொய்கையிற் பாய்தலும், அதில் சாபத்தால் மீனுருவாயிருந்த பராசரமுனி புத்திரர் அறுவரும் அந்தப்பாலையுண்டு தமது சாபமொழிந்து பழையபடியே முனிவருருக்கொண்டு பொய்கையை நீங்கி, எங்களுக்கு மெய்ஞ்ஞானோபதேசம் செய்தருளவேண்டுமென்று இறைவனைப் பிரார்த்திக்க, அவர்களைநோக்கி, நீங்கள் திருப்பரங்குன்றைச்சேர்ந்து தவஞ்செய்யுங்கள், இம்மைந்தன் அங்குவந்து உங்களுக்கு மெய்ஞ்ஞானம் போதிப்பனென்றருளிச்செய்ய, அவர்களும் விடைபெற்றுப் போனார்கள். இறைவனும் பிரமன் முதலியோரை விடைதந்தனுப்பித் தாமும் இறைவியோடும் குமரவேளோடும் கைலையையடைந்து வீற்றிருந்தனன். அப்பொழுது இலக்கத்தொன்பதின்மரும்வந்து கந்தவேளைத் திருவடிதொழுது அவரைச் சூழ்ந்திருந்தனர், இதுநிற்க.

சரவணப்படலம் முற்றிற்று

## திருவிளையாட்டுப்படலம்.

அனந்தரம தாகவுமை யம்மையொடு பெம்மா
னனந்தலையில் வைகியுறலுங்கொள்குமரேச
னினங்கொடு தொடர்ந்தவிளை யாரொடு மெழுந்தே
மனங்கொளரு ணீர்மைதனி லுடலை மதித்தான். (க)

தட்டையொடு கிங்கிணி பூங்கழல் சதங்கைகள் சிலம்பக்
கட்டழகு மேயவரை ஞாண்மணி கறங்க
வட்டமணி குண்டல மதாணிநுதல் வீர
பட்டிகை மினக்குமர னுடலபயில் கின்றான். (உ)

மன்றுதொ றுலாவுமலர் வாவிதொ றுலாவுந்
துன்றுசிறு தென்றறவழ் சோலைதொ றுலாவு
மென்றுமுல வாதுலவும் யாறுதொ றுலாவுங்
குன்றுதொ றுலாவுமுறை யுங்குமர வேளே. (ங)

குளத்தினுல வுந்நதி குறைந்திடு திருத்திக்
களத்தினுல வுங்கிரைகொள் கந்துடை நிலைத்தாங்

தளத்தினுல வும்பனவர் சாலையுல வும்மென்
னுளத்தினுல வுஞ்சிவ னுமைக்கினிய மைந்தன். (௪)

இந்துமுடி முன்னவ னிடந்தொறு முலாவுந்
தந்தையுடன் யாயமர் தலங்களி னுலாவுங்
கந்தமலர் நீபமுறை கண்டொறு முலாவுஞ்
செந்தமிழ் வடாதுகலை சேர்ந்துழி யுலாவும். (௫)

மண்ணிடை யுலாவுநெடு மாதிர முலாவு
மெண்ணிடை யுறுத்தட லெங்கணுமு லாவும்
விண்ணிடை யுலாவுமதி வெய்யவ னுடுக்கோள்
கண்ணிடை யுலாவுமிறை கண்ணில்வரு மண்ணல். (௬)

கந்தருவர் சித்தர்கரு டத்தொகைய ரேனோர்
தந்தமுல காதிய தலந்தொறு முலாவு
மிந்திர னிருந்ததொல் லிடந்தனி லுலாவு
முந்துதவர் வைகுமுல கந்தொறு முலாவும். (௭)

அங்கமல நான்முக னரும்பத முலாவு
மங்கல நிறைந்ததிரு மால்பத முலாவு
மெங்கள் பெருமாட்டித னிரும்பத முலாவுந்
திங்கண் முடிமேற்புனை சிவன்பத முலாவும். (௮)

இப்புவியி லண்டநிரை யெங்கணு முலாவு
மப்புவழ லூதைவெளி யண்டமு முலாவு
மொப்பில்புவ னங்கள்பிற வுள்ளவு முலாவுஞ்
செப்பரிய வோர்பர சிவன்றனது மைந்தன். (௯)

வேறு.

இருமூவகை வதனத்தொடு மிளையோனெனத் திரியு
மொருமாமுக னொடுசென்றிடு முயர்காளையி னுலவும்
பெருமாமறை யவரேயென முனிவோரெனப் பெயருந்
தெரிவார்கணை மறவீரரிற் றிரிதந்திடுஞ் செவ்வேள். (௧௦)

காலிற்செலும் பரியிற்செலுங் கரியிற்செலுங் கடுந்தேர்
மேலிற்செலுந் தனியாளியின் மிசையிற்செலுந் தகரின்
பாலிற்செலு மானத்திடை பரிவிற்செலும் விண்ணின்
மாலிற்செலும் பொருசூரொடு மலையச்செலும் வலியோன். (௧௧)

பாடின்படு மணியார்த்திடும் பணைமென்குழ லிசைக்குங்
கோடங்கொலி புரிவித்திடுங் குரல்வீணைகள் பயிலு
மீடொன்றிய சிறுபல்லிய மெறியும்மெவ ரெவரு
நாடும்படி பாடுங்களி நடனஞ்செயு முருகன். (௧௨)

இன்னேபல வுருவுங்கொடி யாண்டுங்குமரேச
னன்னேயமொ டாடுற்றுழி நனிநாடினள் வியவா
முன்னேயுல கீனையீன்றவண் முடிவின்றுறை முதல்வன்
பொன்னேர்கழ லிணைதாழ்ந்தனள் போற்றிப்புகல் கின்றாள். (௧௩)

கூடுற்றநங் குமரன்சிறு குழவிப்பரு வத்தே
யாடற்றொழி லெனக்கற்புத மாகும்படவுன் போல்வார்

கேடிற்பிற ரிலைமாயையி னினைநேர்தரு மனையான்
பிடிற்றிடு நெறிதன்னையெம் பெருமானமொழி கென்றாள். (கச)

அல்லார்குழ லவளின்னண மறியார்களின் வினவ
வொல்லாபுர மடுகண்ணுத லுன்றன்மக னியல்பை
யெல்லாவுயி ரகளுமுய்ந்திட வெமைநீகட வினையா
னல்லாயிது கேணமோவென வருளாலிவை நவில்வான். (கரு)

வேறு.

ஈங்கன நமது கண்ணி னெய்திய குமரன் கங்கை
தாங்கினள கொண்டு சென்று சரவணத் திடுத லாலே
காங்கெய னெனபபேர் பெற்றான் காமர்பூஞ் சரவ ணத்தின்
பாங்கரின் வருத லாலே சரவண பவனென் றானன். (கசு)

தாயென வாரல்போர்ந்து தனங்கொள்பா லருத்த லாலே
யேயமீதார் காரத்தி கேய னென்றொரு தொலம்பா பெற்றான்
சேயவன் வடிவமாறுந் திரட்டிநீ யொன்றாச செய்தா
யாயத னாலே கந்த னமெனு நாமம் பெறறான். (கஎ)

நன்முக மிருமூன் றுண்டா னமக்கவை தாமே கந்தன்
றன்முக மாக யுற்ற தாரகப் பிரம் மாகி
முன்மொழி கின்ற நந்த மூவிரண் டெழுத்து மொன்று
யுன்மக னமத் தோரா றெழுத்தென வுறற வன்றே. (கஅ)

ஆதலி னமது சத்தி யறுமுக னவனும யாமும்
பேதக மின்றா னம்போற பிரிவிலன யாண்டு நின்று
னேதமில் குழவி போலவான் யாவையு முணர்ந்தான் சீரும்
போதமு மழிவில் வீடும் போற்றினார்க் கருள வல்லான். (கக)

மேலினி யனைய செவ்வேள் விரிஞ்சனைச் சுருதிக் கெல்லா
மூலம தாகி நின்ற மொழிப்பொருள் வினவி யன்னான்
மாலுறச் சென்னி தாக்கி வன்சிறைப் படுத்தித தானே
ஞாலமன் னுயிரை யெலலா நலகியெ நண்ணும பன்னாள். (உ0)

தாரகன் றன்னைச் சியத் தடம்பெரு முகததி னானைச்
சூரபன் மாவை யேனை யவுணரைத தொலைவு செய்தே
யாரணன் மகவா னேனை யமரராக ளிடுக்க ணீக்கிய
பேரருள புரிவ னின்சேய் பின்னாநீ காண்டி யென்றான். (உக)

என்றது மினையோன் செய்கை யெப்பெரு மாட்டி கேளா,
நன்றென மகிழச்சி கொண்டு நனுகலு முலக மெல்லாஞ்
சென்றரு ளாடல செய்யுந் திருததகு குமரன் பின்ன
ரொன்றொரு விளையாட டுள்ளத் துன்னியெ புரித லுற்றான். (உஉ)

குலகிரி யனைத்து மோர்பாற் கூட்டிடு மவற்றைப பின்னர்த்
தலைதடு மாற்ற மாகத் தரையிடை நிறுவு மெல்லா
வலைகட றனையு மொன்றா வாக்குறு மாறி வெற்பைப்
பிலனுற வழுந்துங் கங்கைப பெருநதி யடைகத மன்றே. (உரு)

இருள்கெழு பிலத்துள் வைகு மெண்டொகைப் பணியும் பற்றிப்
பொருள்கெழு மேரு வாதி யடுக்கலிற் பூட்டி வீக்கி

...ருள்செழு குமர வள்ள லாவிகட் கூறின் றாக
...ருள்கெழு சிறுதே ராக்கொண் டொல்லென வுருட்டிச் செல்லும். ( )

ஆசையங் கரிக டம்மை யங்கைகொண் டொன்றோ டொன்று
பூசல்செய் விக்கும் வானிற் போந்திடுங் கங்கை நீராற்
காய்சின வடவை மாற்றுங் கவின்சிறைக் கலுழ னோடு
வாசுகி தன்னைப் பற்றி மாறுகல் விளைக்கு மன்றே. (௨௫)

பாதல நிலயத் துள்ள புயங்கரைப் படியிற் சேர்த்திப்
பூதல நேமி யெல்லாம் புகுந்திடப் பிலத்தி னுய்க்கு
பாதவ முதல்வன் றன்னை யவிர்மதிப் பதத்தி லோச்சுஞ்
சீதள மதியை வெய்யோன் சென்னெறிப் படுத்துச் செல்லும். (௨௬)

எண்டிசை புரந்த தேவ ரிருந்தொல் பதங்க ளெல்லாம்
பண்டுள திறத்தி னீங்கப் பறித்தனன் பிறழ வைக்குங்
கொண்டலி னிருந்த மின்னின் குழுவுட னுருமுப் பற்றி
வண்டின முரறு செந்தண் மாலைசெய் தணியு மன்றே. (௨௭)

வெய்யவர் மதிகோ ளேனோர் விண்படர் விமானந் தேர்கண்
மொய்யுறப் பிணித்த பாச முழுவதுந் துருவ னென்போன்
கையுறு மவற்றில் வேண்டுங் கயிற்றினை யிடைக்க ணீர்ந்து
வையகந் திசைமீச் செல்ல வானியில் விடுக்கு மைந்தன். (௨௮)

வடித்தவிர் விசும்பிற் செல்லும் வார்சிலை யிரண்டும் பற்றி
யுடற்றிரள் பலகோ ளின்ன வுண்டையாக் கொண்டு வானோர்
முடித்தலை யுரந்தோள் கண்ட முகம்படக் குறியா வெய்தே
யடற்றனு விஞ்சை காட்டு மாறிரு தடந்தோ ளண்ணல். (௨௯)

இத்திற முலகந் தன்னி லியபரோ டும்ப ரஞ்சிச்
சித்தமெய் தளர்த லன்றிச் சிதைவுறு வகைமை தேர்ந்து
வித்தக வெண்ணி லாடல் வியப்பொடு புரிந்தா னாவி
முத்தர்தம் விழியி னன்றி முன்னுறா விமல மூர்த்தி. (௩௦)

ஆயது காலை ஞாலத் தவுணர்க ளதனை நோக்கி
யேயிது செய்தார் யாரே யென்றுவிம் மிதரா யெங்க
ணாயகன் வடிவந் தன்னை நனிபெரும் பவத்துட் டங்குந்
தீயவ ராத லாலே கண்டிலா தியக்க முற்றார். (௩௧)

சிலபகல் பின்னும் வைகுந் திறத்திய லாயுள் கொண்டே
யுலகினி லவுணர் யாரு முறைதலி னவர்க்குத் தன்மெய்
நிலைமைகாட் டாது செவ்வே ணிலாவலு நேடி யன்னோர்
மலரயன் றெரியா வண்ணன் மாயமே யினைய தென்றார். (௩௨)

ஆயதோர் குமரன் செய்கை யவனியின் மாக்கள் காணாத்
தீயன முறையால் வெங்கோல் செலுத்திய வவுண ரெல்லா
மாய்வது திண்ணம் போலு மற்றதற் கேது வாக
மேயின விம்மி தங்கொ லிதுவென வெருவ லுற்றார். (௩௩)

புவனியின் மாக்க ளின்ன புகறலுந் திசைகாப் பாளர்
தவனனே மதிய மேனோர் சண்முகன் செய்கை நாடி

யவனுரு வதனைக் காணு ரவுணர்தம் வினையு மன்று
லெவரிது செய்தார் கொல்லென் றிரங்கினர் யாருங் கூடி. (௩௪)

தேருறு மனைய தேவர் தேவர்கோன் சிலவ ரோடு
மேருவி லிருந்தான் போலும் வேதனு மங்கண் வைகு
மாருமங் கவாபா லேகி யறைகுது மென்று தேறிச்
சூரர்கோன் றனக்கு மஞ்சித் துயரொடு பெயர்த லுற்றார். (௩௫)

வடவரை யும்பர் தன்னில் வானவ ரானோ ரேகி
யடைதரு கின்ற காலை யாறுமா முகங்கொண் டுள்ள
கடவுள்செய் யாட னோக்கி யவனுருக் காணு றாகி
யிடருறு மனத்தி னோடு மிருந்தவிந் திரனைக் கண்டார். (௩௬)

அரிதிரு முன்ன ரெய்தி யடிதொழு தங்கண் வைகி
விரிகட லுலகின் வானின் மேவுதொன் னிலைமை யாவுந்
திரிபுற வெவரோ செய்தார் தெரிந்தில மவரை யீது
புரிகல ரவுணர் போலும் புகுந்தவிப புணர்ப்பென் னென்றார். (௩௭)

வானவ ரிறைவ னன்னோர் மாற்றமங் கதனைக் கேளா
யானுமிப் பரிசு நாடி யிருந்தன னிறையுந் தேரே
னனதை யுணர வேண்டி னனைவரு மேகி யம்பொன்
மேனிகொள் கமலத் தோனை வினவுது மெழுதி ரென்றான். (௩௮)

எழுதிரென் றுரைத்த லோடு மிந்திரன் முதலா வுள்ளோர்
விழியிடைத் தெரிய வன்னோர் மெய்த்தவம் புரிந்த நீரா
லழிவற வுலகி லாடு மறுமுகன் வதன மொன்றிற்
குழவிய தென்ன வன்ன குன்றிடைத் தோன்றி னானால். (௩௯)

வாட்டமொ டமரர் கொண்ட மயக்கறத் தனது செய்கை
காட்டிய வந்தோன் மேருக் கனவரை யசைத்துக் கஞ்சத்
தோட்டிதழ் கொய்து சிந்துந் துணையென வுயர்ந்த செமபொற்
கோட்டினைப் பறித்து வீசிக் குலவினன் குழவி யேபோல். (௪௦)

தோன்றிய குமரன் றன்னைச் சுரபதி சுரரா யுள்ளோ
ரான்றதோர் திசைகாப் பாள ரனைவருந் தெரிகுற் றன்னோ
வான்றரை திரிபு செய்தோன் மற்றிவ னாகு மென்னாக்
கான்றிரி யரியை நேரும விலங்கெனக் கலங்கிச சொல்வார். (௪௧)

வேறு.

நொய்தாங் குழவி யெனக்கொள்கில நோன்மை நாடின்
வெய்தா மவுணக் குழுவோரினும வெய்யன் யாரு
மெய்தாத மாய முளனாலிவன் றன்னை வெம்போா
செய்தாடல் கொள்வ மிவணென்று தெரிந்து சூழ்ந்தார். (௪௨)

சூழுற்ற வெல்லை யிமையோர்க்கிறை தொல்லை நாளிற்
காழுற்ற தந்த மற்றேவர்க்கெண் காட்டி யீசன்
கேழுற்ற தாளர்ச் சனைசெய்து கிடைத்து வைகும்
வேழத்தை யுன்ன வதுவந்தது மேரு வின்பால். (௪௩)

தந்தங்கள் பெற்று வருகின்ற தனிக்க ளிற்றின்
கந்தந் தனிற்போந் தடல்வச்சிரங் காம ரொள்வாள்
குந்தஞ் சிலைகொண் டிகல்வெஞ்சமர்க் கோல மெய்தி
மைந்தன் றனைவா னவரோடும் வளைந்து கொண்டான். (சச)

வன்னிச் சுடர்கால் விசையோடு மரீஇய பாங்கிற்
பன்னற் படுகுன்ற வைசூழ்தரு பான்மை யேபோ
லுன்னற் கரிய குமரேசனை யும்பர் கோனு
மின்னற் படுவா னவரும்மிகல் செய்ய வுற்றார். (சரு)

தண்ணார் கமலத் துணைமாதரைத் தன்னி ரண்டு
கண்ணா வுடைய வுமையாடரு கந்தன் வானோர்
நண்ணா ரெனச்சூழ் வதுநோக்கி நகைத்தி யாது
மெண்ணாது முன்போற் றனதாட லிழைத்த வேலை. (சசு)

எட்டே யொருபான் படைதம்முட் ளொறிவ வெல்லாத்
தொட்டே கடிதிற் படைதன்னொடுந் தூர்தத லோடு
மட்டேறு போர்திற் படுகின்றழி வச்சி ரத்தை
விட்டே தெழித்தான் குமரன்மிசை வேள்வி வேந்தன். (சஎ)

வயிரத்தனி வெம்படை யெந்தைதன் மார்பு நண்ணி
யயிரிற் றுகளாய் விளிவாக வதனை நோக்கித்
துயரத் தழுங்க விமையோரிறை தொல்லை வேழஞ்
செயிருற் றியம்பி முருகேசன்முன் சென்ற தன்றே. (சஅ)

செல்லுங் கரிகண் டுமையாண்மகன் சிந்தை யாலோர்
வில்லுங் கணைகள் பலவும்விரை வோடு நல்கி
யொல்லென் றிடநா ணொலிசெய்துயர் சாபம வாங்கி
யெல்லொன்று கோலொன் றதனெற்றியு ளோக வுய்த்தான். (சகூ)

அக்கா லயில்வேள் செலுத்துங்கணை யண்டர் தம்மின்
மிக்கா னயிரா வதநெற்றியுண் மேவி வல்லே
புக்காவி கொண்டு புறம்போதப் புலம்பி வீழா
மைக்கார் முகிலச் சுறவேயது மாண்ட தன்றே. (ருo)

தன்னேர் களிறு மடிவெய்தலுந் தான வேந்த
னன்னே வெனவே யிரங்காவயல் போகி நின்று
மின்னே டுறழ்தன் சிலைதன்னை வெகுண்டு வாங்க
முன்னோன் மதலை யொருகோலவன் மொய்ம்பி லெய்தான். (ருக)

கோலொன்று விண்ணோர்க் கிறைமேற்குமரேச னுய்ப்ப
மாலொன்று நெஞ்சன் வருந்திப்பெரு வன்மை சிந்திக்
காலொன்று சாபத் தொழினீத்தனன் கையி லுற்ற
வேலொன் றதனைக் கடிதேகுகன் மீது விட்டான். (ருஉ)

குந்தப் படையோர் சிறுபுற்படு கொள்கை யேபோல்
வந்துற் றிடவற் புதமெய்தினர் மற்றை வானோர்
கந்தக் கடவுள் சிலையிற்கணை யொன்று பூட்டித்
தந்திக் கிறைவன் றடம்பொன்முடி தள்ளி யார்த்தான். (ருங)

தாவசந் தனையோர் கணைகொண்டு துணித்து மார்பிற்
கவசந் தனையோர் கணையாற்றுகள் கண்டு விண்ணோ
னவசம் படவேழ் கணைதூண்டின னாழி வேண்டிச்
சிவசங் கரவென் றரிபோற்றிய செம்மன் மைந்தன். (நச)

நீங்கா கியவோ ரெழுவாளியுஞ் செல்ல மார்பி
னோங்கார மிக்க மகவானயர் வாகி வீழ்ந்தா
னோங்கார மேலைப் பொருண்மைந்தனை யும்ப ரேனோர்
பாங்காய் வளைந்து பொருதார்படு கின்ற தோரார். (நரு)

இவ்வா றமரர் பொருமெல்லையி லீசன் மைந்தன்
கைவார் சிலையைக் குனித்தே கணை நான்கு தூண்டி
மெய்வா ரிதிகட் கிறைவன்றனை வீட்டி மற்று
மைவா ளியினாற் சமனாற்ற லடக்கி னானல். (நசு)

ஓரம் பதனான் மதிதன்னையு மொன்றி ரண்டு
கூரம் பதனாற் கதிர்தன்னையுங் கோதின் மைந்த
னீரம் பதனா லனிலத்தையு மேவு மூன்றால்
வீரம் பகர்ந்த கனலோனையும் வீட்டி நின்றான். (நஎ)

நின்றா ரெவருங் குமரேச னிலைமை நோக்கி
யின்றா ரையுமற் றிவனேயடு மென்று தேறி
யொன்றான சிம்புள் விறல்கண்டரி யுட்கி யோடிச்
சென்றா லெனவே யிரிந்தோடினர் சிந்தை விம்மி. (நஅ)

ஓடுஞ் சுரர்க டிறநோக்கி யுதிக்கும் வெய்யோ
னீடுங் கதிர்க ணிலைவைத்துறக் கின்ற தேபோ
லாடுங் குமர னவரைத்துரந் தண்டர் முன்னர்
வீடுங் களத்தி னிடையேதனி மேவி நின்றான். (நகூ)

ஒல்லா தவரிற் பொருதேசில வும்பர் வீழ
நில்லா துடைந்து சிலதேவர்க ணீங்க நேரில்
வில்லாளி யாகித் தனிநின்ற விசாகன் மேனா
னெல்லா ரையுமட் டலவுந்தனி யீச னைத்தான். (சுo)

வேறு.

சுரர்கள் யாருந் தொலைந்திட வென்றுதா
னொருவ னாகி யுமைமகன் மேவுழி
யருளி னாரத னச்செயல் கண்டுவான்
குருவை யெய்திப் புகுந்தன கூறினான். (சுக)

நற்ற வப்புரி நாரதன் கூற்றினை
யற்ற மில்லுணர் வந்தணன் கேட்டெழீஇ
யிற்ற தேகொ லிமையவர் வாழ்வெனாச்
சொற்று வல்லை துயருழந் தேகினான். (சுஉ)

ஆத பன்மதி யண்டர் தமக்கிறை
மாதி ரத்தவர் மால்கரி தன்னுடன்
சாதல் கொண்ட சமர்க்களந் தன்னிடைப்
போதன் மேயினன் பொன்னெனும் பேரினான். (சுந)

ஆவி யின்றி யவர்மறி குற்றது
தேவ ராசன் றெரிந்து படருறுத்
தாவி லேர்கெழு சண்முக னவ்விடை
மேவி யாடும் விபபினை நோக்கினான். (௬௪)

முழுது ணர்ந்திடு மொய்சுடர்ப் பொன்னவ
னெழுதொ ணாத வெழினலந் தாங்கியோர்
குழவி தன்னுருக் கொண்ட குமரனைத்
தொழுது நின்று துதித்திது சொல்லுவான் (௬௫)

வேறு.

கரியரி முகத்தினன் கடிய சூரனென்
றுரைபெறு தானவ ரொருபப வல்கலும்
பருவர லுழந்துதன் பதிவிட் டிபபெரு
வரையிடை மகபதி மறைந்து வைகினான். (௬௬)

அன்னவ னின்னடி யடைந்து நிற்கொடே
துன்னலர் தமதுயிர் தொலைத்துத் தொன்மைபோற
றன்னர செய்தவுந் தலைவ னாகவு
முன்னினன் பிறித்துவே றொன்று முன்னலான். (௬௭)

பற்பக லருந்தவம் பயின்று வாடினான்
றற்பர சரவணத் தடத்திற் போந்தவுன்
னுற்பவ நோக்கியே யுவகை பூத்தனன்
சொற்படு துயரெலாந் தொலைத்து ளானென (௬௮)

கோடலு மராதநொடு குரவுஞ் செச்சையுஞ்
சூடிய குமரநின் றொழும்பு செய்திட
நேடுறு மிந்திர னீயித் தன்மையி
னாடல்செய் திடுவதை யறிகி லானரோ (௬௯)

நாரணன் முதலினோர் நாடிக் காணொணா
வாரண முதல்வனு முமையு மன்னவர்
சீரரு ளடைந்தனர் சிலரு மல்லதை
யாருன தாடலை யறியு நீரினார். (௭௦)

பற்றிய தொடர்பையு முயிரை யும்பகுத்
திற்றென வுணாகில மேதந் தீகிலஞ்
சிற்றுணர் வுடையதோர் சிறியம் யாமெலா
முற்றுன தாடலை யுணர வல்லமோ. (௭௧)

ஆதலால் வானவர்க் கரச னுற்றவு
மோதிதா னின்மையா லுனற னாடலைத்
தீதெனா வுன்னிவெஞ் செருவி ழைத்தன
னீதிசேர் தண்டமே நீபு ரிந்தனை. (௭௨)

மற்றுள தேவரு மலைந்து தம்முயி
ரற்றன ரவர்களு மறிவி லாமையாற்
பெற்றிடுங் குரவரே பிழைத்த மைந்தரைச்
செற்றிடி னெவரருள் செய்யற் பாலினோர். (௭௩)

சின்மய மாகிய செம்மல் சிம்புளாம்
பொன்மலி சிறையுடைப் புள்ளி னாயகன்
வன்மைகொள் விலங்கினை மாற்ற லல்லது
மின்மினி தனையடல் விசய மாகுமோ. (எ௪)

ஒறுத்திடு மவுணர்க ளொழிய வேரொடு
மறுத்தரு ளுணர்விலா வளிய ருன்னடி
மறத்தலி லன்பினர் மற்றின் னோர்பிழை
பொறுத்தருள் கருணையாற் புணரி போன்றுளாய். (எ௫)

பரமுற வணிகரைப் பரித்துப் பல்வளந்
தருகலங் கவிழ்ந்திடச் சாய்த்து மற்றவ
ரொருதலை விளிதல்போ லுன்னிற் பெற்றிடுந்
திருவினர் பொருதுனைச் செருவிற் றுஞ்சினார். (எ௬)

தொழுதகு நின்னடித் தொண்ட ராற்றிய
பிழையது கொள்ளலை பெரும சிந்தையு
ளழிதரு மிணையவ ரறிவு பெற்றிவ
ணெழுவகை யருளென விறைஞ்சிக் கூறினான். (எஎ)

பொன்னவ னின்னன புகன்று வேண்டிட
முன்னவர் முன்னவன் முறுவல் செய்துவான்
மன்னவ னாதியர் மால்க ளிற்றொடு
மந்நிலை யெழும்வகை யருள்செய் தானரோ. (எஅ)

வேறு.

அந்தியின் வனப்புடைய மெய்க்குக னெழுப்புதலு மன்னபொழுதே
யிந்திரனு மாதிரவ ரைப்பினரும் வானவரும் யாவருமெழா அச்
சிந்தைதனின் மெய்யுணர்வு தோன்றுதலு முன்புரிசெ யற்கையுணராக்
கந்தனொடு கொல்சமர் புரிந்ததென வுன்னினர் கலங்கி யெவரும். (எகூ)

கலங்கின ரிரங்கினர் கலுழ்ந்தனர் புலர்ந்தனர் கவன்றனருள
மலங்கினர் விடந்தனை யயின்றவ ரெனும்படி மயர்ந்தனவிசே
ருலங்கென வுலைந்தன ரொடுங்கினர் நடுங்கின ருரந்தனையிழந்
திலங்கெழின் முகம்பொலி விகந்தனர் பொருந்தமை யிகழ்ந்தனர்களே. ()

துஞ்சியெழு மன்னவர்க ளேழுலகு முன்னுதவு சுந்தரிதரு
மஞ்சனரு ளோடுவிளை யாடுவது காண்டலும் வணங்கியனையான்
செஞ்சர ணிரண்டினையு முச்சிகொடு மோயினர் சிறந்தலர் துணைக்
கஞ்சமல ரிற்பல திறங்கொளரி யின்றொகை கவைஇயதெனவே. (அக)

கந்தநம வைந்துமுகர் தந்தமுரு கேசநம கங்கையுமைதன்
மைந்தநம பன்னிரு புயத்தநம நீபமலர் மாலைபுனையுந்
தந்தைநம வாறுமுக வாதிநம சோதிநம தற்பரமதா
மெந்தைநம வென்றுமிளை யோய்நமகு மாரநம வென்றுதொழுதார். ()

பொருந்துதலை யன்புட னெழுந்தவர்க ளிவ்வகை புகழ்ந்துமனமே
லரந்தைகொடு மெய்ந்நடு நடுங்குதலு மன்னதை யறிந்துகுமரன்
வருந்தலிர் வருந்தலி ரெனக்கருணை செய்திடலு மற்றவர்கடாம்
பெருந்துயரு மச்சமு மகன்றுதொழு தேயினைய பேசினர்களால். (அங)

தூயவமு தத்தினெடு நஞ்சளவி யுண்குநரை யவ்விடமலாற்
றூயவமு தோவுயிர் தொலைக்குமது போலுனது தொல்லருளினு
லேயதிரு வெய்திட விருந்தனமுன் னேடமரி யற்றியதனு
னீயெமை முடித்தியலை யன்னதவ றெம்முயிரை நீக்கியதரோ. (அச)

பண்டுபர மன்றனை யிகழ்ந்தவன் மகத்திலிடு பாகமதியா
முண்டபவ மின்னமு முடிந்திலவ தன்றியு முனைப்பொருதுநேர்
கொண்டிகல் புரிந்தன மளப்பில்பவம் வந்தகுமரேசவெமைநீ
தண்டமுறை செய்தவை தொலைத்தனை யுளத்துடைய தண்ணளியினுல்.

ஆதலி னெமக்கடிகள் செய்தவரு ளுக்குநிக ராற்றுவதுதா
னேதுளது மற்றெமை யுனக்கடிய ராகவிவ ணீதுமெனினு
மாதிபர மாகிய வுனக்கடியம் யாம்புதித ளிப்பதெவனே
தாதையர் பெறச்சிறுவர் தங்களை யவர்க்கருள்கை தக்கபரிசோ. (அசு)

அன்னதெனி னுந்தெளிவில் பேதையடி யேம்பிழை யனைத்துமுளமே
லுன்னலை பொறுத்தியென வேகுமர வேளவையு ணர்ந்துநமைநீர்
முன்னமொரு சேயென நினைந்துபொரு தீர்நமது மொய்ம்புமுயர்வு
மின்னுமுண ரும்படி தெரித்துமென வோருருவ மெய்தினனரோ. (அஎ)

எண்டிசையு மீரெழு திறத்துலகு மெண்கிரியு மேழுகடலுந்
தெண்டிரையு நேமிவரை யும்பிறவும் வேறுதிரி பாகயுளசீ
ரண்டநிரை யானவு மனைத்துயிரு மெப்பொருளு மாகியயனும்
விண்டுமரா னுஞ்செறிய வோருருவு கொண்டனன் விறற்குமரனே. (அஅ)

மண்ணளவு பாதல மெலாஞ்சரண மாதிர வரைப்புமிகுதோள்
விண்ணள வெலாமுடிகள் பேரொளி யெலாநயன மெய்ந்நடுவெலாம்
பண்ணளவு வேதமணி வாயுணர்வெ லாஞ்செவிகள் பக்கமயன்மா
லெண்ணளவு சிந்தையுமை யைந்தொழிலு நல்கியரு ளீசனுயிரே. (அகூ)

ஆனதொரு பேருருவு கொண்டுகும ரேசனுற வண்டர்பதியு
மேனையரு மற்புத மிதற்புதமி தென்றுதொழு தெல்லவருமாய்
வானமிசை நோக்கினர்கண் மெய்வடிவம் யாவையும் வனப்புமுணரார்
சானுவள வாவரிது கண்டனர் புகழ்ந்திணைய சாற்றினர்களால். (கூ0)

வேறு.

சேணலம் வர்த சோதிச் சிற்பர முதல்வ வெம்முன்
மாணல முறநீ கொண்ட வான்பெருங் கோலந் தன்னைக்
காணல மடியேங் காணக் காட்டிடல் வேண்டு மென்ன
நீணலங் கொண்டு நின்ற நெடுந்தகை யதனைக் கேளா. (கூக)

கருணைசெய் தொளிகண் மிக்க கண்ணவர்க் கருளிச் செவ்வே
வருணமார் பரிதிப் புத்தே ளநந்தகோ டிகள்சேர்ந் தென்னத
அருணவில் வீசி நின்ற தனதுரு முற்றுங் காட்ட
விரணிய வரைக்க ணின்ற விந்திரன் முதலோர் கண்டார். (கூஉ)

அடிமுதன் முடியின் காறு மறுமுக னுருவ மெல்லாங்
கடிதவ னருளா னோக்கிக் கணிப்பிலா வண்ட முற்று
முடிவறு முயிர்கள் யாவு மூவருந் தேவர் யாரும்
வடிவினி லிருப்பக் கண்டு வணங்கியே வழுத்திச் சொல்வார். (கூ௩)

அம்புவி முதலாம் பல்பே ரண்டமு மங்கங் குள்ள
வும்பரு முயிர்கள் யாவு முயிரலாப் பொருளு மாலுஞ்
செம்பது மத்தி னோனுஞ் சிவனொடுஞ் செறிதல் கண்டோ
மெம்பெரு மானின் மெய்யோ வகிலமு மிருப்ப தம்மா. (கூச)

அறிகில மிந்நாள் காறு மகிலமு நீயே யாகி
யுறைதரு தன்மை நீவந் துணாத்தலி னுணர்ந்தா மன்றே
பிறவொரு பொருளுங்காணேம் பெருமநின் வடிவ மன்றிச்
சிறியம்யா முனது தோற்றந் தெரிந்திட வல்ல மோதான். (கூரு)

மூண்டக னொருவன் றுஞ்ச முராரிபே ருருவாய் நேமிக்
கண்டுயி லகந்தை நீங்கக் கண்ணுதற் பகவ னெல்லா
வண்டமு மணிப்பூ ணார மாகவே யாங்கோர் மேனி
கொண்டன னென்னுந் தன்மை குமரநின் வடிவிற் கண்டேம். (கூசு)

நாரணன் மலரோன் பன்னா ளுடவுந் தெரிவின் றாகிப்
பேரழ லுருவாய் நின்ற பிரான்றிரு வடிவே போலுன்
சீருரு வுறழ தம்மா தெளிகில ரவரு மெந்தை
யாரரு ளெய்தி னம்போ லடிமுடி தெரிந்தி டாரோ. (கூஎ)

அரியொடு கமலத் தேவு மாடல்செய் தகிலந் தன்னை
டொருவரை யொருவர் றுங்கி யுந்தியான் முகத்தா னல்கி
யிருவரு மிகலு மெல்லை யெடுத்தபே ருருமீ கொண்ட
திருவுரு விதனுக் காற்றச் சிறியன போலு மன்றே. (கூஅ)

ஆகையா லெம்பி ரானீ யருவுரு வாகி நின்ற
வேகநா யகனே யாரு மெமதுயா தவத்தா லெங்கள்
சோகமா னவற்றை நீக்கிச் சூர்முத றடிந்தே யெம்மை
நாகமே லிருத்து மாறரு னணணினை குமர னேபோல். (கூகூ)

எவ்வுரு வினுக்கு மாங்கோ ரிடனதா யுற்ற வுன்றன்
செவ்வுரு வதனைக் கண்டு சிறந்தன மறம்பா வத்தி
னவ்வுரு வத்தின் றப்பு மகலுது மின்னும் யாங்கள்
வெவ்வுரு வத்திற் செல்லேம் வீடுபே றடைது மன்றே. (க00)

இனையன வழுத்திக் கூறி யிலங்கெழிற் குமர மூர்த்தி
தனதுபே ருருவை நோக்கிச் சதமகன் முதலா வுள்ளோர்
தினகரன் மலாச்சி கண்ட சில்லுணர் வுயிர்க ளென்ன
மனமிக வெருவக் கண்க ளலமர மயங்கிச் சொல்வார். (க0க)

எல்லையி லொளிபெற் றன்று லெந்தைநின் னுருவ மின்னு
மொல்லுவ தன்றாற் காண வொளியிழந் துலைந்த கண்க
ளலலதாய் பெருமை நோக்கி யஞ்சுது மடிய முய்யத
தொல்லையி னுருவங் கொண்டு தோன்றிமே யளித்தி யென்றார். (க0உ)

என்றிவை புகன்று வேண்ட வெம்பிரா னருளால் வான்போய்
நின்றபே ருருவந் தன்னை நீத்தறு முகத்தோ னாகித்
தொன்றுள வடிவத் தோடு தோன்றலுந் தொழுது போற்றிக்
குன்றிருஞ் சிறைக ளீர்ந்த கொற்றவன் கூற லுற்றான். (க0ா)

தொன்னிலை தவாது வைகுஞ் சூரனே முதலா வுள்ள
வொன்னல ருயிரை மாற்றி யும்பரும் யானும பாங்கர்
மன்னிநின் றேவல் செய்ய வானுயர் துறக்க நண்ணி
யன்னர சியற்றி யெந்தா யிருததியென் றுறையீ தென்றான். (கO௪)

இகமொடு பரமும் வீடு மேததினர்க் குலப்புறும
முகனம ரருளா னல்கு மறுமுகத் தவமுகுத தனசீர்
மகபதி யளிப்பான் சொற்ற வாசகஞ் சுடரோன் றங்கிய
ககவனுக் கொருவ னல்கப் பராவிய போலு மாரோ. (கOரு)

வானவர் கோனை நோக்கி வறிதுற நகைத்துச் செவ்வே
ணீநமக் களித்த தொல்சீர் நினக்குநா மளித்து நீவிர
சேனைக ளாக நாமே சேனையந் தலைவ னாகித
தானவர் கிளையை யெல்லாம் வீட்டுதுந் தளரே லென்றான். (கO௬)

கோடலங் கண்ணி வேய்ந்த குமரவே ளினைய கூற
வாடியல் கடவுள் வெள்ளை யடற்களிற றண்ணல் கேளா
வீடிற வவுண ரெல்லாம் வியன்முடி திருவி னோடுஞ்
சூடின னென்னப் போற்றிச் சுரரொடு மகிழ்ச்சி கொண்டான். (கO௭)

அறுமுகத் தேவை நோக்கி யமரர்கோ னிந்த வண்டத்
துறைதரு வரைக ளேமி யுலருயிர் பிறவு நின்னான்
முறைபிறழ்ந் தனவா லிந்நாண் முன்புபோ லவற்றை யெல்லா
நிறுவுதி யென்ன லோடு நகைததிவை நிகழ்த்த லுற்றான். (கOஅ)

இன்னதோ ரண்டந் தன்னி லெம்மில்வே றுற்ற வெல்லாந்
தொன்னெறி யாக வென்றோர் தூமொழி குமரன் கூற
முன்னுறு பெற்றித தான முறையிறந் திருந்த தெல்லா
மந்நிலை யெவரு நோக்கி யற்புத மடைந்து நின்றார். (கOகூ)

வேறு.

நிற்கு மெல்லையி னிலத்திடை யாகிய
பொற்கெ னததிகழ் பொருப்பிடை மேவுறு
சிற்கு ணக்குரிசில் சேவடி தாழுஉச்
சொற்க நாடுள சுரேச னுரைபபான் (கக0)

ஆண்ட கைப்பகவ வாரண மெய்நூல
பூண்ட நின்னடிகள் பூசனை யாற்ற
வேண்டு கின்றும்வினை யேமது செய்ய
வீண்டு நின்னருளை யீகுதி யென்றான். (கக௧)

என்ன லுங்குக னிசைந்து நடந்தே
பொன்னி னுயர் பொருப்பினை நீங்கித
தன்ன தொண்கயிலை சார்ந்திடு ஞாங்கா
மன்னி நின்றதொரு மால்வரை புக்கான். (கக௨)

குன்றி ருஞ்சிறை குறைத்தவ னோடு
மொன்றி யேதொ[illegible]துவப்புள மெய்தி
யென்று நல்வினை[illegible]கிய வெங்கோன்
பின்று டர்ந்த[illegible] பிறங்கலில் வந்தார். (கக௩)

சூரல் பம்புதுறு கன்முழை கொண்ட
சாரல் வெற்பினுயர் சண்முகன் மேவ
வாரும் விண்ணவ ரவன்கழ றன்னைச்
சீரி தர்ச்சனை செயற்கு முயன்றார். (கசச)

அந்த வேலையம ரர்க்கிறை தங்கண்
முந்து கம்பியனை முன்னுற வன்னான்
வந்து கைதொழலு மந்திர மொன்று
நந்த மாநகரி னல்கிவ ணென்றான். (நகரு)

அருக்கர் தந்தொகை யனைத்தையு மொன்றா
வுருக்கி யாற்றியென வொண்மணி தன்னா
றிருக்கி ளர்ந்துலவு செய்யதொர் கோயில
பொருக்கெ னப்புனைவர் கோன்புரி குற்றான். (கசகூ)

குடங்கர் போன்மகு டங்கெழு வுற்ற
விடங்கொள் கோபுர விருக்கையி னுப்பண்
கடங்க லுழ்ந்திடு கரிக்குரு குண்ணு
மடங்கல் கொண்டதொர் மணித்தவி சிந்தான் (ககஎ)

ஏந்த வெல்லைதனி லிந்திர னேவப்
போந்து வானெறி புகுந்திடு தூநீர்
சாந்த மாமலர் தழற்புகை யாதி
யாய்ந்து தந்தனர்க ளண்டர்கள் பல்லோர். (நகஅ)

வேறு.

அன்ன காலையி லண்டர்கண் மேலையோன்
சென்னி யாறுடைத் தேவனை வந்தியா
வுன்ன தாளருச் சித்தியா முய்ந்திட
விந்தி கேதன மேகுதி நீயென்றான். (நககூ)

கூற்ற மன்னதுட் கொண்டுவிண் ணோரெலாம்
போற்ற மந்திரம் புக்கு நனந்தலை
யேற்ற ரித்தொகை யேந்தெழிற் பீடமேல்
வீற்றி ருந்தனன் வேதத்தின் மேலையோன். (கஉ0)

ஆன காலை யமரர்கள் வாசவன்
ஞான நாயக நாங்க ளுனக்கொரு
தானை யாகுந் தலைவனை நீயெனு
வான நீத்தத்து மஞ்சன மாட்டினார். (கஉக)

சொரிதல் பெற்றிடு நுண்டுகில் சூழ்ந்தனர்
முதிய சந்த முதலமட் டித்தனர்
கதிரு நன்பொற் கலன்வகை சாத்தினர்
மதும லர்த்தொகை மாலிகை சூட்டினார். (கஉஉ)

ஐவி கைப்படு மாவியும் பானித
மெய்வி ளக்கமும் வேறுள பான்மையு
மெவ்வெ வர்க்கு மிறைவற்கு நல்கியே
செவ்வி தர்ச்சனை செய்தன ரென்பவே. (கஉந)

புரந்த ரன்முதற் புங்கவர் தம்முளத்
தரந்தை நீங்க வருச்சனை செய்துபின்
பரிந்து தாழ்ந்து பரவலு மாயிடைக்
கரந்து வள்ளல் கைலையிற் போயினான். (கஉச)

வெற்பின் மிக்குயர் வெள்ளியம் பொற்றையிற்
சிற்ப ரன்மறைந் தேகலுந் தேவரும்
பொற்பின் மேதகு பொன்னக ரண்ணலு
மற்பு தத்துட னவ்வரை நீங்கினார். (கஉரு)

ஈசன் மைந்த னிளைய னிமையவர்
பூசை செய்யப் பொருந்தலி னவ்வரை
மாசில் கந்த வரையென யாவரும்
பேச வாங்கோர் பெயரினைப் பெற்றதே. (கஉசா)

ஆன கந்த வடுக்கலைத் தீர்ந்துபோய்
வான மன்னன் மனோவதி நண்ணினா
னேனை வானவர் யாவரு மவ்வவா
தான மெய்தினா தொன்மையிற் றங்கினார். (கஉஎ)

உயவ லூர்திகொண் டொய்யென முன்னரே
கயிலை யங்கிரி யேகிய கந்தவேள்
பயிலும் வீரரும் பாரிட மள்ளரு
மயலின் மேவர வாயிடை வைகினான். (கஉஅ)

ஆ திருவிருத்தம் - ககஎக.

---

வசனம்.

பரமசிவனும் பார்வதிதேவியாரு மகிழும்படி அவ்விருவர்க்கும் நடுவே வீற்றிருக்கிற குமரவேளானவன், தன் தம்பிமாரோடுகூடிச் சில திருவிளையாடல்கள் செய்யக்கருதி, காற்சிலம்பு கிங்கிணி சதங்கை முதலியன வொலிசெய்யவும், நெற்றியில் வீரபட்டிகை, காதிற்குண்டலம், மார்பிற் பதக்கம்முதலியவை விளங்கவும், மன்றுதோறுமுலாவியும், தடாகந்தோறமுலாவியும் பூஞ்சோலைதோறுமுலாவியும், குன்றுதோறாடல்செய்தும், காசிமுதலிய க்ஷேத்திரங்களில் உலாவியும், பிரமலோக முதலிய விண்ணுலகங்களில் உலாவியும் வருவானாயினன்; இதுநிற்க, யானையேற்றம் குதிரையேற்ற முதலியவைகளையும் செய்து வருவானாயினன்; இன்னும் அற்புதத் திருவிளையாடல்கள் அநேகமாகச் செய்துவருவதை உமாதேவி கண்களிக்க நோக்கி இறைவனை வணங்கி, எம்மிறைவனே, இந்தப்புதல்வன், செய்யுந் திருவிளையாடல்களை நோக்குமிடத்தில் இவன்மிகப் பெரியனென்று தோன்றுகின்றது, அதலால் இவனது பெருமை முழுதும் எனக்குத் தேவரீர் எடுத்துச் சொல்லியருளவேண்டுமென்று வேண்ட, இறைவன் இறைவியை நோக்கி, பெண்ணே! இவன் எமது கண்ணின் தீப்பொறியால் தோன்றி, கங்கையால் தாங்கப் பெற்றமையால் காங்கேயனென்றும், சரவணப்பூந்தொட்டிலில் வளர்ந்தமையால் சரவணபவனென்றும், கார்த்திகை முதலிய அறுவரும் வளர்த்தமையால் கார்த்திகேயனென்றும், ஆறுவடிவங்கொண்டு விளையாடினவனை நீ சென்று ஒன்றாகச் செய்தமையால்

கந்தனென்றும் பெயர் பெற்றனன். எமக்கோ அநாதியே ஆறுமுகமுண்டு, அவையே அவனுக்கு முகங்களாயின. எமது பஞ்சாக்ஷரத்துடனே தாரகப்பிரமமாகிய குடிலையெழுத்துஞ் சேர்ந்து உன் புதல்வனது குமாரசடாக்கரமந்திரமாயின, எமது சத்தியே அந்தச் சரவணபவனாகும்; அவனுக்கும் எமக்கும் பேதமில்லை, எம்போல எவ்விடத்தும் பிரிவறக்கலந்திருப்பன். நோக்குவோர்க்குச் சிறுகுழந்தைபோலத் தோன்றுவன், எல்லாம் ஒருங்குணரவல்லவன். தன்னையடைந்தவர்களுக்கு புத்தி முத்திகளைக் கொடுப்பவன், இனிப்பிரமனை யழைத்துப் பிரணவப் பொருளைவினவி, அவன் சொல்லாமையால் அவனைச் சிரத்திற்குட்டிச் சிறையிட்டுத் தானே படைத்தற்றொழிலுஞ் செய்வன், தாரகன் சிங்கமுகன் சூரபன்மன்முதலிய வலிய அசுரரையெல்லாங்கொன்று பிரமாதி தேவர்களுடைய துயரத்தையுந் தீர்ப்பன் என்று சொல்லக்கேட்ட இறைவியும் நன்று நன்றென்றகங்களித்துநின்றனள்.

அப்பால் கந்தவேள் கைலைமுதலிய எட்டுக்குலமலைகளையும் ஓரிடத்தே சேர்ப்பன். உவர் நீர்க்கடல்முதலிய எழுகடல்களையும் ஒன்றாகச்சேர்ப்பன், சக்கரவாளகிரியைப் பாதலத்தில் அழுத்துவன், கங்காநதியையடைப்பன், நாகலோகத்தில்வாழும் வாசுகிமுதலிய அஷ்டமாநாகங்களையும் மேருமுதலிய மலைகளிற்பூட்டிப் பிணித்துச் சிறுதேராகக்கொண்டுருட்டுவன், ஐராவதம் முதலிய திக்கசங்களை ஒன்றோடொன்று போர்புரியப்பண்ணுவன், கங்கையாற்றுநீராலே வடவைத்தீயை அவிப்பன். சூரியனைச் சந்திரமண்டலத்திற் செலுத்துவன், சந்திரனைச் சூரியமண்டலத்திற் செலுத்துவன், இந்திரன் முதலிய அஷ்டதிக்குப்பாலகர்களுடைய பதங்களை நிலைகுலையப் பண்ணுவன், இன்னும் அளவற்ற அற்புதத் திருவிளையாடல்களைச் செய்வானானன். இது கண்ட அவுணர்களோ, இப்படிப்பட்ட அரிய செயல்களைச் செய்வோர் உலகில்யாவர், சூரபன்மன் முதலியோர் இவனால் மடிவது திண்ணம், அதற்கு முற்குறியாகிய உற்பாதங்கள் இவ்வருஞ்செயல்களேயாம், என்று நடுங்கிக் கிடந்தனர். இந்திரன் முதலிய தேவர்களோ இவ்வறுமுகன் செயல்களைக்கண்டு, இது அவுணருடைய மாயச்செய்கையுமன்று, இது யாவர் செய்கையோ அறிகிலோம், என்று இவ்வாறு கூடிப் பேசிக்கொண்டிருக்கையில், சில தேவர்கள் இந்திரனை மேருமலையிற்கண்டு பணிந்து இது யாவர் செயலென்றறிகிலேமென்று சொல்லிக்கொள்ள, இந்திரன் யானுமறிந்திலேன், யாமனைவரும் பிரமதேவனிடம்போய் விண்ணப்பஞ்செய்து தெரிந்துகொள்வோமெனத் துணிந்தனன். அந்தச் சமயத்தில் கந்தவேளானவன் ஒரு சிறு குழந்தையாகி ஒரு முகத்தோடுதோன்றி, அந்த மேருமலையை யசைத்து அதன் சிகரங்களைப் பூவிதழ்கள்போல எளிதிற் பறித்து வீசினன், மேற்கண்ட அரியசெயல்களைச் செய்பவன் இவனே யாமென்று நிச்சயித்து, சிங்கத்தைக்கண்ட யானைகளைப்போல மனநடுங்கிச் சென்றார்கள். பின்பு இவனைப்போர்செய்து வெல்லவேண்டுமேயன்றி வேறுவகையால் வெல்லலாகாது என்று ஆலோசித்து ஐராவதத்தை நினைத்தலும் அது வந்து மேருமலையை யடைந்தது. இந்திரன் அதன்மேலேறிவந்து குமாரக்கடவுள்மேல் தன் வயிரப்படை முதலியவற்றைப் பிரயோகித்தும் அவைகளால் ஒரு சிறிதும் இடையூறின்றியிருப்பதைக்கண்ட ஐராவதமானது மிகுகோபங்கொண்டு குமாரக்கடவுளோடு போர்புரியப்போயிற்று. குமாரக்கடவுள் அதைக்கண்டு, தனது வில்லைவளைத்து நாணேற்றி அதின் நெற்றியே யிலக்காக ஒரு பாணத்தைப் பிரயோகிக்க, அந்தப்பாணம் அந்த ஐராவதத்தின் உயிரையுண்டு ஊடுருவிப்போயிற்று. இதைக்கண்ட இந்திரன்,

வந்து எதிர்த்துப் போர்செய்து வலியழிந்து அயர்ந்துவிழுந்தான். அவனுக்கு உதவிபுரியவந்த வருணன் வாயு சூரியன் சந்திரன் முதலிய மற்றைத் தேவர்களும் அவ்வாறே குமாரக்கடவுளோடு எதிர்த்துப் போர்புரிந்து தோற்றுப்போனார்கள். இந்தச்செய்தியை நாரதர் குருவுக்குச் சொல்ல, அவர் ஆறுத்துயரங்கொண்டு அந்தத் தேவர்கள் வீழ்ந்து கிடக்கிற போர்க்களம்போய்ச் சேர்ந்து அவர்கள் உயிர்நீங்கிக் கிடப்பதைக்கண்டு வருந்தி, சண்முகக் கடவுளைத் திருவடி தொழுதுநின்று, இறைவனே! இந்திரன் உன் அவதாரத்தைக்கேட்டு, இனி அவுணருடைய பயம் நமக்கில்லையென்று பெருமகிழ்ச்சியடைந்து உன் திருவடியே தஞ்சமென்றிருந்தானன்றி வேறொன்றும் நினைந்தறியான். ஆனால் நீ செய்யுந் திருவிளையாடலை யறியாமல் இவ்வாறுசெய்தான், நாங்களெல்லாம் உன் திருவிளையாடலின் கருத்தை அறியவல்லோமோ, மக்கள்செய்த பிழையைத் தாய்தந்தையர் பொறுக்காமற் போனால் வேறு யாவர்பொறுப்பவர். சரபம் சிங்கத்தை வெற்றிகொள்ளக்கருதுதலன்றி மின்மினியை வெல்லக்கருதாது, அதுபோல நீயிந்த இந்திரன்முதலிய தேவரைவெல்லத் திருவுளம்பற்றினது உனக்கு வெற்றியாகுமோ, பகைக்குந்தன்மையையுடைய அவுணரையெல்லாம் வேரோடும் களையவேண்டியதேயாம். இத்தேவர்கள் உனது சீபாதங்களையல்லது வேறொன்றையு மன்புசெய்திலர். அருளாற் கடல்போன்றவனே இவர்பிழையைப் பொறுத்தருளவேண்டும்; வழிவழியாய் நின்திருத்தொண்டுசெய்யும் அடியார்செய்த பிழையைப் பொறுத்திலையாயின் அது உன் தகுதிக்கழகன்று. ஆதலால், இவர்கள்யாவரும் உணர்ச்சிபெற்று எழுந்திருக்கும்படி அருள்புரியவேண்டுமென்று வணங்கினின்றார்.

வியாழபகவான் இவ்வாறு வணங்கிக்கேட்ப, ஷண்முகப்பெருமான் இந்திரன் முதலிய தேவர்களை எழுந்திருக்க அருள்செய்ய, அத்தேவர் அனைவரும் எழுந்து முன்னே தாங்கள்செய்த அபராதங்களை எண்ணி மனங்குழைந்து பலவாறு தோத்திரஞ்செய்து நின்றனர். அதுகண்ட குமாரக்கடவுள் அவர்களைநோக்கி நீங்கள் அஞ்சவேண்டுவதில்லை என்று அபயமளித்தலும், அவர்கள் யாஞ்செய்த குற்றத்திற்காக எங்களைத்தண்டித்தது உமது பெருங்கருணையே என்றுநினைக்கிறோம் எனப் பலவாறு புகழ்ந்து நின்றனர்.

அப்போது ஷண்முகப்பெருமான் தேவர்களைநோக்கி நம்மையொரு குழந்தையாகமதித்துப் போர்செய்தீர், நமது பேராற்றல் முதலியவற்றை யறியீர், நாமே யறிவிப்போம் பாருமென்று அட்டதிக்குகளும் ஈரேழுலகும் குலகிரிகளெட்டும் கடல்களேழும் பெரும்புறக்கடலும் சக்ரவாளகிரியும் பலவேறுபாடமைந்த அண்ட அடுக்குகளும் ஆகிய எல்லாப்பொருள்களும் தனக்குள்ளே அடங்கி இருக்கும்படியான தனது விஸ்வரூபத்தைக்காட்டியருள, தேவர்கள் அவ்வுருவத்தைக்கண்டு இஃதென்ன ஆச்சரியமென்று ஆகாயத்தை நிமிர்ந்துநோக்கி அவரது விஸ்வரூபத்தை முழுதுங்காணாராகி மூழந்தாளளவுமேகண்டு பெருமானே! நீகொண்டுநின்ற இந்த விஸ்வரூபத்தின் அடிமுடிகளை அளவிட்டறிய எங்களாலாகுமோவென்று சொல்லினர். அத்தேவர்களுக்கு ஞானக்கண்ணைத் தந்தருளி ஆயிரங்கோடி இளஞ்சூரியர்கள் உதயமானாற்போன்ற தம் திருமேனியைக் காட்டியருளினார், அருளலும் அவர்கள் திருவடிமுதல் திருமுடியளவும் சேவித்துப் பிரபஞ்சமெல்லாம் அவரது திருமேனியின் ஒருபக்கத்தில் இருக்கக்கண்டு வியந்து இந்த அற்புதத்திருமேனியின் காட்சியை நீர் காட்டக்கண்டதல்லது எம்மறிவால் காணவல்லோமோ. சூரபத்மன் முதலிய அவுணரையெல்லாம்கொன்று எமது கடுந்துயர் களையவந்த பெருமானே

எங்களைப் பழையபடியே விண்குடியேறச்செய்தருளவேண்டுமென்று புகழ்ந்துதிற்க, குமாரக்கடவுள் புன்னகைசெய்தருளி நீவீர் அஞ்சவேண்டாம் உமது விருப்பத்தின் படியே அவுணர்களைவேரறுத்து உம்மையெல்லாம் முன்போலவே விண்ணுலகத்தில் சுகித்திருக்கச்செய்வோம் என்று அருள்செய்ய, இந்திரன் இறைவனைநோக்கி உமது திருவிளையாட்டினால் முறைபிறழ்ந்தனவாகிய உலகுயிர்யாவும் முன்போலவே தத்தம்நிலைகளில் அமைந்திருக்கவேண்டும் என்று வேண்ட, குமாரக்கடவுளும் அவ்வாறே ஆகுகவென்று திருவாக்கருளினர். பிறகு இந்திரன் தெய்வத்தச்சனை அழைத்து கைலைமலைக்கருகே உள்ளதோர்மலையில் ஒரு சிறந்தகோயிலை சிருட்டிக்கவேண்டுமென்று கட்டளையிட, அவன் அவ்வாறேசெய்து முடித்து விடைகொண்டுபோயினன். அந்தக்கோயிலில் ஷண்முகப்பெருமானை எழுந்தருளச்செய்து புண்யநதி தீர்த்தங்களால் திருமஞ்சனமாட்டிச் செய்யவேண்டியமுறைப்படியே பூசனைமுதலியவும்செய்து வணங்கிநின்று யாம் உமது சேனைகளாவோம், நீர் எமது சேனைத்தலைவராவீரென்று தேவர்கள்வணங்க அவ்வாறே தேவசேனாபதி என்னும் பெயரமைந்த ஷண்முகப்பெருமான்றன் திருவுருக்கரந்தனர். இந்திரன்முதலிய தேவர்கள் அம்மலையை அகன்றுபோயினர். தேவர்களால் அருச்சித்துப் பூசிக்கப்பட்ட அந்த மலையானது கந்தகிரி என்று யாவராலும் சொல்லப்பட்டுவிளங்கும். தேவர்களும் தத்தம் இருக்கைகளையடைந்தனர். இந்திரனும் மனோவதியை அடைந்தான்.

திருவிளையாட்டுப்படலம் முற்றிற்று.

## தகரேறுபடலம்.

(*)

சூரன்முத லோருயிர் தொலைக்கவரு செவ்வே
ளாருமகிழ் வெள்ளியச லத்தினமர் போழ்தின்
மேருவி லுடைப்பரன் விரும்பவகி லத்தின்
நாரதனொர் வேள்வியை நடாத்தியிட லுற்றான். (க)

மாமுனிவ ருஞ்சுரரு மாநில வரைப்பிற்
றோமறு தவத்தினுயர் தொல்லைமறை யோரு
மேமமொடு சூழ்தர வியற்றிய மகத்திற்
றீமிசை யெழுந்ததொரு செக்கர்புரை செச்சை. (௨)

அங்கிதனில் வந்ததக ராற்றுமகந் தன்னி
னங்களின மேபலவு நாளுமடி கின்று
ரிங்கிவரை யானடிவ னென்றிசைவு கொண்டே
வெங்கனலை யேந்துபரி மீதெழுதல் போலும். (௩)

மாருதமு மூழிதனில் வன்னியும் விசும்பிற்
பேருமுரு மேறுமொரு பேருருவு கொண்டே
யாருவது போல்விரைவு மிந்தொளியு மார்ப்புஞ்
சேரவெழு மேடமடு செய்கைதனைக் கண்டே. (௪)

கல்லென மணித்தொகை களத்தினிடை தூங்கச்
சில்லரிபெய் கிங்கிணி சிலம்படி புலம்ப
வல்லைவரு கின்றதகர் கண்டுமகத் துள்ளோ
ரெல்லவரு மச்சமொ டிரிந்தனர்க ளன்றே. (௫)

இரிந்தவர்கள் யாவரையு மிப்புவியும் வானுந்
துரந்துசிலர் வீழ்ந்துதொலை வாகநனி தாக்கிப்
பரந்ததரை மால்வரை பராக்மெழ வோடித்
திரிந்துயிர் வருந்தவுடல் செய்ததது செயிர்த்தே. (சு)

எட்டுள திசைக்கரி யிரிந்தலறி யேங்கக்
கிட்டியெதிர் தாக்குமதி கேழ்கிளரு மானத்
தட்டிரவி தேரொடு தகர்ந்து முரிவாக
முட்டுமிவர் தம்பரிமை மொய்ம்பினொடு பாயும். (எ)

இனையவகை யாற்றகரி யாண்டுமுல வுற்றே
சினமொடுயிர் கட்கிறுதி செய்துபெயர் காலை
முனிவர்களு நாரதனு மொய்ம்புமிகு வானோ
ரனைவர்களு மோடின ரருங்கைலை புக்கார். (அ)

ஊறுபுக வன்னவ ருலைந்துகயி லைக்க
ணேறிவரு காலையி லிலக்கமுட னென்பான்
வீறுதிறல் வீரரொடு மேவியுல வுற்றே
யாறுமுக வண்ணல்விளை யாடலது கண்டார். (கூ)

ஈசனிடை நண்ணுகில மீண்டு குமரேச
னேசமொடு நந்துயர நீக்கவெதிர் வந்தா
னுசிறுவ னல்லனிவ னண்டர்பல ரோடும்
வாசவனை வென்றுயிரை மாற்றியெழு வித்தான். (கம)

எங்குறை முடித்திட லிவற்கெளிது நாமிப்
புங்கவனை யுற்றது புகன்றிடுது மென்னாத்
தங்களி லுணர்ந்துசுரர் தாபதர்கள் யாரு
மங்கவன்மு னேகின ரருந்துதிகள் செய்தே. (கக)

வந்துபுகழ் வானவரு மாமுனிவர் தாமுந்
தந்திமுக வற்கிளவ றன்னடி வணங்கக்
கந்தனவர் கொண்டதுயர் கண்டுமிக நீவிர்
நொந்தனிர் புகுந்தது நுவன்றிடுதி ரென்றான். (கஉ)

கேட்டியிளை யோய்மறை கினத்துமொரு வேள்வி
வேட்டன மியாங்களது வேலையிடை தன்னின்
மாட்டுகன லூடொரு மறித்தக ரெழுந்தே
யீட்டமுறு மெம்மையட வெண்ணியதை யன்றே. (கங)

ஆடெழு கிளர்ச்சியை யறிந்துமகம் விட்டே
யோடியிவ ணுற்றன முருத்தது துரந்தே
சாடியது சிற்சிலவர் தம்மையத னாலே
வீடின வளப்பிலுயிர் விண்ணினொடு மண்மேல். (கச)

நீலவிட மன்றிது கிறங்குலவு செக்கர்க்
கோலவிட மேயுருவு கொண்டதய மேபோ
லோலமிட வெங்குமுல வுற்றதுயி ரெல்லாங்
காலமுடி வெய்துமொரு கன்னன்முடி முன்னம். (கரு)

சீற்றமொ டுயிர்க்கிறுதி செய்துலவு மேடத்
தாற்றலை யடக்கியெம தச்சமு மகற்றி
யேற்றகுறை வேள்வியையு மீறுபுரி வித்தே
போற்றுதி யெனத்தொழுது போற்றிசெயும் வேலை. (கசு)

எஞ்சுமவர் தம்மையினை யோன்பரிவி னோக்கி
யஞ்சல்விடு மின்களென வங்கைய தமைத்தே
தஞ்சமென வேபரவு தன்பரிச னத்துண்
மஞ்சுபெறு மேனிவிறல் வாகுவொடு சொல்வான். (கஎ)

மண்டுகனல் வந்திவர் மகந்தனை யழித்தே
யண்டமொடு பாருலவி யாருயிர்க டம்மை
யுண்டுதிரி செச்சைதனை யொல்லைகுறு குற்றே
கொண்டணைதி யென்றுமை குமாரனுரை செய்தான். (கஅ)

வேறு.

குன்றெழு கதிர்போன் மேனிக் குமரவே ளினைய கூற
மன்றலந் தடந்தோள் வீர வாகுவாந் தனிப்பேர் பெற்றோ
னன்றென விசைந்து கந்த னொண்மலர்ப பாதம்போற்றிச்
சென்றனன் கைலை நீங்கிச் சினத்தகர் தேட லுற்றான். (ககூ)

மண்டல நேமி சூழு மாநில முற்று நாடிக்
கண்டில னாகிச் சென்றேழ் பிலத்தினுங் காண கில்லா
னண்டர்தம் பதங்க ளாடி யயன்பத முன்ன தாகத்
தண்டளிர்ச் செக்கர் மேனித் தகர்செலுந் தன்மை கண்டான். (உ0)

ஆடலந் தொழின்மேல் கொண்டே யனைவரு மிரியச் செல்லு
மேடமஞ் சுறவே யார்த்து விரைந்துபோய் வீர வாகு
கோடவை பற்றி யீர்த்துக் கொண்டுராய்க் கைலை நண்ணி
யேடுறு நீபத் தண்டா ரிளையவன் முன்ன ருய்த்தான். (உக)

உய்த்தனன் வணங்கி நிற்ப வுளமகிழ்ந் தருளித் தேவர்
மெய்த்தவர் தொகையை நோக்கி யேழக மேவிற் றெமபா
லெய்த்தினி வருந்து கில்லீர் யாருநீர் புவனி யேகி
முத்தழல் கொடுமுன் செய்த வேள்வியை முடித்தி ரென்றான். (உஉ)

ஏர்தரு குமரப் புத்தே ளிவ்வகை யிசைப்ப வன்னோர்
கார்தரு கண்டத் தெந்தை காதல வேள்வித் தீயிற்
சேர்தரு தகரி னேறறைச் சிறியரே முய்யு மாற்றா
லூர்திய தாகக் கொண்டே யூர்ந்திடல் வேண்டு மென்றார். (உங)

என்னலுந் தகரை யற்றே யானமாக் கொள்வம் பார்மேன்
முன்னிய மகத்தை நீவிர் முடித்திரென் றருள யார்க்கு
நன்னய மாடல் செய்யு நாரதன் முதலோர் யாரு
மன்னதோர் குமர னெந்தை யடிபணிந் தருளாற் போந்தார். (உச)

நவையில்சீர் முனிவர் தேவர் நயப்பநா ரதனென் றுள்ளோன்
புவிதனில் வந்து முற்றப் புரிந்தனன் முன்னர் வேள்வி
யவர்புரி தவத்தி னீரா லன்றுதொட் டமல மூர்த்தி
யுவகையா லினைய மேட மூர்ந்தன னூர்தி யாக. (உரு)

ஆ திருவிருத்தம் - கஉ0ச.

வசனம்.

இவ்வாறு கைலாசகிரியில் சூரபத்மன்முதலிய கொடியவரைக்கெடுக்கத் திருவவதரித்த ஷண்முகப்பெருமான் எழுந்தருளியிருக்கையில் சிவப்ரீதியாக நாரதமுனிவன் வேள்வியொன்றுசெய்தான். அவ்வேள்வித்தீயினின்றும் தகரொன்று தோன்றிற்று. அவ்வாறுதோன்றிய ஆடானது யாகத்தின்கண் நங்களினத்திற் பலவற்றையும் கொலைசெய்கின்றமையால், இவ்வுலகத்தவரை யான் கொல்லவந்தேனென்று மேலெழுந்த தோற்றமென்னவும் ஊழிக்காற்றும் ஊழித்தீயும் இடியேறும் ஒருருக்கொண்டுவந்ததென்னவும் ஓடித்திரிந்து உயிர்களைவருத்திற்று. இவ்வாறு உயிரைவருத்துவதைக்கண்ட தேவர்களும நாரதமுனிவரும் மற்றைமுனிவரும் இவ்வாட்டின்கொடுமைகூறிச் சரண்மடைந்தனர். அதைக்கண்டு குமாரக்கடவுளும் அவரைச் சிறிதுமஞ்சன்மின் என்று அபயங்கொடுத்துத் தன் பரிவாரத்தில் வீரவாகுவைநோக்கி வேள்வித்தீயிற்பிறந்து உலகைவருத்தும் ஆட்டினைவிரைந்துகொண்டு வாருமென்று கட்டளையிட அதனையேற்றுக் கைலையையகன்று கடல்சூழ்ந்த உலகமுழுதுந் தேடிக்காணமல் பிரமபதத்தைக்கிட்டிப் போகக்கண்டதனைக் கோட்டைப்பிடித்துக் குமரநாயகன் சந்நிதானத்தில்விடுத்து வணங்கி நின்றான். குமரநாயகனும் தேவர்களையும் முனிவர்களையும் இனி நீவிர் உமது இருக்கையிற்சென்று வேள்விசெய்மினென்று விடைகொடுக்க அவர் விடைபெற்றுப் போயினர். இறைவனும நாம் உய்யும்பொருட்டு அவர் வேண்டுகோளின்படி அதனையே வாகனமாகக்கொண்டு ஏறியருளினான். விடைபெற்றுச்சென்ற நாரதமுனிவன் பூமியில்வந்து வேள்வியைமுடித்தனன். அன்றுமுதற் குமாரக்கடவுள் ஆட்டையூர்ந்து வருவானாயினன். இதுநிற்க.

தகரேறுபடலம் முற்றிற்று.

# அயனைச்சிறைபுரிபடலம்.

மேடமூர்தி யாகவுய்த்து விண்ணுமண்ணு முருகவே
ளாடல்செய் துலாவிவெள்ளி யசலமீதி லமர்தரு
நீடுநாளி லொருபகற்க ணெறிகொளவேதன் முதலினோர்
காடியீச னடிவணங்க வவ்வரைக்க ணண்ணினார். (க)

எனுதியா னைனுஞ்செருக் கிகந்துதன் னுணர்ந்துளார்
மனுதிகொண்ட செய்கைதாங்கி யரபின்முத்தி வழிதரு
மனுதியீச னடிவணங்கி யருளடைந்து மற்றவன்
றனுதுமன்ற நீங்கிவாயில் சாருகின்ற வேலையில். (உ)

ஒன்பதோ டிலக்கமான வனிகவீர ருண்மகிழ்ந்
தன்பினோடு சூழ்ந்துபோற்ற வமலனம்பொ னாலய
முன்புநீடு கோபுரத்து ணொழுமணித் தலத்தின்மே
லின்பொடாடி வைகினு னிராறுதோள் படைத்துளான். (ங)

அங்கண்வைகு முருகனம்ப னடிவணங்கி வந்திடும்
புங்கவர்க்கு ளாதியாய போதினானை நோக்குறு

விங்குரம்முன் வருதியா லெனாவிளிப்ப வேகியே
பங்கயா சனத்தினோன் பணிந்திடாது தொழுதலும். (ச)

ஆதிதேவ னருளுமைந்த னவனுளத்தை நோக்கியே
போதனே யிருக்கெனாப் புகன்றிருத்தி வைகலு
மேதுநீ புரிந்திடு மியற்கையென்ன நான்முக
னாதனாணை யாலனைத்து நான்படைப்ப னென்றனன். (ரு)

வேறு.

முருக வேளது கேட்டலு முறுவல்செய் தருளித்
தரணி வானுயிர் முழுவதுந் தருதியே யென்னிற்
சுருதி யாவையும் போகுமோ மொழிகெனத் தொல்சீர்ப்
பிரம னென்பவ னித்திறம் பேசுத லுற்றான். (சா)

ஐய கேளனை யாதிகா லந்தனி லளித்த
மையு லாவரு களத்தின னளப்பிலா மறைகள்
செய்ய வாகமம் பற்பல புரிந்ததிற் சிலயா
னுய்யு மாறருள் புரிந்தன னவையுணர்ந் துடையேன். (எ)

என்று நான்முக னிசைத்தலு மவற்றினு ளிருக்கா
மொன்று நீவிளம் புதியென முருகவே ளுரைப்ப
நன்றெ னாமறை யெவற்றிற்கு மாதியி னவில்வா
னின்ற தோர்தனி மொழியைமுன் னோதின னெறியால். (அ)

தாம ரைத்தலை யிருந்தவன் குடிலைமுன் சாற்றி
மாம றைத்தலை யெடுத்தனன் பகர்தலும் வரம்பில
காமர் பெற்றுடைக் குமரவே ணிற்றிமுன் கூறு
மோமெ னப்படு மொழிப்பொரு ளியம்புகென் றுரைத்தான். (கூ)

முகத்தி லொன்றதா வவ்வெழுத் துடையதோர் முருக
னகைத்து முன்னெழுத் தினுக்குரை பொருளென நவில
மிகைத்த கண்களை விழித்தனன் வெள்கினன் விக்கித்
திகைத்தி ருந்தனன் கண்டில னப்பொருட் டிறனே.

ஈசன் மேவரு பீடமா யேனையோர் தோற்றும்
வாச மாயெலா வெழுத்திற்கு மறைகட்கு முதலாய்க்
காசி தன்னிடை முடிபவர்க் கெம்பிரான் கழறு
மாசி றாரகப் பிரமமா மதன்பய னாய்ந்தான். (கக)

தெருள தாகிய குடிலையைச் செப்புத லன்றிப்
பொருள றிந்தில னென்செய்வான் கண்ணுதற் புனித
னருளி னாலது முன்னரே பெற்றில னாதலான்
மருளு கின்றனன் யாரதன் பொருளினை வகுப்பார். (கஉ)

தாம றைக்கெலா மாதியு மந்தமுஞ் சொல்லு
மோமெ னப்படு மோரெழுத் துண்மையை யுணரான்
மாம லாப்பெருங் கடவுளு மயங்கினா னென்றா
னாமி னிச்சில வறிந்தன மென்பது நகையே. (கங)

எட்டொ ணாதவக் குடிலையின் பயனினைத் தென்றே
கட்டு ரைத்திலன் மயங்கலு மீதன்பொருள் கருதாய்

சிட்டி செய்வதித் தன்மைய தோவெனச் செவ்வேள்
குட்டி னானைய னான்முக முடிகளுங் குலுங்க. (கச)

மறைபு ரிந்திடுஞ் சிவனருண் மதலைமா மலர்மே
லுறைபு ரிந்தவன் வீழ்தரப் பதத்தினா லுதைத்துக்
கிறைபு ரிந்திடு பரிசன ரைக்கொடே கிளசு
சிறைபு ரிந்திடு வித்தகன் கந்தமானா சிலம்பில். (கரு)

அல்லி மாமலர்ப் பண்ணவன் றனையருளா சிறையில
வல்லி பூட்டுவித தியாவையும் புரிதர வல்லோ
னெல்லை தீர்தரு கந்தமால வரைதனி லேகிப்
பல்லுயிரத தொகை படைப்பது நினைந்தனன் பரிவால். (கசு)

ஒருக ரந்தனிற் கண்டிகை வடம்பரித தொருதன்
கரத லந்தனிற் குண்டிகை தரித்திரு கரங்கள
வரத மோடப யந்தரப் பரமபொருண் மகனோர்
திருமுகங் கொடு சதுர்முகன் போலவிதி செய்தான். (கஎ)

உயிரி னுக்குயி ராகியே பரஞ்சுட ரொளியாய்
வியன்ம றைத்தொகைக் கிறைதாய் விதிமுக னுரைக்குஞ்
செயலி னுக்கெலா மாதியாய் வைகிய செவ்வே
ளயனெ னப்படைக் கின்றது மற்புத மாமோ. (கஅ)

தண்ணெ னமபுயத தவிசினோன் சிறைபுகத் தானே
யெண்ணி லாவுயிர்த் தொகையளித் தறுமுக னிருந்தா
னண்ண லந்திசை முகனொடு வந்துரு பூமர
ருண்ண டுங்கியே தொழுதுதம பதங்களி லுற்றார். (ககூ)

ஆ திருவிருத்தம் - கஉஉரு.

---

வசனம்.

தகரப்பரியையுடைய சரவணபவன் கைலையில் எழுந்தருளியிருக்கையில் ஒருநாள் பிரமன்முதலிய தேவர்கள் கைலைவரையை அணுகி எனது யானெனலற்றுத் தன்னையுந் தலைவனையும் உணரும் பரிசடைந்தார் முத்திபெறவழங்கும் பரமசிவனது திருவடிதொழுது அவனது திருவோலக்கங்கண்டு நீங்கி வாசலில்வருஞ் சமயத்தில் இலக்கத்தொன்பதின்மர் அன்போடு சூழ்ந்து வணங்க நின்ற ஷண்முகப்பெருமான் பிரமனைநோக்கி வருகவென்றழைக்க, அவன்வந்து வணங்காதிருக்கக்கண்டு, நீர் இவ்விடத்தில் இருமென்றுசொல்லி உமதுதொழில் யாதென்று கேட்க, இறைவன் திருவாணையால் யான் படைப்புத்தொழில்செய்பவன் என்றான். முருகவேள் புன்னகைசெய்து நீர் உலக முழுதும் படைப்பதுண்மையாயின் வேதத்தின் முதன்மைபூண்ட பிரணவப்பொருளை விளக்கவேண்டுமென்றுசொல்ல, பிரமன் அது சொல்லவறியாமல் திகைத்துநின்றான். பிள்ளையார் அது இறைவனுக்குப் பீடமாய் யாவரும் தோன்றுமிடமாய் வேதங்கட்குமுதலாய் காசியில் இறப்பவர்களுக்கு இறைவன் போதிப்பதாயிருப்பது; நீர் அதன் பொருளையுணராமல் எப்படி சிருட்டித்தொழில் செய்ய வல்லீரென்று [illegible] அவனைக்

கந்தகிரியில் சிறைப்படுத்தி ஒருகரத்தில் கண்டிகை ஒருகரத்தில் குண்டிகையுந் தரித்து, இரண்டுகைகள் அபயவரதங்களாகக்கொண்டு ஒரு திருமுகத்தோடிருந்து தானே படைப்புத்தொழிலை நடத்திவந்தான். அவனுடன்வந்த தேவர்களெல்லாம் மனம்நடுங்கி ஓடிவிட்டார்கள்.

அயனைச்சிறைபுரிபடலம் முற்றிற்று.

## அயனைச்சிறைநீக்குபடலம்.

ஆல மார்மிடற் றண்ணல்சே யித்திற மளப்பில்
காலம் யாவையு மளித்தன னிருந்ததலுங் கரியோ
னாலு மாமுக னுவளக நீக்குவா னுடிச்
சில வானவர் முனிவரைச் சிந்தனை செய்தான். (க)

சீத ரத்தனிப் பண்ணவன் சிந்தனை தேறி
யாத பத்தினர் பரிமுகர் வசுக்களன் னையர்க
ளோத மற்றிடும் விஞ்சைய ருவணரோ டியக்கர்
மாதி ரத்தவர் யாவரும் விரைந்துடன் வந்தார். (உ)

மதியு மேனைய கோள்களுங் கணங்களும வான்றோய்
பொதிய மேயவ னாதியாம் பொருவின்மா தவரும
விதிபு ரிந்திடு பிரமரோன் பதின்மரும் வியன்பா
ரதனை யேந்திய சேடனு முரகரு மடைந்தார். (ங)

இன்ன தன்மையி லமரரு முனிவரு மெய்த
வன்னர் தமமொடுஞ் செங்கண்மால கைலையை யடைந்து
முன்னர் வைகிய நந்திகண் முறையினுய்த் திடப்போய்த்
தன்னை யேதனக் கொப்பவன் பொற்கழ றாழ்ந்தான். (ச)

பொற்றி ருப்பத மிறைஞ்சியே மறைமுறை போற்றி
நிற்ற லுஞ்சிவ னருள்கொடே நோக்குறீஇ நீவி
ரெற்றை வைகலு மில்லதோர் தளர்வொடு மெம்பா
லுற்ற தென்கொலோ வென்றலு மாலிவை யுரைப்பான். (ரு)

வேறு.

இறைவ நின்மக னீண்டுறு போதனை
மறைமு தற்பத வான்பொருள் கேட்டலு
மறிகி லானுற வன்னவன் றன்னைமுன்
சிறைபு ரிந்தனன் சிட்டியுஞ் செய்கின்றான். (சா)

கந்த வேளெனக் கஞ்சனு மையனின்
மைந்த னாமவன் வல்வினை யூழினா
லந்த மில்பக லாழ்சிறைப் பட்டுளா
னொந்து வாடின னோவுழந் தானரோ. (எ)

ஆக்க மற்ற வயன்றன் சிறையினை
நீக்கு கென்று நிமலனை வேண்டலுந்

தேக்கு மன்பிற் சிலாதனற் செம்மலை
நோக்கி யொன்று நுவலுதன் மேயினான். (அ)

குடுவைச் செங்கையி னானைக் குமரவே
ளிடுவித் தான்சிறை யென்றன ராண்டுநீ
கடிதிற் சென்றுநங் கட்டுரை கூறியே
விடுவித் தேயிவண் மீள்கெனச் சாற்றினான். (கூ)

எந்தை யன்ன திசைத்தலு நன்றெனா
நந்தி யங்கண நாதனைத் தாழ்ந்துபோ
யந்த மற்ற வடற்கணஞ் சூழ்தரக்
கந்த வெற்பிற் கடிநக ரெய்தினான். (க0)

ஈறுமு டைத்தனி யேற்று முகத்தினா
னாறுமு கத்த னமர்ந்த நிகேதனங்
குறுகி மற்றவன் கோல மலர்ப்பத
முறைத னிற்பணிந் தேத்தி மொழிகுவான். (கக)

கடிகொள் பங்கயன் காப்பினை யெம்பிரான்
விடுதல் கூறி விடுத்தன னீங்கெனைத்
தடைப டாதவன் றன்சிறை நீக்குதி
குடிலை யன்னவன் கூறற் கெளியதோ. (கஉ)

என்னு முன்ன மிளையவன் சீறியே
யன்ன வூர்தி யருஞ்சிறை நீக்கல
னின்னை யுஞ்சிறை வீட்டுவ னிற்றியே
யுன்னி யேகுதி யொல்லையி லென்றலும் (கங)

வேற தொன்றும் விளம்பில னஞ்சியே
யாறு மாமுகத் தண்ணலை வந்தியா
மாறி லாவெள்ளி மால்வரை சென்றன
னேறு போன்முக மெய்திய நந்தியே. (கச)

மைதி கழ்ந்த மணிமிடற் றண்ணன்முன்
வெய்தெ னச்சென்று மேவி யவன்பதங்
கைதொ ழூஉநின்று கந்தன் மொழிந்திடுஞ்
செய்தி செப்பச் சிறுநகை யெய்தினான். (கரு)

கெழுத கைச்சுடர்க் கேசரிப் பீடமேல்
விழுமி தூற்ற விமலன் விரைந்தெழீஇ
யழகு டைத்தன தாலய நீங்கியே
மழவி டைத்தனி மால்வரை யேறினான். (கசு)

முன்னர் வந்த முகில்புரை வண்ணனுங்
கன்ன ரம்பயில் கேசர ராதியோர்
நன்னர் கொண்டிடு நாகரு நற்றவ
ரென்ன ருந்தொழு தெந்தையின னேகினார். (கஎ)

படைகொள் கையினர் பன்னிறக் காழக
வுடையர் தீயி னுருகெழு சென்னிய

ரிடிகொள் சொல்லின ரெண்ணரும் பூதர்கள்
புடையி லீண்டினர் போற்றுதன் மேயினார். (கஅ)

இனைய காலை யினையவர் தமமொடும்
வனிதை பாதியன் மால்விடை யூர்ந்துராய்ப்
புனித வெள்ளியம் பொறறை தணந்துபோய்த
தனது மைந்தன் றடவரை யெய்தினான். (ககூ)

சாற்ற ருந்திறற் சண்முக வெம்பிரான்
வீறறி ருந்த வியனகா முன்னுறு
வேற்றி னின்று மிழிந்துவிண் ணோரெலாம
போறற முக்கட் புனிதனுட் போயினான் (உ0)

அந்தி போலு மவிரசடைப பண்ணவன்
கந்தன் முன்னாக் கருணையொ டேகலு
மெந்தை வந்தன னென்றெழுந் தாங்கவன்
வந்து நேர்கொண் டடிகள வணங்கியே. (உக)

பெருதத தன்மணிப பீடிகை மீமிசை
யிருததி நாதனை யேழுல கீனறிடு
பொருததி மைந்த னுயிரகுயி ராகிய
கருதத நீவநத காரியம யாதென்றான (உஉ)

மட்டு லாவு மலரய னைச்சிறை
யிட்டு வைததனை யாமது நீகருவான
கட்டி வந்தன மாறசுரா தமமுடன்
விட்டி டையவென றெந்தை விளமபினான் (உங)

காட்ட மூன்றுடை நாயக னிவவகை
யீட்டு மன்பொ டிசைததிடு மின்சொலைக்
கேட்ட காலையிற கேழ்கிளா சென்னிமேற
சூட்டு மௌலி துளககினன் சொலலுவான். (உச)

உறுதி யாகிய வோரெழுத தின்பய
னறிகி லாதவ னுவிகள வைகலும
பெறுவ னென்பது பேதைமை யாஙகவன்
மறைகள வலலது மறறது போலுமால. (உரு)

அழகி தையகின னாருள வேதமுன்
மொழிய கின்ற முதலெழுத தோகிலா
னிழிவில் பூசை யியற்றலு நலகிய
தொழில் புரிந்து சுமத்தினை யோர்பரம். (உசு)

ஆவி முற்று மகிலமு நலகியே
மேவு கின்ற வியன்செயல் கோடலாற்
றூவில கஞ்சத் தவிசுறை நான்முக
னேவர் தம்மையு மெண்ணலன் யாவனும். (உஎ)

பின்னை வந்தனை செய்யிலு சித்தனுக்
தன்ன கர்தை தவிர்கில ரூதலா

லன்ன வன்ற னருஞ்சிறை நீக்கல
னென்ன மைந்த னியம்பிய வேலையே. (௨௮)

வேறு.

மைந்தநின் செய்கை யென்னே மலரயன் சிறைவி டென்று
நந்திநம் பணியா லேகி நவின்றதுங் கொள்ளாய் நாமும்
வந்துரைத் திடினுங் கேளாய் மறுத்தெதிர் மொழிந்தா யென்னாக்
கந்தனை வெகுள்வான் போலக் கழறினன் கருணை வள்ளல். (௨௯)

அத்தன தியல்பு நோக்கி யறுமுகத் தமல னைய
சித்தமிங் கிதுவே யாகிற் றிசைமுகத் தொருவன் றன்னை
யுய்த்திடு சிறையி னீக்கி யொல்லையிற் றருவ னென்னாப்
பத்தியி னிறைஞ்சிக் கூறப் பராபரன் கருணை செய்தான். (௩௦)

நன்சிறை யெகின மேனி நாடுவா னருளை நல்கத்
தன்சிறை யின்றோர் தம்மைச் சண்முகக் கடவு ளோக்கி
முன்சிறை யொன்றிற் செங்கேழ் முண்டகத் தயனை வைத்த
வன்சிறை நீக்கி நம்முன் வலலைதந் திடுதி ரென்றான். (௩௧)

என்றலுஞ் சார தர்க்குட் சிலவர்க ளேகி யங்க
ணென்றொரு பூண்ழ தன்னு ளொடுங்கின னுறையும் வேதா
வன்றளை விடுத்தல் செய்து மற்றவன் றனைக்கொண் டேகிக்
குன்றுதோ ருடல் செய்யுங் குமரவேண் முன்ன ருய்த்தார். (௩௨)

உய்த்தலுங் கமலத் தண்ண லொண்கரம் பற்றிச் செவ்வே
ளத்தன்முன் விடுத்த லோடு மாங்கவன் பரமன் றன்னை
மெய்த்தரு மன்பாற் றாழ்ந்து வெள்கின னிற்ப நோக்கி
யெய்த்தனை போலும் பன்னா ளிருஞ்சிறை யெய்தி யென்றான். (௩௩)

நாதனித் தன்மை கூறி நல்லருள் புரித லோடும்
போதினை யனைய வுன்றன் புதல்வனாற் றியங்கித் தண்ட
மேதமன் றுணர்வு நல்கி யானெனு மகந்தை வீட்டித்
தீதுசெய் வினைகண் மாற்றிச் செய்தது புனித மெனறான். (௩௪)

அப்பொழு தயனை முக்க ணாதியம் பரமன் காணூஉ
முப்புவ னத்தின் மேவு முழுதுயிர்த் தொகைக டேற்ற
விப்புர வதனை நன்று தாக்கினை தொன்மை யேபோ
லிப்பக றொட்டு நீயே யிந்தனை யிருத்தி யென்றான். (௩௫)

அருளுரு வாகு மீச னயற்கிது புகன்ற பின்னர்
முருகவேண் முகத்தை நோக்கி முறுவல்செய் தருளை நல்கி
வருதியா லைய வென்று மலர்க்கையுய்த் தவனைப் பற்றி
திருமணிக் குறங்கின் மீது சிறந்துவீற் றிருப்பச் செய்தான். (௩௬)

காமரு குமரன் சென்னி கதுமென வுயிர்த்துச் செக்கர்த்
தாமரை புரையுங் கையாற் றழுவியே யயனுந் தேற்று
வோமென வுரைக்குஞ் சொல்லி னுறுபொரு ளுனக்குப் போமோ
போமெனி லதனை யின்னே புகலென விறைவன் சொற்றான். (௩௭)

முற்றொருங் குணரு மாதி முதல்வகே ளுலக மெல்லாம்
பெற்றிடு மூவட்கு நீமுன் பிறருண ராத வாற்றாற்

சொற்றதோ ரிணைய மூலத் தொல்பொருள் யாருங் கேட்ப
விற்றென வியம்ப லாமோ மீன்றபின் விசைப்ப தல்லால். (௩௮)

என்றலு நகைத்து மைந்த வெமக்கருண் மறையி னென்னாத்
தன்றிருச் செவியை நல்கச் சண்முகன் குடிலை யென்னு
மொன்றொரு பதத்தி னுண்மை யுரைத்தன னுரைத்தல் கேளா
நன்றருள் புரிந்தா னென்ப ஞானநா யகனா மண்ணல். (௩௯)

அன்னதோ ரைய மாற்றி யகமகிழ் வெய்தி யங்கட்
டன்னிளங் குமரன் றன்னைத் தலைமையோ டிருப்ப நல்கி
யென்னையா ளுடைய நாதன் யாவரும் போற்றிச் செல்லத்
தொன்னிலை யமைந்து போந்து தொல்பெருங் கைலை வந்தான். (௪௦)

முன்புறு மயன்மா றேவர் முனிவரை விடுத்து முன்னோன்
றன்பெருங் கோயில் புக்கான் றவிலசீர்க் கந்த வெற்பிற
பொன்புனை தவிசி னேறிப் புடைதனில் வயவர் போற்ற
வின்பொடு குமர மூர்த்தி யினிதுவீற் றிருந்தா னன்றே. (௪௧)

ஆங்குறு குமரப் புத்தே ளருமறைக் காதி யாகி
யோங்குமெய் பொருட்கு மேலா மோரெழுத் துரையி னுண்மை
தீங்கற வணங்கிக் கேட்பச் சிறுமுனிக் குதவி மற்றும்
பாங்குறு மிறைவ னாலும் பரிவினு லுணர்த்தி னானால். (௪௨)

ஆக திருவிருத்தம் - ௩௨௬௩.

### வசனம்.

இவ்வாறு ஷண்முகப்பெருமான் றானே நெடுங்காலம் படைப்புத்தொழில் செய்து வருகையில் திருமாலானவர் பிரமனது துன்பத்தை நீக்க நினைத்துத் தேவர்கள்சூழத் தாம் கைலைமலையை அடைந்து பரமசிவன் சந்நிதியிற்சென்று வணங்கி நின்றனர். அதுகண்ட இறைவன் அவரை நோக்கி நீர் இங்கே வந்தகாரணம் யாதென்று வினவக்கேட்ட திருமாலானவர் இறைவனைநோக்கி முதல்வராகிய ஷண்முகப்பெருமான் பிரமனைப் பிரணவப்பொருள் வினவி அதுசொல்லாமல் மயங்கினமையால் அவனைச் சிறைநிற்குட்டிச் சிறையிட்டுத் தானே சிருட்டித்தொழில் செய்கிறான். பிரமனோ அச்சிறையில் வருந்துகிறான். அவனை மீட்கவேண்டுமென்று விண்ணப்பஞ்செய்ய, சிவபெருமான் நந்திதேவரையழைத்து நீபோய்ப் பிரமனைச் சிறைவிடுவிக்கும்படி யாமுரைத்ததாக என்குமாரனுக்குச் சொல்லிவாருமென அவ்வாறே அவர்போய்க் குமரவேட்குச்சொல்ல, அவர் கடுங்கோபங்கொண்டு யாம் அயனைச் சிறைநீக்கோம் உம்மையும் சிறையிடுவோம் என்று சொல்லுதலும், அவர் அஞ்சி விரைவிற்சென்று பரமசிவனுக்கு அங்கு நடந்தசெய்தி முழுதும்சொல்ல, இறைவன் புன்னகைசெய்து நாமே கந்தகிரிக்கு எழுந்தருளிக் கந்தனால் உபசரிக்கப்பட்டு அவனைநோக்கிப் பிரமனைச் சிறைவிடும்படி யாம் சொல்லியனுப்ப, நந்திதேவர் உன்னிடத்திற்குவந்து சொல்லினர். அம்மொழியை நீ மறுக்கத்தகுமோவென்று கோபிப்பான்போல வினவ, குமரவேள் அதுகண்டு உடனே தன்னருகிலிருப்பவரையேவிப் பிரமனை அழைத்துவரச்செய்து இறைவன் சந்நிதியில் விட்டவுடனே அவன் இறைவனைவணங்கி இறைவனே! நின்புதல்வன் என்னைச் சிறையிட்டது நன்மையேயாயிற்று. என்னவெனின், எனது அகந்தையையொழித்து நல்லறிவை விளக்கினதினாலேயாமென்று பணிந்துநின்றனன்.

பரமசிவன் பிரமனைநோக்கி இனிநீ மனமகிழ்ச்சியோடுசென்று உன் படைப்புத்தொழிலைச் செய்துவரக்கடவையென்று கட்டளையிட்டுக் குமரவேளைநோக்கிப் புன்னகைசெய்து பிரமனறியாத பிரணவப்பொருள் உனக்குத்தெரியுமோ தெரியுமாயின் அதனை எனக்குச் சொல்லவேண்டுமென, குமரவேள் இறைவனைநோக்கித் தேவரீர் எம்பெருமாட்டிக்கு இப்பிரணவப்பொருளை இரகசியமாகச் சொல்லவில்லையோ அதனையிப்படி பகிரங்கமாகச் சொல்லப்படுமோ என, இறைவனும் ஆமென்று அதற்கிணங்கித் தனது செவிசாய்த்துக்கேட்க அருளிச்செய்தான். பின்பு சிவபெருமான் அவனைவிட்டு நீங்கிக் கைலைக்கெழுந்தருளிப் பிரமன்முதலிய தேவர்களை அவரவர் இடங்களுக்கு விடைகொடுத்தனுப்பிவிட்டார். ஷண்முகப்பெருமானும் இலக்கத்தொன்பதின்மரும் தம்மைச் சூழ்ந்துவணங்க, கந்தகிரியில் எழுந்தருளியிருந்தார். அவ்விடத்திற்கு அகத்தியமுனிவர்வந்து தம்மை வழிபட அவருக்குப் பிரணவப்பொருளையும் பதிநூலையும் போதித்தருளினார்.

அயனைச்சிறைநீக்குபடலம் முற்றிற்று.

---

# விடைபெறுபடலம்.

எல்லை யன்னதின் மாலருள் கன்னிய ரிருவர
சொல்ல ரும்பெரு வனப்பினர் சுந்தரி யமுத
வல்லி யென்றிடும் பெயரினர் கந்தவேள் வரைத்தோள்
புல்லு மாசையாற் சரவணத் தருந்தவம் புரிந்தார். (௧)

என்னை யாளுடை யறுவிரு முகத்தவ னிரண்டு
கன்னி மாருமா யொன்றிநோற் றிடுவது கருத்தி
லுன்னி யேயெழீஇக் கந்தமால் வரையினை யொருவி
யன்னை தோன்றிய விமகிரிச் சாரலை யடைந்தான். (௨)

பொருவில் சீருடை யிமயமால் வரைக்கொரு புடையாஞ்
சரவ ணந்தனிற் போதலுந் தவம்புரி மடவா
ரிருவ ரும்பெரி தஞ்சியே பணிந்துநின் றேத்த
வரம ளிப்பதென் கூறுதி ரென்றனன் வள்ளல். (௩)

மங்கை மார்தொழு தெம்மைநீ வதுவையான் மருவ
விங்கி யாந்தவம் புரிந்தன மருளைசெய் யென்ன
வங்கவ் வாசகங் கேட்டலு மாறுமா முகத்துத்
துங்க நாயக னவர்தமை நோக்கியே சொல்வான். (௪)

முந்து பின்னுமு தக்கொடி மூவுல கேத்து
மிந்தி ரன்மக ளாகியே வளர்ந்தனை யிருத்தி
சுந்த ரிப்பெய ரிளையவ டொல்புவி தன்னி
லந்தண் மாமுனி புதல்வியாய் வேடர்பா லமர்தி (௫)

நன்று நீவிர்கள் வளர்ந்திடு காலையா நண்ணி
மன்ற லீர்மையா லுங்களை மேவுது மனத்தி
லொன்று மெண்ணலீர் செல்லுமென் றெம்பிரா னுரைப்ப
நின்ற கன்னியர் கைதொழு தேகினர் நெறியால். (௬)

ஏகு மெல்லையி லமுதமா மென்கொடி யென்பாள்
பாக சாதனன் முன்னமோர் குழவியாய்ப் படர்ந்து
மாக மன்னகின் னுடன்வரு முபேந்திரன் மகள்யா
னுகை யாலெனைப் போற்றுதி தந்தையென் றடைந்தாள். (எ)

பொன்னின் மேருவி லிருந்தவன் புதல்வியை நோக்கி
யென்னை யீன்றயா யிங்ஙனம் வருகென விசைத்துத்
தன்ன தாகிய தனிப்பெருங் களிற்றினைத் தனது
முன்ன ராகவே விளித்தன னித்திற மொழிவான். (அ)

இந்த மங்கைநந் திருமக ளாகுமீங் கிவளைப்
புந்தி யன்பொடு போற்றுதி யினையவள் பொருட்டா
லந்த மில்சிறப் பெய்துமே லென்றலு மவனைக்
கந்த மேற்கொடு நன்றெனப் போயது களிறு. (கூ)

கொவ்வை போலிதழ்க் கன்னியை மனைவதி கொடுபோ
யவ்வி யானையே போற்றிய தனையகா ரணத்தாற்
றெய்வ யானையென் றொருபெய ரெய்தியே சிறிது
நொவ்வு றுதலிற் றிருந்தனள் குமானை நுவன்றே. (க0)

பெருமை கொண்டிடு தெண்டிரைப் பாற்கடல் பெற்றுத்
திரும டந்தையை யன்புடன் வளர்த்திடுந் திறம்போற்
பொருவில் சீருடை யடலயி ராவதம் போற்ற
வரிசை தன்னுட னிருந்தன டெய்வத மடந்தை. (கக)

முற்று ணர்ந்திடு சுந்தரி யென்பவண் முருகன்
சொற்ற தன்மையை யுளங்கொடு தொண்டைநன் னாட்டி
லுற்ற வள்ளியஞ் சிலம்பினை நோக்கியாங் குறையு
நற்ற வச்சிவ முனிமக ளாகவே நடந்தாள். (கஉ)

இந்த வண்ணமிவ் விருவர்க்கும் வரந்தனை யீந்து
கந்த மால்வரை யேகியே கருணையோ டிருந்தான்
றந்தை யில்லதோர் தலைவனைத் தாதையாய்ப் பெற்று
முந்து பற்பக லுலகெலாம் படைத்ததோர் முதல்வன் (கங)

வேறு.

இத்திறஞ் சிலபக லிருந்து பன்னிரு
கைத்தல முடையவன் கைலை மேலுறை
யத்தனொ டன்னைதன் னடிப ணிந்திட
சித்தம துன்னின னருளின் செய்கையால். (கச)

எள்ளருந் தவிசினிற் றிழிந்து வீரரா
யுள்ளுறும் பரிசன ரொருங்கு சென்றிடக்
கொள்ளையஞ் சாரதர் குழாமும் பாற்பட
வள்ளலங் கொருவியே வல்லை யேகினான் (கரு)

எயென வெள்ளிவெற் பெய்தி யாங்கனங்
கோயிலி னவைக்களங் குறுகிக் கந்தவே
டாயொடு தந்தையைத் தாழ்ந்து போற்றியே
யாயவர் நடுவுற வருளின் வைகினான். (கசா)

அண்ணலங் குமரவே ளங்கண் வைகலும்
விண்ணவர் மகபதி மேலை நாண்முத
லுண்ணிகழ் தங்குறை யுரைத்து நான்முகன்
கண்ணனை முன்கொடு கைலை யெய்தினார். (௧௭)

அடைதரு மவர்தமை யமல னாலய
நடைமுறை போற்றிடு நந்தி நின்மெனத்
தடைவினை புரிதலுந் தளர்ந்து பற்பக
னெடிதுறு துயரொடு நிற்றன் மேயினார். (௧௮)

அளவறு பற்பக லங்க ணின்றுளார்
வளனுறு சிலாதனன் மதலை முன்புதம்
முளமலி யின்னலை யுரைத்துப் போற்றலுந்
தளாவினி விடுமினென் றிதனைச் சாற்றினான். (௧௯)

தங்குறை நெடும்புனற் சடில மேன்மதி
யங்குறை வைத்திடு மாதி முன்புபோய
நுங்குறை புகன்றவ னுயதி னுய்ப்பனா
லிங்குறை வீரென வியம்பிப் போயினான். (௨௦)

போயின னந்தியம் புனிதன் கண்ணுதற்
றாயனை வணங்கினன் றொழுது வாசவன்
மாயவ னான்முகன் வானு ளோரெலாங்
கோயிலின் முதற்கடை குறுகி னாரென்றான். (௨௧)

அருளுடை யெம்பிரா னனையர் யாரையுந்
தருதிநம் முன்னரே சார வென்றலும்
விரைவொடு மீண்டனன் மேலை யோர்களை
வருகென வருளினன் மாசில் காட்சியான். (௨௨)

விடைமுக னுரைத்தசொல் வினவி யாவரும்
கடிதினி லேகியே கருணை வாரிதி
யடிமுறை வணங்கின ரதற்குள் வாசவ
னிடருறு மனத்தின னினைய கூறுவான் (௨௩)

பரிந்துல கருள்புரி பரையொ டொன்றிமே
யிருந்தருண் முதல்வகே ளெண்ணி லாவுக
மருந்திறற் சூர்முத லவுணர் தங்களால்
வருந்தின மொடுங்கினம் வன்மை யின்றியே. (௨௪)

அந்தமி லமுதுடை யரம்பை மாதரு
மைந்தனு மளப்பிலா வானு ளோர்களும்
வெந்தொழி லவுணர்கள் வேந்தன் மேவிய
சிந்துவி னகரிடைச் சிறைக்கண் வைகினார். (௨௫)

இழிந்திடு மவுணரா லியாதொர் காலமு
மொழிந்திட லின்றியே யுறைந்த சீரொடு
மழிந்ததென் கடிநக ரதனை யானிவண்
மொழிந்திடல் வேண்டுமோ வுணர்தி முற்றுமே (௨௬)

முன்னுற யான்றவ முயன்று செய்துழித்
துன்னினை நங்கணோர் தோன்ற லெய்துவா
னென்னவ னைக்கொடே யவுணர்ச் செற்றுநும்
மின்னலை யகற்றுது மென்றி யெந்தைநீ. (உஎ)

அப்படிக் குமரனு மவத ரித்துள
னிப்பகல் காறுமெம் மின்ன றீர்த்திலை
முப்புவ னந்தொழு முதல்வ நீயரேந்
துப்புறு பவப்பயன் றொலைந்த தில்லையோ. (உஅ)

சூருடை வன்மையைத் தொலைக்கத் தக்கதோர்
பேருடை யாரிலை பின்னை யானினி
யாரொடு கூறுவ னுரை நோகுவ
னீருடை முடியினோய் கினது முன்னலால். (உகூ)

சீகர மறிகடற் சென்று நவவிசேர்
காகம தென்னவுன் கைலை யன்றியே
யேகவோ ரிடமிலை யெமக்கு நீயலாற்
சோகம தகற்றிடுந் துணைவ ரில்லையே. (௩0)

ஏற்றெழு வன்னிமே லினிது துஞ்சலாந்
தோற்றிய வெவ்விட மெனினுந் துய்க்கலா
மாற்றல ரலைத்திட வந்த வெந்துய
ராற்றரி தாற்றரி தலமிப் புன்மையே. (௩க)

தீதினை யகற்றவுந் திருவை நல்கவுந்
தாதைய ரல்லது தனயர்க் காருள
ராதலி னெமையினி யளித்தி யாலென
வோதினன் வணங்கின னும்பர் வேந்தனே. (௩உ)

அப்பொழு தரியய னைய வெய்யசூர்
துப்புட னுலகுயிர்த் தொகையை வாட்டுதல்
செப்பரி தின்னினிச் சிறிதுந் தாழ்க்கலை
யிப்பொழு தருள்கென வியம்பி வேண்டினர். (௩௩)

இகபர முதவுவோ னிவற்றைக் கேட்டலு
மிகவரு ளெய்தியே விடுமி னீரினி
யகமெலி வுறலென வருளி யாங்கமர்
குகன்முக நோக்கியே யினைய கூறுவான். (௩௪)

வேறு.

பாரினை யலைத்துப் பல்லுயிர் தமக்கும் பருவரல் செய்துபண் ணவர்த
மூரினை முருக்கித் தீமையே யியற்றி யுலப்புறு வன்மைகொண் டுற்ற
சூரனை யவுணர் குழுவொடுந் தடிந்து சுருதியி னெறிநிறீஇ மகவான்
பேரர சளித்துச் சுரர்துய ரகற்றிப் பெயர்தியென் றனனெந்தை பெருமான்.

அருத்திகொள் குமர னினையசொல் வினவி யப்பணி புரிகுவ னென்னப்
புரத்தினை யட்ட கண்ணுதல் பின்னர்ப் பொள்ளென வுள்ளமேற் பதினோ
ருருத்திரர் தமையு முன்னலு மன்னோ ருற்றிட விவன்கையிற் படையா
யிருத்திரென் றவரைப் பலபடை யாக்கி யீந்தன னெம்பிரான் கரத்தில்.()

பொன்றிகழ் சடிலத் தண்ணறன் பெயரும்பொருவிலா வுருவமுந் தொன்று
ணன்றுபெற் றுடைய வுருத்திர கணத்தோர் நவிலருந் தோமரங்கொடிவாள்
வன்றிறற் குலிசம் பகழியங் குசமு மணிமலர்ப் பங்கயந் தண்டம்
வென்றிவின் மழுவு மாகிவீற் றிருந்தார் விடன்மிகு மறுமுகன் கரத்தில்.()

ஆயதற் பின்ன ரேவின்மூ தண்டத் தைம்பெரும் பூதமு மடுவ
தேயபல் லுயிரு மொருதலை முடிப்ப தேவர்மேல் விடுக்கினு மவர்தம்
மாயிருந் திறலும் வரங்களுஞ் சிந்தி மன்னுயி ருண்பதெப் படைக்கு
நாயக மாவ தொருதனிச் சுடர்வே னல்கியே மதலைகைக் கொடுத்தான்.()

அன்னதற் பின்ன ரெம்பிரான் றன்பா லாகிவின் றேவின புரிந்து
மன்னிய விலக்கத் தொன்பது வகைததா மைந்தரை நோக்கியே யெவர்க்கு
முன்னவ னுமிக் குமரனோ டேகி முடிக்குதி ரவுணரை யென்னாத்
துன்னுபல் படையு முதவியே சேய்க்குத் துணைப்படை யாகவே கொடுத்தான்.

நாயக னதற்பி னண்டவா பரண னந்தியுக் கிரனொடு சண்டன்
காயெரி விழியன் சிங்கனே முதலாங் கணப்பெருந் தலைவரை நோக்கி
யாயிர விரட்டிப் பூதவெள் ளத்தோ டறுமுகன் சேனையாய்ச் சென்மி
னீயிரென் றருளி யவர்தமைக் குகற்கு நெடும்படைத் தலைவரா வளித்தான்.

ஐம்பெரும் பூத வன்மையு மங்க ணமர்தரும் பொருள்களின் வலியுஞ்
செம்பது மத்தோ னுதியா மமரர் திண்மையுங் கொண்டதோர் செழுந்தேர்
வெம்பரி யிலக்கம் பூண்டது மனத்தின் விரைந்துமுன் செல்வதொன் றதனை
யெம்பெரு முதல்வன் சிந்தையா லுதவி யேறுவான் மைந்தனுக் களித்தான்.

இவ்வகை யெல்லாம் விரைவுட னுதவி யேகுதி நீயெனக் குமரன்
மைவிழி யுமையோ டிறைவனைத் தொழுது வலங்கொடே மும்முறை வணங்கிச்
செவ்விதி னெழுந்து புகழ்ந்தன னிற்பத் திருவுளத் தவகையாற் றழுவிக்
கைவரு கவானுய்த் தச்சிமே லுயிர்த்துக் கருணைசெய் தம்மலைகைக் கொடுத்தான்.

கொடுத்தலும் வயின்வைத் தருளினுற் புல்லிக் குமரவேள் சென்னிமோந் தன்பா
லடுத்திடு மிலக்கத் தொன்பது வகையோ ரணிகமாய்ச் சூழ்ந்திடப் போந்து
கடக்கரு மாற்ற லவுணர்தங் கிளையைக் காதியிக் கடவுளர் குறையை
முடித்தனை வருதி யென்றருள் புரிந்தா ணூவிரு சமயத்தின் முதல்வி.

அம்மையித் திறத்தா லருள்புரிந் திடலு மறுமுகன் றெழுதெழீஇ யனையோர்
தம்விடை கொண்டு படர்ந்தனன் றுணைத் தலைவரா மிலக்கமே லொன்பான்
மெய்ம்மைகொள் வீரர் யாவருங் கணங்கள் வியன்பெருந் தலைவரு மிருவர்
செம்மல ரடிகண் மும்முறை யிறைஞ்சிச் சேரவே விடைகொடு சென்றார்.

நின்றிடு மயன்மான் மகபதி யெந்தாய் நீயெமை யளித்தனை நெஞ்சத்
தொன்றொரு குறையு மில்லையா லிங்கா ளுய்ந்தன முய்ந்தன மென்று
பொன்றிகழ் மேனி யுமையுட னிறைவன் பொன்னடி பணிந்தெழ நமக்கு
நன்றிசெய் குமரன் றன்னுட னீரு நடமெனு விடையது புரிந்தான். ()

ஆ திருவிருத்தம் - கசுசO.

## வசனம்.

இப்படியிருக்குங்காலத்தில் திருமால்புத்திரிகளாகிய சுந்தரி அமுதவல்லி என்னும் இரண்டுகன்னியர் பேரழகுடையராய்க் குமரவேளின் தோள்களை அடையவேண்டுமென்னும் விருப்பத்தால் மிகுதியாய்த் தவஞ்செய்துவந்தனர். பிள்ளையார் அத்தவத்திற்கிரங்கிக் கந்தகிரியைநீங்கி இமயமலையையடைந்து அங்குள்ள சரவணப்பொய்கைக்கெழுந்தருள, அம்மாதரிருவரும் இவரைக்கண்டு திருவடிதொழுதவணங்க உங்களுக்கு என்னவரம் வேண்டுமென்று கேட்டருளினர். அவர்கள் எம்மை மணஞ்செய்துகொள்ளத் தேவரீரை வேண்டுகின்றோமென்றார்கள். அதற்கிணங்கின பிள்ளையார் அமுதவல்லியை இந்திரன் மகளாகி வளரவும் சுந்தரியைப் பூமியில் சிவமுனிமகளாகப் பிறந்து வேடரிடத்தில் வளரவும் கட்டளையிட்டு நீங்கள் அவ்வாறு வளர்ந்து வருகையில் நாமேவந்து உங்களை மணஞ்செய்து மருவுவோம் என்றருளிச்செய்து மறைந்தருளினார். அந்த மாதர் இருவரும் விடைபெற்றுச்செல்லும்போது, அவ்விருவருள் அமுதவல்லியானவள், இந்திரனுக்கெதிரே தான் ஒரு பெண் குழந்தையுருவாகி, உன்னுடன் பிறந்த உபேந்திரன் மகள் யான். என்னைக் காக்கவேண்டுமென, இந்திரனும் ஐராவதத்தை யழைத்து இந்தப்பெண் என் மகள். இவளை வளர்த்து வருவையாயின் நாம் மிகுந்த மேன்மையடைவோமென்றான். அந்தக் குழந்தையை அது தன் கழுத்தடியில் வைத்துக்கொண்டு, மனோவதி நகரத்திற்குக் கொண்டுபோய் அன்புடன் காத்துவந்தமையால் அப்பெண் தெய்வயானையெனப் பெயர்பூண்டு குமாரக்கடவுளைத் தியானம்செய்துகொண்டிருந்தாள். சுந்தரியென்பவளும் வள்ளிமலைச்சாரலில் சிவமுனிக்கு மகளாக நினைத்துச் சென்றாள். இதுநிற்க, சண்முகப்பெருமான் கந்தகிரியைவிட்டு கைலையை யடைந்து உமாமகேச்சுரரை வணங்கி வீற்றிருக்கையில் இந்திரன் முதலிய தேவர்கள் கைலையையடைந்து பரமசிவனைத்தொழுது, இறைவனே, சூரபன்மன் முதலியோரால் வருந்திமுறையிட எங்களுக்கு அபயந்தந்தருளின தேவரீர் சொற்படியே புதல்வனாகிய குமாரக்கடவுள் அவதரித்தும் இன்னும் எமது துன்பமொழியவில்லை. இனித்தாமதஞ் செய்யாமல் எங்களைக் காத்தருளவேண்டுமென்று விண்ணப்பஞ்செய்யக் கேட்ட பரமசிவன், குமாரனைநோக்கி, நீ போய்ச் சூரபன்மனை அவன் சுற்றத்தோடுகொன்று இந்திராதியருக்கு இன்பந்தந்து மீண்டு வரக்கடவையென்று கட்டளையிட, அவ்வாறே குமரவேள் அந்தக் கட்டளையை யேற்றுக்கொண்டார். அப்பொழுது உருத்திரர் பதினொருவரையும் அவருக்குப் படைகளாகச் செல்லக்கட்டளையிட்டு, எவ்வகைப்பட்ட வரம்பெற்றவரையும் அழித்தற்குரிய வேற்படையொன்றைப் படைத்துக்கொடுத்து, உக்கிரன், சண்டன் முதலிய கணநாதர்களையும் இலக்கத்தொன்பது வீரரையும் படைத்துணையாகச்செல்ல நியமித்து, அற்புதத்தேரையுங் கொடுத்து, தேவர்களுடைய குறைமுடித்துவாவென்று கட்டளையிட, குமாரக்கடவுளும் அக்கட்டளையை யேற்றுச் செல்லுஞ் சமயத்தில் இந்திரன் முதலிய தேவர்களையும் நோக்கி, நீங்களும் எமது புதல்வனுக்கு உதவியாகச் செல்லுங்களென்று கட்டளையிட்டார்.

விடைபெறுபடலம் முற்றிற்று.

# படையெழுபடலம்.

கண்ணுதல் விடைபெற் றரியயன் மகவான் கடவுளர் தம்மொடு கடிதி
னண்ணலங் குமரன் றன்னொடு சென்றே யயல்வரு மருத்தினை நோக்கித்
தண்ணளி புரியு மறுமுகத் தெந்தை தனிப்பெருந் தேர்மிசை நீபோய்ப்
பண்ணொடு முட்கோன் மத்திகை பரித்துப் பாகனாய்த் தூண்டெனப் பணித்தான்.

மன்புரி திருமா லினையன பணிப்ப மாருத னிசைந்தவன் செல்லும்
பொன்பொலி தேரின் மீமிசைப் பாய்ந்து பொருக்கென மருத்தவர் நாற்பா
னொன்பது திறத்தார் புடைவரத் தூண்டி யுவகையோ டறுமுகத் தொருவன்
முன்புற வுய்த்துத் தொழுதமற் றிதன்மேன் முருகநீ வருகென மொழிந்தான்.

மாருத னினைய புகன்றுகை தொழலு மற்றவன் செயற்கையை நோக்கிப்
பேரருள் புரிந்து கதிரிளம் பரிதி பிறங்குசீ ருதயமால் வரைமேற்
சேருவ தென்னக் குமரவே ளினைய செழுமணி யிரதமேற் செல்லச்
சூரினி யிறந்தா னென்றுவா சவனுஞ் சுரர்களு மார்த்தனர் துள்ளி. (௩)

வேறு.

ஓங்கு தேர்மிசைக் குமரவேண் மேவலு முவப்பா
லாங்க வன்றனை தருளபெறுந் திறலினோ ரணுகிப
பாங்கர் நண்ணினர் முனிவருந் தேவர்கள் பலரு
நீங்க லின்றியே யவர்புடை சூழ்ந்தனர் நெறியால். (௪)

இனைந்த னொடைவர் முருகனை யடைதலு மிருநீர்
புனைந்த சென்னியன் கைலையி லிருந்தவெம் பூத
ரனந்த வெள்ளத்தி லிராயிர மாகும்வெள் ளத்தர்
வனைந்த வார்கழற் றலைவர்தம் முறைகொடு வந்தார். (௫)

எழுவி யன்கதை நேமிவெஞ் சூலம்வா ளெறிவேன்
மழுமு தற்படை யாவையு மேந்திய வலியோர்
நிழன்ம திப்பிறை னொலிர்ந்தன நிலாவுமி ழெயிற்ற
ரழலு குத்திடும் விழியின ரசனியி னறைவார். (௬)

நெடியர் சிந்தினர் குறியின ரைம்பெரு கிறனும்
வடிவில் வீற்றுவீற் றெய்தினர் வாசடைக் கற்றை
முடியர் குஞ்சியர் பலவத னத்தரோர் முகத்தர்
கொடிய ரெண்ணினு மடைந்தவர்க் கருள்புரி குணத்தோர். (௭)

நீறு கண்டிகை புனைதரும் யாக்கையர் நெஞ்சு
சேறு கண்டனை யன்றிமற் றெவரையு மெண்ணார்
மாறு கொண்டவ ருயிர்ப்பலி நுங்குவோர் மறலி
வீறு கொண்டதொல் படைதனைப் படுத்திடு மேலோர். (௮)

அண்டம் யாவையு மாண்டுறை யுயிர்த்தொகை யனைத்து
முண்டு மிழ்ந்திட வல்லவ ரன்றியு முதரச்
சண்ட வங்கியா லடுபவ ரட்டவை தம்மைப்
பண்டு போற்சிவ னருளினால் வல்லையிற் படைப்போர். (௯)

முன்னை வைகலி னிறந்திடு மிந்திரன் முதலோர்
சென்னி மாலைகந் தரத்தினி லுரத்தினிற் சிரத்திற்
கன்ன மீதினிற் கரத்தினின் மருங்கினிற் கழலிற்
பொன்னின் மாமணிக் கலனொடும் விரவினர் புனைவார். (௧௦)

இந்த வண்ணமாஞ் சாரதப் படையின ரீண்டித்
தந்தம் வெஞ்சமர்த் தலைவர்க ளோடுசண் முகன்பால்
வந்து கைதொழு தேத்தியே யிறுதிசேர் வைக
லந்த மில்புன லண்டம துடைந்தென வார்த்தார். (௧௧)

ஆர்த்த சாரத ரெந்தைபா லாயின ரதுகாற்
பேர்த்து மாயவ ரிடித்தெனப் பூதரிற் பெரியோர்
வார்த்த யங்கிய தண்ணுமை திமிலைவான் படகஞ்
சேர்த்த காகள முதலிய வியம்பினர் சிலரே. (௧௨)

ஆன காலையி லதுதெரிந் தறுமுகத் தொருவன்
வான ளாவிய புணரிகள் சூழ்ந்திட வயங்கும்
பானு நாயகன் வந்தெனப பரந்துபா ரிடத்துச்
சேனை சூழ்தரக் கைலைநீத் தவனிமேற் சென்றான். (௧௩)

கொள்ளை வெஞ்சினச் சாரத ரிராயிரங் குணித்த
வெள்ளம் வந்திடக் கந்தவே ளவனிமேன் மேவக்
கள்ள வான்படை யவுணர்கள் கலந்துசூழ்ந் தென்னப்
பொள்ளெ னத்துக ளெழுந்தது வளைந்தது புவியை. (௧௪)

எழுந ருந்துகண் மாதிர வரைப்பெலா மேகி
யொழியும் வான்பதஞ் சென்றதா லங்கவை யுறுதல்
குழுவின் மல்கிய சாரத ரார்ப்பபுமுன் குறுகி
மொழிதல் போன்றன விண்ணுளோ ரிமைப்பில்கண் மூட. (௧௫)

கழிய டைத்திடு நேமிகள் பலவொடு ககன
வழிய டைத்திடு பூழியு மொலியுமன் னுயிர்கள்
விழிய டைத்தன நாசியை யடைத்தன விளம்பு
மொழிய டைத்தன வடைத்தன கேள்வியின் மூலம். (௧௬)

மேரி டங்களாந் தனுவுடைப் பூதர்கள் பெயரப்
பாரி டங்கடா மிடமபெறு வாதலிற் பல்லோர்
காரி டங்கொளும் வான்வழிச் சென்றனர் கண்டோ
ரோரி டங்களும் வெள்ளிடை யிலதென வுரைப்ப. (௧௭)

அவனி வானெலாம் பூழியான் மறைத்தலு மதனைச்
சிவன் மகன்றன தொளியினா லகற்றினன் செல்வான்
கவன வாம்பரி யிரதமேற் பனிபடுங் காலைத்
தவன நாயக னதுதடிந் தேகுதன் மையைப்போல். (௧௮)

ஆ. திருவிருத்தம் - கருஉ அ.

வசனம்.

பரமசிவனது திருவருள்பெற்றுப் பிரமன் முதலியோர் குமரக்கடவுள் சந்நிதியையடைந்துவணங்கினர், அவர்களுக்குள்ளே திருமாலானவர் வாயுதேவனை நோக்கி, நீ சண்முகப்பெருமானது திருத்தேர்செலுத்தும் சாரதியாயமையவேண்டுமென்று சொல்ல, அவனும் அதற்கிசைந்து தேரைச்செலுத்திக் கொண்டுவந்து குமரவேளை அதன்மீதேறும்படிவேண்ட, சண்முகப்பெருமான் அதிலேறியருளலும், தேவர்களெல்லாரும் இன்றே சூரபன்மன் மாண்டானென்று சொல்லி ஆநந்தக்கூத்தாடினர், பூதவெள்ளமும் புடைசூழ்ந்து ஆர்த்தனர், பூதரிற்பெரியோர் வெற்றி முரசறைந்தனர். இவ்வாறு புறப்படுகையில் எழுந்ததூளி விண்ணுலகத்தளவுஞ் சென்று பரவிற்று. பூமிமுதல் விண்ணுலகத்தளவும் புழுதியால் மறைக்கப்பட்டதனால், சண்முகக் கடவுளும் தன்திருமேனியின் பேரொளியால் அப்புழுதியை நீக்கிக்கொண்டு, சூரியன் பனிமறைவை நீக்கிச் செல்வதுபோலச் செல்லலாயினர்.

படையெழுபடலம் முற்றிற்று

# தாரகன்வதைப்படலம்.

வெம்மை தீர்ந்திடு மப்பெரு நெறியிடை விரைந்து
செம்மை சேர்தரு குமரவேள் படையொடு செல்ல
வம்ம சேர்ந்தது தாரகற குறையுளா யடைந்தோர்
தம்மை வாட்டியே யமர்கிர வுஞ்சமாஞ் சயிலம். (க)

விண்டு லாய்கிமிர் கிரவுஞ்ச கிரியினை விண்ணோர்
கண்டு எம்பதை பதைத்தனர் மகபதி கலக்கங்
கொண்டு நின்றன னாரத னணுகியே குமரன்
புண்ட ரீகநேர் பதந்தொழு தின்னன புகல்வான். (உ)

தூய நான்மறை யந்தணர் முனிவரிச் சுரத்திற்
போய வெல்லையி னெறியதாய் வர்வரப் புணர்த்து
மாய்வு செய்தபின் குறுமுனி சூளினிவ் வடிவா
யேய தொல்பெயர்க் கிரவுஞ்ச மால்வரை யிதுகாண். (ங)

நேரி லிக்கிரிக் கொருபுடை மாயநற் கரிற்
சூரெ னப்படு மவுணனுக் கிளவலாந் துணைவன்
போரி லச்சுத னேமியை யணியதாப் புனைந்தோன்
றார கப்பெயர் வெய்யவன் வைகினன் சயத்தால். (௪)

இன்ன வன்றனை யடுதியே லெளிதுகா ணினையோன்
முன்ன வன்றனை வென்றிட லெனமுனி மொழிய
மின்னு தண்சுடர் வேலவ னவற்றினை வினவி
யன்ன வன்றனை முடிக்குது மிவணென வறைந்தான். (௫)

வேறு.

சிறந்திடு முருகவே ளிணைய செப்பலு
நிறைந்திடு மமரரு மிறையு நெஞ்சினி
லுறைந்திடு கவலொரீஇ யுவகை யெய்தினா
ரிறந்தனன் றாரக னின்றே டேயென. (௬)

ஐயர்கள் பெருமகிழ் வடைய வாறிரு
கையுடை முருகனக் காலை தன்புடை
மெய்யரு ளெய்திய வீர வாகுவாந்
துய்யனை நோக்கியே யினைய சொல்லுவான். (எ)

உற்றவக் கிரிகிர வுஞ்ச மாகுமான்
மற்றத னொருபுடை மாய் நொச்சியுட்
செற்றிய வசுரர்தஞ் சேனை தன்னுட
னற்றமி ருரக னமர்தன் மேயினான். (அ)

ஏயுகின் றுணைவாக விலக்கத் தெண்மாக
ளாயிர வெள்ளமா மடல்கொள் பூதர்கள்
சாய்வறு தலைவர்க டம்மொ டேகியே
நீயவன் பதியினை வளைத்தி நேரிலாய். (கூ)

தடுத்தெதிர் மலைந்திடு மவுணர் தானையைப்
படுத்தனை தாரகப் பதகனெய்துமே
லடுத்தம ரியற்றுதி யரிய தேவியா
முடித்திட வருகுது முந்து போவென்றான். (க0)

நலமிகு குமரவே ணவில வின்னணம்
வலமிகு சிறப்புடை வாகு நன்றெனத்
தலைமிசைக் கூப்பிய கரத்தன் றாழ்ந்துமுன்
னிலமிசை யிறைஞ்சின னேர்ந்து நிற்பவே. (கக)

ஏந்தலுந் துணைவரா மிலக்கத் தெண்மரை
யாய்ந்திடு பூதரை யாதி நோக்கியே
வாய்ந்திடு பெருந்திறல் வாகு தன்னுடன்
போந்திடு மவுணரைப் பொரவென் றேவினான். (கஉ)

ஏவலு மனையவர் யாரு மெம்பிரான்
பூவடி வணங்கியே போதற் குன்னலு
மாவியு ளாவியா மமலன் பாங்குறுந்
தேவர்கள் கம்மியற் கிதனைச் செப்புவான். (கங)

மேதகு பெருந்திறல் வீர வாகுவை
யாதியர் தமக்கெலா மளிக்கும் பான்மையா
லேதமி லாதபல் லிரத நல்கென
வோதின னுலகெலா முதவுந் தொன்மையோன். (கச)

அத்திறங் கேட்டதோ ரமரர் கம்மிய
னுத்தமோர் மாத்திரை யொடுங்கு முன்னரே
சித்திர வயப்பரி சீயங் கூளிக
ளித்திறம் பூண்டபல் லிரத நல்கினான். (கரு)

வேறு.

அன்ன தேர்த்தொகை யதனை யெம்பிரான்
மின்னு காலவேல் வீர வாகுவும்
பின்ன ரெண்மரும் பிறருஞ் சாரத
மன்ன ரும்பெற வழங்கி னனரோ. (கசு)

பாகர் தூண்டிடப் படருந் தேர்கண்மேல்
வாகை சேர்தரும் வாகு வேமுத
லாகி னோரடைந் தம்பொன் மால்வரைத்
தோகை மைந்தனைத் தொழுது போற்றினர். (௧௭)

தொழுது வள்ளலைச் சூழ்ந்து மும்முறை
விழுமி தாகிய விடைபெற் றேகினர்
பழுதி னீத்தமோர் பதது நூறெனக்
குழுமிப் பாரிடங் குலவிச் செல்லவே. (௧௮)

பாய பூதர்தம் படைக்கு வேந்தரா
யேயி னோர்க்குவீ றிலக்கத் தெண்மராய்
மேயி னோர்க்கெலாம் வீர வாகுவோர்
நாய கம்பெறீஇ நடுவட் போயினான் (௧௯)

அமர் விளைக்குமந் தவனை யேவியே
தமர வேலையிற் றானை சூழ்தர
விமைய வாக்கிறை யேனை யோர்தொழக்
குமர வேள்கடைக் கூழை யேகினான். (உ0)

வேறு.

பிற்பட வெம்பிரான் பெயர வேவலாள்
முற்படு வீரனை முயங்கிப் பாரிடச்
சொற்படை படாவன தூமந் தன்னொடு
சிற்பர னகையழல் புரத்துச் சென்றபோல் (உ௧)

அரிநிரை பூண்டதே ரலகை பூண்டதேர்
பரிநிரை பூண்டதோ படைக்கு ழாமுவ
விரிகடல் வரைபயினின் மேக ராசியுங்
கிரியுறழ் கலங்களுங் கெழுமிச் செல்வபோல் (உஉ)

இடையுக விரதமோ டிரதந் தாக்கிய
படையொடு படைவகை செறிந்த பல்வகைக
கொடியொடு கொடிநிரை துதைந்த கூளிய
ரடுசமர் பயின்றிடு மமைதி போலவே. (உ௩)

சங்கொடு பணைதுடி தடாரி காகளம
பங்கமி றண்ணுமை யாதிப் பல்லிய
மெங்கணு மியம்பின வெழுந்து பூழிபோய்ச
செங்கம லத்தவன் பதத்தைச் செம்மிற்றே. (உ௪)

சாற்றுமிவ் வியல்புறத் தானை வீரருஞ்
சீற்றவெம் பூதருஞ் செல்ல வாகையான்
கோற்றொழி லகற்றிய கோட்டு மாமுகன்
போற்றிய மாயமா புரியைச் சேர்ந்தனன். (உ௫)

வேறு.

சேர்ந்திடு மெல்லை பூதர் சேனைபோய் நகரம் புக்கு
நேர்ந்திடு மவுண ரோடு நின்றமர் விளைத்து நின்று
ரோர்ந்தன ரதனைத் தூத ரோடித்தங் கோயில் புக்குச்
சார்ந்திடு திருவில் வைகுந் தாரகற் றொழுது சொல்வார். (உ௬)

எந்தைமற் றிதுகே ளும்மு னிமையவர் தொகையை யிட்ட
வெந்துயர்ச் சிறையை நீக்க விரிசடைக் கடவுண் மைந்தன்
கந்தனென் றொருவன் வந்தா னவுணரைக் கடக்கு மென்னு
வந்தர நெறிசெல் விண்ணோ ரறைந்திடக் கேட்டு மன்றே. (௨௭)

என்னிவர் மாற்ற மென்னு யாந்தெரி குற்றே மாக
வன்னவ ரியம்பி யாங்கே யாயிரத் திரட்டி யென்னப்
பன்னூறு பூத வெள்ளம் படர்ந்திடக் குமரன் போந்தான்
முன்னூறு தூசி நந்த மூதுநக ரலைத்த தென்றார். (௨௮)

என்றலும் வடவைத் தீயி லிழுதெனு மளக்கர் வீழத்
துன்றிய வெழுச்சி மானத் தூண்ணெனச் செற்றந் தூண்ட
மின்றிக ழரிமா னேற்று வியன்றவி சிருக்கை நீங்கிக்
குன்றுறழ் மகுட மண்ட கோளகை தொடவெ ழுந்தான் (௨௯)

எழுந்துதன் மருங்கு நின்ற வொற்றரை நோக்கி யிந்தச்
செழுந்திரு நகர்மேல் வந்த சேனையை முனிபுற் கானிற்
கொழுந்தழல் புகுந்த தென்னக் கொல்வனந் தானை முற்று
முழுந்துருள் கின்ற முன்ன ரொல்லைதந் திடுதி ரென்றான். (௩௦)

வேறு.

அன்னபணி முறைபுரிவா ரொற்றுவர்கள் போயிடலு மவுண னின்ற
கொன்னுறுவேற் பரிசனரைக் கொடுவருதி ரிரதமெனக் கூற லோடு
முன்னமொரு நொடிவரையிற் றந்திடலு மதனிடையே மொய்ம்பிற் புக்குப்
பின்னர்வரு மமைச்சாகடந் தொகைபரவ மதர்ப்பினொடு பெயர்த லுற்றான்.

வீடுவான் போலுமினித் தாரகனென் றவன்சீரத்தி விரைவில் வந்து
கூடியே புரள்வதுவு மரற்றுவதுங் காபபதுமாங் கொள்கைத் தென்ன
நீடுசா மரத்தொகுதி பலவிரட்ட வெள்ளொளிய னிமிர்ந்து வீசப
பீடுசேர் தவளமதிக் குடைநிழற்ற வலம்புரிகள் பெரிது மார்ப்ப. (௩௨)

ஈமத்தே நடம்புரியுங் கண்ணுதலோ னெடாதசிலை யென்ன மாலோன்
மாமத்தே யெனக்கிடந்த முழுவயிரத் தண்டமொன்று வயிரக் கண்டைத்
தாமத்தோர் பெறுகின்ற மடங்கல்பல வீர்த்துவருஞ் சகடத் திண்காற்
சேமத்தோர் மிசைப்போத வேனையபல படைக்கலமுஞ் செறிந்து நண்ண.

ஒற்றர்கூ வியவேலை யேற்றெழுந்த வவுணர்கட லொருங்கு செல்லக்
கொற்றமால் கரிபரிதே ரினத்தினொடு வந்தீண்டக் குழுவித் திங்கட்
கற்றைவார் சடைக்கடவுள் வாங்கியபொன் மால்வரையைக் காவ லாகச்
சுற்றுமால் வரையென்னப் படைத்தலைவர் பஃறேரிற் றுவன்றிச் சூழ.

மொய்யமர்செய் கோலமொடு முப்புரமே னடந்தருளு முக்கண் மூர்த்தி
பையரவின் றலைத்துஞ்சுங் கணைதூண்ட மூண்டதழல் பதக ரானோர்
மெய்யுடல முழுதுநுங்கித் தலைக்கொள்ளப் பெருந்தூமமிசைக்கொண் டென்னச்
செய்யமுடி யவுணர்பெருங் கடலினிடை யெழும்பூழி சேட்சென்றோங்க.

கார்க்குன்ற மன்னதிறற் கரிமீதும் பரிமீதுங் கடிதிற் றூண்டுந்
தேர்க்குன்ற மதன்மீதும் வயவர்கடங் கரங்களினுஞ் செறிப தாகை
யார்க்கின்ற துயர்த்தோங்கி யசைகின்ற தெம்மருங்கு மம்பொ னாட்டிற்
றூர்க்கின்ற பூழியினைத் துடைக்கின்ற பரிசேபோற் றுவன்றித் தோன்ற.

வாகையுள பல்லியமு மியம்பத்தன் னகர்நீங்கி மன்னர் மன்ன
னேகியதோர் படிநோக்கி யுவரிமிசைக் கங்கைகள்வந் தெய்து மாபோற்
சாகையுள பன்மரனும் பல்படையுங் குன்றுகளுந் தடக்கை யேந்திச்
சேகுடைய பெருஞ்சீற்றப் பூதர்படை யார்த்தெதிர்ந்து சென்ற தன்றே.

எல்லோருந் தொழுதகைய குமரனடி யிணைவழுத்தி யிகல்வெம் பூதர்
கல்லோடு மரனோடுங் கதையோடுங் கணிச்சியொடுங் கழுமுள் வீசு
வில்லோடுங் கணையோடும் வேலோடு நேமியொடு மிக்க வெல்லா
மல்லோடும் புரையுமனத் தவுணர்படை யெதிர்சிதறி யமர்செய் திட்டார்.

வேறு.

எண்ணுறு படைக ளிவ்வா றெதிர்தழீஇ யடரும் வேலை
விண்ணுறு பூழி யென்னும் விரிதரு புகைமீச் செல்ல
மண்ணுறு குருதி யான வன்னியை மாற்று வார்போற்
கண்ணுறு மிமையோர் கண்கள் கடிப்புனல் கான்ற வன்றே (௩௯)

இரிந்திட லின்றி நேர்வந் தேற்றமர் புரித லாலே
சொரிந்திடு குருதி பொங்கத் தோளொடு சென்னி துள்ளச்
சரிந்திடுங் குடர்கள் சிந்தத் தானவர் பல்லோர் மாயப்
பொருந்திறல் வயத்தான் மேலாம் பூதருஞ் சிலவர் பட்டார். (௪௦)

தேருடைத் தெறிந்து பாய்மாத் திறத்தினைச் சிதைத்து நீக்கி
யாருடைத் திகிரிச் சில்லி யங்கையா லெடுத்துச் சுற்றிப்
போருடைத் திறலோர் தம்பாற் பொம்மென நடாத்தும் பொற்பாற்
காருடைப் பூதர் சில்லோர் கண்ணனே போன்றா ரன்றே. (௪௧)

தேர்பரித் தெழுந்து மண்ணிற் செல்லுறாப் பவளச் செங்காற்
கார்பரித் தன்ன தோகைக் கவனவாம் புரவி யீட்டம்
போர்பரித் தொழுகு சீற்றப் பூதர்கள் புடைத்துச் சிந்திப்
பார்பரித் திடவே செய்தார் படிமக ளிடும்பை தீர்ப்பார். (௪௨)

வாலுடைக் களிற்றி னீட்டம் வாரியே கரத்தா லெற்றிக்
காலுடைத் திகிரித் திண்டேர் கழல்களா லுருட்டிக் காமர்
பாலுடைப் புரவித் தானை பதங்களா லுழக்கிச் சென்றார்
வேலுடைத் தடக்கை யண்ணல் விடுத்தருள் வீர வீரர். (௪௩)

வாருறு புரசை பூண்ட வன்களிற் றொருத்தல் யாவுஞ்
சூருறு நிலைய வாகித் துஞ்சிய தொகுதி சூழப்
பேருறு குருதி நீத்தம் பிறங்கழற் கதிர்கா லுதா
காருறு வூர்கோ டோன்றுங் காட்சியை யொத்த தன்றே. (௪௪)

கண்ணெதிர் நின்று போர்செய் கார்கெழு மவுணர்ப் பற்றித்
தண்ணெனப் பூதர் வீசத் துளங்கிய கலன்க ளோடும்
விண்ணிடை யிறந்து நொய்தின் வீழ்வது விசும்பிற் றப்பி
மண்ணிடை மின்னு வோடும் வருமுகில் போன்ற தன்றே. (௪௫)

ஆயிர வெள்ள மாகுங் கணவரு மாங்க ணுள்ள
பாயிருங் குன்ற மெல்லாம் பன்முறை பறித்து வீசி
மாயிருந் தருவர் தானை வரம்பில படுத்து நின்றா
ரேயென வுலகைச் சிந்து மிறுதிநா ளெழினி போல்வார். (௪௬)

கிணங்கவர் ஞமலி யோர்சார் ஞெரேலெனக் குரைப்பப் புள்ளின்
கணங்களு மலகை தானுங் கறங்கிடக் ககனத் தோங்கிப்
பிணங்களி னடுக்க லீண்டிப் பேரமர் விலக்கி யார்க்கு
மணங்குறு நிலைய வாகி யடுத்தன நடுவ ணம்மா. (௪எ)

தரைத்தடஞ் சிலைய தாகத் தறுகண்வெம் பூத ராஞோர்
வரைத்துணை யன்ன தாளே வலிகெழு குழவி யாகத்
திரைத்திழி குருதி நீராத் தீர்ந்திடு திறலோர் யாக்கை
யரைத்தென நடப்ப வேற்று ரவுணரு மடுபோர் செய்வார். (௪அ)

தத்துறு புரவித் திண்டேர்த் தானவர் கிளைத் தந்தி
பத்துநா ரொன்றில் வீழப் பழுமரப் பிணைகொண் டெற்றி
முத்தலை யெஃகம் வீசி முசலத்திற் புடைத்து மொய்ம்பாற்
குத்தினின் றுழக்கிப் பாய்ந்து கொன்றனர் பூத வீரர். (௪௯)

விழுந்தன படிவம் யாண்டும் விரிந்தன கவந்த மேன்மே
லெழுந்தன குருதித் தாரை யீர்த்தன நீத்த மாக
வழுந்திய விறந்தோர் யாக்கை யார்த்தன பறவை செய்ய
கொழுந்தசை மிசைந்து நின்று கூரவையாட் டயர்ந்த கூளி. (௫0)

கண்டன னினைய தன்மை தாரகன் கடிய சீற்றங்
கொண்டனன் வைய நீங்கிக் குவலய மிசைக்குப் புற்றுத்
தண்டமொன் றெடுத்துப் பூதப் படையினைத் தரையில் வீட்டி
யண்டமுங் குலுங்க வார்த்திட் டடிகளா லுழக்கிச் சென்றான். (௫௧)

அல்லெனப் பட்ட மேனி யவுணர்கட் கரசன் கையிற
கல்லெனப் பட்ட தண்டாற புடைத்தலுங் கரங்கள் சென்னி
பல்லெனப் பட்ட சிந்திப பாய்புன லொழுக்கிற் சாய்ந்த
புல்லெனப் பட்ட வம்மா பூதர்தஞ் சேனை யெல்லாம். (௫௨)

பிடித்திடு வயிரத் தண்டம் பெருங்கடற் பூத வெள்ள
முடித்திடல் புகழோ வன்றூற் றூரக மொய்ம்பின் மேலோ
னடித்திடுங் காலை நீண்ட தமபுவி யடிப்பா ஞேங்கி
யெடுத்திடுங் காலை நீண்ட தெண்டிசை யண்டச் சூழல். (௫௩)

தாரிடங் கொண்ட மாாபத தாரகன் வயிரத் தண்டம்
போரிடங் கொண்டோர் சென்னி புயமுரங் கரங்கள் சிந்திக்
காருடங் கண்ட பாந்தட் கணமெனத் துடிப்ப வீட்டிப
பாரிடந் தன்னை யெல்லாம பாரிட மாக்கிற னம்மா. (௫௪)

அன்றரி விடுத்த வாழி யாரமா வணிந்த தீயோன்
கொன்றன னனிக மென்னுங் கொள்கையு மவன்மேற் செல்லும்
வன்றிற றம்பா லிலலா வண்ணமு மதித்து நோக்கி
நின்றிலர் பூதர் வேந்தர் நெஞ்சழிந் துடைந்து போனார். (௫௫)

திண்கண் கிரையின் வேந்தர் சிந்துழிச் சீற்றந் தூண்ட
வெண்கண மாகி யுள்ள விலக்கருஞ் சிலைகா லூன்றி
மண்கனை முழவம் விம்ம வயிரெழுந் திசைப்ப வாங்கி
யொண்கணை மாரி தூவி யவுணனை யொல்லை சூழ்ந்தார். (௫௬)

சூழ்ந்தனர் துரந்த வாளி தோன்முகத் தவுணன் யாக்கை
போழ்ந்தில வூறு தேனும் புணர்த்தில புன்மை யாகித்
தாழ்ந்திடு நிரப்பின் மேலோ னொருமகன் றலைமை தாங்கி
வாழ்ந்தவர் தமக்குச் சொல்லுஞ் சொல்லென வறிது மீண்ட (௫௭)

தரைபடப் புகழ்வைத் துள்ள தாரகன் றடமார் பத்தைப்
புரைபடச் செய்தி டாது பொள்ளெனப் பட்டு மீண்டு
திரைபடத் திறலோ ருய்த்த நெடுங்கணை யான வெல்லாம்
வரைபடச் சிதறுங் கல்லின் மாரிபோ லான வன்றே. (௫௮)

விடுகணை மாரி யாவு மீண்டிட வெகுண்டு விண்ணோர்
படைமுறை வழங்கி நிற்பப் பதகன்மே லவைக ளெய்தா
வுடையதம் வலியுஞ் சிந்தி யொல்லென மறிந்து செல்லக்
கடவுள ரதனை நோக்கிக் கரங்குலைத் திரங்க லுற்றார். (௫௯)

மற்றது காலை தன்னில் வலியினன் வயிரத் தண்டஞ்
சுற்றினன் றற்சூழ் கின்ற சுடர்மணிக் கடுமான் றேரக
வெற்றினன் புழைக்கை நீட்டி யிலக்கர்தந் தொகையும் வாரிப
பொற்றனு வோடும வீழப் புணரியின் மீது விட்டான். (௬௦)

துளும்பிய வளக்கர் தன்னிற் சூழுற நின்ற தெங்கின்
வளம்படு பழுக்காய் வர்க்க மாருத மெறியச் சிந்திக்
குளம்புகு தன்மை யென்ன வீழ்தரு கொற்ற வீர
ரிளம்பிறை புரையும் வில்லோ டெழுந்தொரு புடையிற் போனார். (௬௧)

கொற்றவி லுழவன் வீர கோளரி யதனை நோக்கிச
செற்றமொ டேகிச் செவ்வேள் சேவடி மனத்துட் கொண்டு
பற்றிய தனுவை வாங்கிப் பகழிநூ றுய்த்துத் தீயோன்
பொற்றட மவுலி தள்ளிப் புணரியு நாண வார்த்தான். (௬௨)

ஆர்த்திடு மோதை கேளா வண்டர்க ளனையன் மீது
தூர்த்தனர் மலரின் மாரி தோன்முக னதனைக் காணா
வோர்த்தனன் மான முற்றான் வீரகே சரிமே லங்கைத்
தார்த்தடந் தண்ட முய்த்துத் தனதுமான் றேரிற் சென்றான். (௬௩)

வேறு.

சென்றோர் மாமுடி புனைவுழித் தண்டமத் திறலோன்
மன்றன் மார்பகம் படுதலும் வீழ்ந்தனன் மயங்கி
வென்றி மொய்ம்புடை யாண்டகை யதுகண்டு வெகுண்டு
குன்ற மன்னதோட் டாரக னெடுபொரக் குறித்தான். (௬௪)

வேறு.

குறித்தேவிறற் புயன்றாரகக் கொடியோனெதிர் குறுகி
வெறித்தேன்மலர்த் தொடைதூங்குதன் விறற்காமுகங் குனியாப்
பொறித்தேயுறு கனல்வாளிகள் பொழிந்தேயவன் புரத்திற்
செறித்தேயுற வலைத்தானொரு சிலைதானவர் தலைவன். (௬௫)

பொழிந்தான்சர மழைநம்முவன் புரமேலது பொழுதி
னிழிந்தான்சிலை யுயர்த்தான்கணை யீரேழுதொட் டிறுப்ப
வழிந்தாயெனை யெதிர்ந்தாயிதற் கையமிலை யென்னா
மொழிந்தானொரு சூலந்தனை மொய்ம்பிறசெல வுய்த்தான். (௬௬)

பொருமூவிலே வேலங்கவன் பொன்மார்புறப் பொருமிப்
பெருமோகமொ டேகின்றிடப் பின்னங்கது காணு
வுருமேறென வதிர்தாரக னுடனேயவன் றுணையாய்
வருமூவரு மொருநால்வரு மாறுற்றம ரிழைத்தார். (௬எ)

அமர்செய்திடு மெழுவீரரு மவுணன்றனக் குடையக்
குமரன்பதந் தலைக்கொண்டிடுங் கோமானது காணு
வெமர்மற்றிவ ரெல்லோர்களு மிரிந்தார்பொரு தென்னுச்
சமர்முற்றிட வருதாரகத் தகுவன்முன மடைந்தான். (௬அ)

ஒருகார்முக மிருகால்வளை வுறவேகுனித் தருகே
னருகாதொழு கியதன்மையி னவிர்நாணொலி யெடுப்பத்
திருகாநெடு வரையானவுந் தெருமந்தன வவுண
ரிருகாதையு நனிபொத்தின ரேங்குற்றன ரிரிவார். (௬௯)

நாண்கொண்டிடு மொலிகேட்ட லுநடுங்காவெரு வுற்றார்
பூண்கொண்டிடு சிலைவாங்கலு மகிழ்வுற்றிடு புலவோர்
சேண்கொண்டிடு முகில்வேண்டின ரதுவந்திடச் சிறந்தே
மாண்கொண்டத னுருமுச்செல மயங்கித்தளர் வதுபோல். (எ0)

வேறு.

மேதா வியர்கள் பரவுந்திறல் வீர வாகு
மாதாரு வன்ன சிலைதன்னை வளைத்து வாகைத
தாதார் பிணையல் புனைதாரகன் றன்னை நோக்கித்
தீதா மழல்போல் வெகுண்டேயிது செபபு கின்றான். (எக)

பொன்றா வலிகொண் டமராடிய பூதர் தம்மை
வன்றாழ் சிலைகொண் டிடுவீரரை வன்மை தன்னால்
வெனறா மெனவுன் னினைபோலும் விரைந்து நின்னைக்
கொன்றாவி யுண்ப னெனவுங்கொடி யோனு ரைப்பான். (எஉ)

மாயன் றனைவென் றவனேமியை மாசில் கண்டத்
தேயும் படியே புனைந்தேன்வலி யெண்ணு றாதே
நீயிங் கடுவா மெனக்கூறினை நீடு மாறறஞ்
சீயந் தனையு நரிவெல்வது திண்ண மாமோ. (எ௩)

சாருங் குறளவெம் படையாவையுஞ் சாய்ந்த வீர
ராருந் தொலைவுற் றனர்நீயு மயர்ந்து நின்றாய்
வீரம புகல்வாய் விளிகின்ற விளக்க நேர்வாய்
பாரென் வலியா லுனதாவி படிப்ப னென்றான். (எச)

என்னுந் துணையிற் சரமாயிர மேந்த லுய்ப்பத்
தன்னங் கையிலோர் சிலைவாங்கினன் றூர கப்போர்
மன்னன் கடிது கணையாயிர மாறு தூண்டிச்
சின்னம் புரிந்து கணைநூறு செலுத்தி னானால். (எரு)

எவ்வக் கொடியோன் றெடுவாளியை யேந்தல் காணு
வவ்வக் கணைகள் விடுத்தேயவை முற்று மாற்றக்
கைவிற் கொருவ னிவனாகுமிக் காளை தன்னைத்
தெய்வப் படையான் முடிப்பேனெனச் சிந்தை செய்தான். (எ௬)

வேறு.

வெங்க ணற்படை தார கன்விட வீர வாகு வெருண்டுபின்
செங்க ணற்படை யேவி யன்னது சிந்த வேவரு ணப்படை
யங்க ணுய்த்திட வவுணர் கோமக னடுபு னற்கிறை படையினைத்
துங்க முற்றிய வீர னுய்த்தது துண்ட மாம்வகை கண்டனன். (௭௭)

இரவி தன்படை யவுணன் விட்டன னிவனு மப்படை யேவியே
விரைவி லன்னது தொலைவு கண்டனன் வீர மேதகு தாரக
னுரமி குந்தனி யூதை வெம்படை யுந்தி னனது கந்தவே
ளருண்மி குந்தனி யடியன் மாற்றின னனைய தொல்படை தனைவிடா. ()

அனில வெம்படை வீற ழிந்திட வவுணர் கோமக னம்புயன்
றனது தொல்படை யேவி னனது தணிவில் செற்றமொ டேகலும்
வனைக ருங்கழல் வீர வாகுவு மற்ற வன்படை தூண்டியே
யினையு முன்னது தொலைவு செய்தன னிகரில் வானவர் புகழவே. (௭௯)

ஆய தன்மைகள் கண்டு தாரக னற்பு தத்தின னாகியே
மேய வானவர் படைகள் யாவையும் வீரன் மற்றிவன் வென்றனன்
மாய நீர்மையி னிங்கி வன்றிறல் வன்மை கொள்ளுது மினியெனாத்
தீய புந்தியி னினைய வாறு தெரிந்து சிந்தனை செய்துமேல். (அ௦)

தொல்லை மாயையின் விஞ்சை தன்னை நவின்று ளங்கொடு துண்ணென
மலலன் மேவரு தார காசுரன் வடிவ மெண்ணில தாங்கியே
யெல்லை தீர்தரு படைவ ழங்கின னெங்கு மாகி யிருட்குழா
மொல்லை வந்து பரந்த போலவ ளொருவ னின்றமா புரியவே. (அ௧)

கண்டு மற்றது வானு ளோர்கள் கலங்கி யேங்கினர் முன்னரே
விண்டு நீளிடை நின்ற பூதர் வெருண்டு பின்னரு மோடினார்
மண்டு பேரமர் செய்த யர்ந்திடு மான வீரரு மச்சமேல
கொண்டு நின்றனர் முறுவல செய்தனர் குணலை யிட்டன ரவுணரே. ()

வேறு.

தார கப்பெய ரவுணர்கோன் மாயையின் சமரு
மாரு மச்சுறு கின்றது மாடன்மொய்ம புடையோன்
பேர முற்பொறி கதுவுற நோக்கியே பிறங்கும
வீர பத்திர னெடும்படை யெய்த்தனன் விடுவான். (அ௩)

துங்க வுக்கிரச் சிம்புண்மாப் படையினைத் தூயோன
செங்கை பற்றலு மன்னது தாரகன் செயலா
லங்க ணின்றிடு மாலயகண் டச்சமுற றழுங்கிப்
பொங்கு பானுமுன் னிருளென முடிந்ததப் பொழுதே (அ௪)

தன்பு ணர்ப்புறு மாயைதா னுடைதலுந் தமியாய்
முன்பு நின்றதோர் தாரகன் மொய்ம்புளான் றன்னைப
பின்பு மாயையிற் படுத்தவோர் சூழ்ச்சியைப் பிடித்து
மின்பொ லிந்ததன் றேரைவிட் டோடினன் விரைவில். (அ௫)

தார கன்றொலைத் தோடலுந் தனக்கிணை யில்லோன்
போர ழிந்துவென் னிட்டவன் றன்மிசைப் புக்தேன்

வீர வெம்படை விடுப்பது வீரமன் றென்னாச்
சீரி தாகிய தூணியு ளன்னதைச் செறித்தான். (அ௬)

அற்ற போர்வலித் தாரகன் பின்விரைந் தனுகிப்
பற்றி நாண்கொடு புயந்தனைப் பிணித்தெனைப் பணித்த
கொற்ற வேலன்மு னுய்க்குவன் யானெனக் குறித்து
மற்ற வன்றனைத் தொடர்ந்தன னெடுந்திறல் வாகு. (அ௭)

வேழ மாமுகற் கிளவலை யுன்னியே வீர
னாழி மால்கட லாமென வார்த்துவை தனுகச்
சூழு மாயையி னிருக்கையாந் தொல்கிர வுஞ்சப்
பாழி யொன்றுசென் றொளித்தனன் சூரகப் பதகன். (அ௮)

முன்ன மாங்கவன் போகிய பூழையுண் முடுகிப்
பொன்னின் வாகையந் தோளுடை யாண்டகை புகலு
மன்ன தோர்வரை யகமெலா மாயிரங் கதிரின்
மன்ன னேகுறு விருணிலம் போன்றுவை கியதே. (அ௯)

நீளு மாவிருள் படர்தலுஞ் சில்லிடை நெறியாற்
றாளி னூற்றியே படர்ந்தனன் சூரகற் காணா
னாளி மொய்ம்புடை மேலையோ னடிக்கலின் புணர்பபான்
மீளு கின்றதோர் நெறியையுங் கண்டிலன் வெருண்டான். (௯0)

செற்ற மிக்கவன் மாயையிவ் வரையெனச் சிந்தித்
துற்ற காலையி லவுணனு கியகிர வுஞ்சப
பொற்றை யன்னது கண்டுமோ கததுயில் புரிந்து
மற்ற வன்றன துணாவினை மையல்செய் ததுவே. (௯க)

இயலி சைததமிழ் முனிவர னிசைத்தசூ ளிசைவால
வியலு டைத்திறல் வாகுவை யவவரை மிகவு
மயலு டைப்பெரு மாயம தியறறலு மயங்கித
துயில லுற்றனன் றொல்லையி லுணர்வெலாந் துறந்தே. (௯உ)

அம்ம லைக்கணே முன்னவ னுறங்கலு மனைய
செம்ம லுக்கிளை யோரிரு நாலவருஞ் சிறந்த
தம்பி னத்தரோ ரிலக்கருஞ் சாரதர் பலரும்
விம்ம லுற்றனர் சிறையிலாப் பறவையின் மெலிந்தார். (௯௩)

உடைந்து போயின தாரகன் றன்னைநம் முரவோன்
றொடர்ந்து சென்றனன் மீண்டில னவனொடுந் துன்னி
யடைந்து வெற்பினிற் போர்புரி வான்கொலோ வங்கட்
படர்ந்து நாடுதும் யாமுமென் றெண்ணினர் பலரும். (௯௪)

எண்ணி யேயிசைந் தினையரோ ரெண்மரு மிலக்க
நண்ணும் வீரரும் பாரிடந் தன்னுறு யகரு
மண்ணல் வான்படை யேந்தியே யாயிடை யகன்று
விண்ணு லாவுறு கிரவுஞ்ச மெய்தினர் விரைவில். (௯௫)

ஆய வெற்பினில் வீரவா குப்பெய ரடலோன்
போய பூழையுண் மற்றவர் யாவரும் புகலுந்

தீய தொல்வரை முன்னவற் கிழைத்திடு திறம்போன்
மாய மெண்ணில புரிதலு மயங்கியே வதிந்தார். (௯௬)

வெற்றி வீரவா குப்பெய ரண்ணலும் வீரர்
மற்றி யாவரு மயங்கலுந் தாரகன் வாரா
வுற்று நோக்கிநம் மாயையா லிவரெலா மொருங்கே
யிற்று ளாரென மகிழ்ந்துமால் வரைமிசை யெழுந்தான். (௯௭)

அண்ட மீமிசை நின்றவா னவர்களிவ் வினைத்துங்
கண்டு கட்புனல் பனிவர வரற்றியே கலங்கிக்
கொண்ட துன்பொடு பதைபதைத் தோடினர் கூளித்
தண்டம் யாவையும் வெருவின தலைவரின் மையினால். (௯௮)

மலையின் மீமிசை யெழுதரு தாரகன் மற்றோர்
தலைமை யாகிய விரதமேல் கொண்டுதா னவர்கள்
பலரும் வந்துவந் தார்த்தனர் சூழ்தரப் பைம்பொற்
சிலைய தொன்றினை வாங்கியே செருநிலஞ் சென்றான். (௯௯)

நீடு தன்சிலை நாணொலி கொண்டுநீள் சரங்கள்
கோடி கோடிமற் றொருதொடை யாகவே கொளுவி
யாடல் சேர்தரு பூதர்மேற் பொழிதலு மலமந்
தோட லுற்றனர் திசையினும் விண்ணினு முலைந்தே (௧00)

ஆன காலையி னாரத னினையகண் டழுங்கி
மேனி துண்ணென வியாபபுற வழிகொடு விரைந்து
போன விண்ணவர் தமமொடு சென்றுபுத் தேளிர்
சேனை காவல னின்றமதார் கடைக்கூழை சோர்ந்தான். (௧0௧)

அரிது மாதவம புரிதரு நாரத னடலின
விரவு மாயிரம் பூதவெள் ளத்தொடு மேவுங்
கருணை சேரறு முகத்தனைக் கண்டுகண் களித்துச
சுரர்க ளோடுபோ யிறைஞ்சியே யினையன சொல்வான். (௧0௨)

ஐய நின்படை வீரர்கள் பெருஞ்சம ராடி
வெய்ய தானவர் தானைகள் வரவர வீட்டிச
செய்ய மந்திரித் தலைவரை யமைச்சரைச செற்றுப்
பொய்யின் மொய்மபுடைத் தாரகன் றனனொடும் பொருதார். (௧0௩)

தலைக்க ணாகிய வீரனுந் தம்பியா மிறரு
மிலக்க வீரரும் பாரிடத் தலைவர்கள் யாரும்
புலைக்கொ டுந்தொழிற் றாரகன் றன்னொடும் பொரத்தன்
மலைக்க ணுய்த்தன னவாதமைச் சூழ்ச்சியின் வலியால். (௧0௪)

உய்த்த காலையி லவுணனா கியகிர வுஞ்ச
மெத்து மாயைக ளினையவர்க் கிழைத்தலும் வெருவிப்
பித்த ராமென மயங்கினர் போலுமாற் பின்ன
ரித்தி றந்தனை யுணர்ந்தனன் றாரக னென்போன். (௧0௫)

தெரிந்து தாரகன் மகிழ்வொடு பறந்தலை சென்று
துரந்து நம்பெருந் தானையைக் கணைமழை சொரிய

முரிந்து போயின நிகழ்ச்சியி னுயிர்த்தொகை முற்று
மிருந்த நாயக வறிதியே யாவையு மென்றான். (௧0௬)

என்ற காலையி னாரத னுள்ளமு மிமையோர்
நின்று தாமயர் கின்றது மமரர்கோ னெஞ்சிற்
றுன்று சோகமு நான்முக னாதியோர் துயரு
மொன்ற நோக்கியே யறுமுகப் பண்ணவ னுரைப்பான். (௧0௭)

வேறு.

அருமிது கேண்மினம ராடிகளை னேகித்
தாரகனை வேல்கொடு தடிந்தவுணர் வைகு
மோரரண மானகிர வுஞ்சகிரி செற்றே
வீரர்தமை யோரிறையின் மீட்டிடுவ னென்றான். (௧0௮)

எந்தையிவை கூறுதலும் யாருமவை தேர்ந்து
சிந்தையுறு கின்றதுயர் செற்றுமுடி வில்லா
வந்தமின் மகிழ்ச்சியுட னாடியிசை பாடிக்
கந்தனடி வந்தனை புரிந்தனர் களிப்பால். (௧0௯)

கந்தமுரு கேசனது காலமுது பாகாய்
வந்ததொரு வந்தினை மகிழ்ச்சியொடு நோக்கிச்
சிந்தைதனின் முந்தும்வகை தேரதனை வல்லே
யுந்துதி விரைந்தென வுரைத்தருள லோடும். (௧௧0)

என்னவினி தென்றுதொழு தேழுவ கைத்தாந்
தன்னினம தாகியவர் தாங்கள்புடை போதக்
கொன்னுனைய தாமுளவு கோல்கயிறு பற்றித்
துன்னுபரி மாநிரைக டூண்டிமிக வார்த்தான். (௧௧௧)

வேறு.

ஆன காலைதனி லண்டமும் வையந்
தானு மங்குள தடங்கிரி யாவு
மேனை மாகடலு மெண்டிசை யுள்ள
மான வேழமு நடுங்கின மன்றே (௧௧௨)

வாவு கின்றபல மாநிரை தூண்டத
தேவர் தங்கள்சிறை தீரிய செல்வோன்
மேவு தொல்லிரதம் விண்ணெறி கொண்டே
யேவரும் புகழ வேகிய தன்றே. (௧௧௩)

ஆதியங் குமர னவ்வழி பொற்றேர்
மீது செல்லுதலும் விண்முகில் பல்வே
றோதும் வண்ணமுட னுற்றென வானிற்
பூத சேனைபுடை போயின வன்றே. (௧௧௪)

போர ழிந்துபுற கிட்டெதிர் பூத
ராரு நேர்ந்துதொழு தாற்றலொ டெய்த
நார ணன்றனது நன்மரு காளென்
றூர கன்றிகழ் சமர்க்கள முற்றான். (௧௧௫)

கவன மோடுபடர் காலினு முந்திச்
சிவன் மகன்றனது சேனைய தானோ
ருவரி யாமென வுறுந்திற நோக்கி
யவுணர் தானையை யணிந்தெதிர் சென்றார். (௧௧௬)

சகந் துதிக்கவரு சாரதர் தாமு
மகந்தை யுற்றவவு ணத்தொகை யோரு
மிகந்த வன்மையொ டெதிர்ந்திக லெய்தி
வெகுண்டு பேரமர் விளைத்திட லுற்றார். (௧௧௭)

கரங்கொ ணேமிகள் கணிச்சிக டவாய்ச்
சரங்க ளாதியன தானவர் விட்டா
ருரங்கொண் மால்வரைக ளோங்கு மெழுக்கண்
மரங்கள் விட்டனர் மறங்கெழு பூதர். (௧௧௮)

முரிந்த தேர்நிரை முடிந்தன மாக்க
ணெரிந்த தானவர் நெடுந்தலை சோரி
சொரிந்த பூதாமெய் துணிந்தன வானிற்
றிரிந்த பாறுகள் செறிந்தன வன்றே. (௧௧௯)

நிறங்கொள செங்குருதி நீத்தம தாகிக்
கறங்கி யோடின கவந்தமொர் கோடி
மறங்கொ டாடுவ வயின்றொறு மாகிப்
பிறங்கு கின்றன பிணங்கெழு குன்றம் (௧௨௦)

அனைய வாறிவ ரருஞ்சம ராற்றப்
புனையல் வாகையுள பூதர்க டம்மால்
வினையம் வல்லவுணா வெவவலி சிந்தி
யினைத லோடுமிரி குற்றன ரன்றே. (௧௨௧)

தன்ப டைதொலைவு தாரக னோக்கிக்
கொன்ப டைத்தகுனி விற்குனி வித்தே
மின்ப டைத்தபல வெங்கணை தூவி
வன்ப டைக்கணம் வருந்த நடந்தான். (௧௨௨)

நடந்தெ திர்ந்தகண நாதரை யெல்லாந்
தொடாந்து பல்கணை சொரிந்து துரந்தே
யிடர்ந்தி கழ்ந்தவிம யத்திறை நல்கு
மடந்தை தந்ததிரு மைந்தன்மு னுற்றான். (௧௨௩)

உற்ற காலைதனி லொற்றரை நோக்கிச்
சற்று நீதியறு தாரக வெய்யோன்
செற்ற மென்னுமழல் சிந்தையின் மூள
மற்றி வன்கொலரன் மாமக னென்றான். (௧௨௪)

என்ன லுங்குமர னிங்கிவ னேயா
மன்ன வென்றிட லு மற்றவ னேறுந்
துன்னு தேர்கடி து ண்டி யெவர்க்கு
முன்ன வன்முதலை முன்னுற வுந்தான். (௧௨௫)

வேறு.

முழுமதி யன்ன வாறு முகங்களு முந்நான் காகும்
விழிகளி னருளும் வேலும் வேறுள படையின் சீரு
மழகிய கரமீ ராறு மணிமணித் தண்டை யார்க்குஞ்
செழுமல ரடியுங் கண்டா னவன்றவஞ் செப்பற் பாற்றோ. (௧௨௬)

தற்பம துடைய சிந்தைத் தாரக னினைய வாற்றாற்
சிற்பர மூர்த்தி கொண்ட திருவுரு வனைத்து நோக்கி
யற்புத மெய்தி நம்மே லமர்செய வந்தா னென்றாற்
கற்பனை கடந்த வாதிக் கடவுளே யிவன்கொ லென்றான். (௧௨௭)

இந்தவா றுன்னிப் பின்னர் யார்க்குமே லாகு மீசன்
றந்ததோர் வரமும் வீரத் தன்மையும் வன்மைப் பாடு
முந்துதாம் பெற்ற சீரு முழுவது நினைந்து தேறிக்
கந்தவே டன்னை நோக்கி யினையன கழற லுற்றான். (௧௨௮)

நாரணன் றனக்கு மற்றை நான்முகன் றனக்கும் வெள்ளை
வாரணன் றனக்கு மல்லான் மதிமுடி யமல னுக்குந்
தாரணி தனிலெ மக்குஞ் சமரினை யிழைப்ப விங்கோர்
காரண மில்லை மைந்தா வந்ததென் கழறு கென்றான். (௧௨௯)

அறவினை புரிந்தே யார்க்கு மருளொடு தண்டஞ் செய்யு
மிறையவ னுரு மீச னிமையவர் தம்மை நீங்கள
சிறையிடை வைத்த தன்மை திருவுளங் கொண்டு நுந்தம்
விறலொடு வன்மை சிந்த விடுத்தன னெம்மை யென்றான். (௧௩௦)

வேறு.

கூறிய வேற்படைக் குமர நாயகன்
பேரரு ணிலைமையா னினைய பேசலும்
போரினை யிழைத்திடும் பூட்கை யாமுகத்
தாரக னென்பவன் சாற்றன் மேயினான். (௧௩௧)

செந்திருத் திகழுமார் புடைய செங்கணான்
சுந்தரக் கலுழன்மேற் றோன்றிப் போர்செய்தே
யந்தரக் கதிர்புரை யாழி யுய்த்ததென்
கந்தரத் தணிந்தது காண்கி லாய்கொலோ. (௧௩௨)

இன்றுகா றெம்முட னிகலிப் போர்செயச்
சென்றுளார் யாவருஞ் சிறிது போழ்தினுட்
பொன்றுவா ரிரிந்தனர் போவ ரல்லது
வென்றுளா ரிலையது வினவ லாய்கொலோ. (௧௩௩)

முட்டிவெஞ் சமரினை முயல முன்னநீ
விட்டிடு தலைவரை வென்று வெற்பினிற்
பட்டிட வியற்றினன் பலக ணங்களை
யட்டன னவற்றினை யறிந்தி லாய்கொலோ. (௧௩௪)

ஆகையா லெம்முட னமரி யற்றியே
சோகம தடையலை சூல பாணிபா

லேகுதி பாலநீ யென்று கூறலும்
வாகையங் குமரவேள் மரபிற் கூறுவான்.

தாரணி மறையவன் றநீசி தன்மிசை    உகஎ
நாரணன் விடுத்ததோர் நலங்கொ ளாழிதன்
கூரினை யிழந்துபோய்க் குலாலன் சக்கர
நீர்மைய தானது வினவ லாய்கொலோ.    (௬)

சூற்புயன் மேனியான் றங்கச செங்கையின்
பாற்படு திகிரிபோற் பழியிற் றஞ்சுமோ
வேற்புறு படைக்கெலா மிறைவ னாதநம
வேற்படை நின்னுயிர் விரைவி னுண்ணுமால்.    (கநஎ)

உங்கள்பே ராற்றலிவ் வுலகை வென்றன
விங்குநாம் வருதலு மிமைப்பின் மாய்ந்தன
வங்கண்மா ஞாலமுண் டபரு மாரிருள்
பொங்குபே ரொளிவர விளிந்து போனபோல்.    (கநஅ)

ஈட்டிய மாயைக ளனைவையுந் தன்வழிக்
காட்டிய கிரியையுங் கள்வ நின்னையுந்
தீட்டிய வேல்கொடு செற்றுச் சேனையை
மீட்டிடு கின்றனன் விரைவி னாலென்றான.    (கநகூ)

என்றலுஞ் சீற்றமே யிகலி தாரகன்
குன்றுறழ் தன்சிலை குனியக் கோட்டியே
மின்றிகழ் நாணொலி யெடுப்ப விண்மிசைச்
சென்றிடு மமரருந் தியக்க மெய்தினர்.    (கசo)

எய்திய காலையி லெந்தை கந்தவேள்
கைதனி லிருந்ததோர் கார்மு கந்தனை
மொய்தனில் வாங்கினான் முழக்கங் கோடலு
மைதென வுலகெலா மழுங்கிற றென்பவே.    (கசக)

நாரியின் பேரொலி நாதன் கோடலு
மாரணன் முதலினோர் தாமு மஞ்சினார்
பேருல கெங்கணும் பேதுற் றேங்கின
தாரக முதல்வனுந் தலைது ளக்கினான்    (கசஉ)

துளக்கிய தாரக சூரன் கைத்தலங்
கொளற்குரி விலலுமிழ் கொள்கைத் தாலென
வளக்கறு நூனைகெழு வயிர வான்கணை
யளக்கரு மெண்ணில வார்த்துத் தூண்டினான்.    (கசங)

ஆயதோர் காலையி லாறு மாமுகன்
மீயுயர் சிலைதனின் விரைவி லாயிரஞ்
சாயகந் தூண்டியே தார காசுர
னேயின பகழிக ளியாவுஞ் சிந்தினான்.    (கசச)

சிந்திய காலையிற் செயிர்த்துத் தாரக
னுந்தினன் பின்னரு மொராயி ரங்கணை

மனையது கண்டு வல்லையி
னூரு பகழிதொட் டவற்றை நீக்கினான். (கசரு)

டுமைத் தாரகன் விசிகம் வெஞ்சிலை
ட்டிய வாங்கலும் புராரி காதல
னீட்டமொ டொருகணை யேவி யாங்கவன்
ரேட்டுணை வில்லினைத் துண்ட மாக்கினான். (கசசு)

வேறு.

அங்கோர் சிலையைக் குனித்தானது காலை தன்னி
லெங்கோ முதல்வ னொருபாணியி னேந்து வில்லிற்
செங்கோல் வகையா யிரமபூட்டினன் செல்ல வுய்த்தான்
வெங்கோ னடாத்தி வருதாரக வெய்யன் மீதில். (கசஎ)

சேரார் பரவுந் திறல்வேலவன் செய்கை நோக்கித்
தாரார் முடித் தாரகவீரன் றனது வில்லி
லோரா யிரம்வா ளிகள்பூட்டின னெல்லை யுய்த்து
நேராய் விரவுங் கணையாவையு நீறு செய்தான். (கசஅ)

வெய்யா னநந்தங் கணைதூண்ட விமல னல்குந்
துய்யா னவைக ளறுத்துக்கணை கோடி தூண்டி
மையா ரவுணர் புகழ்தாரக மான வேழ
மெய்யாகும் வண்ணஞ் செறித்தானவன் யாக்கை யெங்கும். (கசகூ)

ஒருகோடி வாளி யுறலோடு முருத்து நீச
னிருகோடி வாளி விடவன்னதை யேவி னீக்கி
முருகோ டியதா ரகசுரேசன் முகங்கொள் கையும்
பொருகோடும் வீழ விடுத்தானிரு புங்க வாளி. (கருo)

வந்தங் கிரண்டு சரமும்பட மாயை மைந்தன்
றந்தங்கள் கையோ டறலோடுந் தளர்ச்சி யெய்தி
முந்துங் கணையா யிரந்தன்னை முனிந்து தூணடிக்
கந்தன் றடந்தேர்த் துவசந்துகள கண்டு நின்றான். (கருக)

மல்லற் கொடியிற் றதுகண்டு மறங்கொள் வெய்யோன்
வில்லைக் கணைநான் கிரண்டானில மீது வீட்டித்
தொல்லைக் கனலின் கணையாயிரந் தூண்டி யன்னோன்
செல்லுற்ற திண்டேர் பரிபாகொடு சிந்தி நின்றான். (கருஉ)

வேறங் கொருதேர் மிசையேறியொர் வில்லை வாங்கி
யாறைந் திருதீ விசிகந்தனை நொய்தி னேவி
மாறின் றிவரும் பரமன்வடி வான செவ்வே
ளேறுந் தடந்தேர் வலவன்புயத தெய்த வுய்த்தான். (கருங)

வென்றோர் புகழுங் குமரன்வியன் றேர்க டாவிச்
சென்றோன் வருத்தந் தெரிந்தாயிரந் தீய வாளி
வன்றோன் முகத்தா ரகனெற்றியுண் மன்ன வுய்ப்பப்
பொன்றேய் தனது தடந்தேரிற் புலம்பி வீழ்ந்தான். (கருச)

வீழ்உற் றிடலும் விழுசெம்புனல் வெள்ள மி[illegible]க
தாழுற் றபாரிற் புகுந்தேபுடை சார்த லுற்ற

பாழிக் கடலிற் பரிமாமுகம் பட்ட செந்தீச்
சூழிக் களிற்றின் வதனத்தினுந் தோன்று மென்ன. (கருச)

மன்னு கியதா ரகனங்கண் மயங்கி வீழ
வன்னுன் றனது படைவீர ரதனை நோக்கிக்
கொன்னார் சினங்கொண் டடுபோரைக் குறித்து நம்பன்
றுன்னு ளுதவுந் திறன்மைந்தனைச் சூழ்ந்து கொண்டார். (கருரு)

சூலந் திகிரிப் படைதோமரந் துய்ய பிண்டி
பாலஞ் சுடர்வே லெழுநாஞ்சில் பகழி தண்ட
மாலங் கணையங் குலிசாயுத மாதி யாக
வேலும் படைகள பொழிந்தார்த்தன ரெங்கு மீண்டி. (கருஎ)

கறுத்த னவர்தஞ் செயல்கண்டுதன் கார்மு கத்தை
நிறுத்தா வியாக் கணைமாமழை நீட வுய்த்து
மறுத்தா னுடைய கொடுந்தானவர் வாகை சிந்தி
யறுத்தான் விடுதொல் படையாவையு மாடல் வேலோன். (கருஅ)

வெய்தா கியதீங் கணைமாரிவி சாகன் மீட்டும்
பெய்தா னவுணர் முடிதன்னைப் பிறங்கு மார்பைத்
துய்தா னுறும்வா யினையங்கையைத் தோளைத் தாளைக்
கொய்தான் குருதிக் கடலெங்கணுங் கொண்ட தன்றே. (கருகூ)

வில்லோர் பரவுந் திறல்வேலவன் வெய்ய கோலா
லல்லோ டியதீ மனத்தானவ ராயி னோரிற்
பல்லோ ரிறந்தாற் குருதிக்கடல் பாய்ந்து நீந்திச்
சில்லோர் கடதத முயிர்கொண்டு சிதைந்து போனார். (கசூ0)

மைக்கார் சிவந்த தெனுந்தாரகன் மைய னீங்கி
யக்காலை தன்னி லெழுந்தேயயல் போற்றி நின்று
தொக்கார் தமையா ரையுங்காண்கிலன் றுன்ப மெய்தி
நக்கா னவர்தஞ் செயல்கண்டு நவிற லுற்றான். (கசூக)

வேறு.

செய்ய வார்சடை யீச னல்கிய சிறுவ னிங்கொரு வன்போரக்
கையி மூந்து முகத்தி னூடு கவின்கொள் கோடு மிழந்தனன்
மைய லெய்தி விழுந்தனன் பொரும் வலிய தானையு மாண்டன
வைய னிங்கொரு தமிய னின்றன னழகி தாலென தாண்மையே. (கசூஉ)

தாவில் வெஞ்சிலை வன்மை கொண்டு சரங்க ளெண்ணில தூண்டியே
மேவ லானிவ னுயிர்கு டிப்பதும் வெல்லு கின்றது மரியதாற்
றேவர் மாப்படை தொடுவ னிங்கினி யென்று சிந்தனை செய்துபி
னேவ ரும்புகழ் தார காசுர னினைய செய்கை யியற்றினன். (கசூங)

வேறு.

அடலரி நான்முக னாதி வானவப்
படையினை யாவையும் பலஞ்செய் தாரகன்
விடவிட ந்தவை வெருவி மேலையோன்
புடைதனி லொடுங்கியே போற்றி நின்றவே. (கசூச)

செங்கண்மா லயன்முதற் றேவர் மாப்படை
தங்கமோ டேகியே துளங்கி வேலுடைப்
புங்கவன் பாங்கிற் போற்றி நிற்றலு
மங்கது கண்டன னவுணர் மன்னவன். (கசுரு)

ஒருவின னகந்தையை யுள்ள மோரிறை
வெருவினன் விம்மித மிகவு மெய்தினான்
னெரிகலுழ் விழியின னிவனை வென்றிட
லரியது போலுமென் றகத்தி லுன்னினான். (கசுசு)

பாங்கரின் மாதுடைப் பரமன் றொல்படை
யீங்கினி விடுதுமென் றெண்ணி யப்படை
வாங்கின னருச்சனை மனத்தி னாற்றின
னோங்கிருஞ் சினமுட னெல்லை யேவினான். (கசுஎ)

சங்கரன் றொல்படை தறுக ணாலமும்
புங்கவர் படைகளும் பூத ராசியு
மங்கத நிரைகளு மளப்பில் சூலமும்
வெங்கன லீட்டமும் விதித்துச் சென்றதே. (கசுஅ)

கலைகுலாம் பிறைமுடிக் கடவுண் மாப்படை
யலகிலா வுயிர்களு மண்டம் யாவையு
முலைகுறு தலமர வுருத்துச் சேறலு
மிலைகுலா மயிலுடை யெந்தை நோக்கினான். (கசுகூ)

கந்தவே ளனையது கண்டு தந்தையைச்
சிந்தையி லுன்னியோர் செங்கை நீட்டியே
யந்தவெம் படையினை யருளிற பற்றினான்
றந்தவன் வாங்கிய தன்மை யென்னவே. (கஎ0)

நெற்றியில் விழியுடை நிமலன் காதலன்
பற்றிய படையினைப பாணி சேர்த்தினான்
மற்றது தாரக வலியன் கண்ணுற்றீஇ
யிற்றது நந்திரு வினியென் றேங்கினான். (கஎக)

தேவர்க டேவனார் தெய்வத் தொல்படை
யேவின னதனையு மெதிர்ந்து பற்றினான்
மூவிரு முகமுடை முதல்வன் வன்மையை
நாவினி லொருவரா னவிறற் பாலதோ. (கஎஉ)

ஆயினு மரன்மக னறத்தின் போரலாற்
றீயதோர் கைதவச் செருவ துன்னலான்
மாயைக ளாற்றியே மறைந்து நின்றுநா
னேயென வியற்றுவ னமரென் றெண்ணினான். (கஎங)

கையனு மிவ்வகை கருத்தி லுன்னியே
யொய்யென வேகிர வுஞ்ச வெறபின்முன்
வையமொ டேகிநீ வல்ல மாயைகள்
செய்குதி செய்குதி யென்று செப்பினான். (கஎச)

வேறு.

செப்பிய கிறுவரை கிரவுஞ்சத் திகழ்வுறு மாயையி னிகழ்வுள்ளி
முப்புர வகைபல வெனநிற்ப முரணுறு தாரக முதல்வன்று
னப்புர நிருதர்க ளெனநின்று னகல்வரை பலபல முகிலாக
வொப்பறு சூரன திளையோனு முருமென வவையிடை யுலவுற்றான். ()

வேலைக ளுருவினை வரைகொள்ள விசயம தடையமொ ரசுரேசன்
காலம திறுதியி லுலகுண்ணுங் கனையொலி யனலிக ளெனநின்றான்
நீலமின் முதகிரி நெடுநேமித் திருவரை சூழ்தரு மிருளாக
மால்கரி முகமுள வவுணன்றான் வரையறு பாரிட நிரையானான். (களசு)

இந்திரன் முதலுள சுரர்வைகு மேழுட னொருதிசை வேழம்போ
லந்த நெடுங்கிரி வரலோடு மருகினி லுறுகுல கிரியாகித்
தந்தியின் முகமுள வவுணன்றான் சடசட முதிரொலி யுடன்வந்தான்
முந்திய தந்தம துருமாறி முறைமுறை நின்றதொர் திறனேபோல். ()

வாயுவி னுருவென மலைசெல்ல மதகரி முகமுள பதகன்றான்
றேயுவி னுருவென வரலுற்றான் றிரியவு நெடுவரை விரைவோடுங்
காய்கன லுருகுஞெகி ழிகளாகிக் ககனம திடையுற மிடைகாலை
யாயிர கோடிவெய் யவரேபோ லலமர லுற்றன னறமில்லான். (களஅ)

அவ்வகை தாரகன் வரையோடு மளவறு மாயையின் வடிவெய்தி
யெவ்விடை யுஞ்செறி தரலோடு மெம்பெரு மானவ னிவைகாணுத்
தெவ்வலி கொண்டிறு மிவனுவி சிந்துவ னென்றுள மிசைகொண்டே
கைவரு வேற்படை தனைநோக்கி யினையன சிலமொழி கழறுற்றான். ()(179)

தாரக னென்பதொர் பேரோனைச் சஞ்சல முறுகிர வுஞ்சத்தை
யோரிறை செல்லுமு னுடல்கீறி யுள்ளுயி ருண்டு புறத்தேக்ப
பாரிடர் தம்மையி லக்கத்தொன் பதின்மர்க ளாக வுரைக்கின்ற
வீரரை மீட்டிவண் வருகென்றே வேற்படை தன்னை விடுத்திட்டான். ()(180)

சேயவன் விட்டிடு தனிவைவேல் செருமுய றாரகன் வரையோடு
மாயிடை செய்த புணர்ப்பெல்லா மகிலமு மழிதரு பொழுதின்கண்
மாயையி னாகிய வுலகெங்கு மவிதரு முயிர்களு மதிரூநீங்
தூயவன் விழியழல் சுடுமாபோற் றுணவென வட்டது சுராபோற்ற. ()(181)

வேறு.

அரண்டரு கழற்கா லைய னறுமுகத் தெழுந்த சீற்றந்
திரண்டொரு வடிவின் வேறாய்ச் சென்றதே யெனவு நான்கு
முரண்டரு தடந்தோ ளண்ணன் முத்தலை படைத்த சூல
மிரண்டொரு படையாய் வந்த தென்னவு மேகிற் றவ்வேல். (கஅஉ)

முடித்திட லரிய மாய மூரிநீர்க் கடலை வற்றக்
குடித்திடு கின்ற செவ்வேற் கூற்றம்வந் திடித லோடுந்
தடித்திடு மெயிற்றுப் பேழ்வாய்த் தாரக னிதனைப் பற்றி
யொடித்திடு கிற்பே னென்னு வொல்லென வுருத்து வந்தான். (கஅ௩)

அச்சமோர் சிறிது மில்லா வவுணர்கோ னுவணன் மேற்செ
னச்சர வென்னச் சீறி நணுகலு மவன்மார் பென்னும்

வச்சிர வரையின் மீது வானுரு மேறுற் றென்னச்
செச்சையந் தெரியல் வீரன் செலுத்தும்வேல் பட்ட தன்றே. (கஅச)

தாரகன் மார்ப மென்னுந் தடம்பெரு வரையைக் கீண்டு
சீரிய கிரவுஞ் சத்திற் சேர்ந்துபட் டுருவிச் சென்று
வீரமும் புகழுங் கொண்டு விளங்கிய தென்ன வங்கட்
சோரியுந் துகளு மாடித் துண்ணென மீண்ட தன்றே. (கஅரு)

மீண்டிடு சீற்ற வைவேல் வெற்பினுட் டுஞ்சுகின்ற
வாண்டகை வீரர் தம்மை யாயிடை யெழுப்பி வான்போய்
மாண்டகு கங்கை தோய்ந்து வாலிய வடிவா யையன்
றாண்டிய கரத்தில் வந்து தொன்மைபோ லிருந்த தம்மா. (கஅசு)

தண்டம தியற்றுங் கூர்வே றாரக வவுணன் மார்பும்
பண்டுள வரையும் பட்டுப் பறிந்தபே ரோசை கேளா
விண்டது ஞால மென்பார் வெடித்தது மேரு வென்பா
ரண்டம துடைந்த தென்பா ராயின ரகிலத் துள்ளோர். (கஅஎ)

வடித்ததை யன்ன கூர்வேன் மார்பையூ டறுத்துச் செல்லத்
தடித்திடு கின்ற யாக்கைத் தாரக னநந்த கோடி
யிடித்தொகை யென்ன வார்த்திட் டிம்மென வெழுந்து துள்ளிப்
படித்தலந் தன்னில் வீழ்ந்து பதைபதைத் தாவி விட்டான். (கஅஅ)

தடவரை யனைய மொய்ம்பிற் றாரகன் வேலாற் பட்டுப்
புடவியில் வீழா நின்றான் பொளளென வானிற் றுள்ளிக்
கடவுடைந் தென்ன வார்க்குங் காலையிற கலக்க மெய்தி
யுடுகண முதிர்ந்த தஞ்சி யோடின னிரவி யென்போன். (கஅகூ)

தளர்ந்திட லில்லா வீரத் தாரகன் பட்டு வானிற்
கிளர்ந்தனன் வீழ மெல்லைக் கீழுறு பிலமும் பாரும்
பிளந்தன வரைகள் யாவும பிதிர்ந்தன வதிர்ந்த தண்ட
முளந்தடு மாறி யோலிட் டோடின திசையில் யானை (ககூ௦)

தண்ணளி சிறிது மில்லாத் தாரகன் கிளாந்து வான்போய்
மண்ணிடை மறிந்த தன்மை வன்சிறை யிழந்த நாளிற்
றிண்ணிய மேரு விண்ணுஞ் செல்லலாங் கொல்லென் றுன்னி
விண்ணிடை யெழுந்து வல்லே வீழ்ந்ததே போலு மன்றே. (ககூக)

வெற்றிய தாகுங் கூர்வேல் வெற்பினை யட்ட காலைச்
செற்றிய பூழி யீட்டஞ் சிதறிய பொறிக ளெங்கும்
பற்றிய புகையும் வந்து பரந்தன கரந்த தண்டம
வற்றிய கடல்கள் வானிற் கங்கையும் வறந்த தன்றே. (ககூ௨)

சிறந்திடு மாய வெற்பைத் திருக்கைவேல் பொடித்த காலைப்
பிறந்திடு கின்ற தீயைத் தீயெனப் பேச லாமோ
வறிந்தவர் தெரியிற் குன்ற மவுணனு கையினன் மெய்யி
னுறைந்திடு குருதி துள்ளி யுகுத்தவா றுகு மன்றே. (ககூங)

யானுற்ற குன்றந் தன்னை யெறிந்தன னென்று செவ்வே
டானுற்ற நதியை வந்து தடிந்ததே யென்ன வெற்பி

ஞானுற்ற நெடுவேல் பாய வுதித்திடும் பொறியி னீட்டம்
வானுற்ற கங்கை புக்கு வறந்திட விடுத்த தன்றே. (க௯௪)

திறலுடை நெடுவே லட்ட சிலம்பினிற் சிதறித் தோன்றும்
பொறிகளுந் துகளு மார்ப்பும் பொள்ளெனச் செறிந்த தன்மை
மறிகடன் முழுது மங்கண் வடவையு மடைந்தொன் றாகி
யிறுதியி னுலகங் கொள்ள வெழுந்தது போலு மாதோ. (க௯௫)

தந்தியின் வதனங் கொண்ட தாரக வவுணன் மார்பிற்
சிந்துறு குருதிச் செந்நீர் திரைபொரு தலைதது வீசி
யந்தமி னீதத மாகி யயிற்படை யட்ட குன்றில்
வந்திடு பூழை புக்கு மறிகடன் மடுத்த தன்றே. (க௯௬)

விட்டவேன் மீண்டு கந்த வேள்கரத் திருப்பத் தீயோன்
பட்டதும் வெற்பு மாய்ந்த பான்மையு மவுணர் யாருங்
கெட்டது நோக்கி மாலுங் கேழ்கிளர் கமலத் தேவு
முட்டிலா மகத்தின் வேந்து முனிவருஞ் சுரரு மார்த்தார். (க௯௭)

ஆடினர் குமரற் போற்றி யங்கைக ளுச்சி மீது
சூடினர் தண்பூ மாரி தூர்த்தன ரவனைச் சூழ்ந்து
பாடினர் தொழுது முன்னம் பன்முறை பணிந்து நின்றார்
நீடிய வுவகை யென்னு நெடுங்கட லாழு நீரார். (க௯௮)

ஆங்கது காலை தன்னி லளப்பிலா மாயை வல்ல
வோங்கல திறப்ப வங்க ணுறங்கிய வீர ரெல்லாந்
நீங்குறு மைய னீங்கிக் கதுமெனச் சென்று செவ்வேள்
பூங்கழல் வணங்கி நின்று போற்றியே புடையி னின்றார். (க௯௯)

வாருறு கழற்கால் வீர வாகுவே முதலா வுள்ள
வீரர்க டம்மை யெல்லாம் வேலுடைக் கடவு ணோக்கித்
தாரகன் வரையுட் பட்டுத் தருமுணர் வின்றி நீவி
ராருநொந் தீர்கள் போலு மாயையு டழுந்தி யென்றான். (உ௦௦)

செய்யவ னினைய வாறு சீரருள் புரிய வீர
ரையநின் னருளுண் டாக வடியமு றடைவ துண்டோ
மையலோ டிறங்கு வாரபோன் மருவுமின புறற தன்றி
வெய்யதோர் கிரிமா யத்தான் மெலிந்தில மிறையு மென்றார். (உ௦க)

என்றலும் வீரர் மொய்ம்பி னேந்தலை விளித்துச் செவ்வேள்
வென்றிகொள் சூரன் பின்னோன் விட்டிடத் தான்முற கொண்ட
வன்றிறற் படையின் வேங்கை மற்றவன் கரத்தி னல்கி
நன்றிது போற்று கென்றே நவின்றுநல் லருள்பு ரிந்தான். (உ௦உ)

தாரகன் போரிற் றுஞ்சுஞ் சாரதர் தம்மை யெல்லா
மாருநீ ரெழுதி ரென்று வவரெலா மெழவே செய்து
பாரிட வனிகஞ் சூழப பண்ணவர் பரவல் செய்யச்
சீரிய வயவ ரீண்டச் செருகில மகன்றான் செவ்வேள். (உ௦௩)

ஆகத்திருவிருத்தம் - க௩௩க.

வசனம்.

இவ்வாறு தமதுபடைகளோடு பிள்ளையார் விரைந்துசெல்லும்போது, தாரகனுக்குறைவிடமாய்த் தன்னையடைந்தோரை வருத்துவதாகிய கிரவுஞ்சகிரியானது எதிர்ப்பட்டது. அந்தச்சமயத்தில் நாரதமுனிவர் வந்து சரவணப்பெருமானை வணங்கி இந்தமலை அகத்தியமுனிவரது சாபத்தால் இப்படி யடங்கிக்கிடக்கிறது. இதற்கருகேயுள்ள மாயாபுரியில் சூரபன்மனுக்குத் தம்பியாகிய தாரகன் இருக்கிறான். அவன் திருமாலோடு முன்னொருகாலத்தில் போர்செய்யும்போது அவர் சக்கரத்தையேவ, அதை வலியடக்கி ஆபரணமாகப்பூணடுகொண்டவன். இவனை முன்னேவென்றால் பின்பு சூரபன்மனை வெல்வது எளிதாகும் என்றுசொல்ல, அச்சொல்லைச் சண்முகக்கடவுள் திருச்செவிசாத்தியருளி, வீரவாகுதேவரைநோக்கி, நீபோய் மாயாபுரியிலிருக்கிற தாரகனைக்கொன்று வெற்றியடைந்துவருவாயாக, யாமும் பின்னேவருவோமென்று கட்டளையிட, அவரும் அதற்கிசைந்து இலக்கத்தெண்மரும் பூதவீரரும் புடைசூழப் போக்கெழுந்துசெல்வாராயினர். அப்பொழுது குமரவேளானவர் விசுவகர்மாவைநோக்கி, வீரவாகு முதலியோருக்குப் பல தேர்களைப் படைத்துத்தரவேண்டுமென்று கட்டளையிட அவனும் அவ்வாறே படைத்துக்கொடுத்தான். பின்பு வீரவாகுதேவர் மாயாபுரியையடைந்துநின்றதைத் தூதரோடித் தாரகனுக்குச்சொல்ல, அவன் வடவைத்தீப்போலச் சினந்தெழுந்து, தன்படைகளோடு தேரேறிச்சென்று, வீரவாகுதேவர் படைகளோடு தன்படைகள் கைகலந்து போர்செய்யப் பொருதான். அப்படி போர்செய்த இருதிறப்படைகளில் அநேகர்மாய்ந்தார்கள். வீரகேசரியானவன் நூறுபாணங்களைப் பிரயோகித்துத் தாரகனுடைய மணிமுடியைத்துணித்து வீழ்த்தி ஆரவாரித்தான். தாரகனும் தன் கையிலிருந்த தண்டாயுதத்தை வீரகேசரிமேல் எறிய அதுபட்டு அவன்மயங்கிவிழுந்தான். அதுகண்டு வீரவாகுதேவர் சினங்கொண்டு தனது வில்லைவளைத்து நாணேற்றிப் பாணமழைபொழிந்து தாரகனுடைய வில்லைத்துணித்து வீழ்த்தினர். தாரகன் வீரவாகுதேவர்மீது ஒரு சூலத்தையெடுத்தெறிந்தான். அதனால் அவர் சற்றுநேரம் ஒன்றுந்தோன்றாதிருந்தனர். அப்போது அவரோடு வந்தவீரரெழுவரும் சினந்து போர்செய்ய, அவர்களையும் தாரகன் சோர்வடையச்செய்தலும் அது கண்ட வீரவாகுதேவர் தாரகனைநோக்கி, நீயென்படைவீரரை மயக்கிவீழ்த்தினோமென்று களித்திருக்கின்றனைபோலும் இன்னுஞ் சிறிதுநேரத்தில் உன்னைக் கொன்றுவிடுகிறேன் பாரென்றுசொல்ல, தாரகன், அவரைநோக்கி, நீயும் உன்படைவீரரும் இதுவரையிற்பட்டபாடு தெரிந்திருந்தும் வீணவீரம் பேசுகின்றனை, திருமாலின் சக்கராயுதம் என்கண்டாபரணமாயிருப்பதைப் பார் என்றுசொல்லி வில்வளைத்து ஆயிரக்கணக்கான பாணங்களைத்தொடுத்துவிடுப்ப, வீரவாகுதேவரும் அவற்றிற் கெதிர்ப்பகழிகளேவி அவற்றைக் கண்டித்துவீழ்த்தினர். தாரகன் இவனைத் தெய்வப்படைகளால் வெல்லவேண்டுமென்று ஆக்கினேயாஸ்திரத்தைப் பிரயோகிக்க, இவரும் அவ்வஸ்திரத்தைப் பிரயோகித்து அதைத்துணித்தார், தாரகன் வருணப்படையையேவ இவரும் அப்படையையேவி அதைத்துணித்தார், இவ்வாறு இருவரும் சமயுத்தஞ்செய்து, பின்பு தாரகன் இவனை நமதுமாயையினாலேதான் வெல்லவேண்டுமென்றெண்ணி, பலவேறுவடிவங்கொண்டு போர்செய்தான். அப்போது பூதவீரரும் அச்சமுற்றார்கள். அதுகண்ட அவுணர்கள் புன்னகைசெய்தார்கள்.

இவ்வாறு தாரகன்செய்யும் மாயப்போரையும் அதற்கு யாவரும் அஞ்சுவதையும் வீரவாகுதேவர் நோக்கி, வீரபத்திராஸ்திரத்தைக் கையிலெடுத்துநிற்கவே,

தாரகனுடைய மாயைகளெல்லாம் சூரியன்முன் பனிபோலப் போயொளித்தன. தாரகன் ஓடினன். அப்படிபோகிறவன்மேல் படைதொடுப்பது நீதியன்றென்று வீரவாகுதேவர் தமது கையிலெடுத்த படையைத் தூணியிலமைத்து அவன்பின் விரைந்துசென்று அவனது தோள்களைக் கயிற்றினாலிறுக்கிக்கட்டிச் சண்முகப்பெருமான் சந்நிதியில் விடுவேனென்று, ஆரவாரிக்க, தாரகன் மாயைக்கிருப்பிடமாகிய கிரவுஞ்சகிரியையடைந்துமறைந்தனன். வீரவாகு தேவரும் அவன் புகுந்த இடத்தை நாடிச்செல்ல, அவ்விடமுழுதும் சூரியன்கதிரும் புகப்பெறாத இருட்டினால் மூடப்பட்டிருந்தன. அங்குத் தாரகனைக்காணாமல் அயர்ந்து, மீள்வதற்கு வழியுந்தோன்றாமல், இதுவும் அவன்செய்த மாயையேயாமென்று துணிந்துநிற்கையில், கிரவுஞ்சகிரியும் மோகம்விளைத்து வீரவாகுதேவரது அறிவைக் கொள்ளைகொண்டதாதலால் இவரும் மயங்கிவிழுந்தனர். இப்படியிருக்க, வீரவாகுதேவரது படைவீரர், தாரகனைத் தொடர்ந்துசென்றவர் இன்னமும் மீண்டுவரவில்லையே, அவ்விடத்தில் நிகழ்ந்தசெய்தியாதோ, அறிந்துவருவோமென்று கிரவுஞ்சமலையையடைகுதலும் இவர்களையும் அம்மலை மயங்கச்செய்தமையால், வீரவாகுதேவர் முதலியோர் இறந்துபட்டனரென்று மகிழ்வடைந்து மலைமேலெழுந்தான்தாரகன். இதைக்கண்ட தேவர் முதலியோர் பயந்துநின்றார்கள். தாரகன் மற்றொருதேரிலேறிப் பூதப்படைகளை நோக்கிச்சென்று அவர்கள்மேல் பாணமழைபொழிய, அப்படைகள் முறிபட்டுச்சிதறியோடின. இதைக்கண்ட இந்திரன் முதலிய தேவரும் நாரதரும் சண்முகப்பெருமான் சந்நிதியையடைந்து, இச்செய்தியை விண்ணப்பஞ்செய்தலும் அவர்களைச் சரவணப்பெருமானானவர் நோக்கி, நாமேசென்று அந்தக் கிரவுஞ்சமலையைப் பொடியாக்கி, அந்தத்தாரகனையும் கொன்று உங்கள் துன்பத்தையொழிப்போமென்று திருவாய்மலர்ந்தருளினர். தேவர் முதலியோர் தமது துன்பமொழிந்து ஆநந்தக்கூத்தாடினர். சண்முகப்பெருமான் தமது தேரைக் கொணர்கவெனக் கட்டளையிடுதலும், தேர்ப்பாகனாவமைந்த வாயுதேவன் தேரைக் கொண்டுவர அதிலேறிப் பூதப்படைகள் சூழ்ந்துவரச்சென்றனர். சென்று போர்க்களங் குறுகிநிற்றலும் இருதிறப்படைகளும் போர்செய்யத்தொடங்கின. இவ்விருதிறப்படைகளுள் அவுணப்படை தோற்றோடுவதைக்கண்ட தாரகன் அநேகமாயிரம் பாணங்களைத்தொடுத்துப் பூதப்படையைவருத்திக்கொண்டேவந்து, சரவணோற்பவனை நோக்கிக் கண களிகூர்ந்து, எம்பெருமானின்ற இளஞ்சிங்கமே! நாரணன் முதலியோரிடத்தேயன்றி, சிவபெருமானிடத்தில் ஒரு சிறிதும் செற்றமுடையோமல்லோம, அப்படியிருக்க, எம்மோடு போர்புரிய நேர்ந்ததற்குக் காரணம்யாது? சொல்லுமென்றுகேட்க, சண்முகன் அவனை நோக்கி, நீவிர் தேவர்களைச் சிறைசெய்து வருத்துவதைக் கேட்டுத் திருவுள மிரங்கின எம்பெருமான், உமது செல்வத்தைச் சிதைத்து உம்மையும் வேரோடு களைந்துவருமபடி யெமக்குக் கட்டளையிட, யாம் வந்தோமென்று திருவாய் மலர்ந்தருளினர்.

இதுகேட்ட தாரகன், கந்தசாமியை நோக்கி, திருமால் முதலானவர்களும், இப்போது உம்மைச் சூழ்ந்துவந்த பூதப்படைவீரரும் என்னாற்பட்டபாடு கேட்டறிந்திருந்தும் நீர் என்னோடு போர்செய்யவந்தது வியக்கத்தக்கதாயிருக்கின்றது, நீர் உமது தந்தையினிடம்போய்ச் சேர்வதே நலமென்று சொன்னான். அதுகேட்ட குகப்பெருமான், தாரகனைநோக்கி, திருமாலின் சக்கராயுதம்போல எமது வேற்படையையும் எளிதாய் நினைத்தனைபோலும், இன்னுஞ் சற்று நேரத்தில் உன் ஆற்றல் முழுதும் எங்கேயோடி யொளிக்கப்போகிறது பாரென்று கூறியருளி

வில்வளைத்து நாணேற்றிச் சரமாரிபொழிந்து தாரகனது வில்லைக்கண்டித்துத் தேரைப்பொடியாக்கி, பாகனைவருத்தி, அவனது நெற்றியை யிலக்காக்கி ஆயிரம்பாணங்களைச் செலுத்துதலும், அவைபோய்ப்பட்டமாத்திரத்தில் அவன் தன் தேரின்மீது புலம்பிக்கொண்டேவிழுந்தான், அவனது நெற்றியிலிருந்தொழுகின குருதிவெள்ளம் பாய்தலால், நீலநிறக்கடலில் செந்நிறம் பொருந்திய வடவைத்தீ யிருந்தாற்போலத் தோன்றிற்று. இப்படி தாரகன் வீழ்ந்ததைக்கண்ட அவுணப்படைவீரர் சினங்கொண்டுவந்து அறுமுகனைச் சூழ்ந்து போர்புரிந்து அந்தப் பெருமானது சரங்களால் சிரமற்றவரும் கரமற்றவரும் தோளற்றவரும் மார்பற்றவருமாய் விழுந்து மடிந்து குருதியாற்றில் மிதந்தோடிப் போயினர்.

பின்பு தாரகன் மயக்கந்தீர்ந்தெழுந்து, புன்னகைசெய்து, ஒருசிறுகுழந்தைக்கெதிரே நமது பேராற்றல் அழிந்துபோயிற்றே, இதென்ன ஆச்சரியம், இனி நமமாலானவரைக்கும் போர்செய்து இவனைத்தொலைக்கும் வழிதேடவேண்டுமென்று தீர்மானித்து, பிரமாஸ்திரம் நாராயணாஸ்திரம் முதலியவற்றைப் பிரயோகிக்க, அவையெல்லாம் குமரவேளை வணங்கி நின்றன. இதுகண்ட தாரகன் பாசுபதாஸ்திரத்தை யெடுத்துப்பூசித்து அபிமந்திரித்து விடுத்தான்; அது பூமி வானம் என்பவற்றுள்ளடங்கின எல்லாவுயிர்களும் நடுநடுங்கும்படி சுவாலித்துக்கொண்டு குமாரகடவுள் சந்நிதியையடைதலும், அவர் அதனைத் தமது செங்கையாலேற்றுக்கொள்ள ஒருபுஷ்பமாலிகைபோலத் தண்ணென்றமைந்திருந்தது. இதைக்கண்ட தாரகன் இனிமாயப் போரால் இவனைவெல்லவேண்டுமெனத் துணிந்து கிரவுஞ்சமலையையணுகிநின்று நீ கற்றுவல்ல மாயைகளனைத்தும் செய்யக்கடவையென்று வேண்டினான்.

கிரவுஞ்சமானது அவன் வேண்டுகோளின்படியே முட்டாவுருவங் கொள்ளுதல் முதலிய பலமாயைகளைச் செய்யக்கண்ட குமரகுருவானவர் தமது வேற்படையையேவுதலும் அது சென்று அந்த மலையையும் தாரகனையும்பிளந்து மாயாரூபங்களெல்லாவற்றையும் அதம்பண்ணி, மயங்கிக்கிடந்த நவவீரரையும் இலக்கத்தவரையும் பூதவீரரையும் பிழைத்தெழச்செய்து ஆகாயகங்கையில் தோய்ந்து குமரவேள் செங்கையில் வந்தமர்ந்திருந்தது.

இந்தக் கிரவுஞ்ச மலையும் தாரகனும் இவ்வாறு பிளவுபட்ட வோசையானது அண்டங்களெல்லாம் நடுங்கச்செய்தது. இப்படிப் பேரொலியோடு பிளவுபட்டு விழுந்த தாரகன் பதைபதைத்து உயிர்விட்டான். சரவணப்பெருமாள் விட்ட வேற்படையானது வெற்றிகொண்டுமீண்டு அவன் செங்கையை யடைந்ததும், தாரகன் கிரவுஞ்சம் அரக்கர் என்பவர் பட்டபாடுகண்ட திருமால் முதலிய தேவர்களும் முனிவர்களும், ஆரவாரித்து ஆநந்தக்கூத்தாடினார்கள். மயங்கிக்கிடந்த வீரவாகு தேவர்முதலிய எல்லாரும் மயக்கந்தெளிந்தெழுந்து, கந்தவேளின் கழல் வணங்கி நின்றார்கள். அவர்களையெல்லாம கருணைவிழியால் நோக்கியருளி, தமமீது தாரகன்விட்ட பாசுபதாஸ்திரத்தை வீரவாகு தேவருக்கருளிச்செய்து, போரில் இறந்துபட்ட பூதவீரரையும் எழுப்பி, தேவர் முதலியோர் தம்மைச்சூழ்ந்துவரப்போர்க்களமகன்று வழிக்கொண்டார்.

## தாரகன்வதைப்படலம் முற்றிற்று.

# தேவகிரிப்படலம்.

மாகவந் தங்கள் கூளி வாய்ப்பறை மிழற்ற வாடு
மாகவந் தங்கு மெல்லை யகன்றுசெங் கதிர்வே லண்ணல்
சோகவந் தங்கொண் டுள்ள சுரருட னனிகஞ் சுற்றி
யேகவந் தங்க ணின்ற விமகிரி யெல்லை தீர்ந்தான். (க)

அரியயன் மகத்தின் றேவ னமரர்க ளிலக்கத் தொன்பான்
பொருதிறல் வயவ ரேனைப் பூதர்கள் யாரும் போற்றத்
திருநெடு வேலோன் றென்பாற் செவ்விதி னடந்து மேல்பா
லிரவியி னிரவி செல்ல விமையவர் சயிலஞ் சேர்ந்தான். (உ)

ஒப்பறு சூர்பின் னேனை யொருவன்வே லட்ட தன்மை
யிப்புற வுலகி னுள்ளார் யாவரு முணர்வ ரின்னே
யப்புற வுலகி னுள்ளா ரறிந்திட யானே சென்று
செப்புவ னென்பான் போலச் செங்கதிர் மறைந்து போனான். (ங)

பானுவென் றுரைக்கு மேலோன் பகற்பொழு தெலாங்கைக் கொண்டா
னேனைய மதியப் புத்தே ளிரவினுக் கரச னானா
ஞனிவற் றிடையே சென்று நண்ணுவ னென்று செந்தீ
வானவன் போந்த தென்ன வந்தது மாலைச் செக்கர். (ச)

வம்பவிழ் குமுத மெல்லா மலர்ந்திடு மாலை தன்னில்
வெம்படை பயிலத தோன்றும் வேளுக்குத் தான்முன் வந்த
வம்புதி முரச மாயிற் றுகையாற் றானும் வெற்றிக்
கொம்பென விளங்கிற் றென்ன வெழுந்தது குழவித் திங்கள். (௫)

எற்றெதிர் மலைந்து நின்ற விகலுடை யவுணர் தம்மேற்
காற்றெனத் தேர்க டாவிக் கடுஞ்சமர் புரிந்த வெய்யோன்
மாற்றருஞ் செம்பொன் மாரபில் வச்சிரப் பதக்க மிற்று
மேற்றிசை வீழ்ந்த தென்ன விளம்பிறை விளங்கிற் றன்றே. (சா)

கானத்தி னோன மொத்த கனையிருட் சூழன் மற்றவ்
வேனத்தி னெயிற்றை யொத்த திளம்பிறை யதனைப் பூண்ட
கோனைத்த தண்ட மந்தக் கூரெயி றுகுத்த முத்தந்
தானைத்து விளங்கு கின்ற தாரகா கணங்க ளெல்லாம். (எ)

அல்லிது போந்த காலை யாரமா மாலை யென்னக்
கல்லென வருவி தூங்குங் கடவுள்வெற் பொருசா ரெய்தி
மெல்லிதழ் வனசத் தேவும் விண்டுவும் விண்ணின் றேவும்
பல்லிமை யோருஞ் செவ்வேள் பதமுறை தொழுது சொல்வார். (அ)

வன்கணே யுடைய சூர்பின் வருத்திட விந்நாள் காறும்
புன்கணே யுழந்தே மன்னான் பொருப்பொடு முடியச் செற்றா
யுன்கணே வழிபா டாற்ற வுன்னின மின்ன வெற்பின்
றன்கணே யிறுத்தல் வேண்டுந் தருதியிவ் வரம தென்றார். (கூ)

பசைந்திடு மார்வங் கொண்ட பண்ணவ ரினைய தன்மை
யிசைந்தனர் வேண்டு மெல்லை யெஃகுடை யண்ண லங்க
ணசைந்திடு தன்மை யுன்னி யருள்செய வதுகண் டன்னோர்
தசைந்துமெய் பொடிப்பத் துள்ளித் தணப்பில்பே ருவகை பூத்தார். ()

ஓண்ணில வுமிழும் வேலோ னெலிகழற் றுணை யோடிங்
கண்ணனை முதலா வுள்ள கடவுளர் குழுவி னோடும்
பண்ணவா கிரிமேற் சென்று பாங்கரிற் றொழுது போந்த
விண்ணவா புனைவன் றன்னை விளித்திவை புகல லுற்றான். (கக)

புகலுறுஞ் சூழ்ச்சி மிக்கோய் புங்கவ ராயு ளோருந்
தொகலுறு கணாகள் யாருந் துணைவரும் யாமு மேவ
வகலுறு மினைய வெற்பி னருங்கடி நகர மொன்றை
விகலம தின்றி யின்னே விதித்தியால் விரைவி னென்றான். (கஉ)

வேறு.

குழுங்கல் வேட்டுவக் கோதைய ராடலுங்
கழங்கு நோக்கிக் களிப்பவன் மற்றிது
வழங்கு மெல்லை வகுப்பனென் றனனவன்
றழங்கு நூபுரத் தாள்பணிந் தேகினான். (கஙு)

மகர தோரண மாரியின் மல்கிய
சிகர மாளிகை செம்பொனின் சூளிகை
நிகரில் பற்பல நெளிளல்க வீண்டிய
நகர மொன்றினை பாயிடை நல்கினான். (கச)

அவ்வ ரைக்க ணகன்பெரு நொச்சியுட்
டுகவல் வித்தகக் கம்மியா மேலவ
னெவவெ வாக்கு மிறைவ னிருந்திடத்
தெய்வ தக்குல மொன்றுசெய் தானரோ. (கரு)

மாற்ற ருமபொன் வரையுண் மணிக்கிரி
தோற்றி யென்னச் சுடாகெழு மாமையி
னேற கோட்டத் திமைநதனன் கேசரி
யாற்று கின்ற வரதனப பீடிகை. (கசு)

இனைய தன்மையு மேனவு நல்கியே
மனுவின் முதை வருதலு மன்னார்த
மணிக மோடு மமரர்க டமமொடு
முனையின் மேற்படை மொய்யபனங் கேகினான். (கஎ)

அறுமு கததவ னங்க ரேகியே
துறும லுற்றிடுந் தொலபெருந் தானையை
யிறுதி யற்ற விருக்கைகொ ளாவண
நிறுவ லுற்று நகேதனத் தெய்தினான். (கஅ)

இரதம் விட்டங் கிழிந்தபொற் பாதுகை
சரணம் வைத்துத் தணப்பரும் வீருஞ்
சுரரு முற்றுடன் சூழ்தரத் துங்கவே
லொருவன் மற்றவ் வுறையுளி னேகினான். (கசு)

ஈறில் வெய்யவர் யாரு மொரோவழிச்
சேற லெய்திச் செறிந்தென வில்விடு
மாறில் செஞ்சுடர் மாமணிப் பீடமே
லேற்றி வைகினன் யாரினு மேலையோன். (௨௰)

பொழுது மற்றதிற் பூவின னாதியா
விழுமை பெற்றிடும் விண்ணவர் யாவருங்
குழும லுற்றுக் குமரனை யவ்விடை
வழிப டத்தம் மனத்திடை யுன்னினார். (௨௧)

புங்க வன்விழி பொத்திய வம்மைதன்
செங்கை தன்னிற் சிறப்பொடு தோன்றிய
கங்கை தன்னைக் கடவுள ருன்னலு
மங்கண் வந்தனை யப்பெரு மாநதி. (௨௨)

சோதி மாண்கலன் றாயன பொற்றுகில்
போது சாந்தம் புகைமணி பூஞ்சுட
ராதி யாக வருச்சனைக் கேற்றன
வேது மாயிடை யெய்துவித் தாரரோ. (௨௩)

அண்டர் தொல்லை யமுத மிருந்திய
குண்ட முற்ற குடங்கள் கொணர்ந்திடா
மண்டு தெண்புனல் வானதி தன்னிடை
மொண்டு கொண்டனர் வேத நுவன்றுளார். (௨௪)

அந்த வெல்லை யயன்முத றேவரு
முந்து கின்ற முனிவருஞ் சண்முகத்
தெந்தை பாங்கரி னீண்டி யவன்பெயர்
மந்தி ரங்கொடு மஞ்சன மாட்டினார். (௨௫)

வெய்ய வேற்படை விண்ணவற் கின்னணம்
மைய மஞ்சன மாட்டிமுன் சூழ்ந்திடுந்
துய்ய பொன்னந் துகிலினை நீக்கியே
நொய்ய பஃறுகி லாதனஞ் சாத்தினார். (௨௬)

வீற்றொர் சீய வியன்றவி சின்மிசை
யேற்றி வேளை யிருத்தி யவன்பெயர்
சாற்றி மாமலர் சாத்தித் தருவிடைத்
தோற்று பூவின் றொடையலுஞ் சூட்டினார். (௨௭)

செய்ய சந்தனத் தேய்வைமுன் கொட்டின
ரைய பாளித மப்பினர் நாவியுந்
துய்ய நானமுந் துன்னமட் டித்தனர்
மெய்யெ லாமணி மேவரச் சாத்தினார். (௨௮)

சந்து காரகி றண்ணென் கருப்புரங்
குந்து ருக்கமொண் குக்குலு வப்புகை
செந்த ழற்சுடர் சீர்மணி யார்ப்பொடு
தந்து பற்றித் தலைத்தலை சுற்றினார். (௨௯)

இத்தி றத்தவு மேனவு மெலீகவேற்
கைத்த லத்துக் கடவுட்கு நல்கியே
பத்தி மைத்திற னுற்பணிந் தேத்தினர்
சித்தி சங்கற்பஞ் செய்திடுஞ் செய்கையோர். (௯0)

தேவு கொண்ட சிலம்பினிற் பண்ணவ
ரேவ ருங்குழீஇ யின்னணம் பூசனை
யாவ தாற்ற வதுகொண் டமர்ந்தனன்
மூவி ரண்டு முகனுடை மொய்ம்பினேன். (௯க)

அமரர் வெற்பி லயிற்படை யேந்திய
விமல னுற்றது சொற்றன மேலினிச்
சமரி டைப்படு தாரகன் றந்திடு
குமர னுற்றது மற்றதுங் கூறுகேம். (௯உ)

ஆ திருவிருத்தம் - கஙுகரு.

வசனம்.

இவ்வாறு போர்க்களமகன்ற கந்தவேளானவர் தேவர்முதலியோர் சூழ்ந்து வர இமயமலையினெல்லைநீங்கித் தேவகிரியை யடைந்தனர்; அப்பொழுது திருமால் முதலிய தேவர்களெல்லாரும் குமரவேள் பாதம்பணிந்து, இம்மலையில் தேவரீர் எழுந்தருளியிருக்கவும் யாங்களெல்லாம் இவ்விடத்திலிருந்துகொண்டு உம்மை வழிபாடுசெய்யவும் வேண்டுகின்றோம், என்றுவேண்ட, அவ்வாறே யாகுகவென்று அவர்களுக்கருள்செய்து விசுவகர்மாவை யழைத்து இவ்விடத்தில் தேவரெல்லாரும் தங்கியிருக்கத்தகுந்த நகரமொன்றை இப்பொழுதே விதித்திடுகவெனக் கட்டளையிட்டனர்.

குகப்பெருமான் கட்டளையின்படியே விசுவகர்மாவும் அழகாகிய நகரமொன்றைப்படைத்து, அந்நகரத்தினடுவே குமரவேள் எழுந்தருளியிருக்க ஆலயமொன்றமைத்து அதற்குவேண்டிய மற்றைய திருப்பணிகள்யாவும் செய்துமுடித்து, சண்முகப்பெருமானுக்கு விண்ணப்பஞ் செய்தான். செய்ததும் அவ்வாலயத்தில், நவவீரர் முதலியோர் சூழ்ந்திருக்க, நவரத்நபீடத்தில் அமர்ந்தருளினர். தேவர் முதலியோர் தமது வேண்டுகோளின்படி யமர்ந்தருளின செவ்வேற்பெருமானை முப்போதும் வழிபட்டிறைஞ்சி அத்தேவகிரியில் நித்யவாசம் பண்ணிக்கொண்டிருந்தார்கள்.

தேவகிரிப்படலம் முற்றிற்று.

# அசுரேந்திரன்மகேந்திரஞ்செல்படலம்.

எந்தை குமர னெறிந்ததனி வேற்படையாற்
றந்தி முகமுடைய தாரகன்றான் பட்டதனை
முந்து சிலதூதர் மொழிய வவன்றேவி
யந்தமிலாக் கற்பிற் சவுரி யலக்கணுற்றாள். (க)

வாழ்ந்த துணைவியர்கண் மற்றுள்ளோ ரெல்லோருஞ்
சூழ்ந்து பதைத்திரங்கத் துன்பத் துடனேகி
யாழ்ந்த கடல்படியு மம்மென் மயிலென்ன
வீழ்ந்து கணவன் மிசையே புலம்புறுவாள். (௨)

சங்குற் றிடுசெங்கைத் தண்டுளவோன் றன்பதமா
மங்குற் றனையன் றயன்பதஞ்செல் வாயன்று
கங்கைச் சடையான் கைலையிற்சென் றுயல்லா
லெங்குற் றனையவ் விறைவனருள் பெற்றாயே. (௩)

உந்துதனி யாழி யுனக்கணியாத் தந்தோனு
மிந்திரனு மேனை யிமையவர்க ளெல்லோரு
மந்தகனுர் தாமு மனைவர்களு மின்றன்றோ
சிந்தைதனி லுள்ள கவலையெலாந் தீர்ந்தனரே. (௪)

பொன்னகரோர் யாரும் புலம்புற் றிடவுணர்
மன்னவரோ டென்பால் வரும்பவனி காணேதென்
றுன்னு பறவையினஞ் சூழத் துயிலுமுனை
யின்ன பரிசேயோ காண்பேனு லெம்பெருமான். (௫)

புல்லா திருந்தனையான் புல்லுவது கண்டுமது
பல்லோருங் காணிற் பழியென் றொழிந்தாயேன்
மல்லாருந் தோளாய் மயக்குற்றேற் கோருரையுஞ்
சொல்லாய் வறிதே துயின்றாய் துனியுண்டோ. (௬)

மையோ டிறமு மணிமிடற்றோன் றந்தவர
மெய்யா மெனவே வியந்திருந்தே னிந்நாளும்
பொய்யாய் விளைந்ததுவோ பொன்றினையா லென்றுனைவா
வையோ விதற்கோ வருந்தவமுன் செய்தாயே. (௭)

தன்னே டிணையின்றித் தானே தலையான
முன்னே னருள்புரிந்த முன்னே னிளவல்வரி
னென்னே வவனே டெதிர்ந்தா யிறந்தனையே
யன்னே விதிவலியை யாரே கடந்தாரே. (௮)

சந்தார் தடம்புயத்துத் தானவர்க டற்சூழ
வந்தார் கமழு மரியணைமேல் வைகியநீ
சிந்தா குலததிற் செருநிலத்திற் றுஞ்சினையா
லெந்தாய் புகலா யிதுவுஞ் சிலநாளோ. (௯)

வென்றி மழுவேந்தும் விமல னுனக்களித்த
தன்றும் வரத்தியலை யுன்னினையாற் சூழ்ச்சியினை
யொன்று முணரா துயிருந் தொலைந்தனையே
யென்று தமியே னினியுன்னைக் காண்பதுவே. (௧௦)

வன்னி விழியுடையான் மைந்த னமர்புரிய
முன்னை வலிதோற்று முடிந்தா யெனக்கேட்டுப்
பின்னு மிருந் தேனென்னிற் பேரன் புடையோர்யா
ரென்னினியான் செய்கே னெனவே யிரங்குற்றாள். (௧௧)

மற்றைத் துணைவியரும் வந்தீண்டி மன்னவனைச்
சுற்றிப் புலம்பித் துயருற் றிடும்வேலை
யற்றந் தினனாகி யாசுரத்தின் பாற்போன
கொற்றப் புதல்வன் வினவிக் குறுகினனால். (௧௨)

தண்டா விறல்சேருந் தன்றாதை வீந்ததனைக்
கண்டா னுயிர்த்தான் கலுழ்ந்தான் கரங்குலைத்தா
னண்டாத சோகத் தழுங்கினான் வெய்யகன
லுண்டா னெனவீழ்ந் தயர்ந்தா னுணர்ந்தனனே. (௧௩)

என்றுமுறா வின்ன லிடைப்பட் டவனெழுந்து
சென்று தனதன்னை திருத்தா ளிடைவீழா
வுன்றலைவன் யாண்டையா னோதாயன் னேயென்று
நின்று புலம்பி நினைந்தினைய செய்கின்றான். (௧௪)

அன்னை முதலோரை யகல்வித் தொருசாரிற்
றுன்னுதிரென் றேவித் தொலையாத தானவரிற்
றன்னுழையோர் தம்மாற் றழலிந் தனமுதலா
மன்னு கருவி பலவும் வருவித்தான். (௧௫)

வந்த பொழுததனில் வன்களத்திற் றுஞ்சுகின்ற
தந்தை தனைமுன்போற் றகவுபெற வொப்பிதமதோ
ரெந்திரத்தேர் மீதேற்றி யீமத் திடையுய்த்துச்
சந்தனப் பூம்பள்ளி மிசையே தருவித்தான். (௧௬)

ஈமக் கடன்க ளியற்றித்தன் றாதைதனைத்
தாமக் கனலாற் றகனம் புரிந்திடலுங்
காமுற் றனனென் கணவனுடன் செல்வதற்குத்
தீமுற் றருதி யெனவன்னை சென்றுரைத்தாள். (௧௭)

நற்றாய் மொழிந்ததனைக் கேட்டு நடுநடுங்கிப்
பொற்றாள் பணிந்தென்னைப் போற்றி யிருத்தியெனச்
சொற்றா னதுமறுத்துத் தோகை சுளித்துரைப்ப
வற்றாக வென்றா னசுரேந் திரனென்பான். (௧௮)

ஏனையதோர் தாயர்களும் யாமுங் கணவனுடன்
வானகம்போ யெய்த வழங்கென் றிடவிசையா
வான படியே யழலமைக்க வன்னையரா
மானனையா ரெல்லோரும் வான்கனலி னுள்புக்கார். (௧௯)

புக்க தொருகாலை புலம்பியே யந்நகரை
யக்கணமே நீங்கி யசுரேந் திரனென்போன்
றக்க கிளைஞர்சிலர் தற்சூழ வேயேகி
மைக்கடலுள் வைகு மகேந்திரமூ தூருற்றான். (௨௦)

வேறு.

உளந்தளர் வெய்தித் தொல்லை யொளிமுக னிழந்து மேனி
தளர்ந்தனன் வறியன் போன்று தாரக முதல்வன் றந்த
விளந்தனி மைந்தன் வல்லே யேகலு மனைய நீர்மை
வளந்திகழ் தொல்லை வீர மகேந்திரத் தவுணர் கண்டார். (௨௧)

உரங்கிள ரவுணர் காணூஉ வொய்யெனத் துளங்கி யேங்கிக்
கரங்களை விதிர்த்துக் கண்ணீர் காலெறி படர்ந்து செல்லப்
பெருங்கட லுடைந்த தேபோற் பேதுற வெய்தி யாற்ற
விரங்கியிக் குமர னுற்ற தென்கொலென் றிசைக்க லுற்றார். (உஉ)

வஞ்சமுங் கொலையுஞ் செய்யான் மற்றிவ னிதற்குத் தாதை
வெஞ்சினங் கொடுபோ கென்று விடுத்தனன் போலு மென்பார்
தஞ்சம தாகி யுள்ள தாரகன் கொடுமை நோக்கி
யஞ்சியே யவனை நீங்கி யடைந்தனன் கொலலோ வென்பார். (உ௩)

சீரொடு துறக்க நீத்துத் தேவர்கோ னுருவ மாற்றிப்
பாரிடை யுழந்தா னென்பார் மற்றவன் பரனை வேண்டிப்
பேரிகன் மாயம் வன்மை பெற்றுவந் தடுபோர் செய்யத்
தாரக னிறந்தான் கொல்லோ தளர்ந்திவன் வந்தா னென்பார். (உ௪)

மாண்கிளர் தார கப்பேர் மன்னவன் பகைஞ ராற்று
மேண்கிளர் சமரில் வீந்தா னென்பதற் கேது வுண்டாற்
சேண்கிளர் சிவப்பா லெங்குந் தெரிகிற வுஞ்ச வெற்பிற்
காண்கில மவுணர் தம்மைப பூழியே காண்டு மென்பார். (உ௫)

பையர வணையிற் றுஞ்சும் பகவன தாழி தன்னை
மையபொன் னரிய தாக வணிந்திடு மவுண னோடு
மொய்யமர் புரிவார் யாரே முரணொடு வெமபோர் செல்லோர்
செய்யினு மவரா லன்னோன் முடிகிலன் றிண்ண மென்பார். (உ௬)

அங்கையை யொருவன் வாளா லறுத்திடப் புலம்பி நங்கோன்
றங்கைவந் தமரர் தம்மைச் சயந்தனைச் சிறைசெய் வித்தா
ளிங்கிவன் றுனுந் துன்புற நேருவா னின்று மற்றே
புங்கவர் தமக்கே யின்னல் புரிகுவன் போலு மென்பார். (உ௭)

மணிகிள ரெழிலி வண்ணன் மற்றவ னொடும்பா ராற்று
னணியுல களித்த செம்ம லமர்தனொழில் சிறிதுந் தேறான்
றணிவறு செயிர்மீக் கொண்ட தாரக னொடும்போர் செய்யி
னிணையக லீச னன்றி யாவரே வலல ரென்பார். (உ௮)

இமையவர் கருடர் நாக ரியக்கர்கந் தருவ ரேனோ
நமரிடு பணிக ளாற்றி நாடொறுந் திரிந்தா ரதற்றுச்
சமரெதி ரிழைப்பா ரின்றித் தளர்ந்தன ரிந்நாள காறு
மமரினி யுளது போலு மையம தில்லை யென்பார். (உ௯)

சேயிவ னலக்க ணெய்திச் செல்லுறு பரிசா லங்க
ணுயதோர் திங்கு போலு மையமின் றிதனை நாடி
நாயகன் விடுக்கு முன்ன நமபெருந் தானை யோடு
மாயமா புரிகா நேகி யறிந்தனம வருது மென்பார். (௩0)

எனைப்பல வினைய வாற்று லியாவரு மவுண ரீண்டி
யனைடடு பைத லோடும் வயின்வயி றுமரையா விறப
வினைபபருந் திருமிக் குள்ள நெடுமகேந் திரத்திற் சென்று
வனைபபெருங் கழற்காற் சூர மன்னவன் கோயில் போந்தான். (௩௧)

போந்துதா ரகன்றன் மைந்தன் பொள்ளெனப் படர்த லோடும்
வாய்ந்தபே ரவைய மன்றில் வரம்பிலா வவுணர் போற்ற
வேந்தெழி லரிக டாங்கு மெரிமணித் தவிசின் மீக்கண்
வேந்தர்கள் வேந்தன் சூரன் மேவிவீற் றிருந்தான் மாதோ. (௩௨)

வீற்றிருந் தரசு போற்றும் வேந்தனை யெய்தி யன்னான்
காறறுணை முன்னர் வீழ்ந்து கரங்களா லவற்றைப் பற்றி
யாற்றவு மரற்றல் செய்ய வவுணர்கோ னதுகண் டைய
சாற்றுதி புகுந்த தன்மை தளர்ந்தனை புலம்ப லென்றான். (௩௩)

என்றலு மைந்தன் சொல்வா னிந்திரன் புணர்ப்பா லீசன்
வன்றிறற் குமரன் பூத வயப்படை தன்னோ டேகி
யுன்றன திளவ றன்னை யொண்கிர வுஞ்ச மென்னுங்
குன்றொடும் வேலாற் செற்றுக் குறுகினன் புவியி லென்றான். (௩௪)

வெய்யசூ ரதனைக் கேளா விழுமிதென் றுருமி னக்குச்
சைய்யமா மவுண னோடு தாரக வலியோன் றன்னை
மையுறழ் கண்டத் தண்ணன் மைந்தனோ வடுதல் செய்வான்
பொய்யிது வெருவன் மைந்த வுண்மையே புகறி யென்றான். (௩௫)

தாதைகேள் சரத மீது தாரகத் தந்தை தன்னை
மேதகு கிரவுஞ் சத்தை வேல்கொடு பரமன் மைந்தன்
காதினன் சென்று னீமக் கடன்முறை யெந்தைக் காற்றி
மாதுயர் கொண்டு நின்பால் வந்தன னென்றான் மைந்தன். (௩௬)

வேறு.

தோட்டுணை வனுமிளவ றுஞ்சின னெனுஞ்சொற்
கேட்டலு முளத்திடை கிளர்ந்தது சினதீ
நாட்டமெரி கால்வபுகை நண்ணுவன துண்ட
மீட்டுபொறி சிந்துவன யாக்கையு ளுரோமம். (௩௭)

நெறித்தபுரு வத்துணைக ணெற்றியிசை சென்ற
கறித்தன வெயிறறினிரை கவ்வியத ரத்தைச்
செறித்தன துடித்தன தெழித்தவிதழ் செவ்வாய்
குறித்தது மணங்ககன கூடமு முடிக்க. (௩௮)

இவ்வகை சினத்தெரி யெழுந்துமிசை கொள்ள
வவ்வெரி யிறைற்றலை யவித்ததது போழ்தில்
வெவ்வினை கொடாரகன் மிசைத்தொடரு மன்பாற்
றெவ்வர்புகழ் சூரனிடை சேர்ந்ததுய ராழி. (௩௯)

துப்புநிகர் கண்புனல் சொரிந்தநதி யேபோன்
மெய்ப்புறம் வியர்த்தமிக வெள்ளமவை யீண்டி
யப்புணரி யானதுய ராழியது வன்றே
செப்புபொரு ளுண்மையது தேற்றியது போலும். (௪0)

பருவர லெனும்புணரி மூடிபடி வுற்றே
யரியணை மிசைத்தவறி யம்புவியில் வீழா
வுருமென வரற்றின னுணர்ந்ததனை யஞ்சி
கரலையொடு பாரக நடுங்கியதை யன்றே. (௪௧)

கூற்றுள நடுங்கிய குலைந்தது செழுந்தீக்
காற்றுவெரு வுற்றது கதிர்க்கடவுள் சோம
னேற்றமிகு கோளுடு விரிந்தபுவி முற்று
மாறறிய பணிக்கிறையு மஞ்சியத லைந்தே. (சஉ)

பாங்கருறு தானவர்கள் பாசறையின் மூழ்கி
யேங்கினர் விழுந்தன ரிரங்கினர் தளர்ந்தா
ராங்கனைய போழ்துதனி லந்நகர மெல்லா
மோங்குதுயர் கொண்டுகலுழோசைமலிந் தன்றே. (சங)

ஆனபொழு தத்தனி லழுங்கலுறு சூரன்
போனதொரு சீற்றவழல் புந்தியிடை மூள
மானமொடு நாணமட வல்லையி லெழுந்தே
தானுடைய வேவலர் தமக்கிவை யுரைப்பான். (சச)

மன்னிளவ லாருயிரை மாற்றிவரு கந்தன்
றன்னிகல் கடந்துசய மெய்திவரல் வேண்டு
மென்னிரதம் வெம்படை யிடுங்கவசம் யாவு
முன்னுகண மொன்றின்முன முய்த்திடுதி ரென்றான். (சரு)

இறையிவை புகன்றிடலு மேவலர்கள் யாரு
முறையிலவை யுய்த்திடுதன் முன்னினர்கள் போனா
ரறைகழ லுடைத்தகுவ ரன்னசெய லுடிக
நறைவிலனி கங்கெளாடு கொம்மென வணைந்தார். (சசு)

ஆயசெயல் காண்டலு மமைச்சரி லமோகன்
மாயைதரு சூரனடி வந்தனை புரிந்தே
யேயதொரு மாற்றம திசைப்பலது கேண்மோ
தீயசின மெய்திட லெனுவினைய செப்பும். (சஎ)

வேறு.

நஞ்சுறை படைகள் கற்று நவையுறு தொன்ன லாரை
வஞ்சினத் தெரியும் வீரா வளநக ரதனை மாற்றோ
ரிஞ்சியைச் சூழ்ந்து போருக் கெய்தினு மெண்ணி யன்றி
வெஞ்சினத் தினைமேல் கொண்டு விரைந்தம ரியற்றச் செல்லார். (சஅ)

குலத்தினை யினவி யுள்ளக் கோளினை வினவி வந்த
நிலத்தினை வினவித் தொல்லோர் நெறியினை வினவிக் கொண்ட
சலத்தினை வினவிப் போர்செய் தானையை வினவி யன்னோர்
வலத்தினை வினவி யல்லான் மறமொன்று மனங்கொள் வாரோ. (சகூ)

வரத்தினில் வலியி னோரோ மாயையில் வலியி னோரோ
கரத்தினிற் படைக்க லத்தின் கல்வியில் வலியி னோரோ
வுரத்தினில் வலியி னோரோ வுணர்ச்சிசே ருக்க மான
சிரத்தினில் வலியி னோரோ வென்றிவை தேர்வ ரன்றே. (ருo)

ஒற்றரைத் தூண்டி யன்னோ ருறுவலி யுணர்வ ரேனு
மற்றுமோ ரொற்றி னல்லா லன்னது மனத்துட் கொள்ளார்
சுற்றுறு மனிக மன்றி யொருபுடை துவன்றிச் சூழும்
பெற்றியு முளதோ வென்னு வேயொரீஇத் தேர்வர் பின்னும். (ருக)

வினையது விளைவை யென்று மெல்லிய வென்கை வெஃகா
தனிகமு டனையர் தன்மை யதனையுஞ் சிறுமைத் தாக
நினைகிலர் தமக்கு மாற்றார் நேர்ந்தவ ராகின் மேலோர்
முனையுறு புலத்தி லாற்று மும்மையு முன்னிச் செய்வார். (௫௨)

மூவியன் மரபி னானு முற்றுறு தொழிற்கு காலைக்
கோளியன் பரபுக் கேறபக் கொடுஞ்சினந் திருகிக் கொட்புற்
றேவியல் படைஞ ரோடும் படையொடு மெதிர்ந்து சுற்றி
மேவலர் பான்மை யுன்னி வெற்றிகொண் டணைவ ரன்றே. (௫௩)

நேர்ந்திட வலியி லோரு ஞாட்பிடை நேர்தி ரென்னுஞ்
சேர்ந்திடும் போழ்தும் வேந்தர் செருவினைக் குறித்துச் சென்று
சார்ந்திடல் பழிய தன்றோ வெல்லினுந் தானை தூண்டிப்
பேர்ந்திடச் செய்வ ரஃதே பெறலரும் புகழ தன்றே. (௫௪)

ஈதரோ வுலகி னுள்ள விறைவர்த மியற்கை யாது
மாதலா னின்னைப் பாரி லழிவிலா யகில மாள்வா
யேதமொன் றடையாய் வானோர் யாரையு மேவல் கொண்டாய்
போதனு நெடுமா லோனும் வைகலும் புகழ வுற்றாய். (௫௫)

இன்னதோர் மிடல்பெற் றுள்ள விறைவநீ யெளிய னாகும்
பொன்னகர் வன்சொற் கேட்டுப் பூதம்பல் படையா வீச
னென்னலி னுதவும் பிள்ளை நோந்திடு மவனை வெல்ல
வுன்னினை போதி யென்னி னுனக்கது வசைய தன்றோ. (௫௬)

மாற்றலர் வன்மை யோராய் மற்றவர் படைஞர் தங்க
ளாற்றலை யுணராய் நின்ற வருமபெருந் தலைமை யுன்னைப்
போற்றிடு மமைச்ச ரோடும் புரிவன சூழாய் வாளா
சீற்றமங் கதுமேல் கொண்டு செலலலுந் திறனின் பாற்றோ. (௫௭)

வீரமும் வலியு மிக்கோ ராயினும் விதிவந் தெய்திற்
பாரிடை வலியி லோரும் படுத்திடப் படுவர் நின்போற்
பேருட லழியா வாற்றல் பெருமையா விறைவ னெய்தத்
தாரகன் மழலை தேறாச் சிறுவனுக் கடியப் பட்டான். (௫௮)

கலகல மிழற்றுந் தண்டைக் கழலடிச் சிறுவன் கையாற்
தலையுடை யிளவ றன்னைத் தடிந்ததற் புகுத்த தன்றால்
வலியரு மொருகா லத்தில் வன்மையை யிழப்ப ரன்றி
மெலியரு மொருகா லத்தில் வீரராய்த் திகழ்வ ரன்றே (௫௯)

யாருநே ரன்றி வைகு மிறைவநீ சிறுவன் றன்மேற்
போரினை முன்னி யேகல் புகழ்மைய தன்றா லன்னோன்
சீரொடு மதுகை யாவுந் தேர்ந்தபின் னவனிற் றீர்ந்த
வீரரைப் படையொ டேவி வெற்றிகொண் டயர்தி யென்றான். (௬௰)

அறிதரு மமைச்சர் தம்மு ளமோகனித் தன்மை தேற்ற
வுறுதியீ தென்று சூர னுள்ளூறு சினத்தை நீத்து
விறல்கெழு பரிமா னேற்றா விழுத்தகு தவிசி னேறிச்
செறிதரு முறைஞர் தம்முட் சிலவரை நோக்கிச் சொல்வான். (௬௧)

பகன்றிடு மயூரன் சேரன் பரிதியம் புள்ளின் பேரோன்
அகனிவர் முதலா வுள்ள தூதரைத் தருதி ரென்னப்
புகழ்புனை சூர பன்மன் பொன்னடி யிறைஞ்சி யேத்தித்
தகுவர்க ளலைவா மற்றச் சாரணர் தம்மை யுய்த்தார். (௬௨)

சாரண ரினையர் போந்து தாண்முறை பணிந்து நிற்பச்
சூரனங் கவரை நோக்கித் தூண்டென நீவி ரேகிப்
பாரிடை வந்த கந்தன் பான்மையும் படைவெம் பூதர்
சேருறு தொகையும் யாவுந் தேர்ந்திவண் வருதி ரென்றான். (௬௩)

ஏற்றவ ருணர்ந்தந் நீரமை யுச்சிமேல் கொண்டு தங்கோன்
பொற்றடங் கழலக டாழ்ந்து புடவியை நோக்கிச் சென்றார்
மற்றவர் போய பின்னர் மாறிலாச் சூர பன்மன்
வெற்றிகொ ளவுணர் போற்ற வீற்றிருந் தரசு செய்தான். (௬௪)

ஏதமில் சூர பன்ம னிளவற்றன் முடிவு நேடி
மாதுயர் கொண்டு தேறி வைகிய தன்மை சொற்றாம்
ஆதியங் கடவுண் மைந்த னமரர்தங் கிரியை நீங்கிப்
பூதல மீது வந்த நெறியினைப் புகல லுற்றாம். (௬௫)

ஆ திருவிரு, கம - ககூ௪.

---

## வசனம்.

இவ்வாறு தேவகிரியில் முருகப்பெருமான் எழுந்தருளியிருக்கையில், அவரது வேற்படையால் தாரகன் இறந்துபட்டதைச் சில தூதர்கள் முந்தியோடி அவன் பட்டமகிஷியாகிய சவுரியென்பவளுக்கு அறிவித்தார்கள். அச்செய்தியைக் கேட்ட சவுரியும் தாரகன் மனைவியர் பலரும் பதைபதைத்து ஏங்கிக் கோவென்றலறிக் கணவன்மேல் விழுந்து புரண்டு மெய்ந்நொந்து உருகுகையில், தாரகன் மகனாகிய அசுரேந்திரன் என்பவன் தனது தந்தையின் இறப்பைக் குறித்துத் துக்கசாகரத்தில் அழுந்தி ஒருவாறு தெளிவடைந்து, இறந்துகிடக்கிற தந்தையைச் சீராட்டி அலங்கரித்து, எந்திரத்தேரின்மேலேற்றி எடுத்துக்கொண்டுபோய்ச் சந்தனப்பூம்பள்ளிமீதிருத்தி ஈமக்கடன் முழுதுஞ்செய்து முடித்து நிற்கையில் தன் தாயாகிய சவுரியும் மற்றை மனைவியரும் யாமும் உடன்கட்டையேறவேண்டுமென்று சொல்ல, அவ்வாறே அவர்களுக்கும் தீயமைத்துத்தந்து அவர்கள் உடன்கட்டையேறினபின்பு, அந்நகரைவிட்டு மகேந்திரநகரை யடைந்து அழுதுகொண்டு தமரோடு விரைந்துபோய்ச் சிங்காதனத்தில் வீற்றிருக்கிற தன் பெரிய தந்தையாகிய சூரபன்மனை வணங்கி நின்று, குமாரக்கடவுளால் கிரவுஞ்சமும் தாரகனும் தொலைந்தசெய்தி முழுதும் எடுத்துச்சொல்ல, சூரபன்மன் தன் தம்பி இறந்துபட்டதனால் துயரக்கடலிலாழ்ந்து, அவன்மீது தனக்குள்ள அன்பின் மிகுதியால், என் தம்பியைக்கொன்றவனை இதோ ஒருநொடியில் நான்போய்க் கொன்றுவருகிறேன், என் தேர்முதலியவற்றைக் கொண்டுவாருங்களென்று தன்னருகேயிருக்கும் ஏவலாளரை நோக்கிச்சொல்ல, அப்படியே தேர்முதலிய நால்வகைப்படைகளும் ஆயத்தமாய் வரக்கண்ட சூரபன்மனுடைய அமைச்சருள் ஒருவனாகிய அமோகன் என்பவன், சூரபன்மனை அடிவணங்கி நின்று, அடியேன்மீது கோபங்கொள்ளவேண்டாம், தேவரீர் இந்தச்சம

யம் போர்க்கெழுவது தக்கதன்று என்று சொல்லுதலும், சூரபன்மன் அவ்வமைச்சன் சொல்லைத்தடுக்காமலேற்றுக்கொண்டு தான் போர்க்கெழுவதைத் தவிர்ந்து, பகன், மாயூரன்முதலிய தூதரையழைத்து, நீங்கள் சென்று, சண்முகன் வலியையும் அவனுக்குத் துணைவந்தார் வலியையும் படைவலியையும் அறிந்துவாருங்களென்று கட்டளையிட்டுத் தான் அரசுசெய்திருந்தான்.

அசுரேந்திரன் மகேந்திரஞ்சேல்படலம் முற்றிற்று.

## வழிநடைப்படலம்.

குருமணி மகுட மாறுங் குழைகளுந் திருவில் வீசத்
திருமணி வரையின் மேவுந் திருக்கைவேற் பெருமா னுக்குக்
கருமணி யாழிப் புத்தேள் கையுறை யாக வாங்கோர்
பருமணி நீட்டிற் றென்னப் பானுவந் துதயஞ் செய்தான். (௧)

வேறு.

மங்குல் வானமேல் வெய்யவன் கதிரென வழங்குஞ்
செங்கை கூப்பியே தொழுதிடு வானெனச் செல்ல
வங்கவ் வேலையி னறுமுகன் கடவுள்வெற் பகன்று
பொங்கு தானையு மமரருஞ் சூழ்தரப் போந்தான். (௨)

தன்னை நீக்கியே சூழ்வுறுந் தவமுடைப் பிருங்கி
யுன்னி நாடிய மறைகளின் முடிவினு முணரா
வென்னை யாளுடை யானிடஞ் சேர்வனென் றிமயக்
கன்னி பூசனை செய்தமே தாரமுன் கண்டான். (௩)

பைய ராவின்மேற் கண்டுயில் பண்ணவன் றனக்குந்
தையல் பாதிய னைபரம் பொருளெனுந் தன்மை
மையன் மானுட னுணர்ந்திட மறைமுனி யெடுத்த
கைய தேயுரைத் திட்டதோர் காசியைக் கண்டான். (௪)

பருப்ப தப்பெயர்ச் சிலாதனற் பாலகன் பரம
னிருப்ப வோர்வரை யாவனென் றருந்தவ மியற்றிப
பொருப்ப தாகியே யீசனை முடியின்மேற் புனைந்த
திருப்ப ருப்பதத் தற்புதம் யாவையுந் தெரிந்தான். (௫)

அண்ட மன்னுயி ரீன்றவ ளுடன்முனி வாகித
தொண்ட கங்கெழு சுவர்ணமிதன் பால்வரை துறந்து
மண்டு பாதலத் தேகியே யோர்குகை வழியே
பண்டு தான்வருஞ் வேங்கட கிரியையும் பார்த்தான். (௬)

சிலந்தி மாசுண முமமதக் கரிசிவ கோசன்
மலைந்தி டுஞ்சிலை வேட்டுவன் கிரனே மடவார்
பலந்த ருமவழி பாட்டின்ற் பாட்டினற் பரனைக்
கலந்து முத்திசேர் தென்பெருங் கைலையுங் கண்டான். (௭)

கொடிய வெஞ்சினக் காளியிக் குவலய முழுது
முடிவு செய்வனென் றெழுந்தநாண் முளரியான் முதலோ
ரடைய வஞ்சலு மவளசெருக் கழிவுற வழியாக்
கடவு ளாடலால வென்றதோர் வடவனங் கண்டான். (அ)

அம்பு ராசிகொள் பிரளயத் தினுமழி வின்றி
யும்பர் மாலயற் குறையுளாய்க் கயிலைபோ லொன்று
யெம்பி ரான்றனி மாகிழ றன்னில்வீற் றிருக்குங்
கம்பை சூழ்தரு காஞ்சியந் திருநகா கண்டான். (௯)

ஏல வார்குழ லுமையவள் பூசைகொண் டிருந்த
மூல கராண மாகிய முதல்வனை லயமு
மாலும் வேதனு மமரரும் வழிபடு மற்றை
யால யங்களா யுள்ளவுங் கண்டன னையன். (௧௦)

வேறு.

என்னிக ரெவரு மில்லென் றிருவரு மிகலு மெல்லை
யன்னவர் நடுவு தோன்றி யடிமுடி தெரியா தாகி
யுன்னினர் தங்கட் கெல்லா மொல்லையின் முத்தி நல்கித்
தன்னிக ரின்றி நின்ற தழற்பெருஞ் சயிலங் கண்டான். (௧௧)

மண்ணுல கிறைவன் செய்யு மணந்தனை விலக்கி யெண்டோ
ளண்ணலோர் விருத்தன் போல்வந் தாவண வோலை காட்டித்
துண்ணென வழக்கில் வென்று சுந்தரன் றனையாட் கொள்ளும்
பெண்ணையம் புனல்சூழ் வெண்ணெய்ப் பெரும்பதி தனையுங் கண்டான். ()

தூசினு லம்மை வீசத் தொடையின்மேற் கிடத்தித் தூஞ்சு
மாசிலா வுயிர்கட் கெல்லா மஞ்செழுத் தியல்பு கூறி
யீசனே தனது கோல மீந்திடு மியல்பா லந்தக்
காசியின் விழுமி தான முதுகுன்ற வரையுங் கண்டான். (௧௩)

விரிகனல் வேள்வி தன்னில் வியன்றலை யரிந்து வீட்டிப்
பொருவறு தவத்தை யாற்றும் பதஞ்சலி புலிக்கா லண்ண
லிருவரு முணர்வாற் காண வெல்லையி லருளா லீசன
திருநட வியற்கை காட்டுந் தில்லைமூ தூரைக் கண்டான். (௧௪)

தண்டளிர்ச் சோலைத் தில்லைத் தபனிய மன்றி லென்றுந்
தொண்டையங் கனிவாய் மாது தொழச்சுராட் புருட னுளத்
தண் ரு மதிக்க லாற்று மற்புதத் தனிக்கூத் தாடல்
கண்டனன் கசிவா லுள்ளங் களிப்புற வணங்கிப் போனான். (௧௫)

குடமுனி கரத்தி லேந்துங் குண்டிகை யிருந்து நீங்கிப
படிதனில் வேறு வேறாய்ப் பற்பல நாமந் தாங்கிக்
கடலகிளர்ந் தென்னச் செல்லுங் காவிரி யெனனு மாற்றின்
வடகரை மண்ணி யின்பால் வந்தனன் கருணை வள்ளல்.  (௧௬)

ஆ. திருவிருத்தம் - ௧௬௪௪.

### வசனம்.

இங்கே, பிள்ளையார், தேவகிரியினின்றும் வாயுபகவான் தேர்விடுக்க, எழுந்தருளி, காசிக்ஷேத்திரத்தைத் தரிசித்து, ஸ்ரீசைலத்தைநோக்கி, வடவேங்கடங் கண்டுகளித்து, பழையனூர் ஆலங்காட்டையுஞ்சென்று வணங்கி, சீகாளத்தியப்பரை நாடிப்பணிந்து, திருவேகம்பம் திருச்சச்சிமயானம் திருவோணகாந்தன்றளி முதலிய திருப்பதிகளமைந்திருக்கிற திருக்காஞ்சிநகரைத்தொழுது, திருவெண்ணெய்நல்லூர் பழமலையென்பவற்றையுங் கண்டுமகிழ்ந்து, திருத்தில்லையம்பலத்தை யிறைஞ்சி, சோணாட்டில், காவிரியாற்றின் வடகரையிலுள்ள திருப்பதிகளையெல்லாம் தரிசித்து, மண்ணியாற்றங்கரையையடைந்தனர். இதுநிற்க.

வழிநடைப்படலம் முற்றிற்று.

---

## குமாரபுரிப்படலம்.

அளவில் பூதவெம் படையொடு மண்ணியா றதன்கட்
குளகன் வந்துழி யெழுந்திடு பூழிவான் குறுகி
யொளிரும் வெய்யவன் கதிர்தனை மறைத்தலா லோடி
வளைநெ டுங்கடன் முழ்குவான் புக்கென மறைந்தான். (க)

மறைந்த காலையிற் றோன்றின மாலையு நிசியுங்
குறைந்த திங்களுந் துதித்தது தாரகை குறுகி
நிறைந்தெ ழுந்தவோர் மன்னவ னிறந்துழி நீங்கா
துறைந்த வொன்னலர் யாவருங் கிளர்ந்தவா றொப்ப. (உ)

மிக்க தாருக வனத்தினை யொத்தது விசும்பிற்
றொக்க பேரிருண் மாதரொத் தனவுடுத் தோற்றஞ்
செக்க ரீசனை யொத்ததொண் போனகஞ் செறிந்த
கைக்க பாலமொத் தது கதிர்மதிப் பிறையே. (ங)

நிலவு லாவிய ககனமா நீடியாற் கடலிற்
குலவு கின்றமீதார் பொருளெலாங் கொண்டுகொண் டேகி
யுலகி னல்குவான் முயலொடு மொருமக னுய்யப்
செலவு கொண்டதோர் தோணிபோன் றதுசிறு திங்கள். (ச)

ஆன காலையி லறுமுகப் புங்கவ னமல
மேனி சேரொளி நிலவொடு கங்குலை வீட்டிப்
பானு மேவரு மெல்லெனச் செய்தலிற் பரமாம்
வான நாயகன் கைலைபோன் றிருந்தது வையம். (ரு)

### வேறு.

வீசு பேரொளி விறற்குக னிவ்வா
றாசின் மண்ணியி னகன்கரை நண்ண

வீச னுமைவனை யெய்துபு வேதாக்
கேச வன்முதல்வ ரின்ன கிளப்பார். (௬)

ஆண்ட விந்தி யகன்கரை யெல்லா
மாண்ட வாலுக மலிந்தினி தாகு
நீண்ட சோலைக ணிரந்தன தோன்றி
யீண்டி யீண்டையி னிறுத்தது ளவன்றே. (௭)

யிறைபு ணர்ந்திடு பெருந்தகை நாண
மிறுதி யிலலன விருந்தன வற்று
ணறிய தாகுமிந் நதிக்கரை தன்னி
லிறைவ விவ்விடை யிருந்தரு ளென்றார். (௮)

வனைய மேனியயன் மான்முதல் வானோ
ரினைய செப்புதலும் யாரினு மேலோன்
வினைய மொத்தவுள விச்சுவ கன்மப
புனைவ னுங்கிது புகன்றிடு கின்றான். (௯)

மெய்வி தித்தொழிலில் மேவ நனிசார்ந்துங்
கைவ லோயொரு கணப்பதின் முன்னா
ரிவ்வி டத்தினி லெமக்கொரு புதூர்
செவ்வி திற்புனைவு செய்குதி யென்றான். (௧௦)

என்ன லோடுமவ் விடந்தனி லெங்கோன்
றன்னு தொல்படை சுராதிப ரோடு
மன்ன வங்கவொரு மாநகர் நெஞ்சத்
துன்னி நல்கலு முவந்தனர் யாரும். (௧௧)

அப்பு ரத்தையறி வன்கடி தாற்றி
முப்பு ரத்தையடு முன்னவ னல்கு
மெய்ப்பு ரத்தவனை நோக்குபு மேலோ
யிப்பு ரத்திடை யெழுந்தரு ளென்றான் (௧௨)

என்ற லோடுமிர தத்தி னிழிந்தே
குன்றம் வானவர் சுராதிப ரானோர்
சென்ற பூதர்கள் செறிந்திட வேக
மன்றன் மாநகரில வளவில புகுந்தான. (௧௩)

செல்லு மாமுகில் செறிந்திடு காப்பின்
மல்லன் மாநகர் வளர்ந்ததனை நோக்கி
யெல்லை யில்லெறிவன் யாமுறை தற்கு
நல்ல மாநகரி தென்று நவின்றான. (௧௪)

வீர வேளிது விளம்புத லோடு
மாரும் வானவர்க ளம்மொழி கேளா
வேறெ லாமுடைய விந்நகர் சேய்ஞ
லூர தென்றுபெய ரோதினா ரன்றே. (௧௫)

ஆய காலையணி கப்படை சூழ
வேய பின்னிளைஞ ரிந்திரன வேதா
மாய னேனையர் வழுத்திட வாண்டைக்
கோயில் செல்லுபு குமார னிருந்தான். (கசு)

வேறு.

பன்னிரு புயத்தொகை படைத்தகும ரேசன்
றன்னரு ளடைந்துவிதி தன்னைமுத லானோ
ரன்னவன் விடுத்திட வகன்றுபுடை யேகித
தொன்னிலை யிருக்கைக டொறுந்தொறு மடைந்தார். (கஎ)

தானைக டமக்குரிய சாரத ரிலக்க
ரேனையர் வழுத்தவெமை யாளுடைய வள்ளல்
கோனக ரிருக்கைவிடை கொண்டுசெல் குமாரத்துள்
வானவர் தமக்கிறை செயற்கையை வகுப்பாம். (கஅ)

வேறு.

தாங்கரும் பெருந்திறற் சூர காசுரன்
பாங்கமா குன்றொடும் பட்ட பான்மையா
லாங்கனம் புரந்தர னவலம் யாவது
நீங்கின னுவகையா னிறைந்த நெஞ்சினான். (ககூ)

விருந்திய லமிர்தினை விழும மில்வழி
யருந்தின னெனமன வாகந் தண்ணெனப்
புரந்தர னிருந்துழிப் புக்குத் தாழ்ந்ததால
வரந்திகழ் சிரபுர வனத்திற் றெய்வதம். (உ0)

முகில்பொதி விண்ணக முதல்வன் பூண்களு
நகில்பொதி சாந்துடை நங்கை பூண்களுந்
துகில்பொதி கிழியொடு தொல்லை வைத்தவை
யகில்பொதி காட்டகத் தடிக ளுய்த்ததே. (உக)

முந்துற வுய்த்தபின் முதல்வ கேட்டிநீ
பைந்தொடி யணங்கொடு பரமன் காழியில்
வந்தனை நோற்றநா ளைவத்த பூணிது
தந்தனன் கொளகெனச் சாற்றி நின்றதே. (உஉ)

நிற்புறு கின்றுழி நேமி யண்ணற்கு
முற்படு கின்றவன் முளரிப பண்ணவன்
கிற்புறு செய்யபூண் கிழியை நோக்கினான்
கற்புடை யாளவிடுந் தூதின் காட்சிபோல். (உங)

எரிமணி யணிகல னிட்ட பூந்துகில்
விரிதரு பொதியினை விரலி னீக்கினான்
றிருமக ளமர்தரு தெய்வத் தாமரை
வரியளி சூழ்வுற மலர்ந்த தென்னவே. (உச)

தன்னெனக் கிழியதன் றொடர்பு நீக்கலு
மொன்னுதற் றுணைவிபூ ணும்பர் தோன்றலுங்
கண்ணுறக் கண்டவட் கருதி னனரோ
வெண்ணுதற் கரியதோ ரின்பத் துய்த்துளான். (உரு)

பூட்கையின் மூலையுடைப் பொன்னங் கொம்பின்மேல்
வேட்கைய தாயினன் மிகவும் பற்பகல்
வாட்கையின் றிருந்தது மனத்தின் முன்னினான்
காட்கொளுங் காமநோய்க் கவலை யெய்தினான். (௨௬)

நெய்ம்மலி தழலென நீடிக் காமநோ
யிம்மென மிசைக்கொள விரங்கி யேங்கினான்
விம்மினன் வெதும்பினன் வெய்து யிர்த்தனன்
மைம்மலி சிந்தையன் மருட்கை யெய்தினான். (௨௭)

பசையற வுலர்வுறு பராரைப் பிண்டியிற்
றசைமலி முழுதுட றளர்ந்து வாடினா
னிசைவரு கைவலோ னெழுது பாவைபோ
லசைவில னிருந்தன னணங்குற் றென்னவே. (௨௮)

முருந்துற ழெயிற்றினாள் முலைத்த டங்களிற்
பொருந்துற மூழ்கியே புணர்ந்து வைகலு
மிருந்திடு கின்றவ னிடர்ப்பட் டின்னண
மிரிந்திடின் வருந்துதல் பேசல் வேண்டுமோ. (௨௯)

மெய்ந்நனி யலசுற விரக மீக்கொள
வின்னணஞ் சசிபொருட் டினையு நீர்மையோன்
பொன்னணி தன்னையும் புனைதல் வேண்டலன்
றன்னுழை யவர்தமை நோக்கிச் சாற்றுவான். (௩௦)

இக்கிழி யொன்றினை யேந்தி முந்துபோற்
சிக்குற வீக்கியே சேமித் துங்கள்பால்
வைக்குதி ரென்றலும் வணங்கி நன்றெனா
வக்கண மனையவ ரதனை யாற்றினார். (௩௧)

அன்னதோ ரளவையி லடவித் தேவினைக்
கொன்னுனை வச்சிரக் குரிசி னோக்குறா
இன்னுழை யளித்திட நீசெல் கென்றலு
மன்னவ நன்றென வணங்கிப் போயதே. (௩௨)

போக்கிடு காலையிற் புலோம சைபெய
ரேந்திழை காமநோ யெரியின் றப்பினாற்
காந்திய வுளத்தினன் கனலும் யாக்கைய
னோய்ந்தனன் றட்பமே லுளம்வைத் தேகினான். (௩௩)

ஒளியிழை யுழத்திய ரொளிமென் கூந்தலி
னளியின நறவுதுய்த் தலரிற் கண்படு
நளியிருந் தண்டலை ஞாங்கர் பொங்கிய
புளினமொன் றதன்மிசை புக்கு வைகினான். (௩௪)

தீந்தழல் வெங்கதிர் திளைத்த வாறென
நீந்தருங் கங்குலி னிலவுத் தீப்படப்
பூந்துணர் பரவிய புளினம் பொன்னகர்
வேந்தனுக் காற்றவும் வெம்மை செய்ததே. (௩௫)

சூற்புயன் மாறிய சுரத்திற் றெருக்குறு
மாற்பரல் வரைபுரை மணலின் றிட்டையின்
பாற்படு கின்றனன் பனிம திக்கதிர்
மேற்பட வசைந்தனன் வினையம் வேறிலான். (௩௬)

திங்களும் வெங்கனல் சிதறிக் காய்ந்திடத்
துங்கவேள் படையுடன் பிறவுஞ் சூழ்ந்திட
மங்கிய வுணர்ச்சியன் மயலின் வன்மையான்
புங்கவர் மன்னவன் புலம்ப லெய்தினான். (௩௭)

மட்டமா புரிகுழன் மடந்தை யென்னுடை
யிட்டுயிர் வவ்வின ளிருந்த யாக்கையுஞ்
சுட்டிடு கிற்றியாற் றூய திங்கணீ
பட்டவர் தம்மையும் படுப்ப ரோவென்பான். (௩௮)

எஞ்சலி லமுதினை யார்க்கு நல்குநீ
நஞ்சினை யுகுத்திநண் ணலரிற் றப்பியே
யுஞ்சன னிவனுயி ரொழிப்பன் யானென
வஞ்சினம் பிடித்தியோ மதிய மேயென்பான். (௩௯)

கிறறலும் வருதிநீ நீடு தண்ணளி
யுற்றிட லன்றியே யொறுததி லாய்மதி
யற்றமின் றுன்னிவர் தடுதி யாரிடைக்
கற்றனை யித்திறங் கூறவ நீயென்பான். (௪௦)

பெண்ணிய லாரிடைப் பிறங்கு காமமு
முண்ணிகழ் விரகமு முனக்கு முண்டதை
யெண்ணலை யழல்சொரிந் தென்னைக் காய்தியா
றண்ணளி மதிக்கிது தகுவ தோவென்பான். (௪௧)

அரியநற் றவம்பல வாற்றி யின்றுகா
றுரியதோ ரென்பல துனில் யாக்கையேன்
பரிவுறச் சுடுவதிற் பயனென் பாரிவ்
வொருவனை விடுகென வுரைத்து வேண்டுவான். (௪௨)

அண்டமே னின்றனை யவனி வானக
மெண்டிசை யெங்கணு மெளிது காண்டியா
லொண்டொடி யொருத்தியென் னுயிர்கொண் டேற்றனள
கண்டதுண் டோமதிக் கடவு ணீயென்பான். (௪௩)

யான்முதற் றோன்றின னெனது பின்னவன்
கான்முளை யாகிய காம னீபல
பான்மையி னெனையடல் பழிய தேயலான்
மேன்மைய தாகுமோ விளம்பு வாயென்பான். (௪௪)

பரேருள வுனதுமெய் படுத்த கண்ணுதன்
னேரேலென வுதவிய நிம்ல் னீண்டுனா
னேரேகண மொடுங்குமு னுயிரும் வாங்குமாற்
பொரேனினி மதனநீ போகுபோ கென்பான். (௪௫)

வானுழை திரிதரு மதியம் போக்கிய
தீநுழை புண்ணில்வேல் செறித்த தென்னவேள்
கோனுழை கின்றன வதனிற் கூடளி
யீநுழை கின்றன போலு மென்கின்றான். (சசா)

வன்றிறற் கொலைஞர்சண் மானிற் கூவிமா
னென்றறக் கவர்தல்போ லுயிரென் காவிளை
யின்றது போலவக் குள்புக் கீதததாற
றென்றனுக் கியான்செய்த தீதுண் டோவென்பான். (சஎ)

வாகுலப் பரியதோர் மாதர் மாலெனு
மாகுலப் புணரியு ளழுந்தி னேனையும்
வீகுலத் தொகையினுள் விட்டி சைததிடுங
கோகிலப் பறவையுங் கொல்லு மோவென்பான். (சஅ)

நம்முரு வாயின னுகர் கோனெனுத
தம்மன முன்னியே தளர்வு நீக்கிவ
கொம்மென வரற்றியுங் கூவ லின்றியு
மெம்முயிர் கொள்வன விருபு ளாமென்பான். (சகூ)

தண்டுத லின்றியே தானு நானுமாய்ப
பண்டொரு வனிதையைப பரிவிற கூடினே
மண்டரு மறிகுவ ரற்றை நாட்சின
முண்டுகொல் கதிரின முதிக்கி லானென்பான். (ருo)

கோழிலை மடறபனைக் குடம்பை சேர்தரு
மாழையும் பசலைவாய் மகன்றி லென்பவை
காழக வரிசிலைக் காமன் கோடுபோ
லூழியும் வீக்கிடா தொலிக்கு மோவென்பான். (ருக)

துன்னல ராகிய தொகையி னோதமைத்
தன்னிடை வைத்தெனைத தளாவு கண்டதா
லன்னது மன்றியின் றுவி கொள்ளாவு
முன்னிய தோகட லுறங்க லாதென்பான். (ருஉ)

இவ்வகை யாமினி யெல்லை முற்றவும்
வெவ்வழல் சுட்டிடும் விரக நோய்தெற
வுய்வகை யொன்றில னுயங்க லல்லது
செய்வது பிறிதிலன் றெருளில சிந்தையான். (ருரு)

வேறு.

ஆக்க மித்திற மடைவுழிப் பத்துநூ றடுத்த
நோக்க முற்றவன் சசிபொருட் டெற்றநோ யதனை
நீக்கு கின்றனன் யானெனு நினைக்துளா னென்ன
மாக்கள் பூண்டதேர் வெய்யவன் குணதிசை வந்தான். (ருச)

வெம்பு தொல்லிரு ளவுணர்தங் குழுவினை விட்டி
யும்பர் மேற்செலு மதியெனு மடங்கலை யுருத்துப்
பைம்பொன் வெஞ்சுடர்க் கரங்களா லதன்வலி படுக்குஞ்
சிம்பு ளாமெனத் தோன்றினன் செங்கதிர்க் கடவுள். (ருரு)

தொடர்ந்த ஞாயிறு விடுத்திடுங் கதிர்களாந் தூசி
படர்ந்த காலையி னிலவெனு மணிகமுன் பட்ட
வடைந்த மீனெனுந் துணைவரும் பொன்றின ரமர்செய்
துடைந்த மன்னரிற் போயின னுடுபதிக் கடவுள். (௩௬)

விரிந்த பல்கதி ரனிகத்தை வெய்யவன் விடுப்பத்
துரந்த சோமனை யவன்புறங் காட்டினன் றொலைந்து
கரந்து போதலும் பின்னுறச் சென்றில களத்தி
விரிந்து ளோரையுந் தொடாவரோ சூரர்த மினத்தோர். (௩௭)

திங்க டன்குறை யுணர்த்தவாய் திறந்தெனச் செய்ய
பங்க யங்கள்போ தவிழ்ந்தன குமுதங்கள் பலவுந்
தங்க ணாயக னுடைந்தது நோக்கியே தபனற்
கங்கை கூப்பிய திறனென வொடுங்கிய வன்றே. (௩௮)

வனமெ ழுந்தன வனசமு மெழுந்தன வரியி
னினமெ ழுந்தன மாக்களு மெழுந்தன வெழில்சே
ரனமெ ழுந்தன புள்ளெலா மெழுந்தன வவற்றின்
மனமெ ழுந்தன வெழுந்தன மக்களின் றொகையே. (௩௯)

ஞாயி றுற்றவவ் வளவையி னனந்தலை யுலகி
லேயெ னச்செறி யிருளெலா மறைந்திருந் தென்னச்
சேய ரிக்கணி தந்திடு தெளிவில்கா மதது
மாயி ருட்டொகை யொடுங்கிய திந்திரன் மனத்துள். (௪௦)

கையி கந்துபோய்த் தன்னுயி ரலைத்தகா மத்தீப்
பைய விந்திடு பாந்தள்போ றணிதலும் பகைப்புற்
றெய்யெ னக்கடி தெழுந்தன னகைத்துவெள் குறறு
னைய கோவிது வருவதோ வெனக்கென வறைந்தான். (௪௧)

தீமை யுள்ளன யாவையுந் தந்திடுஞ் சிறப்புந்
தோமில செல்வமுங் கெடுக்குநல லுணர்வினைத் தொலைக்கு
மேம நன்னெறி தடுத்திரு ளுய்த்திடு மிதனாற்
காம மன்றியே யொருபகை யுண்டுகொல் கருதில். (௪௨)

என்ப துன்னியே யிந்திர னுண்டைவைப் பிகந்து
தன்பு றந்தனிற கடவுளர் குழுவெலாஞ் சார
வன்பொ டேபடர்ந் தறுமுக வடிகளை யடைந்து
முன்பு தாழ்ந்தன னும்பரா முஞ்செங்கையு முகிழ்ப்ப. (௪௩)

தொழுத கையினன் கோட்டிய மெய்யினன் றுகிலத்
தெழுது பாவையி லான்றமை புலத்தின னிறைஞ்சிப்
புழுதி தோய்தரு முறுபபினன் சுருதியின் பொருண்மை
முழுது மூறிய துதியின னுகிமுன் னின்றான். (௪௪)

கரிய வன்றனைச் செய்யவன் கருணைசெய் தருளி
வருதி யென்றுகூய் மறைகளும வரம்புகாண் கில்லா
வரன தாளகளை யருச்சனை புரிதூநா மதனுக்
குரிய வாயபுல் லரணமுந் தருதியென் றுரைத்தான். (௪௫)

உரைத்த வெல்லையிற் றெழுதுபோ யுழையரிற் பலரைக்
கரைத்து வீற்றுவிற் றேவியே கடிமலர்க் கண்ணி
திரைத்து கிற்படா நறும்புன லவிப்புகை தீபம்
விரைத்த கந்தங்க ளேனவுந் தந்தனன் விரைவில். (சுசு)

அவ்வக் காலையி லாறுமா முகனுடை யடிக
டெய்வக் கம்மியற் கொண்டொரு சிகைர மியற்றிச்
சைவத் தந்திர விதியுளி நாடியே தாதை
யெவ்வெக் காலமு நிலையதோ ருருவுசெய் திட்டான். (சுஎ)

தேவு சான்மணிப் பீடத்தி லீசனைச் சேர்த்தி
யாவி னேரைந்து மமுதமும் வரிசையா லாட்டித்
தாவி லாததோர் வாலிதா மணித்துகில் சாதத்திப்
பூவின் மாலிகை செய்யசாந் தத்தொடும் புனைந்தான். (சுஅ)

மருந்தி னூற்றவுஞ் சுவையன வாலுவ நூல்போய்த்
திருந்தி னூர்களும் வியப்பன திறம்பல வாகிப,
பொருந்து கின்றன கிரலமை கருனையம் புழுக்கல்
சொரிந்து பொற்கலத் தருத்தினன் மந்திரத தொடர்பால். (சுகூ)

கந்தம் வெள்ளிலை பூகநற் காயிவை கலந்து
தந்து பின்முறை யருத்தினன் புகைசுடர் தலையா
வந்த பான்மைக ளியாவையும் வரிசையா லுதவி
முந்து கைதொழூஉப் போற்றினன் மும்முறை வணங்கி. (எ0)

வேறு.

இருவரு முணர்கிலா திருந்த தாள்களைச்
சரவண மிசைவரு தனயன் பூசனை
புரிதலு முமையொரு புடையிற் சேர்தர
வருள்விடை மீமிசை யண்ண றோன்றினன். (எக)

கார்த்திகை காதலன் கறைமி டற்றுடை
மூர்த்திநல் லருள்செய முன்னி வந்தது
பார்த்தன னெழுந்தனன் பணிந்து சென்னிமேற்
சேர்த்திய கரதொடு சென்று போற்றினன். (எஉ)

செயிர்ப்பறு நந்திதன் றிறத்தில் வீரரும்
வியர்ப்பினில வந்தெழு வீர ருங்குழீஇக்
கயற்புரை கண்ணுமை கணவற் காணுற்றி
மயிர்ப்புறம் பொடிப்புற வணங்கி யேத்தினர். (எங)

முண்டகன் முதல்வரு முரண்கொள் பூதருங்
கண்டன ரனையது கரங்கள் கூப்பியே
மண்டனின் மும்முறை வணங்கி வானகை
மெண்டிசை செவிமிற வேத்தன் மேயினர். (எச)

வேறு.

ஆயது காலை தன்னி லருவுரு வாகு மண்ணல்
சேயினை நோக்கி யுன்றன் வழிபடற் குவகை செய்தே

நீயிது கோடி யென்ன விரந்தபல் புவன முற்று
மேயென முடிவு செய்யும் பண்டைக்கலத் திறையை யீந்தான். (௭௫)

மற்றிது நம்பாற் றோன்றும் வான்படை மாயன் வேதாப்
பெற்றுள தன்றி யாரிப் பெரும்படை பரிக்கு நீரார்
முற்றுயி ருண்ணும் வெஞ்சூர் முரட்படை தொலைப்பா னீது
பற்றுதி மைந்த வென்னுப் பராபர னருளிப் போனான். (௭௬)

கருணைசெய் பரமன் சேணிற் கரந்தனன் போன காலை
யருள்பெறு நெடுவே லண்ண லன்னவற் போற்றிப் பின்னை
யிரவிய விலக்கத் தொன்பான் வீரரு மயனு மேனைச்
சுரர்களும் வழுத்திச் செல்லத தூயதன் றேரிற் புக்கான். (௭௭)

சில்லியந் தேர்மேற் செவ்வேள் சேர்தலு முலவை வேந்தன்
வல்லைதன் றமர்க ளோடும் வாம்பரி கடாவி யுய்பப
வெல்லையிற் பரிதி தோன்ற வெழுதரு முயிர்க ளேபோ
லொல்லென வெழுந்த தம்மா வுருகெழு பூத வெள்ளம். (௭௮)

சாரத நீத்த மெல்லாந் தரையினின் றெழுந்து சூழ்ந்து
போரணி யணிந்து போந்த புடைதனி லிலக்கத் தொன்பான்
வீரருஞ் சுரர்கள் யாரு மேவினர் வந்தார் வான்றோய்
தேர்மிசை யவர்க்கு நாப்பட் சென்றனன் குமரச் செம்மல். (௭௯)

மண்ணியங் கரையிற் றென்பால் வருத்தசேய் ஞல்லூர் நீங்கி
வெண்ணிய வுதவும் பொன்னி யிகந்திடை மருதி னோடு
தண்ணியன் மஞ்ஞை யாடுந் தண்டுறை பறிய லூருங்
கண்ணுத லிறைவன் றான மேனவுங் கண்டு போனான். (அ0)

எழில்வளஞ் சுரக்குந் தொல்லை யிலஞ்சியங் கான நோக்கி
மழவிடை யிறைவன் பொற்றாள் வணங்கியே மலர்மென் பாவை
முழுதுள திருவு மென்று முடிவின்மங் கலமு மெய்த
விழுமிதி னேற்றுப் பெற்ற வியன்றிரு வாரூர் கண்டான். (அ௧)

ஆ. திருவிருத்தம் - ௧௭௨௬.

---

வசனம்.

இவ்வாறு அளவற்ற பூதப்படையோடு குமாரபுரியிலெழுந்தருளியிருக்கையில், சீகாழியிலிருந்து அத்தலத்து வனதேவதையானது இந்திரனது ஆபரணங்களையும் இந்திராணியின் ஆபரணங்களையும் பொதிந்துவைத்த கிழியைக்கொண்டுவந்து கொடுத்து, இறைவனே! நீமுற்காலத்தில் உன்காதலியோடு சீகாழியில் பரமசிவனை வழிபட்டவெந்தகாலத்தில் வைத்த அணிகலங்களிவை, இவற்றைக்கொண்டுவந்தேன் ஏற்றுக்கொள்கவென்று சொல்லி விடைபெற்றுச்சென்றது. இந்திரன் அவ்வாபரணங்களை நோக்குதலும், இந்திராணியைக்கண்டாற்போலக் காமநோய்மிகுந்துவருந்தி, தன்னருகேயிருந்தவரையழைத்து, இவற்றை முன்போலவே சேமித்துவையுங்களென்று கட்டளையிட்டான். இருக்க,

சூரியன் உதித்தலும் இந்திரன் தன்னைத் தேவர்கள்சூழச்சென்று, பிள்ளையார் சந்நிதியடைந்து வணங்கிநிற்க, அவர் இந்திரனைநோக்கி, யாம் குணங்குறிகடந்த குணக்குன்றாகிய பரம்பொருளைப் பூசிக்கவேண்டும், அதற்குவேண்டிய உபகரணங்களெல்லாம் அமைக்கக்கடவையென்று கட்டளையிட, அவ்வாறே இந்திரனும் அமைக்க, சண்முகப்பெருமான் அவற்றைக்கொண்டு பரமசிவனைப்பூசித்து வணங்குதலும், இறைவன் உமாதேவிசகிதனாய்க்காட்சிதந்தருள. குகப்பெருமானும் தேவர் முதலியோரும் கண்களிக்கக்கண்டு வணங்கினர். அப்போது இறைவன் குமரவேளைநோக்கி, சூரபன்மன் முதலியோரைத்தொலைக்க இதுவொன்றேயமையும், இதனைப்பெறுகவென்று ஒரு சர்வசங்காரப்படைக்கலத்தைத் தந்தருளிச்சென்றனர். அதன்பிறகு முருகவேள் அந்தத் திருப்பதியையகன்று காவிரியாற்றின் வடகரையிலுள்ள திருமயிலாடுதுறை, திருவாவடுதுறை முதலிய திருப்பதிகளைவணங்கித் திருவாரூரையடைந்து அங்குள்ள வீதிவிடங்கப்பெருமானை வணங்கினின்றார்.

குமாரபுரிப்படலம் முற்றிற்று.

---

## சூரம்புகுபடலம்.

புற்றிடங் கொண்ட புத்தேள் புரந்தரற் கருள்செய் திட்ட
நற்றலந் தன்னைச் சேர்ந்த நகரமுள் ளனவுங் காணூஉக்
கொற்றவெங் கதிர்வே லண்ணல் கொல்லுலை யழலிற் செக்கர்
பற்றிய விரும்பு போலும் பாலையங் கானத் துற்றான். (க)

வேறு.

ஏழு நேமியும் பெரும்புறக் கடலுமெண் டிசையுஞ்
சூழ வன்னதா லழிவின்றித் தொன்மைபோ லாகி
யாழி யுள்ளுறும வடவையி னவற்றினைப் பருகி
யூழி தன்னினு மிருப்பதவ் வுயர்பெரும் பாலை. (உ)

அண்டர் நாயக னுலகடு மகந்தனக் காகும்
பண்ட மேசெறி பல்வள மாருயிர் பசுக்கண்
மண்டு நேமிநெய் கிலங்கல் மாயுற மலர்தீக்
குண்ட மாயது கள்ளிசூழ் கொடியவெம் பாலை. (௩)

வண்ண வொண்சுதை மெய்யுடை வரநதி கேளவ
னண்ணு தொல்லுலக் காகியே நரலையுற் றென்னத
தண்ணி லாவெழு நாத்தலை யிரண்டுடைத் தழலின்
பண்ண வற்குல காயது முதுபெரும் பாலை. (௪)

உடைய தொல்குலக் கேண்மையா லவ்வனத் துறையுங்
கொடிய வன்னிபாற் சென்றதோ வெப்பமேல் கொண்டு
நடுங நுங்கிவெம் புகையுமிழ்க் தரற்றிநா வுலர்ந்து
கடல்ப டிந்துநீர் பருகுமால் வடவையங் கனலே. (௫)

கற்றை யங்கதிர்ப் பரிதியு மதியுமக் கானஞ்
சுற்றி யேகுவ தல்லது மிசைபுகார் சூரு

மற்று ளார்களு மனையரே யெழிலியு மருத்து
மெற்றை வைகலு மதன்புடை போகவு மிசையார். (சு)

சேனம் வெம்பணி யொண்புறு விரலைமான் செந்நா
யானை யாதிக ளவ்வழைத் திருக்கவு மாவி
போன திலலையா லங்கியிற் றோன்றிய பொருள்கண்
மேனி கன்றுவ தன்றியே விளியுமோ வதனால். (எ)

எண்ணி னுஞ்சுடும் பாலையங் கானிடை யெழுந்த
கண்ண கன்புகை யழல்படு கின்றகாட் சியவே
விண்ணி னீலமுஞ் செக்கரு மவற்றினால் வெடித்த
புண்ணு மொக்குளுங் கதிர்களு முடுக்களும் போலாம். (அ)

வேக வெய்யவன் புடையுறு தவவன மிசையே
போக வோரிறை யெழுந்தழல் சுட்டது போலு
மேகு தேரொரு காலிலா திழந்ததா லிருகால்
பாகி ழந்தன னவன்கதி ரங்கிபட் டனவே. (கூ)

தங்க டொல்பவ மகன்றிலா விண்ணவர் தம்மைத்
துங்க முத்தியின் பொருட்டினு லடைபவர் தொகைபோ
லங்க ணொந்துதம் போலவே வெப்பமுற் றயருங்
கங்க நாடியே நீழலுக் கடைவன கலைகள். (கo)

கோல வெங்கதிர் மதியிவர் வைகலுங் கொடிய
பாலை வெஞ்சுரத் தாரழல் வெம்மைபட் டனரோ
காலை தன்னினு மாலையம பொழுதினுங் கங்குல்
வேலை தன்னிலும் பிறவினும் வேலைநீர் படிவார். (கக)

தொடரும் வானவா யாவரு மையைதா டொழுவார்
கொடிய பாலைமுன் னுணர்கிலா தணுகினர் கொல்லோ
வடிசி வந்தகம வெம்பியே யமுதமுண் டதற்காப்
படியின் மேலென்றுஞ் செலகிலர் விண்மிசைப் படர்வார். (கஉ)

ஒள்ளி தாகிய தலைமையிற் பிறந்துமோ ருலக
மெள்ளு நல்குர வெய்தலா லிழிந்தவர் கண்ணுங்
கொள்ளு மாறொரு பயன்குறித தேகல்போற் கொடிய
கள்ளி தன்புடை நீழலுக் கொதுங்குவ கரிகள். (கங)

இரவி கம்மியன் சுட்டுறு கோல்கதி ரெரிதீ
மருவு செந்தரை பொறியணி கொள்கலம் வறுங்கான்
கரிக ளோகரி காற்குழ றுதிக்கைநீர் கானல்
புரித ரும்பணி வெந்திடும் பணிக்குலம் போலும். (கச)

ஆன்ற வான்புவி நதிப்புனல் பாதல மதன்கட்
டோன்று நீத்தநீர் யாவையு மொருங்குறத் துற்றுச்
சான்ற பாலையஞ் செந்தழ லப்புன றன்னைக்
கான்ற வாறெனக் கிளர்வன வங்கிலக் கானல். (கரு)

விஞ்சு கானல்வெண் டேரினை யாறெனா விரும்பி
நெஞ்சி னுன்னியே யிரலைமான் மடப்பிடி நெடுந்தாட்

குஞ்ச ரந்திரிந் துலைவன கொடியவெம் பணிகா
னஞ்சு தன்னையு மருந்துவ னுமலிநீர் நசையால். (௧௬)

செய்ய மண்மக ளுலப்புறு வுந்தியந் தீயாய்
வெய்ய வன்செலற் கரியவப் பாலைமே வுதலான்
மொய்யில் வெம்பணி புகையழ லுமிழ்வன மூரானு
மையு றுங்கொடு நஞ்சொடு கான்றசெம் மணிகள். (௧௭)

மூளையி னஞ்சொரி முத்தமு முந்துசெம் பரலு
மளவில் பாந்தளின் மணிகளு மீண்டியே யமர்தல்
விளிவி லவ்வனத் தீச்சுடத் தனதுமெய் வெடிதகே
யுளையு மண்மகண் மொக்குளுற் றிடுதிற னொக்கும். (௧௮)

கள்ளி பட்டன பாலையுந் தீந்தன கரிந்து
முள்ளி பட்டன வெரிந்தன குராமரா மூளிந்து
கொள்ளி பட்டன காரகி லன்னதாற் கொடுந்தீப
புள்ளி பட்டது போன்றது பாலையம் புவியே. (௧௯)

இன்ன தாகிய பாலையஞ் சுரத்திடை யிறைவன்
றன்ன தாகிய தானைக ளொடுந்தலைப படலு
மின்னு மாமுகில பொழிந்தபின் றண்ணளி மிக்கு
மன்னு கின்றபூங் குறிஞ்சிபோ லாயதவ் வனமே. (௨௦)

ஆற்ற ருந்திற லங்கிதன் னரசியன் முறையை
மாற்றி யெம்பிரான் வருணற்கு வழங்கினு னென்ன
வேற்ற மாகிய வெம்மைபோய் நீங்கியே யெவரும்
போற்று நீரொடு தண்ணளி பெற்றதப் புவியே. (௨௧)

காத னீங்கலா தலமரு மாருயிர்க் கரண
மாதி யீசன தருளினு லவனதா கியபோ
லேது நீரிலா தழல்படு வெய்யகா னினையோன்
போத லாற்குளிர் கொண்டது நறுமலர்ப பொழிலாய். (௨௨)

புற நெறிக்கணே வீழ்ந்துளோர் சிவனருள் புகுங்கா
லறிவு மாற்றலுங் குறிகளும் வேறுபட் டனபோல்
வறிய செந்தழல் வெவ்வனம் வேலவன் வரலா
னறிய தண்மலர்ச் சோலையா யுவகைநல் கியதே. (௨௩)

## வேறு.

நீரறு முரம்பின் றன்மை நீங்குமச் சுரத்தின் றன்பா
லீரறு புயத்தன் செல்ல வெழில்கெழு பரங்குன் றத்திற்
பாரறு தவம்பூண் டுள்ள பராசரன் சிறார்க ளாய
வோரறு வகைமை யோரு மோர்தியா லதனைக் கண்டார். (௨௪)

தததனே யனந்த னந்தி சதுர்முகன் பரிதிப் பாணி
மெய்த்தவ மாலி யென்ன மேவுமூ விருவர் தாமு
மதத்தன தருளா முன்னி யிக்கலி னிருக்கை நீங்கி
யுத்தர நடவை யெய்தி யொய்யெனப் படர்த லுற்றார். (௨௫)

ஆர்வல ராகு மைந்த ரறுவரு முளைகை நேடிப்
பார்வல்வர் கணையு மாபோற் பாலையென் றுரைக்கு மெல்லை
நேர்வரு கின்ற காலை நெடும்படை நீத்தஞ் சூழச்
சூர்வினை முடிப்பான் செல்லுந் தோன்றல்வந் தணிய னானான். (உ௬)

அணிமையிற் சேயோ னண்ண வாறுமா முகமும் பன்னி
ரிணைதவிர் புயமுங் கையு மேந்தெழிற் படையின் சீரு
மணியணி மார்புஞ் செங்கேழ் வான்றுகின் மருங்கும் பாதத்
துணையுமத் துணையிற் கண்டு தொழுதுகண் களிப்புக் கொண்டார். (உ௭)

மூவிரு திறத்தி னோரு முற்றொருங் குணர்ந்த வள்ளல்
பூவடி வணங்கித் தேனீப புதுநறா வருந்தி யார்த்து
மேவருந் தன்மைத் தென்ன வியப்பொடு வழுத்தி நின்று
தேவர்க டேவ வெம்பாற் றிருவருள் செய்தி யென்றார். (உ௮)

என்றிவை யிருமூ வோரு மிசைத்துழி யுயிர்கட் கெல்லா
மொன்றிய வுயிரு மாகி யுணர்வுமா யிருந்த மூர்த்தி
தன்றிரு மலர்த்தாண் முன்னந் தலையளி யோடு தாழ்ந்து
நின்றுகை தொழுதிட் டன்னோர் நிலைமையை மகவான் கூறும். (உ௯)

மறுவறு பராச ரன்றன் மதலைக ளாகு மின்னோ
ரறுவருஞ் சிறாரே யாகி யாடுறு செவ்வி தன்னி
னிறைதரு சரவ ணத்து நெடுந்தடம் புனலிற் பாய்ந்து
முறைமுறை புக்கு மூழ்கி முகேரென வலைக்க லுற்றார். (௩௦)

உலைத்தலை யுணர்ச்சி கொள்ள வுள்ளுயிர் திரியு மாபோ
னிலைத்தலை யின்றி யார்க்கு நீந்தல்செய் குண்டு நீத்த
மலைத்தலை யடையு மெல்லை யாயிடை வதிந்த மீன்க
டலைத்தலை யிரிய வின்னோர் தன்மையங் கதனைக் கண்டார். (௩௧)

அங்கது தெரிந்து நின்றோ ராண்டுறு மீன்கள் பற்றித்
துங்கம துடைய கோட்டின் சூழலுய்த் தலவு மெல்லைச்
செங்கதி ருச்சி வேலைச் செய்கட னிரப்ப வுன்னிப்
பங்கமி னோன்மை பூண்ட பராசர னங்கண் வந்தான். (௩௨)

வள்ளுறை கொண்ட தெய்வ வான்சர வணத்து வந்தோன்
பிள்ளைக ளாகு மின்னோர் பிடித்தபுன் றொழிலை நோக்கித்
தள்ளருஞ் சினமேல் கொண்டு தனயர்கா ணீவி ரீண்டே
துள்ளுறு மீன மாகிச் சுலவுதி ரென்று சொற்றான். (௩௩)

அவ்வுரை யிறுக்கு முன்ன ரறுவரு மேனை யாற்றும்
வெவ்வினை யூழின் பாலான் மீனுரு வாகி யஞ்சி
யெவ்வமி தகலு கின்ற தெப்பக லுரைத்தி யென்னச்
செவ்விதி னுணர்ந்து மேலைத் திருமுனி புகல லுற்றான் (௩௪)

இத்தடந் தன்னின் மேனா ளிராறுதோ ளுடைய வண்ண
லத்தன தருளால வைக வனையனை யெமக்கு மம்மை
மெய்த்தன முகுக்குந் தீம்பால் வெள்ளமா மதனை நீவிர்
துய்த்திடு மெல்லை தன்னிற் றொல்லுரு வாதி ரென்றான். (௩௫)

என்றிவை முனிவன் கூறி யிரும்பகற் கடனை யாற்றிச்
சென்றன னதற்பின் மீனின் றிருவுரு வமைந்த வின்னோ
ரன்றுதொட் டளப்பில் கால மலமரு முணர்ச்சி யெய்தி
மன்றலஞ் சரவ ணத்து மாண்பெருந் தடாகத் துற்றார். (௩௬)

ஐயநீ யனைய பொய்கை யமர்தலு மவ்வை கண்டாங்
கொய்யென வெடிப்பக் கொங்கை யுகளநின் றிழிந்த தீம்பா
றுய்யதோர் நீத்த மாகித் துறுமலு மதனைத் துய்த்து
மையனீங் குற்றுத் தொல்லை வாலிய வடிவம் பெற்றார். (௩௭)

தொல்லுரு வடைந்த வின்னோர் தூமதி வேணி யண்ண
னல்லரு ளதனால் வந்து நவையகல் பரங்குன் றத்தி
னெல்லையில் விரதம் பூண்டாங் கிருந்தன ரெந்தை யீண்டிச்
செல்லுவ துணர்ந்து போந்தா ரென்றனன் றேவர் செம்மல். (௩௮)

தம்மக வுரைக்குங் கூற்றந் தாதையர் வினவு மாபோ
லம்மக பதிசொற் கேளா வருள்செய்து பராச ரன்றன்
செம்மல்க டம்மை நோக்கிச் செயிரறு குணத்து நீவி
ரெம்மொடு செல்வீ ரென்றா னியாவையு முணர்ந்த பெம்மான். (௩௯)

பராசரன் மைந்த ரன்ன பான்மையை வினவிச் செவ்வேற்
கராசர ணடைந்தே மென்று கட்டுரைத் திறைஞ்சிச் செல்லச்
சராசரம் யாவுந் தந்த சண்முகன் றழல்கட் கெல்லா
மிராசர்தந் தன்மை யெய்து மிருஞ்சுரங் கடந்து போனான். (௪௦)

ஆ திருவிருத்தம் - ௧௭௧௫.

---

வசனம்.

பின்பு அந்தத் திருவாரூரைச்சேர்ந்த திருவாரூரப்பரவையுண்மண்டலி முத லியவற்றைக்கண்டு வணங்கி, அப்பாற்செல்லும்பொழுது அங்கொரு பாலைநிலம் எதிர்ப்பட்டது, அது வடவைத்தீயும் குளிர்ந்ததென்று சொல்லலாம்படியான வெம் மையுள்ளது. அப்படியிருப்பினும் அறுமுகன்செல்வதனால் அது பூஞ்சோலைபோ லக் குளிர்ந்துதோன்றிற்று. இவர் எழுந்தருள்வதை, திருப்பரங்குன்றில் தவஞ் செய்துகொண்டிருக்கிற பராசரபுத்திரர் அறுவரும ஞானநோக்காலறிந்து, வட திசையைநோக்கி நடந்து பிள்ளையாரைக்கண்டு வணங்கிநிற்க, அருகேநின்ற இந் திரன் பிள்ளையாரைநோக்கி, பெருமானே! இதோவந்துநிற்பவர் பராசரபுத்திரர்; இவர்கள் சரவணப்பொய்கையில் விளையாடும்போது மீன்கள் அலைக்கப்பட்டு மிதந்தன. அதைக்கண்டு இவர்கள் தந்தையாகிய பராசரமுனிவர் இவர்களைநோ க்கி, நீங்களும் இந்தப்பொய்கையில் மீன்களாயிருக்கக்கடவீர்களென்று சபித் தனர். இந்தச்சாபம் நீங்குவது எப்போதென்று இவர்கள்கேட்க, முனிவர், இவர் களைநோக்கி, நீங்கள் இங்கிருங்கள், அறுமுகன் இங்கெழுந்தருள்வன். அவனை யழைக்க இறைவி திருவுளங்கொண்டு இங்கெழுந்தருளி, தன்முலைப்பாலூட்டுவள்; அதிற் சிதறிய திவலையை நீங்களுண்டு இச்சாபநீங்கப் பெறுவீர்களென்று சொல் லிச்சென்றார். அதுமுதல் இவர்கள் அப்பொய்கையில் மீன்களாயிருந்து, தேவரீர அத்தடத்திலமர்ந்திருக்கையில் இறைவி யெழுந்தருளி விரைந்தெடுத்து முலையூட்டு

கையில் சிதறின பாலையுண்டு சாபமொழிந்து திருப்பரங்குன்றில் தவஞ்செய்திருந்து, இன்று உமது வரவையறிந்து இங்கேவந்தார்களென்று சொல்லிமுடித்தான். இதுநிற்க.

சுரம்புகுபடலம் முற்றிற்று.

# திருச்செந்திப்படலம்.

சுரமது கடந்து நீங்கிச் சோதிவே லுடைய வள்ளல்
விரிபுனற் சடிலத் தண்ணன் மேவுசெங் குன்றார் நோக்கிப்
பருமணி வயிர முத்தம் பலவளம் பிறவு மாழித்
திரையெறி யலைவா யாகுஞ் செந்திமா நகரம் புக்கான். (க)

அறுமுக னங்க ணேகி யகிலகம் மியனை நோக்கி
யிறையிலோர் சினக ரத்தை யியற்றுதி யீண்டை யென்னத்
திறனுணர் புனைவர் செம்மல் சிந்தையி னுடித் தேவ
ருறைதிரு நகரம் வெஃக வொருதிருக் கோயில் செய்தான். (உ)

பொன்னுறு மிரத நீங்கிப் புறனெலாந் தானை நண்ண,
வந்நக ரதனு ளேகி யரும்பெருந் துணைவர் பூதர்
மன்னவ ரயன்மா லாதி வானவர் யாரும் போற்ற
மின்னுபொற் பீடத் தையன் வீற்றிருந் தருளி னானே. (ந)

வேறு.

பாணிமிர் மென்குரற் பாற்படு நல்யாழ்
கான மிசைத்தனர் கந்தரு வத்தோ
ரானபல் சட்டுவ மங்கைதொ றேந்தி
வானமிர் தைச்செவி வாக்குறு மாபோல் (ச)

சுருதி யெலாமுணர் தூயவன் வானோ
புரவலன் மாமுனி புங்கவர் யாரு
மருமலர் மாரி வழுத்தினர் வீசி
யிருபுடை தன்னினு மெய்தின ரீண்டி. (ரு)

வாலிய தூயொளி வானதி யாவும
பாலகன் மெய்யணி பார்த்தன ராடி
யேலுறு பாங்கரி னீண்டிய வாபோற்
காலினர் சாமரை கைக்கொ டசைத்தார். (சு)

ஒண்ணிழன் மாமதி யோரிரு வடிவா
யண்ணன் முகத்தெழி லார்ந்திட நண்ணி
விண்ணிடை நின்றென வெங்கனல் வருணன்
றண்ணிழல் வெண்குடை தாங்கினர் நின்றார். (எ)

கட்டழல் கான்றிடு காமரு நாக
மெட்டு மலரதன யாவையு மீண்டி
யுட்டெளி வாற்பணி வுற்றென வாலவட்ட
மசைத்தனா வானவர் பல்லோர். (அ)

வானுயர் தோள்விறல் வாகெனு மண்ண
ருனுடை வாள்கொடு சார்ந்தய னிற்ப
வேனைய தம்பிய ரெண்ம ரிலக்க
ரானவர் போற்றி யகன்கடை நின்றார். (௯)

வேறு.

பொருந்தி யின்னவர் புறததுற வங்க
ணிருந்த ஞானமுத லெல்லையில் காலம
வருந்து கின்றமக வான்முக நோக்கித
தெரிந்தி டாதவரி னின்னன செபபும். (௧௦)

துறந்து நீதியமர் சூர்முத லானோர்
பிறந்த வாறுமவர் பேணிய நோன்பு
மிறந்த செய்யவர மெய்திய வாறுஞ்
சிறந்து பின்னரசு செய்திடு மாறும். (௧௧)

மற்ற வெய்யவர்த மாயமு முறகொள
வெற்றி யும்வலியு மேன்மையு நுமபா
லிற்றை நாள்வரை யியறறிய துன்பு
முற்று மொன்றற மொழிந்திடு கென்றான். (௧௨)

கோக்கு மாரனிவை கூற விசைந்தே
மீக்கொள் பொன்னுலக வேந்தய னின்ற
வாக்கின் வல்லகுர வன்றனை யன்பா
னோக்கி நீயிவை நுவன்றருள் கென்றான். (௧௩)

வச்சி ரங்கொள்கரன் மறறது செப்ப
வசசெ னக்குரவ னன்ன திசைநதே
செச்சை மொய்ம்புடைய சேயிரு பொறறா
ளுச்சி கொண்டுதொழு தின்ன துரைபபான். (௧௪)

அறிதி யெபபொருளு மாவிக டோறுஞ்
செறிதி யெங்கடியா சிந்துதன் முன்னிக்
குறிய சேயுருவு கொண்டனை யார்கது
மிறைவ நின்செயலை யாருணர் கிற்பார். (௧௫)

எல்லை யில்புவனம் யாவையும் யாண்டு
மொல்லு மூவரு முயிர்தொகை யாவுந்
தொல்லை மேனிகொடு தோன்றினை யானீ
வல்ல மாயவியன் மறறெவர் தேர்வார். (௧௬)

வெய்யர் தன்லமையை வினவிய தன்மை
யைய வன்னவதை யறிந்திட வன்றே
கைய ரேந்துயா கனைந்துள மீதிற
செய்ய வின்புதவு சீரரு ளாமால். (௧௭)

ஆகை யாலவுணர் தன்மைக ளெல்லாம
போகு மெல்லைபுகல் கின்றன னென்னா
வாகை சேர்குமர வள்ளலை நோக்கி
யோகை யோடரச னோதிடு கின்றான். (௧௮)

ஆ திருவிருத்தம் - ௧௭௮௩.

### வசனம்.

பிள்ளையார் அக்கொடுஞ்சுரங்கடந்து திருச்செங்குன்றூரைத் தரிசித்து, திருச்செந்தூரையடைந்து, இங்கொரு திருக்கோயில் சமைக்கவென்று விசுவகர்மாவுக்குக் கட்டளையிட, அவ்வாறே அவன் செய்துமுடித்தான். அதில் பொற்பீடத்தின்மீது பிள்ளையார் எழுந்தருளினார். அங்குத் தம்மை வணங்கிநிற்கின்ற இந்திரன் முகத்தைநோக்கி, ஒன்றுமறியாதவர்போல, சூரபன்மன்முதலிய அவுணர்களால் உங்களுக்கு இவ்வளவுதுயரம் நேரிட்டகாரணமும், அவர்களுக்கு இப்படிப்பட்ட பெருவலி உண்டானகாரணமும் முதலிய வரலாறுகளை யெமக்குரைக்க வேண்டுமென் றருளிச்செய்தனர்.

இவ்வாறு பிள்ளையார்கேட்டலும் இந்திரன் தனக்கயலிலிருந்த வியாழபகவானைநோக்கி, பிள்ளையார் வினாவுக்கு நீரே விடைதரவேண்டுமென்று பிரார்த்திக்க, அவர் குமாரக்கடவுளைநோக்கி, இறைவனே! நீர் அறியாதவொன்றில்லையாயினும், நீர் கேட்டதனால், அவ்வசுரர் வரலாறுமுழுதும் ஒருவாறு தொகுத்துச்சொல்லுகிறேன், கேட்டருள்வீராகவென்று சொல்லத்தொடங்கினார்.

### திருச்சேந்திப்படலம் முற்றிற்று.

---

## உற்பத்திகாண்டம் முற்றுப்பெற்றது.

ஸ்ரீகச்சியப்பசிவாசாரியார் கவினடிவாழ்க.

சிவமயம்.

சண்முகக்கடவுள் துணை.

இரண்டாவது

# அசுரகாண்டம்.

## மாயைப்படலம்.

ஊரி லான்குணங் குறியிலான் செயலிலா னுரைக்கும்
பேரி லானொரு முன்னிலான் பின்னிலான் பிறிதோர்
சாரி லான்வரல் போக்கிலான் மேலிலான் றனக்கு
நேரி லானுயிர்க் கடவுளா யென்னுளே நின்றான். (க)

வீறு காசிபன் சிறார்களாய் மேவிய வறுபா
னாறு கோடிய தாகிய வவுணருக் கரசன்
மாறின் மங்கல கேசியா மரக்கியை மணந்து
பேற தாகவே சுரசையென் றொருமகட் பெற்றான். (உ)

தூய வம்மகள் வளர்ந்தபின் புகரெனுந் தொல்லோன்
றீய மாயையின் கல்விகள் யாவையுந் தெருட்டி
யாய விஞ்சையின் வல்லப நோக்கியே யவட்கு
மாயை யென்றுபேர் கூறினன் மனத்திவை மதிப்பான். (ங)

இன்ன லெய்திய வவுணர்கள் சிறுமையு மிமையோர்
மன்ன னுதியா பெருமையும வானநாட் டிறைவோர்
நன்ன லந்தொலைந் தசுரரான் மெலிந்திட நந்தி
சொன்ன வாய்மையுங் கருதினன் புகரெனுந் தூயோன். (ச)

கருதி பின்னண மேல்வருந் தன்மையுங் கண்டு
குருதி தோயும்வே லவுணர்கோன் பயந்தகோற் றொடியை
வருதி யென்றுகூய் வரம்பறு பேரருள் வழங்கி
யொருதி நந்தனைக் கேளெனத் தேசிக னுரைப்பான். (ரு)

வனச மங்கைதன் கணவனு மவாசவன் றன்னு
முனிவர் தேவரா லனைவரு மவுணர்கண் முடிந்சா
ரனையர் மேன்மையை யாவரு முணர்குவ ரத்து
னனது தந்தையும் வலியிழந் ததயொடிய குமரான். (சூ)

மின்பொ ருட்டினுற் கேதகை மலர்ந்திடும் விளங்கு
மென்பொ ருட்டினன் மாமழை சொரிந்திடு மீட்டும்
பொன்பொ ருட்டினல் யாவுமுண் டாழது போல
வுன்பொ ருட்டினு லவுணர்க்கு மேன்மைய துளதாம். (எ)

வாச மாமலர் மடந்தையும் வந்தடி வணங்கப்
பேசொ ணாததோர் பேரழ குருக்கொடு பெயர்ந்து
காசி பன்றனை யடைந்துகின் வல்லபங் காட்டி
யாசை பூட்டியே யவனொடும் புணருதி யல்லில். (௮)

அல்லி டைப்புணர்ந் தசுரர்க டம்மையுண் டாக்கி
மெல்ல வங்கவர் தங்கட்கு நாமமும் விளம்பி
யெல்லை யில்வளம் பெற்றிட வவுணருக் கியலுந்
தொல்லை வேள்வியும் விரதமு முணர்த்துதி தோகாய். (௯)

இன்ன தன்மைகண் முடிந்தபி னின்சிறு ரெவரு
நன்ன லந்தனை யடையவு நண்ணல ரெல்லாம்
பன்ன ரும்பழி யுழக்கவு மருந்தவம் பயில
வன்னை மீளுதி யென்றனன் புகரெனு மாசான். (௧௦)

குரவன் வாய்மையை வினவியே கோதில்சீ ரவுணர்
மரபு மேம்படு தன்மையான் மற்றிவை யெல்லா
மருளு கின்றனை யாதலா லிப்பணி யடியேன்
புரிகு வேனென வவனடி வணங்கியே போனாள். (௧௧)

மயிலை யன்னவ ளவுணர்த மன்னற்கு மினைய
செயலை யோதியே யவன்விடை யுங்கொடு சென்று
கயிலை யென்னநீ ளுடியே காசிப னிருந்து
பயிலு நோன்புடை யெல்லையை நாடியே படர்ந்தாள். (௧௨)

திருவு மாரவே ளிரதியுந் திலோத்தமை யென்ன
மருவு தையலு மோகினி யென்பதோர் மாது
மொருத னிததிரு வடிவுகொண் டாலென வுலகிற்
பொருவின் மாயவள் பேரழ குருக்கொடு போனாள். (௧௩)

மண்ணு ளோர்களு மாதிரத தோர்களு மதிதோய்
விண்ணு ளோர்களு மன்னவ ளெழினலம் விரைவிற்
கண்ணு றோர்சில ரனுகினர் காமவேள் கணையின்
புண்ணு றோர்விளக் கழலுறு பறவையிற் புலர்ந்தார். (௧௪)

மதியு ஞாயிறுஞ் சூழ்தரு மேருவின் வடபால்
விதிம கன்றவம் புரிதரும் வியனிலை மருங்கி
னதிர்சி லம்பொடு மேகலை புலம்புற வனையா
டிதிகொ லென்றெலாத் தேவரு மையுறச் சென்றாள். (௧௫)

சென்ற மாயையக் காசிப னிருக்கையிற் றிருவாழ்
மன்றல் வாவியுந் தடங்களுஞ் சோலையு மணிசெய்
குன்று மாமலாப் பள்ளியு மண்டபக் குழாமுந்
தன்ற னானையாற் றண்ணெனச் சூழ்தரச் சமைததாள். (௧௬)

இனைத்தெ லாமவண் வருதலு மெந்தைதன் னடியை
மனத்தி னிற்கொடு பொறியினை யுரத்தினால் வாட்டித்
தனித்து நோற்றிடுங் காசிபன் புகுந்தவத் தகைமை
யினைத்து நோக்கியீ தென்கொலென் றதிசய மடைந்தான். (௧௭)

முற்று மாங்கவை யாசையி னெடுத்துபன் முறையா
லுற்று நாடியே மாயைதன் செயலென வுணரா
னிற்றெ லாமிவ ணியற்றினர் யாரென வெண்ணிச்
சுற்று நோக்கினன் யாரையுங் காண்கிலன் றாமோன். (கஅ)

வேறு.

மெய்த்தவ வுணர்ச்சியை விடுத்து மேலையோ
னத்தன தருளினு லணங்கு மாயையால்
வைத்தன கண்ணுறு மனங்கொள் காதலாற்
சித்திர மெனவெரீஇ யினைய செப்புவான். (க௯)

வானநா டிழிந்ததோ மகத்தின் வேந்துறை
தானநா டிழிந்ததோ தனத னுதியோ
ரேனநா டிழிந்ததோ விதுவன் றேலிவை
யானவா றுணர்கிலே னழுங்கு சிந்தையேன். (உ0)

ஆரணன் செய்கையோ வகில முண்டுமிழ்
நாரணன் செய்கையோ வவாக்க நாடொறும்
பூரணன் செய்கையோ பிறாபு ரிந்ததோ
காரணந் தேர்கிலேன் கவலு நெஞ்சினேன். (உக)

புன்னெறிக் கானிடைப் புகுத்த விதிரு
நன்னெறிக் கேதுவோ நலத்த வீர்ந்திருந்
துன்னெறிக் கேதுவோ தொல்லை ஞாலமே
லெந்நெறிக் கேதுவென் றிதுவுந் தேர்கிலேன். (உஉ)

என்றிவை சொற்றிவண் யாவ தாயினு
நன்றத னியற்றுது நமக்கு முன்னமே
யொன்றறத் தெரிவுறு முணர்ச்சி யின்மையாற்
சென்றது பழுதெனச் சிந்தித் தானரோ. (உ௩)

தெற்றெனத் தன்மனந் தேற்றித் தொன்மைபோ
னற்றவ மியற்றுவா னணுகும் வேலையின்
மற்றது தெரிந்திடு மாயை தூமணிப்
பொற்றையிற் றமியளாய்ப் பொலிந்து தோன்றினாள், (உச)

தோன்றலு நிற்றலுந் தொல்லை நான்முகன்
கான்றதோர் காதல னவளை நோக்கினான்
வான்றிகழ் கற்பக வல்லி செய்தவத்
தீன்றதோர் கொடியிவ ளெய்திற் றேயென்றான். (உரு)

நாற்றலை யான்மக னம்மு னிக்கொடி
தோற்றிய தற்புதச் சூழ்ச்சிக் கேதுவென்
றாற்றுறு தவத்திற னகற்றி யாயிடை
வீற்றிருந் திடுவது விடுத்துப் போயினான். (உசு)

கண்ணகன் வரைமிசைக் கடிது போயுறீஇ
யண்ணிய ளுதனு மரிவை யாயுறப்
பெண்ணுரு வேகொளிப் பெற்றித் தாலென
வெண்ணினன் மையலுக் கெல்லை காண்கிலான். (உஎ)

புண்டரி கத்திகொல் பொன்னம் பாவைகொ
லண்டர்த மணங்குகொ லென்னி னன்னரைக்
கண்டறி வேனெனக் காதல் பூட்டிய
வொண்டொடி யினையளென் றுணர்கி லேனரோ. (உஅ)

சேயிருங் கமலமேற் செம்மல் செய்கையா
லாயவ ளென்னிலிவ் வழகு பெற்றிடா
ளேயது தேறின னெல்லை யில்லதோர்
மாயையே பெண்ணென வந்த வாறென்பான். (உகூ)

புகன்றிவை பற்பல பொருவி னான்முகன்
மகன்றன தருந்தவ வலியும் போதமு
மகன்றனன் புணர்ச்சிவேட் டழுங்கி நைவதோர்
மகன்றிலின் பரிசென வருத்த மெய்தினான். (ந0)

உண்ணிக ழூன்பொருட் டுயிர்கொல் வேட்டுவா
கண்ணியுட் பட்டதோர் கலையின் மாழ்குவான்
பெண்ணர சாயவிப் பேதைக் கென்கொலோ
வெண்ணமென் றிடருழந் திரங்கி யேங்கினான். (நக)

அதுபொழு தவுணரை யளிக்க வந்திடுந்
திதிமகர் மடமகள் சிறந்த கண்களாற்
பொதுவிய னோக்கொடு புணர்ச்சி நோக்கினைக்
கதுமெனக் காட்டினள் முனிவன் காணுற. (நஉ)

கண்டனன் முனிவரன் கலங்கி னான்பொதுக்
கொண்டதோர் நோக்கியல் குறித்துக் கூடுத
லெண்டரு நோக்கினு மிவளை யெய்துமா
றுண்டென நினைந்தன னுவப்பி னும்பரான். (நந)

பெருந்துய ருதவுவெம் பிணியுந் தீர்ப்பதோர்
மருந்துமற் றுதவு மையன் மேதரு
மருந்தவ முனிவர னனைய மாதுதன்
றிருந்திய நோக்கிய றெளிந்து செப்புவான். (நச)

கற்பனை முதலிய கடந்த கண்ணுதற்
சிற்பரன் யாவையுஞ் சிதைய வீறுசெ
யற்புத மும்மல னருளும் போன்றதாற்
பொற்புறு கின்றவிப் பூவை நாட்டமே. (நரு)

மாயையுங் கொலையுமே மருவி வைகலு
மாயதோ ருலகினை யளிக்கு நீர்மையாற்
பாயிருந் திரைக்கட லடுவெட் பள்ளிகொ
டேயனை நிகர்த்ததித் தோகை நோக்கமே. (நசு)

இயலிருண் மேனியா லிடியி னார்ப்பினால்
வியனுயிர் முழுவதும் வெருவச் செய்துடன்
பயனுறு தீம்புனல் பரிவி னீதரு
புயலையு நிகர்த்தன பூவை பார்வையே. (நஎ)

என்பன பலபல வெண்ணி யன்னவ
டன்படி வத்துருத் தகைமை காணுறீஇ
யன்பினில் வியந்துகின் றழுங்கு நெஞ்சொடு
நன்பெரு நயப்பினு னவிறன் மேயினுன். (௩௮)

வேறு.

வானுறு புயலின் றேற்றம் வரம்பில்சீர்க் கங்குல் வண்ண
மேனைய கருமை யெல்லா மிலக்கணத் தொருங்கே யீண்டி
மீனுறழ் தடங்க ணாள்பான் மேவிய வென்ப தல்லா
னைமார் கூந்தற் கம்மா நாம்புக லுவமை யாதோ. (௩௯)

கோட்டுடைக் குழவித் திங்கள் குனிசிலை யிரண்டு மானின்
சூட்டுடை நுதற்கொவ் வாது தொலைந்துபோய்த் தொல்லை வான
நாட்டிடைக் கரந்துந் தோன்ற நணுகியுந் திரியு மென்னின்
மீட்டிதற் குரைக்க லாகு முவமைகள் வேறு முண்டோ. (௪0)

அருவத்திற் றிகழுங் காம னுடலஞ் சிலையு நெற்றி
யுருவத்துக் குடைந்து வான்புக் கொதுங்கிய மகவான் வில்லு
மருவத்தந் துரைத்து மென்னின் மற்றவை யிரண்டு மாதின்
புருவதனைப் போலா தம்மின் மீமிசைப் பொருந்து மன்றே. (௪௧)

வண்ணமா வடுக்கோ னீலம் வாளயில் கயல்சே லென்றே
யெண்ணின வவற்றி லொன்றும் யாவது மியல்புற் றன்றாற்
கண்ணிணைக் கிணையே தென்னிற் காமர்பாற் கடலு ளெங்கோ
னுண்ணிய வெழுநஞ் சென்னி லொருசிறி தொப்ப தம்மா. (௪௨)

எள்ளென்று மோதகி யென்று மேர்கொள்சம் பகப்போ தென்றுந்
தள்ளருங் குமிழ தென்றுஞ் சாற்றின ரவைக ணுடிற்
றெள்ளிது மன்று வேறு செபபவோர் பொருளு மில்லை
யுள்ளதொன் றுரைக்க வேண்டுந் துண்டத்துக் குவமை தேரின். (௪௩)

கெண்டையந் தடங்கட் பாவை கேழ்கிள ரிதழ்க்கொப் புன்னிற்
றொண்டையங் கனியுண் டென்று சொல்வனே லதுவுந் துப்பா
லுண்டிடும் விருப்பி னேருக் குலப்புறு வமிர்த நல்கிக்
கொண்டிருந் திடினே யொபபா மில்லையேற் கூடா தன்றே. (௪௪)

முகையுறு தளவும் புள்ளின் முருந்தமுங் குருந்து முத்து
மகையுறு முடுவுஞ் சாறறி னணியெயி றதற்கொவ் வாவா
னைகையது தெரிந்தோர் வெஃக நன்னலம் புரியு நீரா
னிகர்பிறி தில்லை திங்க ணிலாவெனி லாகு மன்றே. (௪௫)

மயிரெறி கருவி வள்ளை தோரண மணிப்பொன் னூசல்
பெயர்வன கிகர்க்கு மென்று பேசுதல் பேதை நீரத்தாஞ்
செயிரற வுலோக மாக்குந் திசைமுகக் கொல்லன் செய்த
வுயிரெறி கருவி போலு மொண்குழைக் காது மாதோ. (௪௬)

கொங்குறு கூந்த லாடன் கோலவாண் முகத்துக் கொப்பாந்
திங்களென் றுரைக்கிற் றேயும் வளர்வுறுஞ் சிறப்ப தன்றாற்
பங்கய மெனினு முண்டோர் பழுதமற் றதற்கு மென்னி
லங்கதற் கதுவே யல்லா லறையலாம் படிமற் றுண்டோ. (௪௭)

சரந்தெறு விழியி னுடன் களத்தின தெழிலைச் சங்கங்
கரந்தன கமுகு மற்றே யன்னது கண்டு நேரா
வரந்தரு புலவர் சொற்றார் மற்றவ ரதற்கோ நாளு
மிரந்திடு தொழில ராகி யிழுக்கமுற் றார்க ளன்றே. (௪௮)

மாயவ னதரஞ் சேர்தரு வரன்முறை யிசைத்த பச்சை
வேயெனு மதுவும் யான்செய் மெய்த்தவ மனைய நீரா
டேயபொற றோள்கண் டஞ்சித் தோற்றதா லென்னி லன்னான்
சேயவன் வணக்கா தேந்துஞ் சிலைகொலோ கிகர்ப்ப தம்மா. (௪௯)

பூந்தள வனைய மூரற் பொற்கொடி கரத்துக் கொவ்வா
காந்தளு நறிய செய்ய கமலமா மலரு மென்னின்
மாந்தளிர் பொருவ துண்டோ வள்ளுகிர் கிள்ளை நாசி
யேய்ந்தள வற்றுக் காம ரிலைச்சினை யாய தன்றே. (௫0)

பொருப்பென வெழுந்து வல்லின் பொறபெனத் திரண்டு தென்னந்
தருப்பயி லிளநீ ரெனனத் தண்ணெனு வமுதுட் கொண்டு
மருப்பெனக் கூர்த்து மாரன் மகுடத்தில வனப்பு மெய்தி
யிருப்பதோர் பொருளுண் டாமே லிணைமுலைக் குவமை யாமே. (௫௧)

அந்திரு வன்னாண் மேனி யமைந்ததுவெம் முலைக்கண் செய்வான்
சுந்தர வள்ளி நீலுண் டுகிலிகை விதிகொள போழ்திற்
சிந்திய துளளி யொன்றி னெழுந்ததுகொல சிறப்பின் மிக்க
வுந்தியின் மீது போய வுரோமத்தி னெழுக்க மன்றே. (௫௨)

மாசடை யாத நீல மணியுறழ் வண்ண மாலோன்
காசடை யகலந் தாங்குங் கனைகுழை தத் திருவும போற்றுந்
தேசுடை மாதி னுந்திச் சீர்னுக மனையன் றுறைசுப
பாசடை நோவ தாமோ பகர்னும பழிய தனறே. (௫௩)

கணநெழி மாயு மனறே மின்னெனிற் ககன மாகத்
கொண்டிடி னுருவின றுகுந கொடியெனிற றுடிய தென்னிற
திண்டிற னுக மெனனிற சிறிதன றணங்கி னுப்ப
னுண்டிலை யென்று பானு முணமைகூற கா றுவமை யுண்டோ. (௫௪)

மயலுடைப் பணியு மால வட்டமும் வனப்புச் செய்த
வியலுடைத் தேரு மசுற றிரங்கியே யுயிர்கத் மென்றுற
கயலுடைக் கண்ணு ளலகுற கொப்பம்வா காப்பா விட்ட,
வியலுறுப் பெண்பா யாரு மேலது காணடு மலமப (௫௫)

கோழிலை யரம்பை யீனுங் குருமணிக் தண்டை வேழுத்
தாழிருந் தடக்கை தனனை நகரெனிற றகுவ வன்றால்
மாலைபூயுண் கருங்கண் மாதின் மகரிகைக வயங்கு பொற்பூண்
சூழுறு கவானை போலு மயாவயெனிற சொலலல லாமோ. (௫௬)

அலவனு னெண்டை யன்னு ளணிகெழு முழந்தாட் கொப்பாய்
புலவாகள் புகலா நின்ற வழக்கலாற பொருந்திற் றன்றாற
றிலகநன் மணியே போலவா டெய்வத வடிவுக் கிந்த
வுலகினு ளிழிந்த தொன்மை யுரைக்கினஃ துவமை யாமோ. (௫௭)

தமனியத் தியன்ற பொற்பிற் ருவிலா வாவந் தானுஞ்
சிமையநேர் கொங்கை மாதின் றிகழ்கணைக் காலுந் தூக்கிற்
சமமிது பொருளி தென்றே தமியனேன் றுணிந்து சிந்தை
யமைவுற வறித றேற்றே னையமுற் றிடுவன் யானே. (ருஅ)

அரும்புறு காலைக் கொங்கைக் கழிவுற்று முகமொவ் வாது
சுரும்புற மலர்ந்த பின்னுந் தொலைந்துகை யினுக்குந் தோற்றுத்
திரும்பவு மடிக்கு மஞ்சிச் சிதைந்தது கமல மென்றாற்
பெரும்பய முற்று நோற்றும் பிழைத்தது போலு மன்றே. (ருகூ)

மேக்குயர் கூன லாமை விரைசெறி குவளைத் தோடு
தாக்குறு பந்து பிண்டித் தண்டளிர் சார்பு கூறிற்
றாக்குறு துலையின் றட்டுத் தொகுத்தொரு வடிவில் வேதா
வாக்குறின் மாதின் றாளுக் கதுநிக ராகும் போலும். (சுo)

ஆவியி னெய்ய பஞ்சு மனிச்சமா மலரு மன்னத்
தூவியு மிதிக்கிற் சேந்து தாங்குறு மடிக ளென்று
ஞவியங் குழலின் மாது நடந்திட ஞால மாங்கோர
பூவதோ வதுபூ வன்மேற் பொன்னடி பொருந்து மோதான். (சுக)

கயலுறழ் கருங்கட் செவ்வாய்க் காரிகை தனது சாயன்
மயிலெனக் கூறி னல்லான் மற்றதற் குவமை யில்லை
யியலுறு வடிவிற் கொப்ப தேதுள திவளோ போலச்
செயலுறத் தெழுதிற் றுண்டே ற் சித்திர மமைத்த போலும். (சுஉ)

ஆனன நான்கு செய்தாட் காயிர மடங்கோர் கொண்ட
மானினி தன்னை வேதா வகுத்திலன் கொல்லோ வன்னான்
றானமைத் தனளோ வென்னிற் றாபல தாங்கி யிந்தத்
தூகிலா நகையி னாளைத் தொடர்ந்தான் றிரிவ னன்றே. (சுங)

மையறு புவியில் வந்த மாதிவ ளடியி னுள்ள
தய்யதோர் குறிகள் வானிற வுரல்பெருந் திருவில வைகுனு
செய்யவன் றனது தேவி சிரதிது மல்லே யென்றான்
மெய்யுறு குறிக ளெல்லா மினைத்தென வியப்பற் றான்றே. (சுச)

வேறு.

என்று முன்னியவ வேந்திழை தன்முனஞ்
சென்று காமர் திருவினுஞ் சீரியாய
நன்று நன்றுநி னலவர வேயெறு
நின்று பின்னு நெறிப்பட வோதுவான. (சுரு)

யாது நின்குலம் யாதுநின் வாழ்பதி
யாது நின்பெயர் யாருனைத் தந்தவ
ரோது வாயென் றுரைத்தன னுள்ளூறு
காத லான்மிகு காசிப னென்பவே. (சுசு)

வனிதை கூறுவண் மாதவ நீயிது
வினவி நிற்றல் விழுமிதன் றென்னிடைத்
தனிய ளாகியுஞ் சார்ந்தனை நோற்பவர்க்
கினிய வேகொ லினைய தோர் நீர்மையே. (சுஎ)

ஏதி னேன்பை யிகந்துணர் வில்லதோர்
பேதை மாந்தரிற் பேசியெற் சார்வது
நீதி யேயன்று நின்கட னாற்றிடப்
போதி யென்ன முனிவன் புகலுவான். (௬அ)

மங்கை கேட்டி வரம்பறு பற்பக
லங்கம் வெம்ப வகமெலி வுற்றிடச்
சங்கை யின்றித் தவம்பல செய்திட
லிங்கு வேண்டிய தெய்துதற் கேயன்றோ. (௬௯)

பொன்னை வேண்டிக்கொ லோபொன்னின் மாநகர்
தன்னை வேண்டிக்கொ லோசசி யாம்பெயர்
மின்னை வேண்டியே யல்லது வேறுமற்
றென்னை வேண்டியவ் விந்திர னோற்றதே. (எ0)

ஐதின் மேனி யலசுற யான்றவஞ்
செய்த திங்குனைச் சேருதற் கித்திற
நொய்தின் மேவினை நோற்றதற் குப்பய
னெய்தி யுற்ற தினித்தவம் வேண்டுமோ. (எக)

பேரு மூரும் பிறவும் வினவினேற்
கோர வொன்று முரைத்திலை யாயினுஞ்
சேர வேயின் றெளிகுவன் காமநோ
யீரு கின்ற திரங்குதி நீயென்றான். (எஉ)

மாயை கேட்டு வறிது நகையளாய்
நீயிவ் வாறு நெடுந்தவஞ் செய்தது
மாயி லென்பொருட் டோவஃ தன்றரோ
தூயை வஞ்சஞ சொலன்முறை யோவென்றாள். (எஙு)

மறதிவ் வண்ண மயில்புரை சாயலாள்
சொற்ற காலை யனையவள் சூழ்ச்சியை
முற்று மோர்ந்து முதிர்கலை யாவையுங்
கற்று ணர்ந்திடு காசிபன் கூறுவான். (எச)

பொய்ம்மை யாதும் புகல்கில னுன்முகன்
செம்மல் யானது தேருதி போலுயா
லிம்மை யேபர மீந்திடு வோயிவண்
மெய்ம்மை யேயுரைத் தேனுள வேட்கையால். (எரு)

பன்னெ டுந்தவம் பற்பக லாற்றியான்
முன்னி நின்றது முத்திபெற றுய்ந்திட
வன்ன தேயெற் கருளசெய வந்தனை
யுன்னை மேவலன் றோவுயர் முத்தியே. (எசு)

ஈத லான்மற் றெனக்கொரு பேறிலை
யாத லாலுனை யேயடைந் தேனெனக்
காதன் மாதுமக் காசிபற் கண்ணுறீஇ
யோத லாம்பரி சொன்றை யுணர்த்துவாள். (எஎ)

வேறு.

மங்கல மியைந்திடு வடாதுபுல முள்ளேன்
செங்கனக மேருவரை சேர்ந்ததொரு தென்பாற்
கங்கைநதி யின்கரை கலந்திட நினைந்தே
னங்கணுறு கின்றதொ ரரும்பயன் விழைந்தே. (எஅ)

வல்லையவ ணேகுறுவன் மாதவ வலத்தோய்
நில்லிவ ணெனப்பகர நீனிறம தாகுஞ்
செல்லுறழு மேனிதரு செம்மலருண் மைந்த
னெல்லையிது கேண்மென வுரைக்கலுறு கின்றான். (எகூ)

கங்கைநதி யாதிய கவின்கொணதி யேழு
மங்கணுல கந்தனி லரன்பதிகள் யாவு
மங்குறவழ் மேனியவன் வாழ்பதியு மற்று
மிங்குற வழைப்பனொ ரிமைப்பொழுது தன்னில். (அ0)

பொன்னுலகும் விஞ்சையர்கள் போதுலகு மேனோர்
மன்னுலகு மாதிரவர் வாழுலகு மங்கட்
டுன்னியதொர் தேவரொடு சூழ்திருவி னோடு
மின்னபொழு தேவிரைவி னீண்டுதர வல்லேன். (அக)

மூவகைய தேவரையு முச்சகம துள்ளோர்
யாவரையு நீதெரிய வெண்ணுகினு மிங்ஙன்
மேவர வியற்றிடுவன் வெஃகல்புரி வாயேற்
காவலுறு பேரமிர்த முங்கடிதி னீவேன். (அஉ)

எப்பொருளை வேண்டினு மிமைப்பினுன வாக
வப்பொரு ளியாவையு மளிப்பனஃ தல்லான்
மெய்ப்புதல்வர் வெஃகினும் விதிப்பனவர் தம்மை
யொப்பிலை யிவர்க்கெனவு மும்பரிடை யுய்ப்பேன். (அ௩)

அந்தமிகு மேனகை யரம்பைமுத லானோ
வந்துனடி யேவல்செய வல்லைபுரி கிற்பேன்
சிந்தைதனி மால்கொடு தியங்குமென தாவி
யுய்ந்திட நினைந்தருடி யொல்லைதனி லென்றான். (அச)

வேறு.

முனியிது புகறலோடு முற்றிழை முறுவ லெய்தித்
தனியினை ளென்று சொல்லோ சாற்றினை யினைய நீர்மை
யினியது தவிர்தி மேலோர்க் கிசையுமோ யானு முன்ன
நினைவுழிச் செல்வ னேற்று நீயிவ ணிருத்தி யென்றே. (அ௫)

கங்கையின் றிசையை முன்னிக் கடிதவட் செல்வா ளன்ன
வங்கவள் போத லோடு மருந்தவன் றொடர்ந்து செல்ல
மங்கையு மருவ மெய்தி மாயையிற் கரந்து நிற்ப
வெங்கணு நோக்கிக் காணா னிடருழந் திரங்கி நைவான். (அ௬)

### வசனம்.

பெருமைபொருந்திய காசிபமுனிவன் மக்களாகிய அறுபத்தாறுகோடியவுணர்களுக்கரசனானவன், மங்கலகேசியென்னும் அரக்கியைமணந்து, சுரசையென்னும் மகளைப்பெற்றான். அந்தப்பெண்ணானவள் சுக்கிரபகவானால் மாயவித்தைகளெல்லாங் கற்பிக்கப்பட்டு, அதிலேற்றமுடையவளாகி, மாயையென்று பெயரிடப்பெற்று வளர்ந்துவருகையில், சுக்கிரபகவான் அவளையழைத்து, பெண்ணே! திருமால்முதலிய தேவர்களால் அவுணர் அநேகமாயிரவர் மடிந்தனர். உன தந்தையும் ஒளியிழந்தொடுங்கினான். உன்னால் உன்குலத்துக்குப் பெருமையுண்டாகும், நீ காசிபமுனிவனையடைந்து, அவனை உன்னிடத் தன்புண்டாம்படி மயக்கி, அவனைக்கூடி அசுரரைப்பெற்று அவர்களுக்கு நாமகரணஞ்செய்து, அளவற்ற வேள்விகளும் விரதங்களும் அவர்களுக்கு உபதேசிக்கவேண்டும். அதன்பின்னே, அவர்களெல்லாம வாழ்வடையும்பொருட்டும் தேவர்கள் தாழ்வடையும்பொருட்டும் நீ தவஞ்செய்யப்போகவேண்டும் என்று சொல்லுதலும், அவ்வாறேயிசைந்து, காசிபனிருக்குந் தபோவனத்தையடைந்து, தன்மாயையால் அவ்விடத்தில் பூம்பொய்கை புஷ்பசயநம் மணிமண்டபம் முதலியவற்றை அளவில்லாதனவாயுண்டாக்கி, தானும் இரதி இந்திராணி திருமகள்முதலிய அழகிற்சிறந்தவரெல்லாரும் ஓரவடிவுகொண்டாற்போன்ற பேரழகுடையவளாயிருக்க, காசிபமுனிவன், பொய்கைமுதலியவற்றை யிங்கே சமைத்தவர்யார், இந்தக் கட்டழகியார் என்று தன்மனத்தில் வியப்படைந்து, ஆலோசித்து, இவையாவும இவளாலேயே யமைக்கப்பட்டனவென்றுணர்ந்து, அவளது கூந்தல்முதல பாதத்தளவுமாகிய அவயவசௌந்தரியத்தைநாடி மிகவும் ஆச்சரியப்பட்டு, அவளுக்கெதிரேசென்று நின்று பெண்ணே! உன்குலம் யாது, உன்பதி யாது, உன்பெயர் யாது, உன்னைப்பெற்றோர் யாவர் என்று கேட்க, மாயையானவள் அம்முனிவனைநோக்கி, நீர் தவஞ்செய்வதைவிட்டுத் தனித்திருக்கிற என்னிடத்தில்வந்து இவ்வாறுவினவுதல் உமது பெருமைக்குத் தகுமோ, இது நீதியன்று, இச்சிறுதொழிலைவிட்டு, முன்போலவே உமது தவமாகிய பெருந்தொழிலைச்செய்யப் போம் என்றுசொல்ல, முனிவன் அவளைநோக்கி, இந்திரன்முதலியோர் தவஞ்செய்தது இந்திராணிமுதலியோர் போகமநுபவித்தற்கேயன்றோ, அதுபோல நான் தவஞ்செய்ததற்குப்பயனாய் நீவந்தெதிர்ப்பட்டாய், இனிமேலும நான தவஞ்செய்யவேண்டுமோ, நான முத்திப்பேறுகுறித்துத் தவஞ்செய்தேன், உன்னைக் கூடப்பெறுவதே எனக்கு முத்திப்பேறாகும், இனித் தாமதஞ்செய்யாமல என்மனோரதத்தை நிறைவேற்றி என்னை மகிழச்செய்வையாயின் உனக்கு மிகுந்த புண்ணியமுண்டு என்றுசொல்ல, மாயையானவள், நான் வடதிசையில்வசிப்பவள், மேருமலையின ஒருபக்கத்தில் கங்கைக்கரையையடைந்து அங்கே பயனெல்லாம பெறக்கருதி விரைந்துபோகிறேன், நீர் என்னைத் தடுக்கவேண்டாம நில்லும் என்று சொல்லிவிட்டுக் கங்கையைநோக்கிச் செல்பவள்போலச்செல்ல, முனிவனும் அவளைப் பின்றொடர்ந்து பெண்ணே, கங்கைமுதலிய நதிகளை யிங்கே வரவழைப்பேன், எல்லாத்தலங்களையும் இங்கே வரச்செய்வேன், மேனைமுதலியோரை உனக்குக் குற்றேவல்செய்யத்தருவேன், இன்னும் யாதுபெற நீ விரும்பினும் பெறலாகும், நன்மக்கட்பேறும் பெறுவாய், என்மீது கடைக்கண்பார்வை யிடவேண்டுமென்று வேண்ட, மாயையானவள் அந்த முனிவனை நீர் இங்கு நில்லுமென்று சொல்லி அருவமாய் மறைந்துபோயினாள். முனிவன் அவளைக்காணாமல் வருந்துவானாயினன். எவ்வாறெனின்,

மாயைப்படலம் முற்றிற்று.

# காசிபன்புலம்புறுபடலம்.

தேனீ மையெனப் புகல்வாள் சிறிதுந்
தானீ ரமிலா டனிமா யவளே
மானீ ருமதாம் வயினூற றனளோ
வேனீர் மொழியா திரிகின் றதும்வே (௧)

சிலைவா ணுதலா டிறன்மா யையெனும்
வலைவீ சியெனு ருயிர்வவ வினளாற்
கலையீ ரிவணீ ரதுகண் டனிரோ
நிலையீர் வெருளா நெடிதோ டுதிரால். (௨)

கடிதேர் களிறே கழிகா தலையாய்ப
பிடிதேர் பரிசாற் பெயாவாய் தமியே
னெடிதே தளரா நெறிநே டினையக்
கொடியா டனையுங் கொணராய் கொணராய். (௩)

அருளா துனையே யளியென் றனராற
பெரியா ரவாசொற பிழையா குவதோ
தரியா வரியே தமியே னுயிரைத்
தெரிவா னினைவோ திரிகின் றனையே. (௪)

மேவிப் பிரிவாள விழிம்பா லடுவா
யாவிக குறமவோ வலைமன் மதனப
பாவிக் குமினிப படையாய வருவாய
வாவிக் குவளா யெனைவா டுதியோ (௫)

செந்தா மரைமேற றிருவா மனை
வந்தா டணியா மயல்செய் தசலவா
ளந்தோ விளவா வவளைக பொதணாயாள
சந்தா கிலையென் சந்தே யுரையாய (௬)

பொன்னிற் பொலிவுற் றிடுபூ ககலந்
தன்னிற றனையோ தெழீஇத தணவா
வன்னப் பெடைகா ளறமீ புகலீர்
ரென்னைத தனிவைத தவமோ டியதே. (௭)

தணியா வகைமா றமியேற் கருளித
துணியா வகல்வாள் படர்தொன் னெறியைக்
குணியா வுரைசெய் குதியென் றிடினுங்
கணியா யிதுவோ கணிதன் னியல்பே. (௮)

படைவேள் கணையே பரிதிக் குறவே
மடவார் முகமே மதியின் பகையே
விடமே புரையும் விழிமேல் வியனின்
னிடமே வருவா ளொளியா திசையாய். (௯)

நின்றீர் மிகவுந் நெடியீர் பெரியீ
ரின்றீ ரமிலா தெனைநீங் கினைஞ்முன்
சென்றீ ரவள்போஞ் செயல்கா ணுதிர்செய்
குன்றீர் மொழியீர் குறைசெய் துளனே. (க0)

மயிலே ரியலா ளொருமா யவளே
யியலே தறியே னிவணின் றனளோ
பயிலே சிலநீ பகர்வா யதனாற்
குயிலே யெனதாருயிர்கொள் ளுதியோ. (கக)

நின்பால் வரவே நினைவாய் மொழிவா
னென்பா லிலையிவ் வழியே கினளான்
மென்பா லெனமே வியமா ருதமே
தென்பால் வருவாய் செயல்கூ றுதிநீ. (கஉ)

ஆரத் தடமே யருணீ ரினையுள்
ளீரத் தினையென் றெவரும் புகல்வார்
சாரிற் சுடுவாய் தளரே னெனவே
சோர்வுற் றிடுமென் றுயாதீர்க் கிலையே. (கங)

களிசேர் மயிலே கவிரா கியவாய்க்
கிளியே குயிலே கிளைதா னலமோ
தளரா வகைநீர் தகவே மொழியா
வளியே னுயிருக் கரணு குதிரால. (கச)

அறவே துயர்செய் தனுகா திகவித
துறவே துணிவா டொடர்புந் தொடர்போ
வுறவே யினிநீ ருவள்போ நெறியைப்
புறவே தமியேன் பெறவே புகல்வீர். (கரு)

எனவே பலவு மியல்சோ முனிவன்
மனமால் கொடுசொற் றிடமற் றதனை
வினவா மகிழா வியன்பெய்ம் மறையா
வனமே யனையா ளவனுற் றிடலும். (கசு)

வேறு.

நோற்குறு முனிவன் றன்பா னெய்தென மாயை யெய்தித
தீர்க்கலா மையல் பூட்டிச் செய்தவ மழித்தா ளந்தோ
பார்க்கில னிதனை யென்னுப் பரிவுசெய் தகன்றான் போலக்
கார்க்கடல் வரைப்பி னேகிக் கதிரவன் கரந்தா னன்றே. (கஎ)

தந்தைகா சிபனென் றோதுந் தவமுனி யவன்பாற் சார
வந்துளாள் யாயே யன்றோ மற்றிவர் தலைப்பெய் கின்ற
மூந்துறு புணர்ச்சி காண்டன் முறைகொலோ புதல்வற் கென்னுச்
சிந்தைசெய் தகன்றான் போன்று தினகரக் கடவுள் சென்றான். (கஅ)

அந்தமி னிருத ரென்னு மளவைதீர் பாருட் கங்குல்
வந்திடு மின்னே யென்னு வல்லையின் மதித்து வானத்
திந்திர னுணை போற்று மிலங்கெழி னேமிப் புத்தேள்
சிந்துவிற் கரத்தல் போன்று செங்கதிர்ச் செல்வன் போனான். (ககூ)

வேலையி னிரவி செல்ல விண்ணவர் யாருங் கொண்ட
வாலிய திருவுஞ் சீரும் வன்மையு மகல மாயை
பாலுறு மவுணர் தானைப் பல்குழூப் பரவிற் றென்ன
மாலையு மிருளின் சூழ்வும் வல்லைவந் திறுத்த வன்றே. (உ0)

மாகமே னிமிர்ந்த செக்கர் மாலையம் பொழுது நல்கூர்ந்
தீகெனு விரக்கு நீரார்க் கிம்மியின் றுணைய தேனு
மோகையால் வழங்கா நீதி யொன்னலா னொருவன் செல்வம்
போகுமா றென்ன வாளா பொள்ளெனப் போயிற் றன்றே. (உக)

இரும்பிறை யுருவி னோங்கார் கூரங்குயத் தினுமீர்க் கல்லா
வரம்பறு மிருளின் கற்றை,கணங்களு,மருளு நீராற்
பரம்பிய தியாண்டு மாகிப பாரெனப் பட்ட மாது
கரும்படா மொன்று மேற்கொள் காட்சியைப் போன்ற தன்றே. (உஉ)

வணமிழாய் மோலி மைந்தன் மாலிருட் கங்குல் வேழத்
தெண்டரு வதனம் பட்ட விரும்புகாப புள்ளி யென்ன
வண்டர்தந் தருக்கள் சிந்து மணிமல ரென்ன வான்றோய்
கொண்டலிற் பமுத்த தென்னத் தாரகை குலவிற் றன்றே. (உங)

துண்ணென வுலக முற்றுஞ் சூழ்ந்தபே ரிருளா னதைத்
தெணணில வாகி யுளா செங்கையால வாரி நுங்கி
விண்ணவர் புகழ நீல வியனிறந் தன்பாற காட்டுங்
கண்ணுதல போன்று முந்நீர்த் தோன்றினன் கதிர்வெண் டிங்கள். (உச)

அழுந்துறு பாலின் வேலை யமரர்கள் கடைந்த காலைச்
செழுந்துளி மணிக ளோடுந் தெறித்தென வுடுக்க டோன்றக்
கழுந்துறு மவுண ரென்னுங் காரிரு டொலைய வங்க
ணெழுந்ததோ ரமுதம போன்று மிலங்கின னிந்து வென்பான். (உரு)

இரவெனும் வல்லோன் ஞால மென்பதோ ரூலையில் வேலைக்
கரியுறு வடவைத் தீயிற் களங்கொடு வெண்பொற் சோதி
விரைவொடு செம்மை செய்து மீட்டுமோர் மருந்தா றெல்லை
யுருவுசெய் தென்னச் செங்கே ழொளிமதி வெளிய னானான். (உசு)

அண்டருங் ககன மென்னு மகலிருந் தடத்திற் பூத்த
விண்டதோர் குவளை யாமபல் போலுமான் மீன்கள் வெள்ளைப்
புண்டரீ கத்தைப போலும புதுமதி யகன்கட் டேனார்
வண்டின மொப்பச் தன்றே மாசுதோய் களங்க மாதோ. (உ௭)

அலைதரு நேமி யென்னு மானறந் தோர் தடத்தின் பாலா
நிலவெனும் வலையை யோச்சி நிழன்மதிப் பரத னீர்த்துப்
பலநிறங் கொண்ட மீன்கள் பன்முறை கவர்ந்து வான்மேற்
புலருற விரித்த தேபோற் பொலிந்தன வுடுவின் பொம்மல். (உஅ)

கழிதரு மூவரி நீத்தங் கையகப் படுத்து மாந்தி
யெழிலிகள் வான மீப்போ யிருநில்த் துதவல் காணூஉப்
பழிதவிர் மதியப் புத்தேள் பாற்கடல் பருகி யாண்டும்
பொழிதரு மமிர்த மென்னப் புதுநிலாப் பூத்த தன்றே. (உகூ)

மலர்ந்திடுங் கடவுட் டிங்கள் வாணிலாக் கற்றை யெங்குங்
கலந்தன வுலகில் யாருங் களித்தனர் குமுத மாதி
யலர்ந்தன தளிர்த்த சோலை யம்புயப் போது செவ்வி
புலர்ந்தன வொடுங்கு கின்ற புள்கடந்தன பிரிந்தோர் புந்தி. (கூ0)

அல்லவை புரியா ரேனு மறிவினிற் பெரியா ரேனு
மெல்லவர் தமக்கு நண்பா யினியவை புரிதற் பாற்றே
பல்லுயிர்த் தொகைக்கு மின்பம் பயந்திடு மதிகண் டன்றே
புல்லிய கமல மெல்லாம் பொலிவழிந் திட்ட வன்றே. (கூக)

திங்களின் மலர்ந்த செவ்வித் தேன்முரல் குமுத மெங்கோன்
பங்கமுற் றார்கண் மேவான் பதுமமே யொடுங்கிற் றென்னாத்
தங்களி லுரைத்தல் போலாகு சசிக்கது வுண்மை யெம்பா
லிங்கிலை யென்ப போன்ற விசையளி பொதிந்த கஞ்சம். (கூஉ)

கங்குல்வந் திறுத்த காலைக் கடிமனைக் கதவம் பூட்டிச்
செங்கண்மா றன்னை புலவித் திருமக ளிருந்தா ளென்னக்
கொங்கவிழ் கின்ற செங்கேழ்க் கோகன தங்க ளெல்லாம்
பொங்கிசை மணிவண் டோடும் பொதிந்தன பொய்கை யெங்கும். (கூகூ)

வேறு.

ஆனதோர் காலையி லமரர் தம்மையுந்
தானவர் தம்மையுந் தந்த காசிபன்
வானக மெழுதரு மதியின் றெண்ணிலா
மேனிய தடைதலும் வெதும்பி னானரோ. (கூச)

குலைந்தனன் றன்னுளங் குறைந்து வன்மைய
னலந்தன னுயிர்த்தன னறிவு சோர்ந்தனன்
புலர்ந்தன னொடுங்கினன் புலம்பி யங்கண்வா
னிலந்தனி லெழுதரு நிலவை நோக்கினான். (கூரு)

காலையி னெழுந்தசெங் கதிரி னாயகன்
மாலையம் பொழுதினின் மறைந்து கீழ்த்திசை
வேலையில் விரைவுடன் மீண்டும் வந்துளான்
போலுமந் தோவிது புதுமை யோவென்பான். (கூசு)

ஞாயிறு மன்றெனி னடுவ னாகியே
பாயிரும் புணரியுட் பயின்று தோன்றலா
லேயென வுலகட வெண்ணி யாண்டுறுந்
தீயெனுங் கடவுளே திங்க ளன்றென்பான். (கூஎ)

இந்துவென் றுலகெலா மிசைப்ப நின்றதோர்
செந்தழற் கடவுளித் திசையிற் செல்வுழி
வந்ததோர் சோதிகொல் வான மெங்கணு
மந்தியஞ் செக்கரென் றடைந்த வாறென்பான். (கூஅ)

காண்டகு மதியெனக் கழறுஞ் செந்தழன்
மூண்டிடு புகைகொலோ மூன்னம் வானமு
மீண்டுறு தரணியுந் திசையு மெங்குமாய்
நீண்டதோ ரிருளென நிமிர்ந்த வாறென்பான். (கூகூ)

தெண்டிரைப் பிறந்திடுந் திங்கட் செந்தழல
கொண்டது வாவிதாங் கோலங் காரிடைக்
கண்டன னிததிறங் கரையி லாவிக
ளுண்டதிற பெறறதிவ் வுருவ மேயென்பான். (௪௦)

ஊனமில் செககரா யுதிததுப பின்னரே
வானிற ளுகிய மதியத தீததரத
தானிறை புலிங்கமே யலது தாரகை
மீனெனப படுவது வேறுண் டோவென்பான். (௪௧)

மால்கட லதனிடை வந்த பான்மையா
லாலமி தாகுமா லமராக கன்றெழு
நீலமெய் யுருவினை நிதததத திங்களின
கோலமொ டினறிவட குறுகிற ரோவென்பான. (௪௨)

இங்கிவை யாவுமன் றோகொள வேலையில
வெங்கனன் முழுவதும விடமு மாநதெழீஇ
மங்குலிற சிதறிட வாணிற புகானன்
றிங்களே யாமிது திண்ண மெனகினறுன. (௪௩)

இனையன பருடகையா லிசைத்த காசிப
முனிவர னெனபவன முனனை மாயையை
நினைபவ னகியே நெடிது காதலா
லனையவ டனைவிளித தாறடன் மேயினன. (௪௪)

வேறு.

கொங்குண் கோதைத தாழ்குழ லலவீா கொடியேன்மு
னெங்கு மெங்குங் காணுறு கின்றீ ரெழின்மினனின்
பொங்குஞ சோதி போலெறிா புலனும படிகிலவீா
மங்கும போகா சேருதிா நெஞசம வலியீரே. (௪௫)

முன்னஞ் செய்தீா காதலை நோனபை முதமலொடும
பினனஞ் செயதீா மாரனை யேவிப பிழைசெயதீா
சின்னஞ் செயதீா நலனுணா வெலலாஞ சிறியேனுக
கின்னஞ் செய்யும பெறறியு முணடோ விசையீரே. (௪௬)

வாகாய் நினற குன்றமும் யாவும் வருவிதநி
ரேகா நின்றீ ரிவவிடை தன்னி லெனைநீங்கிப
போகா நினறீா வலலையின் மீண்டும புவியெஙகு
மாகா நின்றீா தஞசெயல் யாரே யறிகிறபாா. (௪௭)

பற்றே நும்பா லாயினன முனனம பயில்செய்கை
யறறேன் வேறா லாறறவு நொந்தே னலகாயு
முறறே னலமேல லுமமொடு மின்னு முபுலகினரேன
பெற்றேன் வாளா மாயந்தன னெனனும பிழையொன்றே. (௪௮)

நேயங் கொண்டீ ராமென வந்தீா நெறியில்லா
மாயங் கொண்டா வன்றிறல கொண்டீர் மயல்செய்யுங்
காயங் கொண்டீ ராருயிர் நிற்கக் கருதீரேற
ருயங் கொண்டா கூறறொறி போலுந் தனிவந்தீர். (௪௯)

வேண்டேன் வேறோர் மாதரை நும்பால் வியன்மோகம்
பூண்டே னும்மை மாயவ ரென்னும் பொருள்கண்டே
னீண்டே சென்றீர் போற்கர வுற்றீ ரெய்தீரேன்
மாண்டே னின்னே யாருயிர் நிற்பான் வருவீரே. (௩0)

ஒன்றே யாகு மாயம தானீ ருலகெல்லாம்
வென்றே செல்வீ ரென்னுயிர் கொள்வான் விழைவீரே
னன்றே நன்றே நல்குவன் யானே நனிநண்பாற்
சென்றே யோர்கான் மாமய நீரச் சேர்வீரே. (௩க)

என்னா வென்னா வித்தகை பன்னி யிடராழித்
துன்னா மாழ்கிச் சோர்தரு மெல்லைத் துகடீரு
மின்னா நின்ற மாயவ ளன்னான் விழிகாண
முன்னாய் நின்றா ளெவ்வினை கட்கு முதலானாள். (௩உ)

ஆ திருவிருத்தம் - கஙஅ.

வசனம்.

ஓ! மான்களே, என்னுருயிர் கவர்ந்துகொண்ட மாயையானவள் இவ்வழியேவரக் கண்டீர்களோ, யானைகளே, என்பிராணநாயகி இவ்வழியே போகக்கண்டீர்களோ, என்றிவ்வாறு அங்குள்ள வண்டுமுதலிய அஃறிணைப்பொருள்களோடும் சொல்லிப் புலம்பிக்கொண்டிருக்கிற காசிப முனிவனிடத்து அன்பு மிகுந்து, மாயையானவள் தன்சிறந்த வடிவை மறையாது அங்கேவந்து சேர்ந்தாள்.

மெய்யுணர்வுடைய காசிபமுனியை மாயையானவள் தன் மாயையால்மயக்கி அவன் தவத்தையும் அழித்தாளே, இந்தக்கோரத்தை நான்பார்க்கலாற்றேனென்பான்போலச் சூரியன் அஸ்தமித்தான். உடனே இருள்வந்து மூடிக்கொண்டது. அதன் பிறகு சந்திரன் உதித்தான். சந்திரன் உதித்தலும், விரகிகளுக்குக் காமநோய் மிகுவ தியல்பாதலால் காசிபமுனிவன் மையல் மிகுந்து அம்மாயையை நினைந்து, பலவகையாகப் புலம்பி வருந்துகையில் மாயையானவள் அந்தக்காசிப முனிவனிடத்தன்புகூர்ந்து அவனுக்கெதிரேவந்து தோன்றினாள்.

காசிபன்புலம்புறுபடலம் முற்றிற்று.

# அசுரர்தோற்றுபடலம்.

கந்தார் மொய்ம்பிற் காசிப னென்போன் கடிதங்கண்
வந்தாள் செய்கை காணுத லோடு மகிழ்வெய்தி
யந்தா வுய்ந்தேன் யானென மின்கண் டலர்கின்ற
கொந்தார் கண்டல் போனகை யோடுங் குலவுற்றான். (க)

ஆடா நின்றான் குப்புற லுற்றா னவடன்மேற்
பாடா நின்றான் யாக்கை பொடிப்பிற் படர்போர்வை
மூடா நின்றா னன்னதொர் மாயை முன்சென்றான்
வீடா நின்ற தன்னுயிர் காக்கும் விதிகொண்டான். (உ)

வேறு.

என்னேசெய வேண்டிற்றவை யெல்லா மிசைவாலே
முன்னேபுரி கிற்பேனிவண் முனிகின்றதை யொருவி
நன்னேயமொ டெனையாளுதிர் நனிவல்லையி லென்னாப்
பொன்னேரடி மிசைதாழ்தலு மவளின்னது புகல்வாள். (ங)

வெருவுற்றிட லிவணின்றவென் வியன்மெய்யினுக் கியையுந்
திருமிக்குறு தகவாகிய திறன்மேனியு மேற்கொ
ளுருவொப்பதொர் வடிவும்முட னுடனெய்திடு வாயேன்
மருவுற்றிடு கின்றேனென மயில்சொற்றன ளன்றே. (ச)

ஏமுற்றிடு முனிவர்க்கிறை யிதுகேட்டலு முன்னங்
காமக்கடல் படிகின்றவன் களிசேர்தரு முவகை
நாமக்கட லிடையாழ்ந்தன னன்று லிஃதென்றுன்
சேமத்திரு நிதிபெற்றிடு மிரவோனெனத் திகழ்வான். (ரு)

அற்றேமொழி தருதன்மையி லார்வத்தொடு தமியேன்
குற்றேவல்செய் கிற்பேனிளங் கொடியேரிடை யென்னாச்
சொற்றேதவ முயல்வன்மையிற் றுகடீர்தரு மனிலப்
பொற்றேரவற் கிலதென்பதொர் புதுதேளுருக் கொண்டான். (சு)

அன்றாயதொ ருருவெய்திய வறிவன்றனை வியவா
நன்றாலுன தியல்பாமென நகையாககரம் பற்றாக்
குன்றாகிய முலையாளவற் கொடுபோந்தன ளங்கட்
பொன்றாழ்கிரி யெனவோங்குமொர் பொலன்மண்டபம் புகுந்தாள். (எ)

வேறு.

கற்பனை யின்றியே கடிதின் முன்னுறு
மற்புத மண்டபத் தானை யால்வரும
பொற்புறு சேக்கையிற் பொருந்தி னாரோ
வெற்படு கங்குலின் முதலி யாமத்தில் (அ)

சூருறு வெம்பசி தொலைபப வைகலு
மாரஞ ரெய்தினோ னிதின் வந்திடு
பேரமு துண்குறு பெற்றி போலவந
காரிகை தனைமுனி கடிதிற் புல்லினன். (கூ)

புல்லலு மெதிர்தழீஇப் புகரில் காசிபன்
றொல்லையி லுளாவொடு தொலைவில் செய்தவம்
வல்லையில் வாங்குறு மரபி லன்னவன்
மெல்லித ழுமிர்தினை மிசைதன் மேயினள். (கo)

பின்னுற மாயவள் பெரிதுங் காமுறு
மன்னவன் புணர்தர வறிவ தொன்மையுந்
தொன்னெறி யளித்தெனத் தொண்டைச் சேயிதழ்
முன்னுறு மமிர்தினை முனிக்கு நல்கினள். (கக)

உட்டெளி வின்றியே யுலப்பின் றோடிய
மட்டறு காமமாம் வாரி யுற்றுளா
னட்டொளிர் பொன்னனா ளல்கு லாஞ்சுழிப்
பட்டன னின்பமாம் பரவை நண்ணுவான். (கஉ)

தோமறு முனிவரன் சுரதத் தாற்றினாற்
காமரு மதனநூல் கருத்திற் சிந்தியாத
தேமொழி மயிலொடு செறிந்து போகமார்
பூமியி னோரெனப் புணர்தன் மேயினான். (கங)

செம்மயி லன்னவித் தெரிவை தன்னிடை
யெம்மையு மில்லதோ ரின்ப மிங்ஙன
மெய்ம்மையி னல்கிய விதியி னார்க்கியா
னம்மசெய் கின்றதோ ரளவுண் டோமென்றான். (கச)

ஆறறி முனிவர னநங்க நான்முறை
வீறொடு புணர்தலும் வெய்ய மாயவள்
கீறின ணகத்தினாற் கிண்ட பாலொரு
மூறிய காமநீ ரொழுகிற் றென்பவே. (கரு)

உணர்வுடை முனிவர னுயர்ந்த விஞ்சையர்
மணமுறை யிதுவென மாயை தன்னொடு
புணர்தொழில் புரிந்தனன் போக முற்றினான்
றுணையறு மின்பெனுங் கடலிற் றோய்ந்துளான். (கசு)

வேறு.

அந்த வேலையின் முகுந்தனு மம்புயத் தவனு
மிந்தி ராதியர் யாவரு முனிவரா ரெவருந்
தந்த முள்ளமே னடுக்குற மாயவ டன்பால
வந்து தோன்றினன் சூரபன் மாவெனும் வலியோன். (கஎ)

தயக்க மில்லதோர் சூரனவ் விதிதனுக் கொல்லை
முயக்க வேலையி லிருபான் முறைமுறை யிழிந்த
வியாப்பில் வந்தனா முபபதி னாயிர மெவளா
வயக்க மிந்திறற் றானவர் யாரினும் வலியோர். (கஅ)

அன்னர் தம்மையு முதலவன் றன்னையு மங்க
ணின்மி னீரென நிறுவியே யாயிடை நீங்கி
மின்னு நூலணி முனியொடு மாயவள் மேவிரா
பொன்னின் மாமணி மண்டப மதனிடைப் புகுந்தாள். (கக)

மானை நேர்பவ ளாயிடைத் தொல்லுரு மாற்றி
மேன சூரிய பிறைவுருக் கொளலாலும் விரைவிற்
றானு மோதிறன் மடங்கலே ருமெனச் சமைந்தான்
மோன மாய்முன மருந்தவ மியற்றிய முதல்வன். (உ0)

மங்கை யோடவன் மடங்கலாய் மகிழ்வுடன் புணரக்
கங்குல் வாயிரண் டாகிய யாமமேற் கடிதே
யங்கை யோரிரண் டாயிர மாயிர முகமாயச்
சிங்க மாமுகன் றோன்றினன் றிடுக்கிட்ட திசைகள். (உக)

இத்தி றத்திவ ரிருவரும் புணர்வுழி யாக்கை
மெத்தி வீழ்தரும் வியர்ப்பினில் விறலரி முகராய்ப்
பத்து நால்வகை யாயிர வெள்ளமாம் படைஞர்
கொத்தி னோடுவந் துதித்தனர் கூற்றுயிர் குடிப்பார். (உஉ)

மற்று மத்தொகை யோரையு மாமகன் றனையு
நிற்றி ரீண்டென மாயவள் வீற்றொரு நிலயந்
தெற்றெ னப்புகுந் தோர்பிடி யுருக்கொடு சேரக்
கொற்ற மால்களிற் றுருவினை முனிவனுங் கொண்டான். (உ௩)

பேரு மும்மத மால்களிற் றுருக்கொடு பிடிமேற்
சேரு கின்றுழி மூன்றெனச் செல்லும்யா மத்தி
னீரி ரண்டுவா ளெயிற்றுடன் யானைமா முகத்துத்
தார காசுரன் றோன்றின னவுணர்க டழைப்ப. (உ௪)

ஏழு மங்கவர் மெய்ப்படு வியர்ப்பினு மிபத்தின்
கோல மானவர் தோன்றின ரவாகுழுக் குணிக்கி
னூழு பத்தின்மே லாயிர வெள்ளமா நவின்றோர்
மூல நாடியே யிப்பரி சுணர்த்திய முனிவர். (உ௫)

ஆண்டு தாரகன் றன்னையு மவுணர்க டமையு
மீண்டு நிற்றிரென் றோர்மணி மண்டபத் திருத்தி
மாண்ட பாபமேற் றகர்பிணை வுருக்கொள மாயை
பூண்ட வன்பினன் செச்சையி னுருக்கொடு புணர்ந்தான். (உ௬)

புணர்ந்த காலையி லசமுகி தோன்றினள் புவியோர்க்
கணங்கு செய்தகர் முகவரா யங்கவர் வியர்ப்பிற்
கணங்கொள் முப்பதி னாயிர வெள்ளமாங் கணித்த
திணங்கு தானவ ருதித்தன ரிமையவர் கலங்க. (உ௭)

மீள மற்றவர் தம்மையு நிறுவிவே றுள்ள
சூளி கைப்பெரு மண்டபந் தொறுந்தொறு மேகி
யாளி வல்லியம் புரவிமா னேரியெண் கேனங்
கூளி யாதியா மவிலங்கின துருவெலாங் கொண்டார். (உ௮)

இறுதி யில்லதோ விலங்கின துருவுகொண் டிரவின்
புறம தாகிய புலரிச்சர் வைகறைப் பொழுதின்
முறையின் மாயையு முனிவனு மாகியே முயங்கி
யறுப தாயிர வெள்ளமா மவுணரை யளித்தார். (உ௯)

மிகுதி கொண்டிடு மிரண்டுநூ றாயிர வெள்ளந்
தகுவர் தம்மையுஞ் சூரனை முதலினோர் தமையும்
புகலு மோரிராப் பொழுதினி லளித்ததற் புதமோ
வகில மும்வல மாயவட் கிச்செய லரிதோ. (௩௦)

ஆங்க வெல்லையி னண்டமா யிரத்தெட்டி னுள்ளுந்
தீங்கு கொண்டிடுங் குறிகளுள் ளனவெலாஞ் செறிந்து
நீங்க லின்றியே நிகழ்வன நீர்மைகண் டெவரு
மேங்கு கின்றனர் வினைவதென் னோவென விரங்கி. (௩௧)

அல்லெ லும்பொழு திறத்தலு மாயவ ளரிவைத்
தொல்லை நல்லுருக் கோடலு முனியுமத் துணையே
வல்லை தன்னுரு முன்னையிற் கொண்டனன் மற்றவ்
வெல்லை தன்னிடை யுதயவா யணுகின னிரவி. (௩௨)

கிட்டைக் கேற்றிடு முனிவனை மாயவ ளிசியில்
விட்டுப் போந்தில ளற்புத மென்விளோந் ததுவோ
கிட்டிக் காண்பனென் றுதயமாங் கிரிப்புறத் தணுகி
யெட்டிப் பார்த்தன னென்னவே யுதித்தன னிரவி. (௯௩)

வேறு.

எல்லைவந் திடுதலு மீன்ற மாயவள்
செல்லுறு மற்புதஞ் செறிந்து சேணினுஞ்
சொல்லிய திசையினுந் துவன்றி யார்த்திடு
மொல்லெனுஞ் சனததினை யுவந்து நோக்கினாள். (௯௪)

விண்டுறு தானவர் வெள்ளம் யாவையுங்
கண்டனன் மைந்தனை கருமமிச்செயல்
கொண்டில மாயையிற் கூடிற் றீதென
வண்டரு மற்புத மடைந்த றன்முனி. (௯௫)

பற்பக லருந்தவம் பயின்ற தூயனும்
பொற்புறு மாயையும் புதல்வர் தந்தொகை
யற்புத மோடுகண் டன்பி னீரராய்
நிற்புழித் தெரிந்தன னேரில் சூரனே. (௯௬)

இருமுது குரவரு மீண்டிற் றூரவர்
திருவடி வணங்கியாஞ் செய்தி றத்தினை
மரபொடு வினவுது மவம்பி னீரென
வரிமுகன் முதலினரியக கூறினன். (௯௭)

அனைகழ லினையவ ரதனைத் தேவுறீஇ
யுறுதியிற் தாமென வுரைத்துப பின்வரத
தறுமலர்சான் டிருந்தன ரொல்ப தாதியை
நிறுவினா ளவணிடை நின்று நீங்கிலள். (௯௮)

ஆகத் திருவிருத்தம் - கஎகசு.

---

வசனம்.

இவ்வாறு எதிரேவந்துநின்ற மாயையைக் காசிபமுனிவன்கண்டு, களிப பென்னும் கடலில் மூழ்கிநின்று, பெண்ணரசே! யான் என்னசெய்யவேண்டுமோ அதைக் கட்டளையிட்டால் உடனே செய்துவிடுவேன், தாமதஞ்செய்யாமல் என் னைக் கடைக்கண் பார்க்கவேண்டும் என்று மிகவும் வேண்டிநிற்க, அந்த மாயை யாளவள் அவனை நோக்கி நீ யென்னைப்போல அழகியவடிவங்கொண்டு வந்தால் உன்னைச் சேர்வேனென்று சொல்ல, அப்படியே முனிவனும் மன்மதனும் நாணத் தக்க திவ்யரூபங்கொண்டு நின்றான். அதைக்கண்ட மாயையும் அந்தக் காசிபமுனி வனை வியந்து, உன்னியற்கை நன்றாயிருக்கின்றதென்று நகைத்து அவன் கை யைப்பிடித்து ஓர் பொன்மயமான மண்டபத்திற்சென்று அழகிய பூம்படுக்கையில் அவ்விரவின் முதல்யாமத்திற்கூடினள். அவ்வாறுகூடுதலும், தேவர்முதலியயாவ ரும் அஞ்சத்தகுந்த சூரபன்மன் தோன்றினான். இவன்தோன்றுதலும், அவ்விருவ ருடைய வுடம்பினின்றுந்தோன்றின வெயர்வையால் முப்பதினாயிரவெள்ளம் தானவர்தோன்றினர், அவர்களைச் சூரபன்மனோடு நிறுத்திவிட்டு, வேறொருவண்

டபமடைந்து மாயை பெண்சிங்கத்தின்வடிவுகொண்டும் காசிபன் ஆண்சிங்கத்தின வடிவுகொண்டும் அவ்விரவின் இரண்டாம்யாமத்தற புணர்தலும இரண்டாயிரங கைகளும் ஆயிரமுகங்களுமுள்ள சிங்கமுகாசுரன தோன்றினன. இவ்விருவருடைய வுடம்பின்வெயர்வையில், சிங்கமுகங்கொண்ட பதினாலாயிரவெள்ளம் தானவர்தோன்றினர். அவர்களைச் சிங்கமுகாசுரனோடு நிறுத்திவிட்டு, வேறோரிடத்தில் பெண்யானையாகவும ஆண்யானையாகவுமவடிவுகொண்டு மூன்றாமயாமத்திற்புணர, நான்குகொம்புகளையுடைய யானைமுகங்கொண்ட தாரகாசுரன்தோன்றினன். இவ்விருவருடைய வெயர்வையில் நாற்பதினாயிரவெள்ளம் யானைமுகமுள்ள அசுரர்தோன்றினர். அவ்வசுரரையும தாரகனையும அங்கு நிறுத்திவிட்டு, நான்காம்யாமத்தில் இருவரும ஆட்டுருவங்கொண்டுபுணர, அப்புணர்ச்சியில அசமுகிதோன்றினள். அவருடமபின்வெயர்வையில ஆட்டுமுகங்கொண்ட அசுரர் முப்பதினாயிரவெள்ளத்தொகையினர தோன்றினர். அவர்களை அசமுகியோடு நிறுத்திவிட்டு, யாளி புலி கரடி முதலிய பலவகை மிருகங்களின்வடிவுகொண்டு இருவரும விடியற்காலமவரையில புணர்ந்து அவ்வவ்வுருவங்களைக்கொண்ட அறுபதினாயிரவெள்ளம அவுணரைத்தோன்றுவித்தார்கள். இவ்வாறு இருநூறாயிர வெள்ளம அவுணரையும சூரபன்மன்முதலியோரையும ஒரு இரவிற்பெற்றனரென்பது அதிசயமாமோ, மாயையுடையவளுக்கு எத்தான செயற்கரியதாவது? அந்தச்சமயத்தில ஆயிரத்தெட்டண்டங்களினும கொடுமையாகிய உற்பாதங்கள காணப்பட்டன. அவற்றைக்கண்டு இவ்வாறுவர என்னதீங்கு நேரிடுமோவென்று யாவரு மனங்கலங்கினார்கள். அந்த இராப்பொழுதுக்கழிதலும மாயையானவள் தன் பழையவுருக்கொண்டிருக்க, காசிபமுனிவனும் தன பழையவுருக்கொண்டேனன், சூரியோதயமுமாயிற்று. பின்பு சூரபன்மன் சிங்கமுகன் தாரகன் என்பவர்களை யுடன்கொண்டு தன் தாயாகிய மாயையையும காசிபமுனிவனையுஞ் சென்று வணங்கி, யாம செய்யத்தக்ககாரியம் யாதென்று வினவப் பகுசெய்தனன்றான.

அசுராதோற்றுப்படலம் முற்றிற்று.

---

# காசிபனுபதேசப்படலம்.

நீங்கிய சூர்முதலொடு பியினைகியோ
யாங்கவ ரடிதொழு தருள்செய் மேலையீர்
யாங்கள்செய் கினறதெம் னிசைமினீரெனா
வோங்கிய காசிப னுணர்த்தன பேயினான. (௧)

உறுதிய தொன்றினை யுணர்த்துகின்றனன்
றைகழுன் மைந்தர்கா ளரிய மாதவ
நெறிதனின் மூவிரு நிறுதி ரனனத்தன்
முறைதனை வாய்மையான் மொழிவன கேண்மினோ (௨)

சான்றவ ராய்ந்திடத் தக்க வாம்பொருண
மூன்றுள மறையெலா மொழிய தின்றன
வான்றதோர் தொல்பதி யாரு யிர்த்தொலக
வான்றிகழ் தளையென வகுப்ப ரன்னவே. (௩)

அளித்திடல் காத்திட லழிதன் மெய்யுணர்
வொளித்திடல் பேரரு ளுந்தவ லேயெனக்
கிளத்திடு செயல்புரி கின்ற நீலமார்
களத்தினன் பதியது கழறும் வேதமே. (ச)

பற்றிக வில்லதோர் பரம னீர்மையை
யிறறென வுரைப்பரி தெவர்க்கு மென்பராற்
சொற்றிடும் வேதமுந் துணிகி லாவவன்
பெற்றியை யினைதெனப் பேச வல்லமோ. (ருெ)

மூவகை யெனுந்தளை மூழ்கி யுற்றிடு
மாவிக ளுலப்பில வநாதி யுள்ளன
தீவினை நல்வினைத் திறத்தின் வன்மையா
லோவற முறைமுறை யுதித்து மாயுமே (சு)

பாரிடை யுதித்திடும் பாரைச் சூழ்தரு
நீரிடை யுதித்திடு நெருப்பில் வாயுவிற
சீருடை விசும்பிடைச் சேரு மன்னவைக்
கோரிடை நிலையென வுரைக்கற் பாலதோ. (எ)

மக்களாம் விலங்குமா மாசில் வானிடைப்
புக்குலாம் பறவையாம் புல்லு மாமதின்
மிக்கதா வரமுமாம் விளங்க ருனுமாந்
திக்கெலா மிறைபுரி தேவு மாவுமாம. (அ)

பிறத்திடு முன்செலும் பிறந்த பின்னாமெய்
துறந்திடுஞ் சிலபக லிருந்து துஞ்சுமாற
சிறந்திடு காளையிற் றேயு மூப்பினி
லிறந்திடு மதன்பரி சியம்ப லாகுமோ (கூ)

சுற்றுறு கதிரெழு துகளி னும்பல
பெற்றுள வென்பதும் பேதை நீரதாற்
கொற்றம துடையதோர கூற்றங் கைக்கொள
விற்றவும் பிறந்தவு மெண்ணற் பாலவோ. (க0)

கலைபடு முணர்ச்சியுங் கற்புங் வீரமு
மலைபடு வெறுக்கையும வலியு மற்றது
மலைபடு புற்புத மாகு மன்னவை
நிலைபடு பொருளென நினைக்க லாகுமோ. (கக)

தருமமென் றொருபொரு ளுளது தாவிலா
விருமையி னின்பமு மெளிதி னாக்குமா
லொருமையில் வரும்பொரு ளாகு மன்னது
மொருமையி னோர்க்கலா லுணாதற் கொண்ணுமோ. (கஉ)

தருமமே போற்றிடி னன்பு சார்ந்திடு
மருளெனுங் குழவியு மணையு மாங்கவை
வருவழித் தவமெனு மாட்சி யெய்துமேற்
றெருளுறு மவ்வுயிர் சிவனைச் சேருமால். (கங)

சேர்ந்துழிப் பிறவியுந் திருந் தொன்மையாய்ச்
சார்ந்திடு மூவகைத் தளையு நீங்கிடும்
பேர்ந்திட லரியதோர் பேரின் பந்தனை
யார்ந்திடு மதன்பரி சறைதற் கேயுமோ. (௧௪)

ஆற்றலை யுளதுமா தவம தன்றியே
வீற்றுமொன் றுளதென விளம்ப லாகுமோ
சாற்றருஞ் சிவகதி தனையு நல்குமாற
போற்றிடி னனையதே போற்றல வேண்டுமால். (௧௫)

அத்தவம் பிறவியை யகற்றி மேதகு
முத்தியை நல்கியே முதன்மை யாக்குறு
மித்துணை யன்றியே யிம்மை யின்பமு
முய்த்திடு முளந்தனி லுன்னுந் தன்மையே. (௧௬)

ஆதலிற் பற்பக லருமை யாற்புரி
மாதவ மிம்மையு மறுமை யுந்தரு
மேதுவ தாகுமா லிருமை யும்பெற
லாதியம் பகவன தருளின் வண்ணமே. (௧௭)

ஒருமைகொண் மாதவ முழந்து பின்முறை
யருமைகொள் வீடுபே றடைந்து ளோர்சிலா
திருமைகொ ளின்பினிற் சேர்கின் றோர்சில
ரிருமையு மொருவரே யெய்தி னோசிலர். (௧௮)

ஆற்றலிற் றம்முட லலசப் பறபக
னோற்றவ ரல்லரோ துவலல் வேண்டுமோ
தேறறுகி லீரகொலோ தேவ ராகியே
மேற்றிகழ் பதந்தொறு மேவுற றோரெலாம். (௧௯)

யத்திமை நெறியொடு பயிற்றி மாதவ
முத்திபெற் றரனடி முனனுற றோர்தமை
யித்துணை யெனலரி திருமை யும்பெறு
மெய்த்தவா மாலொடு விரிஞச னாதியோர். (௨௦)

பல்லுயிர் தன்னையு மாய்த்துப பாரினுக்
கல்லல்செய் தருந்தவ மாற்றி டாதவர்க்
கில்லையே யிருமையு மின்ப மாங்கவா
சொல்லரும் பிறவியுட் டுன்பத தாழுவார். (௨௧)

அறிந்திவை யுரைப்பினு மவனி மாக்கடா
மறங்கொலை களவொடு மயகக நீங்கலா
திறந்திடு கின்றிலர் துன்ப மற்றிலர்
பிறந்தன ரிறந்தனர் முத்தி பெற்றிலார். (௨௨)

தவந்தனின் மிக்கதொன் றில்லை தாவில்சீர்த்
தவந்தனை நேர்வது தானு மில்லையாற்
றவந்தனி னரியதொன் றில்லை சாற்றிடிற்
றவந்தனக் கொப்பது தவம தாகுமே. (௨௩)

ஆதலின் மைந்தர்கா ளறத்தை யாற்றுதிர்
தீதினை விலக்குதிர் சிவனை யுன்னியே
மாதவம் புரிகுதிர் மற்ற தன்றியே
யேதுள தொருசெய லியற்றத் தக்கதே. (உச)

வேறு.

உடம்பினை யொறுத்து நோற்பா ருலகெலாம் வியப்ப வாழ்வ
ரடைந்தவர்க் காப்ப ரொல்லார்க் கழிவுசெய் திடுவர் வெஃகு
நெடும்பொருள் பலவுங் கொள்வர் நித்தரா யுறைவ ரீது
திடம்பட வுமக்கோர் காதை செப்புவ னென்று சொல்வான். (உரு)

ஆகத்திருவிருத்தம் - உ0க.

---

வசனம்.

இவ்வாறு சூரபன்மன் காசிபமுனிவரைவணங்கி எமக்குக் கட்டளையென்னவென்று வினவுதலும், முனிவர் அவனைநோக்கி, இவ்வுலகத்தில் எவ்வகையான முயற்சிசெய்யினும் அவற்றாலடையும் பயன்கள் அற்பகாலத்தில் அழியுமியல்பினையுடைய இம்மைமறுமை யின்பங்களேயன்றி வேறொன்றுமில்லை. ஆகையால், என்றுமழியாத முத்திச்செல்வத்தை யருள்செய்பவராகிய பரமசிவனைநோக்கித் தவஞ்செய்யுங்கள், அதினுஞ் சிறந்தகாரியம் வேறொன்றுமில்லை. தவஞ்செய்வீர்களானால் உங்களுக்கு அரிதானகாரியம எவ்விதத்தால் ஆராய்ந்துபார்த்தாலும் ஒன்றுமிடையாது. இந்தச்சொல்லை நீங்கள் உறுதியாகக்கொண்டு தவத்தொழிலை மேற்கொண்டு செய்யும்பொருட்டு உங்களுக்கு ஒரு இதிகாசம் சொல்லுகிறேன் கேளுங்களென்று சொல்லத்தொடங்கினார்.

காசிபனுபதேசப்படலம் முற்றிற்று.

---

# மார்க்கண்டேயப்படலம்.

நச்சக வயிர்த மன்ன நங்கையர் நாட்ட வலை
றைச்சக மயக்கல் செய்யாத் தடுப்பருந் தவத்தின் மிக்கா
னிச்சகம் புகழு கின்ற விருபிறப் பாளர் கோமான்
குச்சக னென்னும் பேரோன் கொடிமதிற் கடகம் வாழ்வோன். (க)

அவற்கொரு புதல்வ னுண்டா லருமறை பயின்ற நாவான்
கவுச்சிக னென்னும் பேரோன் கரையொரு சிறிதுங் காணாப்
பவக்கடல் கடக்கு மாற்றாற் பராபர முதல்வற் போற்றித்
தவத்தினை யிழைப்ப வாங்கோர் தண்புனற் றடாகஞ் சார்ந்தான். (உ)

அத்தலை யொருசா ரெய்தி யானினந் தீண்டு குற்றி
யொத்தென வசைத லின்றி யுயிர்ப்பொரீஇ யுலக மெல்லாம்
பித்தென வுன்னி மாயாப் பேரின்ப வளக்கர் மூழ்கி
நித்தனை யெழுத்து மன்று ணிலைமையு நினைந்து நோற்றான். (ங)

ஒவிய மவுன முற்றுங் குணவொடு முறக்க நீங்கித்
தாவற நோற்கும் வேலைத் தடம்ரை கடமை யாதி

மேவிய விலங்கு தத்த மெய்யகண் டேயம் யாவும்
போவது கருதி யன்னான் புர்த்திடை யுரைத்துப் போமால். (௪)

இப்பரி சியன்ற போழ்தும் யாவது முணரா னாகி
யொப்பற நோற்கும் வேலை யொலலையி லதனை நாடி
முப்புரஞ் சிதைய மேனாண் முனிந்தவ னருளி னென்னாச்
செப்பின னிமையோர் சூழச் சேணிடைத் திருமால் சேர்ந்தான். (௫)

அற்புத மெய்தி மைந்த னருந்தவம் புகழ்ந்து முன்போ
யெற்படு மவன்றன் மேனி யெழின்மலர்க் கரத்தா னீவி
வெற்பன முனிவ நின்பேர் மிருககண் டேய னென்னாச்
சொற்பயி னமைஞ் சாத்த வெழுந்துகை தொழுது நின்றான். (௬)

தொழுதெழு முனியை நோக்கித் துாமதிச் சென்னி யோன்றன்
முழுதுறு கருணை நின்பான் முறறுக முன்னஞ் செய்த
பழுதவை நீங்க வென்னாப் பரிவுசெய் தருளி வானோர்
குழுவுட னுவண வூர்தி கொம்மென மறைந்து போனான். (௭)

போனபின் முனிவர் மேலோன் புரமெரி படுத்த முக்கண்
வானவ னருளி னாலே வல்விரைந் தேகித் தாதை
யானவன் முன்ன ரெய்தி யடிமுறை வணங்க வன்னான்
றானுள மகிழ்ந்து கண்டாங் கெடுத்தனன் றழுவிக் கொண்டான். (௮)

தவத்திடை யுற்ற தன்மை மொழிகெனத் தனயன் றானு
முவப்புறு தாதை கேட்ப வுள்ளவா றுரைத்த லோடு
நிவப்புறு முவகை மிக்கு நின்குலத் தவர்க்கு ணின்போ
லெவர்க்குள தினைய நோன்மை யாதுகிற் கரிய தொன்றே. (௯)

பாருளார் விசும்பின் பாலார் பயனுகர் துறக்க மென்னு
மூருளா ரல்லா வேனை யுலகுறு முனிவர் தம்மி
லாருளார் நின்னை யொப்பா ரையநீ புரிந்த நோன்மை
காருளார் கண்டத் தெந்தை யன்றிமற் றெவரே காண்பார். (௧௦)

எனப்பல புகழ்த லோடு மிவன்வழி மரபு தன்னின்
மனப்படு மொருசேய் பின்னாண் மறலியைக் கடக்குங் கூற்றால்
வினைப்பகை யியல்பு நீக்கும் விமலன தருளால் வேறோர்
நினைப்பது வரலுந் தாதை நெடுமகற் குரைக்க லுற்றான். (௧௧)

கிளத்துவ துன்கொன் றுண்டாற் கேண்மதி யைய மேனா
ளளப்பரு மறைக ளாதி யறைந்தன யாவ ரேனுந்
தளத்தகு பரிசு மன்றுறச் சால்புடை யந்த ணாளர்
கொளப்படு கடனே யாகு நாற்பெருங் கூற்ற தன்றே. (௧௨)

உனற்கரும் பிரமந் தன்னி லொழுகலில் லறத்தி னிற்றல்
வனத்திடைச் சேறல் பின்னர் மாதவத் துறவில் வாழ்த
லெனப்படு மவற்றினாதி யியற்றினை யின்று காறு
நினக்கது புகல்வ தென்னோ நீயவை யறிதி யன்றே. (௧௩)

பின்னவை யிரண்டும் பின்னர்ப் பேணுதல் பேச வொண்ணா
முன்னது மியற்ற லாலே முற்றிய திடையின் வைத்துச்

சொன்னதோர் கடனிஞ் ஞான்று தொடங்கிய வேண்டிற் றூயோ
யன்னத னிலைமை தன்னை யாற்றினை கோடி யென்றான். (கச)

முனிவர னிதனை யாங்கண் மொழிதலு மிதனைக் கேளா
வினியதோ ருறுதி சொற்றா ரெந்தையா ரெனக்கீண் டென்று
மனமுற முறுவல் செய்து மதலையா மொருவற் கீது
வினையறு தவத்தி னீரும் விளம்புதன் மரபோ வென்றான். (கரு)

வேறு.

பேதைப் படுக்கும் பிறவிக் கடனீந்து
மோதித் திறத்தை யுணர்ந்துடையோ ளுகலினுற்
காதற புதலவன் கவுசிகனென் போன்றனது
தாதைக் கினைய பரிசுதனைச் சாற்றுகின்றான். (கசு)

முன்னருள பாச முயக்கறுக்க வேண்டியநான்
பின்னுமொரு பாசம் பிணிக்கப் படுவேனேற்
றன்னிகரி லீசன் றனையெவ்வா றெய்துவன்யா
னின்னலெனு மாழி யிடைபபட் டுலைவேனே. (கஎ)

மொய்யான தில்லா முடவனொரு வன்றனது
கையா னவையிரண்டுங் கந்தாத தவழ்தருவா
னையா வதற்கு மரும்பிணியொன் றெய்தியக்கா
லுய்யானே யானு முவன்போற றளர்வேனே. (கஅ)

மொய்யுற் றிடவே முயலுந் தவத்தினன்றிப
பொய்யுற்ற விலலொழுககம் பூண்டுவினை போக்குவது
மெய்யுற் றிடுதுகளை மிகக புனலிருககச்
செய்யற்சின் னீரிடத்துத் தீர்க்குஞ செயலன்றே. (கசு)

மண்ணுலகி லுள்ள வரம்பில் பெரும்பவத்தைப்
பெண்ணுருவ மாகப் பிரமன் படைத்தனனா
லண்ண லஃதுணாதி யன்னவரை சிந்தைதனி
லெண்ணவரும பாவ மெழுமையினு நீஙகுவதோ. (உ0)

ஆதரவு கொண்டே யலமந்த வைப்புலமாம்
பூதவகை யீர்க்கப் புலம்புற்ற புன்மையினேன்
மாத ரெனுங்கணமும் வந்தென்னைப பற்றியக்கா,
லேதுசெயகே னந்தா வெனக்கோ விதுவருமே. (உக)

பன்னாளும் பாரிற் பருவரலின் மூழ்குவிக்கும்
பின்னு ணிரயப் பெருமபிலததி னூடுய்க்கு
மென்னாளி லாண்டகைபோர்க இன்பம் பயந்திடுமோ
மின்னார்க டம்மை விழைவுற்ற வேட்கையதே. (உஉ)

துன்ப நுகரும் வினையின் றொடர்ச்சியினே
ரின்ப நுகர்வார்போ லேக்கிழையார் கட்பட்டார்
தன்பன் மிகநடுங்க ஞாளி தசையில்லா
வென்பு கறித்திட்டா லிருஞ்சுவையும் பெற்றிடுமோ. (உந)

அஞ்சனவை வேற்க ணரிவையர்தம் பேராசை
நெஞ்சு புகினொருவர் நீங்கு நிலைமைத்தோ
வெஞ்சல்புரி யாதுயிரை யெந்நாளு மீர்ந்திடுமா
னஞ்ச மினிதம்ம வோர்நாளு நலியாதே. (உ௪)

கள்ளூற்ற கூந்தற் றனங்குழைநல் லார்கருத்திற்
கொள்ளப் படுமெண் குணிக்குந் தகைமையதோ
தள்ளற் கரிதாகித் தம்மொடுபன் னாட்பழகி
யுள்ளூற்ற தேவு முணர்தற் கரிதன்றே. (உ௫)

ஓதலுமொன் றுவுளமொன் றுச்செய்கை யொன்றுப
பேதை நிலைமை பிடித்துப் பெரும்பவஞ்செய்
மாதர் வலைப்பட்டு மயக்குற்று ரல்லரோ
சாதல் பிறப்பிற் றடுமாறு கின்றாரே. (உ௬)

ஆறு னுலகி லருங்கற் பினையுடைய
மாறு ரிலரோ வெனவே வருப்பீரேற்
கோனுனை தங்கள கொழுந னியல்வழுவாத
தேனூர் மொழியாரு முண்டு சிலர்தாமே. (உ௭)

உற்ற வுலவையிடை யோர்புலிங்க மூட்டியக்காற்
கற்றை விடுசுடர்மீக் கான்று கனன்மிக்குப
பற்றுதல் செல்லாத பலவினும்போய்ப் பற்றிமோ
லற்றெனலா மீங்கா ரிவைமுயங் காதரமே. (உ௮)

சந்திரற்கு நேருவமை சாலுந் திருமுகத்துப
பைந்தொடிகண்மக நல்லார் பலரும் புடைசூழக்
குந்தமொத்த நாட்டத்துக் கோதமனார் பன்னியினை
லிந்திரற்கு நீங்கா விடாயபழியொன் றெய்தியதே. (உ௯)

வேறு.

கூன்முகத் திங்க ணெற்றிக் கோதையர் குழுவுக் கெல்லாந்
தான்முத லிறைவி யாகத் தன்கையாற் சமைக்கப் பட்ட
மான்முக நோக்கி முன்னோ மலரயன் மையலெய்தி
நான்முக னானு னென்ப நாமுண ராத தன்றே. (௩0)

மற்றுள முனிவர் தேவர் மாயமாங் காமந் தன்னை
அற்றிடு செயற்கை யெல்லா முரைப்பினு முலப்பின் றுமா
லற்றெலா நிற்க யானவ் வாயிழை மடந்தை கூட்டம்
பெற்றிடு மொழுக்கந் தன்னைப் பேணலன் பிறப்பு நீப்பேன். (௩௧)

பூண்டகு விலங்கற் றிண்டோட் புரந்தரன் முதலோர் சேரும்
வேண்டல னில்வாழ் வென்னும் வெருசிறை யகத்தும் வீழேன்
மாண்டகு புலத்தின் மாயு மயக்கொரீஇத் தவமென் றோது
மீண்டிய வெறுக்கை மேவி யின்பமுற் றிருப்ப னென்றான். (௩௨)

இவைபல வுரைத்த லோடு மிருந்தருச் சகன்று னிந்தக்
குவலய மதிக்கு மாற்றுற கூறுமில் லொழுக்கந் தன்னை
நவையென விகழா நின்று னன்மறைத் துணிவுங் கொள்ளான்
றவமயல் பூண்டா னென்னாத் துயரொடு சாற்ற லுற்றான். (௩௩)

புலத்தியன் போலு மேலோய் பொருவின்மங் கலஞ்சேர் பொன்னின்
கலத்தியல் வதுவை பூண்டோர் கன்னியைக் கலத்தல் செய்து
குலத்தியன் மரபி னோம்பக் குமரரைப் பயந்தே யன்றோ
நலத்திய றவத்தை யாற்றி நண்ணருங் கதியிற் சேரல். (௫௪)

மன்பதை யுலக மேபோன் மாலுறு மயங்கு காம
வின்பநீ நுகர்தற் கேயோ விசைத்தனை யிறந்த மேலோர்
துன்பமு நிரயஞ் சேர்வுந் தடைத்திடுந் தொன்மை நோக்கி
யன்புறு புதல்வர்க் காக வரிவையைக் கோடி யையா. (௫௫)

சித்திர மிலது செவ்வாய்ச் சீறடிச் சிறுவா தம்மைப்
புத்திர ரென்னுஞ் சொற்குப் பொருணிலை யாத்தி யோலா
மித்தக வதனை நாடி யில்லறம் பூண்டு நிற்ற
லுத்தம நெறியே யாகுந் தவத்தின தொழுக்கு மஃதே. (௫௬)

குவவுறு சிவபரின் மிக்க கோடியர் நடமிக் குன்றி
னிவர்வுறு காதலாரி யற்படி சார லெய்தித
திவவொடு போதலுறிச் சேறுறு வுகளுந் தன்மைக்
குவமைய தாகு மினனே யுயர்தவத் தொழுக வுன்னல். (௫௭)

தருவினில் விலங்கி லன்ன தகையன பிறவிற் சால
வருபயன் கோடற் கன்றோ மற்றவை வரைதல் செய்யா
பெருகுமில் லறத்தி னோடும் பெருமகப் பொருட்டா னீயு
மரிவையை மணந்து பின்ன ரருந்தவம் புரிதி யன்றே. (௫௮)

இந்தநன் னிலையே யன்றோ வெண்ணிலை பிந்நாள காறு
முந்துசெய் கடனாற்றி முற்றினை முறையே பனைடை-
சிந்தனை செய்த வாமன்றோக ளவிழ்தற சிறப்புச் செய்யாய்
மைந்தநீ யின்னம் நோற்கும் வண்ணமே யெண்ணற் பாற்றே. (௫௯)

இந்திரா புகழுந் தொலைசி ரில்லறம புரிந்து ளோர்க்குத்
தந்தம தொழுக்கந் தன்னிற் றகுமுறை தவற்ற றேனுஞ்
சிந்திடுந் நிர்வு முண்டாற செய்தவர்க் கணைய சேரி
னுயர்ந்திட லரிதால் வெறுபி னுசசியிற் றவற லொப்ப. (௬0)

சுழிதரு பிறவி யென்னுஞ் சூழ்திரைப் பட்டுச் சோர்வுற
றழிதரு துயர நேமி யகன்றிடல் வேண்டு மேனுங்
கழிதரு நாளா னல்லாற் கதுமெனத் துறக்க லாமோ
வழிமுறை நுபமு னோரின் மற்றது புரிதி மன்னோ. (௬௧)

தேவரு முனிவர் தாமுஞ் செங்கண்மா லயனு மற்றும்
யாவரு மடந்தை மாரோ டில்லறத் தொழுகுந் தன்மை
மேவரப் பணித்தா னன்றே விமலனே யானு மேனை-
டாவரும் புவன மாதி சராசரம் பயந்த தானும். (௬௨)

மறுக்கலை யவன்றான் செய்த வரம்பினை வழியை வேண்டி
வெறுக்கலை யெனது கூற்றை விலக்கலை யுலகின் செய்கை
செறுக்கலை மிகவு மாற்றாற் செப்பலை சிறிது மாற்றந்
துறக்கலை யெமரை யின்னே தொன்முறை யுணர்ந்த தூயோய். (௬௩)

வேறு.

ஆடக வனப்புடை யருந்ததியை நீங்கான்
மாடுற விருத்தியும் வசிட்டமுனி யென்போ
னீடுதவ நோன்மைகொடு நின்றன னதன்றிப்
பீடுகெழு ஞாலமிசை பெற்றபழி யுண்டோ. (சச)

தியக்குறு பவத்திடை தொடர்ச்சியறு தூயோர்
நயப்பொடு வெறுப்பகலி னூமட மானார்
முயக்குறினு மாதவ முயன்றிடினு மன்னோர்
வியத்தகு மனத்துணர்வு வேறுபடு மோதான். (சரு)

மேனவியல் பான்வரையு மெல்லியலை மேவிற்
றூனமுள தாகுமரி தானதவ மாதும்
வானமுள தாகுமிவண் மண்ணுமுள தாகு
மூனமில தாகுமரி கொன்றுமிலை யன்றே. (சசு)

காண்டகைய தங்கணவ ரைக்கடவு ளாராபோல்
வேண்டலுறு கற்பினர்த மெய்யுரையி னிற்கு
மீண்டையுள தெய்வதமு மாமுகிலு மென்று
ளாண்டகைமை யோர்களுரை வாக்குநிக ரன்றே. (சஎ)

ஆயிழையொ டின்புறு மறத்தைமுத லாற்றாய்
தூயதவ நன்னெறி தொடங்கல்புரி வாயேன்
மாயமிகு காமவிடம வந்தணுகி னம்மா
மேயவிதி காக்கினும விலக்கியிட லாமோ. (சஅ)

துறந்தவர்கள் வேண்டியதொர் நுப்புரவு நல்கி
யிறந்தவர்கள் காமுறு மிருங்கட னியற்றி
யறம்பலவு மாறறிவிருந் தோம்புமுறை யல்லாற்
பிறந்தநெறி யாவுளதொர் பேருதவி யாதோ. (சகூ)

மெத்துதிற லாடவரு மெல்லியவை லாருந
சித்தமுற நன்கிறைவ தீதுசெய லூமே
யுய்த்தபடி யல்லதில யாருமுவ ரொணசெய
வித்துபய னேயலது வேறுபெற லாமோ (ருo)

நற்றவம தாகுமி லறந்தனை நடாத்தி
சுற்றமுற நிங்குதுற வேதுறவ தாமா
மற்றது புரிந்திடி னுனக்குநவை வாரா
வற்றது மறுத்துரைய லாமெனம தென்றான். (ருக)

அன்னபல மாமுனி யறைந்திடலு மோரா
முன்னமறை யாதிய மொழிந்தகுணி வென்றார்
பன்னக மணிந்திடு பரன்பணியு மென்று
ரென்னினி யுரைப்பதெள வெண்ணியினை யென்றான். (ருஉ)

தத்தம தருட்குரவர் தாவில்வள நீங்கி
யத்தியிடை யாழ்கெனினு மன்பினது செய்கை
புத்திரர்க டங்கள்கட னும்புதுமை யன்றே
யித்திற மறுக்கல னிசைந்திடுவன் யானும். (ருங)

தந்தைசொன் மறுப்பவர்க டாயுரை தடுப்போ
ரந்தமறு தேசிகர்த மாணையை யிகந்தோர்
வந்தனைசெய் வேதநெறி மாற்றினர்கண் மாறாச்
செந்தழல வாயநிர யத்தினிடை சேர்வார். (ரு௪)

ஆதலின் விலக்கன்முறை யன்றென வலித்துக்
கோதறு குணத்தின்மிகு குச்சகர்த மம்பொற்
பாதம திறைஞ்சிமுனி யேல்பணியி னிற்ப
னோதுவ துனக்குள தெனக்கழற லுற்றான். (ருரு)

தன்னுரைகொ ளாதமனை வாழ்க்கையது தன்னின்
வெந்நிரயம் வீழும்வகை யேவிழுமி தம்மா
வன்னரொடு மேவியம ராடவர் தமக்குப்
பின்னுமொரு கூற்றுமுள தோபிணியு முண்டோ. (ருசு)

என்னுரையி னிற்சிறிது மெஞ்சலில வாகி
மன்னுமியல் பெற்றிடு மடந்தையுள ளேலக்
கன்னிதனை யான்வரைவல் காயெரிமு னென்னாச்
சொன்னமொழி கேட்டுமகிழ் வுற்றுமுனி சொல்லும். (ருஎ)

வேறு.

யானு முய்ந்தன னென்கிளை யுய்ந்தன வினையதா னினையின்று
டானு முய்ந்தன டவங்களு முய்ந்தன தண்ணளி யதுமற்றால்
வானு முய்ந்தன மண்ணுல குய்ந்தன வாசவ னெனவாழுங்
கோனு முய்ந்தன னென்னுரை மறுமனுட் கொண்டனை யதனாலே. (ருஅ)

வேண்டும் வேட்கையை யுரைத்தியான் மைந்தநீ விளம்பிய வியல்பெல்லாம்
பூண்டு குற்றமோர் சிறிதுமில் லாததோர் பூவையைப் புவியின்பாற்
றேண்டி நின்வயிற் புணர்க்குவ னங்கது செய்கலா தொழிவேனேன்
மாண்டி றந்திடுங் குறைமதிக் கதிரென மாய்கவென் றவமென்றான். ()

இனைய பான்மையிற் குச்சகன் கூளுரை யியம்பலுந் திருமான்முன்
புனையு மெய்ப்பெயர் தரித்தசே யாங்கவன் பொலங்கழ றனைப்பூண்டோர்
தனைய னுய்பொருட் டாலிது புகன்றனை தவத்தினிற் றலையான
முனிவ நீயுனக் கரியதா யொருபொருண் முச்சகந் தனிலுண்டோ. (சுO)

ஆவ தேனும்யா னுரைப்பதுண் டத்தனை யற்றவ ரருளும்யாய்
சாவ தாயினர் தன்னைய ரில்லவர் தங்கைய ரிலரானோர்
காவ லாடவர் தம்முட னுதித்திடார் காசினி தனிலன்னோர்
வீவ தாயினர் பெருங்கிளை யில்லவர் வியததகு திருவற்றோர். (சுக)

குடிப்பி றந்திலர் பிணியுறு மிருமுது குரவர்பாற் குறுகுற்றோர்
கடுத்த யங்கிய மிடற்றிறை யாதியாங் கடவுளர் பெயர்கொள்ளா
தடுத்த மாக்கட்ம் பெயர்பெறு பீடில ரலகைதன் னுமத்தோர்
படித்த லந்தனிற் புன்னெறிச் சமயமாம் படுகுழிப் பட்டுள்ளோர். (சுஉ)

பிணியர் மூங்கையர் பங்கினர் வெதிரினர் பிறர்மனை தனிற்செல்வோர்
கணிகை மாதரின் விழிப்பவர் பன்முறை காளையர் தமைநோக்கி
நணிய காதலான் முன்கடை நிற்பவர் நலம்பெறப் புனைகின்றோர்
தணிவி லுண்டியர் துயின்மிகு மியல்பினர் தன்னினு மூப்புற்றோர். (சுங)

ஒருமை தங்கிய கோத்திர மரபின ருயர்ந்தவர் குறளானோர்
பருமை தங்கிய யாக்கையர் மெல்லுருப் படைத்தவர் பயனில்லாக்
கருமை தங்கிய வடிவினர் பொன்னெனக் கவின்றெழு காயத்தோ
ரிருமை தங்கிய பசப்பினர் விளர்ப்பின ரெருங்வயி னுருமிக்கோர். (கூச)

நாணி லாதவ ராடவர் புணர்ச்சியி னணியவர் நகைக்கின்றோ
ரேணி லாதவர் பெருமிடல் சான்றவ ரிருமுது குரவோர்த
மாணை நீங்கினர் சினத்தின ரிகலின ரடுதிற முயல்கின்றோர்
காண வேண்டினர் கட்டுழ்த லாயின காமஞற் கவல்கின்றோர். (கூரு)

ஈச னன்பிலர் பெருந்தகை முனிவரை யிகழ்பவ ருயிர்மீது
நேச மென்பன விலலவர் தங்குல நெறிதனி னில்லாதோர்
மாசு தங்கிய குணததினர் நிறையிலார் மனமெனுங் காப்பில்லோர்
தேசி கன்றனை மனிதனென் றுன்னினர் தேவரைச் சிலையென்றோர். ()

பத்தின் மேற்படு மாண்டினர் பூத்திடு பருவம்வங் தணுகுற்றோ
ரொத்த பண்பில ரச்சமின் மனத்தின ருருமென வுரைசெய்வோ
ரத்த னன்னையிங் தருளுமு னொருவர்பா லார்வமுற் றவர்ச்சேர
வைத்த சிந்தையர் பெருமித முறறுளோர் மடமொடு பயிர்ப்பில்லோர்.()

பிறப்பி னெல்லையில் விழியிலார் தோற்றிய பின்றையே யிழக்கின்றோர்
மறுபப யின்றிடுங் கண்ணினர் படவிகை வயங்கிய நோக்கத்தார்
குறிப்பின் மெல்லென வெஃகியே விழிததிடுங் குருடர்சாய் நயனத்தோர்
சிறப்பில் பூனையி னுட்டத்தர் கணத்தினிற் றிரிதரு செங்கண்ணோர். ()

தூறு சென்னியர் நரைமுதிர் கூந்தலர் துகளுறு மைம்பாலார்
வீறு கோதையர் சின்னமார் குழலினர் விரிதரு மளகத்தோ
ரீறில் செம்மயிர்ப் பங்கியா கிலனிடை யிறக்கிய கேசத்தோ
ரூறு சேர்தரு மோதியர் விலங்கென வுரமிகு குரலுளளோர். (கூகூ)

சிறுகு கண்ணினர் மிகநெடுந் துண்டத்தர் சேர்ந்திடு புருவத்தோர்
குறிய காதின ருயர்தரு மெயிற்றினர் கோணுறு கண்டததோ
மறுவி ராகிய முகத்தினர் சுணங்குறு மணிமுலை மார்பத்தோர்
வெறிய தாகிய நுசுப்பிலர் சிலையென வியன்மிகு வயினுள்ளோர். (எ0)

காய நூன்முறை யுரைததிடு மியல்பிலாக் கடிதட நிதம்பத்தோர்
வாயு மங்கையு நகமுமுள் ளடிகளும் வனப்புறு சிவப்பில்லோர்
மேய சின்மயிர் பரந்திடு பததினர் மென்சிறை யெகினம்போற்
றாய நன்னடை யில்லவ ரங்குலி தொல்புவி தோயாதோர். (எக)

இனைய தன்மைய ராகிய மாதர்க ளேனைய ரிவர்யாரும்
புனையு மங்கல மாகிய கடிவினை புரிதர வரையாதோ
ரனைய ரேயெனின் வேண்டலன் முழுவது மவரிய லணுகாத
வனிதை யுண்டெனின் வேண்டுவன் றேர்ந்தனை மரபினிற் றருகென்றான்.

காட்டி னின்றிடு குற்றியி னேற்புறு கவுச்சிக னிவைகூறக்
கேட்டு மூரன்று முவகையுங் கிடைத்தனன் கேடில்சீ ருலகுள்ள
நாட்ட கந்தனி னுடிநல் லியல்புள நங்கையை நின்பாலிற்
கூட்டு கின்றனன் மாணுத லொழிகெனக் குச்சக னுரைசெய்தான். (எங)

உரைத்த குச்சகன் மைந்தனை கிறுவியே யொல்லைசென் றகிலத்திற்
றிருத்த குஞ்சுடர் மனிதரு செம்பொனிற் செய்ததோ ரணிநாப்ப
ணருத்தி சேர்தரக் குயிற்றிட வேண்டியோ ரருமணி தனைக்கொள்வான்
கருத்தி லுன்னுபு தெரிபவன் போலொரு கன்னியைத் தேர்கின்றான். ()

வேறு.

அன்னவன் றன்னேர் முனிவரர் சிலர்வந் தணுகலு மவரொடும் வினவிச்
சென்னிதன் றேயத் தரசமய மென்னுஞ் செயிரிலா வனத்துசத் தியன்பாற்
கன்னிகை யிருத்த லுணர்ந்துமற் றவன்பாற் கதுமெனச் சேறலுங் காணூஉத்
தன்னடி வணங்க வெதிருறத் தொழுது தழுவியே யவனொடுஞ் சார. ()

மாசற வியன்ற வுறையுளிற் கொடுபோய் வரன்முறை வழாமலே யமைத்த
வாசனத் திருத்திக் கன்னிகை யொடுதன் பன்னியை யாயிடை யழைத்துத்
தேசிக னுற்றான் பணிமினீ ரென்னச் சென்னியா லிறைஞ்சுவித் தூரிய
பூசனை புரிந்து நகையொடு முகமன் புகன்றன வளாயினன் புனிதன். ()

அறுசுவை கெழுவு நறியசிற் றுண்டி யமுதினிற் றாயன வருத்திக்
குறைவறு மடிகட் கென்னிடை வேண்டுங் கொள்கைய தென்னெனக் கூற
மறுவறு தவத்துக் குச்சக முனிவன் மகிழ்ந்துநீ மாதவம் புரிந்து
பெறுமக டன்னை யெனதொரு மகற்குப் பேசுவான் பெயர்ந்தன னென்றான்.

இனையசொல் வினவி முனிவரன் மகிழா வென்மகள் விருத்தையை யியல்சே
ருனதுமைந் தற்கு நல்கமுன் செய்த வுயர்தவ மென்கொலென் றுரைதது
மனமுற நகையு முவகையுங் கிளர மணவினை யிசைந்துமா தவத்துப்
புனிதனை யங்கட் சிலபக லிருத்திப் போற்றிசெய் தொழுகுறும் பொழுதின்.

வேறு.

பங்கமி லுசத்தியன் பன்னி யாகிய
மங்கலை விடுத்திட மகள்வி ருத்தைதா
னங்குள விகுளைய ராயத் தன்னுடன்
செங்கயல் பாய்புன றிளைப்பப் போயினாள். (எக)

காடுற வந்திடு கலுழி மாண்புன
லாடினள் மகிழ்சிறந் தணங்க னாரொடு
மாடுறு பொதும்பர்போய் மலர்கொய் தன்னவை
சூடின ளிருந்தன டொடலை யாற்றியே. (அ0)

பாசிழை மங்கையர் பண்ணை யோடெழீஇ
யாசறு பொதும்பினு மணங்கை யன்னவண்
மாசறு தாரகை மரபிற் சூழ்தருந்
தேசுறு மதியெனத் திரும்பும் வேலையே. (அக)

உருகெழு கனையொலி யுருமுக் கான்றிடுங்
கருமுகி லிஃதெனக் கனன்று காய்கனல்
சொரிதரும் விழியது சூர்த்த மெய்யது
பெருமத நதியொடு பெயரு கின்றதே. (அஉ)

தாழுறு கரத்தது தடத்தின் சால்பெனக்
காழுறு மெயிற்றது கன்றிகொள் காலதா
லேழுயர் குறும்பொற்றி யிபமொன் றேற்றெதிர்
பாழிய வரைதுகள் படுத்துச் சென்றதே. (அங)

காண்டலும் வெருவினர் கவன்றவ் வாறுசெ
லாண்டகை யோர்களு மகன்று சிந்தினர்
நீண்டிடு கடலிடை கிமிர்ந்த வெவ்விட
மீண்டலு மிரிந்தபுத் தேளி ரென்னவே. (அச)

கன்னிகை விருத்தையாள் கண்டு தன்புரு
வன்னமென் னடையின ரகன்று சிந்தலு
மென்னினி யிழைப்பதென் றிரங்கி யேங்கியே
யுன்னருங் கடுப்பினி லுளற்றி யோடலும். (அரு)

கீழ்ந்தறை போகிய கிளைஞ ராமெனத்
தாழ்ந்திடு பசும்புதல் செறியத் தான்மறைந்
தாழ்ந்திடு கூவலொன் றணுக வன்னதில்
வீழ்ந்தன ளாழ்ந்தினள் விளிவுற் றுளரோ. (அசா)

முடங்குளை யலங்குறு முதிய பூநுதன்
மடங்கலி னெறெதிர் வரினு மாறுகொள
கடங்கலுழ் மால்கரி கல்லென் றார்பமொடு
நடந்தது மலையமா நாடு சாரவே. (அஎ)

இரிந்திடு மாதரார் யாண்டு மாகியே
விரிந்திடு வோர்குழீஇ வியர்க்கு மேனியர்
சரிந்திடு கூந்தலா தளரு நெஞ்சினா
பிரிந்திடு முவகையர் பெயர்ந்து நாடினா. (அஅ)

தண்டம தெங்கணுந் தானஞ் சிந்திடக்
கொண்டலி னெய்திய கோட்டு மாதிரங்
கண்டிலர் கன்னிகை தனையுங் காண்கில
ருண்டிலை யெனவுயி ருயிர்பபு நீங்கினர். (அகூ)

மண்ணிடை யாறென வழிக்கொண் டேகவே
கண்ணிணை புனலுகக் கலுழ்ந்து சோர்வுறுத்
துண்ணென வுணர்வுறத் துளங்கிச் சூழ்கனல்
புண்ணுறு வோரெனப் புலம்பன் மேயினர். (கூ0)

வேறு.

பெண்ணுக் கணிகலமே பேரழகுக் கோருருவே
கண்ணுக் கணியே கமலத்துச் செந்திருவே
மண்ணிற் புனல்படிந்தாய் வானதியு மாடுவதற்
கெண்ணித் துணிந்தோ வெமைவிட்டுப் போயினையே. (கூக)

வன்னப் புனலாட்டி வல்லே புறங்காத்தென்
மின்னைத் தருதி ரெனவே விடைகொடுத்த
வன்னைக் கென்சொல்வே மடிகளிற்றின் முன்னுகை
யுன்னைத் தனிவிட் டுயிர்கொண்டு போந்தனமே. (கூஉ)

ஐய ருசத்தியரு மன்னையெனு மங்கலையும்
வையம் பரவுகின்ற மாதுலராங் குச்சகருங்
கையறவின் மூழ்கக் கரந்தா யினியொருகாற்
செய்ய முகமுந் திருநகையுங் காட்டாயோ. (கூந)

என்னப் பலவும் புலம்பி யிரங்குற்றே
யுன்னற் கருஞ்சீ ருசத்தியன்ரு ளற்றவத்தின்
மன்னுற்ற தெய்வ வனத்தின் மனைவாழ்க்கைப்
பன்னிக் கிவையுரைத்துப் பாவைநல்லா ராவலித்தார். (கூ௪)

கேட்டிடலு மன்னை வயிறதுக்கிக் கேழ்கிளர்தீ
யூட்டரக்கே யென்ன வுருகி மனமறுகி
வாட்டடங்க ணீர்குதிப்ப வாய்விரீஇத தன்கணவன்
ருட்டுணையில் வீழ்ந்து புகுந்தபடி சாற்றினளால். (கூரு)

ஒன்றுபுரி காட்சி முனிவ னுவைகேட்டுக்
கன்று பிரிதாயிற் கவன்றரற்றிக் கன்னியொடு
சென்றுபிரி வுற்றுரை நோக்கிச் சினக்களிறு
கொன்றதுவோ வஞ்சாது கூறுமெனச் செப்புதலும். (கூசு)

தூய புனலாடித் துறைபுகுந்து சூழ்பொழுதம்பி
லாய முடனுடி யகன்றிங்கு வந்திடலுங்
காயுமழல் வெங்கட் கடகளிறு வந்ததுகண்
டோயு முணர்வெய்தி யெல்லோரு மோடினமால். (கூஎ)

ஓடி யுலையா வொருவர் நெறியொருவர்
கூட லிலதா வணியின் குழாஞ்சிந்திச்
சாடு மதகரியிற் றப்பி விருதகைதனைத
தேடியங்ஙன் காணுது சென்றனமையா மென்றிடலும். (கூஅ)

சென்றுங் கவ்வெல்லை தனிற்றேடித் தியங்குற்று
நின்றுன் மகட ளிறங்கிளரும் பொற்கலனே
ரொன்றாக வெவ்வே றொருநெறியிற் சிந்திடக்கண்
டென்றுய் படர்ந்தநெறி யீதுகொல்லென் றேமுற்றுன். (கூகூ)

பூண்போ கியநெறியே தொட்டுப புதல்விதனைக்
காண்போ மெனவே கனங்குழையா ரோடேகி
மாண்போய கூவலொன்று வந்தணுக வாங்கதனிற்
சேண்போய தன்மகளைக் கண்டு தெருமந்தான். (௪00)

வேறு.

கூவலுறு வதுநோக்கி நெடிதுயிர்த்து விழிவழிநீர் குதிப்பக் குப்புற்
றுவலியா மகளையெடுத் தகன்கரையின் பாற்படுத்தி யழுங்க லோடும்
பாவையர்க டழீஇக்கொண்டு புலம்பினரா லதுகேட்டுப் பயந்த நற்றாய்
யாவிலுறு கோகிலம்போ னெடிதரற்றிப் பெருந்துயரக் கடலுட் பட்டாள்.

தன்பால்வந் தவதரித்த நங்கைதனைக் கைவிட்டுத் தரியா ளாகி
யன்பாலே யுயிர்பதைப்ப வயிறதுக்கி யாகுலியா வரற்றி யேங்கி
மின்பாலோர் மின்படிந்த தன்மையென வவளாக மிசையே வீழ்ந்து
தென்பாலிற் புகுந்தனையோ வேமகளே யெனப்புலம்பித் தேம்பலுற்றாள்.

அன்னையோ வன்னையோ வாகொடிய தறனேயோ வறியே னந்தோ
முன்னையோ நெடுங்காலங் குழவியின்றிப் பெருநோன்பு முயன்று பெற்ற
மின்னேயோ வுயிரிழந்து வெள்ளிடையிற் கிடந்திடுமால் விதியார்செய்கை
யின்னேயோ யானொருத்தி பெண்பிறந்து பெற்றபய னிதுவே யன்றோ. ()

புலிக்கணங்க டிரிகானி லொருமானை வளர்த்ததனைப் போக்கி நின்றே
யலக்கணுறு வோரெனவே கைவிட்டுத் தமியேனு மழுங்கா நின்றேன்
மலர்க்கமலத் திருவைவிக ரென்மகளைக் கொல்லியமுன் வந்த தந்தக்
கொலைக்களிற்றின் வடிவன்றே கொடியேன்செய் பெரும்பவத்தின் கோலமன்றோ.

அறங்காட்டிற் சென்றதுவோ தெய்வதமு மிங்கிலையோ வரிதா முத்தித்
திறங்காட்டுந் தவநெறியும் பொய்த்தனவோ கலியுமினிச் சேர்ந்த தேயோ
மறங்காட்டும் வனக்களிறு வந்தடர்க்க வீண்டெனது மாது மாண்டு
புறங்காட்டிற் கிடந்திடுமோ வென்னேயென் னேயிதுவோர் புதுமை யாமே.

வேறு.

என்றிவை பலவும் பன்னி யிடருழந் தரற்றும் வேலை
மன்றலங் குழலின் மாதர் வளைந்தன ரிரங்கி மாழ்க
வொன்றிய கேளி ரல்லா ரியாவரு முருகி நைந்தா
ரன்றவ ணிகழ்ந்த பூச லாகுல மறைதற் பாற்றோ. (க0சா)

கோட்டமில் சிந்தை யோனுங் குச்சகன் குறுகி யங்க
ணூட்டநீர் பனிப்பச் சோரு நங்கையர் தம்பா லெய்தி
மீட்டினித் தருவன் மாதை விம்மலி ரென்று வேறோர்
மாட்டுற விருந்த தந்தைக் கினையன வகுத்துச் சொல்வான். (க0எ)

மறைமுத லாய நுண்ணூன் மருளற வுணரா மாக்கள்
சிறியரே முதியர் பாலர் சேயிழை மகளி ரின்னோ
ருறுவதோ ரவலஞ் செய்தா லூழ்வினை முறையு மோரா
யறிவநீ யின்னே யாயி னரிது தணிக்கற் பாலார். (க0அ)

கேளையா மனத்திற் றுன்பங் கிளத்தலை கேடு நீங்கி
நீளயா வுயிர்த்தார் போலிந் நேரிழைக் கன்னி தன்னை
நாளையான் விளித்து நின்பா னல்குவ னல்க நீநங்
காளையா னவற்குப் பின்னாட் கடிமணம் புரிதி யன்றே. (க0கூ)

ஐயமென் றுளத்தி லுன்னி யழுங்கலை விதியு மற்றே
மெய்யுணர் வதனாற் கண்டாம் விருத்தைதன் யாக்கை தன்னை
மொய்யுறு தயிலத் தோணி மூழ்குவித் திருத்தி யின்றே
யொய்யென நோற்று மீட்டுத் தருகுவ னுயிரை யென்றான். (கக0)

சாற்றிய துணர்ந்து தாதை தயிலத்தி லிட்டு மாதைப்
போற்றின னிருப்ப மேலோன் போயொரு பொய்கை மூழ்கிக்
கூற்றுவற் புகழ்ந்து நோற்பக் கொடுங்குழை மடவா ரஞ்சக்
காற்றென முன்னர் வந்த களிறுமீண் டணைந்த தம்மா. (ககக)

தடமிகு புனலுட் புக்குத் தாளிணை யுழக்கிச் சாடிப்
படவர வனைய செய்கைப் பருவலித் தடக்கை தன்னா
லிடைதொறுந் துழாவி நின்ற விருந்தவ முனிவற் பற்றிப்
பிடர்மிசை யேற்றிக் கொண்டு பெரிதுசேண் பெயர்ந்த தன்றே. (ககஉ)

கோதற்று குணத்தின் மேலாங் குச்சக னென்னுந் தொல்பேர்
மாதவ னுணர்ந்து பின்னர் மதக்களி றதனை நோக்கி
யீதெனைப் பற்றிச் செல்வ தென்கொல்கா ரணமென் றெண்ணி
யோதியின் வலியா லன்ன தூழ்முறை யுன்ன லுற்றான். (ககங)

வேறு.

பாவ தத்தினை யிழைத்திடும் பூட்கையின் மதநீர்
காவ தத்தினுங் கமழ்தரு கலிங்கநாட் டதன்பா
லாவ தத்தநேர் மாக்கள்வா ழூரிபுர மதனிற்
றேவ தத்தனென் றுளனொரு வணிகரிற் றிலகன். (௧௧௪)

தவத்தி னன்னவன் பெறுமகன் றருமதத் தனெனப்
புவிக்கண் மேலவர் புகழ்செய வறம்புரி புகழோன்
கவற்சி யின்றியே மூவகைப் பொருளையுங் காண்போ
னுவப்பு நீடிய விருநிதிக் கிறையினு முயர்ந்தோன். (௧௧௫)

தந்தை யன்னையு மிறத்தலுந் தமியனே யாகிச்
சிந்தை வெந்துய ருழந்துபி னொருவகை தேற
வந்த வேலையி னவன்பெருந் திருவினை யகற்ற
வந்து தோன்றினன் மனமருள் செய்வதோர் வாதி. (௧௧௬)

மூண்டி தப்படு சென்னியன் றுதாவின் முயங்கு
குண்ட லத்தினன் கோலநூன் மார்பின னீற்றுப்
புண்ட ரத்திய னெற்றியன் கஞ்சுகன் புதியோன்
கண்டி கைக்கலன் புனைந்துளோன் வேத்திரக் கரத்தோன். (௧௧௭)

அவனைக் கண்டன னடிமுறை வணங்கின னருவாஞ்
சிவனைக் கண்டன னெனப்பெரு மகிழ்சிறந் தான்
புவனிக் குள்ளவ ரென்னினுஞ் சாலவும் புதியர்
தவமிக் கோரிவ ரென்றுகொண் டுறையுளிற் சார்ந்தான். (௧௧௮)

பொன்ன ருங்கலந் திருத்துபு குய்யுடைப் புழுக்க
னன்ன லம்பெற வருத்தினன் முகமனு நவின்றான்
பின்ன ரன்னவன் றனையெதிர் நோக்கினன் பெரியோ
யென்னி வண்வந்த தென்றனன் வணிகருக் கிறைவன். (௧௧௯)

ஈசன் றந்திடு விஞ்சையொன் றெமக்குள தெவர்க்கும்
பேசுந் தன்மைய தன்றது குரவர்பாற் பெரிது
நேசம் பூண்டவர்க் குரைபபது நெஞ்சினிற் சிறிது
மாசின் றுயகிற் குணர்த்துவ னஃதென வகுத்தான். (௧௨0)

சரத மேயிது சம்புவின் வந்ததோர் தகைசா
லிரத முண்டது பொன்னெனச் செய்தன மெமக்கோ
ரரிது மன்றது போல்வன பலவுள வவைதாம்
விரத மாதவ ரல்லதி யார்கொலோ விரும்பார். (௧௨௧)

காரி ரும்பையு நாகத்திற் காட்டுதுங் கரிய
சீரி ரும்பினைப் பொன்னென வுரைபெறச் செய்வா
மேரு வுங்கயி லாயமு மென்றிரு வெற்பை
யாரு நோக்கவே காட்டுது மிவைநமக் கரிதோ. (௧௨௨)

எய்து மீயமு மிரதமும் வெள்ளிய தெனவே
செய்து மன்றியும் வங்கத்திற் செம்பொனுந் தெரிப்பா
நொய்தி னன்னது வலியுறக் காட்டுது நுவலுங்
கைத வப்பயின் மாக்களுக் கினியன கழறும். (௧௨௩)

இரும்பி னிற்செம்பு வாங்குவ மீயமு மற்றே
வரம்பி லாததோர் தரணியண் டங்களை மரபி
னரும்பொன் வண்ணம தாக்குவம் வல்லவா றறைய
விரும்பி னுமெனின் யாண்டுமோ ரளப்பில வேண்டும். (கடுச)

ஒன்று கோடிபொன் னுக்குவங் கோடிய தளவேற்
குன்று போலவே கோடியிற் கோடிசெய் குவமா
னின்ற னக்குள பொருளெலாந் தருதியே னினது
மன்றன் மாளிகை நிதிக்கிட மில்லென வகுப்பாம். (கடுரு)

என்ன வேமொழி சோரனை வணங்கின னிமைப்பின்
முன்ன ருள்ளதுந் தான்றன துரிமையான் முயலப்
பின்ன ரெய்திய நிதியமும் பேழையா னவற்றின்
மன்னு பூண்களுங் கொணர்ந்தனன் முன்புற வைத்தான். (கடுசு)

வைத்த மாநிதி நோக்கலும் வணிகரிற் றிலக
ருய்த்த செல்வமு மிதுகொலோ வோவென வுரையாக்
கைத்த லங்கொடு கைத்தலம் புடைத்துடுக் கணங்க
ணத்த வேலையி லொருங்குபட் டாலென நகைத்தான். (கடுஎ)

இந்த நின்பொரு ணம்முடை விஞ்சையி னிறைக்கும்
வந்தி டாதுநா முருக்குறு முகந்தனில் வழுவிச்
சிந்து கின்றதற் கிலையிது நமதுபின் றிரியி
னந்த மில்பொருள் கொடுக்குவம் வைத்தியென் றறைந்தான். ()

முனிய லையநீ வேண்டிய பெருநிதி முழுது
மினிது நாடியே கொணருவ னிருத்தியென் றுரைத்துப்
புனையு மாடையு நிலங்களு மணிகளும் பூணு
மனையு மாக்களும் பகர்ந்தன னிகரிலா வணிகன். (கடுகூ)

பொரும தத்தினை யிழைத்திடு மருப்புயா புழைக்கைப்
பெரும தக்கரி யென்னவே மயங்கினன் பெரிதும்
வரும தத்தமென் றறத்தையும் பகர்ந்துமெய் வணிகன
றரும தத்தனும் பெயரினை நிறுவினன் றரைமேல். (கசுo)

இத்தி றந்தினிற் றேடிய பெருநிதி யனைத்துங்
கைத்த லங்கொடு தாங்கியே கரவன்முன் காண
வைத்து நிற்றலு மகிழ்ந்தன னவையெலாம் வாங்கி
மொய்த்த செங்கனற் றீயிடை யுருக்குதன் முயன்றான. (கசுக)

திரட்டி யாவையு மோருரு வாக்கினன் செழும்பொ
னிரட்டி தூக்கிய விரதமாங் கொருசிலை யிட்டு
மருட்டி யாடக முழுவது முரைத்தவை வலிதா
வுருட்டி மட்பெருங் குகையினின் மருந்தையுள் ளுறுத்தான். (கசுஉ)

பண்ணு றுத்திய கனகமுள் ளிட்டதன் பாலு
மெண்ணு றுத்திய மிசைக்கணுங் களங்கமொன் றிட்டு
மண்ணு றுத்திறற் றுகில்கொடு பொதிந்தனன் மருங்கிற்
கண்ணு றுத்திய செந்தழற் புடைமிசை கரந்தான். (கசுஙு)

நூற்று நான்கொடு நான்குகுக் கூடபுட னொய்தின்
வீற்று வீற்றதா விட்டது நோக்கினன் மிகவு
மாற்று வந்தது பழுக்குமோர் வராகியின் மருளேல்
காற்றி லாததோ ருறையுள்காட் டென்றனன் கரவன். (கஙச)

சேமஞ் செய்ததோ ருறையுளைக் காட்டலுஞ் சென்று
வாமஞ் செய்ததோ ரிந்தனக் குவான்மிசை மறவோ
ரீமஞ் செய்தசெந் தழற்கொடு வராகிமே லிட்டுத்
தாமஞ் செய்தன னங்கியு மவனெதிர் துரந்தான். (கஙரு)

தூங்கி நாட்டநீர் பொழிதர வாருயி ருலைய
வீங்கு கின்றமெய் வெதும்புற வெங்கணும் வியர்ப்ப
மூங்கை யாமென மொழிகிலான் போவது முயலான்
பாங்கி ருந்திடு வணிகர்கோன் பட்டதார் பகர்வார். (கஙசு)

எல்லை யன்னதிற் பொதிந்திடு பொற்குகை யெடுத்து
மெல்லெ னத்தன தாடையிற் கரந்தனன் வெய்யோன்
வல்லை யக்குகை போலவொன் றிருந்தது மருங்கிற்
செல்ல வைத்தனன் றழற்பெரும் புகையையுந் தீர்த்தான். (கஙஎ)

தத்த விக்குகை நின்கையிற் றுங்கினை தழன்மேல்
வைத்தி யென்றன னவனது புரிதலு மரபி
னத்த குஞ்செயற் குரியன யாவையு மமைத்து
வித்த கம்பெறச் சேமியா வொருசெயல் விதித்தான். (கஙஅ)

வேறு.

உண்டி யிகந்துரை யாடலை யாகிப்
பெண்டிரை வெஃகல் பெருய்பிறர் தம்மைக்
கண்டிட லின்று கருத்தினி லெம்மைக்
கொண்டிரு முப்பகல் கோதில் குணத்தோய். (கஙகூ)

நெய்கமழ் செஞ்சடை நீவிதன் முன்னோர்
மொய்கனல் வேள்வி முடித்திட லுண்டாற்
செய்கட னன்னது தீர்த்தபி னுலாம்
வைகலி னேகுது மற்றிவ ணென்றான். (கச0)

அம்முறை செய்கென வாங்கவ னடியை
மும்முறை தாழ்ந்து முதற்பெரு வணிகச்
செம்மல வன்புடை சென்றில னின்றான்
மைம்மலி சிந்தையன் வல்லை யகன்றான். (கசக)

காவத மோரொரு கன்னலி னுகப்
போவது செய்து புறத்துரு மாறி
வாவினன் வேறோர் வள்கம தூற்று
னேவலின் வைகின னித்தலை வணிகன். (கசஉ)

முப்பகல் போதலு மூதறிவுள்ளோன்
செப்பிய நாள்வரை சென்றுள வன்றே
யிப்பகல் வந்தில னென்னை யுவன்சொற்
றப்புவ னோவென வேதளர் கின்றான். (கசங)

நீடிய தொல்புகழ் நீவி யிருக்கை
நாடினன் மேதகு நன்னக ரெங்குந்
தேடினன் மாறுறு சிந்தைய னானான்
வாடினன் மீண்டனன் மாளிகை வந்தான். (௧௪௪)

அடுத்துமுன் வைத்த வருங்குகை தன்னை
யெடுத்தது நோக்க விரும்பது வாக
வடுத்தவிர் சிந்தையன் மாயைகொ லென்னா
விடுத்தன னன்னது வீழுமுன் வீழ்ந்தான். (௧௪௫)

அத்த மனைத்து மகன்றிட லோடும்
பித்தின் மனந்தொடு பீழைய னாகி
யெய்த்தன னாயுளி னெல்லையு மெய்தத்
தத்தனும் விண்ணிடை சார்ந்தன னன்றே. (௧௪௬)

அறந்தனை விற்ற வருஞ்செய லாலே
மறந்தரு தத்தனு மால்கரி யாகிப்
பிறந்தனன் முன்னுறு பெற்றிய தெல்லா
மறந்தன னென்று மனத்திடை கொண்டு. (௧௪௭)

மாற்றுவ னிப்பவம் வல்லையி னென்னாச்
சாற்றினன் முன்பு தவம்புரி வேலை
நோற்றிடு மோர்பக னோன்பவை தானிவ்
வாற்ற லிபத்துழை யாகுக வென்றான். (௧௪௮)

இப்பரி சங்க ணியம்புத லோடு
மப்பொழு தன்னவ னாண்டிறு வேழ
மெய்ப்படி வந்தனை வீட்டினன் யாருஞ்
செப்பரி தாகிய தேவுரு வானான். (௧௪௯)

அந்தர துந்துபி யார்த்தன வானோர்
சிந்தினர் பூமழை சேணிடை நின்றும்
வந்தது தெய்வத மான மதன்பா
லிந்திர னாமென வேறின னன்றே. (௧௫௦)

பாசிழை மங்கையர் பற்பலர் சுற்றா
வீசினர் சாமரை விண்ணுறை கின்றோ
ராசிகள் கூறின ரங்கவ னிற்குந்
தேசிக னாரடி செங்கை குவித்தான். (௧௫௧)

நோக்கினன் மாதவ நோன்மையு ளானை
வாக்கினில் வந்தன வந்தனை செய்தா
னீக்கரும் வல்வினை நீக்கினை யென்னா
மேக்குயர் புங்கவர் விண்ணுல குற்றான். (௧௫௨)

விண்ணிடை யேயவன் மேவுத லோடு
மண்ணிடை நின்றிடு மாதவன் முன்போ
லெண்ணரு நோன்ப தியற்றலு மன்னோன்
கண்ணிய தென்றிசை காவலன் வந்தான். (௧௫௩)

முன்னுறு கூற்றுவன் முப்பகை வென்றோ
யுன்னிலை நோக்கி யுவந்தன னம்பா
லென்னைகொல் வேண்டிய தென்றலு மன்னோன்
றன்னடி வீழ்ந்திது சாற்றுத லுற்றான். (க௫௪)

உந்திய சீர்த்தி யுசத்தியன் மானென்
மைந்தன் மணஞ்செய வந்தன னன்னாண்
முந்துறு நென்னன் முடிந்தனன் முன்போற்
றந்தரு ளென்றிது சாற்றுத லோடும். (க௫௫)

அத்தகு போழ்தினி லந்தக னென்போ
னித்தவன் வேண்டிய வேந்திழை யாவி
வைத்தன மேயது வல்லையின் மீட்டிங்
குய்த்திடு வாயென வொற்றொடு சொற்றான். (க௫௬)

கொற்றவ னிங்கிது கூறி மறைந்தான்
சொற்ற துணர்ந்திடு தூதுவன் முன்போ
யுற்றிடு மவ்வுயி ரைக்கொடு போந்து
மற்றவள் யாக்கையுள் வந்திடு வித்தான். (க௫௭)

வேறு.

உடற்குளுயிர் வந்திடலும் புகுந்ததுமெய் யுணர்வுசிறி துயிர்த்த நாசி
துடித்தனகால் பதைத்ததுரந் துளங்கிமுகம் விளங்கியதாற் றுவண்ட தாக
மெடுத்தனகை யசைந்தனதோ ளிமைத்தனகண் விழித்தனவா லினைய காலை
மடக்கொடியுந் துயிலுணர்ந்தாள் போலெழுந்தா ளெல்லோரு மருங்கிற் சூழ்ந்தார். ()

அன்னையவ டனைத்தழுவி யிரங்குற்றா டந்தையெடுத் தணைத்துப் பல்காற்
சென்னிதனி லுயிர்த்தேத னிருகுறங்கின் மீமிசையே திகழச் சேர்த்தி
யென்னடிக ளென்கடவு ளெனதுதவப் பயனாகு மெந்தை நென்னற்
சொன்னபடி தவமியற்றி யுய்வித்தா னிவளையென்று துணிவிற் சொற்றான்.

சுற்றுகின்ற கிளைஞர்களு மல்லோரு மதிசயிப்பத் தொல்லை ஞாலம்
பெற்றதிரு வனையாடன் பெண்ணணங்கை முகநோக்கிப் பேதை நீயீண்
டுற்றதுவு மிறந்ததுவு மீண்டதுவு முறைப்படவே யுரைத்தி யென்னப்
பொற்றொடியா ளதுவினவிப் புகுந்ததொரு பரிசனைத்தும் புகல லுற்றாள்

நீடியமங் கையர்பண்ணை தன்னுடனே போந்ததுவு நெடுநீர்க் கான்யா
றாடியது மீண்டதுவுங் கடகளிறு போந்ததுவு மதனைக் கண்டே
யோடியதுந் தானொருத்தி தனித்ததுவுங் கூவலிடை யுலைந்து வீழ்ந்து
வீடியது மீண்டதுவுந் தென்றிசைக்க ணிகழ்வனவும் விரித்துச் சொற்றாள்.

சொன்னமொழி யதுகேளா மிகமகிழும் வேலைதனிற் றுகளி றாயோன்
கொன்னவிலு முத்தலைவேற் கூற்றுவன்ற னருள்பெற்றுக் குறுக லோடு
முன்னுறவே யெதிர்சென்று பெருங்கிளையும் பன்னியுமா முனியும் பெற்ற
கன்னியும்வந் தடிவணங்கிப் போற்றிசெய வரன்முறையே கருணை செய்தான். ()

என்னுயிரும் பெருங்கிளைஞர் தம்முயிரு மில்லறத்திற் கியன்ற பன்னி
தன்னுயிரு நட்டோர்க டமதுயிரு நின்றிடயான் றவத்திற் பெற்ற
மின்னுயிர்தந் தருளினையா லரிதோநிற் கிதுவம்மா வேலை ஞால
மன்னுயிர்காத் தளிப்பவனு நீயெனவே யெனதுள்ள மதித்த தன்றே. ()

வள்ளலையுன் றிருவுளத்தை யாருணர்வார் கவுச்சிகனு மகற்கியான் பெற்ற
தெள்ளமிர்த மனையமொழி விருத்தையெனுங் கன்னிகையைத் திசையி னுடிக்
கொள்ளுதற்கு வந்தனையோ கூற்றுவனாற் போனவுயிர் குறுகி மீண்டு
மெள்ளவரும் படியழைத்துத் தந்திடுவான் வந்தனையோ விளம்பு கையா.

எனமுனிவன் றனைநோக்கி முகமன்க ளிவைபலவு மெடுத்துக் கூறி
யனையவனை யுடன்கொண்டு சுற்றத்தா ரெல்லாரு மடைந்து சூழ
மனைவியொடும் புதல்வியொடு மடமாதர் தங்களொடும் வல்லை யேகித்
தனதுறையு ளிடைப்புகுந்து வீற்றிருந்தா னற்றரிய தவத்தின் மேலோன்.

பின்புமொரு சிலவைகல் குச்சகனை யவணிருத்திப் பெரியோ யிங்க
னென்புதல்வி தனையளிப்ப னுன்மதலை தனைக்கொண்டே யேகு கென்னத்
தன்புதல்வற் கொடுவரலும் விருத்தையெனுங் கன்னிகையைத் தழல்சான் றாக
வன்பினொடு நன்னாளி லோரைதனில் விதிமுறையே யருள்செய் தானால்.

வேறு.

அருள்புரிந் திடுதலு மன்பி னுனியைந்
திருவரு மில்லற மியற்றப் பல்பகல்
கருணைசெய் குச்சகன் கண்டு மாதவம்
புரிதர வேவட புலத்திற் போயினான். (கசுஎ)

போதலு மிருந்திடும் புனித வேதியன்
மாதவ வலியினான் மாதி னோன்பினான்
மேதினி வியந்திட மிருகண் டென்னவோர்
காதல னுதித்தனன் கணிப்பில் காட்சியான். (கசுஅ)

அப்புதல் வற்கியாண் டாறு சென்றுழி
மெய்ப்பிர மச்செயல் விளங்கு பான்மையான்
முப்புரி நூல்வினை முடித்துத் தாதைபோற்
செப்பரு மாதவஞ் செய்யப் போயினான். (கசுகூ)

ஊற்றமா மிருகண்டு யெனன்றிடு
மாற்றன்மா முனிவர னகல வன்னவன்
றேற்றமா கியசுதன் றொன்மை நாடியே
போற்றின னுதியிற் புரியுஞ் செய்கடன். (கஎ0)

சொற்கலை தெரிமருத் துவதி யென்றிடு
முற்கலன் மகடனை முறைவ துதுபின்
னற்கலை யணிகல னல்கி நீக்கிய
வற்கலை யுடையினான் வதுவை முற்றினான். (கஎக)

இருந்தன னகாமய மென்னும் பேரொடு
பொருந்திய வனத்திடைப் புதல்வ ரின்றியே
வருந்தினன் றமரொடு மாது தன்னொடு
மருந்தவன் காசியை யடைதன் மேயினான். (கஎஉ)

அடைந்ததோர் பொழுதினி லமரர் யாவருங்
கடைந்திடு திரைக்கட லனைய கங்கைநீர்
குடைந்தன னுடினன் குழுமி மாதவர்
மிடைந்திடு மறுகிடை விரைவின் மேவினான். (கஎங)

பொன்றிரண் மாமதில் புடைய நாமணி
கன்றிகை யென்பதோர் கடவு ளாலயஞ்
சென்றனன் சூழ்ந்தனன் றிங்கள் வேணியான்
மன்றமர் திருவடி வணங்கிப் போற்றினான். (௧எ௪)

மெய்ப்படு மறையுணர் மிருகண் டென்பவ
னப்பெருங் கோயிலுக் கணிததோர் பாங்கரிற்
செப்புறு மாகமத் தெளிவு நாடியே
மைப்பெருங் கண்டனை வழிபட் டானரோ. (௧எ௫)

ஆதவம் பனிமழை யனிலத் தச்சுறுப்
பாதவ மாமெனப் பருவ மாறினும்
பேதைபங் குடையவெம் பிரானை யுன்னியே
மாதவம் புரிந்தனன் மதலை வேண்டியே. (௧எ௬)

அருந்தவ மோரியாண் டாற்றத் தொல்லைநாட்
பொருந்திய மூவெயில் பொடித்த புங்கவன்
வரந்தனை யுதவுவான் வந்து தோன்றலு
மிருந்தவ முனிவர னிறைஞ்சிப் போற்றினான். (௧எஎ)

மூந்துறு முனிவரன் முகத்தை நோக்கிநீ
சிந்தையி லிழைந்ததென் செப்பு கென்றலு
மைந்தனை வேண்டினன் வரத்தை நல்கென
வெந்தையு முறுவலசெய் திவனைய கூறுவான். (௧எ௮)

வேறு.

தீங்குறு குணமே மிக்குச் சிறிதுமெய் யுணர்வி லாமன்
மூங்கையும் வெதிரு மாகி முடமுமாய் விழியு மின்றி
யோங்கிய வாண்டு நூறு முறுபிணி யுழப்பா னாகி
யீங்கொரு புதலவன் றன்னை யீதுமோ மாத வத்தோய். (௧எ௯)

கோலமெய் வனப்பு மிக்குக் குறைவிலா வடிவ மெய்தி
யேனுறு பிணிக ளின்றி யெமக்குமன் புடையோ னாகிக்
காலமெண் ணிரண்டே பெற்றுக் கலைபல பயின்று வல்ல
பாலனைத் தருது மோநின் னெண்ணமென் பகாதி யென்றான். (௧௮0)

மாண்டகு தவத்தின் மேலா மறைமுனி யவற்றை யோரா
வாண்டவை குறுகி னாலு மறிவுள னாகி யாகைக்
கீண்டொரு தவறு மின்றி யெமபிரா னின்பா லன்பு
பூண்டதோர் புதல்வன் றன்னை வேண்டினன் புரிக வென்றான். (௧௮௧)

என்றிவை துணிவி னாலே யிசைத்தலு மீச னிற்கு
கன்றிகொள் குமரன் றன்னை நல்கின மென்று சொல்ல
நின்றிடு முனிவன் போற்றி நெஞ்சக மகிழ்ச்சி யெய்தி
யொன்றிய கேளி ரோடு முறைந்தன னுறையு நாளில். (௧௮௨)

பூதல விடும்பை நீங்கப் புரைதவிர் தரும மோங்க
மாதவ முனிவ ருய்ய வைதிக சைவம் வாழ
வாதிதன் னருளி னாலே யந்தகன் மாள வன்னான்
காதலி யுதரத் தாங்கோர் கருப்பம்வந் தடைந்த தன்றே. (௧௮௩)

துடைதலு மதனை நோக்கி யறிதரு முனிவ னுண்மை
யிடையவ னடியார் யார்க்கும் வேண்டிய வேண்டி யாங்கே
நெடிதுபல் வளனு மீந்து நிறைதரு திங்க டோறுங்
கடனியன் மரபு மாற்றிக் காசியின் மேவி னானே. (௧௮௪)

கறையுயிர்த் திலங்கு தந்தக் காய்சின வரவங் கவ்வக்
குறையுயிர்ப் படிவத் திங்க ளமிர்தினைக் கொடுத்திட் டாங்கு
மறையுயிர்த் தருளுஞ் செவ்வாய் மதலையை வயாவின் யாழ்கிப்
பொறையுயிர்த் தருளிற் றந்தாள் பொறைதரு திருவைப் போல்வாள். ()

மீனமு முடிந்த நாளு மேவுற மிதுனஞ் செல்ல
வூனமில் வெள்ளி தானு மொண்பொனு முச்ச மாகுந்
தானமுற் றினிது மேவத் தபனனே முதலா வுள்ள
வேனையர் முனிவர் நாக ரிடந்தொறு மிருப்ப மன்னோ. (௧௮௬)

நண்ணினன் புவியின் மைந்த னவமணிக் குலமும் பொன்னுஞ்
சுண்ணமு மலருந் தாதுந் தூயமென் கலவைச் சாந்துந்
தண்ணுறு நானச் சேறுந் தலைத்தலைக் கொண்டு தாவில்
விண்ணவர் மண்ணு ளோர்கள் வியப்புற வீசி யார்த்தார். (௧௮௭)

தேவதுந் துபிக ளார்த்த செய்தவை யோம்பி மாற்று
மூவர்க ளன்றி யேனோர் முறைமுறை யாசி செய்தார்
யாவதென் றுணர்த றேற்று திந்கர ரன்றி நேமி
காவல்செ யுலகம் யாவுங் களிமயக் குற்ற வன்றே. (௧௮௮)

தந்தையு மதனைக் கேளாத் தடம்புனற் கங்கை மூழ்கி
யந்தணர் முதலோர்க் கெல்லா மாடகம் பலவு நல்கி
முந்துறு கடன்க ளாற்ற முளரிமேன் முனிவன் மேவி
மைந்தனுக் குரிய நாம மார்க்கண்ட னென்று செய்தான். (௧௮௯)

மறுப்படாத் திங்கள் போல வளர்தலு மதியந் தோறு
முறுப்படை யுபகிட் டான மோதனம் பிறவு முற்ற
நெறிப்படு மோரி யாண்டி னெடுஞ்சிகை வினையு மாற்றிச்
சிறப்புடை யிரண்டா மாண்டிற் செவிநெறி புரித லுற்றான். (௧௯௦)

ஏதமி லைந்தின் மூன்றா விலக்கண விதியுஞ் செய்தே
யோதிடுங் கலைக ளெல்லா முள்ளுற வுணர்த்துங் காலை
வேதமும் பிறவுங் கொண்ட வியன்பொரு டெரிந்து மேலா
மாதியே சிவனென் றெண்ணி யவனடி யரணென் றுற்றான். (௧௯௧)

அரனைமுன் னிறைஞ்சி யன்னை யன்பரைத் தாழ்ந்து தங்கள்
குரவனை வணக்கஞ் செய்து கோதறு முனிவர் தம்மைப்
பரவியே பயந்த மேலோர் பாதபங் கயங்கள் சூடிப்
பிரமமா மொழுக்க நாளும் பேணினன் பிறப்பு நீப்போன். (௧௯௨)

இந்தவா றியலுங் காலை யெண்ணிரண் டான யாண்டும்
வந்ததா லதனை நோக்கி மைந்தனை நோக்கி வாளா
தந்தையும் பயந்த தாயுந் தனித்தனி யிருந்து சால
வெந்துயர்க் கடலின் மூழ்கி விம்மலுற் றிரங்கி நைந்தார். (௧௯௩)

ஆங்கது மதலை காணு வடியிணை வணங்கி யன்னோர்
பாங்குற வணுகி நீவிர் பருவரா லுறுகின் றீரா
லீங்கிது வென்னே யின்னும் யாதுமொன் றறித றேற்றே
னீங்குமி னவல நும்பா லெய்திய நிகழ்த்து மென்றான். (கசூச)

கூறிய மொழியுட் கொண்டு குமரநீ யிருக்க நம்பால்
வேறொரு துயர மெய்தி மெலிவது முண்டோ மேனா
ளேறுடை யமல மூர்த்தி யாண்டுநின் றனக்கீ ரைந்து
மாறுமென் றளித்தா னந்நா ளடைதலி னவலஞ் செய்தேம். (கசூரு)

என்றுரை செய்த தாதை யிடருறு முகத்தை நோக்கி
யொன்றுநீ ரிரங்கல் வேண்டா முயிர்க்குயி ராகி யென்று
நின்றிடு மரனை யேத்தி யருச்சனை நிரப்பிக் கூற்றின்
வன்றிறல் கடந்து நும்பால் வல்லைவந் தடைவன் மன்னோ. (கசூசு)

இருத்திரா லீண்டே யென்னு வேதுக்கள் பலவுஞ் செப்பிக்
கருத்துற நெடிது தேற்றிக் கான்முறை வணங்கி நிற்பத்
திருத்தகு குமரற் புல்லிச் சென்னியு மோந்து முன்னார்
வருத்தமு நீங்கிச் சிந்தை மகிழ்ந்தனர் பயந்த மேலோர். (கசூஎ)

இருமுது குரவர் தத்த மேவலி னீச னென்னு
மொருவன தருளு மன்பு முடனுறு துணையாய்ச் செல்லப்
பொருவரு மகிழ்ச்சி பொங்கப் பொள்ளெனப் பெயர்ந்து போகித்
திருமணி கன்றி கைப்போர்ச் செம்பொனு லயத்திற் புக்கான். (கசூஅ)

என்புநெக் குருகக் கண்ணீ ரிழிதர வலஞ்செய் தீசன்
முன்புற வணக்கஞ் செய்து முடிமிசை யடிகள் சூடித்
தென்புலத் தொருசா ரெய்திச் சிவனுருச் செய்து பன்னு
ளன்புட னருச்சித் தேத்தி யருந்தவ மியற்றி யிட்டான். (கசூகூ)

வேறு.

ஈசனு மவ்வழி யெய்தி நற்றவம்
பூசனை யதனொடு புரிதி யாலது
மாசில தாதலின் மகிழ்ந்து நீயினிப்
பேசுக வேண்டிய பெறுதற் கென்னவே. (உ00)

ஐயனே யமலனே யனைத்து மாகிய
மெய்யனே பரமனே விமல னேயழற்
கையனே கையனேன் காலன் கையுறு
துய்யநேர் வந்துநீ யுதவென் றோதலும். (உ0க)

அஞ்சலை யஞ்சலை யந்த கற்கெனுச்
செஞ்சர ணிரண்டையுஞ் சென்னி சேர்த்தலு
முஞ்சன னினியென வோத வொல்லையி
னஞ்சணி மிடற்றினன் மறைந்து நண்ணினன். (உ0உ)

நண்ணிய பின்னரே நவையின் மைந்தனுக்
கெண்ணிரண் டாண்டெனு மெல்லை செல்லலும்
விண்ணிடை முகிலென விசைகொண் டொல்லையிற்
றுண்ணென வோர்யம தூதன் றோன்றினன். (உ0௩)

பண்டுமுப் புரமெரி படுத்த புங்கவன்
புண்டரீ கப்பதம் பரவும் பூசனை
கண்டனன் வெருவிமார்க் கண்டன் றன்னையா
னண்டுவ தரிதென வகன்று போயினான். (உ0ச)

நீயெழ நோக்கியே சென்றி டாதுசேண்
போயதோர் வல்லியம் போலுந் தன்மையான்
வேயென வந்துபின் மீண்டு தென்புல
நாயக னடிதொழா நவிறன் மேயினான். (உ0ரு)

இந்திரர் புகழ்தரு மிறைவ கேட்டியா
லந்தியி னிறமுடை யண்ணல் பாலுறு
சிந்தைய னவனடி சேருஞ் சென்னியோன்
சந்தத மவன்புகழ் சாற்று நோன்மையோன். (உ0சா)

ஈசன தருச்சனை யியற்று கின்றனை
ஞசறு மனத்தின னறிவ னந்தணன்
காசியி னிடத்தன்மார்க் கண்ட னுமெனப்
பேசிய சிறப்புடைப் பெயாபெற் றோங்குவான். (உ0எ)

அன்னதோர் பாலனை யணுக வஞ்சினன்
முன்னரு மேகலன் முக்க ணெம்பிரான்
றன்னுழை யிருந்தனன் றண்ட நாயக
வுன்னுதி யிதுவென வுணரக் கூறினான். (உ0அ)

கூறிய வளவையிற் கூற்றன் றாப்பினை
யாறிய செந்தழற் கருத்தி னுலெனச்
சீறின னுயிர்த்தனன் சிறுவ னுங்கவ
னீறில னாகிய விறைவ னேயென்றான். (உ0கூ)

தருதியென் கணகரை யென்று தண்டக
னுரைசெய நின்றதோ ரொற்ற னோடியே
வருதிர் நும் மழைத்தனன் மன்ன னென்றிடக்
கரணர்கள் வந்தனர் கழல்வ ணங்கினார். (உக0)

இறையவ னவ்வழி யெவருங் காணொணு
வறைகழ லண்ணலை யருச்சித் தேத்திய
மறுவறு காட்சியான் மார்க்கண் டப்பெயர்ச்
சிறுவனுக் கிறுவரை செப்பு மென்னவே. (உகக)

சித்திர குத்தரென் றுரைக்குஞ் சீரியோ
ரொத்திடு மியற்கைய ருணர்வின் மேலையோர்
கைத்தல மிருந்ததங் கணக்கு நோக்கியே
யித்திறங் கேளென விசைததன் மேயினார். (உகஉ)

கண்ணுத லிறையவன் கருதி மேலைநா
ளெண்ணிரண் டாண்டென விறுதி கூறினு
னண்ணலே சென்றதா லதுவு மாங்கவன்
பண்ணிய பூசனை யறத்தின் பாலதே. (உகங

முதிர்தரு தவமுடை முனிவ ராயினும்
பொதுவறு திருவொடு பொலிவ ராயினு
மதியின ராயினும் வலிய ராயினும்
விதியினை யாவரே வெல்லு நீர்மையார். (உகச)

ஆதலி னமருல கடைவ தாயினன்
பேதுறு நிரயமும் பிழைத்து நீங்கினு
னீதவ னிலைமையென் றிருவ ருஞ்சொல
மேதகு தண்டகன் வெகுட்சி யெய்தினன். (உகரு)

அந்தக னத்துணை யமைச்ச னாகிய
வெந்திறற் காலனை விளித்துக் காசியி
லந்தண னொருமக னவன தாவியைத்
தந்திடு கென்றலுந் தரணி யெய்தினன். (உகசு)

மற்றவன் காசியில் வந்து மாசிலா
நற்றவ னிருந்துழி நணுகி நான்மறைக்
கொற்றவன் பூசையுங் குறிப்பு நோக்கியே
யெற்றிவன் வருவதென் றெண்ணி யேங்கினன். (உகஎ)

விழியிடைத் தெரிவுற மேவி மைந்தனைத்
தொழுதனன் யாரைநீ சொல்லு கென்றலு
முழுதுல குயிரெலா முடிக்கு மாணையான்
கழலிணை யடிமைசெய் கின்ற காலன்யான். (உகஅ)

போந்ததிங் கெவனெனப் புகலு வீரெனி
னாய்ந்தது மொழிகுவ னாதி நாயக
னீந்திடு காலமெண் ணிரண்டு னெனலே
தேய்ந்தது தென்புலஞ் சேர்தல் வேண்டுநீர். (உகசு)

வேறு.

தடிக்குந் தன்மைய தன்றிது சதுர்முகத் தவற்கு
மடிக்குந் தன்மையே புதுவது புருந்ததோ வன்றே
கொடிக்குந் தன்மைபோற் காத்திடுந் தன்மைபோற் கூற்றன்
படிக்குந் தன்மையுங் கறைமிடற் றிறையருட் பணியே. (உஉ0)

ஆத லாலுமை விளித்தன னன்றியு மமலன்
பாத மாமல ரருச்சனை புரிவது பலரு
மோத வேமன மகிழ்ந்துமைக் காணிய வுன்னிக்
காத லாகியே நின்றனன் றென்றிசைக் கடவுள். (உஉக)

அடுத லோம்பிய செய்கைய னென்பதா லவனைக்
கொடிய னென்பரா லறிவிலார் செய்வினை குறித்து
முடிவி லாருயி ரெவற்றிற்கு முறைபுரிந் திடலா
னடுவ னென்கின்ற தவன்பெய ருலகெலா நவிலும். (உஉஉ)

சிந்தை மீதினில் யாவது மெண்ணலிர் தென்பா
லந்த கன்புர மடைதிரே லவனெதி ரணுகி
வந்து கைதொழு தேத்தியே நயமொழி வழங்கி
யிந்தி ரன்பத நல்குவன் வருதிரென் றிசைத்தான். (உஉ௩)

மாற்ற மிங்கிது கேட்டலு மதிமுடி யரனைப்
போற்று மன்பர்க ளிந்திர னுலகினும் போகார்
கூற்று வன்றன துலகினு நும்மொடு குறுகா
ரேற்ற மாகிய சிவபத மடைந்தினி திருப்பார். (உ௨௪)

நாத னார்தம தடியவர்க் கடியவ னானு
மாத லானும தந்தகன் புரந்தனக் கணுகேன்
வேதன் மாலமர் பதங்களும் வெஃகலன் விரைவிற்
போதி போதியென் றுரைத்தலு நன்றெனப் போனான். (௨௨௫)

போன காலனு மறலியை வணங்கியே புகுந்த
பான்மை யாவையு முரைத்தலு முளம்பதை பதைப்ப
மேனி மார்பகம் வியர்ப்புற விழிகனல் பொழியக்
கூனல் வார்புரு வக்கடை நிமிர்ந்திடக் கொதித்தான். (௨௨௬)

அழைத்திர் மேதியை யென்னலும் போந்ததா லதன்மேற்
புழைக்கை மால்கரி யாமென வெரிநிடைப் புகுந்து
நிழற்று கின்றதோர் கவிகையுந் துவசமு நிவப்ப
வழுத்தி வீரர்கள் சுற்றிட வந்தகன் வந்தான். (௨௨௭)

போந்து காசியின் முனிமக னிருந்துழிப் போகிச்
சேந்த குஞ்சியு முகில்புரை மேனியுஞ் சினத்திற்
காந்து கண்களும் பிடித்ததோர் பாசமுங் கரத்தி
லேந்து தண்டமுஞ் சூலமு மாகியே யெதிர்ந்தான். (௨௨௮)

வேறு.

வந்து தோன்றலு மார்க்கண்ட னென்பவ
னந்த கன்வந் தணுகின னாமெனச்
சிந்தை செய்தவன் செய்கையை நோக்கியே
யெந்தை யாரடி யேத்தி யிறைஞ்சினான். (௨௨௯)

அன்ன வேலையி லந்தகன் மைந்தநீ
யென்னி னைந்தனை யாவ தியற்றினை
முன்னை யூழின் முறைமையு முக்கணன்
சொன்ன வாறுந் துடைத்திட லாகுமோ. (௨௩0)

சிந்து மூழ்வினைத் திண்மையுந் தேர்கிலா
யுறுதி யொன்று முணர்கிலை போலுமா
லிறுதி யேபிறப் பென்றிவை யாவரும்
பெறுவ ரன்னது பேசுதல் வேண்டுமோ. (௨௩௧)

பீடு சாலும் பெருந்தவர்க் காயினுங்
கூடு ரூவிது கூடுமென் றுன்னியே
நாடி யின்னண நண்ணுதல் கற்றுண
ராட வர்க்கு மியற்கைய தாகுமோ. (௨௩௨)

ஈச னார்த மிணையடி மீமிசை
நேச நெஞ்சினை நித்தலு நீபுரி
பூசை வெம்பவம் போக்குவ தன்றியான்
வீசு பாசம் விலக்கவும் வல்லதோ. (௨௩௩)

சிந்து வின்கட் செறிமண லெண்ணினு
முந்து வானத் துடுவினை யெண்ணினு
மந்த மின்றியெ ணுணையின் மாண்டிடு
மிந்தி ரன்றனை யெண்ணிட லாகுமோ. (௨௩௪)

இற்ற வானவர் தம்மையு மெண்ணினீ
றுற்ற தானவ ராகியுள் ளோரையு
முற்ற வோதின் முடிவில தாதலான்
மற்றை யோரை வகுத்திடல் வேண்டுமோ. (௨௩௫)

கனக்கு முண்டகக் காமரு கண்ணினன்
றனக்கு முண்டு சதுர்முகற் குண்டுமற்
றெனக்கு முண்டு பிறப்பிறப் பென்றிடி
னுனக்கு முண்டென் றுரைத்திடல் வேண்டுமோ. (௨௩௬)

வாச மாமல ரிட்டு வழிபட
வீச னார்முன் னெனக்கருள் செய்தன
வாசி லாவிவ் வரசிய லேந்திய
பாச சூலம் படைமழுத் தண்டமே. (௨௩௭)

தேவர் காப்பினுஞ் செய்தளித் தீறுசெய்
மூவர் காப்பினு மொய்ம்பின ராயினோ
ரேவர் காப்பினுங் காத்திட வின்றுநின்
னாவி கொண்டன்றி மீண்டு மகல்வனோ. (௨௩௮)

துன்ப மென்பது கொள்ளலை சூலித
னன்ப ராயினு மந்தம்வந் தெய்திடிற்
றென்பு லந்தனிற் சேர்த்துவன் றிண்ணமே
யென்பி னீயினி யேசென் றியம்பலும். (௨௩௯)

மைந்த னங்கது கேட்டு மறலிகே
ளெந்தை யாரடி யார்தமக் கில்லையா
லந்த மென்பதுண் டாயினு மின்புரம்
வந்தி டார்வெள்ளி மால்வரை யேகுவார். (௨௪0)

அனையர் தன்மை யறைகுவ னுங்கவர்
புனித மாதவ ராயினும் பொறபுடை
மனையின் வாழ்க்கையின் மல்கின ராயினும்
வினையி னீங்கிய வீட்டின்ப மெய்துவார். (௨௪௧)

ஏதந் தீர்சுடர் தன்னையு மெண்ணுமைம்
பூதந் தன்னையும் போதிகன் றன்னையும்
மேபதஞ் செய்வர் பிறப்பொழித் தோரவர்
பாதஞ் சேர்தல் பரபதஞ் சேர்வதே. (௨௪௨)

உன்னை யெண்ணல ரும்பரை யெண்ணலர்
மன்னை யெண்ணலர் மாமலர்ப் பண்ணவன்
றன்னை யெண்ணலர் தண்டுளை வோனையும்
பின்னை யெண்ணலர் பிஞ்ஞக னன்பினோர். (௨௪௩)

நாதன் றன்னையு நாதன தம்புயப்
பாதஞ் சேர்ந்து பரவினர் தம்மையும்
பேதஞ் செய்வது பேதைமை நீரென
வேதங் கூறும் விழுப்பொருள் பொய்க்குமோ. (உ௪௪)

செம்மை யாகிய சிந்தையர் சீரியோர்
வெம்மை யென்பதை வீட்டி விளங்கினோர்
தம்மை யுந்துறந் தேதலை நின்றவ
ரிம்மை தன்னினு மின்பத்தை மேவுவார். (உ௪௫)

இன்மை யாவதி யாண்டுமில் லாதவர்
நன்மை யென்ப தியல்பென நண்ணினோர்
புன்மை யான பொருள்விரும் பாரவர்
தன்மை யாவரே சாற்றவல் லார்களே. (உ௪௬)

வேறு.

அன்னோர் தன்மை தேர்கிலை வையத் தவர்போல
வுன்னா நின்றூ யாங்கவர் தம்பா லுறுகின்ற
வென்னா விக்குந் தீங்கு நினைத்தா யிவையெல்லா
முன்னா விக்கு மித்தலை மைக்கு மொழிவன்றே. (உ௪௭)

தீதா கின்ற வாசக மென்றன் செவிகேட்க
வோதா நின்றாய் மேல்வரு மூற்ற முணர்கில்லாய்
பேதாய் பேதாய் நீயிவ ணிற்கப் பெறுவாயோ
போதாய் போதா யென்றுரை செய்தான் புகரில்லான். (உ௪அ)

கேட்டான் மைந்தன் கூறிய மாற்றங் கிளர்செந்தீ
யூட்டா நின்ற கண்ணினன் யானச் சுறுமாற்றல்
காட்டா நின்றாய் நம்முயிர் கூற்றன் கைக்கொள்ள
மாட்டா னென்றே யெண்ணினை கொல்லோ வலியில்லாய். (உ௪௯)

என்றான் வானத் தேறென வார்த்தா னிவனேரே
நின்றால் வாரா னென்று நினைந்தே நெடுநீலக்
குன்றா மென்னப் பாலகன் முன்னங் கொலைவேலான்
சென்றான் பாசம் வீசுவ தற்குச் சிந்தித்தான். (உ௫0)

எறிந்தான் பாச மீர்த்திட லுற்றா னிதுபோழ்தி
லறிந்தான் றானு மீசனை யேததி யடிநீழற்
பிறிந்தா னல்லன் மற்றினி யிந்தப் பெருமைந்தன்
மறிந்தா னன்றோ வென்றிமை யோரு மருளுற்றார். (உ௫௧)

ஈர்க்கும் பாசங் கந்தர முற்று மிடரில்லா
மார்க்கண் டன்முற் றோன்றின னின்பால் வருதுன்பந்
தீர்க்கின் றாநீ யஞ்சலை யென்றே திரையாழிக்
கார்க்கண் டத்துக் கண்ணுத லையன் கழறுற்றான். (உ௫உ)

மதத்தான் மிக்கான் மற்றிவன் மைந்த னுயிர்வாங்கப்
பதைத்தா னென்னா வுன்னி வெகுண்டான் பதின்மூன்றுஞ்
சிதைத்தான் வாமச் சேவடி தன்னாற் சிறிதுந்தி
யுதைத்தான் கூற்றன் விண்முகில் போன்மண் ணுறவீழ்ந்தான். ()

வீழுங் காலத் தம்புய னூதி விண்ணோர்கள்
வாழுந் தன்மைத் தெவ்வுல கென்னு மறுகுற்றார்
சூழும் வேலை யார்த்தில தண்டத் தொகையெல்லாங்
கீழும் மேலுங் கெக்கன பாருங் கிழிந்தன்றே. (௨௫௪)

பாங்காய் நின்ற தானையு மூரும் பகடுந்தா
னேங்கா நின்றே பார்மிசை வீழா விறவுற்ற
தீங்காய் நின்ற செய்வினை யாளர் சிதைவாகிப்
போங்கா லத்திற் சேர்ந்தவர் தாமும் போகாரோ. (௨௫௫)

அந்தக் காலத் தெம்முயிர் காப்பா னரனுண்டால்
வந்தக் கூற்ற னென்செய்வ னென்னு வடதொன்னூற்
சந்தப் பாவிற் போற்றுதல் செய்தே தனிநின்ற
மைந்தற் காணூஉ வெம்பெரு மானு மகிழ்வுற்றான். (௨௫௬)

வேறு.

மைந்த நீநமை வழுத்தி மாசிலா
முந்து பூசனை முயன்ற தன்மையா
லந்த மில்லதோ ராயு ணிற்கியாந்
தந்து நல்கினு மென்று சாற்றினான். (௨௫௭)

சாற்று மெல்லையிற் றனது தாளினை
போற்று கின்றவன் பூசை செய்திடு
மேற்ற தாணுவுக் கிடைய தாகவே
கூற்றின் கூற்றுவன் குறுகுற் றானரோ. (௨௫௮)

மறைய வன்கணு மன்னு தென்புலத்
திறைய வன்கணு மிகல்பற் றின்றரோ
வறிவர் தேர்குறி னையன் செய்தன
முறைய தாகுமான் முதன்மைப் பாலதே. (௨௫௯)

நின்ற மைந்தனு நிதந்தன் மேனியை
யொன்று மன்பினு லுன்னி யேமணி
கன்றி கையெனுங் கடவு ளாலயஞ்
சென்று நாதன்றாள் சென்னி சேர்த்தினான். (௨௬0)

புந்தி நைந்திடப் புலம்பி நாட்டநீர்
சிந்தும் வேலையிற் றிளைத்துச் சாம்பிய
தந்தை யன்னைதா டமுவித் தாழ்ந்திடா
முந்து மாகுல முழுது மாற்றினான். (௨௬௧)

அங்கண் சில்பக லமர்ந்து நீங்கியே
செங்க ணேறுடைச் செலவன் மல்கியே
தங்கு கின்றநற் றானம் யாவையும்
பொங்கு காதலிற் போற்றன் மேயினான். (௨௬௨)

அத்த னுலைய மனைத்தும் வைகலும்
பத்தி யோடுமுன் பரவி யேமிகுஞ்
சுத்த னாகியே தொலைவி லாருயிர்
முத்தி யெய்தினன் முழுது ணர்ந்துளான். (௨௬௩)

விண்ணின் பாலுளன் விரும்பிப் போற்றுவோர்
கண்ணின் பாலுளன் கருத்தின் பாலுளன்
மண்ணின் பாலுளன் மற்ற வன்செய
லெண்ணின் பாலதோ விஞ்சையின் பாலதோ. (௨௬௪)

முண்ட கத்திடை முளைத்த வன்றுயில்
கொண்ட வெல்லையைக் குணிக்கி லாவதெ
ணண்ட நல்கியோன் றுஞ்ச வாங்கவன்
கண்ட கற்பமோ கணக்கி லாதவே. (௨௬௫)

அன்ன வன்றனை யலக்கண் செய்திடுக்
தென்ன வன்னுயிர் சிதைந்து போதலாற்
பன்ன கத்திறை பரித்த பார்மிசை
மன்னு பல்லுயிர் வளர்ந்து மல்கிற்றே. (௨௬௬)

முடிவின் றுமுயிர் முற்றும் பற்பகன்
மடிவின் றாகிய மலியும் பான்மையாற்
படியின் மங்கையும் பரம்பொ ருதுமா
லடியின் வீழ்ந்துதன் னயர்வு கூறினாள். (௨௬௭)

கொண்டல் வண்ணனுங் குலிச பாணியும்
புண்ட ரீகமேற் பொலிந்த போதனு
மண்டர் யாவரு மணுகி யாலமார்
கண்டன் மேவுறுங் கைலை மேவினார். (௨௬௮)

காவி யம்மலர் கடுத்த கந்தரத்
தேவு பொற்பதஞ் சென்னி சேர்த்தியே
தாவில் பங்கயச் சதுர்மு கத்தனும்
பூவை வண்ணனும் போற்றன் மேயினார். (௨௬௯)

நீல கண்டனு மிமலன் முன்னரே
சாலு மன்பொடுந் தாழ்ந்து போற்றலு
மாலை நோக்கிநீர் வந்த தென்னென
வேலு மாற்றினு லிதனைக் கூறுவான். (௨௭௦)

வேறு.

பங்கய மிசைவரு பகவ னாதியா
விங்குள தலைவர்க ளெவரு மித்துணைத்
தங்கட மரசிய றவாது போற்றினா
ரங்கவர் தமக்குநீ யளித்த வண்ணமே. (௨௭௧)

ஐயநீ யெனக்குமுன் னளித்த காப்பினைத்
துய்யநின் றிருவரு டுணைய தாகவே
வைகலும் புரிகுவன் வழாது மற்றதற்
கெய்திய தோர்குறை யிசைப்பன் கேட்டிநீ. (௨௭௨)

நின்பெருந் திருவரு ணினைகி லாமையாற்
றென்புலக் கோமகன் சிதைந்து போயினான்
மன்பதைக் குலம்பிற வளர்ந்து மிக்கன
துன்பமுற் றனளவை சுமக்கும் பூமகள். (௨௭௩)

தன்புடை யெவற்றையுந் தாங்கு கின்றவ
ருன்புற வுயிரெலாந் தோன்றித் தோன்றியே
பின்பிற வாமலே பெருகி வைகுமே
லென்படு மென்படு மெனது காவலே. (உஎச)

இறுத்திடு மரசினுக் கெவரு மில்லைநீ
செறுத்திட வந்தகன் செய்த தீமையைப்
பொறுத்தரு ளவன்றனைப் புரிதி யீங்கிது
மறுத்திட லென்றடி வணங்கி வேண்டவே. (உஎரு)

அந்தக வெழுகென வமல நாயகன்
முந்தருள் புரிதலு முடிந்த கூற்றுவன்
வந்தனன் றொழுதனன் வணங்கித் தாள்பட
வுய்ந்தன னடியனென் றுணர்ந்து போற்றினான். (உஎசு)

போற்றிடு தருமனைப் புராரி நோக்கியே
சாற்றிடு கின்றனன் றயங்கு கண்டிகை
நீற்றொடு புனைந்தமை நினையு நீரர்பாற்
கூற்றுவன் யானெனக் குறுகு வாயலை. (உஎஎ)

நண்ணருங் கதிபெறு நமது தொண்டரை
மண்ணுல கத்தவர் மனித ரேயென
வெண்ணலை யவர்தமை யாமென் றெண்ணுதி
கண்ணுறி னன்னவர் கழலின் வீழ்தியால். (உஎஅ)

கண்ணிய மனமொழி காய மீறதா
வெண்ணிய கருவிக ளிடைய தாகவே
புண்ணிய மொடுபவம் புரியு மேனையர்
விண்ணொடு நிரயமேன் மேவச் செய்திநீ. (உஎகூ)

என்றருள் புரிந்துநின் படையொ டேகென
மன்றம ரடியிசை வணங்கி முன்னரே
பொன்றிய பகட்டொடும் பொருநர் தம்மொடுந்
தென்றிசை புகுந்துதன் செயலின் மேவினான். (உஅ௦)

சித்தசற் புரிதரு செங்கண் மான்முதன்
மொய்த்திடு கடவுளர் முனிவர் மும்முறை
கித்தனை வணங்கினர் கைலை நீங்கினர்
தத்தம துறையுளிற் சார்தன் மேயினார். (உஅக)

கொன்னவி லடுபடைக் கூற்றன் பண்டுபோ
லின்னமும் விளைகுவ தென்கொ லோவென
மன்னருள் பெற்றமார்க் கண்டன் மாக்கதை
பன்னினர் முன்னமும் படர்தற் கஞ்சுமால். (உஅஉ)

ஆதலிற் றுச்சக னருந்த வத்திலோர்
மாதுயி ரளித்தனன் மால்க ளிற்றினைக்
காதலக நீக்கியொண் கடவு ளாக்கியே
மேதகு விண்ணிடை மேவச் செய்தனன். (உஅ௩)

உதவிய மிருககண் டேயன் மாலயன்
முதலவர் புகழ்தரு முதன்மை பெற்றனன்
விதிமுறை யவனருண் மிருகண் டொப்பிலோர்
புதல்வனைப் பெற்றனன் புரிந்த நோன்மையால். (உ௮௪)

அப்பெருந் திருமக னுற்று நோன்பினாற்
றப்பரும் விதியினைத் தணந்து கூற்றுவன்
றப்பினை யகற்றியே தொலைவு கண்டுபின்
னெப்பொழு தத்தினு மிறப்பின் றாயினான். (உ௮௫)

ஆ. திருவிருத்தம் - ௪௮௬.

---

வசனம்.

முற்காலத்தில் கடகநகரத்தில் தவத்திற்சிறந்தவனாகிய குச்சகன் என்பவ னொருவன் வாழ்ந்திருந்தான். அவனுக்குக் கௌச்சிகனென்னும் புதல்வனொரு வன் பிறந்தான். அவன் பிறவிக்கடலைக் கடக்கவெண்ணித் தவஞ்செய்யும்பொரு ட்டு ஒரு தடாகத்தைச்சார்ந்து ஐம்பொறியடக்கித் தவஞ்செய்துகொண்டிருக்கை யில் அவ்வழியேசெல்லும் மான் கடம்பைமுதலான மிருகங்கள் ஆதீண்டு குற்றியி லுராய்ந்து செல்வதுபோல அவனுடம்பின்மேலுராய்ந்து செல்லும். அவ்வாறு சென்றபோதும் அவன் அதைச் சிறிதுமறியாதவனாய்ச் சித்தத்தைச் சிவன்பாலே வைத்து அசைவறவிருந்து நோற்றான். இதைக்கண்ட திருமால் வியந்து அவ னருகேசென்று அவனுடம்பைத்தீண்டி, முனிவனே! உன்பெயர் மிருககண்டே னென்று சொல்ல, அதைக்கண்ட கௌச்சிகன் வணங்கிநின்றான். இவ்வாறு வணங்கிநின்ற முனிவனைநோக்கி, உன்னிடத்தில் சிவபெருமான் கருணை மேன் மேலும் பெருகுக வென்று அருள்செய்து சென்றான்.

சென்றபிறகு, கௌச்சிகன் தந்தையை வணங்க, அவன் மனமகிழ்ந்து தழு விக்கொண்டு, தவத்தில்நடந்தவை யாவுஞ் சொல்லென, அவ்வாறே நடந்தவை யாவும் குச்சகன் சொல்லக்கேட்டு, உன்குலத்தினருள் உன்போல் எவர் தவஞ் செய்தார், என்றுசொல்லிப் புகழ்ந்து இறைவனருளால் ஒரு நினைவுதோன்றுதலும் மிருககண்டேனுக்குச் சொல்வானாயினன்.

மைந்தனே! வேதமார்க்கப்படியே நீயினி இல்லறவொழுக்கம்பூண்டு அதில் வழுவாதொழுகுதல் சாலச்சிறந்தது என்று சொல்ல, குச்சகன், தந்தையைவண ங்கி, என் அருமைத்தந்தையே! தேவரீர்சொல்வதைத் தடுத்திலேன், ஆயினும் யான் பிறவித்துன்பத்திற்கஞ்சி அதை யொழித்தற்குபாயமாகிய தவஞ்செய்ய வொ ருப்பட்டேன், நீர் அதைத்தடுத்து இன்னும் பாசபந்தத்திற் பிணிப்புண்டு அலையச் சொல்வது உமக்குத் தகுதியாமோ, பெண்ணுருவாவது பெரும்பாவமேயன்றோ. மாதர்கள் இயமன் யமவாதனையென்னுந் தூண்டிலிற் கோக்கப்பட்ட மாமிசகண்ட மாகிய இரையன்றோ, இந்த இரையைவிரும்பி விழுங்கியன்றோ மனிதராகிய சிறு மீன்கள் மாண்டுபோகின்றன. இனி யில்லறவொழுக்கம் பூணேன், என்னுயிர்க்கு உறுதியைத்தருவது துறவறவொழுக்கமாகிய தவமேயன்றி வேறன்று, அந்தத் தவ ஞ்செய்து பேரின்பத்தையடைவேன் என்றிவ்வாறு சொல்லிமுடித்தான்.

இப்படி கௌச்சிகன் சொல்லக்கேட்ட குச்சகன், அவனைநோக்கி, அப்பா மகனே! புத்ரன் என்னுஞ் சொற்பொருளறியாது மயங்குகின்றனை, நீ யில்லறவாழ்க்கையிலிருந்துகொண்டு மக்கட்பேற்றால் உனக்குறுதியும் உன்னால் உன் பிதிரர்களுக்கு உறுதியும் தேடவேண்டும், அதைவிட்டு வேறுநெறியில் நீசெல்வது தகாது, திருமால் பிரமன்முதலிய தேவரும் பிறரும் இல்லறவொழுக்கம் பூண்டுநிற்பதை நீயறியாயா, என்சொல்லை மறுக்காமல் நீ யில்லறம்பூண்டொழுகுதலே நன்மையாமென்றுசொல்லினன். இவ்வாறு பலவகையாக முனிவரெடுத்துக் கூறுதலும், கௌச்சிகன் தன்னுள்ளே யாலோசித்து, இல்லறமானது வேதங்களாற் சிறப்பித்துச் சொல்லப்படுவதென்றும், பரமசிவன் பணித்ததென்றும் சொல்லினரே, இனி நாமெப்படி மறுப்பது, தந்தைசொன்மிக்க மந்திரமில்லை யாதலால், நாம் அவ சொற்படி நடப்பதே நமக்குக் கடன்மையாவதெனத் துணிந்து, தந்தையைநோக்கி, பிதாவே, நீர் சொல்லியவண்ணமே யான் நடந்துகொள்ளுகிறேன், நீர் கோபிக்க வேண்டாம், ஆயினும் யான் விண்ணப்பஞ் செய்யவேண்டியதொன்றிருக்கின்றது, அதைச் சற்றே திருச்செவி சாத்தியருளவேண்டுமென்று சொல்லத்தொடங்கினார். தன்சொல்லைக்கடந்து நடக்கிற மனையாளோடுகூடி வாழுங்கணவனுக்கு வேறொரு பிணியும் யமனும் வேண்டுமோ, அதுநிற்க, நான்சொல்லுகிற இலக்கணமுள்ள பெண்ணொருத்தி யிருப்பாளானால் அவளை நான் மணப்பேன் என்றுசொல்லி, அவ்விலக்கணங்களைச் சொல்லுகிறான். தன் தாய்தந்தையரையிழந்த பெண்ணும், தங்கை தமக்கையில்லாத பெண்ணும், அவர்களோடுபிறந்தும் அவர்களை யிழந்த பெண்ணும், பெருஞ்சுற்றமில்லாதபெண்ணும், தரித்திரமடைந்தபெண்ணும், நற்குடியிற்பிறவாத பெண்ணும், பெருநோயுள்ள தாய்தந்தையரிடத்தில் தோன்றிய பெண்ணும், பரமசிவன்முதலிய தேவர்கள்பெயர் பூணாமல், மனிதர் பைசாசாமுதலியோர் பெயர்பூண்ட பெண்ணும், பிணியுள்ள பெண்ணும், ஊமைப்பெண்ணும், அவயவக்குறையுள்ள பெண்ணும், செவிட்டுப்பெண்ணும், குருட்டுப்பெண்ணும், பலகாலும் அந்நியர்வீடுகளுக்குப் போகிறபெண்ணும், இன்னும் இவர்போன்ற பெண்களுமல்லாமல் இவற்றிற்கு மறுதலையாகிய தந்தை தாயரை யுடைத்தாதல் முதலிய இலக்கணங்களையுடைய பெண் கிடைப்பாளாயின், தேவரீர் கட்டளையின்படியே மணஞ்செய்து கொள்வேனென்று சொல்ல, தந்தையாகிய குச்சகன் மகிழ்ந்து, இனி யான் உய்ந்தேன், நீசொன்ன இலக்கணம்யாவும் அமைந்தபெண்ணையே தேடி உனக்கு மணமுடித்துவைக்கிறேனென்று சொல்லி, மைந்தனை அவ்விடத்தில் நிறுத்திவிட்டு, தான் பெண்பேசப்புறப்பட்டார். புறப்பட்டுப்போகிற வழியில் சிலமுனிவர்கள் எதிர்ப்பட்டார்கள். அவர்களால், சோழதேசத்தில் அநாமயமென்னும் ஓர்வனத்தில் உசத்தியமுனிவரிடத்தில் ஒருகன்னிகை யிருப்பதாகக் கேள்விப்பட்டு, அவ்விடத்திற்சென்று அந்த முனிவரைக்கண்டு, அவரால் சத்கரிக்கப்பெற்று, அவரும் பெண்கொடுக்க இசைந்ததனால் அங்கே சிலநாள் தங்கியிருந்தார். இருக்கையில், அந்தக்கன்னிகை ஒருநாள் தோழிகளோடு பூப்பறிக்கப் போய் அங்குவந்த வொரு யானையைக்கண்டு பயந்தோடி அங்குள்ள வொரு பாழ்ங்கிணற்றில் வீழ்ந்திறந்துபோக, தோழிகள்வந்து இந்தச்செய்தியைத் தாய்தந்தையருக்கறிவிக்க, அவர்களும் மனத்தில் ஆறாத்துயரங்கொண்டு, அந்தக் கிணற்றருகேசென்று கிணற்றில்விழுந்திறந்த தம்மகளுடைய வுடம்பைப்பார்த்து பெரிய துக்கசாகரத்திலழுந்தி வருந்துகையில், பெண்பேசவந்த குச்சகமுனிவன் அவர்களைநோக்கி, நீங்கள் வருந்தாதிருங்கள், நாம் உம்மகளைப் பிழைத்தெழும்படி செய்வோமென்றுசொல்லி, அந்தப் பெண்ணினுடம்பைத் தைலத்தோணியிற் சேமித்து வைக்கக் கட்டளையிட்டுத் தவஞ்செய்துகொண்டிருந்தார். இதுநிற்க,

இவ்வாறு தவஞ்செய்துகொண்டிருக்கையில், முன்னம் அந்தப் பெண்ணைத் தூரத்திய மதயானை மயங்கிவந்து பொய்கையிற்சென்று துதிக்கையாற்கலக்கி அவ்விடத்தில் தவஞ்செய்துகொண்டிருந்த குச்சகரையெடுத்துப் பிடர்மீது ஏற்றிக்கொண்டு வெகுதூரஞ்சென்றது. அவ்வாறு எடுத்துச்செல்லும் யானையினுடைய ஊழைத் தன் ஞானதிருஷ்டியாற் பார்க்கத்தொடங்கினர். அந்தயானையின் விஷயமாவது கலிங்கநாட்டில் அரிபுரமென்கிற நகரில் தேவதத்தன் என்கின்ற ஒருவணிகனிருந்தான். அவன் தவஞ்செய்துபெற்ற தருமதத்தன் என்கின்ற சிறுவன், மிகுந்த செல்வத்துடனிருந்தான். அவன் தன்னுடைய தந்தைதாயரிறந்தபின்பு மனம் வருந்தி மயக்கமடைந்திருக்கும்பொழுது மனத்தை மயக்கத்தக்க ஓர் வாதிவந்தனன். அவன் முண்டிதமாயும், காதில் குண்டலமணிந்தும், பூணூல்தரித்தும், கண்டிகை பூண்டும் விபூதிப்பை [illegible]மிருந்த அரிய கோலத்தைக்கண்டு சிவபெருமானைக் கண்டாற்போலப்பாவித்து அன்புகொண்டு அவனது அடியில்வீழ்ந்து சேவித்துக்கொண்டு வேண்டிய உபசாரவார்த்தைகளைப்பேசி வீட்டிற்குள் அழைத்துச்சென்று அறுசுவையுடன் கூடிய உண்டியையூட்டிப் பெருமானே! தேவரீர் என்னையொரு பொருளாகக்கருதி வந்தகாரணம் யாதென்று வினவ, அதற்கவன் சிவபெருமான்கொடுத்த வித்தையொன்று என்னிடத்திலிருக்கின்றது. அது குருவிசுவாசமுடையவருக்குச் சொல்லவேண்டியது, நீ மிகவும் விசுவாசமுடையவனுயிருக்கின்றபடியால் உனக்குயான் சொல்கின்றேன், அஃதாவது இரசவாதஞ்செய்வது. இரசத்தைப் பொன்னுகச்செய்வதாகிய இதுபோலும் அரியவித்தைகள் அநேகமுண்டு. இரும்பையும் நாகத்திற்காட்டுவேன், இரும்பைச் செம்பாக்குவேன், கைலாயகிரியையும் உனக்குக் காட்டிவைப்பேன், இந்த வித்தைகளையெல்லாம் வஞ்சமனமுடையவர்களுக் கெடுத்துச் சொல்லமாட்டேன். இன்னம் என்னிடத்திலுள்ள வித்தைகளையெல்லாம் எடுத்துச் சொல்லவேண்டுமானுல் சிலவருடங்கள் செல்லும். மேலும் ஒருபொன்னைக் கோடிபொன்னுகச்செய்வேன், கோடிபொன் இருக்குமானுல் அதையொருமலையாகக் குவியும்படி செய்வேன். உன்னிடத்திலுள்ள பொருளையெல்லாம் கொடுத்தால் உன் பெரியமாளிகையில் நிதிவைப்பதற்கிடமில்லை என்று சொல்லும்படிசெய்வேன் என்று இவ்வாறு கூறிய கள்ளனை உண்மையாய் வணங்கி, கணப்பொழுதிற் றன்னிடத்திலுள்ள திரவியங்கள் ஆபரணங்கள் எல்லாவற்றையும் கொண்டுவந்து முன்னேவைத்தான். அந்தத் திரவியத்தைப்பார்த்து உன் தகப்பன்வைத்தது இதுதானேவென்று கைகொட்டி நகைத்து இந்தப்பொருள் நம்முடையவித்தையில், வுருக்கும்பாத்திரத்தில் வழுவிச் சிந்துகின்றது காணுதே! நீ என்பின்னே திரிவையாயின் அளவிறந்த பொருளைக் கொடுப்பேன், இப்பொருள்களை வைத்துவிடுவாய் என்றுகூற, அதைக்கேட்டவணிகன் எம்பெருமானே! தேவரீர் கோபிக்கவேண்டாம், தாங்கள் வேண்டிய பெருநிதியைத் தேடிக்கொண்டு வருவேனென்று, மணிகள், ஆடைகள், நிலங்கள், வீடுகள்முதலிய எல்லாவற்றையும் விலைமாறிப் பொருளாக்கிக்கொண்டுவந்து அக்கள்ளன்முன் வைத்துநிற்க, அவன்மகிழ்ந்து அவைகளையெல்லாம் தீயில்வைத்து உருக்கத்தொடங்கினன். அவ்வாறு உருக்கியபொன்னை ஒருபாத்திரத்தில்வைத்து அதற்கிரட்டியாகிய இரசத்தை ஒருபாத்திரத்திலிட்டுச் சீலைசெய்து தீயிலிட்டுச் சீக்கிரமாகத்தானே நூற்றெட்டுப் புடம்வைத்துப்பார்த்து மாற்றேறிவிட்டது. வராகியின்கிருபையாற் பழுக்கும். காற்றுவராத ஓர் அறையைக்காட்டவாவென்றனன். அவன் அப்படியே ஒரு அறையைக்காட்ட, அவ்விடத்தில் கட்டைகளைப்பரப்பி அதன்மீது சுடுகொட்டுத்தீயைக்கொண்டு ஓமஞ்செய்து புகையையெழுப்பித் தியா

னது அவன்மேற்படச் செய்தான். அதனால் அவ்வணிகன் இரண்டு கண்களினும் நீர்பெருக, தேகம்வியர்க்க ஊமைபோல் நின்ற அக்காலத்தில் அப்பொற்குகையைத் தனது ஆடையில்மறைத்து அக்குகைபோலவே வேறொருகுகையை அந்நெருப்பில்வைத்து புகையையவித்து அவைகளை மூடிவிட்டு நீ விரதமாக அன்னம் புசிக்காமலும், ஒருவரோடும் பேசாமலும், பெண்ணுடன்கூடாமலும், மற்றொருவரையும் பாராமலும், உன்கருத்தில் என்னையே நினைத்துக்கொண்டு மூன்று ஆறுநாளிருக்கவேண்டும். நான் நீலிக்குமுன்னேசென்று ஓர்யாகஞ்செய்து நாலாம் நாளில் இவ்விடத்திற்கு வருவேன் என்றான். அவ்வாறு கூறிய அக்கள்ளனை மூன்றுதரம் வணங்கிக்கொண்டு அப்படியே செய்வீரென்று உத்தரவுகொடுத்தான். உடனே அவன் அங்குநின்றும் நீங்கி மிக்கவிரைவில் வெகுதூரஞ்சென்றுருமாறிப் போனான். இதுநிற்க,

மாயவேடம்பூண்ட வாதி சொல்லிய கட்டளையின்படி வணிகன்வைகினன். அவ்வாறு நான்குநாளிருந்தும் அவன் வாராமையால் வணிகன் மனக்கவலையுற்றுச் சொல்லியவார்த்தையைத் தவறுவானோ வருவானோவென்று தளர்வுற்று நீலியின் கோயிலையடைந்து தேடிக்காணாமல் சிந்தைமயங்கித் தன் மாளிகையில்வந்து முன்வைத்திருந்த குகை எடுத்துப்பார்க்க அது இரும்பாயிருக்கக்கண்டு இது மாயைபோலு மிருக்கின்றதே யென்று சோர்ந்திருந்தான். அவ்வாறு தனக்குள்ள திரவியமெல்லாம் போய்விட்டபடியால் பயித்தியம்பிடித்துச் சிலநாள் உழன்று பிறகு யமலோகத்தையடைந்து, தருமங்களையெல்லாமிழந்த செய்கையாலே ஒரு மயக்கம்பூண்ட யானையாகிப் பிறந்தான். முன்னடந்த விஷயங்களெல்லாம் மறந்தானென்று யானையின்மீதேறியிருந்த குச்சகர் ஞானதிருஷ்டியாலறிந்து இப்பாவத்தை நொடியினுள்ளே மாற்றிவிடவேண்டுமென்று தான் செய்ததவத்தில் ஓர் நாள்பலன் அந்தயானைக்கு ஆகட்டுமெனக்கூறினவுடனே அவன் யானையுருவை நீக்கிக்கொண்டு யாவராலுந் துதிக்கத்தக்க தெய்வவுருவடைந்து புஷ்பவிமானத்திலேறி இந்திரனைப்போல அரமகளிர் சாமரையிரட்டவும், நடிக்கவும், தேவர்கள் பல்லாண்டுகூறவும் குச்சகனது திருவடியைவணங்கி விண்ணுலகடைந்தான். பின்பு குச்சகமுனிவன் முன்புபோல் நெடுந்தவஞ்செய்ய அவனெண்ணியவாறு தென்றிசைக் காவற்கடவுளாகிய இயமன்வந்து என்னைநினைந்தமை யாதுகாரணமென்று வேண்ட, உசத்தியமுனிவன்மகளை என் மகன் மணஞ்செய்யநேர்ந்தனன், அவள் இறந்துபட்டனள். அவளை முன்போற்றரவேண்டுமென்று வேண்ட, அவ்வாறே தந்தேனென்று விடைபெற்றுச்சென்றான். அங்கே உசத்தியமுனிவன் மகளது யாக்கையில் அவளாவிபுகவே நித்திரை செய்தார்போல மீண்டும் எழுந்திருந்தான். அவளுயிர்பெற்றெழலும் தாய் நடந்த பரிசனைத்துஞ் சேட்டனள். தந்தை முனிவனைநோக்கி என்னுயிரும் என் சுற்றத்தாருயிம் தன் மனைவியுயிரும நிலைபெற்றிருக்க என்மகனுயிரைத் தந்தனையாகையால் இவ்வுலகமுழுதுங் காத்தளிக்கு மிறைவனீயேயாமென மதிக்கின்றேன். இனி உமது மகனாகிய கவுச்சிகனுக்கு இத்திசைநாடி விருத்தையென்பாளைக் கொள்ளவந்தீரோ! அல்லது என்மகளுயிரைக் கொடுக்கவந்தீரோ வென்று புகழ்ந்தான். அக்குச்சகமுனிவன் சிலநாள் அங்குத் தங்கியிருந்து விருத்தையென்பவளைத் தன்மகனாகிய மிருககண்டேயனுக்கு மணஞ்செய்வித்துப் போயினான். கவுச்சிகனென்பவன் தன் மனைவியாகிய விருத்தையோடு இல்லறநடாத்திவருகையில் புத்திரப்பேறின்றி வருந்தி மிருகண்டுவென்னும் புத்திரனைப்பெற்றான். ஆடுண்டாக

வே உபநயனஞ்செய்வித்துத் தன்தந்தைபோல் தவஞ்செய்யச்சென்றான். அவன் போனபின்பு, முற்கலமுனிவன்பெற்ற மருத்துவதியென்பவளை மணந்து அநாமய மென்னும் காட்டில் அவளோடுவசித்துப் புத்திரப்பேறின்றிக் காசிக்ஷேத்திரத்தை யடைந்து கங்கையினீராடிப் பலமுனிவர்கள்வசிக்கும் வீதிவழியேசென்று, மணி கர்ணிகையென்னு மாலயத்திற்புகுந்து விச்சுவநாதனை வணங்கி, அவ்வாலயத்திற் கணித்தாக மகப்பேறுகுறித்து ஓராண்டு தவஞ்செய்தான். அவ்வாறுதவஞ்செய்ய இறைவன் வெளிப்பட்டு நீ வேண்டியதுகேள் அளிப்போமென்று சொல்ல, அதற் கம்முனிவன் நான் 'மக்கட்பேற்றிற் பெறும்பேறில்லை' என்றபடி மகனைநோக்கித் தவஞ்செய்தேன், அருளவேண்டுமென்று வணங்கினின்றான். அதற்கு இறைவன் புன்முறுவல்செய்து தீங்காயகுணமேயமைந்து மெய்யுணர்ச்சியின்றி மூங்கையும் செவிடு முடமுமுடையனாய் விழியற்ற வோர்மகனாய்த் தீர்க்காயுளாய் நூறுவய துடையனாயிருக்கப் பிணியில்வருந்தும் ஒருவன் வேண்டுமோ, அல்லது வடிவழகும் மெய்யுணர்ச்சியுமுடையனாய்ப் பிணிமுதலியனவின்றி யெம்பா லன்புமிகுந்தோ னாகப் பதினாறாண்டுடையனாயுள்ள வொருவன்வேண்டுமோ யார்வேண்டுமென்ன, மிருகண்டு ஆண்டிற் குறைபாடுடையனாயினும் இறைவனே யுன்னிடத்தில் மெய்ப் பத்தியுடைய மகனையே வேண்டுகின்றேனென்று வேண்டவே, அவ்வாறே தந்தே னென்றுசொல்ல, மகிழ்வடைந்து தன்மனைவியோடு வசித்துக்கொண்டிருந்தான். இவ்வாறு வாசஞ்செய்துவருகையில் உலகத்தின் துன்பமொழியவும், தருமமெல் லாம் நிறைந்தோங்கவும், மாதவஞ்செய்யு முனிவருய்திபெறவும், வைதிகசைவம் வாழவும், இறைவனருளால் இயமன் மாளவும் அவனது மனைவி வயிற்றிற்கருக் கொண்டாள். அவ்வாறு கருக்கொண்டதறிந்து மாதந்தோறும் செய்யவேண்டுங் கடமைகளையெல்லாஞ் செய்துமுடித்துச் சிவனடியார்களுக்கு வேண்டுவன வுப சரித்துவரப் பத்துமாதம்நிறைந்தவுடனே மீனலக்கினமும், இரேவதியும் பொருந்த, மிதுனம்செல்ல, சுக்கிரனும், வியாழமும் உச்சக்கிரகங்களாகநிற்க, சூரியன்முதலா னோர் தத்தமக்குரிய இடங்களிலே நிற்கத்தோன்றினான். இவ்வாறு தேவதுந்துபி முழங்கின, காத்தளித்தழிக்கு முத்தேவரும் ஏனையரும் ஆசீர்வதித்தனர். நடப்ப தின்னதென்றறியாது அக்காசிநகரமேயன்றி உலகமுழுதுங் களிப்பொடுமகிழ்ச்சி யடைந்தன. தந்தையும் அப்புத்திரோற்சவங்கேட்டுக் கங்கையினீராடி அந்தணர் கள் முதலானோர்க்குச் சுவர்ணதான முதலியவைகளைச் செய்துநிற்க, பிரமனங் கடைந்து இக்குழந்தைக்கு மார்க்கண்டேயனென்று நாமகரணஞ் செய்யவேண்டு மென்றான். அது பூரணசந்திரன்போல் வளர்ந்து வருகையில் உபநிட்டானம் அன்னப்பிராசனம் முதலியவற்றைச்செய்து ஓராண்டில் சவுளஞ்செய்வித்து, இரண்டாமாண்டில் செவிபூடணகருமஞ்செய்து, ஐந்தாமாண்டில் உபநயனஞ்செய் வித்து வேதமுதலிய ஆப்தகலைகளையுணர்த்த அவற்றின்பொருளை யுள்ளவாறறிந்து சிவனே பரம்பொருளென்றுதுணிந்து அவனடியாரை அச்சிவமாகவே பாவித்துத் தன்குரவனைவணங்கிக் காமம், வெகுளி, மயக்கம் என்னும் முக்குற்றமகன்ற முனி வரைப்பரவி வழிபாடுசெய்து தன்னைப்பெற்ற மாதாபிதாக்களை வணங்கிநின்று பிரமஞானம்பெற்று விளங்கினான்.

இவ்வாறு நடந்துவருகையில் பதினாறாண்டாகவே மகனைநோக்கி, தாயுந்தந் தையு மிகவும் வருந்தித் துன்பக்கடலிலழுந்தினர். அதைநோக்கிய மார்க்கண் டேயர் நீங்கள் வருந்தியவாறென்ன! உள்ளபடி சொல்லுங்களென்ன! உன்னை யருமையான மகனாகப்பெற்றும் வேறொருதுயரத்தால் வருந்துகின்றோம், அது

நீலகண்டத்தநின்மலன் வரந்தருகையில் பதினாறாண்டில் உனக்கு இறுதியென்று சொல்லியது. அதனால் வருந்துகின்றோமென்றனர். மார்க்கண்டேயர் அவர்களைநோக்கி நீங்களொன்றுக்கு மஞ்சவேண்டாம், உயிர்க்குயிராகிய உம்பர்பெருமானை யர்ச்சனை கடைப்பிடித்துச்செய்து யமனைப் புறங்காண்கின்றேன் என்று சொல்லினன். பெற்றோரும் தன்மகனது மழலைச்சொற்கேட்டு மகிழ்சிறந்தனர். மார்க்கண்டேயர் அவர்களுக்கு வேண்டியவற்றையெல்லாமெடுத்துச்சொல்லி அவர்களை நிறுத்திவிட்டு அவர்களிடத்தே விடைபெற்று, இறைவன்பால் அன்பும் அவனருளும் துணையாய்வர, விரைந்துசென்று மணிகர்ணிகையென்னு மாலயத்தையடைந்து என்பு நெக்குருக இருகண்ணினின்றும் ஆனந்தபாஷ்பம்பொழிய இறைவனுகிய விச்சுவேசனைவணங்கி அர்ச்சனையைக் கடைப்பாடாகச் செய்யலாயினர். அவ்வாறுசெய்ய இறைவன் வெளிப்பட்டுத்தோன்றி எம்மை இடையறாவன்பால் வழிப்பட்டமையால் நீ எமனுக்கஞ்சவேண்டுவதில்லை, நாம் நீ வேண்டியவாறு வெளிப்பட்டுக் காலனைச் செயங்கொள்ளச் செய்கின்றோமென்றனன். இவ்வாறு சிவார்ச்சனைசெய்கையில் எமதூதனெதிர்ப்பட்டு மார்க்கண்டேயர்செய்யும் சிவார்ச்சனையினுறுதியால் அவரருகே வருவதற்கஞ்சி, தென்றிசைக்கிழவனுகிய யமனையடைந்து, காசியில் மார்க்கண்டனென்னும் பிராமணச்சிறுவன் சிவார்ச்சனைசெய்கின்றான். அவனையடுத்துச்செல்வதற்கோ எங்களாலாகாத காரியமாயிருக்கின்றது; என்செய்வதென்று வணங்கிக்கேட்க, அதைக்கேட்டு யமனே தன்கணக்கராகிய சித்திரகுத்தரென்று சொல்லுவோரையழைப்பித்து அவனது காலவெல்லையையெடுத்துச்சொல்லுங்கோள் என்ன, அவர்களும் முதிர்ந்ததவமே செல்வமாகவுடைய முனிவரேயாயினும் தங்காலவெல்லையைக் கடப்பதரிது, மதியினராயினும் வலியினராயினும் விதியைக்கடப்பாரெவருமில்லை; இவனே இந்திரலோகமடையத்தக்கான், இவனுக்கு யமவாதனை சிறிதுங்கிடையாதென்றனர். அதைக்கேட்ட இயமன் தன் மந்திரியாகிய காலனைக்கூவிக் காசிக்ஷேத்திரத்தையடைந்து பிராமணச்சிறுவனுகிய மார்க்கண்டேயனை விரைவிலாவிகவரவேண்டுகின்றேன் போவென்று சொல்லியனுப்ப, அவனும் காசியைக்குறுகி மார்க்கண்டேயரையடைந்து அவர்செய்யும் சிவார்ச்சனையினுறுதியும் குறிப்புமறிந்து எவ்வாறிவர் வருவதென்றினைத்தேங்கி, அவர்கண்ணுக்குத்தோன்ற, மார்க்கண்டேயர் கண்டுவணங்கி நீயார் சொல்லவேண்டுமென்ன; யான் உலகின்கண் எவ்வுயிரையுங் கொண்டுசெல்லும் எமனது அடிமையாகிய காலனென்று என்னைச்சொல்வர் என்றுசொல்லவே, இங்கேயாதுகாரியமாக வந்தனைசொல்லென, காலனும் இறைவன் உமக்கு வரையறுத்தவாயுளோ நேற்றேசென்றது, நீர் தென்புலஞ்சேரவேண்டும், விதியையோ சதுமுகனுலுந் தடுப்பதரிது, நீர் சிவார்ச்சனைசெய்து வருவதனால் மனமகிழ்ந்து உம்மைக் காணவெண்ணியே ஆசைமேற்கொண்டு தருமன் காத்திருக்கின்றனன். அடுதற்செயல் செய்வதனால் அவனைக் கொடியனென்பர் கொடியார், அவன் ஆருயிரை முறைபுரியுந்தன்மையால் நடுவனென்று மேலோரெல்லாங் கூறுவர். நீர் ஒன்றுஞ் சிந்தியாது யமபுரத்தையடைந்தீராயின் தருமனெதிர்ப்பட்டு வணங்கி, உமக்கு இந்திரபதந்தருவான் வாருமென்றான். அதைக்கேட்ட மார்க்கண்டேயர் யான் சிவபிரானடியார்க்கடியவனாகையால் எமபுரத்தையுங்கண்டு தெரிசியேன், பிரமன் மாலென்றிருவோர் பெரும்பதமும் விரும்பேன், விரைந்து நீ வந்தவழியே நாடிச்செல்லென, காலனும் விரைந்துசென்று தருமனுக்கறிவித்தான். அவனே உளம்பதைத்து உடல்வெயர்ப்பக் கண்ணிற்றீயெழப் புருவக்கடைநிமிர ஆலவிடம்போற் கொதித்து எருமைக்கடாவிலேறித் [illegible] கொடியுநிமிர்ந்

தூதர்கள் புடைசூழவந்து காசிக்ஷேத்திரத்தையடைந்து கையிற் பாசங்கொண்டு தண்டமுஞ்சூலமுமேந்தி யெதிர்ந்துதோன்ற, இனித் தருமன்வந்துவிட்டானென் றறிந்து சிறிதுமஞ்சாமல் சிவார்ச்சனையுறைப்பிலிருந்தான். அதைக்கண்ட தருமன் என்னநினைந்து என்செய்தாய்! முன்னை விதிப்பயனையும் இறைவனாணையையும் ஒருவன் கடக்கக்கூடுமோ! ஊழின்முறைமையைச்சிறிதும் அறியாய்போலும்! உலகில் பிறப்பிறப்பென்பன யாவருமடைவது சகசமே! எப்படிப்பட்ட பெருந்தவமுடையராயினும் இதனைக் கடப்பதரிது, இது மறுக்கப்படாதசத்தியம், ஆகையால் பெரியாரும் 'விதிப்பயனை வெல்வதற்கு வேதமுதலாமனைத்தாயநூலகத்துமில்லை' என்று சொல்லியிருக்கின்றார்கள். மேலும் நீ கடைப்பிடித்த சிவார்ச்சனை உன் பிறவித் தொடர்பாகிய பாசத்தைச் சிதைப்பதல்லது என்னால் பிணிக்கப்படும் பாசத்தைச் சிதைக்கவல்லதோ! எத்தனையோ விந்திரர் என்றாலே மாண்டனரே, அவர்களெண்ணிக்கை ஆகாயத்திலிருக்கும் நட்சத்திரக்கூட்டங்களையும் கடலிலுள்ள நுண்ணிய மணலையு மெண்ணினும் எண்ணியுரையிடப்போகா, இந்திரரே அவ்வாறாயின் தேவர்களை யெண்ணிக்கை சொல்லப்படுமோ! அவர்கள் அமுதாசனரென்றும், அமரரென்றும் சொல்லப்பட்டும் இறந்துபட்டனர். இவ்வாறுதேவர்கள் செயலாமெனின் மானிடர் முதலானோரை யென்னசொல்லலாம்! மரணமென்பது பிரமன், மால் முதலான பெருந்தேவரையும் விட்டதில்லையே, உன்னைமாத்திரம் விட்டுவிடுமோ! எம்மிறைவனாகிய பரமசிவனை வழிபடுகையில் அவர் என்னரசியலை நடாத்தப்பாசமும், சூலமும், தண்டமும், மழுவுமளித்துள்ளார். தேவரேகாக்கினும் படைத்தளித்தழிக்கு மூவரேகாக்கினும அல்ல தெவரேகாக்கினும் நின்னுவி கொண்டல்லது மீள்வேனோ! துன்பமென்பது கொள்ளவேண்டாம், இறைவனது மெய்யன்பரேயாயினும் இறுதிவந்தெய்தின் தென்புலத்திற்சேர்ப்பது மெய்மையான செய்தியாதலால் நீ வா வென்று சொல்ல, மார்க்கண்டேயர் எம்மிறைவன் மெய்யடியவர் ஸ்ரீகைலாயவரையை யடைவதல்லது தென்புலஞ்சேர்வரென்பது சொல்லப்படுவதோ! அவாமாதவஞ் செய்பவராயினும், மனையின் வாழ்க்கையுடையராயினும் வினையினீங்கிய வீட்டின்பமெய்துவர். அவர்களோ உன்னையும் மற்றைத்தேவரையும் இந்திரனையும் பிரமனையும் மாலையும் உருத்திரனையும் ஒருபொருளாக மதிக்கவேமாட்டார்கள்; அவர்களுக்கு இறைவனல்லது பற்றுக்கோடென்பது வேறுகிடையாதே! எல்லாமுடைய பெருமானையும் அவன் திருவடியைப் பற்றுக்கோடாகவுடைய மெய்யன்பரையும் பேதமாக நினைப்பது பேதைமைத் தன்மையாமென்று வேதமுதலிய ஆப்தகலைகள் கூறுவதறிந்திலைபோலும்; நலந்தீங் கென்பனவொழிந்து ஓடும் பொன்னும் ஒன்றாகவெண்ணும் பெருந்தன்மை யுடையார் பெருமிதத்தை இப்படியென்று சொல்லலாமோ! அவர்கள் பெருமையைச் சிறிது மறியாமற் சாதாரண மனிதர்போல்மதித்து என் உயிர்க்குத் தீங்கு நினைத்தாய்! இது உன்னுயிர்க்கும் உன்னரசியலுக்கும் இறுதியைத் தருமன்றோ; அறியாமையுடையானே! நீ கொண்ட கருத்தை விடுத்துப் போவென்றனர். அதைக்கேட்ட தருமன் இனிப்பாணிப்பது தகுதியன்றென்று நினைத்துத் தன் கையிலிருந்த பாசத்தைவிட்டெறிந்து நின்றான். அவ்வாறுசெய்ய மார்க்கண்டேயரோ சிறிதுமஞ்சாது தான்செய்யும் சிவார்ச்சனையி லுறைப்பாவிருந்தனர். தேவர்களும் இம்மார்க்கண்டேயரிறந்து பட்டனரோவென்று மயங்கினர். உமையொருபாகத்தும்பர் பிரானார் நீ சிறிதும் அஞ்சவேண்டாம்! நாமேயுன்னைக் காக்கின்றோம் என்று வெளிப்பட்டுத்தோன்றி, தமது வாமத்திருவடியால் அத்தருமனை யுதைக்கவேவி[illegible]ழுகின்ற மேகம்போலமண்மேற் குப்புறவிழுந்தான்.

பிரமன்முதலிய தேவர்கள் நாமினிவாழ்வதெப்படி யென்று கலங்கினர். பாரும் விண்ணும் மாழ்கினின்றன. தூதுவர்முதலானோர் பூமியின்மேல் வீழ்ந்திறந்தனர். அத் தருணத்தே என்னுருயிரைக்காக்க இறைவனிருக்கையால் என்னைக்கொல்லவந்த தருமனும் பன்செயத்தக்கார் என்ன வடமொழியிற் சந்தப்பாவினம்பாடி மார்க் கண்டேயர் துதிக்க, இறைவனும் கழிமகிழ்சிறந்து நம்மையன்பொடு வழிபட்டுநின் றமையால் பாட்டிற்கின்புறும் நாம் அளவில்லாத ஆயுள் உதவி நின்றோம்; என்று சொல்லி மறைந்தருள, மார்க்கண்டேயரும் மணிகர்ணிகை யென்னும் ஆலயத்தி லெழுந்தருளிய சிவபிரானைக் கண்ணீருங் கம்பலையுமாய் வழிபட்டு இறைஞ்சி நீங் கித் தந்தைதாயரை வணங்கித் துயர்நீக்கி அங்குநின்றும் அப்பெருமானெழுந்தரு ளிய ஏனைய ஆலயங்களையுந் தரிசிக்கவெண்ணிக் காசியைவிட்டகன்று போயினர். இது நிற்க;

இந்திரன், பிரமன், மால்முதலிய தேவர்களிடத்தே நிலமகளடைந்து தரும னில்லாமையால் நிலத்திலுள்ள உயிர்களெல்லாம் இறப்பென்பதின்றிப் பெருகு கின்றதனால் பூபாரமிகுகின்றதேயென்று தன்வருத்தத்தை யெடுத்துக்கூறிவேண டினன். அதைக்கேட்ட அத்தேவர்களொருங்குசென்று கைலையையடைந்து இறை வனது சீபாதங்களை மும்முறை வலம்வந்துபணிந்து துதித்து தாங்கள்வந்தசெய்தி யையறிவித்தனர்; அவருள் திருமால் தேவரீர்கிருபை செய்தவாறு எனக்களித்த பதத்தைப்பெற்றுக் காத்தற்றொழில் செய்கின்றேன், அதற்கிக்காலத்தே ஒருகுறை நேர்ந்தது, அதுவோ நின்றிருவருட் பெருமையைச் சிந்தியாக்கேட்டினால் தென் புலத்திறைவனாகிய தருமன் கெட்டொழிந்தனனென்பதே. மன்னுயிரோ பெருகிய தனால் நிலமகள் பாரஞ்சுமக்க லாற்றாமல் வருந்துவாளாயினாள். அவ்வாறாயின் என் காத்தற்றொழிலாலென்ன பயனென்று சொல்லிமீட்டும் தருமனை யெழுப்பித் தரவேண்டுமென்று வேண்ட, இறைவன் அத்தருமனை வருகவென்று சிந்தித்த மாத்திரத்தில் வந்து வணங்கிநின்றான். அவனை நோக்கிப் பரமசிவன் இனி எக்கா லத்தும் சிவசாதன மணிந்த மெய்யடியவரிடத்தே யணுகாதிருக்கவேண்டும். நம் மடியவர் மண்ணுலகத்தி லிருப்பவரே யெனினும் அவர்கள் மண்ணுலகத்தவா தாமேயென்றசட்டை செய்யவேண்டாம். அவர்களை நமதுவடிவமென்றே யெண்ணி வழிபடவேண்டும். அவர்க்கு மனமொழி மெய்களால் தீயவைபயில்கின்றவரை நரகி லெய்தச்செய்யவேண்டும். நன்மை செய்வாரைத் துறக்கமடையச் செய்ய வேண்டும். இவ்வாறு நீ செய்துவருவதே நமதாணையென்று கட்டளையிட்டு அவ னுடைய பரிவாரத்துட னனுப்பிவிட, அவன் தன்னுலகஞ் சென்று தன்றொழிலைச் செய்துவருவானாயினான். மாலே, அயனே, இந்திரனே முதலிய தேவர்கள் பரம சிவனை வணங்கி விடைபெற்றுப் போயினர். அன்றுமுதல் தருமன் சிவனடியா ரைக்கண்டு மிகநடுக்கங்கொண்டு அஞ்சி மார்க்கண்டேயரைப்போன்று மதித்து என்னகேடு வருமோவென்று நினைத்து நடந்தான், ஆதலால்,

குச்சகன் தன்னருமையான தவத்தினால் விருத்தையென்னும் பெண்ணுயிரை யளித்ததான தன் தவத்தால் பின்னும் யானையினது சாபநீக்கித் தெய்வவுருத்தந்து துறக்கமளித்தான்; மிருகண்டேயன் மூவரின் முதன்மை பெற்றான்; அவன் மகனா கிய மிருகண்டு ஒப்பில்லாத தவத்தினால் மார்க்கண்டேயரைப் பெற்றான், அவர் விதியைக்கடந்து தருமனைப் புறங்கண்டு என்றும் நிலைபேறுடைய ஆயுளைப்பெற்ற னர்.

மார்க்கண்டேயப்படலம் முற்றிற்று.

# மாயையுபதேசப் படலம்.

அன்னது சரதமே யறிதி ராதலா
லின்னமு மொழிகுவ னியற்று நோன்பென
முன்னுறு காசிப முனிவன் செப்பலு
நன்னய மாயவ ளகைத்துக் கூறுவாள். (௧)

மறைதெரி முனிவநீ வாய்மை யாகிய
வுறுதியை மொழிந்தனை யுயர்ந்த வீடுறு
மறிவுடை முனிவரர்க் கன்றி நாமருள்
சிறுவருக் கித்திறஞ் செப்ப லாகுமோ. (௨)

நன்பெருஞ் செல்வமு நவையில் கொற்றமு
மின்பமு மழிவிலா திருக்கு மாயுளு
மன்பெருஞ் சீர்த்தியு மறுவில் வாழ்க்கையு
மன்புடை யினையவ ரடைதல் வேண்டுமால. (௩)

காதலா லவையெலாங் கடிதிற் பெற்றிட
மாதவ முனிவர வகுத்தி யென்றலு
மீதுகொ லோவுன தெண்ண நீயவர்க்
காதகு மியல்பினை யறைதி யென்னவே. (௪)

மாயவ டன்சிறா வதன நோக்கியே
தூயவிம முனிவரன் சொற்ற துண்மையே
யாயினு முங்களுக் காவ தன்றவை
நீயிர்கள் கேண்மென நெறியிற கூறுவாள். (௫)

மாற்படு புந்தியின் மறுவில் சேதனம்
பாற்படு முயிர்க்கெலாம் பவத்தின் மாணபய
னூற்படு கல்வியி னுவல்வ ளத்தினின்
மேற்படுகின்றதில் விழுமி தில்லையே. (௬)

திருமைகொள் வளனொடு தீதில் கலவியா
மிருமையி னொன்றினை யெய்தி [illegible]ாதெனி
னருமைகொ ளவ்வுயி ரதனி னூறறவும
பெருமைய துடையது பேயின் றேற்றமே. (௭)

பிறந்தநல் லுயிர்க்கெலாம் பெருமை நல்கிய
விறந்ததோர் பொருண்மைய திரண்டின் வண்மையு
மறிந்தவர் தெரிவரே லரிய கல்வியிற
சிறந்தது திருவெனச் செப்ப லாகுமால. (௮)

சொற்றரு கலையெலாந் தொடர்ந்து பற்பகல்
கற்றவ ராயினுங் கழினி ரப்பினு
லற்றவ ராவரே லாக்கம் வேண்டியே
பற்றலர் தம்மையும் பணிந்து நிற்பரால். (௯)

அளப்பருங் கல்வியு மாக்கம் யாவையுங்
கொளப்படு தன்மையிற் குறைவு றாதவை
வளர்த்தலின் மேதக வணப்புச் செய்தலிற்
கிளத்திடின் மேலது கேடில் செல்வமே. (௧௦)

நூலுறு கல்வியை நுனித்து நாடியே
வாலறி வெய்திய வரத்தி னோர்களு
மேலுறு திருவொடு மேவு றாரெனின்
ஞாலமங் கவர்தமை நவையுள் வைக்குமால். (௧௧)

அளப்பரும் விஞ்சையே யன்றி மேன்மையு
முளப்படு தருமமு முயர்ந்த சீர்த்தியுங்
கொளப்படு கொற்றமும் பிறவுங் கூட்டலால்
வளத்தினிற் சிறந்தது மற்றொன் றில்லையே. (௧௨)

ஆக்கமிங் கொருவரா லணுக வேண்டுமே
லூக்கமுண் டாவரே லுறுவ ரன்னது
நீக்கமில் கொள்கையி னிற்ப ரேயெனின்
மேக்குறு பெருந்திரு விரைவின் மேவுமால். (௧௩)

அவ்வளம் பலவகைத் தாகு மாங்கவை
யெவ்வரும் பெறுகில ரியலபின் யாவையுஞ்
செவ்விதி னீர்பெறச் சிந்தை செய்யுமி
னுய்வது வேறிலை யுறுதி யீதலால. (௧௪)

எங்கள்பா னென்னலின் யாமந் தோன்றலாற்
றுங்கமா திருதர்தங் கதியிற் றுன்னினீ
ருங்களுக் கொன்னல ருமபர் யாவருந்
தங்கடம் முயற்சியாற் றலைமை பெற்றுளார். (௧௫)

நீவிர்க ளனையரி னிவந்த கொள்கைய
ராவிர்கள் போலுமா லாக்க மெய்துவான்
மூவிரு முயலுதிர் முயலும் பெற்றியை
யேவிருங் கேட்கயா னெடுத்துக் கூறுகேன். (௧௬)

ஆனதோ ரித்திசை யாலந் தீவெனத்
தானறை கிற்பரித் தரைக்கு [illegible]தாய்ப்
போனதோ ருதகர பூமி யாயி[illegible]டத
தானவர் நோற்றிடத தகுவ தென்பவே. (௧௭)

அப்புவி யதனிடை யாற்றற் கிறிலா
விப்பரி சனமொடு மேகி யாயிடை
யொப்பறு குண்டமு மொழிந்த செய்கையு
மெய்ப்பட வியற்றுதிர் வேள்வி செய்யவே. (௧௮)

காரிகொ ளிந்தனங் கதழ விட்டுமுன்
னாரழன் மூட்டியே யழலின் பண்டமுஞ்
சோரியு மூன்களும் பிறவுந் தூவியே
வீரர்கள் புரிதிரால் வெய்ய வேள்வியே. (௧௯)

செங்கண்மா லயன்முதற் றேவர் யாவரு
மெங்கணா யகனென விறைஞ்ச மேதகு
கங்கைவார் சடைமுடிக் கடவுட் போற்றியே
பொங்குதீ வேள்வியைப் புரிதிர் பற்பகல். (௨௦)

அம்மகம் புரிதிரே லருளின் முன்னுறீஇ
மைம்மலி மிடறுடை வான நாயகன்
மெய்ம்மையி னீவிர்கள் வெஃகி யாங்கெலா
மிம்மையி னெய்துமா றினிது நல்குமால். (௨௧)

மூண்டவிவ் வேள்வியை முயல மூவிரு
மாண்டுசென் றற்றுழி யன்ன தறகவண்
வேண்டிய பொருளெலாம் வேறு வேறதா
யீண்டுற வுதவுவ னேகு வீரென்றாள். (௨௨)

'தந்திர நெறிகளுந் தவறில் பான்மையு
மந்திர முறைகளு மற்று முள்ளவு
மிந்திர வளனுறு மியல்பின் மூவர்க்கு
முந்திர வுதவிய முதல்வி நல்கினாள். (௨௩)

இன்னதோர் காலையி லீன்ற மாயவ
டன்னொடு தந்தையைத் தாழ்ந்து போற்றியே
யன்னவர் விடுத்திட வவுணா மேலையோன்
பின்னவர் தம்மொடும் பெயர்வுற் றேகினான். (௨௪)

ஆ திருவிருத்தம் - ௫௪௦.

---

வசனம்.

இந்தச்செய்தி முழுதும் மெய்யாதலால் நீங்கள் நன்றாய்த தவஞ்செய்யுங் களென்று சொன்னார். அதைககேட்ட மாயையும் நகைத்து, இத்தவஞ்செய்யும் பேறு முற்றத்துறந்த முனிவருக்கல்லது யானீன்ற இச்சிறுவருக்கியலாது, நம் மிடத்தன்புடைய இவர்கள்பெருஞ்செல்வம் வெற்றி நீடித்த ஆயுள் முதலிய நன் மைகள் பெறவேண்டுமே, ஆதலால் இவர்கள் அவற்றைப் பெறும்படி அருள்செய்ய வேண்டும்என்றுசொல்ல, காசிபமுனிவரும். இவற்றையோ இவர்களடையத்தக்கது, இவர்களுக்கு நீயே நன்றாய்த் தெரிவிக்கவேண்டுமென்று சொல்ல, மாயையும் தன் மக்களையழைத்து, உம்முடைய தந்தைசொன்ன தெல்லாம் உண்மையே, அவை யெல்லாம் உங்களுக்காவனவல்ல, நீங்களடையததகுந்த உறுதிப்பொருளைச் சொல் லுகிறேன், உலகத்தில், கல்வியுடைமை பொருளுடைமை யென்ற இரண்டு செல்வ முஞ் செல்வமெனப்படும் என்றபடியே, இந்த இரண்டிலொன்றை யடையாவிட் டால் ஒருவன் பிறந்ததற்குப் பயனடையான், மேலும் அவ்விரண்டு செல்வத்தி னும் பொருட்செல்வமே சிறந்தது, ஒருவன் கல்வியிற் சிறந்தவனாயினும் பொரு ளுடையோனிடத்திலே போய் இரக்கவேண்டும். கல்விமேன்மை முதலிய எல்லாம் பொருளினாலேயே உண்டாகின்றன, ஆகையால் செல்வத்திலுஞ் சிறந்ததொன்று மில்லை. செல்வமுண்டாக விரும்புவோன் இடையிறாத முயற்சி செய்யவேண்டும். நேற்றிரவில் எங்களிடத்தில் நிருதராகத் தோன்றினீர்கள், உங்களுக்குத் தேவர்கள்

பகைவர்கள், தாம் செய்த முயற்சியால் அவர்கள் தலைமையடைந்தார்கள். அவர்கள் போல நீங்களும் முயல்வீர்களானால் செல்வத்தைப் பெறுவீர்கள், நீங்கள் மூவரும் முயலவேண்டும். நீங்கள் வடதிசையிற்போய் யாகஞ்செய்யவேண்டும். அந்த யாகத்தைச்செய்யும்போது சிவபெருமானைச் சிந்தித்துச்செய்யுங்கள், அப்படி செய்வீர்களானால் இறைவன் எழுந்தருளி உங்களுக்கு எல்லாச் செல்வங்களையுந்தருவான். அதைநினைந்து செய்யுங்களென்று அதற்குவேண்டிய உபகரணங்களைக்கூறித் தந்திர மந்திரோபதேசமுஞ் செய்தனள். அதைப்பெற்ற இம்மூவரும் தந்தை தாயரைவணங்கி நிற்க, அவர்களுத்தரவினால் தவஞ்செய்யப் போயினர்.

மாயையுபதேசப்படலம் முற்றிற்று.

---

# மாயைநீங்குபடலம்.

ஏகிய காலையி னிணையின் மாயவண்
மோகமொ டயலுறு முனியை நோக்கியே
போகுவன் யானினிப புதல்வர்ப் பேணுவா
னீகவ லேலென நிறுவிப் போயினாள். (௧)

போதலு முனிவரன் புந்தி யுள்ளுறு
மாதர வுந்திட வவள்பின் னேகியே
யேதில னுமென வெனைவிட் டேகுத
னீதிய தாகுமோ வுரைத்தி நீயென்றான். (௨)

ஆயிழை புகலுவா ளழுங்கன் மாதவ
சேயினர் பொருட்டினைச் சேர்ந்த தன்றியீண்
டியது நின்னுட னிருக்க வன்றியான்
மாயவ ளறிகென மறைந்து போயினாள். (௩)

அருவினள் சேறலு மற்பு தத்தவண்
வருபொருள் யாவையு மறைந்து போயின
வெருவரு முறைபுரி வேந்தை விட்டக
திருவொடு பெயர்வதோர் செல்வம் போலவே. (௪)

மாணல னெய்திய மாயை தன்னுருக்
காணல னாகிய கமலத தோன்மகன்
பூணலன் றெளிவினைப் பொருமி யேங்கியே
யாணல னழிவுற வழுங்கி மாழ்குவான். (௫)

வாவியுந் தடங்களும் வரையு மேனவுந்
தேவருங் காமுறச் செறிந்த வற்புதம்
யாவையுங் காண்கிலா னிரங்கி நின்றன
னாவியில் குரம்பைய னுகு மென்னவே. (௬)

மைந்தன துறுதுயர் மலரின் மேவிய
தந்தைத னுணர்வினாற் றகவி னோடியே
யந்தர நெறியில்வந் தங்கண் மேவலு
மெந்தைவந் தனன்கொலென் றெழுந்து தாழவே. (௭)

ஆசிகள் செய்துநின் னரிய நோன்பொரீஇக்
காசிப மெலிவது கழறு கென்றலும
பேசின னிகழ்ந்தன பிரமன் கேட்டிளங்
கூசின னவன்மனங் கொள்ளத் தேற்றுவான். (௮)

வேதமுங் கலைகளு முணர்ந்து மேலதா
மூதறி வெய்திய முனிவ நீயொரு
மாதுதன் பொருட்டினான் மைய லெய்தியே
பேதுறு கிற்றியோ பேதை மாந்தர்போல். (௯)

கண்டதோர் நறவமே காம மேயென
வெண்டரு தீப்பொரு ளிருமைத் தென்பரா
லுண்டிடி லழிக்குமொன் றுணர்வை யுள்ளமேற்
கொண்டிடி லுயிரையுங் கொல்லு மொன்றரோ. (௧௦)

உள்ளினுஞ் சுட்டிடு முணருங் கேள்வியிற்
கொள்ளினுஞ் சுட்டிடுங் குறுகி மற்றதைத்
தள்ளினுஞ் சுட்டிடுந் தன்மை யீதினாற்
கள்ளினுங் கொடியது காமத தீயதே. (௧௧)

ஈட்டுறு பிறவியும் வினைகள் யாவையுங்
காட்டிய தினையதோர் காம மாதலின்
வாட்டமில் புந்தியான் மற்றந் நோயினை
வீட்டின ரல்லரோ வீடு சேர்ந்துளார். (௧௨)

நெஞ்சினு நினைப்பரோ நினைந்து ளார்தமை
யெஞ்சிய துயரிடை யீண்டை யுய்த்துமேல்
விஞ்சிய பவக்கடல் வீழ்த்து மாதலா
னஞ்சினுந் தீயது நலமில் காமமே. (௧௩)

ஆதலிற் காமமுற் றழுங்க லீபுணா
மாதரும் வஞ்சக மாயை யாகுமாற்
றீதிவ ணிழைத்தனை நீரத் தொன்மைபோ
னீதவம் புரிகென நிறுவி யேகினான். (௧௪)

மாறக னான்முகன் வாய்மை தேர்தலுந்
தேறினன் மையனோய் தீர்ந்து காசிப
னேறமர் கடவுளை யிதயத் துன்னியே
வீறொடு நோற்றனன் வினையி னீங்குவான். (௧௫)

ஆண்டவ ணகன்றிடு மணங்கு தன்சிறார்
மீண்டிடு தீமக முயலு மெல்லையில்
வேண்டிய தூதவுவான் விமலற் போற்றியே
பூண்டனள் பெருந்தவம் புகரி னேவலால். (௧௬)

காசிபன் மாயையைக் கலந்த வண்ணமு
மாசறு மவுணர்கள் வந்த வண்ணமும்
பேசின மங்கவர் பெற்ற பேற்றினை
யீசன தருளினு லினியி யம்புவாம். (௧௭)

ஆ திருவிருத்தம் - ௫௨௭.

வசனம்.

பின்னர், மாயை மக்களைப் பேணுமாறு நீங்கிப் போவாளானாள் மாயை இவ்வாறு தன்னைவிட்டுநீங்க, காசிபனும அவள்பின்னேசென்று, அந்நியனைப் போல என்னைவிட்டுச் செல்லாநின்றனையே, இது நீதியாகுமோ வென்றுசொல்ல, மாயை அவரைநோக்கி, யான் மக்கட்பேற்றைக் கருதி உம்மைச்சேர்ந்ததே யன்றி வேறல்ல, இதையறியாமல் சிந்திப்பதிற் பயனில்லையென்றுசொல்லி மறைந்தாள். முனிவரும் அவள் உருவைக்காணமல் மனமவருந்தி யழுதுபுலம்பி உயிர்நீங்கினவுடம்புபோல நின்றார். அப்பொழுது பிரமதேவன் அந்தக்காசிபமுனிவருக்கெதிரே தோன்றி, அறிவில்லாத மனிதர்போல ஒருபெண்ணைக்குறித்து நீர்வருந்தலாமோ, இது உமது பெருமைக்குத் தகாது என்று பலவகையாய்ச் சொல்லித்தேற்றி, நீதவஞ்செய்து உய்யக்கடவையென்று வற்புறுத்திச்சொல்ல, காசிபமுனிவரும் அவ்வாறே யாகுகவென்று தவஞ்செய்வாராயினர். இதுவரையுங்காசிபமுனிவர்மாயையைக்கூடினதும் அவளிடமாக மக்களைப்பெற்றதும் சொன்னேம்; இனி அந்தமக்கள்பெற்றவரங்களின் வரலாறு கூறுவாம்.

மாயைநீங்குபடலம் முற்றிற்று.

## அசுரர்யாகப்படலம்.

அன்னாத னேவலா லழன்ம கஞ்செய
வுன்னின ளுகியே யொல்லை யேகிய
முன்னவ னிளைஞர்தம் முகத்தை நோக்கியே
யின்னது கேண்மென விசைத்தன் மேயினுன். (௧)

அடல்கெழு பெருமக மதனை யாற்றவே
வடதிசை செலவுழி மல்கு தானையின்
கடையொடு நெறறியிற் காவ லாகியே
படருதி ராலெனச் சூரன் பன்னினுன். (௨)

இனிதென வடிதொழு திளவ ருரக
னணிகம தீற்றினி லடைவ லென்றனன்
முனிதரு கோளரி முகத்து மொய்ம்பினுன்
றனியக னெற்றியிற் சார்வ லென்றனன். (௩)

பின்னவ ரிருவரும் பேசி யித்திற
முன்னவன் விடைகொடு முறையிற் போயினா
ரன்னவர் பணியினு லார்ப்புற் றேயெழீஇச்
சென்னெறி படர்ந்தன சேனை வெள்ளமே. (ச)

வேறு.

தானவ ரனிக வெள்ளந் தரைமிசைப் பெயர்த லோடு
மானில மடந்தை யாற்றாள் வருந்தினள் பணிக ளோடு
கோனுமங் கயரா நின்றான் குலவரை கரிகண் மேரு
வானவுஞ் சலித்த வாதி கம்ட்மு மழுங்கிற் றன்றே. (ரு)

மண்டிறு பூழி யீட்ட மலரய னுலகந் தாவி
விண்டல மீது போதன் மேதினி யசுரவெள்ள
மெண்டரு நிலைமைத் தன்றால் யான்பொறுக் கல்லே னென்னுக்
கொண்டல்வண் ணத்த னோடு கூறுவான் சேறல் போலும். (சு)

காழுறு மவுணர் தானைக் கனைகழற் றழனி முன்ன
ராழியங் கடவு ணேரா யார்ததில் கொல்லோ வென்று
வூழுறு சினங்கொண் டென்ன வுலப்பிலா வவுணர் தாளிற
பூழிய தெழுந்து சென்று புணரிவாய் பொதத்திற் றன்றே. (எ)

மரந்துகள் பட்ட மேரு வரையெனச் சிறந்த மெய்ப்பூ
தரந்துகள் பட்ட யாதுந் தனதெனத் தாங்கு சேட
னுரந்துகள் பட்ட நேரு முயிர்துகள் பட்ட தொன்னுட்
புரந்துகள பட்ட தேபோற் புவிதுகள் பட்ட தன்றே. (அ)

ஆடவி னவுண வெள்ளத் தரவமு மனையர் செல்ல
நீடிய பூழி தானு நெறிப்பட வருத லோடு
நாடிய வமர ரஞ்சி நடுக்குறு நமது வேதா
வீடினன் கொல்லோ நீத்தம் விண்ணுறும் போலு மென்றார். (கூ)

மாசக திருவின் மிக்க மவுவண முன்னந் தந்த
தேசுறு மவுண வெள்ளந் திசையெலா மயுத மென்னும்
யோசனை யெல்லை யாக வும்பரி னிடத்து மற்றைக்
காசினி யிடத்து மாகிக் கலந்துடன் றழுவிச் சென்ற, (கo)

அஞ்சின னமரர் வேந்த னயர்ந்தன னங்கிப் புத்தே
ளெஞ்சினன் வன்மை கூற்ற னினைந்தன னிருதி யெய்த்தான்
றஞ்சமில் வருணன் வாயுத் தளர்ந்தனன் றனதன் சோர்ந்தா
னெஞ்சமிழ்ந் தனனீ சான னிருதர்பே ரரவஞ்சூழ. (கக)

வள்ளுறு மெயிற்றுச் செங்கண் வலிகெழு மவுணர் தானை
வெள்ளம தேகப் பூழி விரிந்தெழீஇ யாண்டும் போகிப்
பொள்ளென மெய்யே தீண்டிப் புறத்தெழி லழித்த வானோ
ருள்ளுணர் வழித்த தன்றே யனையர்க ளார்க்கு மோதை. (கஉ)

பேருமிவ் வவுணர் தானைப் பெருக்கின தணியின் முன்ன
ராரழல் வெருவு சிற்றத் தரிமுகன் செல்லக் கூழை
தாரக விறலோன் செல்லத் தலையளி புரிந்து நாப்பட்
சூரனென் றுரைக்கும் வெய்யோன் றுண்ணென வேகினானால். (கங)

### வேறு.

ஆனபொழு தத்தவர்க் காணிய நினைந்து
தானவர்கள் போற்றுந் தனிக்குரவன் றண்டரள
மானமிசை யூர்ந்து வந்தணுகி வல்லவுணர்
சேனையெனச் செல்லுந் திரைக்கடலைக் கண்ணுற்றான். (௧௪)

கண்ணின்ற வீரர் கடுப்பும் பெருமிடலு
முண்ணின்ற காழ்ப்பு முரனுங் கொடுந்திறலு
மெண்ணங்கொள் வேர்வு மிகலுந் தெரிவுற்றுத
துண்ணென்ன நெஞ்சம் புகருந் துளக்குற்றான். (௧௫)

கண்டே னிவர்தங் கடுந்திறலி னாட்சிதனைப்
பண்டே யவுண ரளப்பிலரைப் பார்த்துணர்வேன்
றண்டே னிதழியான் றன்னருளின் வண்ணமோ
வுண்டே யிவருக் கொருவர்நிக ருற்றாரே. (௧௬)

வானோ ரிறையுடனு மாலுடனு மற்றுள்ள
வேனோ ருடனு மிகலாடி வென்றிடுகை
தானோர் பொருளோ தமையெதிர்ந்த மாற்றலர்த
மூனோ டுயிரை யொருங்குண்ணுந் தீயவர்க்கே. (௧௭)

இன்னோர் தம்வன்மைக் கிறுதி யிலவேனு
முன்னோர் தமைப்போன் முயலுந் தவவலியும்
பின்னோர் வரமும் பெரும்படையுங் கொண்டிலரா
லன்னோ விவர்க்குங் குறையுண்மை யாகியதே. (௧௮)

தண்டத் திறையைக் கடந்த தனியாற்றல்
கொண்டிற் றவற்கே குறைகண் டிலமேனை
யண்டத் தவர்க்கு மனைவர்க்கு மொவ்வொர்குறை
யுண்டத் தகைமை யெவரு முணர்குவரால். (௧௯)

ஆதலினின் னோர்பா லடைவுற் றிடும்வறுமை
போதுசில நோன்பு புரியி னகன்றிடுமா
லீதுநிலைத் தன்றே யிழிந்தோ ருயர்ந்திடுவர்
காதி புதல்வ னிதற்குக் கரியன்றே. (௨௦)

என்னப் பலவு மிசைத்துநின்று தானவர்கண்
மன்னர்க்கு மன்னாக வாழ்வெய்து சூரபன்மன்
முன்னுற் றிடவு முகமன் மொழிந்திடவு
முன்னுற் றனனூ லுணர்வுசேர் காப்பியனே. (௨௧)

தீயின் றிறமுருக்குஞ் சீற்றத் தவுணனெதிர்
போயங் குறவும் புகன்றிடவுந் தானரிதா
லேயுந் தகுவருட னென்னுழையிற் சார்வதற்கோர்
மாயங்கொள் விஞ்சை புரிவேனென மதித்தான். (௨௨)

மண்ணி லுயிரை வசிகரிக்கு மந்திரமொன்
றெண்ணி விதிமுறையே நோக்கி யெதிர்சென்று
நண்ணியவெஞ் சேனை நரலைநடு வட்புக்கா
னண்ண லவுணற் கணித்தா யடைகுற்றான். (௨௩)

கள்ள மிகுமவுணர் சிந்தையெனுங் காழிரும்பா
யுள்ள வுருகி யுரைகெழுமா யதநீயி
னெள்ள வருங்கன்றயு மேகிநயந் திட்டனவால்
வெள்ளிமிகப் புணர்க்கின் மேலையுரு நின்றிடுமோ. (௨௪)

சூழிக் கடலிற றுவன்றுமவு ணப்படைஞர்
காழற்ற புந்தியொடு கைதொழலுங் கேசரிக்கும்
பூழைக் கரன்றனக்கு முன்னைப புரவலன்முன
கேழுற்ற வாசி குரவன் கிளத்திடுவான். (௨௫)

வாலாதி மான்றேர் மகபதிக்கு மேனையர்க்கு
மேலாதி தானவர்கள் வெய்யதுயர் நோயகற்ற
வேலாதி யேகடுக மென்றுரைக்கு மின்மருந்து
போலாதி யென்ன வவுணன் புகன்றிடுவான. (௨௬)

காரையூர் கின்ற கடவுளர்கோன் வைகலுறு
மூரையோ மேலை யுலகுதனி லுள்ளாயோ
பாரையோ கட்செவிகள பாதலத்தை யோவெந்தா
யாரைநீ தேர்ந்தே னிவணுற்ற வாறென்றான். (௨௭)

உன்பா லென்னெஞ்ச முருகு மஃதன்றி
யென்பா னதுமுருகா நிறகு மெனையறியா
தன்பாகி நின்ற தருந்தவத்தை யாற்றவனந்
தன்பா லணுகுதற்குத் தாளுமெழு கின்றிலவே. (௨௮)

நன்னேயம் பூண்டு நடந்தா யுயிரெல்லா
மன்னே யெனவந் தளிக்குந் தகையாயோ
வின்னே யுனையெதிர்ந்தேன் யாக்கை மிகவருந்தி
முன்னே தமியேன் புரிந்ததவ மொய்ம்பனன்றே. (௨௯)

வேறு.

என்றலுங் கவிஞன் கேளா விருவிசும் பாற்றிற் செலவே
னுன்றனி மரபிற் கெல்லா மொருபெருங் குரவ னேனை
யனறிகொள புகரோ னென்னு நாமமுற் றுடையே னினபாற்
சென்றன னுறுதி யொன்று தெளித்திடல் வேண்டி யென்றான். (௩௦)

அவுணர்கண் முதலா யுள்ளோ னங்கது வினவி யாற்ற
வுவகைய னாகி யெந்தா யுய்ந்தன னிவண்யா னென்னாக்
கவிஞனை யணுகி நின்று கைதொழூஉப் பரவ லோடுஞ்
சிவனரு ணெறியா லென்னை னித்திடஞ் செப்ப லுற்றான். (௩௧)

நூன்றொடர் கேள்வி சான்றோய் நோற்றுநீ யிருக்கு மெல்லை
யூறுசெய் கிற்ப ரொன்னா ருனையவை குறுகா வண்ணங்
கூறுதுந் திறனொன் றென்னாக் கூற்றுவற் கடந்த மேலோன்
மாறின்மந் திரமொன்று மரபுளி வழாம லீந்தான். (௩௨)

மொய்கெழு கூற்றை வென்ற முதல்வன்மந் திரத்தை நல்கி
வைகலு மிதனை யுன்னி மனத்தொடு புலனொன் றாக்கிப
பொய்கொலை களவு காமம் புன்மைக ளுறுமே போற்றிச்
செய்குதி தவத்தை யென்னாச் செவியறி வுறுத்தல் செய்தான். (௩௩)

அப்பரி சனைத்தந் தேரா வவனடி வணங்கி யெந்தா
யிப்பணி புரிவ னென்ன வெல்லைதீ ராசி கூறி
மெய்ப்புகர் மீண்டு சென்றான் மேதகு மவுணர் சூழ
வொப்பரு மாயை செம்மல் வடபுலத் தொல்லை போனான். (௩௪)

வழிமுறை பயக்க நோற்கும் வடபுலந் தன்னி லேகிப்
பழுமர வனத்தி லாங்கோர் பாங்கரிற் குறுகிச் சூர
னழல்கெழு மகத்தை யாற்ற வயுதயோ சனையுள் வைத்துச்
செழுமதி லதுசூழ் பான்மை செய்திடச் சிந்தை செய்தான். (௩௫)

அடல்கெழு தானை யாகு மவுணர்தங் குழுவைக் கூவிப்
படிதனி லடுக்கல் யாவும் பறித்தனர் கொணரு வித்து
வடவரை நிவப்பிற் சூழ வாரியாப் புரிவித் தாங்கே
நடுநெடு வாயில போக்கி ஞாயிலு மியற்று வித்தான். (௩௬)

நூற்படு செவ்வி நாடி நொய்தென வங்கட் செய்த
மாற்பெரு மதிலைச் சூழ வரம்பறு தானை தன்னை
யேற்புடை யரண மாக வியற்றுவித் தியாருஞ் செல்ல
நாற்பெருந் திசையி னூடு நலனுற வாய்தல் செய்தான். (௩௭)

பூமியும் வானு மொன்றப் பொருபயி னாற் புரியப் பட்டு
நாமியம் பரிதா நின்ற நாமநீள் காப்பு மப்பா
லேமுறு மவுண வெள்ளத் தெடுத்திடு மெயிலுஞ் சேர்ந்து
நேமியங் கிரியுஞ் சூழ்ந்த நிசியுநேர்ந் திருந்த வன்றே. (௩௮)

ஞாயிலின் வேலி மான நகங்களா லடுக்கல் செய்த
பாயிரு நொச்சி தன்னிற் படைகுலாம் புரிசை தன்னில்
வாயில்க டோறும் போற்ற மந்திர முறையாற் கூவி
நேயமொ டடுபோர் மாதை நிறுவின னிகரி லாதான். (௩௯)

ஆளரி முகத்தன் முன்னோ னடுக்கலாற் படையாற் செய்த
நீளிகல் வாரி முன்னா நெறிகொண் மந்திரத்தாற் கூவிக்
கூளிக டொகையு மோட்டுக் குணங்கரின் றொகையுஞ் சீற்றக்
காளிக டொகையுஞ் சூழ்போய்க் காப்புற நிறுவி விட்டான். (௪0)

கயிரவ மனைய செங்கட் காளிகண் முதலோர் தம்மைச்
செயிரற நிறுவிப் பின்னர்ச் சீர்கொண் மந்திரத்தாற் பண்ணி
யயிரற நெடிது போற்றி யவுணர்கோ னங்கண் வந்த
வயிரவ கணத்தை வேள்வி காத்திட வணங்கி வைத்தான். (௪௧)

வேறு.

தள்ளரி தாகிய காப்பிவை செய்திடு தனிவீர
னுள்ளுற வாயிர வாயிர யோசனை யுறுநீளங்
கொள்வதொ ராழமு மாயிட வோரோம குண்டந்தா
னள்ளிடை யேபுரி வித்தனன் மாமக நலமாக. (௪௨)

ஆதித னக்கனல் வேள்வி யியற்றிட வடுசூரன்
வேதித னைப்புரி வித்திடு காலையில் வியன்ஞாலம்
பாதக ரெம்மை வருத்தின னென்று பதைப்புற்றுப்
பேதுற வெய்தி யிரங்கி யொடுங்கினள் பெயர்வில்லாள். (௪௩)

ஆழம தாயிர யோசனை யாவவ னகழ்செய்கை
யூழுற நாடிய சேடனு மாயிடை யுறைவோருங்
கீழுறு வாரிவ ணெய்துவர் தானவர் கிளேயென்னுத்
தாழுற வேகினர் மூன்னுறு தொன்னிலே தனைநீங்கி. (௪௪)

ஆழ்ந்திட வம்மக வேதி யியற்றலு மதுபோழ்திற்
ருழ்ந்திடு நீத்த மெழுந்திட நாடிய தனிவேந்தன்
சூழ்ந்தனர் நுங்களை யுண்குவா மீதெழ றணிபன்றே
போழ்ந்தனை பாதல மேகென வவ்வழி போகிற்ருல். (௪௫)

போதலு மப்புன லவவழி கீழிடை போகின்ற
பாதல மீறெனு மேழ்நிலே யோரது பாராகின்
றீதிவண் வந்துள தென்னென வற்புத வியலெய்தாப
பேதுறு கின்றனர் நீங்கிது வென்று பிடித்தாராய். (௪௬)

சீறரி மாமுகன் முன்னவ னுகிய திறன்மேலோன்
மாறகல் குண்டம திவவகை நாப்பண் வகுப்பித்தே
நூறுட னெட்டது சூழ்தர வாக்குபு நுவலவேதி
வேறுமொ ராயிர வெட்டவை சுற்ற விதிப்பித்தான். (௪௭)

மூவகை வேதியு மானபின் வேள்வியை முயல்வானு
யாவதொர் பல்பொருள் வேண்டி னினைந்தன வருளயாயைப்
பாவனை பண்ணலு மங்கது கண்டனள் பரிவெய்தித
தேவர்க டேவன தின்னரு ளாவிவை சோவிபபாள. (௪௮)

சீயம் வயப்புலி யாளியொ டெண்கு திறறகைமமாப
பாய்பரி செச்சைக ளாதிய வாகிய பன்மாவின்
றாய புழுக்கலி ஞானவி நேமி தொகுப்பித்தா
ளாய வுடற்குரு திக்கட றன்னையு மமாவிததாள். (௪௯)

பழிதரு மெண்ணெயெ னுங்கட லோரிடை பயிலவிததா
ளிழுதெனும் வாரிதி தானுமொர் சாரி விருப்பிததா
டொழுதகு பாறயிா நேமியு மோரிடை தொகுவித்தாள
வழிதரு மட்டெனும் வேலையு மோரிடை வருவிததாள. (௫௦)

ஐயவி-காருறு நீங்கறி யேமுத லமுல்காலும்
வெய்யன பல்வளன் யாலவயு மோர்புடை மிகுவித்தா
ணெய்யுறு மூண்டியின் மால்வரை யோர்புடை நிறைவிததாண்
மையறு தொல்பசு யாவையு மோர்புடை வருவிததாள. (௫௧)

அரும்பெற லுயக மாகிய வேதியி னகனுப்பண்
வரும்பரி சானிறு வுற்றிட மேலுயர் வடிவாகிப
பெரும்புவி யுண்டிமிழ் கண்ணபி ரான்றுயில பெற்றிததா
யுரம்பெறு வச்சிர கம்பம தொன்றினை யுய்த்திட்டாள். (௫௨)

தெரிதரு செந்நெலின் வால்ரி யோர்புடை செறிவித்தா
ளரிசன நீவிய தண்டுலே மோர்புடை யமைவித்தாண்
மருமலர் மான்மத மாதிய வோர்புடை வருவிததாள்
சருவையு நீடு தருப்பையு யோர்புடை தொகுவித்தாள். (௫௩)

ஆல முயிர்க்கும் வரம்பில தாருவ் வணிகொம்பர்
வாலிதின் மெய்ச்சமி தைக்குல மாமென வரையேபோற்
சால மிகுத்தன ளோர்புடை வேள்வி தனக்கென்றோர்
பாலி னிரைத்தனள் கொள்கல மாகிய படியெல்லாம். (௫௪)

பொன்னி னகந்தொறும் வெள்ளி முளைத்திடு பொருளேபோற்
செந்நெலி னுற்றிடு தீம்பொரி யோர்புடை செறிவித்தே
துன்னிய வெண்முதி ரைக்குல மோர்புடை தூர்த்திட்டாள்
பின்னரும் வேண்டுவ யாவையு நல்கினள் பெருமாயை. (௫௫)

மூவகை யாயிர யோசனை யெல்லையின் முரண்வேள்விக்
காவன நல்கினள் போதலும் யாய்செய லதுநோக்கி
யோவிது யாரின் முடிந்திடும் வேண்டுவ வுய்த்தாளே
யேவரு மெண்ணவிவ் வேள்வி யியற்றுவ னினியென்றான். (௫௬)

ஊன்புகு பல்வகை யாவியு மீண்டிய வுலகெல்லாந்
தான்புகு தன்விறல் காட்டிய நாட்டிய தாணுப்போன்
மேன்புகு சூர னடுத்திகழ் வேதியின் மிகுநாப்பண்
வான்புகு வச்சிர கம்ப நிறீஇயினன் வலிதன்னால். (௫௭)

வச்சிர கம்ப நிறீஇயின பின்னர் மகம்போற்று
நொச்சியி னுற்றிசை வாயி றொறுந்தொறு நொய்திற்போ
யச்சுறு வீர மடந்தையை யுன்னி யருச்சித்துச்
செச்சைக ளாதிய வூன்பலி நல்குபு செல்கின்றான். (௫௮)

வேறு.

செல்லுஞ் சூர னொச்சியி னுப்பட் செறிகின்ற
கல்லென் வெஞ்சொற் பூதர் தொகைக்குங் கணமென்றே
சொல்லும் பேயின் பல்குழு வுக்குஞ் சோர்வின்றி
யொல்லும் பான்மை யூன்பலி யாவையு முதவுற்றான். (௫௯)

சிற்றத் துப்பிற் காளிக ளுக்குந் தென்பாலிற்
கூற்றைக் காயும் வயிரவர் தங்கள் குழுவுக்கு
மேற்றத் தோடு மர்ச்சனை செய்தே யினிதாகப்
போற்றிப் போற்றி யூன்பலி வேண்டின புரிகுற்றான். (௬0)

சூழா மெட்டே யாயிர வேதி தொறுநாப்பட்
காழார் நஞ்சி னிந்தன மிட்டுக் கனன்மூட்டித்
தாழா மேதன் றம்பிய ரோடுந் தகுசூர
னூழா னுடிற் றானவி வர்க்க முறநேர்ந்தான். (௬௧)

நேருந் தோறு மெந்தைத னுமை நெறிசெப்பிச்
சேரு மன்பா லன்னத வன்பாற் செலவுய்த்துச்
சூரன் பின்ன ரிம்மக மாற்றுந் தொழில்வல்லோ
னாரென் றுன்னித் தாரக னைப்பார்த் தறைகின்றான். (௬௨)

ஏற்றஞ் சேரிவ் வேதிக டோறு மிறைதாழா
தூற்றங் கொண்டே யேகினை வேள்வி யுலவாம
லாற்றுந் தன்மை வல்லவ னீயே யதுவல்லே
போற்றிங் கென்னாக் கூறி யிருத்திப் போகுற்றான். (௬௩)

அப்பா லேகி நூறுட னெட்டா மகல்வேதி
துப்பா லெய்தி முன்னவை யேபோற் றொடர்வேள்வி
தப்பா தாற்றிச் சீய முகத்தோன் றனைநோக்கி
யிப்பா லாற்றிம் மாமக மாற்றா யினிதென்றான். (௬௪)

வேறு.

தெரிய வின்னணஞ் செப்பி யவுணர்கோ
னரியின் மாமுகத் தானை யவனிறீஇப
பெரிது நள்ளுறு பெற்றியிற் செய்ததன்
னுரிய வேதியி னெல்லையின் மேவினான். (௬௫)

வேதி யெய்தி விதியுளி யர்ச்சனை
யாது மோர்குறை யின்றி யியற்றியே
மாதொர் பங்குடை வள்ளலை யுன்னியோ
ரேதில் வேள்வி யியற்றுதன் மேயினான். (௬௬)

நஞ்சு பில்கு நவையுடைத் தாருவின்
விஞ்சு சாகை வியன்றுணி யாவையும்
புஞ்ச மோடு பொருக்கென வேதியிற்
றுஞ்சி டும்வகை சூரனுந் தூவினான். (௬௭)

ஆல மாகி யமர்தரு வின்ஞெலி
கோலி னுக்கிய கொந்தழ லிட்டுமுன்
னேல மூட்டி யிழுதெனு மாமழை
சீல மந்திரத் தோடு சிதறினான். (௬௮)

அன்ன தற்பின ரம்பொற் குழிசிக
டுன்னு கின்ற துணிபடு மூன்றாகை
வன்னி யின்கண் மரபினின் றுய்த்தனன்
செந்நி றக்குரு திக்கடல் சிந்தியே. (௬௯)

செய்ய தோர்மகச் செந்தழன் மீமிசைத
துய்ய வோதனஞ் சொன்முறை தூர்த்தன
னெய்யு மெண்ணெயு நீடிய சோரியும்
வெய்ய பாலுந் ததியும் விடுத்துமேல். (௭௦)

மேன சாலியின் வெண்பொரி யின்குவை
யான நல்கி யழிதரு மீற்றினில்
வானு லாய மறிகட லாமெனத
தேனு மாவியுந் தீமிசைச் சிந்தியே. (௭௧)

தோரை யையவனஞ் சூழ்தடத் தாற்றநீ
வார மேன விறுங்கொடு பற்றவு
மூரி யெள்ளு முதிரையின் வாக்கமுஞ்
சேர வுய்த்தன னெய்க்கடல் சிந்தினான். (௭௨)

கொடிய வையவி கூர்தறி யாதியாப்
படியில் வெய்ய பலபொருள் யாவையு
நெடிது மோச்சின னேயம தாகிய
கடலை வன்னி கவிழ்த்தன னென்பவே. (௭௩)

இன்ன பல்வகை யாவு மியல்பினாற்
பொன்னு லாஞ்சடைப் புண்ணியன் றன்னையே
முன்னி வேள்வி முயன்றனன் ஞாலமேற்
றன்னு சீர்த்தியன் சூரபன் மாவென்பான். (௭௪)

வேறு.

சூர னைமவ னவ்வழிப் பெருவளஞ் சுட்டி
வீர வேள்வியை வேட்டலுஞ் செந்தழல் விரைவி
னூரு மச்சுற வெழுந்துமீச் சென்றன வடுதீப்
பாரை நுங்கிவா னுலகெலா முணவெழும் பரிசின். (௭௫)

வானம் புக்கது மாதிரம் புக்கது மலரோன்
றானம் புக்கதெவ் வுலகமும் புக்கது தரைக்கீ
ழேனம் புக்குமுன் னுடருங் கழலினாற் கியற்றுங்
கானம் புக்கதோர் வேள்வியி னெழுங்கொழுங் கனலே. (௭௬)

பானு வின்பதஞ் சுட்டது பனிமதி பதமு
மீனை னும்படி நின்றவர் பதங்களு மேலோர்
போன மேக்குயர் பதங்களுஞ் சுட்டது புலவோர்
கோனு றும்பதஞ் சுட்டது வேள்வியிற் கொடுந்தீ. (௭௭)

செற்று வாசவன் பதந்தனைச் சுட்டபின் சேண்போய்
மற்றை மேலவர் பதமெலாஞ் சுட்டது மருங்கிற்
சுற்று பாலர்தம் புரங்களுஞ் சுட்டது சூர
னற்ற மில்வகை யாற்றிய வேள்வியு ளனலே. (௭௮)

கால மெண்ணில தவம்புரி காசிப முனிவன்
பால னீண்டையில் வலியினோர் மகமது பயில
வேல நீடுதீ யுலகெலா முருக்கிய தென்னின்
மேல வன்செயும் பரிசெலாம் யாவரே விதிப்பார். (௭௯)

கார்ம றைத்தன கதிர்மதி மறைத்தன கரியோ
னூர்ம றைத்தன வயன்பத மறைத்தன வுலவா
நீர்ம றைத்தன நெருப்பையு மறைத்தன நீடும்
பார்ம றைத்தன விடையிடை யெழும்புகைப் படலே. (௮௰)

சொற்ற வேதியிவ் வியற்கையா லெரிந்தது சூரன்
பிற்றை யோர்கட மெட்டுநூ றாயிர பேத
முற்ற வேதிகள் யாவையு மெரிந்தன வொருங்கே
முற்றும் வன்னிக ளிறுதிநா ளுலகின்மொய்த் தெனவே. (௮௧)

வேள்வி யித்திறஞ் சூர்புரி தன்மையை விரைவிற்
கேள்வி யாலுண ரிந்திர னச்செயற் கேடு
சூழ நாடினன் முடிப்பருந் தன்மையிற் றுளங்கி
யாழ்வ தோர்துயர்க் கடலிடை யழுந்தின னயர்ந்தே. (௮௨)

சூன்மு கக்கொண்டன் மேனியு முனிவரர் தொகையு
நான்மு கத்தனுஞ் சூரபன் மன்செய னுடிப்
பான்மை மற்றிது யாவரே புரிவரிப் பதகன்
மேன்மை பெற்றிட முயன்றனன் கொல்லென வெருண்டார். ()

இந்த வண்ணத்தி னொருபதி னாயிரம் யாண்டு
முந்து சூர்தன தினைனோ டருமக முயல
வந்தி வார்சடைக் கண்ணுத னின்மல னவன்பால்
வந்தி லானது தேர்ந்தன னிருதர்கோன் மாதோ. (௮௪)

கண்ணு தற்பர னருள்செயாத் தன்மையைக் கருத்தி
லெண்ணி யிச்செயற் குறுவனே சிவனென விசையாப்
பண்ணு மத்தொழில் பின்னவர் தங்கள்பாற் பணித்து
விண்ண கத்தின்மீச் சென்றனன் கடவுளர் வெருவ. (௮௫)

வான கத்திடை நிற்புறு சூரபன் மாவாந்
தான வர்க்கிறை வாள்கொடே யீர்ந்துதன் மெய்யி
னூன னைத்தையு மங்கிமே லவியென வோச்சிச்
சோனை யொத்ததன் குருதியை யிழுதெனச் சொரிந்தான். (௮௬)

சோரி நெய்யவா வூன்களே யவியவாச் சூரன்
வீர மாமகம் புரிவுழித் தனதுமெய்ம் மிசையூ
னீர வீரவே முன்னையின் வளர்தலு மிதுகண்
டாரு மச்சுறத் தெழித்தனன் விம்மித மானான். (௮௭)

சிந்தை யிற்பெரு மகிழ்ச்சிய னாகியிச் செய்கை
யெந்தை யற்புறு நிலையதோ வெனமனத் தெண்ணா
மந்த ரப்புய நிருதர்கோன் பின்னுமம் மரபா
லந்த ரத்திடைத் தசைப்பெரு வேள்வியை யயர்ந்தான். (௮௮)

ஆண்டொ ராயிர மிம்மக மந்தரத் தியற்ற
நீண்ட மாலுட னான்முகன் றேடரு நிமல
னாண்டும் வந்திலன் சூரனத் தன்மைகண் டுழுங்கி
மாண்டு போவதே யினிக்கட னெனமனம் வலித்தான். (௮௯)

உன்னி யித்திறஞ் சூரபன் மாவெனு மொருவன்
வன்னி சுற்றிய வாதிகுண் டத்திடை வதிந்து
செந்நி றத்ததா யாணையா லங்கியிற் சிதையாக்
கொன்னு னைத்தலை வச்சிர கம்பமேற் குதித்தான். (௯0)

கடிதி னுச்சியின் றுருவியே வச்சிர கம்பத்
தடித னிற்சென்று சூரபன் மாவெனு மவுணன்
படிவ முற்றுநுண் டுகளுற வுளம்பதை பதைத்து
முடிய மற்றது கண்டனன் மடங்கன்மா முகத்தோன். (௯௧)

கண்ட காலையி னுளம்பதை பதைத்தது கண்கண்
மண்டு சோரிநீர் கான்றன கரங்களும் வாயுங்
குண்ட வேள்வியிற் றொழின்மறந் திட்டன குறிப்போ
ருண்டு போலுமென் றையுற வொதுங்கிய துயிரே. (௯௨)

துயர்ப்பெ ருங்கட லடுவுற வாழ்ந்துதொல் லுணர்ச்சி
யயர்த்து மால்வரை யாமென மறிந்தன னறிவு
பெயர்த்தும் வந்துழிப் பதைபதைத் தலமந்து பெரிது
முயிர்த்து வாய்திறந் தன்னவன் புலம்புத லுற்றான். (௯௩)

வேறு.

மாயை தரும்புதல்வா மாதவஞ்செய் காசிபற்கு
நேய முருகா நிருதர் குலத்திறைவா
காயமுட னின்னையான் காணு லெங்கொளித்தாய்
தீயமகம் பலநாட் செய்துபெற்ற பேறிதுவோ. (௯௪)

தாயுந் தலையளிக்குந் தந்தையுநீ தானவரை
யாயுந் தலைவனுநீ யாவியுநீ யென்றிருந்தோ
நீயங் கதனை நினையா திறந்தனையே
மாயுஞ் சிறியோர்க்கு மற்றிங்கோர் பற்றுண்டோ. (௯௫)

வீரனே தானவர்க்குண் மிக்கோனே மிக்கபுகழ்ச்
சூரனே நின்போற் றொடங்கியிந்த வேள்விதனை
யாரனே கம்வைக லாற்றினா ராறறியநீ
யீரநே யங்கொள்ளா தெம்மையகன் றேகினையே. (௯௬)

நின்க ணருளில்லா நீர்மையுண ராய்பன்னாட்
புன்க ணுறுவாய் புரமூன்று முன்னெரித்த
வன்க ணரைக்குறித்தே மாமகஞ்செய் தாயதற்கோ
வுன்க ணுளதா முயிர்தனையுங் கொண்டனரே. (௯௭)

உன்போ லுயிர்விட் டியாமகஞ்செய் தோருமரன்
றன்போ லருளாத் தகைமையரு மாங்கவைகண்
டென்போ லுயிர்கொண் டிருந்தோரு மில்லிவருள்
வன்போ டியமனத்து வன்கண்ண ராரையா. (௯௮)

ஈச னருளா லெரிவேள் வியையோம்பிப்
பேசரிய வன்மைதனைப் பெற்று நமதுயிரு
மாசில் வளனு மகற்றுவரென் றேயயர்ந்த
வாசவனு மின்றோ மனக்கவலை தீர்ந்ததுவே. (௯௯)

எல்லாரும் போற்ற வெரிவேள் வியையோம்பிப்
பல்லா யிரநாட் பழுகி யெமக்குமிது
சொல்லா திறந்தாய் துணைவராய் நம்முடனே
செல்லா ரிவரென்று சிந்தைதனிற் கொண்டனையோ. (௪௦௦)

கண்டாருங் காண வெரியினிடைத் தம்பமிசை
விண்டா யுயிர்போய் விளிந்தாய் மிகும்வன்கண்
பூண்டாய் நின்மெய்யு மொளித்தாய் புலம்புமியா
மாண்டாலு முன்றன் மதிவதனங் காண்போமோ. (௪௦௧)

என்றின் னனசொற் றிரங்கி யரிமுகத்தோன்
முன்றன்னை நல்கி முலையளிக்குந் தாய்காணுக்
கன்றென்ன வீழ்ந்தழுங்கக் கண்டதனைத் தாரகனுங்
குன்றென்னத் தன்கை குலைத்தரற்றி வீழ்ந்தனனே. (௪௦௨)

வீழ்ந்தா னுயிர்த்தானவ் வேள்விக் களமுற்றுஞ்
சூழ்ந்தான் புரண்டான் றனைக்கையி னுணிலத்தைப்
போழ்ந்தா னனைவே புடைத்தான் றுயர்க்கடலு
ளாழ்ந்தான் விண்ணஞ்ச வரற்றினான் சூரகனே. (௪௦௩)

சிங்க முகனுந் திறல்கெழுவு தாரகனுந்
தங்கண் முதல்வன் றவற்றுற்று நோக்கி
யங்க ணரற்ற வதுகண்ட தானவர்கள்
பொங்குங் கடல்போற் பொருமிப் புலம்பினரே. (௧0௪)

தாரகனுஞ் சீயத் தனிவீ ரனுமவுண
ராரு நெடிதே யரற்று மொலிகேளாச்
சீரில் வியனுலகிற் றேவர்கோன் றன்னொற்றுற்
சூரன் மகதநீயிற் றுஞ்சு செயலுணர்ந்தான. (௧0௫)

தண்டா ரகலச் சதமகத்தோன் றூனவர்கோன்
விண்டா னெனவே விளம்பு மொழிகேளா
வண்டா மகிழ்ச்சியெனு மார்கலியிற் பேரமுத
முண்டா னெனவேத னுள்ளங் குளிர்ந்தனனே. (௧0௬)

சிந்தை குளிர்ந்து செறியுமுரோ மஞ்சிலிர்த்து
முந்து துயர முழுதுந் தொலைதெழுந்து
வந்து புடைசூழும் வானோ ருடன்கடவுட்
டந்தி மிசையெய்தித் தனதுலக நீங்கினனே. (௧0௭)

பொன்னுலக நீங்கிப் புரைதீர் மதிக்கடவு
டன்னுலக நீங்கித் தபனன் பதங்கடந்து
துன்னு மவுணர் துயருஞ் செயல்காண்பான்
மின்னுலவு மேக வியன்பதத்தில் வந்தனனே. (௧0௮)

விண்ணோடா தங்களுடன் வேள்விக் கிறைவிசும்பி
னண்ணு மகிழா நகையாத்தன் னற்றவத்தை
யெண்ணு வியவா விரங்கு மவுணர்தமைக்
கண்ணார நோக்கிக் களிபபுற்று நின்றனனே. (௧0௯)

நின்ற தொருகாலை நிருத ருடனரற்றித்
துன்று துயர்சூழ்கிச சோாகின்ற சீயமுக
னன்றெ னுயிர்போக நானிருப்ப தேயிங்ஙு
னென்று கடிதுமனத் தெண்ணி யெழுந்தனனே. (௧௧0)

அன்ன திறலவுண னயிரமென் றுள்ளவகன்
சென்னிபல வுந்தனது செங்கைவா ளாலீர்ந்து
முன்ன முதல்வன் முயன்ற பெருவேள்வி
வன்னி யதனுண் மறம்பேசி யிட்டனனே. (௧௧௧)

ஈர்ந்து தலைக ளெரியி லிடுமுன்னர்ச்
சேர்ந்த வனையான் சிரங்க ளவைமுழுதும்
பேர்ந்து புரிந்து பிறங்கு தழலினிடை
நேர்ந்து தனிநின்று னிருதர்க் கிறையோனே. (௧௧௨)

முன்னோ னெழுந்து முயலுஞ் செயனோக்கிப்
பின்னோன் றனது பெருஞ்சிரமுந் தானகொய்து
மன்னோன் மகமியற்றும் வான்றழலி னுள்ளிட்டா
னன்னோ வெனவே யவுணர் குழுவிரங்க. (௧௧௩)

சென்னி தனையரிந்து செந்தழலி னுப்பணிடு
முன்ன மதுபோல வேறே முளைத்தெழலும்
பின்னு மனையானைப் பெற்றிதனை யேபுரிய
வன்ன படிகண்ட வவுணர் தமிற்சிலரே. (கக௪)

தங்கள் சிரமுந் தனிவாளி னுற்றுணியா
வங்கி மிசையிட்டு மதன்க ணுறவீழ்ந்து
மங்கி யுயிரதனை மாற்றிடலுஞ் சூரன்போற்
சிங்க முகனுமெரி செல்லத் துணிந்தனனே. (ககரு)

மோனத்தின் வேள்வி முயன்றதொரு முன்னவன்போல்
வானத் தெழுவான் வலித்துமனங் கொண்டிடலுங்
கானக் கடுக்கை கலைமதிசேர் செய்யசடை
ஞானப் பொடிபுனையு நாதனது கண்டனனே. (ககசு)

ஆகத்திருவிருத்தம் - ௬௪௩.

---

வசனம்.

தாயின் கட்டளைப்படியே யாகஞ்செய்யக் கருதிச்சென்ற சூரபன்மன் தன் தம்பிமார் முகத்தைப்பார்த்து, நாம் வேள்வி செய்யும்பொருட்டு வடதிசை நோக்கிச் செல்லும்போது, நமது படையின் நெற்றியில் ஒருவனும் இறுதியில் ஒருவனுமாக நீங்களிருவரும் நிற்கவேண்டும், என்று கட்டளையிட அவ்வாறே தாரகன் அந்தப்படையின் கடையினும், சிங்கமுகன் அதன் நெற்றியினும் நின்றார்கள், சேனையும் அவர்களுடைய கட்டளைப்படியே நடந்துபோயிற்று; இவ்வாறு அவுணவெள்ளம் பூமியிற் பரந்து செல்லுதலும், பூதேவி ஆற்றமாட்டாமல் வருந்தினாள், அஷ்டநாகங்களும் ஆதிசேடனும் மனமுளைந்து வருந்த நேரிட்டது, மேருமலையும் அஷ்டகுலகிரிகளும் நடுங்கின. அப்படைகள் செல்லும் வழியிலுள்ள மரங்கள் மலைகள் முதலானவைகள் தூளாயின. இந்த அவுணப்படையி னொலியும் இவர்கள் படர்ந்து செல்வதனாலுண்டாகிய புழுதியும் மேலெழக்கண்ட தேவர்கள் பயந்து, பிரமகற்பம் முடிந்துவிட்டதோ வென்றெண்ணினார்கள்; இந்தப்படை செல்லும் ஆரவாரத்தைக்கண்ட திக்குப்பாலகர் பட்டபாடு சொல்லி முடியாது; இவ்வாறு அந்தப்படை வகுப்பின் முற்பக்கத்தில் சிங்கமுகனும் பிற்பக்கத்தில் தாரகனும், நடுவே சூரபன்மனும் வர, அப்படை விரைந்து சென்றது.

இவ்வாறு செல்லும்பொழுது, சுக்கிரபகவான் பார்த்து, இதுவரையும் அநேகமாயிரம் போர்ப்படைகளைப் பார்த்திருக்கிறேன். ஆயினும் இந்தப்படைகளைப்போல எங்குங்கண்டதில்லை; இப்போர்வீரருக்குச் சமானமாவார் உலகத்தில் ஒருவருமில்லையென்று பலவாறு தம்முள்ளத்தில் ஆலோசித்து, சூரபன்மனுக் கெதிரேவந்து ஆசிகூறிநிற்கவெண்ணி, இவனெதிரே போய்ச்சேர்தலும் அரிதாயிருக்கின்றதேயென வொருமாயவித்தை செய்யத்துணிந்து பூமியிலுள்ள வுயிர்களை வசீகரித்தற்குரிய வொரு மந்திரத்தை யுச்சரித்து அந்தச் சேனா சமுத்திரத்தி னிடையேசென்று சூரபன்மனுக்கெதிரே நின்றார், அந்த அவுணவெள்ளமும் சுக்கிர பகவானை வணங்கி

நின்றது, சுக்ரபகவான் சூரபன்மனை ஆசிர்வதித்து நீ இந்திரனுக்கும் மேற்படச் செல்வம்பெற்று வாழக்கடவை யென்று வாழ்த்தினர். அப்பொழுது சூரபன்மன் சுக்கிர பகவானைநோக்கி, சுவாமி! தேவரீர் விண்ணுலகத்திருப்பவரோ, மண்ணுலகத்திருப்பவரோ, பாதாளலோகத்திருப்பவரோ, நீர் இன்னாரென்றெனக் கறிவுறுத்த வேண்டுமென்று வணங்கிநின்றான், அதைக்கேட்ட சுக்ரபகவான் சூரனை நோக்கி, அய்யா! நான் உங்கள் குலகுரு, உனக்கோருறுதி வார்த்தை சொல்லவந்தேன். அஃதாவது உனக்குப்பகைவராகிய தேவர்கள் உனக்குத்தீங்கு செய்யாதபடி உனக்கு மிருத்துயுஞ்சயமந்திரத்தை உபதேசிக்கிறேன், அதுபெற்றுக்கொண்டு நீ தவஞ்செய்யக் கடவையென்று சொல்ல அவ்வாறே சூரபன்மன் பெற்றுக்கொண்டு வடதிசை நோக்கித் தவஞ்செய்யச்சென்றான்; இவ்வாறு வடதிசை நோக்கிச் சென்ற சூரபன்மன் ஆலமரச் சோலையொன்றை யடைந்து, அவ்விடத்தில் தன் படைகளையும் காளி முதலானவர்களையும் வைரவ கணத்தையும் தன் வேள்வியைக் காக்கும்படி யேற்படுத்தித் தான் யாகஞ்செய்யலாயினன்; இது நிற்க.

சிவபிரானை நோக்கி அனல்வேள்வி செய்யக்கருதி, ஆயிரம்யோசனை நீளமும் ஆயிரம் யோசனை ஆழமுமுள்ள வேள்விக்குண்டஞ்சமைத்துநிற்கக் கண்ட பூமி தேவியானவள் இந்தப்பாவிகள் என்னை யிப்படியிகழ்ந்து வருத்துகிறார்களே, எனக்குப்புடைபெயரு [illegible]யுமில்லையேயென்று வருந்தினாள். பூமியைச்சுமந்து கொண்டிருக்கிற அ[illegible]சகிய பாதாள லோகத்தாரும். நம்மளவும் வந்து வருத்துவார்களோ[illegible]கலங்கித் தாங்களிருக்கு மிருக்கையை நீங்கி அதினும் கீழேயுள்ள [illegible] பாய்ச் சோர்ந்தார்கள். இப்படியாவரும் வியக்கும்படி ஓமகுண்டம வேதி[illegible] முதலானவை யமைத்தபின்னே அவ்வேள்விக்குரிய பல பொருள்களையுங் குறி[illegible]தனை தாயைநினைக்க, அவள் அதற்குவேண்டிய பொருள்களெல்லாம் அமைத்[illegible]ட்டுப் போனபிறகு, சூரபன்மன் யூபஸ்தம்பம் நாட்டி, மதிலின் நான்கு வாயில்களிலும் துர்க்கை பூதகணம் பேய்க்கணம் காளிகூட்டம் வயிரவகணம் ஆகிய எல்லாக்கும அவரவர்க்குரிய மாமிச பலிகொடுத்துக் காவல் செய்யும்படி யேற்படுத்திவிட்டான். இவ்வாறு ஆயிரத்தெட்டு வேள்விக்குண்டங்களிலும் நஞ்சுவிறகிட்டுத் தீமூட்டி, இறைவன் திருநாமத்தை யுச்சரித்து, தாரகனையும் சிங்கமுகனையும் நோக்கி இந்த வேள்வியை நீங்களிருவரும் ஊக்கத்தோடிருந்து நிரவகித்து வரவேண்டுமென்று கட்டளையிட்டு நிறுத்திவிட்டு, நடுவேயிருந்த பெரிய வேதியையடைந்து மந்திர சகிதமாய் அருச்சித்து, எட்டிக்கொம்பாகிய திக்கடை கோலாலுண்டாக்கப்பட்ட நெருப்பு கொழுந்துவிட்டெரிய நெய்ம்மழை பெய்து, அதனோடு மாமிசகண்டங்களை மிகப்பெய்து உதிரக்கடல் பாய்ச்சி, செந்நெற் சோறுதூர்த்து, நெய் எண்ணெய் பால் தயிர் முதலியவற்றைச் சொரிந்து வெண்பொரி சிதறி, மேலும் செய்யவேண்டிய கடமையெல்லாஞ் செய்து முடித்தான்.

இப்படி அவ்வேள்வியை யாதொரு குறையுமின்றிப் பதினாயிரம் வருஷம் செய்து கொண்டிருந்தும், பரமசிவன் இவனுக்கிரங்கி யெழுந்தருளாமையைக் கண்டு, ஆகாயத்தில் தாவி, தன்கையிலுள்ள வாளினால் தன்னுடம்பிலுள்ள தசை முழுதும் சிதைத்து அவ்வேள்வித்தீயில் ஆகுதியாகப் பெய்து, தன் உதிரத்தையும் நெய்யாகச் சொரிந்தான், இப்படி வீரயாகஞ் செய்துவர, தனது உடம்பானது குறையாதுவளரக்கண்டு சூரபன்மன் மிகவும் மனமகிழ்ந்தான். அப்பொழுதும் சிவபிரான் எழுந்தருளவில்லை, அதுகண்ட சூரபன்மன் இனியான் மாண

டொழிவதே நன்மையென்று நினைத்து யாககுண்டத்தினுள்ள வச்சிர கம்பத்திற் குதித்துமாண்டான். அதுகண்ட சிங்கமுகன் தாரகன் என்னு மிரண்டு தம்பிமாரும் மிகுதியாய்த் துக்கித்துப் புலம்பித் தெளிந்தெழுந்து, தந்தமையன் செய்து வந்தாற்போலத் தாமும் அவ்வாறே அவ்வீரமாமகத்தைச் செய்துவந்தனர். இறுதியில் சிங்கமுகனும் அத்தீயில் வீழ்ந்திறக்கத் துணிந்ததைச் சிவபெருமான்கண்டனர்.

அசுரயாகப்படலம் முற்றிற்று.

---

## வரம்பெறுபடலம்.

கண்ட கறைமிடற்றுக் கண்ணுதலோன் சுந்தரனை
விண்டு முகமலரா வியப்பவே வெண்ணையிலாட்
கொண்டதொரு பனவக் கோலந் தனைத்தரித்துத்
தண்டுமொருகை தனிலூன்றி வந்தனனே. (௧)

அங்கண் மகவேதி யணித்தாக வேகுறுகிச்
சிங்க முகனைச் சிவபெருமான் கண்ணுற்றே
யிங்கு மிகநீ ரெவரு மிரங்குகின்றீர்
றுங்கள் பரிசு நுவலு மெனமொழிந்தான். (௨)

எந்தை பெருமா னியம்ப வதுநாடித்
தந்தை யனையார் தமியேந் துயர்கண்டு
வந்து வினவுகின்றார் மறறிங் கிவரருள்சேர்
சிந்தையின ரென்று சீயமுக னுன்னினனே. (௩)

உன்னி யமல னுகள மலர்ப்பதமேற்
சென்னி பலவுஞ் செறியப் பணிந்தெழுந்தெம்
மின்னல் வருவாயு மெமது வரன்முறையும்
பன்னி யிடுவ னெனவே பகர்கின்றான். (௪)

வேறு.

தந்தை யாவான் காசிபனே தாயு மாயை தானென்பா
ணைந்தர் யாங்க ளொருமூவர் மக்கள் பின்னும் பலருண்டா
லெந்த மன்னை பணிதன்று லியாங்க ளீசன் றனக்காக
விந்த வனத்தின் மூவருமிவ் வேள்வி தன்னை யியற்றினமே. (௫)

அந்தப்புரிசே யாண்டுபல வகல மகத்தை யாற்றிடவுங்
கங்கைச் சடையோன் முன்னின்று கருணை சிறிதுஞ் செய்திலனு
லெங்கட் கெல்லா முன்னவனு மிகல்வெஞ் சூர னதுநாடி
மங்குற் செறியும் வானிற்போய் வாளாற் றசையீர்ந் திட்டனனே. (௬)

மின்போ லிலங்கும் வாளாற்றன் மெய்யிற்றசைகளீர்ந்துளத்திற்
றுன்பா ரிறையு மில்லாத சூரன் மகத்தீ மிசையிட்டு
முன்போற் றன்னூன் வளர்ந்திடவே பின்னு மதீதே முயன்றதற்பின்
றன்போ லொளிர்வச் சிரகம்பத் தலைவீழ்ந் தருகிக் குழல்புக்கான். (௭)

புக்கு முன்னே னீறாகிப் போந்த காலை யாங்கண்டு
மிக்க மனத்திற் றுயர்கொண்டு வெருவிப் புலம்பி யெமதுயிரு
மொக்க விடவே நினைந்தேமா லும்மைக் கண்டோ ரின்றதாழ்ந்தோந்
தக்க திதுகம் வரன்முறையுந் தமியேந் துயரு மெனமொழிந்தான். (௮)

மொழிந்த காலை யங்கணின்ற முக்க ணிறைநும் முன்னோன்போ
லொழிந்து நீரு மாயாதே யுமது சூரன் றனையின்னே
யழிந்த தீயு ணின்றெழுவித் தருள்செய் கின்ற மதுகாண்டிர்
கழிந்த சோகம் விடுதிரெனக் கங்கை தன்னை நினைந்தனனே. (௯)

முன்னு ளம்மை யங்குலியின் முளைத்த கங்கை தனிலெங்கோன்
மின்னார் சடையிற் கரந்தனவே யன்றி மகவான் விரிஞ்சன்மா
லென்ன நின்ற மும்மையினோ ரிருக்கை தோறு மளிதவற்றுட்
பொன்னாட் டிருந்த நதிதன்னைப் புந்தி மீதி லுன்னினனே. (௧௦)

மாயோன் றன்பான் முற்கொண்ட வலிசேர் தண்ட மேந்திவரு
தூயோ னுன்ன வக்கங்கை துண்ணென் றுணர்ந்து துளங்கிவிண்ணோ
ராயோ ரெவரும் வெருக்கொள்ள வளப்பின் முகங்கொண் டார்த்தெழுந்து
சேயோ ரெல்லா மணித்தாகத் திசையோ ரஞ்சச் சென்றதுவே. (௧௧)

மேலா கியவிண் ணுலகனைத்தும் விரைவிற் கடந்து மேதினியின்
பாலா யெங்கள் பிரான்பதங்கள் பணிந்து பணியாற் படர்செந்தீ
யேலா நின்ற நடுக்குண்டத் திடையே புகலு மெறிகடல்வா
யாலா லம்வந் துதித்ததென வவுணர் கோமா னார்த்தெழுந்தான். (௧௨)

தொன்மை போல வேதியினிற் சூர பன்மாத் தோன்றலுமத்
தன்மை கண்ட வரிமுகனுந் தார கப்பேர் வீரனுமா
யின்மை கொண்டோர் பெருவளம்பெற் றென்ன மகிழ்வுற் றெல்லையிலா
வன்மை யெய்திக் கடிதோடி மன்னன் பதமேல் வணங்கினரே. (௧௩)

தங்கோன் றன்னைப் பின்னோர்க டாமுஞ் செயலைத் தானவர்கண்
டெங்கோன் வந்தான் வந்தானென் றெவருங் கேட்ப வெடுத்தியம்பிப்
பொங்கோ தஞ்சேர் கடன்மதியப் புத்தேள் வரவு கண்டதென
வங்கோ தையினால் வாழியவென் றவனைப் போற்றி யார்த்தனரே. (௧௪)

எண்மேற் கொண்ட கிருதர்குழா மேத்த வெரிநின் றெழுசூரன்
மண்மேற் கொண்ட திறங்காணூஉ வானோர் தொகையு மகபதியும்
விண்மேற் கொண்ட புயல்கண்ட வியன்கோ கிலம்போல் வெருவித்தம்
முண்மேற் கொண்ட செல்லலொடு போடித் தம்மூ ருற்றனரே. (௧௫)

வேறு.

அரந்தைதனை மிகந்தவிரு துணைவர்களும் பாங்கருற வவுணர் சேனை
பரந்துபல வாழ்த்தெடுப்பச் சூரபன்மன் றிகழ்வேலைப் படியும் வானு
நிரந்தபுனற் கங்கைதனை வருவித்த மறையவன்போ னின்ற வெம்மான்
கரந்துதனை யுணர்கின்ற வுருவினொடு தோன்றினாற் ககன மீதே. (௧௬)

நாரிபா கமுமிமையா முக்கண்ணுந் திருபுயங்க ணான்கு மாகி
மூரிமால்விடைமேல்கொண் டெம்பெருமான்மேவுதலுமுன்னிநோக்கிப்
பாரின்மீ மிசைவீழ்ந்து பணிந்தெழுந்து பலமுறையும் பரவிப் போற்றிச்
சூர னாதபெரு மகிழ்சிறந்து துணைவரொடுந் தொழுது நின்றான். (௧௭)

இன்றுபுகழ் சூரபன்மன் முகநோக்கி நகையுன்னி நெடிது காலம்
வன்றிறன்மாமகமாற்றியெய்த்தனையால்வேண்டுவதென்வகுத்தியென்னப்
பொன்றிகழு மலர்க்கமலப் பொகுட்டுறைவோன் முதலியபுத் தேளிர் யாரு
மின்றெமதுதலைமையெலாம்போயிற்றாலெனவிரங்கவிதனைச்சொல்வான்.

கொன்னூரும் புவிப்பாலாய்ப் பலபுவனங் கொண்டவண்டக் குழூவுக் கெல்லா
மன்னாகி யுறல்வேண்டு மவைகாக்குந் தனியாழி வரலும் வேண்டு
முன்னாமு னவையனைத்துஞ் செல்லுவதற் கூர்திகளு முதவல் வேண்டு
மெந்நாளு மழியாம லிருக்கின்ற மேனியுமெற் கீதல் வேண்டும். (௧௯)

அலையாழி மிசைத்துயில்கூர் பண்ணவனே முதலோர்க ளமர்செய் தாலு
முலையாது கடந்திடுபே ராற்றலொடும் பலபடையு முதவல் வேண்டுந்
தொலையாமேயென்ஞான்றுமிருந்திடலும்வேண்டுமெனச்சூரன்வேண்டக
கலைபார்வெண் மதிமிலைச்சுஞ் செஞ்சடிலத் தனிக்கடவுள் கருணை செய்வான்.

மண்டனக்கா யிரங்கோடி யண்டங்க ளுளவாகு மற்றவற்று
ளெண்டமோ ராயிரத்தெட் டுகநூற்றெட் டாள்கவென வருளா னல்கி
யெண்டொகைபெற்றிடுகின்றவவ்வண்டப்பரப்பெங்குமேகும்வண்ணந்
திண்டிறலபெற் றிடுகின்ற விந்திரஞா லமதென்னுந் தேரு நல்கி. (௨௧)

எண்ணுபல புவனங்கள் கொணடவணடத் தொகைதன்னை யென்றும் போற்றக
கண்ணனது நேமியினும் வலிபெறுமோ ரடலாழி கடிதி னல்கி
யண்ணலுறு சினவேற்றுக் கோளரியூர் தியுநல்கி யகிலத் துள்ள
விண்ணவர்கள யாவருக்கு மன்றுமுதன் முதல்வனு மேன்மை நல்கி ()

மேற்றிகழும் வானவரைத் தானவரை யேனவரை வெற்றி கொள்ளு
மாற்றலொடு பெருந்திறலும் பாசுபத மாபபடை [illegible] யாகித
தோற்றமுறு கின்றதெய்வப் படையனைத்து [illegible] ராலாந்திடாம
லேற்றமிகும் வச்சிரமா கியமணிமே னியுமுதவ [illegible] னா. (௨௩)

ஆறுசேர் கங்கைதனை விண்ணுலகு தனிமேலவி யகத் [illegible]
கூறுசேர்பெருவேள்விச்செந்தழற்குந்தோற்றமெய்தி [illegible] நலவும்வண்ணம
வீறுசேர் பெருங்கடல்போ லொருபதினு யிரங்கோடி வெள்ள மாகுந்
தாறுபாய் கரிதிண்டோ வயப்புரவி யவுணரெனுந் தானை நலகி. (௨௪)

வேறு.

துன்னுறு பெருமபுகழ்ச சூர பன்மனுக்
கின்னதோ ரருளபுரிந் திட்ட வெல்லையி
னன்னவற் கிளைஞரவந் தடிப ணிந்தெழுத
தனனிக ரில்லதோர் தலைவன் கூறுவான். (௨௫)

வேறு.

சூர னென்பவன் றுணையை போலவே
வீர மெய்தி விளங்கிநூற் றெட்டுகஞ்
சீரின் மேவுதிர் தேவர்கள் யாரையும்
போரில் வென்று புறந்தரக் காண்டிரால். (௨௬)

தேவர் யாவருஞ் சென்று தொழப்படு
மூவ ராகி மொழிந்திடு துங்களைத்
தாவி லாதநஞ் சத்தியொன் றேயலா
லேவர் வெல்பவ ரென்று விளம்பிமேல். (௨௭)

ஈறு றூத விரதமுந் தன்பெயர்
கூறு தெய்வப் படையுங் கொடுத்திடா
வேறு வேறு மிகவருள் செய்தமே
லாறு சேர்சடை யாண்டகை யேகினன். (உஅ)

ஆ திருவிருத்தம சுஎக.

---

வசனம்.

அப்படி சிங்கமுகன் இறக்கத் துணிந்த செய்தியை யறிந்த சிவபெருமான், திருவெண்ணெய் நல்லூரில் சுந்தரமூர்த்திசுவாமிகளைத் தடுத்தாட்கொள்ளவந்த விருத்தவேதியன்போல வடிவங்கொண்டு அந்த யாகசாலையையடைந்து சிங்கமுகாசுரனைநோக்கி, நீங்கள் வருந்துவதற்குக் காரணமென்ன வென்றுகேட்க, அவனும் மேலே நடந்தவரலாறு முழுதுஞ்சொல்லுதலும், இறைவன் அவனைநோக்கி, நீ உன் தமையன்போ லிறக்கவேண்டாம், அவனை யெழுப்பித் தருகின்றேம, என்று சொல்லிக் கங்கையை நினைத்தலும் அது விண்ணுலகத்தைவிட்டுவந்து அந்தயாக குண்டங்களில் நடுக்குண்டத்தை யடைந்தது. அடைதலும் அதினின்றும் சூரபன்மன் வெளிப்பட்டான். அவன் உயிர்பெற்றெழுந்ததைக் கண்ட சிங்கமுகன் தாரகன் முதலியோர் பெருங்களிப்பை யடைந்தார்கள். இந்திரன் முதலிய தேவர்கள் பெருந்துயர மெய்தினார்கள்.

இப்படியிருக்கையில், இறைவன் விருத்தப் பிராமணவடிவ மறைத்துத் தன் சுயரூபங்கொண் டெழுந்தருளுதலும், சூரபன்மனும் அவன்தம்பிமாருங்கண்டு பெருமகிழ்வோடு வாழ்த்திவணங்கினார்கள். அப்பொழுது சிவபிரான், சூரபன்மனை நோக்கி, உனக்குவேண்டுவதென்ன, சொல்லென்றுகேட்க, அவன் நான் எல்லா அண்டங்களுக்கும் அரசனாகவும், அவற்றையெல்லாம் ஒரு நொடிப்பொழுதில் போய்ப்பார்த்து வருதற்குரிய வாகனங்களைப்பெறவும், வச்சிரதேகத்தைப்பெறவும் வேணடுகின்றேன். இறைவனே இவற்றையருள்செய்யவேண்டுமென்றான். அவன் வேண்டுகோளுக்கிரங்கின பரமசிவன் அவன் விரும்பினபடியே ஆயிரத்தெட்டண்டங்களின் அரசாட்சியும், இந்திர ஞாலத்தேரும ஆக்ஙாசக்கரமும் சிங்கவாகனமும் பாசுபத முதலிய அஸ்திரங்களும் வச்சிர சரீரமும் கொடுத்தோமென்று சொல்லியருளி நிற்க, அப்பொழுது சிஙகமுகன் தாரகன் என்னுமிருவரும் வந்துவணங்க, அவர்களுக்கும் சூரபன்மனுக்குப் போலவே பாசுபதாஸ்திர முதலியவற்றைக் கொடுத்தருளித் தன்னுருக்கரந்து சென்றான்.

வரம்பெறுபடலம் முற்றிற்று.

---

## சுக்கிரனுபதேசப் படலம்.

ஆற்று கின்ற வேலையின் முன்னோ ரரணம்போற்
சுற்று கிற்குந் தானவர் தங்கோன் றொலைவில்சீர்
பெற்று னென்னுந் தன்மையை யுன்னிப் பெருவன்மை
யுற்று ரொல்லென் றார்த்தன ராற்ற வுவப்புற்றார். (௧)

ஊழியில் வேதன் கண்டுயில் வேலை யுலகஞ்சூ
ழாழிக ளேழு மாணையி னிற்ற லதுநீங்கி
மாழைகொண் மேருச் சுற்றிய தென்ன மகத்தெல்லை
சூழுற னீங்கிச் சூர்முத றன்பாற் றுன்னுற்றார். (௨)

கண்டா ரார்த்தார் காண்மிசை வீழ்ந்தார் கமழ்வேரி
கொண்டா ரொத்தார் கைதொழு கின்றார் குப்புற்று
ரண்டா வோகை பெற்றனர் தொன்னா ளயர்வெல்லாம
விண்டார் வெஞ்சூர் தன்புடை யாகி விரவுற்றார். (௩)

முன்னு குற்றோ ரிற்சிலர் தம்மை முகநோக்கி
யிந்நாள் காறு நீர்வலி யீர்கொ லெனவோதி
மன்னு குறறோ னல்லருள் செய்ய மகிழ்வெய்தி
யன்னார் யாரு மின்னதொர் மாற்ற மறைகுற்றார். (௪)

தீயுண் டாகுங் கண்ணுதல் கொண்ட சிவனுண்டு
நீயுண் டெங்கட் கோர்குறை யுண்டோ நிலையாகி
யேயுஞ் செல்வஞ் சீரொடு பெற்றோ மிடரற்றோந்
தாயுண் டாயின் மைந்தர் தமக்கோர் தளர்வுண்டோ. (௫)

என்பார் தம்பா லன்பின னாகி யிறைபின்னோர்
தன்பா லாக நிற்புழி யிந்தத் தகுவன்றான்
வன்பா லானுஞ் செய்வதெ னென்னு வானோர்க
டுன்பா யச்சுற் றேங்கின ராவி தொலைவார்போல. (௬)

வேறு.

சேனை நள்ளிடைச் சீர்கெழு வன்மையான்
மேன தன்மை விருப்பினிற் கண்ணுறீஇ
மான மேற்சென்று மன்னெடுந் தானவர்
சோனை மாரியிற் றாமலர் தூவினார். (௭)

தூசு வீசினர் சூர்முதல் வாழியென்
றாசி கூறின ராடினர் பாடினர்
பேச லாத பெருமகிழ் வெய்தினார்
வாச வன்றன் மனத்துயர் நோக்கினார். (௮)

அண்ண லாரரு ளாலழல் வேதியின்
கண்ணில் வந்த கணிபயில் படைக்கெலா
மெண்ணி லோரை யிறையவ ராக்கினா
னண்ணி நாளு நவையறப் போற்றவே. (௯)

கண்ண கன்புயக் காவலன் றனைகண்
மண்ணு மும் வானமு மாதிர வெல்லையுந்
தண்ண றச்செலத் தம்பியர் தம்மொடு
மெண்ணி வேள்வி யிருங்களா நீங்கினான். (௩0)

நீங்கி மீண்டு நெடுந்தவத் தந்தைதன்
பாங்க ரெய்திப் பணிந்து பரமனால்
வாங்க லுற்ற வரத்தியல் கூறியே
யாங்கள் செய்வகை யென்னினி யென்னவே. (௩௧)

தந்தை கேட்டுச் சதமகன் வாழ்வினுக்
கந்த மாகிய தோவண் டருக்கிடர்
வந்த தோவெம் மறைநெறி போனதோ
வெந்தை யாரரு ளித்திற மோவென. (௩௨)

உன்னி யுள்ளத் துணர்வுறு காசிபன்
றன்னின் வந்த தனயரை நோக்கியே
முன்னை நுங்கண் முதற்குருப் பார்க்கவ
னன்ன வன்க ணடைகுதி ரன்பினீர். (௩௩)

அடைதி ரேயெனி னன்னவ னுங்களுக்
கிடைய றுவகை யித்திரு மல்குற
நடைகொள் புந்தி நவின்றிடு நன்றெனா
விடைபு ரிந்து விடுத்தனன் மேலையோன். (௩௪)

விட்ட காலை விடைகொண்டு வெய்யவன்
மட்டி லாத வயப்படை யோடெழா
விட்ட மான வியற்புக ரோனிடங்
கிட்டி னானது கேட்டன னங்கவன். (௩௫)

கேட்டு ணர்ந்திடு கேழ்கிளர் தேசிகன்
வாட்ட நீங்கி மகிழ்நறை மாந்தியே
வேட்ட மெய்தி விரைந்துதன் சீடர்த
கூட்ட மோடெதிர் கொண்டு குறுகவே. (௩௬)

கண்ட சூரன் கதுமெனத் தன்பெருந்
தண்ட முன்சென்று தம்பியர் தம்மொடு
மண்டு காதலின் மன்னிய தேசிகன்
புண்ட ரீகமென் பொன்னடி தாழ்ந்தெழ. (௩௭)

நன்று வாழிய நாளுமென் றாசிக
ணின்று கூறி நிருதர்க் கிறைவனைத்
தன்று ணைக்கரத் தாற்றழு விப்புக
ரென்றும் வாழ்தன் னிருக்கைகொண் டேகினான். (௩௮)

ஏகு மெல்லை யிளவற் கிளவலை
வாகு சேர்ந்தநம் மாப்படை போற்றெனா
யூக மோடு கிரீஇயுர வோனெடும்
போகன் மேயினன் புந்தியில் சூரனே. (௩௯)

ஆருயிர்த் துணை யான வரிமுகன்
வார முற்றுடன் வந்திட வந்திடுஞ்
சூர பன்மனைச் சுக்கிரன் றன்னிடஞ்
சேர வுய்த்துச் செயன்முறை நாடியே. (௨௰)

ஆச னங்கொடுத் தங்க ணிருத்தியே
நேச நெஞ்சொடு நீடவு நல்லன
பேசி நீர்வரும் பெற்றி யென்னனென்றோவெனுத்
தேசிகன் சொலச் செம்ம லுரைசெய்வான். (௨௧)

ஓங்கு வேள்வி யுலப்பறச் செய்தது
மாங்க ணம்மவர் தரனருள் செய்ததுந்
தாங்க ரும்வளந் தந்ததுங் காசிபன்
பாங்கர் வந்த பரிசும் பகர்ந்துமேல். (௨௨)

தாதை கூறிய தன்மையு முற்றுற
வோதி யாமினி யூக்கி யியற்றிடு
நீதி யாது நிகழ்த்துதி நீயெனத்
தீது சான்மனத் தேசிகன் கூறுவான். (௨௩)

பாச மென்றும் பசுவென்று மேதகு
மீச னென்று மிசைப்பர் தனேயெனப்
பேசன் மித்தை பிறிதிலை யாவியுந்
தேசு மேவு சிவனு மொன்றுகுமே. (௨௪)

தீய நல்லன வேயெனச் செய்வினை
யாயி ரண்டென்ப ரன்னவற் றேதுவா
லேயு மாற்பிறப் பென்பரி னைபக்கட
ரேயு மென்பர் துயருறு மென்பரால். (௨௫)

ஒருமை யேயன்றி யூழின் முறைவிரா
யிருமை யுந்துய்க்கு மென்பரவ் வெல்லையி
லரிய தொல்வினை யானவை மீட்டுமேல்
வருவ தற்கென்பர் மன்னுயிர் யாவையும். (௨௬)

ஈட்டு கின்ற விருவினை யாற்றலான்
மீட்டு மீட்டும் விரைவி னுதித்திடும்
பாட்டின் மேவும் பரிசுணர்ந் தன்னவை
கூட்டு மென்பர் குறிப்பறி தாஞ்சிவன். (௨௭)

சொற்ற வாதியுந் தோமுறு வான்றனை
யுற்ற வீவியு மொன்றல வொன்றெனிற்
குற்ற மாகுமக் கோமுதற் கென்பரான்
மற்ற தற்கு வரன்முறை கேட்டிநீ. (௨௮)

ஆதி யந்தமின் றாகி யமலமாஞ்
சோதி யாயமர் தொல்சிவ னுடனின்
காத லாகிக் கருதுதன் மாயையாற்
பூதம் யாவும் பிறவும் புரிவனல். (௨௯)

இடங்கொண் மாயையின் யாக்கைக ளாயின
வடங்க வுந்நல்கி யன்னவற் றாடுதான்
கடங்கொள் வீணிற் கலந்துமற் றவ்வுடன்
மடங்கு மெல்லையின் மன்னுவன் றென்மைபோல். (௩௦)

இத்தி றத்தினெஞ் ஞான்றுமவ் வெல்லைதீர்
நித்த னுட னிலைமை புரிந்திடு
மித்தை யாகும் வினைகளும் யாவையு
முத்தி தானு முயல்வது மன்னதே. (௩௧)

பொய்ய தாகும் பொறிபுல மென்றிடின்
மெய்ய தோவவை காணும் விழுப்பொருண்
மையில் புந்தியும் வாக்கும் வடிவமுஞ்
செய்ய நின்ற செயல்களு மன்னதே. (௩௨)

அன்ன செய்கைக ளன்மைய தாகுமேற்
பின்ன ரங்கதன் பெற்றியின் வந்திடு
மின்ன லின்ப மிரண்டுமெய் யாகுமோ
சொன்ன முன்னைத் துணிபின வாகுமே. (௩௩)

மித்தை தன்னையு மெய்யெனக் கொள்ளினு
மத்தகுந் துய ரானது மின்பமு
நித்த மாகு நிமலனை யெய்துமோ
பொத்தி லான பொதியுடற் காகுமே. (௩௪)

தோன்று கின்றதுந் துண்ணென மாய்வது
மேன்று செய்வினை யாவதுஞ் செய்வது
மான்ற தற்பரற் கில்லை யனையதை
யூன்றி நாடி னுடற்குறு பெற்றியே. (௩௫)

போவ தும்வரு கின்றதும் பொற்புட
னுவ தும்பி னழிவதுஞ் செய்வினை
யேவ தும்மெண் ணிலாத கடந்தொறு
மேவு கின்றதொர் விண்ணினுக் காகுமோ. (௩௬)

அன்ன போலெங்கு மாகிபொன் றாகியே
துன்னி நின்றிடு தொல்பரன் வேறுபா
டென்ன தும்மில னென்றுமொர் பெற்றியான்
மன்னு மங்கது வாய்மையென் றோர்திநீ. (௩௭)

தஞ்ச மாகுந் தருமநன் றாலென
நெஞ்ச கத்து நினைந்து புரிவதும்
விஞ்சு கின்ற வியன்பவந் தீதென
வஞ்சு கின்றது மாமறி வின்மையே. (௩௮)

யாது யாதுவந் தெய்திய தன்னதைத
தீது நன்றெனச் சிந்தைகொள் ளாதவை
யாதி மாயையென் றுய்ந்தவை யாற்றுத
னீதி யான நெறிமைய தாகுமே. (௩௯)

தருமஞ் செய்க தவறுள பாவமாங்
கருமஞ் செய்யற்க வென்பர் கருத்திலா
ரிருமை தன்னையும் யாவர்செய் தாலுமேல்
வருவ தொன்றிலை மாய்ம்வித் தாகுமோ. (௪0)

கனவி னெல்லையிற் காழுறு நீரவு
மினைய வந்தவு மேனை யியற்கையு
நனவு வந்துழி நாங்கண்ட தில்லையா
லனைய வாமிவ ணுற்றுஞ் செயலெலாம். (௪௧)

இம்மை யாற்று மிருவினை யின்பய
னம்மை யெய்தினன் றேவடை யப்படும்
பொய்ம்மை யேயது பொய்யிற் பிறப்பது
மெய்ம்மை யாகும தோசுடர் வேலினோய். (௪௨)

நெறிய தாகு மிந்நீர்மை யெலாம்பிற
ரறிவ ரேயெனி னன்னதோர் வேலையே
பெறுவர் யாமுறும் பெற்றி யெலாமவை
யுறுதி யுண்டெனி னுண்மைய தாகுமே. (௪௩)

சிறிய ரென்றுஞ் சிலரைச் சிலரைமே
னெறிய ரென்று நினைவது நீர்மையோ
விறுதி யில்லுயிர் யாவுமொன் றேயெனு
வறிதல் வேண்டுமஃ துண்மைய தாகுமே. (௪௪)

உண்மை யேயிவை யோதியி னுருணர்
நுண்மை யாமினி நுங்களுக் காகிய
வண்மை யுந்தொல் வழக்கமு மற்றவுந்
திண்மை யோடுரை செய்திடக் கேட்டிநீ. (௪௫)

தேவர் தம்மினுஞ் சீதர னுதியோ
ரேவர் தம்மினு மேற்றம தாகிய
கோவி யற்கையுங் கொற்றமு மாணையு
மோவில் செல்வமு முன்னிடை யுற்றவே. (௪௬)

வேறு.

உற்றதோர் மேன்மை நாடி யுன்னைநீ பிரம மென்றே
தெற்றெனத் தெளிதி மற்றத் திசைமுகன் முதலோர் தம்மைப்
பற்றலை மேலோ ரென்று பணியலை யிமையோ ருங்கள்
செற்றல ரவரை வல்லே செறுமதி திருவுஞ் சிந்தி. (௪௭)

இந்திர னென்போன் வானோர்க் கிறையவ னவனே நென்ன
லந்தமி லவுணர் தங்க ளாருயிர் கொண்டா னன்னோ
னுய்ந்தனன் போகா வண்ண மொல்லையி லவனைப் பற்றி
மைந்துறு கிளைஞ் சேர்த்தி வன்சிறை புரிதி மாதோ. (௪௮)

சிறையினை யிழைத்துச் செய்யுந் தீயன பலவுஞ் செய்து
மறைபுகன் முனிவர் தம்மை வானவர் தம்மைத் திக்கி
னிறையவர் தம்மை நாளு மேவல்கொண் டிடுதி யன்னோ
ருறைதரு பதங்க ளெல்லா முதவுதி யவுணர்க் கம்மா. (௪௯)

கொலையொடு களவு காமங் குறித்திடு வஞ்ச மெல்லா
நிலையெனப் புரிதி யற்று னினக்குமேல் வருந்தீ தொன்று
மிலையவை செய்தி டாயே லிறைவனீ விரும்பிற் றெல்லா
முலகிடை யொருங்கு நண்ணு முனக்கெவர் வெருவு நீரார். (௫௦)

வண்டுழாய் மிலேச்சுஞ் சென்னி மால்விடைப் பாகன் றந்த
வண்டமா யிரமே லெட்டு மனிகமோ டின்னே யேகிக்
கண்டுகண் டவணீ செய்யுங் கடன்முறை யிறைமை யாற்றி
யெண்டிசை புகழ மீண்டே யீண்டுவீற் றிருத்தி யென்றான். (௫௧)

ஆ. திருவிருத்தம் - ௭௨௨.

---

வசனம்.

அத்தருணத்தில், சூரபன்மனைத் தானவரெல்லாரும் தம்தலைவனுக்குப் பரமசிவன் அநுக்கிரகஞ்செய்த சிறப்புக்களெல்லாவற்றையும் நினைத்துப் பெருங்களிப்படைந்து அவனைச்சூழ்ந்து வணங்கி நின்றார்கள். அவனும் அவர்களையெல்லாம் பார்த்து, நீங்களெல்லாரும் க்ஷேமமாயிருக்கிறீர்களாவென்று வினவ, அவர்கள், நீரும் பரமசிவனுமிருக்கும்போது எங்களுக்கென்னகுறை யென்றார்கள். சூரபன்மன் தம்பியர் தன்னைச்சூழ்ந்திருக்க இருந்ததைக்கண்ட இந்திரன் முதலிய தேவர்கள் அஞ்சியொடுங்கினார்கள். அந்தயாக குண்டத்தினின்று வந்த அளவற்ற சேனைகளுக்குள் சிலரைப் படைத்தலைவர்களாக நியமித்து, அப்படைகள் தன்னைச் சூழ்ந்துவர யாகசாலையைவிட்டு நீங்கித் தன்தந்தையாகிய காசிபரையடைந்து, பரமசிவனிடத்தில் தான்பெற்ற வரங்கள் முதலிய வரலாறுகளைச் சொல்ல, முனிவர், இந்திரன் முதலிய தேவர்களுக்குக் கெட்டகாலம் நேர்ந்ததோ வென்று சற்றுவருந்தி, தன்மக்களாகிய சூரபன்மன் முதலிய மூவரையும் நோக்கி, உங்கள் குலகுருவாகிய சுக்கிரனிடத்திற்போய், உங்களுக்குக் கிடைத்த செல்வங்கள்யாவும் இடையில் நீங்காதிருக்கும்படி அவரநுக்கிரகத்தைப் பெற்றுக்கொள்ளுங்களென்று விடைகொடுத்தனுப்பினார்.

அவ்வாறே சூரபன்மன் முதலிய மூவரும் சுக்கிரபகவானையடைந்து வணங்க அவரும் இவர்களுக்கு ஆசிகூறிச் சூரபன்மனைத் தழுவிக்கொண்டு அவனையும் சிங்கமுகனையும் தனது இருக்கைக்கு அழைத்துக்கொண்டுபோய், நீங்கள் என்னை நாடி வந்த காரணமென்னவென்று கேட்க, சூரபன்மன், தான்வீரமாமகஞ் செய்ததும் பரமசிவனிடத்தில் வரம்பெற்றதும், காசிபர் அனுப்பினதும்முதலாகிய செய்திகளை விரிவாயெடுத்துச் சொல்லுதலும், சுக்கிரபகவான், அவனைநோக்கி, நீநன்னெறியில் நடக்கவிரும்பி எம்மைக் கேட்டமையால் உனக்குச்சொல்ல வேண்டிய நீதிகள் பலவற்றையுஞ் சொல்லுகிறோம். சித்தசமாதானத்தோடு கேட்கக்கடவை. உலகத்தில் பதியென்றும் பசுவென்றும் பாசமென்றும் மூன்றுவகையாய்ச் சொல்லப்படுகிற தத்துவங்கள்யாவும் இறைவனது வடிவே, வேறில்லை. எல்லாம்பரமசிவனது திருவிளையாடலேயாம். அவ்விறைவன் தன்சங்கற்ப மாத்திரத்தாலே யெல்லாஞ்செய்ய வல்லவன், ஆகையால் அவன் திருவருளை முன்னிட்டுக்கொண்டு உனக்குப்பகைவராகிய தேவர்களையெல்லாம் வருத்தி நீ சுகித்திருக்கவேண்டும்; நீயேபிரமம் வேறொன்றில்லை; சமயவாதிகள் பிதற்றுவதெல்லாம் பொய்யே.

னெல்லை களவு முதலிய எல்லாவற்றையும் முக்கியமாகச்செய்துவரவேண்டும்; அப்படிச்செய்யாவிடின் யாதொரு காரியமுஞ் சித்திக்கமாட்டாது. உனக்குப் பரமசிவன்கொடுத்த ஆயிரத்தெட்டண்டங்களையும் உன்சேனைகளோடேபோய்ப் பார்வையிட்டுத் திக்குவிஜயம்பண்ணி உன்புகழ் எட்டுத்திக்கிலும் பரவும்படி இவ்வுலகத்தை ஆண்டுவரவேண்டும் என்று கூறினான்.

சுக்கிரனுபதேசப்படலம் முற்றிற்று.

---

# அண்டகோசப்படலம்.

நீயதோ ரினைய மாற்றஞ் செப்பலு மிதுநன் றெந்தை
யேயின பணியி னிற்ப னிறையவ னெனக்குத் தந்த
வாயிரத் தெட்டெ ன்றோது மண்டங்க ணிலைமை யாவு
நீயுரை யென்ன வாசா னிருபனுக் குரைக்க லுற்றான். (க)

மேலுள பொருளுந் தத்தம் வினைவது நீக்க லிப்பான்
மூலமாம் பகுதி தன்னின் முளைத்திடும் புந்தி புந்தி
யேயுறு மகந்தை யொன்றி னெய்துவம் புலனு மாங்கே
வாலிய தக்கனந் தொட்டு மாநிலங் காறும் வந்த. (உ)

அப்பெரும் புவிக்குத் தானோ ராயிர கோடி யண்ட
மொப்பில வென்ன வுண்டா லொன்றினுக் கொன்று மேலாச்
செப்புறு நிலைமைத் தன்று தெரிந்திடிற் பரந்து வைகும்
வைப்பென லாகு மன்ன மற்றவை யம்பொன் வண்ணம். (ங)

அங்கண்மா ஞாலத் தண்ட மாயிரங் கோடி தன்னி
லிங்குநீ பெற்ற வண்ட மாயிரத் தெட்டி னுள்ளுந்
துங்கமா மண்ட மொன்றி னியற்கையைச் சொல்லு கின்றேன்
செங்கைசேர் நெல்லி யென்னச் சிந்தையிற் காண்டி யன்றே. (ச)

கதிரெழு துகளொண் மூன்று கசாக்கிர கந்தா னொரு
மிதுகொலை யிருநான் குற்ற திலீக்கையவ் விலீக்கை யெட்டா
லுதிதரும் யூகை யன்ன யூகையெட் டியவ்வ யென்ப
வதினிரு நான்கு கொண்ட தங்குலத் தளவை யாமே. (ரு)

அங்குல மறுநான் கெய்தி னதுகரங் கரமோர் நான்கு
தங்குத றனுவென் றுருந் தனுவிரண் டதுவோர் தண்ட
மிங்குறு தண்ட மான விராயிரங் குரோசத் தெல்லை
பங்கமில் குரோச நான்கோ ரியோசனைப் பால தாமே. (சு)

அந்தயோ சனையி னெல்லை யைம்பதிற் றிரண்டு கோடி
வந்தவிவ் வண்டத் திற்கு மாயிரும் பரவை வைப்பு
முந்திய நிலப்பு மற்கு மொழிந்திடு மண்டங் கட்கு
மிந்தவா றளவைத் தென்றே யெண்ணுதி யிலைகொள் வேலோய். ()

ஒண்புவ னிக்குக் கீழாம் யோசனை யைம்பான் கோடி
திண்புவி தனக்கு மேலாய்ச் சேர்தரு மளவு மன்னே
மண்புகழ் மேருவுக்கு மாதிர மவையோ ரெட்டு
மெண்படு மைம்பான் கோடி கடாகத்தி னெல்லை யோடும். (அ)

அண்டமார் கடமோர் கோடி யதற்குமீ தினிலோர் கோடி
திண்டிறற் காலச் செந்தீ யுருத்திரர் செம்பொற் கோயி
லொண்டழற் கற்றை யுள்ள தொருபது கோடி மீக்கட்
கொண்டெழு தூம வெல்லை குணிக்கினங் கோடி யாமே. (௯)

அரித்தவி சுயர்ச்சி யாங்கோ ராயிர மளவைத் தாகும்
பரத்தலு மதற்கி ரட்டி படர்தரு காலச் செந்தீ
யுருத்திர ரழலின் மேனி யோசனை யயுத மாகுந்
திருத்தகு பலகை வாள்வில் செஞ்சர மேந்திச் சேர்வார். (௧௦)

ஓங்கிய காலச் செந்தீ யுருத்திரர் தம்மைப் போல்வா
ராங்கொரு பதின்மர் சூழ்வ ரன்னவ ரேவ லாற்றிப்
பாங்குற வொருபான் கோடி பரிசன மேவு மன்னோர்
பூங்கழல் வழுத்தி யாதி கமடமப் புவனம் வைகும். (௧௧)

அன்னதோர் புவன மீக்க ணடுக்குறு நிலைய வாகித்
துன்னுறு நாலேழ் கோடித் தொகைப்படு நிரயத் தெல்லை
யுன்னத மான கோடி யொன்றொழி முப்பான் மேலும்
பன்னிரண் டிலக்க மண்டத் தளவுறும் பரப்பு மன்னோ. (௧௨)

உற்றிடு நிரய மீதி லொன்றிலா விலக்க நூறு
பெற்றிடு முயர்வு தன்னிற் பிறங்குமோர் புவனங் கீழ்மண்
பற்றிய விரும்பு நாபபண் பச்சிமம் பசும்பொற் சோதி
மற்றதன் மேல்பா கத்தில வதிவர்கூர் மாண்ட ரென்போர். (௧௩)

காழக முகத்தர் கூர்வாய்க் கணிச்சியம் படைசேர் கைய
ரூழியங் கனலை யன்ன வுருவினர் திரியுங் கண்ணர்
மாழையம் பீட மீக்கண் வைகுகூர் மாண்டர் தம்பாற்
சூழுருத் திரரா யுள்ளோர் தொகுதியை யளக்கொ ணாதால். (௧௪)

அப்புவ னத்து மீதே யந்தர மிலக்க மொன்பான்
செப்புவ ரதனுக் கும்பர் சிறந்தபா தலங்க ளொன்ப
வொப்பறு மிலமொன் றற்கே யொன்பஃ திலக்க மாக
விப்படி யறுபான் மூன்று மிலக்கமேழ் பிலத்தி னெல்லை. (௧௫)

பரத்தினி லுறுங்க ளிட்ட பாதல மெட்டி லக்க
மரத்தினுக் ககற்சி வெவ்வே றயுதமா மவைமுப் பாக
முரத்தகு மவுணர் கீழ்பா லொள்ளொளியிற் றுரகர் நாப்பண்
டிருத்தகு மரக்கர் மேல்பாற் சிறந்துவீற் றிருந்து வாழ்வோர். (௧௬)

இதன்மிசை யிலக்க மொன்பா னுடைகரி ருக்கை யாகு
மிதன்மிசை வெள்ளியோர் கோடி யிலக்கமு மிருப தண்டா
மிதன்மிசைக் களிறு பாந்த ளொட்டுடன் சேட னேந்து
மிதன்மிசைப் புவியி னீட்ட மெண்பஃ திலக்க மாமே. (௧௭)

ஈடுறு பிலங்கட் கெல்லா மிறைவராய்ப் பாது காப்போ
ரீட்டகர் தாமே நாக ரவுணர்வா ளரக்க ரன்னோர்
தாடொழு சனங்க ளண்ட கடமுதற் றரையி ருகக்
கோடியோ ரைம்பா னுகுங் குணித்தனே கோடி யன்றே. (௧௮)

பலவகைப் பிலங்கட் கெல்லாம் பரமதா யுற்ற தொல்பா
ருலகினுள் விரிவு மங்க னுள்ளவு முரைப்பன் கேட்டி
குலவிய சம்பு சாகங் குசைகிர வுஞ்சங் கோதி
லிலவுகோ மேத கம்புட் கரமிவை யேழு தீவே. (௧௯)

பரவுமிவ் வுலகி லுப்புப் பாறயிர் நெய்யே கன்ன
லிரதமா மதுநீ ராகு மெழுகட லேழு தீவும்
வரன்முறை விரவிச் சூழு மற்றதற கப்பாற் சொன்னத்
தரையது சூழ்ந்து நிற்குஞ் சக்கர வாளச் சையம். (௨0)

அன்னதற் கபபால் வேலைக் கரசனும் புறத்தி லாழி
பின்னது தனக்கு மப்பாற் பேரிருள் சேர்ந்த ஞால
மன்னவ காண்டி யபபால் வலிகெழு மண்டத் தோடு
துன்னுமிப பொருள்கள் யாவுஞ் சூழ்ந்துகொண் டிருக்கு மன்றே. (௨௧)

எல்லைதீர் முன்னைத் தீவோ ரிலக்கமாங் கடலு மற்றே
யல்லன தீவு நேமி யதறகதற் கிரட்டி யாகச்
சொல்லின ராங்கன் கண்ட தொகையிரு கோடி யன்றி
நல்லதோ ரைம்பான் மேலு நான்கெனு மிலக்க மாமே. (௨௨)

ஐயிரு கோடி சொன்னத் தணிதல மதுசூழ் நேமிச்
சையமோ ரயுத மாகுஞ சாதரு புறத்தி னேமி
யெய்திய கோடி மேலு மிருபதோ டிலக்க மேழா
மையிருள் சோந்த பாரி னெல்லைமேல் வகுப்பன் மன்னோ. (௨௩)

ஆரிரு ளுலக முப்பா னஞ்செனுங் கோடி மேலு
மோரொரு பத்தொன் பானா றற்றநான் கயுத மாகும்
பேரிருள் சூழ்ந்த வண்டப பித்திகைக் கனமோர் கோடி
பாரிடை யகலந் தேரிற் பாதியோ ரைம்பான் கோடி. (௨௪)

நடைதரு தொன்னூ லாற்று ணும்புகல் கணிதந் தன்னை
யுடையதோர் திசையே யிவவா றெழிந்தமா திரத்தும் வைக்கின்
வடகொடு தென்றி கீழ்மேன் மற்றுள கோண முற்று
நொடிதரிற் கோடி கோடி நூறுயோ சனைய தாமே. (௨௫)

முள்ளுடை மூல மான முண்டகத் தவிசின் மேய
வள்ளறன் வலது மொய்ம்பான் வந்தசா யம்பு மைந்த
னள்ளிலை வேற்கை நம்பி யன்புடை விரதன் ஞால
முள்ளதோ ரெல்லை முற்று மொருதனிக் குடையுள் வைத்தான். ()

அங்கவன் றனது மைந்த ரங்கிதீ ரன்மே தாதி
துங்கமாம் வபுட்டி மானு சோதிட்டுத் துதிமான் றொல்சீர்
தங்குமவ் வியனே மிக்க சவனனு மெழுவர் தாமும்
பங்குகொண் டேழு தீவும் பாதுகாத் தரசு செய்தார். (௨௭)

## வேறு.

சீரியசம் புத்தீபம் புரந்த வங்கி
   தீரனென்போன் றனருளுஞ் சிறுவ ராயோர்
பாரதங்கிம் புருடனரி கேது மாலன்
   பத்திரா சுவனிளா விருத னென்போ
னொருடைய விரமியனால் லேமப் பேரோ
   னியற்குருவா மொன்பதின்ம ரிவர்கள் பேரா
லோரொருவர்க் கொவ்வொன்று நாவற் றீவை
   யொன்பதுகண் டமதாக்கி யுதவி னுனைல். (௨௮)

விண்ணுயர்சம் புத்தீவி னடுவு நின்ற
   மேருவரை செங்கமலப் பொருட்டுப் போல
கண்ணுமதற் கியோசனையுன் னதமெண் பதுநா
   நான்குளவா யிரமாகு மூல மாழ்ந்த
தெண்ணிரண்டா யிரஞ்சென்னி யகல முப்பா
   னிராயிரமாம் பாரிரையெல்லை யிதனிற பாதி
வண்ணமிகு மேகலைமூன் றதனு ளுச்சி
   வாய்த்திடுமே கலையினிறபல் சிகர மலநா (௨௯)

மேருவரை யதற்குநடுப் பிரமன் மூதூ
   மிக்கமனோ வதியதறகு மேலைத திசசி
னரணன்வாழ் வைகுண்டம வடகி ராளி
   னுதனமர் சோதிட்கந் திசைக ளெட்டுஞ்
சீரியவிந் திரன்முதலா மெண்மா தேயந்
   தெற்குமுதல் வடக்களவு மருங்கு தன்னி
னேரியதோர் தேசமது செவ்வே போகு
   நெடும்பூழை யொன்றுளது கிளைக மாதோ. (௩௰)

அந்தவரைக் கீழ்த்திசைமந் தரமாம் வெண்மை
   யதன்றெற்குக் கந்தமா தனம்பொன் மேல்பால்
சுந்தரமாம் விபுலநீ லம்வ டக்குச்
   சுபார்சுவமா துளைப்போது கடம்பு சம்பு
நந்தியதோர் பேரியால் குணபா லாதி
   நாற்றிசையில் வரைமீது நிற்கு நாவன்
முந்துமிரண் டாயிரயோ சனையா மேனை
   முத்தருவு மிதிற்பாதி மொழியு மெல்லை. (௩௧)

அத்தகைய கீழ்த்திசையி லருண மேல்பா
   லசிதோதந் தென்றிசைமா னதமே யல்லா
வுத்தரத்தின் மாமடுநீர் நிலையாய் மேவு
   மூய்யானஞ் சயித்திரதங் குணக்கு வைகும்
வைத்தபெரு நந்தனந்தக் கிணத்தி லோங்கும்
   வைப்பிரசங் குடக்கமரும் வடாது பாங்கின்
மெத்துதிரு தாக்கியமுற் றிடுமிவ் வாறு
   மேருவரைச் சாரலிடை விரவு மன்றே. (௩௨)

கடிகமழு நாவலொன்று தென்பா னின்ற
காரணத்தாற் பாரதன்றன் கண்ட மூற்று
மிடனுடைய நாவலந்தீ வெனப்பேர் பெற்ற
தித்தருவின் றீங்கனிநீ ராறாய் மேருத்
தடவரையைப் புடைசூழ்ந்து வடபாற் சென்று
சாம்புநதப் பெயர்பெறுமச் சலிலந் துய்த்தோ
ருடன்முழுதும் பொன்மயமா யயுத மேனு
மொருமூவா யிரமாண்டங் குறுவ ரன்றே. (௧௧)

நாற்றிசையில் வரைப்பரப்பு மேல்கீழ் தானு
நவின்றிடின்மே ருவிற்பாதி யதற்குக் கீழ்பால்
மாற்றரிய மாலியவான் மேல்பாற் கந்த
மாதனந்தென் றிசைநிடத மேம கூட
மேற்றவிமம் வடபானீ லஞ்சு வேத
மியற்சிருங்க மெட்டுவரை யிவையா நீல
மேற்றிகழ்பொன் மணிகனகம் பனிமே நீலம்
வெண்மைமதி காந்தமிவை மேனி தாமே. (௧௪)

நிசதமொடு பொற்கூட மிமயங் கீழ்மே
னெடுங்கடலைத் தலைக்கூடி நிமிருஞ் சோமன்
றிசையுளபூ தரமூன்று மனைய வெட்டுத்
திண்கிரியு மிராயிரயோ சனைவான் செல்லும்
வசையில்கந்த மாதனமா லியவா னென்னு
மால்வரைக டமதகல மயுத மற்றை
யசலமிரு மூன்றுமிரா யிரமித் தீவு
ளமருநவ கண்டவெல்லை யறைவன் மாதோ. (௧௫)

கோதில்வட கடன்முதலாச் சிருங்கங் காறுங்
குருவருடஞ் சிருங்கமுதற் சுவேத மட்டு
நீதியிர ணியவருடஞ் சுவேத நீல
நெடுங்கிரியி னடுவணிர மியமா மேருப்
பூதரஞ்சூழ் வருடமிளா விருத மாகும்
பொலிந்தகந்த மாதனமேற் புணரி நாப்பண்
கேதுமால் வருடமா லியவான் றொட்டுக்
கீழ்கடலி னிறுவாய்பத் திரம தாமே. (௧௬)

அட்புவியி னிசதமுத லேமங் காறு
மரிவருட மேமமுத லிமய நாப்பண்
கிம்புருடந் தென்கடற்கு மிமய மென்னுங்
கிரிக்குநடுப் பாரதமாங் கேது மாலோ
டிம்பர்புகழ் பத்திரமுப் பத்து நாலா
யிரகின்ற தொன்பதினா யிரமா மெல்லை
யுமபர்தம திலகனைய பாரத மொன்று
மொன்றொழிந்த கண்டமெட்டு மூற்று ளோர்க்கே. (௧௭)

ஆங்குருநாட் டுறைபவரோர் பொழுதின் யாய்பா
லாவே மகவே மாகத் தோன்றித்
தாங்கள்விழை விற்புணர்வ ரவர்க்குத் தெய்வத்
தருமலர்க ளுதவுமுணுக் கனியுங் காயு
மோங்குபச்சை நிறமாயு ளயுத மேனு
மொருமூவா யிரமதற்குள் வடபா கத்திற்
பாங்கமர்வர் முனிவரர்சா ரணரே சித்தர்
பதின்மூவா யிரமாயுள் படிகம் வண்ணம். (௩௮)

பரவுபத்தி ராசுவத்தோர் கனிகாய் துய்ப்போர்
பதின்மூவா யிரமாயுள் படைத்த சேயோ
ரிரமியத்தோர் பல்நுகர்வோர் மதிநேர் மெய்ய
ரீராயிரமைஞ் ஞூறயுத மாண்டு பெற்றோர்
பொருவரிய விரணியத்தி னுள்ளோ ராலின்
புன்கனிகண் மிசைகுவர்பூங் குவளை போல்வார்
வருடமவர்க் கொருபதினா யிரமே யன்றி
மற்றுமிரண் டாயிரமாச் சொற்ற தொன்னூல். (௩௯)

விராவுமிளா விருதத்தோர் வெளிய மெய்யர்
மிசைவதுதீங் கரும்பிரத மயுத மேனு
மிராயிரமா யுகங்கேது மாலந் தன்னி
லிருப்பவர்பைங் குவளைநிற மினிதி னுண்டல்
பராரையுள கண்டகியின் கனிமெய யாயுள்
பத்துளவா யிரமரிகண் டத்து வாழ்வோ
ரோராயிரமோ டொன்பதினா யிரம தெல்லை
யுணவுகனி காய்மதிய மொளிய தன்றே. (௪௦)

போற்றியகிம் புருடத்தோ ரிறலித் தீய
புன்கனியே மிசைவர்நிறம் பொன்மை யாயுள்
சாற்றியிடு மோரயுத மேம கூடத்
தடவரைத்தென் பாலிமய வடபா றன்னி
லேற்றமிருங் கைலைநிற்கு மதற்கு மீதே
யிமையாமுக் கட்பகவ னுமையா ளோடும்
வீற்றிருப்ப னாழிதனி லண்டங் காறு
மேலொடுகீழ் சென்றிடுமவ் வெற்பு மாதோ. (௪௧)

இந்தவிரு நாற்கண்டத் துறையு நீரா
ரின்னல்பிணி நரைதிரைமூப பிறையுஞ் சேரார்
முந்தையுகம் போலேனை மூன்றி னுள்ளு
மொய்ம்புநிறை யறிவுடல மூயற்சி யாயு
ளந்தமில்சீர் முதலெல்லா மொருதன் மைத்தா
வடைகுவர்முன் பாரதத்தி லுவத ரித்து
வந்துபுரி வினைப்பயனை நுகர்வ ரென்பர்
வானமுகில் சென்றுபுனல் வழங்கா தங்ஙன். (௪௨)

பாரதத்து ளாரவனி லிளைத்து மற்றும்
பஃறொழிலும் புரிந்தறம் பாவ மீட்டிப்
பேரருளபெள திகமெழுவா யான மூன்றிற்
பெறும்பயன்கொண் டுய்வரென்பர் பெருமை யாற்றல்
சீரறிவு நிறையாயு ளுருவ முண்டி
செய்கையுகங் களுக்கியைந்த திறனே சேர்வர்
தோரைமுதற் பலவைங்கூழ் விளையு ளாக்கந்
தூயகனி காய்கந்தம் பிறவுந் துய்ப்பார். (௪௩)

நாவிருகண் டத்தோரும் விண்ணு ளோரு
நரகினரு மவ்விடததி னணணி வைகி
மேலையிரு வினையாற்றி யவற்றிற் கேற்ற
வியன்பயன்க டுய்பபரென விளம்பு மாற்றாற்
சீலமிகு பாரதமாங் கண்ட மொன்றே
தீவினைநல் வினையாகுஞ் செயற்கைக் கெல்லா
மூலமொரு குறைபெறினே வந்து தேவர்
முனிவர்களுந் தவமபூசை முயல்வ ரங்கண். (௪௪)

கவிபுகழும் பரதனுமிந் திரனும பேரோன்
கசேருகன்று மிரபன்னன் கபத்தி நாகன்
சவுமியனே கந்தருவன் வருண னென்னுந்
தனயருடன் குமரியெனும் வனிதை நன்னே
யுவகைதனி னுதவியவர் தததம் பேரா
லொன்றற்கோ ராயிரம்யோ சனைய தாகப்
புவிபுகழ்பா ரதத்தைநவ கண்ட மாக்கிப்
பொறபினுட னேயவர்க்குப் புரிந்தா னன்றே. (௪௫)

கங்கைகவு தமியமுனை கவுரி வாணி
காவிரிநன் மதைபாலி கம்பை பம்பை
துங்கபத் திரைகுசைகோ மதிபாஞ் சாலி
சூரிசிகி பாபகரை தூத பாபை
சங்கவா கினிசிகைபா ரதது வாசி
சர்ர்வரிச்ந் திரபாகை சரயு வேணி
பிங்கலைகுண் டலைமுகரி பொருநை வெஃகாப்
பெண்ணைமுத லாறனந்தம் பெருகி நண்ணும். (௪௬)

மன்னுமகேந் திரமலயஞ் சையஞ் சத்தி
மாகிருடம் பாரியாத் திரமே விந்த
மென்னுமலை யோரேழுங் காஞ்சி யாதி
யெழுநகருந் தர்னமொரா யிரமே லெட்டும்
பன்னுமரு மறைமுதலோர் மேய தேயம்
பற்பலவுஞ் சுருதிமுறை பயில்வு மேனி
மெய்ந்நெறிசேர் வதுகுமரி கண்ட மேனை
மிலேச்சரிட மோரெட்டும் வியப்பி லாவே. (௪௭)

இங்கிவைசம் புத்தீவி னிடனே தண்பா
விருங்கடல்சூழ் சாகத்தி னெல்லை தன்னிற்
றங்கியகோ மேதாதி யவற்கு மைந்தர்
சாந்தவயன் சிசிரன்கோ தயனு னந்தன்
றுங்கமிகு சிவனொடுகே மகன்சி றந்த
துருவனிவர் பேராலேழ் வருட மாக்கி
யங்கவருக் கருள்புரிந்தான் கடவுள் வாயு
வாரியர்விந் தகர்குகர ராண்டு வாழ்வார். (௪௮)

சோமகமே சுமனஞ்சந் திரமே மூந்துந்
துந்துபிவப் பிராசனநா ரதியந் தொல்சீர்க்
கோமதமா மெழுகிரியுஞ் சிவைவி பாசை
குளிரமிர்தை சுகிர்தைமநு தத்தை சித்தி
மாமைதரு கிரமையெனு மாறங் கேழு
மருவியிடுந் நதிக்கடறூன் வளைய நின்ற
வேமமுறு குசத்தீவில் வபுட்டு வென்னு
மிறையவற்குஞ் சிறுவர்களா யெழுவ ருண்டாஸ். (௪௯)

சுப்பிரத னுரோகிதனே தீரன் மூகன்
சுவேதகன்சித் தியன்வயித்தி தன்னென் றோது
மிப்புதல்வர் பேராலேழ் வருட மாக்கி
யீந்தனனுன் னதங்குமுதங் குமார மேசம்
வைப்புறுசந் தகமகிட மேது ரோண
மலையேழுஞ் சோனைவௌளி மதியே தோமை
யொப்பறுநேத திரைவிமோ சனைவி ருத்தி
யோரேழு நதியுளவா லுலவை புதசேள். (௫௦)

தர்ப்பகரே கபிலர்சா ரணர்நீ லத்தர்
தண்டர்விதண் டகராண்டைச் சனங்க ளாவா
ரப்புறநெய்ப் புணரிகிர வுஞ்ச தீப
மதற்குமன்னன் சோதிட்டா மவன்றன் மைந்தர்
மெய்ப்படுசா ரணன்கபிலன் கிருதி கீர்த்தி
வேணுமா னிலம்பகனுற் பிதனே யென்னச்
செப்புமெழு பேராலேழ் வருட மாக்கிச்
சிறப்புடனே யவராசு செய்தற் கீந்தான். (௫௧)

மன்னுகுசே சயமரிவித் தருமம் புட்பா
வருத்தமிமந் துதிமானே மந்த ரந்தா
னென்னுமலை யேழுசிவை விதூத பாசை
யிலைமபுனிதை பூரணையோ டகில பாசை
சென்னெறிசேர் தம்பையெனு நதியோ ரேழு
சேர்ந்துளது தபதர்சடா வகர்மந் தேகர்
பன்னுபுக ழனைகரவர் சனங்க ளாவார்
பங்கயனை யங்குடைய பகவ னம்மா. (௫௨)

மற்றதனுக் கப்பாலே யளக்கர் கன்னல்
வளைந்துடைய தீபஞ்சான் மலியா மங்கட்
கொற்றவனுக் குதிமான னவன்றன் மைந்தர்
குசலன்வெய்யன் றேவன்முனி யந்த கார
னற்றமிலா மனோரதன்றுந் துபியா மன்னோர்க்
களித்தனனேழ் கூறாக்கி யசல மேழுஞ்
சொற்றிமிரஞ் சுரபிவா மனம்வி ருத்தந்
துந்துபிசம் பியத்தடம்புண் டரீக நிற்கும். (௩௩)

போதுகுமு தங்கவரி யாதி யாமை
புண்டரிகை மனோபமைசந் தியையென் றேழுஞ்
சீதநதி யேழுசெல்லும் புட்க லாதர்
சிறந்திடுபுட் கரர்தனியர் சித்ர ரென்போ
ரேதமிலா துறைசனங்கள் கடவு ளீச
னிதற்குமப்பான் மதுக்கடல்சூழ்ந் திருந்த தீப
மேதகுகோ மேதகமவ் வியனே தொன்னாள்
வேந்தனவற் கெழுமைந்தர் மேனாள் வந்தார். (௩௪)

தூயவிமோ சனன்மோகன் சகலன் சோமன்
சுகுமாரன் குமாரன்மரீ சகனு மைந்தர்க்
காயதையேழ் கூறுபுரிந் தளித்தான் சிங்க
மதத்தமுத யஞ்சலகங் கிரவுஞ்ச மாம்பி
கேயமிர மியங்கிரியே ழுயாதி தேனுக்
கிளர்கபத்தி சுகுமாரி குமாரி யிக்கு
மாயைநதி யேழுளமந் தகரா மங்கர்
மாகதர்மா னசர்மாக்கண் மதிமுன் றெய்வம். (௩௫)

புடையினது தூயபுனற் கடலாந் தீபம்
புட்கரமன் னன்சவனன் புதல்வ ரானோ
ரடல்கெழுவு தாதகிமா பீத னென்போர்க்
கதனையிரு கூறுபடுத் தளித்தா னென்ப
விடபமகேந் திரம்வருணம் வராக நீல
மிந்திரமந் திரியமெனு மேழு வெற்புக்
குடிலைசிவை யுமைதரணி சுமனை சிங்கை
குமரியெனு மெழுநதியுங் கொண்டு மேவும். (௩௬)

மேனிலா வியநகரர் நாக ரென்போர்
மேவியமர் பரிசனம்வெய் யவனே புத்தே
ளானதோர் புட்கரத்தின் முடிவி லைம்ப
தாயிரம்யோ சனைதன்னி னகல மொன்று
மானசோத் தரமெனவே சகடக் கால்போல்
வட்டணைபெற் றிடுமதன்கண் மகவா னுக்கு
மேனையோ ரெழுவருக்குங் குணபா லாதி
யெண்டிசையி னும்பதங்க ளெய்து மன்றே. (௩௭)

பொங்குதிரைப் புணரிகளின் முடிவு தோறும்
புடையுறவே வளைந்தொவ்வோர் பொருப்பு கிற்கு
மிங்குளதோர் சாகமுதற் றீப முற்று
மிருக்குநர்க்கு நரைதிரைமூப் பின்ன வில்லை
யங்கவர்கள் கலியினுங்கிம் புருடர் தன்மை
யடைவர்பதி னாயிரமாண் டமர்வ ரப்பாற்
றங்கியது தபனியப்பா ரதனைச் சூழ்போய்த்
தடம்பெருநே மிப்பொருப்புச் சார்வுற் றன்றே. (௫௯)

நேமிவரை யதற்கிப்பாற் சுடரே யப்பா
னிசிப்படலஞ் செய்யமணி திறனே மன்னர்
காமருசீ ரியக்கரிராக் கதரே வெம்பேய்க்
கணங்களமர்ந் திடுவர்திசைக் கடவு ளோருந்
தாமுடைய மாதிரத்தின் மேரு வின்கட்
டங்குதல்போல் வைகுவரங் கதனுக் கப்பா
லேமமுறு புறக்கடலங் கதனுக் கப்பா
லிருளாகு மதற்கப்பா லெய்து மண்டம். (௬௦)

ஊழிநெறி யாற்றத்த முயிரைத் தாமே
யொழிவுசெய்தோ ருந்தெருளு முணர்வி லோரு
மாழிவரைப் புறஞ்சூழ்வ ரப்பா லாகு
மாரிருள்சே ரெல்லைதனி லநாதி யீசர்
வாழுமொரு பெருங்கைலை யுண்டவ் வண்ட
மருங்கதனிற் கணகிரைகள் வதிந்து மல்குஞ்
சூழுறாசம் புதீப முதலா வண்டச்
சுவர்காறும் புவியென்பர் தொல்லை யோரே. (௬௧)

இப்புவியின் மேற்கணத்தி னுலக மாகு
மிதன்மிசைக்குய் யகலோக மிதற்கு மீதா
வைப்புடைய வீரங்கால் வயங்கு மேய
மற்றதன்மே லெழுபுயனும் வழங்கு மெல்லை
முப்பதினா யிரகோடி முகிலொவ் வொன்றை
முறைறசூழ்வுற் றிம்மதற்கு முனை ராகச்
செப்பரிய கிம்புருடர் கருட ராமேனோர்
சித்தர்கள்வி ஞ்சையரியக்கர் செறியு மூதா. (௬௨)

இங்கிதன்மேற் சுரநதிசெல் லிடனே யப்பா
லிரவிபதந் தரணிக்கோ ரிலக்க மாகு
மங்கதனின் முப்பான்முக் கோடி தேவ
ருக்கனுடன் வழிக்கொள்வ ரதற்கு மீதே
திங்களுல கோரிலக்க முப்பர் தன்னிற்
செறிதருதா ரகையுலக மிலக்கஞ் சேணிற்
பொங்கொளிசேர் புதனுலகோ ரிலக்க மப்பாற்
புகருலக மீரிலக்கம் பொருந்திற் றன்றே. (௬௩)

அந்தரமேற் சேயுலகோ ரிலக்க மேலே
யாசனுலகோ ரிலக்க மதற்கு மீதே

மந்தனுல கீரிலக்க மதன்மே லோரேழ்
மாமுனிவ ருலகிலக்க மாகு மப்பா
னந்துருவ னுலகிலக்கம் புவர்லோ கத்தி
னலத்தகைய தொகைபதினேந் திலக்க மாகு
மிந்தவுல கத்துமிசை யுடைய தேய
மெழுவகையா மருத்தினமுங் கெழுவு மெல்லை. (௬௩)

தொகலோடு சேர்தருமிப் பதத்தின் மீதிற்
சுவர்லோக மெண்பத்தஞ் சிலக்க மாங்கே
புகலோடு வானவரும் பிறரும் போற்றப்
புரந்தரன்வீற் றிருந்தரசு புரிவ னப்பான்
மகலோக மிருகோடி மாக்கண் டாதி
மாமுனிவர் பலர்செறிவர் மற்ற தன்மே
லிகலோகம் பரவுசன லோக மெல்லை
யெண்கோடி பிதிர்தேவ ரிருப்ப ரங்கண். (௬௪)

தவலோக முன்னதமீ ராறு கோடி
சனகர்முத லாவுடைய வனகர் சேர்வ
ரவண்மேற்சத் தியவுலக மீரெண் கோடி
யயனின்பத் தலமுலக மளிக்குந் தான
நவைதீரும் பிரமபத மூன்று கோடி
நாரணன்வாழ் பேருலக மோர்முக் கோடி
சிவலோக நாற்கோடி யதற்கு மீதே
திகழண்ட கோளகையுங் கோடி யாமே. (௬௫)

வேதமொடு தந்திரமு மவற்றின் சாபு
மிருதிகளும் பிறநூலும் வேறு வேறு
வோதிபமண் டத்தியறகை மலைவோ வென்று
னுண்மைதெரிந் திடிற்படைப்பு முலபயில் பேத
மாதலினு லவ்வவற்றின் றிரிபு நாடி
யறிந்தவுனக் கிண்டுண்மை யதுவே சொற்று
மேதமிலிவ் வண்டத்திற் புவன நூற்றெட்
டிறையருள்சே ருருத்திரர்தம் மிருக்கை யாமே. (௬௬)

வேறு.

இந்த வண்டத்தி னியற்கைய முன்னுனக் கிறைவன்
றந்த வண்டங்க ளாயிரத் தெட்டுமித் தகைமை
மைந்த நீசென்று காணுதி யெனவகுத் துரைப்ப
வந்த மில்லதோர் மகிழ்ச்சியி னுணர்ந்தன னவுணன். (௬௭)

ஆ. திருவிருத்தம் - எ௮௧.

## வசனம்.

சுக்கிர பகவான், பொல்லாத காரியங்க ளெல்லாவற்றையும் நல்ல நீதிக ளென்று சொல்லுதலும், சூரபன்மன் அவ்வாக்கியங்களெல்லாவற்றையும் நன்மையாகவே கொண்டு, தனக்குப் பரமசிவன் அநுக்கிரகித்த ஆயிரத்தெட்டண்டங்களின் வரலாறு முழுதும் சொல்லவேண்டு மென்று கேட்க, சுக்கிரபகவான் சொல்லானுயினன்:—மூலப்பகுதியினின்றும் புத்திதோன்றும், அதினின்றும் ஆங்காரந் தோன்றும், அதினின்றும் ஐம்புலன்கள் தோன்றும், அவற்றினின்றும் பஞ்ச மஹா பூதங்களுண்டாகும், அவற்றால் ஆயிரங்கோடி யண்டங்களுண்டாகும். அவற்றுள் நீ பெற்றவை ஆயிரத்தெட்டண்டங்களேயாகும், அவற்றுள் ஒன்றன் தன்மையைச் சொல்லுகிறேன்கேள். சூரியகிரணங்களாலுண்டாகிற துகள் மூன்று சேர்ந்தால் மயிர்நுனியென்று சொல்லப்படும், அது எட்டுக்கொண்டது ஈர், அது எட்டுக்கொண்டதுபேன், அது எட்டுக்கொண்டதுகோதுமை, அது எட்டுக்கொண்டது அங்குலம், அது இருபத்துநான்கு கொண்டது முழம், அது நான்கு கொண்டது விற்கிடை, அது இரண்டு கொண்டது தண்டம், அது ஆயிரங்கொண்டது குரோசம், அது நான்கு கொண்டது ஒரு யோசனை, அது நூறுகோடிகொண்டது இவ்வண்டத்தின் அகல நீளங்களாகும், மற்றைய அண்டங்களுக்கும் இவ்வாறேயாவாம். பூமிக்குக்கீழ் ஐம்பதுகோடி யோசனையும், மேல் ஐம்பதுகோடி யோசனையுமுண்டு. பூமிக்கு நடுவேயுள்ள மேருவுக் கெட்டுத்திசையும் ஐம்பது கோடி யோசனையாம்; அண்டகடாகம் ஐம்பதுகோடி யோசனையாம். அண்டகடாகமோர்கோடியோசனைக்கு மேல் காலாக்கினி யுருத்திரர் கோயிலுண்டு. அது ஒரு கோடி யோசனை தூரம். அவரது திருமேனி அக்கினிச்சுவாலை பதினுயிரம் யோசனைவீசும். அவர்பலகை, வாள், வில், பாணமென்னும் இவற்றையணிந்திருப்பார். அக்காலாக்கினி யுருத்திரரைப்போன்ற பதின்மர் அவரைச் சூழ்ந்திருப்பர்; அவரைச் சூழ்ந்து குற்றேவல் செய்யும் பரிசனம ஒருபதுகோடி; அக்கடவுளது பாதங்களைத்துதித்து ஆதிகூர்மம் அப்புவனத்தில் வாசஞ்செய்யும். அந்தப்புவனத்தின் மேல யாவரும் நடுங்கத்தக்க இருபத்தெட்டுக்கோடி நரகங்களுண்டு, அதன் நீளம் கோடியே இருபத்தொன்பது யோசனைதூரம், அதன் பரப்பு பன்னிரண்டிலட்சம் யோசனையாம். அந்நரக புவனத்தின் மேல் ஒன்றொழிந்த நூறுலட்சம் யோசனையுயரத்தில் ஒரு புவனமுண்டு; அது கீழே மண்ணும் மத்தியில் இரும்பும் கிழக்கே பசும்பொற்சோதியு முள்ளதாயிருக்கும், அதன் மேற் பாகத்தில் கூர்மாண்டர் வாசஞ்செய்வர். அவர் கருமையான முகமும் மழுவாயுத மேந்திய கையும், ஊழித்தீயொத்த மேனியும், சுழல்கின்ற கண்ணும் உடையவராய்ப் பொற்பீடத்தி லெழுந்தருளியிருப்பர், அவரைச் சூழ்ந்திருக்கும் உருத்திர கணங்களின் கணக்கோ அளவில்லை. அந்தப்புவனத்திற்கு மேல் இடைவெளி யொன்பதிலட்சம் யோசனையென்று சொல்லுவார்கள். அதற்குமேல் பாதாளங்களிருக்கின்றன. மேலேயிருக்கும் கனிட்ட பாதாளம் எட்டி லட்சம் யோசனை; அப்பாதாளத்தினகலம் வெவ்வேறு பதினுயிரம் யோசனையாம். அவற்றின் மூன்று பாகத்துள் கீழ்ப்பாகத்தில் அவுணர்களும், மத்தியில் அரக்கரும, மேற்பாகத்தில் ஒளியுள்ள பற்களையுடைய நாகரும் வாசஞ்செய்வார்கள். இதற்குமேல் ஒன்பதி லட்சம் யோசனை தூரம் ஆடகேசுரர்புவனமாம். இதன்மேல் இடைவெளி யொருகோடியே இருபது லட்சம் யோசனையாம, இதற்குமேல் எட்டுத் திசையானைகளும், அட்டமாநாகங்களும் ஆதிசேஷனுடன் பூமியைத் தாங்கிக்கொண்டிருக்கும். இப்பாதாளங்கட்கெல்லாம் தலைவராகப் பாதுகாப்பவர்கள் ஆடகேசுரர்களேயாம். இவர்களைச்

சேவித்துக்கொண்டிருப்பவர் நாகரும் அரக்கரும் அவுணர்களுமாம். அண்டகடாக முதற்பூமி வரையிலும் ஐம்பது கோடி யோசனை யளவாம். இதை நீயேயறிந்து கொள். பலவகையான பாதாளங்கட்கெல்லாம் மேலானதாயிருக்கும் இந்தப் பூமியின் விரிவையுஞ் சொல்லுகின்றேன். அது நாவலந்தீவு, இறலித்தீவு, குசைத்தீவு, கிரவுஞ்சத்தீவு, புட்கரத்தீவு, தெங்குத்தீவு, சமுகத்தீவென்னு மேழுதீவினதாம். இவ்வுலகத்தைச் சூழ்ந்து எழு சமுத்திரம் இருக்கும். அவை உவர்க்கடல், பாற்கடல், தயிர்க்கடல், நெய்க்கடல், கருப்பஞ்சாற்றுக்கடல், தேன்கடல், நன்னீர்க்கடல்களாம. இவ்வுலகத்திற்கு அப்பால் சுவர்ண பூமியுண்டு. அதைச் சக்ரவாளகிரி சூழ்ந்திருக்கும். அதற்கப்பால் சமுத்திரங்களுக்கெல்லாம் பெரிய சமுத்திரமாகிய பெரும் புறக்கடலுண்டு. அதற்கப்பால் இருள்சூழ்ந்த விடமுண்டு. இவ்வண்டத்துடனேயும இப்பொருள்கள் சூழ்ந்திருக்கும். எல்லையகன்ற முதல் தீவினளவு ஓர் இலட்சம யோசனையாம், எனையதீவுகளும் அதற்கிரட்டிப்பாகச் சொல்லுவார்கள். அப்படி கண்ட தொகை இரண்டு கோடியே ஐம்பத்து நான்கு லட்சம் யோசனையாம். சொர்ண பூமி பத்துக்கோடி யோசனையாம். இதைச் சூழ்ந்த சக்ரவாளகிரி பதினாயிரம் யோசனையாம. அச்சக்ரவாளகிரியைச் சார்ந்த புறத்தினுள்ள பூமி கோடியே இருபத்தேழு லட்சம் யோசனையாம். இனி இருள் சேர்ந்த உலகத்தினெல்லையைச்சொல்வேன்:- அந்த இருள் உலகம் முப்பத்தஞ்சுகோடியே பத்தொன்பது நூற்று நாற்பதினாயிர யோசனையளவாம. இருள் சேர்ந்த அண்டப்பித்திகையின் கனம் கோடியோசனையாம். அதனகலம் இருபத்தஞ்சுகோடி யோசனையாம். பழைமையான நூலிற் சொல்லியபடி ஒவ்வொரு திசையும் நூறு யோசனையளவாம். தாமரைப்பூவிலெழுந்தருளிய பிரமதேவனது வலத்தோளில்வந்த சுவாயம்புமநுவின் மகனாகிய வேலையேந்திய பிரிய விரதன் என்போன் உலகமுழுதும தனது செங்கோல்செலுத்தி யரசாண்டான். அவன் புத்திரர்களாகிய ஆக்கினீத்திரன், மேதாதி, வபுட்டி, சோதிட்டு, துதிமான் அவ்வியன, சேமிக்கவசன் என்னும் எழுவரும் அச்சுவாயம்பு மநுவின் மகனாகிய தம்முடைய தந்தையாண்ட உலகமுழுதும் பிரித்துச் சப்ததீவுகள் என்று சொல்ல அரசாண்டு வந்தார்கள். முன்னே சொன்ன சப்ததீவுகளில ஜம்புத்தீவாகிய நாவலந்தீவையாண்ட ஆக்கினீத்திரனென்பவனுக்கு ஒன்பது பிள்ளைகளுண்டு. அவர்களுக்கு அவர்கள் பெயராலேயே நவகண்டங்களாகப் பிரித்துக்கொடுத்தான், அவர்கள் பாரதன், கிம்புருஷன், அரி, கேதுமாலன், பத்திராசுவன, இளாவிருதன, இரமியன், இரணியன், குருவென்னப்படும் அவர்கள் நவகண்டமாகப் பிரித்த ஜம்புத்தீவை தனித்தனியே யாண்டு வந்தார்கள். அந்த ஜம்புத்தீவின் நடுவிலேதான மகாமேருமலையிருக்கின்றது. அது செந்தாமரைப் பொகுட்டைப்போல விளங்கியிருக்கும். அதனுயரம எண்பத்து நாலாயிரம் யோசனையுயரமாம். அந்த மேருமலையினுச்சியில் பிரமனுக்குரிய மனோவதியென்னும் சத்திய லோகமிருக்கும. அம்மலைக்கு மேற்குத்திசையில் விஷ்ணு வசிக்கும் வைகுந்த மிருக்கின்றது. அம்மலையின் வடகிழக்குத்திசையில் இறைவன் வீற்றிருக்கும் கைலை யிருக்கின்றது, அம்மலையில் எட்டுத்திசையிலும் இந்திரன் முதலிய எண்மரும் அமராவதி முதலிய நகரங்களைக்கட்டி யாண்டுவருகின்றார்கள். அதற்குத் தெற்கு முதல் வடக்களவும் மத்தியில் அழகிய ஓர் தேசமிருக்கின்றது. அதற்கப்பால் ஒரு துவாரமொன்று சோகாகிற்கும், அந்த மலையின் கிழக்கே மந்தரமலையிருக்கின்றது, அதுவோ வெண்மைநிறமுள்ளது; அதற்குத் தெற்கில் கந்தமாதனமலை யிருக்கின்றது. அதன்நிறம் பொன்னிறம, மேற்றிசையில் அழகிய நீலமலையிருக்கின்றது. வடதிசையில் சுபார்சுவமலை யிருக்கின்

றது, அதினிறம் மாதுளம்பூவினிறமாம். அம்மலை நான்கிற்கும் அடியகலம் எண்ணுயிரம் யோசனையாம், பதினுயிரம்யோசனை நீளமுமாம். அம்மலைகளினுச்சிகளில் கடம்பு, நாவல், அரசு, ஆல் என்னுந் தருக்களிருக்கும். அவற்றில் நாவல்மரம் இரண்டாயிரம்யோசனை யுயரமுள்ளதாயிருக்கும். அந்தமந்தரமலையின் அடிவாரத்தில் அருணமென்னும் தடாகமிருக்கின்றது. மேற்புறத்தில் அசிதேதமென்னும் தடாகமும் தென் திசையில் மானசையென்னுந் தடாகமுமுண்டு. வடக்கிற் சயித்ரமென்னுஞ் சோலையும், தெற்கில் விசித்ரை யென்னுஞ் சோலையுமுண்டு. மேற்கில் வைப்பிரசை யென்னுஞ் சோலையும் வடக்கில் திருதாக்கிய மென்னுஞ் சோலையுமிருக்கின்றன. அம்மலையடிவாரத்திலுள்ள நாவல்மரத்தின் சாறொழுகிவரும் பூமியாகையால் பாரதன் ஆண்டுவந்த அந்தக்கண்டத்தை நாவலந்தீவென்று சொல்லுகிறார்கள். அப்பழத்தின்சாறு ஆறாகப்பெருகியோடி மேரு மலைமுழுதுஞ் சூழ்ந்து வடபாற்சென்று சாம்புநந்த மென்னும் பெயர் தொண்டுலாவும். அந்த நீரையுண்டவர்களுடைய உடம்பு முழுதும் பொன்மயமாம். அவர்கள் பதின்மூவாயிர வருஷம் ஜீவித்திருப்பார்கள். அம்மலையைச்சேர்ந்து அட்டகிரியுண்டு. அவை மாலியவான், கந்தமாதம், நிஷதம், எமகூடம் இமயம், நீலம், சுவேதம். சிருங்கமென்பனவாம்.

இனி நவகண்டங்களின் அளவைச் சொல்லுகிறேன:—வடகடல் முதலாகச் சிருங்ககிரிவரையும் குருவருஷம், இருங்ககிரிமுதல் சுவேதம்வரையும் இரணியவருஷம், சுவேதத்திற்கும் நீலமலைக்கும் நடுவே இரமியவருஷம், மேருமலையைச் சூழ்ந்த வருஷம் இளாவிருதமென்று சொல்லப்படும். கந்தமாதன மலைமுதல் மேற்கடலுக்கு மத்தியிலுள்ளது கேதுமாலவருஷம். மாலியவான்மலைமுதல் கிழக்குக் கடல்வரையிலுமுள்ளது பத்திரவருஷமெனப்படும். நிசத முதல் எமகூடம் வரையிலும் அரிவருஷமாம். எமகூடமுதல் இமயமலைவரையிலுமுள்ளது கிம்புருஷவருஷமாம். தென்கடற்கும் இமயகிரிக்கும் நடுவேயுள்ளது பாரதவருஷமாம். கேதுமாலவருஷ முதல் பத்திரம் வரையிலும் முப்பத்துநாலாயிரம் யோசனையாம், பாரதவருஷம் ஒன்பதினுயிரம் யோசனை விரிவுள்ளது. குருவருஷத்தில் வசிப்பவர் ஒருபோது தாயிடத்தே ஆண்பெண்ணாகப் பிறந்து தாங்களன்பாகவே கலந்து சுகித்திருப்பர். அவர்களுக்குணவு தெய்வத்தருக்க ளளிக்கும் காய்கனிகளேயாம். அவர்கள் நிறமோ பச்சை நிறம், அவர்கள் ஆயுள் பதின் மூவாயிரம் வருஷமாம். அதற்குள் வடபாகத்தில் முனிவர்களும் சாரணரும் சித்தரும் வசிப்பார்கள். அவர்களுக்கு ஆயுள் பதின் மூவாயிர வருஷம்; அவர்கள் நிறம் படிக நிறம். பத்திராசுவவருஷத்திலிருப்பவர் காய்கனி யருந்துவார்கள். அவர்களுக்கும் ஆயுள் பதின்மூவாயிரவருஷம். இரமிய வருஷத்தில் வசிப்பவர் பழவருக்கம் புசிப்பார்கள், அவர்கள் நிறம் சந்திரனது நிறமாம். அவர்கள் இரண்டாயிரத்தைஞ்ஞூறயுதம் வசிப்பார்கள். இரணியவருஷத்திலிருப்போர் ஆலமரக் கனிகளைப்புசிப்பார்கள். குவளைப்பூவினிறமுடையவர், அவர்களுக் காயுள் பன்னீராயிரமென்றே சொல்லுவார்கள். இளாவிருதவருஷத்திலிருப்பவர்கள் வெள்ளைநிறமுள்ளவர்கள். கருப்பஞ்சாற்றைச் சாப்பிடுவார்கள், பன்னீராயிரயுகம் வசிப்பார்கள். கேதுமால வருஷத்திலிருப்பவர்கள் பசுங்குவளைப்பூவினிறமுடையவர்கள், கண்டகியின் பழத்தைப் புசிப்பார்கள், அவர்களுக்காயுள் பன்னிரண்டாயிரமாம். அரிகண்டத்தில் வசிப்பவர் பதினுயிரம் வருஷஞ் சீவிப்பர், அவர்கள் காய்கனியைப்புசித்து வாழ்வார்கள், அவர்களும் சந்திரனைப்போலும் நிறம்பெற்றிருப்பார்கள். கிம்புருஷ வருஷத்தில் வசிப்பவர் இறலியின்பழம் புசிப்பார்கள், அவர்கள்நிறம் பொன்னிறம், அவர்கள் பதினுயிரம்

வருஷம் ஜீவித்திருப்பார்கள். ஏமகூடமலைக்குத் தெற்கில் இமயகிரிக்குவடக்கில பெருமைபொருந்திய கைலாசமலையிருக்கின்றது. அதில் ஸ்ரீகண்ட பரமசிவனா எழுந்தருளியிருப்பர், அம்மலை எக்காலத்திலும் அழிவில்லாமலிருக்கும். மேற் சொன்ன எட்டுக்கண்டத்திலும் வசிப்பவர்கள் துன்பம் பிணி நரை திரை மூப்பு களைச் சிறிதேனுமடையார்கள். அவர்கள் கிருதயுகம்போலவே மற்றயுகங்களிலும வலிமைகுன்றாத வறிவு, தேகபலம், தேகமுயற்சி முதலியவற்றைப் பெற்றிருப்பா கள். அவர்கள் பாரதத்தில் வந்துபிறந்து செய்துகொண்ட நல்வினைப்பயன்களை மேற்சொன்ன எட்டுக்கண்டங்களிலும்போய்ப் பிறந்தனுபவிப்பார்கள். அங்கே மழையென்பதே பொழியமாட்டாது. இதுகிடக்க.

பாரதவருஷத்தில் வசிப்பவர் பூமியிற் பிறந்தபிறகு பலதொழிலுஞ்செய்து அறம்பாவமென்னு மிரண்டையுஞ் செய்ததனால் ஆதிதெய்விகம் ஆதிபௌதிகம ஆதியாத்மிகமென்னு மூன்றினுலாகிய பயனையடைவார்கள். அவர்களுக்கும் பெரு மை வலிமை ஆயுள் உருவம் உணவு செய்கைகள் யுகங்கள்தோறும் பேதப்பட்டிரு க்கும். அவ்விடத்தில் சோளை முதலிய பலதானியங்களுமுண்டாகும். பரிசுத்த மான காய்கனி முதலியவற்றையும் புசிப்பார்கள். இனி இப்பாரதமொழிந்த மற்ற எட்டுக்கண்டத்திலிருப்பவர்களாகிய தேவரும் நகரவாசிகளும் அவ்விடத்திற்பொ ருந்திய நல்வினை தீவினைகளைச் செய்து அவற்றின்பயனை யனுபவிப்பார்களென்றால் தீவினை நல்வினையென்னும் செய்கைகளுக்கெல்லா மூலகாரணமாயிருப்பது இப் பாரதவருஷமேயாகும், தங்களுக் கொரு குறை நேரிட்டால் தேவர்களும் முனிவர் களும் தவமும் பூசையும் இப்பாரதகண்டத்தில் வந்துசெய்தே முற்றுப்பெறுவார்கள். புலவர்கள்புகழும பரதனும் இந்திரன், சசேருசன், தாமிரபன்னன், கபத்தி,நாகன், சௌமியன், கந்தருவன், வருணன் என்னும் புத்திரரையும் குமரியென்னும் பெண ணையும்பெற்று அவர்களால் நவகண்டமாகப்பிரித்தான். அப்பாரதவருஷத்தில் கங் கை, கௌதமி, யமுனை, கௌரி, சரஸ்வதி, காவிரி, நருமதை, பாலி, கம்பை, பம் பை, துங்கபத்திரை, குசை, கோமதி, பாஞ்சாலிமுதலிய புண்ணியநதிகளிருக்கின் றன. மகேந்திரம், மலயம், சையம், சத்தி, மாகிருடம், பாரியாத்திரம், விந்தமென் னும் ஏழுகிரிகளும்; காஞ்சி, காசி, அயோத்தி, மதுரை, மாயை, அவந்தி, துவாரகை என்னுஞ் சத்தபுரிகளும் இவையல்லாமல் ஆயிரத்தெட்டுச் சிவாலயங்களும்; அந் தணர்முதலியோர்வசிக்கும் பலதேசங்களுமிருக்கின்றன. இதுதான் மெய்ந்நெறிக இருப்பிடமாயிருப்பது; இதைக் குமரிகண்டமென்றுஞ் சொல்லுவார்கள். ஏனைய எட்டுக்கண்டங்களும் மிலேச்சருக் கிருப்பிடமெனப்படும்; அவைகளோ வியக்தி சொல்லப்படாதவை. இதுநிற்க.

பாற்கடல்சூழ்ந்த சாகத்தீவினெல்லையினையாண்ட அரசனாகிய மேதாதி என பவன் சாந்தவயன், சிசிரன், சோதயன், ஆனந்தன், சிவன், கெமகன், துருவன என்னும் புத்திரரைப்பெற்று அவர்களாலே சத்தவருஷங்களையுண்டாக்கி யாண்டு வந்தான். அத்தீவின்கடவுள் வாயு; ஆரியர், விந்தகர், குகரர் அங்கே வசிப்பார் கள். ரோமகம், சமனம், சந்திரம், துந்துபி, வப்பிரோசனம், நாரதீயம், கோமதமெ ன்னும் சத்தகிரிகளும்; சிவை, விபாவை, அமிர்தை, சுகிர்தை, மனுதத்தை, சிததி, கிரமையென்னும் சத்தநதிகளுமுண்டு. தயிர்க்கடல்சூழ்கின்ற குசத்தீவினையாண்ட வபுட்டு என்று மரசனுக்கும் சுப்பிரதனு, காரமிகன், தீரன், மூகன், சுவேதகன், சித்தியன், வயித்திதன் என்னு மேழு புத்திரருண்டு, அவன் இவர்கள்பேரால் சதத வருஷமாக்கி யவர்களுக்குக்கொடுத்தான். அதில் உன்னதம். குமுதம், குமாரம,

மேகம், சந்தரம், மகிடம், துரோணம் என்னும் ஏழுமலைகளும்; சோனை, வெள்ளி, மதி, தோமை, நேத்திரை, விமோசனை, விருத்தியென்னு மேழுநதிகளு மிருக்கின்றன. தர்ப்பரர், கபிலர், சாரணர், சீலத்தர், தண்டர், விதண்டகரென்பவரே அவ்விடத்தில் வசிக்கும் சனங்களாம். அப்பால் நெய்க்கடல்சூழநின்ற கிரவுஞ்சமென்னுந் தீவுண்டு. அதைச் சோதிட்டாவென்பவன் அரசாண்டுவந்தான். அவனுக்குச் சாரணன், கபிலன், கிருதி, கீர்த்தி, வேனுமான், இலம்பகன், உற்பிதனென்னும் ஏழு புத்திரருண்டு, அவர்களால் ஏழுவருஷமாக்கி அவர்களுக்குப் பிரித்துக்கொடுத்தான். அவர்களு மரசாண்டுவந்தார்கள்; கருப்பஞ்சாறு கடல்சூழநின்ற சான்மலித்தீவிற்கரசன் துதிமான். அவனுக்குக் குசகன், வெய்யன், தேவன், முனி, அந்தகாரன், மனோரதன், துந்துபியென்னு மேழுபுத்திரர் உண்டாயினர். அவன் அவர்களால் அதை ஏழுகண்டங்களாகப் பிரித்துக்கொடுக்க, அவர்க ளரசாண்டு வந்தார்கள். திமிரம், சுரபி, வாமனம், விருத்தம், துந்துபி, சம்மியத்தடம், புண்டரீகமென்னுஞ் சத்தகிரிகளும்; குமுதம், கவரி, ஆதி, யாமை, புண்டரீகை, மனோபமை, சந்தியை என்னு மேழுநதிகளுமுண்டு; இதில் புட்டலாதர், புட்கரர், தனியர், சிகிரரென்பவர் வசிப்பார்கள். இதற்குக் கடவுள் ஈசன். இதற்கப்பால் மதுக்கடலிருக்கின்றது. அதைச்சூழ்ந்ததீபம் கோமேதகதீபம், அவ்வியனென்பவன் அத்தீவுக்கரசன். அவ்வரசனுக்கு ஏழுபுத்திரருண்டு; அவர்கள் விமோசனன், மோசன், சகலன், சோமன், சுகுமாரன், குமாரன், மரீசகன் என்று சொல்லப்படுவார். அவனும் அதை தன்மக்களால் ஏழுகண்டங்களாகப் பிரித்துக்கொடுத்தான். அதில் சிங்கம், அத்தம், உதயம், சலகம், கிரவுஞ்சம், ஆம்பி, கேயம், இரமியம் என்னு மேழுமலைகளும், அயாதி, தேனு, கபத்தி, சுகுகாரி, குமாரி, இட்சு, மாயை என்னுஞ் சத்தநதிகளுமுண்டு; அந்தகர், ஆமங்கர், மாகதர், மானசர், இவர்களே அங்குவசிக்கும் சனங்கள். சந்திரனே அவர்கள் தெய்வம். அதற்கப்பாலிருக்கும் சுத்தோதக சமுத்திரத்திலுள்ளதீபம் புட்கரத்தீபமென்பார்கள்; அதற்கரசன் சவனன். அவன் தன்மக்களாகிய தாதகி, மாபீதனென்னு மிருவருக்கும் அதை இருகூறாக்கிக் கொடுத்தான். இடபம், மகேந்திரம், வருணம், வராகம், நீலம், இந்திரம், மந்திரியம் என்னும் ஏழுகிரிகளும் குடிலை, சிவை, உமை, தரணி, சுமனை, சிங்கை, குமரி என்னு மேழுநதிகளுமுண்டு; நாகர் அதில்வசிக்கும் சனங்களாம். அவருக்குச் சூரியனே கடவுள். புட்கரதீபத்தின் முடிவிலேயம்பதினாயிரம் யோசனைதூரத்தில் மானசோத்தரமென்று சொல்லப்படும் ஒருமலையுண்டு; அது சகடக்கால்போல வட்டணையாயிருக்கும். அதில் இந்திரன்முதலிய இறைவரெண்மரும் வாசஞ்செய்யும் பதங்களிருக்கின்றன.

ஒவ்வொரு சமுத்திரத்தின் முடிவிலும் சூழ்ந்து ஒவ்வொருமலையிருக்கும். இங்கே சாகமுதலிய தீவிலிருப்பவர்களுக்கு நரை திரை மூப்பிவைகள் சுத்தமாகவேயில்லை; அவர்கள் கலியுகத்திலும் கிம்புருடர் தன்மையைப்பெற்றிருப்பார்கள்; அதற்கப்பால் சுவர்ணபூமியிருக்கின்றது. அதைச்சூழ்ந்து சக்கரவாளகிரியிருக்கின்றது. சக்கரவாளகிரிக்கப்பாலிருக்கும் பூமி பிரகாசமுள்ளதாயிருக்கும். அப்பாலிருக்கும் பூமி யிருண்டேயிருக்கும். அதில் இயக்கர், இராக்கதர், பேய்கள்வசிப்பார்கள். திசைக்கடவுளரும் தாமிருக்குந்திசைகளில் மேருமலையில் தங்குவதுபோல அங்கேதங்குவர். அதற்கப்பால் அண்டமிருண்டிருக்கும். ஊழினால் தத்தம் உயிரைத் தாமேயொழித்தவர்களும் தெளிந்த வறிவில்லாதவரும் அந்தச் சக்கரவாளகிரியின் புறத்திற் சூழ்ந்திருப்பார்கள். சம்புத்தீபமுதல் அண்டச்சுவர்வரையிலும்

பூமியுண்டென்று புலவர் சொல்லுவார்கள். இப்பூமியின்மேல் கணங்களினுலக முண்டு; அதற்குமேல் கிம்புருடர், கருடர், சித்தர், வித்தியாதரர், இயக்கர்வசிக்கும் உலகங்களுண்டு; இதற்குமேல் தெய்வகங்கை செல்லுமிடமுண்டு; அதற்கப்பால் சூரியமண்டலம் பூமிக்கு இலட்சம்யோசனையில் இருக்கின்றது. அம்மண்டலத்தில் முக்கோடிதேவர்கள் சூரியனோடுவழிக்கொண்டு செல்வார்கள். அதற்குமேல் சந்திரமண்டலமுண்டு; அதற்கு லட்சம்யோசனையில் நட்சத்திரமண்டலமுண்டு; அதற்குமேல் இரண்டிலட்சம்யோசனையில் புதனுலகமுண்டு; அதற்குமேல் சுக்கிரனுலகம் இரண்டுலட்சம் யோசனை தூரத்திலிருக்கின்றது. அதற்கு இரண்டுலட்சம்யோசனையில் அங்காரகனுலகமுண்டு. அதற்குமேல் இரண்டுலட்சம் யோசனை தூரத்தில் பிருகஸ்பதி உலகமுண்டு; அதற்குமேல் சனியுலகம் இரண்டுலட்சம் யோசனை தூரத்திலிருக்கின்றது. அதற்குமேல் இரண்டுலட்சம் யோசனையில் சத்தருஷிகள் தங்குமிடம் இருக்கின்றது. அதற்கப்பால் துருவமண்டல மிருக்கின்றது. இப்படிசொல்லிய புவர்லோகத்தினெல்லை பதினைந்திலட்சம் யோசனையாம். இந்தவுலகத்துக்கு மேலுள்ளதேசம் சத்தமருத்துக்கள்வசிக்கு மெல்லையாம. இப்புவர்லோகத்தின்மேல் சுவர்க்கலோகம் எண்பத்தஞ்சிலட்சம் யோசனையாம். அங்கே தேவர்களும் பிறரும் தன்னைத்துதிக்க இந்திரன் அரசுவீற்றிருப்பான். அப்பால் மகலோகம் இருகோடியளவினதாகும்; அதில் மார்க்கண்டர்முதலிய பலமுனிவர்கள் வாழ்ந்திருப்பார்கள். அப்பாற் சனலோகமிருக்கும், அங்கே பிதிர்த்தேவர்கள் வாசஞ்செய்துகொண்டிருப்பார்கள். தவலோகத்தின் உயரம் பன்னிரண்டுகோடி யோசனையாம். அங்கே சனகர்முதலிய ருஷிகள் வாசஞ்செய்துகொண்டிருப்பர். அதற்குமேல் சத்தியலோகம் பதினாறுகோடி யோசனையாம்; மூன்றுகோடியோசனைக்கப்பால் பிரமன்வசிக்குமிடம். அதற்குமேல் மால் வசிக்குமுலகம் மூன்றுகோடி யோசனைதூரமாம். அதற்கப்பால் நாற்கோடி யோசனைதூரத்தில் சிவலோகமாம். அதற்கப்பால் கோடியோசனைதூரத்தில் அண்டகோளகையிருக்கின்றது. வேதாகமங்களும் அவற்றின் சார்பான ஸ்மிருதிகளும் புராணங்களும் வெவ்வேறாகவெடுத்துச்சொல்லும் அண்டங்களினியற்கை மலைவென்பேமென்றால் உண்மைதெரியும்போது படைப்பின்வகை பல பேதப்பட்டிருப்பதென்பதை அவற்றின் வேறுபாடாராய்ந்து உனக்குத் தெரிவித்தேன். இவ்வண்டத்தில் நூற்றெட்டுப் புவனங்களிருக்கின்றன. அவைகள் உருத்திரர்கட் கிருப்பிடமாயிருக்கும். இந்த அண்டத்தினியற்கையும் உனக்கிறைவன்கொடுத் துதவிய ஆயிரத்தெட்டண்டங்களின்றன்மையும் இவ்வாறேயாம். நீயே போய்ப்பார்த்து யான்சொன்னதைத் தெரிந்துகொள்ளென்று சுக்கிரபகவான்சொல்லச் சூரபதுமன்கேட் டதிக சந்தோஷமடைந்தான்.

அண்டகோசப்படலம் முற்றிற்று.

## திக்குவிசயப்படலம்.

குணங்கள் பற்பல வுணர்த்திய குரவன்றன் கழல்கள்
வணங்கி வாளரி முகனொடு விடைகொண்டு வயமா
னணங்கு வைகிய திறலுடைச் சூரர்கோ னவுண
ரிணங்கு தானையங் கடலிடைப்புக்கன னிமைப்பில். (௧)

சேனை யின்றலை புகுதலுந் தாரகன் சென்று
கோனை வந்தனை செய்துதன் முன்னவற் குறுகி
யான பான்மையின் வணங்கிமுன் னின்றிட வாசான்
போன வெல்லையிற் புகன்றன பரிசெலாம் புகன்றான். (௨)

ஆவ தாகிய பரிசெலாங் கேட்டுணர்ந் தவனுந்
தாவி லாததன் மனங்கொடு நன்றிது தலைவ
மேவ லார்களை யாமினி வென்றிட விரைவிற்
போவ தேகட னென்றன னன்னதோர் பொழுதின். (௩)

அந்தி வார்சடைக் கண்ணுதற் கடவுட னருளான்
மைந்தர் மூவரும் பெற்றதொல் வரங்களும் வலியுஞ்
சிந்தை யுள்ளுற நாடியே யளியொடுஞ் சேணில்
வந்து தோன்றின டொல்லைநா ணோற்றிடு மாதை. (௪)

தோன்று மெல்லையின் முந்துறக் கண்டுவெஞ் சூர
னூன்ற தம்பியர் தம்மொடு மசமுகி யோடு
மூன்று மன்பொடு பணிதலு மன்னைதன் னுள்ள
மீன்ற ஞான்றினு முவந்தன ளாசிக ளிசைத்தாள். (௫)

ஆசி கூறியே வேள்வியிற் செய்கையு மதனுக்
கீச னல்கிய வரங்களுங் கேட்டன ளீண்டு
நேச மோடுமைக் காணிய வந்தன னீவிர்
வாச வன்முத லோர்தமை வெல்லுதிர் வலியால். (௬)

வென்ற பின்னரெவ் வுலகமும் புரந்துமே தினியி
லென்றும் வாழுதிர் மாயைகள் வேண்டிடி னென்னை
யொன்று மன்புட னுன்னுதி ருன்னிய பொழுதே
சென்று வெஃகிய *தன்மைகள் செய்தியான் முடிப்பேன். (௭)

ஈத லாலுமைப் பிரியலன் பன்முறை யானே
காத லோடுமைக் காணிய செல்குவன் கலந்து
பேத நீரற விருத்திரா லீண்டெனப் பேசி
மாது மேகினண் மைந்தர்கண் மூவரும வணங்க. (௮)

தோடு லாவிழிப் பொற்றொடி யேகலுஞ் சூரன்
கோடி தேருடன் றானவர் தங்களைக் கூவி
நீடு நம்பெருந் தானைக ணிதிபதிக் கேகப
யாடன் மாமுர சறைமினோ கடிதெனப் பணித்தான். (௯)

அரச னேவலு மவுணர்க ளன்னவா றறைந்து
முரச மெற்றினர் கேட்டலு மத்திசை முன்னி
யுரைசெய் நான்முக னுறங்குழிப் புவிகொள வொருங்கே
திரைசெய் வான்கடல் சென்றெனச் சென்றது சேனை. (௧௦)

பத்து நூறுட னாயிர மாதியாய்ப் பலவாங்
கொத்து நீடிய சென்னியர் கொடுமைசேர் குணத்தோர்
மெத்து பல்படை யேந்திய கரத்தினர் விறலோர்
கத்து வார்கட லார்ப்பின ரவுணர்தங் கணத்தோர். (௧௧)

விண்ணிற் பாய்வன விரவிதேர் பாய்வன வேலைக்
கண்ணிற் பாய்வன திசைகளிற் பாய்வன கனன்மேற்
பண்ணிற் பாய்வன வரைகளிற் பாய்வன பரவை
மண்ணிற் பாய்வன புரவிக ளளப்பில மாதோ. (௧௨)

பாறு சென்றிடக் கொடியினஞ் சென்றிடப் பலபேய்
வேறு சென்றிடப் பாரிடஞ் சென்றிட விண்மேன்
மாறு சென்றிடப் பிணிமுகஞ் சென்றிட மதநீ
ராறு சென்றிடச் சென்றன யானையி னனிகம். (௧௩)

மேருச் சையமுங் கைலையு மல்லது வேறு
நேரற் கொத்திடு கிரிமிசைச் செல்வன நீலக்
காரிற் செல்வன விண்மிசைச் செல்வன கடல்சூழ்
பாரிற் செல்வன செல்வன வாழியம் பன்னோர். (௧௪)

மூன்று கோடியோ சனையதாய் நாற்றிசை முற்று
மான்ற வெல்லையி னவ்வகைத் தாகிய வனிக
மேன்று சென்றன சென்றதோ ரளவையி னினன்போற்
றோன்று பொன்சுட ரளகையை யடைந்தன தூசி. (௧௫)

பூத மைந்தினு மிகவலி யுடையது பொலஞ்சே
ராத வன்றனித் தேரினுஞ் சிறப்புற்ற தவனிற்
சோதி பெற்றது பேருணர் வுள்ளது தொல்சீர்
மாதி ரங்களை யகற்றியான் மறைப்பது மன்னோ. (௧௬)

என்று மேயறி வில்லது மேருவோ டிகலுங்
குன்று போலுவ தகிலமு மிமைப்பினிற் குறுகிச்
சென்று மீள்வது குறிப்பினிற் செல்வது சிதையா
வொன்று கோடிய வாம்பரி பூண்டதொ ரேர்ந்தே. (௧௭)

ஆழி லாப்பல சாரதி யுள்ளதங் களப்பில்
விழுமி தாகிய படையெலாங் கொண்டது மேவா
ரொழிய வன்னவர் தேர்மிசைச் செல்லுவ தருமேற்
றெழிலி யச்சுறப் பன்மணி கறங்குவ தென்றும். (௧௮)

பாரை நேர்தரு பரப்பின தலகெலாம் படைத்த
நாரி பாதிய னளித்தரு ளிந்திர ஞாலத்
தேரின் மால்வரை மிசையுறும் வயப்புலி செலல்போற்
சூர னேறியே போந்தன னவுணர்க ளொழுவே. (௧௯)

ஆண்டவ் வெல்லையி லாயிர மாயிரம் யாளி
தாண்டு வெம்பரி யாயிர மாயிரந் தடந்தோ
ணீண்ட பாரிட மாயிர மாயிர ரிரலே
பூண்ட தேர்மிசை யேறியே யரிமுகன் போந்தான். (௨௦)

காலு முள்ளமும் பின்னுற முன்னுறு கவனக்
கோல மாப்பதி னாயிரம் பூண்டதோர் கொடிஞ்சிச்
சால மார்தரு வையமேற் புகுந்ததா ரகனு
மால மென்பது சென்றென நடந்தன னன்றே. (௨௧)

அன்ன தாரக வீரனு மரிமுகத் தவனு
மன்ன னேரிரு பாங்கரு மாயினர் வந்தார்
துன்னு தானவத் தானையந் தலைவர்க டொலையாப்
பொன்னின் மாமணித் தேரொடு மேகினர் புடையில். (௨௨)

விரவு கின்றதோ ரேனையர் சேனையின் வீரர்
கரியெ னுங்கடன் மீதினுங் கலினமார் கவனப்
பரியெ னுங்கடன் மீதினு முதல்வனைப் பரவி
யிருமருங்கினும் போயினர் கூற்றனு மிரங்க. (௨௩)

அடல்செ றிந்திடு மொன்பதிற் றிருவகை யாகும்
படைக ளேந்தியே யளவிலா வவுணர்கள் பரவிக்
கடல்கி ளர்ந்தவண் சூழ்வன போன்றுகா வலர்தம
புடையில் வந்தன ரசனியு மச்சுறப் புகல்வார். (௨௪)

இன்ன தன்மையி னூற்படை சூழ்தர விதனைப்பா ற
றுன்னு தேரென வுள்ளவுந் துரகமுள் ளனவும்
பன்னெ டுங்கரி யுள்ளவு மவுணர்கள் பலரு
மன்னி வந்திட நடுவுற வேகினன் மன்னன். (௨௫)

வயங்க ளார்த்திடு தானவ ரோதையு மான
ரயங்க ளார்த்திடு மோதையு மன்னவை யணிந்தாய
கயங்க ளார்த்திடு மோதையுங் கண்டையின் கலிப்பு
மியங்க ளார்த்திடு மோதையு மிக்கன வெங்கும். (௨௬)

அரியெ னுந்திற லவுணர்க ளங்கையி லேந்து
முரிய வெம்படை முழுவது மொன்றொடொன் றுரிஞ்ச
வெரியி றந்தன செறிந்தன வெம்பிரான் முனிந்த
புரமெ னும்படி யாகிய வரைகளும் புவியும். (௨௭)

நிரந்த தானவ ரெழுந்திடப் பூழிக ணிலமேற்
பரந்து வானகம் புகுதலு மனையது பாரா
விரிந்து போவதை நீங்கியே யவைதனை யெய்தக்
கரந்து வைகின னூழியந் தேருடைக் கதிரோன். (௨௮)

பூந டுங்கின பணிக்குல நடுங்கின புரைதீர்
வான டுங்கின பாதிர நடுங்கின வரைக
டாந டுங்கின புணரிக ணடுங்கின தறுகட்
டூந டுங்கின நிருதர்கோன் பெரும்படை செல்ல. (௨௯)

இனைய தன்மையிற் சேனைக டம்மொடு மிறைவன்
றனதன் மாநகர் வளைந்தன னன்னதோர் தன்மை
வினவி யோடியே தூதுவ ரியக்கர்கோன் மேவுங்
கனக மாமணிக் கோநகர் சென்றனர் கடிதின். (௩௰)

வேறு.

சென்றிடு மொற்றர் தங்கோன் சேவடிக் கமலந் தாழ்ந்து
வன்றிறற் சூர பன்மன் மாநகர் வளைந்து கொண்டா
னின்றினி யழியும் போலு மீண்டுநீ யிருத்தல் சால
நன்றல வனிகத் தோடு நடத்தியா லமருக் கென்றார். (௩௧)

தூதவ ருரைத்தல் கேளாத் துன்புகூர் துளக்க மெய்தி
யேதமி லவுணர் தம்மை யாம்வெலற் கரிது மூக்க
ணுதிதன் வரங்கொண் டுள்ளா ரவர்ப்புகழ்ந் தாசி செய்வான்
போதுதல் கடனே யென்னுப் பொருக்கென வெழுந்து போனான். (௩௨)

போயின னளகை யண்ணல் புட்பக மீது சென்று
தூயதோ ரியக்க ரோடுஞ் சூரனைத் தொழுது போற்றி
யேயின வாசி கூறி யானுமக் கடிய னென்ன
நீயினி திருத்தி யென்றே விடுத்தன னிருதர் போற்ற. (௩௩)

## வேறு.

அன்னது கண்டுழி யவுணர் மாப்படை
மின்னவிர் முகிலினம் வெருவ வார்த்தன
துன்னுறு மினையவ ரோடுஞ் சூரனு
மன்னவ னவ்வழி மகிழ்ச்சி யெய்தினான். (௩௪)

அதுபொழு தவுணர்க ளளகை யூடுபோய்
நிதிகளு மணிகளு நீடு மானமுஞ்
சிதைவுறு படைகளுந் தேரு மாக்களுங்
கதிகெழு களிறுடன் கவர்ந்து மேவினார். (௩௫)

மைம்மலி தானவர் வலிந்து வவ்வலாற்
பொய்மமையில் பெருவளம் யாவும் போக்கிய
செம்மையி லந்நகர் திருவு நீங்கிய
கைம்மைதன் வடிவெனுங் காட்சித் தாயதே. (௩௬)

ஆறலை கள்வரி னவுணர் யாவருஞ்
சூறைகொண் டந்நகர் தொலைத்துப் போதலு
மூறுகொ ணிதிபதி யுள்ள நாணியே
வீறக லளகையின் மீண்டு மேகினான். (௩௭)

ஆண்டுறு தனதனை யடித்தொண் டாற்றுவான்
மாண்டன னிவனென மனத்தி லுன்னியே
யீண்டிய தானையொ டிலைமப்பிற் பாகரைத்
தூண்டுதிர் தேரெனச் சூரன் போயினான். (௩௮)

அளகையை நீங்கியே யாசைக் கீறதா
யுளநக ரெய்தின னொளிரு நீலமா
களனுரு வெய்திய கடவுள் வைகிய
வளநக ரீதென மன்ன னுன்னினான். (௩௯)

அந்தமா நகரைவிட் டவுணர் கோமகன்
முந்துதன் படையொடு முனிந்து கீழ்த்திசை
யிந்திர னகர்புக விதனை நாடியே
வெந்துய ரமரர்கோன் விண்ணிற் போயினான். (௪0)

போயதை நாடியப் புரத்தை முற்றவுங்
காயெரி கைக்கொளக் கடிதி லல்கியே
யாயிடை யனிகமோ டகன்று வெய்யசெந்
தீயுறு நகரிடைச் சேறன் மேயினான். (௪௧)

சேறலு நாடியத் தீயின் பேரினா
னீறகல் வெஞ்சின மெய்தி யாயிர
நூறெனுங் கோடியர் நொய்திற் சூழ்தர
மாறிகல் புரிந்திட வந்து நேர்ந்தனன். (௪௨)

நேர்தலு மங்கித னீடு தானையுஞ்
சார்தரு மவுணர்தம் படையுந் தாமுருப்
போர்தலை மயக்குறப் பொருத வெல்லையிற்
சூர்தரு கனல்படை தொலைந்து போயதே. (௪௩)

தன்படை யுடைதலுந் தழலின் பண்ணவன்
றான்படை மனத்தனாய்த் தொல்லை யூழிநா
ளின்படை யுலகெலா மீறு செய்திடு
வன்புடை பேருரு வல்லை தாங்கினான். (௪௪)

சிறந்திடு மவுணர்கோன் சேனை மாக்கடல்
வறந்திட விப்பகன் மாய்ப்பன் யானெனா
நிறைந்திடு மவுணமா நீத்த மெங்கணுஞ்
செறிந்தனன் வளைந்தனன் சிதைத்தன் மேயினான். (௪௫)

கடல்கெழு சேனையைக் கலந்து பாவகன்
சடசட முதிரொலி தழங்கப் புக்குலா
யடலுறு மெல்லையி லதுகண் டாழிவாய்
விடமென வுருத்தனன் வீரன் றாரகன். (௪௬)

உருத்திடு தாரக னொருதன் றேரொடு
மருத்தினும் விசையுற வந்து தானையை
யெரித்திடு மங்கியை யெதிர்ந்து செங்கையிற்
றரித்திடு கார்முகந் தன்னை வாங்கினான். (௪௭)

வானவர் தமையுமிவ் வன்னி தன்னையு
மேனையர் தம்மையு முடிப்ப னின்றெனாத்
தேனிவ ரிதழியந் தேவன் மாப்படை
யானதை யெடுத்தன னருச்சித தேத்தியே. (௪௮)

எடுத்திடு மெல்லையி லெரிகண் டிங்கிது
தொடுத்திடி னுலகெலாந் தொலைக்கு மென்னையு
முடித்திடு நான்முகன் முதலி னோரையும்
படுத்திடு மின்றெனப் பையு ளெய்தினான். (௪௯)

சுடுங்கனற் கடவுளுஞ் சுருக்கித் தன்னுரு
வொடுங்கின னாகுல முறறுச் சிந்தையு
நடுங்கினன் றாரகன் முன்னர் நண்ணினான்
கடுங்கதி யதனொடுங் கரங்கள் கூப்பியே. (௫௰)

தோற்றுவித் துலகெலாந் தொலைக்கு மெம்பிரான்
மாற்றரும் படைக்கல மற்றென் மேல்விடப்
போற்றினை யெடுத்தியெப் புவனத் துள்ளவ
ராற்றலு முயிர்களு மதன்மு னிற்குமோ. (௫௧)

கழிதரு சினங்கொளல் கடவுண் மாப்படை
விழுமிய தன்னதை விடுத்து ளாயெனி
னழிதரு முலகெலா மதுவு மன்றியே
பழிபெறு மன்னதோர் படையின் வேந்துமே. (௫௨)

பொறுத்தியென் பிழையெனப் போற்றி நிற்றலுங்
கறுத்திடு மிடறுடைக் கடவுண் மாப்படை
செறுத்தவன் மீமிசைச் செல்ல விட்டிலன்
மறுத்தனன் சினத்தினை மகிழ்ச்சி யெய்தினான். (௫௩)

எற்றிடு மெற்றிடு மிவனை வல்லையிற்
செற்றிடுஞ் செற்றிடுந் தீயன் சாலவுங்
குற்றிடுங் குற்றிடு மென்று கூறியே
சுற்றின ரவுணர்க ளடையச் சூழவே. (௫௪)

தானவர் யாரையும் விலக்கித் தாரக
னீகம தேவவி னிற்றி தின்னுயிர்
போனதை யுதவினம் போதி போதிநின்
மாநக ரிடையென வல்லை கூறினான். (௫௫)

விடுத்தன னங்கியை விடுக்கு முன்னரே
யடுத்திடு தானவ ரவன்ற னூர்புகா
மடுத்திடு வளனெலாம் வாரி வாரிமீன்
படுத்திடு கொலைஞர்தம் பரிசின் மீண்டனர். (௫௬)

வேறு.

மீண்டன ரவுண ரங்கி வெள்கியே தன்னூர் புக்கா
னாண்டவ னகன்று போனான் றாரக னவ்வா றெல்லாங்
காண்டலுஞ் சூர னென்போன் கலிமான் றேரைப் பாக
தூண்டுதி நடுவன் மேவுந் தொல்லைமா நகரத் தென்றான். (௫௭)

கடவுதி தேரை யென்னக் கைதொழு தைய நொய்தி
னடுதொழி லவன்பா லுய்ப்ப னன்னது காண்டி யென்னாப்
படர்தரும் வலவ ரோடும் பலிங்கனென் றுரைக்கு மேலோன்
சுடர்மணி கதிரு நாணத் துண்ணெனத் தூண்டி யார்த்தான். (௫௮)

ஆர்த்தன படருஞ் சேனை யதிர்ந்தன முரச மெங்கும்
போர்த்தன கரிதேர் வாசி புகுந்தன சூழி வேலை
தூர்த்தன துவசம் விண்ணைத் தொடர்ந்தன தூசி யென்னுந்
தார்த்தொகை முன்ன மேகித் தண்டனூ ரடைந்த வன்றே. (௫௯)

அடைதலு நடுவன் றன்பா லாங்கொர்தூ தெய்தி நந்தங்
கடிநகர் கலந்த வந்தக் காசிப முனிவன் மைந்தர்
கொடியவெஞ் சேனை யென்னக் கூற்றெனுங் கடவுள் கேளா
விடியுறு மரவ மென்ன வேங்கின னிரங்கு கின்றான். (௬௦)

வேறு.

முன்னுறு தனதனு முன்ரித் தேவனு
மன்னனை யெதிர்கொளா வழுத்திப் போயினா
ரன்னது புரிவதே யழகி தாமென
வுன்னின னடுவனு முணர்வி னும்பரான். (௬௧)

தேற்றமொ டெழுந்துதன் மகிடஞ் சேர்ந்தன
னேற்றமில் படைஞரு மீண்ட வேகியே
கூற்றுவ னிமைப்பினிற் குறுகிச் சூரனைப்
போற்றினன் றெழுதனன் புகலு மாசியான். (௬௨)

திருத்தகு மறலிதன் செய்கை நோக்கியே
யருத்தியின் மகிழ்வுறு மவுண னம்பணி
பரித்தனை யீண்டுநின் பரிச னத்தொடு
மிருத்தியென் றனையனை யேவிப் போயினான். (௬௩)

இறுதியை யியற்றுவா னிருக்கை யென்பதோர்
மறிகட லதனிடை வளங்கொள் வாரியைத
திறலுறு மவுணர்தஞ் சேனை சென்றரோ
முறைமுறை கவர்ந்தன முகிலின் றன்மைபோல். (௬௪)

கூற்றுவன் பெருவலி குறைந்த வண்ணமும்
போற்றினன் போயதும் புந்தி யுன்னியே
யாற்றவு மகிழ்வுறீஇ யனிக மோடுதென்
மேற்றிசை நிருதிமேல் விரைவி னேகினான். (௬௫)

நிருதியு மிஃதெலா நேடி யாமிவர்ப
பொருவது மரியதாற் போரி யற்றினும்
வருதிற மில்லையால் வசைய தேயெனாக்
கருதின னவரொடு கலத்தற் குன்னினான். (௬௬)

உன்னினன் றனையோ டொருங்கு மேவியே
மன்னவ னெதிர்புகா வழுத்தி மறறவன்
றன்னடி வணங்கியுன் றமரி யானெனாப்
பன்னினன் றுரகன் பாங்க ரேகினன. (௬௭)

அருகுற வருதலு மவுணர் கோமக
னிருதியி னகரினை நீங்கி யேகலும்
வருணனு மருத்துவும் வாரி தன்னினு
மிருள்செறி யுலகினு மிமைபபிற் போயினார். (௬௮)

போதலு மவரவர் புரத்தைச் சூறைகொண்
டேதம தியற்றவிற் றெழுவ கைத்தெனும்
பாதல வுலகினிற படர்ந்து தானவ
ராதியர் போற்றிட வருள்செய் தேகினான். (௬௯)

உற்றனன் றுகர்கோ னுலகி லன்னவன்
செற்றமொ டேசெருச் செய்யத் தானையால்
வெற்றிகொண் டேயவன் வியந்து போற்றிட
மற்றவ னிருக்கையோர் வைகல் வைகினான். (௭௦)

அத்தலை யுரகர்கோ னமரர் தந்திட
வைத்திடு மமுதினை வலிதின் வாங்கியே
மெய்த்தகு தம்பிய ரோடு மேன்மையாற்
றுய்த்தன னகன்றனன் சூர பன்மனே. (௭௧)

ஏனைய பிலங்தொறு மேகி யவ்வயின்
மேனதோர் விருந்தினை வியப்பி னுடியே
மானவர் படையொடும் வல்லை மீண்டனன்
போனதோர் நிலதொறும் புகழை நாட்டினான். (௭௨)

வேறு.

பூவுல கிடையே போந்து புணரியொன் றகன்று மற்றைத்
தீவினை யொருவிச் சூரன் சேனைமா நீத்தஞ் சூழ
மாவொடு புவனி போற்ற வரியரா வணையி னேமிக்
காவலன் றுயில்கூர் பாலின் கடலிடைக் கடிது புக்கான். (௭௩)

புக்கதோர் வேலை யன்னோன் போர்ப்படை யவுணர் யாரு
மைக்கடன் மேனி மாயோன் மன்னின னீண்டை யென்னு
வக்கட லதனைத் தொன்னு ளமரர்கள் கடைந்த தேபோன்
மிக்கதோ ரார்ப்பி னோடும் விரைவுடன் கலக்க லுற்றார். (௭௪)

ஆர்த்திடு முழக்கங் கேளா வம்புயத் திருவும் பாரும்
வேர்த்துடல் பதைப்ப வஞ்சி வெருக்கொடு கரிய மேனித்
தீர்த்தன தகலத் தூடு சோர்ந்தனர் தழுவ வன்னோன்
பார்த்தன னஞ்ச லென்று பகர்ந்தனன் றுயிலை நீங்கி. (௭௫)

இம்மெனப் பணியின் மீது மெழுந்தன னிறுதி செய்யும்
வெம்மைகொள் கடவுட் டீயும் வெருவர வுருத்துச் சீறி
நம்மையும் பொரவுந் தீயோர் நண்ணினர் போலு மன்னார்
தம்வலி காண்டு மென்னுத் தடக்கைகள் புடைத்து நக்கான். (௭௬)

சிந்தையி னுன்னு முன்னந் திறன்மிகு முவணர் கோமான்
வந்தன னவன்பொற் றோண்மேன் மடங்கலே றென்னப் புக்குச்
சந்திர னனைய சங்குஞ் சக்கரங் கதைவாள் சாப
மைந்தெனும் படையு மேந்தி யவுணர்தம் படைமுற் சென்றான். (௭௭)

கோட்டினன் சார்ங்க மென்னுங் குனிசிலை யினைநா ணேதை
காட்டின னவுண ருள்ளங் கலக்கினன் கொண்ட செபறம்
வீட்டினன் றனை யாவும் விலக்கினன் பகழி மேன்மேற்
பூட்டினன் சேனைக் கொண்மூ வாமெனப் பொழித லுற்றான். (௭௮)

பொழிந்திடு கின்ற காலைப் போர்கெழு மவுணர் தானை
யழிந்தன தேரு மாவு மாடலங் கரிக டாமு
மொழிந்தன விறலும் போரி னூக்கமும் படையு மெல்லாங்
கழிந்தன சூறை யுற்ற காரென லாய வன்றே. (௭௯)

சூழ்ந்திடு மவுணர் சென்னி துணிந்தன தோளுந் தாளும்
வீழ்ந்தன கரங்கள் சிந்தி விரவின குருதி நீத்த
மாழ்ந்திடு புணரி யெல்லா மாயின வவனி தானுந்
தாழ்ந்தன பிணத்தின் குன்றந் தகைந்தன தபனன் றேரை. (௮௦)

ஒடிந்தன விரத மாழி யுருண்டன கவனப் பாய்மா
மடிந்தன களிறு நொந்து மாண்டன வயவர் பல்லோர்
முடிந்தனர் குருதி நீத்த மூடின வுதனுண் மூழ்கிப்
படிந்தன வலகை யீட்டம் பாரிடம் பரந்த வன்றே. (௮௧)

சுடர்கெழு நேமி யண்ண றுயிலுறு பாலின் வேலை
யிடையொரு சிறிது மின்றி யெங்கணு மெருவை யாகி
யடைவது கடவு ளாடு மாரழ லதனை யுண்ணக்
கடையுகம் விரவு கின்ற காட்சியைப் போன்ற தம்மா (அஉ)

விண்ணுலாம் படிவ மாயோன் மேதகு முவணத் தோடு
மண்ணுலாங் கடலா மென்ன வவுணரை வளைந்து சுற்றி
யெண்ணிலா வுருவங் காட்டி யாவரும் போகா வண்ண
மண்ணல்வாம் பகழி சிந்தி யமர்செய்தா னமர ரார்ப்ப. (அ௩)

அடுசமர் புரியு மெல்லை யாங்கவை யுருத்து நோக்கி
யுடைவதோ ரனிகந் தன்னை யொன்றுநீ ரஞ்ச லென்று
வடவரை யனைய வாற்றன் மாபெருந் தனுவொன் றேந்தி
யிடியுறழ் கலிமான் றேர்மேற் றாரக னிமைப்பின் வந்தான். (அச)

வானில மளவு செய்த மலர்ப்பதத் தண்ணன் முன்னந்
தானெதிர் புகுந்து வெய்யோன் றன்பெருந் தனுவை வாங்கி
மேனகு சரங்கள் கண்ணன் மிசையுற வேலை மீதிற்
சோனைவின் பொழிவ தென்னத் துண்ணெனத் தூவி யார்த்தான். (அரு)

ஆர்த்திடு மளவை தன்னி லச்சுத னயில்வே லென்னக்
கூர்த்திடு முலப்பில் வாளி கொடியதா ரகன்றன் மேனி
தூர்த்தனன் றேரும் பாகுந் தொலைத்தனுஞ் சோர்வி லாதான்
பேர்த்தொரு தடந்தே ருற்றுப் பெருஞ்சிலை வாங்கி னனல். (அசு)

உற்றிடு மவுணன் மான்மே லொராயிரம் பகழி யோச்சி
யற்றமில் கருடன் மீது மாயிரம் விசிக முய்ப்ப
மற்றவை யவன்பாற் றீய மாசுணம் பலவுந் தங்கள்
பற்றலன் றன்னை வவ்வும் பரிசெனச் செறிந்த வன்றே. (அஎ)

ஆயிடை யுவணர் கோமா னலக்கணுற் றதனை நோக்கி
மாயவ னுலப்பி லாத வடிவினை யெய்தி யந்தத்
தீயவற் சூழ்ந்து வெம்போர் செய்துழி யவனுந் தங்க
டாயருண் மனுவை யுன்னித் தானுமந் நிலைய னானான். (அஅ)

தாரக வசுரன் றானுந் தணப்பில்பல் லுருவங் கொள்ளா
வீரறு வருடங்கா றுமிந்திரை கேள்வ னோடு
பேரமர் புரிந்த வெல்லைப் பிதாமக னிதனை நோக்கி
யாரிவ னெதிர்நிற் பாரென் றதிசய நீர னானான். (அகூ)

எல்லையங் கதனின் மாயோ னெறும்வலி யவுண னேறுஞ்
சில்லியந் தேரு மாவுந் திறன்மிகு வலவன் றானும்
வில்லொடு துணிந்து வீழ விசிகமோர் கோடி யுய்த்தா
னெல்லையி னதனை நாடி யும்பர்கோ னுவகை பூத்தான். (கூ0)

திண்டிறற் பரியுந் தேருஞ் சிலையொடு வலவன் றானுந்
துண்டம தடைத லோடுஞ் சூரனுக் கிளைய தோன்ற
றண்டமொன் றெடுத்துக் கீழ்போய்த் தலைபனித் தமர ரஞ்ச
வண்டமுங் குலுங்க வார்த்தங் கரிதனை யெதிர்ந்து சென்றான். (கூக)

எதிர்வரு மவுணன் றன்மே லெண்ணிலாப் பகழி மாரி
விதியினை யளித்த மாயன் விசலு மவற்றை யெல்லாங்
கதைகொடு விலக்கிச் சிந்திக் கனன்றுமுற கடிதிற் செல்ல
வதுதனை நோக்கி மாலு மாழியம் படையை யுய்த்தான். (௯௨)

ஓரிமை யொடுங்கு முன்ன ருலகெலாந் தொலைக்குந் தன்மைப்
போரயி னேமி தானும் புராரிதன் வரத்தாற் சென்று
தாரக வசுரன் கண்டந் தன்னைவந் தணுகிச் செம்பொ
னாரம தாயிற் றம்மா தவத்தினு மாக்க முண்டோ. (௯௩)

பணியுறு கடவு ணேமிப் படையுமாங் கவுணன் கண்டத்
தணியதா யிருத்த லோடு மரனருள் வரத்தை யுன்னித்
தணிவிலற் புதத்த னாகித் தாரகன் வலிய னென்னா
மணிகிளர் மேனி மாயோன் மற்றிது புகல லுற்றான். (௯௪)

அயனொடு ததீசி யென்னு மருந்தவத் தோனும் வெம்போர்
முயலுறு மவுணர் யாரு மொழிந்திடி னுனக்கொப் பல்லார்
செயலுரை யின்றி யுண்டாற் சிறப்பிதி மகத்தைச் செற்ற
வயமிகு கழற்கால் வீரன் மற்றுனக் கிணையா மென்றான். (௯௫)

வன்றிறற் கடவு ளாழி மணிப்பணி யாயிற் றென்றால்
வென்றியு முனக்கே யன்றோ வேறினிப் போரு முண்டோ
வுன்றிற மிதுவே யென்னி னுனக்குமுன் னைவரா யங்க
ணின்றவர் பெருமை தன்னை யாவரோ விகழ்த்தற் பாலார். (௯௬)

சங்கரன் மகிழு மாற்றாற் றழன்மகம் பன்னா ளாற்றி
யுங்களின் வலிபெற் றுள்ளா ரவுணரி லொருவ ரில்லை
யிங்குமை வெல்வார் யாரே யெமக்குநீர் தமரே யென்னா
மங்கல மரபி னாசி வரம்பில புகன்று போனான். (௯௭)

பார்த்தன ரனைய தெல்லாம் பாயிருள் கான்ற மேனி
நீர்த்திரை யனைய செங்கை நிருதராம் புணரி யாயோ
ரார்த்தன ரமரர் யாரு மகன்றன ரஞ்சி யங்கம்
வேர்த்தனர் விளிவோ மென்ன மெலிந்தனர் விழுமத் துள்ளார். (௯௮)

மாதவ னகன்ற காலை மற்றுமோர் வையத் தேறித்
தாதவிழ் தொடையல் வாகைத் தாரகன் றம்மு னேராய்ப்
போதலு மவனு மீண்டு புகுந்தவா றுணர்ந்து புல்லி
யாதர மகிழ்ச்சி யெய்தி யனிகமோ டகன்றா னப்பால். (௯௯)

ஆழியங் கிரியின் காறு மகலிட வரைப்பு முற்றச்
சூழுற நாடிப் போந்து தொல்லிரு விசும்பி னேகித்
தாழுறு நிலையிற் செல்லுந் தபனனே முதலோர் யாரும்
வாழ்கென் றாசி கூற வானுயர் துறக்கம் புக்கான். (௪00)

வேறு.

இந்தவா றவுணர்கோன் றுறக்கத் தேகலு
முந்திய வொற்றரிற் சிலவ ரோடியே
வந்தனன் சூரனும் வலியன் றானென
வந்தர நாயக னறியக் கூறவே. (௪0௧)

அஞ்சின னுயிர்த்தன னலந்து தேம்பினன்
றுஞ்சின னேயென வுணர்வு சோர்ந்துளா
னெஞ்சலில் வன்மைய திகந்து தன்னுடை
நெஞ்சினி லினையன நினைத்தன் மேயினான். (௧௦௨)

அவ்வயிற் போந்திடு மவுணன் றன்னெதிர்
செவ்விதிற் சென்றியான் செருவி னேர்வனே
லிவ்வுயிர்க் கிறுதியா மிருப்ப னேலிடர்ப
பவ்வமுற் றிறந்திடாப் பழியின் மூழ்குவேன். (௧௦௩)

புன்செய லாயிவட் புகுந்தி டுஞ்செய
லென்செய லால்வரு மியற்கை யல்லது
பின்செய லொன்றிலை பிறாசெய் கின்றதுந்
தன்செய லென்பராற் சார்பின் மேலையோர். (௧௦௪)

திருவுறு கின்றுழி மகிழ்ந்துந் தீர்வுழிப
பருவர லெய்தியும் பாசந் தன்னிடை
யரிதுணர் கேள்விய ரழுங்கு வார்கொலோ
வருவது வருமது மறுக்க லாகுமோ. (௧௦௫)

ஆதலி னமரிழைத் தாவி நீங்கலன்
பேதுறு கின்றிலன் பிழை யுற்றுளோ
ரோதரு மகிழ்ச்சியு முறுவ ராங்கது
தீதுசெ யவுணர்தந் திறத்துக் காண்பனால். (௧௦௬)

நாணொடு மொன்னலர் நகையுங் கொள்ளலன்
றாணம துறப்புயச் சூர பன்மனைக்
காணுவ னென்னினுங் கறுவு சிந்தையா
னேணுறு தளையிடு மெனையென் றெண்ணினான் (௧௦௭)

இம்முறை வாசவ னெண்ணி யேயெழீஇக்
கொம்மென மனையுடன் குயிலு ருக்கொடே
விம்முறு பிழையன் விண்ணிற் போயினான்
றெம்முனை யவுணர்க டேடிக் காண்கிலார். (௧௦௮)

ஒன்னலர் நாடிவ துணர்ந்து வானவர்
மன்னவ னுக்கமு மாயும் போலுமா
லென்னினிச் செய்வதென் றிரக்க மெய்தியே
பொன்னக ரெங்கணும் பொலிவு மாய்ந்ததே. (௧௦௯)

பிடித்தன ரமரரை யவுணர் பேதுற
வடித்தனர் குற்றின ரனையர் தானையாற்
றடித்திடுந் தோள்களைத் தமது கைகளா
லொடித்தன ராமென வொல்லை யேகினார் (௧௧௦)

தண்ணளி யாவுமின் றாய தானவர்
விண்ணவர் தங்களை விழுமஞ் செய்திடா
வண்ணலந் திருவுறு மரசன் முன்னுறத்
துன்னென வுய்த்தலுந் தொழுது போற்றுவார். (௧௧௧)

அவுணரீ ளுதித்தனை யாற்று நோன்புறீஇச்
சிவனருள் பெற்றனை திசையி னோர்முத
லெவரையும் வென்றனை யென்னி னிங்கெமை
நவைபடச் செய்வதே நன்று போலுமால். (கக௨)

மறலியு மிருக்குமோ மற்றை மாதிரத்
திறைவரு மிமையவர் யாரு முய்வரோ
விறுதியின் றுருகுமே யுலக மீங்கொரு
சிறிதுநீ வெஞ்சினஞ் சிந்தை செய்யினே. (கக௩)

இற்றையிப் பகன்முத லென்று மெங்களுக்
குற்றதோர் கடவுணீ யோம்பும் வேந்துநீ
பற்றுள தமருநீ பலரும் யாமினி
மற்றுன தேவலே மரபிற் செய்துமால். (கக௪)

வேறு.

என்றிவை புகன்று போற்று மிமையவர் தம்மை நோக்கி
நன்றுநுஞ் செய்கை யென்னு நகைசெய்து யாப்பு நீக்கி
மன்றநம் பணிமேற் கொண்டு வைகுதி ரினிநீ ரென்னு
வன்றவர் தம்மை விட்டா னழன்மகத் தாவி விட்டான். (கக௫)

வாசவன் வளத்தை யெல்லா மவுணர்கள் வவ்விச் செல்லப்
பேசரு மகிழ்ச்சி கொண்டு பின்னவர் பாங்க ரேகக்
காசிப னளித்த மேன்மைக் காதல னனிகஞ் சூழ
வோசைகொண் மறைக ளார்க்கு முயர்மக லோகம் புக்கான். (கக௬)

கற்றுணர் கேள்வி யான்மார்க் கண்டேய னாதி வானோ
ருற்றிடும் பதமாந் தொல்பே ருலகமே முதல மூன்று
மற்றவர் பரவ நீங்கி மலரயன் பதத்திற் போகத்
தெற்றென வதனைத் தேர்ந்து திசைமுகன் றுணுக்க முற்றான். ()

வேறு

வசையி னோன்புடை வாலறி வுள்ளோ, ரிசைகொள் வேத மியம்பினர் சூழ
நசையி னீரொடு நான்முக வேதா, வசுரர் கோனை யடைந்தன னன்றே. ()

ஆழி மால்கட லன்னதொர் சேனை, சூழ வேவரு சூரனை யெய்தி
வாழி வாழிய வைகலு மென்னுக், கேழி லாசி கிளத்திய பின்னர். (கக௬)

மன்ன நீயிவண் வந்திட மேனா, ளென்ன நோன்பை யியற்றின னோயா
னன்ன வாறுண ரேன்சிவ னல்லா, லுன்னி நாடி யுணர்ந்துளர் யாரே. ()

கற்றை வார்சடை யான்கழல் பேணி, யற்ற நீங்கி யருந்தவ மாற்றி
மற்றிவ் வாறு வளதகியல யாவும, பெறறு ளாய்பெரு வன்மை பிடித்தாய்.

பொன்னை மேவு பொலன்கெழு மார்பன், றன்னை வானவர் தங்களை யெல்லா
மின்ன நாளினை யோற்கொடு வென்று, யுன்னை நேருள ரோவுல கத்தில் ()

காத லான்மிகு காசிபன் மைந்த, நாத லாலவு ணர்க்கிறை நின்மு
தாதை யான்சர தம்மிது நின்சீ, ரேது மென்புகழ் யான்பிற னன்றே. ()

என்று பன்முத மன்க ளிசைத்தே, நின்று தம்பியர் தங்களை நேர்ந்து
பொன்றி டாத பொலஞ்சிலை நின்டே, ரொன்று தன்புடை யும்முத வுற்றான். ()

வெருவ ரச்சுரர் வீற்றுறு பான்மை, யிருவ ருக்கு மளித்தலும் யாரும்
பரவு கொற்றவ னன்னது பாராப்,பெருமகிழ்ச்சிகொள் பெற்றிய னானான்.

அருத்தி யெய்தி யயன்றனை யங்க, ணிருத்தி மாயைமு னீந்தருண் மைந்தன்
மருத்து ழாய்முடி மன்னவன் வைகுந், திருத்த கும்முல கத்திடை சென்றான். ()

அந்த வேலையி லாண்டுறு மாலோன், வந்த சூரபன் மாவினை யெய்தி
நந்த லில்லதொர் நாளொடு வாழ்கென், றந்த மில்பல வாசி புகன்றான்.()

ஆசி கூறின னற்றவு மின்சொற், பேச வேபெரு மாமகிழ் வெய்தி
மாசி லவ்வுல கெங்கணும் வல்லே, பாச னத்தொடு பார்த்தன னன்றே.()

பார்த்த பின்பணி யின்மிசை வைகுந், தீர்த்த னண்டு திகழ்ந்துற நல்கிக்
கார்த்தி லங்குறு கந்தர முக்கண், மூர்த்தி வைகிய மூதுல குற்றான். ()

வேறு.

அரியயன் முதலா வுள்ள வமரர்கள் யார்க்குந் தத்த
முரியதோ ராணை யெல்லா முலப்புறா துதவி வைகும்
பரமனா துலக நண்ணிப் பரிசனம் யாவு நீங்கிச்
சுரர்புகழ் சூர பன்மன் றுணைவர்க ளோடு போனான். (௧௩௦)

போந்தன னமலன் கோயிற் புறங்கடை வாயி னின்றே
யாய்ந்திடு நந்தி யெந்தை யருண்முறை யுய்ப்பச் சென்று
காந்தளே யனைய செங்கைக் கௌரியோ டுறையு முக்க
ணேந்தன்மு னணுகி யார்வத் திறைஞ்சியே யேத்தி நின்றான். (௧௩௧)

கண்டனஞ் சுடைய வண்ணல் கருணைசெய் தினிநீ யேனை
யண்டமுஞ் சென்று நாடி யாணையா லகிலம் யாவு
மெண்டிசை புகழு மாற்றா லிறைபுரிந் திருத்தி யென்னப்
புண்டரீ கத்தாள் போற்றி விடைகொண்டு புறத்து வந்தான். (௧௩௨)

புறந்தனில் வந்து சூரன் பொம்மெனத் தானை யெய்திச்
சிறந்திடு கின்ற வண்ட கோளகை சேர்த லோடு
மறந்தரு முமலி மேலோ ருருத்திரர் வரம்பி லோர்க
ளுறைந்தன ரனைய ரெல்லா முமாபதி யருளுட் கொண்டார். (௧௩௩)

பாங்குறு மண்டஞ் செல்லும் பான்மையில் வாயில் காட்டி
யாங்கவர் விடுப்ப மற்றை யண்டத்துச் சூர பன்ம
னோங்கிய தானை யோடு மொல்லையிற் போகி யாண்டு
மீங்கிது போல நாடி யாரையும் வென்று போனான். (௧௩௪)

ஏனையண் டங்க ளெல்லா மெம்பிரான் கணமா யுள்ளோ
ரானவ ரருளிற் போகி யகிலமு நாடி யங்கண்
வானவர் தம்மை வென்று வளமெலாங் கவர்ந்து தன்பாற்
றானவர் பலரை யங்கட் டன்னர சளிப்ப வுய்த்தான். (௧௩௫)

இத்திறம் வீற்று வீற்றா வெல்லையி லண்டந் தோறு
மெய்த்தம ராகி யுள்ள வவுணரை வேந்த ராக
வைத்தனன் றுணைவ ரோடு மீண்டனன் மற்றிவ் வண்டப்
பித்திகை யதனுட் சென்று பெறலருந் துறக்க முற்றான். (௧௩௬)

ஆக திருவிருத்தம் - கூஉகு.

### வசனம்.

இப்படி சுக்கிராசாரியார் அண்டவகையின் இயல்புகளை எல்லாம் சொல்லக்கேட்ட சூரபன்மன் அவரைவணங்கிச் சிங்கமுகாசுரனோடு தாரகனிருந்த இடத்தை யடைந்தான். தமையன் வருவதைக்கண்ட தாரகன் எதிர்சென்று வணங்கி அவனால் சுக்கிரன் சொன்னவற்றைக்கேட்டு மகிழ்ந்து அதுவே தகுதியான காரியமென்று சொல்லிக்கொண்டிருக்கையில் மாயையானவள் அவ்விடம்வந்தாள்; வரக்கண்டு அவளைப்பணிந்து நின்றார்கள். அவளும் அம்மக்களைநோக்கி ஆசீர்வதிக்க, அவர்களும் தாங்கள் வேள்வி செய்தது முதலிய செய்திகளைச் சொன்னார்கள். அதைக்கேட்ட மாயையானவள் அவர்களை நோக்கி நீங்கள் இந்திரன்முதலிய தேவர்களை வென்று நெடுங்காலம் வாழ்வீராக. நான் உங்களுக்கு மாயாபலங்கள் வேண்டுமளவும் தருவேன்; என்னை நீங்கள் நினைக்கும்போதெல்லாம்வந்து உங்களுக்கு உதவிசெய்வேன் என்று சொல்லிச் சென்றனள்.

பிறகு சூரபன்மன் அவுணரை அழைத்து நாம் குபேரநகரத்திற்குப் படையெடுத்துப் போகவேண்டும்; வெற்றி முரசு அறைவீராகவென்று கட்டளையிட்டு, தம்பியர் இருவரோடும் குபேரனது அளகாபுரியை யடைந்து தூதுவரால் தமது வரவைக் குபேரனுக்குத் தெரிவிக்க அவன் சூரபன்மன் முதலானோர் பரமசிவனிடத்தில் பல வரங்கள் பெற்றிருப்பவர்கள்; ஆதலால் நாம் அவர்களோடு போர்புரிவது தகுதியல்லவென்று சூரபன்மனிடத்திற்கு வந்து வணங்கி அவனை ஆசீர்வதித்து நிற்க, சூரபன்மன் மிகவும் மகிழ்ந்து நின்றான். அவனோடு வந்த அவுணர்கள் குபேரன் பட்டணத்திலுள்ள நிதிகள மணிகள் விமானங்கள் முதலிய பல பொருள்களையுங் கவர்ந்து கொண்டுபோய்விட்டார்கள். அதன்பிறகு சூரபன்மன் இந்திரன்வசிக்கும் கீழ்த்திசையை நாடிச்சென்றான். இந்திரன் அதையறிந்து தன் நகரைவிட்டு அஞ்சியோடிப்போக அவன் நகரத்தை அக்கினிக்கிரையாக்கித் தென் கீழ்த்திசையை யடைந்து அத்திசைக் கதிபனாகிய அக்கினிதேவனோடு எதிர்க்க அவன் கோபங்கொண்டு சூரபன்மனது சேனைகளையெல்லாம் நாசமாக்க, அதைக் கண்ட தாரகன்வந்து அக்கினிதேவன்மீது பிரயோகிக்கப் பாசுபதாஸ்திரத்தை யெடுத்தான். அதைக்கண்ட அக்கினிதேவன்பயந்து தாரகனைச் சரணமடைந்து தன்னை மன்னிக்கவேண்டுமென்று மிகவும் பிரார்த்திக்க, தாரகனும் அப்பிரார்த்தனைக்கு இரங்கிக் கோபந்தணிந்துநின்றான். பிறகு அவுணர்கள் அக்கினிதேவனுடைய நகரத்திலுள்ள செல்வங்களையெல்லாம் கவர்ந்து கொண்டார்கள். அதன் பிறகு சூரபன்மன் யமனுடைய நகரத்திற்குத் தன்படைகளோடு செல்ல அச்செய்தியைத் தூதுவரால் கேள்விப்பட்ட யமனஞ்சிக் குபேரன்முதலியோர் இவர்களுக்கெதிர்நிற்கமாட்டாதஞ்சி இவர்களைச் சரணமடைந்து உயிர் தப்பினார்களல்லவா அதுபோலவே நாமும் செய்வது தகுதியென்று தீர்மானித்துச் சூரபன்மனைவந்து வணங்கிநிற்க அவன் யமனைநோக்கி நீ உனக்குரிய பணிகளைச் செய்துகொண்டு இருக்கக்கடவை என்று கட்டளையிட்டு நிற்க அவனுடன் வந்த அவுணர்கள் அந்த யமலோகத்திலுள்ள பொருள்களையெல்லாம் கவர்ந்து சென்றார்கள். பின்பு நிருதி, வருணன், வாயு என்பவர்கள் அரசாளும் திசைகளினுஞ்சென்று அவர்களையும் வெற்றிகொண்டு பாதாளலோகத்திற்சென்று ஆதிசேடனைவென்று, திருமால் பள்ளிகொண்டிருக்கும் பாற்கடலை யடைந்து அவருடைய யோகநித்திரையைப் பங்கப்படுத்துதலும் அவர் மிகுந்த கோபங்கொண்டெழுந்து சூரபன்மனது படைகளையெல்லாம் நாசமாக்கினார். அதுகண்ட தாரகன் அவரோடு எதிர்த்துப் பன்னி

ரணைவெருஷம் போர்புரிந்தான். அதுகண்ட திருமாலும் இவனைச் செருக்கடக்க வேண்டுமென்று நினைத்துத் தன் சக்ராயுதத்தை அவன்மீது பிரயோகிக்க அது அவன் பெற்றிருந்த பரமசிவனது வரப்பிரசாதத்தால் பூமாலைபோல அவன் கழுத்தைப்போய்ச் சுற்றிக்கொண்டது. அதுகண்ட திருமால் வியப்புற்றுத் தாரகனுக்கெதிரேவந்து உன்னைவெல்லவல்லவர் இவ்வுலகத்தில் ஒருவருமில்லை; நீயும் உன் தமையன்மார் இருவரும் உங்கள் படைகளும் சுபமாக வாழ்கவென்று ஆசீர்வதித்துப்போயினர். அதின்மேல் பிரமலோகத்தையடைந்து சூழ்ந்துகொள்ள அச்செய்தியையறிந்த பிரமன் மனங்கலங்கிச் சூரபன்மனுக்கெதிரேவந்து நீ இங்கே வரும்படி நான் என்னதவஞ் செய்தேனோ அறியேனென்று அநேக உபசார வார்த்தைகளைச்சொல்லி ஆசீர்வதித்து நான் உன்னைப்பெற்ற காசிபனுக்குத் தந்தையாகையால் உனக்கு மூதாதையாகின்றேன், நான் உனக்கு அன்னியனல்லவென்று சொல்லி, அவன் தம்பிமாருக்கு வேண்டிய வில், அம்பு, தேர் முதலியவற்றையும் கொடுத்து விடைபெற்றுச் சென்றான். பிறகு சூரபன்மன் அவ்விடத்தினின்றும் வைகுண்ட நகரத்தையடைந்து அங்குள்ள திருமாலால் உபசரிக்கப்பட்டு அவரை விட்டு நீங்கிச் சிவலோகத்தையடைந்து தன் தம்பியரோடும் சிவபெருமானை வணங்கிநிற்க அப்பெருமானும் சூரபன்மனைநோக்கி நீ மற்ற வண்டங்களையெல்லாம்வென்று அரசாட்சி செய்துகொண்டிருவென்று கட்டளையிட அக்கட்டளையேற்று, புறத்தேயிருந்த தன் சேனையை அழைத்துக்கொண்டு அண்ட கோளகையையடைந்து அங்குள்ள வயிரவர்முதலிய உருத்திர கணங்களையெல்லாந் தரிசிக்க, அவர்கள் அப்புறத்தண்டத்திற்குச் செல்லும் வாயிலைக்காட்டி விடுக்க அவ்வாறே சென்று இவ்வண்டத்தைப்போல அங்குள்ளாரையும் வெற்றிகொண்டு சிறந்த அங்குள்ள செல்வங்களையெல்லாம் பெற்றுத் தன்னிடத்திருந்த அவுணர்கள் பலரையும் அங்கங்கே யரசுசெய்ய நிறுத்தித் தன் தம்பியருடன் நாற்படைகளும் சூழ்ந்துவர அண்டப் பித்திகையிற்சென்று தேவலோகமடைந்தான்.

திக்குவிசயப்படலம் முற்றிற்று.

---

# எதிர்கொள்படலம்.

திண்டிறன் மாயையின் செம்ம லித்திற
மண்டர்தந் துறக்கமே லடைந்த காலையிற்
பண்டிமை யோர்களாற் பட்ருந் தானவர்
கண்டனர் மகிழ்ந்தனர் களிபபின் மூழ்கினார். (க)

ஆயவன் வருவதை யவுணர் தம்பெரு
நாயகற் கொற்றர்போய் நவில வன்னவன்
றாயநல் லமுதினைக் கிடைத்துத் தூண்ணென
மேயின னுமெனக் களிப்பின் மேயினான். (உ)

தாளையம் படையொடு தகுவர் கோமக
னுனவெஞ் சூர்பெறு மளப்பி லாக்கமுங்
கூனலம் பிறைதவழ் குடுமிச் செஞ்சடை
வானவன் கருணையு மனங்கொண் டேகினான். (ங)

அன்னவன் புகர்தனை யடைந்து நன்குல
மன்னனை யுறநிட வல்லை செல்லுவன்
முன்னுற வேகியெம் முறையுஞ் செய்கையும்
பன்னுதி யென்றுமுன் படர்வ தாக்கினான். (௪)

அன்னதோர் காலையி லவுணர் தேசிகன்
முன்னுற மானமேன் முடுகி யேகலுந்
தன்னுறா கிளைஞருந் தானு மாங்கவன்
பின்னுற மன்னவன் பெயர்ந்து போயினான். (௫)

மாசறு பேரொளி மான மீமிசைத்
தேசிகன் விரைவொடு செல்லு மெல்லையிற்
காசிப னருண்மகன் கண்டு சேணிடை
யீசனை யெதிர்ந்தென வெதிர்கொண் டேகினான். (௬)

அஞ்சலி செய்தன னவுண னத்துணை
நெஞ்சக மகிழ்வொடு நின்று தேசிகன்
விஞ்சுக திருவொடு விசயந் தானென
வெஞ்சலி லாசிக ளெடுத்துக் கூறினான். (௭)

ஆயது காலையி லனையன் பாங்கரின்
மேயின வரிமுகன் வேழ மாமுகத்
தீயவ னிருவருந் தேரொ டேகியே
தூயதோர் புகரடி தொழுது போற்றினர். (௮)

ஏத்திடு மவர்தமக் கியலு மாற்றினான்
மீத்தகு மாசிகள் விளம்பி வேந்தனைப்
பார்த்தன னுனக்கியாம் படுத்து கின்றதோர்
வார்த்தையுண் டன்னது வகுத்துங் கேட்டிநீ. (௯)

பங்கமில் காசிபன் பன்னி யாகிய
நங்கையைப் பயந்துளா னுனித்த கேள்வியான்
சங்கையற் றிருந்ததா னவரைத் தாங்கின
னெங்களுக் கோர்துணை யென்னுந் தன்மையான். (௧௦)

ஈண்டையில் வாசவ னெதிர்ந்து பற்பகன்
மூண்டிடு வெஞ்சமர் முறறி வீரத்தைப்
பூண்டன னுதலிற் புழுங்கி மாரிநாண்
மாண்டிடு கதிரென மாழ்கி வைகினான். (௧௧)

அத்தகு மேலையோ னவனி மீமிசை
வித்திடு நாறுசெய் வினைவு காணுறு
வெய்த்திடு கிரப்பின னென்ன நின்னையே
நித்தலு நோக்கினான் சிறுமை நீங்கவே. (௧௨)

தவங்கொடு மூந்துநீ தழலை வேட்டதுஞ்
சிவன்புரி வரங்களுஞ் செப்பக் கேட்டன
னுவந்தன னுகுல மொழித்து வைகின
னிவந்தன வாங்கவ னெடிய தோள்களே. (௧௩)

பற்றலர் புரமடு பரம னீக்கிடப்
பெற்றதோர் வரத்தொடு பெயர்ந்தி யாரையும்
வெற்றிகொண் டிவண்வரு மேன்மை கேட்புறா
மற்றுனை யடைந்திட வருகின் றானென்றா. (௧௪)

வன்றிற லவுணர்கோன் வருதல் காட்டியே
புன்றொழில் படுத்திய புகரு ரைத்தலுந்
துன்றிய கனைகழற் சூர னென்பவ
னின்றன னுவகையா னிறைந்த நெஞ்சினன். (௧௫)

ஆர்ந்ததொல் கிளையொடு மவுணர் காவலன்
சேர்ந்தனன் சூரனைச் செங்கை யாற்றொழாப்
பேர்ந்திடு மாவியைப் பிரிந்த தோருடல்
சார்ந்திடு கின்றதோர் தன்மை யென்னவே. (௧௬)

ஆயிடை வெய்யசூ ரவுணர் கோவினை
நீயினி திருத்திகொ லென்ன நீயுனை
தீயன வடையுமோ சிறுமை யெய்துமோ
மேயநுங் குலமுறை விளங்கத் தோன்றினாய். (௧௭)

என்றிவை நயமொழி யியம்பி யேபுடை
சென்றனன் மாயையின் செய்ய காதலன்
றுன்றிய தகுவர்த மனிகஞ் சூழ்தர
வென்றியொ டவனிமேல் விரைவின் மீளவே. (௧௮)

வேறு.

மண்ணுல கத்தில் வெஞ்சூர் வந்தன னெனுஞ்சொற் கேளா
வண்ணலங் கமலத் தேவு மமரர்கோ மானு மேனை
விண்ணவ ராயுள் ளோரும் வியத்தகு முனிவா யாருந்
துண்ணென வந்து மாயோன் றுயிலகொள்ளும் கடலிற் புக்கார். (௧௯)

கொய்துழா யலங்கன் மோலிக் குழகனைக் குறுகி நின்று
கைதொழு திறைஞ்சித் தாங்கள் கனைகழற் சூரன் றனனு
லெய்திடு சிறுமை யெல்லா மியம்பின ரினிமேல் யாங்கள்
செய்திடு கின்ற தென்கொல் செப்புதி பெரும வென்றார். (௨௦)

அன்றவ ருரைத்த மாற்ற மச்சுதக் கடவுள் கேளாப்
புன்றொழிற் றக்கன் வேள்வி புகுந்திடுந் தீமை தன்னா
லின்றிது பொருந்திற் றம்மா யாரிது விலக்கற் பாலா
ரொன்றினிச் செய்யுந் தன்மை கேண்மினென் றோதலுற்றான். (௨௧)

பண்டையின் மூன்று மட்ட பராபரன் வரம்பெற் றுள்ளா
னண்டமெண் கெவையும் வென்றா னதலா னம்மால் வென்றி
கொண்டிடு திறத்தா னல்லன் கொடியவச் சூரன் றன்னைக்
கண்டுசென் றிடுது மீதே காரியம் போலு மென்றான். (௨௨)

செங்கம லத்தோ னாதி தேவரு முனிவர் யாரு
மிங்கிது கரும மென்றே யிசைந்தன ராகி நிற்ப
வங்கவ ரோடு மாயோ னரவணைப் பள்ளி நீங்கித்
துங்கம துடைய தொல்சீர்ச் சூரனைக் காண வந்தான். (௨௩)

மருத்துழாய் மவுலி யாதி வானவர் முனிவர் யாருந்
திருத்தகு சூர னேரே சென்றுதன் றுசி கூறி
யருத்திய தாகப் போற்ற வவர்களுட் பதினோர் கோடி
யுருத்திரர் தொகுதி யானோ ரொருங்குட னிற்பக் கண்டான். (உச)

கண்டிடு மவுணர் தங்கள் காவல னிமையா முக்க
ணண்டர்தம் பெருமா னென்ன வமைந்ததொல் வடிவ முள்ளா
ரெண்டரு தொகையின் மிக்கா ரீங்கிவர் யாவ ரென்னத்
தண்டுளா வலங்கன் மோலிப் பண்ணவன் சாற்ற லுற்றான். (உரு)

ஆக திருவிருத்தம் - கூ௫௦.

வசனம்.

சூரபதுமன் தேவலோக மார்க்கமாய் வருவதை அவுணர்க்கரசன் கேட்டுத் தன் சேனையோடு களிப்படைந்து தன் குலகுருவாகிய சுக்கிராசாரியனைக்கண்டு தன் வருகையைச் சூரபதுமனுக் கறிவிக்கும்படி வேண்டிக்கொள்ள, அவனும் சூரபதுமனையடைந்து அவனாலும் அவன் தம்பியராலும் வழிபாடு செய்யப்பட்டுச் சூரபதுமனைநோக்கி உன் தாயாகிய மாயையைப்பெற்ற அவுணர்க்கரசன் மிகக்கல்வி கேள்விகளில் வல்லவன், அசுரரையெல்லாம் காப்பாற்றுகின்றவன், எங்களுக்கெல்லாம் ஒரு துணையானவன், இந்திரனோடு பலமுறை போர்செய்து புழுங்கி மனம் வருந்திக்கிடந்தவன். அப்படிப்பட்டவன் உன்னையே யென்றும் பார்த்துக்கொண்டிருப்பான். நீ பரமசிவனை நோக்கி யாகஞ்செய்ததும் அவனருளிய வரங்களைப் பெற்றதும், கேட்டு மகிழ்ந்து துன்பந் தவிர்ந்து தோள்கள் பூரித்து உன்னைக் காணும்படி அதோ வருகிறானென்று காட்டக்கண்டு, சூரபதுமன் மகிழ்ந்து பாட்டனை வணங்கி நயவார்த்தைகள் பேசி விடைபெற்றுப் பூலோகம்வந்து சேர்ந்தான். அதைக்கண்ட பிரமன், இந்திரன் முதலானவர்களும் திருப்பாற்கடலில் யோக நித்திரை செய்யும் திருமாலையடைந்து தாம் சூரபதுமனால் வருந்துவதையெடுத்துச்சொல்ல, திருமால் இது அற்பத்தன்மையுடைய தக்கன் செய்த யாகத்தின் பிரயோசனமே யல்லாமல் வேறல்ல, இதை யார்தான் தடுக்கவல்லவர். அச்சூரனோ பரமசிவன் திருவருள் பெற்றிருக்கின்றான்; சகல அண்டங்களையும் வெற்றிகொண்டவன்; நம்மால் வெற்றிகொள்ளப் படுபவனல்லன். அவனை நாமெல்லாம் கண்டுகொள்வதே நலம் என்று பிரமன்முதலிய தேவர்களுடன் விரைந்து சூரபதுமனையடைந்து ஆசீர்வதித்துநிற்க, சூரபதுமன் அவருள் பதினொருகோடி யுருத்திரரைக்கண்டு, இவர்கள் யார்? எனக்கு விளங்கச் சொல்லவேண்டுமென்று கேட்க, துளவமாலை யணிந்த திருமால் சொல்வதாயினான்.

எதிர்கோள்படலம் முற்றிற்று.

# உருத்திரர்கேள்விப்படலம்.

மன்னவர் மன்ன கேண்மோ மற்றிது புகல்வன் வேதா
முன்னொரு கற்பந் தன்னின் மூவகை யுலகு நல்கித்
துன்னுயிர் முழுது நல்கித் துண்ணென வகத்தை கொண்டு
தன்னையும் பரமென் றுன்னித் தானுளை யயர்த்தா னன்றே. (க)

எந்தையை மறந்து போதன் யாவையும் விதித்த லோடுந்
தந்திடு மளவே யன்றிச் சராசரம் பெருகா வாக
நொந்தனன் குறையென் னென்றே நோக்கின னெமைமுன் னீன்ற
வைந்தொழின் முதல்வன் றன்னை யயர்த்தனன் போலு மென்றான். (௨)

இனியவ னருள்பெற் றன்றி யிவ்விதி முடியா தென்னாத்
தனயனு மளவில் காலந் தவம்புரிந் திடவு முக்கட்
பனிமதி முடியோ னன்னான் பாற்படா தொழிய வந்தோ
வினையினேன் முன்னந் தாதை வெளிப்படு மெவன்கொ லென்றான். (௩)

கழியுடல் புயமேற் கொண்ட கண்ணுத லுருத் துன்னி
யிழுதைய ரென்ன வேங்கி யின்னலுற் றுயிர்த்து வல்லே
யழுதனன் மகவென் செய்வா னன்னமேதோர் வேலை கண்ணீர்
விழுவிழ வலகை யாகி மிகவெழூந் தீண்டிற் றன்றே. (௪)

காண்டலு மலகை யீட்டங் கருத்திட ருழப்ப வீழ்ந்து
மாண்டனன் போலச் சோர மன்னுயிர்க் குயிராய் நின்ற
வாண்டகை யுணர்வு நல்கி யனையவன் கனவி னண்ணி
யீண்டினி வருந்தன் மைந்த வெழுகென வருளிச் செய்வான். (௫)

மதித்தனை பரமென் றன்னை மறந்தனை யெம்மை யற்றால்
விதித்திறங் கூடிற் றில்லை விரைந்தது முடிய நந்தம்
பதத்துளார் தம்மை யுன்றன் பாங்குற விடுத்து மென்றா
னுதித்திட லிறத்த லின்றி யுலகளித் துதவு மையன். (௬)

அந்நெறி கனவிற் காணு மற்புதத் தெழுந்து வேதன்
செந்நெறி பூண்டு வைகிச் சிந்தையிற் றேற்ற மெய்தி
யுன்னலு மறுவ ரைவ ருருத்திர கணத்தோர் தாதை
தன்னரு ளதனு னேற்றித் தலத்தினும் போந்து நின்றார். (௭)

நிற்றலு மவரை நோக்கி நெற்றியந் தலத்தி னீவி
ருற்றதை யெவன்கொ லென்ன வுன்செயன் முடியு மாற்றான்
மற்றெமை விடுத்தா னம்ப னுதலின் வந்தே மென்றார்
பற்றலர் புரமூன் றட்ட பண்ணவன் வடிவங் கொண்டோர். (௮)

பரமன துருவாய் நின்றோர் பதினொரு வோரு மிவ்வா
றருள்செய விரிஞ்சன் கேளா வன்பினு லென்பால் வந்நீர்
விரைவுட னுயிர்க டம்மை விதிக்குதி ரென்னத் தத்த
முருவுபோற் பதினோர் கோடி யுருத்திரர் தொகையைத் தந்தார். (௯)

ஆங்கது தெரிந்து வேதா வாவிகள் வினைக்கீ டன்றி
நீங்களிவ் வாறு செய்கை நெறியதன் றென்ன லோடு
மோங்கிய வுருத்தி ரேச ரொல்லையெம் பதத்திற் போத
யீங்கிவ ணுயிரை முன்போ லீந்தனை யிருத்தி யென்றார். (௧௦)

என்றிவை யுரைத்துப் போதன் யாவையும் படைப்பா னல்கி
யொன்றிய வுணர்வின் மிக்க வுருத்திரர் யாரும் வெள்ளிக்
குன்றுடை முதல்வன் றொன்னாட் கொடுத்திடும் புவனம் புக்கா
ரன்றுதா மளித்து ளோரை யமரரே டிருத்தி ரென்றார். (௧௧)

அவனியை யளித்தோன் றன்பா லடைந்துளா ரண்டந் தன்னிற்
புவனமே லிருந்தா ரன்னார் புரிந்திடத் தொன்னாள் வந்த
பவர்முத லுருத்தி ரேசர் பதினொரு கோடி யுள்ளா
ரிவர்சிவ னருளால் வானோ ரினத்துட னீண்டி யுற்றார். (௩௪)

ஆ திருவிருத்தம் - ௯௬௨.

---

வசனம்.

நான்முகங்கொண்ட பிரமன் முன்னொரு கற்பத்தில் சுவர்க்கமத்திய பாதாளமென்னும் மூவுலகத்தினையும்படைத்து எல்லாவுயிர் வருக்கங்களையும படைத்துவிட்டோமென்று அகங்காரங்கொண்டு நின்று எப்பொருளுக்கு மூல காரணனாகிய பரமசிவனது திருவிளையாட்டென்பதனைச் சிறிது மறியாமல் மதி மயங்கி யிருந்தான். இறைவன் திருவடித்தியானத்தை யொழிந்து பிரமன் அகங்காரத்தை கொண்டதனால் அவன்படைத்தவை அவ்வளவாகவே யிருந்ததல்லாமல் சராசரங்களாகிய உயிர்கள் பெருகாதிருக்க வருந்தி யாதுகுறைசெய்து விட்டோம, சிருட்டி, திதி, சங்காரம், திரோபவம், அனுக்கிரக மென்னும் ஐந்தொழிலையும திருவிளையாட்டாகவே கொண்டு இரணிய மன்றில ஆனந்தத் தாண்டவஞ் செய்யும் பரமசிவனது திருவடித்தியானத்தை மறந்து விட்டோமே, இனி அவனருள் பெற்றாலன்றிச் சிருட்டித்தொழில் கைவராதே யென்று பரமசிவனை நோக்கி யருந்தவஞ் செய்தான். அப்படி அருந்தவஞ் செய்தும் எம்பெருமான் வரப்பெறாமையால சிந்தை வருந்துகையில், சிவபெருமான் பிரமன் கனவின்கண் வெளிப்பட்டு வருந்த வேண்டாம், எம்மை மறந்தமையால் உனக்குப் படைப்புத்தொழில் கைகூடாமற் போய்விட்டது, நமது பதத்திலிருக்கும் உருத்திர கணங்களை உம்மிடத்தில் அனுப்புகிறோம், அவர்கள் துணைவலியால் நீ முன்போலும் சிருட்டித்தொழில் நடத்தி வருவை எழுந்திருவென்று கட்டளையிட, பிரமனும் விழித்தெழுந்து சிவத்தியானத்துடனிருக்கையில் அவனது நெற்றியின் வழியாகப் பதினொரு ருத்திரர்கள் சாரூபம் பெற்றவர்களாய் அடைந்தார்கள். நீங்கள்வந்த காரணமென்னவென்று அவர்களைக்கேட்க, அவர்கள் நீ சிருட்டித்தொழிலைமறந்து வருந்தியதை யுணர்ந்து எம்பெருமானாகிய பரமசிவன் உனக்குப் படைப்புத்தொழில்கைகூட எங்களையனுப்பினாரெனப், பிரமன் உயிர்களைப்படைக்கும் வகையைக் காட்டுங்களென்றுசொல்ல, அதைக்கேட்ட அப்பதினொருவரும் தம்முருவம்போலவே பதினொருகோடி உருத்திரரைப்படைத்துக்காட்டி விடைபெற்றுத் தமது பதங்களைப்போயடைந்தார்கள். அவர்களாற் படைக்கப்பட்ட பதினொருகோடி உருத்திரரும் தேவர்களோடெண்ணப்பட்டு வாழ்ந்திருக்கின்றனர். இவர்களே பவர் முதலாகிய உருத்திரராவரென்று சொல்லச் சூரபதுமன் கேட்டு மகிழ்ந்தான்.

உருத்திரர்கேள்விப்படலம் முற்றிற்று.

---

# நகர்செய்படலம்.

எனவரி புகலக் கேளா வின்னதோ நிகழ்ச்சி யென்றூ
னனையதற் பின்ன ராண்டை யமரர்கம் மியனை நோக்கி
வனைகழற் சூர பன்மன் மற்றியா முறைதற் கொத்த
புனைதிரு நகரம் வல்லே புரிமதி புலவ வென்றான். (௧)

என்றலுங் கடவுட் டச்ச னிறைஞ்சியே நமக்குச் செய்யும்
வென்றிகொண் மூதூ ருக்கு வியலிட முரைத்தி யென்ன
நன்றெனப் புகரோன் றானே நகர்களுக் கெல்லை கூற
வன்றவை வினவித் தென்பா லளக்கரை யடைந்தா னன்றே (௨)

ஆசறு கடலி னூடே யயுதமோ ரெட்டா யுள்ள
யோசனை யெல்லை முன்னோ னுறுநக ராகக் கோலிக்
காசினி வரைக டம்மாற் கதுமெனத் தூர்த்து மிக்க
பாசறை கொண்டே யொப்ப வணித்தலம் படுத்துப் பின்னை. (௩)

காயுறு கதிர்கள் காஞ்சிக் கம்பைமா நீழல் வைகு
நாயகி நகர மென்ன நாடொறுஞ் சூழு மாற்றாற்
சேயுயர் விசும்பிற் போகச் செம்பொனான் மதிலைச் செய்து
வாயில்க ளனைக மைத்து ஞாயிலும் வகுத்து நல்கி. (௪)

நாற்பெரு வாயி லூடு மேருவே நண்ணிற் றென்ன
மாற்பெருங் கோபு ரங்கண் மணிவெயி லெறிப்ப நல்கி
நூற்படி மொழுக்க நாடி நூறியோ சனையொன் றாகப்
பாற்படு மாட வீதி பற்பல வமைத்து மன்னோ. (௫)

முப்புர மொருங்குற் றென்ன மும்மதி லவற்று ணல்கி
யொப்பருந் திருவின் வீதி யுலப்பில புரிந்து சோமன்
வைப்பெனச் செம்பொன் மாடம் வரம்பில வகுத்து மாதர்
மெய்ப்படு மாடல் கூரும் வியலிடம் பலவுஞ் செய்து. (௬)

மாளிகை தோறுந் தெற்றி மண்டப மணிசேர் முன்றில்
கோளரி தயங்கு பொற்பிற் கோபுரங் குன்ற மம்பொற்
சூளிகை யரங்க மன்றஞ் சுடருமேற் றலங்க ளேப
சாளரஞ் சோலை வாவி தனித்தனி யாகத் தந்து (௭)

## வேறு.

ஆயுத னடுவுற வயுத வெல்லையிற்
பாயதோர் நெடுமதில் பயில நல்கியே
மாயவ டிருமகன் வைக வாங்கொரு
கோயிலை யெழில்பெறக் குயிற்றி னானரோ. (௮)

வாரணம் விரவுதேர் மாக்கள் போந்திடுந்
தோரண வாயில்க டொடர்ந்த தெற்றிகள்
சீரணி தபனியச் சிகர கோபுரங்
காரணி மணிவரை கவின்கொள் சூளிகை. (௯)

ஆனைகள் பயிலிட முயங்கள் சேரிடஞ்
சேனைக ளுறைவிடந் தேர்கள் வைகிடந்
தானவர் தலைவர்கள் சாருந் தொல்லிட
மேனைய வரக்கர்க ளினிது சேரிடம். (௧0)

நாடரும் விசும்புறை நாரி மாரெலா
மாடலை யியற்றிடு மரங்க மண்டபம்
பாடலின் முறைபயில் பைம்பொன் மண்டப
மாடக யாழ்முரல் வயிர மண்டபம். (௧௧)

மயில்புற வோதிமம் வன்ன மென்கிளி
குயின்முத லாகிய குலவு மண்டப
மியலுறு யூகமா னிபலை செச்சைகள்
பயிலுறு வாரணம் பரவு மண்டபம். (௧௨)

சந்தத மறையொலி தழங்கு மண்டப
முந்திய வேள்விகண் முயலு மண்டப
மந்திர வியல்பினோர் மருவு மண்டப
மிந்திரன் முதலினோ ரிருக்கு மண்டபம், (௧௩)

திருமிகு கிருதர்கோன் றேவர் போற்றிட
வரசியல் புரியுமத் தாணி மண்டப
மிருநிதி யுளவெலா மீண்டு மண்டபம்
பரனருள் படைக்கலம் பயிலு மண்டபம். (௧௪)

அருந்துறு மமிர்தற மூடிகின் மண்டப
நரந்தையே பாளித நறைகொள் சாந்தகில்
பெருந்துவர்க் காயடை பிறவுஞ் சாலவு
மிருந்திடு கின்றபே ரெழில்கொண் மண்டபம். (௧௫)

மானனை யார்பலர் மருவு மண்டப
மானதோ ரூசலாட் டயரு மண்டபம்
பானிலா வுமிழ்தரு பளிங்கின் மண்டபம்
வானுயர் சந்திர காந்த மண்டபம். (௧௬)

மாமணி யொளிர்தரு வசந்த மண்டபங்
காமரு பவளமார் கவின்கொண் மண்டப
மேமரு மரகதத் தியன்ற மண்டபந்
தாமரை யுயிர்த்திடு தரள மண்டபம். (௧௭)

கோவியன் மரபினோர் கொள்கைக் கேற்றன
யாவையு நலகியே யிதனுக் குள்ளுற
மாவுறு சூரபன் மாவுந் தன்குலத்
தேவியு முறையவோ ருறையுள் செய்தரோ. (௧அ)

இங்கிது சூழ்தர வெண்ணி லாதன
மங்கல நிறைதரு மாட வீதிக
ளங்கவன் றுணைவிய ராகி வந்திடு
நங்கையர் மேவர நலத்தி னல்கியே. (௧௯)

காவியுங் குமுதமுங் கமல முஞ்செறி
வாவிக ளோடைகள் பொய்கை வான்றொடு
பூவிய றண்டலை பொலன்செய் குன்றுடன்
யாவையு முறைபட வியற்றி னானரோ. (௨௰)

அள்ளலந் திரைக்கட லகழி யாகவே
யுள்ளுறு நகரிடை யுறையுங் கோயிலிற்
றள்ளரும் பொன்சுடர் தழைத்த பொற்பினால்
வெள்ளிய தானது மேலைப் பொன்னகர். (௨௧)

வேறு.

இன்னவையு மேனவையு மெண்ணிமனத் தாலருளித்
தன்னிகரி லவுணர்பிரான் சயத்தோடு பெருந்தலைமை
மன்னவரு தலின்வீர மகேந்திரமே யாமென்றே
யந்நகருக் கோர்நாம மணிபெறுத்தி யளித்தனனே. (௨௨)

ஏமபுர மிமயபுர மிலங்கைபுர நீலபுரஞ்
சோமபுர மெனப்புகலுஞ் சுவேதபுர மவுணர்புரம்
வாமபுரம் பதுமபுர மகேந்திரமா புரமென்னுங்
காமர்புரத் தெண்டிசைக்குங் காட்சிபெற வுதவினனால். (௨௩)

மாண்டகுசீர் கெழுவீர மகேந்திரமிவ் வாறுதவி
யாண்டதுபோ லகன்பரப்பி லாசுரமென் றொருநகர
நீண்டவட கடனடுவ ணிருதர்புகழ்ந் திடுமாற்றாற்
காண்டகைய சீயமுகக் காவலற்கு நல்கினனே. (௨௪)

மற்றுளவெம் புணரிதொறும் வயின்வயின்சேர் தீவுதொறுங்
கொற்றமிகுஞ் சூரபன்மன் குலவுபெருந் தானையெலாஞ்
சுற்றமுடன் மேவுதற்குத் தொன்னகரம் பலவமைத்துக்
கற்றுணருஞ் சிறுவரொடுங் கம்மியன்மீண் டேகினனே. (௨௫)

வேறு.

நீடு மேரு நெடுவரைத் தென்புடை
நாடு சீர்கெழு நாவலந் தீவினிற்
கூடு கின்றபொற் கூடந் தனக்கொரு
மாடு போந்தனன் மாமயன் றாதைமேய. (௨௬)

பகரு கின்றவப் பாற்படு மெல்லையிற்
றகுவர் போற்றிடுந் தாரகற் காகவே
மகிழ்வி னீரொடு மாயா புரமெனு
நகர மொன்றை யணிபெற நல்கினான் (௨௭)

வினையர் தம்மொடு விச்சுவ கன்மனு
மினைய வூர்க ளியற்றியம் மாயையின்
றனய னுக்கிவை சாற்றலு நன்றென
வனிக மோடங் கடைந்தன னென்பவே. (௨௮)

ஆ. திருவிருத்தம் - ௬௬௰.

வசனம்.

சூரபதுமன் அங்கேயிருந்த விசுவகர்மாவை நோக்கி நாம் வசிக்கத்தக்க நகரமொன்று சிருட்டிக்கவேண்டுமென்றேனென்ன, அதைக்கேட்ட அவ்விசுவகர்மா நீர் வசிப்பதற்குரிய விடங்காட்டினால் படைக்கின்றேனென்று சொல்ல, அருகே கேட்டிருந்த சுக்கிராசாரி அந்த நகரங்களுக்கெல்லையையெடுத்துச் சொலக்கேட்டுத் தென் சமுத்திரக்கரையையடைந்து கடலின் நடுவில் ஒரு நகரத்தைப் படைத்து வீரமகேந்திரபுரமெனப் பெயரிட்டு அந்நகரத்தின் நடுவில் சூரபதுமனுக்கு ஒரு இராசமாளிகை யுண்டாக்கி அந்நகரைச்சூழ ஏமபுரம், இமயபுரம், இலங்காபுரம், நீலபுரம், சுவேதபுரம், அவுணர்புரம், வாமபுரம், பதுமபுரமென்னும் எட்டு நகரங்களையும் படைத்துக் கொடுத்துச் சிங்கமுகாசுரனுக்கு ஆசுரபுரமென்றொரு நகரத்தை நிருமித்து மற்ற சமுத்திரங்களிலுள்ள தீவுகளிலெல்லாம் அச்சூரபதுமனது சேனைவீரர்கள்வசிக்க நகரங்களைப்படைத்து மேருமலைக்குத்தெற்கே தாரகனுக்கு மாயாபுரமென்றொரு நகரத்தையுண்டாக்கி அச்சூரபதுமனையடைந்து தான் சிருட்டித்து முடித்துவிட்டதாகத் தெரிவிக்க, அதைக்கேட்டுச் சூரபதுமன் தன்சேனையுடன் மகேந்திரநகரமடைந்து இராசமாளிகைக்குட் பிரவேசித்தான்.

நகர்செய்படலம் முற்றிற்று.

---

# பட்டாபிடேகப் படலம்.

மற்றவ் வீர மகேந்திர நண்ணியே
யுற்று நாடியவ் வும்பர்தங் கம்மியன்
கற்ற விஞ்சை வியந்து களிப்புறீஇக்
கொற்ற நீடுதன் கோயிலை நண்ணினான். (௧)

நண்ணு கின்றுழி நான்முக னாதியாம்
விண்ணு ளோர்கள் வியன்முடி சூட்டுது
மண்ண லுக்கென் றவற்றிற்கு வேண்டிய
வெண்ணில் பல்பொருள் யாவுமுய்த் தாரரோ. (௨)

கோவி னண்ணிய கொற்றவன் மற்றொரு
தாவில் பீடிகை தன்மிசை வைகியே
மாவு லாவிய மால்கடற் றெண்புன
றேவ ராட்டச் சிறப்புட னாடினான். (௩)

ஆடி யம்பொனி னுடையு டீஇமலர்
சூடி யொண்கலன் றாயன பூண்டுபின்
பீடு சேர்தரு பின்னவர் பால்வர
நீடு காத னிருதர் புகழவே. (௪)

நிகரி லாத நிருதர்க் கிறைதொழப்
புகரு மாமுனி வோரும் புகழ்ந்திட
மிகந டுங்கிய விண்ணவர் போற்றிட
மகப திக்கு மனத்தளர் செய்தவே. (௫)

வந்து சிய மணித்தவி சேறின
னந்த வெல்லையி லச்சுதற் காமெனு
மிந்தி ரத்திரு மாமுடி யேந்தியே
சுந்த ரத்தொடு நான்முகன் சூட்டினான். (௬)

கண்டு தானவர் காசிபன் காதலன்
புண்ட ரீகப் பொலன்கழ ருழ்ந்தெழா
வண்டொ ணுமகிழ் வாலடுந் தேறலை
யுண்டு ளாரி னுளங்களிப் பெய்தினார். (௭)

அன்ன வேலை யமரர் முனிவர்கள்
பொன்ன வாநறும் போது கரங்கொடே
மன்னர் மன்னன் மணிமுடி யின்மிசை
முன்னி வாழ்த்தி முறைமுறை வீசினார். (௮)

வேறு.

பாங்குறு தவிசின் பாலிற் றுணைவர்பங் கயன்மா ரும்மை
யீங்கினி திருத்தி ரென்ன விருந்தன ரேவ லாலே
யோங்கிய மகவான் கொண்டான் களாசியொண் ணிதியின் கோமான்
றாங்கின னடைப்பை மற்றச் சமீரணர் கவரி கொண்டார். (௯)

நிருதர்தங் குரிசி லான நெடுந்தகை யுடைவாள் கொண்டான்
பரிதியு மதியு மங்கட் பனிக்குடை நிழற்றி நின்றார்
வருணனு மகாரு மால வட்டம்வீ சினர்யாழ் வல்ல
கருடர்கந் தருவர் சித்தர் கானமங் கிசையா நின்றார். (௧0)

முத்தலை யயில்வே லேந்தி முறைநெறி யாற்றுங் கூற்று
மெய்த்தழற் கடவு டானும் வேத்திர மேந்தி யாண்டு
மெத்திறத் தவரு நீங்க வெரிவிழித் திடியி னார்த்துப்
பத்தியி னிறுவிச் சூரன் பல்புகழ் பரவி நின்றார். (௧௧)

றுரைகழ னிருதி யென்போன் கோடிக மதனைக் கொண்டா
னிருமைசேர் குரவர் தாமு மெலலைதீர் முனிவா யாருந்
திரைகெழு கங்கைத் தூநீர் செம்பொனங் கலசஞ் சேர்த்துத்
தருவையின் மறையால் வாங்கித் துவலைதூர்த் தாசி சொற்றார். (௧௨)

அரம்பைமே னகையே மிக்க வுருப்பசி யாதி யாங்
வரம்பறு மமரர் மாதர் வரன்முறை விதியி னாடி
நரம்பியல் சுருதி பாட வியத்தொடு படிந்து நண்ணித்
திரம்பயி னடன மூன்றுஞ் செவ்விதிற் புரிய லுற்றார். (௧௩)

இத்திற மமரர் யாரு மேனையர் தாமு மீண்டித்
தத்தம துரிமை தன்னைத் தவாநெறி தலைக்கொண் டாற்ற
மைத்தகு சூர பன்மன் மடங்கலந் தவிசின் மீதே
மெய்த்திரு நிகழ மன்னிப் பின்னிவை விளம்ப லுற்றான். (௧௪)

ஆ திருவிருத்தம் - ௧௦௦௪.

---

இவ்வாறு சூரபதுமன் இராசமாளிகையையடையக்கண்டு பிரமனாதியோர் அவனுக்குப் பட்டாபிஷேகஞ் செய்யக்கருதி அதற்குவேண்டிய பொருள்களையெல் லாம் சேகரித்துக் கொண்டுவந்து அவனைப் பாற்கடலின் நீரினால் மஞ்சனமாட்ட,

அவனும் அம்மஞ்சனநீராடிப் பீதாம்பரமுடுத்து நவரத்நகசிதமான பொன்னாபரணம்பூண்டு தம்பியரிருவரும் புடைசூழ்ந்துவரச் சிங்காதனத்தில் வீற்றிருந்தனன். நிருதர்களும் சுக்கிராசாரியும் முனிவர்களும் புகழவும், தேவர்கள் துதிக்கவும், இந்திரனுக்கு மனந்தளரவும், திருமாலுக்குச் சூட்டத்தக்க செல்வத்திருமுடியென்று சொல்லத்தக்க மணிமுடியைப் பிரமன்சூட்ட அவுணர்களெல்லாம் அச்சூரபதுமனுடைய பாதங்களில்வீழ்ந்து வணங்கினார்கள். அப்போது முனிவரும் தேவரும் பொன்னாலாகிய மலர்மழை பெய்தனர். அப்போது சூரபதுமன் தம்பியரையும் பிரமன் மாலென்னும் இருவரையும் அருகேயிருக்கக் கட்டளையிட, அவ்வாறேயவர்கள் அவன் பக்கத்திலிருந்த ஆசனத்திலிருந்தார்கள். இந்திரன் தம்புலப்படிகமேந்திக்கொண்டும், குபேரன் அடைப்பையேந்திக்கொண்டும், வாயு சவரிவீசிக்கொண்டும், நிருதர்பெருமான் உடைவாளேந்திக்கொண்டும், சூரியனும் சந்திரனும் வெண்கொற்றக்குடை பிடித்துக்கொண்டும், வருணனும் அவன்மக்களும் சிற்றாலவட்ட மேந்திக்கொண்டும், வீணையில்வல்ல கருடர் கந்தருவர், சித்தர் தேவகானம் பாடிக்கொண்டும், யமனும் அக்கினி தேவனும் பொற்பிரம்பேந்திச் சந்தடிவிலக்கியும், நிருதி கோடிகமேந்தியும், பிரகஸ்பதியும் சுக்கிராசாரியும் மற்ற முனிவரும் மங்கலநீரைப் புரோக்ஷித்துக்கொண்டும், அரம்பை, மேனகை திலோத்தமை, ஊர்வசி முதலாகிய அரம்பாஸ்திரீகள் தேசிகம, வடுகு, சிங்களமென்னும் நடனவிசேடஞ் செய்துகொண்டும் அச்சபையில் இருந்தனர்.

பட்டாபிஷேகப்படலம் முற்றிற்று.

---

# அரசுசெய்படலம்.

களித்திடு ஞிமிறும் வண்டுங் கலந்திட நறவம் பொங்கித்
துளித்திடு துழாய்மா றன்னைச் சூரனு மவுணன் பாரா
வளித்தவன் றன்மூ தாதை யாயினை யதனா னின்னை
விளித்திடு மெல்லை தோறும் விரைந்திவண் மேவு கென்றான். (௧)

செங்கம லத்தின் மேவுந் திசைமுகத் தொருவன் றன்னைத்
துங்கமோ டரசு செய்யுஞ் சூரனும் வீரன் பாரா
விங்குநின் மைந்த ரோடு மென்னிடந் தன்னி லேகி
யங்கமை வகையு நாளு மறைந்தனை போதி யென்றான். (௨)

அறத்தினை விடுத்த தீயோ னருக்கனை நோக்கி நம்மூர்ப்
புறத்தினி லரண மீதாய்ப் போகுத லரிது கீழ்மே
னிறுத்திய சிகரி யூடு நெறிக்கொடு புக்கு வான்போ
யெறித்தனை திரிதி நாளு மிளங்கதிர் நடாத்தி யென்றான். (௩)

அறைகழற் சூர பன்ம னவிர்மதி தன்னை நோக்கிப்
பிறையென வளரு மாறும் பின்முறை சுருங்கு மாறு
மறைவொடு திரியு மாறு மற்றினி விடுத்து நாளு
நிறைவொடு கதிரோன் போலிந் நீணகர் வருதி யென்றான். (௪)

பொங்கழன் முதல்வன் றன்னைப் புரவலன் விரைவி னோக்கி
யிங்குநம் மூதூ ருள்ளோர் யாவரே யெனினு முன்னி
னங்கவர் தம்பா லெய்தி யவர்பணி யாவு மாற்றிச்
செங்கம லம்போல் யாவர் தீண்டினுங் குளிர்தி யென்றான். (௫)

சுடர்முடி யவுணர் செம்ம றொல்பெருங் கூற்றை நோக்கிப்
படிமுழு துயிரை நாளும் படுப்பது போல நந்தங்
கடமத கரியை மாவைக் கணிப்பிலா வவுணர் தம்மை
யடுவது கனவு முன்னா தஞ்சியே திரிதி யென்றான். (௬)

அண்டரு மூலவை யானை யவுணர்மாத் தலைவன் பாரா
வெண்டரு நம்மூ தூரில் யாவரும் புனைந்து நீத்த
தண்டுளி நறவ மாலை தயங்குதூண் கலிங்கஞ் சாந்த
துண்டுக ளாடு சுண்ண மாற்றுதி நொய்தி னென்றான். (௭)

காவலன் வருணன் றன்னைக் கண்ணுறீஇ நம்மூ தூரி
னாவிவெண் பளிதஞ் சாந்த நரந்தமோ டளாவித் தீம்பா
லாவியின் வெளிய நொய்ய வரும்பனி நீரிற் கூட்டித்
தூவுதி யிடங்க டோறுங் காறறது துடைக்க வென்றான். (௮)

வாசவன் றன்னை நோக்கி மால்கெழு திருவின் மேலோன்
றேசுறு துறக்கம் வைகுந் தேவர்தங் குழுவி னோடு
மாசையங் கிழவ ரோடு மருந்தவ ரோடும் போந்து
பேசிய பணிக ளாற்றித் திரிமதி பிழையே லென்றான். (௯)

இந்நெறி சூர பன்மன் யாவர்க்கும் வீற்று வீற்றுத்
தன்னுறு பணியி னிற்பான் சாற்றலு மனைய ரஞ்சி
யன்னது செய்து மென்றே யனையவா றொழுக வன்னான்
மன்னின னரசிற் பின்றை மணஞ்செய வுன்னி னானால். (௧௦)

மதிமுகத் திருவே போல்வாள் வானவர் புனைவன் றந்த
பதுமகோ மளையென் றோதும் பாவையைப் புகரோ னாடிச்
சதுர்முகன் முதலாந் தேவர் தானவர் பிறரும் போற்ற
விதிமுறை வதுவை செய்து விழைவொடு மேவி யுற்றான். (௧௧)

அன்னதற் பின்னர் வானோ ரசுரர்கந் தருவர் சித்தர்
கின்னர ரியக்கர் நாகர் கிம்புரு டாதி யானோர்
கன்னிய ரளப்பி லாரைக் கடிமணஞ் செய்து கூடித்
துன்னுபன் மலர்த்தே னுண்ணுஞ் சுரும்பென வின்பந் துய்த்தான். (௧௨)

அரிமுகத் தவுணர் வேந்தற் கந்தகன் மகளா யுள்ள
திருமிகு விபுதை தன்னைச் சீர்மணஞ் செய்து நல்கி
நிருதிதன் புதல்வி யான நேரிழை சவுரி தன்னைக்
கரிமுக விளவல் சேரக் கடிமணம் புரிவித் திட்டான். (௧௩)

இவ்வகை மணஞ்செய் பின்றை யிருதுணை வரையு நோக்கி
மெய்வளம் பெறநுங் கட்கு விதித்திடு மூதூ ரேகி
யவ்விரு கோடி வெள்ள மனிகமோ டிருத்தி ரென்னாக்
தெவ்வடு சூர னன்னோர் செல்லுமா றேவி னானால். (௧௪)

எஞ்சிய தனது தானைக் கிறைவரிற் பலரை நோக்கி
நீவிர்க ளிரண்டு கோடி நீத்தமா மனிகத் தோடு
தீவுக டோறு மாழி யிடந்தொறுஞ் செய்த மூதூர்
மேவுதிர் விரைவி னென்னா வனையரை விடுத்தான் மன்னோ. (௧௫)

மாறிலாத் திசைக ளெட்டும் வானுல கேழு மிப்பாற்
கூறுபா தலங்கள் யாவு மொழிந்தவுங் குறுகி யேதன்
னீறிலா வாணை போற்ற வெல்லையி லவுணர் தம்மை
யாறெனுங் கோடி வெள்ளத் தனிகமோ டேகச் செய்தான். (௧௬)

விட்டிடு காலை தானே விண்ணுமண் ணுலகுந் திக்கோ
ரெட்டொடு பிலனு மேழு மேனைய வரைப்பு மாகிக்
கிட்டின செறிந்து மொய்த்த கேடில்சீ ரவுணர் தானை
மட்டகல் வானம் பூத்த வுடுக்களின் மலிந்த வன்றே. (௧௭)

எங்கணுந் தனது தானை யிடையறு தீண்ட லோடுந்
துங்கவெஞ் சூர பன்மன் றூனுறை தொன்மூ தூரி
னங்கணே ரிலக்கம் வெள்ளத் தவுணர்தந் தானை தன்னை
மங்கல விருக்கை தோறு மரபுளி யிருத்தி மன்னோ. (௧௮)

கரிபரி யாளி யெண்கு கடுவயப் புலியே யேன
மரிமரை முகத்து வீர ரவுணர்தந் தலைவ ராமோ
ரிருவகை நான்மை யோர்க்கு மெண்டிசை நகரு மீந்து
வருபடை யயுதத் தோடு மகேந்திரங் காக்கச் செய்தான். (௧௯)

ஞாயில்கள் செறிந்த நொச்சி நாற்பெருந் தகைமைத் தான
வாயில்க டோறு நாப்பண் வளநக ரிஞ்சி தோறுங்
கோயிலி னிருக்கை தோறுங் குணிப்பிலா வீரர் தம்மை
நீயிர்கள் காமி னென்னு நிலைப்பட நிறுவி யிட்டான். (௨௦)

துர்க்குணன் றரும கோபன் றுன்முகன் சங்க பாலன்
வக்கிர பாலன் றீய மகிடனே முதலோர் தம்மைத்
தொக்கமந் திரிக ளாகத் துணைக்கொடே சூர பன்மன்
மிக்கவா னவர்கள் போற்ற வீற்றிருந் தரசு செய்தான். (௨௧)

ஆக திருவிருத்தம் - ௧௦௨௫.

---

வசனம்.

இவ்வாறு சூரபதுமன் கொலுவீற்றிருந்தான். அப்படிக் கொலுவீற்றிருந்த சூரபதுமன் திருமாலைநோக்கி நீயென் பிதாவின் பிதாமகனுயிருத்தலால் நான் அழைக்குந்தோறும் வந்துபோகவேணடுமென்றும், பிரமனைநோக்கி நீ தினந்தோறும் காலையிலவந்து பஞ்சாங்கஞ்சொல்லிப் போகவேணடுமென்றும், சூரியனைநோக்கி நீ இளங்கதிர்பரப்பி கிழக்குமேற்காகநிற்கும் கோபுரத்தின் வழியாகச்சென்று திரியவேண்டுமென்றும், சந்திரனைப்பார்த்து வளர்ச்சியும் குறைவுமில்லாமல் என்றும் பூரணகலையோடுகூடி நமதுநரகத்திற் பிரவேசிக்கவேண்டுமென்றும், அக்கினிதேவனைப்பார்த்து நமது நகரத்தில் யார் நினைத்தபோதிலும் அவர்களுக்குக் குற்றேவல் செய்து போகவேண்டு மென்றும், யமனைப் பார்த்து நீ கனவிலும் நமது நாற்படைகளையும் பிறவுயிர்களைக்கவருதல்போற் செய்யக்கூடாதென்றும், வாயுதேவனைநோக்கி நமது நகரத்தில் வசிப்பவர் யாவரும் அணிந்து நீக்கிய மலர்மாலை முதலியவற்றை விரைந்து மாற்றவேண்டுமென்றும், வருணனைப்பார்த்து சுகந்த வஸ்துக்களைப் பனிநீரிற்கூட்டி நமதுநகரத்தில் தூவவேண்டுமென்றும், இந்திரனைப்பார்த்து நீ நமது கட்டளைதவறாமல்வந்து குற்றேவல் செய்து போகவேண்டு

மென்றுங் கட்டளையிட அவர்களும் அதற்கிசைந்து விடைபெற்றுப்போக அரசு செய்துகொண்டுவந்து ஒருநாள் தான் திருக்கலியாணஞ் செய்துகொள்ளநினைத்துத் தெய்வத்தச்சன்மகளாகிய பதுமகோமளையென்பவளைச் சுக்கிராசாரியரால் மணம் பேசிமுடிப்பித்துப் பிரமன்முதலினோர் போற்றும்படித் திருமணம்நேர்ந்து பின்பு தேவர் அசுரர் முதலினோர் அருமையாகப்பெற்ற புத்திரிகளையுங் கலியாணஞ்செய்துகொண்டு இன்பமடைந்திருந்தான். இவ்வாறிருக்கையில் தன்தம்பிமாராகிய சிங்கமுகாசுரனுக்கு யமனுடையமகளாகிய விபுதையென்பவளையும், யானைமுகங்கொண்ட தாரகனுக்கு நிருதிமகளாகிய சவுரியென்பவளையும் திருமணஞ்செய்வித்து அவர்களைப்பார்த்து நீங்கள் ஆசுரபுரத்தையும் மாயாபுரத்தையும் அடைந்து சேனைசமுத்திரம் சூழ்ந்துவர அரசாண்டு வாருங்கோளென்று கட்டளையிட்டுப் பின் தன் சேனைத்தலைவர் பலரைப்பார்த்து நீங்கள் தீவுகளிடத்திலும் சமுத்திரங்களிடத்திலும் கட்டப்பட்டிருக்கும் பட்டணங்களிற்சென்று நமதாணையைச் செலுத்திவரவேண்டுமென்றும், வானுலகேழிலும் பாதலங்களிலும் சென்று தன்னாணையை நடத்திவரச் சில சேனைத்தலைவரை யனுப்பிவிட்டு, எங்குந் தன்னாக்கினைச்சக்கரமே செலத் தானரசுசெய்யும் மகேந்திரபுரத்தில் இலட்சம்வெள்ளம் சேனைகளையிருத்திப் பின்பு தன் இராஜதானிக்கருகே எண்டிசையிலுமுள்ள நகரங்களுக்குத் தலைவராக யானை குதிரைமுதலிய மிருகமுகமுடைய அவுணவீரரை நியமித்துத் தன் கோட்டைமுதலியவிடங்களில் அநேகரைக் காவலாகநிறுத்தித் துர்க்குணன்முதலிய எண்மரைத் தனக்கு மந்திரிகளாக அமைத்துக்கொண்டு அரசுபுரிந்துவந்தான்.

அரசுசெய்படலம் முற்றிற்று.

# தேவரையேவல்கொள்படலம்.

அரசு செய்தலு மந்தர நாதனுஞ்
சுரரு மேனை முனிவருந் தொக்குறீஇ
வரைசெய் மாட மகேந்திர மாபுரத்
தொருவ னேவலின் முன்ன மொழுகுவார். (௧)

கொலைவல் சிங்க முகன்பதி குஞ்சரத்
தலைவன் மாப்பதி சார்ந்தவர் தம்பதி
பலவு மேகிப் பணித்தன வாற்றியே
யுலைவர் வைகலு முசலி னீர்மையார். (௨)

வேறு.

ஊனமுற்றோர் போலிவ்வா றலைகின்ற காலத்தி லொருநாட் சூரன்
வானகத்துத் தலைவனையு மமரரையும் வருகவென வலித்துக் கூவித்
தானவர்க்குத் தம்பியர்நீ ரவர்பணிநும் பணியன்றோ தரங்க வேலை
மீனனைத்துஞ் சூறைகொண்டு வைகலுமுய்த் திடுதிரென விளம்பி னானால்.

உரைக்குமொழி யதுகேளா வனையரெலா முண்ணடுங்கி யுயங்கி வெள்கித்
திரைக்கடலின் மீன்றனக்குத் தருகென்றா னிதற்கினிநாஞ் செய்வ தேதோ
விரைக்கமலத் தனிக்கடவு ளிப்படியு நந்தலையில் விதித்தா னென்னா
விரக்கமொடு மறுத்தலஞ்சி யத்திறமே புரிதுமென விறைஞ்சிப் போனார்.

போகின்ற நெறியின்க ணிமையவரும் புரந்தரனும் பொருமி யேங்கி
யாகின்ற தெமக்கேயோர் பழியன்றோ வனையதுவந் தணுகா முன்னர்ச்
சாகின்ற தேமிகவு மினிதாகு மெமக்கதுவுஞ் சாரா தந்தோ
வேகின்ற சிந்தையினேஞ் செய்வதெவ னெனப்புலம்பி வேலை புக்கார்.()

அவ்வேலை யிமையவர்கோன் வருணனென்னுங் கடவுளைநின் றழையா விந்த
மைவேலை தனக்கிறைவ னீயன்றோ நின்னினுமோர் வலியா ருண்டோ
கைவேலைப் பணியியற்றித் திமிங்கிலமே முதலாய கணிப்பின் மீன்க
ளிவ்வேலை யேற்றுதியே லிடர்வேலைக் கரையிலெமை யெடுத்தி யென்றான்.

வெள்ளைவா ரணக்கடவு ளுரைசெய்த மொழிகேட்டு விண்ணு ளோர்க்கு
வள்ளனீ யிரங்குதியோ வத்தொழில்யான் புரிவனென வருணன் கூறி
யள்ளல்வே லையுட்புகுந்து தனதுபெருங் கரதலத்தா லலைத்து வாரி
யுள்ளமீன் குலங்களெல்லாந் தடங்கரையில் வரையேபோ லுயர்த்த லுற்றான். (௭)

தடக்கடலின் வேலைதனில் வருணர்பிரா னெல்லைதனிற் றந்த மீனத்
தடக்கன்முழு வதுநோக்கிக் கடவுளரை விளித்திவற்றை யாற்ற லாலே
யெடுப்பதுநுந் தொழிலென்றே யிந்திரன்றான் விளம்புதலு மிமையோ ரெல்லா
நடுக்கமுட னுளம் [illegible]ப்ப விழிபனிப்பக் கரங்குலைத்து நாணுக் கொண்டார்.

சின்னைதிமிங் கிலமிலமீ னுதியமீ னடுக்கலினைத் தென்பால் வைகு
மன்னனுயிர் தனைவாங்கச் செங்கதிரோன் பெரும்புனலின் வடிவை வாட்டப்
பன்னகரா கியதிறத்தாற் பிணித்திமைச் சுமையதனைப் பகட்டின் வேந்த
னின்னலுறு வானவர்பா லெடுத்தவவர் கொண்டேகி யிரங்கு கின்றார்.()

வேறு.

பண்ணும் புகழ்ச்சூர பன்மனெனுந் தீயவனான்
முன்னுந் துயர்க்கடலின் மூழ்கி முரணழிந்தேந்
துன்னும் பழியாந் தொழிலிதுவுஞ் செய்தனமா
லின்னும் படுவ தொழிலேதோ வுணரேமே. (௧0)

பேர்கின்ற நீலப் பிறங்கலனை யான்பணியா
லார்கின்ற தின்றோ ரலரே யஃதுயிரை
யீர்கின்ற தந்தோ விதியே யெமக்கிதுவுந்
தீர்கின்ற கால முளதோநீ செப்பாயே. (௧௧)

பூவுலகந் தன்னிற் பொருந்துகின்ற மானுடரும்
பாவமென நூலிற் பகருகின்ற வித்தொழிலை
யேவர்புரி கின்றா ரெமக்கோவந் தெய்துமதோ
தேவ கதியி னிரயஞ் சிறப்புடைத்தே. (௧௨)

தக்க துணரா தானவர்க டங்களினு
மக்களினுந் தாழ்வாம் வலைஞர்தொழில் செய்தனமா
லிக்கன வாழ்வை விரும்பியே யாஞ்செய்த
மிக்க தவமும் வினையாய் விளைந்ததுவே. (௧௩)

வேத நெறியை விலக்கினே மிக்குள்ள
போக நெறியா மதற்குப் புறம்பானேந்
[illegible]துடைய வெஞ்சூரன் சீற்றத்தாற் செப்புகின்ற
[illegible]நெறி செய்வேமே லெமம்[illegible]யார் தாரோவரே. (௧௪)

தேனுலவுந் தாருத் திருசிமற்கீ ழின்பமுறும்
வானவர்க ளென்றே மதிக்குந் தகைமையினோ
மீனமொடு மீன்சுமந்தே யெல்லோரா கஞ்நகைக்கத்
தானவர்முன் செல்வதினுஞ் சாதன்மிக நன்றுநன்றே. (கரு)

என்னு மொழிக ளியம்பிப் புலம்புற்றுத்
துன்னு திருநார்புகழ் சூரன் றிருநகரின்
மன்னுதிசை யாளரொடும வந்தனரா லவ்வசுரரி
லன்ன செயல்கண்டே யவுணருரை செய்குவார். (கசு)

மாதோயந் தன்னை வயிறலைத்து மற்றிவர்தா
மீதோ சிலமீன் றருகின் றனரென்பார்
மீதோ டியபரிதி வெய்யோன்முன் னுண்டவெறுங்
கோதோ வெமக்குக் கொணாகின்ற ரென்றுரைப்பார். (கஎ)

தாங்கடற்குண் மீனந் தலைக்கொண்டு மேவுகின்ற
ரீங்கிவர்க்கு நாண மிலையோ சிறிதென்பார்
தீங்கிழைக்கின் யாரேனுஞ் செய்யாத தேதென்பார்
மூங்கையொ தகது ளாரோ மொழியா ரிவரென்பார். (கஅ)

முந்துற்ற தொல்லை முழுநீரின் வேலைதொறும்
பந்தத் துடன்வாழ் பரதவரே செய்கின்ற
விந்தத் தொழிலு மிவர்க்குவரு மோவென்பார்
சிந்திப்ப தென்னோ விதியின் செயலென்பார். (கக)

வேத நெறிமுறைமை விட்டார் வினைசெய்யும்
பேதை நெறியே பிடித்தா ரிவரென்பார்
கோதுபடா நந்தங் குலத்தை மிகநலிந்தா
ரேதுபடா ரின்ன மிமையோ ரெனவுரைப்பார். (உ0)

மண்ணோர் களுமிகழும் வன்பழிதன் பால்வரவும்
விண்ணோர்க் கிறைவன் விரைவினுயிர் விட்டிலனாற்
கண்ணோ பெரிது கருததோ சிறிதென்பார்
பெண்ணோ வலிதானோ பேடோ வெனவுரைப்பார். (உக)

வேறு.

இந்த வாறு பலரு மியம்பிடப்
புந்தி நொந்து புலம்புபுத் தேளிர்க
டந்தி யூருந் தலைவனை முற்கொடு
வந்து தீயவன் வாய்தலுற் றாரரோ. (உஉ)

பரிதி வேந்தன் பணிமுறை நாடியே
வருதி நீண்டென்று வாயிலர் கூறிடப்
பொருதி ரைக்கடன் மீன்கொடு போய்ச்சுர
ரொருத னிப்பெருங் கோயிலு ளுய்த்தனர். (உங)

எளித்த லெய்து மிமையவ ருய்த்தமீன்
றளித்த தேன்றொடைச் சூர்முதல் காணுறீஇக்
களித்து வந்து கடவுளர் வைகலு
மளித்தி ரென்ன வழகிதென் றேகினர். (உச)

என்று மாங்கவ ரிச்செய லாற்றியே
பொன்றி னாரிற் புலர்ந்து புலம்புறீஇத்
துன்று கின்ற துயர்க்கடன் மூழ்கியே
யொன்றும் வேத வொழுக்கமற் றாரரோ. (உ௫)

ஆ திருவிருத்தம் - ௪௰௫௦.

வசனம்.

இவ்வாறு சூரபதுமன் அரசு செய்துவருகையில் இந்திரன்முதலிய தேவர்களும் முனிவர்களும் அவன்வசிக்கும் மகேந்திரபுரத்திலும் அவன் தம்பியர்வசிக்கும் ஆசுரபுரம் மாயாபுரங்களிலுஞ் சென்று தங்களுக்கு அவர்களாலிடப்பட்ட குற்றேவல்செய்துவருகையில் ஒருநாள் சூரபதுமன் அத்தேவர்களையும் இந்திரனையும் வலிந்தழைத்து நீங்கள் தானவர்களுக்குத் தம்பியரல்லவா! அவர்களுக்குச் செய்யவேண்டிய பணிவிடைகள் உங்களுக் குரிமையாதலால் நீங்களினிமேற் கடலிலுள்ள மீனை வலைவீசிப் பிடித்துக்கொண்டுவந்து கொடுக்க வேண்டுமென்றுசொல்ல, அச்சொல்லைக்கேட்டு மனநடுங்கி நம்மைத் தனக்கு மீன்வலைவீசிப் பிடித்துக்கொண்டுவரும்படி கட்டளையிட்டுவிட்டானே நாமென்னசெய்வது நமக்கிப்படியும் பிரமன் விதிப்பனோ என்று வருந்தி அவனிட்டகட்டளைக்கஞ்சிக் கடற்கரையணுகி வருணனைவேண்ட, அவன் தன் பெருங்கைகளால் மீன்களை வாரிக் கரையிலே மலைபோலுங்குவிக்க, இந்திரனும் தேவர்களைநோக்கி இவற்றையெல்லாம் எடுத்துக்கொண்டுபோவது உங்கள் கடமையென்று கூற, அதைக்கேட்ட தேவர்கள் நடுக்கத்துடன் உள்ளமபதைத்துக் கண்ணீர்சொரிந்து கைகுலைந்து நாணங்கொண்டு தலைமேற்சுமந்து யாவரும் நகைக்க அவுணர் செய்வதைப்பார்க்கிலும் இறந்துபோவதே மிக்க நலமன்றோவென்று புலம்பி யழுதுகொண்டே சூரபதுமன் அரசாளும வீரமகேந்திரபுரத்திற்குத் திக்குப்பாலகருடன்வந்து நிற்க, தங்களைப்பார்த்து அவுணர்கள் பரிகாசஞ்செயயக்கண்டு அவனது மாளிகையணுகி வாயிலாளரால் உத்தரவுபெற்று அவன்வீட்டிற் செலுத்திவிட, அதைக்கண்ட சூரபதுமன் இன்றுமுதல இவ்வாறே செய்தல்வேண்டுமென்று கட்டளையிடத் தேவர்களுந் தங்களுக்குரிய வேதவொழுக்கந்துறந்து மீன்பிடித்துக்கொண்டுவரும் வேலையாகிய துன்பக்கடலில முழுகியிருந்தார்கள். இதுநிற்க.

தேவரையேவல்கோள்படலம் முற்றிற்று.

# புதல்வரைப்பெறுபடலம்.

அதுபொழு தவுணர் கோமா னுறறிய தவத்தின் சீராற்
பதுமகோ மளையென் றோது மபாவைத னுதரம் போந்து
புதுமதிக் குழவி யேபோற பொற்பொடு பொலிந்து முன்ன
மதலையங் கொருவன் வந்தான் மறலிக்கு மறலி போல்வான். (௧)

வந்ததோர் மதலை தன்னை மன்னவர் மன்னன் காணூஉ
வந்தமின் மகிழ்ச்சி பொங்க வவுணர்தங் கிளைஞர்க் கெல்லா
நந்திய வெறுக்கை தன்னை நலத்தக வீச லுற்று
ணிந்திரன் முதலி னோரும் யாவரு மிடுக்க ணெய்த. (உ)

வீசிய பின்றை வானோர் மெல்லிய ரவுணர் மாத
ராசிகள் புகன்று போற்றி யன்னதோர் மைந்தன் றன்னைக்
காசொடு வயிர முத்தங் கதிர்பொலந் தொட்டில் சேர்த்தார்
மாசகன் மதிய மேபோற் பைப்பைய வளர்த லுற்றான். (௩)

கட்டழ குடைய மைந்தன் கம்பலங் கொண்ட செம்பொற்
றொட்டிலிற் றுயிலு மெல்லை யொருபகற் சுடரி னென்றாழ்
விட்டதோர் நூழை தன்னுள் மேவியே யனையன் மெய்யிற
பட்டதங் கதனை நாடிப் பரிதியைச் சுளித்துப் பார்த்தான். (௪)

பார்த்திடு கின்ற மைந்தன் பன்மணித் தொட்டி லின்றுஞ்
சேர்த்தெழுந் தண்டம் பாய்ந்து செங்கதிர்ச் செல்வற் பற்றிக்
கார்த்திடு புய்ங்கங் கவ்வும் படித்தெனக் கரத்திற் கொண்டு
பேர்த்துமோ ரிறையில் வந்தான் றவத்தினும் பெரிதொன் றுண்டோ. (௫)

தானுறை யிருக்கை தன்னிற் றகுவர்கோன் றனயன் சாரா
வானதோர் செம்பொற் றொட்டி லணிமணிக் காலி னூடே
பானுவை வலிதிற் கட்டிப் பண்டுபோற் றுயின்றா னங்கண்
வானவ ரதனை நோக்கி மனம்வெரீஇ மறுக்க முற்றார். (௬)

பரிதிவிண் சேற லின்றிப் பிழைத்தலும் பார்தந் துள்ளோன்
கருதியிந் திரனே யேனைக் கடவுளார் யாருஞ் சூழ
நிருதர்கோன் றன்பால் வந்து நீடிருட் பகைவன் றன்னைத்
தருதிநின் மைந்தன் செய்த தனிச்சிறை நீக்கி யென்றான். (௭)

வேறு.

மறைபு ரிந்தநான் முகனிவை புகறலும் வானத்
திறைபு ரிந்திடு மிரவியை யென்மக னின்னே
சிறைபு ரிந்ததை யுணர்கிலே னவனது செய்யக்
குறைபு ரிந்ததென் பகர்தியென் றுரைத்தனன் கொடியோன். (௮)

சொற்ற வாசகங் கேட்டலு மாருயிர்த் தொன்மை
முற்று நாடிய நான்முக னின்மகன் முகமே
லற்ற மில்சுட ராதபந் தீண்டிய ததனாற்
பற்றி வெய்யவற் சிறைபுரிந் தானெனப் பகர்ந்தான். (௯)

மகவு தன்செயல் கேட்டலுஞ் சூரபன் மாவாந்
தகுவர் கோன்மிக மகிழ்ந்துநீ ரென்மகற் சார்ந்து
மிகவு நன்மொழி கூறியே யாங்கவன் விடுப்பப்
பகல வற்கொடு போதிரா லீண்டெனப் பகர்ந்தான். (௧௦)

கேட்ட நான்முக னன்றென விடைகொண்டு கிளர்பொன்
னட்டின் மேனகை முதலினோர் பாடலி னலத்தா
லாட்டு பொன்மணித் தொட்டிலின் மிசையுறு மண்ணன்
மாட்டு மேவிநின் றளவையி லாசிகள் வகுத்தான். (௧௧)

அன்பின் மைந்தனைப் புகழ்ந்துமுன் னிற்றலு மனையா
னென்பெ றும்பரி சுமக்கென வின்னதோ ரிரவி
துன்பு றுஞ்சிறை யகற்றுதி யென்றலுந் தொல்லோ
யுன்பெ ரும்படை தருதியேல் விடுவனென் றுரைத்தான். (௧௨)

உரைத்த மைந்தனுக் கயன்றன தகன்படை யுதவ
கிரைதத செங்கதிர்ச் செல்வனை விடுத்தன னிருதன்
விரைத்த பங்கயக் கிழவனும் புதல்வனை வியந்து
பரிதி யாலென வுதவினன் மோகவெம் படையே. (௧௩)

படைய ளித்தலும் பகலொடு பங்கயத் தவற்கு
விடைய ளித்தனன் முறையைத் தன்மையை வினவி
நடைய ளித்தனன் புதல்வனுக் கன்னதோர் நன்று
ளிடைய ளித்தனன் பானுகோ பன்னெனு மியற்பேர். (௧௪)

பானு கோபனென் றொருபெயர் பெற்றவப் பாலன்
மானை நேர்விழி மங்கையர் மதனென மயங்க
வான பேருரு வெய்தியே யம்புயத் திருவின்
கோனொ டேபொரு தவன்றனைப் பெருந்திறல் கொண்டான். (௧௫)

பரிதி யின்பகை யாமிவற் பெற்றபின் பரிவா
னிருதர் காவல னங்கிமா முகத்தனை நிறஞ்சே
ரிரணி யன்றனை வச்சிர வாகுவை யெழிலார்
மருவு லாங்குழற் பதுமகோ மளைதர மகிழ்ந்தான். (௧௬)

மைத்த கூர்விழி யேனைய தேவியர் மகிழ்வா
லுய்த்து நல்கிடச் சூரனும் வெய்யவ னொருங்கே
பத்து நூறுள மும்மைசேர் பாலரைப் பயந்தா
னித்தி றத்தவர் தம்முட னங்கண்வீற் றிருந்தான். (௧௭)

வேறு.

சீற்ற முற்றிடு சிங்க முகன்கணே
தோற்றி னனதி சூரனென் றோர்மகன்
வீற்று நூறறுவர் மேவின ரன்னவ
ராற்றல் யாவ ரறைந்திட வல்லரே. (௧௮)

அந்த நாளி லவன்ற னிளவலாந்
தந்தி மாமுகத் தாரகன் றன்னிடை
முந்து செய்தவ மொய்ம்பினொர் மாமகன்
வந்து தோன்றினன் வான்கதிர்ப் பிள்ளைபோல். (௧௯)

ஆமி வன்னசு ரேந்திர னென்றவற்
கேம மான குரவ னிசைப்பவந்
நாம மெய்தி நலம்பெறு காளையாய்க்
காம னென்னக் கவின்றனன் யாக்கையே. (௨0)

ஓத ருங்கலை யாவு முணர்கினு
மேத மாவதோர் விஞ்சை யியற்றிடான்
பாத கம்புரி யான்பழி பூண்கிலா
னீதி யன்றி யெவையு நினைகிலான். (௨௧)

வீறு கொண்டிகல் வீரம் புகன்றெதிர்
மாறு கொண்டவ ருண்டெனின் மற்றவ
ரீறு கொண்டிட வேற்றுர மேற்படை
[illegible] வன்னுந் தகைமையான். (௨௨)

சிகர மெண்ணில சேட்படு கள்ளிதா
ணைகரு நல்கி யமர்ந்தென வன்னதோர்
மகனை நல்கி வளங்கெழு மாயமா
நகர வாழ்க்கையி னண்ணினன் சூரகன். (உ௩)

ஆ திருவிருத்தம் - ௧0௭௩.

வசனம்.

அப்போது சூரபதுமன்செய்த தவத்தின் சிறப்பால பதுமகோமளை வயிறு வாய்த்து இளஞ்சந்திரனைப்போல யமனுக்கும் யமனென்றுசொல்ல ஒரு குழந்தையைப்பெறவே சூரபதுமன் தேவரெல்லாருந் துன்பமடைய, அவுணர்களுக்கெல்லாம் வேண்டிய பெருஞ்செல்வங்களைக்கொடுத்துதவினன். அவன் அக்குழந்தையைத் தொட்டிலிட்டு வளர்த்துவருங்காலத்தில், அது ஒருநாள் சூரியன்கதிர் தன்மேல் படப்பொறுமல் அவனைத் தன்கையால் அரவம்பிடிப்பதுபோற்பிடித்துக்கொண்டு ஒரு க்ஷணப்பொழுதில் மீண்டு தான் விளையாடிக்கொண்டிருந்த தொட்டிலின்காலிற் கட்டிவிட்டு முன்போற் படுத்துக்கொண்டிருந்தது. அதைக்கண்ட தேவர்கள் மனம்வருந்திக் கலக்கமடைந்தார்கள். சூரியனே ஆகாயமார்க்கமாகப் போகாமைகண்டு பிரமதேவனிடஞ்சென்று இந்திரன்முதலிய தேவர்கள் முறையிட, அவர்களையழைத்துக்கொண்டு தான் சூரபதுமன் கொலுவையடைந்து அவனுக்கு அவன்மகன் சூரியனைப்பிடித்துச் சிறையிட்டசெய்தியைத் தெரிவித்து, அவனைச் சிறையினின்றும் விடுவிக்கவேண்டுமென்று வேண்டிக்கொண்டான். அதைக்கேட்ட சூரபதுமனே என்மகன் சூரியனைப்பிடித்துக்கொண்டுவந்து சிறையிலிட்டதை இதுவரையிலுமறியமாட்டேன். அவனவ்வாறுசெய்ய நேர்ந்தகுறையாது தெரிவிக்கவேண்டுமென்று கேட்க, உன்மகன் தொட்டிலிலிருக்கையில் சூரியனுடையகதிர் அவன் முகத்தின்மேற்பட்டது; அதைப்பொறுக்காமல் அவனைப் பற்றிக்கொண்டுவந்து தன் தொட்டிற்காலிற் பிணித்துச் சிறையில்வைத்திருக்கிறன். இதுதான் நடந்தசெய்தி யென்றுசொல்ல, சூரபதுமனும் அப்படியானல் அவனிடத்திலேயேபோய் அவனைச் சிறைவிடும்படி கேளுங்கோளென்று சொல்ல, பிரமதேவனும் அப்படியே நல்லதென்று விடைபெற்றுச்சென்று அரமபைமுதலினோர்பாடும் பாடலின்சிறப்பைக் கேட்டுக்கொண்டு தொட்டிலிலிருக்கும் அக்குழந்தையை மகிழ்வுண்டாக்கிச் சூரியனை விடும்படி கேட்க, அவன் பிரமனைப்பார்த்து உன் பெயர்கொண்ட அஸ்திரத்தை எனக்குக்கொடுத்தால் விடுப்பேனென்றுசொல்ல, அவ்வாறே பிரமனும் அவனுக்குப் பிரமாஸ்திரங்கொடுத்துச் சூரியனைச் சிறையினின்றும் நீக்கினன். சூரியனும் அவனது வீரத்திற்குமெச்சி மோகனஸ்திரந் தந்தனன். அதுமுதல் அவனுக்குப் பானுகோபனென்றும் பெயருண்டாயிற்று. பிறகு அவன் இளமைப்பருவமடைந்து பெண்களெல்லாம்கண்டு மன்மதனே இவன் என்று மயங்க, அழகுபடைத்துத் திருமாலோடும் போர்செய்து வெற்றிகொண்டான். சிலகாலத்தின்பின் இவனைப்பெற்ற தாயாகிய பதுமகோமளை இவனுக்குப்பின்பு அக்னிமுகன், இரணியன், வச்சிரவாகு என்னும் மக்களைப்பெற, சூரபதுமன் மகிழ்ச்சியடைந்திருந்ததுமல்லாமல் மற்ற தேவிமாரால் மூவாயிரம் பிள்ளைகளையும் பெற்றான். இப்படி சூரபதுமன் புத்திரச்செல்வத்தினுற் சிறப்படைந்திருக்கையில், சிங்கமுகாசுரன் அதிசூரனென்ற பிள்ளைபிறக்கக்கண்டு மகிழ்ந்ததுமல்லாமல் வேறு நூறுபிள்ளைகளையும் பெற்றான். அவர்கள் வல்லமையையெடுத்து ஒருவராலும் சொல்லவேமுடியாது. இதன்பின்பு அவனுக் கிளையவனுகிய யானை

முகமுள்ள தாரகனுக்கு ஒருபிள்ளை முன்செய்த தவப்பயனாலேயே இளங்கதிரோ போலத்தோன்றினன். இவன் சுக்கிராசாரிசொற்படி அசுரேந்திரனென்று பெயரிடப்பட்டு மன்மதனும் நாணும்படி வளர்ந்துவந்தான். இவன்முன்னே யாரேனும் தங்கள்வீரத்தை யெடுத்துச்சொல்லிப் பகைத்துப் போரிட்டால் அவர்களை வெற்றி கொள்வதே தனக்குத் தொழிலாக உடையவனாகவிருந்தான். இவ்வாறு தன்பால் கள்ளிவயிற்றில் அகில்கட்டை தோற்றினாற்போல அசுரேந்திரன்பிறக்க மாயாபுரத்தைத் தாரகன் ஆண்டுவந்தான்.

புதல்வரைப்பெறுபடலம் முற்றிற்று.

## வில்வலன்வாதாவிப்படலம்.

அன்னவ ருடன்வந்தா ளசமுகி யெனுநாம
மன்னின ளொருவன்றன் மனையெனு முறையில்லா
டன்னிறை தவிர்கின்றா டருமம திலள்வானோர்
பன்னியர் தமைமுன்னோர் படர்புய முறவுய்ப்பாள். (௧)

ஆள்வினை புரியுள்ளத் தவமுனி வரராற்றும்
வேள்வினை யுறும்வண்ணம் வெந்தொழில் புரிகின்றா
ணீள்வினை வடிவானா ணிருதர்கள் குலமெல்லா
மாள்வினை யெனயாண்டும் வைகலு முலவுற்றாள். (௨)

கட்டழ குளதாருங் காளையர் தமைநாடிக்
கிட்டினள் புணர்கிற்பாள் கேளிரை யிகழ்வோரை
யட்டன ளுகர்கின்றா ளனையவ ளொருவைகன்
முட்டின டுருவாச முனியுறு தனியெல்லை. (௩)

அந்தணன் முனிதன்னை யாயிழை யவள்காணாச்
சிந்தவ னிவனின்னே செய்தவ மஃதன்றி
மைந்தர்கள் பெறுவேனால் வல்லையி லிவணென்னாப்
புந்தியி னினைவாயே போயவ னெதிருற்றாள். (௪)

உறுதலு முனிநாடி யொண்டொடி தனியேநீ
குறுகிய தெவன்மாதோ கூறுதி யெனலோடு
மறுவறு முனிநின்பான் மனமகிழ் வொடுமேவிச்
சிறுவர்கள் பெறவந்தேன் செப்புவ திதுவென்றாள். (௫)

என்றலு முனிகூறக் கிளையவ ளெனநாடி
வென்றிசொண் மடமாதே மேதகு தவமெல்லாங்
குன்றிடு முனையின்னே கூடுவ னெனினீயு
நின்றிடல் பழியல்லா னீதியு மலவென்றான். (௬)

முனியிது பகர்வேலை மொய்குழன் மடமாதா
னினியுனை மருவாதே யேகல னருவிப்போ
மனகினை வொழிகென்றே வன்மையி னெடுபுல்லி
யனையவ னிதழூற லாரமு தயிலுற்றாள். (௭)

ஆடெனு முகவெய்யா ளனையனை வலிதாகக்
கூடின ளதுபோழ்திற் குறுகின ரிருமைந்த
ரீடுறு வலிமிக்கா ரின்னவர் தமையன்னை
மாடுற வருகென்றே மகிழ்வொடுதழுவுற்றாள். (அ)

தழுவினள் பரிவோடுந் தன்புதல் வரைநோக்கி
மழகளி றனையீர்காள் வல்லவு ணரில்வந்தீர்
விழுமிய தவமாற்றி மேவுதிர் வலியென்ன
வழிதரு நிறைகொண்ட வசமுகி யுரைசெய்தாள் (௯)

தாயின துருவாயுந் தந்தைத னுருவாயு
மேயின விருமைந்தர் வில்வலன் வாதாவி
யாயதொர் பெயர்பெற்றோ ரன்னைத னுரைகொண்டே
தூயதொர் குரவோன்றன் றுணையடி பணிகுற்றார். (௧௦)

மூண்டிடு வெகுளித்தீ முனிவர னடிதன்னைப்
பூண்டிடு திறன்மிக்க புதல்வரை யெதிர்நோக்கி
வேண்டிய தெவனென்ன வெய்யவ டருமைந்த
ரீண்டின தவமெல்லாம் யாம்பெற வருளென்றார். (௧௧)

ஆற்றிடு தவமெல்லா மருளெனி னவைதாரேன்
வீற்றொரு பொருளுண்டேல் வினவுதி ரெனமேலோன்
சீற்றம துளராகிச் சிறுவர்க ளிவனுயிர்
மாற்றுது மிவனென்னா வல்லையி னெழுவுற்றார். (௧௨)

இறுதிசெய் திடவுன்னி யிகலுட னெழுகின்ற
சிறுவர்கள் செயனாடிச் சினமொடு முனிநீவிர்
மறுவறு தவருக்கே வைகலு மிடர்செய்வீர்
குறுமுனி நுமதாவி கொள்ளுக வினியென்றான். (௧௩)

இனையது முனிசொற்றே யெமையடு வர்களென்னு
மனமுறு தனிவிஞ்சை மாயையின் மறைபோழ்திற்
றனயர்க ளிருவோருந் தந்தைத னைக்காணா
ரனைதனை விடைகொண்டே யாயிடை யொருவுற்றார். (௧௪)

வேறொரு வனமெய்தி மெய்த்தவர் குழுவெல்லாங்
கோறலை மனமுன்னிக் குமரர்க ளிருவோருந்
தேறிய வுணர்வோடுந் திசைமுக வனைநோக்கி
யீறகல் பகலாக வெரியத னிடைநோற்றார். (௧௫)

செந்தழ லிடைநோன்பு செய்யவு பயனங்கண்
வந்திலன துநாடி மற்றொரு செயலுன்னி
வெந்திற லிளையோனை வில்வல னெனும்வெய்யோன்
சுந்தர மணிவாளாற் றுணிபட வெறிகுற்றான். (௧௬)

கையன துடல்கீறிக் கறையொடு தசையெல்லா
நெய்யுட னவியாக்கி நீடிய கனலூடே
வையக மருடாதை மந்திர முறையுய்த்தா
வெய்யவ னொருவேள்வி விரைவொடு புரிகுற்றான். (௧௭)

தவமொடு மகமாற்றச் சதுர்முக னதுகண்டே
யவனியின் மிசைவந்தே யரியதொர் செயல்செய்வா
யெவனருள் பரிசென்ன விணையடி தொழுதேத்தி
யவுணர்கள் வடிவாம்வில் வலனிவை யறைகின்றான். (௧௮)

வன்னியி லவியூணாய் மாண்டிடு மொருபின்னோன்
மெய்ந்நிறை வடிவோடும் விரைவுடன் வரல்வேண்டு
மென்னலும் வாதாவி யெழுகென வயனோதை
வன்னதொர் பொழுதின்க ணூர்த்தவ னெழுந்திட்டான். (௧௯)

ஆங்கன மசுரேச னதிசய முளனாகித்
தீங்குட னொருசூழ்ச்சி சிந்தையி னிடையுன்னிப்
பூங்கம லத்தோனைப் போற்றிசெய் தடியேனுக்
கீங்கொரு வரமெந்தா யீகென வுரைசெய்வான். (௨௦)

புல்லயின் மறியேபோற் பொலிவுறும் வாதாவி
யொல்லையி னினிமேலு முடற்றுணி படுவானே
லெல்லையில் பரிவால்யா னெம்பியை யெழுகென்னத்
தொல்லையில் வடிவோடுந் தோன்றிமுன் வரல்வேண்டும். (௨௧)

இப்படி வரமொன்றே யான்பெற வருள் கென்றே
மெய்ப்படு முணர்விலலா வில்வல னுரைசெய்ய
வப்படி பலகால மதுமுடி கெனநல்கிச்
செப்பரு மறைவேதாச் சேணுடை நெறிசென்றான். (௨௨)

சேறலு மதுகாலைச் சிறுவர்க ளிருவோரு
மேறென வமர்சூர்முன் னேகியுன் மருகோர்யாம்
வேறல வெனவோதி மேதினி முனிவோரைக்
கோறல்செய் பெருவன்மை கொண்டது முரைசெய்தார். (௨௩)

மன்னவ னவர்தம்மை மகிழ்வொடு நனிபுல்லி
யென்னுழை மருகீர்கா ளினிமையொ டுறுமென்ன
வன்னவர் சிலவைக லாயிடை தனில்வைகிப்
பின்னுற விருவோரும் பெருநில மிசைவந்தார். (௨௪)

நவைதவிர் குடகின்க ணல்வகை நெறிகூடுங்
கவலையின் வளமல்குங் கானக விடைதன்னி
லவுணர்க டாமங்கோ ராச்சிர மஞ்செய்தே
யெவரெவ ரும்வெஃகு மெய்பொருள் களுமுய்த்தார். (௨௫)

அன்னதொ ரிடைதன்னி லாரிட ராயுள்ளோ
ரின்னுயிர் கொளவுன்னி யிருவரு ளிளமைந்தன்
பொன்னிவர் திரிகோட்டுப் பொருதக ராய்நிற்க
முன்னவன் விரதஞ்செய் முனிவரி னினிதுற்றான். (௨௬)

வில்வல னெனவோதும் வெய்யவ னவ்வெல்லைச்
செல்வதொர் முனிவோரைச் செவ்விதி னெதிர்கொண்டு
வல்விரை வொடுதாழ்ந்து மற்றும தடியேன்ற
னில்வரு வீரென்று வியல்பொடு கொடுசென்றே. (௨௭)

இப்பக லடிகேளுக் கிவ்விடை யுணவென்று
வொப்பறு நெறிகூறி யோதன வகையெலலா
மப்பொழு தினிலட்டே யயமெனு மிளையோனைத்
துப்புறு கறியாகத் துண்டம துறுவித்தே. (உ௯)

உள்ளுறு குறியாகு மூன்முழு வதுநாடி
வள்ளுறு சுடர்வாளால் வகைவகை படவிர்ந்தே
யள்ளுறு கறியாக வட்டபி னவரவ்வூண்
கொள்ளுற நுகர்வித்தே கூவுவ னிளையோனை. (உகூ)

கூவிய பொழுதின்கட் கொறியெனு முருவானே
ஞவிமெய் யுளனுகி யன்னவ ருதரந்தை
மாவலி யொடுகீண்டே வருதலு மிருவோருஞ்
சாவுறு முனிவோர்தந் தசையினை மிலசவாரால். (௩0)

வேறு.

வீடுறு முனிவருன் மிசைந்து தொன்மைபோ
லாடென முனியென வனையர் மேவியே
நாடொறு மிச்செய னடாத்தி யுற்றனர்
கேடறு முனிவர்தங் கிளைகண் மாளவே. (௩௧)

ஆ திருவிருத்தம் - ௧௧0௪.

---

வசனம்.

சூரபன்மனுக்குத் தங்கையாகிய அசமுகியென்பவள் ஒருவர்க்கும் வாழ்க்கைப்படாமல் முனிவர்கள்செய்யும் யாகங்களையெல்லாம் அழித்துக்கொண்டு கட்டழகுள்ள காளையரை வலிதிற்புணர்ந்து திரிகின்றவளாயிருந்தனள். இவள் தூர்வாச முனிவரைப்புணர்ந்து புதல்வரைப் பெறவேண்டுமென்னும் கருத்துடையவளாய் அவரிடத்துச்சென்று அவர்மறுக்கவும் அவரை வலிதிற்புணர்ந்து வில்வலன் வாதாவியென்னும் இரண்டு பிள்ளைகளைப்பெற்றாள். அவர்கள் தம்பிதாவாகிய தூர்வாச முனிவரைநோக்கி நீர்செய்த தவப்பயன்முழுதும் எமக்குத் தரவேண்டுமென்று வேண்ட, அவர் அதுவொழிந்த வேறு எப்பொருள்வேண்டினும் தருவோமென்று சொல்ல, அவர்கள் அதற்குச் சம்மதிக்காமல் அம்முனிவரைக் கொல்லத்துணிந்தார்கள். அதனையறிந்த முனிவர் நீங்கள் இவ்வாறே முனிவர்களுக்குத் துன்பஞ்செய்து வருவீர்கள், அப்படிச் செய்துவருங்காலத்தில் அகத்தியமுனிவர் உங்களுயிரை வாங்குவர் என்று சபித்துத் தம் உருக்கரந்தார். அச்சிறுவர்கள் தாயினிடத்து விடைபெற்று வேறொருவனத்தையடைந்து முனிவர்களைக் கொல்லுங்கருத்துடையவர்களாய்ப் பிரமனைநோக்கித் தவஞ்செய்தார்கள்; செய்தும் பிரமன் வாராமை கண்டு, வில்வலன் தன்தம்பியாகிய வாதாவியை வாளினால்வெட்டி அவனுதிரத்தையும் மாம்சத்தையும் நெய்யும் அவிசுமாகக்கொண்டு நெருப்பிலிட்டுப் பிரமனது மூலமந்திரத்தைச் செபித்து வேள்வியுடன் தவமுஞ்செய்துவர, பிரமன் அவனுக்கு எதிரேவந்து உனக்கு வேண்டியது யாதென்றுகேட்க, என்தம்பி உயிர்பெற்றெழுந்துவரவேண்டுமென்று வில்வலன்சொல்ல, பிரமன் அப்படியேயெழுப்பித்தர ஆட்டுருவாய்த்தோன்றின வாதாவி இனி வெட்டப்படுவானாயின் நானழைத்தலும் பிழைத்துவரும்படி வரந்தரவேண்டுகிறேன் என அப்படியே பிரமன் வரந்தந்து

சத்தியலோகஞ்சென்றான். வில்வலன்வாதாவியோடு சூரபதுமனிடஞ்சென்று நாங்களிருவரும் உம்முடைய தங்கைமக்கள், நாங்கள் முனிவர்களைக்கொல்ல வரம் பெற்றிருக்கிறோம் என்றுசொல்லி விடைபெற்று மேற்றிசையடைந்து அங்கே நாற்சந்திகூடும் ஓரிடத்தில் ஒரு ஆச்சிரமம் ஏற்படுத்திக்கொண்டு அதில் எல்லாப் பொருள்களையும் அமைத்துக்கொண்டு இருந்தார்கள். அப்படியிருக்கையில் ஆட்டுருவங்கொண்டிருக்கிற வாதாவியை வில்வலன்கொன்று சமைத்து அவ்வழியே வரும் முனிவர்களை உபசாரத்தோடழைத்து விருந்தூட்டி அவர்களுண்டபிறகு தம்பியைக்கூவியழைக்க, அவன் அம்முனிவர்வயிற்றைப் பிளந்துகொண்டு வெளிப்பட, இறந்துகிடக்கிற அம்முனிவர் மாம்சத்தை இருவருமுண்டு பசிதீர்ந்து முன்போலவே இருப்பார்கள்.

வில்வலன்வாதாவிப்படலம் முற்றிற்று.

---

# இந்திரன்கரந்துறைபடலம்.

இப்படி யவுணர்க ளினைய ரேனையோர்
செப்பரு முனிவரைத் தேவர் தங்களை
யொப்பறு நரர்தமை யொறுப்ப மாயைதன்
மைப்புறு காதல னரசின் மன்னினான். (௧)

ஆயிரத் தெட்டெனு மண்டம் யாவையுஞ்
சேயுய ரிந்திர ஞாலத் தேர்மிசை
யேயெனு மளவையி லேகி வைகலு
நாயக முறையினை நடாத்தி நண்ணினான். (௨)

ஒருபகற் பாதலத் தூடு வைகிடு
மொருபகன் மாதிர முலவிச் சேர்தரு:
மொருபகல் விண்பதந் தோறு முற்றிடு
மொருபக லயன்பதத் துன்னி மன்னுமே. (௩)

தண்ணறுந் துளவினன் றனது தொல்பத
நண்ணிடு மொருபக னுரு மிவ்வகை
யெண்ணரு முலகுதோ றேகி மாலையிற்
றுண்ணென மீள்வுறுற் சூர பன்மனே. (௪)

அவ்வகை யாலர சாற்று மெல்லையி
லெவ்வமில் சூர்முத லிந்தி ரன்னெனுந்
தெவ்வினை வன்சிறை செய்து தேவியை
வவ்விய வுன்னினன் வருவ தோர்கிலான். (௫)

உன்னிய தியவ னொருதன் றூனையின்
மன்னனை விளித்துநீ வாச வன்றனை
யின்னதோர் பொழுதினி லெய்திப் பற்றியென்
முன்னுற விடுகென முன்ன மேவியே. (௬)

நீடிய தன்பெரு நிலயங் காப்பவர்
கோடுறு நிசிசரா குலத்துட் டோன்றினா
கேடகம் வாளயில் கெழுவு கையினா
பாடவ மடந்தையர் பலங்கள் போன்றுளார். (எ)

ஒன்பது கோடியா தம்மை யொல்லையி
லன்புடன் விளித்தரி யமரர் நம்மிறை
யின்புறு தேவியைப் பற்றி யிம்மென
வன்பொடு போக்கினன் மன்னர் மன்னம்மா (அ)

போக்கலு மவரெலாம் பொன்னி னாட்டின்மே
லூக்கம தாகியே யுருத்துச் சேறலு
நோக்கிய தூதுவா நொய்திற் போகியே
மாக்கிளா ரிந்திரன் மருங்கு நண்ணினா. (௯)

வந்தன ரவுணரும வயங்கொண் மாதரு
மந்தமில் படையொடு மடல்செய் நீரம்போற
சிந்தனை யாவதோ தெரிந்தி லோமென
விந்திரன் வினவுற விசைத்து நிற்கவே. (௰)

பொம்மென வவர்தமைப் போக்கித் தீயினும்
வெம்மைகொ ணெஞ்சினா வினைய முன்னியே
யம்மனை மனைவியோ டகன்று மாயையா
னிம்மென விபுவி தன்னி லேகினான். (௧௧)

ஏகிய வெல்லையி னிகல்வெஞ் சூர்விடப்
போகிய மாதரும பொருவில் வீரரு
நாகர்தம் மிறையமர் நகரை நண்ணியொ
ராகர முதலிய விடந்தொ றுய்குவார். (௧௨)

வினையவிற் சென்றிடும வீரர் யாவருந்
துனையகத் திறைவனைத் துருவிக் காணகிலா
மனைவியைக் காண்கிலர் மாதர் யாவரு
நினைவயர்த் துள்ளுறு கவலை நீடினா (௧௩)

நாயக னெவ்விடை நம்மைக் கூவியே
யேயின செயலினை யீறு செய்கிலம
போயினன் சசியொடும் புலவர் கோமொனொ
வாயவு னகரெலா மாய்வுற் றாரரோ (௧௪)

சுற்றினர் நகரெலாந் துருவித் தேவரைப
பற்றினர் விலங்கலின் பகைவற் காட்டென
வெற்றினர் புலோமசை யாண்டை யாளெனக
குற்றினர் வாய்தொறுங் குருதி பாயவே. (௧௫)

விண்ணவர் யாவரும் வேந்துந் தேவியு
நண்ணிய துணர்கில நாங்க ளெங்களைத்
துண்ணென வருத்தலி துயரின் றேமெனாத்
தண்ணளி வருநெறி தளர்ந்து சாற்றவே. (௧௬)

விட்டனர் தேவரை விண்ணை நீங்கினர்
முட்டினர் மகேந்திர மூதிய மாநகர்
கிட்டினர் வேந்தனைக் கிளர்ந்து வானிடைப்
பட்டது புகன்றனர் பழிகொ ணெஞ்சினர். (௧௭)

போயின ரிருவரும் புறத்த ராயென
வாயவர் மொழியவே யவுணர் மன்னவன்
தீயென வெகுண்டனன் றேடொ ணாததோர்
தூய்மணி யிழந்திடு மரவிற் றுன்புளான். (௧௮)

ஒற்றரிற் பலர்தமை யொல்லை கூவியே
பொற்றொடி யணங்கொடு பொன்னி னாட்டவர்
கொற்றவ னிருந்துழிக் குறுகி நாடியே
சொற்றிடு வீரெனச் சூரன் றாண்டினான். (௧௯)

தோட்டவிழ் தெரியலான் றாண்ட வொற்றர்க
ளோடினர் வீற்றுவீற் றுலக மெங்கணுந்
தேடினர் காண்கிலர் திரிகுற் றாரினி
நீடிய பொன்னகர் நிகழ்ச்சி கூறுகேன். (௨0)

வேறு.

செல்லெனு மூர்தி யண்ண றேவியுந் தானு நீங்கச்
சொல்லருங் ககனம் பூத்த சோமனு முடுவும் போன
வெல்லியம் பொழுது போன்றே யாதுமோர் சிறப்பு மின்றாய்ப்
புல்லென லாய தன்றே பொருவில்பொன் னகர மெல்லாம். (௨௧)

அழிந்தன வளங்க ளெல்லா மாகுல மயங்கிற் றின்ப
மொழிந்தது வானோ ருள்ள மொடுங்கிய துலக மெங்கு
மெழுந்தது புலம்ப லோதை யாவர்தங் கண்ணுந் தெண்ணீர்
பொழிந்தது சுவர்க்க மாவி போனவர் போன்ற தன்றே. (௨௨)

இன்னன நிகழு முன்ன ரிந்திர னிளவ லாகி
மன்னிய வுபேந்தி ரன்றன் வானவ ருலகை நீங்கி
முன்னைவை குண்டம் புக்கான் முனிவரர் கலிக்கா வஞ்சிக்
கன்னிகை நோற்று மேவுங் காஞ்சியை யடைந்த வாபோல். (௨௩)

சேண்பதந் தன்னை நீங்குஞ் சிறியதோர் தந்தை தன்னைக்
காண்பது கருதிப் போந்து கடவுளர்க் கிறைவன் மைந்தன்
றாண்புரை கின்ற செம்பொற் றோளுடைச் சயந்த னென்போன்
மாண்பொடு சிறிது வைகல் வைகுண்டத் திருந்தா னன்றே. (௨௪)

இருந்திடு சயந்த னென்போ னிந்திர னிறைவி யோடுங்
கரந்துடன் போந்த வாறுங் காமரு துறக்கந் தன்னில்
விரைந்தவ ணவுணர்தேடி மூண்டிட விண்ணு ளோர்க
ளரந்தையோ டுற்ற வாறு மங்கவ னோர்ந்தா னம்மா. (௨௫)

தந்தைதன் மெலிவு காணிற் றங்குடித் தலைமை யெல்லா
மைந்தர்கள் பரித்துக் கோடல் வழக்கதா மறனு மன்றே
யெந்தையு மில்லை யான்போ யென்னகர் காப்ப னென்னுப்
புந்தியி னுன்னி மைந்தன் பொன்னகர் தன்னில் வந்தான். (௨௬)

பொன்னகர் புக்க மைந்தன் புலம்புறு சுரரைக் கண்டு
தன்னுயிர் போலுந் தந்தை தாய்தனைக் காணா னாகி
யின்னலங் கடலின் மூழ்கி யேக்கமோ டிரக்க மிக்குப்
பின்னொரு செயலு மின்றிப் பித்தரே போல வுற்றான். (உஎ)

உற்றிடு மெல்லை தன்னி லும்பர்கோன் மதலை யுள்ளந்
தெற்றெனத் தெளிப்ப வுன்னி நாரத னென்னுஞ் சீர்சா
னற்றவ முனிவன் செல்ல நடுக்கமோ டெழுந்து தாழ்ந்து
மற்றொரு தவிசு நல்கி யிருத்தியே மருங்கு நின்றான். (உஅ)

நின்றிடு சயந்தன் சொல்வா னித்தலும் வருத்தஞ் செய்யும்
வன்றிறற் சூரற் கஞ்சி மற்றெனைப் பயந்த மேலோர்
சென்றனர் சென்ற வெல்லை தெரிந்திலே னெமக்குத் தீமை
யென்றினி யகலுங் கொல்லோ வெம்பிரா னியம்பு கென்றான். (உகூ)

தருக்கினை யிழந்து நின்ற சயந்தனித் தன்மை கூறப்
பொருக்கென முனிவ னோர்ந்து பொருவருபே ரருளா னோக்கித்
திருக்கிளர் கின்ற தாங்கோர் செழுமணித் தவிசின் மீதி
லிருக்கென விருத்திப் பின்ன ரின்னன விசைக்க லுற்றான். (௩0)

தீங்குவந் தடையு மாறு நன்மைதான் சேரு மாறுந்
தாங்கள்செய் வினையி னாலே தத்தமக் காய வல்லா
லாங்கவை பிறரால் வாரா வமுதநஞ் சிரண்டி னுக்கு
மோங்கிய சுவையின் பேத முதவினர் சிலரு முண்டோ. (௩க)

இன்பம தடைந்த காலை யினிதென மகிழ்ச்சி யெய்தார்
துன்பம துற்ற போதுந் துண்ணெனத் துளங்கிச் சோரா
ரின்பமுந் துன்பந் தானு மிவ்வுடற் கியைந்த வென்றே
முன்புறு தொடர்பை யோர்வார் முழுவது முணர்ந்த நீரார். (௩உ)

வறியவர் செல்வ ராவர் செல்வர்பின் வறிய ராவர்
சிறியவ ருயர்ந்தோ ராவ ருயர்ந்துளோர் சிறிய ராவர்
முறைமுறை நிகழு மீது முன்னையூழ் வினையே கண்டா
யெறிகதிர் வழங்கு ஞாலத தியற்கையு மினைய தன்றோ. (௩௩)

ஆக்கமும் வறுமை தானு மல்லலு மகிழ்வு மெல்லா
நீக்கமி லுயிர்கட் கென்று நிலையெனக் கொள்ளற் பாற்றோ
மேக்குயர் கடவுட் டிங்கள் வெண்ணிலாக் கதிரின் கற்றை
போக்கொடு வரவு நாளு முறைமுறை பொருந்திற் றன்றே. (௩௪)

ஆதலி னுமது தாழ்வு மவுணர்த முயர்வு நில்லா
வீதுமெய் யென்று கோடி யிந்நகர் தணந்து போன
தாதையும் பயந்த தாயுந் தம்முருக் கரந்து போந்து
மேதினி வரைப்பி னூடு மேவினர் போலு மன்றே. (௩௫)

மைந்தநீ தோற்று முன்னம் வானவர்க் கலக்கண் செய்த
தந்தியின் முகங்கொண் டுற்ற தானவன் றுஞ்சும் வண்ண
மந்தநா ளுனது தந்தை முயன்றன னதனைப் போல
விந்தவெஞ் சூரன் மாய வின்னமு முயல்வன் கண்டாய். (௩௬)

என்றிவை பலவுங் கூறி யின்னினி வெஞ்சூர் தானும்
பொன்றிடு முமது துன்பும் பொள்ளென வகன்று போகு
நன்றிது துணிதி யென்றே நாரத முனிவன் றேற்றிச்
சென்றனன் சயந்த னங்க ணிருந்தனன் றெட்ப மெய்தி. (௩எ)

வருந்திய வமரர் தம்மை மனப்படத் தேற்றி நாளுந்
திருந்தலன் பணித்த வேவல் செய்திடத் தூண்டி வான்மே
லிருந்தனன் சயந்த னன்பா னிருநிலத் திடைமுன் போன
புரந்தரன் செய்த தன்மை யானினி புகலு கின்றேன். (௩அ)

மெய்த்தரு நீழல் வைகும் வெறுக்கையை வெறுத்துப் பாரிற்
சித்திர மனைவி யோடுந் தெக்கிண தேயம் புக்குப்
பத்தடை னிரண்டு நாமம் படைத்ததொல் காழி நண்ணி
யித்தல மினிதே யென்னா விருந்தன னிமையோர் கோமான். (௩௯)

அந்தநல் லிருக்கை தன்னி லயர்வுயிர்த் திறைவி யோடு
மிந்திர னிருந்த பின்ன ரென்றுநா மிறைவற் போற்றிப்
புந்திகொண் மகிழ்வாற் பூசை புரிதுமென் றுன்னி யான்டோர்
நந்தன வனத்தை வைப்பா னுடியே யினைய செய்வான். (சo)

சந்தகில் பலவு தேமாச் சரளமே திலகந் தேக்குக்
கொந்தவி பூசோகு புன்கு குரவொடு நாளி கேர
நந்திய கதலி கன்ன னுகிமம் பூகம் வன்னி
முந்துயர் காஞ்சி வேங்கை முதலிய வேலி கோலி. (சக)

சாதியே கோங்கு நாகஞ் சண்பக மிதழி ஞாழல்
பாதிரி வழையே குந்தம் பாரிசா தஞ்செ ருந்தி
போதுறு நரந்தம் வில்வம் பொலிகர வீரஞ் செச்சை
கோதறு மயிலை மௌவல் கொழுந்துசெவ் வந்தி முல்லை. (சஉ)

இவைமுத லாகி யுள்ள தருக்களும் புதலு மெல்லா
நவையறத் தெரிந்து வைத்தோர் நந்தன வனத்தைச் செய்ய
வவைமிக மலர்ந்த வம்மா வம்மலர் கொண்டு நாளுஞ்
சிவனடி யருச்சித் தங்கட் டேவியோ டிறைவ னுற்றான். (சங)

உற்றிடு மெல்லை தன்னி லுலகினி லவுணர்க் கெல்லாங்
கொற்றவன் விடுத்த வொற்றர் குவலயந் துருவிச் செல்ல
வற்றது தெரிந்து வல்லே யமரர்கோன் றுணைவி யோடு
மற்றவண் வேணு வாகி மறைந்துநோற் றிருந்தான் மாதோ. (சச)

வேணுவி னுருப்போ னின்று மெலிவொடு நோற்று நாளுந்
தாணுவை வழிபட் டங்கட் சதமகன் சாரு நாளிற்
காணில ரொற்றர் போனர் கருபதி யவுணர் தங்க
ளாணையி னமய்யா தாக வவ்வனம் வாடிற் றன்றே. (சரு)

நீடிய காமர் பூங்கா நெருப்புறு தன்மைத் தென்ன
வாடின நீரின் றாகி மற்றது மகத்தின் கோமா
னுடினன் கவன்று தொன்னு ளுன்முகத் தவனு மாலுந்
தேடரும் பரனை யுன்னி யிரங்கினன் செயல்வே றில்லான். (சசா)

திருந்தலர் புரமூன் றட்ட சேவகற் பரவ லோடும்
பொருந்தலர் பூங்கா வாடிப் போயின வெனினும் பொன்று
விருந்தல மிதனில யாறொன் றெய்துமான் மகவா னின்னே
வருந்தலே யென்றோர் மாற்றம் வானிடை யெழுந்த தன்றே. (௪௭)

எழுவதோர் செஞ்சொற் கேளா வெர்பிரா னருளீ தென்னாத்
தொழுதனன் போறறி மேனி துண்ணெனப பொடிபபச் சிந்தை
முழுவது மகிழ்ச்சி பொங்க மொய்ம்பொடே யிருந்தா னங்க
ணழகிய நதியொன் றுற்ற வரன்முறை யறைய லுற்றேன் (௪௮)

ஆ திருவிருத்தம ௧௧௫௨.

---

வசனம்.

இப்படி அவர்கள் செய்துவருகின்றகாலத்தில் சூரபதுமன் அரசாண்டுவந்தான். ஒருநாள் அவன் அவுணரையும் ஒன்பதுகோடி மாதரையும் அழைத்து நீஙகள்போய் இந்திரனையும இந்திராணியையும பிடித்துககொணடுவாருங்கள் என்றுசொல்ல, அவாகள் அப்படிவருவதைத் தூதாகளால் முன்னேயறிந்துகொண்ட இந்திரன் தன்மனைவியோடு நிலவுலகத்தையடைந்தான் சூரனால் அனுப்பப்பட்ட வீரரும் மாதரும் இந்திரனையும் இந்திராணியையும காணாமையால் அவ்விருவரும் எஙகே உள்ளபடி சொல்லுங்கள் என்று அங்குள்ள தேவாகளைவருததத அவர்கள் நாஙகள் அறியோமென்றுசொல்ல, அவ்வீரர் சூரனிடஞ்சென்று அறிவிக்க, அவன் கோபஙகொண்டு அவ்விருவரும் எங்கிருந்தாலும தேடிப்பிடிததுக் கொண்டுவாருஙகள் என்று கட்டளையிட, அவாகள்போய் மூவுலகத்திலுந் தேடித்திரிந்துகொண்டிருந்தார்கள். இப்படியிருக்கையில இந்திரன்மகனாகிய சயந்தன் தன் சிறியதந்தையாகிய உபேந்திரனது வைகுண்டலோகத்தையடைந்து அஙகுச் சிலநாள்வசித்துப் பிறகு சுவர்க்கலோகததிற்கு வந்து தேவர்களோடு தானும துன்பப்பட்டுக் கொணடிருக்கையில், நாரதமுனிவா அங்கேவர, அவரைவணங்கி, நாஙகள் இந்தத் துன்பம் நீஙகுங்காலம் உண்டாகுமோவென்று கேட்க, அவா சயந்தனைநோக்கி, நீ கவலைபபடவேணடாம், இன்னும் சிலநாளில சூரபன்மன் இறந்துபோவான், நீஙகளெல்லாம் சுகமடைவீாகளென்றுசொலலி அவன்மனததைத தேற்றிச்சென்றார் இதுநிற்க;

முன்னே சுவர்க்கலோகததைவிட்டுநீங்கின இந்திரன் பூலோகததில் சோழநாட்டில் சீகாழியென்னும் திருப்பதியையடைந்து, பூஞ்சோலையொன்றேற்படுத்தி அஙகே திருக்கோயில்கொண்டெழுந்தருளியிருக்கிற சிவபெருமானைவணங்கி நாளதோறும் பலமலர்களைக்கொண்டு அருச்சனைசெய்துகொண்டுவந்தான்; வரும்போது, சூரபன்மனால் அனுப்பப்பட்ட தூதர்கள் தன்னைததேடுவதையறிந்து மூங்கிலுருவஙகொண்டு தவஞ்செய்துவந்தான் அதையறியாமல் அத்தூதர்கள் மீண்டுபோய்ச் சூரபன்மனிடஞ்சேர்ந்தார்கள். அவுணர்கட்டளையால் மேகம் மழைபெய்யாதிருந்ததனால், இந்திரனது பூஞ்சோலை வாடிப்போயிற்று. அதனாலவன் வருத்தமடைய, இனிச் சிலநாளில் இஙகேயொரு நதியுண்டாகுமென்று ஓர் அசரீரிசொலல, அதுகேட்டு இதுவும் சிவபெருமானது திருவருளேயாமென்று மனஙகளித்திருந்தான். அத்தலத்தில் நதிவந்தவரலாற்றை இனிச்சொல்லுவோம் என்று சூதபுராணிகர் சொல்வாராயினர்.

இந்திரன்கரந்துறைபடலம் முற்றிற்று.

---

# விந்தகிரிப்படலம்.

அந்தப் பொழுதத் தளிகொண் டுடையோர்
சிந்தைக் கெளிதாஞ் சிவன்மெய் யருளான்
முந்துற் றுணர்நா ரதமா முனிவன்
விந்தக் கிரிமுன் னுறமே வினனால். (௧)

மேவிப் பலவா சிவிளம் புதலுந்
தேவப் படிவங் கொள்சிலம் புதொழா
வாவற் புதம்வந் ததெம்மண் ணலென
வேவப் படுபான் மையிசைத் திடுவான். (௨)

மேருத் தனிவெற் புவிதிக் கரியோன்
மூரிச் சிலையா கியமொய்ம் பதனாற்
றூரித் துலகீன் றவடன் மரபாற்
பேரற் பொடுவந் துபிறக் கையினால். (௩)

குன்றுக் கிறையா யுறுகொள் கையினா
லென்றைத் தொடவிண் ணிலெழுந் துறலா
னின்றிப் புவியா வையுநீத் தனடு
மன்றைப் பகல்கா றுமளித் திடலால். (௪)

ஓரா யிரமா முடியுள் ளதனாற்
காரார் களன்மே யகவின் கைலை
சாரா வொருசார் வுறுதன் மையினாற்
சூரா னவனாற் றொலைவில் லதனால். (௫)

தாழுங் கதிருந் தகுமே னெறியில்
வாழுஞ் சசியு மலி தாரகையு
மேழென் றிடுகோ ளுமியா வர்களுஞ்
சூழும் படிநின் றிடுதொன் மையினால். (௬)

கொன்னே யிமையோர் குடிகொண் டதனாற்
பொன்னேர் கொடியர்ந் துபொருந் துதலாற்
பன்னே மிகள்சூழ் வருபான் மையினாற்
றன்னே ரிலையென் றுதருக் கியதே. (௭)

பரந்தும் பர்கிமிர்ந் திடுபைம் பொன்வரை
பெருந்தன் மைமதித திடுபெற் றியைநீ
தெரிந்தில் லைகொலன் னசெயற் கையெலாம்
விரைந்துன் னொடுசெப் பியமே வினனே. (௮)

என்றுன் முனிவோ னிதுகேட் டிடலு
மொன்று கியதே வுருவா யெதிரும்
வன்றூழ் கிரிமா மறமுற றுயிரா
நன்று விஃதென் றுநகைத் தறையும். (௯)

இல்லா யுளதொல் விறமாப் பகலப்
பல்லா ரிகழப் பகரும் விதியா
னல்லா ரெனவே நனிநா ணமுறு
வில்லா கிவனோந் ததுமேன் மையதோ. (௧௦)

பொன்னா ரிமவான் புரிநோன் பதனா
லன்னா னிடைவந் தமர்வுற் றனளான்
மன்னா குமவன் மகளா யினளோ
வென்னா ளுமியா ரையுமீன் றருள்வாள். (௧௧)

பாங்குற் றிடுபா ரினையாற் றுவனென்
றோங்குற் றனனெவ் வுலகும் பரியா
வாங்குற் றனவோ பலவன் னவையுந்
தாங்குற் றதுகண் ணுதல்சத தியதே. (௧௨)

விற்சூழ் கதிரோன் முதல்விண் ணவாக
டற்சூழ்ந் தனரல் லதுசந் ததமு
மெற்சூழ்ந் திலரோ வெழுதீ வுளவாங்
கற்சூழ்ந் திலரோ கடல்சூழ்ந் திலரோ. (௧௩)

பன்னிற் குவடும் பலவுண் டெனவே
யுன்னுற் றிடுமோ வுயர்கள் ளிகளின்
சென்னித் தொகையைத் தெரிசிக் கினுயன்
றன்னைத் திலனே தலைநான் குளவே. (௧௪)

கடிதா கியசூ ரிதுகல் லெனவே
யடரா மல்விடுத் தனனன் றுதனை
நெடிதே யதுவுன் னிலனீள் பரிதிப்
படையா னினுமாற் றல்படைத் துளனே. (௧௫)

தண்ணுற் றிடுபொன் மைதயங் குருவ
நண்ணுற் றனமென் றுளநா டினனே
வெண்ணுற் றவனல் லுணர்வெய் திலனன்
மண்ணிற் புனைபா வைவனப் பதுவே. (௧௬)

தன்கண் ணுறுவா னவர்தாம் பலரு
மென்கண் ணமரா மலிகழ்ந் தனரோ
நன்கண் ணுதனு யகனுர் கைலை
யின்கண் ணருகுற் றிலதெக் கிரியே. (௧௭)

திருவைத் தவர்கண் டியில்செங் கணரா
மருவித தனைமுந் துமறைத் திடுநாள்
விரைவிற் படரு தைவெகுண் டிபரித
தொருமுத் தலைகொண் டதுணர்ந் திலனே (௧௮)

கிளர்பபுற் றிடுசிம் புளொர்கே சரிமுன்
னளபபற றிடுதன் னுருவண் டமெலாம
வளர்ப்புற் றிடுஞான் றொர்மணிப் பரல்போற்
குளப்புற் றனனீ துகுறித் திலனே. (௧௯)

வரபத் திரைகேள் வன்மறம் புரியுஞ்
சரபத் துருவுற் றழிதாழ் சிறையின்
விரவிப் படரு தையின்மின் மினிபோற்
றிரிதுற் றனனன் னதுசேதற் றிலனே. (௨௦)

அறியும் றிபொ ரதமா னவெலாங்
குறியுற் றிடுதோன் முகர்குஞ் சரன்மே
லெறியுற றமருப் பிணிலே டெனலாய்ப்
பொறியுற் றிடுமென் பதுபொய்த் திடுமோ. (௨௧)

தானோர் வரையல் லதுதா ரணியுண்
கோனோ வலனல் லதுகோ கனக
வானோ னலன்வா சவனல் லனவ
னேனோ தனைம்ம லெனவெண் ணியதே. (௨௨)

என்னா வடவெற் பையிறித் துரையா
வந்நா கம்வியக் குமகந் தையினை
நன்னா ரதநீக் குவனா டுகெனா
முன்னா வுருநீத்த ததுமொய் வரையே. (௨௩)

வேறு.

எண்டரு முகுந்தர் கோடி யெல்லையின் மாயை யாக்கை
கொண்டனர் திரண்டு நீண்டு குலாய்நிமிர் கொள்கைத் தென்ன
விண்டொடர் விந்த மாங்கோர் விஞ்சையா லகன்று சேண்போய்ப்
புண்டரி கத்தன் மேய புரத்துணை நிமிர்ந்த தன்றே. (௨௪)

உருக்கிளர் விந்த மென்னு முருகெழு பிறங்கன் மேல்போய்ப்
பரக்கம தாகி யம்பொற் பனிவரை காறு மான்று
நெருக்கிய தனைய பான்மை நிலமுழு தளந்த மேலோன்
றிருக்கிளர் பொன்னந் தூசு புனைந்தெனத் திகழ்ந்த தம்மா. (௨௫)

விந்தமிந் நெறியா லான்று மேக்குறக் கிளர்ந்து போகி
யந்தர நெறியை மாற்ற வலரிவெண் டிங்கள் சேயோன்
புந்திபொன் புகரே காரி புயங்கநாள் பிறரு நோக்கிச்
சிந்தையிற் றுணுக்க மெய்தி யினையன செப்ப லுற்றார். (௨௬)

தானவா செயலோ வென்பார் தருமமில் லரக்க வெய்யோ
ரானவர் செயலோ வென்பா ரல்லவே லயன்மா லென்னும்
வானவர் செயலோ வென்பார் மாயமீ தாகு மென்பார்
மேனிமிர் பிறங்க லின்றி வெள்ளிடை யிலைகொ லென்பார். (௨௭)

என்னிது வென்று போதத் தெம்பிரா னருளா னாட
வன்னது தெரித லோடு மாமிது விந்த மேருத்
தன்னுட னிகலொன் றுண்டாய்த் தராதல வரைப்பில் வானிற்
சென்னறி விளக்கிற் றென்று சிந்தனை செய்து தேர்வார். (௨௮)

செம்பொன்மால் வரையின் பாங்கிற் சிவனடி யுன்னி நோற்றே
யம்புரா சியைமுன் னுண்டோ னமர்ந்தன னவனீண் டுற்றா
லும்பர்போய் நின்ற விந்த மொடுங்குமென் றியாரு மோர்ந்து
கும்பமா முனியை யுன்னி யினையன கூற லுற்றார். (௨௯)

ஆக திருவிருத்தம்-௧௧௮௧.

வசனம்.

மெய்யுணர்ச்சியையுடைய நாரதமுனிவர் ஒருநாள் விந்தகிரியையடைய அம்முனிவனை அவ்விந்தகிரியும் தெய்வவடிவங்கொண்டுவணங்கிற்று. அதனை யாசீர்வதித்து மேருமலைதான் பிரமன் மாலென்னு மிருவரும் தம்பேதைமையால் முழுமுதற்கடவுள் யாமென்றுசொல்லிமயங்க அவர்க்கிடையே அவரறியாவண்ணம் நீண்டஅழல்மலையாக வுருக்கொண்ட இறையவனுக்குத் திரிபுரசங்காரகாலத்தில் வில்லாகநின்றதன்மையாலும், எல்லாவுயிரையுமீன்றுங் கன்னியாயிருக்கின்ற இறைவிதன் மரபில்வந்துபிறந்த பெருமையாலும், மலைகட்கெல்லாம் சிறந்ததாக வெண்ணப்படுவதனாலும், சூரியனைத்தொட மேலோங்கியிருப்பதனாலும், இறைவன் சர்வசங்காரஞ்செய்யும் அந்நாள்வரையிலும் உலகைத் தாங்குவதனாலும், ஆயிரஞ்சிகரங்களோடு கூடியிருப்பதனாலும, கைலைமலையைச்சார்ந்திருப்பதனாலும், சூரபதுமனால் தொலைவில்லாமையாலும், சூரியன்முதலிய கிரகமாலிகைபெற்றிருப்பதனாலும், தேவர்களுக்கு இருக்கையாயிருப்பதனாலும், பொன்னுருக்கொண்டு விளங்குவதனாலும், பலமலைகள் சூழ்ந்திருப்பதனாலும், தனக்கு ஒப்பென்பதில்லாமல் ஓங்கித் தருக்கியிருக்கின்றது. பொன்மலை பெருமைகொண்டிருப்பதை நீயறியாய்போலும். அதை உன்னிடத்தேசொல்லவே விரைவாய் இவ்வளவுதூரம் நாடிவந்தேனென்று சொல்ல, அதைக்கேட்டுத் தெய்வவுருக்கொண்டுநின்ற விந்தகிரியும் கோபமிகுந்து பெருமூச்செறிந்து இது நன்றாயிருக்கிறது என்று நகைத்து அது சிவபெருமானுக்கு வில்லாயிருப்பதினால் மேன்மையோ? எல்லாவுயிரையுமீன்ற பெருமாட்டி இமயமலைசெய்த தவத்தாற்பிறந்ததல்லாமல் மலைகளுக்கரசனென்னும் தன்னிடத்தே மகளாகப்பிறந்ததுண்டோ? இது உலகைத்தாங்கியிருக்கின்றதென்பது சிவபெருமானது சத்தியாலல்லாமல் வேறொன்றாலாவதோ? சூரியன்முதலிய தேவர்கள் தன்னைச் சூழ்ந்துவருகின்றனரல்லது என்னைச் சூழாதிருக்கின்றனரோ? ஏழுதீவுகளிலுள்ள மலைகளையும் சூழாதிருக்கின்றனரோ? அம்மேருமலைக்குஞ் சிகரங்கள் பலவுண்டெனில், கள்ளிச்செடிகளும் பலகிளையுடையனவாயிருக்கின்றனவே; பிரமனுக்கும் நான்குதலைகளுண்டு அதனால் இதுவடைந்த சிறப்பென்ன? சூரபதுமனால் தொலைவில்லாதிருந்ததென்றால் அவனும இதனை மலையென்றுவருத்தாதிருந்ததல்லாமல் வேறல்லவே, அம்மேரு பரிதிப்படையையுடையதிருமாலினும் வல்லமைபடைத்திருப்பதோ? தான் பொன்னுருவம்படைத்ததென்று எண்ணியிருக்கின்றதென்றால், அது நல்லறிவுடையதேயல்ல, அதனுருவம் மண்ணிற்செய்தபதுமையின் அழகுபோலும். தன்னிடத்தேவசிக்கும் தேவர்கள்பலரும் என்னிடத்தேவசிக்க மனங்கொள்ளாமல் இகழ்ந்தார்களோ? கைலைமலையருகேயிருக்கின்றதென் றெண்ணியிருந்ததெனின், எந்தமலை இறைவனெழுந்தருளியிருக்கும் கைலைமலைக்கருகேயிருக்கவில்லை. முன்னாளில் ஆதிசேடன் தன்னாயிரமுடிகளாலும் கவிந்துகொண்டு வாயுவோடு பகைத்துநிற்கையில் அவ்வாயுபகவான் தன்வேகமாகியகாற்றினால் தன் மூன்றுசிகரங்களையுங் கொண்டுபோனதைத் தான் இன்னமுமறியாதோ? சிங்கவுருக்கொண்ட விஷ்ணுவின்கர்வமடங்கச் சிம்புள்வடிவாக இறைவன் அண்டமுழுதும் வளர்ந்த காலத்தில் குணமற்ற பரலைப்போலநின்றமையைத் தானறியாதோ? அச்சரபமாகிய வீரபத்திரரது சரபவுருவின் சிறகுகளிலுண்டாகும் காற்றால் மின்மினிபோல் திரிந்ததையும் அறியமாட்டாதோ? பாரதகதையையெழுத எம்பெருமானாகிய கணேசப்பெருமான் கையேடாகக்கொண்டு தான் எழுதப்பட்டது உலகத்தில் பொய்த்தகதையென்று சொல்லப்படுவதாயிருக்குமோ? அம்மேருவோ தானுமோர் மலையேயல்லாமல் உலகுண்ட பெருமானோ? அல்லது தாமரைமலரில்வசிக்கும் பிரமனோ?

இந்திரனோ? அல்லவே என்னகாரணத்தால் தன்னை மேலாக மதித்திருக்கின்றே னென்று தன் தெய்வவுருக்கரந்து அநேககோடி மால்கள் மாயையாக்கைகொண்டு நீண்டாறபோலத் தானொருவிஞ்சையால் பிரமலோகம்வரையு முயர்ந்துநிற்க, அதைக்கண்ட சூரியன், சந்திரன், அங்காரகன், புதன், குரு, சுக்கிரன், சனி, இராகு, கேதுவென்னும் நவக்கிரகங்களும் மனந்திடுக்கிட்டு இது தானவரது செய்கைதானோ? அல்லது தருமநெறியெண்ணிப்பாராத அரக்கராகிய கொடியாரது செய்கையோ? பிரமன் மாலென்னும் பெரியதேவர் செய்கையோ? இதென்ன மாயையாகவிருக்கின்றது? எங்கும் மலையேயன்றி வெற்றிடமில்லாமலு மிருக்கின்றது என்றுநினைத்து இறைவனருளாற் சிந்தித்துநோக்க, ஆம், ஆம். இது பொன மலையொடு பகைத்து நாம் செல்லுகின்ற வழியைவிலக்குகின்றதென்று சிந்தித்துத் தேர்ந்து மேருமலைக்கருகில் சிவத்தியானத்தோடொரு தபஞ்செய்துகொண்டிருக்கும் அகத்தியமுனிவர்வந்தால் ஆகாயமளாவி நீண்ட இவ்விந்தமலை யொடுங்கிப்போமென்று நினைத்துச் செந்தமிழாசிரியராகிய அகத்தியமுனிவர் தவஞ்செய்யுமிடஞ் சென்றார்கள்

விந்தகிரிப்படலம் முற்றிற்று.

# அகத்தியப்படலம்.

பொன்னார் கழல்க ளருச்சித்திடப் போது கொய்யுங்
கைந்நாக மாலை நினைந்தேகரா வொன்று கௌவ
வென்னா யகனே யெனத்தன்கை யெடுத்த ழைப்ப
வன்னா னங்கெய்தி விடுவித்த தறிகி லாயோ. (க)

பூவார் கமலத் தயனல்கிய பூவை தன்மேற்
றாவா மயலாய்க் கிளியாகித் தொடர்ந்து செல்லக்
காவாய் பரனே யெனவோடுங் கலங்க லென்றே
தேவாதி தேவ னருள்செய்ததுந் தோகி லாயோ. (உ)

சத்தார் பிருகு தனதில்லைத் தடிந்த வெல்லை
யித்தா ரணியி லவதாரம் பெய்து கென்ன
வத்தா வருளென் றரிநோற்றாழி யையன் வந்து
பத்தாக வென்று நிறுவுற்றது பாரத்தி டாயோ. (ங)

தேவர்க் கெனினு நிலத்தின்கட் செறிந்து வாழ்வோ
ரேவர்க் கெனினு மொருதுன்புறி னெய்தி நீக்கல்
காவற் குரியார் கடனாமக் கடமை தூக்கின்
மேவற் கரிதாந் தனிமுத்தியின் மேல தன்றோ. (ச)

தெள்ளத் தெளிந்த மறைக்கள்வனைச் செற்ற மீன்போ
லுள்ளற் கடலை யொருநீயகன் கைய டக்கிக்
கள்ளத தவுண னிலைகாட்டிநங் கண்ணில் வைத்த
கொள்ளைக் கருணை யுலகெங்கணுங் கொண்ட தெந்தாய். (ரு)

விந்தக் கிரிநா ரதன்சூழ்ச்சியின் மேரு வெற்போ
டிந்தப் பொழுதத் திகல்கொண்டிலை கெங்கு மீறா
மந்தத் துயருங் கைலைக்கிணை யாவ லென்றே
சிந்தித் ததுகொ லெழுந்திட்டது சேணை தெல்லாம். (சு)

முண்ணுற்ற வெல்லை யளவிட்டிடு மால்கொ லென்றே
யெண்ணுற் றெவரும் வெருக்கொண்டிட வீண்டை விந்தம்
விண்ணுற்ற வண்டத் துணையாய்மிசைப் போவ தையா
கண்ணுற்ற நோக்கம் விடுத்தேயிது காண்கி லாயோ. (எ)

மல்லற் கிரிவிண் ணெறிமாற்றலின் மற்றெ மக்குஞ்
செல்லற் கரிதாயது பாருடைத் தேய முற்று
மெல்லைப் பொழுது மயக்குற்ற விவற்றை நீக்க
வொல்லைக் குறியோய் வரல்வேண்டுமென் றன்ன ருற்றார். (அ)

வேறு.

உன்ன லோடு முலக னனந்தலைப்
பொன்னின் மேருப் புடையொர் பொதும்பரின்
மன்னி நோற்றுறை வண்டமிழ் மாமுனி
தன்னு ளத்திலத் தன்மைகண் டானரோ. (௯)

மேக்கு யர்ந்திடும் விந்தத்தி னாற்றலை
நீக்கி வான நெறியினைத தொன்மைபோ
லாக்கி யண்டர் குறையு மகற்றுவா
னூக்கி னன்முன் னுததியை யுண்டுளான். (௧௦)

துள்ளி கண்ணிடைத் தூங்குறக் கைதொழு
வுள்ள மென்பொ டுருக வுரோமமார்
புள்ளி பொங்கப் புகழ்ந்து புரிசடை
வள்ள றன்னை மனததிடை முன்னினன். (௧௧)

முன்னு மெல்லையின் மூரிவெள் ளேறெனு
மின்னு தண்சுடர் வெள்ளிவெற் பின்மிசைப
பொன்னின் மால்வரை போந்தெனப் புங்கவன்
றன்னு பாரிடர் சூழ்தரத தோன்றினன். (௧௨)

ஆதி யுற்றுழி யச்சமொ டேயெழீஇ
மூது ரைத்தமிழ் முற்றுணர் மாமுனி
கோதை யுற்றிடக் கொய்பொடு வாங்கிய
பாத வத்திற் பணிந்தனன் பன்முறை. (௧௩)

சென்னி பாரிற் றிளைத்திடத் தாழ்ந்துபின்
முன்னா நின்று முறைபடப போற்றலு
மின்னு லாஞ்சடை விண்ணவன் வெஃகிய
தென்னை மற்ற தியம்புதி யாலென்றான். (௧௪)

விந்த மால்வரை மேருவை மாறுகொண்
டந்த ரத்தை யடைத்த ததன்வலி
சிந்த வென்கட் சிறிதருள் செய்கெனா
சந்த நூற்றமிழ்த் தாபதன் கூறினன். (௧௫)

அக்க ணத்துனக் காற்றல் வழங்கினு
மிக்க விந்தத்தை வேரொடும் வீட்டியத்
தெக்கி ணஞ்சென்று சீர்பொதி யத்திடைப்
புக்கு வைகெனப் புங்கவன் செப்பினன். (௧௬)

என்ற லுந்தொழு தேத்திநின் பூசனை
நன்று செய்ய நளிதடங் கூவலு
நின்றி டாப்புன லீடவுந் தென்றிசைக்
கொன்றோர் தீர்த்த முதவுகென் றோதினான். (கஎ)

அனைய காலை யருங்கயி லாயமே
லினிது வைகிய வேழ்நதி தன்னுளும்
புனித மாகிய பூம்புனற் பொன்னியைப்
பனிம திச்சடைப் பண்ணவன் முன்னினான். (கஅ)

அந்த வேலை யஃதுணர்ந் தேவெரீஇச்
சிந்தை பின்னுறச் சென்று திருமுனம்
வந்து காவிரி வந்தனை செய்தலு
மெந்தை நோக்கி யிதனை யியம்புவான். (க௯)

தீது நீங்கிய தென்றிசைக் கேகிய
கோதி லாத குறுமுனி தன்னொடும்
போதல் வேண்டும் பொருபுனற் காவிரி
மாது நீயென மற்றவள் கூறுவாள். (உ0)

திண்மை யைப்பொறி செற்றுள னாயினு
மண்ண லேயிவ னண்டகை யாகுமாற்
பெண்ணி யானிவன் பின்செல னீதியோ
வெண்ணி னீது மியற்கையன் றென்னவே. (உக)

திரிபில் சிந்தையன் றீதுநன் கிற்படா
வொருமை கொண்ட வுளத்தனம் மன்பருட்
பெரிய னீங்கிவன் பின்னுறச் செல்கென
வருள்பு ரிந்தன னாலை மிடற்றினான். (உஉ)

ஆங்க தற்சிசைந் தந்நதி யின்றியான்
றீங்கி லாத முனியொடு பின்செல்வ
னோங்கன் மேய வொருவ விவன்றனை
நீங்கு காலத்தை நீயருள் கென்னவே. (உந)

நன்று நன்றிது நங்கைநின் காரணத்
தென்று நோக்கி யிவன்கரங் காட்டுவ
னன்று நீங்கி யவனியின் பாலதாய்ச்
சென்று வைகெனச் செப்பின னெந்தையே. (உச)

செப்பு மாற்றஞ் செவிக்கமு தாதலு
மப்பெ ரும்புன லாறவன் பின்செல
வொப்ப லோடு முயிர்க்குயி ராகியோன்
றப்பின் மாமுனிக் கின்னது சாற்றினான். (உரு)

நீடு காவிரி நீத்தத்தை நீயினிக்
கோடி யுன்பெருங் குண்டிகைப் பாலென
நாடி யத்திறஞ் செய்தலு நன்முனி
மாடு சேர்ந்தனன் மாநதி யென்பவே. (உசு)

ஆய காலை யகத்திய தென்றிசைத்
தேய மேகெனச் சீர்விடை நல்குரூப்
பாயு மால்விடைப் பாகன் மறைந்தனன்
போயி னுன்செறி பூத ரினத்தொடும். (உஎ)

வேறு.

அத்தனங் கொருவ வன்னு னருளடைந் தங்க ணீங்கி
மெய்த்தரு மதலை வேண்டி விதர்ப்பர்கோன் பயந்த லோபா
முத்திரை தனைமுன் வேட்டு மூதுக்குறை திண்மை சான்ற
சித்தனை யளித்த வள்ள றென்றிசை நோக்கிச் சென்றான். (உஅ)

ஆ திருவிருத்தம் - கஉ0கூ.

---

வசனம்.

அவர்கள் அகத்தியமுனிவர் தவஞ்செய்யுமிடஞ்சென்று யானை முதலை யால் வருந்தியகாலத்தில் திருமால்சென்று அம்முதலையைக்கொன்று அவ்வியானையைக் காத்ததறியாயோ? பிரமன் தான்படைத்த ஊர்வசிமேல் காமத்தினமிகுதிப் பாட்டால் கிளியாய்த்தொடர்ந்துபோக, அவள் பரமசிவனைநோக்கி இக்காலத்திற் றன்னைக் காக்கவேண்டுமென்று புலம்ப, அவளைப் பரமசிவன்காத்ததுமக்குத்தெரியாத செய்தியோ? பிருகுபத்தினியாகிய கியாதியைத் திருமால் கொன்றுபோக அத் திருமாலை பிருகு பலபிறப்பெடுத்துழலென்று சபிக்க, அதைநோக்கிவருந்திய திருமால் தன்னை இப்படி பலபிறப்பில் வருந்தச்சபிப்பது முறையோவெனவேண்டியிரக்க, அதற்கப்பிருகு இரக்கங்கொண்டு பத்துப்பிறப்பெடுக்கவேண்டுமென்று கருணைசெய்தது நீயறியாததோ? தேவர்க்கேயானாலும் பூமியில்வாழும் யாவர்க்கேயானாலும் ஒருதுன்பமுண்டானகாலத்திலே அதனை நீக்குவது காத்தற்றொழிலையுடையவர் கடமையாகும். அக்கடமையைநோக்குமிடத்து அஃது அடைவதற்கரிதாகிய மேலான முத்தியின்மேலதல்லவோ? வேதங்களைத்திருடிக்கொண்டோடியொளித்தசோமுகாசுரனைத் திருமால் மீனுருக்கொண்டுகொன்றாற்போல அக்கடல் முழுதும் உன்னொருகையாலடக்கிக் கள்ளத்தன்மையுடையவிருத்திராசுரனை நாங்கள்காணச்செய்து கருணைசெய்த உன்பெருங்கருணை யுலகமுழுதுங்கொண்டதல்லவோ? விந்தமலை நாரதர்சொன்ன சொல்லைக்கேட்டு மேருமலையோடுபகைத்து உலகமுழுதுமழியுங்காலத்திலு மோங்கியிருக்கும் திருக்கைலாயமலையைப்போலோங்கியிருக்கின்றதே. நாங்கள்செல்லும் கதியை ஆசாயமார்க்கமாயோங்கி மாறுபடச்செய்வதினால் உலகமுழுதுமயக்கமடைகின்றன. அதைநீக்கத் தேவரீர்கருணை செய்யவேண்டுமென்று வேண்டிக்கொள்ள, அதை அம்மேருமலைச்சாரலில் தவஞ் செய்துகொண்டிருக்கும் தமிழாசிரியராகிய அகத்தியமுனிவரறிந்து விந்தமலையை யடக்கி நவக்கிரகங்களுக்கு வானிற்செல்லும் கதியை யுண்டாக்கவேண்டுமென்று தம்முள்ளத்தமைத்து முப்புரம்பொடித்தமுழுமுதற்கடவுளைத்தியானித்துநிற்க, பரமசிவனும் அகத்தியமுனிவர் கட்புலன்முன் மால்விடைமேலெழுந்தருளித்தோன்ற, அவரைத் தன்கையாலிறைஞ்சிவணங்கிநின்றார். பரமசிவன் நீர்விரும்பியது யாதென்றுகேட்க, விந்தமலை பொன்மலையோடுபகைத்து ஆகாயவழியையடைத்துநிற்கின்றது; அதையடக்கக் கருணைசெய்யவேண்டுமென்று வேண்ட, அப்போது பரமசிவன் உனக்கு விந்தமலையையடக்கும் வல்லமையைத்தருகின்றோம், நீர் தென்றிசையிற் பொதியமலையிற்சென்று வசிக்கவேண்டுமென்று கட்டளையிட, அக்கட்

டளையையேற்று அவரைவணங்கி யெனக்கு உமதுபூசனையை விடாமற்செய்யத் தென்றிசைசிறக்க வொருநதியினைத் தரவேண்டுமென்று கேட்க, அதற்கு மனமிரங்கித் திருக்கைலாயமலையிலுள்ள நதிகளேழில் பொன்னியாறென்னும் காவிரியாற்றைநினைக்க, அந்நதிவந்து வணங்கிநின்றது. இத்திசையினின்றும் தென்றிசைக்குப் போகின்ற அகத்தியமுனிவரோடு நீபோகவேண்டுமென்றுசொல்ல, அதற்குக் காவிரிநதி ஐம்பொறியடக்கியமாதவப்பெருமானாயினும் இவ்வகத்தியமுனிவரோடு பெண்ணுருக்கொண்ட யான்போதல் நியாயமாகுமோ வென்றுகேட்க, இறைவன் காவிரிநதியைநோக்கி இவ்வகத்தியமுனிவரோ மாறுபடாத சிந்தையையுடையார், நல்வினை தீவினையென்னும் இருவினையொப்புவந்த அருந்தவமுடையார், நமது அன்பரின் மிகப்பெரியவர். ஆகையால் இவர்பின்னே நீசெல்வது நமது ஆணையென்று சொல்ல, இவரோடு நான் செல்வேனாலும் நானிவரைவிட்டுப் பிரியுங்காலத்தை வெளியிடவேண்டுமென்று கேட்டுக்கொள்ள, இது நன்றுநன்று, நின்காரணத்தை நன்றுநோக்கிப்போ இவர்கையாற் காட்டுவோர். அன்று அவரைநீங்கிப் பூமியில் சென்று தங்கவேண்டுமென்று எம்பெருமான் றிருவாய்மலர்ந்தருளினான். அப்படி சொன்னசொல்லைச் செவிக்கமுதமாகக்கேட்ட காவிரிநதி அவர்பின் செல்வதைக கண்டு இறைவன் அகத்தியரைநோக்கி உன்கமண்டலத்தில் ஏற்றுச் செல்லவேண்டுமென்றுசொல்ல, அவ்வாறே காவிரி இறைவன் கட்டளையின்படி அகத்தியமுனிவருடைய கமண்டலத்தில் வந்துசேர்ந்தது. அப்போது இறைவன் அகத்தியமுனிவரைப்பார்த்து நீ தென்றிசையோடிச் செல்லவேண்டுமென்று கட்டளையிட்டுத் தான் இடபவாகனத்தோடு மறைந்துவிடவே அகத்தியமுனிவர் தென்றிசைநோக்கிச்சென்றார்.

அகத்தியப்படலம் முற்றிற்று.

## கிரவுஞ்சப்படலம்.

பொன்றிகழ் வரையி னின்றுங் குறுமுனி புவியே யாறுத்
தென்றிசைக் கேகு மெல்லைத் திறலரிக் கிளவல் வாழ்க்கை
வன்றிறன் மாய மூதூர் வந்தெய்த வாண்டை வைகு
மன்றிலம் பேர்பெற் றுள்ள வவுணனது தன்மை கண்டான். (க)

வானுய ருலகந் தன்னை வசுந்தரை யாக்கும் பாரை
யேனைய ககன மாக்கு மெறிதிரைப் பரவை தன்னை
மேனியிர் பிறங்க லாக்கும் வெற்பினைப் புணரி யாக்கும்
பானுவை மதிய மாக்கு மதியினைப் பகலாச் செய்யும். (உ)

அணுவினை மேரு வாக்கு மன்னதோர் மேரு வெற்பை
நணுகிய வணுவே யாக்கு நொய்தெனப் புவனி தன்னைப்
புணரிய தாக்கு நேமிப் புணரியைப் புவன மாக்கு
மிணருறு நேமித் தீயை யெல்லைநீ ராகச் செய்யும். (ங)

கன்னலி னயுதத் தொன்றிற் கடவுளர்க் கேனு நீத்தோ
ரென்னவர் தங்கட் கேனு மெனைப்பல மாயஞ் சூழ்ந்து
பன்னெடுங் காலஞ் செல்லப் படுத்திடு மென்னி னம்மா
வன்னவன் வன்மை யாவு மாரதிற் றுரைக்கற் பாலார். (ச)

அத்தகு தகுவர் கோமா னடற்கிர வுஞ்ச னென்போன்
மெய்த்தமிழ் முனிவன் செல்லும் வியனெறி யிந்த மேபோழ்து
கொத்துயர் குவடு மல்கிக் குன்றுருக் கொண்டு தன்பா
லுய்த்திடு மாறு போக்கி யுறுதலுங் குறியோன் கண்டான். (௫)

காண்டலும் வியந்து நன்றிக் கடிவரை நடுவ ணாக
யீண்டிதோ ரத்த முண்டா லிவ்வழி நடத்து மென்னா
வாண்டத னிடையே போக வந்நெறி குரோச வெல்லை
மாண்டலு மிலதே யாக மற்றொரு சுரமுற் றன்றே. (௬)

அந்நெறி கண்டு தொன்னூ லறைமுனி யேக லோடுஞ்
சென்னெறி மேலின் றாகத் திரும்பினன் செல்லுங் காலை
முன்னுள நெறியுங் காணான் முனிவரன் மயங்க வோர்சார்
பின்னொரு வட்டை கண்டு பேதுற லோடும் போனான். (௭)

ஆறது செல்லு மெல்லை யடலெரி கனைந்து சூழச்
சூறைகண் மயங்க மங்கு றுண்ணென மாரி தூவ
மாறக லுருமுச் சிந்த வல்லிருட் படலை சுற்ற
வீறகன் மாயை சூழ்ந்தா னெறுழ்வலி யவுணர் கோமான். (௮)

மட்டுறு குறிய செம்மன் மற்றது நோக்கித் தீயோர்
பட்டிமை யொழுக்கி தென்னாப் பயின்றிடு போத நீரா
லுட்டெளி பான்மை நாட வூழத்திறந் தெரித லோடுங்
கட்டழ லென்னச் சீறிக் கரதலம் புடைத்து நக்கான். (௯)

நன்றுநன் றவுணன் கொல்லா நமக்கிது புரியு நீரா
னின்றிவன் வன்மை நீப்பன் யானென வவுண வெய்யோன்
குன்றுரு வதனிற் குற்றிக் குறுமுனி பாணித் தண்டாற
றுன்றிரும் பூழை யாக்கிச் சூளிவை புகல லுற்றான். (௧௦)

மாண்மதி பெறாத வெய்யோய் மற்றுநின் றன்மை நீங்கி
நீண்மலை யாகி யீண்டே நின்றுதீ யவுணர்க் கெல்லா
மேண்மிகு மிருக்கை யாகி யிருந்தவத தோர்க்கு மேனைச்
சேண்மலி கடவு ளோர்க்குந் தீத்தொழி லிழைத்தி பன்னாள். (௧௧)

மாற்படு நமது பாணி வலிகெழு தண்டா லுன்றன்
பாற்படு புழைகள் யாவும் பற்பல மாயைக் கெல்லா
மேற்புடை யிருக்கை யாக வெம்பிரா னுதவுஞ் செவ்வேள்
வேற்படை தன்னிற் பின்னாள் விளிகுதி விரைவி னென்றான். (௧௨)

பழிதரு மினைய சாபம் பகர்ந்துதன் சிரகந் தன்னி
லிழிதரு புனலை வாங்கி யுளங்கொண்மந் திரத்தால் வீசி
யழிதர மாயை நீக்கி யாண்டொரீஇ மீண்டு தென்பால்
வழியது செல்வ னாடி வண்டமிழ் முனிவன் போனான். (௧௩)

ஆக திருவிருத்தம் - ௧௨௨௨.

வசனம்.

பொன்மலையாகிய மேருமலையினின்றும் பூமியே வழியாகத் தென்றிசை நோக்கிநடக்கையில் சிங்கமுகாசூரனுக்கிளையவனாகிய தாரகனுக்கு இருப்பிடமாகிய மாயமாபுரமடைய அங்குவசிக்கும்(அன்றிற்பறவையென்னும் பெயருள்ள)கிரவுஞ்சனென்னுமவுணன் அத்திசைநோக்கித் தமிழாசிரியராகிய அகத்தியமுனிவர் வருவதுகண்டான். அவன் வானுலகைப் பூமியாகவும்,பூமியைப் பொன்னுலகமாகவும், சமுத்திரத்தை மலையாகவும், மலையைச் சமுத்திரமாகவும், சூரியனைச் சந்திரனாகவும், சந்திரனைச் சூரியனாகவும், அணுவை மேருவாகவும், மேருவை யணுவாகவும், சமுத்திரத்தைப் புவனமாகவும், புவனத்தைச் சமுத்திரமாகவும், வடவாமுகாக்கினியைக் கடலாகவும் காட்டவல்லவன், மேலும் தேவர்களுக்கும் முனிவர்களுக்கும் மிகவும் மயக்கமுண்டாகப் பலமாயைகள்செய்துவருவானென்றால் இவனது மாயாவல்லபம் யாரறிந்துசொல்லவல்லவர். இப்படிப்பட்ட கிரவுஞ்சனென்னு மவுணன் தமிழாசிரியராகிய அகத்தியமுனிவர் வருகிறவழியில் அவர்நாடிவரும் விந்தமலைபோலப் பலசிகரங்களைக்கொண்டுதாங்கும் மலையுருக்கொண்டு அவரைத் தன்னிடமாக வரச்செய்தான். அதை அகத்தியமுனிவர்கண்டு இம்மலையின்வழியாகப்போக ஒரு காடுதோன்ற, அதன்வழியாக ஒரு குரோசவழிநடந்தார், ஒருசுரம்தோன்றிற்று. அவ்வழியாக அகத்தியமுனிவர்போக வழியில்லாமல் திரும்பி முன்வந்தவழியையுங் காணாதுமயங்கிப் பின்னொருவழியைக் கண்டுபோக, தமக்கு நெருப்புப்பற்றியெரியவும், சுழற்காற்றுத்தோன்றவும், மேகம் மழைபொழியவும், இடியிடிக்கவும், இருட்படலம்சுற்றவும், பெருமலையாக அக்கிரவுஞ்சன்வளைக்க, அதையறிந்த தமிழ்முனிவர் இது கொடியவராகிய அவுணரது பட்டிமையொழுக்கமெனத்துணிந்து கைகொட்டிச்சிரித்துக் கோபங்கொண்டு நன்றாயிருக்கின்றது, நம்மையோ அவுணன் மயக்கவல்லவன்,இவனது மாயாவல்லபத்தை நீக்கவேண்டுமென்றெண்ணித் தன்கையிலுள்ளதண்டால் அக்குன்றைக்குத்தித் தொளையுண்டாக்கி "அறிவிலியாகிய கொடியவனே! உன்னுருவமொழிந்து இம்மலையுருவாகவேயிருக்கவேண்டும்; நீ அவுணருக்கெல்லாம் பெருமிதமாகிய இருக்கையாகி அருந்தவக்கொள்கையையுடைய முனிவர்களுக்குந் தேவர்களுக்குந் தீத்தொழில்செய்துவருவை, நமது கைத்தண்டாலாகிய துவாரங்கள் எல்லாம் பற்பலமாயைகளுக்கிருக்கையாக, எம்பெருமானாகிய நீலகண்டத்து நின்மலனுதவிய குமாரசற்குருவினது கைவேலால் நீ முடிவெய்துவை"யெனச் சபித்துத் தன் கமண்டலத்திருந்த சலத்தை வாங்கி மந்திரஞ்சபித்து மாயையைநீக்கிக்கொண்டு அவ்விடத்தினின்றும் நீங்கித் தென்றிசையே வழியாகச்சென்றார்.

கிரவுஞ்சப்படலம் முற்றிற்று.

---

# விந்தம்பிலம்புகுபடலம்.

அன்னதோ ரவுணர் கோமா னன்றுதொட் டசல மாகித்
துன்னெறி யவுணர் யாருந் துவன்றிய வரண மாகி
தென்னவின் முதனாள் காறு நின்றன னனையான் றன்னை
யென்னையா ளுடைய நீயன் றியாவரே யடுதற் பாலார். (க)

பைந்தமிழ் முனிவன் வான்றோய் பனிவரை யதனை நீங்கிக்
கந்தரஞ் செறிபொற் கோட்டுக் கடவுளர் வரைச்சா ரெய்தி
யந்தம தடைந்தோர்க் கங்க ணருளினாற் றனது மூல
மந்திர முணர்த்து முக்கண் வானவன் காசி புக்கான். (௨)

கங்கைசென் றொழுகுங் காசிக் கறைமிடற் றகில நாதன்
பங்கய வடிக டாழ்ந்து பரவல்செய் தாண்டு நீங்கித்
துங்கதை கொண்ட விந்தத் தொல்வரைக் கொருசா ரேகி
யங்கத னிலைமை நோக்கி யறிவனொன் றியம்ப லுற்றான். (௩)

சேயுயர் சிவப்பிற் றாகிச் சேண்புகும் விந்த மென்னு
மாயிருங் குவடு கேண்மோ மற்றியாம் பொதிய வெற்பிற்
போயிருந் திடவே யுன்னிப் போந்தன மதனுக் கின்னே
நீயொரு சிறிது செல்லு நெறியளித் திடுதி யென்றான். (௪)

எறிகதிர் மதியி னுக்கு மேகருந் திறத்தால் வான
நெறியினை யடைத்துத் தொலலை நெடியமால் போன்று நின்றேன்
குறியநிற் கஞ்சி யாறு கொடுப்பனோ வெனது தோற்ற
மறிகிலை மீண்டு போகென் றவ்வரை மொழிந்த தன்றே. (௫)

கேட்டலு மதனைச் சீற்றங் கிளர்ந்திட நகைத்து நாதன்
றாட்டுணை யுன்னித் தொன்னாட் சதமகன் வேண்ட வாழி
மாட்டுறச் செறித்த கையை மலரயன் பதத்தின் காறு
நீட்டினன் றவமே யன்றி நெடும்பொருள் பிறவு முண்டோ. (௬)

அற்புத மமரர் கொள்ள வாற்றவுங் குறியோன் விந்த
வெற்பின தும்பர் தன்னின் மீயுயர் குடங்கை சேர்த்தி
வற்புற வூன்ற வல்லே மற்றது புவிக்கட் டாழ்ந்து
சொற்பிலம் புகுந்து சேடன் றன்னிலை யடைந்த தன்றே. (௭)

அள்ளலை யடைகின் றோரி லரம்புகு மடுக்க லஞ்சி
வள்ளலை யருளிக் கேண்மோ மறறுனை வழிப டாம
லெள்ளலை யிழைத்து மேன்மை யிழந்தனன் றமியன் குற்ற
முள்ளலை யெழுவ தென்ஞான் றுரையெனக் கூறிற் றன்றே. (௮)

அன்னதோர் பொழுது தன்னி லலைகடல் செறித்த வங்கை
முன்னவன் விந்த வெற்பின் மொழியினை வினவி யான்போ
யிந்நெறி யிடையே மீளி னெழுதியா னீயு மென்னு
நன்னகை யோடு சொற்றா னாதன் சூழ்ச்சிக் கொப்ப. (௯)

வன்புலப் புவிக்குள் விந்த மறைதலு மறிவி னீராற்
புன்புலப் பகையை வென்றோன் கரத்தைமுன் போலச் செய்து
தன்புலப் புற்ற சிந்தைச் சுரர்கள்பூ மாரி தூர்ப்பத்
தென்புலப் பொதிய வெற்பிற் செல்வது சிந்தை செய்தான். (௧0)

ஆயிடை விந்தம் பார்புக் கழுந்திட வகல்வா னத்துத்
தேயம்வெள் ளிடைய தாகத் தினகரன் முதலாந் தேவர்
பாய்சுடர் விளக்கம் யாண்டும் பரந்தன சிறையை நீங்கி
யேயென வளக்கர் நீத்த மெங்கணுஞ் செறியு மாபோல். (௧௧)

அதுபொழு தலரி யாதி யமரர்க ளகத்தி யன்பாற்
கதுமென வடைந்து போற்றிக் கைதொழு தெந்தை செய்த
வுதவியார் புரிவர் நின்னை யும்பரா றொழுகப் பெற்றோம்
பொதியமே லினிநீ நண்ணி யிருத்தியெம் பொருட்டா லென்றார். (௧௨)

என்றலும் விழுமி தென்று விசைவுகொண் டமரர் தம்மைச்
சென்றிட வானிற் றாண்டித் தெக்கிணந் தொடர்ந்து செல்லக்
குன்றமர் குடாது தேயங் குறுகும்வில் வலன்வா தாவி
யன்றுயி ரிழப்ப நின்றா ரகத்தியன் வரவு கண்டார். (௧௩)

ஆ. திருவிருத்தம் - ௧,௨௩௫,

---

வசனம்.

அன்று முதல் அக்கிரவுஞ்சனென்னும் பெயருள்ள அவுணன் மலையுருவமாகவே யிருந்தான். கொடிய நெறியையுடைய அவுணர்கள் எல்லாம் அதைத் தங்களுக்கு அரணாகக்கொள்ள நேற்றுவரையிலும் மலையுருவமாகக் கிடந்தான். குமாரசற்குருவே! அவனை நீ யல்லது யார்தான் கொல்லவல்லவர். தமிழாசிரியராகிய அகத்தியமுனிவர் இமயமலையைக் கடந்து காசி க்ஷேத்திரத்தைத்தரிசித்து விச்சுவநாத ராலயத்தினுட்புகுந்து அப்பெருமானை வணங்கியேத்தி அவ்விடமகன்று விந்தமலையி னொருபுறமடைந்து அதனியல்பையறியலாமெனத்துணிந்து அவ்விந்தமலையைப் பார்த்து நாம் பொதியமலையையடைய வெண்ணிவந்தோம். நாம்போக வழிதரவேண்டும், நீ சற்று வழிவிடவேண்டுமென்று கேட்க, அதற்கு அவ்விந்தமலை சூரிய சந்திரர்களுக்கேபோக முடியாதவண்ணம் வழியையடைத்து நெடுமாலைப்போல நீண்டு வானளாவி யிருக்கின்றேன், சிற்றுருக்கொண்டிருக்கின்ற உனக்குப் பயந்து வழிவிடுவேனோ, நீ வந்தவழியே திரும்பிப்போய்விடு, எனது தோற்ற மறிந்தாயில்லையென்று சொல்ல, அதைக்கேட்டுக் கோபத்தோடு நகைத்து எப்பொருட்கு மிறைவனாகிய பரமசிவனது கூற்றங்குமைத்த பொற்றாளைச் சிந்தித்தேத்தி முன்னாளில் இந்திரன் வேண்டச் சமுத்திரமுழுதும் அள்ளிய தன் கையைப் பிரமபதம் வரையுமநீட்டி அம்மலையின்மேல் குடங்கைசேர்த்து வன்பாக வூன்றி நிற்க அம்மலை பூமியிற்றாழ்ந்து பிலத்தின்வழி புகுந்து ஆதிசேஷன் வாசஞ்செய்யு மிருக்கையை யடைந்தது. நரகத்துன்ப மடைவார்போற் பாதலம்புகுந்த விந்தமலை பயந்து உன்னை வழிபடாமல் இகழ்ந்து பழி தேடிக்கொண்டேனே, என் சிறுபிழை பொறுக்க வேண்டுகின்றேனென்று வேண்டிக்கொள்ள, அப்படி வேண்டிய அவ்விந்தமலையை நோக்கி மீண்டுகாலத்தி லுயர்வையென்று நாரதமுனிவன் சூழ்ச்சிக் கொத்துச்சொல்லி, பின், அகத்தியர் தமது கரத்தினை முன்போலச்சுருக்கிக்கொண்டு தேவர்கள் மலர்மழைபொழியப் பொதிகைக்குச்செல்லவெண்ணினர். அப்போது சூரியன் முதலியதேவர்கள் அகத்தியமுனிவரை விரைந்தடைந்து நீர் பண்ணிய உபகாரம்போல் யார்தான் செய்யவல்லவர்? நாங்களும் ஆகாயமார்க்கமாகச் செல்லப்பெற்றோம், தேவரீர் எங்கள் பொருட்டாகப் பொதியமலையி லெழுந்தருளி யிருக்கவேண்டுமென்று வேண்டிக்கொள்ள அவ்வாறே யாகுகவென்றிசைந்து அவர்களுக்கு விடைகொடுத்தனுப்பிவிட்டு மேற்றிசையாக வருகையில் உயிரிழக்க நாடியிருப்பவர்களாகிய வாதாவி வில்வலனென்னும் அவுணரிருவரும் அவர்வரவைக்கண்டனர்.

விந்தம்பிலம்புகுபடலம் முற்றிற்று.

# வில்வலன்வாதாவிவதைப்படலம்.

தண்டன ரிவனே போலுங் காய்சினத் தவுண ராவி
கொண்டனன் வேலை முன்னங் குடித்தமிழ் கின்ற நீரா
னண்டரை யருள்வா னுங்கொ லடைந்தன னவனுக் கின்னே
யுண்டியை யுதவி யாவி கொள்ளுது மென்றெ டென்றா. (௧)

என்றிவை புகன்ற பின்ன ரிளவல்வா தாவி யெம்போனா
குன்றதன் புடையி லோர்சார் கொறியுருக் கொண்டு போந்து
மென்றழை புதலின் மேய வில்வல னென்னு மேலோ
னொன்றிய புலத்தின் மிககோ ருருவுகொண் டுற்றா னன்றே. (௨)

மீதுறு சடையு நீறு விளங்கிய நுதலும் வேடங்
காதணி குழையின் சீருங் கண்டிகைக் கலனு மேமகொளா
பூதியுந் தண்டுங் கையும் புனையுரி யுடையு மாக
மாதவ வேடந் தாங்கி முனிவனோர் வல்லை சென்றான் (௩)

மெய்தரு புறத்துக் காமர் வியனுருக் கொண்டு தன்னுட்
கைதவங் கொண்டு செங்கேழ்க் காஞ்சிரங் கனிபோன் மேய
மைதிகழ் மனத்த னோர்போய் வண்டமிழ் முனிவற் போற்றி
யையதென வணங்கி முக்கா லஞ்சலி செய்து சொல்வான். (௪)

அடிகணீர் போத விந்நா ளருந்தவம் புரிந்தே னின்று
முடிவுற வந்தீர் யானு முனிவர்த கிலைமை பெறறேன்
கொடியனே னிருக்கை யீதாற் குறுகுதிர் புனித மாரும்
படியென வுரைத்துப் பின்னும் பணிந்தனன் பதங்க டம்மை. (௫)

பணிதலு மொருதன் கையிற் பரவையப் புனலை வாரி
மணிபடு பதுமம் போல வாய்க்கொளு முனிவன் றீயோன்
றுணிவினை யுணரா னாகித் துண்ணென வுவகை தோன்ற
வினையறு தவத்தின் மிக்கோ யெழுதியென் றிதனைச் சொற்றான். (௬)

ஆறெதி ரெண்ம ராகு மாயிர முனிவர் தமபால
வேறுள தவத்தர் தமபான் மிக்கநின் னியற்கை தன்னிற்
கூறுசெ யணுவின் காறுங் குணமில சரத மீது
தேறுதி யிருக்கை யேது செல்லுதும் வருக வென்றான். (௭)

என்றருண் முனியை நோக்கி யீதென துறையு ளொண்ணச
சென்றனன் முடிவான் வந்த தீயவ னவற்கொண் டேகி
மன்றதன் னிருக்கை யுற்று மரபுறு தவிசிற் சேர்த்திப்
பொன்றிக ழடிகட் கேற்ற பூசனை புரிந்து சொல்வான். (௮)

எந்தைநீ யானு மேனை யென்குலத் தவரு முய்ய
வந்தனை போலு மிந்நாண் மற்றென திருக்கை வைகி
வெந்திடு புற்கை யேனு மிசைந்தனை யெனக்குச் சேடந்
தந்தருள் புரிந்து போதி தவத்தரிற் றலைவ வென்றான். (௯)

சொல்வல முனிவர் மேலோன் சூர்முதன் மருகா யுள்ள
வில்வலன் மாற்றங் கேளா விழுமிது பரிவின் மிக்கோ
யொல்வதோ ருணவு நின்பா லுவந்தியா மருந்திப் பின்னர்ச்
செல்வது கடனா மென்று செப்பினன் றீமை தீர்ப்பான். (க0)

மேலவ னிதனைக் கூற வில்வலன் வணங்கி யெந்தாய்
சீலமோ டடிசில் செய்வன் சிறிதுபோ திருத்தி யென்று
காலையங் கதனி லாண்டோர் கயப்புனல் படிந்து மூழ்கிச்
சாலவும் புனித னாகி யடுவதோர் சாலை புக்கான். (கக)

அத்தலை நிலத்தை நீரா லாமயம் பூசி யாண்டுஞ்
சித்திர முறுத்தி யாவுந் தேடிவால் வளையின் சின்ன
மொத்ததண் டுலமா சேக வொண்புன லிடையே யிட்டு
முத்திற மண்ணி மற்றோர் முழுமணிக் குழிசி யுய்த்தான். (கஉ)

தாக்குறு திறலின் வெய்ய தழல்பொதி கருவி யான
வாக்கிய செய்த தொன்றி லழலினை யதனுண் மூட்டித்
தேக்கநி லார மாட்டிச் சீருணத் தசும்ப ரொன்றில்
வாக்கிய வுலைப்பெய் தேற்றி மரபில்வா லரியுள் ளிட்டான். (கங)

பதனறிந் துண்டி யாக்கிப் பாலுற வைத்துப் பின்னர்
முதிரையி னடிசி லட்டு முன்னுறு தீம்பால் கன்னல்
விதமிகு முணக்கள் யாவு மேவுற வமைத்துக் கொண்டு
புதுமணங் கமழுந் தெய்வப் புனிதமாங் கறியுஞ் செய்தான். (கச)

ஆற்றலான் மேடம் போலா யாரிட ருயிரை யெல்லா
மாற்றுவா னமைந்து நின்ற விளவலை வலிதிற் பற்றிக்
கூற்றமே போல மேவு முனிவன்முற் கொணர்ந்து கையி
லேற்றகூர்ங் குயத்தாற் காதி யிருதுணி யாக்கி னானே. (கரு)

அணிப்படு போர்வை நீக்கி யங்கமு மகற்றி வாளாற்
றுணிப்பன துணித்து மீர்ந்துஞ் சுவைத்திடு முறுப்பூ னெல்லாங்
குணிப்பொடு குட்ட மிட்டுக் குழிசிகள் பலவிற் சேர்த்தி
மணிப்புனல் கொண்டு முக்கான் மரபினான் மண்ணல் செய்து. (கசு)

உரைத்தவக் கறிக்கு வேண்டு முவர்முத லமைந்த நல்கி
வருத்துறு கனன்மேற் சேர்த்தி வாலிதிற் புழுக்கல் செய்தே
யரைத்திடு கறியி னுண்டே ளாதிது யிழுது பெய்து
பொரிப்பன பொரித்திட் டாவி போந்திடா வண்ணம் போற்றி (கஎ)

கறியினுண் பொடியு மேனைக் கந்தமார் துகளு மந்நாள்
வறையல்போ குற்ற தூய வாலரிப் பொடியு நீவி
யுறைகெழு துப்பும் வாக்கி யொழுகுபல் காயங் கூட்டித்
திறனொடு மளாவி யாங்கோர் சிறசில பாகு செய்து. (கஅ)

பின்னரும் பலகால் வேண்டும் பெற்றியிற் கரித்துச் செம்மி
முன்னுற வளிக்க நின்ற முதிரையின் புழுக்க லட்டுச்
செந்நல நீடுங் கன்னற் றீம்புளிங் கறியுஞ் செய்யா
வன்னதோர் தொடக்கம் யாவு மருளினா னருளி லாதான். (கசு)

வுதினி வருக்கை யாதி யளவையில் கனிகள் கிறித்
ீதசமர் கன்ன நீந்தேன் சேர்தரச் சிவணி யேனை
ாசமு மல்கு மிட்டு வரம்பில வமைத்துப் புத்தேள்
புசனைக் குரிய வன்பாற் பொருக்கெனக் குவவு செய்தான். (உ0)

துப்வகை யுயிர்ப்பின் மாந்திக் குவலயம் விரும்பு கின்ற
வவகை யுணவு மாறு சுவைபட வளித்துப் பின்னு
மவ்வகை யனவுந் தானே யிமைப்பினி லமைத்து வல்லே
வ்வையி னேடுஞ் சென்று கடமுனி கழன்மேற் ருழ்ந்தான். (உக)

ந்தைநீ யின்ன காலை யிரும்பசி யுடற்ற வாற்ற
நொந்தனை போலு மேனி நுணங்கினை தமியே னீண்டுத்
தந்தன னுணவி யாவுந் தளர்வற நுகரு மாறு
ந்தரு ளென்று வேண்ட மற்றதற் கியைந்து போனன். (உஉ)

அட்டிடு சாலை மாட்டே யகத்தியற் கொடுபோ யாங்க
ணிட்டதோ ரிருக்கை தன்னி லிருத்தியே முகமன் கூறி
மட்டுறு தூநீர் கந்த மலர்புகை தீபங் கொண்டு
பட்டிமை நெறியிற் பூசை புரிந்துபின் பதநேர் குற்றான். (உங)

வேறு.

தெள்ளுஞ் சுடர்ப்பொ னியல்கின்ற தட்டை திருமுன்னர்வைத்துநிரையா
வள்ளங்கள் வைத்து மிகுநார முய்த்து மரபிற் றிருத்தி மறையோ
னுள்ளங் குளிர்ப்ப வமுதன்ன வுண்டி யுறுபேதம் யாவு முதவா
வெள்ளம் படைத்த நறுநெய் யதன்கண் விட்டான்றன் ஞவி விடுவான்.()

முறைவைப்பு நாடி முதன்மைக்கண் மேவு முதிரைப் புழுக்கன் மறியின்
கறிவர்க்க மேனை யவைசுற்றின் மேய கவினுற்ற கிண்ண மிசையே
யுறவிட்டு நீட மதுரித்த யாவு முடனுய்த் தொழிந்த வளனுஞ்
செறிவித்து மேலை முனிகைக்கு ணீடு சிரகந்தி னீரு தவினன். (உரு)

பெருநீ ரடங்கு சிறுகையி னூடு பெறவுய்த்த தோய மதனை
யிருபான்மை யுண்டி யதுசூழும் வண்ண மிசையோடு சுற்றி யதுதா
னொருகா னுகர்ந்து பலகா லினுக்கு முதவிப்பி னுள்ள படியு
மருகாது செய்து மிகவே விரும்பி யயில்வான் றவங்கள் பயில்வான். ()

அடுகின்ற வுண்டி கறிவர்க்க மேனை யவையன்பி லாத வசுர
னிடுகின்ற தேது முடிவெய்து காறு மினிதுண்டு பின்றை முனிவன்
கடிகொண்ட நார மனையன் கொணர்ந்து கரமுய்ப்ப நுங்கி யெழுவான்
பொடிகொண்டு தன்கை மலர்நீவி மிக்க புனல்கொண்டு மண்ணல் புரியா.()

மைக்காரின் மெய்ய னருள்கின்ற நாரம் வாய்க்கொண்டுமிழ்ந்து பலகால்
முக்காலி னுங்கி வாய்பூச றுத்து முறைநாடி யங்க மெவையு
மிக்கானு மூற்று புரியாவ தன்றி வேறுள்ள செய்கை பலவு
மக்காலை யங்கொர் புடையுற்றி யற்றி யவண்வீற் றிருக்கு மளவில்.(உஅ)

வேதா வளித்த வரமுன்னி யேவில் வலனென்னும் வெய்ய வசுரன்
போதா விருந்த முனியாவி கோடல் பொருளாக நெஞ்சி னினையா
வாதாவி மைந்த விளையாய் விரைந்து வருகென்று கூற முனிவன்
ீதார் வயிற்றி னிடையே யெழுந்து திறன்மேட மாகி மொழிவுரன். ()

### வேறு.

எண்ணும லேமுன்பு கடலுண்ட தேபோல
வெனதூனு முண்ட கொடியோ
னுண்ணும் முயிர்கொண்டு வலிகொண்டு குறிதான
வுதரங் கிழித்து வருவ
னண்ணுவில் வலனேயெ னக்கூறி யேதம்பி
யரிபோன் முழங்கி யிடனு
மண்ணூடர் புகழ்கும்ப முனிதீயர் செய்திட்ட
மாயந் தெரிந்து வெகுள்வான். (௯0)

ஊன்கொண்ட கறியாகி நுகர்வுற்ற வாதாவி
யுயிர்போகி யுண்ட வியல்பே
தான்கொண்டு முடிகென்று சடரத்தை யொருகாலை
தமிழ்வல்ல முனித டவனுங்
கான்கொண்ட வெரிமண்டு சிறுபுன்பு தற்போன்று
கடியோனு முடிவாக வே
வான்கொண்ட லெனவங்கண் முன்னின்ற வன்றம்பி
மாய்வுற்ற துன்னி வருவான். (௯க)

மெய்க்கொண்ட தொன்னூ ளுருக்கொண்டு முனிதன்னை
வெருளூற்றோர் தண்ட மதனைக்
கைக்கொண்டு கொலையுன்னி வருபோழ்தின் முனிவன்
கரத்திற் றருப்பை யொன்றை
மைக்கண்டர் படையாக நினைகுறறு விடவில்வ
லன்றூனு மடி வெய்தலு
மக்கண்ட கக்கள்வ ருறையுற்ற விடநீங்கி
யப்பா லகன்றன னம்ரோ. (௯உ)

ஆக திருவிருத்தம் - சஉசுஎ.

---

### வசனம்.

இவ்வாறு அகத்தியமுனிவர் வரக்கண்டு இவனே அரக்கர் பலரையும் கொன்றவன், முன்னாள் கடலைக்குடித்தமிழ்ந்தவன். தேவரைக்காத்தவன்; இவனுக்கு உணவையளித் துயிரையூனேடும்வாங்குவதே நலமென்றெண்ணி வாதாவி ஆட்டுருவங்கொண்டு அங்கேயுள்ள மலையி னோர்புறத்தில் புன் மேய்க்து கொண்டிருந்தான். வில்வலன் முனிவர்போ லுருவங்கொண்டு மேலே கட்டிவிட்ட சடையும் நெற்றியில் விபூதியும் காதிற் குழையும் கண்மணியுமணிந்து உடல் முழுதும் விபூதியணிந்து கையில் தண்டும தோல் உடையும் தரித்த வேடங்கொண்டு அகத்திய முனிவரெதிரில் வந்தான். வெளியே நலம்பழுத்த வேடமும் உள்ளே வஞ்சகமுங் குடிகொண்டு எட்டிக்கனிபோல் மனமுடையவனுகி அவ்வில்வலன் தமிழாசிரியராகிய அகத்திய முனிவரை மும்முறை வலம்வந்து பணிந்து அஞ்சலிசெய்து நின்றுகொண்டு தேவரீர் எழுந்தருளப் பலநாள் அருந்தவஞ்செய்தேன், இன்று முடிவெய்த வந்தீர், யானும் முனிவர்களுடைய நிலைமையடைந்தேன்; அடியேன் இருக்கும் இடமிது, அது புனிதமாகும் வண்ண மவ்விடத்திற் கெழுந்தருளுவீரென்று சொல்லி, அவரது பாதங்களை வணங்கி நின்றான். ஒருகையாற் கடன் முழுதுமுண்ட அவ்வகத

திய முனிவர் அவனது துணிவையறியாமல் அன்பு மிகுந்து அக்கொடியவனுகிய வில்வலனைப்பார்த்து நாற்பத்தெண்ணுயிரம் முனிவரும் மற்ற முனிவரும் மிகுந்த நின்னியல்பில் அணுவளவேனும் சிறந்தாரல்லர், உன்னிருப்பிடமெது வருகின்றேமென்று சொல்ல, இதுதான் யானிருக்குமிடமென்று சொல்லி நடந்தான். தானே முடியும்படிவந்த அவ்வில்வலன் அம்முனிவனைக்கொண்டு சென்று அவனிருக்கையி லழைத்துப்போய் ஆசனத்தி லெழுந்தருளச்செய்து வந்தனை வழிபாடு புரிந்து எந்தையே! யானும் என் குலத்தாரும் பிழைக்கவந்தாய் போலும்; இக்காலத்தே குடிசையில் எழுந்தருளியிருந்து வெந்தகூழேனும் உண்டுசேடமளித்துப்போக வேண்டுகிறேனென்றுவேண்டிக்கொள்ள, சூரபதுமன் மருமகனுகிய வில்வலன்சொல்லைக்கேட்டு உன்னுலிசைந்த உணவையருந்திப் பின்னேபோகின்றேனென்று அகத்திய முனிவர் சொல்ல, ஆசாரமாக உணவைச் சமைக்கின்றேன் சிறிது போதிருமென்று அங்குள்ள தடாகத்தில் நீராடிப் பரிசுத்தனுய்ச் சமையற்சாலை புகுந்து அதை நீரும் சாணமுங்கொண்டு சுத்தஞ்செய்து கோலமிட்டு முத்தினைப்போன்ற தூயவரிசியை மும்முறை நீர்வார்த்துக் கழுவி அழகிய பாத்திரத்தில் வைத்து நெருப்பின்மாட்டி யுலைப்பெய்து பதமாகச்சமைத்து பயறு வகைகளையுஞ் சித்தஞ்செய்து பால் முதலியவற்றையும் அமைத்து நன்மணங்கமழும் பரிசுத்தமாகிய கறிவகைகளையுஞ்செய்து ஆட்டுருவங்கொண்டு முனிவர்களையே கொல்லுதல் விரதமாகவுடைய வாதாவியை வலிதிற்பற்றிக் கோடாலியா லிரண்டு துண்டாக்கித் தோலை நீக்கி அதன் பல உறுப்பமைபச்சமைத்து வேண்டும் கனிவர்க்கங்களுங் கொண்டு வந்து திருத்தி அகத்திய முனிவரை உணவுகொள்ள வேண்டுமென்று தாழ்ந்து வணங்கினன்.

அவன் வேண்டுகோளினைச் செவியேற்றுத் தமிழாசிரியராகிய குறுமுனிவர் எழுந்தருள, அவரைச் சமையற்சாலைக்குக் கொண்டுசென்று உபசாரஞ்செய்து தூபதீப நைவேத்தியம் கொடுத்து தான்சமைத்த அறுசுவையோடுகூடிய உணவைப்படைக்க, அதையன்பாக உண்டு பசிதீர்ந்து முக்காலும் வாய்நீர்பூசிக் கைகால்கழுவி அங்கே யெழுந்தருளியிருந்தார். வில்வலனே பிரமனளித்த வரத்தையெண்ணி அங்கேவீற்றிருக்கும் அகத்தியமுனிவரது ஆவியைக்கொள்வதே பொருளாக நினைத்து வாதாவியைக் கூவியழைக்க, அவன் அகத்தியமுனிவர் வயிற்றில் ஆட்டுருவமாக நின்றுகொண்டு சிறிதும் எண்ணுமலே முன்பு கடலையுண்டாற்போல என்மாமிசத்தையுமுண்ட கொடியவனுகிய இம்முனிவனதுயிர்கொண்டு இவனது குறுகிய வயிற்றையும் கிழித்துக்கொண்டுவருகிறேன், அண்ணுவேயென்று வில்வலனைப்பார்த்து வாதாவிசொல்ல, அதை அகத்தியமுனிவர்கண்டு இது கொடியர்களாகிய அவுணர்கள்செய்த மாயமென்று தெரிந்து வாதாவி முடிய வேண்டுமென்று சிந்தித்து, தமதுகையால் வயிற்றை யொருமுறைதடவவே, அவ் வாதாவி யிறந்துபோனுன். அவன் இறந்து பட்டானென்பதறிந்து வில்வலன் முன்னையுருவாகிய அவுணருருவங்கொண்டு தண்டேந்திக் கொலைசெயத்துணிய, அகத்தியமுனிவர்கண்டு கையிற் றருப்பையொன்றெடுத்து அதையே சிவாஸ்திரமாகப் பாவித்துவிட அவனுமிறந்தான். அகத்தியமுனிவரோ அக்கொடியவர்கள் வாசஞ்செய்திருந்த இடத்தைவிட்டகன்றுபோனுர்.

வில்வலன்வாதாவிவதைப்படலம் முற்றிற்று.

## காவிரிநீங்குபடலம்.

செங்கை தூங்கிய தீர்த்த நீரோடுங்
கொங்கின் பாற்செலக் குறிய மாமுனி
மங்கு கின்றவம் மைந்தர் நேருறு
வங்கண் மேவினா ரருந்த வத்தர்போல். (க)

நேரு மைந்தர்க ளிருவர் நீணிறக்
காரின் மேனியர் கறங்கு கண்ணினர்
தீர ராற்றவுஞ் சினத்த ரொல்லென
வார வாரஞ்செய் தணுகி னாரரோ. (உ)

அண்மை யாகுவ ரகல்வர் மாமுனி
கண்மு னெய்துவர் கரந்து காண்கிலார்
விண்மு கிற்குளே மேவி யார்ப்பரான்
மண்மி சைப்பினும் வருவர் சூழ்வரே. (ங)

கோதி லாற்றல்சேர் கும்ப மாமுனி
யீது நோக்கியே யிவரை முன்னமே
காதி னானமைத் கருதி வந்தனர்
மாத வத்தினேன் மைந்த ராதலால். (ச)

பேர்கி லாதவிப் பிரம கத்திநோய்
தீரு மாற்றினாற் சிவன தாள்களை
யார்வ மோடிவ ணருச்சிப் பாமெனா
நேரின் மாமுனி நினைந்து நின்றரோ. (ரு)

ஆசில் கொங்கினுக் கணித்தி னோரிடை
வாச மீதென மகிழ்ந்து வீற்றிரீஇ
யீச னார்தமை யிலிங்க மேனியி
னேச நெஞ்சினா னினைந்து தாபித்தான். (சு)

தூய குண்டிகைத் தோய மன்றியே
சேய மாமலர் தீபந் தீம்புகை
யாய போனக மாதி யானவை
யேயு மாற்றினா லினிது தேடினான். (எ)

விழுமி தாகிய விரதர் வீயவே
வழியி யிருந்திடும் வஞ்ச ராவிகொள்
பழிய கன்றிடப் பரமன் றூண்மிசை
யழிவி லன்பொடே யருசித் தானரோ. (அ)

மங்கை பாகனை மற்றும் பற்பகல்
சிங்க லின்றியே சிறந்த பூசைசெய்
தங்கண் மேவினா னவங்க ளாகிய
துங்க வெம்பவந் தொலைந்து போயதே. (கூ)

அனைய காலையி லரிய தீந்தமிழ்
முனிவ ரன்செயன் முற்று நாடியே
துனியி னாரதன் றொல்லை வானவர்க்
கினிய கோமக னிருக்கை யெய்தினான். (கo)

தானு மின்பதந் தன்னை யுன்னியே
வேனு வாகியே மெய்த்த வஞ்செயுஞ்
சேணின் மன்னவன் செல்லு நாரதற்
காணு மெல்லையிற் கழல்வ ணங்கினான். (கக)

எழுதி மன்னவன் றெடுத்து மார்புறத்
தழுவி நன்றிவட் சார்தி யோவெனா
வுழுவ லன்பினா லுரைப்ப வாசவன்
றொழுத கையினா னினைய சொல்லுவான். (கஉ)

இன்று காறுநின் னருளின் யானிவ
ணன்று மேவினா னதன் பூசனைக்
கொன்ற துண்டுநீங் குரைப்பன் கேட்டியாற்
குன்ற மன்னதோர் குணத்தின் மேலையோய். (கங)

கோதின் மாமலர் குழுவு தண்டலைக்
கேது நீரிலை யிறந்து வாடுமாற்
போது மில்லையாற் பூசை செய்வதற்
கீதோர் குறை யென்றியம்பினான். (கச)

வேறு.

இன்னவை பலவுங் கூறி யிந்திரன் றவிசொன் றிட்டு
முன்னுற விருத்தித் தானு முனிவரன் பணியால வைக
வன்னதோ ரறிஞ னின்னா ரசியல் பிறவு மீசன்
றன்னரு ளதனன் மேனாள் வருவது தளரேன் மன்றே. (கரு)

ஆறணி சடையி னானுக் கருச்சனை புரிதற் கிங்கோ
ரூறுள தென்றே யைய வுரைத்தனை யதுவும் வல்லே
மாறிடுங் கால மீண்டு வந்ததப் பரிசை யெல்லாங்
கூறுவன் கேட்டி யென்னாக் கோமகற் குரைக்க லுற்றான். (கசு)

தன்னிக ரிலாத முக்கட் சங்கரன் பொதிய வெற்பின்
முன்னுறை கென்று கும்ப முனிவனை விடுத்த வாறு
மன்னவன் விந்தந் தன்னை யகன்பிலத் திட்ட வாறுந்
துன்னெறி புரிந்த வெஞ்சூர் மருகரைத் தொலைத்த வாறும். (கஎ)

அப்பழி தீரு மாற்றா லைதெனக் கொங்கி னண்ணி
முப்புர மெரித்த தொல்லை முதல்வனை யருச்சித் தேத்தி
மெய்ப்பரி வாகி யங்கண் மேவிய திறனு முற்றச்
செப்பினன் பின்னு மாங்கோர் செய்கையை யுணர்த்த லுற்றான். (கஅ)

அருந்தவ முனிவன் கொங்கி னமலனை யருச்சித் தங்க
ணிருந்திடு கின்றா னடி யேகின னவன்பா லாகப்
பொருந்துகுண் டிகையின் மன்னும் பொன்னியா றதனை யிங்கே
வரும்பரி சியற்றி னுன்றன் மனக்குறை தீரு மென்றான். (ககூ)

குரவனீ துரைத்த லோடுங் குறுமுனி கொணர்ந்து வைத்த
வராநதி தனையிக் காவில் வரவியற றிடுமா றென்கொல
பெருமநீ யுரைத்தி யென்னப் பேரமு தருத்தி யேத்திக்
கரிமுகத் தேவை வேண்டிற் கவிழ்த்திடு மதனை யென்றான். (உ0)

குணம்பெருங் குன்ற மன்ன கோதிலா வறிவ னின்ன
புணர்ப்பினை யிசைத்த லோடும் புரந்தர னொரும னீங்கிக
கணிப்பிலா மகிழ்ச்சி யெய்திக் காசிபன் சிறுவர் கொண்ட
வணிபெருந் திருவு நாடு மடைந்தனன் போன்று சொல்வான். (உக)

எந்தைநீ யினைய வெல்லா மியம்பினை யதனால் யானு
முய்ந்தனன் கவலை யாவு மொருவினன் முனிவன் பாங்கர்
வந்திடு மாறு மீண்டு வரவுன தருளா லின்னே
தந்திமா முகற்குப் பூசை புரிகுவன் றக்கோ யென்றான். (உஉ)

அருண்முனி யிதனைக் கேளா வன்னதே கருமம் வல்லே
புரிகரி முகவற் கைய பூசனை யென்று கூறிப
பரவிய விமையோர் கோனைப் பாரமிசை நிறுவிப் போந்து
சுரரெலாம் பரவு கின்ற தொல்லையம் பதத்தி னுற்றான். (உங)

சேறலம் புணர்ப்பு வல்லோன றிகளு மரவுங் கங்கை
யாறொடு முடித்த வண்ண லருள்புரி முதல்வன் றன்னை
மாறகன் மேனிகொண்டு வரன்முறை தாபித் தன்னான்
சீறடி யமரர் கோமா னருச்சனை செய்து பின்னர். (உச)

இக்கொடு தென்னங் காயு மேனலி னிடியுந் தேனு
முக்கனி பலவும் பாகு மோதக முதல முற்றுந்
தொக்குறு மதுர மூலந் தொடக்கமுஞ் சுவைத்தீம் பாலு
மிக்கபண் ணியமு மாக விருப்புற நிவேதித் தானால். (உரு)

இவ்வகை நிவேதித் தேபின் னெம்பிரான் றன்னை யேத்த
மைவரை யனைய மேனி மதகரி முகத்துத் தோன்றல்
கவ்வையோ டனந்த கோடி கணநிரை துவன்றிச் சூழ
வவ்விடை விரைவாற் றோன்ற வஞ்சின னமரர் கோமான். (உசு)

அஞ்சலை மகவா னென்ன வைங்கரக் கடவுள் கூற
நெஞ்சகந் துணுக்க நீங்கி நிறைந்தபே ருவகை யெய்தி
யுஞ்சன னென்று வள்ள லபயமா மலர்த்தாண் மீது
செஞ்செவே சென்னி தீண்டச் சென்றுமுன் வணக்கஞ் செய்தான். (உஎ)

பூண்டிக மலங்கன் மார்பிற் பொன்னகர்க் கிறைவன் முக்க
ணாண்டகை சிறுவன் றாண்மே லன்பொடு பணிந்து போற்ற
நீண்டதோ ரருளா னோக்கி நின்பெரும் பூசை கொண்டாம்
வேண்டிய பரிசென் னென்றான் வேழமா முகனை வென்றான். (உஅ)

இந்திர னதுகேட் டைய வெம்பிராற் காக வீண்டோர்
நந்தன வனத்தை வைத்தே னன்னது நார மின்றிச்
செந்தழ லுற்றா லென்னத் தினகரன் சுடரான் மாய்ந்து
வெந்துக ளான தண்ணன் மேலடி புரமே யென்ன. (உசு)

என்னலு மேந்தல் கேளா வேழ்பெருங் கலத்தி னீரு
முன்னுறத் தருகோ வான முழுப்பெருங் கங்கை தானும்
பன்னதி பிறவு மிங்ஙன் விளித்திடோ பரவை யாவுந்
துன்னுறு விக்கோ வொன்று சொல்லுதி வேண்டிற் றென்றான். (௩௰)

ஐங்கரக் கடவு ளிவ்வா றறைதலு மனைத்து நல்கும்
பங்கயத் தயனு மாலும் பரவுறு பழையோ யிங்ஙன
னங்கவற் றொன்றும் வேண்டே னதுநினக் கரிதோ யானொன்
றிங்குனைக் கேட்ப னென்னா வினையன விசைக்க லுற்றான். (௩௧)

சகத்துயர் வடபொன் மேருச் சாரலி னின்றும் போந்து
மிகத்துய ரெவர்க்குஞ் செய்யும் வெய்யவள் சிறுவாச் செற்று
மகத்துயர் விதியின் சேய்க்கு வருவித்த விமலன் பொற்றா
ளகத்தியன் கொங்கின் பால்வந் தருச்சனை புரிந்து மேவும். (௩௨)

அன்னவன் றனது மாட்டோ ரணிகமண் டலத்தி னூடே
பொன்னியென் றுரைக்குந் தீர்த்தம் பொருந்தியே யிருந்த தெந்தாய்
நன்னதி யதனை நீபோய் ஞாலமேற் கவிழ்த்து விட்டா
லின்னதோர் வனத்தி னண்ணு மென்குறை தீரு மென்றான். (௩௩)

பாகசா தனனிம் மாற்றம் பகர்தலும் பிறைசேர் சென்னி
பாகயா னனத்து வள்ளன் மற்றது செய்து மென்னா
வோகையா லவனை யங்க ணிறுவிப்போ யொல்லை தன்னிற்
காகமாய் முனிபா லான கமண்டல மிசைக்க ணுற்றான். (௩௪)

கொங்குறு முனிவன் பாங்கர்க் குண்டிகை மீதிற் பொன்னி
சங்கர னருளின் வந்த தன்மையும் புணர்ப்பு முன்னி
யைங்கரன் கொடியாய் நண்ண வகத்திய னவனென் றோரா
னிங்கொரு பறவை கொல்லா மெய்திய தென்று கண்டான். (௩௫)

கண்டனன் பிள்ளை செல்லக் கரதல மெடாநின் றோச்ச
வண்டருக் கலக்கண் செய்த கயமுகத் தவுணற் செற்றோன்
குண்டிகை யதனைத் தள்ளிக் குளிர்புனற் கன்னி யன்னான்
பண்டையி லிசைவு செய்தான் பாரினீ படர்தி யென்றான். (௩௬)

என்னலுங் காஞ்சி தன்னி லெம்பிரா னுலக மீன்ற
வன்னைத னன்பு காட்ட வழைத்திட வந்த கம்பை
நன்னதி போல விண்ணு ஞாலமு நடுங்க வார்த்துப்
பொன்னியா றுலகந் தன்னிற் பொள்ளெனப் பெயர்ந்த தன்றே. (௩௭)

பெயர்தலு முமைதன் பிள்ளை பிள்ளையி னுருவ நீத்துப்
பயிறரு மறைநூல் வல்ல பார்ப்பன மகன்போற் செல்லச்
சயமிகு தவத்தின் மேலோன் றன்மையங் கதனை நோக்கி
யுயிர்முழு தடவே தோன்று மொருவன்போ லுருத்து நின்றான். (௩௮)

தேவனோ வவுணன் றானோ வரக்கனோ திறலின் மேலோன்
யாவனோ வறித றேற்றே னீண்டுறு நதியைச் சிந்திப்
போவனோ சிறிது மெண்ணா வகந்தையன் போலு மம்மா
யாவனோ வன்மை தன்னை யறிகுவன் விரைவி னென்றான். (௩௯)

விரைந்தவன் பின்ன ரேக மெய்வழி பாடு செய்வோ
ரரந்தையை நீக்கு மெங்கோ னச்சுறு நீரன் போல
விரிந்தனன் போத லோடு மிருகையுங் கவித்த மாக்கித்
துரந்தனன் முனிவன் சென்னி துளக்குறத் தாக்க வுன்னி. (௪௦)

குட்டுவான் றுணிந்து செல்லுங் குறுமுனிக் கணிய னாகிக்
கிட்டுவான் விசும்பி னூடு கிளர்நவான் றிசைக டோறு
முட்டுவான் பின்பு பாரின் முடுகுவா னனையன் கைக்கு
மெட்டுவான் சேய னாகி யேகுவா னெவர்க்கு மேலோன். (௪௧)

இப்படி முனிவன் சீற்றத் தலமர யாண்டு மேகித்
தப்பினன் றிரித லோடுஞ் சாலவுந் தளர்ச்சி யெய்திச்
செப்பரி திவன்றன் மாயஞ் செய்வதெ னினியா னென்னா
வொப்பருந் தவத்தோ னுன்ன வெந்தையஃ துணர்ந்தா னன்றே. (௪௨)

ஓட்டமோ டலவு முன்னோ னெல்லையிற் றனது மேனி
காட்டினன் முனிவன் காணாக் கதுமெனக் கலங்கி யந்தோ
கோட்டிப முகனோ வீண்டுக் குறுகின னவனை யானோ
வீட்டொடு துரந்தன் கொல்லெலன் றேங்கின னிரங்கு கின்றான். (௪௩)

இரங்கிய முனிவன் முன்ன மேந்தலைப் புடைப்பான் கொண்ட
கரங்களை யெடுத்து வானிற் காருரு மேறு வெற்பி
னுரங்கிழி தரவே நீங்கா துரப்பினில் வீழ்வ தேபோல்
வரங்கெழு தனது நெற்றி வருந்துறத் தாக்க லுற்றான். (௪௪)

தாக்குதல் புரிந்த காலைத் தாரகப் பிரம மான
மாக்கய முகத்து வள்ளல் வரம்பிலா வருளி னோடு
நோக்கியுன் செய்கை யென்னை நுவலுதி குறியோ யென்னத்
தேக்குறு தமிழ்தேர் வள்ள லினையது செப்பு கின்றான். (௪௫)

அந்தண குமர னென்றே யையநின் சிரமேற் றாக்கச்
சிந்தனை புரிந்தேன் யாதுந் தெளிவிலே னதற்குத் தீர்வு
முந்தின னியற்று கின்றே னென்றலு முறுவல் செய்து
தந்தியின் முகத்து வள்ள லலமர றவிர்தி யென்றான். (௪௬)

என்றலுந் தவிர்ந்து முன்னோ னிணையடி மிசையே பல்காற்
சென்றுசென் றிறைஞ்சி யன்னோன் சீர்த்திய தெவையும் போற்றி
யுன்றிற முணரேன் செய்த தவற்றினை யுளத்திற் கொள்ளே
னன்றருள் புரிதி யென்ன நாயக னருளிச் செய்வான். (௪௭)

புரந்தர னெந்தை பூசை புரிதரு பொருட்டா லீண்டோர்
வரந்தரு காமர் தண்கா வைத்தன னதுநீ ரின்றி
விரைந்தது பொலிவு மாழ்கி வெறுந்துக ளாத லோடு
மிரந்தனன் புனல்வேட் டெம்மை யியல்புடன் வழிபட் டிந்நாள். (௪௮)

ஆதலிற் கொடிபோல் யாமுன் னரும்புனற் குடிகை மீது
காதலித் திருந்து மெல்லக் கவிழ்த்தன மதனை யீண்டுப்
போதலுற றிடவுஞ் சொற்றும் பொறுதிநீ செய்த வற்றில்
யாதுமுட் கொள்ளே மவ்வா றினிதென மகிழ்துமன்றே. (௪௯)

ஏண்டுநீ புரிந்த தெல்லா மெமக்கிதோ ராட லென்றே
காண்டுமா லன்றி நின்பாற் காய்சினங் கொண்டே மல்லே
நீண்டசெஞ் சடையெம் மைய னேயனீ யெமக்கு மற்றே
வேண்டிய வரங்க ளீதுங் கேண்மதி விரைவி னென்றான். (ருo)

வேறு.

என்னா விதுசெப் பலுமெம் பெருமான்
முன்னா கியதோர் முனிவன் பணியா
வுன்னா ரருளெய் தவினுய்ந் தனன்யா
னன்னா யகனே யெனவே நவில்வான். (ருக)

நின்பா லினுமந் நெடுமா லுணரான்
றன்பா லினுமே தமியேன் மிகவு
மன்பா வதொர்தன் மையளித் தருணீ
யின்பா லதுவெஃ குவனெப் பொழுதும். (ருஉ)

இன்னே தமியே னெனவே யினிநின்
முன்னே நுதலின் முறையா லிருகை
கொன்னே கொடுதாக் குநர்தங் குறைதீர்த்
தன்னே யெனவந் தருள்செய் யெனவே. (ருங)

முத்தண் டமிழ்தேர் முனியீ தறைய
வத்தன் குமர னவைநல் கினமா
வித்தன் மையவே யலதின் னமுநீ
சித்தந் தனில்வேண் டியசெப் பெனவே. (ருச)

கொள்ளப் படுகுண் டிகையிற் குடிநை
வெள்ளப் பெருநீர் மிசையுற் றடிக
டள்ளக் கவிழ்வுற் றதுதா ரணிமே
லெள்ளிற் சிறிது மிலதென் றிடவே. (ருரு)

ஊனா யுயிரா யுலகா யுறைவோன்
மேனா ளருள்செய் வியன்மா நதிதான்
போனா லதுபோற் புனலொன் றுளதோ
நானா டிடவே நலமா னதுவே. (ருசு)

அந்நீர் மையினா லடியேற் கிவணீ
நன்னீர் நவையற் றருணல் கெனவே
கைந்நீர் மையினாற் கடுகின் றுணையா
மூந்நீ ரயிலு முனிவன் மொழிய. (ருஎ)

காகத் தியல்கொண் டுகவிழ்த் திடமுன்
போகுற் றபுதுப் புனலாற் றிடையே
மாகைத் தலநீட் டினன்வா னுலவு
மேகத் திரைமால் கடல்வீழ்ந் தெனவே. (ருஅ)

அள்ளிச் சிறிதே புனலம் முனிவன்
கொள்ளப் படுகுண் டிகையுய்த் திடலு
முள்ளத் தைநிரப் பியொழிந் ததெலாம்
வெள்ளத் தொடுபார் மிசைமே வியதே. (ருகூ)

முன்னுற் றதுபோன் முனிகுண் டிகைநீர்
துன்னுற் றதுமேற் றொலையா வகையா
லென்னிப் புதுமை யெனநோக் கினனுற்
றன்னுற் றமனத் தவமா முனியே. (சுo)

பேருற் றிடுமிப் பெருநீ ரதனில்
வாரிற் சிறிதே வருகுண் டிகையிற்
பாரித் தனனிப் படிமுற் றுறுவா
ஞரிப் படிவல் லவரா யினுமே. (சுக)

அந்தத் திருமா லயனே முதலோர்
வந்தித் திடவே வரமீந் தருளி
முந்துற் றிடுமூ லமொழிப் பொருளா
மெந்தைக் கரிதோ விதுபோல் வதுவே. (சுஉ)

என்றே நினையா விபமா முகவற்
சென்றே பணியாச் சிறியேன் குறையா
யொன்றே துமிலே னுதவுற் றனைநீ
நன்றே கவிழு நதிநீ ரையுமே. (சுஙு)

முந்தே முதல்வா முழுதுன் னருளா
லந்தே யளவு மளியில் சிறியே
னுய்ந்தே னினியும் முனையுன் னுழிநீ
வந்தே யருள்கூர் மறவே லெனவே. (சுச)

அற்று கவென வருள்செய் தயலே
சுற்று வருதொல் படையோ டுமெழாப்
பற்று னவர்நா டுபரம் பொருள்சேய்
மற்று ரும்வியப் பமறைந் தனனே. (சுரு)

வேறு.

யறைகின்ற வெல்லைதனிற் குறுமுனிவிம் மிதமாய்மன் னுயிர்க ளெங்கு
முறைகின்ற தனிமுதல்வன் புதல்வன்றன் கோலத்தை யுணர்ந்து போற்றி
யறைகின்ற காவிரியைக் கண்ணுற்று நகைத்துவெ குண் டருள்கை நாடி
யுறைகின்ற கொங்குதனை யொருவித்தென் றிசைநோக்கி யொலலை சென்றான். ()

ஆக திருவிருத்தம் - க,ஙுஙு.

---

வசனம்.

அகத்தியமுனிவர் தமது கையிலிருக்கும் கமண்டலநீரோடு கொஙகுநாட்டை நாடிச்செல்ல, வாதாவியும் வில்வலனு மிறந்தும் தூருவாசமுனிவர் மக்களாதலால் நீண்ட கரியமேகம்போலு முருவங்கொண்டு மிக்ககோபமுடையராய் ஆரவாரத்தோடணுகுவதும் மீண்டும் விண்ணிலுள்ள மேகத்தில்மறைவதுமாகத் தோன்றினர்; அதுகண்டு இது அக்கொடியவர்கள் முனிவர்மைந்தராதலால் வந்த கொடுமை, நாம் கொன்றமையால் பிரமகத்தி சூழ்ந்தது, இதை நிவர்த்திசெய்து கொள்ளவேண்டுமென்றெண்ணி அத்தேயத்திற் கணித்தான இடத்தில் வாசமாக வெழுந்தருளிச் சிவலிங்கப்பெருமானைத் தாபித்துச் சிவார்ச்சனைசெய்துவர அப்

பிரமகத்திதோட நீங்கிற்று; அது நீங்கியபின்றும் அகத்தியமுனிவர் அங்கேயே வசித்துக்கொண்டிருந்தனர் இதுநிற்க;

இங்கே இந்திரன் சீகாழியில் சூரபதுமனுக்குப் பயந்து மூங்கிலுருக்கொண்டு நின்றான்; அவன் அவ்வழியேசெல்லும் நாரதமுனிவரைக்கண்டு அவர் பாதங்களை வணங்கிநின்றான்; அப்படி வணங்கின இந்திரனைப்பார்த்து எழுந்திருவென்று மார்புறத்தழுவி இங்கே தான் வாசஞ்செய்கின்றனையோ வென்றுகேட்க, இன்றுவரையிலும் உமது பெருங்கருணையால் சுகமேயிருக்கிறேன், ஆயினும் யான்செய்துவரும் சிவார்ச்சனைக்கு முட்டுப்பாடு இப்போதிருக்கின்றது, அது இறைவனுக்குரிய பத்திரபுட்பங்களைக் கொடுக்கும் நந்தவனம் நீரின்றி வறட்சியாயிருப்பதென்பதே; அதனால் சிவார்ச்சனை பிழைத்துப்போகின்றது, இக்குறையால் வருந்துகின்றேனென்றுசொல்லி, அந்த நாரதமுனிவருக் காசனமொன்றளித்துத் தானும் அம்முனிவர்சொல்லியபடி வேறோராசனத்திலிருக்க, அவ்விந்திரனைநோக்கி நாரதமுனிவர் ஆறணிந்த சடைப்பெருமான் திருவருளால் நீயிழந்த பெரும்பதமும் சில நாளிலுண்டாகும் நீ தளரவேண்டாம், ஆயினும் சிவார்ச்சனைக் கிடையூறுண்டாயிற்றென்று சொல்லினை, ஆதலால் அது மாறிப்போகுங்காலம் வந்துவிட்டது; அதை நன்றாய்ச்சொல்கின்றேன் கேளென்று பரமசிவன் கும்பமுனிவரை யழைத்துப் பொதியமலைக்குப்போகவிடுத்ததும், அவர் விந்தமலையையடக்கியதும், வில்வலன் வாதாவியென்னும் அவுணரிருவரையும் கொன்றதும், அவர்களைக்கொன்ற பிரமகத்தித்தோட நீங்கக் கொங்குநாடடைந்து திரிபுராந்தகனாகிய பரமசிவனைத்துதித்துச் சிவார்ச்சனைசெய்து அப்பழிநீங்கிக்கொண்டவிதமும் சொல்லிவிட்டு அம்முனிவர்கையிலிருக்குங் கமண்டலத்தடங்கிய காவிரியாற்றை வரும்படிசெய்தால் உன் மனக்குறை நீங்குமென்றுசொல்ல, அதைக்கேட்ட இந்திரன் எவ்வாறு அக்காவிரியாறு இங்குவரும்? அது வருமுறைமையையெடுத்துச் சொல்லவேண்டுகின்றேனென்று விண்ணப்பிக்க, நீ கணேசப்பெருமானை வழிபாடுசெய்து பூசிப்பையாயின், அவர் அக்கமண்டலத்திலிருக்கும் காவிரியாற்றைக்கவிழ்த்துவிடுவர்; இதுதான் அந்நதி இங்கேவரும் விதமென்றுரைக்க, இந்திரன் சூரபதுமன் கொண்டதிருவும் நாடுந் தான்மீண்டும் பெற்றான்போலக் களிசிறந்து உமது திருவருளால் இப்போதே கணேசப்பெருமானை வழிபாடுசெய்கின்றேனென்று சொல்ல, அவனிடத்திலிருந்து நாரதமுனிவர் விடைபெற்றுச்சென்றனர். இந்திரனும் கணேசப்பெருமானை வரலாற்றுமுறைமையாகத் தாபித்து அருச்சனைசெய்து கரும்பு, தேங்காய், தேன், தினை, மா, வாழை, பலா முதலிய கனிகளை நிவேதித்துவணங்க, கணேசப்பெருமான் பல சிவகணங்கள் புடைசூழ; அவன் கண்ணெதிரே தோன்றினன். அவர் வருவதைக்கண்டு இந்திரன் மனநடுங்கிநிற்க, அஞ்சவேண்டாமென்று கணேசப்பெருமான்சொல்ல, அவர் பாதபங்கயங்களில் இந்திரன்வீழ்ந்து வணங்கிநின்றான், இறைவன் நீசெய்த பூசையை யுள்ளங்கொண்டோம், நீ வேண்டியதென்னவென, இந்திரன்கேட்டு மகிழ்வடைந்து எம்பெருமானே! சிவார்ச்சனைசெய்தற்பொருட்டாக இச்சீகாழியில் ஒரு நந்தவனம் வைத்தேன், அது நீரின்றிச் சூரியனது வெப்பத்தால் வெந்து தீந்துபோகின்றது, யாதுசெய்வேனென, அதைத் திருச்செவியேற்ற கணேசப்பெருமான் உனக்காக எழுதலத்தினீரோ, ஆகாயகங்கையோ, அல்லது மற்றநதிகளோ, அல்லது சத்தசாகரங்களோ எவைவேண்டுமேனுந் தருவிக்கிறோமென, அதற்கிந்திரனும் நான் அவற்றுளொன்றையும் வேண்டேன், யாதுமக்கரியது! யான்கேட்பதொன்றுண்டு; அஃதாவது மேருமலையினின்றும் எழுந்தருளி

யாவருக்கும் துயரத்தையே செய்துகொண்டிருந்த வாதாவி வில்வலனென்னும் கொடியவர்களைக்கொன்று, கொங்குநாடடைந்து சிவார்ச்சனைசெய்துகொண்டிருக்கும் அகத்தியமுனிவர் கையிலுள்ள கரகநீரைக் கவிழ்க்கவேண்டுகின்றேன். அவ்வாறுசெய்யின் என்னால் வைக்கப்பட்ட இந்நந்தவனம் நீர்வளம்பெற்றுச் செழிக்கும். இதுதான் என்வேண்டுகோளென்று விண்ணப்பிக்க, உனதுவேண்டுகோளின்படி செய்கின்றோமென்று அச்சீகாழியைவிட்டு அகத்தியமுனிவர் சிவபூசைசெய்யுமிடமடைந்து காகவுருவாகக் கமண்டலத்தின்மேலுட்கார்ந்தனன். அதன்வரலாற்றைச் சிறிதுமறியாமல் இது சாதாரணமான ஒருகாகமென்று துணிந்து அக்காகத்தையோச்ச அக்கணேசப்பெருமான் கமண்டலத்தைக் கவிழ்த்துக் காவிரியைப் பெருகக் கட்டளையிட, அது கம்பைநதிபோலும் விண்ணுமண்ணுநடுங்க உலகமெங்கும் பரந்துசென்றது. அதுகண்டு விநாயகப்பெருமான் காகவுருவநீங்கிப் பிராமணமைந்தனைப்போலத் திருவுருவங்கொண்டு செல்ல, அவனைநோக்கி இவன் நமது கமண்டலநீரைக் கவிழ்த்துவிட்டதன்றி இறுமாந்து செல்லுகின்றனன்; இவன் தேவனோ? அவுணனோ? அரக்கனோ? வன்மையையுடைய மேலோன் யாவனோ அறியவல்லோமல்லோம், இவன் வல்லமையை யறிவோமென்று விரைந்து அவன் பின்னேசெல்ல, அதைக்கண்ட எம்பெருமான் அஞ்சிப் பயந்தார்போல ஓட்டெடுப்ப, அவ்வகத்திய முனிவர் தன்னைக் குட்டத் துணிந்ததையறிந்து அவருக்கருகே வருவதும் விண்ணின் மறைவதுமாக இவ்வாறு பல திருவிளையாடல்களைச் செய்ய அவரைத் தொடர்தற்கயர்ந்து இனியாது செய்வதென்று சிந்தித்து நின்றதையறிந்து கணேசப்பெருமான் தன்உண்மை யுருவங்காட்டினன். அதை விரைந்து கண்டு கலங்கி அந்தோ! ஏரம்பனாகிய நமது விநாயகப்பிரானோ என்னை யுய்விக்க எழுந்தருளினனென்று அவ்விறைவனைக் குட்டத்துணிந்த கைகளால் தம்மைக் குட்டிக்கொண்டு நின்றார். தாரகப்பிரமமாகிய கணேசப்பிரான் எல்லையில்லாத அருளொடும் பார்த்தருளி நீ கொண்டகருத்தென்ன? சொல்லென்று அகத்திய முனிவரைக்கேட்க, அகத்திய முனிவரும் ஐயனே, உம்மைப் பிராமணச் சிறுவனென்றே குட்டத்துணிந்தேன், என் சிறுபிழைபொறுத்து அதற்குப் பரிகாரமருளிச் செய்யவேண்டுமென்று வேண்டிக்கொள்ள, கணேசப் பெருமானும் நீ கொண்ட கருத்தைத் தவிர்த்துவிடென்ன, அகத்திய முனிவரும் பலமுறை வீழ்ந்து வணங்கி என் சிறுபிழையை யெண்ணாதிரங்கி யருள்செய்ய வேண்டுமென்றார். அதற்குக் கணேசப்பெருமான் நம்மை இந்திரனோ இந்த நாளில் வழிபாடு செய்து எம்பிதாவைக் கருதிச்செய்யும் அர்ச்சனைக்குரிய நந்தவனம் வளப்பமடையவேண்டியிரந்தனன். நாம் உமது கரகநீரைக் கவிழ்த்துவிட்டு அதைப்போகவுங் கட்டளையிட்டோம், நீசெய்த குற்றங்களைச் சிறிதுமுள்ளங்கொள்ளோம், திருவிளையாடலாகவே யுள்ளங்கொண்டோம், நாம் கோபங்கொண்டோமல்லோம்; நீயோ என்பிதாவின்பால் பேரன்புடையையாதலால் எம்மிடத்தும் அவ்வாறே யன்புடையையன்றோ! ஆதலால் நீ வேண்டியவரங்களை யருளுகின்றோமென்றுசொல்ல, அகத்தியமுனிவரும் எனக்குத் தேவரீரிடத்தும் எல்லாமுடையானாகிய இறைவனிடத்தும் எப்பொழுதும் அன்புடையானாகவிருக்கவேண்டுகின்றேன்; யான் வேண்டுவதும் அதுவேயன்றி வேறில்லையென்று சொல்லிவிட்டுப் பின்னும் உம்மைக் குட்டிக்கொண்டதுபோல் உமது சந்நிதானத்தில் குட்டிக்கொள்ளும் பலருக்கும் வேண்டியவரங்களைக் கொடுக்கவேண்டுகின்றேன்; மேலும் என்கையிலிருந்த கரகநீர் போய்விட்டதாதலால் இனிநான் நல்ல நீரைப்பெறக் கருணைசெய்யவேண்டுமென்று வேண்டிக்கொள்ள, தாம் காகவுருவாய்க் கவிழ்த்துவிட்ட நதியி

னிடையே தமது திருக்கரத்தைநீட்டிச் சிறிதுநீரை அக்கரகத்திற்பெய்தான். அதைக்கண்டு அகத்தியமுனிவர் மனமகிழ்ந்து பலவிதமாகத்துதிக்கக் கணேசப்பெருமான் தமது திருவுருக்கரந்தனர். பின்பு தாம் கொங்குநாட்டையகன்று விரைந்து தென்றிசைநாடிநடந்தார்.

காவிரிநீங்குபடலம் முற்றிற்று.

---

# திருக்குற்றாலப்படலம்.

செற்றால முயிரனைத்து முண்டிடவே கிமிர்ந்தெழலுஞ் சிந்தைமேற்கொள்
பற்றாலங் கதுநுகர்ந்து நான்முகனே முதலோர்தம் பாவை மார்கள்
பொற்றாலி தனையளித்தோன் புகழ்போற்றி முகிழ்மேனிப் புத்தேள் வைகுங்
குற்றால மாவதொரு வளநகரைக் குறுமுனிவன் குறுகி னானால். (௧)

அப்பதியி லச்சுதனுக் காலயமொன் றுளதம்மா வவனி மீதி
லொப்பிலதோர் திருமுற்ற மஃதென்ப ரிம்பரெலா மும்பர் தாமுஞ்
செப்புவரா யிடைதன்னி லந்தணர்க ளாபயில்லோர் செறிவ ரன்னோர்
மெய்ப்படுநான் முறைகண்டு மோகத்தாற் றமதுமத மேற்கொண் டுள்ளார்.

அன்னவர்க ளெம்பெருமான் றன்னடியார் தமைக்காணி னமூன்று பொங்கி
முன்னுறுதொல் பகைஞரென மிகவிகழ்ந்து மற்றவர்த முகநோக் காராய்த்
தன்னெறியே மேற்கொண்டு மறைபயில்வோ ரென்பதொரு சொல்லே தாங்கித்
தந்நெறியும் புரியாதங் கிருந்தனரா லஃதுணர்ந்தான் றமிழ்நர் கோமான்.

குறுமுனிவ னங்கவர்தஞ் செயலுணர்ந்து குற்றால மென்னு மூதா
மறுகினிடை யேநடந்து மாயவன்ற னாலயமுன் வருத லோடு
நெறிவருமவ் வாலயத்திற் செறிகின்ற வைணவர்க ணெடிதுநோக்கிச் [வார்.
செறுநர்தமைக் கண்டுபதை பதைப்பார்போல் வெய்துயிர்த்துச் செயிர்த்துச் சொல்

லொல்லாத கண்டிகையு நீறுமணிந் தனையதனா லுலகிற் றேவ
ரெல்லாரு மறியவ்வய மேற்றோனுக் கடியவனீ யீண்டுச் செல்லச்
செல்லாது கைத்தலத்தி லொருகோலுங் கொண்டனையாற் சிறியை போவு
கில்லாயெம் பெருமான்றன் மாநகர மனுநாது நீங்கு கென்றார். (௫)

என்றிடலும் வெகுளாது நகைசெய்து மறைநெறியை யிகந்து நின்றீர்
துன்றியிவ ணுறைகின்ற துணரேனித் திறமெவருஞ் சொன்னா ரில்லை
நன்றுநெறி யென்றுவந்தே னும்பான்மை யுணர்வேனே னினிம் மூதூர்
சென்றிடவு நினையேனென் முனியற்க யானமீண்டு செல்வே னென்றான். ()

பொதியமலை தனிலேகு முனிவனிது புகன்றிடலும் பொருது நீயிப்
பதியதனில் வருவதுவும் பாவமா மீண்டுநீ படர்தி யென்ன
விதுசரத மொழிந்தீர்க டொல்லோர்த நான்முறையு மீதே யென்னா
விதியருளுந் தக்கனூர் வழிமுறையோர் தமைநீங்கி மீண்டு செல்வான். (௭)

சிட்டர்புகழ் கைலைமலை காத்தருளுந் திருநந்தி தேவன் செங்கேழ்
மட்டுறுபங் கயத்துறையு நான்முகத்தோன் றுருவாசன் மறைநூல் யாவுந்
தட்டறவே யுணர்பிருகு கவுதமன்கண் ணுவமுனிவன் றதீசி யின்னோ
ரிட்டபெருஞ் சாபமெலாம் பொய்த்திடுமோ வெனவுன்னி யேக லுற்றான்.

ஏகலுறு குறுமுனிவ னுயிர்க்குயிராய் நின்றானை யிகழ்வார் தங்கண்
மோகமுறு மகந்தையினை முதலோடுங் களைவனென முன்னி முன்னாட்
போகியதன் மாயையினு லிரதத்தி னுவிபடு பொன்னே போலப்
பாகவத மாகுவதோ ருருக்கொண்டான் கருணையினாற் பரவை போல்வான்.

ஆளுடைய நாயகன்பா லன்புடையான் மாயவன்ற னடிய னேபோற்
கோளுடைய மாயத்தான் மேனிகொண்டு மீண்டுமங்கட் குறுக லோடு
நீளிடையில் வரக்கண்ட வயிணவர்க ளெதிர்சென்று நெடிது போற்றித்
தாளிடையில் வீழ்ந்திடலு நாரணனுக் காகவெனச் சாற்றி நின்றான்.(௧0)

அடிமுறையின் வணங்கியெழும் வேதியர்தங் களைநோக்கி யரிபா லன்பு
முடிவிலநும் பாலென்று மொழிந்தனரங் கதுகாண முன்னி னுந்தாம்
படியதனி லுமக்குநிகர் யாருமிலை நுமைக்கண்ட பரிசால் யாமுந்
தொடர்வரிய பேருணர்வு பெற்றனமென் றேபின்னுஞ் சொல்ல லுற்றான்.

முத்திதரு பேரழகர் திருமலையி னிடையுற்றோ முன்ன மின்னே
யத்திகிரி தனிலிருப்பச் செல்கின்றோ நம்பெருமா னமருங் கோயி
லித்தலமே யுளதென்ப ரதுபரவும் விருப்புடையோ மென்ன வன்னோர்
கைத்தலதோர் விரற்சுட்டி யதுதிருமா லிருக்கையெனக் காட்ட லுற்றார்.

காட்டுதலுங் கைதொழுது மாலுறையு மந்திரத்தைக் கடிது நண்ணி
யீட்டமுடன் வலஞ்செய்து கண்ணபிரா னடியிணையை யிறைஞ்சி யேத்திப்
பாட்டியலுறு தொல்லடியார் தமைநோக்கி யிவரைவழி படுதற் குள்ளம
வேட்டனமான் மஞ்சனமே முதலியன கொணர்மின்கள் விரைவி னென்றான்.

நன்றெனவே சிலரேகித் தூயதிரு மஞ்சனமு நறுமென் போது
மன்றலுறு செஞ்சாந்து மணித்துகிலு மேனையவு மரபிற் கொண்டு
சென்றுமுனி வரன்முன்ன முய்த்திடலு மனையவர்தந் திறத்தை நோக்கி
யின்றிவரை யருச்சனைசெய் விதிமுறையைப் பார்த்திடுங்கள் யாரு மென்றே.(௧௪)

ஆறுகுமதி நதிபுனையுஞ் செஞ்சடையெம் பெருமானை யகத்துட் கொண்டு
சிறுகுமுரு வுடையமுனி நாரணனார் திருமுடிமேற் செங்கை யோச்சிக்
குறுகுகுறு கெனவிருததி யொள்ளரக்கிற புனைபாவைக் கோல மீது
மறுகுதழ லுற்றென்னக் குழைவிததோர் சிவலிங்க வடிவஞ் செய்தான்.()

அல்லிமலர்ப் பங்கயனு நாரணனு மெந்நாளு மறியொ ணாத
வெல்லையிலாப் பரம்பொருளைத் தாபித்து மந்திரங்க ளெடுத்துக் கூறித்
தொல்லையுருக் கொண்டுமலர் மஞ்சனமே முதலியன தூய வாக்கி
யொல்லைதனி லருச்சிப்பக் காண்டலுமவ் வந்தணர்க ளுருத்துச் சொல்வார்.

காயத்தான் மிகச்சிறியன் முப்புரத்தை நீறுக்குங் கடவுட் காற்ற
நேயத்தா னிவ்விடையே முன்வந்தான் யாமிகழ நில்லா தேகி
யாயத்தான் பாகவத வடிவாய்வந் திச்சமய மழித்தா னந்தோ
மாயத்தான் பற்றுமினோ கடிதென்று குறுமுனியை வளைந்து கொண்டார்.

பற்றிடுவான் வளைகின்றோர் தமைநோக்கி யெரிவிழித்துப் பரவை தன்பா
லுற்றவிடம் விடுத்ததென முனிவன்றன் வெகுளித்தீ யுய்த்த லோடுஞ்
சுற்றியது சுற்றியவர் தமைப்பின்னும் பொதிப்பித்துத் துரந்து செல்ல
மற்றவர்க ளிரிந்தேதம் பதியிழந்து சிதறினரான் மண்மே லெங்கும்.(௧௮)

அன்னோர்கள் போயிடலு மின்றுமுதற் சிவனிடமீ தாயிற் றென்று
முன்னோனை யருச்சித்துப் பணிந்துவிடை கொண்டுடேன்பான் முன்னிச் சென்று
பொன்னோடு மணிவரன்றி யருவியிழி தருபொதியப் பொருப்பி னண்ணி
மன்னோமெய்த் தவம்புரிந்து வீற்றிருந்தா னப்பரமன் மலர்த்தா ளுன்னி.()

வேறு.

பூவிரி கின்ற காமர் பொதும்பர்சேர் பொதிய வெற்பிற்
றூவிரி கும்பத் தண்ணல் வந்திடு தன்மை சொற்றாம்
மாவிரி கின்ற சாகி வனத்திடை மலர்ப்பூங் காவிற்
காவிரி போந்த வாறு மேனவுங் கழறு கின்றாம். (௨௦)

ஆ திருவிருத்தம் - ௧௬௫௩.

---

வசனம்.

தேவர்கள் சிவாஞ்ஞையில்லாமல் கடல்கடைந்தகாலத்தில் ஆலவிடந் தோன்றியது; அதைக்கண்டு அவர்கள் அனைவரும் மனம்வருந்த அதைத் திருவுளத்தறிந்து அவ்விஷத்தை அமுதமாகக்கொண்ட வருட்பெருங்கடலாகிய பரமசிவனது புகழைத்துதித்துக்கொண்டு கருமுகில்வண்ணனாகிய திருமால் வீற்றிருந்தருளும் திருக்குற்றாலமென்னும் திருநகரைக்கண்டு அகத்தியமுனிவர்குறுக, அத்திருப்பதியில் திருமாலுக்கு வழிபாடுசெய்யும் அந்தணர்கள் சிவனடியார்களைக்கண்டு பொறாது வேதநெறியொழுகாமல் மோகத்தால் தம் மதமேற்கொண்டு தமக்குரிய நன்னெறியிலொழுகாமலிருந்து அகத்தியமுனிவர் அத்திருப்பதியின் வீதிவழியே நடந்து அக்கோயிலின் அருகேவர அதனை அவர்கள் அறிந்து பகைவரைக்கண்டு பரதவிப்பார்போல் கோபித்து முனிவரைநோக்கித் தகுதியற்ற கண்டிகையும் நீறுமணிந்துகொண்டிருக்கின்றனை! ஆதலால் நீ பிச்சையெடுத்துழலும் புராந்தகனுக்கடிமையென்ப தியாவருமறிந்தவிஷயமே! நீவருவது தக்கதன்று; கையிலுமொரு தண்டம்பிடித்துக்கொண்டு குறுகியவடிவங்கொண்டிருக்கின்றனை! நீ சிறியையாகையால் இங்கேவரத்தகாது போவென, அதைத் திருச்செவியேற்ற அகத்தியமுனிவர் கோபங்கொள்ளாது நகைத்து நீவிர் வேதவொழுக்கங்கடந்து நிற்கின்றீர்கள்! நீங்கள் வாசஞ்செய்வதாகவுமறியேன், எனக்கொருவருஞ் சொல்லவுமில்லை, நல்லொழுக்கத்தினடப்பவராகத் துணி[illegible] இங்கேவந்தேன், [illegible] ஒழுக்கமறிந்திருப்பேனாகில் இங்கேவரத்துணியேன், என்னைக் கோபிக்கவேண்டாம், யான் போய்விடுகிறேனென்றுசொல்ல, அதைக்கேட்டுப் பொறாமல் அவர்கள் நீ இத்திருப்பதிக்கேவந்தது பெரும்பாவமென்று சொல்லவேண்டும், போவென்றனர். அகத்தியமுனிவரும் நீங்கள் சொன்னசொல்லும் உண்மையே! வேதநூலின் துணிபுமிதுவே என்று தக்கன்வழிவந்தோராகிய அவர்களைநீங்கித் திருநந்திதேவரும், பிரமனும், துருவாசமுனிவரும், பிருகுமுனிவரும், கவுதமமுனிவரும், கண்ணுவமுனிவரும், ததீசிமுனிவரும் மற்றவருமளித்த கொடுஞ்சாபம் இவர்களைநீங்கிப் பொய்த்துவிடுமோவெனச்சிந்தித்து, உயிர்க்குயிராகிய பரமசிவநிந்தனைசெய்த இவர்களுடைய அகந்தையை வேரோடுங் களையவேண்டுமெனவேதுணிந்து, தமதுமாயையால் அவர்களைப்போலவே ஒரு பாகவதவுருவங்கொண்டு திருமாலிடத்தே யன்புடையார்போல மீண்டு மவ்விடத்திலெழுந்தருளினார். அவரைக்கண்டு அவ்வந்தணர்கள் திருவடிகளில் வீழ்ந்துவணங்க, இவ்வணக்கம் திருமகள் மணவாளனாகிய இருடிகேசனுக்கேயாகுகவென்று சொல்லிவிட்டு, நீங்கள் திருமாலிடத்தே முடிவில்லாத அன்பினையுடையவர்களென்று கேள்விப்பட்டே இவ்வளவுதூரம் வந்

தோம், இப்பூமியின்கண் உமக்கு ஒப்பாவார் பிறரில்லை. உங்களைக்கண்டதனால் யாமும் மெய்யுணர்ச்சிபெற்றோரானோம்; முன்னே முத்திதருபேரழகர்மலையிலிருந்தோம், இப்போது அத்திகிரியிலிருக்கச் செல்லுகின்றோம், நமதுபெருமான் வீற்றிருக்கும் இத்தலத்தையடைந்தோமென, அவர்களும் தங்கள் விரலைச்சுட்டி அத்தானத்தைக்காட்டக் கைதொழுதுவணங்கி அத்திருமால் எழுந்தருளியிருக்கும் ஆலயத்தைக்கிட்டி அன்பாய் வலம்வந்து கண்ணபிரானுடைய திருவடிகளைவணங்கி அவர்களைநோக்கி இப்பெருமானை வழிபடத் திருவுளங்கொண்டோம், திருமஞ்சனமுதலிய பொருள்களை விரைவாகக் கொண்டுவரவேண்டுமென்றுசொல்ல, அவர்களும் பரிவாகச்சென்று திருமஞ்சனமும், நல்லனவாகிய மலர்களும், சந்தனமும், அழகிய ஆடைகளும், பிறவும்கொண்டுவந்து அகத்தியமுனிவர் முன்னேவைக்க, அவர்களைப்பார்த்து இப்பெருமானை யாம் அருச்சிக்கின்ற முறைமையைப்பாருங்களென்று பரமசிவனைத் திருவுள்ளத்தெண்ணிக் குறுமுனிவராகிய அகத்தியமுனிவரும் அத்திருமால்முடிமேல் செங்கையைநீட்டிக் குறுகுறுகுறுகுற்றாலவென அரக்கினால்செய்தபாவைமேல் தழலுற்றாற்போலக் குழைவித்து ஒரு சிவலிங்கப்பெருமானுக்கியருளிப் பரம்பொருளாகிய பரமசிவனைத்தாபித்து மந்திரங்களையெடுத்துச்சொல்லித் தாமும பழையவுருக்கொண்டு திருமஞ்சனமுதலாகிய பொருளுந் தூயனவாக்கி விரைந்து சிவார்ச்சனைசெய்ய, அவமேதவமாகக்கொண்டுழலும அவ்வேதியர்கள்கண்டு இவனோ வடிவத்தான் மிகச்சிறியன், புறாந்தகனாகிய சிவனுக்கு மெய்யடியவனாக இங்கே நம்முன்னேவர, இங்கே நிற்கவேண்டாமென இகழ்ந்தோம், இவனோ நில்லாமற்போய்ப் பாகவதனாகவந்து நமது சமயத்தை யழித்துவிட்டான்; இப்படிப்பட்ட மாயையில்வல்லவனை விரைந்து பிடிக்கவேண்டுமென்று வளைந்துகொண்டார்கள். அவ்வாறு தம்மைவளைந்துகொண்டவரைப் பார்த்துக் கோபித்துக் கடலிடத்தே விஷத்தைவிடுத்தாற்போல அம்முனிவரது கோபத்தீசெல்ல, அவர்களை யிடைவிடாதுபற்றித்துரத்த அவர்கள் அப்பதியையகன்று மண்மேலெங்குஞ் சிதறிப்போயினர். அவர்கள்போகவும் அத்திருப்பதி அன்றுமுதலாகச் சிவத்தலமாக விளங்கிற்று; அகத்தியமுனிவரோ சிவார்ச்சனை செய்துவிட்டு இறைவனைவணங்கி விடைபெற்றுத் தென்றிசையைநாடி நடந்து பொன்னையும் மணிகளையும வாரிக்கொண்டு அருவிகள் இழிகின்ற பொதியமலையையடைந்து சிவபெருமானது திருவடிகளையே சார்பாகவெண்ணி மெய்ம்மையாகிய தவஞ்செய்துகொண்டிருந்தனர். இதுகிடக்க;

திருக்குற்றாலப்படலம் முற்றிற்று.

---

# இந்திரனருச்சனைப்படலம்.

கொடியுருக் கொண்டு முன்னங் குண்டிகை யிருந்த பிள்ளை
படிமிசை யதனைத் தள்ளப் படர்ந்தகா விரியின் றன்மை
விடலருந் தளையி னீக்கி வியனெறிப் படுத்த லோடு
முடிக்கெளி தருளாற் செல்லு மாருயிர் போன்ற தன்றே. (க)

பண்டொரு தந்தி யானோன் படர்சிறைப் புள்ளாய்த் தள்ளக்
குண்டிகை யிருந்த நீத்தங் குவலயம் படர்ந்த பான்மை
யெண்டருந் தடையால் வல்லோ னிருங்கடத் திட்ட பாந்தண்
மண்டலத் தொருவ னீப்ப வழிக்கொளல் போன்ற தன்றே. (உ)

ஏதத்தி னொழுக்கு நீக்கு மிறைவனா லொழுக்குக் தொல்லை
வேதத்தி னொழுக்கு நோற்று வீட்டினை யுடையு நீரார்
போதத்தி னொழுக்கு மெங்கோன் புரிதரு கருணை யென்னு
மோதத்தி னொழுக்கு மென்னக் காவிரி யோடிற் றன்றே. (௩)

தள்ளரும் பரவை யேழுந் தரணியைச் சூழ்ந்து நின்ற
வுள்ளுறு தொடர்பு நாடி யாவையு மொருங்கு நண்ணிப்
பொள்ளெனப் புகுந்த தென்னப் புவியெலாம் பரவி யார்த்துத்
தெள்ளிதிற் கலங்கி நீத்தந் தெளிகிலா தொழுகிற் றாமால். (௪)

தெண்டிரைப் புணரி யெல்லாந் தினைத்துணை யாக வாரி
யுண்டருண் முனிவன் றீர்த்த மொன்றினை வேண்டு மெல்லை
யண்டர்தம் பெருமா னல்க வன்னவன் கரத்தி லேந்துங்
குண்டிகைப் புனற்கு நேராக் கூறுதற் குவமை யுண்டோ. (௫)

தொல்லையிற் குறியோன் வந்தான் றுய்க்குமோ வின்னு மென்று
வல்லையிற் றழைகள் பற்றி வாரிதி கூவிப பாரி
னெல்லையிற் படர்ந்த தென்ன விலைசெறி பொதும்ப ரீட்ட
மொல்லையிற் பறித்து மேல்கொண் டோடிய தொலிகொ ணீத்தம். (௬)

சந்தமு மகிலுஞ் சங்குந் தாளமுங் கவரி தானுஞ்
சிந்துரத் தெயிறும் பொன்னு மணிகளுந் திரைமேற் கொண்டு
வந்திழி நதியின் றன்மை வருண்ணிப் பொருள்க ளெல்லா
மிந்திரன் றன்பா லோச்ச வேகுதல் போன்ற மாதோ. (௭)

வரையெனுந் தடம்பொற் றேரு மதகரித் தொகையு மாந்தர்
நிரைகளுந் தரங்க மாவு நெறிக்கொடு மகவான் றன்பால்
விரைவொடு சேறல் சூரன் விண்ணவர்க் கரசன் மீது
பொரவிடு தானை வெள்ளம் போவன போன்ற தன்றே. (௮)

ஆவதோ ரினைய வாற்றா லலையினா லகல்வான் முட்டிக்
காவதம் பலவா யான்று காசினி யளந்து கீழ்பாற்
போவதோர் பொன்னி நீத்தம் புரந்தர னிருந்து நோற்குந்
தாவறு வனத்திற் போதார் தண்டலை புகுந்த தன்றே. (௯)

ஓடுநீர் நீத்தப் பொன்னி யொல்லையிற் காமர் காவிற்
பீடுற வருத லோடும் பேதுறு மகவான் காணா
வாடினா னகைத்தா னெங்கோ னருச்சனை முடிந்த தென்று
பாடினான் முதல்வன் றாளைப் பரவினான் படர்ச்சி தீர்ந்தான். (௧௦)

சீரினை யகற்றி நீங்காத் திருவினை மாற்றித் தொல்பே
ரூரினைக் கவர்ந்து தன்னோ ருயிருக்கு மிறுதி நாடுஞ்
சூரனை வென்றா லென்னத் தொலைவிலா மதர்ப்பு மிக்கா
னாரவ னுளத்திற் கொண்ட வுவகையை யறைதற் பாலார். (௧௧)

பாடுறு பொன்னி நீத்தம் பாய்தலு மகவா னேபோல்
வாடுறு கின்ற தண்கா வல்லையிற் கிளர்ச்சி யெய்தி
யாடுறு பசிநோ யுற்றோ ரருப்பெற லமிர்தம் வந்து
கூடுற நுகர்ந்தா லென்னக் குளிர்ப்பொடு தளிர்த்த தன்றே. (௧௨)

வானிறை கின்ற கொண்மூ வார்துளி தலைஇய பின்றைக்
கானிறை மரனும் பூடும் வல்லியுங் கவின்ற லென்ன
மேனிறை யடைகண் மல்கி விரிதரு சினையும் போதுந்
தானிறை கின்ற தம்மா சதமகன் வளர்த்த பூங்கா. (௧௩)

வேறு.

வானிலை மளவிட வளர்ந்த புன்னைக
ளானவை முழுவது மரும்பு கின்றன
தூநகை நித்திலத் தொடையன் மெய்யுடை
நீனிற மாயவ னிலைஇய தொக்குமால். (௧௪)

தண்ணுறு பாசடை தயங்கு புன்னைகள்
கண்ணுறு வியன்சினை கவினப் பூத்தன
வெண்ணுறு தாரகை யீண்டி மொய்த்திட
விண்ணுறு முகிலினம் விளங்கிற் றென்னவே. (௧௫)

பண்படு மளியினம் பயிலு றுதன
சண்பக வணிமரந் தயங்கிப் பூத்தன
வெண்படு தபனியத தியன்ற போதினை
விண்படு தருக்கொடு மேவல போன்றவே. (௧௬)

புயற்பட லந்தொடும் புதுமென் பாடலம்
வியற்பட மலர்ந்தபூ விழுமென் வண்டின
மயற்பட வூதுவான் வயந்தக் கம்மியன்
செயற்படு மணிச்சிறு சின்னம் போலுமால். (௧௭)

விண்டொடர் மதிகதிர் மிளிருந் தாரகை
கண்டிட வைகலுங் கணிப்பில் கண்ணடி
மண்டல நிரைத்துமண் மாது வைத்தெனக்
கொண்டலை யளவிய கோங்கு பூத்தவே. (௧௮)

மாமலர்க் கொன்றையு மணிமென் பூவையுந்
தாமிரு புடையுறத் தளிர்த்த செய்யமா
வேமுறு மாலய னிடையில் வந்தெழு
தோமறு பரஞ்சுடர்த தோற்றம் போன்றவே. (௧௯)

ஆதவன் மீதுபோ யசையுந் தாழைகண்
மேதகு பாளைகண் மிசைதந் துற்றன
பூதல மணங்கினோர் புனைய நீட்டிய
கோதறு நித்திலக் கோவை போன்றவே. (௨௦)

வச்சிர மேனிய வரைகொள் காட்சிய
பச்சிளம் பூகம்வெண் பாளை கான்றன
நச்சுறு சோலையா நங்கைக் கெண்ணிலா
ரெச்சமில் சாமரை யிரட்ட வேந்தல்போல். (௨௧)

மேற்றிகழ் செங்கர வீர மானவை
யாற்றவுஞ் சினைதொறு மரும்பு கின்றன
நாற்றடம் புயமுடை நாதற் கிந்திர
னேற்றிய மணிச்சுட ரென்ன லாயதே. (௨௨)

அல்லிடை யன்றியே யலர்ந்த மாலதி
வல்லிக டருவெனு மகிழ்நர் தங்களைப்
புல்லுவ பகலினும் பொருந்த மோவெனு
முல்லைகண் மலர்ந்தன முறுவல் செய்வபோல். (௨௩)

ஆசறு வாவியி லலர்ந்த காவிகள்
பாசடை யிடையிடை பரவு கின்றன
தேசுறு தருவிழற் றிருவிற் றுஞ்சிய
வாசவன் விழிகளின் மல்கு கின்றவே. (௨௪)

தொல்லையின் முறைநெறி யொருவித் தோயமேல்
வல்லையி லங்கிகள் வந்துற் றுலென
வல்லியுஞ் சேயன வரத்த வாம்பலும்
புல்லிய கிடங்கினிற் பொலிந்து பூத்தவே. (௨௫)

பாயிரும் புனற்கயம் பரந்த பாசடை
யாயின விடையிடை யவிழ்ந்த பங்கயச்
சேயலர் வண்டினந் திளைப்பச் சேர்வன
காயெரி புகையொடு கானம் புக்கபோல். (௨௬)

எண்ணுமித் தருக்களுங் கொடியு மேனவுங்
கண்ணுற மலர்வது மரும்புங் காட்சியும்
வண்ணம தெற்றெனின் மாலைச் செக்கரும்
விண்ணுறு முடிக்களும் விரவிற் றெக்குமால். (௨௭)

இந்திரன் மகிழ்வுற வினைய பான்மையா
னந்தன வனமெலா நன்று பூத்தது
மந்தநன் மலர்கொடே யாதிக் கன்பினன்
முந்துறு பூசனை முயல முன்னினன். (௨௮)

விடியல்வை கறைதனின் மேவி வண்டுதேன்
புடையுறு முன்னரே புரையி லாததோர்
கடிமலர் கொய்தனன் கொணர்ந்து கண்ணுத
லடிகளில் விதிமுறை யருச்சித் தானரோ. (௨௯)

அப்பெரு நாண்முத லாதி யண்ணலை
யிப்படி யருச்சனை யியற்றி வைகலு
மொப்பற நோற்றரோ வும்பர் கோமகன்
வைப்புறு சண்பக வனத்தின் வைகினன். (௩௦)

ஆ திருவிருத்தம் - ௩௩ அ௩.

---

வசனம்.

முன்னே காகத்தினுருவங்கொண்டு அகத்தியமுனிவரது கமண்டலத்திலிருந்த காவிரியைப் பூமியிற்கவிழ்த்துவிட அது பரந்ததன்மை பஞ்சபாசத்தடைகணீக்கிக் குருவருள் எய்திவரச்சென்ற உயிர்போன்றிருந்தது. பின்னும் வருணன் சந்தனமும், அகிலும், சங்கும், முத்தும், கவரியும், யானைக்கோடும், பொன்னும்மணியும் இந்திரன்பால் செலுத்த அலைகளால் மேற்கொண்டதுபோலவும், வைரயென்

னும் அழகிய தேரும், யானைத்தொகையும், மனிதர்களும், அலைகளாகிய குதிரைகளும்கொண்டு சூரபதுமன் இந்திரன்மேல் போர்செய்யும்படியனுப்பிய சேனைவெள்ளமும் போலவுமிருந்தது. இவ்வாறு அக்காவிரியாறு இந்திரன் தவஞ்செய்யும் சோலையை யணுகிச்சென்றது. அதை இந்திரன்கண்டு ஆனந்தக்கூத்தாடிச் சிரித்து எமதுபெருமானுக்குரிய அர்ச்சனைமுடிந்ததென்று பாடி இமையவர்முதல் வணங்கிய பரமசிவனைத்துதித்துத் துன்பநீங்கினான்.

இவ்வாறு காவிரிநதிபெருகிவர இந்திரன் மனவாட்டந்தீர்ந்ததுபோல அப்பூஞ்சோலையும் வாட்டந்தீர்ந்தோங்கிச்செழித்தது. பின்வானத்தினின்று துளிகளுந்துளிகள் தரையில்விழுந்ததும் வனத்திலுள்ள தருக்களும் பூண்டுகளுங் கொடிசெடிகளும் அழகாய் விளங்குவதுபோல அது இலைகள் விசேடித்து, பரவியகிளைகளும் மலர்களும் நிறைந்தது. எவ்வாறெனில், புன்னைவிருக்ஷங்கள் அரும்பெடுத்திருக்கின்ற தோற்றம் முத்துமாலையைத்தரித்த திருமேனியையுடைய திருமாலையொக்கும்; அம்மரங்கள், பச்சிலைகளையும் அழகிய கிளைகளையுங்கொண்டிருப்பது நக்ஷத்திரங்கள் நெருங்கிச்செறிய ஆகாயத்திலுள்ள மேகபடலங்கள் விளங்குவதையொக்கும்; சண்பகவிருக்ஷங்கள் வண்டின்ரீங்குதியுடன் மலர்ந்திருப்பது பொன்மலரைக் கற்பகவிருக்ஷத்திற்குக் கொண்டுபோவதையொக்கும்; பாதிரிமலர்களில வண்டினங்கள் தேனுண்ட மயக்கத்தாற் களிகொண்டூதுவது வசந்தமென்கின்ற தச்சன் சிருட்டித்த சிறிய எக்காளங்களையொக்கும்; கோங்குவிருக்ஷங்கள் மலர்ந்திருப்பது பூதேவியானவள் சந்திரன் சூரியன் நக்ஷத்திரங்களைக்காணும்படி அளவற்ற கண்ணடிகளை நிலமெங்கும் பரப்பிவைததிருத்தலையொக்கும்; கொன்றைவிருக்ஷத்திற்கும் காயா விருக்ஷத்திற்கும் நடுவில் மா விருக்ஷம் வளர்ந்திருப்பது பிரமனுக்கும் திருமாலுக்கும் மத்தியில் எழுந்தருளிய சிவபெருமானையொக்கும்; சூரியமண்டலத்தை யளாவிய தென்னைகள் தமது பாளைகளைத் தொங்கவிட்டிருப்பது நிலவுலகமாதர்களலங்கரித்துக்கொள்ளும்படி தொங்கவிட்ட முத்துமாலைகளையொக்கும்; கமுகுகள் பாளைகளையசைப்பது சோலையாகிய பெண்ணிற்கு வெள்ளியகவரிகளை வீசுவதையொக்கும்; செவ்வலரிச்செடிகள் கிளைகடோறு மலர்ந்திருப்பது சதுர்ப்புயங்களையுடைய சிவபெருமானுக்கு இந்திரன் ஏற்றிவைத்த மாணிகத்தீபங்களை நிகர்க்கும்; மலர்ந்தமலர்களையுடைய மல்லிகைக்கொடிகள் மரங்களின்மீது படர்ந்தும், முல்லைகள் மலர்ந்துமிருப்பது பகற்காலத்தினும் தங்கணவாகளைக் கட்டித்தழுவுதல்கூடுமோவென்று நகைத்தலை நிகர்க்கும்; தடங்களில் குவளைமலர்கள்பூத்துப் பரவியிருப்பது கற்பகத்தருவின்நிழலில் நிலைபெற்றுள்ள இந்திரனது கண்களைநிகர்க்கும்; குளங்களில் செவ்வாம்பலும் செவ்வல்லியும் பூத்திருப்பது அப்புவினின்றும் அக்கினியானது அதிவிரைவாய்த் தோன்றியதை நிகர்க்கும்; தடாகங்களில் பச்சிலைகளின் மத்தியில் மலர்ந்த செந்தாமரைமலர்களில் வண்டின்கூட்டங்கள் நெருங்கியிருப்பது கடுந்தீயானது புகையுடனே காட்டிற்பிரவேசித்ததை நிகர்க்கும்; இன்னம் இச்சோலையிலுள்ள விருக்ஷங்களும், செடிகொடிகளும், மற்றையவும் விகசித்தும் அரும்பெடுத்துமிருக்கிற தோற்றம் அந்திக்காலத்தில் தோன்றும் செவ்வானத்தையும் நக்ஷத்திரங்களையும் நிகர்க்கும். இவ்வாறு நந்தவனமுழுவதும் இந்திரனுடைய மனங்களிக்கும்படி புட்பித்தமாத்திரத்தில் அவன் அப்பூக்களைக்கொண்டு சிவார்ச்சனைசெய்துகொண்டு சீகாழியிலுள்ளவனத்தில் தங்கியிருந்தான். இதுநிற்க;

இந்திரனருச்சனைப்படலம் முற்றிற்று.

# தேவர்புலம்புறுபடலம்.

அந்நா ளதனி லவுணர்க் கிறையேவ
றன்னான் மிகவுந் தளர்ந்து சிலதேவ
ரெந்நாளிப் புன்மை யெமைநீங்கு மென்றிரங்கிப்
பொன்னாடு விட்டுப் புவிதன்னிற் போந்தனரே. (௧)

ஈந்தமிழின் வைப்பான தெக்கிண தேயநண்ணி
மாந்தர் புகழ்காழி வனம்போந்த வானவர்தம்
வேந்துதனைக் கண்டு விரைநாண் மலரடிக்கீழ்ப்
போந்து பணிந்து புகழ்ந்து புகல்கின்றார். (௨)

ஒன்றே தரும மொழிந்து புவனமெலாஞ்
சென்றே யடுகின்ற தீயவுணர் தந்தொடக்கி
லன்றே யெமைவிட் டகன்றா யுனக்கிதுவு
நன்றே யெமையாளு நாயகனு நீயன்றோ. (௩)

கோட்டுக் களிற்றோநின் கோளரியோ நம்புவியை
வாட்டுற் றிடுஞ்சூர வல்லியத்தின் வன்சிறையி
லீட்டுற்ற தேவ ரெனும்பசுக்க டம்மையெலாங்
காட்டிக் கொடுத்துக் கரந்ததென்கொல் காவலனே. (௪)

ஏனம் பசுமா னிரலை மரைபடுத்த
வூனும் வடியு மொலிகடலி னுள்ளபல
மீனுஞ் சுமந்து விறலசுரர்க் கேவல்செய்து
மானங் குலைந்து மறந்தோ மறைகளுமே. (௫)

மையார் களத்தார் வரம்பெறற சூரனுக்குச்
செய்யாத வேவலெல்லாஞ் செய்தோ நெறிநீதி
யெய்யாத மான மினைவெல்லாந் தானிழந்தோ
மையா மிகவு மலுத்தோ மலுத்தோமே. (௬)

முன்னாளுந் தந்தி முகத்தவுண னேவல்செய்து
பன்னா ளுழன்றோம் பரம ரதுதீர்த்தார்
பின்னாளுஞ் சூரன் பெயர்த்து மெமைவருத்த
வின்னா டிரிந்தோ மினிததான் முடியாதே. (௭)

எந்நாளு முன்னைப் புகலென் றிருந்தவியாந்
துன்னா வவுணராற் சோர்ந்து துயருழப்ப
வுன்னா ருயிர்காத் தொளித்திங் கிருந்தனையான்
மன்னா வுனக்குத் தகுமோ வசையன்றோ. (௮)

சூரன் முதலாச் சொலப்பட்ட வெவ்வசுரர்
வீரங் குலைந்து விளிவதற்கு மிவ்வுலகி
லாரும் பழிக்கத் திரிகின்றோ மாகுலங்க
டீரும் படிக்குஞ் செயலொன்று செய்வாயே. (௯)

என்னாப் பலவு மியம்பி யிரங்குதலு
மன்னா கியமகவான் மாற்ற மவைகேளா
வன்னார் மனங்கொண்ட வாகுலத்தைக் கண்டுநெடி
துன்னா வயரா வுயிரா வுரைக்கின்றான். (௧௦)

மாயை யுதவ வருகின்ற வெஞ்சூரன்
தீய பெருவேள்வி செய்யத் தொடங்குமன்றே
போய நமதுரிமை பொன்னாடுந் தோற்றனமென்
றோயு முணர்வா லுமக்கங் குரைத்திலனோ. (௧௧)

அற்றே மகஞ்செய் தமலன் றருவரங்கள்
பெற்றே நமது பெரும்பதமுங் கைக்கொண்டு
சற்றேனு மன்பில்லாத் தானவர்கோன் றாழ்வான
குற்றே வலைநம்பாற் கொண்டான் குவலயத்தே. (௧௨)

நீள்வா ரிதியி னெடுமீன் பலசுமந்து
தாழ்வாம் பணிபிறவுஞ் செய்துந் தளர்ந்துலகில்
வாழ்வா மெனவே மதித்திருந்தோ மற்றதன்றிச்
சூழ்வா லொருதீமை சூரபன்ம னுன்னினனே. (௧௩)

என்னே யத்தீமை யெனவே வினவுங்காற்
பொன்னே யனைய புலோமசையைப் பற்றுதற்குங்
கொன்னே யெனையுங் கொடுஞ்சிறையில் வைப்பதற்கு
முன்னே நினைந்தான் முறையில்லாத் தீயோனே. (௧௪)

ஆன செயலுன்னி யனிகந் தனைநம்பால்
வானுலகி லுய்ப்ப மதியா லஃதுணர்ந்து
நானு மிவளு நடுநடுங்கி யச்சுற்று
மேனி கரந்து விரைந்துவிண்ணை நீங்கினமால். (௧௫)

மீனும் வடியும் வியன்றசையுந் தான்சுமந்த
வீன மதுவன்றி யிதோர் பழிசுமக்கின்
மான மழிய வருமே யதுவன்றித்
தீன முறுசிறையுந் தீராது வந்திடுமே. (௧௬)

வெய்யவர்தம் வன்சிறையின் வீழின் முடிவில்லா
வைய னடிக ளருச்சித் தியாமெல்லா
முய்ய வவுண ருயிரிழப்ப மாதவத்தைச்
செய்யு நெறியுண்டோ வெனச்சிந்தை செய்தனனே. (௧௭)

சிந்தை யதனி லினைய செயலுன்னி
யந்த மறுதுயரத் தாழு நமைவிட்டு
வந்து புவியின் மறைந்துதவஞ் செய்துமுக்க
ணெந்தை யடிக ளருச்சித் திருந்தனனே. (௧௮)

அல்லல் புரியு மவுணர்பணி யால்வருந்தித்
தொல்லையுள மேன்மையெலாந் தோற்றனமே மற்றினிநா
மெல்லவரும் வெள்ளிமலைக் கேகி யிறைவனுக்குச்
சொல்லி நமது துயரகற்றிக் கொள்வோமே. (௧௯)

வம்பி னெனவுரைப்ப வானோ ரதுகேளா
வெம்பி னதுகண்ட வியன்கண் டகியெனவு
மம்மென் மயிலெனவு மாடி நகைசெய்து
தம்மின் மகிழ்ந்து மதர்ப்பினொடு சாற்றலுற்றார். (௨௦)

கோவுநீ யெங்கள் குரவனுநீ தேசிகனீ
தேவுநீ மேலாந் திருவுநீ செய்தவநீ
யாவிநீ மற்றை யறிவுநீ யின்பதுன்பம்
யாவுநீ யாகி லெமக்கோர் குறையுண்டோ. (௨௧)

பார்த்துப் பணித்த பணிசெய்து நின்றன்னை
யேத்தித் திரித லெமக்குக் கடனாகு
நீதநுத் துயர நெறியுறுத்தி யெம்மையென்றுங்
காதநுப் புரத்த லுனக்குக் கடனையா. (௨௨)

தேரா வவுணர் திறந்தன்னை முனமடிந்தாய்
சூரா தியருயிருங் கொள்ளுநெறி சூழ்கின்றாய்
பாரா ளபவர்க்கும் பலமுனிவர்க் குஞ்சுரர்க்கு
மாராயி னீயன்றி யாரே துணையாவார். (௨௩)

ஆதலா லெங்க ளலக்க ணகற்றிவான்
காதலா யத்தன் கைலைக் கெமைக்கொண்டு
போதநீ யென்னப் புரந்தரனு நன்றென்று
கோதிலா வுள்ளத் தொருசூழ்ச்சி கொண்டனனே. (௨௪)

ஆவ தொருகாலை யமரர்கோன் றானெழுந்து
தேவர் தமைநோக்கிச் சிறிதிங் கிருத்திரென
வேவரையு மங்க ணிருத்தியொரு தானேகிப்
பாவை யயிராணி பாங்க ரணுகினனே. (௨௫)

ஆ திருவிருத்தம் - ௧௪௦௮.

---

வசனம்.

அக்காலத்தில் சூரபதுமன் இடுகின்ற குற்றேவலுக்கஞ்சி எந்தக்காலத்தில் இத்துன்பநீங்குமென்றுவருந்தி, தேவர்கள் பொன்னாடகன்று பூமியில்வந்து தமிழ்க்கிடமாகிய சோணாட்டில் இந்திரனிருந்த சீகாழியையணுகி அவ்விந்திரனைக் கண்டு அவனுடைய பாதங்களைப்பணிந்து தங்கள் குறைகளையெடுத்துச்சொல்ல, அதைக்கேட்ட இந்திரன் அவர்கள் படுந்துன்பத்திற்கிரங்கிப் பெருமூச்செறிந்து தேவர்களே! மாயைபெற்ற சூரபதுமன் என்று வீரமாமகஞ்செய்தானோ அன்றே நமக்குரிமையாகிய பொன்னாட்டினை யிழந்துவிட்டோமென்று சொல்லியிருந்தேனன்றோ! அவ்வாறே அவன் தான்செய்ததவத்தால் அநாதிமலமுத்தனாகிய பரமசிவனிடத்தில் பெறுதற்கரிய வரங்களைப்பெற்று நமது பெரும்பதமும் கைக்கொண்டு சற்றும் நம்மிடத்திலிரக்கமில்லாமல் நம்மை யெல்லாம் தாழ்வாகிய குற்றேவல்செய்துவரும்படி கட்டளையிட்டிருக்கிறான். இதுவல்லாமல் உவர்க்கடலிலிருக்கிற மீனைப்பிடித்து எடுத்துச் சுமப்பதாகிய தாழ்வான குற்றேவல்களை உலகிற்

செய்து வருத்தப்படுத்தியதல்லாமல் இந்திராணியைக் கைப்பற்றுதற்கும் என்னைச் சிறையிடுவதற்கு மெண்ணியிருந்தான். அதுகாரணமாகத் தன் சேனைகளை யனுப்பித் தேட நானதையறிந்து அவளுடனே அவ்விண்ணுலகை நீங்கி இச்சீகாழிநகரையடைந்து சிவார்ச்சனையால் எல்லாப்பேறுங்கிடைக்குமெனத் துணிந்து சிவார்ச்சனைசெய்துகொண்டு இங்கேயிருக்கின்றேன். இனிநாமெல்லாம் கைலைமலையையடைந்து அவுணர்களிடுங் குற்றேவலால் வருத்தப்பட்டுக்கொண்டிருப்பதைப் பரமசிவனிடத்தே முறையிட்டுக்கொண்டு நமது துன்பத்தை தீர்த்துக்கொள்வோம் வாருங்கோளென்றுசொல்ல, தேவர்கள் அதைக்கேட்டு மின்னலைக்கண்ட தாழையைப்போலவும் மயிலைப்போலவும் மகிழ்ச்சிகொண்டு இந்திரனைநோக்கி அரசனுநீ! குரவனுநீ! ஆசிரியனுநீ! தெய்வமுநீ! மேலாகிய செல்வமுநீ! நாங்கள்செய்த தவமுநீ! எம்முயிருநீ! அறிவுநீ! இன்பத்துன்பக் கூறுபாடுகளுநீ! ஆகையால் எங்களுக்கினிக் குறையென்பதுண்டோ! நீயிட்டகட்டளையைச்செய்து உன்னை வணங்குகின்றதே எங்களுக்குரிய கடைமை; இனி எங்கள் துயரத்தையோட்டிக் காப்பதே உமக்குக்கடனாகும். அவுணரையும் முன்னேகொன்றுகுவித்தாய் இப்போது சூரபதுமன் முதலானோருயிரையுங் கொள்ளைகொள்ள எண்ணியிருக்கின்றாய், பூமியிலிருப்பவர்க்கும முனிவா[illegible]க்கும் ஆராயும்போது நீயன்றித் துணையாவார்பிறரார்? ஆகையால் எங்களுடைய துன்பத்தை நீக்கும்படி நமதிறைவனாகிய பரமசிவனது கைலைமலைக்கழைத்துக்கொண்டுபோவென்று சொல்ல, அதைக்கேட்ட இந்திரன் அவர்களைச் சற்றிருங்கோளென்று கூறி அங்கே நிறுத்திவிட்டுத் தன்னந்தனியே இந்திராணியிருக்குமிடஞ்சென்றான்.

தேவர்புலம்புறுபடலம் முற்றிற்று.

---

# அயிராணிசோகப்படலம்.

அன்னம் பொருவு நடையா ளவன்வரலு
முன்னங் கெதிரா முறையாற் பலமுறையும்
பொன்னங் கழலிணையைப பூண்டு வணங்கியெழீஇ
யென்னிங்கோ ரெண்ணமுட னேகிற் றிறையென்றாள். (க)

அம்மொழியைக் கேளா வரச னுரைசெய்வான்
வெம்மைபுரி சூரன் வியன்பணியா லேவருந்தி
யெம்மை யடைந்தா ரினைய சிலதேவர்
தம்மு னிடர்பலவுஞ் சாற்றி யிரங்கினரே. (உ)

அன்னார் மனங்கொண்ட வாகுலமு நந்துயரும்
பொன்னார் சடைமுடியெம் புண்ணியற்குத் தாம்புகலி
னிந்நா ளவுணர்க் கிறுவாய் தனைப்புரிந்து
தொன்னா ளுரிமை யளிப்ப னெனுந்துணிவால். (௩)

ஆகின்ற துன்பத் தழலாற் பதைபதைத்து
வேகின்ற சிந்தை வியனமரர் தம்முடன்யான்
பாகொன்று தீஞ்சொ லுமைபாகன் பணிவரைக்குப்
போகின்றே னீது புகலுதற்கு வந்தனனே. (௪)

என்னும் பொழுதி லிடருற் றிகல்வாளி
தன்னங்க மூழ்கத் தளர்ந்துவீழ் மஞ்ஞையென
வன்னம் பொருவு நடையா ளயிராணி
மன்னன் றிருமுன் மயங்குற்று வீழ்ந்தனளே. (௬)

வீழ்ந்தா ளரிக்கரிதாம் வெய்ய துயர்க்கடலி
லாழ்ந்தா ளனைதறிவு மற்றாள் பிரியாது
வாழ்ந்தா ளென்செய்வாண் மகவா னதுகண்டு
தாழ்ந்தா குலத்தோ டெடுத்தான் றடக்கையால். (௭)

ஆர்வமொடு கையா லணைத்தே யவளைத்தன்
னூருமிசை யேற்றி யுணர்ச்சிவரும் பான்மையெலாஞ்
சேரவொருங் காற்றச் சிறிதே தெளிவுற்றாள்
காரின் மலிகின்ற மின்போலுங் காட்சியினாள். (௮)

சிந்தை மயக்கஞ் சிறிதகன்று தேற்றம்வர
முந்தை யிடர்வந்து முற்றுந் தனைச்சூழ்ந்த
வந்த மடமா னதுபோழ்திற் றன்னுள்ள
நொந்து நடுங்கி யினைய நுவல்கின்றாள். (௯)

பொன்னாடு விட்டுப் புவியின் வனத்திருந்து
முன்னா ரருள்கொண் டுவப்புற்று மேவினனா
லென்னா ருயிரே யெனைநீ பிரிவாயேற்
பின்னார் துணையான் பிழைக்கு நெறியுண்டோ. (௧௦)

வாகத்து நேமிக்கும் வான்பாடு புள்ளினுக்கு
மேகத் திறமும் வியன்மதியு மாவதுபோ
னாகத் துறைவோர்க்கு நாயகமே நீயலதென்
சோகத்தை நீக்கித் துணையாவார் வேறுண்டோ. (௧௧)

அன்றி யுனைப்பிரிந்து மாவிதனைத் தாங்கவல்லே
னென்றிடினும் யானொருத்தி யாருந் துணையில்லை
யொன்று நெறிநீதி யுணரா துதீயவுணர்
சென்றிடுவர் நாளு மவர்கண்டாற் றீங்கன்றே (௧௨)

நீடு புகழ்சேர் நிருதர்கோன் சூழ்ச்சியினாற்
றேடரிய பொன்னுலகச் செல்வத்தை விட்டிந்தக்
காடுதனில் வந்து கரந்து தவம்புரிந்து
பாடுபடு மீதும் பழிக்கஞ்சி யேயன்றே. (௧௩)

தீய வவுணர் திரிவ ரவர்சிறியர்
மாயை பலபலவும் வல்லார் பவமல்லா
லாய தருமு மறியார் பழிக்கஞ்சார்
நீயு மஃதுணரா யன்றே நெடுந்தகையே. (௧௪)

உன்னன் புடைய வொருமகனு மிங்கில்லை
துன்னுஞ் சுரருமில்லை தொல்களிற்றின் வேந்துமில்லை
பின்னிங் கொருமா தருமில்லை பெண்ணொருத்தி
தன்னந் தனியிருக்க வஞ்சேனோ தக்கோனே. (௧௫)

பல்லா ரொழுகிப் பவஞ்செய் யவுணரெனு
மொல்லா ரெனைக்காணி னோடிவந்து பற்றினர்போ
யல்லா தனபுரிவ ராகு லனையபழி
யெல்லாமுன் பாலன்றி யார்கண்ணே சென்றிடுமே. (கரு)

மன்னே யிதுவோர் துணிவுரைப்பன் மன்னுயிர்கொண்
டின்னே தமியே னிரேனுலகில் யாவரையு
முன்னே படைத்தளிக்கு முக்கணர்தம் வெற்பினுக்குன்
பின்னே வருவேன் பெயர்வா யெனவுரையா. (கசு)

பின்றாழ் குழலி பெருந்துயரத் தோடெழுந்து
நின்றா ளிறையுன்னி நேயத் தொடுநோக்கி
நன்றா லுனது திறனென்று நாகரிறை
சென்றாவ மோடவளைப் புல்லியிது செப்புகின்றான். (கஎ)

வாராய் சசியே வருந்தே லமரருடன்
காரார் களத்தோன் கைலைக்கி யான்போனு
லாராய்ந்து நின்னை யளிப்பவராற் றாலன்றோ
பேரார்வ மோடெனது பின்னே வருவதுவே. (கஅ)

செய்ய சடைமேற் சிறந்தமதிக் கோடுபுனை
துய்யவனும் வேலைத் துயின்றோனுஞ் சேர்ந்தளித்த
வைய மெனக்கோ ரரணாகி யேயிருக்க
நையன் முறையாமோ நங்காய் நவிலுதியால் (கசு)

ஏவென்ற கண்மடவா யீசனரு ளன்னோனை
வாவென் றளியால் வழுத்திமனத் துன்னினிங்கே
மேவுங் கைலையில்யான் மீண்டு வருந்துணையுங்
காவென் றனையவன்பாற் கையடையா நல்குவனால். (உ0)

ஆற்றல் பெரிதுடைய வையனே நின்றன்னைப்
போற்றி யருள்செய்யும் பொருந்துதியா லீண்டென்று
தேற்றுதலு மன்னான் சிறப்பெவன்கொல் செப்புகெனக்
கோற்றொடிகே ளென்னு வமரேசன் கூறுகின்றான். (உக)

ஆ திருவிருத்தம்-கசஉகூ.

---

வசனம்.

இந்திராணி தன்நாயகன் வருகையைக்கண்டு வணங்கி இவ்விடத்தே தேவரீர எழுந்தருள யாது எண்ணமென்றுவேண்ட அதைக்கேட்டு இந்திரன் நம்மைத் தேவர்கள் சிலர் சூரபதுமனுக்கஞ்சியடைந்தனர்; அவர்கள் படுந்துன்பத்தையும் நமது துயரத்தையும் புண்ணியமூர்த்தியாகிய பரமசிவனுக்குத் தெரிவித்து அவுணர்களுக்கு முடிவுதேடி நமதுபதவியை மீட்டும் பெறவேண்டும். ஆகையால் வருத்தத்துடனே நம்மையடைந்த தேவர்களுடன் திருக்கைலாயமலைக்குப்போக வேணடுகிறேன்; அதைத் தெரிவிக்கவந்தேனென்றுசொல்ல, இந்திராணி அது கேட்டுப

பொறுமல் மயங்கிவீழ்ந்து துன்பக்கடலில் ஆழ்ந்து அறிவற்றுக்கிடந்தாள், அவளை அன்பாய்த் தழுவிக்கொண்டு தன்தொடைமேலிருத்தி சைத்யோபசாரத்தால் தெளிவிக்க அவள் சிந்தைமயக்கம் சிறிதகன்று தெளிவுவர முன்னைத் துயரம்வந்து மீண்டுஞ் சூழ்ந்து உள்ளம்நடுங்கிச் சொல்லுகின்றாள். பொன்னாட்டையிழந்து பூமியிலும் காடேகதியாய்ச் சஞ்சரித்துக்கொண்டிருந்தாலும் உன் அருள் வல்லபத்தால் உயிர்வாழ்ந்துகொண்டிருக்கின்றேன். என்னுருயிர்போன்றவனே! என்னை நீ பிரிவாயானால் பின் எனக்குத் துணையாவார் யார்? யான் பிழைக்கும் வழியுண்டோ? சக்ரவாகப் பறவைக்கும் சகோரபக்ஷிக்கும் முறையே மேகமுஞ் சந்திரனும் துணையாமாறுபோல நீயல்லாமல் என்சோகம் எவ்வாறுநீங்கும்? உன்னைப் பிரிந்தும் நான் உயிர்த்தாங்கமுடியாது; தாங்கினும், எனக்கு யாருந்துணையாவாரில்லாமற்போயின் என்னைத் தேடித்திரிகின்ற அவுணர்கள்கண்டால் தீமையுண்டாகாதிருக்குமோ. நாமோ அவுணர்கள்செய்யும் கொடுமைக்கு ஆற்றுமல் பொன்னுலகத்தைவிட்டு இக்காட்டிலடைந்து உருக்கரந்து தவஞ்செய்வதும் பழிக்கஞ்சியேயல்லாமல் வேறுண்டோ? தீயவர்களாகிய அவுணர்களோ எங்குந்திரிந்துகொண்டிருக்கின்றனர். அவரோ அறிவிற்சிறியவர்; மாயைபல கைகண்டவர்; பாவத்தொழிலையல்லாமல் புண்ணியமென்பது சிறிதுமறியமாட்டாதவர்; பழிக்கஞ்சவேமாட்டார்கள். நீயதனையறியாததுண்டோ. இப்போது எனக்குத் துணையாக நம்முடைய மகனாகிய சயந்தனுமில்லை, தேவர்களுமில்லை, ஐராவதமென்னும் யானையுமில்லை, பின்னும் ஒருபெண் துணையுமில்லை. நான் தன்னந்தனியே அஞ்சாதிருப்பேனோ? மேலும் என்னைப் பொல்லாதவர்களாகிய அவுணர்கள்கண்டால் ஓடிவந்து பிடித்துக்கொண்டுபோய்த் தீயகாரியங்களைச் செய்துவிடுவர். அப்பழி உன்னையன்றி யாரைத்தான்சூழும். நான் துணிந்துரைப்பதுகேளும். நான் உயிர்பொறுத்திரேன். யாவரையும் படைத்தழித்தளிக்கும் முக்கட்பெருமானெழுந்தருளியிருக்கும் கைலைமலைக்கு உம்மோடு தொடர்ந்துவருகிறேனென்று சொல்லிநிற்க, அதுகேட்டு நன்றாகவிருக்கின்றது உன் கருத்து என்று இந்திரன் அவளையணைத்துக்கொண்டு இந்திராணியே! நான் நீலகண்டத்து நின்மலனெழுந்தருளிய கைலைமலைக்குப்போனால் உன்னைக் காப்பவரில்லாதிருந்தாலன்றோ பெருமகிழ்வோடு என்பின் வரவேண்டும். பரமசிவனும் திருமாலும் சேர்ந்துதவிய மாசாத்தா நமக்குக் காவலாயிருக்க நீ வருந்துவது முறையாமோ? நமது பெருமானருளிய அம்மாசாத்தாவை நினைத்து உனக்குக்காவலாக வைத்துவிட்டு நான் கைலைக்குப்போய்வருமளவும் கையடையாகக் கொடுத்துப்போகிறேன்; உன்னை அக்கடவுட்பெருமானே காப்பான்; இங்கே இருவென்றுசொல்ல அதற்கிந்திராணி அவனது சிறப்பைச் சொல்லவேண்டுமென்றுசொல்ல இந்திரன் சொல்லலாயினன்.

அயிராணிசோகப்படலம் முற்றிற்று.

---

# மகாசாத்தாப்படலம்.

முன்னம் பரம னருளின்றி முகுந்த னாதி
மன்னுஞ் சுரர்தா னவர்வேலை மதித்த வேலைக்
கன்னங் கரிய விடம்வந்தூழிக் காரி னங்க
டுன்னும் பொழுதிற் குயில்போற் றுணுக்குற் றிரிந்தார். (௧)

அண்ணற் கைலைக் கிரிதன்னி லடைந்து செந்தீ
வண்ணத் தமல னடிபோற்ற வருந்த லென்றே
யுண்ணற் கரிய பெருநஞ்சினை யுண்டு காத்துக்
கண்ணற்கு மேனை யவர்க்கும்மிவை கட்டு ரைப்பான். (௨)

இன்னுங் கடைமி னமுதம்மெழு மென்று கூற
வங்கின் றவர்பாற் கடலின்கண டைந்து முன்போற்
பின்னுங் கடைந்தா ரிபமாமுகப் பிள்ளை தன்னை
முன்னம் வழிபட் டிலர்வந்து முடிவ தோரார். (௩)

என்று யகற்கு வழிபா டியற்றுத நீராற்
கொன்னார் கடலி னடுமத்தங் குலைந்து வீழ்ந்து
பன்னாகர் வைகு மிடஞ்செல்லவப் பான்மை நோக்கி
யன்னானை யர்ச்சித் தனரச்சுத னாதி யானோர். (௪)

ஆராதனை செய்துழி மந்தர மாதி மைந்தன்
பேரா வருளாற் பிலகின்று பெயர்ந்து முன்போல்
வாரா நிலைபெற் றிடலோடு மகிழ்ந்து போற்றிக்
காரார் திருமான் முதலோர் கடலைக் கடைந்தார். (௫)

கடைகின் றுழிச்செம் மதியாமெனக் காமர் செம்பொ
னடைகின்ற கும்பத் தெழுந்திட்ட தமுத மங்கண்
மிடைகின்ற தொல்லைச் சுரர்தானவர் யாரும் வெஃகி
யுடைகின்ற வேலை யெனவார்த் தன ரொல்லை சூழ்ந்தார். (௬)

எம்மா விதுவுங் குளதா லெமக்கே யிதென்றே
தம்மா சையினாற் சுரர்தானவர் தம்மின் மாறாய்த்
தெம்மா னமுடன் பொரவுன்னலுந் தீர்வு நோக்கி
யம்மால் விரைவி னொருமோகினி யாயி னானே. (௭)

மூலம் பிறந்த விடம்போ லழன்மூண் டிடாம
நீலம் பிறந்து பிறரச்சுற நேர்ந்தி டாமன்
ஞாலம் பிறந்தோர் சுரர்தானவர் நச்ச வாங்கோ
ராலம் பிறந்த தெனமோகினி யாகி நின்றான். (௮)

சேணா ருலகிற் புவிதன்னிற் றிசையி லெங்குங்
காணா தவப்பெண் ணுருக்கண்டனர் காதல் கைமிக்
கூணா ரமுதந் தனைவிட்டு முன்னொன்று கண்டோர்
மாணா கியபல் பொருள்கண்டென வந்து சூழ்ந்தார். (௯)

மெய்த்தா மறையே முதலாய விசிக நான்கு
முய்த்தான் மதவே ளதுகாலை யுலப்பில் காமப்
பித்தா யுணர்வு பிழையாகிப் பெரிது மாலா
யத்தா ருகமா முனிவோரினு மார்வ மிக்கார். (௰)

எண்ணா வவுணர் தொகையல்லதை யெந்தை மாய
மூண்ணாடு வானோர் களும்பெண்மைய லுற்று நின்றார்
மண்ணாசை தன்னிற் பொருளாசையின் மாய வாழ்க்கைப்
பெண்ணாசை நீங்க லெளிதோ பெரியோர் தமக்கும். (௧௧)

பூண்டுற்ற கொங்கைப் பொலன்மோகினி யான புத்தே
ளாண்டுற் றவர்தங் களைநோக்கி யமரை நீங்கு
மீண்டுற் றனன்யா னமுதும்முள தேத னீவிர்
வேண்டுற்றீ தும்பா னுறக்கொண்மின் விரைவி னென்றான். (கஉ)

மாலா னவனங் கதுகூற மனத்தி ரிந்து
நோலா மையினு ளிறக்கின்றவர் நோக்கி யெங்கள்
பாலா வதுநீ யெனமுன்வரும் பான்மை நாடி
மேலா மமுதே யெமக்கென்றனர் விண்ணு ளோர்கள். (கங)

வானு டவர்நல் லமுதங்கொடு மாயை நீங்கிப்
போனா ரொருசா ரவரோடு பொருத தீயோர்
தேனார் மொழிமோ கினியாகிய செங்கண் மாலை
யானு விருப்பிற் கொடுபோயின ராங்கொர் சாரில். (கச)

கொண்டே கியதா னவர்தங்கள் குழுவை நோக்கித்
தண்டேன் மலர்ப்பா யலினென்னைத் தழுவ வல்லா
னுண்டே யிதனி லொருவீர னுவனை யின்னங்
கண்டே னிலையென் றனன்பெண்ணுருக் கொண்ட கள்வன். (கரு)

ஈறு மவுணர் பலரும்மிது கேட்டெ னக்கு
மாறு யொருவ ரிலையாரினும் வன்மை பெற்றேன்
வீறு கியவீ ரனும்யானென வீற்று வீற்றுக்
கூறு வெனையே புணரென்று குழீஇயி னாரே. (கசு)

கொம்மைத் துணைமென் முலையண்ணலைக் கூட யாரும்
வெம்மைப் படலா லிகல்கொண்டனர் வேறு வேறு
தம்மிற் பொருது முடிந்தாரகிலே தமமி னுற்ற
செம்மைக் கனலான் முடிவுற்றிடுஞ் செய்கை யேபோல். (கள)

அன்னார் தொகையி லிருவோரரி மாயை யுன்னி
யென்னு மிவரோ டிறக்கின்றன மென்று நீங்கித்
தொன்னா ளுருவந் தனைமாற்றிச் சுரர்கள் போலாய்ப்
பொன்னா டவர்தங் குழுவோடு புகுந்து நின்றார். (கஅ)

மாண்டா ரவுண ரதுநோக்கி வரம்பின் மாயம்
பூண்டா ரும்வெல்க மடமாதெனப் போந்த கள்வன்
மீண்டா னமரர் பலரும்விருப் புற்று மேவ
வீண்டாழி தன்னி லமுதந்தனை யீத லுற்றான். (ககூ)

ஈயும் பொழுதி னிமையோர்க ளினத்தி னூடு
போயங் கிருந்த விருகள்வரும் பொற்பு மிக்க
மாயன் பகிரு மமிர்தந்தனை மந்தி ரத்தா
லாயும் படிகொண் டிலர்வல்லையி னார்த லுற்றார். (உ0)

தண்டா மரைக்குப் பகைநண்பெனச் சாரு நீரார்
கண்டார் புடையுற் றவரிங்கிவர் கள்வ ரேயா
முண்டா ரமுதங் கடிதென்றுளத் துன்னி யங்கண்
விண்டா னவற்குக் குறிப்பால்விழி காட்டி னாரால். (உக)

காட்டுற் றிடலு மரிநோக்கியிக் கள்வ ரேயோ
வீட்டுற்ற வானோ ருடனுண்குவ ரென்று தன்கை
நீட்டுற் றிடுசட் டுவங்கொண்டு நிருதர் சென்னி
வீட்டிச் சுரருக் கமுதூட்டி விருந்து செய்தான். (உஉ)

அண்டத் தவர்முன் னருந்துற்ற வமுத மன்னோர்
கண்டத் திடையே வருமுன்னது கண்டு மாயன்
றுண்டித்த சென்னி யழிவற்ற துணிந்த யாக்கை
முண்டத் துடனே துணிபட்டு முடிந்த வன்றே. (உரு)

மாளாத சென்னி யுடைத்தானவர் மாண்பு நோக்கி
நீளா ரமுதுண் டவர்விண்ணிடை நிற்ப ரென்னாத்
தாளா லுலக மளந்தோனவர் தங்க ளுக்குக்
கோளா நிலையை யிறையோனருள் கொண்டு நல்க. (உச)

புன்னாக நாக மணிவானடி போற்றி நோற்றுச்
செந்நாக மோடு கருநாகத்தின் செய்கை பெற்றுப்
பின்னாக முன்னந் தமைக்காட்டிய பெற்றி யோரை
யந்நாக மீது மறைப்பாரமு துண்ட கள்வர். (உ௫)

வேறு.

கெழிய ராகுவுங் கேதுவு மேயென
மொழிய நின்ற முதற்பெயர் தாங்கியே
விழுமி தாகிய வெய்யவ னாதியா
மெழுவர் தம்மொ டிருவரு மீண்டினார். (உசு)

ஈது நிற்கமுன் னின்னமு தந்தனை
யாத ரத்தொ டயின்றவிண் ணோர்தொழ
வோத வேலை யொருபுடை யாகவே
மாது ருக்கொண்ட மாதவன் வைகவே. (உஎ)

நால்வ கைப்பட நண்ணிய சத்தியுண்
மாலு மாதலின் மற்றது காட்டுவா
னால கண்டத்த னச்சுத னச்சுறுங்
கோல மெய்திக் குறுகின னவ்விடை. (உஅ)

தண்டு ழாய்முடி யான்றனி நாயகற்
கண்டு வெஃகக் கறைமிடற் றெம்பிரா
னுண்டெ மக்கு முனைப்புணர் காதனீ
கொண்ட வேட மினிதென்று கூறினான். (உகூ)

ஆணி னீங்கிய வச்சுத னாற்றவு
நாணி யிவ்வுரு நல்கிய தன்மையாள்
காணி யாயுனைக் காதலித் துற்றனள்
பேணி நிற்பதெ னென்னைப் பெருமனீ. (௩௦)

ஆதி காலத் தயன்செயன் முற்றிட
மாதை மேவிட வந்துனை வேண்டினன்
காத லோவன்று காரண னாகையின்
மீது சேர்தரும் வீரிய னல்லையோ. (௩க)

நெற்றி யங்க ணிமல வுனக்கிகல்
பற்ற தில்லையெப் பான்மையர் கண்ணினு
மற்ற தாகவென் னுகந் தழுவுவா
னுற்ற காதலு முண்மைய தன்றரோ. (௩௨)

என்ன காரண மெண்ணிக்கொ லேகினை
யன்ன பான்மை யறிகில னெம்பிரா
னின்ன தாடலை நீயல்ல தேவரே
பின்னை நாடி யறிவுறும் பெற்றியோர். (௩௩)

அன்பி லாடவ ராடவ ரோடுசேர்ந்
தின்ப மெய்தி யிருந்தன ரில்லையான்
முன்பு கேட்டது மன்று முதல்வநீ
வன்பொ டென்னைப் புணர்வது மாட்சியோர். (௩௪)

என்று மாய னிசைத்தலு மெம்பிரா
னன்று நீயு நமக்கொரு சத்திகா
ணன்று தாருகத் தந்தணர் பாங்குறச்
சென்ற போழ்தினுஞ் சேயிழை யாயினை. (௩௫)

முன்னை வேதன் முடிந்தனன் போதலு
முன்னொ டேவந் துவப்பொடு கூடினோம்
பின்ன ரிந்தப் பிரமனை யுந்தியா
லன்னை யாகி யளித்தனை யல்லையோ. (௩௬)

ஆகை யாலுன் னணிநலந் துய்த்திட
வோகை யாலிவ ணுற்றனன் செல்கென
மாகை யாரப் பிடிப்ப வருதலும்
போகை யுன்னிப் பொருக்கென வோடினன். (௩௭)

நாணி யோடிய நாரண னைப்பிறை
வேணி யண்ணல் விரைவுட னேகியே
பாணி யாலவன் பாணியைப் பற்றினன்
சேணி னின்று திசைமுகன் போற்றவே. (௩௮)

பற்றி யேகிப் படிமிசை நாவலாற்
பெற்ற தீவிற் பெருங்கடற் சார்பினின்
மற்று நேரில் வடதிசை வைப்பினி
னுற்ற சாலத்தி னெண்ணிழ னண்ணினன். (௩௯)

நண்ணி யேதனி நாயக னவ்விடைப்
பெண்ணி னீர்மையைப் பெற்றிடு நாரண
னுண்ணெ கிழ்ந்து மயக்குற் றுருகியே
யெண்ணி லின்புறக் கூடின னென்பவே. (௪௦)

மூன்று கண்ணன் முகுந்த னிருவரு
மேன்று கூடிய வெல்லையி லன்னவர்
கான்று மிழ்ந்த புனல்கண் டகியென
வான்ற தோர்நதி யாகி யகன்றதே. (௪௧)

அந்த நீரி னகம்புற மாழிக
டந்து வச்சிர தந்தி யெனப்படு
முந்து கீட் முறைமுறை யாகவே
வந்து தோன்றின மான்மையின் வண்ணமாய். (சஉ)

ஆய மண்ணி லகங்கெழு பஞ்சர
மேயெ னத்தந் திருந்து சிலபகன்
மாயு மவ்வுயிர் மாய்ந்தபிற் கூடுக
பே நேமிக் குறிகொடு தோன்றுமால். (சங)

நீர்த்த ரங்க கிரல்பட வீசியே
யார்த்தி ரங்கி யணைவுறு கண்டகித்
தீர்த்தி கைப்புனல் சென்றக் குடம்பைக
ளீர்த்து வந்திடு மிம்பர்கொண் டெய்தவே. (சச)

அன்ன கீட மமர்ந்த குடம்பையை
யிந்நி லததர்கொண் டேகி யகத்துறை
பொன்னை வாங்கிப் பொறியினை நோக்கியே
யின்ன மூர்த்த மிஃதென நாடுவார். (சரு)

நாடி யேயவை நாரண னாகவே
கூடு மன்பிற் குவலய்த தேசிலர்
தேடி யர்ச்சனை செய்வ ரதன்பெயர்
கேடில் சாளக் கிராமம தென்பரால். (சசு)

மாறு மெந்தையு மாண்பொடு கூடியே
சால மேவு தனிநக ரேயிதன்
மூல காரண மாகலின் முந்தையோர்
மேலை நாம மதற்கு விதித்தனர். (சஎ)

இந்த வண்ண மிருக்க முராரியு
மந்தி வண்ணத் தமலனு மாகியே
முந்து கூடி முயங்கிய வெல்லையில்
வந்த னன்னெமை வாழ்விக்கு மையனே. (சஅ)

மைக்க ருங்கடன் மேனியும் வானுலாஞ்
செக்கர் வேணியுஞ் செண்டுறு கையுமா
யுக்கி ரத்துட னோர்மகன் சேர்தலு
முக்க ணெந்தை முயக்கினை நீங்கினன். (சகூ)

அத்த குந்திரு மைந்தற் கரிகர
புத்தி ரன்னெனு நாமம் புனைந்துபின்
னொத்த பான்மை யுருத்திரர் தம்மொடும்
வைத்து மிக்க வரம்பல நல்கியே. (ரு0)

புவன மீந்து புவனத் திறையென
வவனை நல்கி யமரரு மாதவ
ரெவரு மேத்திடு மேற்றமு நல்கினன்
சிவன தின்னருள் செப்புதற் பாலதோ. (ருக)

முச்ச கத்தை முழுதருண் மேனிகொண்
டச்ச தன்றெழு வச்சுதன் போற்றிட
மெச்சி யேயவ ருக்கு விடைகொடுத்
தெச்ச மில்சிவ னேகின னென்பவே. (௫௨)

நாய கன்செல நான்முகத் தோனைமுன்
றாயெ னத்தருந் தாமரைக் கண்ணினுன்
சேய வைகுண்டஞ் சேர்ந்தன னையனும்
போயி னன்றன் புவனத் தரசினில். (௫௩)

அங்கண் மேவி யரிகர புத்திரன்
சங்கை யில்பெருஞ் சாரதர் தம்மொடு
மெங்கு மாகி யிருந்தெவ் வுலகையுங்
கங்கு லும்பக லெல்லையுங் காப்பனால். (௫௪)

மண்ண கத்தரும் வானவ ரும்மல
ரண்ண லுக்கின மர்ச்சிக்கு நீர்மையான்
கண்ண னும்புக ழப்படு காட்சியா
னெண்ணி னங்கவ னுக்கெதி ரில்லையே. (௫௫)

அன்ன நீர்மையன் காணென நன்பினு
லுன்னை வந்தினிக் காத்தரு ளுத்தம
னென்ன லோடு மிசைந்துநின் றுளரோ
பொன்னி னுடு தணந்த புலோமசை. (௫௬)

வேறு.

இந்திரன் மங்கை யிசைந்தது காணு
நந்தமர் கையனு நம்பனு நல்கு
மைந்தனை யுன்னி வழுத்துத லோடு
மந்தமி லாவெம தைய னறிந்தான். (௫௭)

காருறழ் வெய்ய களிற்றிடை யாகிப்
பாரிட ரெண்ணிலர் பாங்குற நண்ணப்
பூரணை புட்கலை பூம்புற மேவ
வாரண மூர்பவன் முன்னுற வந்தான். (௫௮)

முன்னுற மேவலு மூவுல கோர்க்கு
மன்னவ னாகிய வாசவ னையன்
பொன்னடி தாழ்ந்து புகழ்ந்தன னிற்ப
வென்னிவண் வேண்டு மியம்புதி யென்றான். (௫௯)

கேட்டலு மின்ன கிளத்தினன் மாயை
மாட்டுறு சூரன் வருத்துத லாற்பொன்
னாட்டினை விட்டன னினிவ ளோடுங்
காட்டுறு வேயென வேகர வுற்றே. (௬0)

னோற்றிவண் மேவின னேதகும் வானோ
ராற்றரி தாவவு ணன்செயு மின்னல்
சாற்றினர் வந்து தளர்ந்தன மெம்மைப்
போற்றுதி யென்று புலம்பின ரன்றே. (௬௧)

தள்ளரும் வானவர் தம்மொடு முக்கண்
வள்ள றனக்கெம் வருத்த முரைக்க
வெள்ளி மலைக்கு விரைந்துசெல் கின்றே
னெள்ளரி தாகிய வில்லினை வைத்தே. (சுஉ)

தஞ்ச மிலாது தனித்திவ் வனத்தே
பஞ்சுறழ் செய்ய பதத்தியை வைத்தால்
வஞ்சகர் கண்டிடின் வெளவுவ ரென்றே
யஞ்சின னுன்ற னடைக்கல மையா. (சுங)

ஆத்த னமர்ந்த வகன்கிரி நண்ணி
வாய்த்திடு மிவ்விடை வந்திடு காறும்
பூத்திடு காமர் புலோமசை தன்னைக்
காத்தரு ளென்றிது கட்டுரை செய்ய. (சு௪)

மேதகு செண்டுள வீர னிசைப்பா
னேதமு றாதநின் னேந்திழை தன்னைத்
தீதடை யாது சிறப்பொடு காப்ப
னீதனி யென்று நினைந்திடல் கண்டாய். (சுரு)

இல்லுறு நங்கையை யிங்ஙனம் வைத்தே
யல்லுறழ் கண்ட னருங்கயி லைக்குச்
செல்லுதி யென்றருள் செய்து திரும்பித்
தொல்லையெம் மையனோர் சூழலி னுற்றான். (சுசு)

வாளமர் நீந்தி வயந்தனின் மிக்க
காள னெனப்படு கட்டுரை யோனை
யாளுடை யண்ண லருட்கொடு நோக்கிக்
கேளிவை யென்று கிளத்திடு கின்றான். (சுஎ)

மூவரின் முந்திய மூர்த்தி வரைக்குப்
போவது முன்னினன் பொன்னகர் மன்னன்
றேவி யிருந்தன ளுங்குவ ராமே
காவல்கொ ணீயெனக் கற்பனை செய்தான். (சுஅ)

ஆ திருவிருத்தம் - க௪௬எ.

---

வசனம்.

முன்னாளில் முகுந்தன் முதலிய தேவர்களும் தானவரும் சிவாஞ்ஞையின்றிப் பாற்கடலைக் கடைந்தகாலத்தில் ஆலவிடம்தோன்றிற்று. அவ்விடத்தைக்கண்டு அவர்கள் மேகத்தைக்கண்ட குயிலினமேபோலக் கலக்கமடைந்து ஓடிப்போய்த் திருக்கைலைமலையையடைந்து செந்தீவண்ணனாகிய பரமசிவனது பாதங்களை வணங்கி அடைக்கலம்புக, பரமசிவனும் அவர்களை வருந்தவேண்டாமென்று தாமே அவ்வாலவிடத்தை யமுதாகக்கொண்டு புசித்து திருமால் முதலிய தேவரை நோக்கி இன்னும் நீர் இப்பாற் கடலைக்கடைவீராயின் அமுதந்தோன்றுமென, அவர்கள் பாற்கடலையடைந்து கணேசப்பெருமானை வழிபாடுசெய்யாமற் கடைந்தார்கள். அவர்கள் கணேசப்பெருமானை வழிபாடுசெய்யாமையால் கடலில்நட்ட

மத்தாகிய மந்தரமலை வருந்திவீழ்ந்து நாகலோகத்திற்போய்ப்படிய அதையறிந்து நாம் கணேசப்பெருமானை வழிபாடுசெய்யாத குறையென்றே அர்ச்சனைசெய்தார்கள். அதனால் மந்தரமாகிய மத்தானது முன்போல் பிலத்தினின்றும் பெயர்ந்து மேலேயெழ மகிழ்ந்து வணங்கித் திருமகள் கணவனுகிய விஷ்ணுமூர்த்திமுதலானோர் மீண்டும் கடலைக்கடைந்தார்கள். அவ்வாறு கடைகையில் அமுதமெழுந்தது. அதைக்கண்ட தேவர்களும், தானவர்களும், அவ்வமுதத்தைவிரும்பி உடைகின்ற கடலேபோலச் சூழ்ந்துகொண்டார்கள். எம்மாலிதுவந்தமையால் எமக்கே இஃது உரியதென்று ஒருவருக்கொருவர் மாறுபட்டுக்கொண்டு போர்செய்யத் துணிகையில் திருமால் மோகினியுருக்கொண்டனன். தானவர்களோ மண்ணிலும் விண்ணிலும் மற்ற உலகத்திலும் காணக்கிடையாத பெண்ணுருவங்கண்டு அமுதத்தைவிட்டு மொய்த்துக்கொண்டார்கள். அதற்கு மோகினியாகிய திருமால் நானும் வந்திருக்கின்றேன். அமுதமுமிருக்கின்றது. இவ்விரண்டனுள் எதுவேண்டுஞ் சொல்லவேண்டுமென்ருன். நோற்காமையால் இறக்கின்றவர்களாகின்ற தானவர்கள் மனம்வேறுபட்டு நீயே வேண்டுமென்றனர். தேவர்களும் அமுதமேயாங்கள் பெறவேண்டுமென்றனர். அவர்கள் அமுதம்பெற்று மாயைநீங்கிப்போயினர். அவரோடு போர்செய்த கொடியவராகிய தானவர்கள் மோகினியுருக்கொண்ட திருமாலையழைத்துக்கொண்டு மிக்கவிருப்புடன் ஓரிடத்திலேபோயினர். அவர்களைநோக்கி என்னை மலர்ப்பாயலிலணைந்து தழுவவல்லவனை இங்கே கண்டேனில்லை யென்றுசொல்ல, அதைக்கேட்ட அத் தானவர்கள் ஒவ்வொருவரும் எமக்கு மாருகவே யொருவருமிலர். நானே யாரினும் வல்லமைப்பெற்றிருக்கின்றேனென்று வேறுவேருக ஒவ்வொருவரும பேசி மொய்த்துக்கொண்டு மோகினியைக் கூடவேண்டுமென்னுமாசையால் போர்செய்து தீ மூங்கிலில்தோன்றியே மூங்கிற்காட்டை யெரிப்பதுபோல அவர்கள் தம்மிலிறந்துபட்டனர். அத்தானவர்தொகையில் இருவர் இது விஷ்ணுவின் மாயையென்றறிந்து இவரோடிறக்கின்றது என்னபயன் என்று நீங்கித் தம்முருவநீங்கித் தேவர்களைப்போலுருக்கொண்டு அத்தேவர்களுடைய கூட்டத்திற்புகுந்தார்கள். மோகினியாகிவந்த கள்ளமாயன் தானவரெல்லாம் ஒழிந்தமைகண்டு மீண்டுந் தேவரையடைந்து அமுதம் பகிர்ந்துகொடுத்தான். அப்படி கொடுத்துவருங்காலத்தில் தேவர்களுக்கு மத்தியிலிருந்த இருவரும் மந்திரஞ்சொல்லாமல் உண்ணத் தலைப்பட்டனர். அதனைத் தாமரைக்கு நண்பனும் பகைவனுமாகிய சூரியசந்திரரிருவருங்கண்டு இவர்கள் கள்ளத்தானவர்களென்று குறிப்பித்தனர். அவ்வாறுகாட்டவே திருமால் இக்கள்ளர்களா தேவருடன் அமுதமுண்ணத்தக்கவரென்று தம் கையிலிருந்த சட்டுவம்கொண்டு அவர்கள் தலைமேல்புடைத்தார். அவ்வமுதம் அவர்கள்கண்டத்தில் வருமுன்னரே துண்டித்ததனல் யாக்கைநீங்க அழியாத தலையையுடைய அவர்கள் மாட்சிமைநோக்கி அமுதுண்டமையால் விண்ணில் நிற்பாரெனத்துணிந்து சிவனருள் பெறுவித்து அவர்களை ஏழுகிரகங்களுடனே சாயாக்கிரகங்களாகிய இராகுகேதுக்களாக விருக்கவமைக்க அவர்கள் சிவனைப்போற்றித் தவஞ்செய்து கரும்பாம்பு செம்பாம்புகளாகவிருக்க வரம்பெற்றுத் தம்மைத் தானவராகக்காட்டிய சூரியசந்திரரிருவரையும் மறைப்பாராயினர். இதுதான் அமுதம்வந்தவரலாறு. அமுதுண்ட தேவர்கள்தொழப் பெண்ணுருக்கொண்டு திருமாலிருக்கையில் நால்வகையாகிய பார்வதி, துர்க்கை, காடுகிழாள், விட்டுணு வென்னுஞ் சத்திகளில் விட்டுணுவும் ஒரு சத்தியாகையால் அதைக்காட்டத் திருவுளங்கொண்டு நீலகண்டத்துநின்மலன் அங்கெழுந்தருளி நீகொண்டவேட மிகச் சிறந்ததென்றுசொல்லி உன்னை விரும்பி

வந்தோம், உன்னைப் புணருங்காதல் எமக்குண்டென்று தெரிவிக்க, பெண்வேடங் கொண்ட பெருந்தகையாகிய திருமால் நாணங்கொண்டு நீ விருப்புவெறுப்பில்லாதவனாகையால் என்பாற்கொண்ட விருப்பமு முண்மையல்லவே. எதைநாடி யென்னையடைந்தனையோவறியேன். உலகில் ஆடவருடன் ஆடவர்சேர்ந்து இன்பமடைதல் என்றுங்கண்டோமில்லை. என்னைக்கருதுவதும் தகுதியன்றெனக்கூற, அதற்கு நீலகண்டத்துநின்மலன் முன்னொருகாலத்தில் பிரமன் இறந்துபடவே உம்மைவிழைந்துகூடினேம், அப்போது பிரமனை யுந்திவழியாகத்தந்தாய். அப்போது நீயவனுக்குத் தாயல்லவோ? நீ வாவென்றுகூறி அவனைப்பற்றிச்சென்று நாவலந்தீவில் வடதிசையின்கண் கடம்பமரநிழலில் அடைந்தான். அப்போது இருவருங்கூடினர். அவ்விருவரும் கான்றுமிழ்ந்த உமிழ்நீர்கண்டகிநதியென்று சொல்லப்பிறந்தது. அந்நீரில் பொன்மயமான வச்சிரதந்தியெனப்படும் கீடங்கள் உண்டாயின.

அக்கீடங்கள் குடியிருந்த குடம்பையைநீக்கிப் பொன்னைவாங்கிப் பொறியினைநோக்கி வழிபாடுசெய்வர். அதற்குச் சாளக்கிராமம் என்றுபெயர். அவர்களிடமாக மகாசாத்தா திருவவதாரஞ்செய்தான். அவனை உருத்திரரோடுசேர்த்து வரம் பலவளித்து புவனமீந்து புவனேசனாகச்செய்து மாதவர்களும் வணங்கும் ஏற்றத்தையுமளித்துப் பரமசிவனும் திருமாலும் தத்தம் இருக்கையையடைந்தனர். மகாசாத்தாவும் தனக்களித்த புவனத்திற்கெழுந்தருளி தன்னைப்புடைசூழும் பூதவெள்ளங்களுடன் சென்று காவல்செய்கின்றான். அவனே மண்ணுலகத்தவரும் வானவரும் பிரமனும் என்றும் அர்ச்சிக்கு நீர்மையுடையான். கள்ளமாமாயப்பிரானாகிய கண்ணபிரானும் வந்தனைசெய்யும் தகுதியுடையானென்றால் அவனுக்கொப்பாவாரியாரிருக்கின்றனர். இத்தன்மையானாயினும் என்பாலன்புடையானாயினான். உன்னைக்காத்தருள்வனென, அதற்கு இந்திராணி இசைந்ததையறிந்து சிவபெருமானும் திருமாலும் பயந்த மகாசாத்தாவை வரும்படிதுதிக்க, அவன் அதையறிந்து யானைமேலேறிப் பலபூதவெள்ளம் புடைசூழும்படி பூரணைபுட்கலையென்னும் மாதரிருவரும் தன்பாலினிதுவீற்றிருப்ப எழுந்தருளி இந்திரனுக்குத் தரிசனம் அளித்தான். இந்திரன் அவனைக்கண்டவுடன் அவனது சேவடிகளைப்பணிந்து தாழ்ந்துநிற்க, உனக்கு என்னவேண்டுமென்று கேட்டான், அதற்கு இந்திரன் மாயைபெற்ற சூரபதுமனே என்னை வருத்துகின்றான், அதனால் பொன்னாடுகைவிட்டு ஆவலோடும் பூமியையடைந்து காட்டிலுள்ள மூங்கிலாக உருக்கரந்திருக்கின்றேன். நான் என் உருக்கரந்து இப்பதியில் தவஞ்செய்துகொண்டிருக்கையில் தேவர்கள் என்னையடைந்து தங்குறைகளையெல்லாஞ்சொல்லி வருத்தப்பட்டு எம்மைக் காக்கவேண்டுமென்று வேண்டிக்கொண்டனர். நானே கைலைமலையையடைந்து எங்கள் வருத்தமெல்லாமெடுத்துச்சொல்லி வரத்துணிந்திருக்கின்றேன். நான் கைலைமலைக்குப்போய்த் திரும்பிவருகின்ற அதுவரையிலும் இந்திராணியைக் காத்திருக்கவேண்டுமென்றேனென்று சொல்லச் செண்டினைக் கையிலேந்திய மகாசாத்தாவும் இந்திராணி தீதடையாவண்ணம் காத்துநிற்பேன். நீ தனியேவிட்டுப்போகின்றேனென்றெண்ணாமல் கைலைமலைக்குப் போகலாமென்று சொல்லித் தாமொரு சூழலிலெழுந்தருளித் தம்பால் வாட்போரில்வல்ல மாகாளனெனப்படும் தண்டத்தலைவனையழைத்து இந்திரன் கைலைமலைக்குப் போகின்றமையால் அவனது மனைவியாகிய இந்திராணியைக் காக்கவேண்டுமென்று கட்டளையிட்டான். இதுநிற்க.

மகாசாத்தாப்படலம் முற்றிற்று.

# இந்திரன்கைலைசெல்படலம்.

அத்துணை தன்னி லருந்துணை யில்லான்
மெய்த்துணை யாகிய மின்னினை நோக்கி
யெய்த்திட லைய னளிக்குவ னீண்டே
சித்தம் வருந்த லெனத்தெளி வித்தான். (க)

மாதினை யவ்விடை மன்னுற வைத்தே
பேதுறு வானவர் பேரவை நண்ணிப்
போது மெனக்கொடு போந்து விரைந்தே
நாத னகன்கிரி நண்ணின னன்றே. (உ)

அந்தர வைப்பி லமர்ந்தவர் தம்மோ
டிந்திர னக்கயி லைக்கிரி யெய்தி
நந்திபி ரானுறை நன்கடை சேரா
வந்தனை செய்து வழுத்தினி னின்றான் (௩)

சிற்றலும் வந்ததெ னீபுக லென்னச்
சொற்றன னங்கது தொன்மையி னாடி
யிற்றில கொல்லு னிருந்துய ரென்று
நற்றவர் காணுறு நந்தி யுரைப்பான். (௪)

நால்வ ருணர்ந்திட நாயகன் ஞான
மூல வியோக முதற்பொருள் காட்டி
யேல விருந்தனன் யாவரு மேகக
காலமி தன்றென வேகமு றுற்றான். (௫)

தேறு தவஞ்செய் சிலாதனன் மைந்தன
கூறிய வாய்மை குறிக்கொள வோர்ந்து
மாறி யிழிந்திடு வலவிட மறறு
மேறிய தென்ன விடர்க்கட லுற்றான். (௬)

இம்பரின் வாசவ னின்ன லுழப்ப
வும்பர்க டாமு முடன்றளர் வுற்றார்
தம்பம தான தடம்புனை தாழ
வம்புதி தன்னி லழுந்திடு வார்போல். (௭)

செல்ல லுழந்து தியங்கிய தேவ
ரெல்லவர் தம்மொடு மிந்திர னென்போ
னல்லருள் செய்திடு நந்திபி ரான்றன்
மெல்லடி போற்றி விளம்புதல் செய்வான். (௮)

தூய்நெறி நீங்கிய சூரபன் மாவுக்
காயுவொ டாற்ற லளப்பில செல்வ
மேயவை யாவு மிருந்தவ னீரா
றாயகன் முன்றுற நல்கின னன்றே. (௯)

நாங்கள் புரிந்திடு நல்வினை நீங்கித
தீங்கு ...த்தெழு தீவினை சேர
வா...னவ னல்ல லுழந்தே
மீங்கி... ...மிறை வன்செய லையா. (௧௦)

சூன ரியற்கை சுரர்க்கருள் செய்யு
மாகிரு தார்க்கிறை வன்புரி துன்ப
மான துணர்த்தி யடைந்தன மென்னிற்
றூனது போழ்து தவிர்த்திடல் வேண்டும். (௧௧)

நீர்த்திரை போல நெறிப்பட யாங்கொ
ளார்த்தி யகற்றி யறந்தவிர் சூரன்
மூர்த்திகொ ளாவியு மொய்ம்பொடு சீருந்
தீர்த்திடு கின்ற திறஞ்செயல் வேண்டும். (௧௨)

அன்னது செய்திடி னன்பறு சூரன்
முன்ன ரருந்தவ முற்றிய காலைச்
சொன்ன வரந்தொலை யுந்தொலை வானற்
பின்ன ரவன்சொல் பிழைத்தன னென்பார். (௧௩)

அல்லதெம் மல்ல லகற்றில னென்னி
னல்லரு ளுக்கொரு நாயக னென்றே
யெல்லை வரும்புக ழேற்றமு மின்றுந்
தொல்லை மறைப்படி யுந்தொலை வாமால். (௧௪)

ஆகையி னிவ்வகை யாய்ந்தெமை யாளும்
பாக நினைந்து பரம்பொரு ளானோன்
மோகமி லார்பெற மோனக ஞான
யோகியல் காட்டி யுறைந்துள னேகொல். (௧௫)

ஈங்கிவ னல்லதை யித்திற மாகுந்
தீங்கினை நீக்கவொர் தேவரு மில்லை
யோங்கிய மாலவ ரோடமர் செய்தே
யாங்கவ னேமியு மற்றன னையா. (௧௬)

மூவரின் முந்திய மூர்த்தி செயற்கை
யாவது மீதென வண்டரும் யானும்
பூவுல கத்திடை போந்திடி னின்னே
தீவினை யார்சிறை செய்வது திண்ணம். (௧௭)

ஆதலி னுயிடை யண்டரும் யானும்
போதலி லைப்புனி தன்கழல் காணத்
தீதறு வேலை தனைத்தெரி வுற்றுன்
வாய்தலி னோர்புடை வைகுவ னென்றான். (௧௮)

பேர்பெறு நந்தி பிரானது கேளா
வார்வுறு மின்ன லகன்றிவ ணீவிர்
சேர்வுறு மென்றருள் செய்திட வாங்கே
யோர்புடை வாசவ னண்டரொ டுற்றான். (௧௯)

வானவர் கோனரன் மால்வரை தன்னிற்
போனது முற்றது மீண்டு புகன்று
மாணபு லோமசை செய்கையு மல்லா
வேனையர் செய்கையும் யாவு மிசைப்பாம். (௨௦)

ஆக திருவிருத்தம் - க௫கள.

வசனம்.

இந்திரன் தன்மனையாளாகிய இந்திராணியையநோக்கி நீவருந்தவேண்டாம், உன்னை மகாசாத்தா காத்தருளுவரென்று அவளை அங்கே தனியேயிருத்தி, தேவர்களோடு கைலையையடைந்து நந்தியம்பெருமானை வழிபட்டுச் சிவபெருமானைத் தரிசிக்கவேண்டுமென்றுசொல்ல, அவர், அச்சிவபெருமான் கல்லாலின்கீழிருந்து சநகாதியர்க்கு உபதேசித்துக்கொண்டிருக்கிறார். ஆதலால் இதுசமயமன்றெனத்தடுக்க, இந்திரன் தான்புற்று நந்தியம்பெருமானைவணங்கி, சூரபன்மனுக்குச் சிவபெருமான் ஆயுள் ஐசுவரியம் முதலிய எல்லாம் அருள்செய்திருக்கிறார்; அதனால் அவன் செருக்கடைந்து எங்களை வருத்துகிறசெய்தியைச் சிவபெருமானுக்கு விண்ணப்பஞ்செய்துகொள்ளவந்தோம். அவரையன்றி எங்கள்துயரத்தை நீக்கவல்லவரொருவருமில்லை, திருமாலும் அச்சூரபன்மனுக்குத் தம்பியாகிய தாரகனோடுபோர்செய்து தமது சக்கராயுதத்தையுமிழந்தார். நாங்கள் பூலோகத்தையடைந்தால் எங்களை அச்சூரபன்மன் சிறையிடுவான்; ஆகையால் நாங்கள் பூலோகத்துக்குப் போகமாட்டோம், இவ்வாயிலின் ஒருபுறத்தில் வசிக்கிறோமென்றுசொல்ல, அவ்வாறேயாகுகவென்று நந்தியம்பெருமான் கட்டளையிட, இந்திரனும் தேவர்களும் அவ்வாயிலினோர் புறத்திலிருந்தார்கள். மேலே இந்திராணியின்செய்கையுஞ்சொல்லுகின்றோம்.

இந்திரன்கைலைசேல்படலம் முற்றிற்று.

---

# அசமுகிப்படலம்.

நீங்காதுறை தனிநாயக னெடுமாலய னுணரா
வோங்காரமு தற்பண்ணவ னுறையுங்கிரி செல்லப்
பாங்காயணங் கினர்போற்றிடப் பயில்காழி வனத்திற்
பூங்காவனந் தனிலேசசி யிருந்தேதவம் புரிந்தாள். (௧)

சேணாடு புரக்கின்றவன் சிந்தித்திடு கின்ற
மாணாகிய வினைமுற்றுற வருவான்றவம் புரிவாள்
காணாளவன் வருகின்றது காலம்பல தொலைய
நாணாடொறுந் தன்மேனியி னலமாழ்குற மெலிவாள். (௨)

கொலையாரிசை யளிபாடிய குழலிந்திரன் பிரிவா
லுலையாமனம் பதையாத்தவத் துறைகின்றதொ ரளவில்
வலையார்கலி யுலகந்தனில் வாழ்சூரபன் மாவுக்
கிளையாள்பல ரிளையார்புணர்ந் தாலுஞ்சிறி திளையாள். (௩)

கழிகின்றதொர் கடலேபுரை காமந்தெற நோயா
லழிகின்றவ ளொவர்தம்மையும் வலிந்தேபிடித் தணையு
மிழிகின்றதொ ரியல்பாண்முகி லினம்வாய்திறந் தெனவே
மொழிகின்றதொர் கடியாளச முகியென்பதொர் கொடியாள். (௪)

பொறையில்லவ ளருளில்லவள் புகழில்லவள் சிறிது
நிறையில்லவ ளுணில்லவ ணிற்கின்றதொ ரறத்தின்
முறையில்லவள் வடிவில்லவண் முடிவில்லதொர் கற்பின்
சிறையில்லவ ளுலகோர்க்கொரு சிறையாமெனத் திரிவாள். (௫)

ஏழுற்றிடு முலகெத்தனை யவையாவையுங் ளொர்ந்தோர்
வாழுற்றிடு முலகெத்தனை யவையாவையு மாடே
சூழுற்றிடு முலகெத்தனை யவையாவையுஞ் சுற்று
ளூழுற்றிடு தன்னூர்தனி லொருநாழியில் வருவாள். (௬)

பொய்யுற்றவள் களவுற்றவள் புரையுற்றிடு சுன்ராயூன்
றுய்யுற்றவள் களியுற்றவள் சோரவுற்றவள் கொலைசெய்
கையுற்றவள் விழியாலழல் காலுற்றவள் பவத்தின்
மொய்யுற்றவள் படிறுற்றவண் முனிவுற்றவண் மனத்தின். (௭)

பொங்குஞ்சிகை யழன்மைத்தலை புகுந்தாலென வொளிருஞ்
செங்குஞ்சிய துடையாளவா செருசெய்யினு மிடையா
டுங்கஙசெழு தூணத்திடை தோன்றிக்கன கனைமுன்
பங்கம்படத் துயிருண்டெழு பகுவாயரி நிகர்வாள். (௮)

சீயப்பெரு முகன்றாரக னிகராகிய திறலாண்
மாயத்தொழில் பயில்கின்றவண் மணிமால்வரை புரையுங்
காயத்தவ ளடற்கூறையுங் கடக்கின்றதொர் வலியா
டோயப்புண ரிகளேழுமொர் துணையிற்கடந் திடுவாள். (௯)

மாலுற்றிட வாழ்சூரபன் மாவின்கிளை முழுது
மூலத்தொடு முடிவித்திடு முறையூழ்வினை யென்னச்
சூலத்தினை யேந்தித்தனி தொடர்தன் முகி யுடனே
யாலத்தின துருவாமென வாங்குற்றன ளன்றே. (க0)

கானின்றுள பொழிலோர்தனைக் காணாநனி சேணா
ளாகன்றென வியவாபபுவி யமர்சோலையி தன்றால்
வானின்றுள வனத்தைக்கொடு வந்தேயிவண் மகவான்
றானின்றவைத் தானிங்கிது தபபாதென கிற்பாள். (கக)

ஏலாவிது காணாயென வீர்ந்தண்பொழி லெழிலை
யாலாலம தெனவேவரு மசமாமுகி யென்பாள்
பாலானதன் முகிதன்னொடு பகராவது காட்டிக்
கோலாலம துடனேயது குறுகும்படி வந்தாள். (கஉ)

மட்டுறறிடு தண்காவினை வருடைத்தனி முகத்தாள்
கிட்டிச்சினை நனைமாமலர் கிளையாவையு நோக்கித்
தட்டற்றிவ ணுறைகின்றவர் தமைநோக்குவ லென்றா
லெட்டுத்திசை யினுநாடுதற் கிடையுற்றனள் கடிதின். (கங)

அதுகண்டன னவணின்றதொ ரையன்படைத் தலைவன்
முதுகண்டகி யிவளாமச முகியென்பதொர் கொடியா
ளதுகண்டிவண் வருகின்றன ளென்றேகருத் திவடன்
கதிகண்டன னிற்பேனெனக் காணாநெறி யதனில். (கச)

மற்றிங்கிவள் செயல்யாவையும் வரலாற்றொடு காணாத்
தெற்றென்றவண் மீள்கின்றுழிச் செவ்வேலெயி போர்து
குற்றந்தனக் கிசையுந்திற முடிப்பேனெனக் கொலைசெய்
விற்றங்கிய புயவேடரில் வேறாகிடை நின்றான். (கரு)

நின்றானவ னதுகண்டில னெஞ்சிற்களி தூங்கக்
குன்றாமுலை யசமாமுகக் கொடியாளவ ளுடனே
சென்றாண்மலர்க் காவெங்கணுந் திரிந்தாடிரிந் தனளிற்
பொன்றாழ்முலைச் சசிமாதவம் புரிகின்றது கண்டாள். (கசு)

அந்நாளிவ ளயிராணிநம் மரசன்றனக் கஞ்சி
நந்தாவளந் தனைப்பெற்றபொன் னகரத்தைவிட் டிங்கே
வந்தாளிவ டன்னைக்கொடு வருவீரென வெங்கோன்
முந்தாதர முடனுய்த்தனன் முடிவற்றதன் படையே. (கஎ)

இங்குற்றதை யுணராமையி னிமையோர்புர நாடி
யங்குற்றில ளயிராணியென் றரசன்றனக் குரைப்ப
வெங்கட்டழ லெனச்சீறினன் மீண்டுஞ்சிலர் தமையித்
திங்கட்புரை முகத்தாடனைத் தேடும்படி விடுத்தான். (கஅ)

வானெங்கணும் பிலமெங்கணும் வரையெங்கணும் பரவை
தானெங்கணுந் திசையெங்கணுந் தரையெங்கணுந் தரையிற்
கானெங்கணு நமர்தேடினர் காணாரிவ டன்னை
யூனெங்கணும் வருந்தத்திரிந் தழன்றாரிது வுணரார். (ககூ)

தண்டேனமர் குளிர்பூங்குழற் சசியென்பவ டனைநான்
கண்டேனினி யிவண்மையலிற கவலாதொழி கென்றே
வண்டோலிடு தொடைமன்னவன் மகிழ்வெய்தமுன் னுய்ப்பக்
கொண்டேகுவன் யானேயிவ டனையென்று குறித்தாள். (உ௦)

இத்தேமொழி தனையிந்திர னீண்டேதனி யாக
வைத்தேகின னிவடன்னை வருந்தாதளித் திடவோர்
புத்தேளிரு மிலரிங்கிது பொழுதாமவன் புகுமுன்
கொத்தேமலர்க் குழலாடனைக் கொடுபோவனென் றடைவாள். (உக)

தீனக்குரற் கடுஞ்சொல்லெனு முருமேறு தெழிப்பக்
கூனற்பிறை யெயிறாகிய மின்னுப்புடை குலவக்
கானக்கரும் படிவத்தொடு கால்கொண்டெழு விசையால்
வானப்புயல் வழுவிப்புவி வந்தாலென வந்தாள். (உஉ)

ஊற்றங்கொடு வருதுன்முகி யுடனேயச முகிதான்
றோற்றங்கிளர் மணிவெற்பெனத் துண்ணென்றவண் வரலு
மேற்றம்பெற நோற்றேதனி யிருந்தாளது காணாக்
கூற்றந்தனைக் கண்டாலெனக் குலைந்தாள்வலி குறைந்தாள். (உங)

நீரோதமி சைத்தங்கிய நிருதக்குல மகளோ
பாரோர்மயக் குறுபேய்மக ளோபாரிடத் தணங்கோ
சூரோடுறு தனிக்கொற்றவை தொழில்செய்பவ டாளோ
வாரோவிவ ளறியேனென வஞ்சிக்கடி தெழுந்தாள். (உச)

எழுகின்றவ டனைநில்லென விசைத்தேயெதி ரெய்தி
மொழிகின்றன ளயிராணிநின் முதிராவிள நலனும்
பழியில்லதொர் பெருங்காமரும் பயனற்றிவண் வறிதே
கழிவெய்திடத் தவம்பூண்டிடல் கடனோவிது விடுநீ. (உரு)

ஆரொப்புனக் குலகந்தனி லருளாழியம் பகவன்
மார்பத்துறை திருமங்கையு மற்றிங்குனக் கொவ்வாள்
பாரிற்கரந் திருந்தேதவம் பயில்வாயிதெ னுன்னைச்
சேரத்தவம் புரிகின்றனன் றிறற்சூரபன் மாவே. (உ௬)

இந்நாள்வரை யுனைநண்ணிய விமையோர்க்கிறை யுனது
நன்னயக னுகப்பெறு நலனுற்றவ னன்றே
தன்னுலுணர் வரிதென்பர்க டன்பேரழ கதனுற்
பன்னுளவ னுடன்மேவினை பாகிற்படு கரிபோல். (உ௭)

தவறுஞ்சுர ருலகொன்றுள ன் சதவேள்விய னெம்முன்
புவனம்பல வண்டம்பல புரக்குந்திரு வுளனு
லிவனங்கவன் பணியேபுரிந் திளைத்தேகரந் துழல்வா
னவனிங்கிவன் றனையேவல்கொண் டகிலந்தனி யாள்வான். (உ௮)

அழிவில்லவ னவனிங்கிவ னழியும்பரி சுடையான்
பழியில்லவ னவனிங்கிவன் பழிவேலையிற் றிளைப்பான்
கழியும்பட ருழந்தானிவன் களிப்புற்றுள னவனே
தொழுவன்பல ரையுமிங்கிவன் றொழுமோவவன் சிலரை. (உ௯)

அந்நேரில னெடுமேவுவ தறிகின்றிலை யனையான்
றன்னேவலி னெழுகித்திரி தமியோன்றனைத் துணையென்
றின்னேமெலிந் தனையீதனக் கியல்போகின தெழிலுங்
கொன்னேகழிந் தனபற்பகல் குறியாயிது குணனே. (௩0)

எத்தேவரு முகிலூர்தியு மிகன்மேவரு மவுணக்
கொத்தேவரு மணங்கோருமுன் குற்றேவல்செய் திடவே
முத்தேவரும் புகழப்படு மொய்ம்புற்றிடு சூர்மு
னுய்த்தேயவ னெடுகூட்டுவ னுலகாண்டிட னிருக்க. (௩௧)

பொன்னேடிகல் பங்கேருகப் பூங்கோமளை தனையு
மன்னேன்வெறுத் திடுவன்பிற ரனைவோரையு மஃதே
யுன்னேடுள வறுகாதலி னுறுமிங்கிது சரத
மென்னேடினி வருவாய்கடி தென்றுளறங் கொன்றுள். (௩௨)

ஆ திருவிருத்தம் - கஙசக.

---

வசனம்.

இந்திராணி தன்கணவனுகிய இந்திரன் தன்னைநீங்கிக் கைலைக்குச்சென்ற பிறகு, சீகாழியில் தவஞ்செய்துகொண்டிருந்தாள், அப்பொழுது சூரபன்மன்தங்கையாகிய அசமுகி யென்பவள் காமமேலீட்டால்கண்ட இளைஞரைக்கூடிக்கொண்டுதிரிபவளாய்த் தன்தோழியாகிய துன்முகியென்பவளோடு அங்குவந்தாள். அவளை மகாசாத்தாவின் படைத்தலைவராகிய மாகாளர்கண்டு, இவள்செய்கையையறியவிரும்பி, வில்வேடர்போல் வேறோரிடத்திற் காத்துக்கொண்டிருந்தனர். அச்சமயத்தில் இவள்களிப்புமிகுதியால் அச்சோலைமுழுதுந்திரிந்து இந்திராணி தவஞ்செய்வதைக் கண்டு, இவளை நம்தமையனுகிய சூரபன்மனுக்குக் கொண்டுபோய்க்கொடுப்பேமென்று நெருங்க, இந்திராணி இவளைக்கண்டேமூர்ந்திருக்க, அசமுகி இந்திராணி

யைக்கண்டு உன்கணவனாகிய இந்திரன் என்தமையனுக்குப்பயந்து மறைந்தொண்டுதிரிகின்றான்; பெருவலியும் பெருஞ்செல்வமுமுடைய என்தமையனைக் கூடிவாழ்வதே உனக்கு நலமென்றும், என்னோடுவருவையாயின் என்தமையனிடத்திற்சேர்த்து உனக்கு எல்லாநன்மைகளும் உண்டாக்குவேனென்றும் பிறவும் கூறினாள்.

அசமுகிப்படலம் முற்றிற்று.

# இந்திராணிமறுதலைப்படலம்.

தக்க வேழகத் தலையள் கூறிய
வக்கொ டுஞ்சொலை யணங்கு கேட்டலுந்
தொக்க தன்செவித் துளையி லங்கிவேல்
புக்க தேயெனப் பொருமி விம்மினாள். (க)

கைம்ம லர்க்கொடே கடிதிற் றன்செவி
செம்மி வல்வினைத் தீர்வு நாடியே
விம்மி யங்குறும் வெய்யள் கேட்டிட
விம்மெ னச்சில விசைத்தன் மேயினாள். (உ)

ஏடி நீயிவ ணிசைத்த தீமொழி
நேடி யோர்ந்துளார் நிரய மாநெறி
யூடு சேர்வரா லுரைத்த திற்குமேற்
கூடு தீமையார் குறிக்கற் பாலரே. (ங)

வேதம் யாவையும் விதித்த நான்முகன்
காத லன்றருங் கடவுண் மங்கைநீ
நீதி யில்லதோர் நெறியின் வாய்மையைப்
பேதை யாரெனப் பேச லாகுமோ. (ச)

தீங்கி யாவர்க்குஞ் செய்தி டாதவர்
தாங்க டின்புறூஉர் தமக்கு வேண்டினோ
ராங்கெ வர்க்குமுன் னல்லல் செய்வரா
லீங்கு நீயிவை யெண்ண லாய்கொலோ. (ரு)

தருமம் பார்த்திலை தக்க மாதவக்
கருமம் பார்த்திலை கற்பும் பார்த்திலை
பெருமை பார்த்திலை பிறப்பும் பார்த்திலை
யுரிமை பார்த்திலை யுறவும் பார்த்திலை. (சு)

பழியும் பார்த்திலை படியி கழ்ந்திடு
மொழியும் பார்த்திலை முறையும் பார்த்திலை
வழியும் பார்த்திலை வருவ பார்த்திலை
யிழியுந் தீயசொல் லியம்பற் பாலையோ. (எ)

ஆன்ற தொல்வள னுற்ற லாயுள்பின்
னான்று சீர்த்திக ளொருவுற் றோர்க்கிது
தோன்று நீயிவை துணியல் வாழிகேள்
சான்று நின்குலத் தகுவர் யாவரும். (அ)

இந்தி ரற்கலா லேவர் பாலினுஞ்
சிந்தை வைத்திடேன் றீதில் கற்பினேன்
வந்தெ னக்கிது வகுத்தி யின்கினை
யுய்ந்தி டத்தகு முறைய தன்றிதே. (௯)

நூன்மை யரவையு நுனித்து நாடிச்செங்
கோன்மை யன்றியே கொடுமை செய்துள
மேன்மை மன்னரும் வேறு ளார்களும்
பான்மை யாற்பிலம் படுவர் திண்ணமே. (க0)

மீளில் வெந்துயர் வேலை சார்ந்துளா
ளொரு நாதனென் றறைதி யார்கணுங்
கோளு நல்லவுஞ் குறுகு மல்லது
நாளை யுங்கள்பா னணுகு றுதவோ. (கக)

நீதி யாகிய நெறியி லாதவ
ளாத லான்மிக வறிவு மாழ்கியே
தீது கூறினுய் செவ்வி தன்றரோ
மாது நீயிது மறத்தி யுய்யவே. (கஉ)

ஏவ ரென்றனை யெய்தற் பாலினோர்
தேவர் சூழ்தரக் காப்பர் சிந்தையென்
னுவி யைம்புல மளிக்கு மெங்கணுங்
காவ லுண்டுநீ கடிதிற் போகென்றாள். (கங)

என்ற காலையி லெயிறு தீயுகக்
கன்று சேயிதழ் கறித்து வெய்துயிர்த்
தொன்றொ டொன்றுகை யுருமிற் றாக்கியே
நன்று நன்றெனு நகைத்துச் சீறினாள். (கச)

மறுவில் வாசவன் மனைவி கூறிய
வுறுதி வெய்யவட் கூற்றஞ் செய்தில
வறிவில் பேதையா யலகை தேறலால்
வெறிகொள் பித்தனுக் குரைத்த மெய்ம்மைபோல். (கரு)

ஆன காலையி லசமு கத்தினா
ளேன வெந்துய ருழக்கும் பெற்றியால்
வான வர்க்கிறை மாதை நோக்கியே
தானு ரைத்தன ளினைய தன்மையே. (கசு)

கிட்டி நல்லன கிளத்தி னேனெனை
யொட்டி வந்திலை யுரைத்தி மாறனை
யட்டு ழுங்குவ னண்ணற் காகவே
விட்ட னன்னிது மெய்ம்மை யாகுமால். (கஎ)

ஆர்த்தி யாவுநீ யகல வென்றுடைச்
சீர்த்தி யண்ணல்பாற் சேறல் சிந்தியாய்
பேர்த்தி டாதனைப் பிடித்து வன்மையா
லீர்த்துப் போகின்றனன் சரத மீதரோ. (கஅ)

முடிவி லாற்றலார் மூவர் யாவருந்
தடைசெய் கிற்பினுஞ் சமரி னேற்பினும்
விடுவ னல்லன்யான் விரைவி னிற்கொடே
படர்வ னன்னது பார்த்தி மேலெனா. (௧௯)

வெய்ய ளவ்வயி ராணி மென்கரங்
கையிற் பற்றியே கடிதி னீர்த்துராய்
மொய்யிற் போயினுண் முராணி லாதவ
ளைய கோவெனா வரற்றன் மேயினாள். (௨௦)

பாவி தீண்டலும் புலம்பிப் பைந்தொடி
யாவி போந்தென வவச மாகியே
யோவி லாததொல் லுணர்வு மாய்ந்தனள்
காவி யொண்கணீர் கலுழத் தேம்பினாள். (௨௧)

ஐயர் கையில்வந் தவுண ரைச்செறுந்
துய்ய தீம்படை தோகை கண்ணுறூஉ
வெய்ய சூர்கிளை வீட்ட வந்தென
மையு லாயகண் வாரி மிக்கதே. (௨௨)

காசி பன்றருங் கலதி கூற்றுவன்
பாச மன்னகைப் பட்டு விம்மினாள்
வாச வன்றனி மனைவி வெங்கொலைப்
பூசை வாய்ப்படும் புள்ளின் பேடைபோல். (௨௩)

நாரி லாதவ ணலிந்து கொண்டனள்
பேரு மெல்லையிற் பேதுற் றேயுளஞ்
சோரு கின்றவள் சுற்று நோக்கியே
யாருங் காண்கில ளரற்றன் மேயினாள். (௨௪)

ஆக திருவிருத்தம் - ௧௫௭௩.

---

வசனம்.

இதைக்கேட்ட இந்திராணியானவள் அசமுகியைநோக்கி, நீசொன்னசொல்லைக்கேட்டவர்கள் கொடியநரகத்துக்காளாவார்களானால் உனக்குண்டாகுங்கதி சொல்லவேண்டுமோ! செல்வம் ஆயுள்முதலியவற்றை யிழக்கின்றவர்களுடைய வாயில் இப்படிப்பட்ட சொற்களுண்டாகும். நான் இந்திரனையன்றி வேறொருவரையும்விரும்பேன், நாளைக்கே உங்கள்குலத்துக்குத் தீமைகள்யாவும் ஒருங்கேயுண்டாகப்போகின்றன, நீயிந்தத் துர்ப்புத்தியை விட்டுவிடக்கடவையென்றுசொல்ல, அசமுகியானவள் இந்திராணியைநோக்கி, நான்சொன்னசொல்லுக்குடன்படாமல் மறுத்துப்பேசுகிறாயாதலால், உன்னைப்பற்றி யிழுத்துக்கொண்டுபோய் என் தமயனை கிரேவிடுகிறேன் பாரென்று இந்திராணியின் கையைப்பிடித்திழுத்துக்கொண்டுபோக, இந்திராணிபயந்து உயிர்நீங்கினவள்போல அறிவுகெட்டுக் கதறியழுது பூனைவாயிலகப்பட்ட கிளிப்பிள்ளைபோலத் தன்னைக்காப்பவர் ஒருவருமின்றிப் புலம்பிநின்றாள்.

இந்திராணிமறுதலைப்படலம் முற்றிற்று.

---

## மகாகாளர்வருபடலம்.

பையரா வமளி யானும் பரம்பொருண் முதனு நல்கு
மையனே யோலம் விண்ணோர்க் காதியே யோலஞ் செண்டார்
கையனே யோல மெங்கள் கடவுளே யோல மெய்யர்
மெய்யனே யோலந் தொல்சீர் வீரனே யோல மோலம். (௧)

ஆரணச் சுருதி யோர்சா ரடலுருத் திரனென் றேத்துங்
காரணக் கடவு ளோலங் கடனிறத் தெந்தா யோலம்
பூரணக் கிறைவா வோலம் புட்கலை கணவா வோலம்
வாரணத் திறைமேற் கொண்டு வரும்பிரா னோல மென்றாள். (௨)

ஓய்யெனச் சசியிவ் வாற்று லோலிட வதுகேட் டெங்க
ளையனைக் குறித்துக் கூவி யரற்றுவாள் போலு மென்று
மையிலைத் தடுத்துச் சிந்து மருந்தென வந்தா னென்ப
வெய்யரிற் பெரிதும் வெய்யோன் வீரமா காள னென்போன். (௩)

சாத்தன தருளி னிற்குந் தானையந் தலைவன் வானோர்
வேத்தவை யான வெல்லாம் வியத்தகு வீர னுந்தி
பூத்தவன் முதலோர் யாரும் புகழுவெவ் விடத்தை யுண்டு
காத்தவ னுமம் பெற்றோன் காலற்குங் காலன் போல்வான். (௪)

இருபிறை ஞெலிந்திட் டன்ன விலங்கெயி லெயிற்றன் ஞாலம்
வருமுகி றடிந்தா லென்ன வாள்கொடு விதிர்க்குங் கைய
னுருமிடிக் குரலபோ லார்க்கு மோதைய னுரப்புஞ் சொல்லன்
கரவிழைத் தெவ்வன் போதி கில்லெனக் கழறி வந்தான். (௫)

கொம்மென வந்த வீரன் கூவிய சசியை நோக்கி
யம்மனை யழுங்கல் வாழி யசமுகி யென்னும் வெய்யாட்
கிம்மியின் றுணையு மஞ்சே லீண்டுனைத் தீண்டு கின்ற
கைம்முறை தடிந்து வல்லே விடுவிப்பன் காண்டி யென்றான். (௬)

வீரன துரையைக் கேளா மெல்லிய லணங்கி னல்லாள்
பேரிடர் சிறிது நீத்துப் பெயலுறு துவலை தூங்கு
மாரியின் செலவு கண்ட வளவயற் பைங்கூழ் போல
வாருயிர் பெற்றாண் மறுறை யசமுகி யவனைக் கண்டாள். (௭)

ஓவரும் புவன மியாவு மொருங்குமுத் தொழிலு மாற்று
மூவருந் துறக்கம் வைகு முதல்வனுந் திசைகாப் பாளர்
யாவரு மென்முன் னில்லா ரீண்டெனை யிகழ்ந்து சீறித்
தேவர்கள் குழுவி னுள்ளா னொருவனோ செல்வ னென்றாள். (௮)

வெறித்திடு கண்ணி னோக்கி வெவ்விதழ் துக்கி வல்லே
கறித்தன ளெயிற்றின் மாலை கறகற கலிப்ப வார்த்து
முறித்திவன் றன்னை யுண்டு மூரண்வலி தொலைப்ப னென்னக்
குறித்தசமு கத்தி னிற்பக் குறுகினன் றிறல்சேர் வீரன். (௯)

தட்டறு நோன்மை பூண்ட சசிதனைத் தமிய ளென்றே
பட்டிமை நெறியாற் பற்றிப் படருதி யிவளை யின்னே
விட்டனை போதி செய்த வியன்பிழை பொறுப்ப னின்றே
யட்டிடு கின்ற தில்லை யஞ்சலை யரிவை யென்றான். (௧௦)

கேட்டலு முருத்திவ் வார்த்தை கிளத்தினை ன்னை யாரே
யீட்டிடை விலைப் போற்றென் றிப்பணி தலைதந் துள்ளார்
வேட்டன னவரைக் கேட்ப விளம்புதி யென்றான் முந்தூழ்
மாட்டுறு கனலி யென்னத் தன்குல முடிப்பான் வந்தான். (௧௧)

தாரணி முதல மூன்றுந் தலையளி புரிந்து காப்பான்
காரணி செறிக்குற் றன்ன கரியவன் கடவுள் வெள்ளை
வாரண முடைய வையன் மற்றிது பணித்தா னென்பேர்
வீரரில் வீரனுன வீரமா காள னென்றான். (௧௨)

என்றலு மனைய வாய்மை யிந்திரன் றனக்கு மீசன்
பொன்றிரண் மார்ப னல்கும் புதல்வற்கும் பொதுமைத் தாகி
நின்றது வாகத் தேவர் கிருதரால் வருந்து மூழாற்
சென்றவன் மகவா னேவ லாமெனச் சிந்தை செய்தான். (௧௩)

புந்தியி லிதனை யுன்னிப் பொள்ளெனச் சினமீக் கொள்ள
விந்திரன் றொழுவன் கொல்லா மெனையிடை தடுக்கு நீரான்
சிந்தவ னிவனை யென்னுச் செங்கையிற சூலந் தன்னை
யுந்தின னதுபோய் வீர னுரனெதிர் குறுகிற் றன்றே. (௧௪)

குறுகிமுன் வருத லோடுங் குரூஉச்சுட ரங்கி மூன்று
முறையினே ரிடையுற் றன்ன முத்தலைப் படையைக் காணூஉ
வறைகழல் வீரன் றொன்னு ளங்கியை யட்ட தேபோ
லெறிகதிர் வாளான் மைந்த னிருதுணி படுத்தி னானே. (௧௫)

படுத்தலு மணிக ணீலப் பையரா வுமிழ்ந்த தென்னக்
கடித்திடு மெயிற்றுப் பேழ்வாய்க் கருங்கண மழல்கான் றென்ன
விடித்திடு கொண்மூ வின்பா லெழுந்தமின் னென்ன வன்னாள்
விடுத்திடு சூல வைவேல் வெவ்வழல பொழிந்த தன்றே. (௧௬)

காலத்தி னுலக முண்ணக் கடலுறு வடவை தானே
யாலத்தை மீது பூசி யசமுகி கரத்திற் கொள்ளச்
சூலதி னமைந்த தம்மா சோதனை கொடிப்ப னென்னுச்
சீலத்தின் மிக்கோன் கூர்வாள் செந்தழல் பொழிவித தன்றே. (௧௭)

சூளினூர்த் தெறியும் வீரன் சுடர்கொண்முத் தலைவே றன்னை
வாளினூற் றடிதலோடு மறிமுகத் தணங்கு சீறிக்
கேளினுற் றனது பாங்கிற் கிடைத்ததுன் முகிகைச் சூலங்
கோளினுற் கடிது வாங்கிக் கூற்றனு மூட்க வார்த்தாள். (௧௮)

வசிகெழு சூலம் பற்றி மருத்துவன் றுணைவி யான
சசிதனை யிகுளை யாகுந் தையறன் கரத்திற் சேர்த்தி
விசியின்மால் பாந்த ளோர்டு நெடுங்கதிர் நேர்ப்புக் கென்ன
விசையொடு கொடியள் சென்றாள் வீரமா காளன் றன்மேல். (௧௯)

ஒற்றைமுத் தலைவே றன்னை யொப்பிலான் மரும மீது
குற்றிய முன்னி நீட்டிக் குறுகின ளமர்செய் போழ்திற்
கற்றையஞ் சுடர்க்கூர் வாளாற் காவல னெறித லோடு
மிற்றது சூலங் கண்ட வசமுகி யிடைந்து போனாள். (௨௦)

இடைந்தன ளேகி யாண்டோ ரிருங்கிரி பறித்திட் டின்னே
முடிந்தனை போது மென்று மொய்ம்புட னவன்மே லோச்சத்
தடிந்தனன் றடித லோடுந் தாரைவாட் படையும் வல்லே
யொடிந்தது கொடியள் காணு வொல்லொலிக் கடல்போ லார்த்தாள். ()

வீரமா காளா கேண்மோ வேதனே யாதி விண்ணோ
ராரும்வந் தாசி கூற வகிலமு மாளு கின்ற
சூரனு மெமது முன்னோன் றேனிடை யுய்ப்பக் கொண்டு
பேருவ னிவளை யோராய் விலக்கினை பேதை நீராய். (உஉ)

தடுத்திடன் முறைய தன்றாற் றூரகன் றனை வீர
ரடுத்திடிற் பம்பர் கண்டா யன்றியும் யானே நின்னை
யெடுத்தனன் மிசைவன் றுய்க்கி னிரும்பசி யுலவா தென்று
விடுத்தன னுய்ந்து போதி விளிவுறே லெளியை யென்றாள். (உங)

பாதகி யினைய மாற்றம் பகர்தலும் வீரன் கேளா
வேதியி னினது சூலப் படையிற வெறிந்தே னின்னை
மாதென வடாது நின்றேன் மற்றிதை புணர்ந்து வல்லே
போதியா லிவளை விட்டுப் போக்கலை கரத்தை யென்றான். (உச)

என்றலுங் கொடியள் கேளா வீங்கிவன் வாளு மின்றி
நின்றன னிவனொ டேபோர் நேருத னெறிய தன்றா
லன்றியு மிவளை வெல்ல லரிதினிச் சசியைக் கொண்டு
சென்றிட றுணிபா மென்னுத் திரும்பினள் சேடி தன்பால். (உரு)

துன்முகி யாகி நின்ற றுனைவிதன் சிறைப்பட் டுள்ள
பொன்மிகும் யாணர் மேனிப் புலோமசை தனைத்தான் பற்றிக்
கொன்மலி யம்பொன் மேருக் குவட்டினைக் கொடுபோங் காலின்
வன்மையி னோடு கொண்டு மறிமுகத் தணங்கு போனாள். (உசா)

போகலு மதனை யையன் பொருநரிற் றலைவன் பாரா
வேகுதி போது நில்லென் றெய்தியே யுடைவாள் வாங்கிச்
சேகுறு மனத்தாள் கூந்தல் செங்கையாற் பற்றி யீர்த்துத்
தோகையைத் தொட்ட கையைத் துணித்தனன் விண்ணோர் துள்ள. ()

இருட்டுறு பிலத்துற் றோரை யெடுத்துவெள் ளிடையிட் டென்ன
மருட்டுறு மதிய ளாகி வருந்திய சசியென் பாளை
யருட்டிறத் தோடு வீடு செய்துபின் னவுண மாதை
யுருட்டினன் றனது தாளா லுருமென வுதைத்துத் தள்ளி. (உஅ)

அயமுகி வீழ்த லோடு மழுங்கியே யயலி னின்ற
வயமிகு துன்மு கத்து மங்கைதன் கரத்தி லொன்றைச்
செயிரறு சசியை நீயுந் தீண்டினை போது மென்னுத்
துயல்வரு தொடையல் வீரன் றுணித்தனன் சோரி பொங்க. (உகூ)

வேறு.

மதர்த்திடு துன்முகி வன்கை வாளினாற்
சிதைத்திடு மொய்ம்புடைச் சேனை காவல
னுதைத்தன னனையளு மோவென் றேயுளம்
பதைத்தனள் புலம்பியே படியில் வீழவே. (௩0)

ஆக திருவிருத்தம் - கசுஙங.

இப்படி புலம்பிநிற்கிற இந்திராணியானவள் மகாசாத்தாவைக்கருதிப் பல வகையாய்த் துதித்துவணங்க, அதைக்கண்டமாகாளர் இந்திராணிக்குத் தன்பமுண் டாயிற்றென்று விரைந்துவந்து நீயஞ்சவேண்டாம், அசமுகியை இதோவொரு நொடிப்பொழுதில் கொல்லுகிறேனென்றார். அதைக்கேட்ட இந்திராணி சிறிதுதுன் பம்நீங்கி நிற்க, அதைக்கண்ட அசமுகி மாகாளரைநோக்கி, நீயார், உன்னையனுப் பினவர்யார் என்றுகேட்க, மாகாளர் அவளைநோக்கி, நான் மகாசாத்தாவின் வேலைக்காரன், இந்திராணியைக்காவல்செய்ய அனுப்பினார், ஆதலால் இங்குவரலாயிற்று என்று சொல்லுதலும், அசமுகியானவள் சினங்கொண்டு தன்கையிலிருந்த சூலத்தை அவர்மார்பில் எறிந்தாள். அவர் அதை யிருதுண்டாக்கினார். அதன்பின்னே தன் தோழிகையிலிருந்த சூலத்தைவாங்கி வீசினாள், அதையும் இருதுண்டாக்கினார்; பிறகவள் ஒருமலையைப்பறித்துவீசி அவரதுவ ளையழுத்து அம்மாகாளரைநோக்கி, நீவந்து இடையேதடுக்காவிடின் இந்திராணியை யென்தமையனாகிய சூரபன்மனிடத்தே சேர்த்திருப்பேன், தாரகனுடைய சேனைவீரர்கண்டால் உன்னைக் கொலை செய்துவிடுவார்களே, நீயென்பசிக்குணவாகவும் பற்றமாட்டாய், விரைந்தோடிப் போவென்றாள், இதைக்கேட்டவீரமாகாளர் அவளைநோக்கி, நீ பெண்ணென்றே உன்னைக்கொல்லாதொழிந்தேன், இந்திராணியை விட்டுவிடு, விடாயானால் உன் கையை யிழந்துபோவாய் என்றுசொல்ல, அசமுகியானவள் இவனோடுநாம் போர் செய்வதுதகாதென்று இந்திராணியைத் தூக்கிக்கொண்டுபோனாள். அவ்வாறு போகக்கண்ட வீரமாகாளர் அவள் கூந்தலைப்பிடித்திழுத்து, தன் உடைவாளினால் இந்திராணியைப்பிடித்த கையைத்துண்டித்து, இந்திராணியை விடுவித்து, அசமுகியைக் காலாலுதைத்து அவளுடையதோழியாகிய துன்முகியின்கரத்தை வெட்டிக் காலாலுதைக்க, அவளும் மனம்பதைத்துப் புலம்பிக்கொண்டிருந்தாள்.

மகாகாளர்வருபடலம் முற்றிற்று.

---

# அசமுகிசோகப்படலம்.

அறைபடு கழலினா னவுண மாதர்கை
யெறிதருங் குருதிநீ ரெழுந்த தன்மையாற்
றிறல்கெழு வெய்யசூர் திருவைச் சுட்டிடுங்
குறைபடு ஞெகிழியின் கோலம் போலுமே. (க)

திரைந்தெழு குடிஞைபோற் குருதி சென்றிடக்
கரந்துமி படுதலுங் கவன்று வீழ்ந்தனள்
வருந்தின ளரற்றினண் மறிமு கத்தினாள்
விரிந்திடு கனலுடை வேலை போன்றுளாள். (உ)

மருண்டனள் பதைத்தனண் மறித்த கையினள்
வெருண்டனா ணிலனுற வியன்கை யெற்றினள்
ளுருண்டனள் வெரிநுட னுரமுந் தேய்வுறப்
புரண்டனள் செக்கரிற் புயலிற் றோன்றுவாள். (ங)

புரந்தரன் றேவியைப் பொம்மெ னப்பிடித்
துரந்தரு வாயிலிட் டுண்ப னீண்டெனு
விரைந்தெழுஞ் சென்றிடு மீளும் வீழ்ந்திடு
மிருந்திடுஞ் சாய்ந்திடு மிரங்குஞ் சோருமே. (௫)

கடித்திடு மிதழினைக் கறைகண் மீச்செலக்
குடித்திடு முமிழ்ந்திடுங் குவல யத்திரீஇத்
துடித்திடும் பெயர்ந்திடுந் துளக்குஞ் சென்னியை
பிடித்தெனக் கறித்திடு மெயிற்றின் மாலையே. (௬)

திகைத்திடு நன்றுநஞ் செய்கை யீதெனு
நகைத்திடு மங்குலி நாசி யிற்றொடும்
புகைத்தென வுயிர்த்திடும் புவியைத் தாள்களா
லுகைத்திடும் புகையழ லுமிழும் வாயினால். (௭)

உம்மென வுரப்பிடு முருமுக் கான்றென
விம்மெனச் சினத்திடு மெரிவி ழித்திடுந்
தெம்முனைப படையடுஞ் சேனை வீரனை
விம்மிதப் படுமுடல் வெயர்க்கும் வெள்குமே. (௮)

அற்றிடு கரத்தினை யருத கையினாற்
றெறறென வெடுத்திடுந் தெரிந்து நோக்கிடு
மொற்றிடும் விழிகளி லுகுக்குஞ் சோரிநீ
ரிற்றெவர் பட்டன ரென்னி னென்னுமே. (௯)

வீவதே யினியெனும் வினையி னேன்றனக்
காவதோ விஃதெனு மைய கோவெனு
மேவரும் புகழ்தரு மெங்க ளண்ணர்பாற்
போவதெவ் வாறெனப் புலம்பு கொள்ளுமே. (௧௦)

காசினி தனில்வருங் கணவர் கைதொடக
கூசுவ ரேயெனுங் குறிய பங்கெனப்
பேசுவ ரேயெனும் பிறரும் வானுளோ
ரேசுவ ரேயெனு மென்செய் கேனெனும். (௧௧)

தேவர்க ளனைவருஞ் சிந்தித் தென்கரம்
போவது புணர்தனர் பொன்று வேனினி
யாவதன் முன்னரே யவரை யட்டல
கேவையு முடிப்பனென் றெண்ணிச் சீறுமே. (௧௨)

பாருயிர் முழுவதும் படுத்தி டோவெனு
மாரழல் வடவையை யவித்தி டோவெனும்
பேருறு மருத்தினைப் பிடித்தி டோவெனு
மேருவை யலைத்தன்ன் வீட்டு கோவெனும். (௧௩)

பீளுறு மெழிலின்னர் பிறவும் பற்றியே
மீளரி தெனும்வங்க மிசைத்தி டோவெனு
நாளினை முழுவது நாளு டன்வருந் [illegible]
கோளினை முழுவதுங் கொறித்தி டோவெனும். (௧௪)

சீர்த்தகை யிழந்தியான் றெருமக் துற்றது
பார்த்திக ழுங்கொலிப் பரிதி வானவ
னூர்த்திடுந் தேரொடு மவனைப் பற்றியே
யீர்த்தனன் வருவதற் கெழுந்தி டோவெனும். (கச)

கண்டதோர் பரிதியைக் கறித்துச் சூழ்ச்சிசெ
யண்டர்கள் யாரையு மடிசி லாகவே
யுண்டெழு கடலையு முறிஞ்சிக் கைபுறத
தெண்டிரை தனிற்கழீஇத் திரும்பு கோவெனும். (கரு)

செந்நல நீடிய தென்னங் காயிடைத்
துன்னிய தீம்பயன் சுவைததிட் டாலெனப்
பின்னுறு மதியினைப் பிடித்துக் கவ்விமெய்
யின்னமிர் தினைநுகர்ந் தெறிகெ னோவெனும். (கசு)

இந்திரன் களிற்றினை யேனைத் தந்தியைச்
செந்துவர்க் காயெனச் சேர வாய்க்கொளா
வைந்தரு விலைகளா வவற்றுள் வெண்மலர்
வெந்துக ளாக்கொடு மிசைகெ னோவெனும். (கஎ)

தாக்குகோ பணிகளைத் தலைகி ழுக்குற
நீக்குகோ பிலம்படு நிலயத் தோரையுந்
தூக்குகோ புவனியைச் சுழற்றி மேலகீ
ழாக்குகோ மாலென வருந்து கோவெனும். (கஅ)

வேறு.

ஆரு மச்சுற வினையன வசமுகி வெய்யாள்
சூரன் றங்கைமா னுளததின ளிறபபது துணிவாள்
பேரி டும்பைய டொலைவுறு மானமே பிடித்தாள்
வீர வன்மைய ளாதலி னுரைத்தனள் வெகுண்டாள். (கசு)

வெகுளு மெல்லையிற் கண்டன டுன்முகி வெய்ய
தகுவர் தங்குலத் துதித்தன ளாயினுந் தகவின்
புகுதி சால்புணர் புந்திய ளாதலிற் பொருக்கென்
றிகுளை முந்துற வந்தன ளினையன விசைததாள். (உ0)

வைய மென்செயும் வானக மென்செயு மற்றைச்
செய்ய வானவ ரென்செய்வர் வரைகளென் செய்யு
மைய மால்கடல் பிறவுமென் செய்திடு மவனுற்
கைபி ழந்திடி னுலகெலா முடிப்பது கடனோ. (உக)

பாரும் வானமுந் திசைகளும் பல்லுயிர்த் தொகையுஞ்
சேர வேமுடித் திடுவதை நினைந்தனை செய்யி
னூரு மின்றனை யென்செய்வ ரவையெலா முடைய
சூர னேயுனை முனிந்திடு மவன்வளந் தொலையும். (உஉ)

ஆத லான்மனத் தொன்றுநீ யெண்ணலை யவுணர்
நாத னாகிய வெய்யசூர் முன்னுற நாம்போ
யீதெ லாஞ்சொலி னிமையவர் கிளையெலா முடிக்கும்
போத லேதுணி வென்றனள் பின்னரும் புகல்வாள். (உங)

வேறு.

ஞானமில் சிறுவிதி நடாத்தும் வேள்வியில்
வானவர் தங்களின் மடந்தை மார்களிற்
றானவர் தங்களிற் றத்த மெய்களி
லூனமில் லோரையா முரைக்க வல்லமோ. (உச)

நினைவருங் கண்ணுத னிமலற் கேயலா
லனையனை யடைதரு மறிஞர்க் கேயலா
லெனைவகை யோர்க்குமெவ் வுயிர்க்கு மேற்பதோர்
வினைபடு மிழிதுயர் விட்டு நீங்குமோ. (உரு)

ஆகையின் மங்கைநீ யரற்றல் வெள்கியே
சோகமுங் கொள்ளலை துயரு மின்பமு
மோகமு முயிர்க்கெலா முறையிற் கூடுமா
லேகுது மெழுகென வியம்பித் தேற்றினாள். (உசு)

வேறு.

மொழிந்து தன்முகி தெளித்தலு நன்றென முன்னா
வெழுந்து தாண்மென வசமுகி யென்பவ ளிலதாய்க்
கழிந்த துன்பொடு நின்றதோர் சசியினைக் காணாஉ
வழிந்த மானவெந் தீச்சுட வினையன வறைவாள். (உஎ)

துப்பு றுத்திய வண்டங்கள் யாவினுஞ் சூரன்
வைப்பு றுத்திய திகிரியு மாணையும் வழங்கு
மிப்பு றத்தினி லொளிப்பினு மிதுவன்றி யண்டத்
தப்பு றத்தினி லொளிப்பினும் பிழைப்புமக் கரிதே. (உஅ)

மறைத லுற்றிடு மிந்திரன் றன்னையிவ் வனத்தி
னுறைத லுற்றிடு முன்றனை யொழிந்தவா னவரை
யிறைத னிற்பற்றி யீர்த்துப்போ யென்னகர் தன்னிற்
சிறைப டுத்துவன் றிண்ணமெங் கோமகன் செயலால். (உகூ)

உங்க டம்மையான் சிறைபடுத் தேனெனி னுலக
மெங்கு மாகின்ற சூரபன் மாவெனு மிறைவன்
றங்கை யன்றியா னொன்னலார் தனிலெழுந் தனவுங்
கொங்கை யறுந்தன மேயினிய குங்கொனொன் றகன்றாள். (ங0)

ஆ திருவிருத்தம் - கசுஙங.

---

வசனம்.

அசமுகியும் அவள்தோழியும் கைகள் வெட்டுண்டதனால் பெருகிய உதிரப்பெருக்கானது சூரபன்மன்பெற்ற செல்வத்தைச்சுடுகிற தீக்கடைகோல்போலிருந்தது. அசமுகியானவள், தனது வெட்டுண்டகையொழிய நின்றகையை நிலத்திலறைந்து, இனிநான் இந்திராணியை விழுங்கிவிடுவதே நலமென்று துணிந்துபோவாள், மீண்டுவருவாள், விழுவாள், எழுந்திருப்பாள், சாய்வாள், இரங்குவாள், உதட்டைக் கடிப்பாள், இவ்வாறு வருந்துவாளாய் அறுபட்டகையை அறாதகையினாலெடுத்து ஒற்றிப்பார்த்துக் கண்களில் உதிரநீர்பெருக, இவ்வுலகில் என்னைப்போலத் துன்பமடைந்தவர்கள் ஒருவருமில்லையென்று கூறுவாள்;

இவ்வாறுசொல்லிக் கோபித்துக்கொண்டபோது, அருகிலிருந்த துன்முகியென்னுந் தோழியானவள் எழுந்துநின்று அசமுகிக்குச் சொல்லத்தொடங்கினள்.

நீ செய்தகாரியத்தைநோக்கினால் உன்தமையனே உன்னைவெறுத்துக்கொள்ளநேரிடும். முன்னே தக்கன் யாகஞ்செய்தபோது தேவாசுரர்களில் வருந்தாதவர் யாவர்? நீ வீணாகப்புலம்புவதனால் பெறும்பயன் ஒன்றுமில்லை. இங்கே நடந்தசெய்தியை நாம்போய்ச் சூரபன்மனுக்குத் தெரிவிப்பதே நலமென்றுசொல்லித் தேற்ற அசமுகியும் அதுவேசரியென்று துணிந்து, அயிராணியைநோக்கி அடிபெணணே! என்தமையனாகிய சூரபன்மனுக்கு அடங்கி நடவாதவர்களும், அவனரசாட்சிக்குட்படாத வுலகங்களும் இல்லையல்லவா? மறைந்துதிரிகிற வுன்கணவனையும் உன்னையும் பற்றிக்கொண்டுபோய்ச் சிறைசெய்யும்படி செய்யாவிட்டால், நான் சூரபன்மனுக்குத் தங்கையுமல்ல, நான் பெண்பிறப்புமல்ல, பேடியாவேனென்றுசொல்லிப் போய்விட்டாள்.

அசமுகிசோகப்படலம் முற்றிற்று.

# இந்திரன் மீட்சிப்படலம்.

அகல நின்றதோர் வீரமா காளனு மடலோ
னுகவை யோடுறு சசியினை நோக்கிநின் னுளத்திற்
றகுவர் தங்களுக் கஞ்சலை யன்னையுன் றலைவன்
புகுது மெல்லையு மளிப்பனீண் டுறைகென்று போனான். (௧)

போன காலையிற் புலோமசை யடவியம் புறனோர்
மானி னம்பிரிந் துற்றென வவ்வனம் வைகிக்
கோன வன்வினை முற்றிய நோற்றனள் குறிப்பா
லான பான்மையை நாரத முனிவர னறிந்தான். (௨)

மேலை வெள்ளியம் பருப்பதந் தனில்விரைந் தேகிச்
சில விண்ணவர் தம்முடன் சிவனடி பரவக்
கால மின்றியே யிருந்திடு மிந்திரன் கடைபோய்
ஞாலம் வைகிய புலோமசைக் குற்றவா நவின்றான். (௩)

நவின்ற வாசகங் கேட்டலு மகபதி நனியுட்
கவன்று தேறியே முனிந்துபின் னிறையருள் கருதி
யவன்றன் மாமுறை தூக்கியே தன்னொடு நந் தழுங்கித்
துவன்ற தேவரோ டெழுந்தன னரன்புகழ் துதித்தே. (௪)

வந்து நந்தியெம் மடிகளி னடிமுறை வணங்கி
யந்த மில்பகல் வேலைநோக் குறறன னமலன்
சிந்தை செய்தமை யருள்புரிந் திடுகிலன் நீயே
முந்தி யற்றிய தீவினைப் பகுதியை முன்னி. (௫)

கைம்மை யாம்பெய ரண்ணங்கினோர் பெருவகை கறுத்த
செம்மை யார்களத் தெம்பிரா னெமக்கருள் செய்வான்
பொய்ம்மை தீர்தவ மியற்றிட கிலமிசைப் போது
மெம்மை யாங்கருள் புரிக்கனை விடுத்தியென் றியம்ப. (௬)

நன்று போமென நந்தியெம் பெருந்தகை நவிலத்
துன்று வானவர் தம்மொடுங் கழுமலந் துன்னி
நின்ற வீரமா காளனைக் கண்டன னேர்போய்ச்
சென்று புல்லியே முகமனொ டளப்பில செப்பி. (எ)

போதி யையவென் றனையனை யையன்பாற் புகுத்தி
மாது நோற்றுழிக் குறுகியே யவடுயர் மாற்றிக்
கேத மெய்திய வசமுகி சூளுரை கேளா
வேது செய்வதென் றுன்னின னிமையவர்க் கிறைவன். (அ)

சுடர்ப்பெ ருங்குலி சத்திறை சூழ்ந்தனன் றுணியா
வடுத்த மங்கையை யுடன்கொடே விரைந்தவ ணகன்று
புடைக்கண் வந்திடுங் கடவுளர் தம்மொடும் புராரி
யெடுத்த வார்சிலைப் பொற்றையிற் கரந்தன னிருந்தான். (க)

ஆ. திருவிருத்தம் - ககசுஉ.

---

### வசனம்.

பிறகு, வீரமாகாளர் இந்திராணியைநோக்கி, நீயஞ்சவேண்டாம், உன்கண வன்வருமளவும் நான் உன்னைக் காத்துக்கொண்டிருப்பேன் என்றுசொலல, அப்படியே இந்திராணியும் அந்தக்காட்டில் தன்கணவன்கருத்து முடியவேண்டுமென்று தவஞ்செய்துகொண்டிருந்தாள். அதையறிந்த நாரதமுனிவர், வெள்ளிமலைகுப்போய் அங்கிருந்த இந்திரனைக்கண்டு இந்திராணிக்குநேரிட்ட இடையூறுகளைச சொல்லிநிற்க, இந்திரன் மிகவும்மனம்வருந்தி, நந்திதேவரைவணங்கி, நாங்கள நிலவுலகிற்சென்று தவஞ்செய்ய அருள்புரியவேண்டுமென்று பிரார்த்தித்து விடைபெற்றுச் சீகாழியையடைந்து இந்திராணியைக்காத்திருந்த மாகாளரைக்கண்டு இன்சொற்சொல்லி அவருக்கு விடைகொடுத்தனுப்பிவிட்டுத் தன்மனைவியாகிய இந்திராணியைக்கண்டு அவள்துயரத்தைத் தணித்து, அசமுகிசொன்ன சொற்களை இந்திராணிசொல்லக்கேட்டு, மேருமலையைச்சென்றடைந்து மறைந்திருந்தான்.

இந்திரன்மீட்சிப்படலம் முற்றிற்று.

---

## சூரனரசிருக்கைப்படலம்.

இன்ன பான்மையின் மகபதி யிருந்தன னிப்பான்
முன்ன மேகிய வசமுகி வெய்யதுன் முகத்தா
டன்னொ டேகியே மகேந்திரத் தனிநக ரடைந்தா
ளன்ன காலையிற் சூரன்வீற் றிருந்தவா றறைவாம். (க)

வேறு.

மீயுயர் கின்ற விண்ணினின் றிழிந்த விழுமிய மேதினி வரைப்பி
ஞயிர கோடி கொண்டவண் டத்தி லாடகப் பித்திகை யவற்றுட்
டயன விலக்கி நல்லன் வெடுத்துத் திசைமுகத் தவர்கள்செய் தென்ன
வோய்வற விளங்கு தபனியப் பொதுவொன் றோராயிரம் யோசனை யுறமே. (உ)

இத்தரை யுளதாந் தொல்லையண் டத்தி னிடையிடை யெய்தியே யிலங்கு
மத்தமால் வரைகள் கைபுனைந் தியற்றி யம்புயா சனர்பலர் கூடி
வைத்தெனச் சூர னரசிய னடாத்து மன்றினி லாயிர கோடி
பத்தியி னிறுவு மாடகத் தூணம் பரந்ததப் பெருமையார் பகர்வார். (ரு)

தொல்லையண் டத்தின் கண்டொறுங் கெழீஇய சுவணமா தரையெலாந் தொகைசெய்
தல்லன விலக்கி நல்லன தெரிந்தே யமைத்தபோ லணிபெறு நிலத்தி
லொல்லுறு புடையி லும்பரி லங்க ணுலப்பிலாக் குலகிரிக் குழுவிற்
பல்லிருந் துணிசெய் தணிபடுத் தென்னப் பன்னிற வோவியம் பயிலும்.

பொன்னுலா வண்டத் தும்பர்க டோறும் பொருந்திய செக்கர்வான் புராரி
தன்னதா ணையினு லொருங்குகுசூழ்ந் தென்னத் தண்மலர் விதானமீத் தயங்கப்
பன்னிரு கோடி யாகியெங் கணுஞ்சூழ் பகலவர் சிலவரே யன்றி
யன்னவர் பலரும் பணியிலுற் றென்ன வணிமணிக் கண்ணடி யொளிரும்.

மண்ணுலா வண்டத் திரவிக ளென்றாழ் வரம்பிலா மதிகளி னுளவாந்
தெண்ணிலாக் கற்றை யைம்பெரு நிறத்த செல்லினம் யாவையுஞ் செறிந்தே
யண்ணலார் மேலைக் கம்பலஞ் சூழ்போ யமர்ந்தென வாயிடைக் கவரி
யெண்ணிலா தனவும் பஃறுகிற் குழூவு மிடைவிராய் மிடைவன வெங்கும்.

பரக்குறு மண்டந் தொறுந்தொறு முளவாம் பகலினைப் பரிமுகத் தெரியி
னுருக்கியொன் றாக்கித் தவிசென வியற்றி யொளிறுதா ரகையவட் குயிற்றித்
தருக்குறு கின்ற மதிகளை மடங்கற் றகவுசெய் திருத்திய தென்னத்
திருக்கிள ரவையத் தவுணர்கோ னிருப்பச் சிறந்ததோ ரரியணை திகழும். ()

ஆனதோர் மன்றத் தரியணை மிசையே யாயிர கோடியண் டத்தின்
மேனியிர் வடவை யங்கியும் விடமு மிசைந்தழி யாநெறி மேவித்
தானவர் பரவக் கூற்றெலா மொன்றாய்த் தணப்பில்பே ரணிகலந் தயங்க
வானியிர்ந் துற்று லென்னவெஞ் சூர மன்னவர் மன்னன்வீற் றிருந்தான்.

மேலைநா ளமல னுதவுபல் லண்ட மேவர நடாத்துதொல் லாணைக்
கோலொடு வெளிய சீர்த்திகண் முழுதுங் குறுகியே யீருருக் கொண்டு
பாலுற வந்து நின்றதே யென்னப் பாங்கரி லவுணர்க டாங்கும்
வாலிய துணைசேர் தவளவெண் கவிகை மாமதிக் கடவுளை மலைய. (கூ)

காருறழ் படிவத் துவரிக ளனைத்துங் கண்ணகன் பாற்கடன் முழுது
மீருரு வெய்தி யெழுந்துமே லோங்கி யிருந்தன வைகலுஞ் செலுமத்
தாரக விறலோன் பஃறலைச் சீயத் தலைமையான் சார்ந்தய லிருப்ப
வாரழ லுருவப் பண்ணவ ரேபோ லமைச்சருங் குமரரு மமர. (க0)

எவ்வெலா வண்டத் துறைதரு மருத்து மிரும்புனற் கிறைவரு மாகிச்
செவ்விதி னெருங்கித் தத்தமி னுலவாச் சீகரம் படுபனி சிதறி
யவ்வயின் வேண்டு மளவையிற் பலவா யவனடி பணிந்தெழூந் திறம்போன்
மைவரை யனைய வவுணர்க ளிரட்டும் வாலிய கவரிகள் வயங்க. (கக)

உரைத்திடு மண்டந் தொறுந்தொறு முள்ள வும்பரி லியக்கர்கோ னுலகிற்
றரைப்பெரு வரைப்பிற் பிறவினு ளதனிற் றவறிலா வற்புதத் தனவாத்
தெரித்தன ரெடுத்துப் பொதிந்தென நறிய திரையன்மெல் லிலைதுவர்ப் பழுக்காய்
விரைத்திடு சுண்ணங் கொள்கலம் பரியா வினைமுறை யோர்பலர் விரவ. ()

நின்றதோ ரேனை யுருக்கருட் கில்லை நீரும்பத் துள்ளதோ டிகமேற்
பொன்றரை யுழியின் மணிசொரிந் தென்னப் புகட்டுறு தம்பலக் களாசி
மன்றதொல் லழிவுர் திருத்தினர் போருவ மற்றவை யவுணர்க ளேந்தி
துன்றிருக் துவர்க்கீர் யுண்ட்பிற பரிக்குந் தொழுவர்தம் குழுவொடு திவன்ற.

ஆழியங் கிரியிற் கதிர்மணி வெயிலு மன்னது சூழ்ந்தபே ரிருளும்
வாழிய வமுது மூவரியு மல்லா வாரிதி யும்பல மணியு
மூழியி னிறுதி யமையமே லெலலா மொன்றிய தென்னமுன் னிருபால்
கேழுறு பின்ன ரவுணர்மாத் தலைவர் கிளையொடு துவன்றினர் கெழும ()

மின்னவிர் விசும்பி னகட்டினை யளவி வெண்மதிக் கடவுண்மெய் யணுகிப
பின்னுறு மமுத நீர்க்கட றிளைத்துப பெரும்புறப் புணரியிற் படியா
விங்கில மருங்கில் வானகத் துள்ள வெழினமலாக் காவுதோ றுலாவித
தன்னெலி யின்றி மென்மெல வசைந்து தண்ணென வசந்தன்முற் சார

விண்படு நிறைநீரப் புதுமதிக் கடவுள் வியன்பனித் துவலையைத் துறறுக்
கண்படு துறகதத தண்டலைப பொதுமபிற காமரம் போதிடைக் கவிழ்ததி
யெண்படு பன்னாள் கழிததபின் கவாந்தே யெழிலிகள கரந்துதின் றீணடைத
தண்பனி யுறைப்பிற் கண்ணுறுத் துவலை தணப்பறச் சிதறிடத் தமயில் ()

தேனம ரைம்பா லுருப்பசி யரமபை திலோத்தமை மேனகை முதலாம
வானவர் மகளி ரியக்காதம் மகளிர் வலிகெழு மரக்கர்தம் மகளிர்
தானவர் மகளிா விஞ்சையர் மகளிர் சாரணர் சித்தர்தம் மகளி
ரேனையர் மகளி ரியாவரும் வெவவே றியற்படு களிநட மியற்ற. (௧௭)

ஐந்திறத் துருவங் காலையி லுரைப்பா னமையமின் றூகியே வேதா
வந்தொரு புடையி லொதுங்கின னிருப்ப மற்றவ னுதவுறுங் குமரா
நந்துறு பெருநீக் குடங்கரிற் கின்னி னுடினர் நாழிகைப் பறையை
முந்துற விரட்டிப பதந்தொறுஞ் சென்று முறைமுறை யுரைததனர் திரிய.

தேர்த்திடு முழுவைச் சூழலிற் சிலமான் சென்றெனை வவுணர்தஞ் செறிவில
வேர்த்துடல் பதைபப வரும்பல முனிவர் வேறுவே றூசிக ளிசையா
வார்த்திடு மொலியாற் கேட்டில வாமென் றஞ்சின ரவருறு புலததைப
பார்த்திடுந் தோறும் வாழ்கெனப் பரவிய பாணியை விரித்தனர் நிற்ப.()

திருக்கிளர் பொன்னாட் டிந்திர னல்லாத் தேவர்கள் யாவரு மவுணா
நெருக்கின ரூந்த வேகிநேர் புகுவோர் நெடுங்கடை காறுமுன் றளள
வெருக்கொடு சென்று மீணடுமற் றூகி வியன்கடை காவலா புடைபபத
தருக்குறு மவையங் காணிய பெருது தம்முளங் குலைந்தனர் திரிய (௨௰)

வெற்றவெண் கதத்த ரவுணர்கஞ் சுகிசேர் மெய்யினர் வெறுக்கையஞ் சூரல்
பற்றிடு காத்தர் செல்லெனுந் தெழிப்பர் பனிப்பிறை யெயிற்றர்பல் லிமையோர்
பொற்றட மகுடஞ் சிதறிடப் புடைப்போர் புயனுறு சூறையிற ரரந்துஞ்
சுற்றுற நிறுத்து மிருததியும் புகுந்தோர் தொல்பெயர் செப்பிமுன் றுதிபப.

பொன்றிகழ் கமலத் திதழெலாம் விரிந்த போதினிற் பொருட்டிடை தோறு
மின்றிகழ் நுசுப்பிற் சுரும்பினர் பலராய் வீற்றுவீற் றிருத்தலை போலக
குன்றுறழ் கொங்கை மங்கையர் யுல்லோர் கொண்டுதன் னுழையுளிற் சென்று
துன்றிய பலவர் திபிகைத் தட்டனு சொன்முறை யாயிற் சுற்ற. (௨௨)

தென்னுறு பாலை குறிஞ்சியே மருதஞ் செவ்வழி யென்னுநா னிலத்திற்
பின்னகம் புறமே யருகியன் மற்றைப் பெருகிய துறழ்வெண் ணிரண்டாய்
மன்னிய காதத் திசைகளிற் பிறவில் வரம்பில வாயபாட் டதனுட்
கின்னரர் சித்த ரியக்கர்கந் தருவர் கிளத்துமங் கலத்தன விசைப்ப. (உ௩)

மாகமல் வேள்வி யாற்றிய திறனு மதிமுடிப் பரனரு ளடைந்தே
யேகிய திறனுந் தனதனை முதலா யாரையு நிலையழித் தனவுஞ்
சேகுறு மண்டம் யாவையுங் கண்டு திருவுட னரசியற் றியதும்
பூகத நிலையத் தவுணர்கள பல்லோர புடைதனின் முறைமுறை புகழ. ()

கார்த்திடு மவுணர் திசையுளார் ரேனோர் கைதொழுஉத தனதுசோன் கழற்காற்
றூர்த்திடு மலருந் தொல்பெருங் கவியுந் தூநெறி முனிவரர் தொகையுஞ்
சாத்தினர் வரையா மந்திர நெறியாற் றலைத்தலை யாசிகள் சாற்றிச்
சோத்தனர் சிந்துந் துணருமக் கதமுஞ் சீர்த்தகால் வீசினன் றிரிய. ()

ஆடியன் முறையை யியற்றினா தமக்கு மடைந்துதற் புகழுநர் தமக்கும்
பாடியன் முறையில் வலனுநர் தமக்கும பரிவுசெய் தலைவாக டமக்கும்
பீடுறு மகுடங் கடகநூன முதலாம் பேரணி மணிததுகில பிறவு
மாடுறு நிதியு மேனவு நின்று மலர்க்கைநீட் டினதொறும வழங்க. (உ௬)

தேவரு மேனை முனிவரும் பிறருஞ் செய்துருத தங்கள்பா லன்றி
யேவாபா லானு மிறைவனு மொருதா னேதநோக் குற்றனன் வெகுளி
னுவிய திழப்பார் போல்வெரீஇப புகழ்ந்து மவனுவப புறறிடி னுய்ந்து
மோவற நிற்ப ரசனிவீழ் தோறு முரைக்குமந் திரத்தினோ ரென்ன ()

ஆ திருவிருததம - ௧௩௬௩.

---

வசனம்.

இவ்வாறு இந்திரன் மேருமலையிலிருக்கையில், முன்னேசென்ற அசமுகி யானவள் துன்முகியென்னுந் தோழியுடனே சீகாழியைவிட்டு மகேந்திரநகரை யடைந்தாள். அவள்போகும்போது சூரபன்மன் கொலுமண்டபத்தில் தம்பிமா ராகிய சிங்கமுகனும் தாரகனும அயலிலிருக்க, குமாரவர்க்கங்களும் மந்திரிமாரும் சூழ்ந்திருக்க, அஷ்டதிக்குப்பாலகர்முதலியோா கைகுவித்து வணங்கிப் புஷ்பா க்ஷதைகளைத்தூவி யாசிர்வதிததிருகக, தேவா முனிவர் முதலியோர் சூழ்ந்து புகழ்ந்துகொண்டிருக்கப் பெருமகிழவோடு அரசுவீற்றிருந்தான்.

சூரனரசிருக்கைப்படலம் முற்றிற்று

---

# அசமுகிநகர்காண்படலம்.

இன்னன பலபல வெய்தச் சூரனு
மன்னவ விருத்தலு மற்றவ் வெல்லையிற்
றென்னக ரணித்துறத தன்மு கத்தினு
டன்னொடு மசமுகி தான்வந் தெய்தினாள். (௧)

மோட்டுறு மகேந்திர முதிய மாநகர்
கூட்டுறு திருவெலாங் குலைய முன்னவன்
மாட்டுறு துணையொடு வந்துற் றானெனக்
கிட்டிசை வாய்தலைக் கிட்டி னாரரோ. (உ)

கெழுதரு மசமுகக் கொடல ணங்குதன்
பழிதரு கையினைப் பார்த்து நேர்ந்துளா
ரழிதரு துன்புகொண் டழலிற் சீறினு
ரிழிதரு மிச்செயல் யார்செய் தாரென. (௩)

மானமி லசமுகி மகேந்தி ரப்புரந்
தானுறு துயர்க்கொரு தாரி காட்டல்போ
லூனுறு குருதிகை யுகுப்பச் சென்றுழி
யானது கண்டன ரவுணர் யாவரும். (ச)

வட்டுறு பலகையின் வல்ல நாய்நிரைத்
திட்டனர் கவற்றினை யிசைத்த சூளொடுங்
கிட்டின ரிடந்தொறுங் கெழுமி யாடினர்
விட்டன ரத்தொழில் விரைந்துற் றார்சிலர். (௫)

தெரிதரு கரியபொன் றிரித்திட் டாலெனப்
புரிதரு மருப்புடைப் புயலின் செச்சையை
முரிவரு பேரமர் மூட்டிக் கண்டுளார்
பரிவொடு பிரிந்தயல் படர்கின் றார்சிலர். (சு)

கார்ப்பெய லன்னதோர் கடாங்கொண் மால்கரி
கூர்ப்புறு மருப்புமெய் குளிப்பச் சோரிநீ
ரார்ப்பொடு தத்தமி லாடல் செய்வது
பார்ப்பது விட்டனர் படர்கின் றார்சிலர். (எ)

துய்யதோர் கிஞ்சுகச் சூட்டு வாரண
மொய்யொடு தன்னுயிர் முடியு மெல்லையுஞ்
செய்யுறு வெஞ்சினச் செருவை நோக்கினு
ரொய்யென நீங்கியே யுறுகின் றார்சிலர். (அ)

ஊனமில் பலபணி யுடன்று சீறியே
பானுவை நுகரவின் படரு மாறென
வானிக ளோச்சினர் வானிற் கைவிடா
மேனிகள் வியர்ப்புற வெகுண்டுற் றார்சிலர். (௯)

வாம்பரி தேர்கரி மானம் பாண்டில்க
ளேம்பலோ டூர்ந்திட வியற்றுங் கற்பொரீஇ
யாம்பொரு ளல்லதொன் றடைவ தென்னெனச்
சோம்புத லின்றியே தொடர்கின் றார்சிலர். (௧௦)

குறிகெழு வெள்ளிலோர்டு குற்றி நாட்டியு
மறிகுறி தீட்டியு மவையி லக்கமா
வெறிகுறு படையினை யெய்யுங் கோலினை
நெறிதொறும் விட்டவ ணேர்கின் றார்சிலர். (௧௧)

நாந்தக மாதியா நவிலுந் தொல்படை
யாய்ந்திடும் விஞ்சைக ளடிகண் முன்னமா
யேய்ந்திடுங் கழகமுற் றியற்று மாறுரீஇப்
போந்தன ரொருசிலர் பொருமன் மிக்குளார். (கஉ)

வீட்டபடு கனலிகால் வானின் கண்ணவாங்
காட்புறு நரம்பியாழ் காமர் வீணைகள்
வேட்புறு மீர்ங்குழன் மிடறு காலிசை
கேட்பது விட்டவண் கிட்டி னார்சிலர். (கந)

நாடக நூன்முறை நுனித்து நன்றுணர்
கோடியர் கழாயினர் கூத்த ரேனையோ
ராடுறு கோட்டிக் ளகலுற் றங்ஙனங்
கூடின ரொருசிலர் குலேயு மெய்யினர். (கச)

புலப்படு மங்கலப் பொருண்முற் றுங்கொடு
நலப்படு வேள்விக ளடத்திக் கேளொடு
பலப்பல வதுவைசெய் பான்மை நீத்தொராய்க்
குலேப்புறு கையொடுங் குறுகுற் றார்சிலர். (கரு)

மாலொரு மடந்தைபால் வைத்து முன்னுறு
சேல்விழி யொருத்திபாற் செல்ல வூடியே
மேலுறு சினத்திகல் விளேக்க நன்றிது
காலமென் றுன்னியே கழன்றுற் றார்சிலர். (கசு)

தோடுறு வரிவிழித் தோகை மாருடன்
மாடம திடைதொறும் வதிந்த பங்கயக்
காடுறு பூந்தடங் காமர் தண்டலே
யாடலே வெறுத்தெழீஇ யடைகின் றார்சிலர். (கஎ)

சுள்ளினேக் கறித்தனர் துற்று வாகையங்
கள்ளினேக் கொட்பொடு களிக்கு நெஞ்சின
ருள்ளுறுத் தியபுல னூசல் போன்றுளார்
தள்ளுறத் தள்ளுறத் தளர்ந்துற் றார்சிலர். (கஅ)

அனேயபல் வகையின ரவனேக் கண்டுளார்
பனிவரு கண்ணினர் பதைக்கு நெஞ்சினர்
கனலொடு தீப்புகை காலு யிர்ப்பினர்
முனிவுறு கின்றனர் மொழிகின் றாரிவை. (ககூ)

வேறு.

அந்தக னுருத்தற் பேரோ னுடல்வல் லியத்தோ னாதி
வந்திடு மவுணர் தம்மை மதிக்கிலா வலியோர் தம்மை
முந்துறு புரத்தை யட்டு முழுவது முடிப்பா னின்ற
செந்தழ லுருவத் தண்ணல் செய்கையோ வினேய தென்பார். (உ0)

மேதியஞ் சென்னி வீரன் வெவ்வலி நிசும்பன் சும்பன்
கோதறு குருதிக் கண்ணன் குருதியங் குரத்தன் முந்தே
பூதலம் புரந்த சீர்த்திப் பொருவிறு ரகனே பண்டை
னுதிய ராயுள் கொண்ட வையைதன் செயலோ வென்பார். (உக)

இரபத்தி யளவை யில்லாத் திறலரி யொருநாற் றந்தக்
கரபத்தி னண்ணல் வானோர் யாரையுங் கலக்கஞ் செய்ய
வரபத்தி புரியா வன்னோர் வணங்கின ரடைய வந்நாட்
சரபத்தின் வடிவங் கொண்டான் றன்செய லாங்கொ லென்பார். (௨௨)

வண்டுளர் கமலச் செங்கண் மாயனுந் தூய நீலங்
கண்டம தடைத்த தேவுங் கலந்தனர் தழுவிச் சேரப்
பண்டவர் புணர்ப்புத் தன்னி லுருத்திரா பரிசா லுற்ற
செண்டுறு கரத்து வள்ளல் செய்கையே போலு மென்பார். (௨௩)

பிளிற்றுறு குரலி னல்வாய்ப் பெருந்துணை யெயிற்றுப் புன்கண்
வெளிற்றுறு தடக்கை கொண்ட வேழமா முகத்தெம் மேலோ
ரொளிற்றுறு கலன்மார் பெய்தி யுயிர்குடித் துமிழ்ந்த தந்தக்
களிற்றுடை முகத்துப் பிள்ளை செய்கையோ காணு மென்பார். (௨௪)

ஈசனை மதிக்கி லாதே யாமுதற் கடவு ளென்று
பேசிடு தலைவர்க் கேற்ற பெற்றியாற் றண்ட மாற்று
மாசறு சங்கு கன்ன னக்கட்டழ் குண்டம் போல்வான்
றேசுறு பானு கம்பன் முதலினோர் செயலோ வென்பார். (௨௫)

நஞ்சுமிழ் கெயிற்றுப் புத்தே ளணைப் பள்ளி மீது
தஞ்சமொ டிருந்த வண்ண றன்செய லாமோ வென்பா
ரஞ்சுவ னினைய செய்கைக் கனையது நினைவன் றென்பார்
நெஞ்சினு மிதனைச் செய்ய நினைக்குமோ மலரோ னென்பார். (௨௬)

புரந்தர னென்னும் விண்ணோன் புணர்த்திடு செயலோ வென்பார்
கரந்தனன் றிரிவான் செய்ய வல்லனோ கருத்தன் றென்பா
ரிருந்திடு கடவு ளோர்க ளிழைத்திடு விதியோ வென்பார்
நிரந்துநம் பணியி னிற்போர் நினைப்பரோ விதனை யென்பார். (௨௭)

கழைத்துணி நறவ மாந்திக் களிப்புறு வுணர்ச்சி முற்றும்
பிழைத்தவ ராகு மன்றேற் பித்தாசெய் தனரா மென்பா
ரிழைத்தநா ளலலை சென்றே ரியற்றியார் யாரோ வென்பார்
விழுப்பெரு முனிவர் சொல்லால் வீழ்ந்ததோ விவர்கை யென்பார். (௨௮)

அங்கியின் கிளர்ச்சி யேபோ லவிர்சுடர்க் கூர்வா டன்னைத்
தங்களி லேந்தி யின்னோர் சான்றகூ ளறவு சாற்றித்
தங்கமொ டமரி னேறறு முறைமுறை துணித்தார் கொல்லோ
விங்கிவ ரிருவர் கையு மிறறன காண்மி னென்பார். (௨௯)

ஆரிவள் கரத்தி லொன்றை யடவல்லா ரெவர்கண் ணேயோ
பேருறு காதல் கொண்டு பெண்மதி மயக்கந் தன்னாற்
சீரிய வுறுப்பி லொன்று சின்னமாத் தருவ னென்று
கூருடை வாளா லீர்த்து கொடுத்தனள் போலு மென்பார். (௩௰)

கேடுறு மினைய டன்னைக் கேட்பதெ னின்னா மென்பார்
நாடிநாம் வினவி னேமே னம்மெலா முனியு மென்பார்
மாடுறப் போவ தென்னை மாகில வரைப்பின் காறு
மோடியே யறிது மென்பா ரினையன வுரைத்த லோடும். (௩௧)

சொல்லியற் சூரன் றங்கை துன்முகி யோடு கைபோய்
வல்லையிற் போதல் கேளா மம்மருற் றவுண மாதர்
சில்லியற் கூந்த லூழத் தெருத்தொறுஞ் செறிந்து கஞ்ச
மொல்லைமுத் துதிர்ப்ப தென்ன வொண்கணீ ருகுத்துச் சூழ்ந்தார். (௩௨)

அந்நகர் மகளிர் யாரு மாடவர் யாருஞ் சூழ்ந்து
துன்னின ரிணைய வாற்றாற் றுயருழந் திரங்கிச் சோரப்
பின்னவர் தொகுதி நீங்கிப் பிறங்குகோ நகரம் போந்து
மன்னவர் மன்னன் வைகு மன்றினுக் கணிய ளானாள். (௩௩)

ஆ. திருவிருத்தம் - ௧௭0௨.

வசனம்.

இவ்வாறு சூரபன்மன் கொலுவீற்றிருக்குஞ்சமயத்தில், துன்முகியென்னுந் தோழியுடனே அசமுகி மகேந்திரநகரத்தின் கீழ்த்திசைவாயிலைக கிட்டினாள், கிட்டுதலும் இவள் கையறுபட்டிருப்பதைக்கண்ட அந்நகரத்தாரெல்லாரும், ஆயிரத்தெட்டண்டங்களையும் ஆண்டுவருகிற மஹாவீரனாகிய சூரபன்மனாகிய நம்மிறைவனுக்குத் தங்கையாகிய இந்த அசமுகியைக் கையறுக்கத்துணிந்தவர் யாரோ தெரியவில்லையே! பிரமாதிதேவர்களும் அவனாணைக்கு அஞ்சுவார்களே! இவள் தன் மதிமயக்கத்தால் தன்கையைத் தானேவெட்டிக்கொண்டாளோ? என்றிப்படி பலவகையாய்ப் பேசிக்கொள்ளும்படி விரைந்துபோய்ச் சூரபன்மனது அத்தாணி மண்டபத்திற்குச் சமீபமாகச்சென்றனள்.

அசமுகிநகர்காண்படலம் முற்றிற்று.

# அசமுகிபுலம்புறுபடலம்.

மறிமுக முடைய தீயாண் மன்றினுக் கணிய ளாகிக்
கிறிசெயு மன்னை தன்னைக் கேளிரை மருகா னாரைத்
திறலுடை முன்னை யோரைச் சிந்தையி னுன்னி யாண்டைப்
பொறிமக ளிரியல் போகக் கதறியே புலம்ப லுற்றாள். (௧)

வேறு.

வெறியாரு மிதழிமுடிப் பண்ணவர்கோ னருள்புரிந்த மேனாள் வந்தாய்
பிறியாது நுமைப்போற்றித் திரிவனென்று மம்மொழியும் பிழைத்தாய் போலு
மறியாயோ கரம்போன தஞ்சலென்று மிலைதகுமோ வன்னே யன்னே
சிறியேனான் பெண்பிறந்து பட்டபரி பவமென்று தீரு மையோ. (௨)

தாதையா னவரளித்த மைந்தர்கணே விருப்புறுவர் தாயர் பெற்ற
மாதரார் பாலுவகை செய்திடுவ ரீதுலக வழக்க மென்பா
ராதலா லென்றுயரு மகற்றவந்தா யிலையந்தோ வாரு மின்றி
யேதிலார் போற்றமியேன் கரமிழந்து மிவ்வுயிர்கொண் டிருப்ப தேயோ.

வருவீரெங் கணுமென்றே யஞ்சாது புலோமசையை வலிதே வௌவிப்
பெருவீர முடன்வந்தே னெனதுகர தலந்துணித்துப் பின்னே சென்று
பொருவீர மாகாளன் னவனையுமீட் டேகினனப் பொதும்பர்க் கானி
லொருவீருஞ் செல்லீரோ நமரங்கா ணீருமவர்க் கொளித்திட் டீரோ. ()

புரங்குறைத்தும் வலிகுறைத்தும் பொங்கியதொன் னிலைகுறைத்தும் புரையு றாத
வரங்குறைத்தும் புகழ்குறைத்து மறையொழுக்கந் தனைக்குறைத்து மலிசீர் தொல்லை
யுரங்குறைத்தும் வானவரை யேவல்கொண்டோ மென்றிருப்பீ ரொருவன்போந்தென்
கரங்குறைத்த தறியீர்நுந் நாசிகுறைத் தனன்போலுங் காண்மின் காண்மின். (௫)

மேயினன் பொன்னுலகின் மீன்சுமந்து பழிக்கஞ்சி வெருவிக் கானன்
போயினன் போயினன் வலியிலனென் றுரைத்திடுவீர் போலு மன்னா
னேயினா னொருவனையே யவன்போந்தென் கரந்துணித்தா னில்லக் கூறைத
தீயினர் கரந்ததிற னுயிற்றே யிந்திரன்றன் செயலு மாதோ. (௬)

எள்ளூற்ற நுண்டுகளிற் றுணையாகுஞ் சிறுமைத்தே யெனினும் யார்க்கு
முள்ளூற்ற பகையுண்டேற் கேடுளதென் றுரைப்பரஃ துண்மை யாமாற்
றள்ளூற்றுந் தள்ளூற்று மேவல்புரிந் தழல்குலிசத் தடக்கை யண்ணல்
கள்ளூற்று மறைந்திருந்தே யெனதுகரந் துணிப்பித்தான் காண்மின் காண்மின். ()

சங்கிருந்த புணரிதனி னடுவிருந்த வடவையெனுந் தழலின் புத்தே
ளுங்கிருந்த குவலயமோ டவைமுழுதுங் காலம்பார்த் தொழிப்ப தேபோ
லங்கிருந்தென் கரந்துணித்த வொருவோனு முங்களையே லடுவன் போலு
மிங்கிருந்தென் செய்கின்றீர் வானவரைச் சிறியரென விகழ்ந்திட் டீரே ()

முச்சிரமுண் டிரணியனுக் கிருசிரமுண் டந்தவன்னி முகற்கு மற்றை
வச்சிரவா குவுக்கொருபான் சிரமுண்டே யவைவாளா வளர்த்திட் டாரோ
விச்சிரங்க ளென்செய்யு மொருசிரத்தோ னென்கரத்தை யிறுத்துப் போனா
னச்சுரருக் கஞ்சுவரே பாதலத்தி லரக்கரிவர்க் கனிய ரம்மா. (௯)

பிறைசெய்த சீருருவக் குழவியுருக் கொண்டுறுநாட் பெயர்ந்து வானின்
முறைசெய்த செங்கதிரோ னுதபமெய் தீண்டுதலு முனிந்து பற்றிச்
சிறைசெய்த மருகாவோ மருகாவோ வொருவனெனைச் செங்கை தீண்டிக்
குறைசெய்து போவதுவோ வினவுகிலா யீதென்ன கொடுமை தானே. ()

நீண்டாழி சூழுலகை யோரடியா லளவைசெய்தோ னேமி தன்னைப்
பூண்டாய்பொன் னாரமென விந்நாளு மோர்பழியே பூணா நின்று
யீண்டாருங் குறும்பகைஞ ரென்கரப்போந் திறமியற்ற வினிது வைய
மாண்டாய்நந் தாரகனே குறைமதிநீ ரோவின்பே ராற்ற லம்மா. (௧௧)

வையொன்று வச்சிரக்கைப் புரந்தரனை யந்தியொடும் வான்மீச் செல்ல
வொய்யென்று கரத்தொன்று லெறிந்தனைவீழ்ந் தனன்கிடப்ப வுதைத்தா யென்பர்
மெய்யென்று வியந்திருந்தேன் பட்டிமையோ வவன்றுதன் வெகுண்டு வந்தென்
கையொன்று தடிந்தானே சிங்கமுக வீரவிது காண்கி லாயோ. (௧௨)

சூரனும் பெயர்படைத்த வவுணர்கடம் பெருவாழ்வே தொல்லை யண்டஞ்
சேரவே புரந்தனைநின் பரிதிசெங்கோல் குடையெங்குஞ் செல்லா நிற்கு
மாரும்வா னவரவற்றிற் கச்சுறுவர் பொன்னகரோ னானை போற்றும்
வீரமா காளனிடைக் கண்டிலனால் வலியர்முன மேவு றுவோ. (௧௩)

ஒன்னார்தஞ் சூழ்ச்சியினா லொருமுனிவ னென்சிறுவ ருயிர்கொண் டற்று
னிந்நாளி லஃதன்றி யொருவனைக்கொண் டெனதுகையு மிழப்பித் தாரே
பின்னுள்ளிவ் வருத்தமுற நன்றரசு புரிந்தனையாற் பிழையீ தன்றோ
மன்னாவோ மன்னாவோ யான்பட்ட விழிவரவை மதிக்கி லாயோ. (௧௪)

காவல்புரிந் துலகாளு மண்ணுவோ வண்ணுவோ கரமற் றேன்கா
ணேவரெனக் குறவாவ ரூனமுற்றோ ரிருப்பதுவு மிழுக்கே யன்றோ
வாவிதனை விடுவேனு னதற் றமுன மென்மான மடுவ தையோ
பாவியொரு பெண்பிறந்த பயனிதுவோ விதிக்கென்பாற் பகைமற் றுண்டோ.(௧௫)

ஆ திருவிருத்தம் - ௧௭௧௭.

---

வசனம்.

அசமுகியானவள் அத்தாணிமண்டபத்தைக்கிட்டித் தன்தாயையும், உற வினரையும், மருகரையும், தமையன்மாரையும் மனத்தில்நினைத்து தாயே! பரம சிவன் அருள்செய்த முன்னாளில்வந்து, உம்மை யெப்பொழுதுங் காத்துத்திரி வேனென்று நீ சொன்னசொல்லை மறந்துவிட்டாயோ, என்கையறுபட்டதறி யாயோ, அதைக்குறித்துப் பயப்படாதேயென்றுஞ் சொன்னாயில்லையே! இது உனக்குத்தகுமோ? அயிராணியை வலிதிற்பிடித்திழுத்த என்கையை வீரமா காளன் வெட்டினானே! அன்றியும் அவளையும் மீட்டுக்கொண்டுபோனானே! அந்தக்காட்டில் நீங்கள் யாராயினும் வந்தீர்களோ! நீங்களும் அந்தத்தேவர்களுக்கு அஞ்சியொளித்துக்கொண்டு திரிகிறீர்கள்போலும், அவன் என்கையையறுத்தது உங்கள் மூக்கையறுத்ததாக நினைக்கவேண்டாமா! என்றிவ்வாறு தாயைக்குறித் துப்புலம்பி, பிறகு தமையன்மார்முதலியோர்களை நினைத்து, அவர்களுடைய வீரத் தன்மையையும் பலவாறுநிந்தித்துப் புலம்பிக்கொண்டிருந்தாள்.

அசமுகிபுலம்புறுபடலம் முற்றிற்று.

---

## சூரன்றண்டஞ்செய்படலம்.

என்று பற்பல வுரைத்தன ளாவலித் திரங்கிப்
பின்றொ டர்ந்திடு துன்முகி தன்னொடும் பெயரா
மன்றின் மேவரு சூரபன் மாவெனும் வலியோன்
பொன்ற டங்கழன் முன்னரே வீழ்ந்துபோய்ப் புரண்டாள். (௧)

புரண்டு மற்றவள் சகடையிற் பெயர்ந்திடும் போழ்தின்
மருண்டு பேரவை யகத்தினோ ரஞ்சினர் மறுக
வரண்ட ருங்கழற் சூரபன் மாவெனு மவுண
னிரண்டு நோக்கினுந் தீயெழ விழித்திவை யிசைப்பான். (௨)

என்னை யோவிவட் புலம்புதி யசமுகத் தினையோ
யுன்னை யோர்கிலா தென்னையு நினைகிலா துன்கை
தன்னை யும்மிவள் கரத்தையும் வாளினாற் றடிந்து
முன்னை யோரென விருந்துளார் யாரென மொழிந்தான். (௩)

புரந்த ரன்புணர் புலோமசை புவியிலோர் புறத்தி
லிருந்து நோற்றது முன்றனக் கென்றுசென் றெடுத்தேம்
விரைந்து வந்தொரு விண்ணவ னெங்களை வெகுண்டு
கரந்து ணித்துமற் றவளைமீட் டேகினன் கண்டாய். (௪)

என்னு முன்னரே சொரிந்தன விழிகன லெரிவாய்
தன்னு தீம்புகைப் படலிகை யுமிழ்ந்தது துண்டம்
வன்னி காலுறு காலென வுயிர்த்தது மதிபோன்
மின்னல் வாளெயி றிதழினை மறைத்தது விரைவில். (௫)

வெடிக்க லுற்றதெவ் வண்டமென் றையுற விரைவி
லிடிக்க லுற்றது தீயவாய் நகைவந்த திதழுந்
துடிக்க லுற்றது புருவமே னிமிர்ந்தது துள்ளிக்
கடிக்க லுற்றன வெயிற்றணி கறகற கலிப்ப. (௬)

புயற்பு றந்தொறு நித்தில முதிர்ந்தவா போல
வியர்ப்பு மிக்கன முறைமுறை யன்னது விளிய
மயிர்ப்பு றந்தொறும் புலிங்கம்வந் தடைந்தன வல்லே
செயிர்படபெ னுங்கனல் கிளர்ந்தது சிந்தையி னின்றும். (௭)

நீடு வெஞ்சின மித்திற மவனிடை நிகழ
வோடு கின்றனர் திசையுளா ருலைந்தனர் முனிவ
ராடு கின்றதோர் தெய்வதக் கணிகைய ரவன்சீர்
பாடு கின்றவ ரியாவரும் பதைபதைத் திரிந்தார். (௮)

தாங்க லுற்றிடு திசைக்கரி யோடிய தரிக்கு
மோங்கன் மேருவுங் குலைந்தன பணியெலா முலைந்த
வேங்கு கின்றனர் வானவர் நடுங்கின ரிரவி
தீங்கு நாடியே போயினன் மீண்டனன் றிரிந்தான். (௯)

பார்ந டுங்கின விண்ணெலா நடுங்கின பரவை
நீர்ந டுங்கின வயன்பத நடுங்கின நெடியோ
னூர்ந டுங்கின வவுணரு நடுங்கின ருலகத்
தார்ந டுங்கில ரவன்சினஞ் சிறியதோ வன்றே. (௧0)

அண்ண லம்புகழ்ச் சூரபன் மாவென வறையுங்
கண்ணில் புன்மனத் தவுணர்கோ னித்திறங் கனன்று
துண்ணெ னச்சிதைத் தமரர்கள் யாரையுந் தொலைப்பா
னெண்ணி யுற்றிடு மிளையரைப் பார்த்திவை யிசைப்பான். (௧௧)

மீனெ டுத்துநம் மேவலிற் றிரிந்தவிண் ணவர்கோன்
கானி டத்திருந் தொருவனைக் கொண்டிவர் கரங்க
ளேனெ டுத்திடத் தறித்தன னென்றிடி னொழிந்த
மானு டத்தரு மடுவரே யிங்கினி மாதோ. (௧௨)

பரம னேயலன் பங்கயத் தவிசினோ னல்லன்
றிருவு லாவரு மார்புடைத் தேவனு மல்ல
னிரியும் வாசவன் றுனல னவன்பணி யியற்று
மொருவ னுமிவர் கைதடிந் தாவிகொண் டுறைவான். (௧௩)

விண்ம யங்குறு செருவிடைத் தானையால் வீக்கி
யெண்மை கொண்டுறு மமரரைக் கொணர்தலு மெனது
கண்மு னின்றிடு மவுணர்தங் கழிபசி யொழிய
வுண்மி னீரெனக் கொடுத்திலே னறுவினைத் துற்றேன். (௧௪)

மறைவைத் தேயமர் கின்றதோர் வாசவன் றனையு
நறைவைத் தேயமர் பூங்குழற் சசியையு நான்முன்
சிறைவைத் தேனிலன் சிறியரென் றுன்னினன் றீயின்
குறைவைத் தோர்கள்போ லாயினே னித்திறங் குறியேன் (க௬)

கைப்ப டுத்திய வுயிர்ப்பலி கடிதினுண் ணாது
தப்ப விட்டதோர் மால்கரி யொத்தனன் றமியே
னிப்பு விக்கணே யிவர்கரங் குறைத்திட்ட தெனது
மெய்ப்ப டுத்திய வூனமே யலதுவே றுண்டோ. (கஎ)

பூத ரந்தனைச் சிறைதடிந் திடுபுரந் தரனை
மாத ரார்புகழ் சசிதனை நாடுவான் வழிக்கொ
டேத ரின்னமுங் கண்டிலர் கொல்லவர் துணிவா
லேத மின்றியிப் புடவியிற் குறும்புசெய் திருத்தல். (கஅ)

நீரி ருந்தனிர் புதல்வரு மிருந்தனர் கிகரி
றேரி ருந்தது நேமியு மிருந்தது சிறிதென்
பேரி ருந்தது யானுமிங் கிருந்தனன் பின்னை
யாரி ருந்துமென் னிருந்துமா கின்றதென் னந்தோ. (க௯)

வான ளாவுவெண் பஞ்சியின் மால்வரை வறிதே
தீநி லாயதோ ரளவையின் முடிந்திடுஞ் செயல்போற்
றாநி லாவெயிற் றினையர்கைச் சோரியின் றுளியாற்
போன தேபல வண்டமுங் கொண்டநம் புகழே. (உ0)

இழிவு மிங்கிவர்க் குறுவதே யிமையவர் தங்கள்
வழியி னின்றதோ ரரந்தையு மிவ்விடை வருமே
பழியு மென்னிடத் தெய்துமே யென்றுமிப் பழிதா
னொழிவ தில்லையே பொறுப்பதே யதனையென் னுயிரே. (உக)

மல்ல லந்தடந் தோர்கடக் கைம்மலை வயமா
வெல்லை யில்லவு மவுணரு மெங்கணு மிருப்பச்
சில்லை மென்குழ லசமுகி படுவதித் திறமோ
நல்ல நல்லவென் னரசியன் முறையென நக்கான். (உஉ)

நக்க காலையிற் காலுறும் வார்கழ னரல
மக்க டங்களிற் பானுகோ பப்பெயர் வலியோன்
செக்க ரங்கியிற் கிளர்ந்துதன் றந்தைமுன் செவ்வே
புக்கு வந்தனை செய்துகின் றினையன புகல்வான். (உ௩)

ஐய கேண்மதி நமதுகுற் றேவலா லழுங்கித்
தொய்ய லுள்ளமோ டிந்திரன் கரந்தனன் சுரரு
நொய்ய ரித்தொழி னினைப்பதுஞ் செய்யலர் றங்கை
கையி ழந்ததென் மாயமோ வுணர்கிலேன் கவல்வேன். (உ௪)

வந்தி பெற்றிடு கான்முளை யெட்டிவான் றவழு
மிந்து வைக்கரங் கொண்டன னென்பதோ ரியல்பே
யந்த ரத்தரி லொருவனே யினையவ ரங்கை
சிந்தி யுற்றன னென்றுநீ யுரைத்திடுந் திறனே. (உ௫)

வலிய ராகியே புரிந்தன ரெனினுமற் றவர்கண்
மெலிய ராற்றநீ வெருளுறுந் தகைமைமே வினரோ
வொலித ருங்கடன் மீன்சுமந் துன்பணி யுழந்தா
ரலிய ரல்லதை யாண்டகை யார்கொலோ வனையோர். (உ௫)

நறைம லர்க்கம லத்தனை வெருளினு நாரத்
துறையுள் வைகிய முகுந்தனை வெருளினு மும்ப
ரெறிபு னற்சடை யிறைவனை வெருளினு மியல்பே
சிறியர் தம்மையு முனிதியோ பெருமையிற் சிறந்தோய். (உ௬)

மூத்தி றப்படுந் தேவரே யல்லதுன் முனிவிற்
கெத்தி றத்தின ரியைந்துளோ ரிளையர்க்கு மினைத்தே
சித்த முற்றிடும் வெருளியைத் தீருதி யின்னோர்
கைத்த லந்தனை யிழந்துழிப் பெயருவன் கடிதின். (உ௭)

விஞ்சய வாளினு லிங்கிவர் கரந்தனை வீட்டு
மசைவி லாடவன் றன்னைநின் னுளத்தின்மா லளித்த
சசியை யிந்திரக் கள்வனைத் தம்முயிர் தமக்குப்
பசையி லாததோ ரமரரைப் பற்றினன் படர்வேன். (உ௮)

அங்க னுற்றிலர் மறைகுவ ரேயெனி னகில
மெங்கு நாடுவ னனையர்வாழ் துறக்கநா டேகிச்
செங்க னற்கொள வளிக்குவ னமரர்தந் திறத்தை
மங்கை மாரொடும் பற்றியோர் கன்னலின் வருவேன். (உ௯)

ஈதி யால்விடை தமியனுக் கென்றுநின் றிரப்பத்
தாதை யாகிய வவுணர்கோன் முனிவினைத் தணிந்து
போதி மைந்தநின் படையொடு மாங்கெனப் புகல
வாத வன்பகை யழகிதென் றுவகையை யடைந்தான். (௩0)

ஓகை சேர்தரு விண்ணவர் மணிமுடி யுரிஞ்சிச்
சேகை சேர்தரு தாதைதா ளுச்சியிற் சேர்த்தி
வாகை சேர்சிறு தந்தையர் தம்மையும் வணங்கிப்
போகை சேர்விடை கொண்டுதன் னிருக்கையிற் போனான். (௩௧)

மைந்த னேகலுஞ் சூரபன் மாவெனும் வலியோ
னுந்து தீவிழி யுழையரிற் சிலவரை நோக்கி
யந்த நான்முக னிங்ஙனம் வருகுவ னவனை
நந்த முன்னுறக் கொடுவரு வீரென நவின்றான். (௩௨)

எங்க ளுற்றுளா னயனெனக் கூவின ரேகிப்
பங்க யத்தனைக் கண்டிநிற் கொணர்கெனப் பணித்தா
னங்கள் கொற்றவ னென்றலு மொல்லென நடவா
வங்க மைந்துடை னவுணர்கண் மன்னன்முன் னணைந்தான். (௩௩)

அணைந்த பூமகன் வைகலே பக்கநா ளவற்றுற்
புணர்ந்த யோகொடு கரணமே வுள்ளன புகல
துணங்கு சிந்தையா லகிலமும் படைத்துளாய் நொய்திற்
றணந்த கையிவர்க் குதவுதி யென்றனன் றலைவன். (௩௪)

என்று தானிவை மொழிதலுந் திசைமுக னிசைந்து
வன்றி றற்கரங் கூடுக மற்றிவர்க் கெனலு
மொன்றொர் மாத்திரைப் பொழுதின்மு னவைவளர்ந் துறலு
நன்று நன்றுநின் வல்லப மென்றுசூர் நவின்றான். (௩௫)

அன்ன தற்பின்ன ரசமுகத் தணங்கினை யரசன்
றன்ன கர்க்குளே யிருந்திடச் செய்துதன் முகத்தி
தன்னை மைந்தனே டுய்த்தனன் புலோமசைத் தையன்
முன்னி ருந்துழி காட்டியே வருகென மொழிந்து. (௩௬)

உழைத்தி ரிந்தபல் சிலதரை நோக்கியே யுலகிற்
றழைத்த செங்கதிர்க் கடவுளைத் தாரகா கணத்தை
யெழுச்சி கொண்டுறு கோளினை யாரையு மின்னே
யழைத்தி ராலெனச் சொற்றன னவுணர்கட் கரசன். (௩௭)

சேடர் பற்பலர் விடைகொடு சேட்புலஞ் சென்று
நேடி யன்னவர் தமையெலாங் கொணர்ந்துமுன் னிறுவ
மூடு கொண்டவிற் கரந்தமின் பின்னெழு முறைபோற்
கேடு கொண்டதொல் சினவெரி சூரனுட் கிளர்ந்த. (௩௮)

வியர்க்கு நெஞ்சினன் கதிர்முத லோர்தமை விளியா
வயர்க்கை யின்றியே வானிடைத் திரியுநீ ரறியா
வியற்கை யொன்றிலை யெங்கைதன் செங்கையை யெறிந்தோன்
செயற்கை காணுதிர் வறிதுநீ ரிருந்ததென் சேணில். (௩௯)

இளைய டன்கரங் குறைத்திடு மிமையவ னுயிரைக்
களைதல் செய்திலீ ரல்லதே லனையனைக் கட்டித்
தளைசெய் திவ்விடைக் கொணர்ந்திலீ ரல்லதத் தலையில்
விளைவை வந்தெமக் குரைத்திலீர் நன்றுநும் மிகுதி. (௪௦)

மறத்தி றத்தினு லெங்கைதன் கையையோர் வலியோன்
குறைத்த தற்குநீ ரகத்தரே யல்லது குறிக்கிற்
புறத்த ரன்றுநம் மாணையா லிதொழில புரிவீர்
முறைத்தி றங்கொலோ நூங்களுக் கிதுவென மொழிந்தான். (௪௧)

நீதி யில்லவ னீங்கிவை யுரைத்தலு நிருப
வேது மெங்களை வெகுளலை யிங்கிவள் கரத்தைக்
காது வான்றனைக் கண்டில மின்றுசெல் கதியின்
மீது சென்றவெம் விழியென வுரைத்தனர் விண்ணோர். (௪௨)

துண்ட மாகியே யிவள்கரந் துணிபட்ட செய்கை
கண்டி லார்களாங் கதியிடைச் சென்றவாங் கண்க
ளண்டர் தஞ்செய லழகிதென் றனையரை யெல்லாந்
தண்ட லில்லதோர் சிறைபுரி வித்தனன் றலைவன். (௪௩)

வேறு.

தினகரன் முதலினோர் சிறையிற் புக்கபின்
வினைஞரிற் சிலர்தமை விளித்து நீவிர்போய்த்
துனைவரு மருத்துவர் தொகையைத் தம்மென
முனிவொடு தூண்டினன் முடிவி லாற்றலான். (௪௪)

ஒற்றரி லொருசில ரொல்லை யேகியே
குற்றமின் மருத்துவர் குழாத்தைக் கூவியே
பற்றிமுன் னுய்த்ததனும் பதைக்கு நெஞ்சினன்
றெற்றென வாங்கவர்க் கிதனைச் செப்புவான். (சரு)

வானிடை மண்ணிடை மாதி ரத்திடை
மேனிகழ் கடலிடை வியன்பி லத்திடை
யூனிடை யுயிரிடை யொழிந்து நின்றிடு
மேனைய பொருளிடை யெங்கு நிற்றிரால். (சசா)

ஏனுறு கின்றவென் னிளையள் கையையோர்
சேணினன் வாள்கொடு சேதித் திட்டதைக்
காணுதி ருமக்கெவர் கரக்கற் பாலினோர்
நீணகர் குறுகியிந் நிலைமை சொற்றிலீர். (சஎ)

தரியலர் சூழ்ச்சியாற் றகுவர்க் கிப்பழி
வருவது நன்றென மகிழ்ந்து வைகினீர்
பெருமித நன்றெனப் பேச மாறுசொல்
லுரையற நின்றன ருலவைப் பண்ணவர். (சஅ)

வன்றிற லின்றியே மனத்தி லச்சமாய்
நின்றிடு காலகளை நீடு கால்களிற்
றுன்றிய கனைகழற் சூர னென்பவ
னென்றொரு சிறைதனி லுய்த்திட் டானரோ. (சகூ)

ஈற்றினை யிழைத்திட விருக்குங் கால்களைச்
சீற்றமொ டவுணர்கோன் சிறையில் வீட்டினன்
சாற்றிடி னுலகமேற் றவததி னல்வரும்
பேற்றினு முளதுகொல் பெருமைத் தானதே. (ருo)

திரிதரு மருத்தரைச் சிறையில் வைத்தபின்
குரைகழல வினைஞரைக் கூவி யிற்றையாண்
டிருதுநன் மதிமுத லெல்லை யாளரைத்
தருதிரென் றுரைததலுந் தாழ்ந்து போயினர். (ருக)

ஏவல ராயினோ ரேகி யெல்லையின்
காவல ராகிய கடவு ளோர்தமைக்
கூவினா பற்றியே கொடுவந் துய்த்தலுந்
தேவர்கண் மாற்றலன் சீறிக் கூறுவான். (ருஉ)

புல்லிய மகபதி புணர்த்த வச்செய
லொல்லுவ தென்றதற் குள்ள மாகிநீ
ரெல்லிரு மனமகிழ்ந் திருத்தி ரென்னெடுஞ்
சொல்லிய வந்திலீ ரியாண்டுந் துன்னினீர். (ருங)

நிரந்தர நம்பணி நெறியி னின்றுநீ
ரிருந்ததிற் பயனெவ னிருக்க லாமையால்
வருந்தவ றென்சுரர் மருங்குற் றீரெனு
வருந்தனை யிட்டன னவர்க டம்மையும். (ருச)

தூவலி கெழுவிய சூரன் பின்சில
வேவலர் தங்களை விளித்திட் டிப்புவி
காவலர் தமையெலாங் கடிது வம்மெனக்
கூவுதிர் தம்மெனக் கூறித் தூண்டினான். (௫௫)

தூண்டலு மளவைதீர் தூத ரோடியே
யீண்டிய காவல ரினத்தை மாநிலந்
தேண்டினர் பற்றியே சென்று வென்றிகொ
ளாண்டகை யிறைவன தவையி னுய்ப்பவே. (௫௬)

ஆக்கையில் வியர்ப்புற வச்ச நாணுயிர்
தாக்குற நனியுளந் தளரக் கைதொழூங்
காக்குநர் தொகுதியைக் காவன் மன்னவ
னோக்கினன் வெகுண்டிது நுவறன் மேயினான். (௫௭)

எளித்துற லின்றிநம் மேவ னீங்கியே
களித்திடு சசியொடுங் கடவுள் வாசவ
னொளித்தன னிம்பரி னும்ப ரில்லைநீ
ரளித்தது சாலவு மழகி தாமரோ. (௫௮)

குறித்திடு புரைமனக் கொண்ட லூர்பவ
னெறித்திக மூரணையி னின்ற தூதுவன்
மறித்திரு முகனுடை மங்கை தன்கர
மறுத்தவ ணிருந்தன னதுவுந் தேர்ந்திலீர். (௫௯)

மறங்கிளர் தேறல்வாய் மடுத்து வைகலுங்
கறங்குறு நிலையராய்க் கலங்கி னீர்கொலோ
வுறங்கினி ரேகொலோ வோம்ப லீர்கொலோ
பிறங்குதொல் வளமையாற் பிதற்றி னீர்கொலோ. (௬௦)

ஓயுமென் பகைஞரோ டுறவுற் றீர்கொலோ
வாயவர் தங்களுக் கஞ்சி னீர்கொலோ
சேயிழை யாரிடைச் செருக்குற் றீர்கொலோ
நீயிர்க ளிருந்ததென் னிலைமை யென்னவே. (௬௧)

எண்டரு மெந்தைநீ யிசைத்த தன்மையிற்
கொண்டில மொன்றுமக் குவல யந்தனைப்
பண்டுதொட் டளிக்குதும் பகைஞர் யாரையுங்
கண்டிலங் கரந்துறை கதையுங் கேட்டிலம். (௬௨)

தாயெனு மேழகத் தலைய னுன்முக
வாயிழை யொடும்வர லதுவு மன்னர்கை
போயதுந் தெரிந்திலம் புந்தி கொள்ளுதி
மாயமி தாகுமான் மன்ன வென்னவே. (௬௩)

மிடைதரு வெறுக்கையை மிசைந்து மால்கொளீஇப்
புடவியை யிடைதொறும் போற்றல் செய்திலி
ரிடையுற வெவ்வயி னினைய தோர்பழி
யடைவது மாயையா மழகி தேயென்றான். (௬௪)

வேறு.

ஒலிகெழு முவரிப் புத்தே ளுள்ளுறை வடவைச் செந்தீத்
தொகலைவுழி யெழுவ தேபோற் சூரனுட் சினமீக் கொள்ள
மலிகதி ரிருள்புக் கென்ன வாளுரீஇ மருங்கே தானைத்
தலைவாகின் ருரை யேவித் தனித்தனி தண்டஞ் செய்வான். (சஈ)

சிற்சிலர் தமது நாவைச் செங்கையைச் சேதித் திட்டான்
சிற்சிலர் துண்டந் தன்னைச் செவிகளைக் களைதல் செய்தான்
சிற்சிலர் மருமந் தன்னைச் சிறுபுறத் தொடுகொய் வித்தான்
சிற்சிலர் தாளைத் தோளைச் சென்னியைச் சேதிப் பித்தான். (சசு)

எறிதரு கழற்காற் சூர னித்திறம் பலிறண் டங்கண்
முறையினிற் செய்து சீய முழுமணித் தவிசிற் றீர்ந்து
விறல்கெழு மிளையர் செல்ல விடைகொடுத் தயனை நோக்கி
மறைமுனி போதி யென்ன மற்றவ னினைய சொற்றான். (சஎ)

மன்னவர் மன்ன கேண்மோ வான்கதி ருடுக்க ளேனை
ரிங்கில மடந்தை வேலைக் கிறையவர் யாரு மென்று
முன்னுடைப் பணியி னிற்ப ருலகிவ ரின்றி யாகா
வன்னவர் பிழையுட் கொள்ளே லருஞ்சிறை விடுத்தி யென்றான். (சஅ)

குறையிரந் தினைய கூறிக் கோகன தத்தோன் வேண்ட
நறையிருந் தலவு தாரோ னன்றென விசைவு கொள்ளா
வுறையிருந் திலங்கும் வாட்கை பொற்றரை நோக்கி நந்தஞ்
சிறையிருந் தோரைத் தம்மி னென்றலுஞ் சென்றங் குய்த்தார். (சகூ)

வன்றளை யுற்றோர் தம்மை மன்னவர் மன்னன் பாரா
வென்றுநம் பணியி னிற்றி ரிந்திர னொடுமேசர் கல்விர்
சென்றிடு நுங்க டொன்மை செய்திட வென்ன வன்னோர்
நன்றிது புரிது மென்னு நயமொழி புகன்று போனார். (எ௦)

போதலுங் கமலத் தோற்கும் புதல்வர்க்கு மமைச்சர் யார்க்கு
மேதகு முனிவர் யார்க்கும வியன்படைத் தலைமை யோர்க்கும்
போதலை யுதவிச் சூர னுறையுளிற் புகுந்தான் முன்செ
லாதவன் பகைஞன் செய்த செயலினை யறைத லுற்றேன். (எக)

ஆ திருவிருத்தம் - கஎஅஅ.

---

வசனம்.

இவ்வாறு தன்னைப் பின்றொடர்ந்துவரும் துன்முகியோடும் அசமுகியான வள் புலம்பிக்கொண்டே சூரபன்மன் கொலுமண்டபவாயிலில் வீழ்ந்து புரண்டழு தாள். இதைக்கண்ட சூரபன்மன் அவளைநோக்கி, உன்னையும் துன்முகியையும இப்படி கைகளைவெட்டினவன் யாரென்றுகேட்க, நடந்தவிர்த்தாந்தத்தை அசமுகி சொல்லக்கேட்ட சூரபன்மனுக்குண்டான கோபக்குறிகளும் அவற்றால் தேவர்முத லியோர் பட்டபாடும் சொல்லிமுடியா. அப்படி கோபித்த சூரபன்மன் அங் கிருந்த தன் இளையவரைநோக்கிச் சொல்லத்தொடங்கினான்.

மீனைச்சுமந்துகொண்டு நமக்குக் குற்றேவல்செய்யும் இந்திரன் காட்டிலொ ளித்திருந்து ஒருவனையேவி இவ்விருவர்கைகளையும வெட்டியெறியச்செய்தானே!

இந்திரனையும் அவன்மனைவியையும் மெல்லியரென்றெண்ணியல்லவா சிறையிடா தொழிந்தேன், இனி யெமதாண்மைமுதலியவெல்லாம் பயனில்லனவேயாம், என்று பலவாறுசொல்லிச்சிரித்தான். அந்தக்கோபச்சிரிப்பைக்கண்ட பானுகோப னவன் தன்தந்தையாகிய சூரபன்மனை வணங்கி, இந்த அற்பர்களாகிய இந்திரன் முதலியோர்மீது தாங்கள் இவ்வளவுகோபங்கொள்ளவேணுமோ? எனக்கு விடை கொடுத்தால் இக்கணமேபோய் அந்த இந்திரனையும இந்திராணியையும் பிடித்துக் கொண்டுவந்து உமக்கெதிரே விடுகிறேனென, சூரபன்மனும் அப்படியே செய்க வென்று விடைகொடுத்தலும், பானுகோபன்புறப்பட்டான். அவனோடுசென்று அந்த இந்திராணி முன்னிருந்த இடத்தைக்காட்டும்பொருட்டுப் போவென்று துன் முகிக்குக்கட்டளையிட்டு, பிரமனையழைப்பித்து, அவனைநோக்கி நீ படைப்புத் தொழில் வல்லனாதலால் இவ்விருவர்கையைப் படைத்துத்தருகவென்றலும், அந் தக்கைகள் முன்போலவே வளர்ந்துவிட்டன.

சூரபன்மன் சிலதூதரையழைத்து அவர்களைநோக்கி, நீங்கள்விரைந்துபோய், சூரியன்முதலிய நவக்கிரகங்களையும், நக்ஷத்திரங்களையும் இப்போதே யழைத்து வாருங்களென்று கட்டளையிட, அப்படியே அவர்கள்போய் அழைத்துவந் தெதிரே விட்டார்கள். அவர்களைநோக்கி, நீங்கள் ஆகாயசஞ்சாரிகளாகையால், இப்படி என் தங்கையின் மூக்கறுத்தவன் யார்? சொல்லுங்களென்று கேட்க, சூரியன்முதலா னோர், இறைவனே! யாங்கள் எப்போதும் எங்கள்சதியிலேயே நோக்கம்வைத்திரு க்கிறவர்களாகையால் இந்தச்செய்தியை யாமறியோமென்றார்கள். அதைக்கேட்ட சூரபன்மன் அந்தச் சூரியன்முதலானோரைச் சிறையிட்டுவிட்டு, பிறகு வாயுக்களை யழைப்பித்து, நீங்கள் சஞ்சரிக்காத இடமில்லையே! இச்செயலை நீங்களறிந்திருந் தால் சொல்லுங்களென்றான்; அவர்களும் நாங்கள் அறியோமென்றார்கள். அவர் களையும சிறைப்படுத்தினான். பிறகு அஷ்டதிக்குப்பாலகரை யழைப்பித்துக்கேட்க, அவர்களும் அறியோமென்றுசொல்ல, அவர்கள்மேல் கடுங்கோபங்கொண்டு, தன் னருகேயிருந்த சேனைத்தலைவரைத் தண்டஞ்செய்யவெண்ணி,சிலரைநாவறுத்தும், சிலரைக் கையறுத்தும், சிலரைக் காதறுத்தும, சிலரை மூக்கறுத்தும், இவ்வாறு பலவகையான தண்டஞ்செய்து, தம்பிமாருக்கு விடைகொடுத்தனுப்பிவிட்டு, பிர மனுக்கு விடைகொடுக்கும்போது, பிரமன் சூரபன்மனைநோக்கி, சூரியன்முதலா னோர் உன்குற்றேவல்செய்வோர் ஆயினும் அவர்களில்லாமல் உலகியல் நடவா தாகையால், அவர்களைச் சிறைவிடவேணுமென்று வேண்டிக்கொள்ள, அப்படி யே அவர்களைச் சிறைவிடுத்து நீங்கள் உங்கள்காரியங்களில் பிரவேசித்து, செவ் வனே நடத்திவாருங்களென்று கட்டளையிட்டு, பிரமன்முதலியோர்க்கும் விடை கொடுத்தனுப்பிவிட்டுத் தானும் தனது அரண்மனையைச்சேர்ந்தான்.

சூரன்றண்டஞ்செய்படலம் முற்றிற்று.

---

# அமரர்சிறைபுகுபடலம்.

எழிலிகண் மொய்த்ததன் னிருக்கை போகிய
மழவுறு சூர்மகன் மாறி லாதபே
ரழகினை மெய்கொள வணிந்து தொல்படை
விழுமிய கொண்டனன் மிலேச்சித் தும்பையே. (க)

இருவகைப் பத்துறு திவுளி பூண்டிடு
மொருதனித் தேர்தனை யொல்லை யூர்ந்துராய்த்
திருமுதற் கடைதனிற் செல்லு மெல்லையில்
விரைவினிற் சுற்றின வணிக வெள்ளமே. (உ)

நிரைத்தெழு தானவர் நீத்த மாயிரம்
பரித்தொகை யன்னதே பாதி தேர்கரி
யுரைத்தவத் தானையோ டொல்லை யேகினன்
றிருத்தகு மிரவியைச் சிறையில் வீட்டினன். (ங)

கிளர்ந்தன தூளிகள் கெழீஇய வீரர்தோள்
வளர்ந்தன வவரணி மாலை யிற்படீஇ
யுளர்ந்தன வண்டின மும்பர் தம்மனந்
தளர்ந்தன நெளிந்தனன் றரிக்குஞ் சேடனே. (ச)

பொள்ளென வாண்டெழு பூழி பாரினுந்
தள்ளரும் விசும்பினு நிரந்த தானவ
ரெள்ளுறு மமரர்தம் மிருக்கை நாடிய
வுள்ளொடு பவத்துக ளொருங்கு சென்றபோல். (ரு)

வேறு.

ஏறிய பூழி நாப்ப ணீண்டிய விவுளி வாயின்
வீறுகொள் களிற்றுக் கையின் விலாழியுங் கரிக்க போலத
தூறிய கடமு மொன்று யொழுருதன் மழைசூழ் குன்றி
னூறுக ளிழிந்து வையத் தடைவது போலு மன்றே. (சு)

பானிற முதல வாய பல்வகை வண்ணத் தூள்ள
கானிமிர் துவசக் காடுங் கவிகையின் கானு மொய்த்த
சேனமுங் கழுகு மேனைச் சிறைகெழு புள்ளும் வெம்போ
ரூனுகர் பொருட்டுத் தாமு மும்பருற் றிடுவ தேபோல். (எ)

மண்ணுறு துகளின் மாலை மகேந்திர மூதூர் முற்றுந்
துண்ணென மறைத்த லோடுந் துளங்கியே சூரற் கஞ்சி
விண்ணிடை மதிபல் கோடி மேவல்போல் வெளிய செய்ய
தண்ணிழற் கவிகை யீட்டந் தலைத்தலை யீண்டிற் றன்றே. (அ)

முறையிது நிகழ மைந்தன் முதியமா நகர நீங்கி
யறைகட லகழி தாவி யவனியி னெல்லை யேகிச்
சிறைவரு துன்மு கத்துத் தெரிவையை நோக்கி நுங்கை
யெறிசுடர் வாளா விற்ற தெவ்விடை யியம்பு கென்றான். (கூ)

என்னலுங் குமர கேண்மோ வெங்கரந் துணித்தோர் வீரன்
மன்னினன் சசியு முற்றாண் மதுமலர்ப் பொதும்ப ரொன்றி
னன்னது மிஃதே யென்றே ரணிவிரற் சுட்டிக் காட்டப்
பன்னிரு பெயர்ச்சீர் காழிப் பழமரக் காவிற் சேர்ந்தான். (க0)

தேசுறு மிரவி தன்னைச் செயிர்த்திடு சிறுவன் றனைத்
தூசிமுன் சென்று காவைத் தொலைத்துவெள் ளிடைய தாக்க
வாசவன் பனையைக் கூர்வாள் வயவனை நாடிக் காணான்
காசினி யாண்டுந் தேர்ந்து காமர்பொன் னுலகிற் போனான். (கக)

வேறு.

அங்கிலை யவுணர்க ளனிகம் யாவையு
முன்னுற வேகியே மொய்ப்ப வாங்கவர்
மெய்க்கிறை மணிவெயில் விரிந்து சூழ்தலாற்
பொன்னகர் வேறொர்பொன் னகரம் போன்றதே. (கஉ)

எழுந்திடு முனிவின ரிமைக்கும் வெவ்வழல்
வழிந்திடு கண்ணினர் மடித்த வாயினர்
கழிந்திடு திறலினர் ககன வாணர்க
ளழிந்திடு மார்பின ரவுண ரெய்தினார். (கங)

மண்டல மேமுதல் வகுத்த வான்கதி
கொண்டிடு கந்துகக் குழுவின் மாலைகள்
விண்டொடர் செலவினில் விரவு சூழியா
லண்டமும் புவியென வைய மாக்கிய. (கச)

இலகிய பொன்னக ரெல்லை யெங்கணு
மலைதரு மதநதி யாக்கி யாயிடை
நிலவிய கங்கைமா நீத்தம் யாவுமுண்
டுலவுத லுற்றன வொருத்தல் யானையே. (கரு)

வெங்கரி சொரிமதம் விரும்பும் வண்டினங்
கொங்கிவர் தருமலர்க் கூந்தல் வாசத்தா
லங்குள மாதர்மே லணுகி வையக
மங்கையர் கொல்லென மால்செய் கின்றவே. (கசு)

ஆற்றமில் வலியரைச் சிறிய ராயினோர்
பற்றிடின் மேனெறிப் பால ராவரால்
வெற்றிகொ ளவுணர்கோன் வேழத் தின்குழாஞ்
சுற்றிய பறவையுந் துறக்கம் புக்கவே. (கஎ)

மன்னவ னேடினன் மைந்த னேயுளன்
முன்னுறு பகையினை முடித்தும் யாமெனா
வின்னில வரையெலா மேகிச் சூழ்ந்தபோற்
பொன்னகர் வளைந்தன பொலம்பொற் றேர்களே. (கஅ)

விட்டெறி பொழுகிய வெய்யர் மேலையோ
ரிட்டமுறு மகளிரை யெய்திப் பற்றல்போற்
கடிகமழ் தருவினைக் கலந்து சுற்றிய
கொடியினை யீர்த்தன கொடியின் கானமே. (கசு)

வேறு.

செந்தோ டவிழுந் தாரானிச் செய்கை நிகழச் சேண்புகலு
மந்தோ வென்று பதைபதையா வலமந் தேங்கி யறிவழிந்து
வந்தோன் பானுப் பகைவனெனு மகவான் செம்ம லொடுவானோர்
நொந்தோ டினர்போ யுரைத்திடலு மனையோ னினைய நுவல்கின்றான். ()

எந்தை யாகுங் குரவனிலை யிமையோர் குழுவிற் பலரில்லை
தந்தை யெம்மோ ரிங்கில்லை தமியே னும்மோ டிருந்தேனா
லந்த வசுரன் சென்றமையு மல்லல் புரியுந் திறம்போலு
முந்தை விதிங்ய யறிவேனோ வென்னோ வின்று முடிந்திடுமே. (உக)

பாடின் றேங்கு திருநீங்கப் பயந்தோர் கரக்கப் பழிவேலை
வீடின் றாகத் தமர்பரிய வெஞ்சூர் முதல்வன் பணிபோற்றி
யீடின் றாயு மிப்பகல்கா றிந்த நகரத் திருந்தேனற்
கேடின் றாகு மென்செய்கேன் கிளத்தீர் புரைதீ ருளத்தீரே. (௨௨)

தாயும் பயந்த தொல்லோனுந் தமரா குற்ற வமரர்களும்
பாயுங் கடல்சூழ் நிலவரைப்பிற் கரந்தா ரதனைப் பல்லவுண
ராயும் படியே திரிந்தனரா லற்றா மெல்லை யளியேமும்
போயெங் குறைவோ நமையெல்லாம் போற்றும் படிக்கோர் புகலுண்டோ.

போவ தில்லை யாண்டுமினிப் புலம்பு மாறு மில்லையதி
னாவ தில்லை வருவதெல்லா மடையு மன்றி யகலுவதோ
வீவ தில்லை யவர்க்குவெரி நிறைஞ்சிப் புகழ்வ திலையெதிர்ந்து
சாவ தல்லா லுய்ந்திடுத லிரண்டே யுறுதி தமியேற்கே. (௨௪)

அஞ்சேன் மன்னை வவர்க்கினியா னவி பொருளாக் கொள்ளாதார்
நஞ்சே பொருவுந் தீங்குறினு நடுக்கஞ் செய்யா ரிடர்ப்படியார்
தஞ்சே வகத்தி னெறிபிழையா ரஃதே போலத் தானவர்கோன்
வெஞ்சே னைகளேற் றெதிர்செல்வேன் வெல்வேன் பலரைக் கொல்வேனே.

செருவீ ரமுட னவர்ப்பொருவான் செல்வ னீரு மெற்போற்றி
வருவீர் வம்மின் வல்லாதீர் வல்லை யின்னே வழிக்கொண்மி
னொருவீ ரன்றி யெல்லீரு முள்ளத் தஞ்சி யொருவியழி
தருவீ ரேனு நன்றிறையுந் தளரேன் றுணிந்த தமியேனே. (௨௬)

என்று சயந்தன் மொழிந்திடலு மிமையோர் கேளா விடருழவா
வுன்ற னுள்ள மீதாயி னெமக்கு வேறோ ருணர்வுண்டோ
வென்றி யவுணர் பணிபுரிந்து வீடா விழுமந் துய்ப்பதினும்
பொன்றி விடுத லினிதம்மா வெழுதி கடிதே போர்க்கென்றார். (௨௭)

வேறு.

சயந்தனது கேட்டமரர் தங்குழுவை நோக்கித்
துயர்ந்தநும சிந்தனை துணிந்ததுகொ லென்னா
வியந்துகன கத்தவிசின் மேவுதல் விடாததன்
கயந்தனை நினைப்பவ துணர்ந்தது கருத்தில். (௨௮)

கல்கெழு நுதற்சிறிய கண்சுளகு கன்ன
மல்கிய கறைபபத மருப்பிணையி ரட்டை
மெல்கிய புழைக்கரம் வெளிற்றுடலின் வேழம்
பில்கிய மதத்தொடு பெயர்ந்துளதை யன்றே. (௨௯)

இந்திர குமாரனை யிறைஞ்சியெதி ராகி
வந்திட வதன்பிடரில் வல்லைதனி லேறி
யுந்தின னடாத்தியய லும்பர்புற மொய்ப்பப்
புந்திகெழு வோர்விறொடு பொள்ளென வகன்றான். (௩0)

போகிதரு காளைபசும் பொற்புய னிறத்தா
னாகம்வெளி றாகுமயி ராவதமி சைக்கண்
வாகுபெற மேவுவது மன்னுநெடு மால்பாற்
சீகர வளக்கரிடை செவ்விதிருந் தன்ன. (௩௧)

பாங்கருறு வானவர்கள் பல்படையு மேந்தி
வீங்குதுயர் கொண்டகல வேறொரிடை காணார்
நீங்கல்வகை யென்பது நினைந்துதுணி வாகி
யாங்கவனொ டேகினர்க ளச்சமில ரேபோல். (௩௨)

பெருந்தவள மெய்க்கரி பிளிற்றொலியு முள்ளத்
தரங்கையுறு வானவர்த மார்பொலியு மாற்றப்
பரந்தபகு வாய்முரசு பண்ணொலியு மொன்றாய்
வருந்தவ றெனக்ககனம் வாய்விடுதல் போலும். (௩௩)

ஊழிவரு காலனைய வும்பர்படை செல்லப்
பூழிநிமிர்ந் தேகின பொலத்துயர் நிலத்த
வாழிகொள் சுவர்க்கமெரி வெளவுநமை யென்னாக்
கேழிலுயர் மேனிலை கிளர்ந்தெழுதல் போலும். (௩௪)

முறையிது நிகழ்ந்திட முரட்களிறு மேலான்
வறியமக வான்மதலை மாநகர நீங்கி
யெறிகதி ரருக்கனை யிருஞ்சிறையில் வீட்டுஞ்
சிறுவனணி கத்தினெதிர் சென்றுபுக லோடும். (௩௫)

வற்புறு தயித்தியர் வருஞ்சுரரை நோக்கி
முற்பகலி னெல்லையு முறைப்பணி புரிந்தார்
தற்பமுட னின்றுசம ருன்னிவரு வாரோ
வற்புதமி தற்புதமி தென்றறைய லுற்றார். (௩௬)

கிட்டினர்கள் வானவர் கிடைத்ததம ரென்னா
முட்டினர் தெழித்தவுணர் முன்பினிரு பாலா
ரொட்டினர் முனிந்தயில்க ளுய்த்தனர்கை வாளால்
வெட்டினர் குனித்துவில் வடிக்கணை விடுத்தார். (௩௭)

எழுப்படை விடுத்தன ரெடுத்தகதை விட்டார்
மழுப்படை யெறிந்தனர் வயிர்க்குலிச முய்த்தார்
நிழற்பரவு முத்தலை நெடும்படைக டொட்டார்
சுழற்றின ருருட்டினர் சுடர்ப்பரிதி நேமி. (௩௮)

மாரியென விப்படை வழங்கியிமை யோருஞ்
சீரவுண ராயினருஞ் சேர்ந்துபொரு மெல்லைச்
சோரியது தோன்றியது தூயவிரும் பெற்றும்
பாரிய் வுலத்திடை பரந்தெழு கனற்போல். (௩௯)

அங்கமெழு செங்குருதி யாற்றினிமிர்ந் தோடி
யெங்கணு நிரந்தன விமைப்பிலவர் வைகுந்
துங்கமிகு மும்பரிடை சூர்மதலை சீறற
வெங்கண லெழுந்துமுன் மிசைந்திடுவ தேபோல். (௪௦)

நீடிரு திறத்தரு நெடும்படைக ளேந்தி
யாடல்புரி காலையழிந் தாற்றலில ராகி
யோடினர்கள் வானவர்க ளொல்லைதொடர்ந் தேபின்
கூடினர்கள் வெவ்வவுணர் குற்றினர்கள் பற்றி. (௪௧)

சேண்கொடு மூரிந் துபடர் தேவர்குழு வோரை
யேண்கொடு வருந்தகுவர் யாத்தனர் புயங்க
ஞண்கொடு திரும்பினர் நலங்கொள்கலை மானை
மாண்கொடு வரித்தெர்குதி வவ்வியகன் றென்ன. (சஉ)

இடுக்கணுறு தேவர்தமை யீர்த்தனர்கொ டேகி
மிடற்கதி ரருக்கனை வெகுண்டவன்மு னுய்ப்பக்
கடக்கரிய வன்மையொடு காவல்கொளு மென்றூன்
றடக்களிறு மேல்வரு சயந்தனிவை கண்டான். (சரு)

வேறு.

கண்டான் வெகுண்டான் புகையாரழல் கல்லென் மேக
முண்டா னெனவே யுமிழ்ந்தானொரு தன்சி லைக்கைக்
கொண்டான் குணத்தி னிசைகாட்டினன் கோட்டி நேர்போ
யண்டார் வெருவக் கணைமாரிக ளார்ப்பொ டுய்த்தான். (சச)

பொழியும் பொழுதத் தவுணப்படை போந்த வீரர்
மொழியு மனமு நனிதாழ்ந்திட முன்ன ரேகி
யொழியுங் கடைநா ளரன்வெற்பை யுறூது சூழ்போஞ்
சுழியுங் கடல்போ லவனூர்கரி சுற்றி யார்த்தார். (சரு)

சயந்தன் மிசையும் பொலங்கிம்புரித் தந்த வெள்ளைக்
கயந்தன் மிசையுஞ் சிலைவாங்கிக் கணைகள் கோடி
பயந்தந் திடத்தூர்த் தனர்சோமனைப் பன்ன கங்கள்
வயந்தன் னொடுபோய் முயலோடு மறைக்கு மாபோல். (சசு)

கல்லென் றரற்றுங் கழல்வீரர் கணைந்து சுற்றிச்
செல்லென்று விட்ட கணையாவையுஞ் சிந்தி வல்லே
மல்லொன்று மொய்ம்பிற் சயந்தன்சர மாரி தூண்டி
வில்லும் மனையோர் தனுவும்புவி வீட்டி னூல். (சஎ)

வீட்டிக் கணைக ளவுணப்படை மீது தூர்த்து
மோட்டுக் களிற்றின் றொகைதன்னை முகங்கொள் பாய்மா
வீட்டத் தினைத்தேர் களைவீர ரினத்தை யெல்லாம்
வாட்டிப்பின் வெள்ள மொருநூற்றினை மாய்வு செய்தான். (சஅ)

வாலிற் புடைக்கும் புழைக்கைகொடு வாரி யெற்றுங்
காலிற் படுக்கு மருப்பாலடுங் கந்த ரம்போ
லோலிட் டுயிருண் டிடுமாங்கவ னூர்ந்த வேழஞ்
சீலக் கதிரைச் சிறையிட்டவன் சேனை தன்னை. (சகூ)

நூறுய்ப் புகுதா னவர்வெள்ள நொடிப்பின் மாய
வீறுய்ப் படையும் பலபூண்களு மீன மாக
வாறுய்க் குருதி பெயர்ந்தேயகல் வான நீத்த
மாறுய்ப் பொருது மிசையோடி வளைந்து கொண்ட. (ருo)

காய்கொல் விபமேற் சயந்தன்னடு காலை தன்னிற்
பேய்கொல் லுனைத்தின் டினமேல்வரும் பெற்றி யோராய்
தீகொல் பறவை புரைவாயெமர் சேனை தன்னை
நீகொல் லுதி யெனவந்தன னீல கேசன். (ருக)

எண்ணத் தவரை யலைக்கின்ற விருண்ட கேசன்
றண்ணத் தவரை திகர்கின்ற சயந்தன் முன்போய்
விண்ணத் தவரை முகிரும்குறும் வேட மென்ன
வண்ணத் தவரைக் குனித்தமபெனு மாரி தூர்த்தான். (ருஉ)

தூர்த்தா னதுகாற் சயந்தன்னெதிர் தாண்டி வாளி
தீர்த்தான் சரமாரி யையன்றியுஞ் சின்ன மாக்கி
யார்த்தான் கவச மவனிட்டதை யம்பு நாலுல்
வேர்த்தா னுயிர்த்தா னிருட்குஞ்சியன் மேக மொப்பான். (ருக)

பாசம் பிணித்த வரணம்பரி வெய்த நீல
கேசன் விடுதம்தோர பிறையம்பினைக் கேடில் விண்ணோ
ரீசன் சிறுவன் சிலைநாணை யிறுத்தி மைசந்தான்
காசொன் றரவந் துணியப்பகை கௌவு மாபோல். (ருச)

சின்னம் படலும் பெருநாண்சிலை வீழ விட்டுத்
தன்னந் தனியாஞ் சயந்தன்சமர் செய்வ தற்கு
முன்னம் பயிற்று மொருமாயையை முன்னி யாற்றித்
துன்னந் தருபல் லுருவங்கொடு தோன்றி யுற்றான். (ருரு)

வேறு.

ஒன்றேயெனுங் கரிமேல்வரு மொருவன்பல வுருவாய்ச்
சென்றேதிறம் பலவாலடச் செறிபேரிருட் குடுமிக்
குன்றேபுரை யவுணர்க்கிறை குறிப்பாலிது மாய
மென்றேநினைந் தவைமாற்றிட யாதுஞ்செய வில்லான். (ருசு)

மலைவுற்றெதிர் நின்றார்ததிட வாயற்றனன் மயங்கித்
தொலைவுற்றன னிருட்குஞ்சியன் சூரன்மக னனிக
மலைவுற்றன விரிகின்றன வலமந்தன வெருவி
யுலைவுற்றன விறுதிப்பக லொழிவுறறிடு முயிர்போல். (ருஎ)

சோமாசுரன் மாயாபலி சுரகேசரி பதுமன்
மாமாருத பலிதண்டகன் வாமன்மதி வருணன்
றீமாகதன் முதலாகிய சேனைப்பெருந் தலைவ
ராமாயமி தெனவந்தன ரவ்விஞ்சையை யுணரார். (ருஅ)

தாங்கற்றிடு மாயப்பெருந் தனிவிஞ்சைகண் முன்னி
யாங்குற்றிடு மரபாறபொரு தன்னென்புரி மாய
நீங்கறகரு நிலையாதலு நெஞ்சந்தடு மாறி
யேங்குற்றன ரென்செய்துதும் யாமென்று நினைந்தார். (ருகூ)

அந்நேருறு காலந்தனி லாகின்றதுந் தலைவர்
தந்நோவலின் மெலிவுற்றதுஞ் சயந்தன்பெருந் திறலுங்
கொன்னேதன தனிகக்கடல் குறைகின்றதுங் கண்டான்
முன்னேயிர வியைமோர்பகற் சிறைவீட்டிய முதல்வன். (சுO)

வேறு.

அந்த ரந்தனி லிரவியைச் செயிர்த்திடு மவுண
னிந்தி ரன்மகன் மாயைகொ லிதுவென வெண்ணா
முந்தை நாட்புக ருதவிய மூலமா ஞான
மந்தி ரந்தனை யுளந்தனில் விதிமுறை மதித்தான். (சுக)

மதித்து வெஞ்சுடர்ப் பகையினன் சேறலு மாயை
விதித்த பல்லுருப் போயின தமியனாய் விடலை
கதக்க ளிற்றின்மேற் றோன்றின னாயிரங் கதிரோ
னுதித்த காலையிற் கலையிலாக் குறைமதி யொப்ப. (சுஉ)

ஆன காலையி லிதுபுகர் விஞ்சையென் றறிந்து
மான முஞ்சின முஞ்சுடச் சயந்தனுண் மறுகித்
தான வேழமே லிருந்திழித் தேரொடுஞ் சார்ந்து
பானு கோபனும் பெயரினு னினையன பகர்வான். (சுந)

வருதி யிந்திரன் மதலைநின் மாயையும் வலியுங்
கருதி யான்வரு முன்னரே போயின கண்டாய்
பரிதி போலவே நின்னையு மிருஞ்சிறைப் படுப்பன்
பொருதி வல்லையே லென்றனன் சூர்தரு புதல்வன். (சுச)

வல்ல ராயினோர் வெல்வது மற்றஃ தில்லோ
ரல்ல ராகியே தோற்பது மில்லையா லரனே
தொல்லை யூழ்முறை புணர்த்திடு நின்னைநீ துதிக்கச்
செல்லு மோவென வுரைத்தனன் சயந்தனுந் திறலே (சுரு)

தேற்ற மோடிவை புகறலு மிரவியைச் செயிர்த்தோ
னாற்ற லில்லவர் மொழிதிறம் புகன்றனை யன்றே
யேற்ற வீரரு மித்திற முரைப்பரோ வென்னாக்
கூற்ற மேயென விருந்ததோர் தன்சிலை குனித்தான். (சுசு)

சிலைவ ணக்கிய காலையிற் சயந்தனுஞ் சினத்து
மலைவ ணக்குதன் புயங்கொடே யொருசிலை வளைத்தா
னலைவ ணக்கரு ஞமலியெம் மடிகளை யடைந்தோர்
தலைவ ணக்கியே தத்தமி லிருவர்தாழ் வதுபோல். (சுஎ)

பாற்றி ருஞ்சிறைக் கணைபல பரிதியம் பகைஞ
னாற்ற மோடுவான் புயலெனச் சொரிதலு மொருத்தன்
மேற்றி கழ்ந்திடு சயந்தனு மனையன விசிகங்
காற்றெ னும்படி தூண்டியே விலக்கினன் கடிதின். (சுஅ)

அன்ன வன்விடுஞ் சரமெலாஞ் சூர்மக னறுத்துத்
தன்னு பல்கணை தூண்டின னவனவை தொலைத்தா
னின்ன தன்மையி னிருவரும் பொருதன ரிருளு
மின்னு மாகவே முறைமுறை மலைந்திடும் விதிபோல். (சுகூ)

இனைய வாறமர் புரிவுழி யிரவியம் பகைஞன்
வினைய நீரினாற் சொரிந்திடு பகழியை விலக்கித்
துனைய விந்திரன் மதலையா யிரங்கணை தூண்டி
யனைய னேந்திய சிலைப்பெரு நாணினை யறுத்தான். (எ0)

அறுத்த காலையின் ஞாயிறு வெகுண்டுளோ னழலிற்
செறுத்து வேறொரு சிலைவளைஇக் கணைமழை சிதறி
மறுத்து மாங்கவன் விடுஞ்சரஞ் சிந்திமற் றவன்மெய்
யுறுத்தி னானெய்ய வோராயிரஞ் சிலீமுக முய்த்து. (எக)

உய்த்த காலையிற் சயந்தனு மோராயிரங் கணைதுய்ப்
பத்தி யோடவன் றேர்கெழு பாய்பரி படுத்து
மெத்து பல்சரந் தானைமேல் வீசினன் விளிவோர்
வைத்த மாநிதி யாவர்க்கும் வழங்குமா றென்ன. (எ௨)

வாய்ந்த தோர்தன திரதமீ றுகமற் றொருதேர்
பாய்ந்து வெய்துயிர்த் தழலென வெகுண்டுபற் கறித்துச்
சேந்த மெல்விதழ் மதுக்கிவா னுருமெனத் தெழியா
[illegible]வார்சிலை குனித்தன னெறிகதிர்ப் பகைஞன். (எ௩)

[illegible]வெஞ்சிலை குனித்துநூ றுயிர கோடி
[illegible] வெங்கணை தூண்டிவிற் றாணியைத் துணித்துத்
[illegible]வங்கரி தன்னுடன் முழுவதுஞ் சயந்தன்
[illegible]முற்றவு மழுத்தினன் பகலினை வெகுண்டோன். (எ௪)

வேறு.

[illegible]வெய்ய வற்சிறை யிட்டவன் விட்டகோல்
[illegible]சைய மொத்த சயந்தன்மெய்ம் மூழ்கலு
[illegible]மைய லுற்றனன் மற்றொரு வெஞ்சமர்
செய்வ தற்குத் தெளிதலின் றாயினன். (எ௫)

[illegible]நீண்ட வாளிக ளான நிறத்திடை
யாண்ட காலை யரிமகன் றந்திமேல்
வீண்டு விம்மி யுணர்ச்சியும் விட்டனன்
மாண்டி லானமு தங்கொண்ட வன்மையால். (எ௬)

நண்ணு பாசடை நாப்ப ணிடந்தொறுந்
தண்ணெனன் மாமலர்த் தாமரை பூத்தென
விண்ண வர்க்கிறை மாமகன் மெய்யிடைத்
துண்ணெ னப்படு சோரி பொலிந்ததே. (எஎ)

கற்ற வாசவன் காளைதன் சீற்றநா
முற்ற வோத முடியுங்கொ றன்னுணர்
வற்ற போது மவன்சினக் கண்ணழல்
வற்று வித்தமெய் வாருரு திபுனல். (எஅ)

சயந்த னவ்வழி தன்னுணர் வின்றியே
யயர்ந்த போதத் தனையவ னூர்தியாங்
கயந்த னக்கிறை கண்டு கலங்கியே
துயர்ந்து நின்று சுளித்தெதிர் புக்கதே. (எ௯)

காய்ந்த தொன்மைக் கதிரை முனிந்திடு
மேந்த லூர்தரு மெந்திரத் தேர்மிசைப்
பாய்ந்த காலைப் பரித்தொகை பாகுடன்
வீய்ந்து போன தெழித்தது வேழமே. (அ0)

பாண்டில் சேர்தரு பண்ணமை செய்யதேர்
மாண்ட காலையில் வல்லையிற் கீழுறத்
தாண்டி வெள்ளையந் தந்தியைச் சீறினன்
மூண்டு பானுவை முன்சிறை செய்துளான். (அக)

மற்ற வன்றன் மணியணி மார்பிடைச்
செற்ற மால்கரி சென்றுமுற் றுக்கலும்
பொற்றை யின்கட் புழைத்திடுஞ் சூசியி
னிற்ற வாலத னீரிரு தந்தமும். (அ௨)

தந்த நான்குஞ் சடசட வாப்பொடி
சிந்த லுற்றன சீர்கெழு சூர்மக
னுந்து தொண்டலம் பற்றிமற் றோர்கையாற்
றந்தி வேந்தன் கவுளிடைத் தாக்கினான். (அ௩)

வேறு.

காழ்ந்த நெஞ்சினன் கரங்கொடு தாக்கலுங் கயமா
வாழ்ந்த தெண்டிரைப் பாற்கட லுடைந்தென வரற்றி
வீழ்ந்த யர்ந்தது சயந்தனு மறிந்தனன் விரைவிற்
சூழ்ந்த தொல்லுணர் வெய்தலு மவனிவை சொல்லும். (அ௪)

மாயை போயது தனித்தனங் குறைந்தது வன்மை
தீயர் பற்றுவ ரழியுமிந் நகரெனச் சிறிது
நீயி ரங்கலை யினிமன னேவிதி நெறிகா
ணாயி னிங்கிவை யென்றனன் சயந்தனு மறிந்தான். (அ௫)

றுணித்து நாடியே யிதத்திற நுவன்றுநூற் றுணிபு
மனத்தில் வைத்திடு மிந்திரன் கான்முளை மயங்கித்
தனித்த நீர்மையுங் களிற்றொடு வீழ்ந்ததுந் தளாவு
மனைத்து நோக்கியே தானவத் தலைவர்க ளார்த்தார். (அ௬)

ஆர்த்த தானவத் தலைவர்கள் சயந்தனை யயலே
போர்த்த தாமெனச் சுற்றினா பற்றினர் புவிமேற்
கூர்த்த வாலெயிற் றரவினம் யாவையுங் குழீஇப்போய்ச்
சீர்த்த வெல்லையி லிரவியைக் கரந்திடுந் திறம்போல். (அ௭)

தடித்த மொய்ம்புடைச் சயந்தனைத் தானவத் தலைவர்
பிடித்த காலையிற் கைதவன் கைதவன் பெரிது
மடித்தி டுங்கள்குற் றிடுங்களிங் கிவனுயி ரதனைக்
குடித்தி டுங்களென் றுரெலா வவுணருங் குழுமி. (அ௮)

மன்னர் மன்னவன் றிருமக னவ்வழி மற்றோர்
பொன்னெ டும்பெருந் தேர்மிசைப பொள்ளென வேகிப்
பன்ன ரும்புகர் படைத்திடு சயந்தனைப் பற்றித்
துன்னி நின்றவவுணருக் கொருமொழி சொல்வான். (அ௯)

வரிவில் வாங்பர்க்கட டவிடுஞ் சரம்பட மயங்கிப்
பெரிது மெய்தளர்வயிடைன் பேசவுங் கில்லான்
கருத லானென விவயார்வருத்தலிர் கடிதே
சுரர்கு மாத்தொடு மிடேசிறையெனச் சொற்றான். (௯0)

கொற்ற வன்மைபெரு வினவிய மந்தரக் குன்றைச்
சுற்று பாந்தள்போ லிந்திரன் றிருமகன் றனைத்தோ
விற்ற கொல்லென நாணினால் யாத்தன ரிமையோ
ருற்று நின்றதோர் குழுவினு ளொருங்குற வுய்த்தார். (௯௧)

வேறு.

தொழிலிது புரிந்த காலைச் சூர்மகன் றனது மாடே
தழியகா வலரை நோக்கிச் சயந்தனு மிவரு மல்லா
லொழியவின் றோரை யெல்லா மொல்லையிற் றருதிர் பின்ன
ரழியவிம் மூதூர் செந்தீ யரசனுக் களித்தி ரென்றான். (௯௨)

என்றலு மிறைஞ்சி யன்னோ ரெழிலுடைத் துறக்க மியாண்டுஞ்
சென்றனர் நாடி யேனைத் தேவரை மகளிர் தம்மை
யொன்றொரு வரையும் வீடா துடனுறப் பற்றி நாணுற்
பொன்றிர டடந்தோள் யாத்துப் புரவலன் முன்ன ருய்த்தார். (௯௩)

உய்த்தபின் பதுமச் செல்வி யுறைதரு முறையுள் போலச்
சித்திரங் கெழுவு பொன்னந் திருநக ரெல்லை யெங்கும்
புத்தழல் கொளுவ லோடும் பொள்ளெனப் பொடிபட் டன்றே
முத்திற வரைப்பு மெங்கோன் முறுவலான் முடிந்த வாபோல். (௯௪)

ஊழியி னன்றி யென்று மொழிவுறாத் துறக்க மூதூர்
பூழிய தான தன்றே புரந்தரன் வறியன் போனான்
வீழுறு சிறையி னுற்றார் மிக்கவ ரென்றால் யாரும்
வாழிய செல்வந் தன்னை நிலையென மதிக்க லாமோ. (௯௫)

அளிபட லின்றி யென்று மலர்தரு நிழற்று மூதூர்
வெளிபடு சுடலை போலாய் வேற்றுருக் கோட லோடுங்
களிபடு பானு கோபன் கண்டன னவுணர் தம்மி
லொளிபடு காவலோரை நோக்கியீ துரைக்க லுற்றான். (௯௬)

நாதலாந் தெரிய லாகச் சயந்தனை யவனோ டுற்ற
வேதிலார் தம்மைப் பின்னோர் யாரையுங் கொடுமுன் னீவிர்
போதிரா லென்ன வற்றே போயின ருவனை நீங்கி
யாதவன் பகைஞன் மீளா வனிகமோ டவனி வந்தான். (௯௭)

மாநில மதிக்கும் வீர மகேந்திர புரத்துப் புக்குக்
கோனகர் முன்ன மேகிக் கொடிஞ்சிமான் றேரி னீங்கிச்
சேனையை நிறுவி வானச் சிறையினைக் கொண்டு சென்று
தானவர் மன்னன் முன்போய்த் தாண்முறை வணக்கஞ் செய்தான். ( )

தண்டளி நறவ மாலைத் தாதைதாள் வணங்கி யெந்தாய்
கண்டிலன் சசியை வானோர் காவலன் றனையுங் காணே
னண்டரைச் சயந்தன் றன்னை யாரையுங் கொண்டு சென்றேன்
விணடொடர் துறக்க முற்றும் வெங்கனல் கொளுவி யென்றான். (௯௯)
மியன்றான்.

என்றலு மகிழ்ந்து சூர னிளஞ்சி[illegible]று
தன்றிரு முன்ன ரிட்ட சயந்த[illegible]னோடு சூழ்ந்து
கன்றின னுருத்து வாட்கைக் க[illegible]தனை யுய்ப்ப னோக்கித்
தின்றிய வினைய ரங்கம் யாவையு[illegible]ந் துகள் பட[illegible]ரென்றான். (௧00)

இரலைமான் றொகுதி தன்மே லிரு[illegible]கியே கருனை[illegible]ற்ற
வுருகெழு புலியாய்த் தொப்ப வொப்பிலா வர[illegible]ல்லால்
விரைவுட னவுணர் பல்லோர் விண்ணவர் தம்பான் மேவித்
திருவையின் முகத்தி காணத் துண்ணெனத் துணிக்க லுற்றார். (௧0௧)

கரத்தினைத் தாளைத் தோளைக் கன்னமூ லத்தைக் கல்லென்
றரற்றுறு கண்டந் தன்னை யணிகெழு துண்டந் தன்னைச்
சிரத்தினைத் துணிப்ப வன்னோர் சிறியரோ செய்த நோன்பி
னுரத்தினி லவைக ளெல்லா முடனுடன் பொருந்த லுற்ற. (௧0௨)

செல்லரு நெறிக்கணின்ற சேனுளார் தம்மை யாருங்
கொல்லரி திறையு மங்கங் குறைத்தலு மரிதா மென்றுற்
சொல்லரி தினையர் வன்மை தொலைந்ததெம் வரத்தா லென்னா
வல்லரி புரைவெஞ் சூரன் மதித்துமற் றதனைக் கண்டான். (௧0௩)

கண்டனன் முனிந்தின் னோரைக் காலமொன் றானும் வீடா
வெண்டரு நிரயம் போலு மிருஞ்சிறை யிடுதி ரென்றே
திண்டிற லசுரர் கேட்பச் செப்பலுஞ் சயந்தன் றன்னை
யண்டரைப் பிடர்தொட் டுந்தி யாங்கனங் கொண்டு போனார். (௧0௪)

போயினர் சிறையி னெல்லை போற்றினர் தம்மை நோக்கி
யேயின னங்கோ ரின்னோர் யாரையுங் காவல் கொண்மி
னீயிர்க ளென்னா வொற்றர் நீங்கினர் நின்றோர் தம்மை
யாயவர் வல்லி பூட்டி யருஞ்சிறைக் களத்தி னுய்த்தார். (௧0௫)

மன்னவ னதற்குப் பின்னர் மைந்தனை யன்பா னோக்கி
நின்னக ரத்திற் போதி நீயென வனையன் போனா
னன்னதோர் சூர பன்ம னவையொரீஇ யுறையுள் புக்கா
னின்னலங் கடலி னுற்றா ரிருஞ்சிறைப் பட்ட வானோர். (௧0௬)

வேறு.

காடு போந்தன னிந்திரன் பொன்னகர் கரிந்து
பாடு சேர்ந்தது சயந்தனுஞ் சிறையிடைப் பட்டா
னூடில் விண்பதச் செய்கையீ தெம்பிரா னல்கும்
வீட தேயலாற் றுன்பறு மாக்கம்வே றுண்டோ. (௧0௭)

வேறு.

படவர வனையதோர் பருமவல்குலா
ரிடுகிய நுண்ணிடை யெழில ணங்கினோர்
கொடுமைசெ யவுணரூர் குறுகி வேடர்பாற்
பிடியுறு மஞ்ஞையிற் பெரிது மஞ்சினார். (௧0௮)

சூரன்வாழ் பெருநகர் துன்னிக் காப்பொடு
சீரிலா வேவல்கள் செய்து மேவினார்
கூரும்வாய் வெங்குரீஇ குடம்பை யுய்த்திடப்
பேருறு திலகுமின் மினியின் பெற்றிபோல். (௧0௯)

வாடிய முகபத் [illegible] னுமோரா
ராடுறு துயர்க்கட [illegible] சரம [illegible] கோன்
வீடருஞ் சிறையிடை [illegible] ரவர்
பாடுறு திறத்தையா [illegible] னினோர். (௧௧0)

இன்னலங் கடலி [illegible] து வீடுதங்
தன்னவர் பெருஞ்சிறை யகற்றும் வன்மையார்
பின்னெவ ருண்டுயிர் பெற்றுக் காத்திடி
முன்னவர் தமக்கெலா முதல்வ நீயலால். (௧௧௧)

வியந்தரு கதிரைமுன் வெருண்டு ளானொடு
சயந்தன்வின் னுலகிடைச சமர்செய் தெய்த்துழி
வயந்தரு கோடுகண் மாய்ந்து தந்திவீழ்ந்
தயர்ந்தது புவியிடை யணுகிற் றததுணே. (கக௨)

வாலிய வொளிகெழு வனத்தி லேகியே
மூலம தாகிய முக்கண் மூர்த்தியை
மேலுள தாணுவின் மேவச் செய்துபின்
சீலமொ டருச்சனை செய்து வைகிறதே. (கக௩)

அறிவுள மால்கரி யமலன் றந்திர
முறையது நாடியே முதிரு மன்பினன்
மறையுற வழிபடீஇ வைகு மெல்லையிற்
குறைபடு நாற்பெருங் கோடும் வந்தவே. (கக௪)

பார்ப்பதி மருங்குறு பகவ னணையான்
மாற்பெருங் களிறறிடை வலலை முன்புபோ
னுற்பெருந் தந்தமு நண்ண நோக்கியே
யேற்பரு மகிழ்ச்சியோ டிருந்த தவவிடை. (கக௫)

வேறு.

ஆயதோ ரமைதி யின்க ணணங்கொடு மேரு வெற்பிற்
போயின வமரர் கோமான் பொன்னகர் சூரன் மைந்தன்
காயெரி கொளுவி யங்கட் கடவுளர் குழுவி னேரைச்
சேயொடு பற்றி யேகிச் சிறைசெய்த தன்மை தோர்ந்தான். (கக௬)

தேர்ந்தனன் றளர்ந்து மேருச் சிலமபினின் மகவான் பன்னுள்
வார்ந்திடு கங்கை வேணி வள்ளலை யுன்னி நோற்பச்
சார்ந்துகிற் கென்னை வேண்டுஞ் சாற்றென முதல்வ னீதி
போர்ந்தசூர் கிளையைச் செற்றெம் பேதுற வகற்று கென்றான். (கக

என்றலு மெந்தை சொல்வான் யாமுமை தன்னை மேவி
யொன்றொரு குமரன் றனனே யுதவுவ மவனே போந்து
வென்றிகொள் சூர னாதி யவுணரை விரைவிற் செற்று
மன்றலும் முரிமை யீவன் வருந்தலென் றுரைததுப் போனன்.

சாதலுந் தொலைவு மில்லாத் தானவர்க் கிறைவ னேனை
ரேதிலர் தம்மால் வீடா னென்றுதன் னுளததி லெண்ணிச்
சோதிகொள் பரமே மாகித் தோன்றிடு முதல்வ னீயே
யாதலின் விமல மூர்த்தி யவரைமே லடுதி யென்றான்.

அவவுரை மகவான் றேறி யரியய னேடு சூழ்ந்து
மைவரு களத்தோன் றன்பான் மதனனை யுய்ப்ப வன்னோன்
மெய்விழி யெரியின் மாய்ந்து வெறுந்துகள் படலுந் தேவ
ரெவவெவ ரும்போய் வேண்ட விரங்கியே கருணை செய்தான்.

அரியயன் மகவான் றேவ ரருங்கணத் தலைவர் யாரும்
பரவுற விமய வெற்பிற் படர்ந்துபின் னுமையை வேட்டுப்
பிரிவருங் கைலை நண்ணிப பின்னெம திரக்க நாடிக்
கருணையா லெந்தை தின்னே நெற்றியங் கண்ணாற் றந்தான்.

எந்தைநீ வந்த பின்றை யிந்திர னயன்மா றேவ
ரந்தமின் முனிவ ரேனோ ரனைவர்க்கு மகன்ற வாவி
வந்தது போன்ற தம்மா வலியவெஞ் சூரற செற்றுத
தந்தம தரசு பெற்ற தன்மையர் போல வுற்றார். (கஉஉ)

ஆழ்தரு முந்நீர் நேமி யகன்கட லழுவம் புக்கு
வீழ்தரு வோர்க டம்பால் வியன்கல மொன்று சேர
வூழ்தரு தொடர்பாற் பறறி யுய்ந்தெனத் துன்ப வேலைக்
கீழ்தரு வோர்க ளின்னாற் கிளாந்துமே லெழுத லுற்றார். (கஉ௩)

புரந்தரன் முதலா வுள்ள புங்கவ ரெம்ம னோர்க
ளரந்தையை யகற்ற வுன்னி யையநீ போந்த பின்னுந்
தெரிந்திடு துணிபிற் சேர்ந்துந் தெம்முனைச் சூரற் கஞ்சிக்
கரந்தன ரிருந்தா காணிற் கடுஞ்சிறைப் பிணிப்ப னென்று. (கஉ௪)

எம்பிரா னின்னை முக்க ணெந்தையை வணங்க நேரிற்
றம்பெரு வடிவங் காணச் சாருவ ரொழிந்த காலை
யும்பர்கோன் முதலோர் தத்த முருக்கரந் துழல்வர் வான்மேல்
வெம்பணி சிலைகண் மாறும் வெய்யவர் நிலைமை யேபோல். (கஉ௫)

[illegible]பாங்க ரின்ன வாசவன் முதலோர் யாரு
[illegible]சூர பன்ம னடிபடைத் தலைவாக் காணிற்
[illegible]மாப முள்ளம் பனிததிட வியர்ப்ப யாக்கை
[illegible]ாகிப் பின்ன ரின்னுயிர பெறுவ ரன்றே. (கஉ௬)

[illegible]முழுந்த விண்ணோர் வெந்தொழி லவுணர் கோனை
[illegible] மவச மாவா நெடுந்துயில் பெறுத நீரான்
[illegible]கனவு நீத்தார் மற்றது வருமே லங்க
[illegible] சூரற் காணி னுயிரையு மிழபப ரம்மா. (கஉ௭)

[illegible]ரிறுதி செய்து புதல்வனை யமர ரோடு
[illegible] சிறையுட் சேர்ததித் துயர்ப்பெருங் கடலுள் வீட்டி
[illegible]வெறுக்கை வெளவி மனையொடு கரப்பச் செய்து
[illegible]மவுணர் கோமா னிந்திரற் கலக்கண் சூழும். (கஉ௮)

[illegible]வெறுக்கை தன்னு லோங்கிய விறலாற் சீரான்
[illegible]மிடலால் யார்கரு மேன்மையா லழியா வாற்று
[illegible]வானோர்க் கெல்லா மிடர்புரி கொடுமை நீரா
[illegible] சூரற் கென்று மாருநே ரன்று மாதோ. (கஉ௯)

[illegible]ண்டமொன் றி னிழைததன விவ்வா றேனை
[illegible]தாரே மூண்டத தவனசெய லறித றேற்றாந்
[illegible] பரத்தின் மேலாரு சோதியா யெமமைக காப்பான்
[illegible]வாருநீ யன்றி வேறியார் தெரிதற் பாலார். (க௩௦)

[illegible]டு சீர்பெற் றுள்ள சூரன தாணை யென்னிற்
[illegible] புரியார் மாலுங் கமலமே லயனும் வானோ
[illegible] முனிவர் யாரு மாயிர விருநா லண்டத்
[illegible] வுயிரு மன்னோன் பெருமையா ருரைக்கற் பாலார். (க௩௧)

முடிவிலிவ் வளம்பெற் றுள்ள முரண்கெழு சூர பன்மன்
கெடுகில னன்று மேலோன் கொடுத்திய வரத்தின் சீராற்
படியறு மமல மேனிப் பரஞ்சுடர் குமர நீயே
யடுவதை யன்றிப் பின்ன ரவனையார் முடிக்கற் பாலார். (௧௩௨)

ஐந்திய லங்கஞ் சூரற் கயன்புகன் றுழல்வா னொரு
மிந்திரை கேள்வன் போர்செய் தெஞ்சின னெவர்க்கு மேலாய்
முந்திய சிவனன் னோற்கு முதல்வர மளித்தான் பின்னர்
வந்தடல் புரியா னீயே மற்றவற் கோறல் வேண்டும். (௧௩௩)

ஆவதோர் சூரன் றன்னை யவன்றுணை யோரை மைந்த
ரேவர்க டமையு மட்டே யெழில்பெறு சயந்த னோடுந்
தேவர்தஞ் சிறையை நீக்கித் திசைமுகன் மகவா னாதிக்
காவலர் பதங்க ளல்கிக் காத்தரு ளெம்மை யென்றான். (௧௩௪)

இவ்வகை முகமா றுள்ள வெம்பிரா னுளத்துக் கேற்ப
வுய்வுறு மன்பாற் பொன்னோ னுரைப்பமுன் னறிந்த தொன்றை
மெய்வரு தொடர்பா லின்றோர் விழைவினான் மழலை யோவாச்
செவ்வியின் மகார்வாய்க் கேட்குந் திறனென வினவிச் சொல்வான். ()

புன்றொழி லவுணர் தன்மை புறத்தவர் செய்கை யாவு
மொன்றிடை விடாது முற்று முள்ளவா றுரைத்தாய் நம்மு
னன்றிது பனுவற் கெல்லா நாதனை யொருநீ யன்றோ
வென்றவன் புமத்தை நீவி யினிதருள் புரிந்தா னெங்கோன். (௧௩௬)

அறிவினு ளறிவாய் வைகு மறுமுக வமல வெனாசூ
ரிறுசெய னினைக்கி லாது மீணடையோ ராட லுன்னிக்
கூறுகினை யதுபோ லன்னோன் கொள்கையுந் தேர்ந்தாய் நிற்கோர்
சிறியனே னுரைத்தே னென்னுந் தீப்பிழை பொறுத்தி யென்றான். ()

பொறுத்தியென் குற்ற மென்று பொன்னடித் துணையைப் பொன்னோன்
மறத்தலி லன்பிற் பூண்டு வணங்கினன் றொழுது போற்ற
வெறித்தரு கதிர்வே லண்ண லெம்முரை கொண்டு சொற்று
யுறத்தகு பிழையில் யாது முன்னலை யிருத்தி யென்றான் (௧௩௮)

வேறு.

பொன்னெனும் பெயரினான் பொருவில் கந்தவே
ளின்னரு ணிலைமைபெற் றிருந்த பின்னரே
தன்னய னிறபுறு சதம கத்தனை
யங்கிலை நோக்கியே யன்பிற் கூறுவான். (௧௩௯)

ஈண்டிது கேண்மனத் தேது மெண்ணலை
மூண்டிடு சூர்குல முடிய வானுளோர்
மீண்டிட விருஞ்சிறை விண்ப தத்தைநீ
யாண்டிட நல்குது மையு றேலென்றான். (௧௪0)

இகபர முதவுவா னிதனைச் சாற்றலு
மகபதி பரிவொடு வணங்கி வானவத்
தொகையொடு போற்றியே துன்பெ லாமொரீஇப்
புகலரு மகிழ்ச்சியுட் பொருந்தன் மேயினான். (௧௪௧)

ஆ திருவிருத்தம் - ௧௬௨௧.

## வசனம்.

முன்னே தந்தையின்கட்டளையைச் சிரசாகவகித்துநின்ற பானுகோபன்
இரண்டாயிரங்குதிரைபூண்ட தேரிலேறி, ஆயிரவெள்ளம் அவுணர்சேனை தன்
னைச்சூழச்சென்று, தூன்முகியைநோக்கி, உங்கள்கையைத்துணித்தவிடம் யாது?
என்றுகேட்க, சீகாழியிலுள்ள ஒரு சோலையைக்காட்டினாள், அவ்விடத்தில் இந்
திரனையும், இந்திராணியையும், வீரமாகாளரையும் தேடிக்காணாமல் பொன்னுல
கையடைந்தான். இந்தச்செய்தியைத் தேவர்கள் இந்திரன்மகனாகிய சயந்தனுக்
கறிவித்தார்கள். அவன், பானுகோபன் இவ்விடத்திற்குவந்தது நம்மையெல்லாம்
வருத்தநினைத்தேயென்று தோன்றுகின்றது; நாம் என்செய்வோம். அவன் நம்
மேல்வரும்போது நாம் சும்மாவிருக்கலாகாது; நாமும் போர்செய்வதே தகுதியா
கையால், நீங்களெல்லாரும் போர்க்கோலங்கொண்டு வாருங்களென்றான். அதற்
குத் தேவர்களும் சம்மதித்துப் போர்க்குச் செல்லத்துணிந்தார்கள்.

அப்போது சயந்தன் தன் சிங்காதனம்விட்டிறங்கித் தன் யானையின்மீதேறித்
தேவர்கள் சூழ்ந்துவரச்சென்று பானுகோபனிடத்தையடைந்தான். அப்போது
அவுணர்கள் சயந்தன் போர்செய்யவந்தது ஆச்சரியமென்று நகைத்து, அத்தேவர்
களைப் பலவகையாகிய ஆயுதங்களால்வருத்துதலும் தேவர்கள் முறிந்தோடினார்கள்.
அதைக்கண்ட சயந்தன் தன் வில்லைவளைத்து அநேகமாயிரம் பாணங்களையேவி
அவுணர்கள் தோற்றோடச்செய்தான். அதைக்கண்ட நீலகேசன் என்னும் அவு
ணப்படைத்தலைவன் வந்தெதிர்க்க, அவனையும் அநேகம் பாணங்களால் வருத
தித், தான் முன்பயின்றிருந்த மாயையால் பலவுருவங்களைக்கொண்டு போர்புரிய
அவன் இதென்ன மாயவித்தையாயிருக்கிறதென்று மனந்தளர்ந்துநின்றான். சோ
மகாசுரன் மாயாவலி முதலிய படைத்தலைவர்கள் வந்தெதிர்த்து சயந்தனுக்குத்
தோற்றுநின்றார்கள். இதைக்கண்டபானுகோபன் தனக்குச் சுக்கிராசாரியர் உப
தேசித்திருந்த மூலமந்திரத்தை உச்சரித்துச் சயந்தன்முன்னேபோதலும், மாயை
யால் சயந்தன்கொண்டிருந்த பலவுருவங்களும்நீங்கித் தானும் யானையுமாய்நின்று,
இது சுக்கிராசாரிகற்பித்த மந்திரபலமேயாமென்று மனக்கலக்கத்தோடிருந்தான்.

அவ்வாறுநின்ற சயந்தனைப் பானுகோபன்பார்த்து, உன்மாயையும் வலியும்
நான்வருமுன்னமே கெட்டழிந்தன, இனிநீ யென்னோடு போர்செய்ய வலியிருந்
தால் போர்செய்யலாமென்றுசொல்லி அநேகம்பாணங்களைச் சயந்தன்மீது பிர
யோகிக்க, சயந்தனும் அநேகம்பாணங்களைத்தொடுத்து அவற்றையெல்லாம் விலக்
கினான். இவ்வாறே இருவரும் ஒருவர்க்கொருவர் பின்னிடாமல் போர்செய்யும்
போது முடிவில் பானுகோபனுக்கெதிர்நிற்கமாட்டாமல் சயந்தன் மெலிவடைந்து
நின்றான். அவனையும் பிடித்துச் சிறையிடக் கட்டளையிட்டு, பொன்னுலகத்தைச்
சுட்டு நீறாக்கவும் கட்டளையிட்டு அவர்கள் அவ்வாறேசெய்தபிறகு சயந்தனையும்
தேவர்களையும்கொண்டுபோய்ச் சூரபன்மனுக்கெதிரேநிறுத்தி, இந்திரனும் இந்திரா
ணியும் எவ்விடத்தில் மறைந்திருக்கிறார்களோதெரியவில்லை. இவர்களென்கையிலக
ப்பட்டவர்களென்றுசொல்லி வணங்கிநின்றான். அப்படிநின்ற பானுகோபனைச் சூர
பன்மன் வாரியெடுத்து மார்போடணைத்து முத்தமிட்டுக்கொண்டு, பிறகு சிலரை
யழைத்து இவர்களைச் சிறைச்சாலையில் அடைத்துவையுங்களென்று கட்டளையிட,
அவர்களும் அப்படியேசெய்தார்கள். பிறகு பானுகோபனுக்கு விடைகொடுத்துத்
தானும் தன் அரண்மனையைச்சேர்ந்தான். தேவர்கள் சிறையிலகப்பட்டுத் துன்
பக்கடலில் ஆழ்ந்திருந்தார்கள். பானுகோபனால் கொம்புகளொடியப்பெற்ற வெள்

ஐயாயானையானது திருவெண்காட்டையடைந்து பரமசிவனைப்பூசித்துத் தன்கொம்புகளை முன்போலவேபெற்றிருந்தது.

அந்தச்சமயத்தில், மேருமலையில் ஒளித்திருந்த இந்திரன், சயந்தன்முதலானவர்கள் சிறைவைக்கப்பட்டனரென்பதறிந்து பரமசிவனைநினைத்துத் தவஞ்செய்ய, பரமன் அவன் தவத்திற்கிரங்கி அவனுக்கெதிரேதோன்றி, உனக்குவேண்டியதென்னவென்றுகேட்க, சூரபன்மன் கிளையோடழிய வரந்தந்தருளவேண்டுமென்றான். இறைவன் இந்திரனைநோக்கி, யாம் உமாதேவியைமணந்து ஒருகுமரனைத்தருவோம், அவனால் சூரன் தன்கிளையோடுமாய்வான், நீங்களும் சுகமடைவீர்களென்று சொல்லி மறைந்தருளினர். ஆதலால் அச்சூரபன்மனைத் தேவரீரே கொல்லவேண்டும். இதுநிற்க, தேவரீர் இறைவனது நெற்றிக்கண்ணிலவதரித்தபிறகு, இந்திராதிதேவர்களும் முனிவர்களும் தாம் இழந்தவுயிரைப்பெற்றாற்போலக் களிப்படைந்திருக்கிறார்கள். சூரனே சயந்தன்முதலானவர்களைச் சிறையிட்டிருக்கிறான். பரமசிவன் கொடுத்த வரபலத்தால் அவன் ஒருவராலும் வெல்லப்படமாட்டான். தேவரீர் ஒருவரே அவனைக்கொன்று தேவர்களையும் சயந்தனையும் சிறையினின்றும் மீட்டவேண்டுமென்று வியாழபகவான் சூரபன்மனது வரலாற்றை ஆதியோடந்தமாகச் சொல்லி வணங்கிநிற்க, எமதுசொல்லைக்கொண்டு சொன்னதனால் உன்சொல்லில் ஒருபிழையும் இராதென்றருளிச்செய்து, அருகேயிருந்த இந்திரனைநோக்கி, சூரபன்மன் குலத்தோடழியவும், சயந்தன்முதலிய தேவர்கள் சிறைநீங்கவும், நீ விண்குடியேறவும் செய்வோமென்று திருவாய்மலர்ந்தருளினன். இந்திரன் சண்முகப்பெருமானைவணங்கி மனமகிழ்ந்திருந்தான்.

அமரர்சிறைபுகுபடலம் முற்றிற்று.

---

## அசுரகாண்டம் முற்றுப்பெற்றது.

---

ஆ. காண்டம் இரண்டுக்குந் திருவிருத்தம் - ௩எக௨.

கச்சியப்பசிவாசாரியர் கவினடிவாழ்க.

---

உ

சிவமயம்.

சண்முகக்கடவுள் துணை.

மூன்றாவது

# மகேந்திரகாண்டம்.

## வீரவாகுகந்தமாதனஞ்செல்படலம்.

விரிஞ்சன்மா றேவ ராலும் வெலற்கரும் விறலோ னாகிப்
பெருஞ்சுரர் பதமும் வேத வொழுக்கமும் பிறவு மாற்றி
யருஞ்சிறை யவர்க்குச் செய்த வவுணர்கோ னாவி கொள்வான்
பரஞ்சுட ருருவாய் வந்த குமரனைப் பணிதல் செய்வாம். (க)

இந்திர னாதி யான வமரரு மேனை யோரும்
புந்தியி னுவகை பூத்துப் புடைதனி லொழுகிப் போற்றச்
செந்திமா நகரந் தன்னிற் சீயமெல் லணைமேல் வைகுங்
கந்தவே ளருளி னீரா வினையன கருத லுற்றான். (உ)

நான்முக னாதி யான நாகரு முனிவ ரும்போன்
மேன்முறை யவுண ராகும் வியன்றொகை யவரு மெங்கோன்
கான்முளை நெறிய ரேனுங் கடியரை முடிவு செய்த
ஆன்முறை யியற்கை யாகு நுவலரு மறனு மஃதே. (ங)

இற்றிது துணிபா மேனு மெண்ணெழிற் சூரன் றன்னை
யறமில் சிறப்பின் வைகு மவன்றமர் தம்மை யெல்லாஞ்
செற்றிடன் முறைய தன்றாற் றேவர்தஞ் சிறைவிட் டுய்ய
மற்றவன் றனக்கோ ரொற்றை வல்லையில் விடுத்து மன்னோ. (ச)

தூண்டுநம் மொற்றன் மாற்றஞ் சூரனா மவுணன் கேளா
வீண்டிடு சிறையி னீக்கி யமரரை விடுப்ப னென்னின்
யாண்டிட வின்றி யின்னும் வாழிய மறுத்து ளானே
லாண்டுசென் றடுது மீதே யறமென வகத்துட் கொண்டான். (ரு)

வடித்தசெங் கதிர்வே லண்ணன் மாலயன் மகவா னாதி
யடுத்தபண் ணவரை நோக்கி யவுணர்தங் கிளையை யெல்லா
முடித்திடப் பெயர்து நாளை முன்னமோர் தூதன் றன்னை
விடுத்தன முணர்தல் வேண்டும் வெய்யசூர் கருத்தை யென்றான். (சு)

கடலுடைக் கடுவை யுண்டோன் காதல னினைய செப்ப
மடலுடைப் பதுமப் போதில் வைகினோன் மாயன் கேளா
வடலுடைப் பெரும்போ ரெந்தை யாற்றுமுன் சூரன் முன்னோர்
மிடலுடைத் தூதன் றன்னை விடுத்தலே யறத்தா றென்றார். (எ)

என்றலுங் குமர மூர்த்தி யிப்பெருந் திறலோர் தம்முள்,
வென்றிகொள் சூரன் றன்பால் வீரமா மகேந்தி ரத்தைச்
சென்றிட விடுத்து மியாரைச் செப்புதி ரென்ன லோடு
நன்றென வதனை நாடி நான்முக னவிற லுற்றான். (அ)

மெல்லென வுலவைக் கோனும் வீரமா மகேந்தி ரத்திற்
செலலரி தெனக்கு மற்றே செய்பணி நெறியா லன்றி
யொல்லையி லங்க ணேகி யொன்னலர்க் கடந்து மீள
வல்லவ னிணைய வீர வாகுவே யாகு மென்றான். (க)

சதுர்முக னிணைய வாற்றாற் சண்முக னுளத்துக் கேற்பக்
கதுமென வுரைத்த லோடுங் கருணைசெய் தழகி தென்னா
மதுமலர்த் தொடையல் வீர வாகுவின் வதன நோக்கி
முதிர்தரு முவகை தன்னோ டித்திற மொழிய லுற்றான். (கo)

மயேந்திர மூதூ ரேகி வல்லைநீ யமல னல்குஞ்
சயேந்திர ஞாலத் தேரோன் றனையடுத் தொருநாற் றந்தக்
கயேந்திரன் மதலை வானோர் காப்பைவிட் டறத்தா றுன்னி
நயேந்திர வளத்தி னோடு முறைகென நவிறி யன்றே. (கக)

அம்மொழி மறுத்து ளானே லவுணனின் கிளையை யெல்லா
மிம்மென முடித்து நின்னை யெஃகவேற் கிறையா நல்கத்
தெம்முனை கொண்டு நாளைச் செல்லுதும் யாமே யீது
மெய்ம்மைய தென்று கூறி மீள்கென வீரன் சொல்வான். (கஉ)

வெந்திற லவுண ரீண்டும் வீரமா மகேந்தி ரத்திற்
சுந்தரத் திருவின் வைகுஞ் சூரபன் மாவின் முன்போ
யெந்தைநீ யருளிற் றெல்லா மிசைத்தவ னுள்ள நாடி
வந்திடு கின்றே னென்னா வணங்கியே தொழுது போனான். (கங)

கூர்ந்திடு குலிசத் தண்ணல் குமரவே ளொற்றன் றன்பின்
போர்ந்தனன் சென்று வீர பெருந்திறற் சூரன் மூதூர்
சார்ந்தனை சிறையில் வானோர் சயந்தனோ டிருந்தா ரங்கட்
சேர்ந்தனை தேற்றிப் பின்னுன் செயலினை முடித்தி யென்றான் (கச)

அவ்வழி யமரர் கோமா னனையன வறைத லோடுஞ்
செவ்விது நிற்றி யற்றே செய்வனென் றவனை நீங்கி
யெவ்வமி றுணைவ ராகு மெண்மரு மிலக்கத் தோரு
மெய்வருந் தொடர்பிற செல்லக் கண்ணுறீஇ விடலை சொல்வான். (கரு)

நீயிர்கள் யாருங் கேண்மி னெடுந்திரைப் பரவை வாவித்
தீயதோர் மகேந்தி ரத்திற் சென்றுசூர் முன்போய் நந்த
நாயகன் பணித்த மாற்ற நவிலுவன் மறுத்து ளானே
லாயவன் மூதூர் முற்று மட்டபின் மீள்வ னம்மா. (கசா)

என்றலும் வியந்து பின்னோர் யாவரு மிறைஞ்ச லோடும்
பொன்றிக ழாகத் தூடு பொருந்துறப் புல்லிக் கொண்டு
வன்றிறற் பூதர் தம்முண் மன்னவ ரோடு மங்க
ணின்றிட வருளி வல்லே நெடுங்கடல் வேலை போந்தான். (கஎ)

அலங்கலர் திரைகொ ணேமி யங்கரை மருங்கின் மேரு
விலங்கலி னுயர்ந்த கந்த மாதன வெற்புத் தன்னிற்
பொலங்குவ டுச்சி மீது பொள்ளென விவர்த லுற்றான்
கலன்கலன் கலனென் றம்பொற் கழலமர் கழல்க ளார்ப்ப. (கஅ)

புஞ்சமார் தமாலச் சூழல் பொதுளிய பொதும்பர் சுற்றி
மஞ்சுகின் றுறுத கந்த மாதனப் பிறங்க லும்பர்
விஞ்சுநுண் பொடிதோய் மேனி மேலவ னிவரும் பான்மை
யஞ்சன வரைமேல் வெள்ளி யடுக்கல்சென் றனைய தன்றே. (கக)

கடுங்கலி மான்றேர் வெய்யோன் கையுற நிவந்த செம்பொ
னெடுங்கிரி மிசைபோய் வீர னிற்றலும் பொறையாற் றுறது
நடுங்கிய தருமுற் றென்ன நளிபகிர் வுற்ற தங்க
ணொடுங்கிய மாவும் புள்ளு மொல்லென விரிந்த வன்றே. (உ0)

உண்ணிறை புள்ளு மாவு மோலிட வொலிமேல் கொண்டு
தண்ணென வருவி தூங்கத் தோன்றிய குடுமிக் குன்ற
மண்ணலைத் தரிக்க லாற்றே னளியனே னந்தோ வென்னாக்
கண்ணிடை வாரி சிந்தக் கலுழ்தல் போலு மாதோ. (உக)

அடல்கெழு திண்டோள் வீர னடிகளின் பொறையாற் றுறது
விடர்கெழு குடுமி வெற்பு வெருவலு மாண்டை வைகும்
படவர வுமிழ்ந்த செய்ய பருமணி சிதறும் பான்மை
யுடல்கெழு குருதி துள்ளி யுகுக்குமா றொப்ப தன்றே. (உஉ)

அறைகழ லண்ண னிற்ப வவ்வரை யசைய வங்க
ணுறைதரு மாக்க ளஞ்சி யொருவில வெருவி விண்மேற்
பறவைகள் போய தன்பாம் பட்டுழிப் பெரியர் தாமுஞ்
சிறியரு நட்டோர்க் காற்றுஞ் செயன்முறை காட்டுகின்ற. (உங)

மழையுடைக் கடமால் யானை வல்லிய மடங்க லெண்கு
புழையுடைத் தடக்கை யாளி பொருப்பசை வுற்ற காலை
முழையிடைத் தவறி வீழ்வ முதியகா லெறியப் பட்ட
தழையுடைப் பொதும்பர் பைங்காய் தலைத்தலை யுதிர்க்கு மாபோல். (உச)

நன்றிகொள் பரிதிப் புத்தே ணகுசிர மாக வென்றாழ்
குன்றிருஞ் சடில மாகச் சுரநதி தோயத் திங்க
ளொன்றொரு பாங்கர் செல்ல வோங்கிரும் பிறங்க லுச்சி
நின்றதோர் விசயத் தோளா னெற்றியங் கண்ணன் போன்றான். (உரு)

வலமிகு மொய்ம்பின் மேலோன் மலர்க்கழ லுறைப்ப வாற்றா
தலமரு குவட்டி னிற்ற லென்றுநீ முனிவ ருய்த்த
கொலைகெழு முயல கன்மெய் குலைந்திடப் புறத்துப் பொற்றா
ணிலவணி சடையோ னூன்றி நின்றிடு நிலைமை நேரும். (உசு)

மாசிருள் செறியுந் தெண்ணீர் மறிதிரை யளக்கர் வேலைப்
பாசடைப் பொதும்பர் வெற்பிற் பண்ணவன் றாத னிற்றல்
காசியி லரற்றத் தள்ளிக் களிறுடல் பதைப்பக் கம்மே
லீசனன் றடிக ளூன்றி யிருந்திய வியற்கை போலும். (உஎ)

தாரகன் படைஞர் பல்லோர் சமரிடை யிரிந்து போனார்
பாரிடை யுறாமே யந்தப் பருவரை முழைக்க ணுற்றார்
வீரமொய்ம் புடையோ னங்கண் மேவலு மவற்கண் டேங்கி
யாருயி ருலந்தார் தீயோர்க் காவதோ ரரண முண்டோ. (உ௮)

அனையதோர் சிமையக் குன்ற மசைதலு மங்க ணுற்ற
வனைகழல் விஞ்சை வேந்தர் மங்கைய ருடன் மாற்றி
யினிதுமுன் கலந்தா ரஞ்சி யின்புறு திடைக்க ணீத்து
வினைவிளை வுன்னி நொந்து விண்மிசை யுயிர்த்துச் சென்றார். (உ௯)

வரைமிசை நின்ற வண்ணல் வனைகழ லவுணர் கோமான்
பொருவரு நகர்மேற் செல்லப் புந்திமேற் கொள்ளா வெந்தை
திருவுரு வதனை யுன்னிச் செங்கையாற் றொழுது மாலும்
பிரமனும் வியந்து நோக்கப் பேருருக் கொண்டு நின்றான். (௩0)

பொன்பொலி யலங்கற் றோளான் பொருப்பின்மேற் பொருவி லாத
கொன்பெரு வடிவங் கொண்டு குலாய்நிமிர் கொள்கை செவ்வேண்
முன்பொரு ஞான்று மேரு முடியில்வந் தமரர்க் கெல்லாந்
தன்பெரு வடிவங் காட்டி நின்றதோர் தன்மை யாமால். (௩௧)

ஆண்டகை நெடுந்தோள் வீர னண்டமேன் மவுலி தாக்க
நீண்டிடு மெல்லை யன்னா னின்றிடு குன்ற ஞாலங்
கீண்டது பிலத்திற் சேறல் கேடில்சீர் முனிகை யூன்ற
மீண்டுபா தலத்திற் புக்க விந்தமே போலு மாதோ. (௩௨)

விண்ணவ ருய்த்த தேர்மேன் மேவலர் புரநீ றாக்கும்
பண்ணவ னொருதா ளூன்றப் பாதலம் புகுந்த வாபோற்
கண்ணகன் வரையும வீரன் கழல்பட வழுந்திற் றம்மா
வண்ணலந் தாதை வன்மை யருள்புரி மகற்கு றாதோ. (௩௩)

கன்றிய வரிவிற் செங்கைக் காளைபொற் றாளு மந்தண்
குன்றொடு பிலத்துட் செல்லக் குறிபொடு விழிக்கு றாமே
சென்றிட முடியுஞ் சேண்போய்த திசைமுகத் தயனு மாலு
மன்றடி முடிகா ணாத வசலமும் போல நின்றான். (௩௪)

ஆளரி யன்னோன் றாளு மடுக்கலு மழுந்தும் பாரி
னீளிரு முடிசேர் வானி னிரந்தமாப் பறவை போதல்
சூளுடை யிமையோர் புள்ளு மாவுமாய்த் தேமில் வீரன்
றாளொடு முடியு நாடிச் சார்தருந் தகைமைத் தாமால். (௩௫)

அந்தமில் வலியோ னிற்ப வாயிடைத் துஞ்சும் பாந்த
டந்தொகை வீழு றாது தழீஇமருங் காகக் கீழ்போய்
முந்துயர் கமடஞ் சேர்ந்து முழங்குதெண் டிரைக்கண் வைகு
மந்தர மென்னக் கந்த மாதனந் தோன்றிற் றம்மா. (௩௬)

பதுமநேர் கண்ணன் வேதாப் பலவகை முனிவர் தேவர்
கதிபட ருவணர் சித்தர் கந்தரு வத்த ரொண்கோண்
மதியுடுக் கதிர்க ளேனோர் வான்பத முற்று மோங்கு
மதிர்கழல் வீரன் பல்வே றாமா யொளிர நின்றான். (௩௭)

எண்டிசை முழுது நேமி யெழுதிறத் தனவு மற்றைத்
தெண்டிரைக் கடலும் பாருஞ் சேண்கிளா ராழி வெற்பு
மண்டமு முலகம் யாவு மகன்விழி பரப்பி நோக்கிக்
கண்டன னமலன் வைப்புங் கைதொழு தைய னின்றான். (௩௯)

ஊணமில் சிந்தை வீர னச்சுதன் முதலோர் வைகுஞ்
சேணகர் நோக்கிச் சூழுந் திசைநகர் நோக்கிப் பாரின்
மாணகர் நோக்கி வீர மகேந்திர நோக்கிச் சூர
னீணக ரிதற்கி யாவு நிகரிலை போலு மென்றான். (௪௦)

விண்ணுலாம் புரிசை வெஞ்சூர் வியனக ரதனை நோக்கி
யுண்ணிலா வெகுளி கொண்டா னொருகர மங்க ணோச்சி
நண்ணலார் யாருந் துஞ்ச நாமறப் பிசைகோ வென்னா
வெண்ணினன் சிறையி லுற்றோர்க் கிரங்கியவ் வெண்ண மீட்டான். ()

விஞ்சைய ரியக்கர் சித்தர் வியன்சிறை யுவணர் திங்கள்
செஞ்சுடர்ப் பரிதி நாள்கோ டெய்வத கணத்தர் யாரும்
வஞ்சினத் தடந்தோள் வீரன் மாவுரு நோக்க லாற்றா
தஞ்சினர் வெருவச் செங்கை யமைத்தன னழுங்க லென்றே. (௪௧)

கோளியல் கருடர் தாம்வீழ் மாதரை விழைந்து கூடி
வாளுறு நகத்தி னூறு மதிக்கிலர் மயங்கித் துஞ்சி
வேளெனு நெடியோ னூன்றும் வெறுபொடும் பிலத்திற் சென்று
கேளுட னெழுந்து நாகர் கிளைதனக் கணங்கு செய்தார். (௪௨)

ஆதியங் குமரன் றாத ளாற்றலா லூன்றி நிற்பப்
பூதலங் கீண்டு வெற்புப பொள்ளென வாழ்ந்து கீழ்போய்ப்
பாதலங் குறுக வங்கட் பயிலராத தொகையை நாகர்
காதலங் கேண்மை நாடிக் கலந்தனர் விருந்து செய்தார். (௪௩)

தேன்றிகழ் தெரியல் வாகைச் சேவகன் கழல்கள் வெற்பி
னூன்றலு மனைய பாங்க ரொருசில ரரக்கர் நோற்றா
ரான்றுயர் பதத்தை வெஃகி யாங்கவர் பிலத்துள் வீழ்ந்து
மான்றன ரிரங்க லுற்றார் வன்கணார்க் குய்வு முண்டோ. (௪௪)

புண்டர நீற்று வள்ளல் புரையுருத் தேவர் நோக்கி
மண்டலம் புகழும் வீர மகேந்திரஞ் சேறற் கன்றாற்
கொண்டவிவ் வுருவ நோக்கிற் குரைகழ லவுணர் தம்மை
யண்டமு மிடித்துச் சாடு நினைவுகொ லையற் கென்றார். (௪௫)

வீரமா மகேந்தி ரத்தி லவுணரும் வீற்று வீற்றுச்
சாருறு மவுணர் தாமுஞ் சயங்கெழு புயத்து வள்ளல்
பேருரு நோக்கி யிங்கன் பிறந்தசொற் சழக்கே யின்னுந்
தேருவ துண்டு நந்தந் திறல்வரைப் புணர்ப்பி தென்றார். (௪௬)

ஒளிகழல் வீர வாகு வோங்கலை யூன்றி யிந்த
நிலைமையி னிற்ற லோடு நெடியமால் சுதனும் விண்ணோர்
தலைவனும் பிறரு மன்னோன் றம்பிய ரளப்பி லோருங்
கலிகெழு பூதர் யாருங் கண்டுவிம் மிதத்தி னார்த்தார். (௪௭)

தேவர்கண் முனிவ ரேனைத் திறத்தவர் யாருந் தத்த
மோவரும் பத்தி னின்றே யொல்வதோ ருறுப்பின் மேவக்
காவரு கடிமென் பூத்தூய்க் கைதொழு தைய வெஞ்சூர்
மேவரு நகர்சென் றெங்கள் வியன்றுய ரகற்று கென்றார். (௪௮)

ஆவதோர் காலை யெந்தை யாறிரு தடந்தோள் வாழ்க
மூவிரு வதனம் வாழ்க முழுதருள் விழிகள் வாழ்க
தூவுடை நெடுவேல் வாழ்க தொல்படை பிறவும் வாழ்க
தேவர்க டேவன் சேயோன் றிருவடி வாழ்க வென்றான். (௪௯)

ஆண்டகை தொழுத பாணி யணிமுடிக் கொண்டிவ் வாற்றா
லீண்டுசீர்க் குமர வேளை யேத்தலு மன்பின் கண்ணீர்
வீண்டுதெண் கடலு ளேகி வெள்ளமிக் குவரை மாற்றப்
பூண்டகண் டிகையை மானத் தோன்றின பொடிப்பின் பொம்மல். (௫௦)

மீதுகொள் பொடிப்பு மூட மெய்ப்புலன் சிந்தை யொன்ற
வோதுவ தவற வென்பு முருகிய செருக நாட்டங்
கோதில்பே ரருளின் மூழ்கிக் குதூகலித் திடுத லோடு
மூதுல கனைத்து மாவி முழுவது மகிழ்ந்த வன்றே. (௫௧)

அவ்வகை நிகழச் செவ்வே ளாரரு ளதனைப் பெற்று
மொய்வரை மீது நின்றோன் முழுதுல களந்து சேண்போ
மிவ்வுரு வோடு செல்லி னிறந்திடு முலக மீது
செவ்விதன் றென்று வேண்டுந் திருவடி வமைந்தா னன்றே. (௫௨)

கிரிமிசை நின்ற வண்ணல் கிளர்ந்துவா னெழுந்து சென்னிக்
குருமணி மகுட மண்ட கோளகை புடைப்ப வீர
னுருகெழு சீறச் சிம்பு ளுருவுகொண் டேகிற் றென்ன
வரைபுரை மாட வீர மகேந்திர முன்னிப் போந்தான். (௫௩)

வசனம்.

திருமால் பிரமன் இந்திரன்முதலிய தேவரும் பிறரும் சேவித்துக் கண்களிக்கும்படி திருச்செந்தூரில் எழுந்தருளியிருக்கும் குமாரக்கடவுளானவர் அவர்களைநோக்கி, சூரபன்மன்முதலிய அவுணர்கள் நீதிநெறி தவறியொழுகுதலால் அவர்களையெல்லாங்கொன்று உங்களுக்குச் சுகத்தையுண்டாக்கவேண்டுமென்றும், அவர்கள் கருத்தறிந்துவரும்படி முன்னே தூதுவரையனுப்பவேண்டுமென்றும் எண்ணினோம். இந்தவிஷயத்தில் உங்கள் கருத்தென்னவென்றுகேட்க, அவர்கள் அப்படி தூதுவரையனுப்பி அந்த அவுணர்களுடைய கருத்தை முன்னமே யறிந்துகொள்வதே நியாயமென்றார்கள். அதுகேட்ட குமரவேளானவர், அந்தச் சூரபன்மனிருக்கும் மகேந்திரஞ்சென்று அவன்கருத்தறிந்துவர வல்லவர் உங்களில் யாவரென்றுகேட்க, அத்தேவர்கள் யாங்களெல்லாம் அதற்குரியரல்லேம், வீரவாகுதேவரே உரியவர்; அவரைத் தூதாயனுப்புவதே நன்றென்றார்கள். அதுகேட்ட முருகக்கடவுள் வீரவாகுதேவரைநோக்கி, நீ மகேந்திரநகரம்போய்ச் சூரபன்மனுக்கு எமது கருத்தறிவித்து அவன்கருத்தறிந்துவாவென்று கட்டளையிட, அக்கட்டளையைச் சிரசாவகித்த வீரவாகுதேவர் விரைந்துபோய் மகேந்திரநகரத்தில் சூரபன்மனைக்கண்டு நீ [illegible] நடத்தலால், உன்னை உன்குலத்தோடு நாச

செய்யவேண்டுமென்று திருச்செந்திற்பதியிலெழுந்தருளியிருக்கும் குமாரக்கடவுள் திருவுளத்தடைத்திருக்கின்றனர். அவர் இங்கே யெழுந்தருள்வதற்குமுன்னமே, சயந்தன்முதலிய தேவர்களைச் சிறைவிடுத்து நீயும் அவரைவணங்கிச் சுகிக்கலாம், இதுவிஷயத்தில் உன் கருத்தென்னவென்று கேட்க வெண்ணிப் புறப்படுகையில், இந்திரன்வந்து வணங்கி தேவரீர் மகேந்திரஞ்சென்றால் சயந்தன்முதலானோர்கட்குத் தேறுதலைச்செய்தருளவேண்டுமென்று வேண்ட, வீரவாகுதேவரும் அவ்வாறே செய்வோமென்றுசொல்லி, இலக்கத்தெண்மராகிய வீரர்களுக்கும் பூதப்படைகளுக்கும் விடைகொடுத்தனுப்பிவிட்டு, கந்தமாதனமலையில்வந்து விசுவரூபங்கொண்டவுடனே அம்மலை பிலத்திற்புக்கது, அதைக்கண்ட நாகர்முதலியோர் நடுங்கினார்கள். தேவர்கள், இது மகேந்திரத்திற்குப்போவதற்கே கொண்டவுருவன்று, சூரன்முதலியோரைக் கொல்வதற்கென்றே கொண்டவுருவென்று வியந்து மலர் மழைபொழிந்தார்கள். பிறகு வீரவாகுதேவர் குமாரக்கடவுளைத் தியானித்து, நாமிவ்வுருக்கொண்டுசென்றால் சீவராசிகள் வருந்துமென்று அவ்வுருமாற்றி அதற்கேற்றரூபங்கொண்டு மகேந்திரநகரை நாடிச்சென்றார்.

வீரவாகுகந்தமாதனஞ்சேல்படலம் முற்றிற்று.

---

## கடல்பாய்படலம்.

அழுங்கிய கழற்கால் வீர னவ்வழி யவனிக் கீழ்போய்
விழுங்கிரி நிலைமை நோக்கி மீண்டினி யெழுகி யென்று
வழங்கினன் வழங்கு மெல்லை வல்லையிற் கிளர்ந்து தோன்றி
முழங்கிருங் கடலின் மாடே முந்துபோ னின்ற தன்றே. (௧)

வீரனங் கெழலு மன்னோன் விண்படர் விசைப்பின் காலாற்
பாருறு வரைகள் யாவும் படர்ந்தன பாங்க ராகச்
சாரதத் தலைவ ரேனைத் தம்பிய ரிலக்கத் தெண்ம
ராருமங் கவன்றன் பாலா யணிந்துடன் சேற லென்ன. (௨)

விரைந்துவான் வழிக்கொள் வீரன் விசைத்தெழு சாலி னண்டந்
திரிந்தன வுயிர்கண் முற்றுந் தெருமர லுற்ற தெண்ணீர்
சுரந்திடு கொண்டல் யாவுஞ் சுழன்றன வடவை யுண்ண
விருந்திடு மூழிக் காலு மாற்றலா திரியல் போன. (௩)

பெருமிடல் பூண்ட தோன்றல் பெயர்தலும் விசைப்பி னாதை
பரவின வெம்மை மாற்றிப் பரிதியைக் கனலைத் திங்கள்
வருணனை தியற்கை யாக்கி வடவையின் முகத்துத் தோன்றித்
திரைகட லிருந்த வூழித் தீயையு மவித்துச் சென்ற. (௪)

விரைசெறி நீபத் தாரோன் விரைந்துசெல் விசைக்கா றள்ளத்
திரைகடல் சுழித்துள் வாங்கித் திறன்மகேந் திரத்திற் சேற
லரசியல் புரிவெஞ் சூர னணிகங்க ளவன்மேற் சென்று
பொருமுர ணின்றித் தம்மூர் புகுவன விரிவ போலாம். (௫)

விடைத்தனி யாற்றல் சான்ற விடலைகால் வெற்பி னேடும்
படித்தலங் கீண்டு முன்னம் பாதலங் காட்டிற் றன்னோ
னடற்படு விசையின் காலு மளியதோ வலிய தன்றோ
கடற்புவி கீண்டு நாக ருலகினைக் காட்டிற் றன்றே. (௬)

பாசிழை யலங்கற் ரோளான் படர்தலும் விசையின் காலைக்
காய்சின வுயிர்ப்புச் செந்தீக் கலந்துடன் றழீஇக்கொண் டேகி
மாசுறு சூரன் வைகும் வளநகர் சுற்றி யன்னோன்
றாசிய தென்ன முன்னங் கொளுவிய தூமஞ் சூழ.          (எ)

பூஞ்சிலம் பரற்றுந் தாளான் போதுமுன் விரைவி னேதை
வேய்ஞ்சிலம் படுதோட் சூரன் வீரமா மகேந்தி ரத்தி
ஞஞ்சிலம் புரிசை பொன்செய் நளிர்வரை குளிர்பூங் கிள்ளை
தாஞ்சிலம் புற்ற சோலை யலைத்தன தரையிற தள்ளி.          (அ)

உறைபுகு நெடிய வேலா னுயிர்ப்புறு கனன்முன் னேடிச்
செறுநனூர் கொளுவ வன்னோன் சென்றிடு விரைவின் கால்போ
யெறிபுனற் கடலைத் தாக்க விடைந்துமற் றதுதா னேகி
முறைமுறை திரைக்கை நீட்டி மூண்டிடா தவித்துப் போமால்.          (கூ)

அண்ணலங் காளை யேக வுயிர்த்தகா லவன்செல் லோதை
கண்ணழ றுண்ட மோச்சுங் கடுங்கன லெதிரா தோடு
முண்ணிறை புணரி யாவு மொன்னலன் பதிமேற சென்று
விண்ணில மொழிந்த பூத மடுதலின் விளைதத பூசல்.          (க0)

வெள்வரைக் குவவுத் திண்டோள் வெலற்கருந் திறலோ னெண்காற்
புள்விசை கொண்டு செல்லப் புறந்தரப் புணரி யங்க
ணுள்வளைந் துலாய சின்னை யொண்சுறுப் பனைமீ னாறை
தெள்விளித் திருக்கை தந்தி திமிங்கில மிரிந்து பாய்ந்த.          (கக)

நாயகன் றாத னேக நளிர்கட லெதிர்ந்தி டாது
சாய்வது மீன முற்றுந் தரங்கவெண் கரங்க டாங்கித்
தீயசூர் மூதூ ருய்த்துச் சென்றது பொன்று வோர்க்கு
மேயின விச்சை யுண்டி மிகத்தமர் வழங்கு மாபோல்.          (கஉ)

காழ்தரு தடக்கை மொய்ம்பன் கடுமைசால் செலவி னேதை
சூழ்தரு கின்ற காலைத் துண்ணெனத் துளங்கி விண்மீன்
வீழ்தர வேலை தன்னில் வேலையு மறிந்து செல்ல
வாழ்திரை யெறிமீன் முற்று மந்தரம் புகுவ மாறாய்.          (கஙு)

காமரு நயக்குங் காளை கதுமெனச் செல்லப் பாங்கிற்
றாமலர்க் கரத்தி லிட்ட சுடர்மணிக் கடக வாள்போய்
நேமியங் குவடு சூழ்ந்து கிமிர்தரு திமிர மோட்டி
யேமநல் லண்ட வில்லோ டெதிர்ந்துபோ யிகல்செய் கின்ற.          (கச)

விண்ணவர் யாருந் தேரும் படையுமாய் விரவு மேலோ
னண்ணலர் புரமே லோச்சு நகையழல் போத லொத்தான்
கண்ணழற் செலவும் போன்றான் கார்முகம் பூட்டி யுய்த்த
மண்ணுல கிடந்த கூர்வாய் வாளியு மென்னச் சென்றான்.          (கரு)

தரைதனை யலைத்து நோற்குந் தாபதர்க் கலக்கண் செய்து
சுரர்திருக் கவர்ந்து வாட்டுஞ் சூரனைக் கிளையி னேடும்
விரைவுடன் முடிப்பான் முன்னி வெகுண்டுசெவ் வேளங் குய்த்த
வொருதனிச் சுடர்வேல் போன்றும் போயினை னுயர்திண் டோளான்.

இமிழ்தரு தரங்கப் பாலி னெறிக்கடன் மதித்து வானோர்க்
கமிர்தினை யளிப்பான் வேண்டி யகிலமு முண்டு தொன்னா
ளுமிழ்தரு திருமா லுன்ன வுணர்ந்துமந் தரமா மோங்க
னிமிர்தரு புணரி செல்லு நிலைமைபோல் வீரன் போந்தான். (கள)

சேண்டொட ருலகும் பாருந் தெருமர வனலம் வீசிக்
காண்டகு விடத்தை யீசன் களத்திடை யடக்கி வைப்ப
வீண்டமை விடுத்தி யென்னு வேத்தனு மவனங் குய்ப்ப
மீண்டது கடல்போந் தென்ன வீரருள் வீரன் சென்றான். (கஅ)

பொலங்கழல் வீர வாகு புணரிமே லிவ்வா றேகி
யலங்கலந் திண்டோள் வெஞ்சூ ரணிநகர் வடாது பாலின்
விலங்கலில் வீரன் யாளி வியனமுகத் தவுணன் போற்று
மிலங்கையந் தொல்லை மூதூ ரணித்தென மெல்லை சென்றான். (கக)

ஆ திருவிருத்தம் - எ௨.

வசனம்.

கந்தமாதனஞ்சென்ற வீரவாகுதேவர், அதுபூமியின்கீழ் சென்றிருக்குமநிலைமையைக்கண்டு, எழுந்திருக்கக்கடவையென்றுகூற, உடனே மேலெழுந்து தோன்றி, கடலினொருபக்கத்தில் முன்னிலைமைபெற்றது. பின்னர் வீரனெழுந்து ஆகாயத்தின்வழியாய்ச்செல்லும் விசையாலுண்டாயகாற்றினால், பூதத்தலைவர்களும் மற்றும் ஒருலக்ஷத்தெட்டுத்தம்பியருஞ்சூழ்ந்துசெல்வதுபோல பூமியிலுள்ள மலைகளெல்லாம் சுற்றிப்பறந்தன; அண்டங்கள் தத்தம் நிலைமாறின; எல்லாவுயிர்களுந் திக்குமுக்காடிய; நல்லநீரைக்கொடுக்கும் மேகங்களெல்லாஞ்சுழன்றன; வடவாமுகாக்கினியைவிழுங்கும் ஊழிக்காற்றும் வலிகுன்றியது; சூரியாக்கினிகள் முறையே சந்திரவருணரைப்போல் குளிர்ந்தனர்; வடவாமுகாக்கினி அவிந்தது; அலைகளையுடையகடல் சூரனதுசேனைகள் வீரவாகுதேவருடன் போர்புரியுமாற்றலின்றித் தம்மூருக்குத்திரும்புவதுபோல், சுழித்து உள்வாங்கி மகேந்திரத்தைச்சேர்ந்தது; அவருடையகாலால் பூமிபிளக்கப்பட்டு பாதலந்தோன்றியதுபோல் அவரது வேகக்காற்றால் பூமிபிளந்து நாகலோகந்தெரியச்செய்தது; அவருடைய பெருமூச்சாகியநெருப்பு அவருடைய தூசிப்படைபோல் சூரனது ஊரைச்சுற்றி கொளுத்திப் புகையச்செய்தது; கடல் எழும்பி அலைகளாகிய கையா லந்நெருப்பையவித்தது. அவ்வாறுசெல்லும் விரைவினோசையானது வீரமாமகேந்திரத்திலுள்ள மதில்களையும கட்டுமலைகளையும் சோலைகளையும் கீழேதள்ளியது. அவர் பெருமூச்சாகியவாயுவும் நேத்திரத்திலும் சுவாஸத்திலுமிருந்துண்டாய தேயுவும் பின்வாங்கிச்சென்ற கடலினது அப்புவும் சண்டையிட்டன. பின்வாங்கிச்செல்லுங கடலானது இறக்குந்தருவாயிலுள்ளவர்க்கு அவருறவினர் தின்பண்டங்களைக்கொண்டு கொடுப்பதுபோல், மீன்களை அலைகளாகிய கைகளால் சூரனதூரிற்சேர்த்தது. நக்ஷத்திரங்கள் சமுத்திரத்தில் வீழ்ந்தன. கடல் மீன்களை ஆகாயத்திலெறிந்தது. அவர்கையிலுள்ள கடகத்தினொளி சக்கரவாளகிரியைச்சூழ்ந்த விருளையோட்டி அண்டமுகடோடு சண்டைசெய்தது. அவர்சென்றது சிவபெருமான் திரிபுரதகனஞ்செய்தகாலத்துச் சிரிப்பினாலுண்டாய நெருப்பும், அவர் நெற்றிக்கண்ணிலுள்ள நெருப்பும், அவர் வில்லிலுள்ள திருமாலாகியவம்புஞ் சென்றதுபோலிருந்தது; பூலோகம் தபோலோகம் விண்ணுலகமுதலிய விடங்களிலுள்ளவாக்குத் துன்பம்விளைத்த சூரனைக்

கொல்ல முருகன்விட்ட வேலையொத்தது. பாற்கடல்கடைய திருமால்நினைத்த காலத்து மந்தரகிரிசென்றதைநிகர்த்தது, சிவபெருமானது கண்டத்துள்ள விஷம் மீண்டுங் கடலைநோக்கிச்சென்றதுபோலிருந்தது. பொன்னாற்செய்த வீரகண்டை யையணிந்த வீரவாகுதேவர் மாலையையணிந்த வலியதோள்களையுடைய சூரனது நகரின்வடக்கில் யாளிமுகாசுரனாலே காக்கப்பட்ட இலங்கையென்னும் பழையஊருக்கருகே கடலைத்தாண்டிச்சென்றனர்.

கடல்பாய்படலம் முற்றிற்று

---

# வீரசிங்கன்வதைப்படலம்.

அன்னதோர் வேலை முன்ன மகன்றலை யாளிப் பேரோன்
றுன்னுபல் லனிகத் தோடுஞ் சூரனைக் காண்பா னேக
மன்னதி வீர னென்னு மதலையா யிரமாம் வெள்ளந்
தன்னொடு மிலங்கை வைகித் தணப்பறப் போற்றி யுற்றான். (௧)

ஆனதோர் மிக்கவீரத் தாண்டகை யவுணர் போற்ற
மாநகர்க் கோயி லெண்ண வடதிசை வாயி றன்னின்
மேனிமி ரவுணர் தானை வெள்ளமைஞ் ஞூற்றோ டன்னான்
சேனையந் தலைவன் வீர சிங்கனுந் திறலோ னுற்றான். (௨)

உற்றதோர் வீர சிங்க னெண்சிறைச் சிம்பு ளேபோல்
வெற்றியந் திண்டோ ளேந்தல் விரைந்துசென் றிடலுங் காணூஉச்
சற்றுநங் காவ லெண்ணான் றமியன்வந் திவ்வான் போலு
மற்றிவன் யாரை யென்னாச் சீறினன் வடவை யேபோல். (௩)

உண்குவ னிவன்ற னாவி யொல்லையென் றுன்னிக் கானு
மெண்கிளர் மனமும் பின்ன ரெய்துமா றெழுந்து நேர்போய்
விண்கிளர் செலவிற் றானை வெள்ளமைஞ் ஞூறுஞ் சுற்ற
மண்கிளர் கடல்போல வீர வாகுவின் முன்னஞ் சென்றான். (௪)

சென்றிடு வீர சிங்கன் றிறல்கெழு புயனைப் பாரா
வின்றள வெமது காப்பு ளேகின ரில்லை யாரு
யொன்றொரு தமியன் போந்தா யுயிர்க்குநண் பில்லாய் நின்னைக்
கொன்றிடு முன்னீ வந்த செயன்முறை கூறு கென்றான். (௫)

பொன்னிய திண்டோள் வீரன் புகலுவா னிலங்கை வாவி
மன்னியல் சூரன் வைகு மகேந்திரஞ் சென்று மீள்வா
னுன்னினன் போந்தே னீதென் னுறுசெயல் வலியை யென்னி
னின்னினி வேண்டிற் றொன்றை யியற்றுதி காண்ப னென்றான். (௬)

திறன்மிகு சிங்க னன்னோன் செப்பிய மொழியைக் கேளா
விறையுநம் மவுண ராணை யெண்ணலன் வலியன் போலு
மறிகுது மீண்டு சேற லழகிதன் றென்னா வுன்னிக்
குறுகிய படைஞர் தம்மை யிவனுயிர் கோடி ரென்றான். (௭)

என்றலு மரிய தொன்மை யெயினர்கள் வேட்டைக் கானிற்
சென்றனர் திரண்டு சுற்றிச் செருவினை யிழைப்ப தேபோற்
பொன்றிகழ் விசய வாகுப் புங்கவன் றன்னைச் சீற்ற
வன்றிற லவுணர் யாரும் வளைந்தமர் புரிய லுற்றார். (௮)

வேலினை விடுப்பர் தண்டம் வீசுவர் முசலந் தூர்ப்பர்
சாலமதெறிவ ராலந் தன்னையோச் சிடுவர் வார்விற்
கோல்வகை தொடுப்பர் நாஞ்சிற் கொடும்படை தூரப்பர் வெய்ய
சூலமதுய்ப்பர் கொண்ட தோமரஞ் சொரிவ ரம்மா. (கூ)

கிளர்ந்தெழு பரிதி தன்னைக் கேழ்கிள ருருமுக் கொண்மூ
வளைந்தென வவுணர் வீரன் மருங்குசூழ்ந் தாடல் செய்யத்
தளர்ந்தில னெதிர்ந்து தன்கைத தாரைவா ளுறையி னீக்கி
யுளர்ந்தனின் முனிந்தன் னோரை யொல்லைசூழ்ந் தடுத லுற்றான். (கo)

அரக்குருக் கொண்ட வெற்பி னடுகனற் கடவு ளெய்தி
யருக்கியே யதனை யெல்லா மொல்லையி னுடைக்கு மாபோ
னெருக்கிய வவுணர் தானை நீக்தம துடைய வீரன்
றிருக்கிளர் வாளொன் றேந்திச் சென்றுசென் றடுதல் செய்தான். (கக)

பனிபடர் குழும றன்னைப் பாயிருட் செறிவை யங்கிக்
கனிபடர் பொற்பிற் றோன்றாங் காய்கதிர் முடிக்கு மாபோ
னனிபட ரவுணர் தானை நைந்திடச் சுடர்வா ளொன்றாற்
றனிபடர் வீர வாகு தடிந்தனன் றிரித லுற்றான். (கஉ)

உறைந்தன குருதி வாரி யொல்லையி லுவரித் தெண்ணீர்
மறைந்தன வருணர் தானை மால்கரி பரிதேர் முற்றுங்
குறைந்தன கரந்தாண் மொய்ம்பு கொடுமுடி துணிந்து வீழ்ந்த
நிறைந்தன வலகை யீட்ட நிரந்தன பரந்த பூதம். (கங)

வெள்ளநா றவுணர் தானை விளிந்திட வினைய பாலால்
வள்ளல்சென் றடுதல் செய்ய மற்றுள வவுணர் யாரு
முள்ளநொந் திரங்கித் தத்த முயிரினை யோம்பல் செய்து
பொள்ளென நிலனும் வானும் புலந்தொறு மிரியல் போனார். (கச)

போதலும் வீர சிங்கன் பொள்ளெனச் சினமேற் கொண்டு
மாதிரங் கடந்து மேல்போய் வளர்தரும் வாகை மொய்ம்பன்
மீதொரு சூலந் தன்னை விட்டனன் விட்ட காலை
யேதியங் கதனை லன்ன திருதுணி படுத்தி யார்த்தான். (கரு)

ஆர்த்தலு மடங்கற் பேரோ னண்டகை வீரன் மேன்மை
பார்த்தனன் றனது பாணி பற்றிய படைக டம்மிற்
கூர்த்ததோர் குலிசம் வீசக் குறுகிவா ளதனை மாற்றிப்
பேர்த்தொரு படையெ டாமுன் பெயர்ந்தவன் முன்னஞ் சென்றான். (கசு)

சென்றுதன் மணிவா ளோச்சிச் செங்கைக டுமித்துத் தீயோ
னென்றொரு முடியுங் கொய்தே யுவர்க்கட லிடையே வீட்டி
நன்றுதன் னுறையுட் செல்ல நாந்தகஞ் செறித்து முன்னோர்
வென்றிகொண் டகன்றா னென்ப வேலவன் விடுத்த தூதன். (கஎ)

ஆக திருவிருத்தம் - அகூ.

---

வசனம்.

வீரவாகுதேவர் அப்படிச்செல்லும்போது அவ்வழியிலிருந்த சூரபன்மனுடைய சேநாபதியாகிய வீரசிங்கன்கண்டு, இதுவரையில் நமதுகாவலைக்கடந்தவென்றவர் ஒருவருமிலர். இவன்யாரோவென்று வீரவாகுதேவரைநோக்கி, நீயார்? உன்னூர்யாது! உன்பேர்யாது! உன்வரவிற்குக் காரணம்யாது என்று கேட்க, வீரவாகுதேவர் அவனைநோக்கி, நான் சூரபன்மனைக்கண்டு மீளவந்தேன் என்றனன். இதைக்கேட்டவீரசிங்கன், இவன் நம்மை மதியாதவனாயிருக்கிறான், இவனைக் கொல்லுங்கோளென்று தன் சேநாவீரரைநோக்கிச்சொல்ல, அவர்களும் அப்படியே வீரவாகுதேவரை வந்தெதிர்ந்து அவர் கைவாளால் மடிந்தொழிந்தனர். இதைக்கண்ட வீரசிங்கன் வீரவாகுதேவர்மேல் ஒரு சூலாயுதத்தையேவினன். வீரவாகுதேவர் அந்தச்சூலத்தையும் அவன்தலையையும்வெட்டிக் கடலிலெறிந்தனர்.

வீரசிங்கன்வதைப்படலம் முற்றிற்று.

# இலங்கைவீழ்படலம்.

மலங்கொடு சுறவு தூங்கு மறிகடன் மீது மேரு
விலங்கல்சென் றிட்ட தென்ன விண்ணிடந் தன்னி னீங்கி
யலங்கலந் திண்டோள் வள்ள லவுணர்தம் மிருக்கை யாகு
மிலங்கையங் குவடு மூன்றி லிடைப்படு சிகரம் பாய்ந்தான். (௧)

நெடுவரை தன்னை வேலா னீறுசெய் திட்ட வண்ணல்
விடவரு தமியோன் றொல்லை யிலங்கையின் மீது பாய
வடலதி வீர னேனை யவுணர்கள் கலங்கி யேங்கி
யிடியுறு புயங்க மென்ன யாருமெய் பனித்து வீழ்ந்தார். (௨)

வேறு.

வைப்புறு மகேந்திர வடாதுபுல மாகி
யிப்புற மிருந்திடு மிலங்கைதனி லேந்தல்
குப்புறு தலுங்குலை குலைந்தவுண ரோடு
முப்புறு கடற்படிதல் கண்டுவகை யுற்றான். (௩)

தந்திமுக மாமதலை தன்னடி வணங்கா
தந்தரவிண் ணோர்கட லலைத்திடலு மன்னோன்
சிந்தைமுனி வெய்தவிடை சேர்த்தகயி ரோடு
மந்தர நெடுங்கிரி மறிந்தபடி மானும். (௪)

ஆடல்கெழு மொய்ம்பின னடித்தலம தூன்ற
மூடுதிரை வேலையிடை மூழ்கிய விலங்கை
கூடுமக வண்ணல்குஷி சந்தொடர நேமி
யூடுபுக லுற்றிடுமை நாகவரை யொக்கும். (௫)

மாமறைக டம்மைமுனம் வஞ்சனை புரிந்தே
சோமுகன் மறைந்ததிரை தூங்குகட லூடே
யேமமுறு பேருரு வெடுத்ததொரு மான்சேல்
போமதென வாழ்ந்தது பொலங்கெழு மிலங்கை. (௬)

தொல்லைதனி லோர்விதி துயின்றகடை நாளி
னெல்லையதி கந்துகட லேழுமெழ வங்க
ணெல்லைபில மூற்றபுவி யுய்ப்பவொரு கேழல்
செல்லுவதி னாழ்ந்தது திரைக்கட லிலங்கை. (எ)

சிந்துவி னகன்கரையொர் திண்கிரி யமுழ்ந்த
வந்தமி லிலங்கையு மமுழ்ந்திபிடு தன்மை
முந்தொரு மடக்கொடி விருப்பின்முனி மூழ்க
விந்திரனு நேமியி னிடைப்புகுதல் போலும். (அ)

உலங்கொள்புய வீரனடி யூன்றுதலு முன்னோர்
விலங்கல்பணி தன்னுலக மேவியது கேளா
வலங்கல்பெறு வாகையவ னாற்றலது தாங்கி
யிலங்கையது காண்பலென வேகியது போலும். (கூ)

இலங்கையிது பான்மையி னிருங்கடலுண் மூழ்கக்
குலங்களொடு வைகிய கொடுந்தகுவர் யாருங்
கலங்கின ரழுங்கினர் கவன்றனர் துவன்றி
மலங்கினர் புலம்பினர் மருண்டனர் வெருண்டார். (க0)

அற்றமுறு தானவர்க ளாழுவனை யோரைச்
சுற்றிய வளப்பில சுறுவுழுவை மீனம்
பற்றிய வளைந்தன பலப்பல திரண்டே
செற்றிய திமிங்கில திமிங்கில கிலங்கள். (கக)

கையதனை யீர்ப்பசில கால்கள்சில வீர்ப்ப
வெய்யதலை யீர்ப்பசில மிக்கவுயர் தோள்கண்
மொய்யுடைய மார்பதனை யீர்ப்பசில மொய்த்தே
சையமுறழ் யாக்கையுள தானவரை மீனம். (கஉ)

அத்தனொ டியானைமனை யன்பின்முதிர் சேயைக்
கொத்தினொடு கொண்டுசிலர் கூவியெழு கின்றா
ரெய்த்தனர்கள் செய்வதெ னிரும்படையும் விட்டுத்
தத்தமுயிர் கொண்டுசிலர் தாமுமெழ லுற்றார். (கங)

உற்றசில தானவரை யொய்யென வளாவித்
திற்றிவிழை வானனி திரண்டனர்க ளெல்லாம்
பற்றுழி தனித்தனி பறித்தது பொருட்டாற்
பொற்றைபுரை மீன்கள்பெரும் போர்வினை புரிந்த. (கச)

தானவர்க ளோர்சிலவர் தம்முணல் குறித்தே
வானிமிரு மோதையென வந்துதமை யெற்றப்
பூநனைய வாள்சுரிகை போரயில்கள் கொண்டே
மீனமொடு வெஞ்சினம் விளைத்தமர் புரிந்தார். (கரு)

சீர்த்திகொ ளிலங்கைகடல் சென்றிடலு மங்க
ணார்த்திபெறு மங்கையர்க ளங்கையவை பற்றி
யீர்த்தபிற ரில்லுற விசைந்துகரம் பற்றுந்
தூர்த்தரை நிகர்த்தன சுறுமகர மீனம். (கசு)

மீனொருகை பற்றியிட வேறொரு கரத்தைத்
தானவர் வலித்தொரு தடக்கைகொ டிசிப்ப
மானனைய கண்ணியர் வருந்திடுத லோரைந்
தானபுல னீர்ப்பவு ளழுங்குவது போலும். (கஎ)

திண்டிறல் வலம்படு திருக்கைசுற மீன
மண்டிய திமிங்கிலம் வருந்தகுவர் சூழல்
கண்டுமிசை யெற்றிடுத லுங்கடிது வாளாற்
றுண்டமுற வேயவை துணித்தெழுநர் சில்லோர். (கஅ)

கட்டழல் விழிச்சுறவு காரவுணர் தம்மை
யட்டுணல் குறித்துவர வன்னவர்க ணீவித்
தொட்டனர் பிடித்தகடு தூரும்வகை பேழ்வா
யிட்டனர் மிசைந்தன ரெழுந்தனர்கள் சில்லோர். (கசு)

ஏற்றபுன லூடுதெரி வின்றியெம ரென்றே
வேற்றொரு மடந்தையர் வியன்கையது பற்றிப்
போற்றியெழ வங்கவர் புறத்தவர்க ளாக
மாற்றின ரிசைந்துசிலர் வாழ்க்கைமனம் வைத்தார். (உ0)

இல்லிவ ரெனப்பிறரை யேந்தியெழ வன்னோர்
புல்லுதனி யன்பர்புடை போகவொரு சில்லோ
ரல்லலுறு வார்தமை யடைந்ததொரு கன்னி
மெல்லவயல் போந்துழி மெலிந்துழலு வார்போல். (உக)

தீமைபுரி மால்களிறு திண்புரவி யாவு
மேமரு சுறுத்தொகுதி யீர்த்துவிரைந் தேகித்
தோமறு பிணைமகரந் துய்ப்பவுத வுற்ற
காமர்கெழு பெண்மயல் கடக்கவெளி தன்றே. (உஉ)

மாற்றறு சுறுச்சில மடப்பிடிகை பற்றி
யேற்றபெண் வழிச்செல வெதிர்ந்ததனை நோக்கி
வேற்றொர்பெடை யாயதென வேர்வுறுகை நகையர்க்
காற்றுமுப காரவியல் பாகியதை யன்றே. (உங)

சிந்துவதன் மீதிலெழு சில்லவுண ராயோர்
கந்தன்முரு கேசன்விடு காளைசெயல் காணு
நந்தமையு நின்றிடி னலிந்திடுவன் யாங்க
ளுய்ந்திடுது மென்றுகடி தோடியயல் போனார். (உச)

பீடுசெறி தங்கணவ ரைப்பிரிகி லாமே
கூடும்வழி யாழ்ந்தசில கோற்றொடிமின் னார்க
ளாடைபுன லூடுபுக வல்குறம கையான்
மூடியெழு வார்முலைமு கத்தின்முகம் வைத்தே. (உ௫)

சேண்டொட ரிலங்கைகடல் சென்றுழிய தன்பா
லாண்டசில மாதர்க ளர்த்தவுடை கொண்டார்
மீண்டெழலு நீர்பட வெளிப்படுவ தல்குல்
காண்டகைய செம்மதிக ளங்கமடைந் தென்ன. (உசு)

காரவுணர் மாதர்சிலர் காரார்கடல் வீழ்வார்
நீரமெழ வேயுடை நெகிழ்ந்தொருவி யேக
மூரன்முக மல்லுருவு முற்றுற மறைத்தே
தேரையென வொண்புனல் செறிந்துதிரி வுற்றார். (௨௭)

ஆசுறு மரைத்துகி லகன்றிட வெழுந்தே
தேசுறு மடைந்தையரி லோர்சிலவர் சேண்போய்
மாசுறு புயறருழுவை வல்லேகரம் பற்றித்
தூசினியல் பானடுவு சுற்றியுல வுற்றார். (௨௮)

ஆ திருவிருத்தம் - ககஎ.

---

வசனம்.

வீரவாகுதேவர் பெருமீன்கள் தூங்குகின்ற கடலின்மீது மேருகிரிச் சென்றதுபோல விசும்பாறுச்சென்று, அவுணரிருக்கையாமிலங்கையின் முச்சிகரங்களின் நடுச்சிகரத்தின்மீது பாய்ந்தார். அதனால் அதிவீரனும் மற்றையவுணருங் கூடி நடுங்கி அவ்விலங்கையோடு கடலுளாழ்ந்தனர். அதுகண்டு தேவர் சந்தோஷித்தனர். அவ்வாறுவீழ்ந்தது: விநாயகரைவணங்காது பாற்கடல்கடைந்தகாலத்து மந்தரகிரி கடலுண்மூழ்கியதையும், இந்திரன் மலைகளின் சிறகுகளை யறுத்தகாலத்து மைநாகம் கடலிற்புகுந்ததையும், சோமுகாசுரன் காரணமாகத் திருமால் மச்சாவதாரங்கொண்டு கடலிற்குளித்ததையும், பிரளயகாலத் தாழ்ந்தபூமியை மீண்டும் மேலேகொண்டுவர விஷ்ணு வராகாவதாரங்கொண்டு கடலின்மூழ்கியதையும், அகலிகையைமணம்புரியும் விருப்பினால் பிரமனதுநிபந்தனைப்படி கடலில் ஆயிரவருடம்தவஞ்செய்ய இந்திரன் கடலில்நுழைந்ததையும், முன்னர் வீரவாகுதேவரது காலூன்றினால் பாதலஞ்சென்ற மலையைக்காணச்சென்றதையுமொத்திருந்தது. இவ்வாறு விலங்கையோடுமூழ்கிய வவுணர்களுடைய வுடல்களை மீன்கள் சுற்றிக்கொண்டு பலவாறுவதைப்ப அவர் அவைகளோடுசண்டைசெய்வாராயினர். தப்பிப்பிழைத்தவர்களிற் சிலர் தந்தைதாய் மகவைக்கொண்டு கரையேறினர். சிலர் கைபிடியுள்ள வாயுதங்களையிழந்து உயிரோடு கரையேறினர். மீன்கள் தூர்த்தர்கள் தாரங்களைக் கைப்பற்றிச்செல்வதுபோல் மூழ்கிய பெண்களைக்கொண்டு சென்றன. பஞ்சேந்திரியங்களால் மனமிழுக்கப்பட்டதுபோல் மீன்களொருபுறமும் அவுணரொருபுறமும் பற்றியிழுக்க மங்கையர் வருந்தினர். சிலர் மீன்களைத்துண்டித்தனர்; சிலர் அவைகளைவாரி வாயிலிட்டனர்; சிலர் வேறுமாதர்களோடு கரையேறி அதுகண்டு மாற்றிக்கொண்டனர்; சிலர் அவர்களோடுகலந்து வாழ்ந்தனர்; குதிரைகளையும், யானைகளையும் சுறுக்கள்கொண்டுசென்று மகரங்களுக்குக் கொடுத்தன. இவ்வாறு கரையேறிய சிலவவுணர் வீரவாகுதேவருக்குப்பயந்து ஓடியொளித்தனர். கரையேறிய சிலமாதர் ஆடையற்றவராய்த் தமதங்கங்களைக் கைகளாற்பொத்தி வெளிப்போந்தனர். சிவந்தசந்திரன் களங்கமடைந்ததுபோல் தமதுறுப்பு வெளிப்படாவண்ணம் சிகப்பு உடையுடன் வெளிவந்தனர். சிலர் ஆடையில்லாமையால் வெளிவரவெட்கி தலையைமாத்திரம் வெளியில் காட்டிக்கொண்டு நீரில் தேரையைப்போலுலாவினர். சிலர் மேகங்களைத்தாவிக் கட்டிக்கொண்டு சஞ்சரித்தார்கள்.

இலங்கைவீழ்படலம் முற்றிற்று.

# அதிவீரன்வதைப்படலம்.

அன்னதோர் பான்மைக ளாக விலங்கை
முன்னுறு வார்கட லாழ்ந்தது மூழ்க
விந்நகர் போற்றி யிருந்திடு கின்ற
மின்னுனை வேலதி வீர னுணர்ந்தான். (௧)

தனது புரங்கடல் சாருதல் காணு
நனிதுய ரெய்தின னூறு மடைந்தான்
சினவி யுயிர்த்தழல் சிந்த நகைத்தா
னனையவ னின்ன தகத்திடை கொண்டான். (௨)

சுந்தர மேவரு சூரபன் மாவோ
வந்தமி றம்பிய ரோவனை யார்தம்
மைந்தர்க ளோமதி யேனவ ரல்லா
லிந்தவி யற்கையை யார்புரி கிற்பார். (௩)

ஆயவ ரென்னினு மாங்கது செய்தற்
கேயதொ ரேதுவு மின்றுதம் மூர்க்குத்
தீயது செய்கலர் சிந்தைய தன்றான்
மாயையு மீது மதிக்கிலள் போலும். (௪)

மூவரு மிச்செயன் முன்னலர் பின்னர்த்
தேவர்கள் யாரிது செய்திட வல்லா
ரேவரு நஞ்சிறை யெய்தினர் வேள்விக்
காவல னுருயிர் காத்து மறைந்தான். (௫)

மாதிர மேலவர் வானிடை வைப்பின்
மேதகும் விண்ணவர் விஞ்சையர் சித்த
ராதியர் நம்மிறை யாணையி னீங்கா
ரீது புரிந்திட வெண்ணுவர் கொல்லோ. (௬)

தவ்வற வீண்டமர் தானவ ராற்ற
மெய்வலி மாயைகண் மேவின ரேனுந்
தெவ்வடு சூர்முத றிண்படை யஞ்சி
யிவ்விய றன்னை யிழைக்கலர் போலும். (௭)

ஆதலி னன்னவ ராற்றல ரென்னி
னீதொரு செய்கை யிழைத்தவர் யாரோ
தாதை யகன்றுழி தானவ ரோடுங்
காதல னிந்நகர் காத்தது நன்றால். (௮)

காய மொடுங்கு கனற்கிர மூடு
போயது வல்லை புறஞ்செல நோற்று
மாயை பெரும்படை வன்மைகள் வேத
னீயமுன் வாங்கிய வென்செய னன்றால். (௯)

தந்தை யுறுது தணந்துழி யாங்கோர்
மைந்த னிருந்துதன் மாநக ரோடு
மந்தில கன்கட லாழ்ந்தன னென்று
னந்தம ரென்னை நகைப்பர்க ளன்றே. (௧௦)

மன்னவ னீது மதித்திடின் மற்றென்
றன்னை யடும்பெறு தந்தையு மற்றே
பின்னுள ரெள்ளுவர் பெற்றியி தாமே
லென்னிய னன்றென வெண்ணி யிளைந்தான். (கக)

இளைந்ததி வீர னெனுந்திறன் மைந்தன்
களைந்திடு கின்ற சடற்கிடை யாழ்வோ
னனந்தர மூழ்வினை யாற்றலி னன்னோன்
மனந்தனி லீதொரு தன்மை மதித்தான். (கஉ)

ஒல்லொலி சேருவ ரிக்கடன் மீதாய்ச்
செல்லுவன் யாரிது செய்தன ரென்றே
வல்லையி லோர்குவன் மற்றவர் தம்மைக்
கொல்லுவன் மெய்ப்படு சோரி குடிப்பன். (கந)

என்றதி வீர னிரும்படை யாவு
மொன்றற வாரி யுருத்தனி கத்து
ணின்றுளர் தங்களை நேடுபு கொண்டே
வன்றிரை வேலையின் மீமிசை வந்தான். (கச)

வேறு.

விடலைதிரு முன்னமதி வீரனனி கங்கள்
புடையில்வர நீரின்மிசை பொள்ளென வெழுந்தா
னடுதொழி லியற்றியிடு மாதிதனை யெய்தக்
கொடியவிடம் வார்கடல் குலாய்கிமிர்வ தேபோல். (கரு)

விழுந்திடு மிலங்கைதனின் மேவுமதி வீர
னெழுந்துதன தானையொ டிருங்கடலு ளங்கிக்
கொழுந்துமிசை சென்றனைய கோலமொடு நின்ற
செழுந்திறல்கொண் மொய்ம்புடைய செம்மனிலை கண்டான். (கசு)

கண்டனன் வெகுண்டிதழ் கறித்துநகை செய்யா
வண்டர்குழு வானிவனெ ராண்டகைநம் மூதூர்
தெண்டிரையி லாழும்வகை செய்துமிவ னின்று
னெண்டிசை தொழுந்தகுவ ராணையினி தென்றான். (கஎ)

என்றுமொழி யாவிரைவில் யாளிமுகன் மைந்தன்
கொன்றிவன தாருயிர் குடிப்பனென வுன்னிச்
சென்றிடலு மாழ்ந்தவர் செயற்கையது காண்பா
னின்றதொரு பேரறிஞ னீர்மையது கண்டான். (கஅ)

ஆனபொழு தத்தினி லவன்புடையில் வந்த
தானவர்கள் சூழ்ந்தனர் சமர்த்தொழி லியற்ற
மானவிற லோன்றனது வாளுறை கழித்தே
யூனுடையிர் சிந்தியிட வொல்லையடல் செய்தான். (கசு)

அற்றன சிரத்தொகுதி யற்றன கரங்க
ளற்றன புயத்தொகுதி யற்றன பதங்க
ளற்றன பெரும்புறமு மற்றவுடன் முற்று
மற்றனர்கள் யாருமுயி ரற்றதவர் பூசல். (உ0)

பங்கிசெறி செந்தலைகள் பாய்குருதி நீர்மே
லெங்கணு மிதப்பன விருங்கடலி னூடே
செங்கொடி படர்ந்திடு செழும்பவள வைப்பி
லங்கமல மானவை யலர்ந்திடுதல் போலும். (உக)

அற்றமகல் வீரனவு ணப்படை துணிப்பச்
செற்றிய பிணத்தொகை திரைப்புணரி தூர்த்து
மற்றுமிசை போந்துமணி யாலுமொ ரிலங்கைப்
பொற்றைய தியற்றியது போன்றுளது மாதோ. (உஉ)

தன்படை விளிந்துசல திக்கடலுள் வீழ
முன்பனதி வீரன்முனி யாவதனை நோக்கி
யென்புடையி னேரையெறிந் தாய்கடிதி னின்னைத்
தின்பனது காண்டியென வேசெரு முயன்றான். (உ௩)

சொல்லுமதி வீரன்வரு தோற்றமது காணு
வல்லைவரு கென்றுதிறல் வள்ளலு மழைப்ப
வெல்லையத னிறசெருவி னேற்றிவனை யின்னே
கொல்லுகென வங்கணொரு குந்தம தெறிந்தான். (உச)

உய்த்ததொரு கூரயி லுரத்திலுறு முன்னர்
மத்தகய நேர்விடலை மற்றது தெரிந்தே
கைத்தல மிருந்திடு கனற்புரையும் வாளா
லததுணை யிரண்டுதுணி யாய்விழ வெறிந்தான். (உரு)

கண்டமுற ஞாங்கரது கண்டுதிறன் மைந்தன்
றண்டம்விரைந் தொன்றொரு தடக்கைகொ டெடுத்தே
மண்டமர்செ யுன்னுயிரை வாங்குமிஃ தென்னு
வண்டர்புகழ் காளைதன தாகமுற விட்டான். (உசு)

வேறு.

விட்ட காலையத் தண்டினை வெலற்கருந் திறலோ
னட்டி டான்றனி வாளினு லேற்றன னகலம்
பட்டு மற்றது நுண்டுக ளாகவப பதகன்
மட்டி லாததோர் விம்மித மெய்தினன் மறுகி. (உஎ)

வேறொர் முத்தலைப் படையது கொண்டதி வீரன்
மாறி லாவிறன் மொய்ம்பினன் றன்மணி மார்பி
னூறு செய்திற மோச்சலுங் கண்டுநம் முரவோன்
சீறி யாங்கது பற்றினன் செங்கையா லிறுத்தான். (உஅ)

இறுத்த காலையி லிலங்கையில் யாளிமா முகன்சேய்
செறுத்தது மற்றிவன் றனையட லரிதெனச் சிந்தை
குறித்து மறறொரு நாந்தக மேந்தினன் குறுகி
வெறித்த கொண்டலுட் கொட்புறு மின்னென விதிர்த்தான். (உகூ)

கறங்கி னிற்பெரு வட்டணை புரிந்துதன் கரமே
னிறங்கொள் வாளினை யிடம்வலந் திரித்தன னெறியே
பிறங்கு மார்கலித் தெண்டிரை யலைதரப் பெரிது
மறங்கொ ணூர்ந்தக மீனுகண் டலமரும் வகைபோல். (௩0)

ஏதி யிங்கிது நான்முகன் றந்தது தேவர்க்கும்
பேத கஞ்செய லரியதா லன்னது பிடித்தேன்
சாதி திண்ணநீ வருகெனு மிகைமொழி சாற்றிக்
கோதில் வீரன்முன் னணுகலு மனையவன் கூறும். (௩க)

நன்று நன்றுநின் னாற்றலு மாண்மையு நம்மை
வென்றி யேயெனின் யாவரு மேனுனை வியப்பார்
நின்று நீசில மொழிவதென் கடிதுநே ருதியால்
வென்றி வீரருந் தமைப்புகழ் கிற்பரோ வென்றான். (௩உ)

என்ன வொன்னலன் கிடைத்தனன் வீரனு மெதிர்ந்தா
னன்ன பான்மையர் வாளம ராடின ரகல்வான்
மின்னு மாமுகி றோன்றியே யெதிரெதிர் விரிந்து
பின்ன ருள்புகுந் திடனுடன் செறிந்தபெற் றிமைபோல். (௩௩)

சென்னி நாடுவர் களத்தினை நாடுவர் செவிதாள்
கன்ன நாடுவர் புயங்களை நாடுவர் கரங்க
ளுன்னி நாடுவ ருரத்தினை நாடுவ ருகளப்
பொன்னின் வார்கழ லாடுவர் வாளமர் புரிவார். (௩௪)

இணங்கு நீரவ ரிருவரு மினையன வுறுப்பி
லணங்கு செய்திடு மரபினு லாயிடை யுய்ப்பார்
நுணங்கு விஞ்சையின் வன்மையா னெய்தின்மாற் றிடுவார்
மணங்கொள் செங்கிற வாள்கொடே வட்டணை வருவார். (௩ரு)

போத மின்னதி லெம்பிரான் றாதுவன் பொருவா
னேதி கொண்டுளான் றன்னையான் வலிந்திட லியல்போ
வாத லாலிவன் படைமுறை வெல்வதே யறனென்
றோதி சேருளங் கொண்டன னிடைதெரிந் துற்றான். (௩௬)

இடை புகுந்ததி வீரன தடிகளோ ரிரண்டு
முடியு மாகமுந் தோள்களு மாங்கொரு முறையே
சுடர் பிறங்கிய வாளினு லாண்டகை துணித்துக்
கடிது வீட்டின னடுவன்வந் தவனுயிர் கவர்ந்தான். (௩எ)

ஆக திருவிருத்தம் - கருச.

---

வசனம்.

இலங்கைக்கடலிற புகுதலும், அதிலிருந்த அவுணர்கள் கலங்கியழுது புலம்புஞ்சமயத்தில், அந்த அவுணர்களின் சரீரத்தை மீன்கள் பலவகையாயிழுத்தும் பறித்தும் அலங்கோலஞ்செய்வதைக்கண்ட அதிவீரன் நகைத்துத் தன்மனத்தில் அடியில்வருமாறு எண்ணுவானாயினான்.

சூரபன்மன், சிங்கமுகன், தாரகன் என்று சொல்லப்பட்ட மூவரும், அவர்களுடையமக்களும் இவ்வாறுசெய்யநினையார்களே! இந்திரன்முதலியதேவர்கள் நம்மிறைவனால் சிறைசெய்யப்பட்டுவருந்துகிறார்களே, மற்றெல்லாருள்ளும் சூரபன்மனுக்கு அஞ்சாதவர் ஒருவருமில்லையே! என்று பலவாறு மனத்தில்நினைத்து, தனது அநேகப்படைகளோடு புறப்பட்டுப்போய் வீரவாகுதேவரைக்கண்டான், கண்ட

வுடனே, நமது இலங்கையைக் கடலிற்கவிழ்த்தவன் இவனேயாமென்று நினைத்து நகைத்துநிற்க, அவனுடைய படைவீரர் வீரவாகுதேவரோடு போர்செய்யத்தொடங்கினார்கள். அவர்களையெல்லாம் வீரவாகுதேவர் தமது கைவாளினால்கொன்று குவித்தார். அப்படிக் கொல்லப்பட்டவருடைய உதிரப்பெருக்கில் அவருடையதலைகள் மிதந்தன. இதைக்கண்ட அதிவீரன் ஒரு குந்தாயுதத்தை வீரவாகுதேவர்மேற் பிரயோகித்தான். அதை வீரவாகுதேவர் விலக்குதலும், வேறொருதண்டாயுதத்தை யெறிந்தான், அதை வீரவாகுதேவர் தமதுமார்பில் ஏற்றுக்கொண்டு, தமது கைவாளால் அதிவீரனுயிரைக் காலனுக்கு விருந்துசெய்தார்.

அதிவீரன்வதைப்படலம் முற்றிற்று.

# மகேந்திரஞ்செல்படலம்.

வீர வாகுவின் றவ்வதி வீரனை வீட்டித்
தாரை வாளுறை செலுத்தியே வெஞ்சமர் தணித்து
நேரில் வீரமா மகேந்திரம் போவது நினைந்தே
யேரு லாவரு மிலங்கையி னெல்லைநீத் தெழுந்தான். (க)

எழுந்து வான்வழிச் சேறலு மார்கலி யிடையே
விழுந்து கீழுறு மிலங்கைமீண் டெழுந்தது விரைவிற்
கழிந்த தொல்பர நீங்கிய காலையிற் கடலூ
டழுந்து கின்றபொற் றேணிமீச் சென்றிடு மதுபோல். (உ)

வார்த்த யங்கிய கழலவன் வான்வழிக் கொளலு
மீர்த்த தெண்கட லீத்தமே லெழுதரு மிலங்கை
சீர்த்த நான்முக னுறங்குழிச் சிந்துவூ டழுந்திப்
பேர்த்து ஞாலம்விட் டெழுதரு மேருவிற் பிறழும். (ங)

எள்ளு நீரரைப் பற்பக லாற்றலி னிலங்கை
கொள்ளை வெம்பவ மாசிரு ளடைந்தது குறைதீர்
வள்ள றாள்பட நீத்தது பவந்துகண் மாற்றத்
தெள்ளு நீர்க்கடல் படிந்தெழுந் தாலெனத் திகழும். (ச)

கந்த ரந்தவழ் தெண்புனற் கருங்கட னடுவட்
சுந்த ரஞ்செறி பொன்சுட ரிலங்கை தோன்றியது
முந்து காலையி லெம்பிரா னருள்வழி முராரி
யுந்தி நின்றெழு பிரமன்மூ தண்டமொத் துளதால். (ரு)

இன்ன தாகிய விலங்கைமா புரத்தைநீத் தெழுந்து
பின்னு மாயிரம் யோசனை வானிடைப் பெயர்ந்து
பொன்னு லாவுறு வாகையம் புயத்தவன் புலவோ
ரொன்ன லானுறை மகேந்திர வரைப்பின்முன் னுற்றான். (சு)

நெற்றி நாட்டத்து நந்திதன் கணத்தவ னேமிப்
பொற்றை யாமெனச் சூழ்ந்துயர் மகேந்திரப் புரிசைச்
சுற்று ஞாயிலும் வாயில்க டொறுந்தொறுந் தோன்றுங்
கற்றை மாமணிச் சிகரியு நனித்துமுன் கண்டான். (எ)

சேர லாரமர் மகேந்திர நகர்வடதிசையில்
வாரி வாய்தனுட் கோபுரத் தெற்றியின் மாடே
கோர னேயதி கோரனே யெனப்படுங் கொடிய
வீரர் தானையோ டிருந்தனர் காவல்கொள் வினையால். (அ)

கரிக ளாயிரம் வெள்ளமே தேருமக் கணிதம்
பரிக ளாங்கதற் கிருதொகை யத்தொகை பதாதி
யுரிய வப்பெருந் தானையம் பெருங்கட லுலவா
விரவி மேவர விருந்தனர் காத்திடும் வீரர். (கூ)

பகுதி கொண்டிடு தானையஞ் சூழலாம் பரவைத்
தொகுதி கண்டனன் விம்மிதங் கொண்டனன் றன்னா
மிகுதி கொண்டுறை காவலுங் கண்டனன் வியனார்
புகுதி கொண்டிடு முணர்வினு னினையன புகல்வான். (க0)

ஈண்டு செல்லினித் தானைசூழ்ந் தமர்செயும் யானு
மூண்டு நேரினு முடிப்பவோர் பகலெலா முடியு
யாண்ட தென்னினு முலவுமோ மாநக ரிடத்து
மீண்டும் வந்திடுங் கரிபரி பதாதிதேர் வெள்ளம். (கக)

வந்த வந்ததோர் தானவப் படையொடே மலைவுற்
றெந்தை கந்தவே ளருளினல் யானொரு வேனுஞ்
சிந்தி நிற்பனே லிந்நகர்த் தானைகள் சிதைய
வந்த மில்பகல் சென்றிடு மளியரோ வவுணர். (கஉ)

எல்லை யில்பகல் செல்லினுஞ் செல்லுக வினைய
மல்லன் மாநக ரவுணர்மாப் பெருங்கடல் வறப்ப
வொல்லு நீர்மையால் யானடல் செய்வனே லுருத்துத்
தொல்லை மைந்தரைத் துணைவரை யுய்க்குவன் சூரன். (கங)

உய்த்த மைந்தர்கள் சூழ்ச்சியின் றுணைவர்க ளொழிந்தோ
ரத்தி றத்துளோர் யாரையும் வெலற்கரி தயில்வேற்
கைத்த லத்தவன் வலிகொடே பற்பகல் காறு
மித்த லைச்சம ராற்றியே முடிக்குவ னெனினும். (கச)

ஏவ ரும்வெலற் கரியசூர் பின்னர்வந் தெதிர்க்கு
மோவில் வெஞ்சமர் பற்பக லாற்றியா னுறினும்
வீவ தில்லையா லங்கவன் மேலைநாட் டவத்தாற்
றேவ தேவன்முன் னருளிய வரங்களின் சீரால். (கரு)

அன்ன வன்றனை மாலயன் றனக்கும்வெல் லரிதா
மின்னு மாங்கவ னுணைக்கும் வெருவியே யிருந்தார்
பின்னை யாரவன் றன்னைவென் றிடுவர்கள் பெருநாட்
டுன்னி யான்சம ராற்றினுந் தொலைகிலன் சிறிதும். (கசு)

தொலைந்து போகிலன் சூரம ரியற்றிடிற் றன்னிக்
கலந்த யான்விற லின்றிமீண் டேகுதல் கடனே
மலைந்து நிற்கவே வேண்டுமா லாயினும் வறிது
பலந்த லைப்படுஞ் சுரர்சிறை யகன்றிட வற்றோ. (கஎ)

மற்றிந் நீர்மையிற் பற்பக லவனொடு மலைந்து
வெற்றி கொண்டில னின்னுமென் றமரினை வீட்டி
யொற்றி னீர்மையை யுணர்த்துத லொல்லுமோ வுலவா
தெற்றை வைகலு மமர்செய வேண்டுமோ வெனக்கே. (௧௭)

போத நாயகன் பரமபொரு ணாயகன் பொருவில்
வேத நாயகன் சிவனரு ணாயகன் விண்ணோர்க்
காதி நாயக னறுமுக நாயக னமலச்
சோதி நாயக னன்றியார் சூரனைத் தொலைப்பார். (௧௮)

இம்பர் சூரொடு பொருதுநின் றிடுவனே யென்னி
னம்பி ரானறு மாமுகன் பின்னரே நண்ணி
வெம்பு சூரனை வேலினாற் றடிந்துவெஞ் சிறையி
லும்பர் யாரையு மீட்டிட வேண்டுமே லொருநாள். (௨0)

ஆத லாலம ராற்றுதன் முறையதோ வஃதான்
றீது நம்பெரு மான்றன தருளுமன் றினைய
தூதர் செய்கட னன்கொலோ வமர்பொருத் தொடர்பாற்
போத லேகட னென்றனன் பொருவில்சீ ரறிஞன். (௨௧)

வேறு.

இபபால் வாய்தலி னெல்லை நீங்கிய
துபபார் தானைக டற்று நின்றவா
லப்பா லெய்தரி தாம ருங்குபோய்
வைபபார் கீழ்த்திசை வாயி னண்ணுவேன். (௨௨)

என்னா வுன்னி யியன்ற வுத்தரப்
பொன்னார் வேலி புகாது பாங்கர்போய்க்
கொனனா கின்ற குணக்கு வாய்தலின்
முன்னா வேகினன் மொய்ம்பின் வீரனே. (௨௩)

மேதிக கண்ணவன் வீர பானுவென்
றோதிக் கந்தவு ணாக்கு நாயக
ரேதிக் கையரி ரண்டு வீரரு
மாதிக் கன்னதன் வாயில் போற்றினார். (௨௪)

திருவுந் தும்வட திக்கு வாய்தலின்
விரவுந் தானையின் வெள்ள மெய்த்தொகை
பரவுஞ் சூரா பயிற்று பல்பவத்
துருவஞ் சூழ்ந்தென வொத்து நின்றவே. (௨௫)

வண்டார் செற்றிய வாகை மொய்ம்பினான்
கண்டா னன்ன கடிக்கொள் காவலுந்
தண்டா துற்றிடு தானை நீத்தமு
மண்டா வற்புத நீர னாயினான். (௨௬)

ஆண்டங் குற்ற வளப்பில் சேனையைக்
காண்டும் மிவ்வுழி காவல் போற்றியே
சேண்டின் றும்புவி செற்று மாதலா
லீண்டிஞ் செல்லரி தென்று முன்னினான். (௨௭)

கின்றிப் பாற்பட னீர்மை யன்றரோ
தென்றிக் கின்வழி சென்று நாடுவ
னென்றுட் கொண்டவ னீங்கி யேகினான்
குன்றிற் றாண்மிடல் கொண்ட தோளினான். (௨௭)

ஆ திருவிருத்தம் - ௧௮௨.

---

வசனம்.

வீரவாகுதேவர் அதிவீரனைக்கொன்று, மகேந்திரநகரம்போகவெண்ணி, இலங்கையைநீங்கி ஆகாயவழியாய்ச்செல்ல, அந்த இலஙகை மீண்டுமெழுந்தது. பின்பு வீரவாகுதேவர் மகேந்திரநகரையடைய, அந்தநகரத்தின் வடக்குவாயிலில் கோரனென்றும் அதிகோரனென்றும் சொல்லப்படுகிற இரண்டு அவுணவீரர் காவல்செய்திருந்தனர். அவர்களைப்பார்த்து வியந்து ஆலோசிக்கிறார், எப்படி யென்றால்,

இஙகேநாம் செல்வோமாயின், இவர்களுடைய பெரும்படை நம்மோடு போர் செய்யும், அவர்களையெல்லாம் வெல்வதற்கு நாள் பலகழியும், அப்படி நெடுங்காலம் அவ்வவுணப்படைகளோடுபொருது வெல்வோமாயினும் பின்பு சூரபன்மன் வருவான் அவனோடுபொருது அவனைக்கொல்வதற்கும் நெடுநாள்கழியும், அவனோ சிவபெருமானிடத்தில் சாகாவரம் பெற்றிருக்கிறான். ஆதலால் நாம் வந்தகாரியத்தைப் பார்த்துக்கொண்டுபோவதே தகுதியென்று கிழக்குவாயிலையடைந்தார். அந்தவாயிலும் அவுணர்சேனைகளாற் சூழப்பட்டு, மேதிக்கண்ணன் வீரபானு என்னும் சேனைத்தலைவரால் காக்கப்பட்டிருந்தது. அதையுங்கடந்துபோவது அரிதென்று தென்றிசைவாயிலையணுகினார்.

மகேந்திரஞ்செல்படலம் முற்றிற்று.

---

## கயமுகன்வதைப்படலம்.

ஏகா நிற்புழி யேந்தல் கீழ்த்திசை
மாகா வற்கொண் மதங்க மாமுகன்
மீகா னொப்ப வியன்க லத்தினுக்
காகா யத்தி னமர்ந்து போற்றுவான் (௧)

நூற்றுப் பத்து நுவன்ற தோன்முகன்
மூற்றைக் கையினன் மொய்ம்பி ராயிரன்
சீற்றத் துப்புறு தீய சிந்தையான்
கூற்றுந் தக்கொரு கூற்ற மேயனான். (௨)

பொன்னா ரேம புரத்து வைகலு
மன்னாய் வாழ்பவன் மாறு கொண்டுதன்
முன்னா வெய்து முனிந்து போர்செய
வொன்னா ரின்றி யுளங்கு றைந்துளான். (௩)

கருமே கங்கள் கறித்து வாரியுண்
டுருமே றோடுமு ரற்ற வோச்சுவான்
பெருமே தக்க பவஞ்செய் பெற்றியான்
செருமேல் கொண்டிடு சிந்தை பெற்றுளான். (௪)

மஞ்சார் வேழம் வனத்தில் பல்லுளி
யெஞ்சா வெவ்வரி யாளி வல்லிய
மஞ்சா ராயிர மங்கை கொண்டுணுச்
செஞ்சோ ரிப்புனல் சிந்தும் வாயினுன். (௬)

காசைப் போது கடுத்த மெய்யர்தென்
ருசைக் காலரொ ராயி ரத்தர்தம்
பாசத் தோடு பயின்று சேர்ந்தென
வீசித் தூங்கும் வியன்று திக்கையான். (௬)

வாணு ளஃகினன் மாயு மெல்லையா
னேணு லத்திசை யேகும் வீரனைக்
காணு நின்று கனன்று சாலவுஞ்
சேணு னின்னன செப்பி யேகுவான். (எ)

மிக்கார் காவல் விலங்கி நீயிவட்
புக்காய் மாயை புகன்று ளாய்கொலோ
வக்கா ருனுமெம் மானை நீங்கியே
யெக்கா லத்தினு மேக வல்லதோ. (அ)

வறியா ராகி மயங்கும் வானவச்
சிறியார் வைகிய சீரி லூரெனக்
குறியா வந்தனை கோதி லிந்நக
ரறியா யோநம தாணை யாற்றலே. (௯)

மூண்டே குற்றனென் மொய்சி னத்தினேன்
மாண்டே போயினை வல்லை நீயினி
மீண்டே போந்திற மில்லை மேலுனக்
கீண்டே மாய விழைத்த வெல்லையே. (௧0)

சூராள் கின்றதொர் தொல்லை மாநகர்
சேரா நின்றனை சீறு கேசரி
பேரா வெல்லையொர் பிடின் மான்பினை
யாராய் தற்கு வருங்கொ லாற்றலால். (௧௧)

தொடுநே மிக்கட றுண்ணெ ணக்கடந்
திடைசேர் கின்ற விலங்கை நீங்கியே
கடிதே யிந்நகர் காண வுன்னியே
யடைவாய் தேவர்க ணத்து ளாரைநீ. (௧௨)

திருத்தங் கண்ணக றேவர் தம்முளும்
விருத்தன் போலு மிகத்து ணிந்துநீ
யொருத்தன் போந்தனை யொன்ரேர் வாளொடே
வரத்தென் னிவ்விடை மாயை கற்றுளாய். (௧௩)

ஆலா லத்தை யயின்ற நம்பனே
மாலா னேவன சத்தி லண்ணலோ
பாலார் தந்தி படைத்த கள்வனே
மேலா ரிங்குனை விட்ட தன்மையார், (௧௪)

சுற்றா நின்றனை சூழ்விக்க
ஒற்றாய் வந்தனை போது முன்றனை
மற்றா ருய்த்தனர் வந்த தென்கொலோ
விற்றாய் நின்னுயி ரெங்க ணுய்திநீ. (கரு)

சிறையிற் பட்டுழ றேவர் செய்கையை
யறிகுற் றிந்திர னானை யாகியே
நெறியிற் போக நினைந்து ளாய்கொலாங்
குறுகுற் றாயிது வுங்கு றிப்பதோ. (கசு)

விண்டோ யுங்கனன் மேவு மெல்லையின்
மண்டோய் பூளை மருத்த னுய்த்தெனப்
பண்டே நொய்யை படிந்தி றத்திவட்
கொண்டே வந்தது கொல்லும் வல்வினை. (கஎ)

முன்னர் நம்பணி முற்று மாற்றியே
இன்னங் கொண்டு கரந்த கீழ்த்திசை
மன்னன் பானுறு வாரு ளன்றுநீ
யின்னும் மஞ்சலை யென்னை யெண்ணலாய். (கஅ)

கொல்லா நிற்பதொர் கூற்ற மேயெனச்
செல்லா நின்றிடு திண்ணி யேன்முனா
வில்லா யெங்கடா நீங்கு வாயெனா
வொல்லா னோதி யுரப்பி யேகினான். (கக)

வன்றாள் கொண்ட மதக்க யாசுரன்
சென்றா னின்னன செப்பி யிம்மொழி
நன்றா லென்று நகைத்து நோக்கியே
நின்றான் வாகை நெடும்பு யத்தினான். (உ0)

ஓவா திவ்வகை யோதி முன்வருந்
தீவா யோனெதிர் சென்று வல்லையிற்
சாவா யென்னிடை சார்ந்து ளாய்கொலாம்
வாவா வெனறனன் வாகை மொய்ம்பினான். (உக)

வானோ ரஞ்ச வருங்க யாசுரன்
றானோர் குன்று தனைப்ப றித்திடா
வூனோ டுன்னுயி ருண்ணு மீதெனா
வானோன் மைந்தன்முன் னார்த்து வீசினான். (உஉ)

விண்டோய் மேனி வியன்க யாசுரன்
கொண்டோர் கையில் விடுத்த குன்றது
வண்டோ லம்புரி மாலை மொய்ம்பினான்
றிண்டோண் மீமிசை செவ்வ னுற்றதே. (உங)

வேழத் தோன்முகன் விட்ட பூதரம்
பாழித் தோண்மிசை பட்ட காலையில்
வாழிப் பூதியின் வட்டு விண்டெனப்
பூழித் தாகி யுடைந்து போயதே. (உச)

பொடியுங் காலெதிர் புக்க தீயவன்
மிடல்கொண் டேற்றிடு வீர னாற்றல்கண்
டுடலுந் திண்சின முற்றொ ராயிரம்
படருங் குன்று பறித்தன் மேயினான். (உ௫)

பறியா நின்ற பகட்டு மாமுக
னெறிவீழ் கின்ற நெடுங்கை சுற்றினா
னிறைசேர் மேரு விருந்த கோடெலாங்
கறைசேர் காலவர் கட்டெ ழுந்தபோல். (உ௬)

பத்தா நூறு படுத்த வேலையுண்
மத்தா குற்றன வாசு கித்தொகை
மொய்ததார் வன்றலை முன்பு சூழ்ந்தெனக்
கைத்தா மால்வரைக் காட்சி மிக்கவே. (உஎ)

துண்ணென் றேகயா சூர னூறுபத்
தெண்ணுந் தொல்கிரி யாவு மெம்பிரான்
கண்ணின் றோன்விடு காமர் காளைமேல்
விண்ணங் கான்றென வார்த்து வீசினான். (உஅ)

பாடார் பல்கிரி பற்றி வீசலு
மீடார் வெம்புலி யாளி கேசரி
கோடார் தந்திகள் கோடி கோடிகள்
வீடா வார்ப்பொடு விம்மி வீழ்பவே. (உ௯)

கேடாய் மன்னர் கிடப்ப வாங்கவர்
வீடா வாக்க மிசைந்து ளாரெனப்
பாடா வண்டு பராரை மால்வரை
யூடார் தேன்க ளுகுப்ப வுண்டவே. (௩0)

வேறா கும்பல வெற்பி டந்தொறு
மூறா நின்றல வுற்ற வான்புனன்
மாறா மற்கவிழ் வுற்று வல்லைபே
ராறா கிக்கட லென்ன வார்த்ததே. (௩க)

வரைவீழ் பூம்புனன் மாந திக்கணே
யிரையா மாக்களி யாவும் வீழ்தலாற்
றிரைசேர் வாரிகள் சென்று சேணுழீஇ
விரைவால வெய்யவன் வெப்ப நீக்குமே. (௩உ)

பேசுஞ் சீரிவை பெற்ற வெற்பெலா
மீசன் றாதுவன் முன்ன ரெய்தின
பாசஞ் சுற்றிய பம்ப ரத்தொகை
வீசுங் காலை சுழன்று வீழ்வபோல். (௩௩)

வேறு.

சுடர்ப்பெ ருங்கதி ராதவன் றண்ணெனக் கரப்ப
வடுக்க லாயிர மின்னவா றொருதலை யாகக்
கடற்பு குங்கண முகிலென வருதலுங் கண்டான்
றடக்கை வேலுடை யண்ணறன் முன்னினன் றம்பியோன். (௩௪)

நிற்கு மெல்லையின் வெங்கொலைத் தொழின்முறை திரம்பக்
கிற்கும் வெய்யவன் விடுத்திடு மாயிரங் கிரியும்
பற்கன் மால்வரை காப்பவன் றன்மிசை பழிதீ
ர றகன் மேல்வரு மெழிலிக ளெனவடைந் தனவே. (௩௫)

வேறு.

மறுவரை யாத திங்கள் வார்சடைக் கடவு ணல்க
வறுவரை யனையாப் பெற்றோ னருளினா லையனிற்ப
வுறுவரை பத்துநூறு மொருங்குமா யுற்று மற்றோர்
சிறுவரை தன்னில் யாவுஞ் சிதறியே யுடைந்த வன்றே. (௩௬)

தெளிதரு வீரன் றன்மேற் செறிந்திடு மடுக்கல் யாவும்
விளிவொடு மாய்ந்த வன்றி விளைத்தில வேறங் கொன்றும்
வளநனி சுருங்கி வானம் வறந்தநாள் வெளிற்றுக் கொண்மூக்
கிளர்வன பயனின் றாகிக் கேடுபட் டிடையு மாபோல். (௩௭)

மட்பகை வினைஞ ராஞோர் வனைதரு கலங்கண் முற்றுந்
திட்பமொ டமர்ந்த கற்றூண் சேர்ந்துழிச் சிதறு மாபோற்
கொட்புறு புழைக்கை வெய்யோன் குறித்தெறி பிறங்கல் யாவு
மொட்பம தடைந்த வீரன் மிசைபட வுடைந்த வன்றே. (௩௮)

விறல்கெழு புயத்தி னான்மேல் விடுத்திடு கிரிகள் யாவும்
வறிதுபட் டிடலுங் காணா மால்கரி முகத்த னின்றா
னறநெறி யொருவி மொய்ம்பா லாற்றிய வெறுக்கை யாவும்
பிறர்கொள வுகுத்தி யாது மூதியம் பெறுகி லார்போல். (௩௯)

கண்டுவிம் மிதத்த னாகிக் கயாசுரன் முனிந்தோர் தண்டந்
திண்டிறன் மொய்ம்பன் றன்மேற் செலுத்தலு மதனைக் காணா
வொண்டழல் புரையு மொள்வா ளுறைகழித் தொல்லை வீழத்
துண்டம தாக்கி யன்னோ னெதிருறத் துன்ன லுற்றான். (௪௦)

மத்தவெங் கயமாந் தீயோன் வாகையந் தடந்தோ ளண்ணன்
மெய்த்ததனி யாற்றல் காணா விழுத்தகு பனைக்கை யோச்சிப்
பத்துநூ றான சாலப் பழுமரம பறியா வேந்தி
யுய்த்திட வொருதன் வாளா லொய்யெனச் சிந்தி யார்த்தான். (௪௧)

காயெரி கலுழும் வெங்கட் கயாசுரன் விடுவான் பின்னுஞ்
சேயுயர் வரைபல் வேறு தெரிந்தனன் பறிக்கு மெல்லை
நாயகன் றூதன் காணா நாந்தகங் கொடுபோ யன்னா
னுயிர மாகி யுள்ள புழைக்கையு மறுத்தா னன்றே. (௪௨)

அறுத்தலுங் கவன்று தீயோ னாயிரத் திரட்டி கையுஞ்
செறித்திவன் றன்னைப் பற்றித் திற்றியாக் கொளவ னெனவே
குறித்தனன் வளைப்ப வாளாற் கொம்மென வாற்றல் வீரன்
றறித்தன னொருசார் வந்த வாயிரந் தடக்கை முற்றும். (௪௩)

செற்றமால் கரியின் பேரோன் றிண்கையா யிரமும் வீட்ட
மற்றையா யிரங்கை யாலும் வாகையஞ் செம்மன மாபி
னெறறினா னெற்று மெல்லை யெல்லையில் வெகுளி யெய்தி
யற்றுவீழ்ந் திடவே வாளா லவையெலா மடுதல செய்தான். (௪௪)

கொலைகெழு தறுக ணூல்வாய்க் குஞ்சரமுகத்து வெய்யோ
னிலைகெழு பாணி முற்று நீங்கியீ ரைந்து நூற்றுத்
தலைகெழு கிளைமைத் தாகித் தண்சினை பலவு மல்கி
யலைகெழு வீழ்பேர் யுற்ற வாலமே போல நின்றான். (௪௫)

பாணிக ளிழந்து நின்ற பகட்டுடை வதனத் தீயோ
னாணின னிவனை யட்டு நம்முயிர் துறத்து மென்னா
மாணறு மனத்திற் கொண்டு மற்றொழின் முன்னித் தோளாற்
றாணுவின் கைலை காப்போன் றடம்புயந் தாக்கி யார்த்தான். (௪௬)

ஐயன தொற்றன் காணா வாற்றலின் றாகி முற்றுங்
கையினை யிழந்து நின்றான் கடுங்கதிர் வாளின் வெம்போர்
செய்யல னினியா னென்னாச் சிந்தைசெய் துறைவா ளோச்சி
யொய்யென வவன்றன் மார்பி னுதைத்தன னொருதன் றாளால். (௪௭)

உதைத்திடு கின்ற காலை யொல்லென வரற்றி வீழ்ந்து
மதத்தினை யுறுக போல மால்கரி முகத்து வெய்யோன்
பதைத்தன னாவி சிந்திப் பட்டனன் பகிர்ந்த மார்பிற்
குதித்திடு சோரி நீத்தங் குரைகடற் போய தன்றே. (௪௮)

அவ்வியல் கண்டு பல்லோ ரவுணர்க ளமரே யீண்டு
தெவ்வியன் முறையி னின்று செருவினை யிழைப்பார் போலு
மிவ்விவ ராடற்கேது வென்கொலோ வறிது மென்றே
கவ்வையி னெறிக டோறுங் காண்பது கருதிப் போந்தார். (௪௯)

சென்றிடல் வீரன் காணாத் தீயரொன் செய்கை நோக்கிற்
கன்றிவெஞ் சினமேற் கொண்டு கடுஞ்சம ரிழைப்பர் யானு
நின்றமர் புரிதல் வேண்டு நிலைமையீ தென்றா லம்மா
வின்றொடு முடியுங் கொல்லோ வியற்றினு மிவர்போ ரென்றான். (௫௰)

ஆரணந் தனக்குங் காணா வாதியங் கடவுள் சொற்ற
பேரருண் மறந்தே யின்னே பீடிலார் தம்மோ டேற்றுப்
போரினை யிழைத்து நிற்றல் புல்லிது புலமைத் தன்றாற்
சூருறை மூதூர் தன்னிற் றுன்னுவன் கடிதி னென்றான். (௫௧)

எப்பெரு வாயில் சார வேகினு மங்க ணெல்லாங்
கைப்படை யவுணர் வெள்ளங் காவல்கொண் டுற்ற வாற்றாற்
றப்பினன் சேற லொல்லா தமியனிப் படிவத் தோடு
மெய்ப்பதி யிதற்குச் செல்வன் வேற்றுரு வெய்தி யென்றான். (௫௨)

கூற்றினை யுறழும் வைவேற் குமரவே ளருளா லீண்டோர்
வேற்றுரு வதனைக் கொண்டு வெய்யரா மவுண வீரர்
போற்றுமிக் குணபால் வாய்தல பொள்ளெனக் கடந்து பின்னர்
மாற்றல னூரிற் செல்வ னென்றனன் வாகை மொய்ம்பன். (௫௩)

நொய்யதோ ரணுவி னாற்ற நுணுகியு மேன்மை தன்னிற்
பொய்யில்சீர் பெருமைத் தாயும் பூரண மாகி வைகுஞ்
செய்யதோர் குமரன் பொற்றாள் சிந்தைசெய் தன்னிற் போற்றி
யொய்யென வருளி னீரா லோரணு வுருவங் கொண்டான். (௫௪)

நுணுகுதன் னுணர்வே போல நோக்கருந் திறத்தாற் றானே
ரணுவுருக் கொண்டு வீர னடுகள மதனை நீங்கி
யிணையறு குமரற் போற்றி யெழுந்துவிண் படர்ந்து மூதூர்க்
குணதிசை வாய்த னின்ற கோபுர மிசைக்க ணுற்றான். (ருரு)

ஆ திருவிருத்தம் - உருஎ.

---

வசனம்.

தென்றிசைநாடிச் செல்லும்போது, கீழ்த்திசைவாயிற் காவலனாகிய கயமுகன் என்பவன் ஆகாயத்தில் காத்துக்கொண்டிருந்தான். அவன் வீரவாகுதேவரைநோக்கி, நீயார், நீவந்தகாரணமென்ன? இது சூரபன்மனது நகரமென்றறியாயோ? நீ இந்திரன் தூதன்போலக் காணப்படுகின்றாய், நீ சிறிதும் அஞ்சாதிருக்கிறாய்? நில்லடாவென்று உரக்கக்கூவிச் சென்றான்.

இப்படிக் கூவிச்சென்ற கயமுகனை வீரவாகுதேவர் நெருங்கி, என்னிடத்து வந்தது சாவதற்கென்றே நினை, நீயோர் வீரனானால் என்னோடு போர்செய்ய வாவென்றழைக்க, அந்தக்கயமுகனும் வீரவாகுதேவரையெதிர்த்து, தன் கைப்படைகளெல்லாம் அவர்மேல் பிரயோகித்தும் வென்றியடையாமல் அவரது உதையால் இறந்தொழிந்தான். பிறகு வீரவாகுதேவர், நாம வந்தகாரியமிதுவல்லவேயென்று ஆலோசித்து, அணுரூபங்கொண்டு கீழ்க்கோபுர வாயிலையடைந்தார்.

கயமுகன்வதைப்படலம் முற்றிற்று.

---

# நகர்புகுபடலம்.

அண்டம் யாவையு மெழுவகை யுயிர்த்தொகை யனைத்தும்
பிண்ட மாய்பொருண் முழுவது நல்கியெம் பெருமான்
பணடு பாரிதத திறமென மகேந்திரப் பதியின்
மண்டு தொல்வள நோக்கியே யின்னன மதிப்பான். (க)

எந்தை முன்னரே சூரபன் மாவினுக் கீந்த
முந்து மண்டங்க ளலமரு முவரிகண் முழுதும்
வந்து மொய்த்தன போலுமால் வரைபுரை காட்சிக்
கந்து பற்றியே யார்த்திடு மெல்லைதீர் கரிகள். (உ)

இயலு மைம்பெரு நிறத்தினண் டங்களி னிருந்த
புயலி னம்பல வோர்வழித தொக்கன பொருவ
மயிலி ருஞ்சர மூயலொடு யூகமற் றெழிலைப்
பயில்ப ரித்தொகை யளப்பில வயின்றொறும் பரவும். (ங)

அண்ட மாயிரத் தெட்டினுண் மேதகு மடன்மாத்
தண்ட மால்கரி யாயின தடமபெருந் தேர்க
ளெண்ட ரும்பொரு ளியாவுமீண் டிருந்தன விவற்றைக்
கண்டு தேர்ந்தன ரல்லரோ வகிலமுங் கண்டோர். (ச)

இணையி லிவ்விடைத் தானையின் வெள்ளமோ ரிலக்க
ணுகு மென்றன னந்தண னற்பெரும் படையுங்
கணித மில்லன விருந்தன வெள்ளிகண் ணிலன்போ
லுணர்வி லன்கொலாங் கனகனுங் கேட்டசொல் லுரைத்தான். (ரு)

உரையின் மிக்கசூர் பெற்றவண் டந்தெற்று முளவாம்
வரையின் மிக்கதேர் கடல்களின் மிக்ககை மாக்க
டிரையின் மிக்கவாம் பரித்தொகை யாயிடைச் செறிந்த
பரவை நுண்மண றன்னினு மிக்கன பதாதி. (௬)

மண்கொ ளாயிரத் தெட்டெனு மண்டத்தின் வளமு
மெண்கொ ளெண்பதி னாயிர யோசனை யெல்லைக்
கண்கொள் பான்மையி லீண்டிய தற்புதங் கறைதோய்
புண்கொள் வேலுடைச் சூர்தவத் தடங்கிய போலாம். (௭)

உரைசெ யாயிரத் தெட்டெனு மண்டத்தி னுளவாங்
கரையில் சீரெலாந் தொகுத்தன னீண்டவை கண்டாந்
தரும மெய்யளி கண்டில மவற்றையுந் தந்து
சீர்க டம்முடன் சிறையிலிட் டான்கொலோ சூரன். (௮)

அரண்ட ருங்கழற் சூரன்வாழ் மகேந்திர மதனிற்
றிரண்ட பல்லியத் துழனியேழ் கடலினுந் தெழிப்ப
முரண்டி றத்தவை யியம்புவா ரளவையார் மொழிவா
ரிரண்டு பத்துநூ றியோசனை யுண்டவ ரிடங்கள். (௯)

கரிகள் சேவக மொருபதி னாயிரங் கடுந்தேர்
விரியு நீளிடை யொருபதி னாயிரம் விசயப்
பரியி னெல்லையோ ரிருபதி னாயிரம் பையத்
துருவி னின்னமு முண்டுகொல் யோசனைத் தொகையே. (௧௦)

இவுளி வாயினு மால்கரிக் கரத்தினு மிழிந்து
திவளு நீர்மைசால் விலாழியுந் தானமுஞ் செறிந்து
குவளை யுண்கணார் நீத்தசாந் தணிமலர் கொண்டே
யுவள கந்தரு மகழிசென் றகன்கட லுறுமால். (௧௧)

வளமை மேதகு மிப்பெரு மகேந்திரம் வகுத்தன்
முளரி யண்ணலிங் கொருவனான் முடிந்திட வற்றோ
வொளிறு வாட்படை யவுணர்கோ னுடைய வண்டத்தி
னளவினான் முகர் யாரும்வந் திழைத்தன ராமால். (௧௨)

புரந்த ரன்றன துலகமு மொழிந்தபுத் தேளி
ரிருந்த வானமு மெண்டிசை நகரமும் யாவும்
வருந்தி யிந்நகர் சமைத்திட முன்னரே வண்கை
திருந்த வேகொலாம் படைத்தனர் திசைமுகத் தலைவர். (௧௩)

பொன்பு லப்படு துறக்கம்வான் மாதிரம் புவிகீழ்
துன்பில் போகமா ருலகென்பர் தொடுகடற் பெருமை
முன்பு காண்கலர் கோட்டகம் புகழ்தரு முறைபோ
லின்பம் யாவையு முளநக ரீதுபோ லியாதோ. (௧௪)

கறைப டைத்ததாட் கரிபரி யவுணர்தேர்க் கணங்க
ளறைப டைத்தவி னீண்டிய வண்டங்க ளனைத்து
முறைக டற்றொகை முழுவதுஞ் சூர்கொணர்ந் தொருங்கே
சிறைப டுத்திய போலும்வே றென்றிலை செப்ப. (௧௫)

ஐய பூழியு மாரகி லாவியு மாற்றி
நொய்ய வாகிய வணுக்களு நுழைவரி தெனினிற்
செய்ய விந்நக ராவண மெங்கணுஞ் செறிந்த
வெய்ய தேர்கரி யவுணர்தம் பெருமையார் விரிப்பார். (௧௬)

அள்ள் வேலைசூழ் மகேந்திர புரிக்கிணை யாகத்
தெள்ளி தாவொரு நகருமின் றுளதெனச் செபப
வெள்ள மின்றிய வண்டமோ ராயிரத் தெட்டி
னுள்ள சீரெலா மீதுபோ லொருபுரத் துளதோ. (௧௭)

கழிந்த சீர்த்திகொ ளிந்நகர் தன்னிடைக் கருவு
வழிந்து தொல்லுரு மாமழையின் மணிகிழ லாகி
யிழிந்து ளான்பெறு திருவெனப் பயன்பெறு தெவர்க்கு
மொழிந்த வேலைக டம்புகழ் கொள்வதிவ் வுவரி. (௧௮)

ஏறகு நேமிசூழ் மகேந்திர வெறுக்கையிவ் வுலகோ
ரார்க்கு மோர்பயன் பெற்றில தயிர்ப்பசி யருந்துங்
கார்க்கு ழாம்புரை யலகைசூழ் காளிமந் திரத்திற்
சீர்க்கொள் கற்பகம் பிறர்க்குத வாதமர் செயல்போல். (௧௯)

மறக்கொ டுந்தொழி லிரவியம் பகையழன் மடுப்பத்
துறக்க மாண்டது பட்டிமை யாகுமத் தொலலூர்
சிறக்கு மிந்நகர் நோக்கியே தன்னலந் தேய்ந்து
பொறுக்க ரும்பெரு நாண்சுடக் கரிந்தது போலாம். (௨௦)

துங்க மிக்கசூர் படைத்திடு மண்டமாத தொகையுட்
செங்க திர்த்தொகை யாங்கவன் பணியினுற் சென்று
பொங்கு தண்சுடர் நடாத்தினின் றென்னவிப் புரியி
லெங்கு முற்றன செழுமணிச் சிகரமெண் ணிலவே. (௨௧)

மாணி லைப்படு மெழுவகை யுலகினவைப் பென்ன
வேணி லைப்பெருஞ் சிகரிகள் செறிந்தன யாண்டுங்
கோணி லைக்கதி ருடுப்பிறா பதங்களிற குழுமி
நிணி லைத்தலம் பலவுள மாடங்க ணிரந்த. (௨௨)

நூறி யோசனை சேண்படு நீட்சியு நுவலு
மாறி யோசனைப் பரவையும் பெற்றவா வணங்க
ளேறு தேர்பரி களிறுதா னவாபடை யீண்டிச
சேற லாயிடை யருமையால் விசும்பினுஞ் செல்லும. (௨௩)

அடன் மிகுத்திடு தானவ ரகலிரு விசும்பிற்
கடிதி னிற்செல மதத்திகை காட்டுமா றுபப
நெடுமு கிற்கணந் தழுவுசூ ளிகைமிசை கிறவுங்
கொடிக ளொற்றிடப் போவன விரவிகொய் யுளைமா. (௨௪)

மேலு லாவிய படிகமா ளிகைசில மின்னா
மாலை தாழ்குழற் கிடுமகி லாவியான் மறைவ
சீல நீங்கிய வவுணர்தஞ் சீர்த்திக ளனைத்து
மேல வேயவர் பவத்தினு ளொடுங்குமா றென்ன. (௨௫)

அணிகு லாயகோ மேதக மரகத மாரந்
துணியு நீலம்வச் சிரம்வயி ரேரியந் துப்பு
நணிய பங்கயம் புருடரா கம்மெனு நவமா
மணிக ளாற்செய்து மிளிர்வன வரம்பில்பொன் மாடம். (௨௬)

இயல்ப டைத்தவெண் படிகத்தி னியன்றமா ளிகைமேற்
புயல்ப டைத்திடு களிமயில் வதிந்திடப் புடையே
கயல்ப டைத்தகண் ணியர்புரி யகிறபுகை கலப்ப
முயல்ப டைத்திடு மதியினைச் சூழ்தரு முகில்போல். (௨௭)

வளனி யன்றிடு செம்மணிப் பளிங்குமா ளிகைமே
லொளிறு பொற்றலத தரிவையர் வடிமிசைத் துறுதல்
வெளிய சேயன பங்கயப் பொகுட்டின்மீ மிசையே
யினிமி னங்கடேன் மாந்தியே வைகுமா றனைய. (௨௮)

தூய்ய வாலரி புனற்கிறை மண்ணியே தொகுப்பச்
செய்ய தீயவ னூன்களோ டவைபதஞ் செய்ய
மையன் மாதரோ டவுணர்க ளரம்பையர் வழங்க
நெய்ய ளாவுண்டி யுண்குவர் மறுசிகை நீக்கி. (௨௯)

துப்பு றுத்தன குஞ்சியங் காளையர் தொகையுஞ்
செப்பு றுத்துசீ றடிமினார் பண்ணையுஞ் செறிந்து
மெய்ப்பு றத்தியல் காட்சியுங் கலவியும் வெறுபபு
மெப்பு றத்தினு நிகழ்வன மத்னுல கிதுவே. (௩௦)

பூணு மாரமுங் கலாபமு மிழைகளும் பொன்செய்
நாணு மொற்றராற் பரதகையர் பாற்பட நல்கிப்
பேணி மற்றவர் விலக்கின நயந்தன பிறவு
மாணு மைந்தர்க டேறுவா ணுறுபார்த் தயர்வார். (௩௧)

துன்று தானவர் தெரியலின் மாதர்பூந் தொடையின்
மன்றன் மாளிகைச் சோலையி னிலஞ்சியின் மலரிற்
குன்ற மால்கரித் தண்டத்தின் யாழ்முரல் குழுவிற
சென்று சென்றென துணர்வுபோ லளிகளுந் திரியும். (௩௨)

மாறி லாதகூ ராணையால் வந்திடும வசந்த
னூறு தெண்கட லளவியே தண்டலை யுலவி
வீறு மாளிகை நூழையி னிடந்தொறு மெல்லத்
தேறல் வாய்மடுத் தோரென வசைந்துசென் றிடுமால். (௩௩)

மாட மீதமர் மடந்தையர் தம்முரு வனப்புக்
கூட வேபுனைந் தணிகிழற் காண்பது குறித்துப்
பாடு சேர்கர நீட்டியே பகலவற் பற்றி
யாடி நீர்மையி னோக்கியே யந்தரத் தெறிவார். (௩௪)

வன்ன மாடமே லாடவர் பரத்தைமை மகளி
ருன்னி யூடியே பங்கியீர்த் தடிகளா லுதைப்பப்
பொன்னி னுணறத் தமதுகை யெழிலியுட் போக்கி
மின்னு வாங்கியே யார்த்தனர் குஞ்சியை வீக்கி. (௩௫)

முழங்கு வானதி தோய்ந்தசின் மாளிகை முகட்டி
னழுங்க லென்பதை யுணர்கிலா மாதரா ரகல்வான்
வழங்கு கோளுட னுருமினைப் பற்றியம் மனையுங்
கழங்கு மாயெறிந் தாடுவ ரலமரக் கண்கள். (ந௬)

கண்டை மாளிகை மங்கையர் தஞ்சிறு ரிரங்க
வாண்டு மற்றவ ராமிவான் பற்றியா தவன்றேர்
பூண்ட மான்றொகை கொடுத்தலு மாங்கவன் போந்து
வேண்டி நின்றிட வாங்கியே யுதவுவார் மெல்ல. (ந௭)

நீடு மாளிகை மிசைவரு மாதர்கை நீட்டி
யீடு சாலுரு மேறுடன் மின்பிடித் திசைத்தே
யாடு கிங்கிணி மாலையா மைந்தருக் கணியா
வோடு கொண்டலைச் சிறுதுகி லாப்புனைந் துகப்பார். (ந௮)

பொங்கு மாமணி மேற்றலத் திரவிபோந் திடலு
மிங்கி தோர்கனி யெனச்சிறு ரவன்றனை யெட்டி
யங்கை பற்றியே கறித்தழ லுறைப்பவிட் டூங்கக்
கங்கை வாரிநீ ரூட்டுவார் கண்டநற் றாயர். (ந௯)

கண்டு வந்தனை வரும்புகழ் தஞ்சிறார் கலுழ
விண்டு வந்தனை செய்தெனத் தாழ்ந்தமே னிலததில்
வண்டு வந்தணைப் படுகதிர் கைம்மலர் வலிந்து
கொண்டு வந்தனை மாரிரங் காவகை கொடுப்பார். (௪0)

அஞ்சி லோதியர் மாளிகை மிசைச்சில ரகல்வான்
விஞ்சு தேவரை விளித்தலு மெய்யுறன் மறுப்ப
வஞ்சர் வஞ்சரென் றரற்றியவ் வானவ ரிசைய
நஞ்சி ருருட னூடுது மென்பர்நண் ணினர்க்கு. (௪௧)

பொருளின் மாளிகைப் படிற்றியர் புணர்வரென் றுன்னி
வரவு மஞ்சுவர் வராமையு மஞ்சுவர் மடவார்
கரவின் மேவுத லவுணர்கள் காண்பர்கொ லென்றும்
வெருவு கின்றன ரென்செய்வார் விண்ணெறிப் படர்வார். (௪௨)

மேனி லந்தனின் மங்கையர் சிறார்விடா திரங்க
வூன மில்கதிர் தேர்வர வவரையாண் டுய்த்து
வான கந்தனிற் சில்லிடை யேகிநம் மகவைப்
பானு வந்துநீ தருகென விடுக்குநர் பலரால். (௪௩)

கலதி யாகிய வவுணர்தம் மாதர்கால் வருடிச்
சிலதி யாரென வணங்கினே ரேவல்செய் கிற்பார்
சலதி யார்தரு முலகமேற் றெரிகுறிற் றவமே
யலதி யாவுள வேண்டியாங் குதவகின் றனவே. (௪௪)

ஐந்த வாகிய தருக்களு மணியுநல் லாவு
நந்து மம்புய நிதியமும் பிறவுமிந் நகரின்
மைந்தர் மாதர்க ளிருந்துழி யிருந்துழி வந்து
சிந்தை தன்னிடை வேண்டியாங் குதவியே திரியும். (௪௫)

மீது போகிய மாளிகைக் காப்பினுண் மேவு
மாதர் வானெறிச் செல்லுவோர் சிலர்தமை வலித்தே
காத லாற்பிடித் தொருசிலர் முறைமுறை கலந்து
போதி ராலென விடுப்பர்பின் னசமுகி போல்வார். (௫௬)

வேறு.

மேதாவி கொண்டகதிர் வெய்யவனை வெஞ்சூர்
செய்தான் வலிந்துசிறை செய்திடலின் முன்ன
மேதா மினங்கொலென வெண்ணியவ னென்றாழ்
வாதா யனங்கடொறும் வந்துபுக லின்றே. (௫௭)

தேசுற்ற மாடமுறை சீப்பவரு காலோன்
வாசப்பு னற்கலவை வார்புணரி கொண்கன்
வீசப்பு லர்த்தியிட விண்படரும் வெய்யோ
னாசற்ற தானவ ரமர்ந்திவ ணிருந்தார். (௫௮)

பால்கொண்ட தெண்கடன் மிசைப்பதுமை தன்னை
மால்கொண்டு கண்டுயிலும் வண்மையிது வென்ன
மேல்கொண்ட நண்பளித மேனிலம தன்கட்
சூல்கொண்ட காரெழிலி மின்னினொடு துஞ்சும். (௫௯)

வேறு.

குழலி னோதையு மெழால்களி னோதையுங் குறிக்கும்
வழுவில் கோட்டொடு காகள வோதையு மற்றை
முழவி னோதையும் பாடுந ரோதையு முடிவில்
விழவி னோதையுந் தெண்டிரை யோதையின் மிகுமால். (௬0)

மதனி ழுக்குறு மைந்தரு மாதரும் வனமா
மதனி ழுக்கிய வீதியில் வீசும்வண் கலவை
பதனி ழுக்குறச் சேதக மாகுமீன் பலவும்
பதனி ழுக்கிய வார்தினம் புனைந்தெறி பணிகள். (௬௧)

அளப்பில் வேட்கையங் கொருவர்கண் வைத்து மற்றதனை
வெளிப்ப டுக்கிலர் மெலிதலுங் குறிகளே விளம்ப
வொளிப்ப தென்னுளம் பகரென வாற்றலா துடைந்து
கிளிப்பெ டைக்கிருந் தொருசில மடந்தையர் கிளப்பார். (௬௨)

குருளை மான்பிணித் திளஞ்சிறு ரூர்ந்திடுங் கொடித்தே
ருருளை யொண்பொனை மணித்தலங் கவர்ந்துகொண் டுறுவ
வெருளின் மாக்களை வெறுப்பதென் முனிவரும் விழைவார்
பொருளி னாசையை நீங்கினர் யாவரே புவியில். (௬௩)

விழைவு மாற்றிய தவத்தின ரேனுமிவ் வெறுக்கை
மொழியி னோரினு மவுணரா கத்தவ முயல்வா
ரொழியு மேனையர் செய்கையை யுரைப்பதென் னுலகிற்
கழிபெ ரும்பக [illegible]ற்றவ ரேயிது காண்பார். (௬௪)

குழவி வான்மதிக் கிம்புரி மருப்புடைக் கொண்மூ
விழுமெ னச்சொரி தானநீ ராறுபோ லேகி
மழலை மென்சிறு ராவணத் தாடும்வண் சுண்ணப்
புழுதி யீண்டலின் வறப்பவான் கங்கையும் புலரா. (௬௫)

நங்கை பூண்பய னாகவுந் தூயதெய் வ கடனீ
ரங்கண் மாநகர்ப் பரிசன மாடவு மணைந்து
துங்க மேனிலை மாளிகை யாவணஞ் சோலை
யெங்கும் வாவியும் பொய்கையும் பிறவுமா யீண்டும். (ருசு)

வில்லி யற்றுவோர் வாட்படை யியற்றுவோர் வேறு
மெல்லை யில்படை யுள்ளவு மியற்றுவோ ரிகலான்
மல்லி யற்றுவோர் மாயம தியற்றுவோர் மனுவின்
சொல்லி யற்றுவோர் கண்ணுறு புலந்தொறுந் தொகுமால். (ருஎ)

நாடி மேலெழுத் தசையிலா துலறியே நரையாய்க்
கோடு பற்றிமூத் தசைந்திடு வோரையுங் கூற்றால்
வீடு வோரையும் பிணியுழப் போரையு மிடியால்
வாடு வோரையுங் கண்டில மிதுதவ வலியே. (ருஅ)

கன்னன் மாண்பயன் வாலனை நெய்கடுந் தேற
றுன்னு தீயபா ளக்கர்தம் பேருருச் சுருக்கி
மன்ன னாணையா லிந்நகர் மனைதொறு மருவிப்
பன்னெ டுங்குள னாகியே தனித்தனி பயில்வ. (ருகூ)

அட்ட தேறலு மடாதமை தேறலு மருந்திப்
பட்டு வார்துகில் கீறியே தம்மொடு பறைந்து
விட்ட நாணினோ ரொருசில மடந்தையர் வியன்கை
கொட்டி யாவரும் விழைவுறக் குரவையாட் டயர்வார். (சுா)

திலக வாணுதன் மாதரா டவர்சிறு வரையி
னலகி லாமுறை புனைதலி னணிந்தணிந் தகற்று
மிலகு பூண்டுகின் மாலைகந் தம்பிற வீண்டி
யுலகில் விண்ணக ரெனச்சிறந் தாவண முறுமே. (சுக)

கொய்த லர்ந்தபூ நித்தில மணியுடன் கொழித்துப்
பொய்த லாடுவார் முற்றிலா லெற்றுபொற் பூழி
யெய்த லானதிந் நகரள வோகட லிகந்து
நெய்த லங்கரைக் கானலை யடைந்துமே னிமிரும். (சுஉ)

சுந்த ரங்கெழு செய்யவெண் மலர்களாற் றொடுத்த
கந்து கங்களைச் சிறுவர்கள் கரங்களி னேந்தி
யந்த ரம்புக வெறிதலு மாங்கன மேகி
வந்து வீழுமா லிருகதிர் வழுக்கிவீழ் வனபோல். (சுங)

கழக மீதுமுன் போந்திட முதுகணக் காயர்
குழகு மென்சிறார் தனித்தனி வந்தனர் குறுகிப்
பழகு கற்பினால பயின்றனர் மாலையிற் பட்ட
வழகு சேர்மதிப் பின்னெழு கணங்கண்மொய்த் தனையார். (சுச)

கள்ளி றற்றலாற் களிப்பவர் தேறலைக் கரத்திற்
கின்னை யாணினுக் கூட்டியே காமநோய் கிளர்த்தி
யுள்ள மோடிய சேவலு மிரங்கவோ திமத்துப்
புள்ளின் மென்பெடை மீமிசை கலந்திடப் புணர்ப்பார். (சுரு)

உரத்தின் முன்னரே வௌவிவந் திட்டிய வும்பர்
சிரத்தின் மாமுடித் திருமணி பறித்தொரு சிலவ
ரரத்த மேயதம் பங்கியிற் பஞ்சிக ளழுத்தும்
பரத்தை மாரடிப் பாதுகைக் கணிபெறப் பதிப்பார். (சுக)

தேவி மார்பலர் வருந்தவு மனையர்பாற் சேரா
ராவி போவதா நினைகில ராகியே யயலார்
பாவை மார்தமை வெஃகியே பட்டிமை நெறியான்
மேவு வார்சிலர் காண்பதே யிதுவுமென் விழியே. (சுஎ)

நெருக்கு பூண்முலை யியக்கர்தம் மங்கையர் நெஞ்ச
முருக்கு மேருடை யமரர்தம் மங்கைய ருளத்தி
னிரக்க நீங்கிய வவுணர்தம் மங்கைய ரேனை
யிரங்கர் மங்கையர் கணிகைமங் கையர்களா யமர்வார். (சுஅ)

கந்த மானபல் களபமுஞ் சுண்ணமுங் கமழும்
பந்து மாலையுஞ் சிவிறிநீ ரொடுபரத தையர்கண்
மைந்த ரோடெறிந் தாடல்யா ருளத்தையு மயக்கு
மிந்த வீதிகொல் லுருவுகொண் டநங்கன்வீற் றிருத்தல். (சுகூ)

பொன்னி னன்னமும் பதுமரா கம்புரை புறவுஞ்
செந்ந லங்கிளர் மஞ்ஞையுஞ் சாரிகைத திறனும்
பன்னி றங்கெழு புள்ளின மினையன பலவு
மின்ன தொன்னகர் மங்கையர் கரந்தொறு மிருப்ப. (எ0)

பண்டு வேட்டவர் பின்முறைப் பாவையர் பரிவிற்
கண்டு பின்வரை மங்கையர் கானம தியற்றிக்
கொண்ட வில்வழிப பரத்தையர் கணிகையர் குழாத்துள்
வண்டு பூவுறு தன்மைசென் றுடவர் மணபபார். (எக)

தக்க மெல்லடிப் பரிபுர முழவுறத தனமா
மிக்க தாளங்க ளொத்தமென் புள்ளிசை விரவ
விக்கு வேளவை காணிய பூந்துகி லெழினி
பக்க நீக்கியே மைந்தரோ டாடுவார் பலரே. (எஉ)

பாட்ட மைந்திடு காளைய ரணிநலம் பாரா
வேட்டு மங்கைய ரொருசிலர் தமதுமெய் விளர்ப்பக்
கூட்ட முன்னியே பன்னிறக் கலவையுங் குழைத்துத்
தீட்டு வாரவ ருருவினை வியன்கிழி திருத்தி. (எங)

சுற்று விட்டலர் தாருடை வயவர்தொல் லுருவிற்
பற்று விட்டிட னுளதையும் விட்டுமென் பார்ப்பைப்
பெற்று விட்டிலாப் பெடைமயி றழீஇததுயர் பேசி
யொற்று விட்டன ரொருசில ராறுபார்த துழல்வார். (எச)

அகன்ற கொண்கரை நனவினெக் காலமு மகத்திற்
புகன்று மட்டித்த வெம்முலைச் சாந்தொடும் புலர்வார்
பகன்றை போன்முரல் சிலம்படிப் பாவையர் பல்லோர்
முகன்ற னிற்கரு மணிகளிற் சொரிதர முத்தம். (எரு)

மங்கை மார்சில ராடவர் தம்மொடு மாடத்
துங்க மேனிலத் திடைப்படு சேக்கையிற் றுன்னி
வெங்கண் மெல்லிதழ் வேறுபட் டணிமுகம் வியர்ப்பக்
கங்கு லொண்பக லுணர்கிலர் விழைவொடு கலப்பார். (௭௬)

மறிகொள் சோரிநீர் பலியுட ஞெக்கிநாண் மலர்தூ
யிறைகொ ளில்லிடைத் தெய்வதம் வழிபட லியற்றிப்
பறைக றங்கவக் கடவுளை யாற்றுறப் படுத்தி
வெறிய யர்ந்துநின் றாடுவ ரளப்பிலர் மின்னார். (௭௭)

அலங்கல் வேல்விழி மாதரு மைந்தரு மமர்ந்த
பொலங்கொண் மாடமே லாடுறு பெருங்கொடி பொலிவ
மலங்கு சூழ்தரு தெண்டிரைப் புணரியில் வைகுங்
கலங்கண் மேவிய கூம்பெனக் காட்டிய வன்றே. (௭௮)

புரசை வெங்கரி புரவிதேர் பொருபடைத் தலைவர்
பரிச னங்களா தோரணர் வாதுவர் பரவ
முரச மேமுத லியமெலா முன்னரே முழங்க
வரச வேழமா வெண்ணில கோயில்வந் தடைவ. (௭௯)

கள்ளு றைத்திடு மாலையம் பங்கியர் கமஞ்சூல்
வள்ளு றைப்புயன் மேனிய ரொருசிலர் வார்வி
லொள்ளு றைப்படை பிறவினிற் கவரிதூங் குறுத்துத்
தள்ளு தற்கரும் வயமுர சறையமுன் சார்வார். (௮௦)

அறுகு வெம்புலி வலியுடை மடங்கன் மானுமாச
சிறுகு கண்ணுடைக் கரிமரை யிரலையித திறத்திற்
குறுகு மாக்களைப் படுத்தவற் றான்வகைக் குவால்கண்
மறுகு ளார்பெறப் பண்டிகொண் டளப்பிலோர் வருவார். (௮௧)

மஞ்சு லாவரு சிகரியுஞ் சூளிகை வரைப்பும்
விஞ்சு மேனில வடுக்கமுஞ் சோலையும் வெற்புஞ்
சஞ்ச ரீகமா ரோடையும் வாவியுந் தடமு
மெஞ்ச லில்லதோர் மாடங்க ளெங்கணு முளவே. (௮௨)

எற்றி முன்செலு முரசினர் கம்பிய ரெல்லிற்
பற்று தீபிகைச் சுடரினர் மாலைதாழ் படைய
யொற்றை முக்குடை யிருபுடைக் கவரிய ருலப்பில்
கொற்ற வீரரீண் டளப்பிலோர் வந்தனர் குலவி. (௮௩)

மண்ப டைத்திடு தவமெனு மகேந்திர மலிசீ
ரெண்ப டைத்தகண் ணிரண்டினர் காணுத லெளிதோ
விண்ப டைத்தவற் காயினு மமையுமோ மிகவுங்
கண்ப டைத்தவற் கன்றியே கண்டிட லாமோ. (௮௪)

வரம்பில் கட்புலங் கொண்டவ ரேனுமற் றிவ்வூர்
விரும்பி யித்திரு நோக்கினு முளத்தன்மை வருமோ
வரும்பு யற்குழு வைகலும் பருகினு மதனாற்
பெரும்பு னற்கட லானது முடிவுபெற் றிடுமோ. (௮௫)

கழியு மிந்நக ராக்கமோ கரையில விவற்றுள்
விழிக ளெண்ணில பெற்றுளா ராங்கண்ட வெறுக்கை
மொழிவ ரென்னினு நாவதொன் றுன்முடிந் திடுமோ
வழிவி லாயிர கோடிநாப் பெறுவரே லறைவார். (௮௬)

வாழ்வின் மேதகு மகேந்திரப் பெருமித வளத்தைத்
தாழ்வி லாநெறி கண்டனர் தாமுவெண் ணிலவாற்
சூழ்வி னூடியே பகரினு மெய்யெலாந் துதையக்
கேள்வி மூலங்க ளில்லவ ரெங்ஙனங் கேட்பார். (௮௭)

ஆயி ரம்பதி னாயிரங் கோடிநா வளவி
லாயி ரம்விழி யாயிர மாயிரஞ் செவிக
ளாயி ரமபுந்தி கொண்டுளோர்க் கல்லதிவ் வகன்சீ
ராயி ரம்யுகங் கண்டுதேர்ந் துரைப்பினு மடங்கா. (௮௮)

பொயத்த லின்றியே யிந்நகர்த் திருவையைம் புலத்துந்
துய்த்தன் முன்னிய விழைந்துகொ ளேற்றிடுந் தொடர்பாற்
பத்து நூறுட னாயிரங் கோடியாப பகரு
மித்தொ கைச்சிரங் கொண்டன ரீண்டுளா ரெவரும். (௮௯)

முன்ன வாக்குமுன் னாகிய வறுமுக முதல்வன்
றன்ன ருட்டிறத தெல்லையில் பேருருச் சமைந்தே
யிந்ந காததிரு யாவையுங் காண்குவ னின்னே
யொன்ன லாக்கெனைக் காட்டுத றகாதென வொழிந்தேன் (௯௦)

இனைத்த வாகிய பெருவளி மெல்லையின் றிவற்றை
மனததி னூடினும் பறபகல் செல்லுமான் மனக்கு
நுனிதது நன்றுநன் றுய்ந்திவை முழுவது நோக்க
நினைத்து ளேனெனி னிங்கிது பொழுதினி னிரம்பா. (௯௧)

அம்பு யாசனன் றெளிகிலா வருமறை முதலைக்
கும்ப மாமுனிக் குதவியே மெய்யருள் கொடுத்த
வெம்பி ரான்பணி புரிகிலா திந்நக ரிருஞ்சீர்
நம்பி நாடியே தெரிந்துபா ணிபபது நலனே. (௯௨)

என்று முன்னியே யறுமுகன் றாதுவ னிமயக்
குன்ற மன்னகீழ்த திசைமுதற கோபுரக் குடுமி
நின்று மாநகர் வளஞ்சில நோக்கியே நெடுஞ்சீர்
துன்று சூருறை திருநக ரடைவது துணிந்தான். (௯௩)

வனைந்த மாளிகை யொளியினி லிடைப்படு மறுகிற்
கனைந்து செற்றியே பரிசனம் பரவுதல் காணு
நினைந்த சூழ்ச்சியான் கீழ்த்திசைச் சிகரியை நீங்கி
நணந்த லைபபட நகரதது விண்ணிடை நடந்தான். (௯௪)

வான மாநெறி நீங்கியே மறைகளிற் றுணியா
ஞான நாயக வறுமுக னருள்கொடு நடந்து
தூநி லாவுமி ழெயிறுடைச் சூர்முதற் சுதனும்
பானு கோபன துறையுளை யெய்தினன் பார்த்தான். (௯௫)

பாய்ந்து செஞ்சுடர்ப் பரிதியைப் பற்றினே னுறையு
ளேந்தல் காணுறீஇ விம்மிதப் பட்டவ ணிகந்து
காந்து கண்ணுடை யங்கிமா முகனகர் கடந்து
சேந்த மெய்யுடை யாடக னுறையுளுந் தீர்ந்தான். (சசு)

உச்சி யையிரண் டிருபது கரதல முடைய
வச்சி ரப்பெரு மொய்ம்பினோன் மாளிகை வரைப்பு
மச்செ னத்தணந் தேகிமூ வாயிர ராகு
மெச்ச மெய்திய மைந்தர்தம் மிருக்கையு மிகந்தான். (சஎ)

உரிய மந்திரத் துணைவரிற் றலைமைபெற் றுறையுந்
தரும கோபன்றன் கடிமனைச் சிகரமேற் றங்கிச்
சுரரும் வாசவன் மதலையு மவுணர்கள் சுற்றப்
பரிவு கொண்டமர் சிறைக்கள நாடியே பார்த்தான். (சஅ)

கறைய டித்தொகை பிரிதலுங் கயமுனி கவர்ந்து
மறையி டத்தினில் வேட்டுவ ருய்ப்பவை குவபோற்
பொறையு டைத்துய ரிந்திரன் போந்தபின் புல்லார்
சிறையி லுற்றவர் செய்கையிற் சிறிதுரை செய்வாம். (சகு)

ஆ திருவிருத்தம் - ருருசு.

---

வசனம்.

வீரவாகுதேவர் அந்நகரவாயிலையடைந்து, அந்நகரச்சிறப்பையெல்லாம் நோக்கி, இந்நகரச்சிறப்பை நோக்கவா நாம் வந்ததென்று, அந்நகரத்தின் வீதிவழியே சென்று பாநுகோபன் வீட்டைக்கடந்து, அக்கினிமுகன் இடத்தையுந்தாண்டி, இரணியன்வீட்டையுங் கடந்து, வச்சிரவாகுமாளிகையையுந் தாண்டி, மூவாயிர மைந்தர் வீடுகளையுங்கடந்து, மந்திரித்தலைவனாகிய தருமகோபன் வீட்டையுந் தாண்டி, சயந்தனும் தேவர்களும் சிறையிடப்பட்டிருக்குமிடத்தைப்பார்த்தனர். அச்சிறைக்களத்திலிருக்கும் சயந்தன்முதலியோரது செய்கையிற் சிறிது கூறு கின்றனம்.

நகர்புகுபடலம் முற்றிற்று.

---

# சயந்தன்புலம்புறுபடலம்.

பரஞ்சுடர் நெடுங்கணை படுத்த பாயலில்
வருஞ்சசி யனையதோர் வானு தற்சசி
தருஞ்சிறு குமரனுஞ் சயந்த னவ்விடை
யருஞ்சிறை யிருந்தன னமரர் தம்மொடும். (க)

வாலிதா மமரர்சூழ் வைப்பி னிந்திரன்
கோலமா கியதனிக் குமரன் வைகுதன்
மேலைநா ளமுதெழும் வேலை தன்னிடை
நீலமா முகிலுறை நீர்மை போலுமே. (உ)

மழைபுரை யவுணர்சூழ் வைப்பில் வாலொளி
தழுவிய வமரருட் சயந்தன் மேயினன்
கழிதரு பணிபல கவரச் சோர்தரு
முழுமதி யதனிடை முயலுற் றென்னவே. (௩)

வென்றிவில் லியற்றிய விஞ்சை நீர்மையாற்
கன்றிய கரமெனக் காவற் சாலையிற்
பொன்றிகழ் வல்லிகள் பூண்டு பற்பக
றன்றுணைத் தாள்களிற் றழும்பு சேர்ந்துளான். (௪)

இயற்படு மானமு மிகலு நாணமு
மயற்பட வெம்பழி யனலஞ் சுற்றிட
வுயிர்ப்பெனு மோதைநின் றுயிர லைத்திடத்
துயர்ப்பெரும் பரவையூ டழுந்திச் சோருவான். (௫)

அண்டருஞ் சிறையினுல் வீடு மல்லதே
லெண்டரு முகம்பல விடருண் மூழ்கலின்
மண்டுதொல் பழியற வலிது துஞ்சுமா
றுண்டநல் லமுதினு லவையொ ழிந்துளான். (௬)

தணிப்பரும் வெஞ்சினத் தருவர் மன்னவன்
பணிப்படு சிறைக்களம் பட்டுத் தம்முட
றுணிப்புறு வோரெனத் துயர்கொண் டோர்கணங்
கணிப்பரு முகங்களாக் கழித்து வைகுவான். (௭)

தேவியன் மரகதந் தெளித்துத் தீட்டிய
வோவிய வுருவமா சுண்ட தன்மையா
னுவியம் புனலுறு தமருங் காவியம்
பூவியன் மென்றொடை புலர்ந்த தேயனன். (௮)

வியலுக நூறுடன் மிக்க வெட்டினு
ளியலுறு சிறுவரை யெனினுந் துஞ்சுமேன்
மயல்சிறி தகலுமான் மரபின் வைகலுந்
துயில்கில னுதலா லுறுத துன்பினன். (௯)

நெஞ்சழி துன்பிடை நீட வைகலிற்
றுஞ்சலன் வலிதுயிர் துறப்பு மாற்றல
னெஞ்சுமோ ரிறைவரை யிமையுங் கூட்டலன்
விஞ்சிய தவந்துயர் விளக்கு மாங்கொலோ. (௧0)

இலங்கிய மரகதத் தியன்று பொன்குலாய்
நலங்கிளர் தன்வனப் பிழந்து நாடொறுஞ்
சலங்கெழு மவுணர்க டமைக்கண் டஞ்சியே
கலங்கின னுய்வகை யாதுங் காண்கிலான். (௧௧)

சுந்தர மரகதத் தனது தொல்லுரு
வெந்துய ருழத்தலின் வெய்து யிர்ப்பென
வந்தெழு புகைபட மறைந்து கட்புனல்
சிந்தின வுட்டுடன் றிகழத் தோன்றுமால். (௧௨)

முழுதுறு தன்றுயர் முன்னி முன்னியே
யிழுதைய ரவுணரு மிரங்க வேங்குறு
வழுதிடுங் காப்பினோ ரச்சஞ் செய்தலும்
பழுதுகொ லென்றுவாய் பொத்தும் பாணியால். (கங)

இந்திரன் சசியொடு மிருந்த சூழல்போய்த்
தந்தனர் பற்றினர் தமரெ னச்சிலர்
முந்துறு காவலோர் மொழிந்த பொய்யுரை
யந்தம தடையுமுன் னயர்ந்து வீழுமே. (கச)

ஐந்தரு நீழலை நினைக்கு மாய்மலர்
தந்தமென் பள்ளியை யுன்னுந் தானெனப்
புந்திகொண் மங்கையர் புணர்ப்பை யுட்கொளு
மிந்திரப் பெருவள மெண்ணிச் சோருமே. (கரு)

தன்னிணை யில்லதோர் தருவி னீழலு
ணண்ணலங் துய்த்தியா நாளு மின்புறும்
பொன்னகர் பூழியாய்ப் போங்கொ லோவெனா
வுன்னிடுந் தொன்மைபோ லுறுவ தென்றெனும். (கசு)

ஈண்டையி லவுணர்கோ னேவத் தானைகள்
சேண்டொடர் துறக்கமேற் செல்ல நாடியே
காண்டகு தம்முருக் கரந்து போயினார்
யாண்டைய ரோவெமை யீன்று ளாரெனும். (கஎ)

ஏயின துறக்கநா டிழிந்து தொல்லைநாட்
டாயொடு பயந்துள தந்தை பாரகம்
போயின னெனச்சிலர் புகலக் கேட்டனா
னாயிடைப் புகுந்தன வறிகி லேனெனும். (கஅ)

அண்டர்க ளொருசில ரயர்வு கூறவுட்
கொண்டன ரேகினர் குறுகி யெந்தையைக்
கண்டன ரேகொலோ கலந்து ளார்கொலோ
விண்டன ரேகொலோ விளைவெ னோவெனும். (ககூ)

சீகர மிக்கசூர் செயிர்த்துச் செய்திடு
மாகுல முழுவது மறைய வம்மையோர்
பாகம துடையநம் பரமன் மால்வரைக்
கேகினா னேகொலோ வெந்தை யென்றிடும். (உ0)

பொருந்தலர் கண்ணுறாப் பொருட்டுத் தம்முருக்
கரந்தன ரோவழீஇக் குரவர் கள்வர்பாற்
பொருந்தின ரேகொலோ புவன மெங்குமாய்த்
திரிந்தன ரேகொலோ தெளிகி லேனெனும். (உக)

மாண்கிளர் சூரபன் மாவி னேவலா
லேண்கிள ரவுணர்கள் யாயைத் தந்தையை
நாண்கொடு பிணித்திவ ணல்கப் போயினார்
காண்கில ரேகொலோ கரந்த வாறெனும். (உஉ)

அன்புடை யம்மனை யத்த னீங்கிவர்
வன்புடை யவுணர்கள் வரவு காண்பரேற்
றன்புடை மனத்தராய்த் துளங்கி யேங்கியே
யென்படு வார்கொலோ வறிகி லேனெனும். (௨௩)

பொன்னகர் கரிந்ததும் புதல்வ னுகுமென்
றன்னையிம் முதுநகர்த் தந்து தானவர்
துன்னருஞ் சிறையிடு துயருங் கேட்டபி
னென்னினைந் திரங்குமோ வீன்ற தாயெனும். (௨௪)

பன்னெடு மாயைகள் பயின்ற தானவ
ரன்னையொ டத்தனை யாய்ந்து பற்றியென்
முன்னுறக் காண்டகு முறையி னுய்ப்பினு
மென்னுயிர் பின்னரு மிருக்குங் கொல்லெனும். (௨௫)

ஆற்றருஞ் செல்லலு ளழுந்தும் பான்மையான்
மேற்றிகழ் பரஞ்சுடர் விமலற் போற்றியே
நோற்றனர் முத்தியி னுழைகுற் றூர்கொலோ
பேற்றின ரிருந்தசொற் பிறந்த தில்லெனும். (௨௬)

தீங்கதிர்ப் பகையொடு செருமு யன்றநாட்
டாங்கியெற் கொண்டிழித் தந்த மிற்றிட
வாங்கனம் வீழ்ந்ததா லதற்கு மேற்பட
யாங்குசென் றதுகொலோ யானை யென்றிடும். (௨௭)

பிறப்புறு வைகலைத் தொட்டுப் பின்னரே
யிறப்புறு நாள்வரை யாவர்க் காயினு
முறப்படு துய்ப்பெலா மூழி னூற்றமால்
வெறுப்பதென் னவுணரை வினையி னேனெனும். (௨௮)

தாவறு தொன்னகர் விளியத் தந்தைதா
யாவியொ டிரிந்திட வளிய ஞேர்மகன்
வீவருஞ் சிறைப்பட மேலை நாட்புரி
தீவினை யாவதோ தெளிகி லேனெனும். (௨௯)

துப்புறழ் சடையினுன் சூரற் கீறிலா
வப்பெரு வரத்தினை யளித்த லாலவன்
மெய்ப்பட விளிகிலன் வீடுஞ் செய்கில
னெப்பொழு திச்சிறை தீரு மென்றிடும். (௩௰)

மட்டறு வெறுக்கையு நகரும் வாழ்க்கையும்
விட்டனர் கடந்தனர் மேலை யோரென
வுட்டெளிந் தகன்றில னுவர்பி ணித்திடப்
பட்டன னேகொலோ பாவி யேனெனும். (௩௧)

மாற்றல னிவ்வுயிர் வசையு ருவகை
போற்றலன் குரவர்பாற் புகுந்த புன்கணேர்
தேற்றலன் றமியனுந் தெளிகி லன்சிறை
யாற்றல னாற்றலை யைய கோவெனும். (௩௨)

துறந்ததோ பேரறந் தொலையுந் தீப்பவஞ்
சிறந்ததோ மாதவப் பயனுந் தேய்ந்ததோ
குறைந்ததோ நன்னெறி கூடிற் றேகலி
யிறந்ததோ மறைசிவ னில்லை யோவெனும். (ஙங)

கூடலர் வருத்தலிற் சூரவர் தங்களைத்
தேடினர் விரைவுடன் சென்ற தேவர்போ
லோடினர் புகாவகை யொழிந்து ளோரையும்
வீடருஞ் சிறையிடை வீட்டி னேனெனும். (ஙச)

அந்தியின் மறைமொழி யயர்த்து வைகினன்
சந்தியில் வினைகளுந் தழுவு மோம்பல
னெந்தையை வழிபடு மியல்பு நீங்கினன்
முந்தையி னுணர்ச்சியு முடிந்து ளேனெனும். (ஙரு)

மெய்யுயி ரகன்றிட விளிகி லேனெனி
னெய்யுறு மலக்கணித் தினிது மேவலன்
வையுறு நெடும்புரி வடிவம் வெந்தெனப்
பொய்யுடல் சுமந்தனன் புலம்புற் றேனெனும். (ஙசா)

சொல்லுவ தென்பிற தொல்லை வைகலின்
மெல்லென வாற்றிய வினையின் பான்மையா
லல்லுறழ் மிடற்றினெம் மடிக ளேயெமக்
கெல்லையி லித்துய ரியற்றி னானெனும் (ஙஎ)

ஆவியு முலகமு மனைத்து மாகியு
மோவியுங் கருணையி னுருக்கொண் டாடல்செய்
தேவர்க டேவனுஞ் சிவன்மற் றல்லதை
யேவரென் குறையுணர்ந் திரங்கு வாரெனும். (ஙஅ)

பெறலருந் திருவெலாம் பிழைத்துச் சூருயி
ரறுவது மவுணர்க ளவிந்து மாய்வதுஞ்
சிறையிது கழிவதுந் தீர்கி லாவசை
யிறுவது மொருபக லெய்து மோவெனும். (ஙகூ)

நூறெருடர் கேள்வியோர் நுணங்கு சிந்தைசேர்
கூறுடை மதிமுடிக் குழகன் றன்னருட்
பேறுடை யேனெனிற் பெருந்து யர்க்கட
லேறுவன் வினையினேற் கில்லை கொல்லெனும். (ச0)

இத்திற மளப்பில வெண்ணி யெண்ணியே
மெய்த்துய ருழந்துவெய் துயிர்த்து விம்மியே
யத்தலை சுற்றிய வமரர் யாவருந்
தத்தமி லிரங்குறச் சயந்தன் வைகினான். (சக)

கண்டக னுதாவகன் கராளன் மாபலன்
சண்டக னிசங்கனே சங்க னாதியா
வெண்டகு மவுணர்க ளெண்ணி லோர்குழீஇக்
கொண்டனர் சிறைக்களங் குறுகி யோம்பினார். (சஉ)

ஆயதோர் காப்பினோ ராறுமு கத்தனி
நாயகன் றாதுவ னனுகு மப்பக
லேயுறு சயந்தனை யிமைப்பி லாரொடு
காயெரி யாமெனக் கனன்று சுற்றினார். (௪௩)

வேறு.

மன்னா நங்கோன் றன்பணி யில்லா மகவேந்து
மின்னா டாளும் யாண்டுறு கின்றார் விரைவாகிச்
சொன்னா லுய்வீ ரல்லதும் மாவி தொலைவிப்பே
முன்னா ளேபோ லெண்ணலி ருண்மை மொழிகென்றார். (௪௪)

என்னுங் காலைக் கேட்ட சயந்த னெம்மாயு
மன்னும் வானின் றோடின கண்டா மற்றன்னோர்
பின்னங் குற்ற தன்மையு மோராம் பிணிநோயுட்
டுன்னூர் தீயெம் யாவ துரைத்துஞ் சூழ்ந்தென்றான். (௪௫)

விண்டோய் மன்னன் முன்னொரு நாண்மெல் வியறன்னைக்
கொண்டே போனா னின்னுழி யென்று குறிக்கொள்ளேங்
கண்டோ மல்லங் கேட்டில முள்ளங் கழிவெய்தப்
புண்டோய் கின்றோ மென்சொல்வ தென்றார் புலவோர்கள். (௪௬)

சொற்றா ரிவ்வா றன்னது போழ்திற் றுணிவெய்தி
யுற்றார் போலு மிங்கிவ ரெல்லா முளமொன்றி
யெற்றா லுண்மை யோதுவ ரின்னே ரெனவெண்ணாச்
செற்றா ராகுங் காவலர் துன்பஞ் செய்கின்றார். (௪௭)

வென்னஞ் சென்னக் காயெரி யென்ன மிகுதீஞ்சொன்
முன்னஞ் சொற்றே வைவர் தெழிப்பர் முரணோடிங்
கன்னங் செல்லத் தோமர முய்ப்பர் கடைகிற்பார்
சின்னஞ் செய்வார் போலுடன் முற்றுஞ் சேதிப்பார். (௪௮)

கண்டந் துண்டஞ் செய்திடு மங்கங் கடிதொன்றிப்
பிண்டந் தன்னிற் கூட வெகுண்டே பேராற்றல்
கொண்டங் கையால் வாள்கொடு மார்பங் குடைகிற்பார்
தண்டந் தன்னன் மோதுவ ரன்னோர் தலைகீற. (௪௯)

இத்தன் மைத்தாக் காவலர் யாரு மெண்ணில்லா
மெய்த்துன் பத்தைச் செய்திட மைந்தன் விண்ணோர்தங்
கொத்துந் தானு மாற்றல னாகிக் குலைவெய்தி
நித்தன் றன்னை யுன்னி யரற்றா நிற்கின்றான். (௫௰)

சிற்றத் துப்போர் பல்படை கொண்டே செறுபோழ்து
மாற்றத் துன்பம் பட்டத லான்மெய் யழிவாகி
யீற்றுத் தன்மை சேர்ந்திலன் விண்ணோ ரிறைமைந்தன்
கூற்றிற் பட்டுச் செல்ல லுழக்குங் கொடியோர்போல். (௫௧)

நெஞ்சினில் வாலறி வெய்தின ரைம்புல நெறிநின்று
மெஞ்சிய மேல்வினை பெற்றில தேயென விறும்வண்ணந்
தஞ்செயல் வெய்யோர் செய்யவு மைந்தன் றமரோடுந்
துஞ்சில னாறும் பெற்றில னுற்றான் றுயரொன்றே. (௫௨)

மாடே சூழ்வார் தம்மொடு மைந்தன் சிறைபுக்கான்
காடே போனு னிந்திர னேனோர் கவலுற்றார்
பாடே விண்ணோர் தம்பத மூக்கட் பரனல்கும்
வீடே யல்லாற் றுன்பறு மாக்கம் வேறுண்டோ. (ருக)

அந்தா வாளந் தோமர மெஃக மடுதண்ட
முந்தா வுற்ற பல்படை யாவு முரிவெய்தச்
செந்தார் மார்பிற் காவலர் கையுந் திறலெஞ்ச
நொந்தா ரின்னு செய்வது நீத்தார் நுவல்கின்றார். (ருச)

வீவார் பின்னு ளல்லது வேறோர் வினையத்தாற்
சாவா ரெஞ்சார் பேரமிர் துண்டார் தவமிக்கார்
நோவார் நாமிங் காற்றிய பாலா னேய்நொந்து
மாவா யாதுஞ் சொற்றில ரென்றற் புதமுற்றார். (ருரு)

இன்னோர் யாரு மைந்தனை வானோ ரினமோடு
மெய்ந்நோ வாகும் பாங்கி னலைத்த வினையாலே
கைந்நோ வெய்தி வன்மையு நீங்கிக் கவலுற்றார்
முன்னோர் தம்பாற் செய்த துடன்சூழ் முறையேபோல். (ருசு)

வேறு.

அத்தகைய காவ லவுண ரவர்க்கணித்தாய்
மொய்த்தொருசா ரீண்டி முறைநீங் கலர்காப்ப
வெய்த்த வமரருட னிந்திரன்சேய் பண்ணவரு
ளுத்தமனுங் கண்ணுதலை யுன்னிப் புலம்புறுவான். (ருஎ)

வந்திப் பவர்பவங்கண் மாற்றுவோ யெத்தேவர்
சிந்தைக்கு மெட்டாச் சிவனே செழுஞ்சுடரே
யிந்தப் பிறவி யிடருழப்பச் செய்தனையோ
வந்தித்த நின்புணர்ப்பை யாரே கடந்தாரே. (ருஅ)

கைந்நா கத்துக்குங் கயவாய்க்கு நாரைக்கும்
பைந்நா கத்துக்கும் படருஞ் சிலந்திக்கும்
பின்னு மியவுயிர்க்கும் பேருண்முன் செய்தனையா
லென்னு மகனே யெமக்கே னருளாயே. (ருகூ)

கங்கை முடித்தாய் கறைமிடற்றாய் கண்ணுதலாய்
திங்கள் புனைந்தாய் சிவனே சிவனேயென்
றிங்கு நினைதடியே மெல்லேங் களுமரற்ற
வெங்க ளுயிர்க்குயிரா நாயகநீ கேட்டிலையோ. (சுo)

பாசங்கொண் டாவி பலவும் பிணிப்போனு
நேசங்கொண் டாங்கதனை நீக்கியருள் செய்வோனு
மீசன் சிவனென் றியம்புமறை நீயிழைத்த
வாசொன்று மித்தீமை யார்தவிர்க்க வல்லாரே. (சுக)

நாரா யணனுமந்த நான்முகனு நாடரிய
பேராதியான பெருமா னுயிர்க்கெல்லா
மாராயி னீயன்றி யாரே துணையாவார்
வாராய் தமியே னுயிரளிக்க வாராயே. (சுஉ)

சீற்றம் விளைத்துமுனந் தேவர் தொகையலைப்பான்
கூற்ற மெனவே குறுகுற்ற வந்தகனை
மாற்ற விழுப்ப வகன்மார்பின் மூத்தலைவே
லேற்றியவ னீயன்றோ வெமக்கே னிரங்கலையே. (௬௩)

ஏங்கி யமர ரிரிந்தோட வேதுரந்த
வோங்கு குரண்டத் துருக்கொண்ட தானவனைத்
தீங்கு பெறத்தடிந்து சின்னமா வோர்சிறையை
வாங்கி யணிந்தவரு ளிங்கென்பால் வைத்திலையே. (௬௪)

ஞாலத் தினையளித்த நான்முகனு நின்றவற்றைப்
பாலித் தவனும் பிறரும் பணிந்திரங்க
வோலக் கடலு ளுலகந் தொலைப்பவந்த
வாலத்தை யுண்டவரு ளென்பா லயர்த்தனையோ. (௬௫)

மோடி தரவந்த முக்க ணுடைக்காளி
யோடி யுலகுயிர்க ளுண்ணும் படியெழலு
நாடி யவள்வெருவி நாணிச் செருக்ககல
வாடி யருள்செய்த வருளிங் கணுகாதோ. (௬௬)

பொற்றைக் கயிலைப் புகல்புக்க தேவர்தமைச்
செற்றத் துடனடவே சென்ற சலந்தரனை
யொற்றைத் திகிரிப் படையா லுடல்பிளந்தே
யற்றைப் பகலவரை யஞ்சலென்றாய் நீயன்றோ. (௬௭)

நந்துற்ற கங்கை நதிசெறியுங் காசிதனிற்
றந்திக் கொடியோன் றவத்தோர் தமைத்துரந்து
வந்துற் றிடச்சினவி வன்றோ லினையுரித்த
வந்தக் கருணைக் களியரேம் பற்றிலமோ. (௬௮)

ஈரஞ்சு சென்னி யிருபான் புயங்கொண்டோ
ரோரஞ் சரக்க ருலகலைப்ப வன்னவரை
வீரஞ் செய்தட்ட விமல வெமையவுணர்
கோரஞ் செய்கின்ற கொடுந்தொழிலுட் கொள்ளாயோ. (௬௯)

பண்டை மகவான் பரிசுணரத் தக்கனைப்போ
லண்டர்பிரா னின்னை யறியாதோர் வேள்விசெயத்
துண்டமது செய்து சுரரையவன் றோண்முரித்தாய்
தண்ட மதனையின்று தானவர்பாற் காட்டாயோ. (௭௦)

சிந்தப் புரங்கொடிய தீயவுணர் மூவகைத்தா
மந்தப் புரங்க ளடல்செய்தா யெம்பெருமான்
சந்தப் புரங்கொண்ட தானவரோ டொன்றாகு
மிந்தப் புரமு மெரிக்குதவ வொண்ணாதோ. (௭௧)

அன்பா னவருக் கருளுதியாற் பத்திநெறி
யென்பா லிலையா லிறையு மெவனளித்தி
நன்பான் மதியிலைச்சு நாயகனே நல்லருள்கூ
ருன்பான் மிகநொந்தே யோதியதென் பேதைமையே. (௭௨)

ஆனாலுந் தீயே னழுங்க வருள்கொடுநீ
தானாக நண்ணித் தலையளிசெய் தாண்டாயே
லானாத வித்துயர மாறுமே யாறியக்கான்
மேனா ளெனையான் றுறக்கவளன் வேண்டிலனே. (எங)

வென்றி யரக்கரான் மேதகைய தானவரா
லன்றி முனிவரா லண்டரா லேனையரா
லொன்று செயவொன்றா யுறுதுயரந் தாழ்ந்ததன்றி
யென்று மகிழ்வா யிடரற் றிருந்தனமே. (எச)

ஈற்று மதியுங் கிளர்வெம் பொறியரவு
மாற்றி னெடுமிலைந்த வாதியே நின்னருளா
லேற்ற மிகுமலக்க ணேகி னிழிந்தவளம்
போற்றுகில னேற்றல் புரிவேன் புரிவேனே. (எரு)

தண்டேன் றுளிக்குந் தருநிழற்கீழ் வாழ்க்கைவெஃகிக்
கொண்டேன் பெருந்துயரம் வான்பதமுங் கோதென்றே
கண்டேன் பிறர்தம் பதத்தொலைவுங் கண்டனனாற்
றெண்டேன் சிவனேநின் றொல்பதமே வேண்டுவனே. (எசு)

அல்லற் பிறவி யலமலம்விண் ணாடுறைந்து
தொல்லைத் திருநுகருந் துன்பு மலமலமாற்
றில்லைத் திருநடஞ்செய் தேவே யினித்தமியேற்
கொல்லைத் துயர்தீர்த் துனதுபதந் தந்தருளே. (எஎ)

ஒன்றா யிருதிறமா யோரைந்தா யையைந்தா
யன்றாகி யின்மீட்டு மைந்தா யளப்பிலவாய்
நின்றாய் சிவனேயிந் நீர்மையெலாந் தீங்ககற்றி
நன்றாவி கட்கு நலம்புரிதற் கேயன்றோ. (எஅ)

பொன்பொலியுங் கொன்றைப் புரிசடையா யிவ்வழிசேர்
துன்ப மகற்றித் துறக்கத்துட் டாழாது
பின்பு நனிநோற்றுப் பெறற்கரிதா நின்னடிக்கீ
ழின்ப மொருதலையா வெய்தவரு ளாயெனக்கே. (எகூ)

வேறு.

என்று பற்பல விரங்கியே விடஞ்செறிந் தென்னச்
சென்று சென்றிடர் மூடுறா வுணர்வெலாஞ் சிதைப்ப
வொன்று மோர்கிலன் மயங்கின னுயிர்கரந் தலையப்
பொன்றி னார்களின் மறிந்தன னிந்திரன் புதல்வன். (அ0)

ஆங்க வன்றனைப் போலவே யமரரு மழுங்கி
யேங்கி யாருயிர் பதைத்திட வீழ்ந்துணர் விழுந்தார்
தூங்கு வீழுறு பழுமரஞ் சாய்தலுந் தொடர்ந்து
பாங்கர் சுற்றிய வல்லிக டியங்கிவீழ் பரிசின். (அக)

ஆ திருவிருத்தம் - சகஎ.

---

வசனம்.

திருமால் அறிதுயிற்கொள்ளும் பாற்கடலினுதித்த சந்திரனையொத்த நெற்றியையுடைய இந்திராணி குமாரனுஞ் சயந்தன் அமரரோடு சிறையிலிருத்தல், அமுதமெழுங் காலத்துப் பாற்கடலிடையிருந்த திருமாலையும் கரும்பாம்புகளாற்

பிடிக்கப்பட்ட சந்திரனது களங்கத்தையுமொத்திருந்தது. சயந்தனது கால்கள்
விற்பயிற்சியாற் றழும்புண்ட கைகள்போல, நெடுநாள் பூண்டிருந்த விலங்கினாற்
றழும்பேறிய தனக்கு நீங்காத்துணையாயிருந்த அபிமானமும், வலிமையும், நாண
முந் தன்னைவிட்டுநீங்க, கொடியபழியாகிய நெருப்புச்சூழப் பெருமூச்சாகிய காற்று
உயிரையலைப்பத் துக்கமாகிய கடலுளாழ்ந்தான். அவன் சிறையினாலுந் துன்
பத்தினாலுந் தற்கொலைபுரிந்துகொள்ள விரும்பினாலும் அமுதமுண்டவலியால் மர
ணமற்றவனா யேங்கிவாளாவிருந்தான். நீங்காக்கோபத்தையுடைய வசுரராஜன்
கட்டளைப்படி சிறைப்பட்ட விவன் சித்திரவதை செய்யுங்காலத்துண்டாகுந் துன்
பத்தையுடையவனாய் ஒருக்ஷணத்தை யொருயுகமாகக்கழித்தான். தெய்வத்தன்
மையுடைய செதுக்கப்பட்ட மரகதம் மாசுண்டதுபோலும் தடாகச்சலத்தை நீங்கா
திருந்த நீலோற்பலமாலை வாடுதல்போலும் இமையாநாட்டம் பெற்றவனாதலாற
றூக்கமின்றி நீங்காத்துயரிலாழ்ந்தான். மரகதம்போலவமைந்து பொன்னொளி
வீசுந் தன்னுடலழகுகுன்றிக் கோபத்தோடு பார்க்கும் அசுரர்களைப்பார்த்துச் சிறை
யிலிருந்துதப்ப வகையறியானாய்க் கலங்கினான். அழகிய வவனதுருவம் பெருமூச்
சென்னும் புகையினால் மூடப்பட்டாலுங் கண்ணீரைக்கண்டு, காவலாளர் மன
மிரங்க வேங்குவான். அஃதின்றி அவர் பயமுறுத்தக் குற்றமென்று கையால்
வாய்பொத்திக்கொள்வான். தன் தந்தைதாயருள்ள நகரஞ்சென்று தந்தமர் கை
பற்றினரென்று காவலர்கூற அவர்களு மிவ்வாறு தண்டிக்கப்படுவரேயென வயர்
ந்து வீழ்வான். பஞ்சதருக்களின் னிழலின் குளிர்ச்சியையுந் தெரிந்தெடுக்கப்
பட்ட புட்பங்களாலாய படுக்கையின் மென்மையையுந் தான்தானென மேல்
விழுந்துவருந் தெய்வமாதரோடுகூடி முயங்கும் போகத்தையு மிந்திரனது பெருஞ்
சம்பத்தையுமெண்ணிச் சோருவான். ஒப்பற்ற வமராவதியழிந்துபோமே, தானெ
ப்போ தடைவனெனச் சிந்திப்பன். சில தேவர்களாற்றன்னைப்பெற்றோர் பூவுலகு
சென்றனரெனக்கேட்டு அவர்களங்கே எவ்வாறிருக்கின்றனரோவென்று நினைப்
பான். இவனைப் பிரிந்துபோய்ச் சிலதேவர்கள் தனது பெற்றோரைக்கண்டனரோ,
கண்டுகலந்தனரோ விட்டுப்பிரிந்தனரோ வேறு என்செய்தனரோ வென்பான்,
இலக்குமியருள்வாய்ந்த சூரபத்மாவின் தீமையையெல்லாம் முறையிட அர்த்தநா
ரீச்சுரன் வீற்றிருக்குங் கைலைக்குத் தன்றந்தை சென்றனனோ வென்பான். அசுரர்
கண்ணிற்படாதிருக்க விந்திரனு மிந்திராணியுந்தம் முருவத்தைமாற்றினரோ, அல்
லது அவர்பாற் சிக்கினரோ, அலலது எல்லாவுலகங்களிலுந் திரிகின்றனரோவென
வையுறுவான். அல்லதவரைக் கயிறுகொண்டு பிணித்துவரச்சென்ற வவுணர் அவ
ரேற்றுருமறியா திருக்கின்றனரோவென வெண்ணுவன். அவுணர்களைக்கண்ட
வளவிற் றன்றந்தை தாயார் என்னபாடுபட்டனரோ வென்றேங்குவான். அமரா
வதி யெரிந்ததையுந் தான் சிறைப்பட்டதையுங்கேட்ட தன்றாயெனவளெவ்வாறு
வருந்தினளோவென்பான். தந்தை தாயாரைக்கொணர்ந்து தன்முன்விட்டால்
தன்னுயிர் நிற்குமோவென்பான். அவர்களிருக்கின்றார்களென்னுஞ்சொல் கேளா
தவனாதனபடியால் பரமனைக்குறித்துத் தவஞ்செய்து முத்திபெற்றனரோ வென்
பான். பாநுகோபனாற்றந்த மொடிபட்டுவிழுந்த வைராவதமெங்கு சென்றதோ
வென்பான். ஒருவன் தன்வாணாளிலனுபவிக்கு மின்பதுன்பங்களுக்குக் காரணமவ
னூழே யாகையால், அசுரரைவெறுத்தல் வீணென்பான். அமராவதியழியயும் தன்
தாய்தந்தையரோடி மறையவுந் தான்மாளாச்சிறையிற்படவுஞ் செய்ததூழ்யாதோ
வென்பான். சூரன் சாகாவரம்பெற்றவனாதலா லவனிறத்தலுந் தான் சிறைவிட்

டொழிதலு மில்லாமையால் நானெப்போது சிறைநீங்குவனென்பான். செல்வத் தையு மமராவதியையும் வாழ்வையும் விட்டுச்சென்ற பெரியோர்போல் நானுமி நீங்காது அசுரர்கையிற் சிக்கினனேயென்பான். உயிரைமாய்த்திலனே அபகீர்த்தி வாராதபடி காத்திலனே தந்தைதாயருக் குற்றதைப்பார்த்திலனே என் சிறை நீத் திலனே, துன்பமாற்றிலனேயென வாற்றுவான். தர்மம் நீங்கியதோ அதர்மம் மேம்பட்டதோ சன்மார்க்கங் குன்றியதோ கலியுகந்தோன்றியதோ வேதமுமத னூற் பிரதிபாதிக்கப்படுஞ்சிவன் இல்லையோ வென்பான். ஓடிப்போன தேவர்க ளைப்போல் விடாமற் சிலரைச் சிறையிலிருத்தினனேயெனத் தன்னையே நோவான். மாலைக்காலத்துச்செய்யும் வேதாத்தியாயனம், சந்தியாவந்தனம், நித்தியாக்கினி, தாய்தந்தையர் பூசை சிவத்தியான மிவையாவையும் விட்டனனே யென்பான். வைக்கோலாலாய உருவம் வெந்தாற்போல உடலைத்தாங்கிய தான் இறந்தாலொழி யத் தன் துன்பம் நீங்காதென்பான். முன்னர் மெல்லெனச்செய்த வினையின் படி சிவபிரானே யித்துயரைக்கூட்டினு னென்பான். எல்லாமாய சிவனல்லாது வேறியார் தன்னைப்பார்த்துக் கருணைகூர்வரென்பான். சூரபன்மாமுதலிய வவுண ருயிருந் தனது சிறையுந் தனக்குண்டாய வபகீர்த்தியு மொருநாளொழியுமோ வென்பான். சிவபிரானது கருணையில்லாமையா லித்துயர் நீங்கிலனென்பான். இவ்வாறு பலவாறு சிந்தித்துத் தன்னுணர்விருந்தா ரிரங்கும்படி சயந்தனிருந்தான். கண்டகன் முதலிய வவுணக்காவலர் சயந்தன் முதலிய தேவர்களை யருங்காவல் பூண்டனர். இவ்வாறு சூழ்ந்துகொண்டு சயந்தனைநோக்கி இந்திரனு மிந்திராணியு மிருக்கிற விடத்தைச் சொன்னாலல்லது கொன்றுவிடுவோ மென்றார்கள். அதற்க வாகள் தேவலோகம் நீங்கியதுமுதற் றான்சிறையிலிருப்பதாலறியேனென்றான்; மற்றத்தேவர்களு மவ்வாறே சொன்னார்கள். அதுகேட்டு இவர்கள் ஒன்றுசேர்ந் தறியே னென்கிறார்களென்று கோபங்கொண்டு பல ஆயுதங்களாலே சித்திரவதை செய்ய வாரம்பித்தனர். சயந்தன் சிவபிரானைச் சிந்தித்தான். அவுணர்கள் சயந் தன் முதலியோரை யெவ்வாறு வருத்தியும் வேறொன்றுஞ் சொல்லாதுண்ட வமுதத்தாற் சாகாது மிருந்ததால் வியப்படைந்து கைநொந்து வருந்தினர். யானை, கரிக்குருவி, நாரை, பாம்பு, சிலந்தி முதலிய விழிந்த உயிர்களுக்கு முத்தியருளிய அறக்கருணையைத் தன்பாலும், அந்தகாசுரன், சலந்தராசுரன், கஜமுகாசுரன், பஞ்சராவணர், திரிபுராதியர் முதலியோர்க்குக் காட்டிய மறக்கருணையை யவுணர் பாலுங்காட்டி யருளும்படி பிரார்த்தித்து இந்திரபதம் முதலியவை துன்பந்தரத் தக்கவையென்று வெறுப்புற்று சிவனைநோக்கி நோற்கும் விருப்பமிக்கு மோக்ஷத்தைத் தருமருளுவாயென்று சிவபிரானையிரந்தவண்ணமாய் இறந்தவன்போல் கீழேவிழுந் தான். அவனைப்போலவே மற்றத்தேவர்களுமுடன் வீழ்ந்தனா.

சயந்தன்புலம்புறுபடலம் முற்றிற்று.

---

## சயந்தன்கனவுகாண்படலம்.

விண்ணு ளார்களுஞ் சயந்தனும் வியன்மகேந் திரத்தி
னுண்ணி லாம்பெருந் துயருடன் மாழ்கிய துணர்ந்தா
னெண்ணி லாவுயிர் தோறுமுற் றின்னருள் புரியு
பண்ண லார்க்கும ரேசனு மறுமுகத் தமலன். (க)

வெஞ்சி றைத்தலை மூழ்கியே யவுணரா னென்று
நெஞ்ச ழிந்திடு மவர்தமை யருள்செய்து நினைந்தான்
றஞ்ச மின்றியே தனித்தயர் சிறுவரைத் தழுவி
யஞ்ச லென்றுபோற் றிடவரு மீன்றயா யனையான். (௨)

இனிய சீறடிக் குமரனிற் செந்திவந் திமையோர்
வினைகொள் கம்பலை யகற்றுவா னிருந்திடும் விமலன்
றனது வார்ச்சியின் றூகியே யவசமாஞ் சயந்தன்
கனவின் முன்னுற வந்தன னருள்புரி கருத்தால். (௩)

வீறு கேதனம் வச்சிர மங்குசம் விசிக
மாறி லாதவே லபயமே வலமிடம் வரத
மேறு பங்கய மணிமழுத் தண்டுவில் லிசைந்த
வீறி ரண்டுகை யறுமுகங் கொண்டுவே ளடைந்தான். (௪)

தந்தை யில்லதோர் பரமனைத் தாதையா வுடைய
கந்த னேகியே யனையதன் னுருவினைக் காட்ட
விந்தி ரன்மக னுளப்படும் யாக்கையு ளிருந்த
முந்து கண்களாற் கண்டனன் றொழுதனன் மொழிவான். (௫)

தொண்ட னேன்படு மிடுக்கணை நாடியே தொலைப்பான்
கொண்ட பேரரு ணீர்மையிற் போந்தனை குறிக்கின்
விண்டு மல்லையப் பிரமனு மல்லைமே லாகு
மண்டர் நாதனு மல்லைநீ யேவர்மற் றருளே. (௬)

என்ற காலையி லறுமுகப் பண்ணவன் யாமக்
கொன்றை வேணியின் மிலைச்சிய பரஞ்சுடர் குமர
னுன்ற னல்லலு மிரக்கமு மையலு முணர்ந்து
சென்ற னம்மெனக் கூறியே பின்னருஞ் செப்பும். (௭)

வேறு.

நுந்தை தன்குறை நுங்குறை யாவையு நுவன்று
வந்து நந்தமை வேண்டலும் வரம்பில்சே னையொடு
மிந்த ஞாலத்தி னெய்தியே கிரவுஞ்ச மென்னு
மந்த வெற்பையுந் தாரகன் றன்னையு மட்டாம். (௮)

அனைய வன்றனை யட்டபின் செந்திவந் தமர்ந்தாம்
வனச மீமிசை யிருந்திடு பிரமனு மாலு
முனது தாதையு மமரரு நம்வயி னுறைந்தா
ரினையல் வாழிகே ளிங்கையு மேருவி னிருந்தாள் (௯)

வீர வாகுவாந் தூதனை யாமிவண் விடுத்தேஞ்
சூரன் மைந்தனங் கொருவனைப் பலரொடுந் தொலையா
னேரி லாதவிக் கடிநக ரழித்துநீ றாக்கிப்
பாரின் மாலையின் மீண்டிடப் புரிதுமிப் பகலின். (௧௦)

செல்லு மிப்பகல் கழிந்தபி னாளையே செந்தி
மல்ல லம்பதி நீங்கியிந் நகர்க்கயல் வைகிச்
சொல்லு மைந்திரு வைகலி னவுணர்தந் தொகையு
மல்ல லாற்றிய சூரனு முடிந்திட வடுதும். (௧௧)

அட்ட பின்னரே கின்னவா னவருட னவுண
னிட்ட வெஞ்சிறை நீக்கிநும் திருவெலா மீதும்
விட்டி டிங்குன தாகுல மென்றனன் வினைதீர்க்
துட்டெ ளிர்தவர் போதத்தி னுணர்வுமா யுறைவோன். (கஉ)

ஐய னீங்கிவை யுரைத்தவை கேட்டலு மகத்துண்
மையன் மாசிரு ளகன்றன புகுந்தன மகிழ்ச்சி
மெய்யு ரோமங்கள் சிலிர்த்தன வுகுத்தன விழிநீர்
சைய மேயென நிமிர்ந்தன சயந்தன தடந்தோள். (கங)

பற்றி னல்வரு மயிர்தினை யெளிதுறப் படைத்துத்
துற்று ளோரெனத் தண்ணெனத் தனதுமெய் சுருதி
கற்ற கற்றன பாடினு னாடினன் களித்தான்
மற்ற வன்பெறு முவகையின் பெருமையார் வகுப்பார். (கச)

வேறு.

திகழ்ந்திடு மறவியை நீங்கி யிவ்வகை
மகிழ்ந்திடு மிந்திரன் மதலை யெம்பிரான்
றிகழ்ந்திடு பதமலர் சென்றி றைஞ்சியே
புகழ்ந்தன னினையன புகல்வ தாயினன். (கரு)

நொய்யசி ரடியரே நோவு மாற்றியே
யையநீ வலிதுவந் தளித்தி யானுரை
செய்வது முண்டுகொல் சிறிது நின்கணே
கையடை புகுந்தனங் காத்தி யாலென்றான்.

சயந்தன்மற் றிவ்வகை சாற்ற யாரினு
முயர்ந்திடு பரஞ்சுட ரொருவன் கேட்குறு
வயர்ந்தநுங் குறையற வளித்துந் திண்ணமென்
றியைந்திட மேலுமொன் றிசைத்தன் மேயினன். (கஎ)

இந்நகர் குறுகயா மேய தூதுவ
னின்னையுஞ் சூரரையு நேர்ந்து கண்ணுறீஇ
நன்னயங் கூறியே நடப்ப வுய்க்குது
மன்னதுங் காண்கென வருளிப் போயினன். (கஅ)

படைப்புறு தயர்ந்திடு பங்க யன்கனு
வடுத்துனக் கருள்செய வாறெ டைவரை
விடுத்துமென் றேகிய விமலன் போலவே
யிடர்ப்படு சயந்தன்மு னிவைசொற் றேகினன். (கக)

ஏகிய காலையி னிறந்து முன்னரே
போகிய புலமெலாம் பொறியிற் றோன்றலு
மாகிய கனவினை யகன்று பைப்பய
நாகர்கோன் றிருமக னனவி னண்ணினன். (உ௦)

வேறு.

தந்தி நஞ்சத் தலைக்கொளச் சாய்ந்தவர்
மந்தி ரத்தவர் வாய்மைவந் துற்றுழிச்
சிந்தை மையலைத் தீர்ந்தெழு மாறுபோ
லிந்தி ரன்றன் மதலை யெழுந்தனன். (உக)

நனவு தன்னிடை நண்ணிய சீர்மகன்
கனவி னெல்லையிற் கண்டனன் யாவையு
நினைவி தோற்றின னெஞ்சங் குளிர்ந்துநம்
வினையெ லாமிவண் வீடிய வோவென்றான். (உஉ)

கவலை தூங்கிக் கடுந்துயர் நீரதா
யவல மாகிய வாழியி லாழ்ந்துளான்
சிவகு மாரன் றிருவரு ளுன்னியே
யுவகை யென்னு மொலிகடன் மூழ்கினான். (உ௩)

அனைய காலை யயர்ந்திடு வானுளோர்
கனவு தோறுங் கடிதுசென் றிந்திரன்
றனய னுக்குமுன் சாற்றிய வாறுசொற்
றினைய லீரென வேகின னெம்பிரான். (உ௪)

அம்மென் கொன்றை யணிமுடிக் கொண்டவன்
செம்ம லேகலுந் தேவர் களுவெரீஇ
விம்மி தத்தின் விழித்தெழுந் தேயிரீஇத்
தம்மி லோர்ந்து தவமகிழ் வெய்தினர். (உ௫)

சில்லை வெம்மொழித் தீயவர் கேட்பரே
லல்லல் செய்வரென் றஞ்சிக் களத்திற
மல்லன் மைந்தன் மருங்குறு வார்சிலர்
மெல்ல வங்கவன் கேட்க விளம்பினர். (உ௬)

வேறு.

அண்டர்கண் மொழிதரு மற்பு தத்தையுட்
கொண்டன னங்கவை குமரன் றன்முனங்
கண்டது போன்றிடக் களித்துப் பாரெலா
முண்டவ னமென வுடலம் விம்மினான். (உ௭)

அறுமுக முடையதோ ராதி நாயக
னிறைதரு முலகெலா நீங்க லின்றியே
யுறைவதுங் கருணைசெய் திறனு முன்னியே
மறைமுறை யவனடி வழுத்தி வைகினான். (உ௮)

ஆ திருவிருத்தம் - ௪௪௬.

---

வசனம்.

இவ்வாறு சயந்தனும் தேவர்களும் மகேந்திர நகரில் சிறைசெய்யப்பட்டு வருந்தியிருப்பதறிந்து, இவர்கள் துன்பத்திற்கிரங்கிச் திருச்செந்திற் பதியில் எழுந்தருளியிருக்கிற முருகக்கடவுள் சயந்தனுக்குக் கனவில் காட்சிகொடுத்தருளச் சயந்தனும் அந்தச்சண்முகப் பெருமானைக் கண்களிகூரத்தரிசித்து, யாம் படுந்துயரத்தை யொழிக்கும் பொருட்டு எழுந்தருளினதாகக் காணப்படுகின்றமையின், தேவரீர் யார் எமக்குத்தெரிவித் தருளவேண்டுமென்று பிரார்த்திக்க, குகப்பெருமான அவனைநோக்கி யான் கொன்றையஞ்சடைக் குன்றவில்லிக்குப் புதல்வன், உன அல்லலையொழிக்கும்பொருட்டே யிங்குவாலாயிற்று. உன் தந்தையாகிய இந்திரனு

என்னை வேண்டிக்கொண்டான். ஆதலால் பூதப்படையோடும் இலக்கத்தொன்பது வீரரோடும் புறப்பட்டு இவ்வுலகத்தில் வந்து கிரவுஞ்ச மலையையும் தாரகனையும் எமது வேற்படைக்கு இரையாக்கி, திருச்செந்திற்பதியில் வீற்றிருக்கிறோம். உன் தங்கையாகிய தெய்வயானையும் மேருகிரியிலிருக்கிறாள். இதுநிற்க; வீரவாகுவைத் தூதாகவிடுத்து சூரபன்மன் மக்களிலொருவனைக் கொல்வித்து அவுணர் பலரையும் அழிப்பித்து இந்நகரையும் நீறுபடுத்துவோம் பின்பு அவன் நம்மை எதிர்த்தடைந்தவுடனே யாம் செந்திற்பதியைவிட்டு இங்கேவந்து சூரபன்மன் முதலியோரைப் பத்துநாளைக்குள்ளே அதம்பண்ணுவோம். பின்பு உன்னைச் சிறைவிடுத்து உங்கள் செல்வத்தையும் மீளத்தருவோம் என்றருளிச்செய்தார். அது கேட்ட சயந்தன் களிப்படைந்து முருகவேளைப்பணிந்து, எங்களைக்காக்கவேண்டுமென்றான். அதற்குக் குமாரவேள், ஓசயந்தனே, நாம் தூதாயனுப்பின வீரவாகு உன்னையும் தேவர்களையும் நேரேகண்டு உங்களுக்கினிய மொழிபுகன்றுபோகச் செய்வோம் என்றருளிச்செய்து மறைந்தருளினார். உடனே தான்கண்ட கனவிற் பார்த்த விடயங்கள் யாவும் நனவிற்றோன்றவும் சயந்தன் ஆநந்தசாகரத்தில் ஆழுகிறான். மற்றைத் தேவர்களும் தங்கள் கனவிற் கண்டவிடயங்கள் யாவும் கனவிற்கண்டு வியந்து, சயந்தனிடத்திற்சென்று தாம் கண்டகனவைச்சொல்ல, அவனும் அப்படியே தான்கண்ட கனவைச்சொல்ல, அங்கிருந்த காவலாளர் அறியாதபடி சூரபன்மன் அழியுங்காலம் நேரிட்டதென்று பேசிக்கொண்டிருந்தார்கள்.

சயந்தன்கனவுகாண்படலம் முற்றிற்று.

---

# வீரவாகுசயந்தனைத்தேற்றுபடலம்.

இத்திற மமரரோ டிந்தி ரன்மக
னத்தலை யிருந்தனு மனையர் யாவரு
மொய்த்திடு சிறையக முன்கண் டானரோ
வித்தக வறிவனும் வீர வாகுவே. (க)

வேறு.

மாகண்ட மொன்பான் புகழுந்திறல் வாகு வங்க
ணாகண்ட லன்மைந் தனைவிண்ணவ ராயி னோரைக்
காய்கண் டகரா மவுணத்தொகை காத்தல் கண்டான்
பேய்கண்ட செல்வந் தனைக்காதநிம் பெற்றி யேபோல். (உ)

கண்ணோட மின்றித் துயர்வேலையிற் காவல் கொண்ட
வெண்ணோ ரெனைக்கண் டிலராயுணர் வின்றி மாழ்க
விண்ணோர்கள் காணத் தமியேன்செல வேண்டு மென்றான்
மண்ணோ ரடியா ளளக்குந்தனி மாய னொப்பான். (ங)

ஓங்கார மூலப் பொருளாயுயிர் தோறு மென்று
நீங்கா தமருங் குமரேசனை நெஞ்சி னுன்னி
யாங்கா குவதோ ரவன்மந்திர மன்பி னோதித்
தீங்கா மவுணர் செறிகாப்பகஞ் சென்று புக்கான். (ச)

தாமந்தரு மொய்ம்புடை வீரன் சயந்தன் விண்ணோ
ரேமந்தரு வன்சிறைச் சூழலு ளேக லோடுந்
தூமந்திகழ் மெய்யுடைக் காவலர் துப்பு நீங்கி
யாமந்திர மாம்வலைப் பட்டு மயங்க லுற்றார். (ரு)

எண்டானவரிற் புடைகாப்பவர் யாரு மையல்
கொண்டார் குயிற்றப் படுமோவியக் கொள்கை மேவத்
தண்டா ரயில்வேற் படைநாயகன் றானை வேந்தைக்
கண்டார் சயந்த னொடுதேவர் கருத லுற்றார். (௬)

ஏமாந் தவுணர் சிறுகாலையி னின்னல் செய்ய
நாமாண் டனர்போ லவசத்தி னணுகு மெல்லை
மாமாண் படைய வருள்செய்தநம் வள்ள றாத
னாமா மிவனென் றகங்கொண்டன ரார்வ முற்றார். (௭)

அன்னா ரமருங் களஞ்சென்றயி லேந்து நம்பி
நன்னா யகமாந் திருநாம நவின்று போற்றிப்
பொன்னா டிறைகூர் திருநீங்கிய புங்க வன்றன்
முன்னா வணுகி யிருந்தானடன் மொய்ம்பின் மேலோன். (௮)

செறிகின்ற ஞானத் தனிநாயகச் செம்ம னாம
மெறிகின்ற வேலை யமுதிற்செவி யேக லோடு
மறிகின்ற துன்பிற் சயந்தன்மகிழ் வெய்தி முன்ன
ரறிகின் றிலன்போற் றொழுதின்ன வறைத லுற்றான். (௯)

தாவம் பிணித்த தெனுங்குளசித் தருவ ரானோர்
பாவந் தலைச்சூழ் வதுபோலெமைப் பாடு காப்ப
மாவெம் படரி லிருந்தேங்கண் மருங்கி னைய
நீவந்த தென்னை யினிதிங்கு நிகழ்த்து கென்றான். (௧௦)

வேறு.

முறையுணர் கேள்வி வீரன் மொழிகுவான் முதல்வன் றந்த
வறுமுக வையன் றன்பி னடுத்துளே னவன்றா தானேன்
விறல்கெழு நந்தி பாலேன் வீரவா கென்பேர் நுங்கள்
சிறைவிடும் பொருட்டுச் சூர்முன் செப்புவான் வந்தே னென்றான். (௧௧)

என்னலு மமரரோடு மிந்திரன் குமரன் கேளாச்
சென்னியி னமிர்துள் ளூறல் செய்தவத் துயின்ற மேலோ
ரன்னதற் பின்னர் நேமி யமிர்தமும் பெற்றுண் டாங்கு
முன்னுறு மகிழ்ச்சி மேலு முடிவிலா மகிழ்ச்சி வைத்தான். (௧௨)

அந்தர முதல்வன் மைந்த னறைகுவா னைய துன்பூர்
புந்தியேங் குறைவி னாதற் பொருட்டினாற் போந்தா யற்றா
லிந்தவன் சிறையு நீங்கிற் றிடரெலா மகன்றி யாங்க
ளுய்ந்தனம் பவங்க டரு மூதியம் படைத்து மென்றான். (௧௩)

பூண்டகு தடந்தோள் வீரன் புகலுவான் சூர்மே லொற்றா
வீண்டெனை விடுத்த வேற்கை யெம்பிரான் வலிதே நும்மை
யாண்டிடு கின்றான் முன்ன ராக்கமும் பெறுதிர் பின்னும்
வேண்டிய தெய்து கின்றீ ரென்றனன் மேலுஞ் சொல்வான். (௧௪)

உலமெலாங் கடந்த தோளீ ருன்னுதி ருன்னி யாங்கு
நலமெலாம் வழிபட் டோர்க்கு நல்கிய குமரன் றன்னாற்
றலமெலாம் படைத்த தொல்லைச் சதுர்முகன் முதலாம் வானோர்
குலமெலா முய்ந்த தென்றா லுமக்கொரு குறையுண் டாமோ. (௧௫)

தேவர்க டேவன் வேண்டச் சிறைவிடுத் தயனைக் காத்த
மூவிரு முகத்து வள்ளன் முழுதருள் செய்தா னும்பர்
பாவமும் பழியுந் தீங்கும் பையுளும் பிறவு மெல்லாம்
போவது பொருளோ மீதாற்றப் புணரியும் பிழைத்தீ ரன்றே. (கசு)

சீர்செய்த கமலத் தோனைச் சிறைசெய்து விசும்பி னோடும்
பார்செய்த வுயிர்கள் செய்த பரஞ்சுடர் நும்மை யெல்லாஞ்
சூர்செய்த சிறைநீ யிக்கத் தொடர்ந்தில னூற்று னென்று
னீர்செய்த தவத்தை யாரே செய்தனர் நெடிது காலம். (கஎ)

சங்கையில் பவங்க ளாற்றுந் தானவர் செறிந்த மூதூ
ரிங்கிதி னறிஞர் செல்லா ரெம்பிரா னருளி னல்யா
னங்கணம் படர்வோ ரென்ன வகமெலிந் துறமீற னீண்டே
யுங்களை யெதிர்த லாலே யுலப்பிலா வுவகை பூத்தேன். (கஅ)

என்றலு மகிழ்ச்சி யெய்தி யிந்திரன் மதலை யாங்கள்
வன்றளைப் படுமுன் போனார் மற்றெமைப் பயந்தோ ரன்னோ
ரன்றுதொட் டின்று காறு மாற்றிய செயலு மறுறு
லொன்றிய பயனும் யாவு முரைமதி பெரியோ யென்றான். (கக)

வீரனங் கதனைக் கேளா விண்ணவர் கோமான் றன்னை
னாரணங் குடனே காழி யடைந்ததே யெழுவா யாகச்
சீரலை வாயி லங்நாட் சென்றிடு காறு முள்ள
காரிய நிகழ்ச்சி யெல்லாங் கடிதினிற் கழறி னானே. (உ0)

மேதகு தடந்தோள் வீரன் விண்ணவர் கோமான் செய்கை
யோதலுஞ் சயந்தன் கேளா வுரைசெய்வா னன்னை தன்னைத்
தாதையை யடிக டன்னைச் சண்முகத் தனிவேற் செங்கை
யாதியை யெதிர்ந்தா லொத்தே னையநின் மொழிகேட் டென்றான். (உக)

இறைதரு மமரர் தம்மோ டிந்திரன் புதல்வன் றன்னை
யறிவரி லறிவன் கண்ணுற் றறுமுகம் படைத்த வண்ணன்
மறையிடை வதிந்த நுங்கள் வன்குறை மாற்றும் வைகல்
சிறிதிவ ணிருத்தி ரென்று பின்னருஞ் செப்பு கின்றான். (உஉ)

தன்னிக ரின்றி மேலாய்த் தற்பர வொளியா யாரு
முன்னரும் பரமாய் நின்ற வொருவனே முகங்க ளாறும்
பன்னிரு புயமுங் கொண்டு பாலகன் போன்று கந்த
னென்னுமோர் பெயரு மெய்தி யாவருங் காண வந்தான். (உந)

பங்கய முகங்க ளாறும் பன்னிரு புயமுங் கொண்டே
யெங்கட்ம் பெருமான் போந்த வேதுமற் றென்னை யென்னிற்
செங்கண்மா லுந்தி பூத்தோன் சிறுமையு மகவான் றுன்பு
மங்கடஞ் சிறையு நீக்கி யுலகெலா மளிப்பக் கண்டாய். (உச)

சிறுவிதி வேள்வி நண்ணித் தீயவி நுகர்ந்த பாவ
முறைதனில் வீரன் செற்று முற்றவு முடிந்த தில்லை
குறைசில விருந்த வாற்றாற் கூடிய துமக்கித் துன்ப
மறுமுகப் பெருமா னன்றி யாரிது நீக்கற் பாலார். (உரு)

தாட்கொண்ட கமல மன்ன சண்முகத் தெந்தை வேலாற்
காட்கொண்ட கிரியி னோடு தாரகற் கடந்த பூச
ரேட்கொண்ட மதுகை சான்ற சூர்முதல் களைய முன்ன
நாட்கொண்ட தன்மை யன்றோ நறைகொண்ட லலங்கற் றோளாய். ()

காலுறக் குனித்துப் பூட்டிக் கார்முகத் துய்ப்ப வோர்செங்
கோலினுக் குண்டி யாற்றார் குணிப்பிலா வவுணர் யாரு
மாலினுக் கரிதாமண்ணண் மாமகன் கரதகிற் கொண்ட
வேலினுக் கிலக்க தில்லை விடுப்பது மிகைய தன்றே. (உஎ)

வாரிதி யேழு மெண்ணில் வரைகளும் பிறவுங் கொண்ட
பாருட னுலகீ ரேழும் படைத்தபல் லண்டம் யாவு
மோரிறை முன்ன மட்டே யுண்டிடு மொருவன் செவ்வேல்
சூரனை யவுண ரோடுந் தொலைப்பதோர் விளையாட் டம்மா. (உஅ)

சுறமறி யளக்கர் வைகுஞ் சூரபன் மாவின் மார்பி
னெறிசுட ரெஃகம் வீசி யிருபிள வாக்கி னல்லாற்
சிறையுளீர் மீள்கி லாமை தேற்றியும் பொருநர் செய்யு
மறநெறி தூக்கி யொற்று வடியனை விடுத்தா னையன். (உகூ)

ஆளுடை முதல்வன் மாற்ற மவுணருக் கிறைவன் முன்போய்க்
கேளிதென் றுரைப்ப னற்றே கிளத்தினுங் கடனுக் கொள்ளான்
மீளுவன் புகுந்த தெல்லாம் விளம்புவன் வினவி யெங்கோ
னாளவந் திவரை யெல்லா நாமற முடிப்பன் காண்டி. (௩௦)

நீண்டவன் றனக்கு மெட்டா நெடியதோர் குமரன் செவ்வே
லாண்டிருந் தேயு முய்த்தே யவுணர்யா வரையுங் கொல்லும்
பாண்டிலந் தேர்மேற் கொண்டு படைபுறங் காதநுச் சூழ
வீண்டுவந் தடுத லன்றாற் கிதுவுமோ ராட லன்றே. (௩க)

ஈரிரண் டிருமூன் றாகு மிரும்பக லிடையே யெங்கோ
னூர்ருஞ் சமர மூட்டி யவுணர்தம் மனிகந் தன்னைச்
சூரொடு முடித்து நம்மைத் துயர்ச்சிறைத் தொடர்ச்சி நீக்கிப்
பேரிருஞ் சிறப்பு நல்கும் பிறவொன்று நினையன் மன்னோ. (௩உ)

என்றிவை பலவும் வீர னிமையவர் குழாத்தி னோடுங்
குன்றெறி பவ்கஞன் மைந்த னுணர்தரக் கூற லோடு
நன்றெனா வுவகை பூத்து நாமவே னம்பி யாற்ற
வென்றிபெற் றிடுக வென்று வீற்றுவீற் றாசி சொற்றார். (௩௩)

எண்டகு மாசி கூறி யிந்திரன் றனது மைந்த
னண்டரோ டங்கை கூப்பி யளியரேந் தன்மை யெல்லாங்
கண்டனை தாதை கேட்பக் கழறுதி யிவணீ யுள்ளங்
கொண்டது முடிக்கப் போதி குரைகழற் குமர வென்றான். (௩௪)

வயந்திகழ் விடலை யங்கண் மற்றவர் தம்மை நீங்கிக்
கயந்தகு காவலோர்தங் கருத்தின்மா லகற்றி யேக
வியந்திர மன்னோர் தேறி யிமையவர் குழாத்தி னோடு
சயந்தனைச் சுற்றி முன்போற் றீட்டமுறை யோம்ப லுற்றார். (௩௫)

திருவிருத்தம் - ௪அ௦.

வசனம்.

இவ்வாறு சயந்தன், தேவர்களுடனே சண்முகக்கடவுளுடைய பெருமையைப் பேசிக்கொண்டிருக்கையில், வீரவாகுதேவர் எழுந்தருளி, அந்தச்சிறைச்சாலையிலிருக்கும் சயந்தன் முதலான தேவர்கள் வெளிப்படாவாறு அவுணர்கள் காவல் பூண்டிருப்பதைக்கண்டு, மனமிரங்கிக் குமரவேளைத் தம்மனத்தில்நினைத்து அவனது சடாக்ஷரத்தைத் தியானித்துச்செல்லவே, அந்தச்சிறைச்சாலையின் காவலாளர் மதிமயங்கிக் கிடந்தனர். அப்போது சயந்தன் முதலியோர் வீரவாகுதேவரைக்கண்டு, இவர் தாம் நம்மைச் சிறைமீட்க வந்தவர்போலும் என்று நினைத்து, சயந்தன், நீர் இங்குவந்தகாரணம் யாதென்றுகேட்க, வீரவாகுதேவர், நான் சண்முகனுக்குத்தம்பி, அவர் அனுப்பின தூதனுன்தான்; உங்களையெல்லாம் சிறைநீக்கத் தூதாகவந்தேனென்றுசொல்ல, சயந்தன் மிகவும் மனமகிழ்ந்து தேவரீர் என் தாய்தந்தையருடைய செய்தியைத்தெரிவிக்க வேண்டுமென்று பிரார்த்திக்க, வீரவாகுதேவரும், இந்திரன், சீகாழியில் சிவபூசைசெய்ததுமுதல், திருச்செந்தூரில் முத்துக்குமாரனோடு வந்ததுவரைக்கும் நிகழ்ந்தவைகளையெல்லாம் சொல்லக்கேட்ட சயந்தனும், வீரவாகுதேவரை நோக்கி, உம்மைக்கண்டபோதே என் தாய்தந்தையரைக் கண்டதுபோலப் பெருமகிழ்ச்சியடைந்தேன் என்றான். அப்போது வீரவாகுதேவர் சயந்தனைநோக்கி, நீங்கள் சிறைச்சாலையில் அஞ்சாதிருங்கள்; முருகக்கடவுள் உங்களுடையதுயரத்தைத்தீர்க்கும்பொருட்டே யவதரித்தவர்; அவரைச் சாமானியரா யெண்ணவேண்டாம், அவரது வேற்படையால் இந்தச்சூரபன்மன்முதலியோர் அழிந்து நிர்மூலமாய்ப்போவதை நீங்களெல்லாரும் பார்க்கப்போகிறீர்கள் என்றிவ்வாறு சயந்தனைத்தேற்றி நின்ற வீரவாகுதேவரைச் சயந்தன் நோக்கி வணங்கி, இங்கே நிகழ்ந்த செய்திகள் யாவையும் எமது தந்தையாகிய இந்திரனுக்குத் தெரிவிக்கவேண்டுமென்று வேண்ட, அவ்வாறே யாகுகவென்று சிறைக்காவல் செய்வோர்கள் முன்போலிருக்க அறிவளித்துச்சென்றனர். அக்காவலாளரும் முன்போலவே சிறைக்காவல் செய்திருந்தனர்.

வீரவாகுசயந்தனைத்தேற்றுபடலம் முற்றிற்று.

---

# அவைபுகுபடலம்.

மடந்தையொ டிரிந்திடும் வாச வன்மக
னடைந்திடு சிறைக்கள மகன்று வானெறி
நடந்தன னவுணர்கோ னண்ணு கோனக
ரிடந்தரு கிடங்கரை யிகந்து போயினான். (க)

அகழியை நீங்கின னயுதந் தன்னினு
மிகுதிகொ ளாற்படை வெள்ளந் தானைக
டகுதியின் முறைமுறை சாரச் சுற்றிய
முகிறவழ் நெடுமதின் முன்ன ரேகினான். (உ)

கான்கொடி கங்கைநீர் கரப்ப மாந்தியே
மீன்கதி ருடுபதி விழுங்கி விட்டிடும்
வான்கெழு கடிமதில் வரைப்பின் முன்னரே
தான்கிளர் கோபுரங் கண்டு சாற்றுவான். (ங)

குரைகட லுண்டவன் கொண்ட தண்டினால்
வருபுழை மீமிசை வாய்ப்பநு தாரகன்
பெருவரை நிமிர்ந்திடு பெற்றி போலுமாற்
றிருநிலை பலவுடைச் சிகரி நின்றதே. (௮)

தூணமா றுறழ்புயச் சூர னென்பவன்
சேணுறு மண்டமேற செல்லச் செய்ததோ
ரேணிகொ லோவிது வென்ன நின்றதா
னீணிலை பலவுட னிமிர்ந்த கோபுரம். (௯)

துங்கமொ டிறைபுரி சூரன் கோயிற
பொங்குசெம் மணிசெறி பொன்செய் கோபுர
மெங்கணு முடியுநா ளிவுளி வாய்ப்படு
மங்கியின் காறெழும் வடிவ மன்னதே. (௬)

அண்டமெங் கெவற்றினு மமர்ந்து நிற்புறும்
விண்டொடர் வரைகளு மேரு வானவும்
பண்டிதன் மிசையுறப பதித்த தொக்குமாற்
கொண்டியல் சிகரியுட் கூட சாலைகள். (௭)

மெய்ச்சுடர் கெழுமிய வியன்பொற் கோபுர
மூச்சியிற் றொடுத்திட முழங்கு கேதன
மச்சுத னுஞ்சிவ னளவை தீர்முகத
துச்சிதொ றிருந்தரா வொலித்தல் போலுமால். (அ)

திசைபடு சிகரியிற் செறிந்த வான்கொடி
மிசைபடு மண்டமேல் விடாம லெற்றுவ
பசைபடு மதளுடைப் பணைய கத்தினி
லிசைபடப் பலகடிப் பெறிதல் போலுமால். (௯)

விண்ணவர் தாமுறை வியன்ப தத்தொடுந்
திண்ணிலை யிடந்தொறுஞ் சிவண வைகின
ரண்ணலங் கோபுர மதனிற கைவலோன்
பண்ணுறு மோவியப் பாவை யென்னவே. (௧0)

என்பன பலபல வியமபி யீறிலாப்
பொன்புனை தோணியம் புரிசைச் சூழலின்
முன்புறு கோபுர வனப்பு முறறவு
நன்பெரு மகிழ்ச்சியா னமபி நோக்கினன். (௧௧)

புதவுறு கோபுரப் பொருவில் வாய்தலுண்
முதவலி யுக்கிரன் மயூர னுதியோ
ரதிர்தரு நாற்படை யயுதஞ் சுற்றிடக்
கதமொடு காப்பது காளை நோக்கினன். (௧௨)

நோக்கிய திறலவ னெச்சி தாவியே
யாக்கமொ டமர்தரு மவுணன் கோயிலு
ளூக்கமொ டெம்பிரா னேடி முன்னுறு
மேக்குயர் சூளிகை மிசையிற் போயினன். (௧௩)

வேறு.

சூளிகை மீமிசை துன்னுபு சூரன்
மாளிகை யுள்ள வளந்தனை யெல்லா
மீளரி தாவிழி யோடுள மேவ
வாளரி நேர்தரு மாண்டகை கண்டான். (கச)

கண்டதொ ரண்ணல் கடுந்திறல் வெஞ்சூர்
திண்டிறல் வாளரி சென்னிகொள் பீடத்
தெண்டகு மாணை யியற்றிய செம்பொன்
மண்டபம் வைகுறும் வண்மை தெரிந்தான். (கரு)

அருந்தவ வேள்வி யயர்ந்தர னீயும்
பெருந்திரு மிக்கன பெற்றுல கெல்லாந்
திருந்தடி வந்தனை செய்திட வெஞ்சூ
ரிருந்திடு கின்ற வியற்கை யிசைப்பாம். (கசு)

ஐயிரு நூறெனும் யோசனை யான்றே
மொய்யொளி மாழையின் முற்றவு மாகித
துய்யபன் மாமணி துஞ்சியில் வீசி
மையறு காட்சிகொண் மண்டப மொன்றின். (கஎ)

மேனகை யோடு திலோத்தமை மெய்யி
னூனமில் காம ருருப்பசி யாதி
வானவர் மங்கையர் வட்ட முசைத்தே
மேனிமிர் சீகரம் வீசினர் நிற்ப. (கஅ)

சித்திர மாமதி செங்கதிர் பாங்காய்
முத்தணி வேய்ந்து முகட்டுள நீல
மொய்த்தது மணித்தொகை யுள்ள மழுத்தஞ
சத்திர மாயின தாங்கினர் நிற்ப. (கசு)

வெள்ளடை பாகு வெளிற்றுறு சுண்ணங்
கொள்ளு மடைப்பைமென் கோடிகம் வட்டில்
வள்ளுடை வாளிவை தாங்கி மருங்காய்த்
தள்ளரு மொய்ம்புள தானவர் நிற்ப. (உ0)

வெம்மைகொள் பானுவை வெஞ்சிறை யிட்ட
செம்மலு மேனைய சீர்கெழு மைந்தர்
மும்மைகொ ளாயிர மூவரு மாகத
தீம்முறை யாற்புடை சார்ந்தனா வைக. (உக)

பாவ முயன்று பழித்திற னாற்றுங்
காவிதி யோர்கரு மங்கண் முடிப்போ
ராவதொர் சாரண ராய்படை மள்ள
ரேவரு ஞாங்கரி னெங்கணு நிற்ப. (உஉ)

நாடக நூன்முறை நன்று கிணங்கே
யாடவ ரம்பைய ராயுள ரெல்லாஞ்
சேடியர் கின்னரர் சித்த ரியக்கர்
பாடிற வீணைகள் பண்ணினர் பாட. (உங)

ஏகனை யீசனை யெந்தையை யெண்ணு
றாகிய தொல்லவு ணக்குழு வென்ன
வேகுழு ளத்தினர் கஞ்சுகர் வெங்கண்
மாகதர் சூரல் பிடித்து வழுத்த. (உச)

உள்ளிடு மாயிர யோசனை யெல்லை
கொள்ளிட மான குலப்பெரு மன்றந்
தள்ளிட வற்ற சனங்கண் மிகுத்தே
யெள்ளிட வெள்ளிட மின்றென வீண்ட. (உரு)

வச்சிர மெய்வயி ரேரிய மொண்ப
வுச்சியில் வாலுளை யேயொளிர் முத்த
மச்சுறு கண்மணி யாமரி மாவின்
மெய்ச்சிர மேந்தும் வியன்றவி சின்கண். (உகா)

மீயுயர் நீல வியன்கிரி யும்பர்
ஞாயிறு காலையி னண்ணிய வாபோற்
பாயிருள் கீறிய பன்மணி கொண்ட
சேயபொன் மாமுடி சென்னியின் மின்ன. (உஎ)

கறுத்தவ ராத்துணை கண்டிரு வெய்யோ
ருறுப்பிடை கவ்வி யொசிந்து தலைப்போய்
முறுக்கிய வாலொடு முன்கலந் தென்ன
மறுத்தவிர் குண்டலம் வார்குழை தூங்க. (உஅ)

வீறிய மாமணி வெற்பின் மிசைக்க
ணேறிய வொண்பக லிந்து வியற்கை
மாறிய வந்தென மால்வள மாகு
நீறுசெ றிந்திடு நெற்றி யிலங்க. (உகூ)

விண்டுமிழ் கின்ற வியன்புழை தோறுந்
தண்டுளி வந்தமர் தன்மைய தென்னப்
புண்டரி கம்பொரு ளைபோற்றி யுயிர்க்கும்
வண்டர ளத்தொடை மார்பின் வயங்க. (ங0)

பங்கமில் சந்தொடு பாளித நானங்
குங்கும மேனைய கந்திகள் கூட்டி
யங்கம தன்க ணணிந்தன வண்ட
மெங்கு முலாவி யிருங்கடி தூங்க. (நக)

வான்றிகழ் நீனிற மாமுகி லின்பாற்
றோன்றிய மின்புடை சுற்றிய தென்ன
வேன்றுள வண்ட மெனைத்தையு மாற்று
மான்றுயர் தோளிடை யங்கத மல்க. (நஉ)

மெய்த்துணை யாமிரு வெம்பணி ஞாலம்
பைத்தலை கொள்வ பரம்பொறை யாற்று
தெய்த்தன பூண்கொடி யாப்புறு மாபோற்
கைத்தல முன்கட கஞ்செறி வெய்த. (நரு)

நீலம தாய நெடுங்கிரி மேல்பால்
வாலிய கங்கை வழீஇந்திடு மாபோற்
கோல மிடற்றிடை கோவைகொண் முத்தின்
சால்புறு கண்ட சரங்க ளிமைப்ப. (௩௪)

வீர மடந்தையர் மேதக நாளுஞ்
சீரிய தோளிணை செல்கதி யென்ன
வேரியல் பன்மணி யிட்டணி செய்த
வார வடுக்கல்பொன் னாகை மிலங்க. (௩௫)

அந்தியின் வண்ணமு மத்தொளி யூருஞ்
சுந்தர மாலிடை சுற்றிய வாம்போன்
முந்து பராரைகொண் மொய்ம்மணி யாடை
யுந்தியி னெண்பணி யோடு வயங்க. (௩௬)

இருபணி பார்முக மிட்டிட வீட்டி
யுருமொடு மின்னு முலப்பில சுற்றிக்
கருமிட றாடு கலந்தென நுண்ணூல்
குரைகழல் வார்கழல் கொண்டு குலாவ. (௩௭)

மென்மணி மாழையின் வேத னியற்றிப்
பன்மணி மீது படுத்திய பலபூண்
டொன்மணி மெய்புனை சூரபன் மாவோர்
பொன்மணி மாமுகில் போல விருந்தான். (௩௮)

இருந்திடு கின்ற வியற்கை விழிக்கோர்
விருந்தமு தாக வியப்பொடு நோக்கிச்
சுரந்திடு மன்பொடு சூளிகை வைகும்
பெருந்திறன் மாமுகி லிங்கிவை பேசும். (௩௯)

மூவரின் முந்திய முக்கண னம்பொற்
சேவடி பேணிய தேவர்க டம்முட்
டேவுடை வேலுள சூரபன் மாப்போ
லேவர் படைத்தன ரித்திரு வெல்லாம். (௪௦)

ஓய்ந்து தவம்புரி வோரு ளுவன்போன்
மாய்ந்தவ ரில்லை மறத்தொடு நோற்றே
யாய்ந்திடின் முக்கணெம் மையனு மின்னோற்
கீந்தது போற்பிறர்க் கீந்தது மின்றால். (௪௧)

பாடுறு வேள்வி பயின்றழல் புக்கும்
பீடுறு மிவ்வள மாயின பெற்று
நீடுறு மாறு நினைந்திலன் வெய்யோன்
வீடுறு கின்ற விதித்திற னன்றோ. (௪௨)

வேறு.

மெய்ச்சோதி தங்கு சிறுகொள்ளி தன்னை விரகின்மை கொண்ட குருகார்
கச்சோத மென்று கருதிக் குடம்பை தனினுய்த்து மாண்ட கதைபோ
லச்சோ வெனப்ப விமையோரை யீண்டு சிறைவைத்த பாவ மதனு
விச்சூர பன்மன் முடிவெய்து நாளை யிதனுக்கொ ரைய மிலையே. (௪௩)

மிகையான வீரம் வளமாற்றல் சால மேவுற்று ளோரு மிறையும்
பகையார்க ணேனு முளராகி வாழ்தல் பழுதன்றி நன்றி படுமோ
மகவானை மங்கை யுடனே துரத்து மவர்மைந்த னோடு சுரரை
யகலாம லீண்டு சிறைசெய்த பாவ மதனா லிழப்ப னரசே. (௪௪)

மன்னுந் திறத்தி னமர்சூர பன்மன் மாமக்கள் சுற்ற நகர
முன்னும் படிக்கு மரிதான செல்வ முடனாளை யீறு படுமேன்
முன்னென்ப வர்க்கு முன்னாகு மாறு முகனல்கு முத்தி யலதே
லென்னுண்டு நாளும் வினைசெய் துழன்ற விவனா ருயிர்க்கு நிலையே. (௪௫)

என்றித் திறங்க ளருளோடு பன்னி யெழில்கொண்ட வேர மிசையே
துன்றுற்ற வீரன் வளனோ டிருந்த சூரன்மு னேக றுணியாக்
குன்றத்தி னின்று மிவரெல்லை போன்று குபேரேச னெந்தை யடிக
ளொல்றக் கருத்தி னிடைகொண் டெழுந்து நடைகொண் டவைக்க ணுறுவான். ()

வேறு.

நலஞ்செய் சூளிகை நீங்கிவிண் ணெறிக்கொடு நடந்து
கலஞ்செய் திண்டிறல் வாகுவாம் பெயருடைக் கடவுள்
வலஞ்செய் வாட்படை யவுணர்கோன் மன்னிவீற் றிருக்கும்
பொலஞ்செய் கின்றவத் தாணிமண் டபத்திடைப் போனான். (௪௭)

எல்லை யில்லதோர் பெருந்திரு நிகழவீற் றிருந்த
மல்ல லங்கழ லிறைவனைக் குறுகிமாற் றலரால்
வெல்ல ருந்திறல் வீரவா குப்பெயர் விடலை
தொல்லை நல்லுருக் காட்டின னவைக்கெலாந் தோன்ற. (௪௮)

ஒற்றை மேருவி னுடையதோர் பரம்பொரு ளுதவுங்
கொற்ற வேலுடைப் புங்கவன் றாதெனக் கூறி
யிற்றை யிப்பக லவுணர்கோன் கீழியா னெளிவாய்
நிற்ற லெம்பிரான் பெருமையி னிழிபென நினைந்தான். (௪௯)

மாயை தந்திடு திருமகன் மன்னிவீற் றிருக்கு
மீயு யர்ந்திடு மரியணைக் கொருபுடை விரைவிற்
போயி ருப்பது மேலன்று புன்மையோர் கடனே
யாய தன்றியும் பாவமென் றுன்னினா னகத்துள். (௫௦)

இனைய துன்னியே யறுமுகப் பண்ணவ னிருதா
ணினையு மெல்லையி னாங்கவ னருளினா னிசியிற்
றினக ரத்தொகை யாயிர கோடிசேர்ந் தென்னக்
கனக மாமணித் தவிசொன்று போந்தது கடிதின். (௫௧)

நித்தி லப்படு பந்தருஞ் சிவிகையு நெறியே
மூத்த மிழ்க்கொரு தலைவனா மதலைக்கு முதல்வ
னுய்த்த வாறெனக் குமரவேள் வீரனுக் குதவ
வத்த லைப்பட வந்தது மடங்கலேற் றணையே. (௫௨)

பன்னி ரண்டெனுங் கோடிவெய் யவரெலாம் பரவப்
பொன்னின் மால்வரை திரைக்கட லடைந்தவா போல
மின்னு லாவிய பொலன்மணிப் பீடிகை விறல்சேர்
மன்னர் மன்னவ னவைக்களத் தூடுவந் ததுவே. (௫௩)

சிவன்ம கன்விடு பொலன்மணித் தவிசுசேண் விளங்கிப்
புவன முற்றுறத் தன்சுடர் விரித்தலிற் பொல்லாப்
பவம னத்தொடு தீமையே வைகலும் பயிற்று
மவுணர் மெய்யையுந் தெய்வதப் படிவமாக் கியதால். (௫௪)

துயிலெ யிற்றுடை யவுணர்க ளணிகலந் தன்னிற்
குயிலு டைப்பல மணிகளுங் குமரவே ளுய்த்த
வியலு டைப்பெருந் தவிசொளி பரத்தலி னிரவி
வெயிலி டைப்படு மின்மினி போல்விளங் கிலவே. (௫௫)

செக்கர் வானிற மதிக்கதி ருடுக்களின் றிரட்சி
தொக்க பாயிருள் பலவகை யெழிலியின் றுளக்க
மிக்கெ லாஞ்செறி மாலையி னும்பர்மேல் வெய்யோன்
புக்க தேயெனத் தொலைத்ததா லச்சபைப் பொலிவை. (௫௬)

திசைமு கத்தனுஞ் செயற்கருந் தவிசொளி செறிந்தே
யசைவ ருந்திறற் சூரபன் மாவெனு மவுண
னிசைமை தன்னையு மாணைதன் னையுமவ னியாக்கை
மிசைகொள் பேரணிக் கதிரையும் விழுங்கின விரைவில். (௫௭)

அனைய வான்றவி சவுணனே ரிருத்தலு மதுகண்
டெனது நாயகன் விடுத்தனன் போலுமென் றெண்ணி
மனம கிழ்ச்சியா லறுமுகப் பிரானடி வழுத்தி
வினைய நாடுவா னிருந்தன னங்கதன் மிசையே. (௫௮)

பெருந்த னிச்சுட ரெறித்திடு பொன்மணிப் பீடத்
திருந்து மேதகு சிறப்பொடு விளங்கிய வேந்தல்
விரிந்த பல்கதி ருடையதோர் வெய்யவ னடுவட்
பொருந்தி வைகிய கண்ணுதற் பரமனே போன்றான். (௫௯)

மின்னி ருந்தவே லவுணர்கோ னெதிருறும் விடலை
முன்னி ருந்தவா டகன்றனை யடிமுரட் சீயஞ்
சென்னி னங்கவர்ந் தலமர வணுகிமுன் றெற்றப்
பொன்னி ருந்தவி சிருந்திடும் வீரனே போன்றான். (௬௦)

வெம்மைக் காவிருள் வேலைபோன் மூடிவிண் புவியைத்
தம்முட் சித்தரிற் காட்டலுஞ் சதுர்முகத் தொருவ
னம்மொத் தாரிலை யென்றிடச் சிவன்புகழ் நவிலுஞ்
செம்மைத் தொல்குண மாலுநேர்ந் திருந்தனன் றிறலோன். (௬௧)

இவற்றி யற்கையால் வீரவா குப்பெய ரேந்த
னிவப்பின் மிக்கதோர் பொன்மணித் தவிசின்மே னெஞ்சி
லுவப்பும் வீரமு மேதக விருத்தலு முற்ற
வவைக்க ளத்தினர் யாவருங் கண்டன ரதனை. (௬௨)

நோற்றன் முற்றுறும் வினைஞர்பா னெய்தின்வந் திறுத்த
வாற்றல் சால்வளம் போலவே யரியணை யதன்கட்
டோற்று மேலவ னிலைமையைக் காண்டலுந் துளங்கி
யேற்ற வற்புத மெய்தின ரவைக்களத் திருந்தார். (௬௩)

வேறு.

வாரிலங் கியகழன் மன்னன் முன்னரே
தாரிலங் கியமணித் தவிசி னுற்றுளான்
வீரனும் போலுமால் வினைய மோர்கிலேம்
யாரிவன் கொல்லென வியம்பு வார்சிலர். (சுச)

மூந்திவட் கண்டில மூடிவி லாற்றல்சே
ரெந்தைமு னிதுபொழு திருத்தன் மேயினு
னந்தமை நீங்கியே நடுவ ணேயிவன்
வந்ததெவ் வாறென வழங்கு வார்சிலர். (சுரு)

ஒப்பருஞ் சனங்களோ டொன்றி நம்மெலாந்
தப்பினன் புகுந்தனன் றமிய னென்னினு
மிப்பெருந் தவிசிவ னிருந்த தாற்றவு
மற்புத மற்புத மாமென் பார்சிலர். (சுசு)

சீயமெல் லணையொடு செம்மன் முன்னரே
யேயெனு மளவையி னீண்டு தோன்றினு
னுய்பவ ருண்டெனி னறைவ னம்பினு
மாயனிங் கிவனென வகுக்கின் றார்சிலர். (சுஎ)

அறைகழ லொருவனை யவையத் தென்முனங்
குறுகிய விடுத்ததென் குழாங்கொண் டீரெனு
மிறையவ னங்களை யாது செய்யுமோ
வறிகில மெனப்பதைத் தழுங்கு வார்சிலர். (சுஅ)

ஒட்டல னொருவனை யொறுத்தி டாதிவண்
விட்டதெ னென்றிறை வெகுளு முன்னரே
கிட்டின மவன்றனைக் கெழுமிச் சுற்றியே
யட்டனம் வருதுமென் றறைகின் றார்சிலர். (சுக)

விளிவிலாத் திறலுடை வேந்தன் றன்னெதிர்
களியுலா மனதொடு கடிதி னுற்றுளான்
றெளிவிலா மாயையின் றிறலன் போலுமா
லளியனோ நுங்களுக் கவனென் பார்சிலர். (எ0)

மன்னவ னெதிருற வந்து ளான்றனை
யன்னவன் பணியினு லடுவ தல்லதை
முன்னுற வதனையா முன்னு வோமெனிற்
பின்னது பிழையெனப் பேசு வார்சிலர். (எக)

யாரிதை யறிகுவ ரினைய னிவ்விடைச்
சூருற வுன்னியே துன்னி னுன்கொலோ
சேரலர் பக்கமாய்ச் சேர்ந்து ளான்கொலோ
வோருது மேலென வுரைசெய் வார்சிலர். (எஉ)

கடுந்தகர் முகத்தவள் கையொன் றற்றநாட்
டடிந்தனன் காவலோர் தம்மை மன்னவன்
றொடுங்கழ லிவன்வருஞ் சூழ்ச்சி நோக்கியின்
றடும்பலர் தம்மையென் றச்சுற் றார்சிலர். (எந)

வாசவன் முதலினோர் மருளத் தொல்லைநாட்
டேசுறும் விஞ்சையர் வடிவிற் சேர்வுறீஇ
யாசிலோர் புன்னிறுத் தாணை காட்டிய
வீசனே யிங்கிவ னென்கின் றார்சிலர். (எச)

ஆயதோர் காசிப னதிதி தங்கள்பாற்
சேயனாய் வந்தொரு சிந்தன் போன்றுலாய்த்
தூயவான் புவியெலா மளப்பச் சூழ்ந்திடு
மாயனே யிவனென மதிக்கின் றார்சிலர். (எரு)

விண்டொடு சூளினை விளம்பி விண்புவி
யுண்டொரு கணந்தனி லுந்தி காட்டிய
புண்டரி கத்தனே புணர்பபி னிவ்வுருக்
கொண்டன னெனக் கூறு வார்சிலர். (எசு)

மூவரு ளாகுமோ முடிவின் மாதிரத்
தேவரு ளாகுமோ சேணில் வைகிய
தாவரு முனிவரர் தம்மு ளாகுமோ
வேவரு ளாகுமோ விவனென் பார்சிலர். (எஎ)

மாலைதாழ் மார்புடை மன்னற் கின்னமு
மாலமார் கண்டனே யருளி னின்னதோர்
கோலமாய் வரந்தரக் குறுகி னான்கொலோ
மேலியா முணருதும் வினைவென் பார்சிலர். (எஅ)

காற்றுட னங்கியுங் கடுங்கட் காலனுங்
கூற்றனு மோருருக் கொண்டு வைகிய
தோற்றமி தன்றியிச் சூரன் முன்வரு
மாற்றலர் யாரென வறைகின் றார்சிலர். (எகூ)

குன்றமு மவுணனுங் குலைந்து பாடுற
வொன்றொரு வேலினை யொருவ னுய்த்தன
னென்றன ரன்னவ னீண்டு மன்னன்முன்
சென்றன னோவெனச் செப்பு வார்சிலர். (அ0)

செற்றிய பன்மணிச் செம்பொன் மன்றமு
முற்றிடு மவுணரு மொளிறு வான்கதிர்
மற்றிவ னணிகளின் றவிசின் வாள்பட
வற்றது பகற்சுட ராயென் பார்சிலர். (அக)

இருந்திடு மவுணர்கள் யாரு மித்திறம்
வருந்திற லினைகிலர் மறந்து மிவ்விடை
தெரிந்திடி னிங்கிது திறல்கொண் மன்னனே
புரிந்திடு மாயையின் புணர்ப்பென் பார்சிலர். (அஉ)

றென்னலி னிறந்துயிர் நீத்த தாரகன்
முன்னுறு தன்னுரு முடிய விப்பக
லின்னதோர் பொன்னுரு வெடுத்து முன்னைபாற்
றுன்னினன் கொல்லெனச் சொல்கின் றார்சிலர். (அஙூ)

வேறு.

சங்க மேவின ரினையன வளப்பில சாற்ற
வங்க ணோரரி மான்றவி சிருக்கையி லவுணன்
றங்க மெத்துணை யத்துணைச் சிறப்பொடு தோன்றிச்
செங்கை வேலவற் புகழ்ந்துவீற் றிருந்தனன் றிறலோன். (௮௪)

அறிவர் மேலவன் றவிசில்வீற் றிருத்தலு மவுணர்க்
கிறைவ னங்கது நோக்கியே யெயிற்றணி கறித்துக்
கறுவி யேநகைத் தரப்பிமெய் வியர்ப்பெழக் கண்கள்
பொறிசொ ரிந்திடப் புகையுமிழ்ந் தினையன புகல்வான். (௮௫)

சுற்ற நீங்கியே யிலையுண்டு விலங்கெனச் சுழன்று
வற்றன் மாமரக் காட்டகத் திருந்துடல் வருத்துஞ்
சிற்று ணர்ச்சியோர் வல்லசித் தியலபிது சிறியோய்
கற்று ளாய்கொலாங் காட்டினை நமதுமுன் காண. (௮௬)

துன்று வார்சடை யோகினோ ரல்லது தொலைந்து
பின்று தேவரும் வல்லரிச் சிறுதொழில் பெரிது
மொன்று மன்னதை யிவ்விடைக் காட்டல ருன்போ
னன்று நன்றுநீ நம்முனர்க் காட்டிய நடனம். (௮௭)

சித்த ராயினோர் செங்கண்மான் முதலிய தேவ
ரித்தி றத்தன காட்டிதற் கஞ்சுவ ரென்முன்
றத்த மெல்லையிற் புரிந்திட லல்லது தமியோய்
பித்த னேகொலா நமக்கிது காட்டுதல் பிடித்தாய். (௮௮)

உரைசெ யிந்நகர் மகளிருஞ் செய்வருன் முற்றாக்
கருவி னுள்ளுறு குழவியுஞ் செய்திடுங் கருத்தில்
வரைக ளுஞ்செயு மாக்களுஞ் செய்யுமற் றதனு
லரிய தன்றரோ பேதைநீ புரிந்திடு மாடல். (௮௯)

என்னை யெண்ணலை யெதிருற விருந்தனை யிதனுன்
மின்னல் வாட்படை யுறைகழித் தொய்யென வீசிச்
சென்னி வீட்டுவ னின்செயன் முற்றவுந் தெரிந்து
பின்ன ரத்தொழில் புரிவனென் றேயுளம் பிடித்தேன். (௯0)

ஏனுற் றோரெலாம் வழுத்திய வவுணரும் யாமுங்
காணக் காட்டினை நீயறி விஞ்சையைக் கண்டாம்
பூணித் தாயென வருமுனக் கித்துணைப் பொழுது
பாணித் தாவியை யளித்தன னன்னது பரிசே. (௯௧)

வாச வன்கரந் தோடினன் பிறரிது மதியார்
கேச வன்னிது நினைகிலன் மறைகளின் கிழவோ
னாசி கூறியே திரிந்திடு மவர்க்கெலா முதலா
மீச னென்னிடை வருகிலன் யாரைநீ யென்றான். (௯௨)

தீய னித்திற முரைத்தன கேட்டலுந் திறலோன்
காய மீனெனக் காயமேல் வியர்ப்பெழக் கனன்று
மாயை செய்துழல் வலியிலார் போலெனை மதித்தா
யாய புந்தியை விடுமதி கேளிதென் றறைவான். (௯௩)

புரந்த ரன்குறை யயன்முத லமரர்தம் புன்மை
வருந்தும் வானவர் சிறையெலா நீக்கிமற் றவர்தந்
திருந்து தொல்லிறை யுதவுவான் செந்திமா நகர்வந்
திருந்த வாதியம் பண்ணவ னடியனேன் யானே. (கூச)

துன்னு தானைகட் கரசரா யறுமுகத் தொல்லோன்
பின்னர் வந்துளா ரொன்பதோ டிலக்கமாம் பெயரா
ரன்ன வர்க்குளே யொருவன்யா னந்திபாங் கமர்ந்தே
னென்ன லார்புகழ் வீரவா கெனும்பெய ருள்ளேன். (கூரு)

சார கப்பெய ரிளவலைத் தடவரை தன்னை
யோரி றைக்குமுன் படுத்தவே லறுமுகத் தொருவன்
சூரெ னப்படு நின்னிடைத் தமியனைத் தூதாப்
பேர ருட்டிறத் துய்த்தன னென்றனன் பெரியோன். (கூசு)

கொடித்தி டாதவென் கொண்டவ னுரைத்தசொற் கொடுங்கோ
னடத்து மன்னவன் கேட்டலு மாங்கவ னம்மேல்
விடுத்த காரண மென்னையோ விளம்புதி யென்ன
வெடுத்து மற்றிவை யெம்பிரான் றூதுவ னிசைப்பான். (கூஎ)

மருத்து வன்றனைச் சசியொடு துரந்துசேண் வதிந்த
புரத்தை யாரழற் கூட்டியே யனையவன் புதல்வ
னொருத்த னோடுபல் லமரரை யுவளகந் தன்னி
லிருத்தி னாயென வினவின னறுமுகத் திறைவன். (கூஅ)

இந்தி ராதிப ரயன்முதற் பண்ணவர் யாரும்
வந்து வந்துவேண் டிடுதலு மவர்குறை மாற்றப்
புந்தி கொண்டுபன் னிருபுயத் தெம்பிரான் புவிக்க
ணந்த மின்றுறை பாரிடத் தானையோ டடைந்தான். (கூகூ)

தரையி னண்ணிநின் னிளவலை வரையொடு தடிந்து
நெருந லேவந்து செந்தியின் வைகினா னினையும்
விரைவின் வந்தட வுன்னினா னின்றுநும் மிசையே
யருள்கொ டேசில புகன்றெனைத் தூண்டின னதுகேள். (க00)

நிறையு மிந்துவைப் படவராக் கவர்ந்தென நிகளச்
சிறைப டுத்தியே யமரரை வருத்தினை செய்யு
மறையொ ழுக்கமு நீக்கினை யுலகமாண் மன்ன
ரறமு மன்றிநும் வீரர்தஞ் செய்கையு மன்றால. (க0க)

தாதை யாகியோன் காசிப னாங்கவன் றனய
னாத லானுனக் கமரரைச் சிறைசெய்வ தறனோ
வேத மார்க்கமும் பிழைத்தனை சிறுபொருள் விழைந்தாய்
நீதி யாலுல களிப்பதே யரசர்தந் நெறியே. (க0உ)

உலத்தின் மாண்டதோட் சலந்தர னந்தக னருங்கே
கலத்த லில்லதோர் புரத்தவ ராதியோர் கடவுட்
குலத்தை வாட்டலி னிமைப்பினில் வீந்தனர் கொடியோய்
நிலத்தி னும்பரை வருத்துத லழகிதோ நினக்கே. (க0௩)

மெய்மை நீங்கியே கொலைகளை வியன்றுமே வுள்ள
செம்மை யாளரைச் சீறியே யணங்குசெய் தீயோர்
தம்மி லாற்றரும் பழிசுமந் தொல்லையிற் றமரோ
டிம்மை வீடிவ ரெழுமையுந் துயரினு டிருப்பார். (௧0௪)

இங்ங னந்திரு நீங்கியே தயருழந் திறப்ப
ரங்ங னம்பெரி தாரிருண் மூழ்குவ ரதற்பி
னுங்ங னம்பிறந் தயருவ ரென்றுமீ துலவா
ரெங்ங னுய்வரோ பிறர்தமக் கல்லல்செய் திடுவோர். (௧0௫)

தீது நல்லன வாயிரு திறத்தவுந் தெரிந்தே
யேதி லார்க்கவை செய்வரேற் றமக்குட னெய்தும்
பேதை நீ[illegible]யா யமரரைச் சிறைசெய்த பிழையான்
மாது'யர்ப்பட லன்றியே யிறுதியும் வருமால். (௧0௬)

அண்ட ராற்றலை வவ்விய தாரக னாவி
யுண்ட கொற்றவே லிருந்தது விடுத்திடி னுனையுங்
கண்ட துண்டம தாக்குமா லறநெறி கருதித்
தண்டம் வல்லையிற புரிந்தில னித்துணை தாழ்த்தான். (௧0௭)

கெடுத லில்லதோ ரமரர்கள் சிறையிடைக் கிடப்ப
விடுதல் செய்தனை பல்லுக மவர்தமை யின்னே
விடுத லுய்வகை யாகுமான் மறுத்தியேல் விரைந்து
படுத லேநினக் குறுதியா முறையுமப் பரிசே. (௧0௮)

ஆண்ட ளப்பில நோற்றனை வேள்வியின் றூற்றி
மூண்ட தீயிடை மூழ்கினேயக் கெந்தைமுன் னளித்த
மாண்டி டாதபே ராயுளைத் திருவொடும் வாளா
வீண்டொர் புன்னெறி யாற்றியே யிழுக்குவ தியல்போ. (௧0௯)

சைய மேற்படு வளத்தொடு நீயுநின் றமரு
முய்ய வேண்டுமே லமரர்தஞ் சிறையினை யொழித்து
வைய மேலறத் தியல்புளி வாழிமற் றிதனைச்
செய்ய லாயெனி னீங்குவந் தடுவனுற் றிண்ணம். (௧௧0)

என்று மற்றிவை யாவையும் வரைபக வெறிந்தோ
னுன்ற னக்கறை கென்றன னீங்குநீ யும்பர்
வன்ற ளைச்சிறை நீக்கியே யறத்தினிவ் வளத்தை
நன்று துய்த்தனை நெடிதுநீ வாழ்கென நவின்றான். (௧௧௧)

மறம கன்றிடா வீரனிங் கினையன வகுத்தே
யறையும் வாசகங் கேட்டலும் வெகுளிமூ ளகத்தன்
பொறியு மிழ்ந்திடு கண்ணினன் புகையுமி ழுயிர்ப்ப
னெறியு மங்கைய னிறந்திடு முறுவல னிசைப்பான். (௧௧௨)

மேலை யாயிரத் தெட்டெனு மண்டமும் வென்றே
யேலு கின்றதோர் தனியிறை யாகிய வெனக்குக்
கோல வாலெயி றின்னமுந் தோன்றிலாக் குதலைப்
பால னேகொலா மினையன புந்திகள் பகர்வான். (௧௧௩)

விறலின் மேதகு மவுணராம் வலியிலார் மிகவும்
வறிய ராகிய தேவரா மேலவர் மதலைச்
சிறுவ ராந்தனி முதல்வற்கு மமைச்சியல் செய்வா
ரெறியு நேமிசூ ழுலகத்து வழக்கநன் றிதுவே. (௧௧௪)

தறுகொ டார்முடி யவுணர்தங் குலத்தினை நலித்து
வறமை செய்தனர் கடவுள ரவர்திரு மாறறிக்
குறிய வேவலுங் கொண்டன னெழுக்கமுங் கொன்றேன்
சிறையும் வைத்தன னங்குடித் தமர்முறை செய்தேன் (௧௧௫)

[illegible]
தொடுபெ ருங்கட லுலகெலாங் கொள்ளினுங் கரரை
விடுவ னல்லன்யான் விடருஞ் சிறையினை விண்மே
லுடைய வண்டததி னுச்சியி னெருதலை யுய்ப்பேன் (௧௧௬)

தபபல் செய்திடு மகபதி முதலினோர் தமையு
மிபப திக்கணே கொணர்ந்தனன் சிறைசெய விருந்தேன்
கைபபு குஞ்சிறை விடுவனோ விடுகிலன் கண்டா
யோபப ருந்திறற் சூரனென் றொருபெய ருடையேன். (௧௧௭)

மினனு வச்சிரப் படிவமும் வேறுபல் வரமு
மூனனோ ரொன்றுதன் முதையெற் களித்திடு முறையைப்
பின்னர் யாவரே பெயர்ப்பவர் பெருஞ்சம ரியற்றி
யெனனை யாற்றலால் வென்றிடு நீர்மையோ ரெவரே. (௧௧௮)

தான மாமுகத் தாரக வெம்பியைத் தடிந்த
யான வேற்படை யவன்மிசை வருவது வலித்தேன்
பானல் வாய்ச்சிறு சேயொடு நீயமர் பயிற
லூன மேயெனத் தடுத்தன ராதலா லொழிந்தேன். (௧௧௯)

தாங்கு கையுடைத் தாரக விளவலைத் தொல்லை
யோங்க றன்னொடு மட்டது நென்னலே யுணர்ந்தேன்
பாங்கி னோரையப் பாலனமே லுந்தியென் பழியும்
வாங்கு கின்றன னொளியே காண்டியான் மன்னோ. (௧௨0)

அரிக ளெண்ணில ரிந்திர ரெண்ணில ரல்லாச்
சுரர்க ளெண்ணில ரண்டங்க டொறுந்தொறு மிருந்தார்
செருவி னாற்றலர் வழுத்தியே போயினர் சிவன்க
ணொருநல் வந்திடு சிறுவனோ வென்னெதிர் நிற்பான். (௧௨௧)

நீதி யென்பல வமரரை விடுகில னுணர்ச்சி
யேது மில்லதோர் மகவுதன் புன்மொழி யேற்றுப்
பேதை யாதலி னேற்றனுய் வந்தனை பிழைத்துப்
போதி நின்னுயிர் தந்தனன் யானெனப் புகன்றான். (௧௨௨)

அகில மாள்பவ னிங்கிவை மொழிதலு மையன்
வெகுளி வெங்கனல் சிந்திட வுளஞ்சுட வெகுண்டு
புகையு மங்கியு முயிர்ப்புற மயிர்ப்புறம் பொடிப்ப
நகையும் வந்திடச் சிவந்திட விழியிவை நவில்வான். (௧௨௩)

உய்ய லாவதோர் பரிசினை யுணர்வுறு துழனுங்
கைய கேண்மதி கட்செவி மதியொடு கலந்த
செய்ய வார்சடைப் பரம்பொருட் டிருநுதல் விழிசே
ரையன் மேதக வுணர்ந்திலே பாலனென் றறைந்தாய். (கஉ௪)

மானு டத்தரைத் தேவென்பர் வானகத் தவரை
யேனை முத்தொழி லவரென்ப ரிருவர்தங் களையு
நானி லத்தினிற் பரம்பொரு ளிவரென நவில்வா
ரான சொற்றிற முகமனே சரதமற் றன்றால். (கஉ௫)

ஆய புல்லிய புகழ்ச்சிபோற் கொள்ளலை யறிவோர்
தேய மாவது யார்க்குமெட் டாதது தெளியிற்
றாய வீடுபே றருளுவ துபநிடத் துணிவாம்
வாய்மை யாவது புகலுவன் கேளென வகுப்பான். (கஉ௬)

மண்ண ளந்திடு மாயனும் வனசமே லவனு
மெண்ண ரும்பக றேடியுங் காண்கிலா திருந்த
பண்ண வன்னுதல் விழியிடைப் பரஞ்சுட ருருவா
யுண்ணி றைந்தபே ரருளினன் மதலையா யுதித்தான். (கஉஎ)

முன்ன வர்க்குமுன் னுருவோர் தமக்குமுற் பட்டுத்
தன்னை நேரிலா தீசனுந் தனிப்பெயர் தாங்கி
யின்னு யிர்க்குயி ராயரு வுருவமா யெவர்க்கு
மன்னை தாதையா யிருந்திடும் பரமனே யவன்காண். (கஉஅ)

ஈச னேயவ னுடலான் மதலையா யினன்கா
ணாசி லாவவ னறுமுகத் துண்மையா லறிநீ
பேசி லாங்கவன் பரனொடு பேதக னல்லன்
றேசு லாங்கன் மணியிடைக் கதிர்வரு திறம்போல். (கஉகூ)

பூத மைந்தினுட் கீழ்நிலைத் தாகிய புவியு
ளோது கின்றபல் லண்டத்தி னொராயிரத் தெட்டுங்
கோதி லாக்கமும் படைகளு முனக்குமுன் கொடுத்த
வாதி யீசனே யவனெனின் மாறறுவ தரிதோ. (கூ௩0)

ஏத மில்புவி யண்டங்கள் பெற்றன மென்றே
பேதை யுன்னினை சிறிதவன் றன்னருள் பெறுவோர்
பூத மைந்தினு மேனைய திறத்தினும் புறத்து
மீது மாமண்ட மெவற்றிற்கும் வேந்தியல் புரிவார். (கூ௩௧)

ஆதி யாகிய குடிலையு மைவகைப் பொறியும்
வேதம் யாவையுந் தந்திரப் பன்மையும் வேறு
வோத நின்றிடு கலைகளு மவ்வவற் றுணர்வாம்
போதம் யாவையுங் குமரவேள் பொருவிலா வுருவம். (கூ௩௨)

எங்க ணும்பணி வதனங்க ளெங்கணும் விழிக
ளெங்க ணுந்திருக் கேள்விக ளெங்கணுங் கரங்க
ளெங்க ணுந்திருக் கழலடி யெங்கணும் வடிவ
மெங்க ணுஞ்செறிந் தருள்செயு மறுமுகத் திறைக்கே. (கூ௩௩)

தாம ரைக்கணன் முதலிய பண்ணவர் தமக்கு
மேமு றப்படு மறைக்கெலா மாதிபெற் றியலு
மோமெ னப்படுங் குடிலையே யொப்பிலா முருகன்
மாமு கத்துளொன் றுமவன் றன்மையார் வகுப்பார். (கரு௪)

முக்கண் மூர்த்தியு மாங்கவன் முண்டகா சனனுஞ்
சக்க ரப்படை யண்ணலு மாங்கவன் றனே
திக்குப் பாலருங் கதிர்களு முனிவருஞ் சிறப்பின்
மிக்க தேவரு மாங்கவன் யாவர்க்கு மேலோன். (கரு௫)

சுட்டு மன்னுயி ரெவற்றிற்கு மிருவினைப் பயனைக்
கூட்டு வானவ னுங்கவை துலையெனக் கூடின்
வேட்ட மேனியிற் கதிபுரி வானவன் மேலாய்க்
காட்டு வான்முதற் றிறமெலா மாங்கவன் கண்டாய். (கரு௬)

சிறுவன் போலுறுங் குரவனே போலுறுந் தினையிற்
குறியன் போலுறு நெடியவ னாகியுங் குறுகு
நெறியி னின்னணம் வேறுபல் லுருக்கொடு நிலவு
மறிவர் நாடருங் கந்தவே ளாடலா ரறிவார். (கரு௭)

சிவன தாடலின் வடிவமா யுற்றிடுஞ் செவ்வே
ளவன தாணையி னன்றியே பெயர்கிலா தணுவு
மெவர வன்றனி யாற்றலைக் கடந்தவ ரிவணி
சுவம யங்கின யவன்றனி மாயையிற் சார்வாய். (கரு௮)

எல்லை யில்லதோர் பொருளெலா மாகுறு மியாவு
மலல னாகியு மிருந்திடு மருவமு மாகும்
பல்வ கைப்படு முருக்கொளும் புதியரிற் பயிலுந்
தொல்லை யாதியா மநாதியு மாகியே தோன்றும். (கரு௯)

வாரி வீழ்தரும் புன்னுனித் துள்ளிகண் மான
நேரி லாதமர் குமரவே ணெடியபே ருருவி
னோரு ரோமத்தி னுலப்பிலா வண்டங்க ளுதிக்கு
மார வன்றிரு மேனியின் பெருமையை யறிவார். (க௪௦)

தொலைவி லாவுயிர்த் தொகுதியுந் தொல்லையைம் பூதத்
தலகி லண்டமு மேனவு மாதியங் குமர
னிலைகொண் மேனியி னிவர்தரு முரோமத்தி னின்றே
யுலைவை யின்றிமுன் னுதித்திடு மிறுதிநா ளொடுங்கும். (க௪க)

ஆவ தாகிய வடிவத்தி னகிலமுஞ் செறிந்து
மேவு மந்நிலை யனையனே யல்லது வேறிங்
கேவர் கண்டன ரவ்வுரு வியற்கையை யெங்கோன்
றேவர் யாவர்க்குங் காட்டிடக் கண்டனர் சிறிது. (க௪௨)

தண்ட லில்லதோ ரொன்றொரு மயிர்நுனித் தலையி
னண்ட மெண்ணில கோடிகள் கோவைபட் டசையப்
பண்டு மேருவிற் கந்தவேள் கொண்டதோர் படிவங்
கண்டி லாய்கொலாங் கணிப்பிலாப் பவம்புரி கடியோய். (க௪௩)

அன்று கந்தவே ளமைந்ததோர் பெருவடி வதனு
ளொன்று ரோமத்தி னிருந்ததற் காற்றிடா துனதாய்த்
துன்று மாயிரத் தெட்டெனு மண்டமாந் தொகையு
மின்று நீயது தெரிகிலை சிறுவனென் றிசைத்தாய். (௧௪௫)

அளப்ப ருங்குணத் தாதியா மெம்பிரா னமரர்
தளைப்ப டுஞ்சிறை மாற்றவுஞ் சதுர்முகன் முதலோர்
கொளப்ப டுந்துய ரகற்றவுங் கொடியரை யறுத்து
வளப்ப டும்பரி சுலகெலாம் போற்றவும் வந்தான். (௧௪௬)

வாழி யானநின் னாயுளும் வன்மையும் வரமுங்
கேழில் சுற்றமும் படைகளும் வான்றொடக் கிளர்ந்து
பூழி யாலுயர் மால்வரைச் சூழலிற் புகுந்த
வூழி மாருதம் போலடு மெம்பிரா னொருவேல். (௧௪௭)

ஆகை யாலிவை யுணர்ந்திலை யிணையிலா தமர்ந்த
வேக நாயக முதல்வனைப் பாலனென் றிகழ்ந்தாய்
சேகு லாவிய மனமுடைக் கற்பிலாச் சிறியோய்
போக போகயா மிவ்வொரு தவற்றையும் பொறுத்தாம். (௧௪௮)

நொய்ய சொற்களா லெந்தையை யிகழ்ந்தனை நொடிப்பின்
வெய்ய நாத்துமித் துன்னுயிர் வாங்குவம் விடுத்த
வைய னாணையன் றாதலி னளித்தன மதனா
லுய்தி யிப்பகல் வேற்படைக் குண்டியா யுறைவோய். (௧௪௯)

உறுதி யின்னமொன் றுரைக்குவ நீயுமுன் கிளையு
மிறுதி யின்றியே யெஞ்சுதல் வேண்டுமே லிமையோர்
சிறைவி டுக்குதி யிகலினைத் தவிருதி செவ்வே
ளறைக முற்றுணை யரணமென் றுன்னியே யமர்தி. (௧௫௦)

வேறு.

என்றிவை பலப்பல விகப்பில்பெரு மாயைக்
குன்றெறி படைக்குரிசில் கொள்கைய தியம்பப்
புன்றொழில் படைத்துடைய சூரிய னுணர்ந்தே
கன்றின னுயிர்த்தினைய கட்டுரைசெய் கின்றான். (௧௫௧)

கூறரெயி றெழாதகுழ விச்சிறுவ னுய்த்த
சாரென நினைந்துனது தன்னுயிர் விடுத்தேன்
பேரலை யவன்பெருமை பின்னுமொழி கின்றாய்
வீரமு முரைக்குதியென் வெய்யசின முன்னாய். (௧௫௨)

கொஞ்சுமொழி கொண்டகுழ விச்சிறுவன் மேலா
யெஞ்சலில தோர்முதல்வ னேயெனினு மாக
வஞ்சிடுவ னோசிறிது மண்டநிலை தோறும்
விஞ்சியமர் பண்ணவர்கள் யாவரையும் வென்றேன். (௧௫௩)

சேண்புரம தாகியமர் தேவர்சிறை தன்னை
வீண்படு கனாவினும் விடுக்கநினை கில்லே
னேண்பல பகர்ந்தனை யெனக்கெதி ரிருந்தே
காண்பன தெலாமொரு கணத்திலினி யென்றான். (௧௫௪)

கொற்றமிகு சூரனிவை கூறியய னின்ற
வற்றமறு மானவரு ளாயிரரை நோக்கி
யொற்றுமைசெய் தோனுயி ரொறுத்தல்பழி வல்லே
பற்றியிவ னைச்சிறை படுத்திடுதி ரென்றான். (கடுச)

என்னலுமவ் வாயிரரு மேற்றெரி விழித்துத
துன்னுகன லைப்புகை சுலாவுவது மானப்
பொன்னின்மிளிர் பீடிகை யமர்ந்தபுகழ் வீரன்
றன்னைவளை குற்றனர் தருக்கினொடு பற்ற. (கடுரு)

மிடற்றகுவர் சூழ்வரலும் வீரனெழுந் தன்னோர்
முடிச்சிகை யொராயிரமு மொய்ம்பினொரு கையாற்
பிடித்தவுணர் மன்னனமர் பேரவை நிலத்தி
னடித்தன னெடிப்பிலவ ராவிமுழு துண்டான். (கடுசு)

மார்புடைய மொய்ம்பொசிய வார்குருதி சோர
வோர்புடையின் யாவரையு மொலலைதனி னட்டே
சூர்புடையின் முன்னநனி துன்னும்வகை வீசிச்
சீர்புடைய நம்பியிவை செயபல்புரி கின்றான். (கடுஎ)

எந்தைநெடு வேலனை யினித்தடித றிண்ண
மந்தமுறு முன்னமுன தைம்புலனும் வெஃக
வந்தபல துப்புரவும வல்லைபெரி தார்ந்தே
புந்திதெளி வாயமர்தி போந்திடுவ னென்றான். (கடுஅ)

சேயவிற லண்ணலிவை செப்பியகல் காலை
யாயவ னிருந்திடு மரித்தவிசு தானு
மீயுற வெழுந்துவிசும் பிற்றலையி னேகி
மாயையென வொல்லையின் மறைந்துபடர்ந் தன்றே (கடுகூ)

ஆ திருவிருத்தம் - கூங்கூ.

---

வசனம்.

வீரவாகுதேவர், சயந்தன்முதலிய தேவர்கள் சிறைப்பட்டிருககு மிடத
தைவிட்டு, அகழியைத்தாண்டி, மதில்களையும் கோபுரங்களையுங்கடந்து, சூர
பன்மனுடைய அத்தாணிமண்டபத்தை வியந்துநோக்கி, அவனதுசபையிற் பிர
வேசித்து, தாம் முருகக்கடவுள்விடுதத தூதென்பதைத்தெரிவித்து, சரவணப்
பெருமானுடைய பாதஙகளைச் சிந்தித்திருக்கையில், அப்பெருமானது கிருபை
யால் ஒரு அற்புதவிமானம் அங்கேவரக்கண்டு, இது நமது குகப்பெருமானது
கருணைவிசேடத்தால் வந்ததென்றுதுணிந்து அதன்மீதேறி வீற்றிருந்தார் இவ
ரைச் சூரபன்மன்நோக்கி, நீ யாரென்றுகேட்க, நீ தேவேந்திரன் முதலியோ
ரைச் சிறையிட்ட தீச்செய்கையைநோக்கி, சண்முகப்பெருமான் உன்னைத்தண
டிக்க எழுந்தருளியிருக்கிறார். ஆதலால் தேவர்களைச்சிறைவிடுத்து நீயும் அவ
ரைச் சரணடைந்தாயானல், நீ சிவபெருமானிடத்திற்பெற்ற வரமுதலியவற்றை
இன்னஞ்சிலகாலம் அநுபவிக்கலாம், அப்படிச் செய்யாதபக்ஷத்தில் உன்செல்வ
முதலியவற்றையேயன்றி உன்னுயிரையும் இழந்துவிடுவாய், இந்தச்செய்தியை
உனக்குத் தெரிவிக்கும்பொருட்டு என்னையனுப்பினர் உன்கருத்தென்னவென்று

கேட்க, சூரபன்மன் அந்த வீரவாகுதேவரைநோக்கி, நீ சொன்னசொற்கள் மிகவும் அதிசயத்தையுண்டாக்குகின்றன. பிரமன்முதலாகிய தேவர்களெல்லாம் எனக்கடங்கிக்கிடக்கிறார்கள், அந்தச் சிறுவன்சொல்லைக்கேட்டு தூதாகவந்தாயாதலால் நீயும் அறிவிலியென்றேநினைக்கிறேன். தேவர்களை யொருகாலும் சிறைவிடுவிக்கமாட்டேன். என்தம்பியாகியதாரகனைக்கொன்ற பழிக்குப்பழி வாங்காமல்விடேன். இன்னுஞ் சற்றுநேரம் இங்கிருந்தாயானால் உன்னுயிரை யிழந்துவிடுவாய், விரைவாகப்போய்விடு என்றான்.

இப்படி சூரபன்மன்சொல்லக் கேட்ட வீரவாகுதேவர், பெருங்கோபங்கொண்டு, அவனைநோக்கி, அறிவில்லாதவனே, நான் உனக்கிதஞ்சொல்லவந்தால் அதைக்கேட்டுப் பிழைக்காமல் உன்பெருமையைப் பாராட்டிப்பேசுகிறாய், அன்றியும், பரம்பொருளாகிய சிவசண்முகப்பெருமானைச் சிறுபாலகனென்றும் இகழ்ந்துபேசுகின்றாய், அப்படிபேசின உன்நாவையறுத்து உன்னுயிரையும் ஒருநொடியில் வாங்குவேன். அப்படிச்செய்யவது சண்முகப்பெருமானுடைய கட்டளைக்கு மாறாகுமாதலால் உன்னை உயிரோடுவைத்துப் பேசிக்கொண்டிருக்கிறேன். எமது பெருமானாகிய சண்முகனை யின்னானென்றறியாய்போலும், எல்லா அண்டங்களும் அவற்றிலுள்ள சராசரஜீவராசிகளும், அவற்றினுள்ளேவியாபித்து அவற்றையியங்குவிப்பவனும், சகல வேதாகமபுராணேதிகாசங்களின் முடிவாகிய பிரணவஸ்வரூபமாயிருப்பவனும் அவனேயாவன்; வீணேயேன் பிதற்றுகிறாயென்றுசொல்ல, சூரபன்மன் மிகவுங் கோபாவேசங்கொண்டு, நீ தூதனாய்வந்தவனாதலால் உன்னைக்கொலவது தகுதியன்று என்றுசொல்லி, தன்னருகேயிருப்பவராகிய ஆயிரவரைநோக்கி, இவனைப்பற்றிச் சிறையிடுங்களென்றான். அவர்களும் அப்படியே வீரவாகுதேவரை நெருங்கிப் பற்றவருகையில், அவர் அவ்வாயிரவர்சிகையையும் தம்மொருகையாற் பிடித்து நிலத்திலோங்கியறைந்துகொன்று, சூரபன்மனைநோக்கி, இனியெமபெருமானாகிய சண்முகக்கடவுளது திருக்கரத்திலுள்ள வேற்படைக்கு உன்னுயிரை விருந்திட ஆயத்தமாயிருக்கக்கடவையென்று சொல்லிவிட்டு, தாமெழுந்தருளியிருந்த சிங்காதனத்துடனே மறைந்துபோயினர். இதுநிற்க,

அவைபுகுபடலம் முற்றிற்று.

## சதமுகன்வதைப்படலம்.

ஒண்ணில வெயிற்றினரோ ராயிரரை யட்டே
யெண்ணல னலவக்கள மிகந்துபடர் காலைக்
கண்ணினழல் காலும்வகை கண்டுபுடை யாக
நண்ணுசத மாமுகனை நோக்கிநவில் கின்றான். (க)

ஆறுமுக னேயிவ னுயிரரை யிங்ஙன்
கோறல்புரிந் தானெனது கொற்றமுழு தெள்ளி
வேறலுடை யோர்களென மேன்மைபல செப்பிச்
சேறல்புரி வான்றவிசு மும்பரிடை செல்ல. (௨)

ஒட்டியநம் வீரரை யொறுத்தகல்வ னேனும்
விட்டதொரு தூதனொடு வெஞ்சம ரியற்றி
யட்டல்பழி யாகுமவ னற்றலை யடக்கிக்
கட்டிவிரை வால்வருகெ னக்கழற லோடும். (௩)

ஆற்குல முகிற்பொருவு சூரனடி தாழா
வேற்கும்விடை பெறறிசைவி னேகுதல் புரிந்தா
னாற்கடலு மேவினு கதுப்பரிய வூழிக்
காற்கனலி னேதைதொடர் காட்சியது மான. (௪)

ஏகுசத மாமுக னிலக்கமற வீரர்
பாகம்வர வெண்ணில்படை பாணிமிசை பற்றி
வேகமொடு சென்றுதனி வேலன்விடு வீர
வாகுவினை யெய்தியொரு மாற்றமறை கின்றான். (௫)

காவல்பல நீங்கிவரு கள்வவுல குள்ளோ
ரேவரும் வியப்பவரு மெங்களிறை முன்ன
மேவினை யிகழ்ந்துசில வீரருயிர் வௌவிப்
போவதெவ னில்லுனது போர்வலி யழிப்பேன். (௬)

பட்டிமை யுருக்கள்கொடு பாறலரி தாசை
யெட்டுள பரப்பதனுள் யாண்டகல்வை யேனும்
விட்டிடுவ னோவென விளம்பிவெரி நெய்திக்
கிட்டுதலும் வீரனிது கேட்டன னெதிர்ந்தான். (௭)

வேறு.

கொற்ற வேலுடை யண்ணறன் மொழியினைக் கொண்டில னிகழ்ந்தென்னைப்
பற்ற வாயிரர் தங்களை விடுத்தலும் படுத்தனன் பெயர்காலை
மற்று மீதொரு வயவனை யுய்த்தனன் மன்னவ னிவனுவி
செற்று மாநக ரந்தனை யழித்தனன் செல்லுவ னினியென்றான். (௮)

கருதி யின்னணஞ் சதமுக னெனப்படு காவலன் றனைநோக்கிக்
குருதி வேலுடைப் பண்ணவ னடிமனங் கொண்டுதிண் டிறல்வாகு
பொருத லுன்னியே யீண்டறை கூவினை பொள்ளெனப் படையோடு
வருதி யாலெனத் தெள்விளி யெடுத்தனன் மறலிக்கு மிறைபோல்வான்.()

எல்லை யன்னதிற் சதமுகற் சூழ்தரு மிலக்கரு மெதிரூன்றி
வில்லு மிழ்ந்திடு வெஞ்சரந் தொடுத்தனர் வேற்படை விடுக்கின்றார்
கல்லெ னும்படி நேமிக ளுருட்டினர் கப்பணஞ் சிதறுற்றார்
வல்லை முத்தலைப் படையெழு வோச்சினர் மழுக்கொடே யெறிகின்றார்.()

அணிகள் பட்டவர் விட்டவிப் படைவகை யண்ணன்மேற் புகலோடுந்
துணிகள் பட்டன நெரிந்தன வெரிந்தன துகளுமாய்ப் போயிற்றான்
மணிகள் பட்டிடு மிருஞ்சிறைக் கலுழர்க்குள வலியன்மேற் படுநொய்ய
பணிகள் பட்டன போன்றன வேறிலை படியெடுத் துரைத்தற்கே. (௧௧)

இலக்க மாகிமுன் னின்றபே ராண்டகை யிவர்செய லினைநோக்கி
யிலக்க மாய்முழு துலகமுந் துளக்கியே யிராயிரப் பத்தென்னு
மிலக்க மாமுடி கொண்டதோர் சூளிகை யிம்மெனப் பறித்தேந்தி
யிலக்க மாகியே யெதிர்பொரு தானவர் தங்கண்மே லெறிந்திட்டான். ()

ஏதி லான்விடு சூளிகை சிறகர்பெற் றிறந்துவீழ் மேருப்போன்
மீது சென்றம ரியற்றியே நின்றிடும் வெய்யவர் மிசையெய்தித்
தாது முற்றவுஞ் சாந்துபட் டொருங்குறத் தனுவெலாஞ் சிதைத்திட்டே
போத நீர்மூகி லார்ப்பொடு புவிக்கண்வீழ்ந் துடைந்தன வுதிராதி. (௧௩)

கொடிசெ றிந்திடு சூளிகை தன்னுட னவுணர்தங் குழாங்கொண்ட
முடிசி தைந்தன நாசிநீ டலைமெலா முடிந்தன முடிவில்லா
வடிவ மைந்திடு கன்னகூ டத்தொகை மாய்ந்தன கிலைகொள்ளு
ஈடிக ளர்ந்தன கொடுங்கையு மாண்டன வொழிந்தவு மழிவுற்ற. (௧௪)

இலக்கர் தம்மையுஞ் சூளிகை தன்னுட னிமைப்பொழு தினிலட்டு
கிலக்கன் வீரனின் றிடுதலுஞ் சதமுக னிரைவிழி கொடுநோக்கிக்
கலக்க நண்ணியே தமரினைக் காண்கிலன் கவன்றனன் றெளிவெய்தி
யுலக்கை சூலம்வேல் சக்கரந் தோமர மோச்சுத லுறுகின்றான். (௧௫)

உற்ற காலையி னெண்டிறன் மொய்ம்பினோ னுருகெழு சினஞ்செய்தோர்
பொற்றை நேர்தரு சிகரியைப் பறித்தனன் பொள்ளென வெறிகாலை
மற்றொர் வார்சிலை வணக்கியே வெய்யதீ வாளியா யிரம்பூட்டி
யிற்று வீழ்வகை யிடைதனி லறுத்தன னெறிதரு கதிர்வேலான். (௧௬)

அறுத்து நூறுகோல் பின்னரு மாங்கவ னுகத்தி னடுவெய்தச்
செறித்த காலையின் வீரவா குப்பெயர்ச் செம்மல்போ யவன்வில்லைப்
பறித்த னன்முறித் தெறிதலுஞ் சதமுகன் பற்றவீ திடையென்னக்
குறித்தொ ரைம்பதிற் றிருகர மோச்சியே குரிசிலைப் பிடித்திட்டான். ()

பிடித்த தானவத் தலைவனை யண்ணலோர் பெரும்புயங் கொடுதாக்கிப்
படித்த லைப்படத் தள்ளலும் வீழ்ந்துளான் பதைபதைத் தெழுகாலை
யடித்த லத்தினு லுதைத்தன னசனியா லழுங்குறு மரவம்போற்
றுடிப்ப வேயுரத் தொருகழ லுறுத்தினன் சோரிவாய் தொறுஞ்சோர. ()

கந்தெ னப்படு மொய்ம்புடை வெய்யசூர் கட்டுரை முறைபோற்றி
வந்தெ திர்த்திடு சதமுகத் தவுணனை மிதித்திடு மறமைந்த
னந்த கப்பெய ரசுரனை யாற்றல்பெற் றமர்முய லகன்றன்னைத்
தந்தி யைப்பத மொன்றுகொண் டூன்றிய தாதைபோற் றிகழ்கின்றான். ()

வேறு.

மின்னல் வாளெயிற் றவுணன் மார்பகம் விடரெ னும்படி விள்ளவே
தன்னொர் பாத முறுத்தி மற்றொரு தாளி னைக்கொடு தள்ளியே
சென்னி யாவு முருட்டி னன்றிசை முற்று நின்று பரித்திடுங்
கன்ன மார்மத மால்க ளிற்றினும் வன்மை சான்றிடு கழலினன். (௨0)

நூறு சென்னியு மிடறி யாங்கொரு நொடிவ ரைப்பின்முன் னவுணனை
யீறு செய்தன னதுமு டித்தபி னெல்லை யில்சின மெய்தியே
யாறு மாமுக வள்ளல் வாய்மை யிகழ்ந்து ளானவை யத்தைமுன்
னீறு செய்துபி னடுவ னிந்நக ரத்தை யென்று நினைந்தனன். (௨௧)

ஆக திருவிருத்தம் - ௬௬0.

---

வசனம்.

சூரபன்மன் தனது சபையிலே தன் கண்ணெதிரே ஆயிரவரைக்கொன்று சென்ற வீரவாகுதேவரைப் பற்றிக் கட்டிக்கொண்டுவரக்கடவையென்று, மஹாவீரனாகிய சதமுகனைநோக்கிச்சொல்ல, அவனும் இலக்கம்வீரரைத் தனக்குதவிப்படையாகக் கொண்டுசென்று, வீரவாகுதேவரைக்கண்டு, எமதிறைவனாகிய சூரபன்மனுடைய பராக்கிரமத்தைநிந்தித்து, அவன்கண்ணுக்கெதிரே ஆயிரவரைக

கொன்று மறைந்தோடுகிற வீரனே, நில்லுநில்லு, நீ தூதனுதலால் உன்னுயிரை வாங்குதல் எமக்குத்தகாது, உன்னைக்கொண்டுபோய்ச் சிறையிலடைத்துவைப்போம், எவர்வந்துவேண்டினும் உன்னைச் சிறைவிடுவிக்கவேமாட்டோம என்று சொல்லிக்கொண்டே நெருங்கிவரும்போது, வீரவாகுதேவர் அவனேடுவந்த இலக்கம்வீரரையும் ஒருநொடியிற்கொன்றொழித்து, பிறகு எதிர்த்துவந்த சதமுகனை மகாலால் இடறிக்கொன்றனர். அவ்வாறு சதமுகனைக்கொன்றும், கோபந்தணியாமல சூரபன்மனது சபையையும் நகரையும் அழிக்கவேணடுமென்று திருவுளங் கொண்டார்.

சதமுகன்வதைப்படலம் முற்றிற்று.

---

# காவலாளர்வதைப்படலம்.

சடரும் வேற்படைத் தொல்குமரேசன
தடிகளை முன்னி யருளுடனுண்டகை
படிய ளந்திடு பண்ணவ னென்மென
நெடிய பேருருக் கொண்டுநின் றனரோ. (க)

திசைய ளந்தன திண்புயநு சென்றுசேண
மிசைய ளந்தன மேதகு நீண்முடி
வசுதை யாவு மளந்தன வாகழ
லசைவ ருந்திற லாடவ னிறபமே. (உ)

திருவு லாங்கழற் சேறடிச் செம்மல்பே
ருருவு தாங்கி யுகந்தன னிற்றலு
மரவின் வேந்தரு மாதியங் கூர்மரும்
வெருவி னூர்கள வியன்பொறை யாற்றலா. (ங)

கதிரெ றித்திடு காமரு பூணினன்
மதுகை பெறற வடிவொடு நிற்றலு
மதுப ரித்தற் கருமையி னுறறவும்
விதலை யுற்றது வீரம கேந்திரம். (ச)

உலங்கொள் வாகுவி னெண்பத மூன்றவும
விலங்கி யேதள்ளர் வீரம கேந்திர
மிலங்கை நீர்மையெய் தாம லிருந்ததாற்
குலங்கொ டானவக் கோமக னாணையால். (ரு)

சேணை ளாவிய சென்னிய னெண்டிசை
காண நிற்புறு காட்சியன் கந்தவே
ளாணை காட்டி நிறுவிய வாடலாந்
தாணு வென்னத் தமியன் விளங்கினன். (சு)

சான்ற கேள்வித் தலைமகன் றாட்டுணை
யூன்று கின்ற வுழிதொறு மாநில
மூன்று கீண்டிட வவ்வப் புழைதொறுந்
தோன்று கின்றன கூம்கட னீக்கமே. (எ)

ஆக்க னூன்று மடிதொறுந் தோன்றிய
நீக்கம் யாவு நெடுந்திறல் வெய்யசூர்
வாய்த்த கோயில வளைந்திறை போற்றிய
வேதத வைக்களந் தன்னினு மேவிய. (அ)

பூழை கொண்டு புறம்படர் நீத்தநீர்
மாமழை கொண்டவன் கோயில் வளைந்தராய்ப்
பேழை கொண்ட பிணிப்பறு பாந்தள்போற்
கூழை கொண்ட மறுகிற் குலாயதே. (கூ)

தூய்ய பூழை தொறுந்தொறுந் தோன்றுநீர்
மையல வெங்கரி வாம்பரி தேர்படை
கைய ரிக்கொடு காசினி யாறுபோற்
செய்ய மாநகர் யாங்கணுஞ் சென்றதே. (க0)

தோட்ட தன்ன சுழிப்படு வாரியி
னீட்ட மாநகா வீதிதொ றேகியே
பாட்டின் மாளிகை பற்பல சாடியே
மீட்டு மொலலையின் வேலை மடுத்ததே. (கக)

எம்மை யாருடை யெந்தைதன் றாதுவன்
செம்மை நீடு திருவுரு நோக்கியே
கைம்ம றிக்கொடு கண்டனர் யாவரு
மம்ம வோவென வச்சமுற் றோடினர் (கஉ)

மாவு லாவரு மன்னவன் கோயிலுட்
காவ லாளரிக் காளையைக் கண்ணுறீஇ
யோவி தோர்வஞ்ச னுற்றன னீண்டெனாக்
கூவி ளித்தனர் தத்தமிற் கூடினர். (கங)

கூடு கின்ற குணிப்பருங் காவலோர்
நீடு மெய்கொடு நின்றவற் கஞ்சியே
யாடல் பூண்டில மென்னி னரசனே
சாடு நம்மைச் சரதமென் றெண்ணினர். (கச)

குமரி மாமதிற் கோயிலுட் போற்றியே
யமரி யோர்களொ ரைம்பது வெள்ளத்தர்
திமிர மேனியர் தீயுகு கண்ணினர்
சமரி யற்றத் தலைத்தலை மண்டினர். (கரு)

மண்டி மற்றவர் வல்லெழுத் தோமரம்
பிண்டி பாலம் பெருங்கதை யாதியாக்
கொண்ட கொண்ட கொடும்படை வீசியே
யண்டம் விண்டிட வார்த்தன ராடினர். (கசு)

ஆடு மெல்லை யடுபடைத் தானவர்
பாடு சூழ்ந்த பரிசினை நோக்கினை
னீடு சான்ற விடித்தொகை யாயிர
கோடி போற்புயங் கொட்டினின் றார்ப்பவே. (கஎ)

அலைக்க வந்த வவுணப் படையெலாங்
கலக்க மூழ்கிக் கருதிநுணர் வலைகியே
யுலக்கு ருத வுருமிடி யுண்டிடும
புலைக்க டுந்தொழிற் புள்ளென லாயவே. (கஅ)

வேறு.

பன்மழைக் குலங்களிற் படைக்கலங்கள் யாவையும்
வன்மைபெறற வீரருய்ப்ப வந்துமேனி படுதலுரு
சின்மயத்த ஞெற்றன்மிக்க செய்யவீழ் விழுததிய
தொன்மரத்தி யற்கைபோன்று சோரிசோர நின்றனன். (கக)

ஆனகாலை வீரவாகு வறிவனங்கி யிறசிலை இ
மானவீரர் மீதலாது வாளெடுக்க லேனெனுத்
தேனின்மாப் பெருங்கடற் றிளைததலைக்கு மத்தெனத்
தானவப் பதாதியைத் தடிந்தலைத்தன் மேயினுன். (உ0)

மிதித்தனன் கொதிததனன் விடுத்திலன் படுத்தனன்
சதைத்தனன் புதைத்தனன் றகாததனன் றுகைததன
னுதைத்தனன் குதித்தன னுருட்டினன் புரட்டினன்
சிதைததனன் செகுத்தனன் செருக்கினன் றருக்கினன். (உக)

சிரத்தினை நெரித்தனன் றிறற்புய மிறுத்தனன்
கரததினை முரித்தனன் களததினைத திரிததன
னுரத்தினைப் பிரித்தன னுருததனன் சிரிததனன
புரத்தினை யுரித்தனன் பொடித்தனன் படைததிறம. (உஉ)

எடுத்தனன் சுழற்றின னெறிந்தனன் சிலோர்தமைப்
புடைத்தன னிடிததனன் புயத்திறைற் சிலோர்தமைப்
பிடித்தனன் பிசைந்தனன் பிறிந்தனன் சிலோர்தமை
யடிததலங் கொடித்தலத தரைந்தனன் சிலோர்தமை. (உங)

பெருத்தனன் சிறுத்தனன் பெயாந்தும்வேறு பல்லுருத
தரிததனன் னடர்தனன் றனிததனி தொடாந்தனன்
மருத்தெனக் கறங்கினன் வளைந்தனன கிளர்ந்தன
னெருத்தன்வெள்ள மைம்பது முலக்குறக் கலக்கினுன். (உச)

மஞ்ஞையன்ன மொண்புரு மடக்குயிற் றிரட்பயில்
செய்ஞ்ஞ லங்கொண் மாடமீது சேனங்கூளி பிளளைகள்
பிஞ்ஞகன் குமாரனுடு பேரமாக் களம்படு
மஞ்ஞையாளர் குருதியூ னருந்துமா றிருந்தவே. (உரு)

மானினஞ் செறிந்திரைந்து வந்தவெல்லை தன்னிடைத்
தானொர்சிங்க வேறுபுக்க தன்மைபோல வவுணர்தங்
கோனிருந்த வுறையுளிற் குலாயகாவ லாளராஞ்
சேனைவெள்ள மைம்பதுஞ் சினத்தின்வல்லை சிந்தினுன். (உசா)

முறிந்தன ருறுப்பியாக்கை முற்றும்வேறு வேறவாய்ப்
பிறிந்தனர் தகர்ந்தனா பிறங்குசென்னி சோரியுட்
செறிந்தனர் புதைந்தனர் சிதைந்தன ருருண்டனர்
மறிந்தன ரிறந்தனர் மடிந்தனர் கிடந்தனர். (உஎ)

இன்னபான்மை வீற்றுவீற்றி னவுணர்தானை யாவையுஞ்
சின்னபின்ன மாகியே சிதைந்துவீழ்ந் துலந்திட
வுன்னுகின்ற முன்னமட்டு லம்பினுன் சிலம்பினின்
மன்னன்மங்கை நூபுரத்தின் வந்தவீர வாகுவே. (உஅ)

வள்ளனின்று சமரிழைப்ப மாண்டவீரர் யாக்கையி
னுள்ளதாது வானவேழு முருவம்வேறு காண்கிலா
தள்ளலாகி யொன்றுபட்ட தங்கிதன்னி னுருகிமேய
வெள்ளியாதி யுலகம்யாவும் விரவும்வண்ண மென்னவே. (உகூ)

ஆ திருவிருத்தம் - ௬அ௯.

வசனம்.

இவ்வாறு திருவுளங்கொண்ட வீரவாகுதேவர் சண்முகப்பெருமானது சீர்பாதத்தைத்தியானித்து, உலகளந்தபெருமாள்போலப் பேருருக்கொண்டு நின்றனர். அந்தப் பேருருவைக்கண்ட அந்நகரமாந்தரெல்லாரும் அதிசயமடைந்தனர். அக்கோலுமண்டபததிலிருந்த காவலாளரெல்லாம், இவரைக்கண்டஞ்சி, இவன்யாரோ தெரியவில்லை, இவனோடுநாம் போர்செய்யாதிருந்தால் நம்மரசனலை நாம் உயிரிழப்போம் என்றெண்ணி, தமது கைகளிலிருந்த கதை, தோமரம், பிண்டிவாலம் முதலிய படைகளை வீரவாகுதேவர்மேலெறிந்தார்கள். அப்பொழுது வீரவாகுதேவர் சினந்து இவர்களோ அற்பர்கள், இவர்களோடு நாம்நின்று வாள்கொண்டு சமயுத்தம்பண்ணுவது தகுதியன்றென்று துணிந்து, அவர்களையெல்லாம் பாற்கடலைக்கலக்கிய மந்தரமலைபோலச் சிலரைமிதித்தும், சிலரையுதைத்தும்,சிலரைத் தகர்த்தும், சிலரைநசுக்கியும், ஒருநொடிப்பொழுதில் கொன்று குவித்துநின்றார்.

காவலாளர்வதைப்படலம் முற்றிற்று.

## நகரழிபடலம்.

ஆசுறு மவுண வெள்ள மைம்பது முடித்தோ னஞ்ஞா
ன்றேசனை யளவை யான்றே யொராயிர மும்ப ரேகித
தேசுறு மேரு வென்னச் சிகரமோ ரிலக்கஞ் சூடி
வீசுபொன் சுடர்நின்ற வேரமொன் றங்கட் கண்டான். (க)

புறத்திரு ளிரிய வைகும் பொலஞ்சுடர்ப் பொன்செய் வேரந்
திறத்தியல் கோயின் முன்னஞ் சேர்ந்தது தன்னை வீரன்
பறித்தொரு கரத்தி னேந்திப் பதகனுஞ் சூர பன்ம
னறத்திய விழுக்கி வைகு மவைக்களம் வீசி யார்த்தான். (உ)

பன்மணி செறிந்த பொற்பிற் பாயொளி யெரிபொன் வேர
மன்னவ னுறையுஞ் செம்பொன் மாயிரு மன்றிற் போதன்
மின்னவிர் மேரு வாதி வெற்பெலா மிகலி னொன்றிப்
பொன்னகர் பொடிப்பச் செல்லுந் தன்மையைப் போலு மம்மா. (௩)

வார்த்தரு கழற்கால் வீரன் வானுரு மேறு மூட்க
வார்த்திடு துழனி யேகி யரசன்மே வியவத் தாணி
சேர்த்தவர் கன்னந் தூடு செறியுமுன் னெறித லுற்ற
பேர்த்திடு செம்பொன் வேரம் பேரவை மிசையுற் றன்றே. (௪)

விற்செறி தூபிச் செம்பொன் வியன்மணி கனலும் வேரங்
கபசெறி பெருந்தோள் வீர னெறிதலுங் கடிது நண்ணிப்
பொற்செறி மார்பிற் சூரும் புதல்வருஞ் சிலரும் வைகுஞ்
சிற்சில விடையே யன்றி மன்றெலாஞ் சிந்திற் றுமால். (ரு)

தடத்தனி வேரங் கீண்டு தபனியத் தவைக்க ணேச்சி
யிடித்தன னொருதா னிற்கு மெம்பிரா னேவற் றாதன்
படைத்தளித் திறுதி வேலைப் பசும்பொனார் தசும்பி னண்ட
முடைத்தல கழித்து நிற்கு மொருபெருங் கடவு ளொத்தான். (சு)

புலவுகொ ளலகு வெவ்வாய்ப் புட்செறி பொதும்பர் தன்னிற்
பலமுடை யுருமு வீழப் பட்டதோர் பரிச தென்னத்
தொலைவகன் மைந்தன் விட்ட சூளிகை தகர்ப்பத் தொல்சீர்
மலிவுறு சனங்க ளோடு மன்றமங் குற்ற தம்மா. (எ)

இடிந்தன மிசையி னெல்லை யிற்றபித் திகையின் சூழல்
பொடிந்தன வுத்தி ரங்கள் போதிகை பூழி யாகி
முடிந்தன மதலை யாவு முரிந்தன கபோதம் வீழ்ந்த
மடிந்தன திருவுஞ் சீரு மன்றழி வுற்ற தன்றே. (அ)

பிடிகை புரைந்த பொற்பிற் பேரவை தகர்த லோடும்
பாடுற வரசற் சூழ்ந்த பரிசனர் தம்முட் சில்லோ
ரோடினர் சிலவா மெய்யூ றுற்றனர் சிலவர் நெக்கு
விடினர் சிலவ ராற்ற மெலிந்தனர் புலம்பலுற்றார். (கூ)

நெக்கது பொதியி லாக நிரந்தது செம்பொற் பூழி
திக்கொடு புவியும் வானுஞ் செறிந்தன வவுண ராகித்
தொக்கன ருடைந்து மாய்ந்து தொகைபிரிந் தழிந்தார் தொல்லைத்
தக்கனி னுணர்வு தீர்ந்த தகுவர்கோ னிவற்றைக் கண்டான். (கO)

ஆயிர நாமத் தண்ண லனையவன் வண்மைகாணு
வாயிரம் வடவை யேபோ லழன்றுதன் னயலி னின்ற
வாயிர நெடுந்தோ ளஞ்ஞா றுனனங் கொண்ட நீயோ
ராயிரர் தம்மை நோக்கி யடலுரு மேற்றிற் சொல்வான். (கக)

விழிப்பரு கிவப்பி னேங்கும் வேரமொன் றதனைக் கீண்டே
தெழிப்பொடு குமரன் றாதன் செலுத்தினன் செம்பொன் மன்ற
மிழிபபுறத் தகர்ந்து வீழ்ந்த தீண்டுசில் லிடமே யன்றிப
பழிபபெனக் கிதன்மே லுண்டோ பட்டதென் புகழு மன்றே. (கஉ)

கோறலே கொற்ற மன்று லொற்றனைக் குறுகி நீவிர்
மாறுபோ ரியற்றி யேனு மற்றவன் வழாத வாற்று
லீறுசெய் திடாது பற்றி யெம்முனர்த் தருதிர் மெய்யி
னூறுசெய் தவனை வானோ ருடன்சிறை யுய்ப்ப னென்றான். (கங)

அன்னவ ரதனைக் கேளா வரசவீ தருளிக் கேண்மோ
பான்னலன் றாதன் சோரி யுயிரொடு குடித்தற் குற்று
னனாரு ளாணை நாடி நெஞ்சகம் புழுங்கி யஞ்சி
யினையதோர் பொழுதுந் தாழ்த்தே மினியது புரிது மென்றார். (கச)

என்றனர் வணக்கஞ் செய்ய வினிதென வுவகை பூத்துக்
கன்றிய வவுணர் தங்கள் காவலன் விடுப்ப வங்கட்
சென்றனர் பத்து நூற்றுத் திறலுடை மொய்ம்பர் முன்ன
நின்றிடு வீர வாகு நிலைமையை யுரைக்க லுற்றாம். (௧௫)

வேறு.

வேரம தெறிந்தவை விட்டி நின்றுளான்
சூருறை நகர்வளந் தொலைச்சிச் சூழுநர்
சேருறு மிருக்கையுஞ் சிதைப்ப னின்றெனு
வோருறு புந்தியி லுன்னி னனரோ. (௧௬)

மறிப்பிணை முதலிய மான்கள் புள்ளினஞ்
சிறப்புறு தண்டலை மணியிற் செம்பொனிற்
குறிப்பினர் குயிற்றுசெய் குன்றம் யாவையும்
பறித்தனன் றிசைதொறும் பரவ வீசினான். (௧௭)

வரைவயி றுயிர்த்திடு மாசில் பல்வகை
யரதன நிரைகளி னணிய செம்பொனின்
மரபினி லியற்றிய வரம்பி றெற்றிகள்
விரைவொடு தொட்டன னெடுத்து வீசினான். (௧௮)

முடிவகல் பேழையின் மூட்டு நீக்கியே
யடியுறு கொளகல மவற்றைச் சாய்த்தெனப்
படியுறு மண்டபம் பலவுந் தொட்டெடா
விடிபுரை யோதையான் யாண்டும் வீசினான். (௧௯)

மரையன் மிசையுறு மாயற் புல்லுவா
னிலமகள் கைகளை நீட்டி யென்னவா
னுலகெலா மிகந்துமே லோங்கு கோபுரம்
பலபல பறித்தனன் பாங்க ரோச்சினான். (௨0)

மூளுறு மெரிசிகை முடித்துத் தானவர்
மேனொடு தமித்தமி கெழுமி யுற்றென
வாளுறு மாமணி வயங்கு தூபமைச்
சூளிகை பலபல தொட்டு வீசினான். (௨௧)

கற்றிடும் விஞ்சையின் கழகம் பல்கடைத்
தெற்றிகள் வேதிகை சிறந்த சாலைக
டெற்றிடு பழுமரச் சோலை வாவிகண்
மற்றுள பிறவொடு மட்டித் தானரோ. (௨௨)

கந்துக வியனிரை கரிக டேர்த்தொகை
பந்தியிற் சாலையிற் பயின்று நின்றன
வந்தமின் றுயின வள்ளி யள்ளியே
யுந்தினன் றிசைதொறு முராற்றி வீழவே. (௨௩)

நிலவரை சூழ்தரு நேமி வெற்பென
மலிதரு செம்மணி வகையிற் பண்ணிய
பலவகை யியந்திரப் பதண விஞ்சிக
ளொலிகழற் காலினு னுதைந்து வீட்டினான். (௨௪)

பூழியம் பொற்புயப் புனிதன் வெய்யசூர்
வாழுறு கோநகர் வளத்தை யின்னண
மூழியின் மருந்தென வுலாவி யட்டபின்
சூழுறு கிடங்கருந் தூர்த்திட் டானரோ. (உ௫)

அறந்தலை நின்றிடா வரசன் கோயினின்
றெறிந்திடு சிகரிக ளிலங்கு சூளிகை
நிறைந்திடு மண்டப நெருங்கு காமர்காச்
செறிந்தன பிறவொடு சென்று சேணெலாம். (உ௬)

உளர்ந்திடு வரியளி யுலாவு தொங்கலான்
வளர்ந்திடு பாணியான் மன்னன் செல்வமாய்க்
களைந்தெறி கின்றன கணிப்பி லாதவுந்
கிளர்ந்திடு நெடுமுகில் கிழித்துச் சென்றவே. (உ௭)

சூரெனு மவுணர்கோன் படைத்த தொல்வளஞ்
சேரிய மிசைவரத் தெரிந்து வானிடைச்
சாருறு கடவுளர் தம்மு ளோங்கியே
யேரிய ஞெகைபிற் றிரியல் போயினா. (உ௮)

ஊனிவர் குருதிவே லொருவ னேச்சிய
தானவர் கோன்வளந் தகைந்து விண்ணவா
மேனிகழ் பதங்களை வீட்டி யேகியே
வானதி தன்னையும் வல்லை தூர்த்தவே. (உ௯)

வெறித்திடு தார்ப்புய விடலை கொய்தினிற்
பறித்தெறி யவுணர்கோன் பலவ ளங்களு
மெறித்திடு நீங்கதி ரெல்லை வேந்தனை
மறைத்தன பணிபல மயங்கிச் சூழ்ந்தபோல். (௩௦)

சோலையின் மண்டபத் தொகையிற் சூளிகைப்
பாலினிற் சிகரியிற் பயின்ற புளளெலா
மேலுறு செலவினில் விரைவி னேகியே
மாலயன் புள்ளொடு மருவி வைகிய. (௩௧)

செஞ்சுடர்ச் சூளிகை சிகர மாதிகள்
விஞ்சிய மிசைவர விழித்தூத தாளிலோ
னெஞ்சிய வுடலமு மிறுங்கொ லின்றெனு
வஞ்சின னழுங்கின னலரி பாகனே. (௩௨)

வள்ளுறு வசிகெழு வயிர மாமுடி
யுள்ளபல் சூளிகை யும்பர் செல்வன
பிள்ளைக ளெறிந்திட பிறங்கு பம்பரம்
பொள்ளென வீண்டிவான் போவ போன்றவே. (௩௩)

மீப்படு வியன்முகில் கிழித்து விண்மிசை
மாப்பெருஞ் சிகரிகள் வல்லை செல்வன
நீப்பருங் கன்மா னெடுங்க துப்பினிற்
சீப்பிடு கின்றதோர் செய்கை போலுமால். (௩௪)

பயனுறு பழுமரப் பைம்பொற் காமர்கா
வயனெறி தந்திட வகல்வின் செல்வன
நயனறு மவுணனூர் நணிய கற்பகம்
வியனுல கிருந்திட மீள்வ போன்றவே. (ருரு)

ஐயன தொற்றுவ னள்ளி வீசிய
செய்யபல் பொருள்களுஞ் செறிந்து சேணெலாங்
கொய்யுளை வயப்பரிக் கொடிஞ்சித் தேர்மிசை
வெய்யவன் செலவினை விலக்கு கின்றவே. (ருசு)

திருமிகு சூளிகை சிகர மாதிக
ணிரல்பட வேகியே நிரந்த பல்வகைப்
பருமணி யெரிசுடர் பரப்பி வான்பட
ரிரவிதன் கதிரையு மிகலி வென்றவே. (ருஎ)

மின்னவிர் சிகரிபொன் வேர மாதிக
ளென்னவும் வான்படாந் தெழாலின் விஞ்சைய
ருன்னுறு மோங்கலு மூவண வைப்பெனும்
பொன்னெயில் வட்டமும் பூழி செய்தவே. (ருஅ)

குன்றெறு சூளிகை கோபு ரம்பிற
வொன்றுட னொன்றுபட் டிரிஞ்சி யாயிடைத்
துன்றிய மணிதிசை தோறுஞ் சிந்துவ
மின்றிகழ் தாரகை விளிந்து வீழ்வபோல். (ருகூ)

பொற்றைகள் சிகரகோ புரங்க டத்தமி
லெற்றுழிப் புகையென வெழுந்து பூழிகள்
சுற்றிய புலிங்கமுந் தோன்று கின்றன
வெற்றவெம் புயல்களு மின்னும் போலவே. (சO)

ஏழுயர் களிறனு னெறிந்த யாவையுஞ்
சூழுற வானிடைத் துவன்ற வெற்றலிற்
கேழுறு நுண்டுகள் கெழுமிச் சிந்துவ
பூழியி னெடுமழை பொழியுந் தன்மைபோல். (சக)

ஆரிய னேச்சிய வணிகொண் மண்டபம்
வேரமொ டகன்பொழில் பிறவும் விண்ணுறீஇத்
தாரகை முதற்சுடர்த் தனுக்கள் சார்ந்திடச்
சோரியு மிடையிடை துளித்த தென்பவே. (சஉ)

புந்தியி லான்மகம் புகுந்த தீமையா
லிந்திர னாதியோர் யாருஞ் சூரனு
னெந்தன ரவனகர் வளமு நோவுற
வந்தரத் தவரையு மலக்கண் செய்தவே. (சங)

வெற்புறழ் மொய்ம்பினன் விடுத்த சூளிகை
பற்பல பொருந்தலும் பட்ட வன்னிபோ
யெற்படு கதிருடை யிரவி பச்சைமாப்
பொற்புறு கொய்யுளை பூழி செய்ததே. (சச)

பொன்னவிர் சிகரகோ புரங்க ளாதிய
துன்னிய தாக்கலிற் றோன்றித் தீப்பொறி
யின்னுயிர் வழங்கிய வெல்லை யெங்கணும்
வன்னிபெய் மழையென மயங்கி வீழ்பவே. (௪௫)

வழுவுறு மவுணர்கோன் வளங்கள் யாவையுங்
கெழுதகு விசும்பினைக் கிழித்துச் சேறலி
னெழிலிகள் வயிறுடைந் திரங்கி யாற்றலா
தழுதென வுலகெலா மறல்சிந் தூற்றவே. (௪௬)

வேறு.

ஏசிலா வறிவன் விட்ட வின்னபல் வெறுக்கை யாவு
மாசகல் விசும்பி னேகி மதிமுடி யருள்பெற் றுள்ள
கோசிகன் றுறக்க முய்த்த கொற்றவன் றவறி யென்ன
வாசுற மீண்டு ஞாலத் தகிலமும் வீழ்ந்த வன்றே. (௪௭)

படிதனிற் றிசையின் பாலிற் பௌவத்திற் பழுவந் தன்னிற்
றடவரை தன்னி லின்ன தகையன பிறவிற் சூர
னுடையபல் வளங்க ளெல்லா முரற்றியே வீழ வாண்டு
மிடைதரு முயிரின் பொம்மல் வெருவிவீழ்ந் திரித லுற்ற. (௪௮)

அலைந்தது பரிதி யோங்க லதிர்ந்தது மேருச் சையங்
குலைந்தது சூழுங் குன்றங் குலுங்கிய வசல மேழுங்
கலைந்தது நாகர் வைப்புங் கலங்கிய கடலும் பாரு
முலைந்தன வுயிர்கண் முற்று மோடின திசையின் யானை. (௪௯)

தண்படு தொடலை மார்பன் றனெறிந் தவற்றிற் பல்வே
றெண்புவி முழுதுஞ் சிந்திற் றெழிந்தன வுலப்பி லாத
வெண்பதி னாயி ரப்பேர் யோசனை யெல்லைத் தாகிக்
கண்படு சூர னூரிற் கல்லென வீழ்ந்த மாதோ. (௫0)

முடிந்திட லரிய சூரன் மொய்வள மவனூர் முற்றுந்
தடிந்தெறி யுருமே றென்னத் தணப்பற வீழ்த லோடு
மிடிந்தன மாட வீதி யாவையுங் கடிகா விற்ற
பொடிந்தன சிகரி யாதி புரிசைகண் மறிந்து மாண்ட. (௫௧)

மண்டபஞ் சிகரி வேர மணிமதின் மாட கூட
மெண்டகு பொதியின் முற்று மிடிபட வெழுபொற் பூழி
விண்டொடு திசைபார் யாண்டும் வெறுக்கையின் வடிவ மாக்கி
பண்டர்த முலகி தென்றே யறிகுறு வகைசெய் தன்றே. (௫௨)

புடையகல் பொன்செய் மூதூர் பொள்ளெனத் தகர்ந்து வீழ
மிடைதரு வீதி முற்று மேயின சனங்கள் பூசல்
கடைவரு நாள தெல்லைக் ககனமூ தண்ட கூட
முடைதலு முடியு மாவி யரற்றுமா றொத்த தன்றே. (௫௩)

வேறு.

நாக முந்து நறுங்கிழன் மாதவி
நாக முந்து நறுங்கிழற் பொற்கணி
சேக ரம்பல சிந்திடு கார்முடைச்
சேக ரம்பல வோடு சிதைந்தவே. (௫௪)

கோட ரங்குல வுற்றிட வான்றொடுங்
கோட ரங்குல வுற்றிடு தண்டலைக்
கோட ரங்குலங் கோலஞ்செய் பொன்வரைக்
கோட ரங்குல வுற்றிறை கொண்டவே. (ருரு)

ஓடும் வாவியின் மீனின மோங்குபுள்
ளோடும் வாவிவிண் ணுற்றிட வீதியின்
மாட மாலை வரிசையின் மல்கிய
மாட மாலை மறிந்திடி பட்டதே. (ருசு)

அண்ட ரண்டரு மந்நகர் மாண்டன
வண்ட ரண்ட மளவிடு சூளிகை
மண்ட பம்மதின் மாடந் தரித்தயர்
மண்ட பம்மதின் மாதவம் யாவதே. (ருஎ)

பூவை யன்ன மணிமயில் பொற்புறு
பூவை யன்ன மணிமயில் பொற்புறு
வாவி யோடைவண் டான மழிந்திட
வாவி யோடைவண் டான மழியுமால். (ருஅ)

மொய்யு டைத்தறி மோதித் தளைபரீஇ
மையு டைப்பெரு மால்கரி சோரிநீர்
மெய்யி டத்துக விண்முகி லச்சுறக்
கையெ டுத்துக் கதறி யுடைந்தவே. (ருகூ)

ஈடு சான்ற வெருத்த முரிந்திட
நீடு பூநுத னெக்குறக் கிம்புரிக்
கோடு சிந்தக் குருதியு குத்தரோ
வோடி வீழ்வ வுவாக்க ளரற்றியே. (சுO)

காரகொள் சிந்துரங் காயத் திடையிடைச்
சோரி சோரதர தோன்றுவ வீற்றினின்
பேரு வாதி விலங்கலை மெய்க்கனல்
சாரும் வெம்புகை தன்னொடுஞ் சூழ்ந்தபோல். (சுக)

கொடிக ளிற்ற கொடிஞ்சி முரிந்தன
விடைகொள் பீடிகை யெல்லைக ணெக்கன
வடிகொள் சில்லியு மாருஞ் சிதைந்தன
பொடிய தாகிப் புரண்டன தேர்களே. (சுஉ)

பந்தி தோறும் பராவிய வைங்கதிக்
கந்து கங்கள கலங்கி நெரிந்திட
நொந்து மேனி நொறில்வரு செம்புனல்
சிந்தி யோடச் சிதறிய திக்கெலாம். (சுங)

சிதவல் கொண்டிடு செம்மயிர்க் கொய்யுளை
மதுகை வெம்பரி வாய்களின் வீழ்தரு
முதிர வாரி யொலிகடற் புக்கதா
லிதுகொ லோவட வைக்கன லென்னவே. (சுச)

காள வெங்கரிக் காலின் வயப்பரித்
தாளி னூடகப் பட்டுத் தரைபுகா
மூளை சிந்த முழுதுடல் பூழியாய்
மாளு கின்றனா மாநக ரோர்சிலா. (௬௫)

ஆளி மொய்ம்புடை யண்ணல்முன் வீசின
நீளு மாநகர் ஞெள்ளலின் வீழ்தலுந்
தோளி முந்து சுவன்முரிந் தொய்யெனத்
தாளி முந்து தரங்கமுற் றூர்சிலா. (௬௬)

பொற்றை யன்ன பொலன்மணி மாளிகை
யிற்று வீழ்தலு மென்னிது வென்றெழீஇ
வெற்ற வெள்ளிடை மேவுதன் முன்னிய
முற்றம் வந்திடு முன்மறிந் தார்சிலர். (௬௭)

ஊடு மைந்தரு மொண்டொடி மாதரு
மாட மோடு மறிந்தனர் தம்முடல
வீடி மண்மிசை வேற்றுரு வெய்திய
கூடி யேவழிக் கொண்டன ரோர்சிலா. (௬௮)

உவம னில்லவ னேச்சின வெங்கணை
மவதி யின்றிப் பொழிய வவைநெரீஇத்
தவறி லாதுசெய் தாழ்வரை யீண்டொடாக்
கவிகை யாத்தமைக் காத்துநிற் பார்சிலர். (௬௯)

விறற்கொள் வாகு விடுத்தன கல்லக
வுறைப்பின் வீழ வொதுங்கிட மின்மையிற்
சிறக்கு மாநகாச் செந்துரைக் கொண்டகீ
ழறைக்கு ளேபுக கலமரு வாசிலர். (௭௦)

மாதர் தங்களை மக்களை யன்னையைத்
தாதை மாரைத் தமதுகைப் பற்றியே
யேதின் மாட மிகந்துகச் சோரிநீர்
வீதி போந்து வெருவிநிற் பார்சிலர். (௭௧)

கருவி வானினுங் கண்ணகன் றிக்கினுந்
தரணி தன்னினுந் தாவிலன் வீசிய
திருவ ளங்கள் செறிந்தன வீழ்தலும்
வெருவிப் போய்க்கடல வீழ்ந்தொளிப் பார்சிலா. (௭௨)

கிழிந்த சென்னியிற் கேழ்படு செம்புனல்
கழிந்து தோன்றவுங் கண்டன ரையுறப்
பொழிந்து மெய்ப்புறம் போர்த்தலுந் தேற்றியே
யழிந்தி ரங்குற வாகுலிப் பார்சிலர். (௭௩)

ஆடன் மொய்ம்பின னார்த்துமுன் வீசிய
மாட வீதி வளநக ரெங்கணு
நீட வீழ்தலு நிற்றலை யஞ்சியே
யோடி யூறுற் றுயிர்துறப பார்சிலர். (௭௪)

திங்கள் சூடி திருமகன் விட்டன
வெங்கும் வீழ மிறப்பினை நோக்கியே
யங்கி வெங்கணை தொட்டறுத் தன்னவை
தங்க ளாருயிர் தாங்கிநிற் பார்சிலர். (எ௫)

மையன் மாதரு மைந்தரு மாவியும்
பொய்யில் புந்தியு மொன்றிப் புணர்தலுஞ்
செய்ய மாடஞ் சிகரமொ டேவிழ
மெய்யு மொன்றி விளிந்திடு வார்சிலர். (எ௬)

அந்தண் மாடத் தறிவன் விடுத்தன
வந்து வீழ மறிந்தரு மேறெனச்
சிந்த வேயுகு செம்பொறி மெய்ப்பட
வெந்து சின்னம் விரவுறு வார்சிலர். (எஎ)

வரங்கொள் வீர மகேந்திரத் தின்னணர்
தரங்க மெய்திச் சனங்க ளெல்லாமிரீஇ
யுரங்கள் சிந்தி யழிந்துழி யொல்லென
விரங்கு மோதை யெழுகட லுண்டதே. (எஅ)

மன்றி னிற்கரி பொய்த்து மறுநெறி
கொன்று வாழுங் கொடியர்தம் மில்லெனத்
துன்று மாடத் தொகைவெள்ளி டையதாய்ப்
பொன்றி வீழ்ந்தன புல்லென வாகியே. (எகூ)

நீறு பட்ட நெடுநக ரெங்கணு
மூறு பட்ட வுயிர்கடஞ் சோரிநீ
ராறு பட்டிட வங்கவை யோடளாய்ச்
சேறு பட்டன செக்கர்விண் போலவே. (அ0)

மலிந்த சீர்த்தி மகேந்திர மாபுர
மலைந்து தொல்லைத் திருமுழு தற்றதான்
மெலிந்தி டும்படி விண்ணவர் தம்மெலா
நலிந்த வன்வள நன்றுறு மேகொலாம். (அக)

ஆ திருவிருத்தம் - எஎ௦.

---

வசனம்.

இவ்வாறு ஐம்பதுவெள்ளம் காவலாளரையுங்கொன்று அங்கிருந்த வேர மொன்றைப்பிடுங்கிச் சூரனது அரசிருக்கைமண்டபத்தின்மேல் விட்டெறிந்தார் அது அவன் கொலுமண்டபத்தை யழித்துவிட்டது. அங்கிருந்தவரெல்லாரும பயந்தோடிவிட்டார்கள். சூரபன்மனும் மனங்கலங்கி, தன்னருகேயிருந்த சகஸ்திர வாகுக்களைநோக்கி, சண்முகன்விடுத்த தூதனொருவன்வந்து நமது கொலுமண்டப த்தையழித்துக் காவலாளரைக்கொன்று, நகரையுமழிக்கத்தொடங்கினன், நீங்கள் போய் அவனைக்கொல்லாமற் பிடித்துக்கொண்டுவாருங்களென்றான்; அவர்களும் அவ்வாறே வீரவாகுதேவரைக்கிட்டினார்கள். அவர்கள் கிட்டுவதற்குமுன்னமே வீரவாகுதேவர் அந்நகரத்தின் கோபுரம், மண்டபம், மாடமாளிகைகள், சோலை கள்முதலிய எல்லாவற்றையும் அழித்துப் பொடியாக்கிவிட்டார். அந்நகரத்திலுள் ளார் அழும் பேரொலியானது ஊழிகாலத்தொலிபோலிருந்தது.

நகரழிபடலம் முற்றிற்று.

---

# சகத்திரவாகுகள்வதைப்படலம்.

ஏயின பான்மையி னிவன்மூதூர், மாய்தரு பெல்லையின் வருகின்ற
வாயிர வாகுள வடல்வீரர், மேயின தன்மை விளம்புற்றும். (க)

ஓலமு டைக்கட லுமிழ்கின்ற, நீல விடத்தினை நிகர்மெய்யார்
மாலை யுடைப்பல வடவைததிக், கோல மெனச்சினை கொண்டுற்றார். (உ)

தீங்களி றுதிய திறன்மாக்க, டாங்குலை யோடுத லைப்பெய்தே
யாங்குள சோரி யருந்திமப், பாங்கர்க ளன்னதொர் பகுவாயார். (ந)

எல்லையி னேமிகள் யாவுந்தா, மொல்லொலி நீரி னுடைந்தென்னக்
கல்லுறை சிந்து கருங்கொண்மூச், செல்லென வார்த்தனர் செல்கின்றார்.

வேறு.

மைவரு நீல வரைத்தொகை தாங்கு
மொய்வரு கின்ற முடிக்குழு வென்ன
வைவகை நூற்றி னமாந்தகல் வானைத
தைவரு கின்ற தலைத்தொகை கொண்டார் (ரு)

மராமர மானவை மாதிர மெங்கும்
பராவ விடுத்திடு பல்கவ டென்ன
விராவிய வங்கத மேவி விளங்கு
மொராயிர மாகிய வொண்புய முள்ளார். (சு)

எழுக்கொடு முத்தலை யெஃகம் வின் ஞெஞ்சில
கழுக்கடை சங்கொடு கபபணம் வெவ்வாண்
மழுக்கதை சக்கரம் வச்சிர மாதி
விழுப்படை யாவும் விராவிய கையார். (எ)

எண்டரு நேமிக ளேழு மளக்கர்
மண்டல மானவு மன்னுயிர் யாவுங்
கொண்டிடி னுங்குறை வின்றி நிரம்பா
தண்டம தென்ன வகன்ற வயிற்றார். (அ)

விழுமிய பஃறலை வெம்பணி யேனைக்
குழுவொடு போற்றினர் கொண்டுற லாற்று
தழுதிட நாடிய தற்கயர் வார்போற்
கழல்க ளரற்று கழற்றுணை கொண்டார். (கூ)

இருபுய மோர்முக மெய்திய வானோ
ரொருவனை வெல்லவொ ராயிர ராமேம்
பொருவகை சென்றிடல் புன்மைய தென்னா
வருபழி யுன்னி மனந்தளர் கின்றார். (கo)

மாகர வான்முன மாயையின் வந்தா
ரேகையி னுலிவ னைதென வானிற்
போகுவ னுலிது பொய்யல வல்லே
யேகுமி னேகுமி னென்றுசெல் கின்றார். (கக)

மீளிகை யாலெறி மேதகு வேர
மாளிகை கோபுர மண்டபம் வீழ்வ
காளிக ரன்ன கரங்கள்கொ டேற்றுத்
தூளிகள் செய்தனர் தூர்த்திடு கின்றார். (கஉ)

எய்யென மெய்யிடை யெங்கும் வியர்ப்பச்
செய்யன கண்வழி செந்தழல் சிந்த
வெய்ய வுயிர்ப்பெழ வேர்வுள மூள
வொய்யென வோடின ருற்றிடு கின்றார். (கங)

நாகர் தமக்கொர் நமன்றனை யன்னோ
ராகிய வாயிர ராயிர மொய்ம்பர்
வேகம தாகி விழுத்தகு வீர
வாகுவை யெய்தி மடங்கலி னார்த்தார். (கச)

ஆர்த்திடு மோதை யகன்செவி செல்லத்
தார்த்தொகை தூங்கு தடம்புய வீரன்
பார்த்தனன் மூவெயில் பண்டெரி செய்த
தீர்த்த னெனச்சிறி தேநகை செய்தான். (கரு)

மேனிமிர் மந்தர வெற்பென நின்றே
வானள வோங்கு மராமர மொன்றைத்
தேனினம் வான்றிசை சிந்தி யரற்ற
வூன்முதிர் கைகொ டொசித்தனன் மன்னோ. (கசு)

அண்ட மிருண்டிட வாதவ ரானோர்
மிண்டிய பேரொளி வீந்திட வீரன்
வண்டழை துன்று மராமர மங்கை
கொண்டது பன்முறை கொட்புறல் செய்தான். (கஎ)

வேறு.

மாயிரு மருப்புள மராமர மிறுத்தே
தூயனம ராடன்முய றொன்னிலைமை நோக்கி
யாயிர மடுத்தபுய ராயிரரு மங்கண்
மூயினர்க னண்ணலை முரட்படை சொரிந்தார். (கஅ)

தொடுத்தனர்கள் வார்கணைக டொட்டனர்கள் வைவே
லெடுத்தபல தோமர மெறிந்தனர்க ளாலம்
விடுத்தனர்கண் முத்தலை வியன்கழுமு ளுய்த்தா
ரடற்குலிசம் வீசினர்க ளாழிக டுரந்தார். (ககூ)

இப்பரிசி னுள்ளபடை யாவுமுறை தூங்கு
மைப்புயல்க ளென்னவரை யின்றிவிரை வாக
வொப்பரிய வீரன்மிசை யுய்த்திடலு மன்னோன்
றுப்பொடு மரந்தனி சுழற்றியட லுற்றான். (உ0)

விட்டபடை யாவையும் வெறுந்துகள வாகப்
பட்டிட மரங்கொடு பராகமவை செய்ய
வுட்டெளிவின் மானவரோ ராயிரரும் வீரற்
கிட்டினர் வளைந்தனர் கிளர்ந்தமர் முயன்றார்.* (உக)

ஒட்டியம ராடிய வொராயிரவர் தாமுங்
கெட்டிரிய மேருநிகர் கேழ்கிளர் புயத்தோன்
மட்டுநனை வார்சினை மரங்கொடு புடைத்தே
சட்டக மிறந்துபடு தன்மைபுரி குற்றான். (உஉ)

செக்கர்புரை குஞ்சிகெழு சென்னிகள் கிழிந்தார்
நெக்கனர்க போலவகை நெற்றியிள வுற்றா
ரக்கநிரை சிந்தின ரலங்குகுழை யற்றா
ருக்கனர்கள் பல்லெயிறு டைந்தனர்க டண்டம். (உங)

வாய்நிரை பகிர்ந்தனர்கண் மாழைநிகழ் கண்ட
மானவு முரிந்தனர்க ளற்றனர்கள் பொற்றோ
ளூனமக லங்கைக ளொசிந்தனர் தசைந்தே
பீனமுறு மார்பிடை பிளந்தனர் தளர்ந்தார். (உச)

உந்திகள் குடங்கரி னுடைந்துகுடர் யாவுஞ்
சிந்தினர் மருங்கெழில் சிதைந்தனர் புறங்கண்
முந்துதொட ரென்பொடு முரிந்தனர்கள் வாமஞ்
சந்துபொரு கின்றமுழந் தாளடிக ளற்றார். (உரு)

வீந்தனர்க ளோர்சிலவர் வீழ்ந்துமிதி பட்டுத்
தேய்ந்தனர்க ளோர்சிலவர் செய்யகுடர் சிந்திச்
சாய்ந்தனர்க ளோர்சிலவர் தங்குருதி யாற்றுட்
டோய்ந்தனர்க ளோர்சிலர் துடித்தனர்கள் சில்லோர். (உசு)

எறிந்திடு படைத்தொகுதி யேகுமுனம் வீழ்ந்து
மறிந்தனர்க ளோர்சிலவர் மாய்ந்துககனம்போய்ச்
செறிந்தனர்க ளோர்சிலர் சிதைந்துதலை போயு
முறிந்தவுடல் கொண்டமர் முயன்றனர்கள் சில்லோர். (உஎ)

ஏரகலும் வீரர்தமி யாக்கையிது வண்ணஞ்
சேரவிற வுற்றுடைய செவ்வியி னெழுந்த
சோரிநதி மாநகர் தொலைத்துவளன் வாரி
வாரிதி நிறைந்தவனி மீதினு மடுத்த. (உஅ)

வேறு.

அறந்தெ ரிந்துணை ராண்டகை யகன்மரம் புடைப்பக்
குறைந்த சென்னிவான் றிரிவன வெயிற்றொடு குலவிச்
செறிந்த தேவரோ டமிர்தொளித் துண்டவர் சென்னி
நிறைந்தி டாம்தித் துணைகவர்ந் துலவுத னேரும். (உகூ)

அடல்கொண் மொய்ம்பினன் மரம்புடைத் தலுஞ்சில வவுண
ருடல்சி னப்பரி முகத்தவர் தலைதுமிந் துதிர
நெடிதும் வாய்வழி சிந்தவீழ்ந் தனர்நெடுங் கடலுள்
வடவை மாமுக மங்கிகான் றிடுவதே மான. (கூo)

வள்ளன் மாமரத் தண்டுகொண் டடித்தலும் வலியோர்
பிள்ளை மாமதி யெயிற்றணி சிந்திவிண் பெயர்ந்தே
யள்ளல் வேலையின் முறைமுறை வீழ்வன வதன்கட்
டெள்ளு மீன்கணை முகண்டுவீழ் கின்றதோர் தொடர்பின். (கூக)

வலிந்த வூழ்முறை யாவரே கடந்தவர் மரத்தாற்
பொலந்த யங்குபூண் மார்பினை னெற்றியும் பொழுதிற்
கலந்து போர்செய்தா ரோர்சிலர் வாளொடு கரம்பாய்த்
தொலைந்து ளார்செலு நெறியின்வீழ்ந் தவாசிரந் துணிபப. (௩௨)

இனைய பற்பல நிகழ்ந்திட வினையிலா வொருவன்
றினையின் வேலையி லாயிரம் புயமுடைத் திறலோ
ரனைவர் தம்மையும் பஃறுணி படுத்திற னட்டுத்
தனிமை தன்னொடு நின்றன னமாக்களந் தன்னில். (௩௩)

ஆ திருவிருத்தம் - ௫௦௩.

வசனம்.

சூரனுலேவப்பட்ட சகஸ்திரவாகுகள் வீரவாகுதேவரை வந்து வளைந்துகொண்டு, தமமுடைய சூலம்முதலிய படைகளை அவர்மேலெறிய, அவர் அவற்றையெல்லாம் ஒரு மராமரத்தால்பொடியாக்கி, அவர்களையும் அம்மரங்கொண்டே தலையையுடைத்தும் நெற்றியைப்பிளந்தும் பல்லைத்தகர்த்தும் பலவகையாய்க்கொன்று தாம் தமியராய்நின்றார்.

சகத்திரவாகுகள்வதைப்படலம் முற்றிற்று.

# வச்சிரவாகுவதைப்படலம்.

கூடி யாரம ரியற்றினர் தம்வலி குறைந்து
வீடி யாவிபோய் விளிதலு மன்னது விரைவி
னேடி விண்ணிடை நணுகிய தூதுவர் நில்லா
தோடி யாளுடை யவுணர்கோன் முன்புசென் றுரைப்பார். (௧)

துன்று மாயிர மொய்ம்புடை நின்படைத் தொகைஞர்
சென்று சில்லமர் புரிந்தன ரவனது தெரியா
வொன்றொ பாதவம் பறித்தனன் புடைத்தலு மொருங்கே
பொன்றி வீழ்ந்தனா புகுந்தவா றீதெனப் புகன்றார். (௨)

புகன்ற வேலையி னவுணர்கோன் புரையிலோன் வன்மை
புகன்ற வேலையின் வடவையா ரழலெனப் பொங்கி
யகன்ற னன்பெரு மிதத்துட னுணையுந் திறலு
மகன்ற னன்பெருந் துயாகொளீஇ யினையன வறைவான். (௩)

உமைய ளித்திடு சிறுமகன் றூதுவ னொருவ
னெமது முன்னம்வந் தவமதி செய்தன னேகி
யமரில் யாரையு மட்டுநின் றின்னமு மகலா
னமது கொற்றமு நன்றுநன் றூலென நகைத்தான். (௪)

முச்ச கம்புக ழவுணர்கோன் முனிவினை முன்னி
யச்செ னக்கிளர்ந் தெழுந்துசென் றவனடி வணங்கி
மெய்ச்சி ரங்களோ ரையிரு திறலுடை விறல்சேர்
வச்சி ரத்திரு மொய்ம்புடைக் காதலன் வருப்பான். (௫)

ணொய்ய தூதுவன் பொருட்டினு லித்திற நுவற
லைய கேட்கிற் கியலுமே யிறையிவ ணமர்தி
மொய்யில் யான்சென்று மற்றவன் பெருமுரண் முருக்கிக்
கைய கப்படுத் துய்ப்பனு லன்னது காண்டி. (சு)

வேறு.

என்ன லோடு மிறப்பெதி ருற்றிடா
மன்னன் மைந்தனை நோக்கி மகிழ்வுறு
வன்ன தன்மையை யாற்றுதி நீயெனப
பன்னி யேகும் படிபணித் தானரோ. (எ)

விடைபு ரிந்திட மெய்வழித் தாதைத
னடிவ ணங்கி யகன்றுமன் கோயிலிற்
புடையி ருந்தன போர்ப்படைச் சாலையி
னிடைபு குந்தனன் யாரும் வழுத்தவே. (அ)

அட்ட மின்றி யமர்தரு சாலிகை
யிட்டு மார்பி னிறுக்கி வயத்தகு
பட்டி கைக்கலன் பாலத துறுத்தியே
புட்டி லங்குலி பூண்டு பொருக்கென (கூ)

ஆணி கொண்ட வயிற்கணை பெய்தபொற்
றூணி கொண்டுபின் றும்பை மிலைச்சியே
நாணி கொண்டு நலந்தரு கார்முகம
பாணி கொண்டு படைபிற வேந்தியே (க0)

கொற்ற மாரமர்க் கோலங்க ளுள்ளன
முற்ற வேகொண்டு மூரிவில் வெஞ்சமர்
கற்ற காளை கதுமென நோக்கியே
சுற்று கம்மியர்க் கின்னன சொல்லுவான். (கக)

மிக்க நம்படை வெள்ளத்தி லோர்சில
தொக்க பூசற் றொழிலினை முற்றிய
விக்க ணந்தரு வீரவ ணென்றலுந்
தக்க தேயெனத் தாழ்ந்தவர் போயினர். (கஉ)

ஆங்கு நின்றிடு மேவல ரப்பணி
தாங்கி யேகத் தருவர்தங் கோமக
னீங்க லின்றுதன் னீழலின் வந்திடும்
பாங்கர் யாரையு நோக்கிப் பகருவான். (கங)

குமர வேள்விடு கோற்றொழிற் றாதனைச்
சமரில் வென்றொரு தாம்பிற் றளைபுரீஇ
யிமையொ டுங்குமு னெந்தைமு னுய்க்குவ
னமைதிர் போருக் கணைவிரு மென்றனன். (கச)

பாலன் மற்றிவை பன்னலு நன்கெனு
வேலு கின்ற விளைஞரு மள்ளரு
மேலை வெஞ்சமர் செய்ய விரைந்துபோர்க்
கோல மெய்திக் குழீஇயினர் கொட்புற. (கரு)

தாறு கொண்டவன் றன்குறிப் பிற்செலு
நூறு நூறு தொழில்பரி மான்பெறீஇ
வீறு பண்ணமை தேரொன்றின் வெய்தென
வேறி னன்மொய்ம் பிருபது கொண்டுளான். (கரு)

தந்தி ரத்துத் தலைவர்த மைந்தரு
மந்தி ரத்து மதிஞர்த மைந்தருஞ்
சுந்த ரத்துத் தொடர்பினிற் சுற்றுறா
வெந்தி ரப்பெருந் தேர்களி லேறினார். (கசு)

ஆன வேலை யரசன் சுதன்விடப்
போன கம்மியர் போர்வினை கூறியே
யானை மேல்கொண் டிரும்பணை யெற்றலுஞ்
சேனை தம்முட் சிலதிரண் டுற்றவே. (கஎ)

ஒருங்கு தாம்பல வோடலி னன்னவை
பரங்கொ ளற்கரி தாகிப் படிமகள்
புரங்கி ழிந்திடு புண்கொண் டரற்றல்போ
லிரங்கு மோதைகொண் டேகுவ தேர்களே. (கஅ)

கருவி வானங் கடலுண்டு செல்லுறும்
வரைக ளாமென வந்துதம் மேலுறீஇ
யுருமி னத்தை யுருக்கொலி கேட்டலும்
வெருவி வீழ விரைவன வேழமே. (௨0)

கிட்டி நாடு நயனமுங் கேடுசெய்
தொட்ட லார்த முளமுஞ் சுழன்றிட
வெட்டு மாதிரத் தெல்லையுஞ் சாரிகை
வட்ட மாகி வருவன வாசியே. (உக)

ஆடல் வேல்கதை யாழி யலப்படை
பாடு சேர்ந்த பலகையொள் வாள்சிலை
நீடு சூல நெடுமழு வாதியாக்
கூடு பல்படை கொண்டிடு கையினார். (உஉ)

இடித்த சொல்ல ரிமையவர் போர்பல
முடித்த மொய்ம்பர் முரணிய பல்படை
வடித்த கற்பினர் மால்வரை யானவை
படித்த லத்திற் படர்ந்தன்ன காட்சியார். (உங)

விசும்பின் மாலை மிலைச்சிய குஞ்சியர்
பசும்பொன் வீரமெய்ப் பட்டிகை நெற்றியா
நிசும்ப ரன்னதோர் நேரலர் சோரியி
னசும்ப ருந்த வகன்பில வாயினார். (உச)

நேம டங்கற் றிறலினர் தென்புலக்
கோம டங்கலின் கொள்கையர் தங்கிளை
தாம டங்கத் தறியிளந் தார்த்தெழு
மாம டங்க றனைப்பொரும் வன்மையார். (உரு)

ஏகும் வெஞ்சமர்க் கென்றலும் பூண்பரீஇ
மாக மஞ்ச வளர்ந்தெழு தோளினர்
மோக மில்லவர் மொய்ம்பினின் மேலவ
ராகும் வீர ரளப்பில ரெய்தினர். (உ௬)

ஐந்து நூறெனும் வெள்ள மழுங்குதேர்
தந்தி யின்குழுத் தானு மனையதே
யுந்து மாக்க ளொராயிர வெள்ளமாம்
பந்த மிக்க பதாதி யிரட்டியே. (உ௭)

இத்தொ கைப்படு மீரிரு தானையு
மைத்தி ரைக்கடல் வாரியி னர்ப்புறீஇப்
பத்தி ரட்டி படர்புயத் தண்ணலைத
தத்த மிற்கலந் தொன்றித் தழீஇயின. (உ௮)

துடிவ லம்புரி துந்துபி சச்சரி
கடிகொண் மொந்தை கரடிகை தண்ணுமை
யிடிகொள் பேரி யிரலைக ளாதியா
முடிவி லாவிய முற்று முழங்கிய (உ௯)

இற்ற வெல்லையி னீரிரு தானையு
நெற்றி யேகடை நீடய விற்செல
மற்று ளார்களும வந்திட வச்சிரப்
பொற்ற டம்புயன் பொள்ளென வேகினன். (௩0)

வல்லி யக்கடு மான்பொரு மானவர்
செல்வி யக்கமுஞ் செல்வினை மாறுகொள்
சொல்லி யக்கமுந் தண்ணெனத் தொக்கெழு
பல்லி யக்கட லார்பபும் பரந்தவே. (௩௧)

ஊழி மால்படை யொல்லென வேயெழப்
பூழி யீண்டிவிண் பொள்ளென மூடிய
வேழ மால்வரை வீழ்தரு தானநீ
ராழி யென்ன வகன்புவி கொள்ளவே. (௩௨)

திகந்த மெட்டுந் திருகிழ லோச்சியே
புகந்த தேர்களி னெண்கொடி யாடுவ
குகன்வி டுத்திடு கொற்றவ னாற்றல்கண்
டகன்சி ரங்க ளசைப்பன போன்றவே. (௩௩)

ஆகு மெல்லை யவுணர்மன் றேர்மிசைப்
பேய்கள் சூழ்ந்து பிணங்கி மலைந்தன
காகம் யாவுங் கழுகும்வெஞ் சேனமுங்
கூகை யோடு குழீஇயிரங் குற்றவே. (௩௪)

மடித்த வாயுடை வச்சிர மொய்ம்பினன்
பிடித்த கையிற் பெருஞ்சிலை வீழ்ந்தது
தொடுத்த வெந்நுறு தூணியு மிற்றதாற்
றுடித்த வாலிடக் கண்களுந் தோள்களும். (௩௫)

அண்ணன் மைந்தன தாழியந் தேர்மிசைக்
கண்ண கன்கொடி கையற வீழ்ந்தன
விண்ணி னேறு விசும்பின்றி யார்ப்பன
வெண்ணி றீக்குறி யிவ்வகை யுற்றவே. (௩௬)

உற்ற காலவை யுள்ளுறக் கொள்கிலன்
செற்ற மேல்கொண்டு சென்னியோர் பத்துளான்
மற்றொர் தூணியும் வார்சிலை யுங்கொளாப்
பொற்ற டங்கை புறந்தனிற் சேர்த்தினன். (௩௭)

மொய்கொள் வச்சிர மொய்ம்பனித் தன்மையால்
வெய்ய தன்படை வெள்ளமொ டேகியே
செய்ய வேலுடைச் சேவக னேவல்செய்
யைய னின்ற வயிகள மெய்தினன். (௩௮)

வண்டு லாந்தொடை வச்சிர வாகுதன்
றண்ட மோடு சமாக்களுஞ் சேர்தலு
மண்டர் நாயகன் றாதுவ னன்னவை
கண்டு நின்று கழுறுதன் மேயினன். (௩௯)

வேறு.

இந்திர ஞால வையத் திறைவனை யல்லன் மற்றை
மைந்தரி லொருவ னாகும் வருபவன் வருவான் றன்னை
முந்திய தானை யோடு முரணற முருக்கி வீட்டி
யந்திவான் புகுமு னெந்தை யடிதொழப் போவ னென்றான். (௪௦)

எறிதிரை யளக்க ரென்ன வீண்டுறு மனிகம் யாவு
முறைமுறை சாடி வந்த முதல்வனை முடித்து மாலை
யுறுதன்முன் விசய மோடு மொய்யென மீளே னென்னி
னறுமுக வையன் றாத னவனே வடிய னென்றான். (௪௧)

எண்டிசை புகழும் வீர னிவையன விளம்பிச் செவ்வேள்
புண்டரீ கததுப பொற்றாள் புந்தியா விறைஞ்சிப் போற்றி
மண்டமர் முயன்று நேமி மறிதர வரைகள் கீற
வண்டமுந் திசையும் வானுங் குலுங்கத்தோள் கொட்டி யார்த்தான். ()

ஆர்த்திடு மோதை கேளா வமர்குறித் தெழுதேர் மேலோர்
கார்த்திடு தந்தி மேலோர் கவனமாப் புரவி மேலோர்
பேர்த்திடு நிலத்தின் மேலோர் பிறங்குசீ ரவுணர் யாரும்
வேர்த்தனர் திரிந்து சிந்தை வெருவினா விளம்பு கின்றார். (௪௩)

வாழிய வுலகம் யாவு மன்னுயிர்த் தொகையு மாய
வூழியிற் றனிநின் றார்க்கு முருத்திர னார்ப்போ வன்றே
லாழிகட் கரச னார்ப்போ வண்டங்க ணெக்க வார்ப்போ
வேழ்கட லுடைந்த வார்ப்போ வித்திற மார்ப்ப தென்றார். (௪௪)

செருவலி கொண்ட சீற்றச் செங்கணா னார்க்கு மோதை
மருமலர்த் தொடைய லாக வச்சிர வாகு வென்போ
னிருபது செவியி னூடு மிரணியம் புழைகள் புக்க
வுருமெனச் சேற லோடு முளம்பனித் துரைக்க லுற்றான். (௪௫)

ஈரெழு திறத்த வான வுலகினு ளின்று காறிப்
பேரொலி கேட்ட தின்றும் பிறந்ததித் தூழனி யாதோ
தேருதி ரென்று பாங்க ருழையரிற் செப்பத் திண்டேர்ச்
சாரதி விசய னென்பான் றாழ்ந்திவை புகல லுற்றான். (௬௬)

தெற்றென வுணர்தி மான்றேர் செலுத்திய வலவ னென்றே
மற்றென திரையை யெள்ளல் வல்லேமேற் காண்டி யெந்தை
யற்றமில் படையி னோடு மமர்செய வருத னோடி
யொற்றென தின்றேன் போர்வேட் டார்த்திடுமொலியீ தென்றான். (௬௭)

தூதுவ னார்ப்பி தென்று சொல்லுமு னுருத்துக் கண்கண்
டீதெரி பொங்க நக்கு வெய்துயிர்த் தூப்பி யான்போ
யீதொரு கணத்தி னன்னா னிகன்முர ணழித்துப் பற்றித்
தாதைமு னுய்ப்பன் காண்டி சரதமித் தன்மை யென்றான். (௬௮)

என்றிவை யுரைத்துப் போது மெல்லையின் முன்ன மாகச்
சென்றிடு மவுண வீரர் சேனையை வகுத்துச் சீறித்
தன்றுணைத் தாளுந் தோளுந் தடக்கையு மனிக மாக
நின்றதோர் வீரன் றன்னை நேமியிற் சுற்றி யார்த்தார். (௬௯)

கைதனி லிருந்த செம்பொற் கார்முகங் குனித்து வெங்கோ
லெய்தனர் முசல நாஞ்சி லெறிந்தனர் தண்டஞ் சூலம்
பெய்தனர் கணிச்சி விட்டார் பிண்டிபா லங்க ளேர்ததார்
செய்தவ மூயில்வெ ஞெட்டார் நேமிக ளுருட்டு கின்றார். (௭0)

வேறு.

தஞ்செனக் கொடுமைசெய் தானவப் படைஞர்கள்
வெஞ்சினத் தன்மையால் விடுபடைக் கலமெலாங்
கஞ்சனைச் சிறைசெயுங் காரணன் றூதுவன்
செஞ்சுடர்ப் படிவமேற் செவ்வணவந் துற்றவே. (௭௧)

துய்யன்மேல் வெம்படைத் தொகுதிவந் தடைதலு
மெய்யெலா முற்றதான் மிக்கசோ ரிப்புனன்
மையறீர் காலையின் வந்தெழும் பரிதிபாற்
பையவே செய்யதண் கதிர்வரும் பான்மைபோல். (௭௨)

ஆனதோர் காலையெம் மையன்வெஞ் சினமுறா
மானினம் பலபல மருவியே செறிவுழி
மேனிவத் தேகியோர் வேங்கைபாய்ந் தடுதல்போற்
றானவப் படையினைத் தாக்குதன் மேயினான். (௭௩)

ஆயிர மாயிர மவதிசே ரவுணர்தஞ்
சேயதண் குஞ்சியைச் செங்கையாற் பற்றியே
பாயிருந் தரையினும் பாற்படு கிரியினு
மேயெனு மளவைமுன் னெற்றியே யெறியுமால். (௭௪)

எய்யும்வெம் படைகளு மெறியும்வெம் படைகளுங்
கையினிற் பற்றியே கனலெழப் பிசைதரு
மொய்யெனப் பதைபதைத் தோலமிட் டுயிருகச்
செய்யபொற் றாள்களாற் சிலவரைத் தேய்த்திடும். (௭௫)

மத்தமால் கரிகளும் வாம்பரித் தொகுதியுஞ்
சித்திரந் திகழ்மணித் தேர்களு மவுணர்தங்
கொத்தொடே வீழ்தரக் கோலமா லடிதனக்
கொத்ததன் றாள்களா லுதைபுரிந் துலவுறும். (இசு)

கிடைத்திடுஞ் சிலவரைக் கீண்டன னீண்டமெய்
துடிததிடக் கழல்களாற் றுகைத்தனன் சிலவரை
யடித்தனன் சிலவரை யரைததனன் சிலவரைப்
புடைத்தனன் சிலவரைப் புதுமரத் தண்டினால். (இஎ)

மத்தவெங் கரிபரி வயவர்தே ராயின
பத்துநூ றொருதலைப் படநெடும் பாணியாற்
குத்திடுஞ் சிகரமேற் கோளரி பாய்ந்தெனத்
தத்தியே திரிதருந் தலைமலைக் குலமிசை. (இஅ)

தேரெலா மிற்றன திண்டிறற் கவணமாப்
பேரெலா மிற்றன பிளிறுமால் கரிகளின்
றேரெலா மிற்றன தானவத் தலைவர்செய்
போரெலா மிற்றன புகழெலா மிற்றதே. (இகூ)

ஆங்கதோர் பொழுதினி லவுணருக் கிறைமகன்
பாங்கராய் வந்திடும் பல்பெருங் குமரரு
மோங்குநாற் படையொடு மொருவனைச் சுற்றியே
தாங்குபல் படையினாற் சமர்முயன் றாற்றினார். (சு0)

வேறு.

அன்ன காலையில் வீரவா குப்பெய ரறிஞன்
றன்ன தோர்கரத் திருந்திடு பழுமரத் தண்டான்
முன்னர் வந்துசூழ் மைந்தர்கண் முரட்படை யோடுஞ்
சின்ன மாகியே விளிவுறப புடைத்தனன் றிரிந்தான். (சுக)

செய்ய மத்தக மிற்றன விற்றன செழுந்தாள்
கைக ளிற்றன மருப்பிணை யிற்றன கரிகள்
வெய்ய காலுட னெருத்தமு மிறறன மிலைச்சுங்
கொய்யு ளைத்தலை யிறறன குரகதக் குழுவே. (சுஉ)

தட்ட ழிந்தன பாரக மழிந்தன சகடு
கெட்ட ழிந்தன பாரக மழிந்தன கிளர்ந்த
மொட்ட ழிந்தன பாகின மழிந்தன முரண்மாக்
கட்ட ழிந்தன வொழிந்தன கனைகுரற் பஃறேர். (சுஙூ)

தால்க ளூற்றிடும் வெஞ்சிலை யிற்றன கடிய
கோல்க ளிற்றன பரிதிக ளிற்றன கொட்பார்
தோல்க ளிற்றன நாந்தக மிற்றன தூண்டும்
வேல்க ளிற்றன நாஞ்சில்க ளிற்றன விரைவில். (சுச)

நெரிந்த சென்னிக ணெரிந்தன மார்பக நெடிது
சரிந்த வெங்குடர் சரிந்தன விழுக்குடைத் தசைகள்
சொரிந்த மூளைகள் சொரிந்தன விரிந்தெழு சோரி
திரிந்த கூளிக டிரிந்துமாய் வுற்றன சேனை. (சுரு)

கரந்து ணிந்தனர் புயங்களுந் துணிந்தனர் காமர்
சிரந்து ணிந்தனர் நாசிக ணிந்தனர் செழும்பூ
ஹுரந்து ணிந்தனர் கழலடி துணிந்தன ருளதோல்
வரந்து ணிந்தனர் வன்மையுந் துணிந்தனர் மைந்தர். (௬௬)

வாக்கி னுற்சிலர் தம்முயி ருண்டிடும் வன்கைத
தாக்கி னுற்சிலர் தம்முயி ருண்டிடுஞ் சமர்செய்
யூக்கி னுற்சிலர் தம்முயி ருண்டிடு முலம்பு
நோக்கி னுற்சிலர் தம்முயி ருண்டிடு நொய்தின். (௬௭)

அங்க ணோர்சில வவுணரை யாடல்வெம் பரியை
வெங்கண் யானையை யிரதத்தை வாரினன் விரைவின்
மங்குல் வானினுந் தரையினுங் கடலினும் வரைக
ளெங்கு மாகியே வீழ்தர வீரனூர்த் தெறிந்தான். (௬௮)

அன்பு லப்புறு கொடுந்தொழி லவுணர்க ளமரும்
வன்பு லத்துயிர் கொளவரு பறவிதன் றாதா
துன்பு மச்சமு மணங்குட னகன்றுதற் றுதிப்பத
தென்பு லத்தவன் முன்னுற வீசினன் சிலரை. (௬௯)

ஒருத லைப்படுங் கேளிரைத் துன்னுவா னுய்ப்பக்
கருதி னன்கொலோ சிற்சில வவுணர்தங் கணத்தை
நிருதி மாநகர் புகுந்திட வீசின னிகரில்
சுருதி நாயக னேவலாற் றியதனித் தூதன். (௭0)

நேர்ந்து போர்புரிந் துயிர்தனை விடாததந் நிலைமை
யோர்ந்து விண்ணவர் மானங்கள் விடுத்திடா துயாவான்
சார்ந்த ஞாயிறு பிளந்திடா தாடலின் றன்மை
சேர்ந்து ளார்பெறுந் துறக்கமேல் வீசினன் சிலரை. (௭௧)

எண்டி சைப்புறந் தாக்கியே பெயாகிலா திரக்கங்
கொண்ட வெங்கரிக் கிரையெனச் சிலவரைக் கொடுக்குந்
தெண்டி ரைப்புனல் பருகிய நிரபபது நீர
வுண்டி யாகவே வடவைபாற் சிலவரை யுய்க்கும். (௭௨)

ஏந்த வின்னபல் வகையினு லடுதலு மிமைபபின்
வீந்த தானைக ளேணைவரும் பொன்றினர் மிக்கோ
ரோய்ந்து வானினுங் கடலினுந் திசையினு முலைந்து
சாய்ந்து போயினர் மானமும் வன்மையுந் தவறி. (௭௩)

மற்றிந் நீர்மையைக் காண்டலும் வச்சிர வாகு
விற்ற தேகொலா நம்பெருந் தானையென் றிரங்கிச்
செற்ற மீக்கொண்டு வலவனை நோக்கியித் தேரை
யொற்றன் முன்னுற விடுத்தியாற் கடிதென வுரைத்தான். (௭௪)

உரைக்கும் வாசகங் கேட்டலுந் தொழுதுமுன் னுற்ற
பரிக்கு லங்களின் மத்திகை வீசியே பாக
னருக்க னுமியந் திகிரியூர் வலவனு மஞ்சி
வெருக்கொ ளும்படி தேரினை வீரன்முன் விடுத்தான். (௭௫)

கொடிய வெஞ்சினந் திருகியே சூர்தரு குமரன்
கடிது போர்செய்வான் வருவது மேலையோன் காணா
முடிவி லாமகிழ் வெய்தியே முழுதுல களந்த
நெடிய மாலினு நெடியன்மற் றிவனென நிமிர்ந்தான். (௭௬)

நெடிய தாள்புவி யளந்திடப் புயங்கள்விண் ணெருக்க
முடியெ லாங்கடந் தண்டகோ ளகைதனை முட்ட
வடிவ மைந்திடு திறலினான் பணிபதி மயங்க
வடிபெ யர்த்துபார் வெடிபட விடிபட வார்த்தான். (௭௭)

புரம டங்கலுந் தெறுகணை போன்றுளான் பொன்னோன்
வரம டங்கலுஞ் சோரிய தடங்கலும் வாணா
னாரம டங்கலு முண்டிடத் தறியின்வந் துதித்த
நரம டங்கலும் வெருவர வெரியெழ நகைத்தான். (௭௮)

முச்ச கம்புகழ் திறலினான் முறுவலு முழக்கும்
வச்சி ரத்தட மொய்ம்பினான் கேட்டலு மறுகி
மெய்ச்சி ரதொகை துளக்கியா ரழலெழ விழித்து
நச்செ யிற்றர வாமெனச் செயிர்த்திவை நவில்வான். (௭௯)

வீர நன்றுநின் னாண்மையு நன்றுமே தக்க
பேரு நன்றுபே ராற்றலு நன்றுநீ பெற்ற
சீரு நன்றுநின் விஞ்சையு நன்றுசெய் கின்ற
போரு நன்றுநிற் கேற்பதிவ் வார்ப்பெனப் புகன்றான். (௮0)

மற்று மோருரை புகலுவான் வந்தெதிர் மலைந்த
கொற்ற வீரரைப் படுத்தன மென்றுளங் கொண்டா
யற்றெ லாமினி விடுமதி நின்மிட லலைத்துப்
பற்றி யெந்தைமுன் விடுப்பனா லுனையெனப் பகர்ந்தான். (௮௧)

நின்னை வென்றிட முயலுவன் றமியனு நீயு
மென்னை வென்றிட முயலுதி யிருவரு மதனைப்
பன்னி கிற்பதிற் பயனெவன் கடிதமா பயிறி
பின்னை வென்றுளார் வெல்லுக வென்றனன் பெரியோன். (௮௨)

என்னு முன்னரே வச்சிர வாகுவென் றிசைக்கு
மன்னன் மாமகன் றனதுகைக் கார்முகம வாங்கிப்
பொன்னி னாணொலி கொண்டொரா யிரங்கணை பூட்டி
மின்னு லாந்தனி வேலவன் றாதன்மேல் விடுத்தான். (௮௩)

விடுத்த வாயிரம் பகழியும் விடலைதன் மிசையே
யடுதத வெல்லையிற் காணுறு வங்கையொன் றதனை
யெடுத்து முன்னுற வோச்சியே யங்கவை யனைத்தும்
பிடித்து வல்லையி னுண்டுகள் பட்டிடப் பிசைந்தான். (௮௪)

விட்ட வாளிகள் பூழிபட் டிடுதலும் வெகுண்டு
மட்டு வாகைவெஞ் சிலையினைப் பின்னரும் வணக்கி
நெட்டி லைச்சர மொருபதி னாயிர கிறத்திற்
பட்டி டும்படி தொட்டன னவுணர்கோன் பாலன். (௮௫)

அசைவி லானது நோக்கியே முந்துபோ ரகத்தி
விசைமை நீங்கியே முடிந்திடு தானவ ரிட்ட
முசல மாகிய தொன்றினை யெடுத்துமுன் வந்த
விசிகம் யாவையும் புடைத்தனன் றிசைதொறும் வீழ. (அசு)

வழுவில் வாளிகள் வறிதுபட் டிடுதலு மற்றும்
விழுமி தாகிய வொருபதி னாயிரம் விசிகம்
பழுது றுதன தூண்டியே யாண்டகை பரித்த
வெழுவை துண்டுக ளாக்கியே பின்னரு மெய்வான். (அஎ)

தலையி லாயிரங் களத்தினி லாயிரந் தடந்தோண்
மலையி லாயிர முரத்தினி லாயிரம வயத்தா
ணிலையி லாயிரங் கணைகளாத் தூண்டின னீடுங்
கொலையி லாயிரங் கூற்றினைப போலுறுங் கொடியோன். (அஅ)

கையி லேந்திய பேரெழு முரிந்திடக் காமர்
செய்ய மெய்ம்முழு தீண்டியே பகழிகள செறிய
வைய னின்றனை மீனுரிறை வருந்தியே யதற்பின்
னெய்யெ னச்சென்று வெய்யவன் றேரினை யுதைத்தான். (அகூ)

உதைத்த காலையிற் பண்ணுறு பரியெலா மொருங்கே
பதைத்து வீழ்ந்தன பாகனு முருண்டனன் பட்டான்
கதித்த வையமு மழிந்தது வன்னது காறை
மதித்து வேறொரு தேரிடைப பாய்ந்தனன் மறவோன். (கூ0)

பாய்ந்து வச்சிர வாகுவாந் தொல்பெயர படைத்தோன்
றேய்ந்த வொண்பிறை பணியொடு சோந்தன சிலையி
னைந்தொ ராயிர மயிறகணை பூட்டியே பகுபோ
ரேந்த னெறறியுட் செறித்தன னமரர்க ளிரங்க. (கூக)

ஆயி ரங்கணை நுதலிடை யழுத்தலு மடல்வேற்
றாய வன்றிருத் தூதுவன் சூரருள் புரிந்த
றிய வன்மடந் தேரினைச் செங்கையா லெடுத்து
மீயு யர்ந்திடும் விண்ணிடை யெறிந்தனன விடுத்தான். (கூஉ)

விண்ண கத்திடை யெறிந்தபின் வீரவா குப்பே
ரண்ணல் வச்சிர வாகுவந் தேறுவா னமைந்து
பண்ணு றுத்திய வேமமாய் நின்றதேர் பலவுந்
துண்ணெ னப்புடைத் தெறிந்துதைத தொலலையிற் றொலைததான். ()

தொலைக்கு மெல்லையி னவுணர்கோன் மதலைதொல் புவிக்கோ
ரிலக்கம் யோசனை யெல்லையின் காறும்விண் ணேகி
யலக்க ணுற்றுமீண் டழிதரு தேருட னமரில்
வெலற்க ருந்திற லறுமுகன் றூதன்முன் வீழ்ந்தான். (கூச)

நிலவ ரைப்புறுஞ் சூர்மக னெழுந்துதன் னெடிய
சிலைவ ளாத்தமர் செய்திட முன்னலுந் திறலின்
றலைமை பெற்றவன் கண்டுகை யோச்சியத் தனுவை
வலிது பற்றியே முரிந்தனன் பேரொலி மயங்க. (கூரு)

ஏந்து கார்முகந் தனைமுரித் திடுதலு மெரியிற்
காந்து கண்ணுடை வச்சிர மொய்ம்பனோர் கரத்தின்
வாய்ந்த வாள்கொடே யெதிர்தலுந் தன்னுடை மருங்கி
னேந்த கந்தனை யுறைகழித் தறிவன்மே னடந்தான். (௯௬)

நடந்து வச்சிர வாகுமுன் னுய்த்திட நனிதோ
ளடைந்த வாளினை விலக்கியே யறிவரி லறிவன்
கடந்த போர்வலி கொண்டதன் வாளினாற் கடிது
தடிந்து வீட்டின னவுணர்கோ னுந்தகத் தடக்கை. (௯௭)

செய்ய தோர்கரந் துணிபடத் தீயவன் செறுததோர்
கையி ருந்திடு தண்டினை யெறிதலுங் கண்டு
மையில் கேள்வியன் றுணிபடுத் தவுணர்கோன் மதலை
யையி ரண்டவாந் தலையையும் வாளினா லறுததான். (௯௮)

வேறு.

எந்தைதன் றாதுவ னெறிந்த வாளினா
லைந்திரு சென்னியு மற்று வீழ்தலு
மைந்தியல் வச்சிர வாகு வாகிய
வெந்திற லவுணர்கோன் வீடி னனரோ. (௯௯)

ஆடிய லவுணர்த மண்ண றன்மகன்
வீடிய காலையின் வெருவிப பாங்கரி
னோடிய வவுணர்க ணனிபு லம்புறீஇ
யோடினர் திசைதொறு முடைந்து போயினார். (௧௦௦)

துஞ்சினன் வசசிரத தோளன் கண்டிது
நெஞ்சக மகிழ்ந்திவ ணிற்ப னேயெனின்
வெஞ்சின வவுணர்கோன் வினவிற் றீமையென்
றஞ்சினன் கரந்தென வருக்கன் போயினான். (௧௦௧)

ஆ திருவிருத்தம் - ௯௦௪.

---

வசனம்.

இவ்வாறு சகத்திரவாகுகள் வீரவாகுதேவரால் கொல்லப்பட்டசெய்தியைத் தூதர்களோடிச் சூரபன்மனுக்கறிவிக்க, அவன் மிகவும் மனம்வருந்தி, ஒரு தூதனாகவந்தவன், இத்தனைபராக்கிரமததைச்செலுத்தப்பார்த்திருக்கிற நாளும் ஒரு ஆண்மகனுவென்று தன்னையிழித்துச் சொல்லிக்கொள்ளக் கேட்ட அவன் மகனான வச்சிரவாகு என்பவன்வந்து, தேவரீர் இவ்வளவு வருத்தம்படி நான் பார்த்திருப்பது தகுதியன்று, இதோ நான்போய் அந்தத்தூதனைக் கட்டிக்கொண்டு வந்து உமது சந்நிதியில் விடுகிறேனென்றுசொல்லி விடைபெற்றுத் தன்துணைவராகிய போர்வீரருடன் புறப்பட்டுப் போர்க்களம்வந்துசேர்ந்தான். அதுகண்ட வீரவாகுதேவர், இவன் சூரபன்மனுக்கு மகனாயிருக்கலாம், இவனைவெல்வது ஒரு பெரியகாரியமோவென்று ஆரவாரித்தசத்தம் அண்டங்களெல்லாம் குலுங்கும்படியிருந்தது. இந்தச்சத்தத்தை வச்சிரவாகுகேட்டு மனம்வருந்தி, இப்படிப்பட்ட சத்தத்தை இதுவரையில் நான் கேட்டதில்லை யென்றுசொல்ல, அவன் தேர்ச்சாரதியாகிய விசயன் என்பவன் வச்சிரவாகுவைநோக்கி, நீ இந்தத்தூதனை யெளியன்

யெண்ணலாகாது, இவன் குமாரக்கடவுளின் திருத்தம்பியாகும், இப்பொழுது நீ கேட்டுவெருவியது அவன் ஆரவாரித்த ஒலியாகும் என்றுசொல்லவே, வச்சிரவாகு வானவன, இதோநான் அவனை யிப்பொழுதே பிடித்துக்கொண்டுவந்து என்தந் தையினெதிரே விடுவேனென்றுசொல்லிப் புறப்படுதலும், இவனுடைய சேனைக ளெல்லாம் வீரவாகுதேவரை வளைந்துகொண்டன. அச்சேனைகளையெல்லாம் வீர வாகுதேவர் ஒரு நொடிப்பொழுதில் அதம்பண்ணினர். அதைக்கண்ட வச்சிரவாகு, வீரவாகுதேவரைநோக்கி, இதுவரையில் அநேகரைக்கொன்றுவிட்டோமென்று அகங்கரிக்கவேண்டாம், உன்னை யொருநொடியில் கட்டிக்கொண்டுபோய் என் தந்தைக்கெதிரேவிடுகிறேன்பார் என்றுசொல்லிப் போர்செய்யத்தொடங்கி ஆயிரக் கணக்காகிய பாணங்களைத்தொடுத்தெய்து அவரைச் சற்றுநேரம் சோர்வடையச் செய்தான். சற்றுநேரம் அயர்ந்திருந்த வீரவாகுதேவர் தெளிவடைந்தெழுந்து அவனது தேரைக் காலால் உதைத்தார். அவ்வுதையால் அத்தேரிற்கட்டிய குதி ரைகளுமிறந்து சாரதியோடு தேரும் பொடியாகவே, வச்சிரவாகு வேறொருதேரி லேறி வீரவாகுதேவர்மேல் அயிரமபாணங்களை யேவினன். அதைக்கண்ட வீர வாகுதேவர் அவனேறியிருந்ததேரோடனே அவனை ஆகாயத்தில்விட்டெறிந்தார். அவன் ஆகாயத்தில் இலக்கம்யோசனைதூரம்வரைக்கும்போய் மீண்டுவந்து பூமி யில்விழுந்து தன் வில்லைவளைக்கமுயலும்போது வீரவாகுதேவா அந்தவில்லையும் முறித்தெறிந்தார். அதன்பிறகு வச்சிரவாகு தன்கையிலிருந்த வாள் தண்டு என் பவற்றைக்கொண்டு போர்செய்யவருதலும் அவற்றையும் வீரவாகுதேவா பொடி யாக்கி, அவன் பத்துத்தலைகளையும் அறுத்துத்தள்ளினர். இதைக்கண்ட அவுண ரெல்லாரும் பயந்தோடிவிட்டார்கள். சூரியனும் அஸ்தமனமலையையடைந்தான்.

வச்சிரவாகுவதைப்படலம் முற்றிற்று.

# யாளிமுகன்வதைப்படலம்.

திண்டிற லவுணர்கோன் சிறுவன் வீந்தது
மண்டம ரியற்றிட வருந ரின்மையுந்
தண்டம தடைந்ததுந் தபனன் மாய்ந்ததுங்
கண்டன னினையன கருதன் மேயினன். (க)

எந்தையை யெள்ளின னிருந்த கோநகர்
சிந்தினன் புரத்தையுஞ் சிறிது வீட்டினன்
வந்தவர் யாரையு மாய்வு செய்தனன்
புந்தியின் வெருளியிற் சிறிதீ போக்கினேன். (உ)

ஏலவெம் போர்செய வெவரும் வந்திலர்
ஞாலம தவிரொளி நடாத்து ஞாயிறு
மேல்கட னீந்தினன் விரையப் போயினன்
மாலையு மிவ்விடை வந்து நேர்ந்ததே. (ந)

அறந்தனை நினைகிலா தல்லல் செய்பவ
ருறைந்திடு நகரிதி னுற்றிற் போந்தயான்
சிறந்திடு மறுமுகத் தேவ தேவனை
மறந்திட லாங்கொலிம் மாலை காறுமே. (ச)

ஏவரும் வழுத்திய வெங்கை கந்தவேள்
பூவடி தணந்திடு புலம்பு மிவ்விடைத்
தேவர்கள் புன்மையுந் தீர வல்லையிற்
போவது துணிவெனப் புந்தி தேற்றினான். (௫)

தேற்றிய திறலுடைச் செம்ம லிம்மென
மாற்றலர் படுநில வரைப்பு நீங்கியே
காற்றெனக் கனலெனக் கால னென்னவெங்
கூற்றென மறுகிடைக் குலவி யேகினான். (௬)

திறல்கெழு மொய்ம்புடைச் செல்வன் செல்லுழி
மறுகிடை யவுணர்கண் மறலி மற்றிவன்
குறுகவிர் நுங்களைக் கொல்வன் கொல்வனென்
றறைகுநர் முறைமுறை யரற்றி யோடினார். (௭)

எஞ்சிய வவுணர்கள் யாரு மிவ்வகை
யஞ்சின ரிரிந்திட வழிந்து முன்னையா
நெஞ்சிய வாவண தொகைக டந்தொரராய்
விஞ்சிய மகேந்திரம் விடுத்து நீங்கினான். (௮)

புடையகன் மகேந்திர புரத்தை நீத்தபின்
விடைபொரு வலியினான் விண்ணின் பாலெழீஇ
முடுகினன் வழிக்கொடு முருகற் போற்றியே
வடதிசை யிலங்கையின் வரைப்பு நண்ணினான். (௯)

வேறு.

ஆங்கது காலையி லனைய, பாங்கரின் மேவரு பழையோ
னோங்கிய மூவெயி லுளளோர், தாங்கிய வன்மை தரித்தோன். (௧௦)

முடியு மகேந்திர மூதூர், வடதிசை யாரரண் மன்னி
யுடைய விலங்கையி னோம்பும், படியறு காவல் பரிதோன். (௧௧)

ஆயிர மாமுக னடுதோ, ளாயவி ராயிர முடையோன்
ஞாயிறு தன்மக னகரின், வாயில்க ளன்னதொர் வாயான். (௧௨)

வடவரை யாயிரம் வந்தோ, ருடல்கொடு மேவிய தொப்பான்
படைபல பாணி பரித்தான், கடையழல் கான்றிடு கண்ணான். (௧௩)

தண்ணளி யோரிணை தானு, மெண்ணிகழ் வற்ற வுளத்தா
னெண்ணரும் வெம்பவம் யாவும், பண்ணின னன்று பயின்றான். (௧௪)

மீளில் சினத்ததி வேகக், கோளரி யைத்தரு கொடியோன்
யாளி முகத்தவ னென்போன், வாள்வய முற்றிடு வலியோன். (௧௫)

வேறு.

பெருந்தகை யாங்கவன் பெயர்ந்த காலையி
னருந்திறற் சூரனை யடைந்து மீண்டுபின்
மருந்துறழ் தன்மகன் மாட்சி தேர்வுறீஇ
யிருந்தனன் வருந்தியே யிலங்கை தன்னிடை. (௧௬)

சண்டவெங் கதிகொடு தமியன் சேறலுங்
கண்டனன் யாரிவன் கள்வன் போலுமால்
விண்டல நீந்தியே மேவு வானெனத்
தொண்டுசெ யுழையரி லொருவன் சொல்லுவான். (௧௭)

நங்குல நாயக நவில்வன் கேட்டிநீ
செங்கதிர் முளைத்துழிச் செல்வற் காணிய
பொங்கொளி மகேந்திர புரத்திற் போந்தனை
யிங்குநின் றிருமக னிருந்து காப்பவே. (௧௮)

போந்திடு கின்றபின் புணரி தன்னுள்வா
னீந்தின னீங்கிவ னேர வன்னதை
வாய்ந்திடு பெருந்திறன் மடங்கற் போரினன்
காந்திய கனலெனக் கண்டு சீறினன். (௧௯)

சீறினன் படையொடு சென்று தாக்கலும்
வீறெடு வருமவன் வெகுண்டு வாளுரீஇ
மாறம ரியற்றியே மற்ற வன்றனைக்
கோறல்செய் தொருவிறல் கொண்டு மேயினன். (௨௦)

மின்னவிர் பூணுடை வீர மொய்ம்பினு
னின்னதோ ரிலங்கையி னிடைக்கட் பாய்ந்தன
னன்னவ னடிபொரு தாழி யுற்றதாற்
பொன்னகர் வளனொடு மங்கட புக்கம்போல். (௨௧)

புக்கிட வளப்பிலர் பொன்ற வேலையோ
ரக்கண மெழுந்தன ரவறகண் டஞ்சியே
திக்கொடு வானமுஞ் சிந்த நின்மகன்
மைக்கட லகமொரீஇ வல்லை யெய்தினன். (௨௨)

வெய்தென விவண்வரும் வீர னோடமர்
செய்தனன் வாள்கொடு செவ்வி யன்னதின்
மைதவழ் மேனியின் மதலை மார்புதாள்
கைதலை யொருதலை கண்ட மாக்கினன். (௨௩)

பூழியம் புயமுடைப் பொருநன் பின்னுறக்
கேழுறு வானெறி கிளர்ந்து போந்திடா
வாழிய மகேந்திர வரைப்பிற் புக்கன
னூழுறு மிலங்கையு மாழி மேலெழ. (௨௪)

ஞூருறை திருநகர் துன்னி யாயிடைச்
சீரினை முழுவதுஞ் சிந்தி நங்குல
வீரரொ டேயமர் விளைத்து வென்றவ
ணேருற ரின்மையி னீங்கி னனரோ. (௨௫)

என்னலு முருமினு மிடித்த சொல்லினன்
வன்னிகொ ளுயிர்ப்பினன் மடித்த வாயினன்
றுன்னிய வியாபினன் சுழலுங் கண்ணினன்
மெய்ந்நிறை வெகுட்சியன் விளம்பன் மேயினன். (௨௬)

காண்டியென் கடிமுறை கடந்து மைந்தனை
யீண்டுயிர் வவ்வியே யிறைவ னூர்புகா
மீண்டிடு கள்வனிவ் வீரந் தன்னொடே
மாண்டிட வடுகுவன் வன்மை யாலென்றான். (௨௭)

என்றிவை விளம்பியே யாளி மாமுகன்
மூன்றெனு வெழுந்தொரு கொற்ற வாள்கொளீஇ
நின்றகில் படையொடு நேர்ந்த வீரன்முன்
சென்றன னினையன செப்பன் மேயினான். (உஅ)

நங்கடன் முறையினை நடாத்து மைந்தனை
யிங்கடல் செய்தனை யினைய காப்பொரீஇ
யங்கடற் போந்தனை யறிவு செய்தனை
வெங்கடல் கடந்தனை மீடி யேகொலாம். (உகூ)

ஒல்லொலி யளக்கரை யுகண்டு நிற்கினிச்
செல்லுத லரிதியான் செருவி னோர்ந்தனன்
சொல்லுவன் பெருவயங் கொள்வ னீயிவண்
வல்லது புரிமதி மதியி லாயென்றான். (௩0)

சொற்றது கேட்டலுந் தழுனிப் பேரொலி
யுற்றெரி தனலென வுயிர்ப்பு மூரலுஞ்
செற்றமு மெய்தியே துளக்கிச் சென்னியைக்
கொற்றமொய்ம் புடையதோர் குரிசில் கூறுவான். (௩க)

ஒருதலை யுடையவென் னுயர்வு மாயிரந்
தருதலை யுடையநின் றாழ்வும் யாமிவட்
பொருதலை யிழைத்திடும் போது காண்புறுங்
கருதலை பெருவடி வமைந்த காட்சியே. (௩உ)

தீயவ விம்மொழி திண்ணந் திண்ணமுன்
மாயிரும் புழைக்கையின் மாமு கங்களோ
ராயிரந் தன்னையு மறுத்து வீட்டியே
நாயினங் கவரிய நல்கு வேனென்றான். (௩௩)

கருணைகொ ணந்தியங் கணத்த னிவ்வகை
யுரைதரு மெல்லையி னுததி மேருமால்
வரையினை விழுங்கிய வளைந்த தேயென
விரைவொடு படைஞர்கள் வீரற் சுற்றினார். (௩௪)

சுற்றிய தானையர் தோன்றன் மீதுதாம்
பற்றிய படைக்கலம் பலவுந் தூண்டியே
செற்றமொ டமர்வினை செய்யச் சூறைபோன்
மற்றவர் சூழலுள் வாள்கொண் டெய்தினான். (௩௫)

துண்டமு மகலமுந் தோளுந் தாளுமொண்
கண்டமுஞ் சென்னியுங் கரமு மானவை
விண்டுவிண் டழிவுற வெய்ய தானவர்
தண்டம தனைத்தையுந் தடிந்திட் டானரோ. (௩௬)

வேறு.

அறுகு மாமுகத் தண்ண லாற்றவுங்
கறுவு பெற்றிடுங் கருத்தின் வீரனைக்
குறுகி யாயிரங் கொண்ட கைகளா
லிறுதி யூழிநா ளிடியி னெற்றினான். (௩௭)

அடித்த கைகளை யங்கை யொன்றினாற்
பிடித்து மேலவன் பெருங்கை வாளினா
லுடைத்த சோரிநீ ருகுத்து வீழ்ந்திறை
துடித்தி டும்படி துண்ட மாக்கினான். (கஅ)

ஆயி ரங்கர மறனு மற்றுள
வாயி ரங்கர மவைக ணீட்டியே
யாயி ரங்கிரி யவைப றித்தன
னாயி ரங்கணு ளுடல்கொண் டுள்ளான். (கசு)

பறித்த வாயிரம் பருப்ப தத்தையுங்
கறுத்து வீரன்மே லகடித்து வீசலு
மிறத்தல் கொண்டுமெய் யெங்கு மெய்திய
புறத்து வீழ்ந்தன வுடைந்து தூளியாய். (ச0)

பொற்றை யாவையும் தூளி யாகியே
யற்ற காலையி லையன் றாதுவன
மற்றை யாயிரம் வான்க ரத்தையுங்
கொற்ற வாள்கொடே குறைத்து வீட்டினான். (சக)

இமைக்கு மெல்லையி னெய்துங் கூற்றினை
யழைக்கு மாறென வார்த்துத் தானவன்
றழைக்கு மொய்ம்பினான் றன்னைப் பற்றுவான்
புழைக்கை முற்றவும் போர்ந்தென் றுய்த்தனன். (சஉ)

உய்த்த காலையி னொருதன் வாளினா
லெய்த்த வன்மைசேர் யாளி மாமுகன்
பத்து நூறெனப் பட்ட சென்னியுங்
கொத்தொ டேவிழக் குறைத்திட் டானரோ. (சங)

ஆகத் திருவிருத்தம் - கூசஎ.

---

வசனம்.

சூரபன்மனுக்கு மகனாகிய வச்சிரவாகு இறந்தொழிந்தும், வீரவாகுதேவர், தீதனுய்வந்தநான் மகேந்திரநகரையும் அழித்து, எதிர்த்துப் போர்செய்யவந்த சில அவுணவீரரையுங்கொன்றேன், மாலைக்காலமும் வந்துவிட்டது. இனிச் சண்முகப்பெருமான் சந்நிதியைச்சேர்வதே நமக்குத் தகுதியென்று அந்நகரைவிட்டு வாயுவேகமாய் வரும்போது இவரைக்கண்ட அந்நகரத்துள்ள அவுணர்கள் பயந்தோடிவிட்டார்கள். வீரவாகுதேவரும் அந்நகரத்தைக்கடந்து ஆகாயமார்க்கமாய்ச் சென்று வடக்கேயுள்ள இலங்கைநகரத்தைச்சேரும்போது, அத்திசையைக்காவல்செய்திருந்த யாளிமுகனென்பவன்வந்து போர்செய்ய, அவன் சேனைகளைத் தமது கைவாளைக்கொண்டு வெட்டியெறிந்தார். அதுகண்ட யாளிமுகன் மிகுகோபத்தோடு தன் ஆயிரங்கைகளாலும் அறைந்தான். வீரவாகுதேவர் அவ்வாயிரங்கைகளையும் துணித்தார். அவன் மற்ற ஆயிரங்கைகளால மலைகளைப்பறித்தெறிய, அவையாவும் வீரவாகுதேவர்மேற் பட்டுப் பொடியாய்விட்டன. உடனே அவர் அந்த ஆயிரங்கைகளையும் வெட்டித்தள்ளி, அவனுடைய ஆயிரந்தலைகளையும் அறுத்துத்தள்ளினார்.

யாளிமுகன்வதைப்படலம் முற்றிற்று.

# வீரவாகுமீட்சிப்படலம்.

இன்ன பான்மையால் யாளி மாமுகன்
றன்னை யட்டபின் றன்கை வாளினைப்
பொன்னு லாவுறை புகுத்திச் சென்றனன்
மின்னு செஞ்சுடர் மேனி வீரனே. (௧)

இந்தி ரத்திரு விலங்கை நீங்கியே
யந்தி ரைக்கட லழுவம் வாவியே
கந்த மாதனங் கவின்ற வேலைசேர்
செந்தி மாநகர் சென்று புக்கனன். (௨)

புக்க காலையிற் பொருவி லாற்றலான்
மிக்க சேவகன் மேவல் காணுறாத்
தொக்க பாரிடஞ் சேயற் காணுறு
மைக்க ருங்கடன் மான வார்த்தவே (௩)

பாரி டத்தொகை பரிக்கு மன்னவர்
சேர வந்துதஞ் செங்கை கூப்பியே
வீர வாகுவை மெய்யு றத்தழீஇ
யார வமெய்தினா ரன்பு கூறினார். (௪)

தழுவு வோர்தமைத் தானும் புல்லியே
யிழிஞர் தம்பதிக் கேகும் வெம்பவ
மொழிவ தாயின னுமைக்கண் டேயென
முழுவ லன்பினான் முகமன் கூறினன். (௫)

விலக்கில் வன்மைகொள் வீர வாகுவை
யிலக்கத் தெண்மரு மெதிர்ந்து மற்றவன்
மலர்க்க ருங்கழல் வணங்கிக் கைதொழ
வலக்க ணீங்குமா றனையர்ப் புல்லினன். (௬)

அமைவில் பாரிடத் தனிக வேந்தருந்
தமர்க ளாயினோர் தாமுஞ் சூழ்வர
விமல னாகியே வீற்றி ருந்திடுங்
குமர நாயகன் கோயின் மேயினன். (௭)

விண்டு வானுளோர் விரிஞ்சன் மாதவர்
கொண்ட லூர்பவன் குழுமிப் பாங்குற
வண்டர் நாயக னமருந் தன்மையைக்
கண்டு முந்துகண் களிப்பின் மேயினன். (௮)

உள்ள மென்புட னுருகத் தூயநீர்
வெள்ளங் கண்ணுற விதிர்ப்பு மேவரப்
பொள்ளெ னப்புரம் பொடிப்பச் சூரடும்
வள்ளல் சேவடி வணங்கி னானரோ. (௯)

அணங்கு சால்வுறு மந்தண் சேவடி
வணங்கி மும்முறை மகிழ்ச்சி யன்பினை
யிணங்க வஞ்சலித் தேத்தி நிற்றலுங்
குணங்கண் மேற்படுங் குமரன் கூறுவான். (௧௦)

சுரரை வாட்டுறுஞ் சூரன் முன்புபோய்
விரைவி னம்மொழி விளம்ப மற்றவ
னுரைசெய் திட்டது மொல்லை மீண்டது
மரபி னிவ்விடை வகுத்தி யாலென்றான். (௧௧)

வீரன் கூறுவான் விமல நின்மொழி
சூரன் முன்புபோய்ச் சொல்ல வின்னுளோ
ரார் இருஞ்சிறை யதனை வீட்டலே
காரி யம்மெனக் கருத்திற் கொண்டிலன். (௧௨)

கெடல ருஞ்சுரர் கிளையை வெஞ்சிறை
விடுகி லேனென வெகுண்டு கூறினா
னடிக ளன்னதா லாண்டு நீங்கியே
கடிது வந்தனன் கரும மீதென்றான். (௧௩)

என்ற காலையின் யாண்டு மாகியே
நின்று முறைநெறுங் குணர்ந்த நீரமையா
னுன்றன் செய்கையு மொன்றுஞ் சொற்றிலை
நன்று மற்றது நவிறி யாலென்றான். (௧௪)

தொடக்க முற்றுவாழ் சூரன் மாநக
ரடுத்த காலையி னகன்ற வேலையிற
றடுத்த வோரைநின் சரண வன்மையாற
படுத்து வந்தனன் பான்மை யீதென்றான் (௧௫)

அருந்தி றற்புய னனைய செப்பலு
மிருந்த கந்தவே ளிகலி னோர்களால்
வருந்தி னைகொலோ மன்ற வென்றுதன்
திருந்து பேரருள் செய்தன் மேயினான். (௧௬)

அங்கவ் வெல்லையி னயி ரபெயர்ச்
செங்கண் மாயவன் றிசைமு கததவன்
மங்குன் மேலவன் வதன நோக்கியே
யெங்க ளையக னினைய கூறுவான். (௧௭)

தேவ ரைச்செயுஞ் சிறைவி டுத்துநீ
மேவு நன்கென வெய்ய சூரனுக்
கேவு தூதைவிட் டியம்பு வித்தனம்
பாவி யன்னது பயனென் றன்னலான். (௧௮)

வீதலே யவன் விதிய தாதலிற்
றீதில் விண்ணவர் சிறைவி டோமென
வோதி னனவ னுயர்வு நீக்குவான்
போது நாளையா மெனப்பு கன்றனன். (௧௯)

ஆறு மாமுகத் தைய னிவ்வகை
கூறக் கேட்டுளோர் கொடியசூர்மிசைச்
சேறு மென்றசொற் றெளிவி னந்துயர்
மாறிற் றென்றனர் மகிழ்ச்சி யெய்தினார். (௨0)

ஆன வத்துணை யாடன் மொய்ம்பினன்
றான வப்பதிச் சயந்த னுற்றது
மேனைச் செய்கை மெடுத்துக் கூறியே
வான வர்க்கிறை மனத்தைத தேற்றினன். (௨௧)

சீரு லாமகேந் திரபு ரத்தினும்
வீர வாகுமீண் டதுவி ளம்பினம்
மார னார்க்கட லலைப்ப வாண்டுறுஞ்
சூர னுற்றதும் பிறவுஞ் சொல்லுவாம். (௨௨)

ஆக திருவிருத்தம் - ௬௬௬.

---

வசனம்.

இவ்வாறாக அந்த யாளிமுகனைக்கொன்றபிறகு, வீரவாகுதேவரும் இலங்கையைக்கடந்து, கந்தமாதனத்தோடு கடலையுந்தாண்டித் திருச்செந்தூரையடைந்தார். அங்குள்ள பூதகணங்கள் இவரைக்கண்டு, சந்திரனைக்கண்ட கடலைப்போலப் பொங்கி யாரவாரித்தன. பாரிடவீரரும் இவரைத்தழுவி மகிழ்ந்தார்கள். இவரும் அவர்களுக்கு இன்சொற்சொல்லி, இலக்கத்தொன்பதின்மரையும் தழுவிக்கொண்டு அவர்களோடு சண்முகப்பெருமான் எழுந்தருளியிருக்கிற கோயிலையடைந்து அவரை வழிபட்டுநின்றார். குமரநாயகனும் இவரைநோக்கி, மகேந்திரநகரையடைந்து மீண்ட செய்திகள்யாவும் சொல்லவேண்டுமென்று வினவ, இவரும் அங்கேசென்று தாம்செய்த காரியங்களெல்லாவற்றையுஞ் சொல்லிநின்றார்.

அதன்பிறகு, சண்முகக்கடவுள் பிரமன்முதலிய தேவர்களைநோக்கி, தேவர்கள் சிறைவிடுத்து நீயும் உயிர்வாழலாம் என்று நாம் தூதனுப்பிச்சொல்வித்தும், அந்தச்சூரன் கேளாமல் அதிக்கிரமித்தானாதலால், அவனை இனி யிவ்வுலகத்தில் வைக்கலாகாது, போர்செய்து கொன்று, தேவர்களைச் சிறைமீட்பதே தகுதியாம்; ஆதலால் அவனோடுபோர்செய்ய நாளையே மகேந்திரத்துக்கெழுந்தருள்வோம் என்று திருவாய்மலர்ந்தருளக்கேட்ட தேவர்கள் மிகு களிப்படைந்தார்கள். வீரவாகுதேவரும் இந்திரனுக்குச் சயந்தன்முதலானோர் செய்திகளை விரித்துச்சொல்லி அவன் மனத்தைத்தேற்றினார். இதுநிற்க.

வீரவாகுமீட்சிப்படலம் முற்றிற்று.

---

# சூரனகர்புரிபடலம்.

ஏக வான்படை யுலப்ப வச்சிர
வாகு மாண்டதும் வாகை மொய்ம்பினனேகுந் தன்மையு மேவற் றாதுவர்
சோக மோடுபோய்ச் சூர்முன் கூறினார். (௧)

ஈரைஞ் சென்னிசே ரிளைய கான்முளை
வீரஞ் சிந்தியே விளிந்த வாற்றினைச்
சூரன் கேட்டலுந் துளங்கித் துன்பெனும்
வாரி யுள்ளுற மயங்கி வீழ்ந்தனன். (௨)

வேறு.

கண்ணிடை நெடும்புனல் கால மைந்தன்மே
லுண்ணிக முன்புசென் றுயிரை யீர்ந்திடத்
துண்ணென வுயிர்ப்பெனும் புகையுஞ் சுற்றிட
வெண்ணருஞ் செல்லல்கொண் டிரங்கி யேங்கினன். (௩)

ஏங்கினன் புலம்பலு மினைய வெய்யசூர்
பாங்கமர் தமர்களும் பரிச னத்தருந்
தீங்குசெ யரக்கருந் தெரிவை மார்களு
நீங்கற வழுதனர் நெடுங்க ணீருக. (௪)

பழிதவிர் கற்புடைப் பதுமை தன்மக
னழிவுறு தன்மையை யோர்ந்து மாமலர்க்
குழலவிழ்ந் தலமரக் கொங்கை மேற்புடைத்
தழுதனள் வீழ்ந்தனண் மறிக்கு மங்கையாள். (௫)

தொல்லிய விழுக்கிய சூர னென்பவன்
புல்லிய பின்முறைப் புணர்வின் மாதருஞ்
சில்லியற் கூந்தலுஞ் சேடி மார்களு
மெல்லவ ருந்தழீஇ யிரங்கன் மேயினார். (௬)

களமெழு மிசையொலி கடிநல் யாழொலி
துளையொலி வயிரொலி தூரி யத்தொலி
யளமரு மொழியொலி யடங்கி யப்பெரு
வளநகர் புலம்பொலி மயங்கிற் றென்பவே. (௭)

அன்னது போழ்தினி லறத்தைக் காய்தரு
துன்னெறி மந்திரி சூர பன்மனு
மன்னவன் முன்னுற வந்து கைதொழு
தின்னன கேண்மென விசைத்தன் மேயினான். (௮)

மெய்ப்புவி யண்டங்கள் பரித்த மேன்மையை
யொப்பருந் திருவினை யுலப்பி லாயுளை
செப்பருந் திறலினை சிறந்த சீர்த்தியை
யிப்பரி சழுங்குத லியற்கை யாகுமோ. (௯)

தெண்டிரை நேமிவான் செறிந்து கொள்ளினு
மண்டம தழியினு மனைத்து மாயினும்
விண்டிட லின்றிவாழ் வீர நீமனங்
கொண்டிடு திண்மையுங் குன்றற் பாலதோ. (௧௦)

எவரும் வியத்தகு மிறைவ நீயிவ
ணேவென வரற்றியே யுயங்குற் றாயெனின்
மூவரு நகைப்பர்கண் முன்ன மேவல்செய்
தேவரு நகைப்பர்கள் புகழுந் தேயுமால். (௧௧)

பூதர்தம் படையல புராரி நல்கிய
காதவ னேயல கழற விட்டதோர்
தூதுவன் செய்தபுன் றொழிலுக் காற்றலை
பேதுற லாகுமோ மெருமைக் கிறிலாய். (௧௨)

தந்தையர் துஞ்சினுந் தம்முன் பின்னவர்
மைந்தர்க டுஞ்சினு மற்றுஞ் சார்ந்தவர்
தந்தொகை துஞ்சினுஞ் சயத்தின் மேலையோர்
சிந்தைகொள் வன்மையிற் சிறிதுந் தேயுமோ. (௧௩)

மேதகு பெருந்திறல் வீரர் தம்மையு
மாதரும் வெல்வரான் மாயு மூழ்வரி
னுதலி னின்மகற காயுள் குன்றலிற்
றாதனு மட்டன னாகித் தோன்றினன். (௧௪)

வெவ்விய வொன்னலர் வினையும் வன்மையுங்
கைவரு நெல்லியங் கனியி னாடியே
செய்வகை தேற்றினஞ் செய்க லாதிவ
ணைவது மாண்மையி னலத்திற் காகுமோ. (௧௫)

வரங்களு மதுகையும் மரம்பின் றெய்தியே
யுரங்கிளர் சூரனென் றொருபேர் பெற்றநீ
தரங்கம தடைவதுந் தலைமைக் கேற்பதோ
விரங்கலை யிரங்கலை யென்று தேற்றினன். (௧௬)

மேற்றிக ழறத்தினை வெகுளு நாமத்தான்
றேற்றலு மவுணர்கோன் றெளிவு பெறறெழீஇ
யாறறருந் துயரினை யடக்கித தன்பணிக்
கூற்றிய வுழையரை நோக்கிக் கூறுவான். (௧௭)

சேயுயிர் வௌவியே சிறந்த விந்நகர்
மாய்வது புணர்த்திடு வலிய தூதுவன்
போயது தெரிந்திரோ புகலக் கேட்டிரோ
நீயிர்கள் வாய்மையை நிகழ்த்து மென்னவே. (௧௮)

தப்புட னிவ்வழி தூதிற் சென்றுளா
னிப்புர மகன்றன னிலங்கை நோக்குறா
வப்புற மேகின னதனைக் கண்டன
மெய்ப்பரி சிஃதென விளம்பி னாரரோ. (௧௯)

வேறு.

அம்மொழி வினவ லோடு மவுணர்கோன் றன்பா னின்ற
கம்மியர் தம்மை நோக்கிக் கடிதுபோ யகில நல்கிச்
செம்மலர் மிசையே வைகுந் திசைமுகத் தொருவன் றன்னை
யிம்மெனக் கொணர்தி ரென்ன வனையவ ரிசைக்க லுற்றார். (௨0)

ஈங்கிது கேட்டி மன்ன வினையமூ தண்ட நல்குந்
தேங்கமழ் பதுமத் தண்ண றேவர்கோ னாதி யான
பாங்கின ரோடு மேவிப் படையொடும் புவியில் வந்த
காங்கெயன் றன்க ணுற்றா னென்பராற் கண்டோ ரென்றார். (௨௧)

தொழுவர்க ளினைய மாற்றஞ் சொற்றலுஞ் சூரன் கேளா
விழுமிது விழுமி தென்னா வெய்துயிர்ப் பெய்திச் சீறி
யழலெழ நகைத்து மற்றை யண்டத்தி னிருந்து நல்குஞ்
செழுமல ரயனைப் பற்றிச் செல்லுமின் வல்லை யென்றான். (உஉ)

கொற்றவ னினைய மாற்றங் கூறலு முழையர் கேளா
விற்றிது செய்து மென்னா விசைவுகொண் டொல்லை யேகி
மற்றையண் டத்திற் சென்று வானவர் முதல்வன் றன்னைப்
பற்றினர் கொணர்ந்தார் தங்கோன் பணித்திடு பரிசு கூறி. (உ௩)

பரிசனர் பலரு மீண்டிப் பார்புகழ் சூர னென்னு
மரசன்முற் கொணர்ந்து வேறோ ரண்டத்தி னயனை யுய்ப்ப
வரிசையா லவனை நோக்கி மாணழி வுற்ற மற்றித்
திருநக ரதனைத் தொன்மை போலவே செய்தி யென்றான். (உச)

சூரன்மற் றிதனைச் செப்பச் சொற்பணி தலைக்கொண் டைய
வோரிறை யொடுங்கு முன்ன ருனதுதொன் னகர மாற்ற
வேருற முன்ன மேபோ லியற்றுவன் யானே யென்னாப்
பேருல குதவு கின்ற பெற்றியை நினைந்து செய்வான். (உரு)

பொன்மதின் மாட வீதி பொலன்மணிச் சிகரம் வேர
மன்மதன் விழையுஞ் சோலை மண்டபம் வாவி பொய்கை
சென்மலி யரங்க மன்றந் தெற்றியே முதல வெல்லாந்
தொன்மைபோ லாகத் தன்கைத் தொழின்முறை படைத்தான் மன்னோ.

இவ்வகை நகர முற்று மெழில்பெறப் படைத்த பின்னை
மைவரை மேனி மன்னன் மாபெருங் கோயி றன்னைச்
செவ்விதின் முதுமை போலச் சிறப்பினாற் றிருத்தல் செய்தா
னைவகை யிருபான் கொண்ட வல்லியங் கமலத் தண்ணல். (உஎ)

கோன்பெரு நகரு மந்தண் கோயிலும் படைத்த லோடு
மன்பெருந் தகைய சூரன் மற்றவன் செய்கை நோக்கி
யன்புசெய் துவகை யாகி யவுணர்கள் யாரும் போற்ற
முன்புபோ லரிமா னேற்று முழுமணித் தவிசி னுற்றான். (உஅ)

உற்றன னாகிப் பின்ன ரோதிமத் திறையை நோக்கி
மற்றுநின் னண்டஞ் சென்று வைகுதி நல்கி யென்னாச்
சொற்றன னேவ வன்னோன் றண்ணென விடைபெற் றேகிப்
பெற்றதன் னண்டஞ் சென்று பிறங்குதன் னுலகம் புக்கான். (உகூ)

ஆக திருவிருத்தம் ககஅ.

---

வசனம்.

வீரவாகுதேவர் வச்சிரவாகுவைக் கொன்றசெய்தியைத் தூதர்சொல்லக் கேட்ட சூரபன்மனும் அவன்மனைவியாகிய பதுமகோமளைமுதலிய மனைவியரும் மிகுந்த மனதுக்கங்கொண்டு புலம்பிக்கொண்டிருந்தார்கள். அதைக்கண்ட தருமகோபன் என்னு மந்திரியானவன் சூரபன்மனைக் கிட்டிநின்று, நீயோ ஆயிரத்தெட்டண்டங்களையும் ஆளும்பெருமான், பெருஞ்செல்வன், மஹாவீரன், நீ இப்படி

வருந்துவது உன்பெருமைக்குத்தகாது, அந்த வீரவாகுவையும் அவனைத் தூதனு யனுப்பின சண்முகச்சிறுவனையும் வெல்லத்தகுந்த வுபாயத்தைநாடிச் செய்யவே ண்டியகாரியத்தைச் செய்வதே தகுதியென்று சொல்லித்தேற்றச் சூரபன்மன் மனந்தெளிந்து, எதிரேநின்ற தூதரால், வீரவாகு சென்றதையறிந்து பிறகு தன் னருகேயிருந்த வொற்றரைநோக்கி, பிரமனை யழைத்துவாருங்களென, அவர்கள இறைவனே! பிரமன்முதலியோர் சண்முகன் சார்பாயிருக்கிறார்களென்று சொ ல்ல, அதுகேட்ட சூரன் குலுங்கநகைத்து, வேறோரண்டத்திலுள்ள பிரமனை யழையுங்களென்று சொல்லியழைப்பித்து, அவனைக்கொண்டு மகேந்திரநகரத்தை யும் தனது அரண்மனையையும் முன்னினுஞ்சிறப்பாகப் புனைவித்துக்கொண்டு அவனுக்கு விடைகொடுத்தனுப்பிவிட்டு, தன் சிங்காதனத்தில் இனிதுவீற்றி ருந்தான்.

சூரனகர்புரிபடலம் முற்றிற்று.

---

# சூரனமைச்சியற்படலம்.

அந்தநல் லமையந் தன்னி லவுணர்கோ னேவல் போற்றி
முந்துசெல் லொற்ற ரானோர் மூரிநீர்க் கடலை வாவிச்
செந்தியிற் சென்று கந்தன் சேனையும் பிறவுந் தேர்ந்து
வந்தனர் விரைவி னங்கண் மன்னனை வணங்கிச் சொல்வார். (௧)

ஏற்றவெம் பூத வெள்ள மிராயிரம் படையின் வேந்தர்
நூற்றுட னெண்மர் பின்னு நுவலருஞ் சிறப்பின் மிக்கோர்
மேற்றிக ழிலக்கத தொன்பான் வீரர்மற் றினைய ரோடுந்
தோற்றமில் பரமன் மைந்தன் றொடுகட லுலகின் வந்தான். (௨)

சரதமீ தவுணர் கோவே தாரக வீரன் றன்னைக்
கரையறு மாயை போற்றுங் காமரு பிறங்க றன்னை
யிருபிள வாக வேலா லெறிந்தன னீறு செய்து
திரைபொரு மளக்கர் வேலைச் செந்திமா நகரி னுற்றான். (௩)

விலங்கிய கதிர்வே லண்ணல் விரைந்திவண் மேவு மாற்றா
லுலங்கிளர் மொய்ம்பிற் றூத னொருவனை விடுத்தா னன்னோ
னிலங்கையை யழித்து வந்தான் யாளிமா முகவன் றன்னை
வலங்கையின் வாளாற் செற்று வாரிதி கடந்து போனான். (௪)

செங்கதி ரயில்வேன் மைந்தன் றெண்டிரைப் புணரி வாவிப்
பொங்குவெங் கணங்க ளோடும் போர்ப்படை வீர ரோடு
மிங்குவந் தாடல் செய்வா னெண்ணின னிருந்தா னீது
சங்கையென் றன்னல் வாய்மை தகுவன வுணர்தி யென்றார். (௫)

ஒற்றர்சொல் வினவி மன்ன னொருதனி யிளவ றன்னை
யற்றமில் கேள்வி சான்ற வமைச்சரை மைந்தர் தம்மைச்
சுற்றமொ டமைந்த தானைத் தொல்பெருந் தலைமை யோரை
மற்றொரு கணத்தின் முன்னர் மரபொடு கொணரு வித்தான். (௬)

வேறு.

ஆங்கவர் யாவரு மவுணர் மன்னவன்
பூங்கழல் கைதொழூஉப் புடையின் வைகலுந்
தீங்கனல் சுடுவதோர் சீற்ற முள்ளெழ
வீங்கிய வுயிர்ப்பினன் விளம்பன் மேயினான். (எ)

போற்றல ராகிய புலவர் யாரையு
மாற்றருஞ் சிறையில்யான் வைத்த பான்மையைத
தேற்றிய மகபதி சென்று சென்னிமே
லாற்றினை வைத்திடு மமலற் கோதினான். (அ)

கண்ணுத லுடையதோர் கடவுள் வல்லையோ
ரண்ணலங் குமரனை யளித்து மைந்தநீ
விண்ணவர் சிறையினை வீட்டிச் செல்கெனத்
துண்ணென நம்மிசைத் தூண்டினானரோ (கூ)

வாய்த்திடு கயிலைமால் வரையை வைகலுங்
காத்திடு நந்திதன் கணத்து வீரரு
மீத்தகு பூதரும் விரவ மாலய
னேத்திட வரன்மக னிம்ப ரெய்தினான் (கo)

பாரிடை யுற்றுளான் பாணி கொண்டதோர்
கூருடை வேலினாற் கொடிய குன்றொடு
தாரக னிளவலைத் தடிந்து பின்னுற
வாரிதி யகன்கரை வந்து வைகினான். (கக)

அன்னதோ ரறுமுக னாங்கொர் தூதனை
யென்னிடை விடுத்தலு மேகி மற்றவன்
மைந்நிற நெடுங்கடல் வரைப்பிற் பாய்ந்தொராய்ப்
பொன்னவி ரிலங்கைமா புரத்தை வீட்டினான். (கஉ)

இலங்கையங் காவலு மிகப்புற் றின்னதோர்
பொலங்கெழு திருநகர் நடுவட் புக்குலாய்
நலங்கிள ரென்னவைக் களத்தி னண்ணினான்
கலங்கல னிறையது மாயைக் கற்பினான். (கரு)

நண்ணின னெதிருற நவையில் வீரர்போல்
விண்ணவர் பாங்கராச் சிலவி ளம்பியென்
கண்முனஞ் சிலருயிர் களைந்து வன்மையா
லெண்ணலன் பின்னுற வெழுந்து போயினான். (கச)

போயவ னிந்நகர் பொடித்துச் சிந்தியா
னேயின வேயின படைஞர் யாரையு
மாயுறா வித்தனன் மற்று மென்னிளஞ்
சேயுயிர் கொண்டனன் செருக்கு நீங்கலான். (கரு)

அழிந்ததித் திருநக ரளப்பி லானைகள்
கழிந்தன செறிந்தது களேபு ரத்தொகை
கிழிந்தது பாரகங் கெழீஇய சோரியா
றொழிந்ததென் னாணையு முயர்வுந் தீர்ந்ததால். (கசு)

ஒற்றென வந்தவவ் வொருவன் றன்னையும்
பற்றிவெஞ் சிறையிடைப் படுத்தி னேனலேன்
செற்றில னூறதே யெனினுஞ் செய்திலே
னெற்றினி வசையுரைக் கீறு கூறுகேன். (௧௭)

இம்பரி னிவையெலா மிழைத்த தூதவ
னம்பதி யிகழ்ந்துபோ யிலங்கை நண்ணிய
மொய்ம்புடை யாளிமா முகவற் சாடியே
யம்புதி கடந்தன னவனி யெய்தினான். (௧௮)

கார்பெரு மிடற்றவன் காதன் மாமகன்
வாரிதி கடந்திவண் வந்து நம்மொடும்
போர்பொர நினைகுவான் போலு மிவ்வெலாஞ்
சாரணர் மொழிந்தனர் சரத மாகுமால். (௧௯)

நெற்றியி லணிகமாய் நின்ற பூதரைச்
செற்றிகல் வீரரைச் செருத்தச் சேயினை
வெற்றிகொண் டேனையர் தமையும் வீட்டியே
மற்றொரு விகலைமுன் வரவல் லேனியான். (௨0)

சூரனென் றொருபெயர் படைத்த தொல்லையேன்
பாரிடர் தம்மொடும் பாலன் றன்னொடும்
போரினை யிழைத்தடல புரிந்து வெல்லினு
வீரம தன்றெனா வறிது மேவினேன். (௨௧)

துய்த்திடுந் திருவினில் வலியிற் சூழ்ச்சியி
லெத்துணைப் பெரியர்தா மெனினு மேலையோர்
கைதவொரு வினைசெயக் கருதிற் றம்முடை
மெய்த்துணை யோரைமுன் வினவிச் செய்வரால். (௨௨)

ஆதலின் வினவினன் யானு மாற்றுத
லீதென வுரைத்திரா லென்று மன்னவ
னோதின னன்னதை யுணர்ந்து கைதொழூஉ
மேதியம் பெயரினு னிவைவி ளம்பினான். (௨௩)

மேலுயர் மாயைகள் விளைக்கும் வெற்பினை
மாலினை வென்றநின் வலிய தம்பியை
யேலவொர் கணத்தின்முன் னெறிந்த வீரனைப்
பாலனென் றுரைப்பது முணர்வின் பாலதோ. (௨௪)

மேதகு தாரக வீரன் றுனையை
யாதிபர் தம்முட னட்ட நீரரை
யேதுமோர் வலியிலா வெளிய ரென்பதும்
பூதரென் றிகழ்வதும் புலமைப் பாலவோ. (௨௫)

மீதெழு திரைக்கடல் விரைவிற் பாய்ந்துநம்
மூதெயில் வளநகர் முடித்து நின்னுடைக்
காதல னுயிரையுங் கவர்ந்த கள்வனைத்
தூதனென் றுரைப்பது மறிஞர் சூழ்ச்சியோ. (௨௬)

கற்றையஞ் சிறையுடைக் கலுழ னூர்தரு
கொற்றவன் றிசைமுகன் னமரர் கோமகன்
மற்றொரு வடிவமாய் வந்த தேயலா
லொற்றுவ னிலைமையே றுணரற் பாலதோ. (௨௭)

உன்றனி யிளவலு மொருநின் னோங்கலும்
பொன்றிய காலையே புராரி மைந்தன்மேற்
சென்றிலை யல்லதுன் சேனை தூண்டியும்
வென்றிலை தாழ்ந்திவண் வறிது மேவினாய். (௨௮)

தீயழல் வறியதே யெனினுஞ் சிறியோ
ரேயிது சிறிதென வெள்ளற பாலரோ
வாயத னாற்றலை யடக்க லாரெனின்
மாயிரும் புவியெலா மிறையின் மாய்க்குமால். (௨௯)

மாற்றலர் சூழ்ச்சிய தெனினு மாறதாய்
விற்றொரு நிலைமைய தெனினு மேவுமுன்
னேற்றெதிர் காப்பரே யென்னி னன்னவர்க்
காற்றரு மிடுக்கண்வந் தடைதற் பாலதோ. (௩௦)

துறந்திடா வளந்தனைத் துய்த்துச் செய்வகை
மறந்தன மாகியே வன்மை யாளரை
யெறிந்தவர் தமையிகழ்ந் திங்ஙன் வாழ்துமேற்
சிறந்தவர் யாமலா லேவர் சீரியோய். (௩௧)

முன்னமக் குமரன்மேன் முனிந்து சேறியே
லுன்னகர்க் கேதுமோ வொருறு மற்றுநீ
யன்னது புரிந்திலை யாடன் மைந்தனோ
டிந்நக ரழிந்ததென் றிரங்கற் பாலையோ. (௩௨)

மொய்யுடை நின்மகன் முடிந்த தன்மையு
மையநின் றிருநக ரழிவ தானதுஞ்
செய்யுறு நிலைமைக டெரிந்து செய்திடா
மையலின் கீழ்மையால் வந்த வாகுமால். (௩௩)

கழிந்திடு பிழையினைக் கருதிச் சாலவுள்
ளழிந்திட லியற்கையன் றறிஞர்க் காதலா
லொழிந்தன போகவொன் றுரைப்பன் கேண்மியா
விழிந்ததென் றுன்னலை யிமைப்பிற் செய்திநீ. (௩௪)

ஆயது பிறவிலை யவுணர் தம்மொடு
மேயின படையொடும் விரைந்து கண்ணுதற்
சேயினை வளைந்தமர் செய்யப் போதியா
னீயினித் தாழ்க்கலை நெருநல் போலவே. (௩௫)

என்றிவை மேதிய னிசைப்பக் கேட்டலு
நன்றிது வாமென நவின்று கையெறிந்
தொன்றிய முறுவலு முதிப்ப நல்லறங்
கொன்றிடு தூர்க்குண னினைய கூறுவான். (௩௬)

வன்றிற லுவணன்போல் வந்த மாயன்மே
னின்றிடு மமரர்மே னேர்ந்து போர்செயச்
சென்றிலை யிளையராற் றிறல்கொண் டேகினை
யின்றினிப் பாலன்மே லேக லாகுமோ. (௩௭)

இறுதியி லாயுளு மிலங்கு மாழியு
மறுவிலா வெறுக்கையும் வலியும் வீரமும்
பிறவுள திறங்களுந் தவத்திற் பெற்றனை
சிறுவனோ டியாவர் செய்கற் கேற்கொலாம். (௩௮)

மேதகு பசிபிணி யலைப்ப வெம்பலிக்
காதல்கொண் டலமருங் கணங்க டமையுந்
தூதுவன் றன்னையுந் தொடர்ந்து போர்செயப்
போதியா வமரரைப் புறங்கண் டுற்றுளாய். (௩௯)

இன்றுநின் பெரும்படைக் கிறைவர் யாரையுஞ்
சென்றிட விடுகுதி சிறிது போழ்தினிற்
குன்றெறி பகைஞனைக் கூளி தம்மொடும்
வென்றிவண் ணேகுவர் வினைய மீதென்றான். (௪0)

கருதிடு தூக்குணைக் கயவ னின்னன
வுரைதரு முடிவினி லொழிக வீங்கெனக்
கருமணி யாழியங் கைய மைத்தரோ
தருமவெம் பகையுடை யமைச்சன் சாற்றுவான். (௪௧)

குலப்படு நவமணி குயின்று பொன்புனை
யலைபடை கொண்டுபுன் முதிரை யாக்கத்தாற்
புலைபடக் கீறுவ போலும் வீரநீ
சிலம்படி மைந்தனோ டாடல் செய்வதே (௪௨)

மேலுயர் கண்ணுதல் விமல னன்றெனி
மாலவ னன்றெனி னயனு மன்றெனிற்
காலனு மன்றெனிற் காவல் வீரநீ
பாலனோ டமர்செயிற் பயனுண் டாகுமோ. (௪௩)

மன்னிளங் குதலைவாய் மதலை மீதினு
மின்னினி யமர்செய விழைதி யென்னினு
மன்னவை னினைதுபோ ராற்றல் காண்பனேல்
வென்னிடு மெதிர்ந்துபோர் விளைக்க வல்லனோ. (௪௪)

நேரலர் தங்களை நேர்ந்து ளாரெனப்
பேரிக லாற்றியே பெரிது மாய்வதும்
பூரியர் கடனலாற் புலமைக் கேற்பதோ
சீரியர் கடனவை தெரிந்து செய்வதே. (௪௫)

எரிமுக னிரணிய னெனுமுன் மைந்தரி
லொருவனுக் காற்றல ரிலககத் தொன்பது
பொருதிறல் வயவரும் பூதர் யாவரு
மரனருள் புரிதரு மறுமு கத்தனும். (௪௬)

கிள்கொடு நகங்கொடு கிள்ளு மொன்றினை
வாள்கொடு தடியுமோ வன்மை சான்றபேரா
ராள்கொடு முடித்திடு மவரை வென்றிட
நீள்கொடு மரங்கொடு நீயுஞ் சேறியோ. (௪எ)

மாணிமை கூடுறு மகவு தன்னொடு
மேணறு சாரத ரினங்க டாமொடும்
பூணுதி செருவெனும் புகற்சி கேட்பரே
னாணுவர் நமரெலா நகுவர் தேவரும். (௪அ)

பொற்றையை முடித்தனன் பொருவி றம்பியைச்
செற்றன னென்றிளஞ் சிறுவன் றன்னையும்
வெற்றிகொள் புதல்வனை வீட்டி னானென
வொற்றையு மதித்தனை தொன்மை யுன்னலாய். (௪௯)

ஆறணி செஞ்சடை யண்ண றந்திடு
பேறுடை வேலினைப் பிள்ளை யுய்த்தது
மாறுள படையினன் மாற்ற லாமையா
லீறது வாயின னிளவ றாரகன். (௫௦)

குறுமுனி தொல்லைநாட் கூறும் வாய்மையா
லிறுதியை யடைந்ததாங் கிருந்த மால்வரை
யறிகிலை யீதெலா மாற்றல் கூடுறாச்
சிறுவன செய்கையே சிந்தை கோடியால். (௫௧)

எச்சமொ டழிவுறு விரதஞ் சாலிகை
கைச்சிலை பெற்றிலன் கருதி நீயவை
யச்சொடு புரிந்திலை யதனிற் பாதனால்
வச்சிர வாகுவா மகனுந் தானுசினான். (௫௨)

பலவினி மொழிவதென் பழியி ருனவத
தலைவரி லொருவனை விளிந்து நந்தாணேயா
டிலையயின் முருகன்மே லேவு வாயெனி
னலைவுசெய் தொலைவி னடலம்பெற நீருவாவா. (௫௩)

அன்னது செய்கென வறைந்தச் சிறுவான்
சொன்னதோ ரிறுதியின் முறுவ லொன்றிட
கன்னிகர் மொய்ம்புடைக் காலசித்தெனுங்
கொன்னவில் வேலினா னினைய கூறுவான். (௫௪)

செந்தியி னிருந்திடு சிறுவன் சாரதர்
தந்தொகை தன்னொடு மிணைந் சாருமே
லெந்தையோ சிலவரை யேவ லல்லது
மந்திரம் வேண்டுமோ மற்றி தற்குமே. (௫௫)

வயந்தனை தையனை வாச வன்றனைச்
சயந்தனைப் பிறர்தமைச் சமரின் வென்றநா
ளியயந்தமை விளைவலை யின்றோர் பாலற்கா
வியன்பெரு மந்திரம் வேண்டி றருங்கொலோ. (௫௬)

அண்டர்க ளொடுங்கின ரரக்க ரஞ்சின
ரெண்டிசைக் கிழவரு மேவ லாற்றுவர்
மண்டம ரவுணரின் வலியர் பூதராங்
கண்டன மின்றியாங் கலியின் வண்ணமே. (௫எ)

பணிக்குதி தமியனைப் பரமன் மைந்தனைக்
கணத்தொகை வீரரைக் கால பாசத்தாற்
பிணித்திவண் வருகுவ னென்று பேசலுந்
துணுக்கெனச் சண்டனென் றொருவன் சொல்லுவான். (௫அ)

கழிபசி நோயடக் கவலும் பூதரு
மழலையம் பிள்ளையு மற்ற வற்குறு
தொழில்புரி சிலவருஞ் சூழ்ச்சிப் பாலரோ
வழகிது மந்திர மவுணர்க் காற்றவே. (௫௯)

கொல்லுவன் பூதரைக் குமரன் றன்னையும்
வெல்லுவன் பிறரையும் விளிவு செய்வனுன்
மல்லலந் தோளுடை மன்னர் மன்னவுன்
சொல்லதின் றென்னவித் துணையுந் தாழ்த்துளேன். (௬0)

ஏவுதி தமியனை யிமைப்பிற் சென்றியான்
மூவர்கள் காப்பினு முரணிற் றாக்கியே
தூவுறு சாரதத் தொகுதி தன்னொடு
மேவலன் றனையிவண் வென்று மீள்வனால். (௬௧)

எனவிவை சண்டனுங் கிசைத்த வெல்லையி
னனலியென் றுரைத்திடு மவுணர் காவலன்
சினமொடு முறுவலுஞ் சிறிது தோன்றிட
வினையமொ டிம்மொழி விளம்பல் செய்குவான். (௬௨)

தெம்முனை மரபிலோர் சிறுவ னென்னினும்
வெம்மையொ டேற்குமேல் வெகுண்டு மேற்செலா
தெம்மொடு மந்திரத் திருப்ப ரேயெனி
னம்மவோ சூரருக் கழகி தாற்றலே. (௬௩)

என்றிது மொழிதலு மெரியுங் கண்ணின
னொன்றிய முறுவல னுயிர்க்கு நாசியன்
கன்றிய மனத்தினன் கறித்து மெல்லிதழ்
தின்றிடு மெயிற்றினன் சிங்கன் கூறுவான். (௬௪)

வெந்தொழின் மறவரை விளித்த தன்மையு
மந்திர மிருந்தது மனங்கொள் சூழ்ச்சியு
மிந்திர னுதவி செய் யிளையன் வன்மையைச்
சிந்திட வேகொலா நினைந்த செய்கையே. (௬௫)

இருநில வண்டமே லிருந்து ளோரெலா
மருவல ராகியே வருக வந்திடி
னொருதமி யேன்பொரு துலையச் செய்வனாற்
றெரியலை போலுநின் னடியன் றிண்மையே. (௬௬)

வன்மையை யுரைப்பது மரபன் றுலெனச்
சென்மென விடுக்குதி சேனை யோடுபோ
யுன்முனி வுற்றிடு மொன்ன லாரையட்
டின்மைய தாக்கியே வருவ னீண்டென்றான். (௬௭)

இன்னவை போல்வன வியல்பி னேனைய
துன்னெறி யமைச்சருஞ் சூழ்ச்சித தொல்படை
மன்னரு மிசைத்தலு மவயங்கு செங்கதி
ரொன்னலன் கையமைத துரைததன் மேயினான். (௬௮)

சென்றிடு முனிவரர் தியங்க மாயைசெய்
குன்றுட னிளவலைக் குமரன் கொன்றிடு
மன்றெனை விடுததிலை யழைத்தொன் றோர்ந்திலை
யின்றிது வினவுவ தென்னை யெந்தைநீ. (௬௯)

உள்ளுறு கரவின னொருவ னும்பரா
னெள்ளரு மொற்றுவந் தீண்டு போர்செயின்
முள்ளெயி றின்னமு முற்றுந் தோன்றிலா
பிள்ளையை விடுக்குமோ பெரியை சாலநீ. (௭௦)

இழித்தகு தூதனு மிடர்பபட் டாயெனும்
பழித்திறம் பூண்டனை பால னவியை
யொழிததனை நகரமு மொருங்கு சீரற
வழித்தனை நீயுன தறிவி லாமையால். (௭௧)

பொருளல தொன்றினைப் பொருளெ னக்கொடு
வெருவுதல் செய்வதும வினைய மோகிலா
தொருசெயல் விரைந்துசெய் தியங்கி வாழ்தலும்
பெரியவர் கடமையோ பேதைத தன்மையே. (௭௨)

பொற்றையொ டிளவலைப் பொன்ற விட்டினோன்
கொற்றமும பூதர்தங் குழாத்தி னாற்றலு
மொற்றுவ னிலைமையு முணரிற் சென்றியான்
பற்றிமுன் னுய்க்குவன பிணித்துப பாசத்தால. (௭௩)

ஆயிரத தெட்டெனு மண்டத துக்கெலா
நாயக முதல்வநீ நம்ப னல்கிய
சேயமா குறிதகெழல் சிறி தன்றெனை
யேயினை வெறிகொண் டிருத்தி யெம்பிரான். (௭௪)

ஆண்டெனை விடுத்தியே லமரா தாற்றிட
மூண்டிடு மவாதொகை முருக்கித தேவரா
யீண்டுறு வோரையு மிமைபபில் வென்றுபின்
மீண்டிடு வேனென விளம்பி னனரோ. (௭௫)

இரவியம் பகையவ னிளைய சிற்சில
வுரைதரு மிறுதியி னுலைவு றுததோர்
முரனுறு தாதைதன் முகத்தை நோக்கியே
குரைகழ லிரணியன கூறன் மேயினான். (௭௬)

வேறு.

வள்ளற் றன்மைசேர் வயப்பெருஞ் சூரனோர் மழலைப்
பிள்ளைப் போர்வலிக் கிரங்கின னெனுமொழி பிறக்கி
னுள்ளத் தேகினை நினைக்கினும் வெருவுமொன் னலரு
மெள்ளற் கேதுவாம் விடுத்தியான் மந்திர மினியே. (எஎ)

மைதி கழ்ந்திடு மிடற்றவன் மதலைமா நிலத்தி
னெய்தி னனமர்க் கென்றலு மென்றனை விளித்து
வெய்தெ னப்பொர விடுத்திலை வெறுத்தியோ வினையேன்
செய்தி டுந்தவ றுண்டுகொ லுனக்கொரு சிறிது. (எஅ)

பானல் போலொளிர் மிடற்றினன் பாலன்மேற் பசிநோய்க்
கூனை வேட்டிழல் பூதர்மே லொழிந்துளார் தம்மேன்
மான வெஞ்சமர்க் கெம்முனோன் சேறலும் வசையே
சேனை யோடியா னேகுவன் செருத்தொழில் புரிய. (எகூ)

வெற்றிப் பேரம ராற்றியே மேவலர் தொகையைச்
செற்றுத் தேவர்கள் யாரையுந் தடிந்துசெல் குவனு
விற்றைக் கங்குலி னென்றனை யேவுதி யெனலு
மற்றைத் தமபியா மெரிமுக னினையன வடிப்பா ன். (அ0)

இணையி லாவண்ட மாயிரத் தெட்டினுக் கிறைநீ
துணைய தாபொரு வீரகே சரியுளன் சுதராய்க்
கணித மில்லவர் யாமுளங் கரிபரி கடுந்தே
ரணிகொ டானவப் படையுள வலகிலா தனவே. (அக)

அழிவில் பாருள தேருள சிலையுள வலிதான்
ஞெழிவி லாதம ரம்புபெய் தூணியு முளவா
விழிவி றெய்வதப் படைகண்முற் றுமமுள விறைமைத்
தொழின டாத்துறு பரிதியு மொன்றுண்டு தொல்லோய். (அஉ)

அண்ட மாயிரத் தெட்டையுங் கண்டலொன் றதனிற்
கண்டு மீடரு மிந்திர ஞாலமுங் கவனங்
கொண்ட தோர்தனி மடங்கலு முனக்குள குறிக்கின்
விண்டு மாலுறு மாயைகள் பலவுள மேலோய். (அங)

இன்ன பான்மைசேர் வெறுக்கைபெற் றீறிலா துறையு
மன்னர் மன்னநிற் போன்றுளார் யாவரே மலையக்
கன்னி பாலகன் றாதுவன் சிறுதொழில் கருதி
னுன்னி யுன்னியே யிரங்கவுந் தகுவதோ வுனக்கே. (அச)

குழந்தை வெண்பிறை மிலைச்சினோன் மதலையைக் குறுகா
வழிந்த பூதரைப் பிறர்தமை வென்றிட வெமரில்
விழைந்த மானவ ரொருவரை விடுப்பதே யன்றி
யழிந்தி ரங்கியே வினவுமோ விதுகொலுன் னறிவே. (அரு)

மூளும் வெஞ்சமர் புரிந்தவெள் ளிளவல்பன் முடியும்
வாளி னாலடு மொற்றனை மற்றுளார் தம்மைக்
கேளொ டுந்தடிந் தலலது கேடில்சீர் நகர்க்கு
[illegible] பகாக்கனன் வெய்யகூ ரனையே. (அசு)

கரந்தை சூடுவான் குமரனைப் பொருதலகா தலியா
விருந்த வீரர்க ளளப்பில ராயினு மிப்போர்
விரைந்து நீயெனக் குதவுதி யேகுவன் மேனாட்
பொருந்து பாதலத் தரக்கரோ டேற்றசென் றமர்போல (௮௭)

வலிய தோர்சிலை யீறிலாக் கவசம்வான் படைகள்
ஞாலகு தந்தவ னளித்திட மானபுபெற் றுடையேன்
துலம டங்கவா ளரக்கரைத் தடிந்திசை கொண்டேன்
மெலிய னன்றியா னறுமுகன் மேலெனை விடுத்தி. (௮௮)

என்னு மாற்றங்க ளிருமுக முடையவ னிசைப்ப
வன்ன வன்றனை விலக்கிமுப் பரிசல மமைத்துச்
சென்னி யாயிரம் பெற்றுளா யிரமுக முகத்தோன்
மன்னர் மன்னனை நோக்கியே வகுத்துரை செய்வான். (௮௯)

மந்தி ரத்தருந் தானையந் தலைவரு மகாருந்
தந்த மக்கியல் வன்மையே சாற்றிய தல்லா
லிந்தி ரப்பெருந் திருவுறு முன்றனக் கியன்ற
புந்தி சொற்றில ரிமையொரு கேனெனப் புகல்வான். (௯0)

வேறு.

பெற்றிடு திருவினிற் பிறந்த வெஞ்சினங்
கற்றவ ருணர்வையுங் கடக்கு மன்னது
முற்றுறு கின்றதன் முன்ன மன்பினோ
ருற்றன கூறியே யுணர்த்தல் வேண்டுமால். (௯௧)

மன்னவர் செவியமுன் மடுத்த தாமென
நன்னெறி தருவதோர் நடுவு நீதியைச்
சொன்னவ ரமைச்சராக நினைவர் மேலையோ
ரொன்னலர் விழைந்தவா றுரைக்கின் றூர்களே. (௯௨)

முற்றுற வருவது முதலு மன்னதாற்
பெற்றிடு பயன்களும் பிறவுந் தூக்கியே
தெற்றென வுணர்ந்துபின் பலவுஞ் செய்வரேற்
குற்றமொன் றவர்வயிற் குறுக வல்லதோ. (௯௩)

மால்வரு தொடர்பினால் வனத்துச் செலலுமீன்
கோல்வரு முணவினைக் குறித்து வவ்வியே
பால்வரு புணர்ப்பினிற் படுதல் போலநீ
மேல்வரு கின்றதை வினவல் செய்கிலாய். (௯௪)

இந்திர னாதியா மிறைவர் தங்களை
யந்தரத் தமரரை யலைத்த தீயவா
முந்துறு திருவொடு முடிந்த தல்லதை
யுய்ந்துள ரிவரென வுரைக்க வல்லமோ. (௯௫)

தேவர்கள் யாரையுந் திரைகொள் வேலையின்
மேவரு மீன்றொகை விரைவிற் றமமென
வேவினை யினிதுகொ ளினைய செய்கைதம்
மாவியில் விருப்பினோ ரன்றி யார்செய்வார். (௯௬)

அறைகழல் வாசவற் கலக்க ணாற்றியே
யிறையினை யழித்தனை யிருந்தி மாநகர்
நிறைதரு வளனெலா நீக்கு வித்தனை
சிறையிடை யுய்த்தனை தேவர் யாரையும். (கூஎ)

அத்தகு தேவரா லைய நங்களுக்
கித்துணை யலக்கண்வந் தெய்திற் றிங்கிது
மெய்த்திற மாமென விரைந்துட் கொள்ளலை
பித்தரின் மயங்கினை பேதை யாயினாய். (கூஅ)

பொன்னக ரழிந்தநாட் புகுந்த தேவரை
யின்னமும் விட்டிலை யிரக்க நீங்கினா
யன்னதற் கல்லவோ வாறு மாமுக
னுன்னுடன் போர்செய வுற்ற தன்மையே. (கூகூ)

வேறு.

ஏறு தந்திடு பிஞ்ஞகன் பெருந்திரு வுடனீர்
நூறு தன்னுட னெட்டுக மிருமென நுவன்றான்
கூறு கின்றதோர் காலமுங் குறுகிய ததனைத
தேறு கின்றிலை விதிவலி யாவரே தீர்ந்தார். (க00)

ஏத்தி றத்தரு நுங்களை வெல்கில ரெமது
சத்தி வென்றிடு மென்றனன் கண்ணுதற் றலைவ
னத்தி றத்தினா லல்லவோ வறுமுகக் குமர
னுய்த்த செய்யவே லுண்டது தாரக னுயிரை. (க0க)

பேதை வானவர் தங்களைச் சிறையிடைப் பிணித்தா
யாத லாலுனக் கானதென் றுன்பமே யல்லா
லேது மோர்பய னில்லதோர் சிறுதொழி லியற்றி
வேத னைப்படு கின்றது மேலவர் கடனோ. (க0உ)

சூரவ ரைச்சிறு பாலரை மாதரைக் குறைதீர்
விரத நற்றொழில் பூண்டுளோர் தம்மையே லவரை
யரும றைத்தொழி லாளரை யொறுத்தன ரன்றோ
கிரயு முற்றவுஞ் சென்றுசென் றலமரு நெறியோர். (க0ங)

அமரர் தம்பெருஞ் சிறையினை நீக்குதி யாயிற்
குமர நாயக னீண்டுபோ ராற்றிடக் குறியா
னமது குற்றமுஞ் சிந்தையிற் கொள்ளல னினி
யிமையொ டுங்குமுன் கைலையின் மீண்டிடு மெந்தாய். (க0ச)

ஒட்ட ராகியே யமர்தரு மிமையவர் சிறையை
விட்டி டாதுநீ யிருத்தியேன் மேவலர் புரங்கள்
சுட்ட கண்ணுதல் குமரனங் குலமெலாந் தொலைய
வட்டு நின்னையு முடித்திடுஞ் சரதமென் றறைந்தான். (க0ரு)

தடுத்து மற்றிவை யுரைத்தலும் வெய்யசூர் தடக்கை
புடைத்து வெய்துயிர்த் தூரப்பியே நகைநிலாப் பொடிப்பக்
கடித்து மெல்லித ழதுக்கிமெய் பொறித்திடக் கனன்று
முடித்த னித்தலை துளக்கியே யின்னன மொழிவான். (க0சு)

ஏவற் றொண்டுசெய் தின்னமுங் கரந்தவிக் திறற்குந்
தேவர்க் குஞ்சிறு பாலற்குஞ் சிவனுறை கயிலைக்
காவற் பூதர்க்கு மஞ்சினை கருத்தழிந் தனையோ
மூவர்க் கும்வெலற் கரியதோர் மொய்ம்புசேரண் டுடையோய். (கoஎ)

எல்லை நாள்வரை யிழைத்தது மெம்பெருஞ் சத்தி
வெல்லு நுங்களை யென்றதுங் கணணுதல் விமலன்
சொல்ல யான்முன்பு கேட்டிலன் வஞ்சமுஞ் சூழ்வும்
வல்லை வல்லைகொ லெம்பிநீ புதிதொன்று வகுததாய். (கoஅ)

நூற்றின் மேலுமோ ரெட்டுக நுவலருந் திருவின்
வீற்றி ருந்தர சியற்றுதி ரென்னினு மேனை
யாற்றி னைச்சடை வைததவன் கொடுத்திடு மழியாப்
பேற்றை யாவரே விலக்குவ ரதுபிழை படுமோ. (கoசு)

ஆதி நாயக னெம்பெருஞ் சத்தியே யல்லா
லேதி லார்வெலா ரென்னினுஞ் சததியு மிறையும
பேத மோவரங் கொடுததவ னடுமென்கை பிழையே
யோத லாவதோர் வழக்கமே யுணமைய தன்றால். (ககo)

பழுது றாதுநம் போலவே வேள்வியைப் பயிலா
தழிவி லாவரம் பெற்றிலன் றாரக னதனு
ளொழிவ தாயினன் வச்சிர வாகுவு முணர்வில்
குழவி யாதலின் மாய்ந்தன னீதுகொல் குறையே. (ககக)

அண்ட மாயிரத் தெட்டையுந் தனியர சாட்சி
கொண்டு வைகினன் குலததொடு மமரர்தங் குழுவைத
தொண்டு கொண்டனன் யாவர்வந் தெதிர்க்கினுந் தொலையே
னுண்டு கொல்லிவ னெனக்குநே ராகவே யொருவர். (ககஉ)

தவமு யன்றுழ லமரரி னரக்கர்க டம்மி
னவுணர் தங்களி னுபிரந் தெட்டெனு மண்டம்
புவன முற்றவு மொருதனி யாரியாற் புரந்தே
யெவரே னக்குநே ராகவே யழிவிலா திருந்தார். (ககந)

மால யன்முத லாகிய முதுவர்கள் வரம்பில்
கால மாகயா னமரரைச் சிறைசெயக் கண்டுஞ்
சால வென்றனக் கஞ்சியே யிருந்தனர் தனியோர்
பால னேகொலா மழிவிலா வென்னுயிர் படுப்பான். (ககச)

வேறு பாடுறு வச்சிரப் படிவமு மிடனு
மீறி லாததோ ராயுளும் பெற்றிடு மென்னை
யூறு தான்செயக் கூடுறு தொருவர்க்கு மென்றான்
மாறு போர்செய்து பாலனோ வெனையட வல்லான். (ககரு)

எண்ணி லாததோர் பாலக னெனைவெல்வ னென்கை
விண்ணி லாதவன் றன்னையோர் கனியென வெஃகிக்
கண்ணி லாதவன் காட்டிடக் கையிலா தவன்போ
யுண்ணி லாதபே ராசையாற் பற்றுமா றொக்கும். (ககசு)

என்று மற்றிவை சூரபன் மாவிசைத் திடலுந்
துன்று பல்கலைச் சீயமா முகமுடைத் துணைவ
னன்று நன்றென வினவியே பின்னமு நானிங்
கொன்று கூறுவன் முனியலை கேட்டியென் றுரைப்பான். (௧௧௭)

வாலி தாமதிச் சடிலமும் பவளமால் வரையே
போலு மேனியு முக்கணு நாற்பெரும் புயமு
நீல மாமணிக் கண்டமுங் கொண்டுகின் றனனுன்
மூல காரண மில்லதோர் பராபர முதல்வன். (௧௧௮)

தன்னை நேரிலாப் பரம்பொரு டனியுருக் கொண்ட
தென்ன காரண மென்றியே லைந்தொழி லியற்றி
முன்னை யாருயிர் பாசங்கண் முழுவது மகற்றிப்
பின்னை வீடுபே றருளுவா னினைந்தபே ரருளே. (௧௧௯)

அப்ப ரன்றனை யுன்னியே யளவைதீர் கால
மெய்ப்பெ ருந்தவ மியற்றினை யதுகண்டு வெளிப்பட்
டொப்பி லாவர முதவியே யாங்கதற் கொழிவுஞ்
செப்பி வைத்தனன் றேர்ந்திலை போலுமத் திறனே. (௧௨௦)

பெறல ருந்திரு வுடையநீ யறத்தினைப் பேணி
முறைபு ரிந்திடா தாற்றலா லமரரை முனிந்து
சிறையில் வைத்தனை யதுகண்டு நின்வலி சிந்தி
யிறுதி செய்திட வுன்னினன் யாவர்க்கு மீசன். (௧௨௧)

வரம ளித்தயா மழிப்பது முறையன்று வரத்தாற்
பெருமை பெற்றுள சூரனை யடுவது பிறர்க்கு
மரிதெ னப்பர னுன்னியே தன்னுரு வாகு
மொருமகற்கொடு முடித்துமென் றுன்னினு னுளத்தில். (௧௨௨)

செங்கி றத்திரு மேனியுந் திருமுக மாறு
மன்ன தற்கிரு தொகையுடைத தோள்களு மாக
முன்ன வர்க்குமுன் னாகிய பராபர முதல்வன்
றன்னு தற்கணு லொருதனிக் குமரனைத் தந்தான் (௧௨௩)

மானு டத்தரின் விலங்கினிற் புட்களின் மற்று
மூன முற்றுழல் யாக்கையிற் பிறந்துளா ரொப்ப
நீநி னைக்கலை பரஞ்சுடர் நெற்றியங் தலத்தே
தானு தித்தனன் மறைகளுங் கடந்ததோர் தலைவன். (௧௨௪)

சீல மில்லவர்க் குணரவொண் ணாதசிற் பரனைப்
பால னென்றனை யவனிடத் திறபல பொருளு
மேலை நாள்வந்து தோன்றிய சிறியதோர் வித்தி
னாலம் யாவையு மொடுங்கியே யவதரித் ததுபோல். (௧௨௫)

அருவு மாகுவ னுருவமு மாகுவ னருவு
முருவு மில்லதோர் தன்மையு மாகுவ னூழின்
கரும மாகுவ னிமித்தமு மாகுவன் கண்டாய்
பிரம னுடலை யாவரே பகர்ந்திடற் பாலார். (௧௨௬)

(132)



வேதக் காட்சிக்கு முபநிடத் துச்சியில் விரித்த
போதக் காட்சிக்குங் காணலன் புதியரிற் புதியன்
மூதக் கார்க்குமு தக்கவன் முடிவிற்கு முடிவா
யாதிக் காதியா யுயிர்க்குயி ராய்நின்ற வமலன். (௧௨௭)

ஞானந் தானுரு வாகிய நாயக னியல்பை
யானு நீயுமா யிசைத்துமென் றாலஃ தெளிதோ
மோனந் தீர்கலா முனிவருந் தேற்றிலர் முழுதுந்
தானுங் காண்கில னின்னமுந் தன்பெருந் தலைமை. (௧௨௮)

தத்த மாற்றங்க ணிறுவிய சமயிகள் பலருங்
கத்து புன்சொலை வினவின ரவன்செயல் காணா
சுத்த வாதுள முதலிய தந்திரத் தொகுதி
யுய்த்து ணர்ந்திடு நீரரே யொருசிறி துணர்வார். (௧௨௯)

கருவி மெய்ப்புலன் காட்டுவான் காண்பவன் காட்சிப்
பொருளெ னப்படு நான்மையு மைவகைப் பொறியு
மிருதி றத்தியல் வினைகளுங் காலமு மிடனு
மரபில் முற்றுறு பயனுமாய் நின்றனன் வள்ளல். (௧௩௰)

ஞால முள்ளதோர் பரம்பொரு ளுமெனப் புகலு
மாலும் வேதனு மாயையாம் வரம்பினுட் பட்டார்
மூல மாகிய தத்துவ முழுவதுங் கடந்து
மேலு யர்ந்திடு தனிமுத லவனன்றி வேறார். (௧௩௧)

தூய பார்முத லாகவே குடிலையின் றுணையு
மேய வண்டமு முயிர்களும் வியன்பொருள் பலவு
மாயு நின்றன னல்லனு மாயின னவன்றன்
மாயை யாவரே கடந்தனர் மறைகளு மயங்கும். (௧௩௨)

இன்ன தன்மைசேர் முதல்வனைச் சிறுவனென் றிகழ்ந்து
பன்னு கின்றனை யவு ணர்தங் கிளையெலா மடித்து
நின்னை யுந்தடிந் திடுவனே ரிமைப்பினி னிரப்புந்
தன்ன ருட்டிறங் காட்டுவான் வந்தனன் சமர்மேல். (௧௩௩)

அற்ற மில்வகை யாயிரத் தெட்டெனு மண்டம்
பெற்ற னம்மென வியந்தனை தத்துவ பேதம்
முற்று ணர்ந்திலை தரணியோ வளப்பில வுளகாண்
மற்றை யண்டங்கள் கேட்டியேன் மருளுதி மன்னோ. (௧௩௪)

குடிலை யீறதா வாரியே முதலதாக் குழுமி
யுடைய வண்டங்க ளலகில வென்பரொன் றொன்றி
னடைத லுற்றிடு புவனத்தின் பெருமையா ரறிந்தார்
முடிவு றாததோர் பொருளினை முடிவுகூ றவற்றோ. (௧௩௫)

அன்ன வாகிய வண்டங்க ளனந்தகோ டியையுந்
தன்ன தாணையா லோரிமைப் பொழுதினிற் றரவும்
பின்னர் மாற்றவும் வல்லதோ ராதியம் பிரான்கா
ணுன்னொ டேபொரு மாடலாற் செந்திவந் துற்றான். (௧௩௬)

வச்சி ரத்தனி யாக்கைபெற் றனனென மதித்தா
யிச்சி ரத்தையை விடுமதி யிருவினைக் கீடா
வச்செ டுத்திடு முயிர்கண்மாய்ந் திடுமென வறிஞர்
நிச்ச யித்தனர் முடிவுறு திருததிகொ ணீயே. (௬௩௭)

பெருமை பெற்றிடு வானத்தி னிலத்திடைப் பிறந்தோ
ரிருமை பெற்றிடு காயமு மிறந்திடுந் திண்ணம்
பருமி தத்துநின் வச்சிர யாக்கையும் பாரி
னுரிமை பெற்றுள தாதலா னழிவின்றி யுறுமோ. (௬௩௮)

அழிவின் மெய்வரம் பெற்றன னென்றனை யதற்கு
மொழித ரும்பொருள் கேண்மதி முச்சகந் தனனுட்
கெழிய மன்னுயிர் போற்சில வைகலிற் கெடாது
கழிபெ ரும்பக லிருந்திடு பான்மையே கண்டாய். (௬௩௯)

அச்சு தன்னய னமரரா கியபெய ரவர்க்கு
நிச்சயம்படி முகமனே யானபோ னினது
வச்சி ரத்தனி யாக்கையு மழிவிலா வரமு
முச்ச கந்தொழப் பல்லுக மிருததலாய் முடியும. (௬௪0)

வான்செய் தேவரை நீயலைக் கின்றதை மதியா
யூன்செய் கின்றபல் லுயிருக்கு முயிரதா மொருவன்
றூன்செய் கின்றதொல் வரத்தினைத் தான்றவிர்த் திடுமே
லேன்செய் தாயென வினவியே கிறுவுவா ரெவரே. (௬௪௧)

கெடுத லில்லதோர் வளனொடு நீயுநின் கிளையும்
படுத லின்றியே வாழ்தியென் றின்னன பகர்ந்தே
யிடுதல் கொண்டிடு சிறையிடைத தேவரை யின்னே
விடுதல் செய்குதி யென்றனன் னறிஞரின் மிக்கான். (௬௪௨)

இன்ன பான்மையான் மடங்கலம் பெருமுகத் திளவல்
சொன்ன வாசகம் வினவியே மணிமுடி துளக்கிக்
கன்ன மூடுசெங் கனல்செறித் தாலெனக் கனன்று
முன்னை யாகியோன் பின்னருஞ் சிற்சில மொழிவான். (௬௪௩)

காற்றிற் றள்ளுண்டு நெருப்பினிற் சூடுண்டு கங்கை
யாற்றிற் றுக்குண்டு சரவணம் புக்கலை யுண்டு
வேற்றுப் போர்முலை யுண்டறு தேவிளை யாடு
நேற்றைப் பாலனை யோபரம பொருளென நினைந்தாய். (௬௪௪)

பிரம மாகிய வொருபொரு ளுயிரெனப் பேர்பெற்
றுருவ மெண்ணில கொண்டுதன் மாயையா லுலபபில்
கரும பேதங்க ளாற்றிடும் பல்புனற் கடத்து
திரவி தன்னுருத் தனித்தனி காட்டிய வியல்பின். (௬௪௫)

கடந்த கர்ந்துழி யவற்றிடை வெளிகக னத்தோ
டடைந்த வாறுபோல் யாக்கையின் பேதக மனைத்து
முடிந்த காலையிற் றொன்மைபோ லபேதமா மொழிக்குந்
தொடர்ந்த சிந்தைக்கு நாடொணா தமர்பெருஞ் சோதி. (௬௪௬)

பிரம மேயிவ ரல்லவ ரிவரெனப் பேதித்
திருமை யாகவே கொள்ளலை யாக்கையே வேறு
பரம மாகிய வுயிரெலா மொன்றுபல் பணியும்
பொருள் தாகியே யொருமையாய் முடிந்தவர் போல. (கசஎ)

விறலும் வன்மையு மில்லவர் தாழ்வர்மே தக்க
நெறிய ரோங்குவ ரீதுல கத்திடை நிகழ்ச்சி
யிறுதி யில்லதோர் பெரியன்யா னறுமுக னென்போன்
சிறிய னுதலி னவனையான் வெல்குவன் றிண்ணம். (கசஅ)

தொகைமை சான்றநஞ் சூரவர்பல் லோருயிர் தொலைத்த
பகைஞ ராதலி னமரரைச சிறையிடைப் படுத்தேன்
மிகைசெய் தார்களை நாடியே வேந்தொறுத் திடுத
றகைமை யேயென மனுமுறை நூல்களுஞ் சாற்றும. (கசகூ)

மாக ராயுளோர் காப்பினை விடுகிலன் மற்றைப்
பாக சாதனன் றன்னையு மருஞ்சிறைப் படுப்ப
னேக நாயக னெய்தினு மெதிர்ந்துபோர் புரிவ
ஞைக யாலினி யிச்சிறு மொழிகளை யயர்த்தி. (க௫0)

உரைப்ப தென்னினி யொருவயிற றென்னுட னுதித்துப்
பெருக்க முற்றனை நங்குலப் பகைஞரைப் பெரிது
நெருக்க லின்றியே யவர்கள்பாற் பட்டனை நீயே
யிருக்க மற்றொரு தெவ்வரும வேண்டுமோ வெனக்கே. (க௫க)

பத்துக் கொண்டநூ றுடையதோர் சென்னியும் பலவாங்
கொத்துக் கொண்டமர் தோள்களுங் கரங்களின் குழுவு
மெத்துக் காற்றினை வன்மையும வீரமு மிழந்தாய்
பித்துக் கொண்டவர் தம்மினும் பேதைமை பிடித்தாய். (க௫உ)

வேறு.

தானவர் வழிமுறை தனனை விட்டனை
வானவர் போன்றனை வன்மை சிந்தினை
மேனிகழ் திட்பமும் விறலு மாண்டனை
மோனமொ டருந்தவ முயலப் போதிநீ. (க௫௩)

மறந்தனை யிழந்தனை மான நீங்கினை
சிறந்திடு மவுணர்தஞ் சீர்த்தி மாற்றிடப்
பிறந்தனை யீண்டொரு பயனும் பெறறிலை
யிறந்தனை போலுநீ யிருந்து ளாய்கொலோ. (க௫ச)

மந்திரி யாதியான் மற்றி தற்குநீ
சிந்தையில வெருக்கொளிற றிசைமு கத்தர்போ
லந்திய லங்கமொன் றங்கை பற்றுதி
வெந்திற லேயெனப் படையும வீசியே. (க௫௫)

கிளைத்திடு கள்ளியின் கிளைக ளாமென
வளர்த்தனை பலதலை வரம்பில் கைத்தல
நெளித்தனை சுமந்தனை நெடிது காலமா
விளைத்தனை வலியிலா யாது செய்திநீ. (க௫௬)

பண்டுணர் வில்லதோர் பருவ மாதவிற்
சண்டனே வருணனைத் தளையினிட்டனை
யண்டரை யலைத்தனை யறிவு கூடலிற்
பெண்டிரி னடுங்கினை பேடி போலுநீ. (கருள)

பன்னெடுந் தலையுடைப் பால ஞருமுன்
வன்மையு மாடலும் வந்து பார்த்திட
வின்னமும் வந்திலள் வருந்தி யீன்றதா
யன்னைதன் குறைகொலோ வருவ மானதே. (கருஅ)

பகையென வொன்றுறிற் பதைப தைத்தெழீஇச்
சிகையுடை வாளினைச் சீயஞ் சீறியே
தகுவிறல் கொளாளுமை லவறறின தன்மையாய்
மிகுதலை பெற்றதும் வீண்கொ லெம்பிநீ. (கருகூ)

பூதரைத தலைவரைப் புராரி மைந்தனை
யேதிலர் யாரையும் யான்வென் றேகுவ
னீதளர் வெய்திட னினது மாநகர்
போதுதி யென்றனன் புலனில் புந்தியான். (கசுO)

என்றிவை யவுணர்கோ னிசைத்த காலையி
னன்றிவ னுணர்வென நகைத்துக் கண்டொறுந்
துன்றிய பேரழல் சொரிய வெஞ்சினத்
தொன்றிய தன்னுளத் தினைய வுன்னுவான். (கசுக)

உறுதியை யுரைத்தன னுணர்வி லாதவன்
வறிதெனை யிகழ்ந்தனன் வருவ தோர்கில
னிறும்வகை நாடினன் யாதொர் புந்தியை
யறிவிலர்க் குரைப்பவ ரவரிற் பேதையோர். (கசுஉ)

உய்த்தனர் தேன்மழை யுதவிப் போற்றினுங்
கைத்திட றவிருமோ காஞ்சி ரங்கனி
யத்தக வல்லவோ வறிவி லாதவன்
சித்தம துணர்வகை தெருட்டு கின்றதே. (கசுங)

தொலைக்கருந் திருவுடைச் சூரன் புந்தியைக்
கலக்கினு முய்வகை கருது கின்றில
னலக்கணுற் றிருந்துநா மிரங்கி யாவதென்
விலக்கரும் விதியையாம் வெல்ல வல்லமோ. (கசுச)

ஆவது விதியெனி னனைத்து மாயிடும்
போவது விதியெனி னெவையும் போகுமாற்
றேவருக் காயினுந் தீர்க்கத் தக்கதோ
வேவரு மறியொணு வீசற் கல்லதே. (கசுரு)

நீண்டசெஞ் சடைமுடி நிமல னீந்தநாண்
மாண்டது மாய்ந்திடு மெல்லை வந்ததா
லீண்டுளார் யாவரு மிறையுந் துஞ்சுமாற்
பூண்டிடு மமரர்கோன் றவமும் பொய்க்குமோ. (கசுசு)

இறப்பது சரதமே யிறைவ னென்னுரை
வெறுத்தன னிகழுமேல் வேண்டி யின்னும்யான்
மறுத்தெதிர் மொழியலன் மன்ன வென்பிழை
பொறுத்தியென் றின்னுரை புகல்வ தல்லதே. (கசுஎ)

மன்னவர் மன்னவன் வள்ளல் வேலினா
லின்னினி யிறந்திடு மிதுவு நோக்கியே
பின்னுமிங் கிருந்திடல் பிழைய தாகுமான்
முன்னுற முடிவதே முறைய தாமெனா. (கசுஅ)

சிந்தனை செய்திடு சிங்க மாமுகன்
றந்தையை நிகர்வரு தம்முன் றொழா
வந்தனை செய்தனன் மன்ன சிறிதேல்
புந்தியி லென்பிழை பொறுத்தல் வேண்டுமால். (கசுகூ)

சிறியவ ரொருபிழை செய்யின் மேலவர்
பொறையொடு பின்னரும் போற்ற லல்லதை
யிறைய தும வெகுள்வரோ யானுஞ் செய்பிழை
யறிவனீ யன்றியே யார தாற்றுவார். (கஎ0)

பொறுத்தனை கோடியென் புன்மை யுள்ளமேற்
செறுதனை யிகழ்ந்திடல் செருவிற் சென்றியான்
மறுத்தெதிர் மலைந்திடு மாற்ற லார்தமை
யொறுத்திடு கின்றன னதனை யோர்தி. (கஎக)

செருவினுக் கேகுவன் செறுநர் தம்மிசைத்
தருதியால் விடையெனத் தம்பி கேட்டலும்
பெரிதுள மகிழ்ந்தனன் பிறங்கு காதலால்
வருதியென் றனையனை மார்பிற புல்லினான். (கஎஉ)

பையர வளித்திடும் பாத லத்தினில்
வையக வரைப்பினிற் றிசையின் வான்களிற்
செய்யவண் டங்களிற் செய்யும் வென்றியு
ளையநிற் கேதுகொ லரிய தானதே. (கஎங)

நீக்கமில் கேள்வியாய் நீமுன் சொற்றன
தூக்குறி னென்மனத் துணிவுந் திட்பமு
மூக்கமு முணரவே யொன்ன லாரெனு
மாக்களை யடுவதோர் மடங்க லலையோ. (கஎச)

சென்றனர் மாற்றல ரென்கை தேர்தியேற்
கொன்றபின் னல்லது குமபிட் டோடிட
வென்றபி னல்லது வெ(ரு)ளி தீர்த்தியோ
வுன்றன தாற்றலை யுணாகி லென்கொலோ. (கஎரு)

இற்றைநா ணின்னக ரேகி யாயிடை
யுற்றிடு படையெலா மொருங்கு கொண்டுநீ
கொற்றமொ டிருக்குதி குமர னீண்டுறின்
மற்றனை விளிக்குவன் வருதி யாலென்றான். (கஎசு)

ஒல்லென முருகவே ளுனது மாநகர்
செல்லினு மேகலை செருவுக் கன்னது
சொல்லினை விடுத்தியோர் தூதன் றன்னையான்
வல்லையி னமர்செய வருகின் றேனென்றான். (௧௭௭)

என்றலு மவுணருக் கிறைவ னீங்கிது
நன்றென விடையது நல்கத் தாழ்ந்துபோய்த்
தன்றிரு மாநகர் சார்ந்து வைகினன்
வன்றிற லுடையதோர் யடங்கற் பேரினன். (௧௭௮)

ஆனதோர் பொழுதினி லரச னண்டுறை
தானையந் தலைவரைத் தனையர் தங்களை
யேனையர் யாரையு மேகச் செய்துதன்
மாநக ரிந்திர வளத்தின் வைகினன். (௧௭௯)

அந்தமில் வளனுடை யவுணர் காவலன்
மந்திர மிருந்தது வகுத்துக் கூறினு
மிந்திரன் முதலினோர் யாரு மேத்திடச்
செந்தியி னமர்ந்தவன் செய்கை செப்புவாம். (௧௮௦)

ஆ திருவிருத்தம் - ௧௧௭௮.

---

வசனம்.

அதன்பிறகு சூரபன்மனது ஏவலை மேற்கொண்ட சிலதூதர்கள் திருச்செந்தூரையடைந்து ஸ்ரீ சுப்பிரமணியக்கடவுளையும் அவர்சேனைகளையுங்கண்டு மீண்டுவந்து, இறைவனே! திருச்செந்தூரில் பூதப்படைகளோடும், அப்படைத்தலைவராகிய நூற்றெண்மரோடும், இலக்கத்தொன்பது வீரரோடும் சண்முகச்சிறுவன் திருச்செந்தூரிலிருந்துகொண்டு ஒரு தூதனையனுப்பினன். அந்தத்தூதன் நமது மகேந்திரநகருக்குவந்ததேயல்லாமல் வரும்வழியில் யாளிமுகனையுங்கொன்று இலங்கையையுங் கடலையுங் கடந்துபோனான். இனி அந்தக் குமரநாயகன் இங்கே வந்து போர்செய்யவும் எண்ணியிருக்கிறான். இது வுண்மையென்று சொல்லினின்றார்கள். அதைக்கேட்டசூரன், தன்மந்திரிமார் சுற்றத்தார் படைத்தலைவர் முதலானவரை வரவழைத்து அவர்களை நோக்கிச்சொல்வானாயினன். எப்படியென்றால், தேவர்களை நான் சிறைசெய்தசெய்தியை இந்திரன் பரமசிவனிடத்திற்சொல்லி முறையிட்டான். அந்தப் பரமசிவன் ஒரு புதல்வனைத்தந்து அவனைநோக்கி, நீபோய்த் தேவர்களைச் சிறைவிடுத்துவாவென்றனுப்ப, அப்பாலகன் மண்ணுலகையடைந்து தாரகனையும் கிரவுஞ்சமலையையும் தன் கைவேலாற்பிளந்து செந்தூரில்வந்திருப்பதன்றி என்னிடத்திற்கும் ஒரு தூதனையனுப்பினன். அந்தத்தூதன்வந்து இங்கிருந்த சிலவீரரைக்கொன்று இந்நகரையுமழித்தான். இதைநோக்குமிடத்து என் ஆண்மை செல்வம் ஆயுள்முதலியயாவும் அழிந்தொழிந்தனவேயன்றோ, விவேகிகள் தமக்கு நன்மையைத்தெரிவிக்கிற மந்திரிமார், சுற்றத்தார் முதலியவர்களோடு யோசிக்காமல் ஒருகாரியத்தையும் செய்யமாட்டார்கள். ஆகையால் நான் உங்களை வரவழைத்தேன், உங்கள் கருத்தென்னவென்றுகேட்க, அதற்கு மேதியன் என்பவன் விடைசொல்லலாயினன், எப்படியென்றால் அவுணர்க்கரசே! கிரவுஞ்சமலையையும் உன்தம்பியாகிய தாரகனையும் கொன்றபோதே நீபோய் அக்குமரனை வெற்றிகொண்டுவரவேண்டும். அதுசெய்யாது தாமதித்துத்

னால் இவ்வளவு அநர்த்தங்கள் நேரிட்டன. இப்பொழுதும் நமது நகரையும் சில வீரரையும் அழித்துப்போனதூதனுக்கு இறைவனாகிய சண்முகச்சிறுவனைப் போர் செய்து வெல்ல முயலாதிருத்தல் தகுதியன்று, ஆதலால் விரைந்து போர்செய்ய முயலவேண்டுமென்றான்.

இவ்வாறு மேதியன் சொல்லிமுடித்தலும், துர்க்குணன் என்பவன்வந்து வணங்கி, நீயொரு சிறிய பாலகன்மேற் போவது அழகன்று. உன் படைத்தலைவரை யேவி, அந்தச் சண்முகச்சிறுவனை வென்று மேம்பாட்டையடைவதே உத்தமம் என்று சொல்லிமுடித்தான்.

இப்படி துர்க்குணன் சொல்லிமுடித்தலும், தருமகோபன் என்னும் மந்திரி வந்து நீயொரு சிறுபாலகனோடு போர்புரியவெண்ணுவது, தகுதியானகாரியமன்று; நமது படைத்தலைவர்களி லொருவனை யனுப்பினால் அவன்போய் அந்தப் பாலகனை வென்றுவருவான்; இதுதான் நீசெய்யவேண்டிய காரியமென்று சொன்னான்.

இவ்வாறு தருமகோபன் சொல்லி முடித்தவுடனே காலசித் என்னும் பெயருள்ள வேறொருமந்திரிவந்து வணங்கி, அரசனே! திருச்செந்தூரிலிருக்கிற அந்தக் குமரன் இங்குவந்தால் இரண்டொருவீரரையேவி அவனை வெல்லலாம், இதற்கு இவ்வளவு மந்திராலோசனையும் வேண்டுமோ, எனக்குக் கட்டளையிட்டால் நான் போய் அச்சிறுவனையும், அவனோடுவந்த பூதப்படைகளையும் கட்டிக்கொண்டுவருவேனென்று சொல்லிமுடித்தான்.

அதன்பிறகு, சண்டன் என்னும் மந்திரியானவன் வந்து வணங்கின்று, ஐயனே! இந்தச் சிறுவனை வெல்வதற்கு நீ மந்திராலோசனையுஞ் செய்யவேண்டுமோ? எனக்கு விடைகொடுத்தால் இக்கணமேபோய் அக்குமரனையும் அவனுக்கு உதவியாய்வந்த பூதப்படை முதலியவற்றையும் வென்றுவருவேனென்றான்.

அதன்பிறகு, அனலி, சிங்கன் முதலிய மந்திரிமாரெல்லாரும் அவ்வாறே யெடுத்துச்சொல்ல, பானுகோபன்வந்து வணங்கி, ஐயனே! கிரௌஞ்சமலையையும் என் சிறியதந்தையாகிய தாரகனையும் அந்தச் சிறுவன் கொன்ற அப்பொழுதே என்னை யேவினால் அவனையும், அவன் படைகளையும் ஒருநொடியில் அதம்பண்ணிவந்திருப்பேன்; அப்படிச்செய்யாமல் சும்மாயிருந்துவிட்டு இப்பொழுது மந்திராலோசனை செய்வது உனது அறியாமையின் காரியமேயாம். இப்பொழுதாயினும் எனக்கு விடைதந்தனுப்பினால் அவர்களையெல்லாம் போர்செய்து வென்று என்பாசத்தாற் கட்டிக்கொண்டுவந்து உன்னெதிரேவிடுவேன் என்று சொல்லிமுடித்தான்.

அப்போது அருகேயிருந்த வேறொரு குமாரனாகிய இரணியனெழுந்து வணங்கி, தந்தையே! இச்சிறுவனை வெல்லும்பொருட்டு நீ மந்திராலோசனைசெய்வதும் விசையேயாம். என்தமையனாகிய பானுகோபனையனுப்புவதும் விசையேயாம். என்னையனுப்பினால் ஒருநொடியில் அவர்களெல்லாரையும் வென்று மீள்வேனென்றான். அக்கினிமுகாசுரன் என்னும் மற்றொரு மகன் வணங்கின்று என்னை யனுப்பினால் அந்தப் பாலகன் முதலிய எல்லாரையும் வென்றல்லது இங்கு வரவேமாட்டேன்; எனக்கு விடைதரவேண்டுமென்றான்.

அதைக்கேட்ட சிங்கமுகாசுரன் தன் தமையனாகிய சூரபன்மன்முகத்தை நோக்கி, அண்ணா! உன் மந்திரிமாரும் உன்மக்களும் சொல்லும் வார்த்தைகளைச் செவியேற்று வீணாயழியவேண்டாம், அந்தக்குமரனைச் சிறுவனென்றிகழத்தகாது,

அவன் பரமசிவனது நெற்றிக்கண்ணில் உதித்தவன், அவனால் நமதுகுலமுழுதும நாசமடையும், இந்த அனர்த்தங்களெல்லாம் தேவர்களாலே உண்டாயின. ஆகையால் தேவர்களைச் சிறைவிட்டாயானால் குமாரநாயகன் இங்கேவந்து நம்மோடு போர்செய்ய நினையான். நமது சிறுபிழையையும் தன்னுளத்திற்கொள்ளமாட்டான். நான்சொன்னபடி நடந்துகொள் வது உனக்குத் தகுதியும் பெருமையுமாமென்று சொல்லிமுடித்தான்.

இப்படிசொன்ன சிங்கமுகாசுரனைச் சூரபன்மன்பார்த்து அதிககோபத்தோடு நகைத்துத் தலையசைத்து, அடாதம்பி! நான் பரமசிவனைநோக்கித் தவஞ்செய்து ஆயிரத்தெட்டண்டங்களையுமாளும் அரசுரிமையும், பெருஞ்செல்வமும், ஒருவராலும் அழிக்கப்படாத வச்சிரதேகமும் பெற்றிருக்கிறேன், இச்சிறுவனுக்கோ நானஞ்சித் தேவர்கள் சிறையினை விடுப்பேன் போபோவென்றான்.

அதைக்கேட்ட சிங்கமுகன் மீட்டும் சூரனைநோக்கி, அண்ணா! இஙகேவந்திருப்பவன் பாலகனென்றெண்ணிப் பேசுவது உன் அறிவின்மையை வெளிப்படுத்துகின்றது. நீ கடுந்தவஞ்செய்ததனால் உனக்கு அளவிறந்த செல்வம் ஆயுள்முதலியவற்றை யருள்செய்த பரமசிவனே இந்தப் பாலரூபமாய் வந்திருக்கிறான்; ஏனெனில், நீ தருமமார்க்கத்தைவிட்டு, தேவர்களையெல்லாம் வருத்துகின்றாயாதலால உன்னை வேரோடு களையவே வந்திருக்கிறான். நீ யுன் செல்வப்பெருக்காலும் அவிவேகத்தாலும் இவ்வாறு கண்டபடி பேசுகிறாய். தேவர்களைச் சிறைவிடுத்து நீ பிழைக்கும்வழி தேடுவாயாகவென்று சொன்னான். இப்படி சிங்கமுகன் சொலலுதலும் சூரபன்மன் தலையசைத்து, நீ எனக்குப் புத்திசொல்லவேண்டுவதில்லை. நீ சிங்கமுகன் என்று பேர்படைத்திருக்கிறாய்; உன்னிடத்துள்ளது நரியின்குணமேயன்றிச் சிங்கத்தின்குணமன்று. ஆகையால் நீ பிரமன்போலப் பஞ்சாங்கஞ்சொல்லிப்பிழைக்கலாம்; நீ உன் நகரம்போய்ச்சேரென்று கட்டளையிட்டான்.

அதன்பிறகு சிங்கமுகாசுரன் திகைத்துநின்று, இவன் நமதுசொல்லை யிகழ்ந்தான்; இவனது நன்மைக்கேதுவான சொற்களை நான்சொன்னால் அவற்றை யவமதித்தமையால் இவனுக்கு முடிவுகாலம் நேரிட்டுவிட்டது என்று தன்மனதில் நிரமானித்துக்கொண்டு, தமையனாகிய சூரனைநோக்கி, நான்செய்த பிழையைப் பொறுத்தருளவேண்டும்; அந்தக் குமரன் இங்கே வருவானாயின், உடனே யெனக்குத தெரிவித்தால் நான்வந்து போர்செய்து அவனைவென்று உனக்கு மகிழ்ச்சியையுண்டாக்குவேனென்று சொல்லி விடைபெற்றுத் தனது நகரத்தையடைந்தான. சூரபன்மனும் தன்மக்கள் மந்திரிமார் முதலியவர்களை அவரவரிடங்களுக் கனுப்பிவிட்டுத் தன் பெருஞ்செல்வம் நுகர்ந்துகொண்டு இனிதுவாழ்ந்திருந்தான்.

சூரனமைச்சியற்படலம் முற்றிற்று.

---

## மகேந்திரகாண்டம் முற்றுப்பெற்றது.

---

**ஆக காண்டம் மூன்றுக்குத் திருவிருத்தம் - சஉஙகூ.**

**கச்சியப்பசிவாசாரியார் கவினடிவாழ்க.**

# கந்தபுராண அரும்பதவுரை.

## முதலாவது உற்பத்திகாண்டம்.

### கடவுள்வாழ்த்து.

திகழ் + தசக்கரம் = திகட சக்கரம்=விளங்கிய பத்துக்கரங்கள்
சகடம்=தேர்
அகடு=வயிறு

க. நுதல்=நெற்றி
ஓடை=நெற்றிப்பட்டம்
மருப்பு=யானைக்கொம்பு
கிம்புரி=பூண்

ங. அடல்=வலிமை
முனிந்த=கோபித்த

ச. திருவந்த=செல்வமிருந்த
பெற்றி=தன்மை
அருவம்=உருவமின்மை

உ. ஊன்=சரீரம்
வானுதி=ஆகாயமுதலியன (வான், வளி, தீ, நீர், மண்)
மதி=சந்திரன்
வெய்யோன்=சூரியன்
சரம்=அசைவது
அசரம்=அசையாதது
கழல்=திருவடி

ங. துறப்பது=விட்டுநீங்குவது
சென்னி=சிரசு

ச. காமரு=அழகிய

ஞ. பங்கயன்=பிரமன்
முகுந்தன்=விஷ்ணு
சமர்=யுத்தம்
வெருவர=அஞ்சும்படி
புங்கவன்=சிவபெருமான்

சு. காண்பவன்முதலிய = காண்பான், காட்சி, காணப்படும்பொருள்
தொடர்=பந்தம்
நயம்=மோட்சம்
சேண்=ஆகாயம் (சிதாகாயம்)
பொலி=விளங்குகின்ற

எ. செறிதரு=நிறைந்த
மறுவறு=குற்றமற்ற
அறுவகை நெறிகள் = சைவம், வைரம், வாமம், காளாமுகம், மாவிரதம், பாசுபதம் என்னுஞ் சமயங்கள்.

அ. கண்ணுதலுடையதோர் களிறு = நெற்றியிற் கண்ணை யுடைய ஆண்யானை

கூ. குருதி=உதிரம்
வடுகன்=வைரவக்கடவுள்

க0. பரியழல்=வடவாமுகாக்கினி
அஞ்சனம்=மை
ஆலம்=விஷம்
கஞ்சுகம்=சட்டை

கக. அவி=தேவருணவு
மகம்=யாகம்

கஉ. பொருப்பர் = உணர்வுற, காட்டிய அமர்=சண்டை எனமுடிக்க.
சேய்=முருகக்கடவுள்

கங. சூர்=சூரபதுமன்
அலைவாயிடை=கடலினிடத்து
எஃகம்=வேல்
வேரல்=மூங்கில்
ஐ=அழகு [ம்
சீரலை=திருச்சீரலைவாயென்னுந்தல

கச. காவினன்=கற்பகச் சோலையையுடையவன் (இந்திரன்)
குடில் உறு காமர் நகர்=ஆகாயத்திலுள்ள அழகியநகர்; குடில்-குடி
விளிய=இறக்க [யுமாம்.
பூவினன்=பிரமன்
குடிலையம் பொருட்கு=பிரணவப் பொருளுக்கு
ஆவினன்குடி=திருவாவினன் குடி
அமலன்=மலமில்லாதவன்

கரு. நீர்அகம்=நற்குணமமைந்த மனம்
பேர்அகம்=பெரியபாவம்
அலமரும்=சுழலுகின்ற
தாரகம்=பிரணவம் [ம்
ஏரகம் = திருவேரகமென்னுந்தல

கசு. ஒன்றுதோறு=சங்காரகாலத்தில்
ஒருவி=நீங்கி
ஆவிமெய் தன்றுதோறு=சிருட்டிகாலத்தில்
ஐவகைமன்று = இரத்தினசபை, கனகசபை, இரசிதசபை, தாமிரசபை, சித்திரசபை
வள்ளல்=அளவிலாதுகொடுப்பவன்

கஎ எழு அம் முதிரைப்புனம்; முதிரை = அவரை, காராமணி, துவரை முதலியன
மழ = இளமை
கஅ ஈறு = முடிவு
கக சூள் = சபதம்
உ0 கூடல் = மதுரை
தண்டமிழவிரகன் = திருஞானசம்பந்தர்
உக ஆமண் = சமணர்கள்
கையர்கள் = கீழ்மக்கள்
தோணி = தெப்பம்
சொல்லரசர் = திருநாவுக்கரசர்
உஉ வறந்திடு = நீர்வற்றிய
உ௩ கந்தம் = ஐவகைவாசனை
கணம் = க்ஷணம்
சாக்கியர் = பௌத்தர்
மூகை = ஊமை
அடிகள் = மாணிக்கவாசகர்
உச காட்சிக்கண்ணவா - காட்சியினிடமாக; காட்சி - ஞானம்
உரு தாவரும் = கெடுதலில்லாத
வாணி = சரஸ்வதி

## அவையடக்கம்.

க இறை - சற்று, விரல். முறை - புத்தகம்
உ மீன் = நட்சத்திரம்
௩ சிந்தும் என்பு = சிந்துகின்றஎன்பு; சிந்து - கங்கையுமாம்.
ச குறுமாமுனி = அகத்தியர்
அ வாதராயணன் = வியாசர்
க நவைகள் = குற்றங்கள்
முகமன் = உபசாரம்
க0 மறுவில = குற்றமற்றன
வாய்மை - சத்தியம்
கக ஆக்கம் = செல்வம்
கஉ புங்கவன் = முருகன்
க௩ புனிதன் = சிவபெருமான்
எந்தல் = கந்தன்
கசு தேசிகர் = ஆசிரியத்தன்மையுடையோர்
கஎ. சூர்ப்பகை = முருகவேள்
ஆற்றல் - தணிதல்.

## ஆற்றுப்படலம்.

க. தொக்கவர் = நெருங்கினவர்கள்
உ. உவரி = உப்புக்கடல்
௩. பரிதி = சூரியன்
சீற்றம் = கோபம்
எயிறு = பற்கள் (மின்னல்)
அசனி = இடி
ச. கந்தடு = கட்டுத்தறியைமுறிக்கின்ற
ரு. வாரை = மூங்கில் (நீட்டல்விகாரம்)
சு. கார்முகம் = இந்திரதனுசு
உகுத்தல் = பொழிதல்
எ. கல் = ஒலிக்குறிப்புச்சொல்
அ. புணரி = சமுத்திரம்
க. இருக்கை = இருப்பிடம்
சாடி - ஜாடி
கக. தேனு = காமதேனு
கஉ. புளிஞர் = வேடுவர்
எயிற்றியர் = வேடுவமாதர்
க௩. காளிமம் = கருமை
கஞலும் = மிகுந்த
ஆகம் = தேகம்
இராசிகள் = கூட்டங்கள்
கச. குவடு = மலை
குருகு = யானையினதுமூளை
மதூகம் = இருப்பை, எட்டிமரம்
ஆறலைத்தல் = வழிபறித்தல்
பாலையுட்கொண்டிருத்தல் - தான் பாலியாறுயிருத்தல், பாலைத் திணையைஅடக்கிநிற்றல்.
கரு. குடதிசை = மேற்றிசை
கரக்கும் = மறையும்
கசு. ஆனிரை = பசுக்கூட்டம்
கஎ. ஆசினி = ஈரப்பலா
துடவை = சோலை
பாணி = ஜலம் அல்லது அலைகளாயகைகள்
கஅ. கைதை = தாழை
பெண்ணை = பனை
கக. தாதகி = ஆத்தி
பாடலம் = பாதிரி
அறையிசை, மறையிசை எனப் பிரித்து ஏற்றபெற்றிப்பொருள் கொள்க.
உக. கலைமறைமான் = கலையும், மறையும், மானும்; கலைமகளாகிய வெண்டாமரைமான்
உஉ. திரிசங்கு = சுரிமுகச்சங்கு, திரிசங்குராஜன்
சலம் = நீர், கோபம்
புலம் = இடம், அறிவு
உ௩. கரி = யானை
இறால் = தேன்கூடு
உச. இங்குவா திளைத்தேகுதி = இங்குவா மூழ்கிச்செல்வாய்
உரு. கறைமிடற்றிறை = நீலகண்டன்
உசு. துளங்க = நடுங்க
உஅ. துப்பு = பவளம்
பாசடை = பசியவிலை
உக. வாவி = குளம்

௩௦. கொண்மூ=மேகம்
அளவர்=உப்பளத்தவர்
௩௧. அந்தத்து=சங்காரகாலத்தில்
௩௨. கவிர்=முண்முருக்கு
அறல்=கருமணல்
௩௩. தூம்பு=நீர்க்கால்
௩௪. பணை=முரசு
இரலை=ஊதுகொம்பு
அவனி=பூமி
௩௫. கோட்டகம்=குளம்
௩௬. அளக்கர்=சமுத்திரம்
௩௭. விஞ்சி=மிகுதியாகி
நாரம்=ஜலம்
௩௮. கோள்=கிரகம்
பணிகள்=பாம்புகள்
௩௯. வெறுக்கை=செல்வம்

## திருநாட்டுப்படலம்.

௧. மைவருகடலுடைமங்கை = கருத்த கடலை யாடையாகவுடுத்த பூமி தேவி
௨. திமில்=முசுப்பு
கோன்முறை காட்டினர்=கோலான் முறையாக (நடத்திக்) காட்டினர்.
௩. பாற்றினம்=பருந்தின் கூட்டம்
௪. வளையினம்=சங்குக் கூட்டங்கள்
௫. உலம்=கல்
அலம்=கலப்பை
வேள்வியாற்றிடு நிலத்திடைப் பிறந்தமின்=சீதை
௭. குச்சு=நெசவுத்தொழிற்கருவி
௮. தேறல்=மது
ஆடி=கண்ணாடி
மேக்குறு=அதிகமாகின்ற
௯. நறவம்=மது
௧௦. வாமதந்திரம்=வாமாகமம் (சாக்தேயமதநூல்)
௧௧. சாம்பினர்=சோர்ந்தனர்
௧௨. பளிக்கறை=பளிங்கு மண்டபம்
படுகர்=குளம்
செறு=சிறுவயல்
௧௬. வயின=பொருந்திய
சாலி=நெற்பயிர்
௧௭. தூணி=அம்புக்கூடு
௧௮. குச்சுறுசாலி = கொத்தாகியநெற்பயிர்
௧௯. சுடிகை=உச்சிக்கொண்டை
நெல்+துறு=பசுங்கதிர்.
௨௩. பொலிக என்பது நெற்போரடிப்போர் மங்கலமாகக் கூறும் வாழ்த்து.

௨௪. வை=வைக்கோல்
பொங்கழி=தூற்றுநெல்
௨௫. கால்=மரக்கால்
௨௬. இல்+குவை=வீட்டிற்கு வேண்டியவை
குரமபை=கூடு
௨௭. தண்ணிய குலத்திடைப் பிறந்தவர்=இழிகுலத்திற்பிறந்தவர்
௨௮. வைகலும்=எப்போதும்
உலப்பின்று=அழிவின்று
௨௯. கிணை=மருதநிலப்பறை
வள்ளைப்பாட்டு=உலக்கைப்பாட்டு
அல்கல்=சுருங்கல்
௩௦. ஆலை=கரும்பு
௩௧. விழுதை நீரரை = இழிகுணமாக்களை
௩௩. தொட்டிடுகடல் = சகரரால்தோண்டப்பட்ட கடல்
௩௪. வஞ்சி=பூங்கொடி
பாதவம்=மரம்
௩௫. வம்மென=வாவென
௩௬. முத்திறத்தவர் = அதம மத்திம உத்தமர்.
௩௭. தாழைகள்=தென்னமரங்கள்
௩௮. பொதும்பர்=சோலை
௪௦. அசும்பு=ஊற்று
பசும்பொனிற்குயிற்றியபதி=சுவர்க்கம்
தசும்பு=பொற்குடம்
௪௨. கந்திகள்=பாக்குமரங்கள்
௪௩. கோகிலம்ஆர்தரு=மாமரம்
ஆகுலம்=துன்பம்
௪௪. உவரை=தம்மேலேறியிருப்பவர்களை
௪௫. சார்ப்பு=சார்பு, உதவி
௪௭. பதுமக்கோயில்=கமலாலயம்
நந்திநீரிடைமாட்டிய பல்பெருஞ்சுடர்=நமிநந்தியடிகள் நீராலெரித்த பல்விளக்குகள்
௪௯. பொருநர்=கூத்தர்
௫௫. சேவகம் = துயிலுமிடம், வீரத்தன்மை
காவகம்=காப்பு, சோலையிடம்.
பூவகம்=அழகியவீடு, பூவினுள்
பாவகம்=செய்யுளிடம்,அபிநயம்

## திருநகரப்படலம்.

௧. கஞ்சம்=தாமரை
தேவு=பிரமன்
௨. அரும்பதம்=பிரமலோகம், வைகுந்தம்
௪. பன்னகவேந்தர்=நாகராஜர்
௫. சுடர்=சந்திர சூரியர்

அ. சுலாவுற=சூழ்ந்த
கூ. நேமியம்புள்=சக்கரவாகப் பறவை
ஆழிநீத்தம்=சமுத்திர வெள்ளம்
க௦. பற்பல=எண்டு ஆதிசேடன், கூர்மம் முதலியவற்றைக் குறிக்கும்
கக. மூவெயிலழலெழ நகைத்தவன்=மும்மதில் நெருப்புறச் சிரித்த பரமசிவன்
வாங்கலும்=வில்லாக வளைத்தலும்
க௨. மாகம்=ஆகாயம்
புரிசை=மதில்
கரு. வங்கம்=ஈயம்
இழுது=நெய்
செறுநர்=பகைவர்
கஎ. கோடு=ஊதுகொம்பு, சங்கு
கொட்புற்று=சுழன்று
கதிர்=சந்திர சூரியர்
கஅ. தோமரம்=இருப்புலக்கை
சாலம்=வலை
சிலம்வீசியபாரிடம் = கல்லொழுக்கம்விட்ட பூதம்
கக. பொறிகள்=யந்திரங்கள்
௨௦. துகிலிகை=கொடி
எகினம்=அன்னம்
௨க. சசி=களங்கமுடையோன் (சந்திரன்)
சரதம்=உண்மை
கேதனம்=கொடி
கஞ்சுகம்=சட்டை
௨௨. கதலிகை=துகிற்கொடி
௨௩. அழல்நிறத்துக்கடவுள்=சிவபெருமான்
௨௫. ஆபுரத்தவாய்க் கிளர்ந்தவே=அப்புரத்துடனே தோன்றியவே
௨௬. மறுகு=வீதி
குணிப்பார்=கணக்கிடுவார்
௨எ. சிவணும்=கலக்கும்
௨அ. அம்பரத்திடை=ஆகாயத்தில்
வசியுற=நுனிபொருந்த
வீற்றுவீற்றுறும்=வேறுவேறு ஆகும்
௨கூ. தெற்றி=திண்ணை
௩௦. ஓவியம்=சித்திரம்
ஆடகம்=பொன்
கொண்மூ=மேகம்
மூவகைக்கதிர்=சூரிய சந்திராக்கினி
௩கூ. மானம்=விமானம்
௩எ. நவையறு=குற்றமற்ற
படிறு=பொய்
௩அ. சமம்=போர்
௩கூ. ஓங்கல்=குன்று
குவால்=குவியல்
கணிகன்=கணக்கன்
ஆவணம்=தெரு
௪௦. வெறுக்கை=செல்வம்
பதஞ் சேர்ந்தோர்=பாதத்திற்றொன்றினோர்
௪௨. பனிக்கார்=குளிர்ந்த மேகம்
௪௩. ஓதை=சப்தம்
கவிகை=குடை
௪௫ ததி=தயிர்
இழுது=நெய்
௪எ கண்ணுளர்=கழைக்கூத்தர்
௪அ திகிரி=சக்கரம்
௫௦ நகில்=தனம்
௫க பானல்=நீலோற்பலம்
தந்திரி=வீணை
௫௩ தானம்=மததாரை
ஏற்றிற்செல்லும்=எற்றினைப்போல, ஏற்றிலேறிச்செல்லும்
௫௬ மான்மதம்=கஸ்தூரி
௫எ இலஞ்சி=குளம்
தேன்=மது, வண்டு
௫அ ஏமம்=இன்பம்
௬க தவாது=இடைவிடாமல்
நால்வாய் = தொங்குகின்ற வாய்; துதிக்கை
கடுத்த=ஒத்திருந்தன
௬௩. கேதம்=குற்றம்
வீடு=மோக்ஷம்
௬௪. ஏமம்=பொன்
துகிர்=பவளம்
௬௫. சுருதியான்=பிரமன்
௬௯. கமடம், கச்சபம், ஆமை (இவை மூன்றும் ஒருபொருட்கிளவி)
எ௦. வெஃகிய=விரும்பிய
எ௨. காளிமம்=கருமை
ஐயை=தேவி
எ௪. கரா=முதலை
எ௬. சேயை=முருகனை
காளிந்தி=யமுனை
எஎ. அரி=தவளை
சூதம்=மாமரம்
எஅ. உடுபதி=சந்திரன்
அ௩. தேரர்=சாக்கியநாயனர்
கலிங்கம்=வஸ்திரம்
அன்பர்=மோதினோர்=திருக்குறிப்புத்தொண்டநாயனர்
அ௫. பூரணி=அன்னபூரணி
அஎ. கொற்றமாலினி=துர்க்கை
வளவன்=சோழன்
அஅ. இருபால்வீடு-பரஅபரமுத்தி அன்றி விதேக சதேகமுத்தி
கூ௪. எகினம்=புளியமரம்
மதூகம்=இலுப்பை
க௦௪ மாகர்=தேவர்கள்

௧0௩. வனசம்=தாமரை
௧0௪. காப்பண்=கடிவில்
எல்=பிரகாசம்
௧0௬. வைப்பு=இடம்
௧0௯. நொச்சி=மதில்
௧௧௬. வாலிது=பரிசுத்தம்
௧௧௭. விழுமிது=மிகவுஞ்சிறந்தது
௧௧௮ அருக்கியமுதல=அருக்கியபாத்தி
ய முதலியன

## பாயிரப்படலம்.

௩. பனுவல்=நூல்கள்
௭. பூவை=காயாம்பூ
௧0. போதநீர்=ஆனந்தபாஷ்பம்
கவலொரீஇ=கவலைநீங்கி
௧௧. வேனிலான்=மன்மதன்
௧௨. உததி=கடல்
௧௯. மேதியுன்=எருமைவாகனன் (யமன்)
௨௪ தோம்=குற்றம்
௨௬. பரவுதல் - பரம்பல்
௩0. ஆசு=குற்றம்
௩௫. ஏற்றம்=உயர்வு
௩௮. முளரியான்=பிரமன்
௪0. செறிவுற்று=நிறைந்து
௪௧. கந்தி=பரிமளகந்தி
௪௨. வாதராயணன்=வியாசர்
௪௪. வியாதன் - பிரிவுசெய்பவன்.
௪௮. தோல்வு + அரும், அன்றித்தொன்
மை என்பதன் விகாரமுமாம்.
ஆல்வருகடவுள்=தக்ஷிணாமூர்த்தி
௫௮. புங்கவர் புலவன்=தேவதச்சன்
(விசுவகர்மன்.) அசுரதச்சன் ம
யன் என்பர்.
௫௯. அடுக்கல்=மலை
மூவகைப்பதம் = சரியை, கிரியை
யோகம்
௬௧. புரநீருக்கி=தேகம்நீருக்கி
௬௨. ஓங்கல்=மலை
௬௭. செச்சை=ஆடு
௭0. வெற்பு=கிரௌஞ்சகிரி
௭௨. வானோர்குரவன்=பிரகஸ்பதி
௭௩. ஆடல்சேர்மொய்ம்பன் - ஈண்டு வீ
ரவாகு
௭௫. வாரணம்=கோழி
பிணிமுகம்=மயில்
௭௮. எயினமாது=வேடமாது

## திருக்கைலாசப்படலம்.

௩. தான்=ஆன்மா
பிழம்பு=திரட்சி
*. இன்னியம்=இனியவாத்தியம்
௧0. சயிலம்=மலை

௧௧. குலையினும்=அழியினும்
௧௨. தனுக்குறையல்ஆம்கோள்= இராகு
அலமரும்=வருந்தும் [கேதுக்கள்
நேமிகளாழியங்கிரி = சக்கரவாளகிரி
௧௩. சலதி=சமுத்திரம்
௧௭. மன்றம ருறையுள்=திருவோலக்க
மண்டபம்
௨0. கவரிகள்=சாமரைகள்

## பார்ப்பதிப்படலம்.

௧. அன்னுழி=அவ்விடம்
௨. கற்பனைமுதலிய=காரணம்காரியம்
௧௨. வள் இயல் கடம் கரி=செறிவான
கல்லிலக்கணமுடைய மத்தயா
னை; வள்ளியன் - ஈண்டு இந்தி
ரனுமாம். தள்ளி - தளி (விரித்
தல்விகாரம்)
௧௪. பன்னகப்பாயல்=பாம்பணை
௧௬. படாம்=வஸ்திரம
௧௭. இரதத்தாவி=ரசப்புகை
௨௫. வடு=குற்றம
௨௭. அரிகெழு மதாணி=பிரகாசத்தோ
டுங்கூடிய மார்பதக்கம்
௨௯. சழக்கு=கற்பனை, பொய்

## மேருப்படலம்.

௬. மருத்து=காற்று
௭. தவலரும்=குறைவில்லாத
௧௭. ஆரிடர்=இருடிகள்
௧௮. இறை=கணம்
௧௯. பிணைவிழைச்சு=புணர்ச்சியின்பம்
அணைவிழு=சயனத்திற்பொருந்த
புணை=தெப்பம்
௨0. வல்=சூதாடுகருவி [டம்
௨௧. அலகையீட்டம = பைசாசக்கூட்
௨௨. மாடகஎழால் = முறுக்காணி
யமைந்த வீணை
௨௩. சேய்=சுகப்பிரமரிஷி
௨௪. கமலக்கண்ணர்=பிரம விஷ்ணுக்
கள், கண்-நேத்திரம், இடம்.
பூமடமாதர்=இலக்குமி, சரஸ்வதி
௨௫. சிறுநலம்=சிற்றின்பம்
௨௬. பொம்மல்=மிகுதி
௨௮. சூரல்=கதிர்
௨௯. மேலைநாள்=அருமையுமையாகக்
கொள்ளாதகாலம், இதனைத் தரி
சியுத்தரப்படலம் 384-வது பக்
கத்திற்பார்க்க.
௩0. சசி=இந்திராணி
௩௧. மேகமூர்கடவுள்=இந்திரன்
சூரன் கைமைந்தன்=பானுகோபன்
சேய்=சயந்தன்

௩௨. தமனியம்=பொன்
இமில்=முசுப்பு
௩௪. பருவரல்=துன்பம்
௩௭. வாசவன்=இந்திரன்
௪௪. விடலரும்=நீங்காத
௪௯. பௌவவேலை=கடற்கரை
௫௧. பணிலம்=பாஞ்சசன்னியம்
காசினி=பூமி
௫௪. பீடிகை=ஆசனம்
௫௫. குல்லை=துளசி
விதி=தொழில் (சிருஷ்டி)
அல்லி=அகவிதழ்
௫௯. கனகன்=இரணியன்
கந்து=தூண்
அனக=குற்றமில்லாதவனே
௬௩. ஆகமத்தின் அரும்பதமூன்று = பதி, பசு, பாசம்
௬௫. யாப்புறும்=பந்திக்கும்
முத்தளை = ஆணவம், கன்மம், மாயை.
௬௬. பொருண்மை = தத்துவத்தின்தன்மை
௬௭. என்னதுஞ் செயல்=எச்செயல்
நதிசேர்ந்த நாள்=அம்மை சிவபெருமான்கண்களை மூடியகாலம்; தநீசியுத்தரப்படலம336.
௬௮. இவறல்=விரும்புதல்
௭௧. பாசனம்=உறவு
௭௨. வாளரா=ஈண்டு இராகு
௭௩. ஆரர்தை=துன்பம
௭௫. கன்றி=மிகுந்து

## காமதகனப்படலம்.

௧. ஆசுகம்=அம்பு
௨. சூழல்=பரிவாரம்
௧௫. கதனம்=கடுப்பு, கலக்கம்
௧௮. பின்னாகிய மும்மைகொள்பேதகர்= அனுலோம, பிரதிலோம, சங்கரஜாதியார்
௨௦. கோல்=அம்பு
௨௧. ஐதாகிய=அழகாகிய
௨௪. பூளை=பஞ்சு
௩௨. அரி=நரசிங்கம்
கைம்மா=மானை
உடுக்கை=உடுத்து
௪௨. வட = என்னடா என்பதன் விகாரம்
௪௩. ஏது=காரணம்; இங்குச் சிவபெருமான் யக்ஷரூபராய் வந்து தரும்புநாட்டிய திருவிளையாடல்
௪௮. வெள்=முதுகு
௫௩. அலக்கண்=துன்பம்
௫௮. செற்றம்=கோபம்
௬௦. வேள்வியிறை=இந்திரன்
௬௨. காமகாண்டம் = மன்மதன் வில் (இது புட்பவில்) பாரவில் என்பது இரும்பாலாகியவில்
௬௩. சீகரம்=சாமரை
காகளம்=எக்காளம்
௬௪. மாக்கள்=குதிரைகள்
வையம்=தேர்
குறிகள்=சகுனங்கள்
௬௫. வல்லியம்=புலி
௬௬. கார்முகம்=வில்
ஏவு=அம்பு-உ-சாரியை
௬௭. மந்திரம்=கோயில்
௬௮. உரப்ப=அதட்ட
விசிகம்=அம்பு
௬௯. சூரல்=பிரம்பு
௭௫. புகுதி=சம்பவிப்பு
௭௬. எர்புரீஇ=எழுந்து
வேத்திரம்=பிரம்பு
௭௭. சிம்புள்=சரபம்
சீயக்குருளை=சிங்கக்குட்டி
௭௮. புதரம்=மலை (குறுக்கல்விகாரம்)
௮௦. எயில்=மதில்
நாகர்கோன்=இந்திரன்
௮௩. எமுறல்=தன்பமுறல்
௮௪. சூழ்ச்சி=தந்திரம்
௮௮. கணிச்சி=மழுப்படை
௯௦. ஆலை=கரும்பு
௯௩. அணுக்கள் - ஆன்மாக்கள்
௯௪. ஐந்தொகையாறு=திருவையாறு
௯௬. வாவல்=தாவுதல்
௯௭. பாடுறு=இறந்த
வீடினள்=இறந்தனள்
௯௮. குடிஞையாறு=சிற்றாறு
௧௦௧. விண்டு=மலை
௧௦௬ கரி=சாட்சி
௧௦௯. பளிதம்=கர்ப்பூரம்

## மோனநீங்குபடலம்.

௨. சிதலை=செல்
வன்மிகம்=புற்று
பதலை=ஒருகட்பறை
விதலை=நடுக்கம்
மதலை=மரக்கலம்
நாய்கர்=வணிகர்
௧௦. செய்வினை நெறிநேடி = யாங்கள செய்த வினையின் திறங்களை யாராய்ந்து
௧௨. பேர் உரி திறம்=பெரிய உரிகளின் திறங்கள்; உரி-தோல்.
சிறுவிதி=தக்கன்

௧௫. சததளம் = நூறுஇதழ்களையுடைய தாமரை
௧௬. அலமந்தார் = அச்சமுற்றார்
௧௭. [illegible]ரயம் = துக்கம்
௧௮. இருவகையறம் = இல்லறம், துறவறம்
௨௫. சிமயம் = இமாசலம்
௩௩. ஒட்பம் = அழகு
தெட்பம் = தெளிவு

## தவங்காண்படலம்.

௨. துவருடையாளன் = காவிவஸ்திரத்தையுடையவன்
குண்டிகை = கமண்டலம்
ஓலை = காண்டுச்சிவிறி
௧௧. அல்லல் = துன்பம்
௧௫. உலப்புற்றார் = இறந்தவர்
௧௭. கேள் = உறவு
௧௯. புதல் = புல்
௨௯. பனவற்கோலம் = பிராமணக்கோலம்
௩௨. சிலவர் = சிலர்

## மணம்பேசுபடலம்.

௬. எழ்பெரு முனிவர் = அகத்தியர், புலத்தியர், அங்கிரா, கௌதமர், வசிட்டர், காசிபர், மார்க்கண்டேய ரென், றிசைத்தவிவர்தாமேழிருடிகளே,,—(என்பது பிங்கலநிகண்டு.
௭. மூந்துறு கருணை = அதிகப்படும பெருங்கருணை
௧௮. அளி = அன்பு

## வரைபுனைபடலம்.

௫. ஒப்பனை = அலங்காரம்
௭. சூளிகை = கட்டுமலை
௮. கதலிகை = துகிற்கொடி
நெடியகேதனம் = பெருங்கொடி
மேக்கு = உயர்ச்சி
காவணம் = பந்தர்
௯. குரகதம் = குதிரை
௧௦. நிதியக்கர்கோன் = குபேரன்
௧௩. வதுவைச்சாலை = கலியாணமண்டபம்
௧௪. நாவி = கஸ்தூரி
௧௫. வேதிகை = திண்ணை
௧௮. தண்ணுமை = மத்தளம்
தணடு = வீணை
௧௯. நேமி = சக்கரவாகப்புள்
கடியிருக்கை = கலியாணமண்டபம்
௩௧. பண்ணவர் = தேவர்
எண்டொகைமங்கலம் = கண்ணடி, பூரணகும்பம், இடபம், இரட்டைச்சாமரம், ஸ்ரீவற்சம், சுவஸ்திகம், சங்கம், தீபம்.

௨௨. கண்டெறுகதிர்மதிக்காந்தம் = கண்ணைத்தெறிக்கச் செய்கின்ற பிரகாசத்தை யுடையசந்திரகாந்தக்கல்
காஞ்சனம் = பொன்
முண்டகவெயின்மணி = பதுமராகம்
௨௩. வாரிசம் = தாமரை
௨௯. கொற்றவை = துர்க்கை
௩௦. தாவதபன்னி = பத்தினி
௩௩. உரகவேந்தர் - நாகராஜர்
மாதிரம் = திக்கு

## கணங்கள்செல்படலம்.

௩. விம்மிதம் = ஆச்சரியம்
௪. பாலம் = நெற்றி
பஞ்சவத்திரன் = ஐம்முகன்
௭. சாரதர் = பூதர்
௧௯. ஞாலமாதியபூதங்கள் = பிருதிவி, அப்பு, தேயு, வாயு, ஆகாசம்.
௨௧. சிலாதனார்புதல்வர் = நந்தி

## திருக்கல்யாணப்படலம்.

௨. மொய்ம்பு = தோள்
௪. நந்தி = இடபம், சிவபிரான்;; அழிந்து என்னும் பொருளைத்தரும் இறந்தகாலவினையெச்சம்
௫. சிகரம = அலை
சாந்தாற்றி = சிற்றாலவட்டம் (சிவிறி
௬. கொக்கரை = வலம்புரிச்சங்கு
சல்லிகை = பம்பை
கரடிகை = பறை
[illegible]லி = சிறுசின்னம்
சாரி = யாழ்
கைத்துடி = உடுக்கை
தடாரி = வாத்தியப்பொது
வயிர் = ஊதுகொம்பு
இயம் = வாத்தியம்
௭. மானம் = விமானம்
௯. ஓதை = சப்தம்
௧௧. வரத்து - வரவு
௧௪. தனு = உடல்
௧௯. புனை = வஸ்திரம்
௧௭. வாசம் - வஸ்திரம்.
௨௨. விளர்ப்பு = வெளுப்பு
௨௫. பின்னருள்ளதொழில் - சங்காரத்தொழில்
௨௮. நொய்ய = மிருதுவான
௩௦. தாருகமாதர் = தாருகவனத்து ரிஷிபத்தினிகள்
மாதர் = மயக்கம்

௩௪. இருவகைப்பமும் எண்வகைமங்கலம் - கவரி, நிறைகுடம், தோட்டி - தர்ப்பணம், தீபம், முரசம், பதாகை, இணைக்கயல்; மற்றொருவிதம் - கண்ணாடி, இடபம், தீபம், ஸ்ரீவத்ஸம், இரட்டைச்சாமரை, சங்கம், சுவஸ்திகம், பூரணகும்பம்.

௩௫. நிம்பம்=வேம்பு
அரிசனம்=மஞ்சள்
ஐயவி=சிறுவெண்கடுகு

௩௮. யானம்=வாகனம்

௪௦. பாதுகை=மிதியடி

௪௩. தண்டலை=சோலை

௫௫. அன்னத்தன்=பிரமன்

௬௧. கிற்புறு=கட்டுப்பாடு

௬௫. கதுமென=விரைவாக

௬௬. ஐயை=துர்க்கை
பாரதி=சரஸ்வதி

௬௭. இந்திரை=இலட்சுமி

௬௯. சிரகம்=கரகம்

௭௨. இருவர்=தும்புருநாரதர்

௭௪ பாசனம்=பாத்திரம்

௭௯. கரணம்=சடங்கு

௮௧. அமலனதுணைவு=சிவப்பிரசாதம்

௮௪. ஒருவி=நீங்கி

௮௫. புன்கண்=துன்பம்

௮௯. அருவினையாகி - அருவாகியவடிவினையுடையவனாகி.

## திருவவதாரப்படலம்.

௧. வைகல்=நாள்

௨. தாணு=அகிலாண்ட சராசரங்களையுந்தம்முட்டாங்கியுயர்ந்தோங்கி நிற்கும்பெருமான். இதனைப் "பிறப்போடிறப்புமிலனாகிப் பிரமன் மாயன் முதலெவர்க்குஞ், சிறப்பாலுயர்ந்து கலியாணகுசித்தி தொன்றின்றியே, யறத்தோரிய வுறைவனால் யாவுமேவியாதலின், ஆலுரைத்தானுணர்ந்தோர் தாணுவென உணர்ந்தேநாளும் உரைப்பரால். என்னும்" வாயு சங்கிதையாலறிக

௩. இவறல்=ஆசை

௫. ஊதையங்கடவுள் - வாயுதேவன்

௬. மீடி=மீளுதி

௮. கம்பல்=நடுக்கம்

௧௧. தென்றி - தென்றற்காற்று

௧௨. கற்பொழி=கல்மழையைப்பொழிகின்ற
எழிலி=மேகம்

௨௧. காலினன்=வாயுபகவான்
விரிஞ்சன்=பிரமன்

௨௨. நாகர்செம்மல்=இந்திரன்

௨௩. மருத்து=வாயு

௩௦. சாதகம்=வானம்பாடி

௩௩. இருமை=பேதம்
ஒருமை=அபேதம்
இரண்டுமொன்றிய ஒருமை=பேதாபேதம்

௩௪. பரித்து=தாங்கி

௩௫. நயப்பு=விருப்பு

௩௯. நொவ்வுற=நோவுற

௪௦. ஆக்கம= செல்வம்

௪௧. மும்மையினுயிர்கள் = விஞ்ஞானகலர், பிரளயாகலர், சகலர்; அன்றிச் சுவாக்க மத்திய பாதாளத்தில் வாழும் உயிர்கள், அல்லது அவன் அவள் அது என்னும் பாருபாடுடைய உயிர்கள்.

௪௪. புலிங்கம்=தீப்பொறி

௪௫. பராய=பராவிய
பதலை=மலை

௪௯. திக்கயம் = திக்குகளிலிருக்கும்யானை

௫௪. கலம்=கப்பல்

௫௭. பாணி=கை

௬௦. அலக்கண்=துன்பம்

௬௨. அஞ்சு இல் இன் அவர்=பாசராத்திரிகள்
சலிலம்=நீர்
அஞ்சலிர்=பயப்படாதீர்

௬௬. உலவை=காற்று

௭௦. அவனிகேள்வன் =பூமிதேவிநாயகனாகிய விஷ்ணு

௮௩. உருப்பம்=வெப்பம்

௮௪. கன்னல்=நாழிகை

௮௫. பதம்=நாழிகை, பாதம்

௮௭. மல்குற்றாலென=நிறைந்ததென்றுசொல்லும்படி

௮௯. அச்சுதன்=விஷ்ணு
வாரணன்=இந்திரன்
மாதிரம்=திக்கு

௯௦. வறத்தல்=வற்றல்

௯௧. விண்ணிற்றோன்றிய கனலின்கண் சனித்த ஜலம், அம்முறைமாறி, பூமியிற்றோன்றிய சலத்திற்றோன்றிற்று எனச் சாதுர்யந்தோன்றக் கூறினர்.

௯௭. துணர்=பூங்கொத்து

௯௯. பகலாடி=சூரியனாகிய கண்ணாடி

௧௦௧. அண்டப்புத்தேள் = விராட்புருடன்

௧௦௨. துள்ளி=துளி
உடுவைப்பாக = நட்சத்திரமண்டலமாக

௧௦௫. எம்மெல்லாம் = எம்மையெல்லாம்

௧0௬. தபனன்=சூரியன்
௧0௭. ஆரம்=முத்து
௧0௮. வன்சத்தோடு=தாமரையிதழ்
௧0௯. சுலவல்=சுற்றுதல்
௧௧0. காசுறழ்=மாணிக்கம்போன்ற
களாசி=தாம்பூலப்படிக்கம
கனை=அரும்பு
வீசிகள்=அலைகள்
௧௧௧. நாப்பணுழி=நடுவிடத்தில்
எழினி=திரை
௧௧௨. எகினம்=அன்னம்
௧௧௪. தீர்த்திகை=பரிசுத்தம்
ஆர்த்திகையுறாத=அன்பினை
வெறாத
௧௧௬. ஆறலருமாதர்=கார்த்திகை முத
லிய மாதர்
௧௧௮. பொதுளும்=நெருங்கும்
நீபம்=கடம்பு
௧௧௯. பயோதரம்=ஸ்தனம்
௧௨0. உழக்கி=கலக்கி
௧௨௪. ஏயெனுமளவை=க்ஷணநேரம்
௧௨௬. அழல்=கார்த்திகை
௧௨௭. நமபி=முருகக்கடவுள்

## துணைவர்வருபடலம்.

௧. விமலை=உமாதேவி
௩. பன்னியர்=பத்தினிகள்
௬. நூபுரம=சிலம்பு
௭. பரிபுரம்=சிலம்பு
௭. ஆணை=சிவாஞ்ஞை
ஐம்முகத் தொருவன்=சிவபெரு
மான்
௯. முனிவர்தம்மரளிர் = தாருகாவன
த்து ரிஷிபத்தினிகள்
௧0. சூள்=சாபம்
௧௧. தினகரன்=சூரியன்
௧௨. வடு=மாவடு
அசனி=இடி
௧௭, சுகனெனும்படி = சுகப்பிரமரிஷி
யென்னும்படி
௧௮, அரதனம்=இரத்தினம்
அகடு=வயிறு
பரம்=பாரம்
௨0. சூல்=கருப்பம்
௨௩. கவற்சியை=வருத்தத்தை
௨௪. ஒன்றிலாப்பதின்மர் = நவவீரர்.
ஒன்று குறைந்த பத்து.
சுந்தரன் விடை முகததவன்
தோன்றியவாபோல்=ஆலால
சுந்தரரும் நந்திதேவரும்
முறையே சுந்திர மூர்த்திசுவா
மிகளாவும மாணிக்கவாசகரா
கவும் அவதரித்தமைபோல்
௨௫. பேர் அ ஆகு=பெரிய அந்தப்பெ
ருச்சாளி
எரவாகுறும் = அழகுவாய்ந்த
பெருமையையுடைய
௨௬. வீரளம்=நீக்கம்
வல்லி=கால்விலங்கு
கரளவல்லிருள் = விஷம்போன்
ற.வலியஇருள்
திரள வல்=திரண்டசூதாடுகருவி
தரளம்=முத்து
௨௮. ஆதவத்தனிக்கடவுள்=சூரியன்
௨௯. தானம்=தெய்வலோகம்
தருவர்=அசுரர்
கானல்=ஒளி
௩0. ஆர்=ஆத்தி
அரா=பாம்பு
௩௧. கரமகதத்தனிமால்வரை - கோப
த்துடன் ஒப்பற்ற மேருவை
க்கரத்தில் (எடுத்து)
புரகதம்=ஹதம் - நாசம்.
புணரிக்குரகதம் = வடவாமுகாக்
கினி
௩௨. விளிய=சாக
௩௩. கந்து=தூண்
நரமடங்கல்=நரசிங்கம்
நந்துதித்த=நாம்துதித்த
௩௪. பொலம்=பொன்
௩௭. பானல்=நீலோற்பலம்
இகவாமல்=நீங்காமல்

## சரவணப்படலம்.

௨. தருப்பம்=பெருமை
௪. அதள்=தோல்
௬. நந்தி=இடபம், சிவபெருமான்,
நந்திதேவர் நந்தியவினைத்தொ
கை நந்திற்று=நமதுதீயவினை
யின்கூட்டம் நசித்தது
௧0, கெழுமினர்=நெருங்கினர்
௧௨. நீத்தம்=வெள்ளம்
௧௩, சீயம்=சிங்கம்
பூட்கை=யாளி
இரலை=கலைமான்
எண்கு=கரடி
௧௪. கேதனம்=கோடி
திமிலம்=பேரொலி [வி
கமலம=நீர், ஈண்டு ஆனந்த வரு
௧௯. ஆதரம்=ஆசை
௨௨. முடிதொறுமுயிர்த்து = உச்சி
மோந்து
நீவல்=தடவல்
௨௩. போதம்நீரதாய் = ஞானசொரூப
மாய்

உ௪. அகலம்=மார்பு
உ௮. காமாரி=மன்மதனையெரித்தவர்
தோம்=குற்றம்
உ௯. வாரர்=கச்சு
வன்னம்=அழகு
மூருந்து=மயிலிறகின் அடி
மூரல்=பல்
௩உ. நான்மறைகரைகண்டவன் = வியாசர், ஆனுமை=கெடாமை, நீங்
௩௩. மயிலை=மீன் [காமை
தனு=உடம்பு
௩௪. பரங்கோடென்னுவுரைபெறு குன்று=திருப்பரங்குன்றம்
௩௫. உடுமடவார்= கார்த்திகைப்பெண்கள்

## திருவிளையாட்டுப்படலம்.

க. அனந்தரம்=பின்பு
நனந்தலை=நடுவிடம்
உ. தட்டை=தண்டை (வலித்தல் விகாரம்)
ஞெகிழம்=பொற்சிலம்பு
கறங்க=சப்திக்க
பட்டிகை=வஸ்திரம
௩. உலவாது=அழியாது
௪. துருத்தி=ஆற்றிடைக்குறை
கந்து=ஆதிண்டுகுற்றி
கக. மானத்திடை=விமானத்தின்கண்
மால்=மேகம்
கஉ. பாடு=ஒலி
பணை=மூங்கில்
குரல்=சப்தசுரங்களிலொன்று
க௪. நேடில்=விசாரித்தால்
உ௩. குலகிரி=அஷ்டகுலபர்வதங்கள்
ஆழிவெற்பு=சக்கரவாளகிரி
உ௫. ஆசை=திக்கு
சலுழன்=கருடன்
உ௬. புயங்கர்=சர்ப்பங்கள்
உஎ. உருமு=இடி
உ௮. வானி=காற்றுடி [ன்வில்
உ௯. வார்சிலையிரண்டு = தனு ராசி, வா
௩௦. வகைமை - வகை = ஆவிமுத்தர் - ஜீவன்முத்தர்
௩௬. வடவரை=மேருமலை
௩எ. அரி=இந்திரன்
௩௮. இறையும்=சிறிதளவும்
௪க. கான்யரி = காட்டிலேதிரிகின்ற சிங்கம்
௪௩. காழுற்ற = வயிரம் பொருந்திய
கேழுற்ற=ஒளிபொருந்திய
வேழம் = ஈண்டு அயிராவதம்
௪௪. கந்தம்=மத்தகம்
௪௫. பன்னல்=பஞ்சு
௪௬. தண்ணார்கமலத்துணைமாதர்=இலட்சுமி, சரஸ்வதி
நண்ணார்=பகைவர்
௪எ. மட்டு=கள்
தெழித்தான்=கர்ச்சித்தான்
௪௮. அயிர்=நுண்மணல்
செயிர்=கோபம்
௪௯. சாபம்=வில்
எல்லொன்றும்=சூரியனையொத்த
௫க. தானம் - விண்
மொய்ம்பு=மார்பு அல்லது தோள்
௫உ. கடிது=சீக்கிரமாக
௫௩. தந்திக்கிறைவன்=இந்திரன்
௫௪. அவசம்=மூச்சு
௫௬. வாரிதி=சமுத்திரம்
சமன்=இயமன்
௫எ. அனிலம்=காற்று
ஏவு=அம்பு
௫௮. அடும்=கொல்லும்
சிம்புள் - சரபம்
அரி=சிங்கம்
உட்கி=பயந்து
௬௦. ஒல்லாதவர்=பகைவர்
விசாகன்=முருகன்
௬க. வான்குரு=பிரகஸ்பதி
௬உ. கூற்றினை=சொல்லை
அற்றமில்லுணர்வு=பேரறிவு
இற்றதே=முடிவுபெற்றதே
௬௩. மாதிரத்தவர்= அஷ்டதிக்குப்பாலகர்
பொன்=பிரகஸ்பதி [கர்
௬௪. படருறு=வருத்தமடைந்து
ஏர்கெழு=அழகுமிகுந்த
௬௬. கரியரிமுகத்தினன்=கஜமுகாசுரன், சிங்கமுகாசுரன்
௬எ. துன்னலர்=பகைவர்
௬௮. உற்பவம்=பிறப்பு
உவகை=சந்தோஷம்
௬௯. கோடல்=காந்தள்
மரா=கடம்பு
குரவு=குரா
செச்சை=வெட்சி
தொழும்பு=ஊழியம்
எ௦. ஆரணமுதல்வன்=சிவபெருமான்
எக. தொடர்பு=பாசம்
ஏதம்=குற்றம்
எஉ. ஓதி=அறிவு
செரு=போர்
எ௩. மலைந்து=போரிட்டு
குரவர்=தாய்தந்தையர்
பிழைத்த=குற்றஞ்செய்த
செற்றிடின்=கொன்றால்

எச. சின்மயம்=ஞானசொரூபம்
செம்மல்=பெருமையிற்சிறந்தவனே (விளி)
மாற்றல்=அழித்தல்
எடு. புணரி=சமுத்திரம்
எசு. விளிதல்=சாதல்
எகூ. சமர்=போர்
அ0. கலுழ்ந்தனர்=அழுதனர்
புலர்ந்தனர்=வாடினூர்கள்
கவன்றனர்=கவலையடைந்தார்கள்
மலங்கினர்=மயங்கினூர்கள்
மயர்ந்து=சேர்ந்து
அனலி=நெருப்பு
உலங்கு=கொசு
உலைந்தனர்=அலைந்தார்கள்
பொலிவிகாந்தனர்= அழகையிழந்தார்கள் *
அக. மோயினர் - மோர்ந்துகொண்டார்
அரி=வண்டு
அஉ. நீபம்=கடம்பு
அங. அரந்தைகொடு=அச்சத்தைக்கொண்டு
அஎ. உன்னலை=கருதவேண்டாம்
கூ0. சானு=முழந்தாள்
கூக. சேண்=மிகுதி
மாண்மை=பெருமை
காணலம்=காணமாட்டோம்
நீணலம்=சிறப்புமிக்கநீண்டதிருவுருவம்
கூஉ. ஒளிகண் + மிக்ககண்=ஞானக்கண்
அருணம்=சிவப்பு
புத்தேள்=தேவன்
தருணவில்=இளம்பிரகாசம்
இரணியவரை=மேருமலை
கூங. கணிப்பிலா=அளவில்லாத
கூஅ. நுங்கி=விழுங்கி
கூகூ. நாகம்=தெய்வலோகம்
க00. துப்பு=வலிமை
வீடு=மோட்சம்
க0க. சதமகன்=இந்திரன்
தினகரன் - சூரியன்
க0உ. ஒல்லுவதன்றல்=முடியாதது
க0ச. தவாது - நீங்காது
க0ரு. வீட்டுதும்=கொல்லுவோம்
க0எ. கண்ணி=மாலை
ஆடியல்=அடுஇயல்
க0கூ. தொன்னெறி=முன்னிலைமை
தூமொழி=பரிசுத்தமானவார்த்[தை
கக0. பொற்கென=பொன்னென
ககக. ஆரணம்=வேதம், வேண்டுகின்றும்=வேண்டுவோம்
ககஉ. ஞாங்கர்=பக்கம்
ககங. பிரங்கல்=மலை
ககச. சூரல்=பிரம்பங்காடு
பம்புதல்=நிறைதல்
முழை=குகை
ககடு. மந்திரம்=மந்திரம்=கோவில்
ககசு. அருக்கர்=சூரியர்
புனைவர்கோன்=தேவகம்மியன்
ககஎ. குடங்கர்=குடம்
கககூ. நிகேதனம்=தேவாலயம்
கஉக. தலைவனை=ஐசாரியை.
வானநீத்தம்=ஆகாயகங்கை
கஉஉ. நொதுமல்=மென்மை.
மட்டித்தனர்=பூசினர்
கஉங. ஐவகைப்படுமாவியும், கோட்டம், தகரம், துருக்கம், அயில், சந்தனம்.
பாளிதம்=கருப்பூரம்
கஉடு. பொற்றை - மலை
கஉஎ. மனோவதி=ஓர்நகரம்
கஉஅ. உயவல் - நினைத்தல்
ஒய்யென=சீக்கிரமாக.

## தகரேறுபடலம்.

க. அசலம்=மலை
உ. செக்கர்=செவ்வானம்
செச்சை= } ஆடு
ங. தகர்= }
ச. மேடம்=ஆடு
கூ. ஊறு=இடையூறு
கஉ. தந்திமுகன்=விநாயகக்கடவுள்
கச. வீடிய=இறந்தன.
கடு. அயம்=ஆட்டுக்கடா (அஜம்)
கன்னல்=நாழிகை
கஎ. மஞ்சு=அழகு, பராக்கிரமம்
உக. ஆடல்=சண்டை
உஉ. ஏழகம்=ஆடு
உங. ஊர்தி=வாகனம்
உச. யானம்=வாகனம்

## அயனைச்சிறைபுரிபடலம்.

உ. எனுதியானெனுஞ்செருக்கு=மமகாரம், அகங்காரம்
ங. அனிகம்=சேனை
சு. போகுமோ=தெரியுமோ?
கூ. குடிலை=பிரணவம்
கச. கட்டுரைத்திலன் = பொருளுரைத்திலன்
கடு. நிகளம்=விலங்கு
கசு. வல்லி=விலக்கு
கஎ. கண்டிகைவடம் = உருத்திராக்கமா[லை
குண்டிகை=கமண்டலம்

கக. அம்புயத்தவிசினோன்=திசைமுகன் (பிரமன்)

## அயனைசிறைநீக்குபடலம்.

க. உவளகம்=சிறை
உ. சீதரன்=இலட்சுமிதரித்தவன்
ங. பொதியமேயவன்=அகஸ்தியன்
ரு. எற்றைவைகலும்=எந்நாளும்
சு. போதன்=பிரமன்
அ. சிலாதன்=நந்திதேவரின் பிதா
கூ. குடிகை=கமண்டலம்
கக. எறுழ்=வலிமை
நிகேதனம்=ஆலயம்
கஉ. காப்பு=சிறை
கச. ஏறு=எருது
கரு. வெய்தென=சீக்கிரமாக
கசு. கேசரிப்பீடம்=சிங்காசனம்
கஎ. முகில்புரைவண்ணன்=கருநிறம் வாய்ந்தவிஷ்ணு
கேசரர்=வித்தியாதரர்
கஅ. காழகம்=ஆடை
புடை=பக்கம்
ககூ. வனிதைபாதியன்=அர்த்தநாரீச்சுவரர்
உஉ. மீமிசை=மேல்
உச. மௌலி=கிரீடம்
உரு. பெறுவன்=சிருஷ்டிப்பன்
உசு. பரம=பாரம்
ஙக. எகினம்=அன்னம்
ஏனம்=பன்றி
சிறை=பக்கம்
ஙஉ. சாரதர்=பூதர்கள்
பூழை=குகை
ஙங. எய்த்தல்=மெலிதல்
ஙரு. துப்புரவு=உறுதி
ஙசு. முறுவல்=புன்னகை
குறங்கு=தொடை
ஙஎ. போமோ=தெரியுமோ
ஙஅ. இற்றென=இத்தன்மைத்தென
சக. வயவர்=வீரர்

## விடைபெறுபடலம்.

க. எல்லையன்னதின்=அந்தச்சமயத்தில்
ச. வதுவை=கலியாணம்
ரு. இருத்தி=இருப்பாய்
சு. மன்றல்=கலியாணம்
எ. பாகசாதனன்=இந்திரன்
மாகமன்ன=சுவர்க்கலோக அரசனே
உபேந்திரன்=விஷ்ணு
அ. ஈன்றஆய்=பெற்றதாயே
க0. தொவ்வுறு=சோர்வுறு
துவன்று=துதித்து
கஉ. சிலம்பு=மலை
கங. ஏயென=விரைவாக
ககூ. இன்னல்=துன்பம்
உ0. தங்கு உறை - தங்குதல்பெற்ற
சடிலம்=சடை
உரு. சிந்து=கடல்
நகர்=மகேந்திரபுரி
ங0. சீகரம்=அலை
நவ்வி=கப்பல்
ஙக. அலம் - போதும்
ஙஉ. தனயர்=புதல்வர்
ஙசு. அருத்தி=அன்பு
உருத்திரர்பதினொருவர் - மாதேவனரனே யுருத்திரன் சங்கரன்- நீலலோகிதனீசானன் விசயன்- வீமதேவன் பவோற்பவன் கபாலி, சௌமியனே ஏகாதசருருத்திரர்பெயர்
ஙஎ. தோமரம்=இருப்புலக்கை
குலிசம்=வச்சிராயுதம்
மழு=கோடரி
ஙஅ. ஏவின்=பிரயோகித்தால்
சங. காதி=அழித்து
சரு. நடவும் - என்பது நடமெனத்தொக்குநின்றது.

## படையெழுபடலம்.

க. பண்=கடிவாளம்
முள்கோல்=முள்ளைத்தலையிலுடையகோல்
மத்திகை=குதிரைச்சம்மட்டி, சாட்டி
ங. வாசவன்=இந்திரன்
ச. நெறியால்=முறைப்படி
சு. ஞெலித்தன=உட்புகுந்தாற்போன்ற
எ. சிந்தினர்=குள்ளர்
குஞ்சியர்=தலைமயிரை உடையவர்
வீற்றுவீற்று - தனித்தனி
கூ. சண்டவங்கி=கொடியஅக்கினி
கக. இறுதிசேர்வைகல்=யுகமுடிவு
கஉ. தண்ணுமை=மத்தளம்
திமிலை=பம்பை
படகம்=பேரிகை
காகளம்=எக்காளம்
கங. பாரிடம்=பூதம்
கச. குணித்தல்=நிச்சயித்தல்
கரு. எழுதருந்துகள்=மேலெழுகின்ற தூசு
கசு. நேமி=சமுத்திரம்
கேள்வியின்மூலம்=செவி
கஎ. தனு - உடல்
கஅ. பூழி=தூசு.

## தாரகன்வதைப்படலம்.

க. உறையுள்=இருப்பிடம்
௩. சுரம்=பாலைநிலம்
௪. அச்சுதன்நேமி=விஷ்ணுவின் சக்கரம்
அ. நொச்சி=மதில்
செற்றிய=நெருங்கிய
உ௦. அமரம்=ஒலி
கடைக்கூழை=பின்னணியாகச் செல்லும் படைவகுப்பு
உஉ. அரி=சிங்கம்
அலகை=பேய்
கலம்=கப்பல்
உ௪. பூழி=புழுதி
செம்மிற்று=மூடிற்று
உ௫. வாகையான்=வீரவாகுதேவர்
கோற்றொழில்=செங்கோல
கோட்டுமா=யானை
உஅ. நம்முன் என்றது சூரனை
௩௦. முளிபுற்கானில்=உலர்ந்த புல்லுடைய காட்டில்
௩க. மதர்ப்பு=வீரம்
௩உ. வீடுவான்=இறப்பான்
ஒலியல்=உபசாரக்கருவியான புடைவைக்குஞ்சம்
௩௩. ஈமம்=சுடுகாடு
௩௪. வேலை - சமயம்
௩௫. பதாகை=கொடி
௩௬. உவரி=சமுததிரம்
௩எ. சாகை=கிளை
சேகு=வீரம்
௩அ. கணிச்சி=கோடரி; கழுமுள்=சூலம்
௪௦. தானவர்=அசுரர்
௪க. ஆர்=சக்கரத்தினுள் இலைகள்
சில்லி=தேருருள்
௪உ. பரித்து=சுமந்து, தரித்து
படிமகள்=பூமிதேவி
௪௩. காலுடை=தேருருள்
௪௪. புரசை=யானைகட்டுங்கயிறு
ஒருத்தல்=ஆண்யானை
சூர்=துன்பம்
ஊர்கோள்=பரிவேடம்
௪௬. கணவர்=கணத்தவர்
எழிலி=மேகம்
தகுவர்=அசுரர்
௪எ. நிணம்=மாமிசம்
ஞமலி=நாய்
அணங்கு=துன்பம்
௪அ. சிலை=அம்பி
பழுமரப்பணை=ஆலமரக்கிளை
முலசம்=இருப்புலக்கை
௫௦. படிகம்=தேகம்
கவந்தம்=தலையற்றவுடற்குறை
நீத்தம்=வெள்ளம்
மிசைந்து=தின்று
குரவை=கூத்து. (குரவைக்கூத்தே கைகோத்தாடல்)
௫க. குப்புற்று=குதித்து
௫௪. காருடம்=கருடன்
பாந்தள்=பாம்பு
பாரிடம்=பூதம், பூமியாகிய இடம்
௫௬. மண்கணைமுழவம்=முழவின் ஒரு விசேடம்
முழவம்=முரசு
வயிர்=ஊதுகொம்பு
௫எ. தோல்=யானை
ஊறு=இடையூறு
நிரப்பு=தரித்திரம்
௬உ. புணரி=சமுத்திரம
௬௩. ஓதை=சப்தம்
௬௪. ஆண்டகை=வீரவாகுதேவர்
௬௫. வெறி=மணம்
௬எ. பொருமி=வருந்தி
௬அ. கோமான்=வீரவாகுதேவர்
எமர்=எம்மவர்
௬௯. தெருமந்தன=சுழன்றன
இரிவார்=ஓடுவார்
எ௦. புலவோர்=தேவர்
உரும்=இடி
எக. மேதாவியர்=அறிவுடையோர்கள்
மாதாரு=பெரியமரம்
பிணையல்=மாலே
எ௪. விளிகின்றவிளக்கு = அவிகின்றவிளக்கு
எ௬. எவ்வக்கொடியோன்=குற்றம்பொருந்தியகொடியோன்
எஎ. கனற்படை = அக்கினியாஸ்திரம்
எ௯. அனிலவெம்படை = வாயுவாஸ்திரம்
அக. விஞ்சை=வித்தை
அஉ. குணலை=வீராவேசத்தால் கொக்கரித்தல்
அ௬. தூணி=அம்புக்கூடு
அஅ. பாழி=குகை
அ௯. பூழை=துவாரம்
௯க. பொற்றை=மலே
௯உ. சூள்=சாபம்
க௦௦. உலைந்தே=அழிந்தே
க௦௬. பறந்தலை=போர்க்களம்
க௦அ. அரண்=கோட்டை
கக௦. பாகாய்=சாரதியாய்
வந்து=காற்று
ககக. முளவுகோல்=குதிரையைத்தூண்டுஞ்சம்மட்டி

கஎ௲. நிரிய=நீக்கும்பொருட்டு
கக௬. கவனம்=சீக்கிரம்
உவரி=சமுத்திரம்
கக௮. தானவர்=அசுரர்கள்
எழு=வளைதடி
கக௯. பாறு=பருந்து
க௨0. நீத்தம்=வெள்ளம்
கறங்கி=சப்தித்து
க௨க. வாகை=வெற்றிமாலை
க௨எ. தற்பம்=அகந்தை
க௨௯. வெள்ளைவாரணன்=ஐராவதத்தையுடைய இந்திரன்
க௩0. விறல்=வெற்றி
க௩க. பூட்கை=யானை
க௩௨. கலுழன்=கருடன்
க௩௪ முட்டி=எதிர்த்து
அட்டனன்=கொன்றேன்
க௩எ. சூற்புயல்=கருத்தமேகம்
*க௩௯. ஈட்டிய=இழைத்த
க௪க. ஐதென=விரைவாக
க௪௨. துளக்கினன்=அசைத்தான்
க௪௩. அளககரும்=அளவில்லாத
க௪௪. சாயகம் } அம்பு
,, பகழி }
க௪௬. விசிகம்=அம்பு
க௪௯. எய்=முள்ளம்பன்றி
க௫0. முருகு=வாசனை
க௫௨. மல்லல்=வளமை
பரிபாகொடு=குதிரைச்சாரதியோடு
க௫௩. தீவிசிகம்=அக்கினியாஸ்திரம்
வலவன்=சாரதி
க௫௪. வென்றோர்=இந்திரியநிக்கிரகஞ்செய்தோர்
௫௫க. பரிமாமுகம்பட்டசெந்தீ=வடவாமுகாக்கினி
சூழி = யானையினதுநெற்றிப்பட்டம்
க௫௬. கொன்னர்=அச்சமிருந்த
க௫எ. பிண்டிபாலம்=எரியாயுதம்
நாஞ்சில்=கலப்பை
ஆலம்=மழுவு
க௫௯. விசாகன்=விசாகநட்சத்திரத்தில் அவதரித்த கந்தன்
துய்=உணவு
க௬0. அல்லோடியதீமனத்தானவர் = இருளினுங்கொடியமனத்தையுடைய அசுரர்
க௬க. ஒருவினன் அகந்தையை=கர்வம் நீங்கினன்
விம்மிதம்=ஆச்சரியம்
க௬௮. தறுகண்=அஞ்சாமை, அங்கம்=பாம்பு

க௬௯. உலைவுறாது=அலையாது, இலைகுலாம்=இலையையொத்த
கஎ௩. கைதவச்செரு=வஞ்சகப்போர்
கஎ௪. வையம்=தேர்
கஎ௫. புரநிருதர்=திரிபுராதிகள்
சூரனதுஇளையோன்=தாரகன்
கஎ௮. ஞெகிழி=கொள்ளிகள்
வெய்யவர்=சூரியர்
கஎ௯. தெவ்=பகை
க௮௨. அரண்=அழகு
க௮௩. பேழ்வாய்=பிளந்தவாய்
க௮௪. உவணன்=கருடன்
செச்சையந்தெரியல்=வெட்சிமாலை
க௮௬. வாலிய=பரிசுத்தமான [மாலை
க௯0. பிலம்=பாதலம்
க௯௨. செற்றிய=நெருங்கிய, கரந்தது=மறைந்தது
க௯௩. வதனம்=முகம்
க௯எ. முட்டிலாமகத்தின்வேந்து= இந்திரன்
க௯௯. ஓங்கல்=மலை
௨0௨. வன்திறல்படையின்வேந்து=பாசுபதாஸ்திரம்
௨0௩. வயவர்=வீரர்

## தேவகிரிப்படலம்.

க. மா+கவந்தம்
ஆகவம்=போர்
சோகம்+அந்தம்
௨. இரவி=அஸ்தமனகிரி
௫. பயில - பழகவிட; அம்புதி=சமுத்திரம்
எ. அண்டம் — ஆகாயம். [திரம்
௮. அல்=இராத்திரி
கடவுள்வெற்பு=தேவகிரி
வனசத்தேவு=பிரமன்
௯. சூர்பின்=தாரகன்
க0. பசைந்திடுமார்வம் =மிகுந்தவிருப்பம்
தணப்பில்=நீங்குதலில்லாத [பம்
கக. விண்ணவர்புனைவன்=தேவதச்சன்
க௨. விகலம்=குறைபாடு
க௩. குழங்கல்=மாலைவிசேடம்.
கழங்கு=அம்மனைக்காய்
தழங்கு=சப்திக்கின்ற
க௪. ஞெள்ளல்=வீதி
வாரி - வாயில்
க௫. நொச்சி=மதில்
குலம்=கோவில்
க௬. மாழை=பொன்
கோட்டம்=கோவில்
தோற்றியென்ன - தோற்றினாற்போல [ல
கஎ. மனுவின்முறை=தேவதச்சன்
முனையின்=முனையினையுடைய

கஅ. நுறுமல்=நெருங்குதல்
இறுதியற்ற=அந்தமில்லாத
நிறுவலுற்று=நிறுத்தி
நிகேதனம்=ஆலயம்
உச. குண்டமுற்றகுடங்கர் = ஆழமாயுள்ளகுடம்
நொண்டுகொண்டனர்=மொண்டு கொண்டனர்
உசு. பஃறுகில்=பலவஸ்திரம்
உஎ. தரு=கற்பகத்தரு
உஅ. பாளிதம=பச்சைக்கருப்பூரம்
நாவி=புனுகு
நானம்=கஸ்தூரி
உகூ. குந்துருககம்—ஒருவிதமரம்
குக்குலும்=குங்கிலியம்
௩௦. சஙகற்பம்=நினைப்பு

## அசுரேந்திரன்

## மகேந்திரஞ்செல்படலம்.

க. சவுரி=தாரகன்மனைவி
ச. அந்தகன்=இயமன்
சு. துனி=ஊடல்
எ. பொன்றினை=இறந்தாய்
அ. அன்றே - அந்தோ
கூ. ஆகுலம=துக்கம்
க௦. சூழ்ச்சி=தந்திரம்
கஉ. ஆசுரம்=ஆசுரநகரம்
க௩. வீந்ததனை=இறந்ததனை
உயிர்த்தான் = பெருமூச்சுவிட்டான்
கரு. இந்தனம்=விறகு
கசு. ஈமம=சுடுகாடு
கஎ. தாமம=ஒளி
கஅ. சுளித்து=கோபித்து
உ௦. மைக்கடல்=கருங்கடல்
உக. வறியன்=தரித்திரன்
உஉ. விதிர்த்து=துசைத்து
கால்+நெறி=கால்வழியே
பேதுற=புத்திகலங்க
உரு. வண்=வலிமை
நிவப்பு=உயர்ச்சி
உஅ. செயிர்=கோபம்
௩௦. அலக்கண்=துன்பம்
௩க. பைதல்=வருத்தம்
௩ரு. விழுமிதென்று=நல்லதென்று
௩சு. சரதம்=உண்மை
காதினன்=கொன்றுன்
௩எ. துண்டம்=மூக்கு
௩கூ. தெவ்வர்=பகைவர்
சக. பருவரல்=துன்பம்
நரலை=கடல்
சஉ. பணிக்கிறை=ஆதிசேடன்
ச௩. பாசறை=துன்பம்
கலுழ்தல்=அழுதல்
சஅ. நவை-ஈண்டுநீதிதவறுதல். இஞ்சி= மதில்
சகூ. சீலம்=கோபம்
ரு௦. உரம் - ஞானம்
ருக. ஒற்றர்=தூதர்
வேய்=தூது
ருஉ. வெஃகார்=விரும்பார்
முனையுறுபுலம்= போர்செய்யு[illegible]
மும்மை=சாம தான பேத[illegible]
ரு௩. கொட்புற்று=சூழ்ந்து
ருச. ஞாட்படை=யுத்தம்
ருரு. வைகலும்=நாள்தோறு[illegible]
ருசு. மிடல்=வலிமை
வசை=இகழ்ச்சி
சு௦. மதுகை=வெற்றி
சுக. உழைஞர்=பக்கமிருப்ப[illegible]
சுஉ. சாரணர்=சஞ்சரிப்பவ[illegible]
சுச. புடவி=பூமி
சுரு. நேடி=குறித்து

## வழிநடைப்படலம்.

க. குரு=இருளையோட்டு[illegible]
ஆழ்ப்புத்தேள்=சமுத்திர[illegible]
கையுறை=காணிக்கை
உ. மங்குல்=மேகம்
ச. மறைமுனி=வியாசன்
ரு. பருப்பதம்=ஸ்ரீசைலம்
திருப்பருப்பதம்= ம[illegible] பர்வதம்
சு. தொண்டம்=குறிஞ்சிநிலப்ப[illegible]
சுவாமிதன்மால்வரை = [illegible] னபர்வதம்
எ. மாசுணம்=பாமபு
சிவகோசன்=சிவகோசரிய[illegible]
வேட்டுவன்=கண்ணப்ப[illegible]
மடவார்—கன்னியரிருவ[illegible]
வழிபாடு=பூசனை
பாட்டு=தோத்திரம்
தென்பெருங்கயிலை= கா[illegible]த்தி
அ. வடவனம்=திருவாலங்காடு
கூ. அம்புராசி - ஜலராசி (கடல்)
கக. தழற்பெருஞ்சயிலம்=திருவண்ணா[illegible]
கஉ. ஆவணஓலை=உரிமையோலை [மலை
க௩. தூசு=வஸ்திரம்
விழுமிதான=சிறந்ததான
முதுகுன்றவரை=விருத்தாசலம
கச. புலிக்காலண்ணல்--வியாக்கிரபாதர்
கரு. தபனியமன்று=பொன்னம்பலம்
தொண்டையங்கனி= கொவ்வைக் கனி

சுராட்புருடன்=விராட்புருடன்
௪௭. குடமுனி=அகஸ்தியன்
குண்டிகை=கமண்டலம்
மண்ணி=மண்ணிநதி

## குமாரபுரிப்படலம்.

குளகன் = குழகனென்பதன்றிரிபு. குழ = இளமை. தேவர்கள் எந்நாளும் பாலயவ்வன கௌமாரபருவத்தராகவே இருப்பர்; இதனாற்றான் திரிதசையர் என ஒரு பெயர்பெற்றனர். கண்ணன் பாலனாகவும், முருகன் கௌமாரனாகவும், சிவம் யவ்வனமாகவுமே கோலங்கொண்டுள்ளதை யுணர்க.
௨. நிசி=இராத்திரி
௩. கங்குலைவீட்டி=இருளையோட்டி
எல்=பகல்
௬. வேதா=பிரமன்
கேசவன்=விஷ்ணு
௭. வாலுகம்=வெண்மணல்
நிரந்தனதோன்றி =காந்தள்நிறைந்தன
௮. கறியது=கல்லது
௯ வினையம்=சிற்பத்தொழில்
௧௦. புனைவுசெய்குதி = படைக்கக்கட
௧௨. மெய்ப்புரம்=சத்சொரூபம் [வை
௧௩. மன்றல்=நெடுந்தெரு
௧௪. காப்பு=மதில்
மல்லல்=வளமை
எல்லையில்லறிவன்=பேரறிவன்
௧௫. ஏர்=அழகு
௧௭. விதிதன்னை - தன்சாரியை
௨௦. விழுமம்=இடும்பை
௨௧. நகில்=ஸ்தனம்
௨௩. முளரிப்பண்ணவன் = வனதேவதை. முளரி - காடு.
இற்புறு=கட்டப்பட்ட
௨௪. வரியளி=வரிகளையுடையவண்டு
௨௫. உம்பர் - மேல்
௨௬ பூட்கை=யானைக்கொம்பு
வாட்கை=வாழ்க்கை
காட்கொளும்+காழ்க்கொளும், வயிரம்பொருந்திய, மிகுந்த
௨௭. மைம்மலி=மயக்கம்நிறைந்த
மருட்கை=மருட்சி
௨௮. பூரரைப்பிண்டி=பருத்தவரையையுடைய அசோகமரம்
௨௯. முருந்து=மயிலிறகினடி
௩௦. அலசுற=அலைவுற
௩௧. இழி=முடிப்பு
வீக்கி=கட்டி
சேமித்து=பத்திரப்படுத்தி
௩௨. அடவித்தேவு=வனதேவதை
௩௩. புலோமசை=இந்திராணி
௩௪. உழத்தியர்=மருதநிலமாதர்கள்
குளிர்ந்தண்டலை ஞாங்கர்=குளிர்ந்தபெரிய சோலையின்பக்கத்தில்
௩௫. புளினம்=மணற்குன்று
௩௭. வேள்=மன்மதன்
௩௯. வஞ்சினம்=சபதம்
௪௦. நிற்றலும்=தினந்தோறும்
அற்றம்=சமயம்
௪௪. பின்னவன்=உபேந்திரன், விஷ்ணு
௪௫. பரேருள=பரு+ஏர்+உள.
௪௬. கோல்=பாணம்
அளி=வண்டு
௪௭. மானிற்கூவி=மான்போற்கூவி
உயிரென்காளை = உயிராகியகாற்றினை
௪௮. வாருஉலப்புஅரிதோர்=அழகுஅழிதலில்லாத
ஆகுலம்=துன்பம்
வீ=பறவை
கோகிலம்=குயில்
௪௯. இருபுள்=குயிலும் கோழியும் (இந்திரன் சூரனுக்கஞ்சிக்குயிலாயும அகலிகையைப் புணரக்கோழியாயுஞ் சென்றதையுணர்த்தும,
௫௦. தண்டுதல=விலகுதல்
தானும்=சூரியனும்
வனிதை = பெண்ணுருவெடுத்தவ
௫௧. கோழ்=கொழுமை [ருணன்
குடம்பை=கூடு
மாழைஅம்பசலைவாய்மகன்றில்= பொன்போன்ற அழகியபசியவாயினையுடைய ஆணன்றிற்பட்சி
காழ்=வயிரம்
௫௩. யாமினி=இராத்திரி
தெற=அழிக்க
உயங்கல்=வருந்தல்
௫௫. மடங்கல்=சிங்கம்
௫௬. தூசி=முற்படை
அனிகம்=சேனை
மீன், உடு=நக்ஷத்திரம்
௫௮. தபனற்கு=சூரியனுக்கு
அங்கை=அழகியகை
௬௦. நனந்தலை=நடு
கணி=கண்களையுடையவள்
௬௧. கையிகந்து=அளவுகடந்து
பை=படம்
பாந்தள்=பாம்பு
வெள்குற்றான்=வெட்கப்பட்டான்

